வந்திருக்கிறோம். இதைப் புசியென்றார்கள். அவன் நான் என் குருவுக்குத் தெரியாமல் எதையும் புசிக்கமாட்டேனென்றான். அசுவினிதேவர்கள் உன் குருவும் முன்னொருகாலத்தில் எங்களை துதித்தார். அவருக்கும் பட்சணம் கொண்டுவந்து கொடுத்தோம். அவர் குருவுக்குத் தெரிவிக்காமலே புசித்தார். ஆகையால் நீயும் புசிக்கலாமென்றார்கள். உபமன்யு, நான் குருவுக்குத் தெரிவிக்காமல் புசிக்கமாட்டேனென்று மறுபடியும் மறுத்தான். அசுவினிதேவர்கள் மகிழ்ந்து, உன் குருபக்தியினால் நாங்கள் மகிழ்ந்தோம். உனக்குக் கண் தெரியும், சகல வேதசாஸ்திரங்களும் விளங்கும், உன் பல் பொன்னாகும் என்று சொல்லி மறைந்தார்கள். உபமன்யு தன் குருவினிடம் வந்து இதைச் சொன்னான், அவரும் மகிழ்ந்து அசுவினிதேவர்கள் சொன்னபடியே உனக்குச் சகல வித்தைகளும் உண்டாகக் கடவது என்று அநுக்கிரகித்தார்.

அயோத தௌம்யர் பைதனென்னும் தம்முடைய மற்றொரு சிஷ்யனை நோக்கி, நீ என் வீட்டுக்குரிய பணிவிடையைச் செய்து கொண்டிரு என்று கட்டளையிட்டார். அவன் அப்படியே பசி தாகம் முதலியவற்றைப் பொறுத்துக் கொண்டு மாடுகளைப் போலச் சுமைசுமைத்தலாதிக் கஷ்டவேலைகளைச் செய்து கொண்டிருந்தான். இப்படி நெடுங்காலஞ் சென்றபின் தௌம்யர் மகிழ்ந்து அவனுக்குச் சகல வித்தைகளுமுண்டாகும்படி யனுக்கிரகஞ் செய்தனுப்பினார். அந்தப் பைதர் கிருகஸ்தாசிரமத்திலிருக்கையில் அவருக்கு மூன்று சிஷ்யர்களிருந்தார்கள். பைதர் யாகஞ்செய்விக்கிறதற்காகத் தூரதேசம் போக நேரிட்டது. அவர் உதங்கனென்னும் சிஷனைப் பார்த்து நான் வருகிறவரைக்கும் வீட்டு வேலைகளைக் குறைவில்லாமற் செய்யென்று கட்டளையிட்டுப் போனார்.

உதங்கர் பணிவிடைகளைச் செய்துகொண்டு குருகுலவாசம் செய்கையில் சில ஸ்திரீகள் வந்து குருபத்தினி உன்னை விரும்புகிறாள். நீ அவள் விருப்பத்தின்படி நடந்துகொள் என்றார்கள். உதங்கன் அவர்களை நிராகரித்து. அந்தக் காரியம் செய்யத் தகாது. அதை நான் செய்யமாட்டேனென்று கூறிவிட்டார். நெடு நாள் கழிந்தபின் குருவந்து உதங்கருடைய நல்நடக்கைகளைக் கேட்டு மகிழ்ந்து உதங்கரை நோக்கி உனது நல்ல நடக்கையால் நான் மகிழ்ந்தேன். நீ விரும்பின எல்லாவற்றையும் பெறுவாய், நீ உன் வீட்டுக்குப் போ என்று விடைகொடுத்தார். உதங்கன் நான் குருதட்சிணை கொடுக்கவிரும்புகிறேன், விருப்பமானதைச் சொன்னால் அதை நிறைவேற்றின பின் போகிறேன் என்று சொன்னார். குரு எந்த விதஞ்சொல்லித் தடுத்துங் கேட்கவில்லை. அதனால் குருபத்தினியைக் கேட்டு அவள் விரும்பினதைச் செய் யென்று சொன்னார். உதங்கர் குருபத்தினியிடம் போய்க் குருசொன்னதைச் சொல்லி உமக்கு விருப்பமானதைக் கட்டளையிட்டால் அதைத் தடையின்றி அளிப்பேனென்று சொன்னார். குருபத்தினியானவள், பௌஷ்யராஜபத்தினி காதில் அணிந்திருக்கும் குண்டலங்களைக் கொண்டுவந்து கொடுத்தால் அதுவே குருதட்சிணையாகுமென்று கூறினாள். 'அதுவும் இன்றைக்கு நாலாவது நாள் ஒரு

விரதம் வருகிறது, அதற்குள்ளாக வர வேண்டுமென்றாள். உதங்கர் நல்லதென்று ஒத்துக்கொண்டு புறப்பட்டுப் போனார்.

போகும்வழியில் ஒரு திவ்ய புருஷன் ரிஷபத்தின்மேலேறிக்கொண்டு வரக் கண்டார். அவன் உதங்கரைப் பார்த்து உதங்கா! இந்த ரிஷபத்தின் கோமயத்தை உட்கொள். உன் குருவும் முன்னே யருந்தினாரென்றான். உதங்கர் அப்படியே உண்டுவிட்டு ஆசமனஞ்செய்யாமற் போனார். பௌஷ்ய ராஜனைக் கண்டு நான் உம்மிடத்தில் யாசகத்துக்கு வந்திருக்கிறேனென்று சொன்னார். அவ்வரசன் சுவாமீ! உமது விருப்பத்தைச் சொன்னால் அப்படியே செய்வேனென்றார். நான் குரு தட்சிணைக்காக உமது பத்தினி காதிலணிந்திருக்கும் குண்டலத்தை யாசிக்க வந்தேனென்று உதங்கர் சொன்னார். பௌஷ்யன் அந்தப்புரத்திலிருக்கும் அரசியிடம் போய்க் கேட்டு வாங்கிக் கொண்டுபோமென்று சொல்ல, அப்படியே அந்தப்புரம் போய்ப் பார்த்தார் இராஜபத்தினியைக் காணவில்லை மீண்டும் அரசனிடம் வந்து அரசி அந்தப்புரத்தில் இல்லையென்று சொன்னார். பௌஷ்யன் நீர் ஆசாரக்குறைவாயிருப்பீர். அவள் ஆசாரமில்லாதவர்களுக்கு அகப்படமாட்டாள் என்றான். உதங்கர் ஆசமனம் செய்யாமல் வந்ததைக் கூறி உடனே கைகால் அலம்பிக் கொண்டு ஆசமனஞ்செய்து அந்தப்புரம் போனார். இராஜபத்தினி எதிர் கொண்டுவந்து வணங்கி உபசரித்து, நான் தங்களுக்கு செய்ய வேண்டியதை அநுக்கிரகம் பண்ணவேண்டும் என்றாள். உதங்கர் குரு தக்ஷிணைக்காக உமது காதிலணிந்திருக்கும் குண்டலங்களை யாசிக்க வந்தேனென்றார். அரசி மகிழ்ந்து குண்டலங்களைக் கழற்றிக்கொடுத்துவிட்டு, நாகராஜனாகிய தட்சகன் இந்தக் குண்டலங்களுக்காகச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கிறான். நீர் ஜாக்கிரதையாகக் கொண்டுபோக வேண்டுமென்று சொன்னாள். அவர் சரியென்று கூறி அவளிடம் விடைபெற்றுக்கொண்டு அரசனிடம் போய் நான் வந்த காரியம் நிறைவேறிற்று, விடைகொடுமென்றார். அரசன் போஜனஞ்செய்து விட்டுப் போகலாமென்று கூறி அவருக்கும் போஜனம் அளித்தார். உதங்கர் உண்ணும்போது அதில் ஒரு மயிரிருந்தது. அது கண்ட உதங்கர் கோபித்து எனக்கு அசுசியான அன்னத்தை யிட்டபடியால் உனக்குக் கண் தெரியாமல் போகக்கடவதென்று அரசனைச் சபித்தார். பௌஷ்யன் குற்றமில்லாத என்னைச் சபித்தபடியால் நீர் சந்ததியற்றுப்போவீரென்று சபித்தான். பிறகு அரசன் அன்னத்தில் மயிரிருந்ததை யறிந்து சுவாமீ! இது என் தவறன்று, ஆகையால் நீர் கொடுத்த சாபத்தை மாற்றவேண்டுமென்று கேட்டுக்கொண்டான். உதங்கர் என்சாபம் வீணாகமாட்டாது நீ சில காலம் கண் தெரியாமலிருந்து பின் சுகப்படக்கடவாயென்று கூறி, நீரிட்ட சாபம் என்னை யடையாதபடி செய்யுமென்று கேட்க, அரசன் க்ஷத்திரியரிட்ட சாபம் மாறுகிறதில்லை. ஆதலால் நீர் போமென்ன உதங்கர் சரியென்று போய்விட்டார்.

உதங்கர் போகும்போது ஜலத்தினிமித்தம் குண்டலத்தைக் கீழே வைத்துப் போனார். அப்போது பௌத்த ஒரு சந்நியாசி வந்து அந்தக் குண்டலங்களையெடுத்துக்கொண்டு ஓடினான். உதங்கர் தம் காரியத்தை முடித்துக்கொண்டு விரைந்து போய் அவனைப் பிடித்தார். உடனே அவன் சந்நியாசி ரூபத்தை விட்டுப் பாம்பு ரூபத்தை யெடுத்துக்கொண்டு அருகிலிருந்த ஒரு வளைக்குள் நுழைந்து நாகலோகம் போய்ச் சேர்ந்தான் உதங்கர் இராஜபத்தினிவாக்கியத்தை மறந்தமையாலிந்தக் கஷ்டம் வந்ததென்று கருதித் தம்கையிலிருந்த தடியினாலே வளையை யடித்தார். அப்போது இந்திரன் வஜ்ராயுதத்தை அந்தத் தடிக்குள் பிரவேசிக்கச் செய்தான். அதனால் வளை பிளந்தது. அவர் அதன் வழியாக நாகலோகம் போய் அவ்வுலகத்தின் விநோதங்களைப் பார்த்து ஆச்சரியபட்டு நாகங்களைப் பலவாறு துதித்தார். நாகங்கள் காணப்படவில்லை. இரண்டு ஸ்திரீகள் கறுப்பும் வெளுப்புமான நூல்களால் வஸ்திரம் நெய்வதையும், பன்னிரண்டு ஆரைக்கால்களுள்ள ஒரு சக்கரத்தை ஆறு குமாரர்கள் சுழற்றுகிறதையும், ஒரு திவ்ய புருஷனையும். ஒரு அழகான குதிரையையும் பார்த்தார். அப்போது திரிபுவன நாயகனாகிய இந்திரனைத் துதித்தார். அந்தத் திவ்ய புருஷன் உதங்கரைப்பார்த்து நான் சந்தோஷமடைந்தேன், உமக்கென்ன வேண்டுமென்று கேட்டான். உதங்கர் நாகங்கள் எனக்கு அடங்கிவரவேண்டும் என்றார். அவன் அப்படியானால் இந்தக் குதிரையின் அபானத்தில் ஊது என்றான். உதங்கர் அப்படியே ஊதினபோது அந்தக் குதிரையின் மயிர்க்கால்கள்தோறுமிருந்து நெருப்பு ஜ்வாலைகள் புறப்பட்டன அதனால் நாகலோகம் வெதும்பிற்று. அதனால் தட்சகன் பயந்து குண்டலங்களை யெடுத்துக்கொண்டு வந்து; உதங்கரைப் பார்த்து இந்தக் குண்டலங்களை வாங்கிக்கொள்ளுங்களென்று வேண்டினான். உதங்கர் குண்டலங்களைப் பெற்றுக்கொண்டு, இன்றையதினந்தானே குருபத்தினி கூறிய விரததினம், நெடுந்தூரமிருக்கிறதே எப்படிப் போய்ச் சேருவேனென்று கவலைப்பட்டார். குதிரையின் மேலிருந்த புருஷன் உதங்கா! இந்தக் குதிரையின் மேலேறிக்கொள், நீ விரைவிலே உன் குருவினிடம் போய்ச் சேருவாயென்று சொல்ல, உதங்கர்! அப்படியே குதிரையின் மேலேறிக்கொண்டு உபாத்தியாயரிருக்குமிடம் வந்து சேர்ந்தார். குருபத்தினியானவள் ஸ்நானஞ்செய்துவிட்டு, உதங்கர் இன்னம் வந்துசேரவில்லையே ஆகையால் அவனைச் சபிப்பேன் என்று நினைத்தாள். அந்தக் காலத்தில் உதங்கர் குருபத்தினியிடம்போய் வணங்கிக் குண்டலங்களைக் கொடுத்தார். குருபத்தினி அவரைப் பார்த்து குழந்தாய்! நீ இந்தச் சரியான காலத்தில் வந்ததினால் என்சாபத்தினின்றுந் தப்பினாயென்று கூறி, நீ நினைத்தபடி சித்தியடையக் கடவாய், உனக்கு நன்மையுண்டாகட்டுமென்று வாழ்த்தினாள். உபாத்தியாயர் குழந்தாய் உதங்கா! ஏன் தாமசமாய் வந்தாயென்று கேட்க, உதங்கர் என்காரியத்துக்கு நாகராஜனான தட்சகன் விக்கினஞ்செய்தான். அதனால் பாதாளலோகம் போய்வந்தேன். அவ்விடத்தில் இரண்டு ஸ்திரீகள் வஸ்திரம் நெய்து கொண்டிருந்தார்கள். அதில் கறுப்பு நூல்களும் வெளுப்பு

நூல்களுமிருந்தன. பன்னிரண்டு ஆரைக்கால்களுள்ள ஒரு சக்கரமிருந்தது. அதை ஆறு குமாரர்கள் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அவை யென்ன? ஒரு புருஷனையும் ஒரு குதிரையையும் பார்த்தேன். அவன் யார்? வழியில் போகும் போது ஒரு ரிஷபத்தையும் அதன்மேல் ஒரு புருஷனையும் பார்த்தேன். அவன் அன்புடன் என்னைப் பார்த்து இந்த ரிஷபத்தின் கோமயத்தை அருந்து. உன் குருவும் இப்படிச் செய்தார் என்றான். நான் கோமயத்தை உண்டேன். அவன் யார்? இவைகளை எனக்குச் சொல்ல விரும்புகிறேனென்றார். குரு, அப்பா உதங்கா! நீ பார்த்த இரண்டு ஸ்திரீகளும் தாதாவிதாதாவென்னுந் தேவதைகள் கறுப்பும் வெளுப்புமாய்க் கண்ட நூல்கள் இரவும் பகலும், பன்னிரண்டு ஆரைக்கால்களும் பன்னிரண்டு மாதங்கள். அந்தச் சக்கரத்தை சுழற்றின ஆறு குமாரர்களும் ஆறு ரிதுக்கள். சக்கரம் வருஷம் நீ கண்ட புருஷன் பர்ஜன்யனென்னும் மேகதேவதை. குதிரை அக்கினிதேவன். நீ வழியிற் பார்த்த விருஷபம் ஐராவதமென்னும் யானை, அதன் மேலிருந்த புருஷன் தேவேந்திரன். நீ உட்கொண்ட கோமயம் அமிர்தம். அதனாலேதான் அந்த நாகலோகத்தில் நீ அழியாமலிருந்தாய். அந்த இந்திரன் எனக்கு ஸ்நேகன் ஆகையினால் உனக்குச் சகாயம் செய்யவந்தான். நீ மேன்மையடைவாய் என்று அநுக்கிரகஞ்செய்து விடைகொடுத்தார். விடைபெற்றுங்கொண்ட உதங்கர் தட்சகனைச் சிக்ஷை செய்யக் கருதி விரைந்து அஸ்தினாபுரம் போய் ஜனமேஜய மஹாராஜனைக் கண்டார். ஜயசீலராகிய ஜனமேஜய மஹாராஜா மந்திரி பிரதானிகள் சூழக் கொலுவிருந்தபோது அவரைக் கண்டு ஆசீர்வதித்துச் சொல்கிறார். மஹாராஜாவே நீர் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்யாமல் வீண்காரியஞ் செய்துகொண்டிருக்கிறது சிறு பிள்ளைத்தனமாமென்றார். ஜனமேஜயர் அது கேட்டுச் சுவாமீ! நான் செய்ய வேண்டுவதென்ன? தேவரீர் என்னிடம் வந்த காரியம் என்ன என்று கேட்டார். உதங்கர், மஹாராஜாவே துராத்மாவான தட்சகனென்னும் சர்ப்பராஜன் தேவதைக்குச் சமானமான உன்பிதாவை அநியாயமாகக் கடித்துக் கொன்றான், அவரைப் பிழைப்பிக்கிறதற்காக வந்த காசியபரையும் அவரிடம் வாராமல் தடுத்தான். நான் குரு தட்சணை கொடுப்பதற்காகச் செய்த முயற்சிக்கு விக்கினஞ்செய்தான். ஆகையால் நீ சீக்கிரமாகச் சர்ப்பயாகஞ் செய்து, அந்த ஹோமாக்கினியில் தட்சகனைச் சுட்டெரிக்க வேண்டுமென்று சொன்னார். ஜனமேஜய மஹாராஜாவுக்குத் தன் பிதாவின் அநியாயமான மரணத்தைக் கேட்டதும் மஹா துக்கமும் தட்சகன்மேலே கடுங்கோபமுமுண்டாயிற்று என்று சூதர் சொன்னார்.



## நாலாவது அத்தியாயம்.

## புரி பௌலோமபர்வம்.

பிறகு ஸௌதமுனிவர் நைமிசாரணிய வாசிகளான ரிஷிகளுக்கு வந்தனஞ்செய்து, ஜனமேஜய ராஜாவின் சர்ப்பயாகத்திற்கு வேறொரு காரணமு

பிருக்கிறது. நீங்கள் விரும்பினால் அதையும் உமக்குச் சொல்லுகிறேனென்றார். ரிஷிகள், ரோமஹர்ஷணபுத்திரரே! நாங்கள் எல்லாக் கதைகளையும் கேட்க விரும்புகிறோம்; மகிமையிற் சிறந்த சௌனகர் அக்கினிஹோத்திர சாலையிலிருக்கிறார். தேவர்கள், அசுரர், மனிதர்கள் எல்லாருடைய கதைகளை யுணர்ந்தவர்; வித்வான்; வேதசாஸ்திரகுரு; சத்தியம், சாந்தி, தவசு நிறைந்தவர்; எங்களுக்குப் பெரியவரும் குலபதியுமானவர்; அவர் இந்த யாகத்தில் தீக்ஷை வகித்திருக்கிறவர், ஆசாரியராகிய அவர் வந்து உட்கார்ந்தபின் அவர் கேட்கிறதைச் சொல்லும் என்று சொன்னார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் சௌனகமுனிவர் தமது வைதிக கிருத்தியங்களை முடித்துக்கொண்டு ரிஷிகள் உட்கார்ந்திருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்தார். யாவரும் சுகமாக உட்கார்ந்துகொண்ட பிறகு சௌனகர் சொல்லுகிறார்.



## ஐந்தாவது அத்தியாயம்.

## பௌலோம பர்வந் தொடர்ச்சி.

சௌனகர் சூதரைப் பார்த்து ஐயா! முன்னாலே உமது பிதா புராணங்களையெல்லாம் சொன்னார். அவைகளெல்லாம் உமக்குத் தெரியுமா? புராணங்களிற் சொல்லப்பட்ட மேன்மையான கதைகளையும், அறிவிற் சிறந்தவர்களுடைய பழமையான வம்சோற்பத்திகளையும் கேட்டிருக்கிறோம். அவற்றுள் பிருகுவம்ச கதைகளை முதலிற் கேட்க விரும்புகிறேன். அந்தக் கதையைச் சொல்லும் என்று கேட்க ஸூதர் சொல்லுகிறார்.

இந்திரன் முதலிய தேவர்களாலும், ரிஷிகளாலும் மற்றுமுள்ள தேவஜாதியாராலும் புகழப்பட்டது. இத்தன்மையதான பிருகுவம்ச சரித்திரத்தை முறையாகச் சொல்லுகிறேன். வருணனுடைய யாகத்தில், பிரமதேவரால் அக்கினியிலே யுண்டாக்கப்பட்டவர். அவருக்கு ச்யவனர் பிறந்தார். ச்யவனருக்குப் பிரமதி பிறந்தார். பிரமதிக்கு ருரு பிறந்தார். ருருவுக்குத் தர்மஞ்ஞரும், சத்தியவதியும், சிறந்த பிரமஞானியும், நியமந்தவறாதவரும், கல்வி கேள்விகளில் மேலானவருமான சுனகர் பிறந்தார். இவர்தான் உமது கூடஸ்தர் என்று சொல்லச், சௌனகர் ஸூதரே! பிருகுபுத்திரருக்கு ச்யவனரென்று பேர் வந்த காரணமென்ன? அதைச் சொல்லவேண்டுமென்று கேட்கச் சூதர் சொல்லுகிறார்.

பிருகுவுக்குப் புலோமை யென்று பேருள்ள ஒரு மனைவி யிருந்தாள். அவள் கீர்த்திபெற்றவள்; அழகிற் சிறந்தவள், அவள் கர்ப்பவதியா யிருந்தாள், ஒரு நாள் பிருகு ஸ்நானத்திற்குப் போயிருந்தார். அப்போது புலோமா என்ற ஒரு அரக்கன் பிருகுவின் ஆச்ரமத்துக்கு வந்தான். புலோமை அவனுக்கு முறைப்படி கனி முதலியவற்றைக் கொடுத்து உபசரித்தாள். இந்த ராட்ச

தன் முன்னேயே புலோமையை விரும்பி வரித்திருந்தான். இப்பொழுது அவளைக் கண்டவுடன் காதல்வசப்பட்டு அவளைக் கொண்டுபோகக் கருதினன். அக்கினிஹோத்திர சாலையில் அக்கினி ஜ்வலித்துக்கொண்டிருந்ததைக் கண்டு, ஓ! அக்கினியே உன்னைச் சத்தியமாகக் கேட்கிறேன்; இவள் யாருடைய மனைவி? இந்தப் பெண்ணை நான் தான் முதலில் வரித்தேன். இவள் பிதா என்னை வஞ்சித்துப் பிருகுவுக்குக் கொடுத்துவிட்டான். முதலில் நான் மனைவியாக வரித்த இவளைப் பிருகுமுனி பெற்றுக்கொண்டதனுல் நான் மனம் வருந்தி யிருக்கிறேன். இந்த விவாகத்தை நான் ஒப்புக்கொள்ளவில்லை. இவளை நான் கொண்டுபோக விரும்புகிறேன்; நீ தேவர்களுக்கு முகமாய்ப் பரிசுத்தனு யிருக்கிறுய்; உண்மைசொல் உன்னிடத்தில் உண்மையைக் கேட்டு இவளை நான் கொண்டுபோக வேண்டுமென்றுன். அதைக் கேட்ட அக்கினி வருத்தமடைந்து நான் ஸத்தியஞ்சொன்னுல் பிருகு சபிப்பார். பொய் சொன்னுல் நிச்சயமாக நரகம் வரும். என்ன சொல்லவேன்று யோசித்து, ஓ அசுரனே! நீ இவளை முதலில் வரித்தது நிசந்தான். ஆனுல் விதிப்படி வரிக்கவில்லை. இவள் பிதா நல்ல வரனை விரும்பி இவளைப் பிருகுவுக்குக் கொடுத்தார். பிருகு என்னைச் சாட்சியாகக் கொண்டு இவளை வேதவிதிப்படி வரித்தார்; ஆகையால் இவள் அவருடைய பாரியை யென்று சொன்னுன்.

---

## ஆருவது அத்தியாயம்.

### பௌலோம பர்வந் தொடர்ச்சி.

இப்படி அக்கினி சொன்னதைக் கேட்ட அசுரன் உடனே ஒரு பன்றி வடிவமாய் அவளைத் தூக்கிக்கொண்டு அதிக வேகமாய் ஓடினுன். அப்போது புலோமையின் கருப்பத்திலிருந்த குழந்தை நழுவிக் கீழே விழுந்து கண்ணை விழித்து அசுரனைப் பார்த்தது. அதனுல் அசுரன் எரிந்து சாம்பலானுன். புலோமை தன் குழந்தையை யெடுத்துக்கொண்டு துக்கத்தோடு ஆச்ரமம் வந்து சேர்ந்தாள். இதை யறிந்த பிரமதேவர் அவளிடம் வந்து அவளை தேற்றினுர். அவளுடைய கண்ணீர் ஒரு ஆருய்ப் பெருகிற்று. பிரமதேவர் அந்த நதிக்கு வதூஸரையென்று பேரிட்டார். அந்த நதிக்கரையில் தான் ச்யவனராச்ரமமிருக்கிறது.

பிறகு பிருகு முனிவர் வந்து தன் புத்திரனையும், அழுதுகொண்டிருக்கும் மனைவியையுங்கண்டு, அவளால் எல்லாச் சமாசாரமுந் தெரிந்துகொண்டார். அவர் உன்னை அந்த ராட்சதன் அறியானே! அவனுக்கு உன்னைத் தெரிவித்தது யாரென்று கேட்டார். புலோமை சுவாமீ! அக்கினிதான் என்னை ராட்சதனுக்குத் தெரிவித்தான்; அதனுலேதான் ராட்சதன் என்னைத் தூக்கிக் கொண்டு போனுன். இந்தப் புத்திரன் இராட்சதனை யெரித்து என்னைக் காப்பாற்றி விடுவித்தானென்றுள். பிருகு அக்கினியைப் பார்த்து நீ எல்லாவற்றையும் பட்சிக்கக் கடவாயென்று சபித்தார்.

---

## ஏழாவது அத்தியாயம்.
## பௌலோமபர்வத் தொடர்ச்சி.

சாபம் பெற்ற அக்கினி கோபித்துப் பிருகு முனிவரைப் பார்த்து, முனிவரே! ஒருவன் கேட்டபோது சத்தியத்தைச் சொன்னதினால் தப்பிதமென்ன? ஒருவன் சாட்சியாக விரும்பினபோது உண்மையைச் சொல்லாமல் பொய் சொன்னால் அவனுடைய முன்னேழு வம்சங்களும், பின்னேழு வம்சங்களும், அவனும் நரகத்தில் விழுவான். ஒன்றும் சொல்லாமலிருந்தாலும் அந்தப் பாபமே சம்பவிக்கும். நீர் யோசியாமலென்னைச் சபித்தீர். எனக்கும் உம்மைச் சபிக்க சக்தியுண்டு. ஆனாலும் நீர் ப்ராமணராயிருப்பதினால் சபிக்கவில்லை. என்னிடத்தில் ஹோமஞ் செய்வதனால் தேவர்களும் பிதிர்களும் திருப்தியடைகிறார்கள். தர்சம் பௌர்ணமாஸ்யம் இவற்றால் தேவர்களும் பிதிர்களும் திருப்தி யடைகின்றனர். தேவர்களே பிதிர்கள்; பிதிர்களே தேவர்கள். இருவருக்கும் வித்தியாசமில்லை. அந்தத் தேவர்களும் பிதிர்களும் என்னை வாயாகக்கொண்டு ஹவிசைப் புசிக்கிறார்கள். அப்படிப்பட்ட நான் எல்லாவற்றையும் புசிப்பதெப்படி? என்று சொல்லி அக்கினிதேவன் ஒளிந்துகொண்டான். அதனால் அக்கினிஹோத்திரம், யாகங்கள் நடவாமற்போயின. அக்கினியில்லாமற் பிரஜைகள் எல்லாரும் வருந்தினார்கள். ரிஷிகளும் தேவர்களும் பிரமதேவரிடம் போய் நடந்த விஷயங்களைச் சொல்லித் தேவர்களுக்கு முகமாயுள்ள அக்கினி எல்லாவற்றையும் புசிப்பவனாவதெப்படி? என்று கேட்டார்கள். பிரமதேவர் எல்லாவற்றுக்கும் காரணமான அக்கினியை யழைத்துக் கூறுகிறார்.

ஓ அக்கினியே! நீ யெல்லா உலகங்களுக்கும் ஆதியும் அந்தமுமாயிருக்கிறாய். சகல கிருத்தியங்களையும் நடத்தி மூன்று லோகங்களையும் காக்கிறாய் ஆகையால் நீ லோகங்களுக்கு ஈசுவரன் கிரியைகளை நடத்தி உலகங்களைக் காப்பாற்று. நீ சக்தியுள்ளவனாயிருந்தும் ஏன் அறியாதவன்போல் நடக்கிறாய்? எல்லாச் சீவர்களுக்கும் நீ தான் ஆதாரம். உன் சரீரத்தின் முழுப்பாகத்தினாலும் நீ எல்லாவற்றையும் புசிப்பதில்லை. உன் பின்புறத்திலுள்ள ஜ்வாலைகளால் எல்லாவற்றையும் புசிப்பாய், உன் ஜ்வாலைப்பட்ட எந்தப் பொருளும் பரிசுத்தமாம். நீ உன் வல்லமையாலேயே பிருகு மஹாரிஷியின் வாசகத்தைச் சத்தியமாகும்படி செய் என்று சொன்னார். அக்கினி அதைக் கேட்டுத் துயரம் நீங்கிப், பிரமாவின் கட்டளைப்படித் தன் தொழிலைப் புரிந்தான். சகலமான ரிஷிகளும் தேவர்களும் சந்தோஷமடைந்தனர். முன்போலச் சகல வைதிக கிரியைகளும் நடந்துவந்தன.

எட்டாவது அத்தியாயம்.
பௌலோம பர்வத்தொடர்ச்சி.

சூதர் சொல்லுகிறார், அந்தச்யவனர் சுகன்னியை மணந்துபிரமதி மஹாரிஷியைப்பெற்றார் பிரமதிக்கு ருருபிறந்தார். அந்த ருரு மஹாரிஷியின் சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

முற்காலத்தில தவத்திற்சிறந்தமகிமையுள்ள ஸ்தூலகேசரென்று ஒரு ரிஷியிருந்தார் அக்காலத்தில மேனகையானவள் விசுவாவஸு என்னும் கந்தர்வனைச்சேர்ந்து கர்ப்பந்தரித்தாள் ஸ்தூலகேச மஹாரிஷியின் ஆச்ரமத்தின் நதிக்கரையில ஒரு பெண்குழந்தையைப்பெற்று, அதை அங்கேயே போட்டுவிட்டு மேனகை போய்விட்டாள். ஸ்தூலகேச முனிவர் அந்தப்பெண் குழந்தையைக் கண்டு அதையெடுத்துவந்து அன்போடுவளர்த்துவந்தார். அந்தப் பெண்ணுக்கு ஜாதகர்மாதிகளும் செய்தார். அந்தப்பெண் குழந்தை வளர்ந்து சகலகுணங்களும நிரம்பிச்சிறந்த அழகுள்ளவளாயிருந்ததனால், அவளுக்குப்பிரமத்வரையென்று பேரிட்டார் ருருமஹாரிஷி அந்த ஆச்ரமத்துக்கு வந்தபோது பிரமத்வரையைக்கண்டு, அவள் மேல் காதல்கொண்டார் அதையறிந்த பிரமதி மஹாரிஷி ஸ்தூல கேசரிடம போய்ப்பேசினார் ஸ்தூல கேசரும் அந்தப் பெண்ணை ருருவுக்குக் கொடுப்பதாக வாக்களித்தார். சமீபத்தில் வருகிற ஹஸ்தநட்சத்திரத்தில் விவாகமுகூர்த்தம நிச்சயிக்கப்பட்டது விவாகத்துக்குச் சமீபமான காலத்தில பிரமத்வரை தன்தோழிகளோடு விளையாடிக்கொண்டிருக்கையில கிடேகிடந்த ஒருபாம்பைப் பாராமல் மிதித்தாள். அது அவளைக்கடித்தது விஷம சரீரத்திற்பரவ பிரமத்வரை நிறமாறி, ஒளிமழுங்கிப் பூமியில் மயங்கி விழுந்து பிணமானாள். அங்கேவந்திருந்த ரிஷிகளும், அவளுடைய பிதாவும் அந்தப் பிரேதத்தைப்பார்த்துக் கூவியழுதார்கள ருரு மாத்திரம் துக்கத்தினால் வெளியிலே போய்விட்டார் மற்றவர்கள அங்கேயே யிருந்தார்கள்.

ஒன்பதாவது அத்தியாயம்.
பௌலோமபர்வத தொடர்ச்சி.

வெளியிற்புறப்பட்டுப்போன ருரு ஒருகாட்டிலதனியாக கதறியழுதார். மிருதுவான சரீரமுள்ள பிரமத்வரை பூமியில் அசைவற்றுப படுத்திருக்கிறாள். அதனால என் பிராணனும போய்விடும போலிருக்கிறது. முழுமதி போன்ற முகமும, தாமரையிதழ் ஒத்த நேத்திரமுமுடைய பிரமத்வரை பூமியில அசைவற்றுப் படுத்திருக்கிறாள். அதனால்என்பிராணனும போய்விடும்போலிருக்கிறது. முழுமதி போன்றமுகமும், தாமரையிதழ் ஒத்த நேத்திரமுமுடைய பிரமத்வரை என் உயிரையுங் கூடக்கொண்டுபோவாள். நான் சந்ததியிலலாமற் போவதினால்என்னுடையபிதிர்க்களுக்குப்பிண்டக்கிரியை

யில்லாமற் போகின்றது. ஆதலால் இதற்கு மேற்பட்ட துக்கம் எங்களுக்கு ஏது? நான் தானமும் தவமும் குருசிசுருஷையும் உடையவனாயிருந்தால் அவள் பிழைத்தெழுந்திருக்கக் கடவள், நான் தெய்வபக்தியுள்ளவனாயிருப்பது மெய்யானால் அவள் பிழைக்கட்டும் என்று கூறிப்புலம்பினார்.

அப்போது ஒரு தேவதூதன்வந்து, ருருவைப்பார்த்து, பிராமணரே! உமக்கு நன்மையான வசனங்களைச் சொல்லும்பொருட்டு என்னைத் தேவர்கள் அனுப்பினார்கள் அதைச் சொல்லுகிறேன் கேளும்; மனிதன் ஆயுசு போனபின் பிழைப்பதில்லை. இந்தப்பிரமத்வரைக்கு ஆயுள் முடிந்து போயிற்று ஆகையால் நீர் வருந்தப்பட வேண்டாம். இவள் பிழைப்பதற்கு ஓர் உபாயம் இருக்கிறது அப்படிச்செய்தால் மறுபடியும் பிரமத்வரை பிழைத்தெழுந்திருப்பாள் நீர் அவளை யடையலாமென்றான் ருரு அவனைப்பார்த்துத் தேவர்கள் கூறிய உபாயம் என்ன? சொல் அப்படியே நான் செய்கிறேன் என்றார். தேவதூதன். முனிவரே! உமது ஆயுசில் பாதியை அந்தப் பெண்ணுக்குக் கொடுத்தால் அவள் பிழைப்பாள் என்றான் ருரு நான் அப்படியே என் ஆயுசிற்பாதி அவளுக்குத் தருகிறேன் என்றார் பின் அந்தத் தேவதூதனும் பிரமத்வரையின்பிதாவான விசுவாவசுவும் எமதர்ம ராஜாவினிடம் போய்த், தர்மராஜாவே! ருரு தன் ஆயுசிற் பாதியை பிரமத்வரைக்குக் கொடுக்கிறார், அதைப்பெற்றுக் கொண்டு பிரமத்வரைபிழைத்தெழுந்திருக்கும்படி அநுக்கிரகஞ்செய்யவேண்டு மென்று கேட்டார்கள். தர்மராஜா அப்படியேயாகட்டுமென்றார் பிறகு பிரமத்வரை ருருவின் ஆயுசிற்பாதியைப் பெற்றுக் கொண்டு தூங்கியெழுந்திருப்பவர்போல் எழுந்திருந்தாள். குறிப்பிட்ட முகூர்த்தத்தில இருவருக்கும் விவாகம்நிறைவேறிற்று இருவரும் சந்தோஷமாகக்கூடிவாழ்ந்து வந்தார்கள்.

ருரு மஹாரிஷியாக மானபின் தானபத்தினியாக விரும்பின பெண்ணைக் கடித்துக்கொன்ற சர்பபக்கூட்டங்களை நாசஞ் செய்வதாகத் தீர்மானஞ்செய்துகொண்டார். எப்பொழுதும் கையில் ஒரு ஆயுதம்வைத்துககொண்டிருப்பார். சர்ப்பங்களைக் கண்டபோதெல்லாம அவைகளை யடித்துககொன்று கொண்டுவந்தார். ஒருநாள் காட்டுக்குள் போகையில் அங்கே ஒரு கிழமான தண்ணீர்ப் பாமபு படுத்திருந்தது அதைக்கொல்லததீர்மானித்துத தடியைஓங்கினார் அந்த நீர்ப்பாமபு அவரைப்பார்த்து, ஓ முனிசிரேஷ்டரே! நான் உமக்கு யாதொரு கெடுதியும் செய்யவில்லையே, நீர் ஏன் என்னைக் கொலல வருகிறீர் என்று கேட்டது.

## பத்தாவது அத்தியாயம்
## பௌலோம பர்வதொடர்ச்சி

ஓ பாமபே! ஒரு சர்ப்பம் என்மனைவியைக் கடித்தது, அது முதல் சாப்பங்களைக் கண்டவிடத்தில் கொல்லுகிறதென்று நிச்ச

யம் பண்ணிக்கொண்டேன் ஆகையால் நான் உன்னைக் கொல்லப் போகிறேன், இப்பொழுது உன் பிராணன் போகப்போகிறது என்றார் பிராமணரே! மனிதர்களைக் கடிக்கிற பாம்புகள் வேறு, நீர்ப் பாம்பு கடிக்கிறதில்லை ரூபத்தினால் இரண்டும் ஒரே மாதிரியாக இருப்பதனால் நீர் அவற்றைக் கொல்வது நியாயமில்லை. இரண்டு பாம்புகளுக்கும் ஸ்வபாவகுணம் வேறு தர்மம்தெரிந்தநீர் தண்ணீர்ப் பாம்புகளைக் கொல்வது சரியாகாது என்று சொல்லிற்று.

பாம்பின் வார்த்தையைக் கேட்டு ருரு! அந்தப்பாம்பு ஒரு ரிஷியாக இருக்க வேண்டுமென்று கருதி யதைக்கொல்ல விரும்ப வில்லை. அதைப்பார்த்துப் பாம்பே! நீ யார்? ஏன் உனக்குப் பாம் பின் உருவம்வந்தது என்றார் பாம்பு அவரைப்பார்த்து, நான் ஸஹ ஸ்ரபாத் என்றரிஷி, ஒரு பிராமணனுடைய சாபத்தினாலே பாம் புருவம்பெற்றேன் என்றது. ருரு, பாம்பே! அந்தப் பிராமணன் உன்னை ஏன் சபித்தார்? இந்தச் சாபம் எப்பொழுது தீரும்? என்று கேட்டார்

---

## பதினோராவது அத்தியாயம்

## பௌலோம பர்வதொடர்ச்சி

நீர்ப்பாம்பு ஐயா! நான் சிறுவயதாயிருந்தபோது ககமா என்ற பிராமணர் எனக்குச் சிநேகமாயிருந்தார். அவர் தவசிரேஷ்டரும், கடுங்கோபமுள்ளவருமாயிருந்தார். அவர் அக்கினிஹோத்ரஞ்செய் துகொண்டிருந்தபோது புல்லினால் ஒரு பாம்பு பண்ணி அவரைப் பயமுறுத்தினேன். அவர் பயந்து மூர்ச்சித்து விழுந்துவிட்டார். மூர்ச்சை தெளிந்தபின் கோபமுண்டவராய் நீ பயனில்லாச சர்ப்பத் தைக் காட்டிப் பயமுறுத்தினபடியால் நீ பாம்பாகக்கடவது என்று சபித்தார். நான் பயந்து அவரைப்பணிந்து, நான் சிநேகத்தினால் பரிகாசமாக விளையாடினேன். ஆகையால் நீர் பொறுத்துக்கொண்டு என் சாபத்தை விடுவிக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டேன். பின் அவர் மனம் இரங்கி, நான்சொல்வதாவது, பிரமதிபுத்திரரான ருருமஹாரிஷி உன்னைக் கண்டவுடன் இந்தச் சாபம் நிவிர்த்தியா கும். அதுவும சீக்கிறமாகவே சம்பவிக்குமென்று கூறினர். உடனே நான் பாம்புருவமடைந்தேன். ருருமஹாரிஷியே! இப்பொழுதே நான் என் பழைய ரூபத்தையடைகிறேன என்று கூறி, உடனே பாம்பின் வடிவத்தைவிட்டுத் தம சுயரூபத்தை யடைந்தார். பின் ருருவைப்பார்த்து, சிறந்த மகிமையுள்ளவரே! ஜீவஹிம்சை பண் ணாமலிருப்பது தான் எல்லாத தர்மங்களிலும் முதன்மையான தர் மம. பிராமணன் சாந்தகுணமுள்ளவனென்று உலகததில பிரசித்தி யடைந்திருக்கிறான், கொல்லாமை, பொய் சொல்லாமை,பொறுமை வேதாத்தியானம் இவைகள் பிராமணனுக்கு முக்கிய தர்மம. தன்

டிப்பது, கடுமையாயிருப்பது, பிரஜாபரிபாலனம் இவை இராஜ தர்மம் அந்த க்ஷத்திரிய தர்மத்தை நீர் அனுஷ்டிப்பது கூடாது முன்னே ஜனமேஜய மஹாராஜா சர்ப்பயாகஞ் செய்து சர்ப்பங்களை யெல்லாங் கொன்றார். அப்போது தவஸிரேஷ்டராகிய ஆஸ்தீகா என்ற பிராமணர் இரக்கத்தினால் அந்தப்பாம்புகளைக்காப்பாற்றினார். அந்தக் கதையைக்கேளும், என்று சொல்லுகின்றார்

பன்னிரண்டாவது அத்தியாயம்

பௌலோம பர்வத்தொடர்ச்சி

ருரு, அந்த ரிஷியைப்பார்த்து ஓ முனிவரே! ஜனமேஜயர் சர்ப்பங்களை யெப்படிக் கொன்றார் அப்படிக்கொலைக் காரணம் யாது? ஆஸ்தீகர் ஏன் சர்ப்பங்களைவிடுவித்தார். அந்தக்கதை முழுவதும் கேட்க விரும்புகிறேனென்றார். ரிஷி பிராமணரே! அந்தக் கதை விரிவானது அதை நீர் வேறு பிராமணரிடத்தில கேட்டறிந்து கொள்ளும். நான் அவசரமாகப்போகவேணடுமென்று திடீரென்று மறைந்து போனார்

ருரு அவரைத் தேடிக்கொண்டு எங்கும் ஓடிக்களைத்துப் போனார். அவரைக்காணமுடியவில்லை. பிறகு தமது ஆசிரமந்துக்குவந்து பிதாவை வணங்கி அதையெல்லாம் சொல்லி, ஆஸ்தீகர் கதையை நடந்தபடி கேட்க விருமபுகிறேன். நீர் அதை ஆதியோடந்தமாகச் சொல்லவேண்டுமென்று கேட்க அவருடைய பிதா அந்தக் கதை முழுவதையும் அவருககுச் சொன்னார்.

பதிமூன்றாவது அததியாயம்

ஆஸ்தீக பாவம்

சௌனகர் ஸூதரைப்பார்த்து, ஜனமேஜயர்என்னததிற்காகச் சர்ப்பயாகஞ் செய்தார? ஆஸ்தீகர் சர்ப்பங்களை யேன்விடுவித்தார் ஸர்ப்பஸத்திர யாகம் செயத அந்த ராஜா யாருடையபுத்திரர்? பிராவணோத்தமராகிய ஆஸதீகர் எவருடைய குமாரர்? இவைகளை யெல்லாமஎனககுச்சொலலுமென்று கேட்கச்சூதமுனிவர்சொல்லுகிறார். முனிவரே! ஆஸ்தீகர் சரிததிரம்பெரிது பெரியோர்கள் சொன்னபடி நான் சொலலுகிறேன், கேளுங்களென்று சொல்லுகிறார்.

இந்த இதிஹாசம்பூர்வகற்பங்களிலும்உள்ளதென்றுபிராமணர்கள் சொல்லுகிறார்கள் முன்னே நைமிசாரணிய வாசிகளுக்கு என் பிதாவாகிய ரோமஹர்ஷணர் சொன்னார். நானும் என பிதாவிடம் கேட்டபடி சொல்லுகிறேன். சகல பாபங்களையும் போக்குகிற ஆஸ்தீக சரித்திரத்தைக் கேளுங்கள். ஆஸ்தீகருககுப் பிதா ஜாத்காரு என்பவர். அவர் பிரமதேவரைப் போன்றவர் அவர் பிரமசாரியாக வே யிருந்தார். ஆகாரத்தை யொழித்துக் கடுந்தவம புரிந்தார். கிராமத்துக்கு ஒரு இரவு தங்குகிறவர். சூரியன் அஸ்தமித்த

இடத்தில் தங்கிப்பூமி முழுவதும் திரிந்தார். எல்லாப் புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்தார். அவர் ஒருவராலுஞ் செய்யமுடியாதக் காரியங்களைச் செய்து ஆகாரமில்லாமல் சுற்றிக்கொண்டிருக்கையில் ஒருபள்ளத்தில் தலைகீழாகத் தொங்கிக்கொண்டிருந்த தமது பிதிர்களைக் கண்டார். அவர்களைப்பார்த்து நீங்கள் யார்? எலிகள் கடித்த விலாமிச்சம்வேரைப் பற்றிகொண்டு தலைகீழாகத்தொங்குகிறீர்களே! ஏன் என்று கேட்டார்.

அந்த ரிஷிகள் பிராமணரே! நாங்கள் சந்ததி குறைந்து போனமையால் பூமியின் கீழே போய்க்கொண்டிருக்கிறோம். எங்களுக்கு ஜரத்காரு என்று ஒருவன்தான் ஸந்ததியாக இருக்கிறான் அந்த மூடன் சந்ததி விருத்தியாவதற்காக விவாகம் செய்துக்கொள்ளவில்லை தவத்திலேயே சிரத்தையுள்ளவனாக இருக்கிறான் அவன் எங்களுக்கு நாதனாக இருந்தும் சந்ததி இல்லாமையால், நாங்கள் இந்தப் பள்ளத்தில தலைகீழாகத் தொங்கநேர்ந்தது. சந்ததியில்லாதவர்கள் புண்ணியம் பண்ணினவர்களாயிருந்தாலும் சொர்க்கத்தை யடைகிறதில்லை. நீ யார்? எங்களைப்பற்றி வருத்தப்படுவானேன்? என்று கேட்க ஜரதகாரு சொல்லுகிறார்.

நான் தான் ஜரத்காரு; நீங்கள் பிதாமகர்களும் பிதிர்களும்; இப்போது நான் என்ன செய்யவேண்டும்? சொல்லுங்கள் என்றார். பிதிர்கள் புத்திரனே! நீ சந்ததியை விரும்பியானாலும எங்களுக்காகவானாலும் தாமத்தைக் கருதியானாலும விவாகம் புரிந்துகொள்ள முயற்சிசெய். சந்ததியுள்ளவர்கள் அடையத்தக்க நற்கதியைப்பூர்வ புண்ணிய பலனாலும அடையமுடியாது. இபபொழுது செய்யும் தவத்தினாலும முடியாது புத்திரனே! நீ எங்களுக்கு நன்மை செய்ய விரும்பினால விவாகஞ் செய்துகொள்ள முயற்சி செய், இதுதான் எங்களுக்கு வேண்டியது என்று சொன்னார்கள்.

ஜரத்காரு, எனக்கு மனைவியும், ஜீவனத்துக்காகப் பொருளும் வேண்டியதில்லை உங்களுடைய நன்மைக்காக விவாகஞ் செய்துகொள்வேன் என்பெயருள்ள பெண்ணாயிருக்க வேணடும அவளுடைய பந்துக்கள் தாங்களாகவே கொண்டுவந்து கொடுக்கவேண்டும் அப்போது நான் பிக்ஷைவாங்குவதுபோல அவளைவாங்கிக்கொண்டு விதிப்படி மணம புரிவேன். இப்படிப் பெண்கிடைக்குமானால விவாகஞ் செய்வேன் இல்லாவிட்டால் முடியாது. அப்படிககிடைத்த பெண்ணினிடமாகச் சந்ததியை விருத்திசெய்வேன். என்பிதிர்க்கள் சந்தோஷமடையக் கடவர்கள் என்று சொன்னார்

## பதினாலாவது அத்தியாயம

## ஆஸ்தீகபர்வத் தொடர்ச்சி.

அதன் பின் அந்த ஜரத்காரு,பெண்ணுக்காகப் பூமிமுழுவதும் அலைந்தார். தமது நியமத்தைப்போல மனைவிகிடைக்கவில்லை. ஒரு

போல இனி ஓடி வாராதே. நான் யுத்த களத்திலிருந்து ஓடி வந்ததும், நான் முதலில் அடிப்பட்டதும், மாதவர் அறிந்தால் என்ன நினைப்பார்? பலராமர் என்ன சொல்வார்? சாத்யகி, கதன், சாம்பன், சாருதேஷ்ணன், சரணன், அக்ரூரன் இவர்கள் என்ன நினைப்பார்கள்? விருஷ்ணிகுல வீரர்களின் பத்தினிகள், இதுவரைக்கும் அநேகம் பெருமையோடிருந்த என்னைப் பற்றி எப்படி பேசிக்கொள்வார்கள்? சூதா! என்னைப் போன்ற வீரர்களுக்கு அவமானமானது மரணத்தை விட அதிக துன்பமா யிருக்கும். இனி ஒரு போதும் யுத்தகளத்தை விட்டு வாராதே. கிருஷ்ணர் இந்த நகரத்தை என் வசத்தில் ஒப்புவித்து விட்டு,யுதிஷ்டிரர் செய்கிற யாகத்துக்குப் போயிருக்கிறார். ஆகையால் நான் இப்போது சும்மா இருக்கக் கூடாது. வீரனை கிருதவர்மன் சண்டைக்கு எழுந்திருந்தபோது,அவனைத் தடுத்துவிட்டு நான் சண்டை செய்கிறேன். நீ நில்லு என்று அவனுக்குச் சொல்லிவிட்டு வந்தேன். கிருஷ்ணமூர்த்தி வந்தால் நான் அவருக்கு என்ன சொல்வேன்? என்னைப் பற்றி எப்போதும் பெருமையாகப் பேசிக்கொண்டிருக்கிற அந்தகர்களுக்கும் சாத்யகிக்கும், பலதேவருக்கும் நான் என்ன சொல்வேன்? நான் அப்படி யுண்டு, மயங்கி யிருக்கையில் நீ தேரை ஓட்டிக்கொண்டு வந்துவிட்டாய். நான் முதுகில் அடிப்பட்டு மீண்டால் உயிர் வாழ மாட்டேன். உடனே தேரைத் திருப்பு. எப்படிப்பட்ட ஆபத்து நேரிட்டபோதும் கூட இப்படிச் செய்யாதே. சூதா! நான் எப்பொழுதாவது யுத்த களத்தை விட்டுப் பயந்து ஓடி வந்ததை நீ பார்த்திருக்கிறாயா? நான் யுத்தம் செய்ய விருப்பமுள்ளவனா யிருக்கையில் நீ இப்படிச் செய்தது கூடாத காரியம். யுத்த களத்துக்குத் தேரைச் சீக்கிரம் திருப்பு என்று சொன்னான்.

---

## 19-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

தர்மராஜாவே! இப்படிச் சொன்ன பிரத்யும்னனுக்குத் தேர்ப்பாகன் மதுர வசனங்களாகச் சொல்லுகிறான். ருக்மிணிபுத்திரரே! நான் யுத்த களத்தில் பயப்படவில்லை. விஷ்ணிகுலத்தார் யுத்தகளத்தில் நடந்துகொள்வது எனக்குத் தெரியும். அப்படிச் செய்யாவிட்டால் வேறு வழியில்லை, தீர்க்காயுசுள்ளவீரனே! தேர்ப்பாகர்கள் யுத்தவீரனைக் காப்பாற்றுகிற வகை யிது தான். நீர் மிகவும் வருத்தப்படுகிறீர். நீர் சால்யன் அம்பினால் மெத்த நொந்து பிரக்ஞை தப்பிப்போனீர். ஆகையால் நான் யுத்தத்தை விட்டுத் தேரை ஓட்டிக்கொண்டு வந்துவிட்டேன். நீர் மூர்ச்சை தெளிந்திருக்கிறீர். இப்பொழுது என் சாமர்த்தியத்தைப் பாரும், நான் தாருகனுக்குப் பிறந்து தேர்த்

தொழிலைக் கிரமமாகப் பயின்று இருக்கிறேன். நான் இப்பொழுது கொஞ்சம் கூடப் பயப்படாமல் பகைவர் சேனையில் புகுவேன் என்று கூறித் தேரை யுத்தபூமிக்கு வேகமாய் ஓட்டினான். குதிரையும் வேகமாகப் பலவகைக் கதிகள் தோன்ற ஓடின. அப்படித் தேர் வருகிறதைச் சௌபராஜன் பார்த்து ஆச்சரியப்பட்டுத் தேர்ப்பாகன் மேல் மூன்று பாணங்களை யெய்தான். அவன் அதை அலட்சியம்பண்ணி முன் போலவே தேரை வெகு வேகமாகச் சேனையைச் சூழ ஓட்டினான்.

பிறகு சௌபராஜன் பிரத்யும்னன்மேல் பலவகை ஆயுதங்களையும் மழை போலச் சொரிந்தான். என் குமாரன் சிரித்துக்கொண்டே அவைகளை வெட்டித் தள்ளினான். சௌபன் மாயாசக்தியால் மறுபடியும் அம்புமழை பொழிந்தான். பிரத்தியும்னனும் பாணங்களை யெய்தான். அந்தத் தெய்வாஸ்திரங்கள் சௌபராஜனுடைய சிரசு, புஜம், முகம் இவைகளை பூடுருவின. அவன் அறிவழிந்து கீழே விழுந்து விட்டான். பிரத்யுமனன் எல்லாச் சத்துருக்களையும் நாசம்பண்ணக் கருதி மற்றொரு தெய்வாஸ்திரத்தைப் பிரயோகம் பண்ணினான். தேவர்கள் உத்தரவினால் நாரதரும் வாயுதேவனும் பிரத்யும்னனிடம் வந்து, எங்களைப் பிரமதேவர் உன்னிடம் அனுப்பினார். இந்தத் தைத்யனைக் கிருஷ்ணன்தான் கொல்லவேண்டும். மற்றவராலே சாக மாட்டான். ஆகையால் நீ எய்த அம்பை மீட்டுக் கொள்ளும்படி உனக்குச் சொல்லச் சொன்னார் என்றார்கள். உடனே பிரத்யுமனன் அந்த அஸ்திரத்தை மீட்டு தூணியில் வைத்தான், தைத்தியன் ஓடிப்போனான்.

---

## 20-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

கண்ணன் தர்ம ராஜாவைப் பார்த்து, மஹா ராஜாவே! உமது யாகம் முடிந்ததும் நான் துவாரகைக்குப் போனேன். துவாரகை அழகழிந்திருப்பதையும், பெண்களெல்லாரும் ஆபரணாலங்கார மின்றி யிருப்பதையும், சோலைகளெல்லாம் பாழாயிருப்பதையும் பார்த்து, ஹ்ருதிகனுடைய குமாரனை இது ஏன் என்று கேட்டேன். அவன் நடந்தவற்றை யெல்லாம் சொன்னான், நான் அந்தச் சத்துருவைக் கொல்ல நிச்சயித்துக்கொண்டேன். ஆஹுகன் முதலியோரைப் பார்த்து நீங்கள் இங்கே ஜாக்கிரதையாக இருங்கள். நான் அந்தப் பகைவனைக் கொல்லாமல் இந்த நகரத்துக்கு வருகிறதில்லை. அவனைக் கொன்ற பிறகு வருகிறேன் என்று சொன்னேன். அவர்களும் மன மகிழ்ந்து அப்படியே அவனைச் சங்கரித்து வாருமென்று சொன்னார்கள். நானும் பிராமணர்களையும் சிவனையும் வணங்கி நால் வகைச் சேனைகளோடும் புறப்பட்டு காடுகள் மலைகள், நகரங்கள், நதிகள், எல்லாவற்றையும் கடந்து அவனுடைய பட்டண

த்துக்குப் போனேன். அவன் சமுத்திரத்தி னருகிலிருப்பதாகக் கேள்விப் பட்டு அங்கே போனேன். அவனைச் சமுத்திர மத்தியில் கண்டேன். அவன் என்னைப் போருக் கழைத்தான். நான் எய்த அம்புகள் அவன் தேரின் கிட்டப் போகவே யில்லை. அந்த அரக்கனுடைய குமாரன் சரவருஷம் வருஷித்தான் மேலும் மேலும் அம்புகளை யெய்து என்னையும் தேரையும் மறைத்து விட்டான், தாருகன் குதிரைகள் கூட எனக்குத் தெரியவில்லை. நானும் அள வில்லாத பாணங்களைப் பிரயோகித்தேன். அநேக தானவர்கள் வெட்டுண்டு கடலில் விழுந்தார்கள். நீர்வாழும் ஜந்துக்கள் அவர்களுடைய சரீரங்களை விழுங்கின. பாஞ்ச ஜன்யத்தை ஊதினேன். சௌபராஜன் நேரில் சண் டை செய்ய வந்தான். அநேக வகையான ஆயுதங்களை யென் மேலெய்தான். நான் அவைகளைச் சிதைத்தேன். அவன் மாயையால் சாம்பல், கரி ஆயுதங் களை யெய்து சண்டை யிட்டான். அப்போது இரவென்றும் பகலென்றும் தெரியவே யில்லை. மயக்க முண்டாயிற்று. அப்போது நான் ஞானாஸ்திரத் தை யெய்தேன். மாயை ஒழிந்து பிரகாச முண்டாயிற்று. மறுபடியும் சண் டை தொடங்கினேன்.

---

## 21-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

யுதிஷ்டிர மஹா ராஜாவே! அந்தத் தானவன் மறுபடியும் ஆகாயத்தில் கிளம்பிச் சென்று அக்கினி மயமான அம்புகளையும் ஆயுதங்களையும் சொரித் தான். அவைகளை நான் பாணத்தினால் என்னிடம் வராமல் தடுத்து விட்டேன் அவைகள் ஆகாயத்திலேயே பல துண்டுகளாகச் சிதறிப்போயின. உடனே ஆகாயத்திலே இடி முழக்கம் போன்ற கர்ஜனை உண்டாயிற்று. சால்வன் அநேகமாயிரம் அம்புகளால் தாருகனையும் தேர் குதிரைகளையும் மறைத்து விட்டான். தாருகன் களைத்துப் போய் என்னைப் பார்த்து, நான் பகைவ னுடைய பாணங்களால் மெலிந்து போனேன். என்னால் இங்கே நிற்க முடி யாது என்றான். அவனுடைய சரீர மெல்லாம் அம்பினால் துளை யுண்டிருப்ப தைக் கண்டும், அவனுடைய காயங்களிலிருந்து இரத்தம் பெருவதைப் பார்த் தும் நான் வருந்தித் தாருகனைச் சந்தோஷப் படுத்திக்கொண்டிருந்தேன். இந்தச் சமயத்தில் ஒரு மனிதன் வெகு வேகமாய் என்னிடத்தில் வந்தான். அவன் ஆகுகனுடைய வேலைக்காரன் போலத் தோன்றினான். அவன் என் னைப் பார்த்து, நீர் இல்லாத சமயத்தில் சௌபராஜன் துவாரகைக்கு வந்து வசுதேவரைக் கொன்று விட்டான். ஆகையால் நீர் சண்டையை நிறுத்தி விட்டுத் துவாரகைக்கு உடனே வரவேண்டும் என்று ஆகுகன் உம்மிடம் சொ ல்லச் சொன்னார் என்றான். இந்த வசனத்தை என்ன செய்கிறது என்று தோ ன்றாமல் என் மனம் மயங்கிற்று, நான் மனம் வருந்திப், பலராமர், சாத்யகி, பிரத்

தியும்னன், சாரு தேஷ்ணன் இவர்கள் உயிரோடிருக்கிறார்களா! வசுதேவர் இறந்திருந்தால் மற்றவர்களும் இறந்திருப்பார்களென்று துக்கத்தோடு கேட்டேன். மன வருத்தத்தோடு மறுபடியும் யுத்தத்துக்கு ஆரம்பித்தேன். இந்தச் சமையத்தில் வசுதேவருடைய பிரேத சரீரம் எனக்கு எதிரில் விழுந்தது. அதைப் பார்த்து நான் சோர்ந்து போனேன். வில் என் கையினின்றும் நழுவி விழுந்தது. நான என்னுடைய தேரின் மேல் உட்கார்ந்து கொண்டேன். என் சேனை வீரர்களும் கதறி அழுதார்கள். என் பிதா விழுந்தபோது சத்துருக்கள் ஆயுதங்களால் அவரைக் குத்தினார்கள். நான் என்னைத் திடப்படுத்திகொண்டு எழுந்திருந்தேன். அப்போது என் பிதா சௌபன், அவன் படைகள் ஒருவரும் இல்லை. உடனே இது இராட்சத மாயை யென்று நிச்சயம் பண்ணிக்கொண்டு அநேக பாணங்களை யெய்தேன்.

---

## 22-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

மஹாராஜாவே! சார்ங்கத்தினின்றும் விடுபட்ட பாணங்கள் தானவர்களைச் சங்கரித்தன. தானவர்கள் மூலைக்கு மூலை தோன்றிக் கர்ஜித்தார்கள். சப்தமுண்டான இடங்கள் எங்கும் பாணங்களை யெய்தேன். அவர்களும் அழிந்தார்கள். தானவர்கள் என்மேல் கற்களை மழை போலச் சொரிந்தார்கள். என்னைக் கொல்லக் கருதி மேலும் குன்றுகளையும் பாறைகளையும் என் மேலெறிந்தார்கள். அந்தக் கல்மழையால் நான் தேர் குதிரைகளோடு மறைந்து போனேன். அப்போது என் சேனாவீரர்கள் கதறிக்கொண்டு ஓடினார்கள். எதிரிகள் களிப்படைந்தார்கள். நான் வஜ்ராயுதத்தினால் அந்த மலைகளைப் பொடியாக்கி வெளிப்பட்டேன். என் குதிரைகள் கல்லடிபட்டுக் களைத்து நடக்க முடியாமல் நின்றுவிட்டன, அப்போது தாருகன் என்னை நோக்கிக் கேசவா! அதோ சௌபன் நிற்கிறான். இரக்கம் வையாதேயும்; உடனே கொல்லும் என்றான். பகைவன் பலஹீனனாயிருந்தாலும் விடக் கூடாது. இரங்காமல் கொல்லவேண்டும். ஆகையால் தாமதம் பண்ணாமல் அவனைக் கொன்று வெற்றியடையும் என்றான். நான் அதைக் கேட்டவுடன் அதுவே நியாயமென்று கருதி என் சுதரிசனத்தை யேவினேன். அது யுகாந்தகாலத்தில் உதிக்கிற சூரியனைப் போல ஜ்வலித்துக்கொண்டு வானத்தில் சென்றது. தானவனுடைய நகரத்தையும் சௌபனையும் அழித்தது. சௌபன் இரு துண்டாக விழுந்தான். அவனுடைய சேனைகள் திக்குகள் தோறும் சிதறி யோடின. உடனே நான் வெற்றி யோடு துவாரகைக்குத் திரும்பி வந்தேன். என்னுடைய நேசர்கள் எல்லாரும் சந்தோஷமடைந்தார்கள். தர்மராஜாவே! இந்

தக் காரணத்தால் நான் அஸ்திநாபுரம் வர முடியாமல் போயிற்று, நான் வந்திருந்தால் துரியோதனன் பிழைத்திருக்கமாட்டான். சூதாட்டமும் நடந்திராது. நான் இப்பொழுது என்ன செய்கிறது, கரை உடைந்த பின் வெள்ளத்தை நிறுத்த முடியாதல்லவா? என்றார்.

கிருஷ்ணன் இவ்வாறு சொல்லிவிட்டுத் துவாரகைக்குப் போகப் பிரயாணப்பட்டார். யுதிஷ்டிரரை வணங்கி விடை கேட்டார். அவரும் பதில் மரியாதை செய்து விடை கொடுத்தார். பீமனும் வணங்கினான். அர்ஜுனனைத் தழுவிக்கொண்டார். தௌமியருக்கு நமஸ்காரம் பண்ணினார். திரௌபதி அழுதுகொண்டே கண்ணனை வணங்கினாள். சுபத்திரை அபிமன்யு இருவரையும் தேரிலேற்றித் தானும் ஏறிக்கொண்டு பிரயாணமானார், திருஷ்டத்யும்னனும் திரௌபதி புத்திரர்களை அழைத்துக்கொண்டு பாஞ்சாலநகரம் நோக்கிச் சென்றான். சேதிராஜன் நகுலன் மனைவியாகிய தன்சகோதரியை அழைத்துக்கொண்டு தன் நகரம் போய்ச்சேர்ந்தான்.

---

## 23-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

பிறகு பாண்டவர்கள் தௌமியர் திரௌபதி யிவர்களோடும் தேரின் மேலேறிக்கொண்டு வேறொரு வனத்தை நோக்கிப் போனார்கள். அப்போது அங்கு வந்திருந்த குருஜங்கால நாட்டு ஜனங்கள் யுதிஷ்டிரரைப் பார்த்து அரசனே! நீரே கௌரவர்களில் சிரேஷ்டர்; நீரே எங்களுக்கு அரசன். நாங்கள் உம்முடைய குடிகள். துரியோதனன், சகுனி, கர்ணன் இவர்கள் துஷ்டர்கள். இந்தப் பாபிகள் தர்மிஷ்டராகிய உம்மை எப்போதும் பகைக்கிறார்கள். தர்மராஜாவே! நீர் ஒப்பற்ற இந்திரப்பிரஸ்த நகரத்தையும், மயனால் சிருஷ்டிக்கப்பட்ட சபையையும் எங்களையும் விட்டு எங்கே போகிறீர் என்றார்கள். அர்ஜுனன் அந்த ஜனங்களை நோக்கித், தர்மராஜா கொஞ்ச காலம் வனத்தில் வசித்துச் சத்துருக்களுடைய புகழை அழிக்கப்போகிறார் என்று இரைந்து சொன்னான். இதைக் கேட்ட எல்லாரும் அர்ஜுனனுக்கு வர்தனம் அளித்தார்கள். பாண்டவர்களையும் திரௌபதியையும் வாழ்த்தினார்கள். அதன் பின் தர்மராஜாவின் கட்டளையால் அழுதுகொண்டே தத்தம் இடம் நோக்கிப் போனார்கள்.

## 24-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

அவர்கள் போனபின் யுதிஷ்டிரர் தம்பிமார்களை நோக்கி நாம் பன்னிரண்டு வருஷம் வனத்தில் வசிக்க வேண்டும். ஆகையால் இந்த வனத்தில் நாம் வசிகரத் தக்க ஒரு இடத்தைப் பாருங்கள். அவ்விடம் மான் முதலிய மிருகங்களாலும், பட்சிகளாலும், மலர், காய் கனிகளாலும், நிறைந்திருக்க வேண்டும். அவ்விடத்தில் தான் நாம் சுகமாய் வசிக்க வேண்டும் என்றார். அப்போது அர்ஜுனன். தர்மராஜாவை வணங்கிச் சொல்லுகிறான். மஹா ராஜாவே! நீர் வயதில் முதிர்ந்தவரான அநேக மஹா ரிஷிகளை தரிசித்திருக்கிறீர். உமக்குத் தெரியாதது பூமியிலே ஒன்றுமில்லை. கிருஷ்ணத்வைபாயனர், நாரதர் இவர்களைப் போன்ற பெரியோர்களையும் தரிசித்து வணங்கியிருக்கிறீர். அவர்கள் பிரமலோகம், கந்தர்வலோகம் முதலிய சகல உலகங்களையும் பார்த்து வந்தவர்கள். நீர் எல்லா வற்றிலும் வல்லவர்களான அநேக அந்தணர்களையும் அறிந்திருக்கிறீர். நம்முடைய சுகத்துக்கு வேண்டிய ஆதார மெல்லாம் உமக்குத் தெரியும். ஆகையால் நீர் எங்கே யிருக்க விரும்புகிறீரோ அங்கேயே நாங்களும் இருக்கிறோம். இதோ த்வைத வனம் இருக்கிறது. அதில் நீர் சொன்னபடி பட்சி, மிருகங்களும், காய், கனி, மலர்களும் நிறைந்திருக்கின்றன. இதோ தெரிகிற ஏரி அதைச் சேர்ந்ததுதான். நீர் பிரியப்பட்டால் நாம் பன்னிரண்டு வருஷமும் இங்கே வசிக்கலாம் என்றான். தர்மராஜா, அர்ஜுனா! நீ சொன்னதை நான் மனப்பூர்வமாய் ஒப்புக்கொள்கிறேன். நாம் அந்த த்வைத வன ஏரிக்குப் போவோம் என்று சொல்லிப் பிராமணர்களோடு கூடப் புறப்பட்டார். அந்த வனம் மா மரம், மதுக மரம், அர்ஜுன விருக்ஷம், கர்ணிகாரம், கடம்பு முதலியவைகளால் நிறைந்திருந்தது. இனிய மலர்கள் புஷ்பித்திருந்தன, மயில், குயில், சகோரம் முதலிய பறவைகள் மரங்களின் உச்சியில் உட்கார்ந்து மதுரமாய்த் தொனித்துக்கொண்டிருந்தன, கூட்டங் கூட்டமாகப் பிடியானைகளோடு ஆண்யானைகள் உலாவிக்கொண்டிருந்தன. மரவுரி சடைமுடி தரித்துக்கொண்டு அநேக ரிஷிகள் வாசம்பண்ணிக்கொண்டிருந்தார்கள். தர்மபுத்திரர் அந்த வனம் போய்த், தேவேந்திரன் தன் பரிவாரங்களோடு வானத்தினின்று இறங்குவது போலத் தேரினின்றும் சகோதரர்களோடு இறங்கினார். அப்போது சித்தர் சாரணர்களும், அவ்வனவாசிகளும் யுதிஷ்டிரரைப் பார்க்க வந்து அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். தர்மபுத்திரர் சித்தர்களை வணங்கி அவர்கள் செய்த மரியாதையை ஏற்றுக்கொண்டு வனத்தில் பிரவேசித்தார். அங்குள்ளவர்களுடன் ஒரு பெரிய மரத்தின் அடியில் உட்கார்ந்தார், அது பூர்வ காலத்தில் பாண்டு மஹாராஜன் வனத்தில் உட்கார்ந்திருந்தது போலிருந்தது. பீமன் அர்ஜுனன், நகுலன், சஹதேவன். திரௌபதி, மற்றுமுள்ளவர்கள் எல்லாரும் தர்மராஜாவைச் சூழ்ந்து உட்கார்ந்தார்கள்.

---

## 25-வது அத்தியாயம்.

அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

அந்த வனத்தில் மதுரமான கனிகளையும் கிழங்குகளையும் ரிஷிகளுக்கும் யதிகளுக்கும் கொடுத்து உபசரித்துச் சந்தோஷிப்பித்தார். தௌமியர் அவர்களுக்கு அனேக இஷ்டிகளைச் செய்வித்தார். அப்போது மார்க்கண்டேய முனிவர் பாண்டவரிடம் வந்தார். யுதிஷ்டிரர் அவரை வணங்கி உபசரித்தார். மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரைப் பார்த்துப் புன்சிரிப்புக் கொண்டார். அதைக் கண்ட யுதிஷ்டிரர் அவரைப் பார்த்து இங்கேயிருக்கிறவர்கள் எல்லாரும் என்னைப் பார்த்து வருத்தப்படுகிறார்கள். நீர் மாத்திரம் சிரிக்கிறீர். அதற்கு என்ன காரணம் சொல்ல வேண்டுமென்றார்.

மார்க்கண்டேயர், புத்திரா! நான் சந்தோஷப்பட்டுச் சிரிக்கவில்லை. ஆச்சரியப்பட்டேன். உன்னைப் பார்த்தவுடனே தசரதகுமாரரான இராமரை நினைத்துக்கொண்டேன். அவர் பிதாவின் கட்டளையால் வனவாசம்பண்ணினார். முன் காலத்தில் இராமர் வில்லோடுகூட ரிசியமூக பர்வதத்தில் உலாவிக்கொண்டிருந்ததைப் பார்த்தேன். அவர் தேவேந்திரனைப்போல விளங்கினார். அவர் பிதாவாக்கிய பரிபாலனத்துக்காக வனத்தில் வசித்தார். அவர் இந்திரனைப் போன்ற பராக்கிரமமுடையவர். ஒருவராலும் ஜயிக்கப்படாதவர். அப்படியிருந்தும் வனவாசம் பண்ணினார். தம்முடைய சுகங்களையிழந்துவிட்டார். ஆகையினாலே ஒருவனும் நான் சமர்த்தனாயிருக்கிறேன் என்று அக்கிரமமாய் நடக்கக் கூடாது. எல்லாம் விதிப்படி நடக்கிறது. ஒருவரும் விதியைக் கடந்து நடக்கக் கூடாது. ஆகையினாலே ஒருவரும் இராமர்த்து அநியாயம் செய்யக் கூடாது. தர்மராஜாவே! நீ எல்லாரையும் விட சத்தியம், பக்தி, ஒழுக்கம் முதலியவற்றால் சிறந்து இருக்கிறாய். உன்னுடைய கீர்த்தியும், ஆண்மையும், அக்கினியையும் சூரியனையும் போலப் பிரகாசிக்கின்றன. மஹிமையுள்ள அரசனே! நீ ஒப்புக்கொண்டபடி உன் கஷ்டகாலத்தை வனத்தில் தொலைத்துவிடு. அதன்பின் உன் பராக்கிரமத்தால் உன்னுடைய இராஜ்யத்தையும் செல்வத்தையும் அடைவாய், என்றிப்படி சொல்லிவிட்டு அந்த மஹாரிஷியானவர் வடதிசை நோக்கிச் சென்றார்.

---

## 26-வது அத்தியாயம்.

அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

பாண்டவர்கள் த்வைதவனத்தில் வசிக்கிறபோது அந்த வனம் பிராமணர்களால் நிரம்பியிருந்தது. எப்போதும் வேதகோஷம் நிறைந்திருந்த அவ்வனத்து ஏரியும் பிரமலோகத்திலுள்ளதைப் போலப் பரிசுத்தமாயி

தது. பிராமணர்களுடைய வேதகோஷமானது மனதுக்கு வெகு இன்பமா யிருந்தது. ஒரு நாள் சாயந்திரம் மஹரிஷியானவர் யுதிஷ்டிரரை நோக்கிச் சொல்லுகிறார். இந்த வனம் பிராமணர்களுடைய ஹோமாக்கினியினுலே பிரகாசிக்கின்றது. உம்முடைய ஆதரவால் அவர்களெல்லாரும் தங்கள் தங்களுடைய தவங்களையும் விரதங்களையும் செய்துகொண்டிருக்கிருர்கள். பிருகு, அங்கிரஸர், வசிஷ்டர், காசியபர், அகஸ்தியர், அத்திரி இவர்களு டைய வம்சத்தில் பிறந்தவர்களான அநேக பிராமணர்கள் கூடி, உம்மைச் சூழ்ந்திருக்கிருர்கள். இப்போது நான் சொல்வதை உம்முடைய சகோதரர் களோடு கேளும். பிரம சக்தியும் க்ஷத்திரிய சக்தியும் கலந்திருக்கிறது. பிராமண வீரமும் க்ஷத்திரிய வீரமும் கூடினபோது பலம் உண்டாகிறது. அப்போது காற்றும் நெருப்பும் கூடி வனத்தை யெரிப்பதுபோலப் பகைவரை நாசஞ்செய்யலாம். இந்த உலகத்தை ஒருவன் ஜயிக்க விரும்பினுலும், மறு புவனங்களை ஜயிக்க விரும்பினுலும் பிராமண உதவி அவசியம் வேண்டும். வைதிக இலவுகிகங்களில் தேர்ந்தவனும், ஆசையற்றவனுமான பிராமண சகா யம் பெற்ற அரசன் தன் சத்துருக்களை ஜயிக்கிருன். உலகத்தை ஆண்ட பலிசக்கிரவர்த்தியும் பிராமணர்களைத் தவிர வேறு ஒத்தாசை யுண்டென்று கொள்ளவில்லை. பிராமண சகாயத்தால் உலகத்தை ஜயித்துச், சகல சம்பத் துக்களையும் அடைந்தும், விரோசன குமாரனுன பலி பிராஜைகளை இம்சிக்க ஆரம்பித்தபடியால் அழிந்து போனுன். பிராமண சகாயமில்லாதவனைப் பூமி-தனக்கு நாயகனுக விரும்புகிறதில்லை. கடலால் சூழப்பட்ட உலகம் பிராமண சகாயம் பெற்றவனையே வணங்கி அவனுக்கு வசப்பட்டிருக்கும். பாகனில்லாத யானை யுத்தத்தில் வெல்லாதது போல க்ஷத்திரிய பலம் பிராம ண சகாயமில்லாமல் பயன்படாது. இருவரும் கூடியிருந்தால் உலகமெல் லாம் மகிழ்ச்சியடையும். நெருப்பு காற்றுடன் கூடிக் காட்டை யெரிப்பது போ ல், பிராமணனேடு கூடின அரசன் சத்துருக்களை நாசம்பண்ணுவான். அறி வுள்ள அரசன் தான் அடையாத பொருளை அடைவதற்கும், அடைந்ததைக் காப்பாற்றுகிறதற்கும் பிராமணனுடைய யோசனையைக் கேட்கவேண்டும். தர்ம ராஜாவே! நீர் எப்போதும் பிராமணர்களுக்கு மரியாதை செய்து வருகி றீர், அதனுலே தான் உம்முடைய கீர்த்தி மூவுலகங்களிலும் பிரகாசிக்கின் றது என்று ரிஷீசுவரர் யுதிஷ்டிரரைப் புகழ்ந்ததைக் கேட்டு அங்கிருந்த பிரா மணர்கள் எல்லாரும் மகிழ்ச்சி யடைந்தார்கள். த்வைபாயனர், நாரதர், ஜம தக்கினி, கிருதசேதர், கர்ணச்ரவர், முஞ்சர், லவணுசுவர், காசியபர், ஹரீதர், ஸ்தூலகர்ணர், அக்கினிவேசியர், சௌனகர், கிருத்திவாகர், விபாவசு, ஊர் த்தரேதஸ், முதலான ரிஷிகள் எல்லாரும், தேவரிஷிகள் தேவலோகத்தில் இந்திரனைச் சூழ்ந்திருப்பது போலத் தர்மராஜாவைச் சூழ்ந்திருந்தார்கள்.

---

## 27-வது அத்தியாயம்.

அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

ஒரு நாள் சாயங்காலம் பாண்டவர்களும் திரௌபதியும் துக்கத்தோடு பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது திரௌபதி யுதிஷ்டிரரைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

ஈனனும் துராத்மாவுமான துரியோதனன் மனதில் நம்மைப் பற்றிய இரக்கம் உண்டாகவேயில்லை. ஏனென்றால், அவன் என்னோடு உங்களையும் வனத்துக்குத் துரத்திவிட்டு விசனமில்லாமலிருக்கிறான். அவனுடைய நெஞ்சு எஃகினால் செய்யப்பட்டது போலிருக்கிறது. அதனாலே தான் தர்மசாலியான தமையனைக் கொடுமையாகப் பேசினான். சகல சுகங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்த உம்மை யிந்த நிலைமையில் கொண்டுவந்து வைத்துவிட்டுத் தான் சுகமாய்த் தன் சிநேகிதர்களோடு மகிழ்ந்திருக்கிறான். நீர் மான் தோலை உடுத்துக்கொண்டு வனத்துக்குப் புறப்பட்டபோது கூட அந்த துஷ்டர்களுடைய கண்களில் நீர் வரவில்லை. மற்ற கௌரவர்கள் வருந்திக் கண்ணீர் விட்டார்கள். மஹா ராஜாவே! நீர் பூர்வத்திலிருந்த ஸ்திதியை நினைத்துக்கொண்டு நான் துக்கப்படுகிறேன். முன்பு தந்தங்களினால் செய்து இரத்தினமிழைத்த பீடத்தில் உட்கார்ந்திருப்பீர். இப்போது தர்ப்பாசனத்திலிருக்கிறீர். இதைப் பார்க்கும்போது துக்கம் அதிகப்படுகிறது. நீர் உமது சபையில் அநேக அரசர்கள் சூழ உட்கார்ந்திருக்கிறதைப் பார்த்திருக்கிறேன். இப்பொழுது நீர் இருக்கிறதைக் கண்டு எப்படி மனம் பொறுத்திருப்பேன். பரிமள சந்தனம் பூசிக்கொண்டிருந்த சரீரம் இப்போது மண்பூசப் பெற்றிருக்கிறது. முன்பு உயர்ந்த பட்டு வஸ்திரங்களை உடுத்திருந்தீர் மரவுரி தரித்திருக்கிறீர். உமது கிருகத்திலிருந்து சொர்ண பாத்திரங்களில் ஆயிரம் பிராமணர்களுக்கு நல்ல போஜனம் அளிக்கப்படும். துறவிகளும் கிருகஸ்தர்களுமான அநேக மாயிரம் பிராமணர்கள் போஜனம் பண்ணுவார்கள். முன்பு உமது கிருகத்தில் அனேக சொர்ணத் தட்டுகளில் பிராமணர்களுக்குப் பலவகையான போஜனமிடப்பட்டது. இவைகளை நினைக்கும்போது என் மனம் எப்படிச் சகித்திருக்கும். சமர்த்தர்களான பரிசாரகர்கள் சமைத்த மதுரமான உணவைச் சகோதரர்களோடு தங்கப் பாத்திரத்தில் புசிப்பீர். இப்பொழுது நான் காட்டில் விளையும் காய்கனிகளை உமக்குக் கொடுக்கிறேன். என் மனம் பொறுக்கவில்லை. இந்தப் பிராமணர்கள் துக்கத்தோடு வனத்தில் வசிப்பதைப் பார்த்தும் உமக்கு ஏன் கோபம் வரவில்லை? பீமசேனன் சகாயமில்லாமல் எல்லாக் காரியங்களையும் முடிக்க வல்லவன். சகல சுகங்களையும் அனுபவித்துக் கொண்டிருந்த பீமசேனனுடைய தற்கால நிலைமையைப் பார்த்தும் உமக்கு ஏன் இன்னம் கோபம் உண்டாகவில்லை. பீமன் கௌரவர்களை நாசம் பண்ணச் சித்தமாயிருக்கிறான்.

நீர் வாக்குத்தத்தம் செய்ததைப் பற்றிப் பீமசேனன் இதைப் பொறுத்துக் கொண்டிருக்கிறான். இந்த அர்ஜுனன், இரண்டு கைகளாலும் அம்பெய்வதில் ஆயிரம் கைகளையுடைய கார்த்தவீரியனுக்குச் சமானமானவன். யுக முடிவில் கோபிக்கின்ற எமனுக்குச் சமானமானவன் தன் சாமர்த்தியத்தால் சகல ராஜாக்களையும் அடக்கினவன். உமது யாகத்தில் பிராமணர்களைக் காத்துக்கொண்டிருந்தவன். தேவதானவர்களால் வணங்கப்பட்டவன். அப்படிப்பட்ட அர்ஜுனன் இப்பொழுது துக்கத்தில் முழுகியிருக்கிறான். அர்ஜுனன் வனத்தில் வசிக்கத் தக்கவனா? துக்கப்படக் கூடியவனா? இவனைப் பார்த்தாவது உமக்குக் கோபம் வரவேண்டாமா? உமது மனதில் கோபம் ஜனிக்காமல் இருக்கிறது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. அர்ஜுனன் ஒரு தேரா ளியாயிருந்து மனிதர்களையும் நாகர்களையும் வென்றான். இந்த அர்ஜுனனும், நகுல சஹதேவர்களும் துக்கப்படத் தக்கவர்களா? இவர்களைப் பார்த்தும் உமக்கு என் கோபம் உண்டாகவில்லை? துருபத புத்திரியும், திருஷ்டத்யுமனன் சகோதரியும் பாண்டு மஹா ராஜாவின் மருமகளுமான என்னுடைய நிலைமையைப் பார்த்தும் ஏன் நீர் கோபியாமல் இருக்கிறீர். என்னையும் உமது சகோதரர்களையும் பார்த்தும் உமக்குக் கோபம் வர வில்லை. உமது மனம் வருந்தவில்லை. கோபமில்லாத க்ஷத்திரியன் உலகத்தில் இல்லை. உம்மைத் நான் கோபம் இல்லாதவராகப் பார்த்தேன். நீர் பகைவர்களுக்கு இரங்கக் காரணமே யில்லை. உமது முயற்சியால் சத்துருக்களைச் சங்கரிக்கலாம் என்றாள்.



## 28-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

மறுபடியும் திரௌபதியானவள் சத்துருக்களிடத்தில் கோபத்தை அடக்கக் கூடாது என்பதற்குப் பிரஹலாதன், பலி இவர்களுடைய சரித்திரத்தை யெடுத்துச் சொல்லுகிறாள்.

பலியானவன் ஒரு நாள் தன் பாட்டனாகிய பிரஹலாதனைப் பார்த்து, பாட்டாவே! மன்னித்தல், முயற்சி, சக்தி யிந்த மூன்றில் எது சுகவாழ்வைத் தரும்? எனக்கு உண்மையாய்ச் சொல்லவேண்டும். இந்த விஷயத்தில் எனக்கு மஹா சந்தேகம். இந்தச் சந்தேகத்தை நீக்கவேண்டும் எது நல்ல வாழ்வைக் கொடுப்பதென்று சொல்வீரோ அதைப் பணியாகக்கேட்டு நடக்கிறேன் என்று சொன்னான். அதற்குப் பிரஹ்லாதன் சொல்லுகிறார். பௌத்திரா! வாழ்வைக் கொடுப்பது பொறுமையுமல்ல வல்லமையுமல்ல; ஏனென்றால் எப்போதும் பொறுமையாயிருக்கிறவர்கள் கஷ்டத்தை அடைகிறார்கள். எல்லா விஷயத்திலும் பொறுமையாயிருப்பதைக் கற்றுணர்ந்தவர்கள் வெறுக்கிறார்கள். ஒருவனும் அவனை மதிக்கமாட்டான், வேலைக்காரர்கூட அவனை அல

ட்சியம் பண்ணுவார்கள். ஐசுவரியத்தை அபகரித்துக்கொண்டு எஜமானனைத் துரத்திவிட வகைதடுவார்கள். வாகனம், வஸ்திரம், ஆபரணம் படுக்கை பீடம், போஜனம் எல்லாவற்றையும் அபகரிப்பார்கள். எஜமானனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிய மாட்டார்கள். இந்த உலகத்தில் எல்லாராலும் அவமதிக்கப்படுதல் மரணத்தை விடக் கொடியது. பௌத்திரா! அப்படிப்பட்ட பொறுமையுள்ளவனை வேலைக்காரர்கள், அன்னியர்கள் எல்லாரும் அவமதித்துக் கொடுஞ்சொல் சொல்லுவார்கள். மனைவிகூட அவனை மதியாமல் தன்னிஷ்டம் போல நடப்பாள். துஷ்டர்களான வேலைக்காரர்களுக்கு அற்ப தண்டனை போதாது. அப்படிப்பட்ட எஜமானனை வேலைக்காரர்கள் எப்போதும் துன்பப்படுத்துவார்கள். இதைப் போன்ற அநேக துன்பங்களும் உண்டாகும்; ஆகையால் எப்போதும் பொறுமை கூடாது. அதிக கோபத்தையுடையவன் துர்க்குணங்களால் வருத்தப்படுவான். தண்டிக்கத் தக்கவர்கள் தண்டிக்கத்தகாதவர்கள் இருவரையும் தன் இஷ்டம்போலத் தண்டிப்பான். அவன் சிநேகிதர்களுக்கும், சுற்றத்தார்க்கும், மற்ற எல்லாருக்கும் விரோதியாகிறான். பிறரைத் தூஷிக்கிறவன் செல்வத்தை இழக்கிறான். அவமதிப்பு, துக்கம், விரோதங்களையும் பெற்றுச் சத்துருக்களைத் தேடிக்கொள்ளுகிறான். கோபமுள்ளவன் ஜனங்களைத் துன்பப்படுத்திச் செல்வத்தையும் உயிரையும் கூட இழக்கிறான். உபகாரிகளையும் சத்துருக்களையும் ஒப்பத் தண்டிக்கிறவனைக் கண்டு எல்லாரும் பயப்படுவார்கள். அவன் கூடப் பழகுகிற சர்ப்பம் போல்வான். ஜனங்களை அச்சுறுத்துகிறவனுக்கு நன்மை எப்படிக் கிடைக்கும்? சமையங் கிடைத்தபோது அவனை யிம்சிப்பார்கள். ஆகையால் எப்போதும் சாந்தமாகவு மிருக்கக் கூடாது. எப்போதும் கோபமாகவுமிருக்கக் கூடாது, கோபமாயிருக்க வேண்டிய சமையத்தில் கோபமாயும், சாந்தமாயிருக்க வேண்டிய சமையத்தில் சாந்தமாயுமிருக்கவேண்டும். சரியான காலத்தில் கோபத்தையும் சாந்தத்தையும் காட்டுகிறவன் இம்மை மறுமைகளில் சுகமடைவான். சரியான காலமிது என்பதை உனக்குச் சொல்லுகிறேன். உனக்கு முன்னாலே உபகாரியாயிருந்தவன் கொடிய பிழையைச் செய்தாலும் அவன் முன்னே செய்த உபகாரத்தை நினைத்து மன்னிக்க வேண்டும். மூட்டாள்தனத்தினாலாவது, அறிவின்மையினாலாவது ஒருவன் பிழை செய்தால் அவனையும் மன்னிக்க வேண்டும். இரண்டாம் தடவை செய்தால் அது அற்பமானதா யிருந்தாலும் உடனே இம்சிக்கவேண்டும். ஒருவன் தெரியாமல் குற்றம் செய்தால் அவனையும் மன்னிக்க வேண்டும். மன்னிப்பினாலே பலமும் பலஹீனமும் வெல்லப்படுகின்றன. தன் பலத்தையும் பலஹீனத்தையும் தெரிந்துகொண்டு காலத்துக்கும் இடத்துக்கும் தக்கபடி நடக்கவேண்டும். காலத்தையும் இடத்தையும் அறிந்து நடக்காவிட்டால் ஒன்றும் சித்தியாகிறதில்லை. ஆகையினாலே காலமிடம் இரண்டையும் தெரிந்து நடக்கவேண்டும். சில சமையம் ஜனங்களுக்குப் பயந்து குற்றவாளியை மன்னிக்க வேண்டும். இவைகள்தான்

பொறுமை காட்டிச் சரியான காலங்களென்று சொல்லப்படுகின்றன. மற்றப்படி தன் சக்திக்குத் தக்கபடி பார்த்துக் கொள்ளவேண்டும் என்று சொன்னார். ஆகையால் தர்மராஜாவே! துரியோதனனிடத்தில் உமது பராக்கிரமத்தைச் செலுத்த வேண்டிய காலம் இது. அவன் எல்லாரையும் துன்பப்படுத்துகிறான். இது கௌரவர்களிடம் பொறுமை காட்டச் சமையமில்லை. பராக்கிரமத்தைக் காட்டுகிற காலம் வந்திருக்கிறபோது நீர் அப்படியே செய்யவேண்டும். எப்போதும் வணக்கமும் பொறுமையும் உள்ளவனை எல்லாரும் அலட்சியம் பண்ணுகிறார்கள். தகுந்த காலம் அறிந்து இரண்டையும் உபயோகிக்கிறவனே அரசனாவான் என்பதுதான் என் கருத்து என்று திரௌபதி சொன்னாள்.

---

## 29-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

யுதிஷ்டிரர் சொல்லுகிறார். கோபமே மனிதர்களைக் கெடுக்கிறது. கோபமே மறுபடியும் வாழ்வைத் தருகிறது. ஆகையினாலே கோபம் ஆபத்து சம்பத்து இரண்டுக்கும் மூலமாயிருக்கிறது. கோபத்தை விட்டவனுக்கு க்ஷேமமே யுண்டாகிறது. கோபத்தை யெப்போதும் அடக்க முடியாதவனுக்குப் பயங்கரமான ஆபத்து வரும். உலகத்தையே அழிக்கும்படியான கோபத்துக்கு இடங்கொடுக்கலாமா? கோபமுள்ளவன் பாவங்களைச் செய்வான். கோபியானவன் தன் குருவைக் கூடக் கொல்லுவான். தனக்கு மேற்பட்டவர்களையும் நிந்திப்பான். இது சொல்லத் தகும், இது சொல்லத்தகாதென்று அவனுக்குத் தெரியாது. கொல்லத்தகாதவர்களையும் கொல்வான். கொல்லவேண்டியவர்களை வணங்குவான். கோபியானவன் ஒரு சமையம் தனக்கே மரணத்தை வருவித்துக்கொள்வான். இப்படிப்பட்ட கெடுதிகள் சம்பவிக்கிறதை யுணர்ந்து, இம்மை மறுமைப் பயன்களை விரும்பின அறிஞர்கள் கோபத்தை அறவே விடுகிறார்கள். சாந்தமுள்ளவர்களால் அடக்கப்படுகிற கோபத்தை ஏன் கையாளவேண்டும்? இதை யோசித்துத்தான் நான் கோபியாமலிருக்கிறேன். கோபத்தை அடக்கினவன் தன்னையும் பிறரையும் காப்பாற்றுகிறான். மெலியவன் வலியவனைக் கோபிக்கிறதினால் தனக்கு அழிவைத் தேடுகிறான். ஆகையால் மெலியவன் கோபத்தை அடக்க வேண்டும். அறிவுள்ளவன். பலசாலியாயிருந்தாலும் தன் சத்துருவை மன்னிக்க வேண்டும். திரௌபதீ! கோபத்தை வென்றவனைப் பெரியோர் புகழ்கிறார்கள். பொறுமையும் சாதுவுமா யிருக்கிறவன் எப்போதும் வெற்றி அடைவானென்று சாதுக்கள் கருதுகிறார்கள். சத்தியமானது அசத்தியத்தை வெல்லும். சாந்தம் கொடுமையை வெல்லும். அநேகந் தீமைகளுக்கு மூலமாயிருக்கிற கோபத்தைத் துரியோதனன் நிமித்தம் நான் ஏன் அடைய வேண்டும். தர்

மிஷ்டர்களால் வெறுக்கப்பட்டது கோபம். எவனிடத்தில் கோபம் இல்லை யோ அவனைப் பெரியோர்கள் கௌரவப் படுத்துகிறார்கள். கற்றறிந்தவர்க ளும் அவனை மதிக்கிறார்கள். கோபமுள்ளவனை ஒரு பொருளாக மதிக்கிற தில்லை. கோபியானவன் தான் நடக்க வேண்டிய வழியையும் அறியான்; பிற ரையும் மதியான்! ஆகையால் குணசாலியானவன் கோபத்தைத் தூரத்திலே விட்டுவிட வேண்டும். கோபத்தை யுடையவன் தயை, பெருமை, தைரியம், சக்தி முதலிய நற்குணங்களை யிழந்து விடுகிறான். கோபத்தை விட்டவன் எப்போதும் தன் ஊக்கத்தைச் செலுத்தலாம். கோபமுள்ளவன் ஒரு காலத் தில்தான் செய்யக் கூடும். சல்லாதவர்கள் மாத்திரம் கோபத்தை ஊக்கத் துக்குச் சமானமாக மதிக்கிறார்கள். ஒழுக்கத்தை விரும்புகிறவன் கோபத் தை நீக்கவேண்டும். தன் தர்மத்தை விட்டவன்கூடக் கோபத்தை விரும்பக் கூடாது. அறிவில்லாதவர்கள் தான் இந்த முறைமை கடந்து நடப்பார்கள். நானும் அப்படியே நடக்கலாமா? சாந்தமுள்ளவனுக்குச் சமானமானவர்கள் உலகத்தில் கிடையாது. கோபமுள்ளவன் எப்போதும் கலகத்தை உண்டாக் குகிறான். துன்பத்தை யடைந்தவர்கள் பதில் செய்ய விரும்பினாலும், பெரி யோர் கண்டித்தபோது அவர்களைப் பதிலுக்குத் தண்டிக்கக் கருதினாலும் பெ ரிய ஆபத்து நேர்கிறதும் தவிர பாபத்துக்கும் மூலமாகிறது. ஒருவன் மற்றொருவனைத் தூஷித்தால் அவனும் பதிலுக்கு நிந்திக்கிறான் துன்பததைச் செய்தால் அவனும் பதில் துன்பமுண்டாக்குகிறான். புத்தி கூறப்பட்டவன் தானும் புத்தி சொல்லுகிறான். தகப்பன் புத்திரனையும் புத்திரன் தகப்பனையும் கொல்லுகிறார்கள். புருஷன் மனைவியைக் கொல்லுகிறான். மனைவி புருஷனைக் கொல்லுகிறாள். கோபம் எங்கே அதிகமாயிருக்கிறதோ அங்கே யிப்படி யெல் லாம் நடக்கிறது. பிராணிகள் எல்லாம் சமாதானத்தையே எதிர் நோக்கி வாழ் கின்றன. அரசனாயிருக்கிறவன் கோபத்துக் கிடம்கொடுத்தால் பிரஜை கள் அழிவார்கள். பூமியைப் போன்றப் பொறுமையுள்ளவர்களும உலகத்தி லிருககிறார்கள். திரௌபதீ! எப்படிப்பட்ட துன்பத்தை யடைந்தாலும் பொ றுமையா யிருக்கவேண்டும். மனிதர்களாய்ப் பிறந்தவர்களுக்குப் பொறுமை யிருக்க வேண்டும். கோபத்தை அடக்கினவனை அறிவுள்ளவனாகவும் சிறந்தவ னாகவும் மதிக்கிறார்கள். சக்தியுள்ளவன் நிந்திக்கப்பட்டாலும், வருத்தப்பட் டாலும் பொறுமையாயிருக்க வேண்டும். எவன் கோபத்தை விட்டானோ அவன் அழியாத பதவியை அடைகிறான். கோபமுள்ளவன் இரண்டு உலகங்களிலும் துன்பம் அடைகிறான். இதற்குத் திருஷ்டாந்தமாக மஹாத்மாவான காசியபர் சொல்லியிருக்கிற சுலோகங்களைக் கேள். பொறுமையே பிரமம். பொறுமை யே சத்தியம்; பொறுமையே சகல சற்குணங்களும். பொறுமையே தவம். பொ றுமையே பரிசுத்தம். பொறுமை நன்மைகளுக்கெல்லாம் ஆதாரம். பொறுமை யுள்ளவன் தவசிகள் அடையும் உலகத்தை அடைகிறான். பிரமஞானிகள் அடை யும் உலகத்தையும் அடைகிறான். வைதிக கிரியைகளையும் மற்றக் கிரியை களையும் செய்கிறவர்கள் வேறு பதவிகளை அடைகிறார்கள். பொறுமையுள்ள

வர்களோடு மேன்மையுள்ள பிரமலோகத்தை அடைகிறார்கள். பொறுமை உறுதியுள்ளவையெல்லாவற்றிலும் உறுதியானது. பொறுமையேயாகம். பொறுமையே மன அடக்கம். உண்மைகளெல்லாவற்றிலும் சிறந்த உண்மை. பிரமம், சததியம், ஞானம் ஆகிய மூன்றும் நிலைபெற்றிருக்கிற பொறுமையை விடலாமா? இவைகளெல்லாவற்றையும் அறிந்து மனிதர்கள் பொறுமையாயிருக்க வேண்டும். அவன் பிரமத்தை அடைவான். இந்த உலகம் பொறுமைக்கே உரியது. மறு உலகமும் அப்படியேயாம். பொறுமையுள்ளவர்கள் இவ்வுலகத்தில் பெருமையையும் மறு உலகத்தில் சுகவாழ்வையும் அடைகிறார்கள். பொறுமையால் கோபத்தை அடக்குகிறவன் மேலான பதவியை அடைகிறான். ஆகையால் பொறுமையானது எல்லாப் புண்ணியங்களிலும் மேலானது. இவை காசியபரால் சொல்லப்பட்டன. திரௌபதி! இவைகளைக் கேட்டுப் பொறுமையாயிரு. கோபத்தை அடையாதே. நமது பாட்டனாரும் சந்தனு குமாரருமான பீஷ்மர் கிருஷ்ணனைப் போலவே பொறுமையை ஆராதிக்கிறார். நமது குருவும் விதுரரும் பொறுமையையே சிறப்பித்துப் பேசுகிறார்கள், கிருபர் சஞ்சயன் இவர்களும் பொறுமையையே கூறுகிறார்கள். சோமதத்தன், யுயுத்ஸு, துரோண புத்திரர், வியாசர் இவர்களெல்லாரும் எப்போதும் பொறுமையையே சொல்லுகிறார்கள். இப்படி நடந்தால் துரியோதனன் நமது இராஜ்யத்தைத் திரும்பவும் கொடுப்பான். கொடுக்காவிட்டால் நிச்சயமாய் அழிவான். பரதவம்சத்திற்கே பெரிய நாசகாலம் வரப்போகிறது. இதற்குக் கொஞ்சகாலத்துக்கு முன்னாலேயே தீர்மானித்திருக்கிறது. துரியோதனன் இராஜ்யத்துக்கு அருகனல்ல. அவனுக்குப் பொறுமை யென்பது தெரியாது. நான் இராஜ்யபாரத்துக்கு அருகனானவன். ஆதலால் என்னிடத்தில் பொறுமை குடிகொண்டிருக்கிறது. பொறுமையும் மனஅடக்கமும் தன்னைத்தானே அடக்கியாளும் குணங்களாம். நித்தியமான தர்மமுமாம். ஆகையினாலே நான் அதைக் கைக்கொண்டேன் என்றார்.

---

## 30-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

திரௌபதி,என் சித்தத்தை மயக்கச்செய்த தாத்திரி விதாத்திரி யிருவரையும் வணங்குகிறேன். நீர் உமது பிதாவும் பாட்டனாரும் கொண்ட வழியை அனுசரித்தீர். மனிதர்கள் தங்களுடைய செய்கையாலே வெவ்வேறு வகையான வாழ்வைப் பெறுகிறார்கள். செய்கையின் பலன் தப்பாமல் இருக்கின்றன. மூடர்கள் தம் இஷ்டம்போல நடக்கிறார்கள். தர்மத்தாலும், பொறுமையாலும், விநயத்தாலும் இவ்வுலகத்தில் வாழ்வைப் பெறுகிறதில்லை. அரசனே! இப்படிப்

உமக்கு எப்போதும் தர்மத்துக்கு மேற்பட்டது ஒன்றும் இல்லை. உமது உயிரை விடத் தர்மமே உமக்குப் பெரிது. பீமார்ஜுன நகுல ஸஹதேவர்களையும் என்னையும் துறந்துவிடுவீர்; தர்மத்தை மட்டும் விடமாட்டீர். இராஜர்கள் தர்மத்தைக் காப்பாற்றுகிறார்கள்; தர்மம் அவர்களைக் காப்பாற்றுகிறதென்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன். உமக்கு மாத்திரம் அப்படி யில்லை. உம்மைத் தர்மம் காப்பாற்ற வில்லை. ஒருமனிதனை அவன் சாயை தொடர்வது போல நீர் தர்மத்தையே தொடர்கிறீர். உமக்குச் சமானமானவர்களையும், உமக்குத் தாழ்ந்தவர்களையும், மேலானவர்களையும் அலட்சியம் பண்ணினதில்லை. உலகமுழுமையும் பெற்றிருந்தபோதிலும் உம்மிடத்தில் கர்வம் என்பதேயில்லை. ஸ்வாஹா, ஸ்வதா முதலிய வற்றால் பிராமணர்களையும், தேவர்களையும், பிதிர்க்களையும் எப்போதும் ஆராதிக்கிறீர். பிராமணர்களுக்கு வேண்டுவனவற்றைக் கொடுத்துத் திருப்தி செய்கிறீர். வானப்பிரஸ்தர், சன்னியாசிகள், கிருகஸ்தர்கள் எல்லாரையும் ஆதரிக்கிறீர். உம்மால் கொடுக்க முடியாதது ஒன்றுமில்லை. வைசுவதேவ யக்ஞத்தைச் செய்து எல்லா விருந்தினருக்கும் போஜனமிட்டு மிகுந்ததை நீர் புசிக்கிறீர். இஷ்டி, பசுபந்தம் முதலிய எல்லாக் கிரியைகளும் உமது மாளிகையில் நடக்கின்றன. இராஜ்யத்தை யிழந்து வனத்துக்கு வந்தும் உமது தர்மம் குறையவே யில்லை. அசுவமேதம், இராஜசூயம், பௌண்டரீகம் முதலிய பெரிய யாகங்களையும் செய்திருக்கிறீர். பிறர் சொற் கேளாத உமது புத்தியினாலே சூதாட்டத்தில் இராஜ்யத்தை யிழந்தீர். செல்வம், ஆயுதம், சகோதரர், மனைவி எல்லாம் இழந்தீர். சிறந்த உமது புத்தி சூதாட்டத்திற்கு எப்படி உடன்பட்டது? உமது துக்கத்தையும் துர்ப்பாக்கியத்தையும் நோக்கி என் புத்தி மயங்குகிறது. மனம் துக்கத்தால் நிறைந்திருக்கிறது. மனிதர்களெல்லாரும் தெய்வச் செயலுக்கு உட்பட்டு நடக்கிறார்களே யன்றித் தம்முடைய சொந்தச் செய்கையை அனுசரிப்பதில்லை என்பதற்குப் பூர்வ கதை ஒன்றைத் திருஷ்டாந்தமாகச் சொல்லுகிறேன். கடவுளாகிய ஈசானர் எல்லாப் பிராணிகளுக்கும் வாழ்வு துக்கங்களையும், சந்தோஷ விசனங்களையும் ஆதியிலேயே விதைத்திருக்கிறார். மஹாராஜாவே! மரத்தால் செய்யப்பட்ட பதுமை சூத்திரக் கயிற்றாலே இயக்கப்படுவதுபோல எல்லாப் பிராணிகளும் தெய்வத்தால் தொழில் படுத்தப்படுகின்றன. பாரதரே! எல்லா ஜந்துக்களும் பரமாணுக்களைப்போல ஆகாய வெளியிலே வியாபித்திருந்து தெய்வத்தின் கட்டளையால் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றன. ஒரு பட்சியானது கயிற்றில் கட்டப்பட்டிருப்பதுபோல எல்லாப் பிராணிகளும் கடவுளைப்பற்றி நிற்கின்றன. கயிற்றில் கோக்கப்பட்ட முத்தைப் போலவும், மூக்குத் துவாரத்திலே கயிறு கோத்துக் கட்டியிருக்கிற எருதைப் போலவும், கரையின் மேலிருந்து ஆற்றின் நடுவில் விழுந்த மரத்தைப் போலவும், எல்லாப் பிராணிகளும் கடவுளின் கட்டளையை அனுசரிக்கின்றன. ஏனென்றால் அவைகளெல்லாம் கடவுளிடத்திலேயே நிலைபெற்றிருக்கின்றன. அவைகள் சுதந்தர முள்ளவைகளல்ல; ஒரு க்ஷண

பொழுதாவது சுதந்தரமாய் நடக்க முடியாது. அவைகளெல்லாம் அஞ்ஞானத்தால் மறைபட்டுள்ளன. ஆதலால் தம்முடைய சுக துக்கங்களுக்குத் தாமே கர்த்தர்களாக மாட்டார்கள். தெய்வமே செலுத்துகிறபடியால் அவை சொர்க்கத்தையாவது நரகத்தையாவது சேரும். பிரசண்டமாருதத்தில் அகப்பட்டுக் கொண்ட துரும்பைப் போலப் பிராணிகளெல்லாம் கடவுளைப்பற்றி நடக்கின்றன. சரியானதும் தப்பானதுமான சகல கிரியைகளையும் செய்வித்தும் பிரபஞ்சம் முற்றும் வியாபித்திருக்கிறார். ஆனால் ஒருவரும் அவரை அறிவதில்லை. இது கடவுளின் செயலென்று சொல்வாரும் இல்லை. ஜடமான இந்தச் சரீரமானது கடவுளுக்கு ஒரு கருவியாக இருக்கின்றது. கடவுள் இந்தச் சரீரமாகிற கருவியைக் கொண்டு நல்லது அல்லது கெட்டது முதலிய தொழில்களைச் செய்விக்கிறார். அவருடைய மாயா சக்தியின் வல்லமையைப் பாருங்கள். அந்தச் சக்தியினாலே பிராணிகள் தங்களுடைய தோழர்களையும் கொல்லுகின்றன. இது ஞானிகள் உண்மையை உணர்ந்து கொள்வதற்குரிய பலவகை ஒளிகளைப் போன்றிருக்கிறன. அது சூரியனுடைய கிரணங்களைப் போலப் பல விதமாய் அவர்களுக்குத் தோன்றுகின்றது. சாதாரண ஜனங்கள் பலவகைக் காட்சிப் பொருள்களாக எண்ணுகிறார்கள். கடவுள் அவர்களைப் பல விதமாகச் சிருஷ்டித்துச் சங்கரிக்கின்றார். மனிதர்கள், செயலும் அறிவுமில்லாத கட்டையால் மற்றொரு கட்டையையும், ஒரு கல்லினால் மற்றொரு கல்லையும், ஒரு இரும்பினாலே மற்றொரு இரும்பையும் உடைக்கிறதைப் போலக் கர்த்தர் தமது மாயா சக்தியால் ஜீவனைச் ஜீவனால் அழிக்கிறார். குழந்தைகள் விளையாட்டுக் கருவிகளுடன் விளையாடுகிறது போலக் கடவுள் பிராணிகளோடு விளையாடுகிறார். மாதா பிதாக்கள் தங்கள் குழந்தைகளிடத்தில் விளையாடுகிறது போலக் கடவுளும் தம்மால் சிருஷ்டிக்கப்பட்ட பிராணிகளிடம் விளையாடுகிறார். சில வேளை சாதாரண மனிதர்களைப் போலப் பிராணிகளிடத்தில் கோபமாயிருக்கிறார். பெரியவர்களும், நன்னடக்கையும் அடக்கமு முள்ளவர்கள் துன்பத்தையும், துஷ்டர்கள் சுகத்தையும் அனுபவிக்கிறதைப் பார்த்து நான் மதி மயங்குகிறேன். மஹாராஜாவே! உமது துக்கத்தையும் துரியோதனனுடைய வாழ்வையும் பார்த்து, இப்படி வைத்ததற்காக கடவுளின் மேல் வருத்தப்படுகிறேன். வேதவரம்பு கடந்தவனும், வஞ்சகனும், பேராசையுள்ளவனும், தார்மிஷ்டரை வருத்துகிறவனுமான துரியோதனனுக்கு ஐசுவரியத்தைக் கொடுத்ததனால் கடவுளுக்கு என்ன பயனுண்டாகும். இப்படிச் செய்வதால் கடவுளே குற்றமுடையவராகிறார். பாபமானது செய்கையையே பற்றுவதானால் அது செய்கிறவனைத் தொடராது. ஏனென்றால் சர்வ சக்தியுள்ள கடவுளே அந்தச் செய்கைக்குக் காரணராகிறார் அல்லவா? இவ்விஷயத்தைக் குறித்து நான் வருத்தப்படுகிறேன்.

———

## 31-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

யுதிஷ்டிரர் சொல்லுகிறார். திரௌபதி! உனது வசனம் மதுரமாயிருக்கிறது. தெளிவாகவும் அழகான சொற்கள் அமைந்ததாகவு மிருக்கிறது. நாங்கள் கேட்டு மகிழ்ந்தோம். ஆனால் நீ நாஸ்திக வாதம் பேசுகிறாய். நான் ஒரு பயனை அடைய விரும்பி கர்மங்களைச் செய்கிறதில்லை. எதை அதிதிகளுக்குப்பகிர்ந்து கொடுக்கவேண்டியதோ அதைப்பகிர்ந்து கொடுக்கிறேன். செய்ய வேண்டிய எக்ஞங்களைச் செய்கிறேன். நான் தர்மத்தின் பயனை அடையக் கருதாமல் பக்தியினால் செய்கிறேன். வேதவரம்பு கடந்து நடப்பது கூடாது. ஆகையால் பக்திமான்கள் செய்கிறதைப் பார்த்து அப்படியே நானும் செய்கிறேன். ஒரு கிருகஸ்தன் செய்ய வேண்டிய நற் கிரியைகளைச் செய்கிறேனே யல்லாமல் பயன் பெறக் கருதி யல்ல. என்னுடைய சுபாவகுணமும் என் மனசும் எப்போதும் தர்மத்திலேயே செல்லுகின்றன. ஒரு பயனை அடையக் கருதுகிறவன் தர்மிஷ்டர்களுக்குள் மிகவும் இழிவானவன். அவன் அதன் பயனை அடைவதில்லை. வேதப் பிரமாணத்தைக் கொண்டு நான் சொல்லுகிறேன். நீ தர்மத்தில் சந்தேகப்படாதே. தர்மத்தினிடத்தில் சந்தேகம் கொள்ளுகிறவன் மிருக ஜன்மத்தை யடைவான். மதம், தர்மம், ரிஷிவாக்கியங்கள், இவைகளிலே அவநம்பிக்கை கொள்கிறவன் அழியாப் பதவிகளையும் மோட்ச சுகத்தையும் அடைவதில்லை. வேதங்களையும், தர்மத்தையும் உணர்ந்தவன் இராஜரிஷி என்று பெரியோர்களால் மதிக்கப்படுகிறான். வேத விதி கடந்த பேராசையுள்ளவனும், தர்மத்தினிடத்தில் சந்தேகம் கொள்கிறவனும் எல்லாரினும் இழிந்தவனாக எண்ணப்படுகிறான். ஒப்புயர் வில்லாத மாட்சிமையுள்ள மார்க்கண்டேய முனிவர் இவ்விடம் வந்திருந்தார். அவரை நீ கண்களாலேயே கண்டாய். அவர் புண்ணியத்தாலே நித்தியத்துவம் அடைந்திருப்பவரல்லவா? வியாசர், வசிஷ்டர், மைத்திரேயர், நாரதர், சுகர் முதலிய ரிஷிகள் புண்ணியத்தாலே பரிசுத்தாத்மாக்களா யிருக்கிறார்கள். இவைகளும், சிறந்ததுறவும் சபிக்கவும் அனுகிரகிக்கவும் சக்திகொடுப்பது என்றும், தெய்வத்துவத்திலும் சிறந்ததென்றும் உனக்கே தெரியும். இப்படிப்பட்ட சிறந்த அறிவுள்ளவன் ரிஷிகளுக்குச் சமானமாயிருக்கிறான். தர்மமானது மகிமையுள்ள செய்கை என்று வேதங்களினாலே அறிந்து கொள்ள வல்லவனாகிறான். நீ மூடத் தனமாகச் சந்தேகப் படவாவது, கடவுளையும் அவருடைய செய்கையையும் பற்றிக் கண்டித்து பேசவாவது கூடாது. தெய்வ பக்தியில் சந்தேகம் உள்ளவனும், தர்மத்தை அவமதிக்கிறவனும், தன்னுடைய சொந்த புத்தியைக் கொண்டுத் தர்க்க மிடுகிறவனும், பிறர் புத்தியை அங்கீகரியாதவனும் முழு மூடனாவான். அவன்தான் வரும் கால சம்பவங்களைத் தற்காலத்தது போலக் கண்டறியத்தக்க ஞானிகளைப் பைத்தியக் காரர்களென்று அவமதிப்பான். இந்த உலகங்களெல்லாம் இந்திரியங்களுக்கு விஷயமாய் இன்பானுபவத்துக்

குரியவை யென்று நினைப்பான். மற்ற விஷயங்களி லெல்லாம் குருடனைப் போலிருக்கிறான். தெய்வ பக்தியில் சந்தேக முடையவன் பாவத்தைக் கவனியான். அந்த மூடன் இவ்வுலக இன்பம் ஒன்றையே பெரிதாக நினைப்பான். மறுமையில் அடையதற்குரிய மேலான பதவியைக் கவனிக்க மாட்டான். பிரமாணங்களை மதியாதவனும், வேத வசனங்களின் கருத்தைத் தூஷிக்கிறவனும் சிற்றின்பப் பிரியத்தினாலே பாவங்களைச் செய்கிறவனுமான மூடன் நரகத்தில் வருத்தப்படுவான். நம்பிக்கையோடு தெய்வ பக்தி செய்கிறவன் எவனாயிருந்தாலும், மறுமையில் நித்தியானந்த வாழ்வைப் பெறுகிறான். ரிஷிகளைப் பிரமாணமாக ஒப்புக்கொள்ளாதவனும், தெய்வ பக்தி யில்லாதவனும், வேதங்களை அவமதிக்கிறவனுமாகிய மூடன் எந்த ஜன்மத்திலும் மோட்சத்தைப் பெறமாட்டான். திரௌபதி! ரிஷி வசனங்களை அவமதிக்கிறவனும், பக்திமான்களைப் பிரமாணமாக நம்பாதவனுமா யிருக்கிறவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் பயன் கிடையாது. சாதுக்களால் அனுசரிக்கப்பட்ட புராதனமானதும் சர்வ சக்தியும் சர்வ வல்லமையுமுள்ள ரிஷிகளால் ஏற்படுத்தப்பட்டதுமான மதவிஷயத்தில் சந்தேகப்படாதே. சமுத்திரத்தைத் தாண்டிப்போகிற வர்த்தகர்களுக்குக் கப்பல் உதவியாக இருப்பது போலப், பரலோகம் போக விரும்புகிறவர்களுக்குப் புண்ணியமே உதவியாயிருக்கிறது. பக்திமான்கள் யாதொரு பிரயோசனமு மில்லாமலே தர்மத்தைச் செய்துகொண்டு வருவார்களானால் இந்த உலகம் முற்றும் இருளடைந்தாற்போலிருக்கும். ஆதலால் தர்மத்தினால் பயனில்லை யென்பது கூடாது. கர்மபந்த ஒழிவைத் தேடாமலும், ஞானத்தை யடைய முயலாமலுமிருந்தால் உலகமெல்லாம் மிருகத்தன்மை யடைந்ததாயிருக்கும். பக்தியுள்ள தபம், பிரமசரியம், யாகம், வேதாத்தியயனம், தானம், யோக்கியம் இவைகள் பயனற்றனவாயிருந்தால், வம்ச பரம்பரையாக ஜனங்கள் அவைகளை அனுஷ்டித்து வரமாட்டார்கள். கர்மங்கள் பயன் கொடாமல் இருந்தால் அதைப்பற்றி எல்லாரும் மயக்கமுடையவர்களா யிருப்பார்கள். தேவர்கள், அசுரர்கள், ரிஷிகள், கந்தர்வர்கள் இவர்கள் எல்லாரும் ஏன் புண்ணிய கர்மங்களைப் பக்தியோடு செய்கிறார்கள்? சற்று யோசித்துப் பார்த்தால் தெய்வம் கர்மத்துக்குத் தக்க பலனை அளிக்கின்றது என்று அறிந்து தான் எல்லாரும் புண்ணிய கர்மத்தைச் செய்கிறார்களென்று விளங்கும். திரௌபதி! அவர்கள் மோட்ச சுகத்தைப் பெறுகிறார்கள். அந்தப் பயனைக் கருதியே எல்லாரும் கர்மங்களைச் செய்துகொண்டு வருகிறார்கள். ஏ திரௌபதி! நீ உற்பத்தியான வகையை யோசித்துப் பார். உன் தமையன் திருஷ்டத்யும்னனுடைய பிறப்பைப் பற்றியும் கேள்விப்பட்டிருப்பாய். இவைகளே போதுமான திருஷ்டாந்தங்கள். மன அடக்கமுள்ளவர்கள் தர்மத்தினால் பெரிய பயனை அடைகிறார்கள். கொஞ்சத்தினாலேயே திருப்தி யடைகிறார்கள். அறிவில்லாத மூடர்களோ எவ்வளவு கிடைத்தாலும் திருப்தி யடைகிறதில்லை. அவர்கள் மறுமையில் சுகம் அடைகிறதுமில்லை. பாபபுண்ணியங்களின் பலன் வேதத்திலே விளக்கப்பட்டிருக்கின்றன. கர்மங்களின் மூலமும்.

அவற்றின் அழிவும் தேவர்களாலும் கூட அறியப்படாத இரகசியமாயிருக்கிறது. எல்லாராலும் அறிந்துகொள்ள முடியாது. சாதாரண ஜனங்கள் எப்படி யறிவார்கள்? அறியவே மாட்டார்கள். அது தேவரகசியம். ஆசையை வென்றவர்களும், மனதை அடக்கினவர்களும், தபசினாலே பாபங்களைத் தகித்து விட்டவர்களும், திருப்தி யடைந்த மனமுடையவர்களுமான பிராமணர்கள் மாத்திரம் தான் இந்த இரகசியத்தை யறிவார்கள். பிரயோசனம் அறியப்படாததைக் கொண்டு நீ வைதிக காரியங்களிலும் தெய்வத்தினிடத்திலும் சந்தேகம் கொள்வது தகாது. நீ இறுமாப்பை ஒழித்து யாகங்களையும், தான தர்மங்களையும் ஊக்கத்துடன் செய்ய வேண்டும். கர்மங்கள் இவ்வுலகத்திலும் பயன் தருகின்றன. தர்மம் நித்திய வாழ்வைத் தருகின்றன என்று காசியபர் சொன்னார். பிரமதேவரும் தமது குமாரர்களுக்குச் சொன்னார். திரௌபதி! இவைகளைச் சிந்தித்துப் பார்த்து உன் சந்தேகத்தை ஒழி. நம்பிக்கையாயிரு. எல்லாவற்றுக்கும இறைவரான தேவனை அவமதியாதே. அந்தக் கடவுளை அறியும வழியைக் கற்றுக்கொள். அவரை வணங்கு. திரௌபதி! இனி ஒருபோதும் தெய்வத்தை அவமதித்துப் பேசாதே என்று யுதிஷ்டிரர் சொன்னார்.

---

## 32-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

அரசனே! வைதிக மதத்தை ஒருபோதும் அவமதிக்கவு மில்லை, நிந்திக்கவுமில்லை. நான் ஏன் கடவுளை நிந்திக்கிறேன்? துக்கத்தால் வருந்திப் புலம்புகிறேன். நான் மறுபடியும் அழுகிறேன் கேளும். நிச்சயமாகவே உலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளும் கர்மத்தைச் செய்து கொண்டிருக்கின்றன. அசையாப் பொருள்களைத் தவிர மற்றவைகளெல்லாம் தொழிலைச் செய்து கொண்டிருக்கின்றன. கன்றுக் குட்டிகள் பிறந்தவுடனே தாயின் முலையைச் சுவைக்கின்றன. மந்திரக் கட்டினாலே மனிதர்களுடைய சரீரத்துக்குத் துன்பம் உண்டாகிறது. எல்லாப் பிராணிகளும் தங்களுடைய பூர்வ கர்மத்தின் படியே வாழ்வை யடைகின்றன. ஆனாலும் மனிதனோ மற்றைய அசையும் பொருள்களின் செய்கைக்கு மாறான செய்கை யுடையவனாயிருக்கிறான். அதாவது இம்மை மறுமை இரண்டிலும் நன்மை யடையும்படியான கர்மங்களைச் செய்கிறான். பூர்வ ஜன்ம கர்மத்துக் கேற்றவாறே ஜன்மம் எடுத்து அந்தக் கர்மபலனை அனுபவிக்கின்றன. பூர்வ கர்மத்துக்குத் தக்கபடியே ஜீவிக்கின்றன. பிராணிகள் ஜீவிக்கிற முறைமையில் தொழில் செய்யாமலிருப்பது கூடாது. கர்மத்தின் பயனை அறியாதவர்கள் ஆயிரத்தில் ஒருவன் கூட இருக்கமாட்டான். தன் செல்வத்தை அபிவிருத்தி செய்யவாவது, அல்லது காப்பாற்றவாவது தகுந்தபடி செய்ய வேண்டும். மே

லும் மேலும் சம்பாதிக்காமல் செலவு செய்கிறவனுடைய செல்வம் இமய மலை அளவாக இருந்தாலும் அழிந்துபோம். தொழில் இல்லாதபட்சத்தில் பிராணிகள் குறைந்து போயிருக்கும். கர்மத்துக்குப் பலன் இல்லாவிட்டால் அவைகள் விருத்தியாயிருக்க மாட்டா. சில வேலைகளில் பிராணிகளெல்லாம் பயன் தராத கர்மங்களையும் செய்கின்றன. யாதொரு தொழிலும் இல்லாமல் ஜீவிப்பது முடியாமையாலே ஏதாவது ஒரு தொழிலைச் செய்து தீர வேண்டியதாயிருக்கிறது. விதியினிடத்தில் நம்பிக்கை வைத்திருக்கிறவர்களும், தெய்வச்செயலாகிய அதிர்ஷ்டத்தையே நம்பியிருக்கிறவர்களும், மனிதர்களுக்குள் தாழ்ந்தவர் ஆகிறார்கள். யாதொரு தொழிலையும் செய்யாமல் சுகமாயிருக்கிறவனும், விதியையே நம்பியிருக்கிறவனும தண்ணீர்பட்ட பச்சைமண் பாண்டத்தைப் போலச் சீக்கிரத்தில் அழிந்து போகிறான், அதிர்ஷ்டத்தை நம்பியிருக்கிறவனும், வேலை செய்யத் தக்கவனாயிருந்தும் வேலை செய்யாமலிருக்கிறவனும் நெடுங்காலம் வாழமாட்டான். ஏனென்றால் அவனுடைய ஜீவன் பலஹீனமுள்ளதும், உதவியற்றதும் ஆகும் யாதொரு முயற்சியுமில்லாமல் ஒருவன் செல்வத்தை யடைந்தால், உலகத்தார் அதை விதி என்று சொல்லுகிறார்கள். மதானுஷ்டான முள்ளவர்கள் தெய்வகதி என்று சொல்லுகிறார்கள். ஒருவன் முயற்சி செய்து செல்வத்தை யடைந்தால் அதை ஆண்மையால் அடைந்தானென்று சொல்லுகிறார்கள். ஒருவனுக்குக் காரணம் அறியப்படாமல் செல்வமுண்டானால் அதைத் தற்செயல் என்கிறார்கள். எப்படியானாலும் அவைகளுக்கெல்லாம் பூர்வ ஜனமங்களால் செய்துள்ள கர்மமே காரணமாகிறது, பூர்வ கர்ம விஷயத்தை யோசித்துப் பார்த்தால் கடவுளே அவரவர்களுடைய நல்வினை தீவினைகளுக்குத் தக்க பலனைக் கூட்டுவிக்கிறார் என்று விளங்குகிறது. இப்படிப்பட்ட கர்மங்களைச செய்கிற சரீரமானது கடவுளுக்கு ஒரு கருவியாயிருக்கிறது. ஜடமாகிற சரீரமானது கடவுளின் கட்டளைப்படியே செய்கிறது. இதனாலே சகல பிராணிகளையும் கடவுளே நல்வினை தீவினைகளைச் செய்யும்படி ஏவுகிறார் என்று தோன்றுகிறது. மனிதன் கடவுளின் ஏவுதல் காரணமாகத் தன்னறிவைக் கொண்டு யோசித்துச் சொல்லுகிறான், அப்போது மனிதனுடைய செய்கையாகக் கருதப்படுகிறது. நகரங்களிலும், அரண்மனைகளிலும் நடக்கிற அளவில்லாத செய்கைகள் எல்லாம் மனிதர்களால் செய்யப்படுகிறவைகளே. எள்ளிலிருந்து எண்ணெய் உண்டாகிறது, பாலிலிருந்து தயிருண்டாகிறது. விறகில் நெருப்பிட்டு எரிப்பதினாலே சமைக்கப் படுகிறது. அறிவுள்ளவர்கள் இப்படிச் செய்வதனால் இவைகளை அடையலாமென்று அறிந்திருக்கிற படியால் அப்படியே செய்து கொள்ளுகிறார்கள். இப்படியே எல்லாம் செய்வதற்கு மனிதர்கள் தாங்களே கருவியாக இருக்கிறார்கள். இப்படியாகப் பிராணிகள் தங்களுடைய சொந்தச் செய்கையினாலே தங்கள் ஜீவனைக் காப்பாற்றிக் கொள்ளுகின்றன. கை தேர்ந்த மனிதனாலே ஒரு வேலை செய்யப் பட்டால் அது நன்

ருகச் செய்யப்படுகிறது. அதுவே அறியாதவனாலே செய்யப்பட்டால் வேறுபடுகிறது. ஒரு தொழிலைச் செய்கிறதற்கு அந்த மனிதனே கருவியாய் இராவிட்டால், யாக கர்மங்கள் அவனுக்குப் பலன் தருவதில்லை. குரு சிஷ்யர் என்கிற வித்தியாசமும் இல்லையாம். மனிதன் தன் செயலுக்குத் தானே காரணமாயிருப்பதினாலே தான் அவன் தன் காரியத்தில் சித்தி யடைந்த போது புகழ் பெறுகிறான். சித்தி யடையாத போது இகழப்படுகிறான். சிலர் தெய்வத்தால் உண்டாகிறது என்கிறார்கள். சிலர் விதியால் உண்டாகிறது என்கிறார்கள். சிலர் தற்செயலால் உண்டாகிற தென்கிறார்கள். சிலர் சுபாவத்தால் உண்டாகிறது என்கிறார்கள். நல்வினை தீவினைக் குரிய இன்ப துன்பங்களைக் கடவுள் கொடா விட்டால் பிராணிகளுக்குத் துன்பமே யிருக்கக் கூடாது. பூர்வ கர்மம் இல்லாத பட்சத்தில் மனிதர்கள் செய்கிற காரியங்கள் எல்லாம் சித்தியுள்ளதாகவே யிருக்கும். விதி, தெய்வம், தற்செயல் என்கிற இந்த மூன்றையும் உணராதவர்கள் அறிஞர் ஆகமாட்டார்கள். மனிதர்கள் எப்போதும் தொழில் முயற்சி யுள்ளவர்களாகவே யிருக்க வேண்டுமென்பது மனுவின் துணிவு. தொழிலில் முயற்சியில்லாமலிருக்கிறவன் எப்போதும் தோல்வி அடைகிறான். தொழிலில் முயற்சி யுள்ளவனே எப்போதும் பலனை யடைகிறான். சோம்பேறிகள் சித்தி யடைவதே யில்லை. ஒருவன் தன் காரியத்தின் பலனை அடையாவிட்டால் அதற்குண்டாகும் சிக்கல்களை ஒழித்துக்கொள்ளவேண்டும். தான் செய்ய வேண்டிய தொழிலைச் செய்துவிட்டால், அவன் சித்தி யடைந்தாலும் அடையாவிட்டாலும் தன் கடமையினின்றும் விடுபடுகிறான். சோம்பேறி வல்லமைசாலியா யிருந்தாலும் தாழ்வடைகிறான். முயற்சியுள்ளவன் சம்பத்தை அனுபவிக்கிறான். நாம் இப்பொழுது துக்கத்தை அனுபவிக்கிறோம். நீர் முயற்சி செய்தால் நமது துன்பம் நிச்சயமாய் நீங்கிப் போம். நீர் சித்தி அடையமாட்டோமென்று நினைத்தாலும் பீமன், அர்ஜுனன் நகுல சகதேவர்களால் கூடும். மாறவர்கள் தங்கள் முயற்சியால் பயன் பெற்றதைக் காண்கிறோம். அப்படியே நமக்கும் ஆகும். ஒருவன் முயற்சி செய்வதற்கு முன்னாலேயே அதன் பலனை யெப்படி அறியக் கூடும்? ஒருவன் பூமியைக் கலப்பையால் உழுது விதைத்து விட்டுச் சும்மா இருக்கிறான். பிறகு மேகம் அதற்கு இரண்டாவது காரணமாகிறது. மழை பெய்யாவிட்டால் உழுது விதைத்தவன் குற்றப்படுகிறதில்லை. அவன் மற்றவர்கள் செய்கிறபடி நானும் என் வேலையைச் செய்துவிட்டேன் என்கிறான். மழை பெய்யாவிட்டால் நான் என்ன செய்வேன்? என்மேல் குற்றமில்லை என்கிறான். இப்படிச் சொல்லித் திருப்தி அடைகிறான். அவன் இகழ்ச்சி அடைகிறதில்லை. அவன் துக்கப்படுகிறதுமில்லை. நான் என் வேலையைச் செய்துவிட்டேன். இன்னம் பலன் அடையவில்லை. ஏனென்றால் நான பலன் பெறுகிறதற்கு வேறொரு காரணமுமிருக்கிறது என்று சொல்வான். சித்தி பெறாமைக்காக வருந்த வேண்டியதில்லை. ஏனென்றால் அதற்குப் பல காரணங்கள் ஒன்றாய்ச் சேரவேண்டியிருக்கின்றன. ஆகை

யால் முயற்சி செய்யவேண்டும். முயற்சியால் பலன் அடையலாம். முயற்சி யில்லாவிட்டால் பலன் அடைவதில்லை. ஒரு மனிதன் தன் புத்தியினாலே தன் சக்திக்கேற்றபடி தகுந்த காலம், இடம், காரணம், நல்ல தொழில் இவை களைக் கண்டறிந்து முயற்சி செய்து வாழ்வைப் பெறுகிறான். அறிவுள்ள மனி தன் தன் சத்துரு எல்லா விஷயத்திலும் தனக்கு மேற்பட்டவன் என்று அறி ந்தால், பலவகையான தொழில்களாலும், உபாயங்களாலும் தன் கருத்தை நிறைவேற்றிக்கொள்ளுகிறான். ஒருவன் தன் துன்பத்தைப் பெரிதாக நினைக் கக்கூடாது. அப்படி நினைத்தால் ஒருபோதும பெருமையையும செல்வத்தை யும் அடைவதில்லை. காரியசித்தியானது இவ்வாறு நிலை பேறுடையதாகிறது, காரியசித்தியானது தன் காலம், நிலைமை யிவற்றைப் பொறுத்து இருக்கிறது. பரதவம்சோத்தமரே! முன்பு ஒரு காலத்தில் என் பிதா ஒரு கற்றறிந்த பிராம ணனை வீட்டில் வைத்துக்கொண்டிருந்தார். அந்த வேதியர் இவைகளை யென் பிதாவுக்கு உபதேசித்தார். என் சகோதரர்கள் பிரகஸ்பதி நீதியைப் படித்துக் கொண்டிருந்தார்கள், அவர்களால் நான் இவைகளைத் தெரிந்துகொண் டேன். நான் பிதாவிடம் சில காரியார்த்தமாகப்போயிருந்தபோதும், அவ ரது மடியில் உட்கார்ந்துகொண்டிருந்தபோதும் கேட்டுத் தெரிந்துகொண் டேன் என்று சொன்னாள்.

---

## 33-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

இப்படித் திரௌபதி சொன்னதைக் கேட்ட பீமசேனன் தர்ம ராஜாவுக் கெதிரில் வந்து சினமுறு கொண்டு கோபத்தோடு சொல்லுகிறான். மஹா ராஜாவே! இராஜ்ய விஷயத்தில் முன்னோர்களாகிய நல்ல அரசர்கள் வழக்க மாய் நடந்து கொண்டபடி நீரும் நடவும். தர்மார்த்த காமங்களை இழந்து விட்டுச் சந்நியாசியா யிருப்பதினாலே உமக்கென்ன லாபம். துரியோதனன் உமது இராஜ்யத்தைத் தர்மமாய் அடையவில்லை. அநியாயமாய்ச் சூதாடிப் பறித்துக் கொண்டான். அவன் அடைந்தது சாமர்த்தியமு மல்ல, தர்மமு மல்ல. யோக்கியமு மல்ல. மகிமையுள்ள சிங்கத்தினிடத்தில் உள்ள உச்சிஷ் டத்தைத் திருடிக்கொண்டு போகிற நரியைப் போலத் துரியோதனன் உமது இராஜ்யத்தை அபகரித்தான். தர்மத்துக்கும், இன்பத்துக்கும் காரணமாய் இருக்கிற செல்வத்தை இழந்து, வாக்குத் தத்தத்தைக் காப்பாற்றுவதால் என் கஷ்டப்படுகிறேன். நமது இராஜ்யம் காண்டீப வீரனாகிய அர்ஜுனனால் காக்கப்பட்டது. தேவேந்திரன் கூட அதை அபகரிக்க முடியாது. அப்படிப் பட்ட இராஜ்யம் உமது அஜாக்கிரதையால் இழக்கப்பட்டது. நீர் தர்மத்தைச் செயய விரும்பி உறுதியா யிருக்கிறீர். நாங்களோ துன்பத்திலே முழுகிப் போயிருக்கிறோம்.

ஓ பார்த ஸிரேஷ்டரே! நாங்கள் எங்களுடைய ஸௌர்யத்தை அடக்கிக் கொண்டு கஷ்டப் படுவதைப் பார்த்துச் சத்ருக்கள் ஸந்தோஷிக்கிறார்கள். ஆப்தர்கள் துக்கிக்கிறார்கள். நாங்கள் முன்னமே உம்முடைய கட்டளையி ஞல் தார்த்தராஷ்டிரர்களைக் கொல்லாமலிருந்து விட்டோம். அதினுல் இப் போது இந்தக் கஷ்டத்தை அனுபவிக்கிறோம்.

ஓ ராஜனே! மிருகங்கள் போல் வனத்தில் ஜீவனம் செய்துவருகிற உம்மு டைய இந்த நிலைமையைப் பாரும். வீரர்கள் இவ்விதம் இருக்கக் கூடாது. இந்த உம்முடைய அவஸ்தையை ஸ்ரீ கிருஷ்ண பகவானும் அர்ஜுனனும் நகுல ஸஹதேவர்களும் ஸஞ்சயரும் ஒருவராவது ஸம்மதிக்கவில்லை. நீர் தர்மம் தர்மம் என்று எப்போதும் கஷ்டத்தை அனுபவிக்கிறீர். சக்தியில் லாத மனுஷ்யர்கள்தாம் ஐச்வர்யத்தை ஸம்பாதிக்க முடியாதவர்களாய் பிர யோஜன மில்லாததும் எல்லாக் காரியங்களையும் கெடுக்கக் கூடியதுமான சாந்தத்தை அடைகிறார்கள், நீரும் பலசாலி, நாங்களும் பலசாலிகள், இப் படி யிருந்தும் தயையையே முன்னிட்டுக்கொண்டு ஸ்வதர்மத்தை விட்டுவிடுகி றீர், நாம் கஷ்டங்களைப் பொறுத்துக்கொண்டிருப்பதனுல் துர்யோதநாதி கள் நம்மை அசக்தர்களாக எண்ணுகிறார்கள். கபடமில்லாமலும் பின்வாங் காமலும் யுத்தம் செய்து நமக்கு மரணம் கிடைத்தாலும் அது நன்மை. அதனுல் ஸ்வர்க்கலோகம் கிடைக்கும் அல்லது நாமே ஜயித்துப் பூமியை வசப் படுத்திக்கொண்டாலும் நமக்கு க்ஷேமம். ஆகையால் ஸ்வதர்மத்தை அனுஷ் டிக்க வேண்டும். நல்ல கீர்த்தியை அடைய விருப்பம் கொள்ள வேண்டும். சத்ருக்களுக்குப் பதில் அபகாரம் செய்யவேண்டும். ஸ்வதர்மத்தை அனுஷ் டிப்பதுதான் பிராணனை அடைந்ததற்கு பலம், அப்படி யுத்தம் செய்து இரா ஜ்யம் கிடைக்காவிட்டாலும் நம்மை ஒருவரும் நிந்திக்கமாட்டார்கள். விரத த்தினுல் சரீரத்தை வருத்தப்படுத்துவது பிராமணர்களுடைய தர்மம். வியசனத்தை அனுபவிப்பது கெட்ட வழி. அது தர்மமே அல்ல. ஸ்வதர்மத் தைச் செய்யாத மனிதனை தர்மார்த்தங்கள் பிரேதத்தைச் சுகதுக்கங்களைப் போலவே விட்டு விடுகின்றன. அவன் தர்மத்தின் ஸ்வரூபத்தை அறியாத வன். சூரிய காந்தியின் மகிமை பிறவிக் குருடனுக்கு என்னமாய்த் தெரியும்? மனிதன் தர்மார்த்தங்களை அவசியம் அனுஷ்டிக்கவேண்டும். அவைகளை அனு ஷ்டித்தால் காமம் தானே கிடைக்கும். தர்மார்த்தங்கள் எப்போதும் ஒன் றுக்கொன்று ஸம்பந்தமுள்ளவை. காமம் என்பது வஸ்துக்களிடத்தில் உண் டாகும் ஆசை. அர்த்தத்திற்காக தருமம் வேண்டும். காமத்திற்காக அர்த்தம் வேண்டும். காமத்திற்கு பலம் வேறு ஒன்றுமில்லை. அது தானே பலமாகிறது.

ஓ ராஜனே! அர்த்தத்தின் காரணத்தையும் அதன் பலத்தையும் நன்றாய் அறிகிறீர். அந்த அர்த்தத்தின் நாசத்தையே அநர்த்தம் என்று சொல்லுகி றார்கள். அந்த அநர்த்தம் தான் நம்மிடத்தில் வந்திருக்கிறது. இவ்விதமாக தர்மம் அர்த்தம் காமம் இவைகளைத் தனித் தனியாய் அறிந்து அவைகளை எல் லாம் அடைய வேண்டும்.

ஒரு தினத்தில் முதலில் தர்மத்தையும் மத்தியில் அர்த்தத்தையும் கடைசியில் காமத்தையும் அனுஷ்டிக்க வேண்டும். வயதிலும் முதல் வயதில் காமத்தையும் மத்திய வயதில் அர்த்தத்தையும் கடைசி வயதில் தர்மத்தையும் அனுஷ்டிக்க வேண்டும். சுகத்தை அடைய விருப்ப முள்ளவர்கள் இவ்விதமாக அனுஷ்டித்து மோக்ஷத்தை யாவது இராஜ்யத்தை யாவது அடைய வேண்டும். இவ்விரண்டுக்குள் ஒன்றை அடையாதவன் ரோகிஷ்டன் போல எப்போதும் துக்கப்படுகிறான். இதை யறிந்து நம்முடைய ஆப்தர்கள் எல்லோரும் உம்மை ஸ்வதர்மானுஷ்டானம் செய்யும்படி சொல்லுகிறார்கள். தர்ம மாவது, தானங்கள் செய்வதும் யாகங்கள் செய்வதும் சத்துக்களை பூஜிப்பதும் வேதங்களைப் படிப்பதும், கபடத்தை விடுவதுமாம். இந்தத் தர்மம் இந்த லோகத்திலும் பரலோகத்திலும் அவசியம் பலத்தைக் கொடுக்கும். தர்மத்தை அர்த்த மில்லாமல் செய்ய முடியாது. எல்லா லோகங்களும் க்ஷேமத்தை அடைவதற்குக் காரணமான அர்த்தம். சத்துருக்களுக்கு பயந்து பிச்சை எடுப்பதினால் அடைய முடியாது. பிராமணன் செய்ய வேண்டிய யாசனை க்ஷத்திரியனை உமக்குத் தகாது.

ஓ புருஷ சிரேஷ்டரே! பராக்கிரமத்தினாலேயே அர்த்தத்தை அடைவதற்கு முயற்சி செய்ய வேண்டும். ஆகையால் ஸ்வதர்மத்தைச் செய்யும் சத்துருக்களை நாசம் செய்ய எனக்கும் அர்ஜுனனுக்கும் உத்திரவு கொடும். நீர் அரசனாக விருக்க வேண்டும். நீர் இப்போது செய்யும் வியாபாரத்தை ஜனங்கள் வெறுக்கிறார்கள். பிரஜைகளை ரக்ஷித்து அதனாலுண்டாகும் புண்ணியத்தை அடைவது கெட்டதல்ல. அதுதான் உமக்கு ஈசுவரனால் ஏற்படுத்தப்பட்ட ஸ்வதர்மம். இதைச் செய்யாவிட்டால் உம்மை லோகம் பரிகாசம் செய்யும். அர்த்த மில்லாமல் தர்மத்தினால் மாத்திரம் ஐசுவரியத்தை அடைய முடியாது வேடர்கள் மாம்சத்தினால் மிருகங்களை வஞ்சனை செய்து ஆகாரத்தை சம்பாதிக்கிறார்கள். அப்படியே மற்ற அரசர்களும் சத்துருக்களுக்கு லஞ்சம் கொடுத்தாவது இராஜ்யத்தை சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள். தேவர்கள் பலமுள்ளவர்களும் முன் பிறந்த பிராதாக்களுமான அசுரர்களை கபடத்தினாலேயே ஜயித்தார்கள். ஆகையால் ஓ பாண்டவச் சிரேஷ்டரே! பலமுள்ளவர்களுக்கே ஸமஸ்த காரியமும் சித்திக்கும் என்பதை யறிந்து கபடமார்க்கத்திலிருக்கும் சத்துருக்களை நாசம் செய்யும். உலகத்தில் அர்ஜுனனுக்குச் சமானமான வில்லாளி ஒருவருமில்லை. எனக்குச் சமானமாய்க் கதாயுத்தம் செய்கிறவனு மில்லை. எப்பேர்பட்ட வீரனும் பலத்தினால் யுத்தம் செய்கிறான். கூட்டத்தினாலும் உற்சாகத்தினாலும் ஒன்றும் உபயோக மில்லை. அர்த்தத்திற்குக் காரணமும் பலமே. பலந் தவிர மற்றவை யெல்லாம் பனி காலத்தில் மரத்தின் நிழல் போல உபயோகப் படுகிறதில்லை. அதிகமான அர்த்தத்தை விரும்புகிறவன் கொஞ்சம் அர்த்தத்தைச் செலவு செய்ய வேண்டும். அது எப்படி யென்றால் பயிரிடுகிறவர்கள் கொஞ்சம் விதையை விதைத்து அதனாலேயே லாபத்தை அடைகிறார்கள். இவ்விதமே புத்திசாலி, கொஞ்சம் தர்மத்தை விட்டு அதிகமான தர்மத்தை அடைகிறான்.

பண்டிதர்கள் சகாயத்தோடு கூடிய சத்துருவைச் சகாயத்தில் நின்றும் பிரித்து விடுகிறார்கள். அதனால் துர் பலமான ஸ்திதியை அடைந்த சத்துருவை வசப்படுத்திக் கொள்ளுகிறார்கள். ஆகையால் சகாயங்களை விரும்பாமல் பலத்தினாலேயே யுத்தம் செய்கிறவர்கள் ஸமஸ்தமான பிரஜைகளையும் வசப் படுத்திக்கொள்கிறார்கள். ஆகையால் சீக்கிரம் யுத்தம் செய்ய வேண்டும். கால தாமதம் செய்தால் துர்ப்பலமான சத்துருக்கள் கூட சகாயங்களை அடைந்து தேனெடுப்பவனைத் தேனீக்கள் போல் நம்மைத் துரத்தி விடுவார்கள். ஓ ராஜ னே! சூரிய பகவான் தன் கிரணங்களினால் ஜனங்களை ரக்ஷிக்கிறார். ஒரு சமையத்தில் கொளுத்துகிறார். நீரும் அப்படி சூரியனுக்கு சமானமாக இரும். நம் முன்னோர்கள் செய்த ராஜ்ய பரிபாலனத்தை நாமும் அனுஷ்டிப்பது தப ஸுக்குச் சமானமென்று நாம் கேட்டிருக்கிறோம். க்ஷத்திரியன் யுத்தத்தில் ஜயத்தினாலும் மரணத்தினாலும் நல்ல லோகங்களை அடைகிறான். தபஸினால் அடைய மாட்டான். உம்முடைய இந்த அவஸ்தையைப் பார்த்து லோகமா னது சூரியனிடத்தில் நின்றும் காந்தி விலகிப் போய் விடும் என்று நிச்சயிக் கிறது.

ஓ ராஜனே! உம்மைப் புகழ்ந்து கொண்டும் சத்துருக்களை நிந்தித்துக் கொண்டும் அநேகம் ஜனங்கள் கூட்டம் கூட்டமாய் வருகிறார்கள். எல்லோ ரும் உம்மைச் சத்திய சந்தர் என்று விசேஷமாய்ச் சொல்லுகிறார்கள். நீர் அஞ்ஞானத்தினாலாவது ஆசையினாலாவது பயத்தினாலாவது காமத்தினாலா வது அர்த்தத்திற்காகவாவது பொய் சொன்னவரில்லை. அரசன் ராஜ்யத்தை அடையும்போது செய்யும் பாபத்தை யாகங்களைச் செய்தும், பிராமணர்களுக்கு கிராமங்களையும் பசுக்களையும் தானம் செய்தும் போக்குகிறான். ஓ குரு சிரேஷ்டரே பட்டணத்து ஜனங்களும், வெளி தேசத்து ஜனங்களும் உம்மை ஸ்தோத்திரம் செய்கிறார்கள். துரியோதனனிடத்திலிருக்கும் இராஜ்யமா னது தோல் துருத்தியில் வைக்கப்பட்ட பால் போலவும் சூத்திரனிடத்தில் வேதம் போலவும், திருடனிடத்தில் சத்தியம் போலவும், ஸ்திரீகளிடத்தில் பலம் போலவும் இருக்கிறது என்கிற இந்த வார்த்தை லோகத்தில் பரவுகிறது. நாம் இந்த ஸ்திதியில் இருப்போமானால் லோகம் கெட்டுப்போய் விடும். ஆகை யால் நீர் எல்லா உபகரணங்களோடும் கூடிய இரதத்தில் ஏறிக்கொண்டு பிரா மணச் சிரேஷ்டர்களிடம் ஆசீர்வாதங்களை பெற்றுக்கொண்டு சீக்கிரமாய் அஸ் தினபுரம் செல்லும். அங்கு சர்ப்பங்களுக்குச் சமானமாயும் வீரர்களுமான சகோதரர்களோடு கூடிக்கொண்டு தேவர்களோடு கூடிய இந்திரன் அசுரர்களை வென்றது போல சத்துருக்களை ஜயித்து துரியோதனனிடமிருந்து ராஜ்யலக்ஷ் மியை பெற்றுக்கொள்ளும். காண்டீவத்தினால் விடப்பட்ட பாணங்களின் ஸ்பர் சத்தை எந்த மனிதன்தான் சகிப்பான்? யுத்தத்தில் கோபங்கொண்ட என்னு டைய கதையின் வேகத்தைச் சகிக்கக் கூடிய வீரர்களும் குதிரைகளும் யானை களும் இல்லை. ஓ குந்தி புத்திரரே! ஸிருஞ்சயர்களோடும் கைகேயர்களோ டும் ஸ்ரீ கிருஷ்ணனோடும் கூடி நாம் ஏன் ராஜ்யத்தை அடைய மாட்டோம்.

ஓ ராஜனே அதிகமான பயத்தோடு கூடிய நீர் சத்ருவின் கையில் இருக்கிற பூமியை பிரயத்தனம் செய்து ஏன் பெற்றுக்கொள்ள வில்லை?

---

## 34-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

இவ்விதமாக பீமசேனனால் சொல்லப்பட்ட மகாநுபாவரான அஜாத சத்ருவானவர் தைரியத்துடன் கூடினவராய் இவ்விதம் பதில் சொன்னார். ஓ பரதச் சிரேஷ்டனான பீமசேனனே! நீ சொல்லுகிறது உண்மை தான். நீ என்னை வார்த்தைகளாகிற சல்யங்களால் குத்துகிறாய் என்பதைப் பற்றி நான் உன்னைக் கோபித்துக் கொள்ள வில்லை. என்னுடைய அநியாயத்தினாலேயே உங்களுக்கு இந்தக் கஷ்டம் வந்தது என்பதில் சந்தேக மில்லை. நான் துரியோதனனிட மிருந்து இராஜ்யத்தை அபகரிப்பதற்காகவே சொக்கட்டான் ஆட்டத்தை ஆரம்பித்தேன். அப்போது வஞ்சகனான சகுனி துரியோதனன் பக்கத்தில் சேர்ந்து ஆடினான். மஹா கபடியான சகுனி சபை மத்தியில் கபடமாகச் சொக்கட்டானாடிக் கபடமற்றவனான என்னை வஞ்சனையினால் ஜயித்து விட்டான் சகுனியின் இஷ்டப் பிரகாரம் ஒற்றையாயும் இரட்டையாயும் விழுகிற சொக்கட்டான்களைப் பார்த்தேன். அப்படி யிருந்தும் கோபத்தினால் என் மனதை அடக்க முடியவில்லை. கோபத்திற்கு வசப்பட்ட மனதை பௌருஷம் என்ற முயற்சியினால் அடக்க முடியாது.

ஓ பீமசேனனே! உன் வார்த்தைக்காக நான் கோபித்துக்கொள்ளவில்லை நம்முடைய அதிருஷ்டமானது அப்படி முடிந்தது. இராஜ்யத்தை அபகரிக்க வேண்டும் என்று ஆசை கொண்ட துரியோதனன் நமக்கு சொக்கட்டானாட்டத்தில் ஆசையை உண்டாக்கினான். பிறகு நம்மை அடிமைகளாகச் செய்து கொண்டான். இக்காலத்தில் நமக்கு திரௌபதி தான் சரணமாக ஆனாள். துரியோதனன் மறுபடியும் சொக்கட்டானாட்டத்திற்காக என்னை வரவழைத்து ஒரு பந்தயத்தை ஏற்பாடு செய்தான் அல்லவா. அது சபையோர்களுக்கும் உனக்கும் அர்ஜுனனுக்கும் தெரிந்த விஷயமே. அப்போது துரியோதனன் சொன்னதாவது, ஓ அஜாத சத்ருவே! நீர் எல்லாச் சகோதரர்களோடும் கூடப் பன்னிரண்டு வருஷங்கள் காட்டில் வசிக்க வேண்டும். பிறகு ஒரு வருஷம் ஒருவருக்கும் தெரியாமல் வசிக்க வேண்டும். அப்படி வசித்துக்கொண்டிருக்கிற உம்மை என்னுடைய வேவுகாரர்கள் அறிந்து கொள்வார்களானால் பதிமூன்று வருஷங்கள் மறுபடியும் அப்படியே வசிக்க வேண்டும். இப்படி வேவுகாரர்களால் கண்டு பிடிக்கப்படாமல் அக்காலத்தை கழிப்பீரானால்ஐந்து நதிகளோடு கூடிய ஐந்து கிராமங்கள் உம்முடையது தான் என்பதை நிச்சயமாய்

இந்த சபையில் சொல்லுகிறேன். அப்போது நாங்கள் எல்லாச் சகோதரர்களும் உம்மால் ஜயிக்கப்பட்டு இராஜ்ய சௌக்கியங்களை விட்டு விட்டு கொஞ்சகாலம் சஞ்சரிப்போம் என்று துரியோதனன் சொன்னான். நானும் சபையில் அப்படியே ஆகட்டும் என்று ஒப்புக்கொண்டேன். இந்தப் பந்தயத்தோடு கூடக் கடைசி ஆட்டம் நடந்தது. அதில் நாம் எல்லோரும் ஜயிக்கப்பட்டு கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு காட்டில் சஞ்சரிக்கிறோம். இப்போது துரியோதனன் நம்முடன் சமாதானம் செய்து கொள்ள இஷ்டமில்லாதவனாய்க் கோபங்கொண்டு சமஸ்தமான குரு தேசத்து பிரஜைகளையும் வசப்படுத்திக் கொண்டான். இப்படியிருக்கப் பெரியோர்களிட மிருந்து அடையப்பட்ட பிரசித்தியை இராஜ்யத்திற்காக எவன்தான் விடுவான்? சாதுவான மனிதன் தர்மமில்லாமல் இராஜ்யம் செல்வதை மரணத்தைக் காட்டிலும் கெட்டதாக எண்ணுகிறான். ஓ பீமசேனனே! அந்த சொக்கட்டானாட்டத்தில் நீ கதையை எடுத்தாய் அப்பொழுது அர்ஜுனனால் தடுக்கப்பட்டாயல்லவா. அப்போதே நீ வீரர்களின் வியாபாரத்தைச் செய்திருப்பாயானால் அப்போது நமக்கு என்ன கஷ்டம் உண்டாகப் போகிறது, நீ இப்போது சொல்லும் வார்த்தைகளை பந்தயம் செய்து கொள்வதற்கு முன் ஏன் சொல்லியிருக்கக் கூடாது. சொல்ல வேண்டிய காலத்தில் பேசாமலிருந்து விட்டுப் பிறகு ஏன் என்னை அதிகமாய்ச் சொல்லுகிறாய். ஓ பீமனே சபையில் ஆபத்தை அடைந்த திரௌபதியைப் பார்த்துக்கொண்டு நாம் பொறுத்திருந்தது மிகவும் துக்கமாயிருக்கிறது. விஷத்தைப் பானம் செய்தவன் போல் வருத்தப் படுகிறேன். ஓ பரத சிரேஷ்டனே! குரு வீரர்களின் சபையில் நான் ஒப்புக்கொண்டதை மறக்க முடியாது. விதை விதைத்தவன் பலங்கள் பக்குவமாகிற காலத்தை எதிர் பார்த்திருக்க வேண்டும். முதலில் அபகாரம் செய்யப்பட்ட ஒரு வீரன் சத்துரு சமூகத்தை நல்ல ஸ்திதியில் இருப்பதாக அறிந்து பிறகு நாசம் செய்தால் அப்போது பராக்கிரமத்தினால் நல்ல பிரசித்தியை அடைகிறான். இந்த லோகத்தில் சம்பூர்ணமான லக்ஷ்மியை அடைகிறான். இவனுக்கு எல்லா சத்துருக்களும் வணங்குகிறார்கள். தேவர்கள் இந்திரனைப் போல சயஸ்தமான சிநேகிதர்களும் இவனை விஸ்வாசத்துடன் அடைகிறார்கள். என்னுடைய பிரதிஜ்ஞையை சத்தியமாகச் செய்ய வேண்டும், நான் பிராணனை விட்டாவது சத்தியத்தை அடைய ஆசைப் படுகிறேன். இராஜ்யமும் புத்திரர்களும் யசஸும் தனமும் இவை எல்லாம் சத்தியத்தின் பதினாறில் ஒரு பங்குக் கீடாகாது.

---

## 35-வது அத்தியாயம்.

### அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

ஓ மஹா ராஜனே! நீர் காலத்திற்கு வசப்பட்ட மனிதராயிருக்கிறீர். அப்படி யிருந்தும் பாணம்போல் சீக்கிரம் ஓடுகிறதாயும் நதிப்பிரவாஹம் போல் எப்போதும் போய்க்கொண்டிருக்கிற இக்காலத்தை நித்தியமாக எண்ணுகிறீர். மனிதனுடைய தேகம் நுரையைப் போல நிஸ்ஸாரமானது. மரத்தில் பழுத்த பழம் போல் சீக்கிரம் விழுந்து விடும். இவனுடைய ஆயுசு நிமிஷத்தில் போய் விடும். கண்ணுக்கு இட்டுக்கொள்ளும் மை ஊசி நுனியினால் எடுத்தாலும் குறைந்து போய் விடுகிறது. அப்படி இருக்க ஆயுசின் அளவை எப்படி எதிர் பார்க்கலாம். எவனொருவன் அளவற்ற வாழ் நாள்களை உடையவனோ அல்லது வாழ் நாள்களின் அளவை அறிந்தவனோ அவன் எல்லாவற்றையும் பிரத்யக்ஷமாய்ப் பார்க்கக் கூடியவனாகையால் காலத்தை எதிர் பார்க்கக் கூடும் நீர் எதிர் பார்க்கிற காலம் பதின்மூன்று வருஷம். இக்காலம் நம்முடைய ஆயுசை முடித்து மரணத்தைக் கொண்டு வந்து விட்டாலும் விடும். பிராணிகளுக்கு மரணம் சரீரத்திலேயே நிச்சயமாய் இருக்கிறது. ஆகையால் நாம் மரணத்திற்கு முன்னமே இராஜ்யத்தை அடைவதற்கு முயற்சி செய்வோம். எந்த மனிதன் சத்துருக்களிடம் வைரத்தைத் தீர்த்துக் கொள்ளாமல் நல்ல கீர்த்தி யில்லாதவனாய் பூமிக்குப் பாரமாயிருக்கிறானோ, அவன் சக்தி யில்லாத எருதைப்போல் துக்கப்படுவான். எந்தப் புருஷன் அல்பமான பலத்தையும் முயற்சியையும் உடையவனாய் வைரத்தை தீர்த்துக்கொள்ளாமல் இருக்கிறானோ அவனுடையஜன்மத்தை நிஷ்பலமாக எண்ணுகிறேன். உமக்குத் தக்கமான கைகள் இருக்கின்றன. பூமியில் கீர்த்தி பரவி இருக்கிறது. ஆகையால் யுத்தத்தில் சத்துருவைக் கொன்று தன் கையினால் ஜயிக்கப்பட்ட இராஜ்யத்தை அனுபவிக்க வேண்டும். நமக்குத் தீங்கு செய்தவனைக் கொன்றதனால் நரகம் வந்தாலும் அது ஸ்வர்க்கத்திற்குச் சமானந்தான். கோபத்தினாலுண்டாகும் தாபமானது அக்கினியைக் காட்டிலும் கடுமையானது. அதனாலேயே நான் தபிக்கப்பட்டு இராத்திரியும் பகலும் தூங்காமலிருக்கிறேன். வில் யுத்தத்தில் சமர்த்தனான இந்த அர்ஜுனனும் கூட்டிற்குள் அடைத்த சிங்கம் போல் தபித்துக்கொண்டிருக்கிறான். ஓ ராஜனே! எவனொருவன் உலகத்திலுள்ள எல்லா வில்லாளிகளையும் ஜயிக்க வல்லமை யுள்ளவனோ அப்பேர்ப்பட்ட அர்ஜுனன் கோபங்கொண்டு மத்தகஜம் போல் பெரு மூச்சு விட்டுக்கொண்டிருக்கிறான். நகுலனும் ஸகதேவனும் கிழவியான நம்முடைய தாயாரும் உமக்கே நன்மையை விரும்பிக்கொண்டு ஊமைகள் போல இருக்கிறார்கள். நம்முடைய எல்லாப் பந்துக்களும் நானும் பிரதிவிந்தியனுடைய மாதாவாகிய திரௌபதியும் உம்முடைய நன்மையையே விரும்புகிறோம். எல்லோரும் துக்கத்தை அடைந்திருக்கிறோம். எல்லோரும் யுத்தத்தில் சந்தோஷமுள்ளவர்களாக இருக்கிறோம்.

ஓ ராஜனே! நம்மைக் காட்டிலும் நீசர்களாயும் தவமில்லாதவர்களுமான சத்துருக்களால் நம்முடைய இராஜ்யம் அனுபவிக்கப்படுகிறது என்பதைக் காட்டிலும் பெரிய ஆபத்து நமக்கு என்ன வரப் போகிறது? ஸ்வபாவதோஷத்தினால் நீர் தயையை அடைந்து கஷ்டங்களைச் சகித்துக்கொண்டிருக்கிறீர். இதை ஒருவராவது ஒப்புக்கொள்ள வில்லை. ஓ ராஜனே! புத்தி யில்லாதவனும் அர்த்த மில்லாத வேதத்தைப் படித்தவனுமான சுரோத்திரியனுடைய புத்தி போல் உம்முடைய புத்தியும் தத்வத்தை அறிகிறதில்லை. மஹா தயாளுவான நீர் பிராமணன் போலிருக்கிறீர். க்ஷத்திரிய ஜாதியில் என்ன காரணத்தினால் பிறந்தீரோ தெரியவில்லை க்ஷத்திரிய ஜாதியில் அநேகமாய் குரூரமான புத்தியை உடையவர்கள் தான் பிறக்கிறார்கள். மனுவினால் சொல்லப்பட்ட இராஜ தர்மங்களை நீர் கேட்டிருக்கலாம். அரசர்கள் குரூரர்களாயும் சபடமுள்ளவர்களாயும் பொறுமை இல்லாதவர்களாயும் இருக்க வேண்டும். ஓ மஹா ராஜனே! துஷ்டர்களான திருதராஷ்டிரர்களை என் பொறுத்துக் கொண்டிருக்கிறீர்? ஓ புருஷச் சிரேஷ்டரே! செய்ய வேண்டிய காரியத்தில் மலைப் பாம்பு போல என் உபேக்ஷயா யிருக்கிறீர்? ஓ குந்தி புத்திரரே! நீர் புத்திபுள்ளவராயிருந்தும் நல்ல குலத்தில்பிறந்திருந்தும் ஒரு பிடிபுல்லில் ஹிமாலய மலையை மறைப்பதுபோல் எங்களை மறைத்து வைத்திருக்க விரும்புகிறீர். ஆகாயத்தில் சூரியன் எப்படி மறைந்திருக்க முடியாதோ அப்படி உலக மெங்கும் பிரசித்தி பெற்ற உம்மால் அஞ்ஞாதவாசம் செய்ய முடியாது. நீர் எல்லா அரசர்களையும் ஜயிக்க வல்லமை யுள்ளவர். அப்படி யிருக்க, தண்ணீர்க் கரையில் கிளைகளாலும் புஷபங்களாலும் இலைகளாலும் நிறைந்து வளர்ந்த ஒரு ஆச்சா மரம் போலும் ஒரு பெரிய வெள்ளை யானை போலும் இருந்துகொண்டு எப்படி மறைந்திருக்கப் போகிறீர். சிங்கக் குட்டிகள் போலிருக்கிற இந்த நகுல ஸஹதேவர்களும் எப்படி மறைந்திருப்பார்கள். ஓ பார்த்தரே! உலக மெங்கும் பிரசித்தி பெற்றவராயும் வீரர்களான புத்திரர்களைப் பெற்றவராயும் மஹா ராஜ குமாரியுமான திரௌபதி எப்படி மறைந்திருப்பாள்.

ஓ ராஜனே! இந்தப் பிரஜைகள் எல்லாரும் என்னை இளம் பருவ முதல் அறிவார்கள். ஆகையால் நாம் மறைந்திருப்பதை மஹாமேரு பர்வதத்தை மறைப்பது போல எண்ணுகிறார்கள். மேலும் நம்மால் முன் இராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்ட அநேக அரசர்கள் துரியோதனனை அடைந்திருக்கிறார்கள். நம்மால் அவமானம் செய்யப்பட்ட அவ்வரசர்கள் துரியோதனன் இஷ்டத்தை அனுசரித்து நமக்கு அபகாரம் செய்வார்கள். அவர்கள் நம்மைப் பிடிப்பதற்காக அநேக வேவு காரர்களை அனுப்புவார்கள். நம்மைக் கண்டு பிடித்து துரியோதனனிடம் சொல்லுவார்கள். அப்போது நமக்கு அதிக கஷ்டம் நேரிடும்.

நாம் வனத்தில் பதின் மூன்று மாதங்களாக இருக்கிறோம். அவைகளை பதின்மூன்று வருஷங்களாக எண்ணிக் கொள்ளும். வருஷத்திற்கு பதிலாக

மாதத்தை உபயோகிக்கலாம் என்று வித்வான்கள் சொல்லி யிருக்கிறார்கள். அதெப்படிபோல் என்றால் யாகத்தில் சோமலதை என்னும் ஔஷதி அகப்படா விட்டால் அதற்குப் பதிலாக 'பூதிகம்' என்ற கொடியை உபயோகப்படுத்தும் படி சாஸ்திரங்களில் விதித்திருக்கிறது. அப்படிபோல் இங்கு மாதத்தை வருஷத்திற்குப் பதிலாக உபயோகப்படுத்தலாம். அல்லது நல்ல பாரத்தைச் சுமக்கக் கூடியதும் சாதுவாயு மிருக்கிற ஒரு எருதுக்கு பூர்ணமான ஆகாரத்தைக் கொடுத்துப் பொய் சொன்னதினால் உண்டாகும் பாபத்திலிருந்து விடப்படலாம். ஆகையால் ஓ ராஜனே! சத்துருக்களைக் கொல்ல வேண்டும் என்று நிச்சயித்துக்கொள்ளும். க்ஷத்திரியனுக்கு யுத்தத்தைக் காட்டிலும் வேறு தர்மம் கிடையாது.

---

## 36-வது அத்தியாயம்.

அர்ஜுனாபிகமன பர்வத தொடர்ச்சி.

1—4. இவ்விதம் பீமசேனனுடைய வார்த்தையைக் கேட்டு புருஷ சிரேஷ்டரான யுதிஷ்டிரர் பெருமூச்சு விட்டு இவ்விதம் சிந்தித்தார். இராஜ தர்மங்களும் தனித் தனியே என்னால் கேட்கப்பட்டன. எவன் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் ஆலோசித்துப் பார்க்கிறானோ அவன்தான் புத்தி சாலி. நான் தர்மராஜனுக்குப் புத்திரனாகப் பிறந்து, மகாமேரு பர்வதத்தைத் திரும்புவது போல் நல்ல வழியிலிருந்து எப்படி திரும்புவேன்? இவ்விதம் ஒரு முகூர்த்த காலம் தியானம் செய்து இனிமேல் செய்ய வேண்டிய காரியத்தை நிச்சயம் செய்துகொண்டு பீமசேனனைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

5—8. பெரிய கைகளை யுடைய ஓ பீமசேனனே! நீ சொன்னது எதுவோ அதுதான் உண்மை. நீ வார்த்தை சொல்வதில் கெட்டிக்காரன். ஆனாலும் நான் இன்னுமொரு வார்த்தை சொல்லுகிறேன், அதைக் கேட்க வேண்டும். ஓ பரதசிரேஷ்டனான பீமசேனனே! ஆலோசனை யின்றிப் பிடிவாதத்தினால் மாத்திரம் பெரிய பாபகர்மங்களைச் செய்தால் அவைகள் கஷ்டத்தை உண்டாக்கும். நன்றாய் ஆலோசனை செய்து செய்ய வேண்டிய காரியத்தை நிச்சயப் படுத்திக்கொண்டு செய்தால் அக்காரியங்கள் பலத்தைக் கொடுக்கின்றன. அப்போது தான் தைவமும் அனுகூலமா யிருக்கும். நீ பலக் கொழுப்பினால் தள்ளிக்கொண்டு சிறு பிள்ளைத் தனத்தினால் இந்த யுத்தத்தை ஆரம்பிக்க வேண்டும் என்று எண்ணுகிறாய். அதிலுள்ள தீங்குகளைச் சொல்லுகிறேன் கேள்,

9—20. பூரிச்ரவஸ்சலன், ஜராசந்தன், பீஷ்மர், துரோணர், கர்ணன், துர்யோதனன் முதலிய திருதராஷ்டிரர்கள் இவர்கள் எப்போதும் வில்வித்தையில் தேர்ந்தவர்கள். நம்மைக் கொல்லவேண்டும் என்று முயற்சிசெய்கிறவர்

கள். மேலும் நம்மால் தீங்கு செய்யப்பட்ட அநேகம் அரசர்கள் இப்போது துர்யோதனன் பக்ஷத்தில் சேர்ந்திருக்கிறார்கள். அவன் நன்மையையே கோரினவர்கள். நம்முடைய பக்ஷத்தில் அப்பேர்ப்பட்டவர்கள் யாரும் இல்லை. பூர்ணமான பொக்கிஷங்களை உடையவர்களாயும் பலமுள்ளவர்களாயு மிருக்கிற எல்லா அரசர்களும் தங்கள் பிள்ளைகள் மந்திரிகள் சைன்னியங்களோடு துர்யோதனன் சைன்னியத்தைக் காப்பாற்ற முயற்சி செய்கிறார்கள். பணங்களினாலும் இராஜபோகங்களாலும் துர்யோதனனால் விசேஷமாய் மரியாதை செய்யப்பட்ட வீரர்கள் யுத்தத்தில் துர்யோதனனுக்காக பிராணனைக் கூட விடப் போகிறார்கள். பீஷ்மர், துரோணர், கிருபர் இவர்களுக்கு நம்மிடத்திலும் அவர்கள் யிடத்திலும் மனோவிருத்தியானது ஒரு மாதிரியா யிருந்தாலும் துர்யோதனனுடைய அன்னத்தை உபயோகப்படுத்த வேண்டியதா யிருப்பதால் அவர்கள் துர்யோதனனுக்காக யுத்தத்தில் பிராணனை விடப் போகிறார்கள் என்று எண்ணுகிறேன். அவர்கள் எப்போதும் திவ்யாஸ்திரங்களை அறிந்தவர்கள். எப்போதும் தர்மமான வழியில் நடப்பவர்கள். ஆகையால் இந்திரனோடு கூடிய தேவர்களும் அவர்களை ஜயிக்க முடியாது என்பது என்னுடைய எண்ணம். அபேத்ய கவசம் அணிந்தவனும் எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவனும் ஒருவராலும் ஜயிக்கக் கூடாதவனும் மகாரதனுமான கர்ணன் நம்மிடம் எப்போதும் கோபம் கொண்டிருக்கிறான். இப்பேர்ப்பட்ட புருஷ சிரேஷ்டர்களை யுத்தத்தில் ஜயிக்காமல் சகாயமில்லாத நீ துர்யோதனனைக் கொல்ல முடியாது. ஓ விருகோதரனே எல்லா வில்லாளிகளைக் காட்டிலும் மேற்பட்ட கர்ணனுடைய சாமர்த்தியத்தை நினைத்தால் எனக்குத் தூக்கம் வரவில்லை.

21—22. மகா கோபங் கொண்ட பீமசேனன் இந்த வார்த்தையைக் கேட்டு குருவாகிய யுதிஷ்டிரர் வார்த்தையால் கட்டுப் பட்டவனாய்ப் பொறுமையை அடைந்தான். இரண்டு பாண்டவர்களும் இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும்போது மகா யோகியாயும் ஸத்யவதி புத்திரருமான ஸ்ரீ வேதவியாச பகவான் வந்து சேர்ந்தார்.

23. பாண்டவர்கள் அவருக்கு சாஸ்திரப் பிரகாரம் பூஜை செய்தார்கள். பிறகு நன்றாய்ப் பேசுகிறவர்களுக்குள் சிரேஷ்டரான ஸ்ரீ வியாசபகவான் யுதிஷ்டிரரைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

24—27. மகாபாஹுவான ஓ யுதிஷ்டிரரே! உம்முடைய மனதி லிருக்கிறதை நான் ஞானக் கண்ணினால் அறிகிறேன். அதினாலேயே நான் சீக்கிரமாக இவ்விடம் வந்தேன். ஓ பாரதசிரேஷ்டரே! பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன், அஸ்வத்தாமா, துர்யோதனன், துச்சாதனன் இவர்களிடமிருந்து உம்முடைய மனதில் எந்த பயம் உண்டாயிருக்கிறதோ அந்தப் பயத்தை நான் தீர்த்துவிடுகிறேன். ஓ ராஜசிரேஷ்டனே! அந்த உபாயத்தைக் கேட்டு தைரியத்

னை அடைந்து அதற்குத் தகுந்த வியாபாரத்தைச் செய்ய வேண்டும். பிறகு சீக்கிரம் இந்தத் துக்கத்தை விட்டுவிடலாம்.

28—37. பிறகு வியாசபகவான் யுதிஷ்டிரரை ஏகாந்தத்தில் வரவழைத்து யுக்தமான அர்த்தத்துடன் கூடிய இந்த வார்த்தையைச் சொன்னார். ஓ பரதசிரேஷ்டரே! உமக்கு நல்ல க்ஷேமகாலம் வந்திருக்கிறது. அர்ஜுனன் யுத்தத்தில் சத்துருக்களை ஜயிக்கப்போகிறான். என்னால் சொல்லப்படுகிறதும் தேகத்துடன் வந்த காரியசித்தியைப் போல் விளங்குகிறதுமான 'பிரதிஸ்மிருதி' என்ற வித்தையை வாங்கிக் கொள்ளும். என்னைச் சரணமாக அடைந்த உமக்கு நான் சொல்லுகிறேன். இந்த வித்தையை அடைந்து அர்ஜுனன் காரியத்தை சாதித்துக்கொள்ளப் போகிறான். ஓ பாண்டவரே! அந்த அர்ஜுனன் அஸ்திரங்களை சம்பாதிப்பதற்காக இந்திரன், ருத்திரன், வருணன், குபேரன், தர்மராஜன் இவர்களை அடைய வேண்டும், இவன் தபஸினாலும் பராக்கிரமத்தினாலும் தேவர்களைப் பார்க்கச் சக்தியுள்ளவன். முன் நாராயணனுக்கு சகாயமாயும் ஸ்ரீ விஷ்ணுவின் அம்சாவதாரமுமான ஸ்ரீ நரர், என்ற மகருஷியானவர் இந்த அர்ஜுனனாக வந்து அவதரித்திருக்கிறார். இவன் இந்திரன், ருத்திரன், திக்குபாலகர்கள் இவர்களிட மிருந்து அஸ்திரங்களை அடைந்து பெரிய காரியங்களைச் செய்யப் போகிறான். ஓ குந்தி புத்திரரே! நீர் இந்தக் காட்டை விட்டுவிட்டு வசிப்பதற்காக வேறு காட்டைத் தேடிக் கொள்ளும். ஒரே இடத்தில் ரொம்ப காலம் வசிப்பதினால் சந்தோஷ முண்டாகமாட்டாது. சாந்தர்களான ரிஷிகளுக்கும் கஷ்ட முண்டாகும். நீர் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரை கண்டவர்களான அநேகம் பிராமணர்களை ரக்ஷித்துவருகிறீர்.' அதினால் அநேக மிருகங்களுக்கும் கொடிகளுக்கும் ஓஷதிகளுக்கும் நாசமுண்டாகிறது.

38—45. யோகசாஸ்திரத்தின் தத்துவத்தை அறிந்த வியாசபகவான். தன்னைச் சரணமாக அடைந்தவராயும் சுத்தராயு மிருக்கிற யுதிஷ்டிரருக்கு உத்தமமான அந்த யோகவித்தையை உபதேசம் செய்தார். உடனே தர்மபுத்திரரைக் கேட்டுக்கொண்டு அங்கேயே மறைந்துவிட்டார். தர்மாத்மாவாயும் மகா புத்திசாலியாயு மிருக்கிற யுதிஷ்டிரர் அந்த மந்திரத்தை எப்போதும் மனதினால் தியானம் செய்து வந்தார். வியாசருடைய வார்த்தையினால் சந்தோஷமடைந்த யுதிஷ்டிரர் துவைத வனத்தை விட்டு சரஸ்வதீநதிக் கரையிலிருக்கும் காம்யக வனத்தை அடைந்தார். அப்போது தேவேந்திரனை தேவரிஷிகள் போல் அந்த யுதிஷ்டிரரை வேத வேதாங்க பண்டிதர்களும் தபஸ்விகளுமான பிராமணர்கள் பின் தொடர்ந்தார்கள். ஓ பரதசிரேஷ்டரே! அந்தப் பாண்டவர்கள் காம்யக வனத்தை அடைந்து பரிவாரங்களோடு கூட அங்கேயே கொஞ்ச காலம் வசித்தார்கள். தனுர்வேதத்தை சிந்தித்துவந்தார்கள். வேதாப்யாசம் செய்து வந்தார்கள். ஆகாரத்திற்காக பாணங்களால் வேட்டை ஆடி

னார்கள். சாஸ்திரப்பிரகாரம் பிதுருக்களுக்கும் தேவதைகளுக்கும் பிராமணர்களுக்கும் திருப்திசெய்தார்கள்.

---

## 37-வது அத்தியாயம்.

அர்ஜுனாபிகமன பர்வத் தொடர்ச்சி.

1—3 கொஞ்ச காலங் கழிந்த பிறகு யுதிஷ்டிரர் ஸ்ரீவியாசபகவானுடைய கட்டளையை நினைத்துப் பார்த்து ரஹஸ்யத்தில் அர்ஜுனனைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார். அப்போது புன்சிரிப்பு சிரித்துக்கொண்டும் அவனைக் கையினால் தடவிக் கொடுத்தும் வனவாச கஷ்டத்தை முகூர்த்த காலம் தியானம் செய்தும் சமாதானத்தோடு கூட ரகஸ்யத்தில் சொல்லுகிறார்.

4—20 ஓ பரதசிரேஷ்டனே! பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன், அஸ்வத்தாமா இவர்களிடத்தில் தனுர்வேதமானது நான்கு கால்களோடும் நிலை நிற்கிறது. அவர்கள் தேவதைகளுடைய அஸ்திரங்களையும் பிரம்மாஸ்திரங்களையும் அசுராஸ்திரங்களையும் பிரயோகம் சம்ஹாரம் இவற்றுடன் அறிகிறார்கள். அவர்கள் எல்லோரும் துர்யோதனனால் உபசாரம் செய்யப்பட்டவர்களாயும் தானத்தினால் சந்தோஷப்படுத்தப்பட்டவர்களாயு மிருக்கிறார்கள். அவன் அவர்களை ஆசார்யர்களைப் போல் பாவிக்கிறான். யுத்தவீரர்கள் எல்லாரிடத்திலுமே இவன் அதிக விச்வாசமா யிருக்கிறான். அப்படியிருக்க ஆசார்யர்களுக்கு மரியாதை செய்தால் அவர்கள் சந்தோஷித்து க்ஷேமத்தையே கோருகிறார்கள். அவர்கள் யுத்தகாலத்தில் தங்கள் சக்தியைக் காண்பிப்பார்கள். இப்போது கிராமங்களோடும் நகரங்களோடும் சமுத்திரத்தோடும் வனங்களோடும் கூடிய இந்த பூமி துர்யோதனன் வசத்தில் இருக்கிறது. சத்துருக்களைக் கொல்ல சக்தியுள்ள ஓ அர்ஜுனா! நீதான் எங்களுக்கு பிரியத்தைச் செய்கிறவன். உன்னிடத்திலேயே சமஸ்த பாரமும் வைக்கப்பட் டிருக்கிறது. இப்போது ஒரு காரியம் செய்ய வேண்டியதாய்த தோன்றுகிறது. வியாசபகவானிட மிருந்து என்னால் ஒரு மந்திரம் கிரகிக்கப்பட்டிருக்கிறது. அதை நீ பெற்றுக்கொண்டு இமயமலை போய்த் தவஞ்செய்து பரமசிவனைத் தரிசித்துச் சகல தேவர்களுடைய ஆயுதங்களையும் பெற்று வா என்று கூறி உபதேசம் செய்தார். மந்திரத்தைப் பெற்றுக்கொண்ட அர்ஜுனன் தவத்துக்குப் புறப்பட்டான். அர்ஜுனன் வில்லையும அம்பையுந் தரித்துக்கொண்டு, பெருமூச்செறிந்து வானத்தை அண்ணாந்துப் பார்த்து, பிறகு திருதராஷ்டிர புத்திரர்களுடைய நாசத்தைக் குறித்துப் புறப்படத் தொடங்கினான்.

21—25. இப்படியாக அர்ஜுனன் வில் அம்புகளோடு புறப்பட்ட போது பிராமணர்களும், சித்தர்களும், அந்தர வாசிகளும் அவனை நோக்கி குந்தி குமாரா! நீ உன் மனதில் எண்ணி யிருக்கிற எண்ணங்கள் சீக்கிரத்தில் நிறைவேறக் கடவன என்று ஆசீர்வதித்தார்கள். பிராமணர்கள், குந்தி புத்திரா! நீ எண்ணிக்கொண்டிருக்கிற எண்ணங்களை நிறைவேற்ற முயலு. நிச்சய

மாகவே நீ ஜயம் பெறுவாய் என்றார்கள். அர்ஜுனன் பிரயாணத்துக்குச் சித்தமானான். எல்லாருடைய மனமும் குதூகலித்தது. அப்போது அர்ஜுனனைப் பார்த்துத் திரௌபதி சொல்லுகிறாள்.

26—40. வீரர்களில் சிறந்த தனஞ்செயா! குந்தி புத்திரா! நீ பிறந்த காலத்தில் குந்தி உன்னால் என்னென்னத்தை அடையக் கருதினாளோ அவைகளை அடையக் கடவள். நீ கருதியிருப்பவைகளெல்லாம் கை கூடக் கடவன. இனிமேல் நம்மில் ஒருவரும் க்ஷத்திரியராக ஜனிக்கக் கூடாது. பலியெடுத்துண்டு ஜீவிக்கும் பிராமணர்களுக்கு (சந்நியாசிகளுக்கு) தினமும் வந்தனம் செய்கிறேன். அந்த மஹா பாபியான துரியோதனன் இராஜசபையில் என்னைப் பார்த்து மிருகமே என்று கூப்பிட்டுப் பரிகாசம் பண்ணினான். அது ஒன்றுதான் எனக்கு என்றும் தீராத விசனம். இதுவும் தவிர, இன்னம் அனேக கொடுஞ் சொற்களைச் சொன்னான். அந்தத் துரியோதனனுடைய கொடுஞ் சொற்களால் உண்டான துக்கத்தை விட, இப்போது உன்னைப் பிரிவதனால் உண்டாகும் துக்கம் பெரிது. உனது சகோதரர்கள் உலாவித் திரியும்போதெல்லாம் உன்னுடைய பெரும் செய்கைகளையே பேசிக்கொண்டிருப்பார்கள். ஓ வீரா! பார்த்தா! நீ எங்களை விட்டு நெடுங்காலம் பிரிந்திருப்பாயானால் எங்களுக்குச் சுக மென்பதே யிராது. எங்களுடைய பிராணன் கூட எங்களுக்கு வெறுப்பாக இருக்கும். குந்தி குமாரா! எங்களுடைய சுக துக்கங்களும், வாழ்வும் மரணமும், இராஜ்யமும் வாழ்வும் ஆகிய இவைகளெல்லாம் உன்னையே பற்றி நிலைபெறுகின்றன. பாரத வம்சோத்தமா! நான் உன்னை ஆசீர்வதிக்கிறேன். நீ எண்ணினவைகளெல்லாம் சித்தியாகக் கடவன. நிகரற்ற வீரனே! பாப மில்லாதவனே! உன்னுடைய கொடிய சத்துருக்களுக்கு விரோதமாக நீ தொடங்கின காரியத்திலே சித்தி பெற வல்லவனாயிருக்கிறாய். ஜயம் அடையும் பொருட்டுச் சீக்கிரம் போ. போகும் வழியில் உனக்கு அபாய மில்லாதிருக்கக் கடவது, நான் தாத்திரி விதாத்திரிகளை வணங்குகிறேன். உனக்கு அழியாத ஆசீர்வாத முண்டாகட்டும். ஓ தனஞ்செயா! ஸ்ரீ, கீர்த்தி, திருதி, புஷ்டி, உமா, இலட்சுமி, சரஸ்வதி இவர்கள் எல்லாரும் உன்னை மார்க்கத்தில் இரட்சிப்பார்களாக. உன் நிமித்தம் உன்னுடைய மூத்த சகோதரரைச் சதா வணங்குகிறேன். அவர் சொற்படி நடக்கிறேன். வசு, ருத்திர, ஆதித்தியர்களையும் மருத்துக்களையும் பணிகிறேன். விசுவே தேவர்களையும் சித்தர்களையும் உனக்குச் சௌக்கியம் தரும் பொருட்டுப் பணிகிறேன். பூமியிலும் ஆகாயத்திலுமுள்ள துஷ்ட தெய்வங்கள் உனக்குத் தீமை செய்யாதிருக்கக் கடவன. இப்படிப்பட்ட மங்கள வாழ்த்துக்களைக் கூறிவிட்டுத் திரௌபதி சும்மா இருந்தாள்.

41—55. அதன் பின் அர்ஜுனன் தன் சகோதரர்களையும் தௌமியரையும் பிரதட்சிணம் பண்ணி, வில்லை யெடுத்துக்கொண்டு புறப்பட்டான். வீரனான அர்ஜுனன் போகிறபோது பிராணிகளெல்லாம் அவனுக்கு வழி விட்டன. அர்ஜுனன் இந்திரனைப் பார்க்க வேண்டுமென்கிற விருப்பத்

தோடு புறப்பட்டான். சத்துரு பயங்கரனான அர்ஜுனன் முனிவர்கள் வசிக்கிற அநேக மலைகளைக் கடந்து போனான். கடைசியில் தெய்வத் தன்மையுள்ள பரிசுத்தமான இமய மலையை அடைந்தான். நல்ல எண்ணமுள்ள வீரனான அர்ஜுனன் ஒரு நாளில் இமயமலை போய்ச் சேர்ந்தான். அவன் பெரிய துறவியாயும், மனதை ஒத்த வேகமுள்ளவனாயு மிருந்தான். இமய மலையையும் கந்தமாதனத்தையும் கடந்து, அபாயகரமான பல வழிகளையும் கடந்து இராப் பகலாக நடந்தான். இந்திரகிலத்தை அடைந்த போது "நில்லு" என்று ஒரு சொல் அவன் காதில் கேட்டது. உடனே நின்று விட்டான். நாலா பக்கங்களையும் சுற்றிப் பார்த்தான். ஒரு மரத்தின் கீழ் ஒரு முனிவர் உட்கார்ந்திருக்கிறதைப் பார்த்தான். அந்த முனிவர் பிரமதேஜஸால் ஜ்வலித்துக்கொண் டிருந்தார். சடை முடி புனைந்திருந்தார். ஒல்லியாய் வலுத்த சரீர முடையவரா யிருந்தார். அவரைக் கண்டவுடனே அங்கேயே நின்றுவிட்டான். அந்த மஹா முனிவர் அர்ஜுனனை நோக்கிக், குழந்தாய்! வில் அம்புகளுடன் வந்திருக்கிற நீ யார்? கவசம் பூண்டிருக்கிறாய். வாளுறை கையுறைகள் பூண்டு க்ஷத்திரியாசாரமுடையவனா யிருக்கிறாய். இங்கே ஆயுதம் அவசியமில்லை. இது கோபமும் மகிழ்வும் இல்லாத முனிவர்கள் வசிக்கிற இடம். சமாதானமுள்ள இடம். இவ்விடத்தில் உன் வில் உபயோகப்படாது. அப்படிப்பட்ட சண்டையும் இங்கே யிராது. ஆகையால் உன் வில்லை எறிந்துவிடு. நீ மேலான நிலைமையை அடைந்துவிட்டாய். வீரனே! உனக்குச் சரியான சாமர்த்தியமும் சக்தியும் உள்ளவன் ஒருவனும் இல்லை. அந்த வேதியர் அர்ஜுனனை நோக்கிச் சொல்லிவிட்டுப் புன் முறுவல் செய்தார். அர்ஜுனனை அவரால் அடக்க முடியவில்லை. அவன் தன் எண்ணத்தில் உறுதியா யிருந்தான். அந்த வேதியர் அவனிடத்தில் கருணை யுடையவராய், அவனைப் பார்த்து, சத்துருக்களை நாசம் பண்ணும் வீரனே! நான் இந்திரன், நீ வேண்டிய வரங்களைக் கேள். தடையில்லாமல் அடைவா யென்று புன்னகையுடன் இனிமையாகச் சொன்னார்.

56—66. ஆயிரம் கண்களை யுடைய தேவேந்திரன் இப்படிச் சொன்னதைக் கேட்டுக் குருவம்சத்தை விருத்திசெய்கிற தனஞ்செயன் கைகளைக் குவித்துத் தலை வணங்கிப் பணிந்து சொல்லுகிறான். மகிமையுள்ளவரே! நான் உம்மிடத்திலிருந்து சகல அஸ்திர வித்தைகளையும் கற்றுக்கொள்ள விரும்புகிறேன். இது தான் என்னுடைய கருத்து. இந்த வரத்தை யெனக்குத் தந்தருளும் என்றான். மஹேந்திரன் மகிழ்ச்சி யடைந்து, புன் னகையோடு சொல்லுகிறான். தனஞ்செயா! நீ இந்தப் பிரதேசத்தை அடைந்தபோதே எல்லாவற்றையும் அடைந்து விட்டாய். ஆயுதவித்தையைக் கற்கவேண்டிய அவசியம் என்ன? நீ மேலான பதவியை அடைந்திருக்கிறாய். மறு உலகத்துக்கு வேண்டிய வரங்களைக் கேள் என்றான். அர்ஜுனன் சொல்லுகிறான். விண்ணுலகத்துக்கு அரசனே! நான் மோட்சத்தையாவது, வேறு வகையான போகங்களையாவது அனுபவிக்க விரும்பவில்லை. தெய்வத் தன்மையையும் விரும்பவில்லை. ஆகையால் மற்றவற்

றைப் பேசுவதினு லென்ன? சொர்க்க வாழ்வையும் விரும்புகிறதில்லை. நான் என் சகோதரர்களை வனத்தில் விட்டு வந்திருக்கிறேன். சத்துருக்களுக்குப் பதில் செய்யமுடியாதவனு யிருக்கிறேன். அப்படி யிருக்கையில் வேறென்ன நிலைமையதென்ன? அழியாத பழி நிலைபெற்றிருக்கின்றது. உலகம் உள்ளவரை யில் அது தீராது என்றான். விருத்திராசுர வைரியாகிய உலகமெல்லாம் வணங்கும் தேவேந்திரன், மதுரமான வசனங்களினுலே அர்ஜுனனைத் தேற்றிச் சொல்லுகிறான்: புத்திரா! திரிநேத்திரரும், சூலபாணியும் எல்லாவற்றுக்கும் ஈசுவரருமாகிய சிவ பெருமான் வெளிப்பட்டுக் காட்சி தந்தபின் நான் உனக்குச் சகல ஆயுதங்களையுந் தருவேன். ஆகையால் தனஞ்செயா! தேவர்களுக்கெல்லாம் தேவனுகிய பரமசிவனைத் தரிசிக்க முயற்சிசெய். அவரைத் தரிசித்த உடனே உன்னுடைய விருப்பமெல்லாம் நிறைவேறும் என்று சொல்லிவிட்டு இந்திரன் மறைந்துபோனுன். பின் இந்திர குமாரனுகிய அர்ஜுனன் தவத்துக்கு எத்தனம் பண்ணினுன்.

---

## 38-வது அத்தியாயம்.

### கிராத பர்வம்.

1—8. ஜனமேஜய மஹாராஜன் வைசம்பாயனரை நோக்கி மஹானுபாவரே! அர்ஜுனன் குற்றமற்ற மகிமையுள்ள ஆயுதம் பெற்ற சரித்திரத்தை விரிவாய்க் கேட்க விரும்புகிறேன். மானிட சிரேஷ்டனுகிய தனஞ்செயன் மனித சஞ்சார மில்லாத வனத்தில் பயமில்லாமல் எப்படிப் புகுந்து சென்றான்? வேத முணர்ந்த முனிவரே! அங்கே வாசம் பண்ணினபோது என்ன செய்தான்? பரமசிவனும், இந்திரனும் எப்படி அனுக்கிரகம் செய்தார்கள். சர்வஞ்ஞத்துவமுள்ளவரே! நீர் தேவர் மனிதர் இவர்களைப் பற்றிய விஷயங்கள் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர். ஆகையால் உமது கருணையால் இவைகளெல்லாவற்றையும் கேட்க விரும்புகிறேன். அந்தணரே! யுத்தத்தில் தோல்வியடையாத மஹா வீரர்களுக்குள் பூர்வம் நடந்த சண்டையையும், இணையற்றவரும் அசைக்கப் படாதவரும் அற்புத மூர்த்தியுமான பரமசிவன் செயலும் கேட்க விரும்புகிறேன். மகிமை பொருந்திய பிரதையின் புத்திரர்களுடைய மனோ தைரியத்தையும், அவர்கள் சிறுமை யடைந்ததையும் கேட்டு அதிசயத்தாலும் மகிழ்ச்சியாலும் மனம் பூரிக்கின்றது. பிறகு தனஞ்சயன் என்ன செய்தார்? அதைச் சொல்லும். குறை கூறத்தக்க அற்பகுணம் அர்ஜுனனிடத்தி லிருந்ததாகத் தோன்றவில்லை. ஆகையாலே அந்த மஹா வீரனுடைய சரித்திரத்தை யெனக்குச் சொல்ல வேண்டுகிறேன் என்றார். அதைக் கேட்ட வைசம்பாயனர் சொல்லுகிறார்.

9—19. கௌரவசிரேஷ்டரே! குழந்தாய்! சிறப்புடையதும், விஸ்தாரமானதும், ஒப்பற்றதுமான அந்த மஹா வீரனுடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன். பாபமில்லாதவரே! அர்ஜுனன் தேவ தேவனுகிய திரிநேத்திரனைத் தரிசித்ததையும், அவருடைய சரீரத்தைத் தழுவியதையும் விரிவாகச்

சொல்லுகிறேன் கேளும். யுதிஷ்டிரருடைய கட்டளையினாலே பராக்கிரமசாலியான அர்ஜுனன், தேவர்களுக்கு அரசனான மஹேந்திரனையும், தேவாதி தேவரான சிவ பெருமானையும் தரிசிப்பதற்காகப் பிரயாணப் பட்டான். மகிமை நிறைந்த காண்டீவத்தையும், பொன் உறையிட்ட கத்தியையும் எடுத்துக்கொண்டு, தன் கோரிக்கை நிறைவேற வேண்டு மென்கிற விருப்பத்தால், வடதிசையிலுள்ள இமய மலையை நோக்கிச் சென்றான். சாந்த சித்தமுடையவனும், இந்திர புத்திரனும், உலகத்தில் சிறந்த தேர் வீரனுமாகிய அர்ஜுனன், தன் காரியத்தில் உறுதி யுடையவனாய்ச், சன்னியாசம் பூண்டான். வேடர்கள் நிறைந்து பயங்கரமான அந்த வனத்தில் தான் மாத்திரம் தனியாகப் போனான். அந்த வனத்தில் பல ஜாதிகளான அளவிறந்த பறவைகள் நிறைந்திருந்தன. நாலுவகைப் பிராணிகளும் வசித்துக்கொண் டிருந்தன. அடிக்கடி சித்தர், சாரணர் முதலியவர்கள் வந்து போய்க்கொண்டிருப்பார்கள். குந்தி புத்திரனான அர்ஜுனன் வனத்தில் நுழைந்தவுடனே வானத்தில் தேவர்களுடைய வாத்தியங்களும் சங்கங்களு மொலித்தன. பெரிய பூ மழை பெய்தது. மேகங்கள் நாலாபக்கங்களிலும் பரவி நிழல் செய்தன. பெரிய மலை யடிவாரத்திலுள்ள மார்க்கமாய் நடந்துபோய், அர்ஜுனன் இமய மலையை அடைந்தான்.

20—32. அர்ஜுனன், அவ்விடத்தில் பலவகையான விருட்சங்கள் பூத்துப் பசுமை நிறமுடையனவாய் நிற்கவும், அவற்றில் பலவகையான பறவைகள் இனிமையாகப்பாடிக்கொண்டிருக்கவும் கண்டான். சுழல்களையுடையவைகளும், வச்சிரம்போலப் பிரகாசிக்கிற நிறத்தையுடையவைகளுமான அநேக ஆறுகளும், ஓடைகளும் செல்லுகிறதைப் பார்த்தான். அன்னங்கள், வாத்துகள், நாரைகள் முதலிய பறவைகளின் தொனியால் எதிரொலி உண்டாயிற்று. ஆறுகளின் கரைகள்தோறும் மதுரமான குரலுடைய குயில்களும், மயில்களும், நாரைகளும் கூவுகிற தொனி பரவி யிருந்தது. பரிசுத்தமான நீரையும், நிர்மலமான இனிய தண்ணீரையும், மகிழ்ச்சி யளிக்கும் அந்த ஆற்றின்கரைகளையும் தேர் வீரனான அர்ஜுனன் கண்டு மகிழ்ச்சி யடைந்தான். அந்தச் சுகமான வனத்திலே அர்ஜுனன் சன்னியாச விரதானுஷ்டானம் செய்யக் கருதினான். தர்ப்பையால் செய்த உடை புனைந்து, மான்தோல் தரித்து, தண்டம் அணிந்து, காய்ந்துலர்ந்து விழுந்த சருகு பட்சணம் செய்துகொண்டு தவம் புரிந்தான். அவன் தவம் செய்யத் தொடங்கின முதலாவது மாசம் மூன்று நாளைக்கொருநாள் கனிகளைப் புசித்தான். இரண்டாம் மாசம் ஆறு இராத்திரிகளிடை யிட்டுக் கனிகளைப் புசித்துவந்தான். மூன்றும் மாதம் பட்சத்துக் கொருமுறை புசித்தான். நாலாம் மாதம் வாயுவைப் புசித்துக் கொண்டும், இரு கரங்களையும் உயரத் தூக்கிக்கொண்டும், கால் விரல் நுனியால் நின்றுகொண்டும், கொடுந் தவம் புரிந்தான். அடிக்கடி ஸ்நானம் செய்வதினாலே ஆண்மையுள்ள அந்த வீரனுடைய தலைமயிர் மின்னலைப் போலவும், செந்தாமரை வண்ணமாகவும் இருந்தது. அப்போது மஹாரிஷிக ளெல்லாரும் சூலபாணி

யாகிய சிவபெருமானிடம் சென்று, குந்தி புத்திரனாகிய அர்ஜுனன் கொடுந் தவம் புரிவதை யெடுத்துச் சொல்லப் போனார்கள். பரமசிவனுடைய பாதங்களில் வணங்கிப் பகவானே! குந்தி புத்திரனான அர்ஜுனன் இமாலய வெற்பின் மத்தியி லிருந்துகொண்டு உக்கிரமான தவம் செய்கிறான். அந்தத் தபாக்கினியின் வெப்பத்தினாலே பூமியிலிருந்து புகை பரவுகின்றது. தேவநாயகா! அவன் என்ன கருத்துக்கொண்டு தவம் செய்கிறானோ தெரியவில்லை. அவனுடைய தபாக்கினியால் நாங்கள் துன்பப் படுகிறோம்; மஹாதேவா! நீரே அவன் தவத்தை நிறுத்த வேண்டும் என்று அடக்கமுள்ள அந்த மஹாரிஷிகள் சொன்னதைக் கேட்ட உமாகாந்தனாகிய சர்வேசுவரன் சொல்லுகிறார்,

33—35. நீங்கள் சந்தோஷத்தோடும் உற்சாகத்தோடும் உங்களிடத்துக்குத் திரும்பிப் போங்கள். அவனுடைய மனக் கருத்து எனக்குத் தெரியும். அவன் சொர்க்க வாழ்வையாவது, நீண்ட ஆயுளையாவது கருதவில்லை. அவனுடைய மனோரதத்தை நான் இன்றைக்கே பூர்த்திசெய்வேன் என்றார். இதைக் கேட்ட சத்திய வந்தர்களான ரிஷிகள் மகிழ்ச்சியோடு தத்தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

---

## 39-வது அத்தியாயம்.

### கிராதபர்வத் தொடர்ச்சி.

1—16. ரிஷிகளெல்லாரும் போன பிறகு, சூலபாணியும் பாபநாசருமான ஸ்ரீ பரமேசுவரன் கிராதவேஷந் தரித்துக்கொண்டு, ஒரு தங்கவிருட்சத்தைப் போலவும், மஹாமேரு மலையைப் போலவும் விளங்கினார். அழகான வில்லையும் விஷமுள்ள பாம்புகளைப்போல விளங்குகிற அம்புகளையும் தரித்துக்கொண்டார். உமாதேவியாரும் அவருக்கு ஒத்தபடி வேடச்சி வேஷம் பூண்டு தன் நாயகனைப் பின் தொடர்ந்தாள். பலவகையான பூதகணங்களும் வேடர்களாகிச் சிவபெருமானைத் தொடர்ந்தார்கள்; அநேகமாயிரம் பெண் பூதங்களும் பின் சென்றன. மஹாராஜாவே! அப்போது அந்த இடம் பரமசிவனுடைய அழகினாலே பிரகாசித்தது. பட்சிகளும் மிருகங்களும் தொனிக்காமல் அடங்கின. ஒரு க்ஷணத்துக்குள் வனமெங்கும் நிச்சப்தமாயிற்று. பரமசிவன், குற்றமற்ற தவசியான அர்ஜுனன் கிட்ட வந்தார். அவ்விடத்து ஆச்சரியமான சொரூபத்தையுடைய மூகன் என்ற ஒரு தானவனைக் கண்டார். மூகாசுரன் ஒரு பன்றியின் ரூபத்தை யெடுத்துக்கொண்டு அர்ஜுனனைக் கொல்ல வந்திருந்தான். அர்ஜுனன், அவனைக் கொல்லக் கருதிக், காண்டீவத்தை யெடுத்து வளைத்து நாணேற்றி, விஷமுள்ள ஸர்ப்பங்களைப் போன்ற அம்புகளை அதில் தொடுத்து, நாணொலியால் திசைகளை யெல்லாம் எதிரொலியிடச் செய்துகொண்டு தானவனை நோக்கிச் சொல்லுகிறான். நான் உனக்கு துன்பம் செய்யும்படி இங்கே வரவில்லை, நீ என்னைக் கொல்லப் பார்க்கிற

படியால் உன்னை, நிச்சயமாகவே யின்று எமலோகம் அனுப்பிவிடுகிறேன் என்று அர்ஜுனன் இப்படிச் சொன்னபோது கிராதரூபம் கொண்டுவந்த பரமசிவன் அவனைப் பார்த்து நிறுத்து நிறுத்து என்று சொன்னார். பிறகு அர்ஜுனனைப் பார்த்து, இந்திர நீலக் கல்லைப் போல விளங்குகிற நிறத்தையுடைய இந்தப் பன்றியை நான் முதலில் குறிவைத்தேன் என்றார். அர்ஜுனன் அந்த வார்த்தையை மதியாமல் பன்றியை அடித்தான். அந்த க்ஷணத்திலேயே கிராதனும், அக்கினி ஜ்வாலை போலவும் மின்னற் கொடியைப் போலவும் பிரகாசிக்கிற ஒரு அம்பை எய்தான். அவ் விருவரும் எய்த இரண்டு பாணங்களும் ஒரே காலத்தில் பன்றியாகிய மூகதானவனுடைய வச்சிர சரீரத்தில் பட்டன. அந்த இரண்டு பாணங்களும் மலையின் மேல் விழுந்த இடியைப் போலச் சப்தித்துக் கொண்டு மூகாசுரன் மேல் விழுந்தன. அக்கினி ஜ்வாலைகளை யுடைய விஷப் பாம்புகளைப் போல அவ்விரண்டு அம்புகளும் தன்மேல் விழவே மூகன் தன்னுடைய இயற்கையான இராட்சத சொரூபத்தை யெடுத்துக்கொண்டு பிராணனை விட்டான்.

17—31. பிறகு சத்துருக்களை நாசம் செய்கிற வீரனான அர்ஜுனன், சொர்ணத்தைப் போல ஜ்வலிக்கின்ற சொரூபத்தை யுடையவரும், வேடரூபத்தோடு வந்து தன்னிடம் வாதிட்டவரும், அநேகம் பெண்கள் சூழப்பெற்றவருமான அவரை பார்த்துச் சொல்லுகிறான். இந்த மனித சஞ்சார மில்லாத காட்டில் பல பெண்கள் சூழச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற நீ யார்? தங்கத்தைப் போலப் பிரகாசிக்கும் சரீரமுடையவனே! இந்தப் பயங்கரமான காட்டில் சஞ்சரிக்கிறபோது உனக்குப் பயமுண்டாகாதா? என்றால் முதலில் குறிவைக்கப்பட்ட அந்தப் பன்றியை நீ யேன் எய்தாய்? இந்த அரக்கன் வேண்டுமென்றோ? அல்லது அறியாமையினாலோ என்னைக் கொல்ல வந்தான், அதனாலே நான் அவனை முதலில் இலட்சியம் வைத்தேன். அதை நீயும் எய்தாய். இது வேட்டையாடும் முறைமைக்கு முற்றும் விரோதமாயிருக்கிறது. ஆகையால் நான் உன்னை உயிரோடு விடமாட்டேன். என் பாணங்களால் உன் பிராணனை வாங்கிவிடுகிறேன் என்றான். இதைக் கேட்ட வேடன் பாண்டுபுத்திரனாகிய அர்ஜுனனைப் பார்த்து இனிமையான வசனங்களினாலே மறுமொழி கூறுகிறான். வீரனே! நான் இந்த வனத்தில் வசிக்கிறதைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். இந்தக் காடு எங்களுக்கே உரிய வாசஸ்தலம். ஓ சந்நியாசியே! நீ யேன் கஷ்டம் நிறைந்துள்ள இந்த அபாயகரமான காட்டில் வசிக்கிறாய்? நாங்கள் எப்போதும் பலவகையான ஜந்துக்களுடன் கூடி யிந்த வனத்தில் வசித்துக்கொண் டிருக்கிறோம். உன் சரீரம் மெலிந் திருக்கிறது. சௌக்கியமாக வளர்ந்த வந்தவனா யிருக்கிறாய். நெருப்பைப்போலப் பிரகாசிக்கிறாய். இந்த வனத்தில் நீ யேன் தனிமையாக வசிக்கிறாய்? என்றார். அர்ஜுனன் வேடனை நோக்கி நான் என்னுடைய காண்டீபமென்ற இந்த வில், நெருப்பைப் போல விளங்குகிற பாணங்களாகிய இவற்றின் வலிமைகொண்டு இந்த வனத்தில் வாசம் பண்ணுகிறேன், அக்கினிதேவனுடைய இரண்டா

வது புத்திரனைப் போலப் (சுப்பிரமணியக் கடவுளைப் போல) பயமற்றுச் சஞ்சரிக்கிறேன் என்றான். பெரிய பன்றியின் வடிவங்கொண்டு வந்த இராட்சதனைக் கொன்றுபோட்டேன். செத்துக் கிடக்கிற அரக்கனைப் பார் என்றான். வேடன், இந்த இராட்சதன் என்னுடைய வில்லி லிருந்து விடுபட்ட அம்பினாலே முதலில் அடிபட்டான். ஆகையினாலே அவனை நானே எமலோகத்துக்கு அனுப்பினேன். நீ உன் பலத்தினாலே இறுமாப் படைந்து, பிறரைக் குற்றங்கூறித் தூஷிக்கத் தகாது. துர் எண்ணமுள்ள துஷ்டா! நீதான் குற்றம் செய்திருக்கிறாய். ஆகையால் நீ உயிரோடு தப்பிப் போகமாட்டாய். சற்றுப் பொறு; இடி போன்ற என் அம்புகளால் உன்னை அடிக்கிறேன். உனக்கு வல்லமை யிருந்தால் உன் அம்பால் என்னை அடி என்றான்.

32—47. இந்த வார்த்தைகளைக் கேட்ட அர்ஜுனன் கோபங்கொண்டு தன் வில்லை வளைத்து எண்ணிறந்த அம்புகளைக் கிராதன்மேலெய்தான். வேடன் அந்த அம்புகளை யெல்லாம் தன்மேல் ஏற்று மன மகிழ்ச்சியோடு அர்ஜுனனைத் துஷ்டா துஷ்டா என்று நிந்தித்துக்கொண்டே நின்றான். பின்னும் அர்ஜுனனைப் பார்த்து, உன்னுடைய சிறந்த அம்புகளாலே என் மார்பைத் துளைத்துவிடு பார்ப்போம் என்றான். அர்ஜுனன் கோபத்துடன் வேடன் மேல் அம்புகளை மழை போலச் சொரிந்தான். பிறகு இருவரும் கோபமுடையவர்களாய்ப் பயங்கரமான சண்டை தொடங்கினார்கள். விஷமுள்ள சர்ப்பங்களை ஒத்த அம்புகளை ஒருவர்மேல் ஒருவர் மழை போலச் சொரிந்தார்கள். அர்ஜுனன் பெய்த சரமாரியை வேடன் முகமலர்ச்சியோடும் தன்மேலேற்றுக்கொண்டான். அந்த அம்புகளால் சிறிதும் காயம் அடையாமல் மலைபோல அசைவற்று நின்றுகொண்டிருந்தான். அர்ஜுனன் தன்னுடைய அம்புகளெல்லாம் சத்துருவி னிடத்தில் பயன்படாமல் போனதைப் பார்த்து ஆச்சரிய மடைந்து வேடனைப் பார்த்து நீ சிறந்தவன், சிறந்தவனென்று புகழ்ந்து சொன்னான். இந்த அற்ப சரீரமுடைய இமாசல வாசியான வேடன், என்னுடைய காண்டீவத்திலிருந்து விடுபட்ட அம்புகளை யாதொரு துன்பமு மின்றிச் சகித்துக் கொண்டிருக்கிறான். இவன் யார்? இவனே அந்தச் சிவபெருமானாக இருப்பானோ? அல்லது, தேவர், யட்சர், அசுரர்களில் ஒருவனோ? தேவர்கள் அடிக்கடி இந்த மலைக்கு வருவார்கள். மஹாதேவனான ருத்திரமூர்த்தியைத் தவிர மற்ற எவரும் என்னுடைய காண்டீவத்தி லிருந்து புறப்படும் அளவற்ற அம்புகளைச் சகிக்கமாட்டார்கள். பரமசிவன் அன்றி வேறு தேவர், யட்சர் எவரானாலும் இந்தக் கூரிய அம்பாலே எமபுரத்துக்கு அனுப்பிவிடுவேன். இப்படி நினைத்துக்கொண்டு அர்ஜுனன் மன மகிழ்ச்சியோடு, சூரியனானவன் தன்னுடைய கிரணங்களை உலகம் முழுவதும் பரவச் செய்கிறது போல, ஆயிரம் அம்புகளை வேடனுடைய மார்பைப் பிளக்கும்படி யெய்தான். சூலபாணியாகிய வேடன் மலைபோல அசைவற்று நின்று அந்த அம்புகளையும் மகிழ்ச்சியோடு தமது திருமேனியில் ஏற்றார். அர்ஜுனனி டத்தி லிருந்த அம்புகளெல்லாம் செலவாய்விட்டன. அதனால் அர்ஜுனன் பயமடைந்தான். தான்

டவ வன தகனஞ்செய்த காலத்தில், குறைவற்ற இரண்டு அம்புத் தூணிகளைக் கொடுத்த அக்கினிதேவனை நினைத்துக்கொண்டு, என்னுடைய அம்புகளெல்லாம் செலவழிந்து போயின. இனி நான் என்ன செய்கிறது? எந்த அம்பை நான் எய்வேன்? என்னுடைய அம்புகளை யெல்லாம் விழுங்குகிற இவன் யாவனோ? என்று மனதுக்குள் சொல்லிக்கொண்டான்.

48—67. பிறகு, கதையினால் யானையை அடிக்கிறது போல என் வில்லின் நுனியால் அடித்துக் கொன்று இவனை எமபுரம் அனுப்பிவிடுகிறேன் என்று சிந்தித்தான். உடனே அர்ஜுனன் தன்னுடைய வில்லை எடுத்து, வில் நாரியால் வேடனை யிழுத்து, காண்டீவத்தால் அவனை அடித்தான். அந்த அடிகள் பேரிடிகளைப் போலப் பயங்கரமான வைகளாக இருந்தன. அந்த வில்லின் நுனியைக் கொண்டே அந்த வேடனோடு போர் செய்யத் தொடங்கினான். வேடன் வில்லைப் பிடுங்கிக்கொண்டான். தன்னுடைய கையிலிருந்த வில்லை வேடன் பிடுங்கிக்கொண்டதும், அர்ஜுனன் தன் வாளாயுதத்தினால் யுத்தம் செய்ய ஆரம்பித்தான், கௌரவ வம்சத்து அரசனான அர்ஜுனன் மலைகளையும் பிளக்கத்தக்க அந்த வாளினாலே தன் முழுப் பலத்தோடும் வேடன் தலையில் அடித்தான். வேடன் தலையில் பட்ட அந்த வாள் பல துண்டுகளாகச் சிதறின. பிறகு அர்ஜுனன் மரங்களையும் கற்களையும் கொண்டு யுத்தம் செய்தான், வேடரூபமாக வந்த சிவபெருமான் அவைகளை யெல்லாம் தாங்கிக்கொண்டு யாதொரு ஊறு மின்றி யிருந்தார். அர்ஜுனனுக்குக் கோபத் தீப்புகைந்து எரிந்தது. உடனே குத்துச் சண்டை தொடங்கினான், வேடனுடைய தலையில் இடிபோலக் குத்தினான். வேடனும் அர்ஜுனனைக் குத்தினான். அது இந்திரனுடைய இடியேறு போல் இருந்தது. இவ் விருவருடைய குத்துச் சண்டையால் அவ்விடத்திலே பெரிய சத்தமுண்டாயிற்று அந்தச் சண்டை இந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் நடந்ததைப் போ லிருந்தது. ஒரு க்ஷண நேரத்துக்குப் பின் அர்ஜுனன் தன் இரு கரங்களாலும் வேடனை இறுகக்கட்டிப் பிடித்தான். வேடனும் அப்படியே அர்ஜுனனைத் தன் கைகளால் கட்டி இறுக்கினான். அவ் விருவரும் இறுகக்கட்டி நெருக்கின தினத்தினால், அக்கினியிற் பட்ட கரியினின்றும் புகை உண்டாவது போல அவர்கள் சரீரத்தி னின்றும் புகை கிளம்பிற்று. வேடனாகிய சிவபிரான் வெகு கோபத்தோடு அர்ஜுனனை இறுகக்கட்டி நெருக்கியதால் அர்ஜுனன் தன் பிரக்ஞை யிழந்து போனான். தேவதேவன் இறுக்கிப் பிடித்ததினாலே அர்ஜுனனுடைய தேகம் நசுங்குண்டு மாமிசப் பந்துபோ லாய்விட்டது; மூச்சில்லாமல், நகரச் சக்தியு மில்லாமல் பூமியில் விழுந்து பிணம் போலக் கிடந்தான். கொஞ்ச நேரத்துக்குள் தெளிவடைந்து பூமியினின்றும் எழுந்திருந்தான். உடம்பெல்லாம் இரத்தமயமாயிற்று. அதனாலே அர்ஜுனன் மிகவுந் துக்கமடைந்தான். பிறகு மனசால் பினாகபாணியை வணங்கிக், களிமண்ணால் அவரது சொரூபத்தைச் செய்து மாலைகளையும் புஷ்பங்களையு மிட்டு ஆராதனை செய்தான். அர்ஜுனன் தான்

சிவசொரூபத்துக்குச் சாத்தின மாலை வேடனுடைய சிரசிலிருக்கக் கண்டான். சந்தோஷத்தால் பூரித்தான் மறுபடியும் சுகமடைந்தான். பிறகு அந்த வேடனுகிய பரமசிவனுடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து அவருக்கு மகிழ்ச்சி யுண்டாக்கினன். இப்படி மன மகிழ்ந்த சிவபிரான் அர்ஜுனனுக் குண்டான ஆச்சரியத்தையும், தவத்தால் மெலிந்திருக்கிற அவனுடைய தேகத்தையும் பார்த்து மேகமுழக்கம் போலச் சொல்லுகிறார்

68—71. பல்குன! உன்னுடைய ஒப்பற்ற தவசினலே நான் மகிழ்ச்சி யடைந்தேன். உனக்குச் சமானமான தைரியத்தையும் பொறுமையையும் உடைய க்ஷத்திரியன் ஒருவனுமில்லை, வல்லமையுள்ள வீரனே! பரத குலோத்தமனே! பாபமற்றவனே! உன்னுடைய பராக்கிரமமும் சாமர்த்தியமும் என்னுடையவற்றிற்குச் சமானமா யிருக்கின்றன. உன்னிடத்தில் எனக்குச் சந்தோஷமுண்டாயிருக்கிறது. என்னைப் பார். விசாலமான கண்களையுடைய வீரனே! நான் ஞானக் கண்களைக் கொடுக்கிறேன். அவைகளாலே நீ என்னுடைய உண்மையான சொரூபத்தைக் காண்பாய். நீ பூர்வத்தில் ஒரு ரிஷியா யிருந்தாய். உன்னுடைய பகைவர்கள் தேவர்களா யிருந்தாலும் நீ அவர்களை வென்று ஜயம் பெறுவாய். நான் உன்னிடத்தில் மகிழ்ச்சி யடைந்திருப்பதால் தடுக்கப்படாத ஒரு ஆயுதத்தை உனக்குத் தருகிறேன. சீக்கிரத்தில் பெருமையுள்ள ஆயுதங்களை யெல்லாம் பெறுவாய் என்று சொன்னர்.

72—83. பிறகு அர்ஜுனன் மஹா தேஜசுள்ளவராயும், மஹாதேவராயும், கைலாச பர்வத வாசியாயும், பினாகபாணியாயு மிருக்கிற பரமசிவனை உமா தேவியாரோடு கண்டு தரிசித்தான். அவருடைய பாதங்களிலே தலை குனிந்து வணங்கிப் பணிந்து, திரிபுராந்தகரான பரமசிவப் பிரபுவை மகிழ்வித்துச் சொல்லுகிறன். கபர்த்தி! தேவர்களுக் கிறைவனே! பகனுடைய கண்களை அபகரித்தவரே! தேவர்களுக்குத் தேவனே! நீலகண்டா! திரிநேத்திரா! சர்வேசுவரா! நீரே சர்வகாரணங்களுக்குங் காரணரென்று நான் அறிவேன். நீரே சகல தேவர்களுக்கும் புகலிடமா யுள்ளவர். பிரபஞ்சம் முற்றும் உம்மிடத்தி லிருந்துதான் உற்பத்தியாயிற்று. மூன்று உலகங்களிலுமுள்ள தேவர்களாலும் அசுரர்களாலும் மனிதர்களாலும் ஜயிக்க முடியாத தேவன் நீரே. சிவபெருமானகிய நீரே விஷ்ணு சொரூபமா யிருக்கிறீர். அந்த விஷ்ணு சிவரூபமா யிருக்கிறர். நீர் தக்ஷனுடைய யாகத்தை நாசம் பண்ணினீர். ஹரியே! ருத்திரமூர்த்தியே! உம்மை நான் நமஸ்கரிக்கிறேன். பாலலோசன! சூலபாணீ! பினாகபாணீ! சூரியா! நிர்மலா! மஹிமையுள்ளவரே! சமஸ்த பிராணிகளுக்கும் தலைவரே! நான் உம்மை வணங்குகிறேன். கணபதியே! சர்வானுக்கிரக காரணரே! சர்வ காரணங்களுக்கு மூலகாரண மானவரே! புருஷோத்தமரே! மஹாமஹிமையுள்ள ஹரனே! மேன்மை யுள்ளவரே! சங்கரா! என்னுடைய அபராதங்களை நீர் மன்னித் தருள வேண்டும். உமது கிருபா கடாக்ஷத்தைப் பெறுவதற்காகவே நான் இந்த மலைக்கு வந்தேன். உமக்கு விருப்பமுள்ளதும் சன்னியாசிகளுக்குச் சிறந்த வாசஸ்தானமா யுள்ளது

மான இந்த மலைக்கு நான் வந்த காரணம் இதுதான். தேவதேவனே! சகல உலகத்தாராலும் வணங்கப்படுகிற உம்மை நான் நமஸ்கரிக்கிறேன். நான் முரட்டுத் தனமாய் உம்மிடத்தில் சண்டையிட்டது குற்றமாக இருந்தால் அதை மன்னித் தருள வேண்டும். ஏ சங்கரா! நான் உம்மையே சரணமாக அடைந்தேன். நான் செய்த எல்லாக் குற்றங்களையும் மன்னிக்க வேண்டுகிறேன் என்று துதித்துப் பிரார்த்தித்தான். மஹா தேஜசுள்ள விருஷபத்வஜ ரான பரமசிவன் அர்ஜுனனுடைய அழகிய கைகளைப் பிடித்துக்கொண்டு, நான் உன்னை மன்னித்தேன் என்று புன்னகையோடு கூறினார். விருஷபத்தைக் கொடியாகக் கொண்ட சிவபிரான் மகிழ்ச்சியோடு தமது இரு கரங்களாலும் தழுவிக்கொண்டு, தேற்றிப் பின்னும் கூறுகிறார்.

---

## 40-வது அத்தியாயம்.

### கிராதபர்வத் தொடர்ச்சி.

1—7. பூர்வ ஜன்மத்திலே நீ நரன்; நாராயணனுக்குத் தோழன். அநேகமாயிர வருஷம் வரைக்கும் பயங்கரமான தவம் புரிந்தாய். உன்னிடத்திலும் புருஷோத்தமனான விஷ்ணுவி னிடத்திலும் மஹா சௌரிய மிருக்கின்றது. நீங்க ளிருவரும் உங்களுடைய வல்லமையால் உலகத்தைத் தாங்குகின்றீர்கள். இடிமுழக்கம் போன்ற தொனியை யுடைய பயங்கரமான வில்லை யேந்திக்கொண்டு நீங்கள் இருவரும் தானவர்களைச் சங்கரித்துத் தேவேந்திரனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தீர்கள். பார்த்தா! உன் கைக்கு இசைந்ததாயிருக்கிற இந்தக் காண்டீபத்தைத்தான் முன்பு நீ தானவரைச் சங்கரித்த போதும் வைத்துக்கொண் டிருந்தாய். அந்தக் காண்டீவத்தை நான் என்னுடைய மாயா சக்தியின் வல்லமையால் உன் கையிலிருந்து பறித்துக் கொண்டேன். ஓ பார்த்தா! உனக்கு ஏற்றனவாயுள்ள இந்த இரண்டு அம்புத் தூணிகளும் மறுபடியும் குறைவற்ற வைகளா யிருக்கும். குருகுல அரசே! உன் சரீரம துன்பமும் வியாதியும் அற்றனவாயும் இருக்கக் கடவது. உன் சௌரியம் ஒருவராலும் தடுக்கப்படாததா யிருக்கும். நான் உன்னிடத்தில் சந்தோஷமா யிருக்கிறேன். ஆகையால் நீ விரும்பின வரங்களைக் கேள். எல்லாருக்கும் தகுதியான மரியாதை செய்கிறவனே! சத்துருக்களுக்கு பயங்கரமானவனே! உனக்குச் சமானமான பராக்கிரமசாலி இந்த உலகத்திலாவது தேவலோகத்திலாவது இருக்கவே மாட்டான். க்ஷத்திரியர்களிலும் உனக்குச் சரியானவன் இருக்கமாட்டான் என்றார்.

8—14. அர்ஜுனனவன் ஏ விருஷபத்வஜா! தேவ தேவனே! நான் விரும்புகிற வரத்தை யெனக்குக் கொடுக்க நீர் விரும்பினால் நீர் உமது கையில் தரித்துக்கொண்டிருக்கிற பிரமசிரம் என்கிற பயங்கரமான அஸ்திரத்தை நான் அடைய விரும்புகிறேன். மஹா சக்தியுள்ளதும், யுக

முடிவிலே சகல பிரபஞ்சத்தையும் நாசம் பண்ணுகிறதுமான அந்தப் பிரம சிரம் என்கிற ஆயுதத்தை நான் கேட்கிறேன். ஓ மஹாதேவா! அந்த ஆயுதத்தின் உதவியாலேயும், உமது கருணையாலேயும் கர்ணன், பீஷ்மர், கிருபர், துரோணர் இவர்களோடு நான் யுத்தம் செய்யும்போது வெற்றிபெற விரும்புகிறேன். யுத்தத்திலே தானவர், இராட்சதர், பிசாசர், கந்தர்வர், நாகர், மற்றுமுள்ள துஷ்ட தேவதைகள் எல்லாரையும் அந்த ஆயுதத்தினலே நான் ஜயங்கொள்ள வேண்டும். மந்திரோச்சாரணத்துடன் பிரயோகம் செய்தவுடனே அநேகமாயிரம் ஆயுதங்களையும், விஷங்கொண்ட சர்ப்பங்களை ஒத்த அம்புகளையும் உற்பத்தியாக்க வல்ல அந்த ஆயுதத்தினலே பீஷ்மர், துரோணர், கிருபர் நிந்திக்கப்பட்ட கர்ணன் இவர்களோடு யுத்தம் பண்ண வேண்டும். பகனுடைய கண்களைப் பிடுங்கின மஹாதேவா! பீஷ்ம துரோணுதிகளோடு யுத்தம் செய்து வெற்றி யடையவேண்டு மென்பதுதான் எனது முக்கியமான கருத்து என்றான்.

15—28. சிவபெருமான் அர்ஜுனனைப் பார்த்துப் பாண்டவ சிரேஷ்டனே! எனக்குப் பிரியமுள்ள அந்தப் பாசுபதாஸ்திரத்தை உனக்குத் தருகிறேன். நீ அதைத் தரிக்கவும், பிரயோகிக்கவும், மீட்கவும் சக்தியுள்ளவனு யிருக்கிருய். இந்திரன், எமன், குபேரன், வருணன், வாயு இவர்களில் ஒருவரும் அறியமாட்டார்கள் என்றால் மனிதர்கள் எப்படி யறிவார்கள்? பார்த்தா! சரியான காரணமில்லாமல் இந்த அஸ்திரத்தைப் பிரயோகிக்கப் படாது. அற்ப பலமுள்ளவர்கள் மேல் ஏவினுல் அது உலகம் முழுதையும் நாசம் பண்ணிவிடும். இந்த ஆயுதத்தினுல் கொல்ல முடியாத பிராணி இந்த மூன்று உலகங்களிலும் உள்ள சராசரங்களில் ஒன்று மில்லை இதை மனதாலும், கண்களாலும், வார்த்தைகளாலும், வில்லாலும் பிரயோகிக்கலாம் என்றார். இதைக் கேட்டவுடனே அர்ஜுனன் பரிசுத்தன் ஆகிச், சர்வேசுவரனிடம் வந்து, அதை உபதேசிக்கும்படி கேட்டான். சிவபெருமான், யமனுடைய காலதண்டம் போல விளங்குகிற அந்த ஆயுதத்தை அவனுக்கு உபதேசித்தார். அதைப் பிரயோகிக்கவும், மீண்டும் அழைக்கவும் வேண்டியவற்றையும் அவனுக்கு உபதேசித்தார். அந்த ஆயுதமும் உமாகாந்தரான சிவபெருமானிட மிருந்தது போல அர்ஜுனனிடம் வந்து விட்டது. அர்ஜுனனும் அதை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டான். அப்போது மலைகள், கடல்கள், வனங்கள், மரங்கள், கிராமங்கள், நகரங்கள், சுரங்கங்கள் இவைகளோடு கூடிய இந்த மண்ணுலகம் முழுதும் நடுங்கிற்று. அநேகமாயிரம் சங்குகளும், வாத்தியங்களும் வானத்தில் முழங்கின. பிரசண்டமாருதம் வீசிற்று. சுழல்காற்றடித்தது. அளவில்லாத பராக்கிரமமுள்ள அர்ஜுனன் பக்கத்தில் அந்தப் பயங்கரமான ஆயுதம் நின்றுகொண்டிருக்கிறதைத் தேவர்களும், தானவர்களும் கண்டார்கள். கரையற்ற பராக்கிரமசாலியான அர்ஜுனன் சரீரத்தில் உண்டாயிருந்த தீங்குகளெல்லாம் திரிநேத்திரருடைய ஸ்பரிசத்தினுலே விலகிப்போயின. பிறகு முக்கண் மூர்த்தியானவர் தேவலோகத்துக்குப் போகும்படி அர்ஜுனனுக்

குக் கட்டளை யிட்டார். அர்ஜுனன் கைகளைக் குவித்து வணங்கி நின்றான். வானுலக வாசிகளான தேவர்களுக்கு நாயகரும், சோதி சொரூபரும், கைலாச பதியும், உமாகாந்தரும், சர்வ மங்கள மானவரும், அனுக்கிரக காரணரும், பவ னென்னும் திரு நாமத்தை யுடையவருமான ஸ்ரீ பரமேசுவரரானவர், தானவர் களையும், பிசாசர்களையும் நாசம் செய்யத் தக்க கந்தர்வமென்னும் பெரிய வில் லைப் புருஷசிரேஷ்டனான அர்ஜுனனுக்குக் கொடுத்தார். பிறகு தேவ தேவ ரானவர் பனிக் கிருப்பிடமானதும் பள்ளத்தாக்குகளும், குகைகளும் நிறைந்த அந்த மலையை விட்டு உமாதேவியாரோடு புறப்பட்டார். ஆகாயத்தில் சஞ்ச ரிப்பவர்களான ரிஷிகளுக்குப் பிரியமுள்ள புகலிடமான அந்த மலையை விட்டு அர்ஜுனன் பார்த்துக்கொண் டிருக்கும்போதே வானத்தில் எழுந்தருளினார்.

---

## 41-வது அத்தியாயம்.

கிராதபர்வத் தொடர்ச்சி.

1—5. பிநாகமென்னும் வில்லை யுடைய ரிஷபத்துவஜரானவர் உலகத்தா ருக்கு எதிரில் அஸ்தமிக்கிற சூரியனைப் போல, அர்ஜுனன் பார்த்துக்கொண் டிருக்கும்போதே மறைந் தருளினார். அர்ஜுனன் அதைப் பார்த்து ஆச்சரி யப்பட்டுத், தனக்குள்ளே சொல்லிக் கொள்ளுகிறான், நான் கருணை செய்யப் பட்டவனும், அதிர்ஷ்டமுள்ளவனுமாக இருக்கிறேன். ஏனென்றால், முக் கட் பெருமானைத் தரிசித்து என் கைகளால் அவரைத் தொடப் பெற்றேன். நான் மிகவும் பெருமையாக அனுக்கிரகிக்கப்பட்டவன். நான் எனது பகை வர்கள் எல்லாரையும் வென்றுவிட்டேன். என்னுடைய மனோரதம் நிறை வேறிற்று என்று இப்படியாகத் தனக்குள் சிந்தித்துக்கொண் டிருக்கையில் ஜலத்துக்கு இறைவனாகிய வருணன் வைடூரியம் போலப் பிரகாசிக்கிறவனாய், நீரில் வாழும் பிராணிக் கூட்டங்களோடும் திக்குகளை யெல்லாம் பிரகாசிப் பித்துக்கொண்டுவந்தான்.

6—16. ஆணும் பெண்ணுமான நதிகளும், நாகர்களும், தேவர்களும், சித்தர்களும், மற்றுமுள்ளவர்களும் சூழவந்தான், ஐசுவரியங்களுக்கு இறைவ னாகிய குபேரன் சொர்ணம் போலப் பிரகாசிக்கிற சரீரமுடையவனாய்,ஒளிமய மான விமானத்தி லேறிக்கொண்டு, அநேகமான யட்சர்கள் சூழ அர்ஜுன னைப் பார்க்கும்படியாக வந்தான். கருணையும் மகிமையுமுள்ளவனும், சங்கார கர்த்தனுமான எமன், சிருஷ்டிகர்த்தரோடும், சரீரமுள்ளவர்களும் சரீரமில் லாத வர்களுமான பிதிர்த்தேவதைகளோடும் வந்தான். நியாயாதிபதியும், நியானிப்பதற்கரியவனும், சர்வ ஜீவர்களையும் சங்கரிக்கிறவனுமான எமன் கதாபாணியாய்க் கந்தர்வர்களும் நாகர்களும் சூழ இரதத்தின்மேலேறிக்கொ ண்டு வந்தான். அவன் யுகமுடிவில் உதிக்கிற இரண்டாவது சூரியனைப் போ லத் தோன்றினான். அவர்கள் பல வர்ணமுள்ளதாய் விளங்குகிற அந்த மலைச் சிகரத்தில் அர்ஜுனனைக் கண்டார்கள். அப்போது தேவேந்திரன் இந்திரா

ணியோடு கூட அயிராவதத்தின் மேலாரோகணித்துக்கொண்டு தேவர்கள் சூழ அவ்விடத்துக்கு வந்தான். ஆட்டுரோமம் போன்ற நிறமுள்ள மேகத்தின் இடையில் காணப்படுகிற சந்திரனைப் போலப் பிரகாசிக்கிற வெள்ளைக் குடையின் கீழ்த் தோன்றினான். கந்தர்வர்களும் தேவரிஷிகளும் சூழ அந்த மலையின் மேல் சூரியனைப் போல விளங்கினான். அப்போது தென் திசைக் காவலனான எமதர்மராஜன் மேக கோஷம் போலக் கம்பீரமாய் இனிய வசனங்களைச் சொல்லத் தொடங்கினான்.

17—26. அர்ஜுனா! இதோ பார். லோகபாலகர்கள் எல்லாரும் வந்திருக்கிறார்கள். நீ தகுதியுள்ளவனா யிருக்கிறபடியால் நாங்கள் எல்லாரும் உனக்குக் காட்சி கொடுக்க வந்திருக்கிறோம். நீ பூர்வ ஜன்மத்தில் பிரசித்தி பெற்ற ரிஷியாக இருந்தாய். அப்போது உனக்கு நரன் என்று பேர். பிரம தேவருடைய கட்டளையால் நீ யுத்தவீரனாகப் பிறந்திருக்கிறாய். மஹா பராக்கிரமசாலியும், தர்மிஷ்டருமான உன் பிதாமகர் பீஷ்மரையும் கூட நீ யுத்தத்தில் ஜயிப்பாய் அவர் வசுவின் அவதாரம். துரோணரால் வல்லமையோடு காக்கப்படும் க்ஷத்திரியர்களையும், மனிதராகப் பிறந்திருக்கும் தானவர்களையும் வெல்வாய். ஓ கௌரவனே! நிவாதகவசர் என்னப்படுகிற தானவர்களையும் வெல்வாய். உலகத்துக்கு ஒளி கொடுக்கும் என் பிதாவான சூரியாம்சமான கர்ணனையும் நீ கொல்வாய். உலகத்தில் பிறந்திருக்கிற தேவர்கள், தானவர்கள், இராட்சதர்கள் எல்லாரையும் நீ ஜயிப்பாய் உன்னுடைய கீர்த்தி எந்நாளும் உலகத்தில் நிலைபெற்றிருக்கும். சுவயம்பிரகாசராகிய மஹாதேவருக்குச் சந்தோஷமுண்டாக்கி யிருக்கின்றாய். திருமாலுடன் கூடின உன்னால் பூமிதேவி சுமை ஒழிந்திருப்பாள். வீரனே! என்னுடைய இந்த ஆயுதத்தைப் பெற்றுக்கொள். இந்தக் கதை ஒருவராலும் ஜயிக்கப்படாதது. இதனால் நீ பெரிய காரியங்களைச் செய்வாய். குந்தி புத்திரா! இதைப் பிரயோகிக்கவும் அழைக்கவும் தகுந்த மந்திரங்களோடு பெற்றுக்கொள் என்றான்.

27—33. மேற்குத் திசையில் வசிக்கின்ற ஜலத்துக் கதிபதியான வருணன் அர்ஜுனனைப் பார்த்துச் சொல்லுகிறான். அர்ஜுனா! நீ க்ஷத்திரியர்களுக்குள் சிறந்தவன், க்ஷத்திரிய தர்மத்தைப் பரிபாலிக்கிறவன். தாம்பிரம் போலச் சிவந்த கண்களை யுடைய பார்த்தா! நான் ஜலத்துக் கிறைவனாகிய வருணன். என்னைப் பார். என்னுடைய பாசத்தை நான் பிரயோகித்தால் அதை ஒருவராலும் தடுக்க முடியாது. இந்த வாருணி என்னும் ஆயுதங்களைப் பிரயோகம் செய்கிறதற்கும் உபசம்ஹாரம் செய்வதற்கும் உரிய மந்திரங்களோடு என்னிடமிருந்து பெற்றுக்கொள். ஓ வீரனே! தாரகாமய யுத்தத்திலே அநேகமாயிரம் தைத்தியர்களைக் கட்டினேன். நான் இவைகளை உனக்குப் பிரியத்தினாலே கொடுக்கிறேன். உன்னுடைய சத்துருக்கள் ஒரு போதும் தப்பிப் போகமாட்டார்கள். இந்த ஆயுதத்தைத் தரித்துக்கொண்டு நீ யுத்தகளத்தில் நின்றால் உண்மையாகவே இந்த உலகத்தில் க்ஷத்திரியர்கள்

இல்லாமல் ஒழிந்துபோவார்கள் என்றான். எமனும் வருணனும் தங்களுடைய தெய்வத் தன்மையுள்ள ஆயுதங்களைக் கொடுத்த பின், கைலாசபர்வத சிகரத்தில் வசிக்கிற நிதிபதியான குபேரன் சொல்லுகிறான்.

34—41. புத்திசாலியாயும் சாமர்த்தியசாலியாயு முள்ள பாண்டு புத்திரா! இடக் கையில் வில்லையுடையவனே! வல்லமையுள்ள ஆயுதங்களை யுடையவனே! பூர்வ ஜன்மத்திலே தேவனாயுள்ளவனே! அழிவற்றவனே! பூர்வ காலத்திலே நீ எங்களோடு கூடித் தவஞ்செய்து களைத்தாய். புருஷசிரேஷ்டனே! நான் திவ்யமான காட்சி தருகிறேன். அதனாலே நீ ஜயிக்கப் படாத தேவர்களையும் தானவர்களையும் வெல்வாய். நீ என்னிடத்தி லிருந்து மஹிமையுள்ள ஆயுதத்தைப் பெற்றுக்கொள். அதனாலே திருதராஷ்டிரபுத்திரனுடைய போர் வீரர்களை எரித்து விடுவாய் எனக்குப் பிரியமுள்ள அந்தர்த்தானம் என்ற ஆயுதத்தைப் பெற்றுக்கொள்ளு. மஹிமையும் வல்லமையும் ஒளியுமுள்ள இந்த ஆயுதமானது சத்துருக்களை நித்திரை அடையச் செய்யுஞ் சக்தியுள்ளது. சிவபெருமான் திரிபுரத்தை யெரித்தபோது இந்த ஆயுதம் பிரயோகிக்கப் பட்டது. இதனாலே வல்லமைசாலிகளான அநேக அசுரர்கள் எரிந்து போனார்கள். வெல்லுதற்கரிய பராக்கிரமமுள்ளவனே! உனக்குக் கொடுப்பதற்காக இதை எடுத்துக்கொண்டு வந்தேன். மேருவுக்குச் சமானமான பெருமையும் திராணியுமுள்ளவனே! நீ இந்த ஆயுதத்தைத் தரிக்கத் தகுதியுள்ளவன் என்றான். பிறகு குருகுல வீரனான அர்ஜுனன் தெய்வத் தன்மையுள்ள அந்தக் குபேராஸ்திரத்தை வாங்கிக் கொண்டான்.

42—49. அதன் பிறகு தேவராஜனாகிய இந்திரன் களையாத போர் வீரனாகிய அர்ஜுனனைப் பார்த்து, மேக முழக்கத்தையும், இரணபேரிகையின் தொனியையும் போல் இனிய வசனங்களினாலே சொல்லுகிறான். மஹிமையுள்ள குந்தி புத்திரனே! பூர்வத்திலே நீ ஈசனா யிருந்தாய். முன்னாலேயே சகல வல்லமைகளையும் தேவர்களுக் குரிய மகிமையையும் அடைந்திருக்கிறாய் சத்துருக்களை அடக்குகிறவனே! நீ தேவர்களுக்காக ஒரு பெரிய காரியத்தைச் செய்ய வேண்டும். அதற்காக நீ தேவலோகத்துக்கு வர வேண்டும். அதற்குச் சித்தமா யிரு. என்னுடைய தேர்ச் சாரதியாகிய மாதலி உன்னை அழைக்கிறதற்காகப் பூலோகத்துக்கு வருவான். கௌரவனே! நான் உனக்கு இந்த தேவாஸ்திரங்களைத் தருகிறேன் என்றான். அந்த இமாசலச் சிகரத்தில் வசித்திருக்கிற உலக பாலகர்களை அர்ஜுனன் பார்த்து ஆச்சரிய மடைந்தான். பெருமையுள்ள அர்ஜுனன் அவர்களைத் தோத்திரத்தாலும், தண்ணீராலும், கனிவர்க்கங்களாலும் உபசரித்துப் பூசித்தான். தனஞ்செயன் உபசரித்த பின் அவர்கள் எல்லாரும் தத்த மிடங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். தேவர்கள் கொடுத்த ஆயுதங்களைப் பெற்றுக்கொண்ட பின் அர்ஜுனன் மகிழ்ச்சியடைந்தான். தான் ஆசிர்வதிக்கப் பட்டவனென்றும் தன்னுடைய விருப்பம் நிறைவேறி விட்டதென்றும் எண்ணி மகிழ்ந்தான்.

## 42-வது அத்தியாயம்.

### இந்திரலோக கமன பர்வம்.

1—10. வைசம்பாயனர் சொல்லுகிறார். இராஜாதி ராஜனே! லோக பாலர்கள் போன பிறகு, அர்ஜுனன் தேவேந்திரனுடைய இரதத்தைப் பற்றிச் சிந்தித்தான். இந்திரிய நிக்கிரகஞ் செய்தவனான அர்ஜுனன் இப்படி நினைத்துக்கொண் டிருக்கிறபோது மாதலியால் செலுத்தப்பட்ட தெய்வீக இரதம் வந்து சேர்ந்தது. அந்த இரதமானது தனது பிரகாசத்தினாலே ஆகாயத்திலே நிறைந்த இருளை விலக்கிக்கொண்டும், மேகமண்டலத்தைக் கிழித்துக் கொண்டும், திசைகளெல்லாம் செவிடு படும்படி இடிபோல ஒலித்துக் கொண்டும், பயங்கரமான வாளாயுதங்களாலும், தோமரம முதலிய படைகளாலும், நடுக்க முண்டாக்கும்படியான கதைகளாலும், நிறைந்திருந்தது. நாலு சக்கரங்களை யுடையதாயும், காற்றினு லியற்றப்பட்டு விசாலமுடையதாயும் மேக கர்ஜனை போன்ற தொனி யுடையதாயு மிருந்தது. அதில் பெரிய சரீரமுடையவராயும், தீயைக் கக்குகின்ற வாயினையுடையவராயும் உள்ள நாகர்களும், வெண்ணிறமுள்ள மேகம் போன்ற கற்களு மிருந்தன. சொர்ண வடிவமான வைகளும், காற்றைப்போல வேகமுடைய வைகளுமான இரண்டுகுதிரைகள் பார்ப்பவர்கள் கண்கள் மயங்கும்படி வேகத்தோடும் இழுத்துக்கொண்டு வந்தன. அர்ஜுனன் அந்தத் தேரில் கட்டப்பட்ட வைஜயந்த மென்னும் நீல நிறமுள்ள கொடிகளைக் கண்டான். அந்தக் கொடிகளெல்லாம் நீலோத்பல மலர்போல விளங்கின. மூங்கிலால் வரிச்சல் கழிகளிடப் பட்டது போலச் சொர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அந்தத் தேரின் மேல் சொர்ணத்தைப் போலப் பிரகாசித்துக்கொண் டிருந்த சாரதியையும் பார்த்து அது இந்திரனுடையது என்று கருதினான். இப்படி அர்ஜுனன் நினைத்துக்கொண்டிருக்கும்போது மாதலி தேரோடு இறங்கிவந்து அர்ஜுனனை வணங்கிச் சொல்லுகிறான்.

11—18. நல்ல அதிர்ஷ்டமுள்ளவரே! இந்திர புத்திரரே! தேவராஜன் உம்மைப் பார்க்க விரும்புகிறார். அவர் அனுப்பின இந்தத் தேரின் மேலே சீக்கிரமாய் ஏறிக்கொள்ளும். அழியாதவரான மஹிமையுள்ள உமது பிதாவானவர் என் புத்திரனை பார்த்தனை இங்கே அழைத்துக்கொண்டு வா. தேவர்களெல்லாரும் அவனைப் பார்க்கட்டும் என்று சொன்னார். தேவர்களும், கந்தர்வர்களும், ரிஷிகளும், அப்ஸரஸ்களும் சூழ உம்மைப் பார்ப்பதற்காகக் காத்திருக்கிறார். இந்திரனுடைய கட்டளையால் இந்தத் தேரி லேறிக்கொண்டு தேவலோகத்துக்கு வாரும். அவருடைய ஆயுதங்களைப் பெற்றுக்கொண்டு திரும்பி வரலாகும் என்றான். அதைக் கேட்ட அர்ஜுனன், ஓ மாதாலீ! என்னைச் சீக்கிரமா யிந்தத் தேரின் மேலேற்றிக்கொள். ஆயிரம் இராஜசூயமும் அசுவமேதமும் செய்தவர்களாலும் இதன் மேல் ஏறுவதற் கரிது. மஹிமையுள்ள அநேக யாகங்களைச் செய்தவர்களும், வரங்களைப் பெற்றவர்களுமான அரசர்களும், தேவர்களும், தானவர்களும், இதன் மேல் ஏறுகிறதற்கு முடியாது

தபச் சித்தி பெறாதவர்களால் இதைப் பார்ப்பதற்கும் தொடுவதற்கும் கூடாது. மாதலீ! நீ முதலில் இதன் மேலேறிக்கொண்டு குதிரைகளைச் சாந்தப் படுத்து. அதன் பிறகு நன்மார்க்கத்தில் உள்ள ஒரு பக்தனைப் போல நானும் ஏறிக்கொள்ளுகிறேன் என்றான். இந்த வார்த்தையைக் கேட்டதும் இந்திர சாரதியான மாதலியும் உடனே தேரின் மேலேறிக்கொண்டு, கடிவாளத்தைக் கையில் பற்றிக் குதிரைகளை அடக்கிப் பிடித்துக்கொண்டான். பின்பு குந்திபுத்திரனான அர்ஜுனன் கங்காநதியில் ஸ்நானம் பண்ணிப் பரிசுத்தனாய் மனத் திருப்தியோடு நித்திய கடனை முடித்துக் கொண்டான். பிதிர் தேவதைகளுக்குச் செய்ய வேண்டிய தர்ப்பணாதிகளைச் செய்து, பர்வத ராஜனுக் குரிய மந்திரத்தை ஜபித்தான். ஓ பர்வத ராஜனே! பக்திமான்களும் நல்லொழுக்கமுள்ளவர்களுமாய் மொட்சத்தை விரும்புகிற சந்நியாசிகளுக்கு நீ புகலிடமா யிருக்கிறாய். பர்வதராஜனே! உனது தயவாலே பிராமணர்களும், க்ஷத்திரியர்களும், வைசியர்களும், துன்பத்தி னின்றும் விடுதலை யடைந்து, சொர்க்கலோகம் போய்த் தேவர்களோடு களித்து விளையாடிக்கொண் டிருக்கிறார்கள். ஓ பர்வதராஜனே! பெரிய பர்வதமே! பரிசுத்தமான தேவாலயமே! நான் உன்னிடத்தில் சுகமாய் வசித்துக்கொண்டிருந்தேன். உன்னை வாழ்த்திவிட்டு இன்றைய தினம் பிரிந்து போகிறேன். உன்னிடத்திலுள்ள பீட பூமியையும், பூஞ்சோலைகளையும், நீரூற்றுக்களையும், ஆலயங்களையும் பல தடவை பார்த்திருக்கிறேன். உன்னிடத்தி லுள்ள இனிய கனிகளைப் புசித்திருக்கிறேன். உன்னிடத்தி லிருந்துண்டாகிற நீரூற்றுக்களின் பரிசுத்தமாய் மணங்கமழும் நீரை அருந்தித் தாகம் தணிந்திருக்கிறேன். அமிர்தத்துக்குச் சமானமான ருசியுள்ள சுனை நீரையும் குடித்திருக்கிறேன். தன் பிதாவின் மடியில் இருக்கும் குழந்தையைப் போல, அப்ஸரஸ்கள் நிறைந்திருக்கிற உனது பீட பூமியிலே வேத கோஷங்களைக் கேட்டு விளையாடிக்கொண்டிருந்தேன். இப்படிச் சொல்லி மலைராஜனை வாழ்த்திவிட்டு அர்ஜுனன் சூரியனைப் போலப்பிரகாசித்துக்கொண்டு தேரி லேறினான் சந்தோஷமான சித்தத்தோடு சூரியனைப் போல ஆகாய மண்டலத்திலேறினான். அப்போது ஆச்சரியமான அநேகமாயிரம் தேர்களை அவன் கண்டான். சூரியன் பிரகாசிக்கவில்லை. சந்திர னொளியும், ஆக்கினி பிரகாசமு மில்லை. அவ் விடங்கள் புண்ணியத்தா லுண்டான தமது சொந்த ஒளியால் பிரகாசித்தன, அவ் விடங்களில், பூலோகத்தி லிருக்கும் போது நட்சத்திர சொரூபமாகக் காணப்பட்ட அநேக உலகங்களைப் பார்த்தான். அவைகள் பூமிக்கு வெகு தூரத்தி லிருக்கிறபடியால் அவைகளின் பெரிய சொரூபங்கள் சிறிதாயும் தீபத்தைப் போலவும் காணப்பட்டன. இப்போது அவன் மிக பெரியனவாயும், தமது சுயம்பிரகாசத்தால் விளங்குகிற வைகளாயும் காணப்பட்டன தேவ பக்தியினை யுடைய இராஜரிஷிகளையும், யுத்தத்தில் பின் வாங்காமல் எதிர்த்து நின்று ஜீவனை விட்ட வீரர்களையும் பார்த்தான். தங்களுடைய தவமகிமையால் சொர்க்க லோகத்தை அடைந்தவர்களையும், சூரியனைப் போல ஒளியால் விளங்குகிற அளவில்லாத கந்தர்வர்

ளையும் கண்டான். குஹ்யகர்கள், ரிஷிகள் பல வகையான அப்ஸரஸ்களையும் பார்த்தான் சுயம்பிரகாசமான இவ் வுலகங்களை யெல்லாம் பார்த்து அர்ஜுனன் ஆச்சரியமடைந்தான். இவைகளைப் பற்றி மாதலியைக் கேட்டான். அவன் மகிழ்ச்சியோடு சொல்லுகிறான். பிருதையின் குமாரனே! புண்ணியசீலர்கள் வசிக்கிற இவ் வுலகங்கள் தாம் பூலோகத்தில் உமக்கு நமக்கும் நட்சத்திர வடிவமாகக் காணப்படுகின்றன என்றான். இப்படிப் பேசிக் கொண்டு போகும்போது, வாசலில் நாலு கொம்புகளை யுடையதும் கைலாசமலை போல்வதுமான வெண்ணிறம் பொருந்திய ஐராவத மென்னும் யானை நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தான். சித்தருடைய உலக வழியாகப் போகும்போது, பாண்டு புத்திரனை அர்ஜுனன் பூர்வ காலத்தில் கீர்த்தி பெற்றிருந்த மாந்தாதாவைப் போல விளங்கினான். அநேக உலகங்களையும் கடந்து இந்திரனைக் காணும்பொருட்டுப் போனான். இப்படியாகப் பல தேவலோகங்களைக் கடந்து கடைசியில் மகிமையுள்ள அர்ஜுனன் இந்திரனுடைய அமராவதி நகரத்தைக் கண்டான்.

---

## 43-வது அத்தியாயம்.

இந்திரலோககமன பர்வத் தொடர்ச்சி.

1—9. சித்தர்களும், சாரணர்களும் வாசம் பண்ணுகிறதும், மலர்கள் நிறைந்துள்ளதும், பலவகை ரிதுக்களை யுடையதும், தெய்வீக விருட்சங்கள் நிறைந்து அலங்காரமாக இருப்பதுமாகிய அந்தத் திவ்ய நகரத்தை அர்ஜுனன் பார்த்தான். இன்பமான மலர்களினுண்டான வாசனையை யுடையதான நல்ல காற்று வீசிக்கொண்டிருந்தது. தெய்வமலர்கள் நிறைந்த திவ்ய விருட்சங்கள் நிறைந்து, அப்ஸரஸ்கள் வசிப்பதற்கிடமான நந்தன வனத்தை யும் பார்த்தான். அது தபோ பல மகிமையால் சென்றடைந்தவர்களும், அக்கினியில் ஹோமம் செய்தவர்களும் தவிர மற்றவர் கண்களுக்குப் புலப்படாது. புண்ணிய கர்மங்களைச் செய்தவர்களுக்கே அது சேரத் தக்க இடம் யுத்த களத்தில் முதுகிட்டுப் பின் வாங்கின வர்களால் அடையப் படாதது வேள்வி செய்தவர்களும், உக்கிரமான தவசு செய்தவர்களும் தவிர மற்றவர்களால் அடைய முடியாதது. வேத நெறியினின்று விலகினவர்களும் பரிசுத்தமான புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணாதவர்களும், யாகங்களையும் தானங்களையும் செய்து பெருமை பெறாதவர்களும் அறிய முடியாது. யாகஞ் செய்கிறதற்கு இடையூறு செய்கிறவர்களும், ஈனர்களும், மதுபானம் பண்ணுகிறவர்களும், குரு பத்தினியைத் தீட்டுப்படுத்தினவர்களும், புலாலுண்பவர்களும், துஷ்ட சித்தமுடையவர்களும் அதைக் காணத் தக்கவர்களல்ல. அந்த நந்தன வனத்தைப் பார்த்துக்கொண்டு அர்ஜுனன் போகையில், தெய்வ வாத்தியங்கள் இனிமையாய்க் கோஷித்தன. அதைக் காதுகளால் கேட்டுக்கொண்டே இந்திரனுக்குப் பிரியமான அந்த நகரத்துக்குள்ளே புகுந்தான்.

10—26. தெய்வத்தன்மையுள்ள ஆயிரம் இரதங்கள் உலாவிக்கொண்டிருப்பதைக் கண்டான். அவைகளைப் போன்ற தேர்கள் அயுதக்கணத் (பதினாயிரக் கணக்காக) தங்கள் இஷ்டப்படி ஓடிக்கொண்டிருந்தன. கந்தர்வர்களும், அப்ஸரஸ்களும், அர்ஜுனனுக்கு மங்களவாழ்த்துக் கூறினார்கள். புஷ்பங்களிலிருந்து அடைந்த சுகந்த பரிமளத்தோடு குளிர்ந்த காற்று வீசிற்று. பிறகு கந்தர்வர்களும சித்தர்களும் கூடி மகிழ்ந்து தடுக்கப்படாத வீரனான அர்ஜுனனுக்கு அலங்காரம் பண்ணினார்கள் அவனை எல்லாரும் ஆசீர்வதித்தார்கள். தேவ துந்துபிகள் ஒலித்தன. எங்கெங்கும் வாத்தியங்களும் சங்கங்களும் கோஷிப்பதை அர்ஜுனன் கேட்டு மகிழ்ந்தான். இந்திரன் கட்டளையால் மங்களப்பாடகர்கள் கீத மிசைத்தார்கள். பிருதை புத்திரனான தனஞ்செயன் நக்ஷத்திரம் நிறைந்ததும், விசாலமானதும், பெரியதுமான சுரவீதி என்ற மார்க்கத்தின் வழியாய்ப் போனான். போகும்போது சாத்தியர்கள், விசுவேதேவர்கள், மருத்துக்கள், அசுவினிதேவர்கள், ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், பிராமண சந்நியாசிகள் இவர்களைப் பார்த்துக்கொண்டு போனான். அநேக இராஜ ரிஷிகள், திலீபன் முதலிய அரசர்கள் தும்புரு நாரதர்கள், ஹாஹா, ஹூஹூ என்னும் கந்தர்வர்கள் இவர்களையும் பார்த்து அவர்களெல்லாரையும் நமஸ்காரம் பண்ணிக்கொண்டு போனான். பின் நூறு அசுவமேத யாகஞ் செய்த தேவராஜனாகிய தேவேந்திரனைக் கண்டான். அதன் பின் மஹிமையுள்ள இரதத்தை விட்டு இறங்கிப், பகனை சங்கரித்த தன் பிதாவான தேவராஜனைத் தரிசித்தான். தங்கக் காம்பினையுடைய வெளளைக் குடைக் கீழ் வீற்றிருந்தான். தெய்வ மணம் பொருந்திய சாமரம் இரட்டின. விசுவாவசு முதலிய கந்தர்வர்கள் அர்ஜுனனுக்கு மங்கள வாழ்த்துக் கூறினார்கள். கவி வாணர்களும், சங்கீதத்தில் வல்லவர்களும் பாடினார்கள். பிரதான பிராமணர்கள் வேத மோதினார்கள். அர்ஜுனன் தேவராஜனை நமஸ்கரித்தான். தேவேந்திரன் தன்னுடைய உருண்டு பருத்த புயங்களினாலே அவனைத் தழுவிக்கொண்டான். பின் தேவரிஷிகள் தங்கும்படியான தன்னுடைய பரிசுத்தமான ஆசனத்தில் அவனை உட்காரச் சொன்னான். அர்ஜுனனை உச்சி மோந்து தன் மடியில் உட்காரவைத்துக்கொண்டான். ஆயிரங் கண்களையுடைய தேவேந்திரனுடைய கட்டளையால் அவனுடைய ஆசனத்தில் உட்கார்ந்தான். அப்போது அர்ஜுனன் இரண்டாவது தேவேந்திரனைப் போல விளங்கினான். இந்திரன் அர்ஜுனனுக்குத் தேறுதல் சொல்லி, விருத்திராரியானவன் அவனுடைய முகத்தை தன் கையால் தொட்டுத் தடவினான். அடிக்கடி அவனைத் தடவித் தட்டிக்கொடுத்து வச்சிர மணிந்த கைகளால் அவனுடைய புஜங்களைத் தடவி, மீண்டும் அவனைத் தேற்றத் தொடங்கினான்.

27—32. அவ் விருவரும் ஒரு ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு அமர பட்ச சதுர்த்தசி தினத்தில் ஆகாயத்தில் விளங்குகிற சந்திர சூரியர்களைப் போல அந்தச் சபையை அலங்கரித்தார்கள். சங்கீத வித்தையில் சிறந்த தும்புரு முதலிய கந்தர்வர்கள் மதுரமான கீதங்களைப் பாடினார்கள். கிரு

தாசி, மேனகை, அரம்பை, சுயம்பிரபை, ஊர்வசி, தண்டகாரி, வாருதினி, கோபாலி, கும்பயோனி, சித்திரசேனை, சித்திரலேகை, ஸஹா முதலிய யோகிகளின் மனதையும் மயக்கவல்ல அழகினையுடைய தேவஸ்திரீகள் அன்போடு நடனமாடினார்கள். சிறந்த அழகாயுள்ள இடுப்பினையுடைய அந்தப் பெண்கள் பலவிதமான அபினயங்கள் காட்டி, கடைக்கண் பார்வையெறிந்து, கண்டவர் மதிமயங்கும்படி விநோதமாக நடித்தார்கள்.

---

## 44-வது அத்தியாயம்.

### இந்திரலோக கமன பர்வத் தொடர்ச்சி.

1—11. பின், இந்திரனுடைய கருத்தை யறிந்த தேவர்களும் கந்தர்வர்களும் அர்ஜுனனுக்கு அர்க்கியம் கொடுத்தார்கள். அர்ஜுனன் தன்னுடைய கால்களையும் முகத்தையும் சுத்தம் செய்துகொண்ட பின் இந்திரனுடைய அரண்மனைக்குள் அவனை அழைத்துக்கொண்டு போனார்கள். அரண்மனையில் உபசரிக்கப்பட்டுச் சுகமாய் வசித்தான் அர்ஜுனன் பிரயோகம் உபஸம்ஹாரங்களோடு ஆயுதங்களைக் கற்கத் தொடங்கினான் இந்திரனுக்குப் பிரியமானதும், ஒருவராலும் தடுக்கப்படாததும், மின்னல் இடிகளோடு கூடினதுமான வஜ்ராயுதத்தைப் பெற்றுக்கொண்டான். குந்தி புதல்வனாகிய அர்ஜுனன் வஜ்ராயுதத்தை அடைந்த பின், தன் சகோதரர்களை நினைத்தான். இந்திரனுடைய கட்டளையால் சொர்க்கலோகத்தில் ஐந்து வருஷம் சுகமாய் வசித்தான். சரியான காலம் வந்தபோது தேவேந்திரன் அர்ஜுனனை அழைத்துச் சித்திரசேனனிடத்தில் ஆடவும் பாடவும் கற்றுக்கொள் என்று கட்டளையிட்டான். பூலோகத்தாருக்குத் தெரியாததும், தேவலோகத்தில் மாத்திரம் உள்ளதுமான தெய்வ வாத்தியங்களையும் கற்றுக்கொள். இவைகளை நீ கற்றுக்கொண்டால் அது உனக்கு உபகாரமாயிருக்கும் என்று கூறிப் புரந்தரன் சித்திரசேனனை அர்ஜுனனுக்குச் சிநேகிதனாயிருக்கும்படி செய்தான். அர்ஜுனன் சித்திரசேனனோடு சந்தோஷமாகவும் சமாதானமாகவும் வசித்தான். சித்திரசேனன் அர்ஜுனனுக்குப் பாடவும், ஆடவும், வாத்தியம் வாசிக்கவும் கற்றுக்கொடுத்தான். ஆயினும் அர்ஜுனன் மனதுக்குச் சமாதானமேயில்லை. துரியோதனன் சூதாட்டத்தில் செய்தவைகள் அவன் மனதில் நீங்காமலிருந்தது. சௌபலனாகிய சகுனியையும், துச்சாதனனைக் குறித்தும் சதா நினைத்துக்கொண்டிருக்கிறபடியால் அர்ஜுனன் மனதுக்கு ஒருபோதும் சமாதானமில்லை. பாடுவதிலும் ஆடுவதிலும் மிகுந்த மகிழ்ச்சிகொண்டிருந்தபடியால் அந்தச் சாஸ்திரத்தைக் கற்றுக்கொள்ளச் சக்தியுள்ளவனாயிருந்தான். பலவகையான நர்த்தனங்களையும், பாடல் வாத்தியங்களையும் கற்றுக்கொண்டான். தன்னுடைய சகோதரர்களையும் தாயார் குந்தியையும் நினைத்துக் கவலைப்பட்டுக்கொண்டிருந்தான்.

---

## 45-வது அத்தியாயம்.

இந்திரலோக கமன பர்வத் தொடர்ச்சி.

1—5. இப்படி யிருக்கையில் ஒரு நாள் அர்ஜுனன் கண்பார்வை ஊர்வசியின் மேல் விழுந்திருப்பதை யிந்திரன் தெரிந்துகொண்டு சித்திரசேனனைத் தனியாக அழைத்து அவனிடம் இரகசியமாகச் சொல்லுகிறான். கந்தர்வராஜனே! நீ என் கட்டளையால் ஊர்வசியினிடம் போ. அவளை அர்ஜுனனுக்காகக் காத்திருக்கும்படி சொல். நீ என்னுடைய உத்தரவினாலே எல்லாராலும் வணங்கத்தக்க சகல ஆயுதங்களிலும் அவனை வல்லவனாக்கினாய். பெண்களுக்குச் சம்பந்தமான சகல வித்தைகளையும் கூட அவனுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டும் என்று சொன்னான். சித்திரசேனன் இந்திரன் உத்தரவைக் கேட்டு அப்படியே யாகட்டும் என்றான் பின் இந்திரன் கட்டளையை நிறைவேற்றும் பொருட்டு ஊர்வசி யிடம் போனான். ஊர்வசி அவனைப் பார்த்து இன்னானென்று தெரிந்துகொண்டு, அவனை வணங்கி நல்வரவு விசாரித்து உபசரித்தாள். சித்திரசேனன் ஒரு ஆசனத்தில் உட்கார்ந்த பின் ஊர்வசியும் ஒரு அழகிய ஆசனத்தின் மேல் சுகமாய் உட்கார்ந்துகொண்டாள். பிறகு சித்திரசேனன் ஊர்வசியை நோக்கிச் சொல்லுகிறான்.

6—13. அழகான இடையினை யுடைய பெண்ணே! தேவேந்திர மஹாராஜன் உன்னிடத்துக்கு என்னை அனுப்பினார். நான் அந்தக் காரியமாக வந்தேன். மனிதர்களுக்குள் அருளினால் சிறந்தவன்; ஆசாரமுடையவன்; அழகிற் சிறந்தவன். நோன்பு நோற்றவன்; அடக்கமுள்ளவன்; பராக்கிரமம் சாமர்த்தியம் இவைகளை யுடையவன்; பெரியோர்களால் மரியாதை செய்யப்பட்டவன். மகிமை பெற்றவன்; மஹா சக்தியுள்ளவன்; யாவரையும் மன்னிக்கிறவன்; முரட்டுக் குணம் ஒன்று மில்லாதவன். நாலு வேதங்களையும், உபநிஷத்துக்களையும், புராணங்களையும் உணர்ந்தவன். குரு பக்தியுள்ளவன். எண்வகைத் தருமங்களையும் உணர்ந்திருக்கிற அறிவினை யுடையவன். வல்லமையுள்ளவன். பிறப்பினாலும் வயதினாலும் சிறந்தவன். மஹாபதியைப் போல வானுலகைத் தனிமையில் அரசாள வல்லவன். ஒருபோதும் கருவமில்லாதவன், எல்லாருக்கும் தகுந்தபடி மரியாதை புரியும் இயல்புள்ளவன். வெகு சூட்சுமமான பொருள்களையும், பெரிய பொருள்களைக் காண்பது போலத் தெளிவாய்க் கண்டறியத் தக்கவன். இன்பமாய்ப் பேசுகிறவன். சிநேகித ரிடத்தில் பிரியமுள்ளவன். அன்னபான நியமமுள்ளவன். சத்தியவந்தன். எல்லாராலும் வணங்கத் தக்கவன். சமர்த்தன். அழகுள்ளவன். கருவமற்றவன். தன்னிடத்தில் அன்பா யிருப்பவர்க ளிடத்தில் அதிக நேசம் பாராட்டுகிறவன். எல்லாருக்கும் பிரியத்தைச் செய்கிறவன். எல்லாரிடத்திலும் பிரியமுள்ளவன். உறுதியான வாக்கு தத்தத்தை யுடையவன். எல்லாக் குணங்களிலும் மஹேந்திரனுக்கும் வருணனுக்கும் சமானமா யுள்ளவன். இப்படிப்பட்ட அர்ஜுனனை நீ யறிந்திருப்பாய். அந்த அர்ஜுனனுக்குச் சொர்க்க இன்பங்களையும்

புசிப்பிக்க வேண்டும். இந்திரனுடைய ஆக்ஞையால் இன்றைய தினம் அர்ஜுனன் உமது திருவடியை அடையக் கடவன். இந்தத் தயவைச் செய்ய வேண்டும் என்றான்.

14—16. சித்திரசேனன் இப்படிச் சொன்னதைக் கேட்ட குற்றமற்றவளான ஊர்வசி, அவன் பேச்சை அங்கீகாரம் பண்ணிக்கொண்டாள். பிறகு மகிழ்ச்சி யடைந்து, புன்னகை விளங்கச் சித்திரசேனனை நோக்கிச் சொல்லுகிறாள். மனிதர்களிடம் சிறந்திருக்க வேண்டிய குணங்களை யுடைய மனிதர்கள் எவரானாலும் அவர்களிடம் நான் தயவா யிருப்பேன். அப்படி யிருக்கையில் இந்திரனுடைய கட்டளையால் என் அர்ஜுனனை விரும்பக் கூடாது? உன்னிடத்தில் எனக்கு உண்டாயிருக்கிற சிநேகத்தினாலும், அர்ஜுனனுடைய பல குணங்களாலும் நான் அவனிடம் அன்பு வைத்திருக்கிறேன். நீர் என்னை எவ்விடத்திற்குப் போகச் சொல்லுகிறீரோ அவ்விடத்துக்கு நான் போகிறேன். நீர் போகலாம் என்றாள்.

---

## 46-வது அத்தியாயம்.

### இந்திரலோக கமன பர்வத் தொடர்ச்சி.

1—17. தன் எண்ணம் நிறைவேறப் பெற்ற கந்தர்வனை அனுப்பிவிட்ட பின், புன்னகையினையுடைய ஊர்வசி, அர்ஜுனனை அடைகிறதற்கு அதிக விருப்பம் கொண்டாள். நீராடினாள். அதன் பிறகு விலை உயர்ந்த ஆபரணங்களினால் அழகாய் அலங்கரித்துக்கொண்டாள். இன்பமான வாசனையுள்ள பூமாலைகளைச் சூடிக்கொண்டாள். மன்மதபாணங்களால் நெஞ்சம் துளைக்கப்பட்டாள். தனஞ்செயனுடைய அழகினாலும் கருணையாலும் அவனிடம் மோகம் கொண்டாள். அதனால் வேறொரு பொருளினிடத்திலும் ஆசை வைக்கவே யில்லை. அவள் மனதில் ஆசை கொழுந்துவிட்டெரிந்தது. பெரிய மஞ்சத்தின் மேல் அவனோடு விளையாடிக்கொண்டிருக்கிறது போலப் பாவனை செய்துகொண்டிருந்தாள். சந்தியா காலமானதும், சந்திரன் உதயமாகிற சமயத்தில், அழகிய இடையினையுடைய அந்த ஊர்வசி புறப்பட்டுப் பார்த்தன் இருக்கும் இடத்தை நோக்கிப் போனாள். மகா அழகோடு போனாள். சுருண்டு, மெதுவாய் நீண்டிருக்கிற கூந்தலில் பூந்தாரைகளை அணிந்துகொண்டு சென்றாள். மிகுந்த அழகும், கருணையும், இன்பமாக அசைந்துகொண்டிருக்கிற புருவங்களும், மெதுவான பேச்சும், சந்திரனைப் போன்ற முகமும் விளங்கச் சென்றாள். சந்திரனுக்கு வருத்த முண்டாக்குகிறவள் போல நடந்து போனாள். சிறந்த தைலமும், சந்தனக் கலவையும் பூசிக்கொண்டு, அழகிய கச்சணிந்து, தங்கச் சங்கிலியை மேலே தரித்துக்கொண்டு நடந்துபோனாள். அழகாயும் வட்டமாயு மிருக்கிறதும், ஒப்பில்லாததும், மன்மதனுக் கிருப்பிடமானதுமான, அவளது இடை அழகும், தேவரிஷிகளுடைய மனதைக் கலக்கு-

சிறந்தமான பேரழகினால் விளங்கினான். அவனுடைய பாதமானது அழகிய பரடும், சமமான உள்ளங்காலும், தாம்பிரம் போன்ற நிறமுள்ள விரல்களும், ஆமை முதுகுப் போன்ற புறவடியுமாக, நூபுரம் கிண்கிணி முதலிய மாலைகள் புனைந்து வெகு அழகாய் விளங்கிற்று. அவன் சிறிது மதுபானம் பண்ணியிருந்தான். அதனால் களிப்படைந்து, ஆசை அதிகரிக்க மனம் களிந்து மிக்க அழகாய் விளங்கினாள். சித்தர், சாரணர்கள், கந்தர்வர் முதலியோர் அவளை ஆச்சரியமாய்ப் பார்த்து இவளே அழகிற் சிறந்தவளென்று கருதினார்கள். இப்படியாக ஊர்வசி புறப்பட்டு வெகு ஒய்யாரமாக நடந்து போனான். ஊர்வசி இடுப்புக்கு மேல் நல்ல கெசவு வேலையுள்ளதும், புகை போன்ற நிறத்தை யுடையதுமான வஸ்திர முடுத்தி யிருந்தாள். வெண் மேகத்துக்கு இடையில் சந்திரன் போகிறது போல நடந்தாள். வாயு வேகத்தையும், மன வேகத்தையும் உடைய ஊர்வசியானவள் ஒரு நிமிஷத்துக்குள் அர்ஜுனன் இருக்கிற இடத்துக்கு வந்து சேர்ந்தாள் அர்ஜுனன் இருக்கிற வீட்டுக்கு வந்த உடனே வாசற் காப்போன் மூலமாக அர்ஜுனனுக்குச் சமாசாரம் தெரியப் படுத்தினாள்.

18—21. ஜனமேஜய மஹாராஜனே! பிரகாசமும் மகிழ்ச்சி தரத்தக்கதுமான அர்ஜுனனுடைய மாளிகையினுள்ளே புகுந்தாள். இராக் காலத்தில் அவள் வந்ததைப் பார்த்து அர்ஜுனனுக்கு நடுக்க முண்டாயிற்று. அவளை யெதிர்கொண் டழைக்கப்போனான். ஊர்வசியைப் பார்த்ததும் அர்ஜுனன் மரியாதையாகத் தன் கண்களை சற்று மூடிக்கொண்டான் பிறகு அவளை வணங்கிப் பெரியவர்களுக்குச் செய்யத் தக்க மரியாதையைச் செய்தான். பின்பு அவளைப் பார்த்துச் சொல்லுகிறான். மகிமையுள்ள அப்ஸரஸ்களுக்குள்ளே மேன்மையானவளே! நான் உன்னைத் தலை குனிந்து வணங்குகிறேன். ஓ தெய்வமாதே! உன்னுடைய கட்டளை யாது? அதைச் செய்ய வேலைக்காரனைப் போலக் காத்துக்கொண் டிருக்கிறேன் என்றான். இப்படிச சொல்லிய அர்ஜுனனுடைய வார்த்தைகளைக் கேட்டு ஊர்வசி மதி மயங்கினாள். பிறகு சித்திரசேனன் சொன்னவைகளை யெல்லாம் அவனுக்குச் சொல்லுகிறாள்.

22—35. புருஷோத்தமனே! சித்திரசேனன் எனக்குச் சொன்னதையும், நான் இங்கே வந்ததற்குக் காரணத்தையும் சொல்லுகிறேன் கேளு. நீ இங்கே வந்திருக்கிறதற்காக மஹேந்திரன் ஒரு பெரிய சபை கூட்டினார். அதில் ஒரு பெரிய உற்சவம் கொண்டாடப்பட்டது. அர்ஜுனா! அதில் ருத்திரர்களும் ஆதித்தியர்களும் வந்திருந்தார்கள், அநேக ரிஷிகளும், இராஜ ரிஷிகளும், சித்தர்களும், சாரணர்களும், யட்சர்களும், பெருமையுள்ள நாகர்களும் வந்திருந்தார்கள். அக்கினி போலப் பிரகாசிக்கிற தேவர்கள் எல்லாரும் கூடினார்கள். அவர்கள் சூரியனைப் போலவும் சந்திரனைப் போலவும் காணப்பட்டார்கள். தங்கள் தங்களுக் கேற்ற ஆசனத்தில் உட்கார்ந்தார்கள். இந்திர குமாரனே! விசாலமான கண்களை யுடையவனே! அப்போது கந்தர்வர்கள் வீணையை வைத்துக்கொண்டு பாடினார்கள். அந்தக் கீதத்தைக் கேட்டதும்

அப்ஸரஸ்களில் சிறந்தவர்கள் நர்த்தனம் செய்தார்கள். அர்ஜுனா! அப்போது நீ யென்னை ஒரு தரம் உற்றுப் பார்த்தாய். பிறகு அந்தச் சபை கலைந்தது. உன் பிதாவின் கட்டளையால் தேவர்கள் எல்லாரும் தத்தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். அர்ஜுனா! அப்ஸரஸ்களும், மற்றவர்களும் கூட உன் தந்தையாகிய இந்திரன் கட்டளையால் தங்கள் மாளிகை போய்ச் சேர்ந்தார்கள். பின் இந்திரனுடைய கட்டளையால் சித்திரசேனன் என்கிற கந்தர்வ வேந்தன் என் மாளிகைக்கு வந்தான். என்னிடத்தில் பின் வருகிறபடி சொன்னான். அழகிய பெண்ணே! தேவராஜன் என்னை உன்னிடத்திற்கு அனுப்பினார். நீ மஹேந்திரன் சொல்லுகிறபடியும் நான் சொல்லுகிறபடியும் செய். அழகிய இடையை யுடையவளே! இந்திரனுக்குச் சரியான யுத்தவீரனை அர்ஜுனனை நீ அடை, அர்ஜுனன் தவச் சிரேஷ்டன். ஆகையால் நீ அவனைச் சேர் என்று சொன்னான். பாபமற்றவனே! சித்திரசேனனும் உன் பிதாவும் கொடுத்த கட்டளைப்படி நான் உன்னிடத்திற்கு வந்தேன். வீரனே! உன்னுடைய தர்ம குணத்தினால் என் மனம் உன்னிடத்தில் சென்றுவிட்டது. நான் மன்மதன் அம்புகளால் நொந்துபோனேன். இதுதான் என் விருப்பம். நான் உன் மேல் எப்போதும் காதலுள்ளவளாக இருப்பேன் என்று சொன்னாள்.

36—41. அவள் இப்படிச் சொன்னதைக் கேட்டு அர்ஜுனன் வெட்கம் அடைந்தான். தன் காதுகளைக் கைகளால் பொத்திக்கொண்டு சொல்லுகிறான். மேன்மை யுள்ளவளே! நீ சொன்ன வார்த்தைகளை நான் கேட்பது தகுதி யில்லை. நீ யென்னுடைய பெரியோரின் மனைவி யென்று மதித்திருக்கிறேன், மகிமையுள்ள குந்தி யெப்படியோ அப்படித்தான் இந்திராணியும் எனக்கு வணங்கத் தக்கவள். நீயும் அவர்களைப் போல நான் வணங்கத் தக்கவள். இதில் சந்தேகமில்லை. அழகிய பன்னகை யுடையவளே! நான் உன்னை உற்றுப் பார்த்தது நிசம்தான். அதற்கு ஒரு காரணம் உண்டு. நான் அதை உனக்கு உண்மையாகச் சொல்லுகிறேன் கேளு. நான் சந்தோஷமாய்ப் பார்த்தது நீ பூருவின் மனைவியின் மனைவியானது பற்றித்தான். நீ பூருவம்சத்திற்குத் தாயா யிருக்கிறாய் என்பது கொண்டு பார்த்தேன். அப்ஸரஸ்களில் சிறந்தவளே! நீ அதை வேறு வகையாய் நினைக்கக் கூடாது. நீ யென்னுடைய பெரியோர்கள் எல்லாருக்கும் பெரியவளா யிருக்கிறாய். என் வம்சத்திற்கு மூலமாய் இருக்கிறாய் என்று சொன்னான்.

42—47. இதைக் கேட்ட ஊர்வசி சொல்லுகிறாள். இந்திர குமாரனே! வீரனே! அப்ஸரஸ்களாகிய நாங்கள் கட்டுப்பாட்டுக் குட்பட்டவர்க ளல்ல. எங்களுடைய இஷ்டம் போல நடப்போம். ஆகையினால் நீ யென்னை உன்னுடைய பெரியோர்களில் வைத்து நினையாதே. பூரு வம்சத்தில் பிறந்த புத்திரர்களும் பௌத்திரர்களும் தபோ பலத்தால் இவ் வுலகத்துக்கு வந்த பின் எங்களுடன் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். அப்படிச் செய்வதனால் அவர்களைப் பாபம் அணுகுவதில்லை. ஆகையால் நீ என்னிடத்தில் தயவு

செய். நீ என் விருப்பத்தை நிறைவேற்றுமல் அனுப்பக் கூடாது. நான் உன் மோகத்தில் முழுகிப் போனேன். நான் உன்னை வணங்குகிறேன். என்னை அங்கீகாரம் செய்துகொள்ளு என்று சொன்னாள். அர்ஜுனன் அதைக் கேட்டு, அழகியவளே! அழகான ரூபத்தை யுடையவளே! நான் உண்மையாகச் சொல்லுகிறதைக் கேளு. நாலு திக்குகளிலுமுள்ள தேவர்களும் கேட்கட்டும். குற்ற மற்றவளே! நீ குந்தியையும் மாத்திரியையும் போல நான் மரியாதை செய்யத் தக்கவள். இந்திராணியைப் போல வணங்கத் தக்கவள். நீ என் வம்சத்துக்குத் தாயார் என்று நான் நினைத்தபடியால் நீ என்னால் வணங்கப்படத் தக்கவள். அழகானவளே! நான் உன்னைத் தலை குனிந்து வணங்குகிறேன். உன் பாதங்களில் நமஸ்கரிக்கிறேன். நீ திரும்பிப் போ. என் தாயாரைப் போல நீயும் என்னால் வணங்கத் தக்கவள். என்னை உன்னுடைய புத்திரனைப் போலக் காப்பாற்று என்று சொன்னான்.

48—51. இப்படி அர்ஜுனன் சொன்னதைக் கேட்ட ஊர்வசிக்குக் கோபம் உண்டாய்விட்டது. கோபத்தினாலே தன்னை மறந்துவிட்டாள். கோபத்தால் நடுங்கினாள். உடனே தன் புருவத்தை நெறித்துக்கொண்டு அர்ஜுனனை சபித்தாள். உன் பிதாவின் கட்டளையால் உன் மேல் ஆசை கொண்டு வந்த ஒரு ஸ்திரீயை நீ அவமானம் செய்தாய் தானே வலிய வந்த என்னை அலட்சியம் பண்ணினாய். மன்மத பாணங்களால் துளைக்கப்பட்ட ஒரு ஸ்திரீயை அவமானம் பண்ணலாகாது. ஆகையால் பார்த்தா! நீ பெண்கள் கூட்டத்தில் இருக்கக் கடவாய். உன் ஆண்மையை இழந்து, பெருமையையு மிழந்து நடன மாடுகிற பெண்ணாகப் போகக் கடவாய். இப்படிச் சபித்துவிட்டுத் தன் வாயை மூடிக்கொண்டாள். பெரு மூச்சு விட்டாள். பின்பு விரைவாகத் தன் மாளிகையை நோக்கிப் போய்விட்டாள்.

52—63. பகைவரை வெல்லுகிற அர்ஜுனன் உடனே சித்திரசேனனிடத்துக்குப் போனான். அவனிடம் போய், இராத்திரி நடந்த எல்லாவற்றையும் அவனுக்குச் சொன்னான். ஊர்வசிக்கும் தனக்கும் நடந்ததையும் சொன்னான். விசேஷமாய்த் தனக்கு நேரிட்ட சாபத்தைப் பற்றி அடிக்கடி சொன்னான். சித்திரசேனன் இந்திரனிடத்துக்குப் போய் நடந்த எல்லாவற்றையும் அவனுக்குச் சொன்னான். இந்திரன் தன் புத்திரனான அர்ஜுனனைத் தனிமையாக அழைத்து, மதுர வசனங்களால் அவனைத் தேற்றிப், புன் சிரிப்போடு சொல்லுகிறான். மனிதசிரேஷ்டனே! குழந்தாய்! உன்னைப் புத்திரனாக அடைந்த குந்தி இன்றுதான் உனக்குச் சரியான தாயானாள். வீரனே! மரியாதை யுள்ளவனே! உன் பொறுமையால் நீ ரிஷிகளையும் ஜயித்துவிட்டாய். ஊர்வசியின் சாபம் உனக்கு நன்மையாகவே யிருக்கும். புத்திரனே! அந்தச் சாபம் மிகவும் உபயோக முள்ளதா யிருக்கும். குற்ற மற்ற வீரனே! உன்னுடைய அக்ஞாத வாசமாகிய பதின்மூன்றும் வருஷத்தை ஒருவரும் அறியாமல் கழிக்க வேண்டியவனா யிருக்கிறாய். அப்போது இந்தச் சாபம் உனக்கு

மிகவும் உபகாரமா யிருக்கும். அந்த அக்ஞாதவாச மாகிற ஒரு வருஷகால மும் பேடியா யிருந்து அதைக் கழித்து விடு. அதன் பின் உனக்குப் புருஷத் துவம் வந்துவிடும் என்று இப்படிச் சொல்லிய இந்திரன் பேச்சைக் கேட்டு அர்ஜுனன் மனம் மகிழ்ந்து அந்தச் சாபத்தைப் பற்றிக் கவலைப்படாம லிருந் தான். பாண்டு புத்திரனான தனஞ்செயன் தன் மாளிகையில் சித்திரசேன னுடன் களித்திருந்தான். தனஞ்செயனுடைய இந்தச் சரித்திரத்தைக் கேட் டவர்கள் மோகத்தை அடைய மாட்டார்கள். பரிசுத்தனும் நல்லொழுக்க முள்ளவனுமான பல்குணனுடைய திவ்ய சரித்திரத்தைக் கேட்டவர்கள் கரு வத்தினின்றும் விடுபட்டுச், சினமற்றவர்களாய்ச் சொர்க்கத்தை அடைவார் கள். அங்கே களித்து விளையாடிக் கொண்டிருப்பார்கள்.

---

## 47-வது அத்தியாயம்.

### இந்திரலோககமன பர்வத் தொடர்ச்சி.

1—6. மஹா பெரியவரான ரோமச மஹா ரிஷியானவர் தமது இஷ்டப் படி சஞ்சரித்துக்கொண் டிருக்கையில் ஒரு நாள் இந்திரனைப் பார்க்க விரும் பிச் சொர்க்கத்துக்கு வந்தார். அந்த மஹாரிஷி இந்திரனைக் கண்டு அவ னுக்கு வணங்கினார். பாண்டு புத்திரனான அர்ஜுனன் இந்திரனோடு அர்த் தாசனத்தில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார். ஒரு க்ஷத்திரியனாகிய அர்ஜு னன் இந்திரனுடன் அர்த்தாசனத்தில் எவ்வாறு உட்கார்ந்தா னென்று கருதி னார். அங்கே யிருந்த மஹாரிஷிகளால் மரியாதை செய்யப்பட்ட பின், இந் திரனுடைய கட்டளையால் ஒரு சிறந்த ஆசனத்தில் உட்கார்ந்தார். அர்ஜு னன் இந்திராசனத்தி லிருப்பதைப் பார்த்து, ரோமசர் எண்ணினதை யிந்தி ரன் அறிந்து, புன் சிரிப்புடன் ரோமசருக்குச் சொல்லுகிறான்.

7—31. பிரமரிஷியே! நீர் மனதில் யோசித்துக்கொண் டிருப்பதைப் பற்றிச் சொல்லுகிறேன். இந்த அர்ஜுனன் அநித்தியமானவனல்ல. மனித னாகப் பிறந்திருந்தாலும் நித்தியமானவன். மஹாரிஷியே இந்த அர்ஜுனன் எனக்குப் புத்திரன், எனக்குக் குந்தியினிடமாகப் பிறந்தவன். அஸ்திர வித்தைகளைப் பெறுவதற்காக இங்கே வந்திருக்கிறான். இவன் பழமையான ரிஷியென்று அறிந்துகொள்ளும் அந்தணரே! கேளும். இவன் இன்னா னென்றும் என்னத்திற்காக இங்கே வந்திருக்கிறா னென்றும் உமக்குச் சொ ல்லுகிறேன். பூர்வகாலத்தவரான நர நாராயண ரென்னும் இரண்டு ரிஷிகளை அறிந்திருக்கலாம். அவ் விருவருந்தான் கிருஷ்ணனும் அர்ஜுனனுமாகப் பூமியில் அவதரித்திருக்கிறார்கள். நர நாராயண ரென்னும் இரண்டு ரிஷிக ளும் மூவுலகங்களிலும் பிரசித்தி பெற்றவர்கள். இருவரும் ஒரு பெரிய காரி யத்தை நிறைவேற்றுகிறதற்காகப் பூமியில் அவதரித்திருக்கிறார்கள். தர்ம பரிபாலனத்தின் பொருட்டாகவே பூமியில் பிறந்தார்கள். ரிஷிகளும் தேவர்

களும் அடைவதற் கரிய தவத்தை யுடையவர்கள் கங்கையின் உற்பத்தியி
லுள்ள பதரிகாசிரமந்தான் விஷ்ணு ஜிஷ்ணு என்கிற அவ் விருவருக்கும் இருப்
பிடம். மஹாரிஷியே! அவ் விருவரும் என் வேண்டுகோளால் பூமியில் அவத
ரித்திருக்கிறார்கள். அவ்விருவரும பூபாரம் தீர்க்கப் பிறந்தவர்கள். அது
வும் தவிர வேறு சில அசுரர்களு மிருக்கிறார்கள். அவர்களுக்கு நிவாதக
வசர் என்று பேர். அவர்கள் தாங்கள் பெற்ற வரங்களால் இறுமாப்படை
ந்து எங்களைத் துன்பப் படுத்துகிறார்கள். தங்களுடைய வல்லமையால் தேவ
லோகத்தை நாசம்பண்ணக் கருதுகிறார்கள். அந்த வரங்களைப் பெற்ற பின்
அவர்கள் தேவர்களை மதிப்பதே யில்லை. வல்லமையுள்ளவரும் பயங்கரமான
வர்களுமான அந்தத் தனு புத்திரர்கள் எவ்விடத்திலும் வசிக்கிறார்கள். தே
வர்கள் எல்லாரையும் யுத்தத்தில் ஜயித்தார்கள். பிராமணோத்தமரே! மது
வைச் சங்கரித்த விஷ்ணுவானவர் கபிலரென்று பூமியில் வழங்கப் படுகிறவர்.
சாகரபுத்திரர்கள் கர்ஜித்துக்கொண்டு அவரை எதிர்த்து வந்த போது, அவர்
ஒருவராகவே அவர்களைச் சங்கரித்தார் அவர் அவதாரமாகிய கிருஷ்ணனும்
இந்தப் பார்த்தனும் சேர்ந்து யுத்தத்தில் எங்களுக்குப் பேருதவி செய்கிறவர்
கள். இதில் சந்தேகமில்லை. பெரிய ஏரியில் சர்ப்பங்களைப் போலக் கிருஷ்
ணன் அசுரர்களைக் கண்ட மாத்திரத்தில் அவர்களைச் சங்கரிப்பான். நிவா
தகவசர்களையும் அவர்கள் பரிவாரத்தையும் நிச்சயமாகவே சங்கரிப்பார்.
மதுகைடபாரியான கிருஷ்ணனை இந்தக் காரியத்துக்காகப் பிரார்த்திக்க வே
ண்டியதில்லை. இந்த அர்ஜுனனும் அவர்கள் எல்லாரோடும் சண்டை செய்ய
வல்லவன். இவன் நிவாதகவசர் முதலிய அசுரர்களைச் சங்கரித்த பின் பூலோ
கத்துக்குப் போவான். யுதிஷ்டிரர் காமியக வனத்தி லிருக்கிறார். நீர் என்
னுடைய பிரார்த்தனையால் பூலோகத்துக்குப் போக வேண்டும். என் நிமித்த
மாக நீர் யுதிஷ்டிரரைப் பார்த்து அர்ஜுனனைப் பற்றிக் கவலைப்பட வேண்
டாம். அவன் சகல ஆயுதங்களையுந் தெரிந்துகொண்டு சீக்கிரம் வந்து சேரு
வான். ஏனென்றால் திவ்யாஸ்திர வல்லமை யில்லாமலும், தேவாயுதங்களில்
தேர்ச்சியடையாமலும் அவன் பீஷ்மரை வெல்வது கூடாது. துரோணர்
முதலியவர்களை வெல்வதும் முடியாத காரியம் என்று சொல்லும். நல்ல
சித்தமும். வல்லமையு முள்ள அர்ஜுனன், அஸ்திராப்பியாசம் செய்வதோடு,
தேவர்களுக் குரிய நடன முதலியவற்றையும் கற்றுக்கொள்ளுகிறான். சங்கீ
தம் வாத்தியம் முதலியவும் பயில்கிறான். பிராமணோத்தமரே! நீர் உம்முடைய
சகோதரர்களோடு அநேக க்ஷேத்திரங்களையும் தேவாலயங்களையும் தெரி
சிக்க வேண்டும். அநேக பரிசுத்த தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ண வேண்டும்.
உமது பாபங்களை ஒழித்துச் சுத்தாத்மா ஆக வேண்டும். அப்போது உமது
மனக் களங்கமும் கவலையு மொழியும். அதன் பிறகுதான் நீர் இராஜ்யத்தைப்
பெற்றுச் சந்தோஷத்தோடு அரசு புரியக் கூடும் என்று யுதிஷ்டிரருக்குச் சொ
ல்லி, அவரைத் தவத்திற் சிறந்தவராகச் செய்து, அவருடன் கூட உலகத்தி
லிருந்து க்ஷேத்திர யாத்திரை செய்வித்து அவரைக் காப்பாற்றும். மலைப் பிர

தேசங்களில் பயங்கரமான அரக்கர்கள் அநேகர் வசிக்கிறார்கள். கரடு முரடான பாதைகளிலும் அரக்கர்கள் வசிப்பார்கள். நீர் யுதிஷ்டிரருக்கு அந்த அரக்கர் பயம் உண்டாகாமல் காப்பாற்றிக்கொண்டிரும் என்று கூறினான்.

32— . இப்படி மஹேந்திரன் சொன்னதைக் கேட்டு அர்ஜுனனும் ரோமசரை நோக்கி மரியாதையோடு சொல்லுகிறான். மஹானுபாவரே! பாண்டு புத்திரரான யுதிஷ்டிரரைக் காப்பாற்றும், அந்தணோத்தமரே! மஹாரிஷீசுவரரே! நீர் யுதிஷ்டிரரைக் காப்பாற்றி, அநேக க்ஷேத்திரங்களைத் தரிசிப்பித்து, பிராமணர்களுக்குத் தானம் செய்யச் சொல்லும் என்று பிரார்த்தித்தான். ரோமசர் அப்படியே யாகட்டும் என்று சொல்லிப் பூமியை நோக்கிச் சென்றார் காமியக வனத்துக்குப் போக உத்தேசங் கொண்டார். அவ்வாறே காமியக வனம் போய் ரிஷிகளும் சகோதரர்களும் சூழ இருந்த தர்மராஜாவைக் கண்டார்.

---

## 48-வது அத்தியாயம்.

### இந்திரலோக கமன பர்வத் தொடர்ச்சி.

1—2. ஜனமேஜயர், வேதியரே! அளவில்லாத ஆற்றலுள்ள அர்ஜுனனுடைய செய்கைகளெல்லாம் நிச்சயமாகவே அற்புதமானவை என்பதில் சந்தேகமில்லை. இச் செய்கைகளை யெல்லாம் கேட்ட திருதராஷ்டிரன் என்ன சொன்னான். அதைச் சொல்ல வேண்டு மென்று கேட்டார். வைசம்பாயனர் சொல்லுகிறார். துவைபாயன மஹாரிஷி அஸ்தினாபுரம் போனார். அவர் அர்ஜுனன் இந்திரலோகம் போயிருக்கிறதைத் திருதராஷ்டிரனுக்குச் சொன்னார். அது கேட்ட திருதராஷ்டிரன் மனங்கலங்கிச் சஞ்சயனிடம் பின் வருகிறபடி சொன்னான்.

3—14. சூதரே! நாம் அர்ஜுனனுடைய செய்கைகளை முற்றும் கேட்டோமே. இதைப் பற்றி நிச்சயமாய் உனக்குத் தெரியுமா? இழிவான செய்கைகளைச் செய்வது பைத்தியக்காரத் தனமேயாம். துஷ்ட சித்தமும், பாபச் செய்கைகளை யுடையவர்களுமான என்னுடைய புத்திரர்கள் உலகத்தை அழித்துவிடுவார்கள். மஹாத்மாவான யுதிஷ்டிரன் சத்திய வாக்குடையவராகையாலும் அர்ஜுனனைத் துணையாக அடைந்திருப்பதாலும் நிச்சயமாகவே மூன்று உலகங்களையும் ஜயிப்பான். அர்ஜுனன் யுத்தகளத்தில் வந்து காண்டீவத்தை வளைத்துக் கூர்மையான அம்புகளை மழை போலச் சொரியும் போது, அவனுக்கு எதிரில் நின்று தளராமலும், மரணம் அடையாமலும் போர் புரியும் வீரன் எவனாவது இருக்கிறானா? துஷ்ட சித்தமுள்ள என் குமாரர்கள் ஜயிக்கப்படாத பராக்கிரமசாலிகளான பாண்டவர்களோடு யுத்தம் செய்தால் நிச்சயமாகவே அழிந்துபோவார்கள். நான் இரவும் பகலும் யோசு

சித்துப் பார்த்தும் காண்டீப வீரனுகிய அர்ஜுனனை யெதிர்த்துப் போர் புரி யத் தக்கவர்கள் நம்மில் ஒருவருமில்லை. துரோணர், கர்ணன், பீஷ்மர் முத லியவர்களும் அவனை யெதிர்த்துச் சென்றாலும் கூட இந்த உலகத்துக்குப் பிரமாதம் நேரிடும். அப்போது கூட நாம் ஜயத்தை யெதிர்பார்க்க முடியாது. கர்ணன் அன்புள்ளவனு யிருந்தாலும் மறதியுள்ளவன். குருவாகிய துரோணர் கிழவரா யிருக்கிறார். அர்ஜுனனுக்கும் அவர் குரு. ஆனல் அர்ஜுனன், கடுங்கோபமுள்ளவன்; பலவான்; மஹா சக்தியுள்ளவன். இறுமாந் திருப்ப வன். அந்த வீரர்கள் ஒருபோதும் ஜயிக்கப்படாதவர்கள். எல்லாரும் ஆயு தத்தில் தேர்ந்தவர்கள்; மகிமையுள்ளவர்கள்; இவர்களுக்குள் பெரும் போர் நடக்கும். தோல்வியினுலே இந்த உலகம் முழுவதும் ஆளக் கிடைப்பதானு லும் விரும்ப மாட்டார்கள். அர்ஜுனன் பீஷ்மர் இவ் விருவரில் ஒருவர் செத் தால்தான் சமாதானம் உண்டாகும். அர்ஜுனனைக் கொல்லச் சாமார்த்திய முள்ளவரோ நீடித்திருக்க மாட்டான். அர்ஜுனனுக்குத் தோல்வி யுண்டாக் கக் கூடியவனும் நிலைத்திருக்க மாட்டான். எப்படி மனதுக்குச் சமாதானம் உண்டாகும்? தேவராஜனுக்குச் சமானமாகிய அந்த வீரனை அர்ஜுனன் காண்டாவனத்தை யெரித்த போது அக்கினிதேவன் அவனுக்கு அனுக்கிரகம் செய்தார். பெருமையுள்ள இராஜசூயம் செய்த போது அர்ஜுனன் பூமியில் உள்ள சகல ராஜாக்களையும் வென்றான்.

15—18. சஞ்சயா! குழந்தாய்! மலைச் சிகரத்தில் விழுகிற பேரிடியானது ஒரு பக்கத்தை யெரிக்காமல் விட்டுவிட்டாலும் அர்ஜுனனால் பிரயோகம் செய் யப்படுகிற பாணம் ஒருவரையும் தப்ப விடாது. சூரிய கிரணங்கள் உலகத்தி லுள்ள சராசர வர்க்கங்களை வாட்டுகிறது போல, அர்ஜுனனால் விடப்படும் பாணங்கள் என் குமாரர்களை தகித்துவிடும். பாரதர்களுடைய சேனைகள் அர்ஜுனனுடைய தேர்ச் சக்கர தொனியைக் கேட்ட மாத்திரத்தில் பயந்து எலா பக்கத்தும் சிதறி போயிருக்கு மென்று எனக்குத் தோன்றுகிறது. நம் எல்லாரையும் சங்கரிக்கும் பொருட்டே பிரமதேவர் அர்ஜுனனைப் படைத் திருக்கிறார். பாணங்களைக் கூட்டம் கூட்டமாக வாரி யிறைத்துக்கொண்டு அர்ஜுனன் போர்க் களத்தில் வந்து நின்றால் அவனை வெல்பவர் யாரிருக்கி றார்கள்.

---

## 49-வது அத்தியாயம்.

### இந்திரலோக கமன பர்வத் தொடர்ச்சி.

1—18. இப்படிச் சொன்ன திருதராஷ்டிரனுக்குச் சஞ்சயன் மறுமொழி கூறுகிறான். மஹாராஜனே! நீர் துரியோதனனைப் பற்றிச் சொன்னவை யெல்லாம் உண்மையே. அரசனே! நீர் சொன்னதில் ஒன்றாவது பிசகு

இல்லை. பாண்டவர்களெல்லாரும், துரியோதனன் தங்களுடைய தர்ம பத்தினியான கிருஷ்ணையைச் சபைக்கு அழைத்து வந்ததைப் பற்றிக் கோபத்தால் எரிந்துகொண்டிருக்கிறார்கள். கர்ணனும் துச்சாதனனும் சொன்ன கொடுஞ் சொற்களால் பாண்டவர்கள் மிகுதியும் கோபங்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஒருபோதும் அதை மன்னிக்க மாட்டார்கள் என்று நான் நிச்சயமாய் நம்புகிறேன். அர்ஜுனன் தன் வில்லை யெடுத்துக்கொண்டு தேவதேவனை சங்கரனை யெதிர்த்துப் போர் புரிந்தபோது அவரை மகிழச் செய்தானென்று நான் கேள்விப்படுகிறேன். அர்ஜுனனுடைய சாமர்த்தியத்தைப் பரிக்ஷித்து அறியும் பொருட்டுப், பரமசிவனைவர் கிராதனாக வந்து வழக்கிட்டு அவனுடன் போர் புரிந்தார். அதன் பின்பு லோக பாலகர்கள் அர்ஜுனனுக்குப் பிரத்தியட்சமாய் வந்து, தங்கள் தங்கள் பேரால் விளங்கும் தெய்வாயுதங்களைக் கொடுத்தார்கள். தேவர்களை அவர்களுடைய சுயரூபத்துடன் பார்த்து மகிழ்ந்தவர்கள் அர்ஜுனனைத் தவிர இந்த உலகத்தில் யார் இருக்கிறார்கள்? அஷ்டமூர்த்தியான மஹேசுவரனாலும் வெல்லப்படாத அந்த வீரனை எவர்தாம் ஜயிக்க வல்லவர்கள்? உமது புத்திரர்கள் திரௌபதியைச் சபையில் இழுத்துக் கொண்டு வந்ததனால் பாண்டவர்களைக் கோபமூட்டினார்கள். அதனால் உமது குமாரர்களுக்கு இந்தப் பயங்கரம் சேர்ந்திருக்கிறது. வம்சநாசமாகும் பெரிய துயரம் சம்பவித்திருக்கிறது. துரியோதனன் தனது இரண்டு துடைகளையும் திரௌபதிக்குக் காட்டிப் பரிகாசம் பண்ணினபோது பீமசேனன் உதட்டைக் கடித்துக்கொண்டு இந்த வசனங்களைச் சொன்னான். அடா துஷ்டா! அடா பாபீ! நீ பெரிய சூதன். பதின் மூன்றும் வருஷத்திறுதியில் பயங்கரமான என்னுடைய கதையால் உன்னுடைய துடைகளைப் பிளக்கிறேனென்று சொன்னான். பாண்டவர்கள் எல்லாரும் பகைவரைக் கொல்லுகிறவர்கள். அளவிடப்படாத சக்தியுள்ளவர்கள். எல்லாரும் எல்லா ஆயுதங்களிலும் வல்லவர்கள். அவர்கள் எல்லாரும் தேவர்களாலும் ஜயிக்கப்படாதவர்கள். தங்களுடைய பத்தினியை அவமானப்படுத்தினதற்காகவே பாண்டவர்கள் கோபம் அடைந்திருக்கிறார்கள். ஆகையால் உமது புத்திரர்களை அவர்கள் நாசம் செய்து விடுவார்கள் என்றான். திருதராஷ்டிரன் சொல்லுகிறான்.

14—23. தேர்ப்பாகனே! கர்ணன் துஷ்டவசனங்களைப் பேசினதினாலே யெவ்வளவு தீமையை விளைவித்து விட்டான்? திரௌபதியைச் சபைக்குக் கொண்டுவாராம லிருந்தால் பகை வந்திராது. மூத்தவனும், சிரேஷ்டனுமான தமையன் நன்மார்க்கத்தில் நடக்காவிட்டால் என்னுடைய மற்ற துஷ்டப் பிள்ளைகள் நன்னெறியைக் காப்பாற்றுவார்களா? ஸூதா! நான் குருடனாயிருப்பதால், எந்தக் காரியத்தையும் நடத்த முடியாதவனென்று கருதியே என்னுடைய துஷ்ட குமாரர்கள் என்னை மூடனாக நினைத்திருக்கிறார்கள். நான் சொல்வதையும் கவனியாமலிருக்கிறார்கள். துரியோதனனுடைய துஷ்டமந்திரிகளான கர்ணன், சகுனி முதலியவர்கள் அவன் துர்மார்க்கத்திலே

-க்கும்போது அவனைத் தைரியப்படுத்துகிறார்கள். விஷயங்களை அறிந்து காள்ளும் சக்தி துரியோதனனுக்குக் கிடையாது. அளவில்லாத பராக்கிரம லியான அர்ஜுனன் விளையாட்டுக்காகப் பிரயோகிக்கிற அம்புகளே என் த்திரர்களை நாசம் பண்ணிவிடும். அர்ஜுனன் கோபத்தோடு பிரயோகிக் ற பாணங்களைப் பற்றிப் பேச வேண்டியதென்ன? அர்ஜுனன் தன் வில் லில் தொடுத்துப் புஜபலத்தால் இழுத்துவிடுகிற வைகளும், மந்திரசக்தியோடு -டினவைகளும், அந்த மந்திரபலத்தால் தெய்வாஸ்திர மாக்கப்பட்டவைகளு ான பாணங்கள் தேவர்களைக் கூட நாசம்பண்ணுமே! கிருஷ்ணமூர்த்தியை ரட்சகராகவும், மந்திரியாகவும், சிநேகிதராகவும் கொண்டிருக்கிற அந்த ர்ஜுனனால் ஜயிக்க முடியாதது எது! ஓ சஞ்சயா! தேவதேவனுகிய மஹா 'தவனை அர்ஜுனன் தன் புஜங்களால் தழுவிக்கொண்டானென்று கேள்விப் பட்டோமே! இது அர்ஜுனனிடத்தில் காணப்படுகிற அதிசயமாகும். கிரு ஷ்ண சகாயம் பெற்ற அர்ஜுனன் அக்கினியைத் திருப்தி செய்வதற்காகக் கா ண்டவ வனத்தை எரிக்கச் செய்தான். இது உலகப் பிரசித்தமானதன்றே? மன், அர்ஜுனன், கிருஷ்ணன் மூவரும் கோபங்கொண்டிருக்கிறார்கள். என் குமாரர் சிநேகிதர்களோடும் சகுனியோடும் கூடிச் சண்டையிட்டு அவர் ளை ஜயிக்கச் சக்தியற்றவர்கள் என்றான்.

---

## 50-வது அத்தியாயம்.

### இந்திரலோக கமன பர்வத் தொடர்ச்சி.

1—3. ஜனமேஜயர். முனிவரே! அரசனுகிய திருதராஷ்டிரன் பாண்ட வர்களை நாட்டை விட்டுத் துரத்திவிட்ட பின் விசனப்படுகிறது பயனற்றது. திருதராஷ்டிரன் அற்ப புத்தியுள்ள தன் புத்திரர்கள் பாண்டவர்களுக்குக்கோப முண்டாக்கும்படி என் விட்டிருந்தான்? பாண்டவர்கள் வனத்தில் வசித்த போது அவர்களுக்கு ஆகாரமென்ன? காட்டிலிருந்து சேகரிக்கப்பட்டதா? அல்லது பயிரிடப்பட்டதா? இதை எனக்கு விளங்கச் சொல்ல வேண்டும் என் றார். வைசம்பாயனர் சொல்லுகிறார்.

4—10. அந்த வீரர்கள் காட்டில் தானுக விளைந்தவைகளையும், பரிசுத்த மான பாணங்களால் கொல்லப்பட்ட மானிறைச்சியையும், முதலில் பிராம ணர்களுக்குக் கொடுத்து அதன்பின் தாங்கள் புசித்தார்கள். அரசனே! அக் கினியாதான முடையவர்களும், இல்லாதவர்களுமான பிராமணர்கள் பாண்ட வர்களைப் பின்பற்றி வனத்தில் வசித்தார்கள். அந்த வனத்தில் பதினுயிரம் ஸ்நாதகப் பிராமணர்களிருந்தார்கள். அவர்களெல்லோரும் மோக்ஷத்தை யடையத் தக்க பரிபூர்ணஞானமுள்ளவர்கள். யுதிஷ்டிரர் அவர்களை வனத் தில் போஷித்துவந்தார். அந்தப் பிராமணர்களுக்கு, கிருஷ்ணமான் முத

லிய பல மான்களையும், பரிசுத்தமான வேறு பல பிராணிகளையும் கொடுத்து வந்தார். யுதிஷ்டிரரோடு வனத்தில் வசித்தவர்களில் ஒருவராவது வெளுத்த நிறமுடையவரா யாவது, வியாதியுடையவராவது, பலஹீனராவது, கூச்சமுடையவராயாவது, பயந்தவராயாவது இருந்ததில்லை. கௌரவோத்தமரான யுதிஷ்டிரர் தனது சகோதரர்களைத் தமது புத்திரர்களைப் போலப் பாதுகாத்தார். உறவினரைத் தமது சொந்தச் சகோதரர்களைப்போலப் பரிபாலித்து வந்தார். திரௌபதியானவள் தன் பர்த்தாவுக்கும், பிராமணர்களுக்கும் முதலில் தாய் போல் உபசரித்து உணவு அளித்தாள். கடைசியில் தான் புசித்து வந்தாள். யுதிஷ்டிரர் தினந்தோறும் வில்லம்புகளோடு கீழ் திசை நோக்கிச் செல்வார். பீமன் தென் திசைக்குப் போவான். நகுல சகாதேவர்கள் மேற்கு வடக்குத் திக்குகளை நோக்கிப் போவார்கள். மாமிசத்துக்காகத் தினந்தோறும் இப்படி வேட்டையாடி மான்களைக் கொல்லுவதால் அந்தக் காட்டில் மான் சாதியே யில்லாமற் போயிற்று. இப்படியாகப் பாண்டவர்கள் காமியக வனத்தில் ஐந்து வருஷம் வசித்தார்கள். இந்த ஐந்து வருஷ காலமும் அர்ஜுனன் வராமலிருப்பதனாலே மனம் வருந்தியிருந்தார்கள், மந்திரங்களைப் படித்து வந்தார்கள்.

---

## 51-வது அத்தியாயம்.

### இந்திரலோக கமன பர்வத் தொடர்ச்சி.

1—14. வைசம்பாயனர் ஜனமேஜய மஹாராஜாவுக்குச் சொல்லுகிறார். திருதராஷ்டிர மஹாராஜன் பாண்டவர்கள் காமியக வனத்தில் இப்படிக் காலங்கழித்து வருகிறதைக் கேட்டு மிக வருத்தமடைந்தான். கவலைகொண்டான். துக்கம் நிறைந்தவனாய் வெப்பமாய்ப் பெருமூச்சுவிட்டுச் சஞ்சயனைப் பார்த்துச் சொல்லுகிறான். சஞ்சயா! சூதாட்டந் தொடங்கின என் புத்திரர்களுடைய துர்நடத்தையை நினைத்து நினைத்து இரவும் பகலும் துக்கப்படுகிறேன். என் மனதுக்குக் கொஞ்சமாவது ஆறுதலில்லை. மஹா சக்தியுடையவர்களான பாண்டவர்களுடைய வீரத்தையும், பொறுமையையும், மேலான ஆண்மையையும், ஆச்சரியப்படத்தக்க அவர்களுடைய ஒற்றுமையையும் நினைத்தும் வருந்துகிறேன். தெய்வப்பிறப்புடைய நகுல சகதேவர்கள் மஹிமையையும், தேவேந்திரனை ஒத்த பெருமையையும், யுத்தத்தில் ஜயிக்கப்படாமையும், ஆயுதங்களை உபயோகிக்கிற திறமையையும், வெகு தூரத்திலிருப்பவைகளையும் எய்கிற சாமர்த்தியத்தையும், யுத்தத்தில் தளராமலிருப்பதையும், கரவேகத்தையும், தணிக்கப்படாத கோபத்தையும், உறுதியையும், தளராத முயற்சியையும், சிங்கத்தை யொத்த வல்லமையையும், அசுவினி தேவர்களைப்போன்ற சக்தியையும் உடையவர்கள். அவ்விருவரும் பீமார்ஜுனர்களை முன்னிட்டுக் கொண்டு யுத்தகளம் வந்தவிடுவார்களே. சஞ்சயா! என்னுடைய பேசு

வீரர்களெல்லாரும் ஒரே கூட்டமாக நாசமாக்கப்படுவார்கள் என்று நினைக்கிறேன். தெய்வப் பிறவியுள்ளவர்களும், ஒப்பற்ற வீரர்களுமான அவர்கள் இரக்கம் வைக்க மாட்டார்கள். ஏனென்றால் திரௌபதிக்கு நேர்ந்த அவமானத்தினாலே கோபங்கொண்டிருக்கிறார்கள். விருஷ்ணிகுலத்து வீரர்களும் மஹா பலமுடைய பாஞ்சாலர்களும், பார்த்தர்களும், அடங்காத பலமுள்ள வாசுதேவனாலே இரட்சிக்கப் படுகிறார்கள். ஆகையால் என் புத்திரர்களுடைய சேனை கட்டாயம் தோல்வியடையும், தேர்ப்பாகன் புத்திரனான சஞ்சயா! இராமகிருஷ்ணர்களால் நடத்தப்படுகிற விருஷ்ணிகுல வீரர்கள் மேல் விழுந்தடிக்கும்போது என்னுடைய படை அவர்களுக்கு எதிர் நிற்கமாட்டாது. பயங்கரமான சக்தியுள்ள பீமசேனன் கதையை எடுத்துக் கொண்டு வந்து எல்லா வீரர்களையும் நசுக்கிக்கொண்டு, என் சேனைக்கு நடுவில் உலாவித் திரிவான். என் பட்சத்திலிருக்கிற இராஜகூட்டங்கள் அர்ஜுனனுடைய காண்டீவத்தினுடைய பேரிடி முழக்கம் போன்ற தொனியைக் கேட்டு யுத்தகளத்தில் நிற்க மாட்டார்கள். பீமன் கதை வீச்சைத் தடுத்து நிற்கும் சாமர்த்தியமில்லை. இப்படியிருக்க நான் எப்போதும் துரியோதனனுடைய யோசனைக்குட்பட்டு அதன்படி நடந்தேன். என் சிநேகிதர்களுடைய புத்தியை இப்பொழுது நினைக்கிறேன். அதனாலே பிரயோசனமென்ன? முன்னாலேயே கேட்டு அப்படி நடந்திருக்க வேண்டியது என்று சொன்னான். இதைக் கேட்டுச் சஞ்சயன் சொல்லுகிறான்.

15—30. அரசனே! நீ இதைக் கவனிக்க வேண்டாம். நீர் சக்தியுள்ளவராயிருந்தும் புத்திரவாஞ்சையால் துரியோதனனுடைய துர்நடத்தையைத் தடுக்காமலிருந்தது உமது குற்றமேயாம். பாண்டவர்களைச் சூதாட்டத்தில் வென்றதைக் கேட்டு, மது என்னும் அசுரனைச் சங்கரித்தவரும், அழியாத பெருங்கீர்த்தியையுடையவருமான கண்ணன் உடனே காமியக வனத்திலிருக்கிற யுதிஷ்டிரரிடம் போனார். திருஷ்டத்யும்நன், விராடராஜன், திருஷ்டகேது, கேகையர் முதலான வீரர்களும் யுதிஷ்டிரரிடம் போனார்கள். சூதாட்டத்தில் தோல்வியடைந்த பாண்டவர்களைப் பார்த்த பின் அவர்கள் பேசிக்கொண்டதை நான் நன்றாயறிவேன். ஒற்றர்களாலே தெரிந்துகொண்டேன். பாண்டவர்கள் கிருஷ்ணனை நோக்கி யுத்த காலத்தில் அர்ஜுனனுக்குச் சாரதியாயிருக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அவரும் ஒப்புக்கொண்டார். பாண்டவர்கள் கிருஷ்ணாஜினத்தை யுடுத்துக்கொண்டு வனத்தில் வசிப்பதைப்பார்த்துக் கண்ணன் மிக்கவருத்தமுற்று? யுதிஷ்டிரரைப்பார்த்துச் சொல்லுகிறார். பாண்டு புத்திரர்கள் இந்திரப் பிரஸ்தத்தில் இராஜசூயயாகம் செய்தபோது அவர்களுடைய வாழ்வைப் பார்த்தேன். அந்த யாகம் மற்றெந்த அரசராலும் செய்ய முடியாதது. அந்த யாகத்தில், அங்கராஜன், வங்கராஜன், ஒட்டரமன்னன், திராவிடவேந்தன், அந்தகர் முதலான பல அரசர்களையும் பார்த்தேன். அநேக தீவுகளையாளும் இராஜர்களையும், கடற்கரையிலுள்ள தே

சத்துரு அரசர்களையும், சிங்களராஜனையும், மிலேச்சராஜனையும், இலங்கை அரசனையும், மேற்றிசையை ஆளும் அநேக மன்னவர்களையும், கிராதர், யவனர், சீனர், முதலான பல அரசர்களையும் பார்த்தேன். அவர்களெல்லாரும் உமது ஆயுதத்துக்குப் பயந்து நடுங்கிக்கொண்டிருந்தார்கள். நீர் அழைத்தவுடனே வந்து அநேக வேலைகளைச் செய்தார்கள். அந்த வாழ்வு இப்போது சத்துருக்களால் அபகரிக்கப்பட்டது. இப்போது அவர்களிடத்திலிருக்கிறது. நான் அவர்களெல்லாரையும் கொன்று உமது ஐசுவரியத்தை மீட்டுத் தருகிறேன். கௌரவசிரேஷ்டரே! பலராமர், பீமன், அர்ஜுனன், இரட்டையர்கள், அக்குரூரன், கதன், சாம்பன், பிரத்யும்னன். ஆகுகன், திருஷ்டத்யுமனன், சிசுபாலனுடைய குமாரன் இவர்களைத் துணையாகச் சேர்த்துக்கொண்டு, துரியோதனனையும் கர்ணனையும் துச்சாதனன் சகுனி முதலானவர்களையும், நமக்கு விரோதிகளான மற்றவர்களையும் ஒரே நாளில் கொன்று உமது செல்வத்தை மீட்கிறேன். நீர் உம்முடைய சகோதரர்களோடு அஸ்தினாபுரத்தில் வாசம் பண்ணலாம். இப்பொழுது துரியோதனன் அனுபவித்துக் கொண்டிருக்கிற வாழ்வையும் பறித்துக் கொடுக்கிறேன். நீர் இந்த உலகம் முழுவதையும் அரசு புரியலாம் என்று சொன்னார்.

31—41. இதைக் கேட்ட யுதிஷ்டிரர், திருஷ்டத்யுமனன் முதலியோர் கேட்கும்படி கிருஷ்ணனைப் பார்த்துச் சொல்லுகிறார். ஓ ஜனார்த்தனா! நீர் சொல்வது எல்லாம் நிச்சயமாய் நடக்கும் என்று நான் நம்புகிறேன். கேசவா! பதின்மூன்றாம் வருஷம் முடிந்தபின் நீர் சொன்னபடி என் சத்துருக்களை நாசம்பண்ணிவிடும். இப்படியே எனக்கு உறுதிசெய்து கொடும். அந்த இராஜசபையில் நான் இப்போது இருக்கிறது போல வனத்தில் வசிக்கிறதாகச் சொல்லிவிட்டேன் என்று சொன்னார். யுதிஷ்டிரர் சொன்ன வார்த்தைகளை திருஷ்டத்யும்னன் முதலானவர்கள் கேட்டு, மதுரவசனங்களால் கிருஷ்ணபகவானைச் சாந்தப்படுத்தினார்கள். வாசுதேவனுடைய வசனங்களைக் கேட்ட திருஷ்டத்யுமனன் முதலியோர் பாஞ்சாலபுத்திரியாகிய திரௌபதியைப் பார்த்து, உன்னுடைய கோபத்தினாலே துரியோதனன் முதலானவர்கள் நிச்சயமாகவே மடிந்து போவார்கள். நாங்களெல்லாரும் உறுதியாகச் சொல்லுகிறோம். ஆகையால் நீ துக்கப்படாதே. சூதாட்டத்தில் தங்களுடைய ஜயத்தைக் கண்டு மகிழ்ந்து, உன்னைப் பார்த்துச் சிரித்தவர்களுடைய மாம்சத்தை நாயும் பறவைகளும் தின்னும். அவர்களெல்லாரும் நகைக்கப்படுவார்கள். அவர்களுடைய இரத்தத்தை நரியும் இராசாளியும் குடிக்கும். பாஞ்சாலீ! உன் கூந்தலைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்தவர்களுடைய சரீரத்தை மாமிச பட்சணிகளான ஜந்துக்கள் பற்றியிழுத்துப் புசிப்பதை நீ பார்த்து மகிழ்வாய். திரௌபதீ! உன்னை அவமதித்துத் துன்பப்படுத்தினவர்களுடைய இரத்தத்தைப் பூமி குடிக்கும். திரௌபதியைத் தேற்றும் இவை போன்ற பல வசனங்களைச் சொன்னார்கள். தர்மபுத்திரர் அந்த அரசர்களெல்லாரையும் பார்த்து, இந்தப் பதின்மூன்றாம் வருஷத்தில் நீங்களெல்லாரும் கிருஷ்ண

வீரர்களெல்லாரும் ஒரே கூட்டமாக நாசமாக்கப்படுவார்கள் என்று நினைக்கி றேன். தெய்வப் பிறவியுள்ளவர்களும், ஒப்பற்ற வீரர்களுமான அவர்கள் ஷேமம் வைக்க மாட்டார்கள். ஏனென்றால் திரௌபதிக்கு நேர்ந்த அவமா னத்தினாலே கோபங்கொண்டிருக்கிறார்கள். விருஷ்ணிகுலத்து வீரர்களும் மஹா பலமுடைய பாஞ்சாலர்களும், பார்த்தர்களும், அடங்காத பலமுள்ள வாசுதேவனாலே இரட்சிக்கப் படுகிறார்கள். ஆகையால் என் புத்திரர்களு டைய சேனை கட்டாயம் தோல்வியடையும், தேர்ப்பாகன் புத்திரனான சஞ்ச யா! இராமகிருஷ்ணர்களால் நடத்தப்படுகிற விருஷ்ணிகுல வீரர்கள் மேல் விழுந்தடிக்கும்போது என்னுடைய படை அவர்களுக்கு எதிர் நிற்கமாட்டாது. பயங்கரமான சக்தியுள்ள பீமசேனன் கதையை எடுத்துக்கொண்டு வந்து எல்லா வீரர்களையும் நசுக்கிக்கொண்டு, என் சேனைக்கு நடுவில் உலாவித் திரி வான். என் பட்சத்திலிருக்கிற இராஜகூட்டங்கள் அர்ஜுனனுடைய காண்டீ வத்தினுடைய பேரிடி முழக்கம்போன்ற தொனியைக் கேட்டு யுத்தகளத்தில் நிற்க மாட்டார்கள். பீமன் கதை வீச்சைத் தடுத்து நிற்கும் சாமர்த்தியமில்லை. இப்படி யிருக்க நான் எப்போதும் துரியோதனனுடைய யோசனைக்குட்பட்டு அதன்படி நடந்தேன். என் சிநேகிதர்களுடைய புத்தியை இப்பொழுது நினை க்கிறேன். அதனாலே பிரயோசனமென்ன? முன்னாலேயே கேட்டு அப்படி நடந்திருக்க வேண்டியது என்று சொன்னான். இதைக் கேட்டுச் சஞ்சயன் சொல்லுகிறான்.

15—30. அரசனே! நீ இதைக் கவனிக்க வேண்டாம். நீர் சக்தியுள் ளவராயிருந்தும் புத்திரவாஞ்சையால் துரியோதனனுடைய துர்நடத்தையைத் தடுக்காமலிருந்தது உமது குற்றமேயாம். பாண்டவர்களைச் சூதாட்டத்தில் வென்றதைக் கேட்டு, மது என்னும் அசுரனைச் சங்கரித்தவரும், அழியாத பெருங்கீர்த்தியையுடையவருமான கண்ணன் உடனே காமியக வனத்திலிருக் கிற யுதிஷ்டிரரிடம் போனார். திருஷ்டத்யும்நன், விராடராஜன், திரு ஷ்டகேது, கேகையர் முதலான வீரர்களும் யுதிஷ்டிரரிடம் போனார்கள். சூதாட்டத்தில் தோல்வி யடைந்த பாண்டவர்களைப் பார்த்த பின் அவர்கள் பே சிக்கொண்டதை நான் நன்றாயறிவேன். ஒற்றர்களாலே தெரிந்துகொண் டேன். பாண்டவர்கள் கிருஷ்ணனை நோக்கி யுத்த காலத்தில் அர்ஜுனனுக் குச் சாரதியாயிருக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அவரும் ஒப்புக்கொண் டார். பாண்டவர்கள் கிருஷ்ணாஜினத்தை யுடுத்துக்கொண்டு வனத்தில் வசிப்பதைப்பார்த்துக் கண்ணன் மிக்கவருத்தமுற்று? யுதிஷ்டிரரைப்பார்த்துச் சொல்லுகிறார். பாண்டு புத்திரர்கள் இந்திரப் பிரஸ்தத்தில் இராஜசூயயாகம் செய்தபோது அவர்களுடைய வாழ்வைப் பார்த்தேன். அந்த யாகம் மற்றெந்த அரசராலும் செய்ய முடியாதது. அந்த யாகத்தில், அங்கராஜன், வங்கராஜன், ஒட்டரமன்னன், திராவிடவேந்தன், அந்தகர் முதலான பல அரசர்களையும் பார்த்தேன். அநேக தீவுகளையாளும் இராஜர்களையும், கடற்கரையிலுள்ள தே

சத்து அரசர்களையும், சிங்களராஜனையும், மிலேச்சராஜனையும், இலங்கை அரசனையும், மேற்றிசையை ஆளும் அநேக மன்னவர்களையும், கிராதர், யவனர், சீனர், முதலான பல அரசர்களையும் பார்த்தேன். அவர்களெல்லாரும் உமது ஆயுதத்துக்குப் பயந்து நடுங்கிக்கொண்டிருந்தார்கள். நீர் அழைத்த வுடனே வந்து அநேக வேலைகளைச் செய்தார்கள். அந்த வாழ்வு இப்போது சத்துருக்களால் அபகரிக்கப்பட்டது. இப்போது அவர்களிடத்திலிருக்கிறது. நான் அவர்களெல்லாரையும் கொன்று உமது ஐசுவரியத்தை மீட்டுத் தருகிறேன். கௌரவசிரேஷ்டரே! பலராமர், பீமன், அர்ஜுனன், இரட்டையர்கள், அக்குரூரன், கதன், சாம்பன், பிரத்யும்னன். ஆகுகன், திருஷ்டத்யும்னன், சிசுபாலனுடைய குமாரன் இவர்களைத் துணையாகச் சேர்த்துக்கொண்டு, துரியோதனனையும் கர்ணனையும் துச்சாதனன் சகுனி முதலானவர்களையும், நமக்கு விரோதிகளான மற்றவர்களையும் ஒரே நாளில் கொன்று உமது செல்வத்தை மீட்கிறேன். நீர் உம்முடைய சகோதரர்களோடு அஸ்தினபுரத்தில் வாசம் பண்ணலாம். இப்பொழுது துரியோதனன் அனுபவித்துக் கொண்டிருக்கிற வாழ்வையும் பறித்துக் கொடுக்கிறேன். நீர் இந்த உலகம் முழுவதையும் அரசு புரியலாம் என்று சொன்னார்.

31—41. இதைக் கேட்ட யுதிஷ்டிரர், திருஷ்டத்யும்னன் முதலியோர் கேட்கும்படி கிருஷ்ணனைப் பார்த்துச் சொல்லுகிறார். ஓ ஜனார்த்தனா! நீர் சொல்வது எல்லாம் நிச்சயமாய் நடக்கும் என்று நான் நம்புகிறேன் கேசவா! பதின்மூன்றும் வருஷம் முடிந்தபின் நீர் சொன்னபடி என் சத்துருக்களை நாசம்பண்ணிவிடும். இப்படியே எனக்கு உறுதிசெய்து கொடும் அந்த இராஜசபையில் நான் இப்போது இருக்கிறது போல வனத்தில் வசிக்கிறதாகச் சொல்லிவிட்டேன் என்று சொன்னார். யுதிஷ்டிரர் சொன்ன வார்த்தைகளை திருஷ்டத்யும்னன் முதலானவர்கள் கேட்டு, மதுரவசனங்களால் கிருஷ்ண பகவானைச் சாந்தப்படுத்தினார்கள். வாசுதேவனுடைய வசனங்களைக் கேட்ட திருஷ்டத்யும்னன் முதலியோர் பாஞ்சால புத்திரியாகிய திரௌபதியைப் பார்த்து, உன்னுடைய கோபத்தினாலே துரியோதனன் முதலானவர்கள் நிச்சயமாகவே மடிந்து போவார்கள். நாங்களெல்லாரும் உறுதியாகச் சொல்லுகிறோம். ஆகையால் நீ துக்கப்படாதே. சூதாட்டத்தில் தங்களுடைய ஜயத்தைக் கண்டு மகிழ்ந்து, உன்னைப் பார்த்துச் சிரித்தவர்களுடைய மாம்சத்தை ஓநாயும் பறவைகளும் தின்னும். அவர்களெல்லாரும் நகைக்கப்படுவார்கள். அவர்களுடைய இரத்தத்தை நரியும் இராசாளியும் குடிக்கும். பாஞ்சாலீ! உன் கூந்தலைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்தவர்களுடைய சரீரத்தை மாமிச பட்சணிகளான ஜந்துக்கள் பற்றி யிழுத்துப் புசிப்பதை நீ பார்த்து மகிழ்வாய். திரௌபதீ! உன்னை அவமதித்துத் துன்பப்படுத்தினவர்களுடைய இரத்தத்தைப் பூமி குடிக்கும். திரௌபதியைத் தேற்றும் இவை போன்ற பல வசனங்களைச் சொன்னார்கள். தர்மபுத்திரர் அந்த அரசர்களெல்லாரையும் பார்த்து, இந்தப் பதின்மூன்றும் வருஷத்தில் நீங்களெல்லாரும் கிருஷ்ண

னைத் தலைமையாகக் கொண்டு, யுத்தகளத்தில் வந்து சேருங்கள். சிங்கத்தைப் போலப் பராக்கிரம முடையவர்களான இராமகிருஷ்ணர்கள், தனஞ்செயன் பிரத்தியும்னன், சாம்பன். யுயுதானன் என்பவர்களும், பீமன், அர்ஜுனன், மாத்திரிபுத்திரர்கள், கேகையர், பாஞ்சாலர், பிரத்யும்னன், சாம்பன், யுயுதானன், மச்சராஜன் இவர்களெல்லாரும் தத்தம் சைன்யத்தோடு வந்து சேர்வார்கள் என்று சொன்னான். பின் திரிதராஷ்டிரன் சொல்லுகிறான்.

45—46. சூதாட்டம் நடக்கும் போது என் தம்பி விதுரன் எனக்குச் சொன்னதாவது, ஓ அரசனே! நீர் பாண்டவர்களை எளிதாக ஜயித்து விடுவீர். இதனால் நிச்சயமாகப் பெரிய சண்டை நேரிடும். அதில் கௌரவர்கள் எல்லாரும் நாசம் அடைவார்கள் என்றான். சஞ்சயா! முன்பு விதுரன் எனக்குச் சொன்னது நிச்சயமாகவே பலிக்குமென்று நினைக்கிறேன். பாண்டவர்களுக்குக் குறிக்கப்பட்ட கால எல்லையாகிய பதின் மூன்று வருஷம் சென்ற பின் பாண்டவர்களோடு பெருஞ் சண்டையுண்டாகும். அந்தச் சண்டையில் கௌரவர் நாசமாவார்களென்று சொன்னான்.



## 52-வது அத்தியாயம்.

நளோபாக்கியான பர்வம்.

1. ஜனமேஜய மஹா ராஜன், வைசம்பாயனரைப் பார்த்து வேதியரே! பிருதையினுடைய மஹிமையுள்ள புத்திரரான அர்ஜுனன் ஆயுதம் பெறும் பொருட்டு இந்திரலோகம் போன பின், யுதிஷ்டிரரும் மற்றப் பாண்டவர்களும் என்ன செய்தார்கள்? சொல்லவேண்டுமென்று கேட்க வைசம்பாயனர் சொல்லுகிறார்.

2—5. அர்ஜுனன் ஆயுத வித்தைகளைக் கற்பதற்காக இந்திரலோகம் போன பிறகு, பாண்டவர்கள் கிருஷ்ணையோடு காமியக வனத்தில் வாசம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அப்போது பரத குலோத்தமரான பாண்டவர்கள் மனதில் மிகக் கவலை யடைந்திருந்தார்கள். ஒரு நாள் அந்தக் காட்டிலுள்ள புல்லடர்ந்த ஒரு தரையில் கிருஷ்ணையோடு ஏகாந்தமாய் உட்கார்ந்துக் கொண்டிருந்தார்கள். அவ்விருவரும் துக்கத்தால் வருந்தினார்கள். அவர்கள் கண்களினின்று நீர் பெருகியது. வாய்ப் பேச்சுக்கள் அழுகையோடும் விக்கலோடும் கலந்துதோன்றின. தனஞ்செயன் இன்னம் வராமலிருப்பதும் அவர்களுக்கு ஒரு பெருந் துயரத்தை யுண்டாக்கிற்று. துக்கம் வெள்ளம் போலப் பெருகியது அர்ஜுனன் பிரிவானது அவர்களுக்கு பெருந்துன்பத்தைத் தந்தது. அதன்மேல் பீமசேனன் அர்ஜுனனுடைய பிரிவினாலும், இராஜ்யத்தை யிழந்ததனாலும் துயரமடைந்து யுதிஷ்டிரரை நோக்கிச், சொல்லுகிறான்.

6—35. மஹாராஜாவே! பரதவம்சோத்தமனான அர்ஜுனன் உமது கட்டளையால் (தவசுக்குப்) போயிருக்கிறான். பாண்டுபுத்திரர்களுடைய ஜீவன்கள் யெல்லாம் அவனை யெதிர்நோக்கி வாழ்கின்றன. அர்ஜுனனை யிழந்தால், நாமும் நமது புத்திரர்களும், பாஞ்சாலர்களும், சாத்தியகியும், கிருஷ்ணனும் சாவது நிச்சயம். இதைக் காட்டிலும் வேறெதற்காக நாம் துக்கப்படுவோம். உமது கட்டளையால் நீதிதவறாத வீபத்ஸு புறப்பட்டுப் போய்விட்டான். அநேக துக்ககரமான விஷயங்களைச் சிந்தித்துக்கொண்டே போயிருக்கிறான். கீர்த்திபெற்ற வீரனான அர்ஜுனனுடைய ஆயுதவல்லமையிலேயே நாம் நம்பிக்கை வைத்திருக்கிறோம். அவன் அதை அடைந்து வருவதினாலே நாம் நமது சத்ருக்களையெல்லாம் நாசம்பண்ணி உலகம் முழுவதையும் அடைவோம். அந்த வீரன் வருகிறதற்குள் திருதராஷ்டிர புத்திரர்களாகிய நமது சத்ருக்களை நான் மறு உலகத்துக்கு அனுப்ப முடியாது. வாசுதேவன் நம்மைக் காப்பாற்றுகிறார். நாமும் வல்லமையுள்ளவர்களாயிருக்கிறோம். நம்மிடம் உண்டாகிற கோபத்தை நாம் அடக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதற்கு நீர்தான் காரணமாயிருக்கிறீர். நாம் கிருஷ்ணபகவானுடைய உதவியைக் கொண்டு கர்ணன் முதலான நமது பகைவர்கள் எல்லாரையும் நாசம் பண்ணிவிட்டுப், பூமியை ஆளத்தக்கவர்களா யிருக்கிறோம். நாம் ஆண்மை உள்ளவர்களாயிருந்தும், அதிர்ஷ்டமில்லாதவர்களா யிருக்கிறோம். அதற்கு நீர் சூதாடினதே காரணம். இதன் மத்தியில் மூடர்களான திருதராஷ்டிர குமாரர்கள் வரிப்பணம் சேகரித்துப் பலமடைகிறார்கள். ஆகையால் அரசனே! நீர் க்ஷத்திரியதர்மத்தை அனுசரிப்பது அவசியமாயிருக்கிறது. மஹாராஜாவே! வனத்தில் வசிப்பது க்ஷத்திரியனுடைய தர்மம் அல்ல. ரிஷிகள் இராஜ்யத்தைப் பரிபாலிப்பது தான் க்ஷத்திரிய தர்மமென்று சொல்லியிருக்கிறார்கள். நீர் க்ஷத்திரிய நீதியைக் கடந்து நடக்கிறீர். நீதிமானாகிய உம்மைப் போன்றவர்கள் வழிதப்பி நடக்கக் கூடாது. மஹாராஜாவே! அர்ஜுனனையும் ஜனார்த்தனனையும் அழைத்துக்கொண்டு, பன்னிரண்டு வருஷகாலம் முடிவதற்குள்ளாகவே காட்டை விட்டுப் புறப்பட்டுப் போய்த், திருதராஷ்டிர புத்திரர்களைச் சங்கரித்துவிடுவோம். அரசனே! மஹாத்மாவே! அரசர்க்கரசனே! திருதராஷ்டிர குமாரர்கள் அநேகம் போர் வீரர்களால் சூழப்பட்டிருந்தாலும், என் புஜவலியால் அவர்களை எமலோகத்துக்கு அனுப்பிவிடுகிறேன். எல்லாத் திருதராஷ்டிரர்களையும், கர்ணன், சகுனியையும், நம்மை யெதிர்த்து வருகிற மற்றவர்களையும், நானே கொன்று விடுகிறேன். நான் நமது பகைவர்கள் எல்லாரையும் கொன்ற பின் நீர் மறுபடியும் வனத்துக்கு வரலாம். இப்படி செய்தால் உம்மிடத்தில் குற்றம் சாராது. சத்ருக்களை அழிப்பவரே! இப்படி ஒரு பாவஞ்செய்தோமானால், பலவகை யாகாதிகளைச் செய்து பரிசுத்தர்களாய்ச் சிறந்த சொர்க்கத்தை அடைகிறோம். எங்களுடைய அரசன் மூடனாயாவது, தாமதஞ் செய்கிறவனாகவாவது இல்லாமலிருந்தால் அப்படியே நடக்கும். நீர் நிச்சயமாக அப்படியே தாமதஞ் செய்கிறவராக

இருக்கிறீர். மஹாராஜாவே! வஞ்சகர்களை வஞ்சனையாலேயே நாசம் பண்ண வேண்டும்: நிச்சயமாகவே துரியோதனாதியர்களை வஞ்சனையாலே அழிப்பது பாபமாகாது. பாரதரே! மஹாராஜாவே! நீதிமார்க்கத்தில் பழகியிருக்கிற பக்திமான்கள் ஒரு இரவையும் பகலையும் ஒரு வருஷமாகக் கருதுவார்கள். மஹாநுபாவரே! இது வேதங்களில் சொல்லப்பட்டது. எவனொருவன் பக்தியிற் சிறந்தவனோ அவனே ஒரு வருஷத்தை ஒரு நாளாகக் கொள்ளுவானாகள். குறையாத மகிமையுள்ளவரே! வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டு,பதின் மூன்று வருஷங்களையும் ஒரு நாளாகவும் கொள்ளலாம். மஹாராஜாவே! துரியோதனாதிகளைச் சங்கரிக்க இதுதான் சமையம். இல்லாவிட்டால் துரியோதனன் உலகம் முழுவதையும் தனது அரசாட்சிக்கு உட்படுத்திக்கொள்வான். அரசனே! இது உமக்குள்ள சூதாட்டவிருப்பத்தால் வந்தது. நீர் ஒரு வருஷம் அக்ஞாத வாசம்பண்ண ஒப்புக்கொண்டதனால் நாமெல்லாரும் அழிந்துபோனோம். எந்தத் தேசத்தில் மறைந்து வசிப்பதென்று எனக்குத் தெரியவில்லை. துரியோதனன் கண்டுபிடிக்காதபடி எப்படி வசிப்பது? மூடனான அந்தத் துரியோதனன் நமது அடியைத் தொடர்ந்து கண்டுபிடித்து மறுபடியும் காட்டுக்கு அனுப்புவான். அரசனே இந்தச் சூதாட்டம் மறுபடியும் ஒரு தரம் தொடங்கப்படும். நாம் பதின்மூன்று வருஷங்களையும் கழித்துவந்து விட்டபின், மறுபடி சூதாட அழைப்பான். அதனால் நீர் மறுபடியும் காட்டில் வசிக்க நேரிடும். நீர் எங்களை ஆயுசுள்ளவரையும் துக்கத்துக்கு உட்படுத்தாதமலிருக்க வேண்டுமானால், வேதவசனத்தை நம்பும். அதாவது வஞ்சகர் வஞ்சகத்தாலேயே அழிக்கப்பட வேண்டும். நீர் எனக்குக் கட்டளை கொடுத்தால் நான் அஸ்தினாபுரத்துக்குப் போகிறேன். வைக்கோல்போரை நெருப்பு அழிக்கிறது போல அந்தத் துரியோதனனை கொன்று விடுவேன். இது உம்மால் ஆகவேண்டியது. ஆகையால் எனக்கு உத்தரவு கொடும் என்றான்.

36—42. பீமசேனன் சொன்னதைக் கேட்டுத் தர்மபுத்திரர் பீமசேனனைத் தழுவி, உச்சிமோந்து, அவனைத் தேற்றிச் சொல்லுகிறார். வீரனே, நீ அர்ஜுனன் ஒத்தாசையைக் கொண்டு அப்படியே செய்வாய். பதின்மூன்று வருஷங்களும கடந்தபின் துரியோதனனைக் கொல்வாய். நான்பொய் சொல்லமாட்டேன். ஏனென்றால் என் இருதயத்தில் பொய் வசிக்க இடமில்லை. நிச்சயமாகவே பாபமாகிற வஞ்சனை யில்லாமலே துரியோதனனை அவன் கூட்டத்தாரோடு நீ சங்கரிப்பாய் என்று இப்படி யுதிஷ்டிரர் பீமசேனனோடு பேசிக் கொண்டிருக்கையில் மகிமை பொருந்திய பிருகதசுவமுனிவர் வந்து சேர்ந்தார். மஹாத்மாவான யுதிஷ்டிரர் அந்த முனிவரை வணங்கி, மதுவர்க்கங்களினால் உபசரித்துப் பணிந்தார். அந்த முனிவர் உட்கார்ந்த பின் யுதிஷ்டிரர் அவரைப் பூஜித்து அவருக்கெதிரிலே தாமும் உட்கார்ந்தார். பிறகு அந்த முனிவரிடத்தில் பரிதாபமுண்டாகும்படி பேசினார்.

43—50. மஹாநுபாவரே! கெட்டசிந்தையும், துஷ்டத்தனமும், சூதாடுவதில் வல்லமையுமுள்ள துரியோதனன் என்னைச் சூதாட அழைத்து

இராஜ்யத்தையும் செல்வத்தையும் பறித்துக்கொண்டான். எனக்குச் சூதாட்டத்தில் சாமர்த்தியமில்லை. அந்தத் துஷ்டர்களால் நான் தோல்வி யடைந்தேன். என்னுயிரை விடச் சிறந்தவளான என் மனைவியைச் சபையில் இழுத்துவந்தார்கள். இரண்டாந் தடவையும் சூதாட்டத்தில் என்னைத் தோற்கச் செய்து வனவாசஞ் செய்ய அனுப்பிவிட்டார்கள். மான்தோலை யுடுத்துத் துக்கத்தோடு வனத்தில் வசிக்கிறேன். நான் துக்கத்தோடு வனத்தில் கஷ்டஜீவனம் பண்ணுகிறேன். சூதாட்ட காலத்தில் அந்தத் துஷ்டர்கள் சொன்ன சொற்களும், சூதாட்டமும், துக்கமடைந்த என் நேசர்களுடைய வசனங்களும், இன்னமும் என்னுள்ளத்தில் புதியது போலக் குடிகொண்டிருக்கின்றன அதை நினைத்தால் இரா முழுதும் நித்திரை பிடியாமல் கவலைப் படுகிறேன். உயிரை விட்டுப் பிரிந்திருப்பது போலக் காண்டீப தரனுகிய அர்ஜுனனைப் பிரிந்து ஆதரவற்றவனு யிருக்கிறேன். எங்கள் எல்லாருடைய ஜீவனும் அவனையே அனுசரித்திருக்கின்றன. சீக்கிரமாய்ப் பேசுகிறவனும், தயாள குணமுள்ளவனு மாகிய அர்ஜுனனை நான் எப்போது காண்பேன்! எல்லா மனிதர்களுக்கும் அமிர்தம் போல விளங்கும் தனஞ்செயன் தேவலோகத்தி லிருந்து ஆயுதங்களைப் பெற்றுக்கொண்டு எங்களிடம் எப்போது வந்து சேருவான், என்னைக் காட்டிலும் கொடியவனுன இராஜகுமாரன் பூலோகத்தில் எவ னிருப்பான்? என்னைப் போலொத்தவனை நீர் எப்போதாவது பார்த்திருக்கிறீரா? அல்லது கேட்டாவ திருக்கிறீரா? நான் யோசித்துப் பார்த்தவரையில் என்னைப் போலத் துயரப்படுகிறவர்களில்லை என்றூர். அன்றுக் கேட்டுப் பிருகதசுவர் சொல்லுகிறுர்.

51—53. மஹாராஜனே! பாண்டுகுமாரரே! உலகத்தில் உம்மைக் காட்டிலும் ஏழைமையான அரசன் இல்லை யென்று நீர் சொல்லுகிறீர். பாபமில்லாத அரசனே! நீர் செவி கொடுத்துக் கேட்கிறதா யிருந்தால் உம்மைக் காட்டிலும் அதிக சிரமப்பட்ட அரசனுடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன் என்று சொல்ல, யுதிஷ்டிரர் அந்த முனிவரை நோக்கி மஹாத்மாவே! என்னைப்போலத் துன்பமடைந்த அரசனுடைய சரித்திரத்தை நான் கேட்க விரும்புகிறேன் என்றூர். முனிவர் மஹாராஜாவே! உம்மைக் காட்டிலும் துயரமடைந்த அரசனுடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன். உமது சகோதரர்களுடனே கவனமாய்க் கேளும் என்று சொல்லத் தொடங்கினுர்.

54—59. மஹாராஜாவே! நிஷத தேசத்து அரசர்களுக்குள் மகிமை பெற்ற ஒரு அரசன் இருந்தான். அவன் பேர் வீரசேனன். அவனுக்கு நளன் என்று ஒரு குமாரன் இருந்தான். அவன் தர்மசாஸ்திரம், அர்த்தசாஸ்திரம் இவைகளில் வல்லவன், அந்த நளமஹாராஜன் புஷ்கரன் என்ற ஒரு அரசனுல் வஞ்சனையாக ஜயிக்கப்பட்டான் என்று நாம் கேட்டிருக்கிறேம். அதனுலே அவன் தன் மனைவியோடு கூட வனத்தில் கஷ்டப்பட்டான். நளன் வனத்தில் வசித்தபோது அவனுக்கு வேலைக்காரர்களாவது இரத

மாவது இடையாது. சகோதரர்களாவது சிநேகிதர்களாவது இல்லே. நீரோ போர் வீரர்களான சகோதரர்களுட னிருக்கிறீர். அவர்கள் ஒவ்வொரு வரும் தேவர்களுக்குச் சமானமானவர்கள். பிரமதேவனுக்குச் சமானமான அநேகப் பிராமணர்கள் உம்முட னிருக்கிறார்கள். ஆகையால் மஹாராஜாவே! நீர் வருத்தப்படக் கூடாது என்று சொன்னார். தர்மராஜாவானவர் முனிவரை நோக்கி கதை சொல்ல வல்லவ முனிபுங்கவரே! அந்த நளமஹாராஜனுடைய சரித்திரத்தை முழுவதும் தெளிவாய்க் கேட்க விரும்புகிறேன். அதற்கு நீரே தகுதியுள்ளவர். ஆகையால் அந்தக் கதையை எனக்குச் சொல்ல வேண்டும் என்று கேட்கப் ப்ருகதசுவ மஹாரிஷி சொல்லுகிறார்.

---

## 53-வது அத்தியாயம்.

### நலோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—4. தர்மராஜாவே! நிஷத தேசத்தில் வீரசேன மஹாராஜாவின் குமாரனான நளன் என்ற ஒரு அரச னிருந்தான். அவன் மிக்கச் சாமார்த்திய முள்ளவன். அழகுள்ளவன். குதிரை யானைகளை அடக்கி யாளும் திறமை யுள்ளவன். எல்லா அரசர்களுக்கும் மேலாக இருந்தான். தேவர்களை விடச் சிறந்தவன். எல்லாரையும் விட மகிமையும், சூரியனைப் போலக் காந்தியு முள்ள வன். பிராமண விசுவாசமுள்ளவன். நிஷத நாட்டாருக்கு அரசன். சத் தியவந்தன். சாமர்த்தியமுள்ள சேனாதிபதி. குதிரைப் படைகளும் காலாட் படைகளும் மிகுதியா யிருந்தன. ஏராளமான யானைப் படைகளும் தேர் களு மிருந்தன. ஆனால் சொக்கட்டான் ஆடுவதில் பிரியமுள்ளவன். ஸ்திரீ புருஷர்கள் எல்லாரும் அவனிடத்தில் பிரிய மிருந்தார்கள். ஆசைகளை வென்ற மஹாத்மா. வில்லாளிகளுக்குப் புகலிடமானவன். மனுவுக்குச் சமான மானவன்.

5—18. விதர்ப்பதேசத்தில் நளனுக்குச் சமானமான பீமன் என்று ஒரு அரச னிருந்தான். அவனும் சிறந்த யுத்தவீரன். அளவற்ற ஆற்றலுடையவன். எல்லாவற்றிலும் தேர்ந்தவன். தன் குடிகளிடத்தில் பிரியமுள்ளவன். ஆனால் அவனுக்குக் குழந்தைகளில்லை. புத்திரப்பேறு அடைவதற்காக மிகப் பிரயத் தனப் பட்டான். பாரதரே! தமன முனிவர் என்பவர் அந்தப் பீமராஜனிடம் வந்தார். அரசர்க் கரசனே! தர்மவானான பீமராஜன் தன் மனைவியோடு அந்த முனிவரை உபசரித்தான். அதனால் தமனமுனிவர் சந்தோஷமடைந்து பீம ராஜனுக்கு ஒரு பெண்ணும், மகிமையும் தர்ம சிந்தையு முள்ள மூன்று புத்தி ரர்களும் உண்டாகும்படி அனுக்கிரகம் செய்தார். அந்தப் பெண்ணுக்குத் தம யந்தி என்று பேர். மூன்று பிள்ளைகளுக்கும் முறையே தமன், தாந்தன், தம னன் என்று பேர். கடைசிப் புத்திரன் மஹா தார்மிஷ்டன். சத்துருக்களுக்

குப் பயமுண்டாக்கும் வல்லமையுள்ளவன். சிறந்த இடையினை யுடைய தமயந்தியானவள் தன்னுடைய அழகாலும் காந்தியாலும் உலகத்தில் பிரசித்தி பெற்றவள். கீர்த்தியும் பெருமையும் பாக்கியமு முள்ளவள். அவளுக்கு தகுந்த வயது வந்தபோது இந்திராணியைப் போல விளங்கினாள். அநேக வேலைக்காரர்களும் சர்வாபரணங்களுந் தரித்த பணிவிடைக்காரிகளும் அவளைச் சூழ்ந்து காத்துக்கொண் டிருந்தார்கள். பீமராஜ புத்திரியான தமயந்தி தன்னுடைய அழகாலும், சர்வாபரணங்களாலும் ஆகாசத்தில் காணப்படுகிற மின்னல் கொடியைப் போலத் தன் பணிவிடைக்காரிகளுக்கு மத்தியில் விளங்கிக் கொண்டிருந்தாள். அந்தக் கன்னிகை இலட்சுமியைப் போல அழகும், விசாலமான கண்களுமுடையவளா யிருந்தாள். தேவஸ்திரீகளி லாவது யட்ச ஸ்திரீகளிலாவது அழகில் தமயந்திக்குச் சமானமானவர்க ளில்லை. இது நிச்சயம். மனிதர்களிலாவது மற்றவர்களிலாவது அவளுக்கு நிகரான அழகுள்ளவர்களைப் பார்த்தது மில்லை கேட்டதுமில்லை. தமயந்தி நிச்சயமாகவே இன்பமான தோற்றத்தையும் தேவர்களை விட அழகையும் உடையவள். நளனும் உலகத்தில் ஒப்பற்றவன். ஏனென்றால் அவன் தன் அழகினால் மன்மதனை ஒத்திருந்தான். தூதர்கள் தமயந்திக்கு முன்னால் நளன் அழகை அடிக்கடி வியந்து புகழ்ந்தார்கள். தமயந்தியின் அழகையும் நளன் சமூகத்தில் புகழ்ந்து கூறினார்கள். நளனும் தமயந்தியும் ஒருவரை யொருவர் காணாமலிருந்தும் கேள்விப்பட்டதனால் ஒருவரை யொருவர் இச்சித்தார்கள். குந்திகுமாரா! அவர்களுடைய காதல் பலமாய் வேரூன்றியது, நளன் அந்தக் காதலை மனதில் அடக்கிக்கொள்ள முடியாமையால், தன் அரண்மனையின் அருகாமையிலுள்ள பூந்தோட்டத்துக்குப்போய்த் தனிமையாகக் காலம் கழிப்பது வழக்கம்.

19—26. ஒரு நாள் அந்தத் தோட்டத்துக்கு மத்தியில் சொர்ணமயமான இரக்கைகளை யுடைய அன்னபட்சிகள் கூட்டமாய் உலாவிக்கொண்டிருந்தன. அவைகளில் ஒன்றை நளன் பிடித்துக்கொண்டான். ஆகாயத்தில் பறக்கிற இயல்புள்ள அந்தப் பட்சி நளனைப் பார்த்து அரசனே! நீ யென்னைக் கொல்லத் தகாது. நான் உனக்குச் சில நன்மைகளைச் செய்கிறேன். அதென்னவென்றால், நிஷதராஜனே! அந்தத் தமயந்தி உன்னைத் தவிர வேறொருவனையும் தனக்குக் கணவனாக வரிக்காதிருக்கும்படி செய்கிறேன், இப்படிச் சொன்னவுடன் நளன் அந்தப் பறவையை விட்டுவிட்டான், அதன் பின் அன்னப் பறவைகள் சிறகை விரித்துக்கொண்டு ஆகாயத்தில் எழுந்து விதர்ப்பதேசத்தை நோக்கிப் போயின. அவைகள் விதர்ப்பதேசத்துக்குப் போய், ஆகாயத்தினின்றும் தமயந்திக்கு முன்னாலே யிறங்கின. தமயந்தியும் அவைகளைப் பார்த்தாள். தமயந்தியும் அவளுடைய ஏவற் பெண்களும் அந்த அதிசயமான அழகினை யுடைய அன்னப் பறவைகளைப் பார்த்து, உடனே காலதாமதம் பண்ணாமல் பிடிக்கக் கருதினார்கள். அதன் பின் அந்த அன்னங்கள் நாலா பக்கங்களிலும் சிதறி ஓடின, பணிவிடைப் பெண்கள் இவைகளைப் பிடிக்கும்படி தொடர்ந்து ஓடினார்கள், ஒவ்வொருவரும் ஒவ்வொன்றைப் பின் பற்றி ஓடினார்கள்.

தமயந்தி பிடிக்கச் சென்ற அன்னம் அவளை அந்தத் தோட்டத்தின் ஒரு மூலைக்குக் கொண்டுபோயிற்று, அங்கே போனதும் தமயந்தியைப் பார்த்து மனுஷ பாஷையில் பேசத் தொடங்கிற்று.

27—31. ஓ தமயந்தீ! நிஷத தேசத்தில் ஒரு அரசன் இருக்கிறான். அவன் பேர் நளன். அசுவினி தேவர்களைப் போல அழகிற் சிறந்தவன். மனிதர்களில் அவனுக்கு ஒப்பானவர்களில்லை. அழகில் மன்மதனை ஒத்தவன். அழகானவளே! நீ அவனுக்கு மனைவியானால் உன்னுடைய பிறப்பும் அழகும் பலன் உடையன ஆகும். நாங்கள் தேவர்களையும் கந்தர்வர்களையும் மனிதர்களையும் பார்த்திருக்கிறோம். நாகர்களையும் இராட்சதர்களையும் கண்டிருக்கிறோம். இந்த நளனுக்குச் சமானமாய் ஒருவரையும் பார்த்ததில்லை. நீ பெண்களுக்குள் சிரோமணியாய் விளங்குகிறது போல நளன் புருஷர்களுக்குள் சிறந்தவன். குணங்களில் சிறந்தவர்கள் குணங்களிற் சிறந்தவர்களோடு சேர்வது தான் தகுதி என்று கூறிற்று. இப்படி அன்னப்பறவை சொன்னதைக் கேட்டுத் தமயந்தி சொல்லுகிறாள். ஓ! அன்னமே நீ கூட நளனைப் பற்றி யிவ்வாறு பேசுகிறாய். ஆனால் அப்படியே ஆகட்டும். நீ நிஷததேசத்துக்குச் சீக்கிரமாய்த் திரும்பிப் போ. நளமஹாராஜனுக்கு எல்லாவற்றையும் விளங்கச் சொல்லு என்று சொன்னாள்.

---

## 54-வது அத்தியாயம்.

### நலோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—12. பிருகதசுவமஹாரிஷி தர்மராஜாவை நோக்கிச் சொல்லுகிறார். யுதிஷ்டிரரே! அன்னத்தின் வசனங்களைக் கேட்ட பின் தமயந்தி நளன் மேல் ஒழியாத காதல் கொண்டாள். அதனாலே கவலையும் துயரமும் அடைந்தாள். அடிக்கடி பெருமூச்செறிந்து தேகம் மெலிந்து வெளுத்தாள். எப்போதும் கவலை அடைந்து சிந்தித்துக்கொண்டிருந்தாள். அவள் படுக்கை ஆசனம் முதலிய சுகங்களை விரும்பவில்லை. இரவிலும் பகலிலும் நித்திரை செய்வதில்லை. சதா துக்கித்துக்கொண்டே யிருந்தாள். தர்மராஜாவே! தமயந்தி இப்படித் துக்கப்படுவதையும், அவள் சரீரம் மெலிந்திருப்பதையும் அவளுடைய பணிவிடைப் பெண்கள் பார்த்து, இவைகளை யெல்லாம் விதர்ப்பராஜனுக்குத் தெரிவித்தார்கள். பணிவிடைப் பெண்கள் சொன்னதைப் பீமராஜன் கேட்டுத் தமயந்தி விஷயமாக யோசித்துக்கொண்டிருந்தான், தமயந்தி யிப்படி மெலிவதற்குக் காரணம் என்ன என்று சிந்தித்தான். கடைசியில் தன் குமாரத்தி புஷ்பவதியா யிருப்பதை நினைத்து அவளுக்குச் சுயம்வரம் நியமிக்க உத்தேசித்தான். தமயந்தியின் சுயம்வரத்தைப் பூமியி லிருக்கும் எல்லா அரசர்களுக்கும் தெரியப் படுத்தினான். இதைக் கேட்ட பூமியை யாளும் அரசர்கள் விதர்ப்பதேசம் வந்தார்கள். அப்போது பூமி முழுவதும் தேரொலியாலும்,

குதிரையின் கனைப்பினாலும், யானையின் கர்ஜனையாலும் நிரம்பிற்று. உயர்ந்த ஆபரணங்களாலும், அழகிய மாலைகளாலும் அலங்கரித்துக் கொண்டிருக்கிற சேனைகளோடும் வந்து சேர்ந்த பூபாலர்க ளெல்லாரையும் பீமராஜன் மரியாதையாய் வரவேற்று உபசரித்தான். அந்த அரசர்கள் எல்லாரும் பீமராஜனுடைய மரியாதையால் மன மகிழ்ந்து தத்தம் விடுதிகளில் தங்கினார்கள்.

13—26. இந்தச் சமையத்தில், மகிமையும் சிறந்த ஞானமு முள்ள தேவரிஷியான நாரதமுனிவரும், பர்வதரும் இந்திரலோகம் போனார்கள். இந்திரன் அவர்களை உபசரித்தான். தேவேந்திரன் அவர்களுக்குத் தகுந்தபடி பூஜித்து, சுக க்ஷேமங்களை விசாரித்தான். நாரதர் அவனை நோக்கித், தேவராஜனே! நாங்கள் எல்லா விஷயங்களிலும் குறைவின்றி யிருக்கிறோம். உலகத்திலுள்ள எல்லாரும் க்ஷேமமா யிருக்கிறார்கள் என்றார். வலனையும் விருத்திரனையும் சங்கரித்த இந்திரன் நாரதரை நோக்கி யுத்த வீரர்களான க்ஷத்திரியர்கள் எங்கே? ஏன் அவர்கள் என் உலகத்துக்கு வர வில்லை? அவர்கள் எனக்குச் சிறந்த விருந்தாளிகள். பூமியிலேயே அவர்கள் தாம் சிறந்த அரசர்கள். யுத்தத்தில் ஜீவனை விட்டவர்கள். சரியான காலம் வந்தபோது ஆயுதத்தால் இறந்தவர்கள். யுத்தத்தில் ஒரு போதும் முகம் திரும்பாதவர்கள். இந்த உலகம் அவர்களுக்கே யுரியது. நான் அனுபவிக்கிற சகல போகங்களையும் அனுபவிக்கத் தக்கவர்கள் என்றான். நாரதர் தேவராஜனே! நான் சொல்வதைக் கேளும், பூலோகத்தரசர்கள் ஏன் இவ்வுலகத்துக்கு வர வில்லையென்றால், விதர்ப்ப ராஜனுக்கு ஒரு புத்திரி இருக்கிறாள். அவள் பெயர் தமயந்தி. அழகிலே எல்லாப் பெண்களுக்கும் மேற்பட்டவள். அவளுக்குச் சீக்கிரத்தில் சுயம் வரம் நடக்கப்போகிறது. எல்லா இடங்களினும் இருந்து அரசர்களும் அரச குமாரர்களும் அங்கே போகிறார்கள். வலாசுரவைரியே! அரசர்களெல்லாரும் அந்தப் பூலோக மணியைப் பெற விரும்பி யிருக்கிறார்கள் என்றார். இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கிற போது அக்கினி தேவனை உள்ளிட்ட லோக பாலகர்கள் இந்திர சபைக்கு வந்தார்கள். நாரதர் தமயந்தியைப் பற்றி உயர்ந்த அபிப்பிராயமாகப் பேசுகிறதைக் கேட்டு, மிகவும் மகிழ்ந்து நாங்களும் அங்கே வர விரும்புகிறோம் என்றார்கள். யுதிஷ்டிர மஹாராஜனே! அவர்கள் எல்லாரும் தங்கள் தங்கள் வாகனங்களிலேறிக்கொண்டு பூலோக அரசர்கள் எல்லாரும் போயிருக்கிற விதர்ப்ப தேசத்தை நோக்கிப் புறப்பட்டு போனார்கள்.

27—31. குந்தி புத்திரனே! மேலான சித்தமுள்ள நள மஹா ராஜன் அரசர்கள் எல்லாரும் போய்ச் சேர்ந்திருக்கிற சுயம்வர சபை நோக்கித், தமயந்தியைச் சிந்தித்துக்கொண்டு புறப்பட்டான். அப்படிப் போகிற நளனைத் தேவர்கள் பார்த்தார்கள். அவன் அழகினாலே மன்மதனுக்கு மேலாக இருப்பதைக் கண்டார்கள். லோக பாலகர்களான அந்தத் தேவர்கள் நள மஹா ராஜன் சூரியனைப் போலப் பிரகாசிக்கிறதைப் பார்த்து, ஆச்சரியத்தால் திப்பிர

மைகொண்டு, அவனுடைய அழகைக் கண்டு அதிசயித்துத், தாங்கள் தமயந்தியை விரும்பின எண்ணத்தை ஒழித்து விட்டார்கள். பிறகு தேவர்கள் எல்லாரும் விமானத்தை விட்டுப் பூமியில் இறங்கி வந்து, நளனை நோக்கிச் சொல்லுகிறார்கள். மகிமை பொருந்திய நிஷத ராஜனே! நள மஹா ராஜனே! சத்திய விரதம் தவறாதவனே! புருஷ சிரேஷ்டனே! எங்களுக்கு உபகாரம் செய். நீ எங்களுக்குத் தூதனாயிருக்க உடன் படவேண்டும் என்றார்கள்.

---

## 55-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—6. பாரத சிரேஷ்டரே! நள மஹா ராஜன் தான் அப்படியே செய்கிறதாகத் தேவர்களுக்கு வாக்குக் கொடுத்தான். பிறகு கைகளை குவித்துக் கொண்டு அவர்களுக்கு எதிரில் வந்து நின்றுகொண்டு நீங்கள் யார்? அவர் யார்? நான் யாருக்கு தூதனாய் இருக்கவேண்டும்? நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்? எனக்கு உண்மையாய்ச் சொல்லுங்கள் என்றான். அதைக் கேட்ட இந்திரன் நளனுக்குச் சொல்லுகிறான். நாங்கள் தேவர்கள், தமயந்தியின் அழகைக் கேள்விப்பட்டு, அவளைக் குறித்து இங்கே வந்திருக்கிறோம். அரசனே! நான் தேவேந்திரன். இவன் அக்கினிதேவன். இவன் வருணன். இவன் எமதரும ராஜன். நீ தமயந்தியினிடம் போய் உலக இரட்சகர்களாகிய நாங்கள் மகேந்திரனை முன்னிட்டு வந்திருக்கிறோம். சுயம் வரத்தைக் குறித்து இராஜ வீரர்கள் கூடி யிருக்கிற சபைக்குப் போகிறோம். நீ தமயந்தியிடம் போய் இந்திரன், எமன், வருணன், அக்கினி ஆகிய இந்த நாலு தேவர்களும் உன்னை அடையும் பொருட்டு வந்திருக்கிறார்கள். அவர்களுள் ஒருவனை உனக்கு கணவனாக வரிக்க வேண்டுமென்று சொல்லு என்றான்.

7—21. தேவேந்திரன் சொன்னதைக் கேட்ட நளன் தன் இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு, நானும் உங்களைப் போலவே அந்தக் கன்னிகையை நாடி வந்திருக்கிறேன். தேவர்களே! என்னை மன்னியுங்கள். உங்களைப் போலவே தமயந்தியைக் கருதி வந்திருக்கிற ஒருவன் அந்தப் பெண்ணினிடத்தில் எப்படி மற்றவர்களைப் பற்றிப் பேசக் கூடும்? ஆகையால் என்னை அவளிடத்துக்குத் தூதனாக அனுப்ப வேண்டாம் என்று பிரார்த்தித்துக் கேட்டுக் கொண்டான். தேவேந்திரன் நள மஹா ராஜனே! நாங்கள் சொன்ன வேலைக் கேட்கிறதாக முன்னமே சொல்லி யிருக்கிறாய். அந்த வேலையைச் செய்ய மாட்டாயா? ஒரு நிமிஷம் கூடத் தாமதிக்காமல் சொல்லு என்று கேட்டான். நள மஹாராஜன் தேவேந்திரனைப் பார்த்து கடுங்காவலையுடைய அரண்மனைக்குள் நான் எப்படிப் போவேன் என்று கேட்டான். தேவேந்திரன் நளனைப் பார்த்து, நீ போய்ச் சேரலாம் என்றான். நளன் அப்படியே யாகட்டும் என்று ஒப்புக்கொண்டு தமயந்தியின் மாளிகையை நோக்கிப் போனான். அந்த அரண்

மனையில் அநேகமான பணிவிடைப் பெண்களுக்கு மத்தியில் அழகினால் ஜ்வலித்துக் கொண்டிருந்த தமயந்தியைப் பார்த்தான். அந்தத் தமயந்தி அவயவங்கள் சரி ஒத்தனவாயும் ஆச்சரியமானவைகளாயும் அமைந்திருந்தன. இடை சிறுத்திருந்தது. கண்கள் அழகாயிருந்தன. அவளுடைய தேக காந்தியினால் சந்திரனுடைய ஒளி மழுங்கத் தக்கதாயிருந்தது. அந்தத் தமயந்தியினுடைய புன்னகை பொருந்திய முக அழகைப் பார்த்த வுடனே அவள் மேலே நளன் அதிக ஆசை கொண்டான். சத்தியத்தைக் காப்பாற்றும் படி அந்த ஆசையை அடக்கிக் கொண்டான். அழகில் சிறந்த நளனைப் பார்த்தவுடனே அங்கிருந்த பெண்கள் எல்லாரும் தாங்கள் உட்கார்ந்திருந்த ஆசனத்தை விட்டெழுந்திருந்தார்கள். நளனைக் கண்டு ஆச்சரியப்பட்டு அவனுக்கு மரியாதை செய்தார்கள். ஆயினும் வாயினால் ஒன்றும் சொல்ல வில்லை. மனதினால் வணங்கினார்கள். புகழ்ந்தார்கள். ஆஆ! என்ன அழகு! என்ன ஒளி! இவர் எவ்வளவு பொறுமை யுள்ளவராயிருக்கிறார்! இவர் யார்! தேவனா, யக்ஷனா, கந்தர்வனா? என்று சிந்தித்தார்கள். நளனுடைய காந்தியால் வெல்லப்பட்டிருந்தமையாலும், கூச்சத்தினாலும் அந்தப் பெண்கள் அவன் கிட்டப் போகவும், பேசவும் துணியவில்லை. தமயந்தி மாத்திரம் புன் சிரிப்புடன் அவனைப் பார்த்துச் சொல்லுகிறாள். அழகில் சிறந்தவனே! உன்னைக் கண்ட வுடன் காதல் பெருகுகின்றது. வீரனே நீ யார்? இந்த மாளிகையிலுள்ளே எப்படி வந்தாய்? என்னத்திற்காக வந்தாய்? உன்னை ஒருவரும் அறியாமலிருந்ததெப்படி? ஏனென்றால் இராஜாவின் கட்டளையால் என் மாளிகை உறுதியாக காக்கப்படுகிறது என்று சொன்னாள், நளன் பதில் சொல்லுகிறான்.

22—25. அழகினையுடைய பெண்ணே! என் பெயர் நளன். நான் தேவர்களுடைய தூதனாக ஒரு சமாசாரம் சொல்ல வந்திருக்கிறேன், இந்திரன், அக்கினி, வருணன், எமன் ஆகிய இந்தத் தேவர்கள் உன்னை அடைய விருப்ப முடையவர்களா யிருக்கிறார்கள். அழகிற் சிறந்தவளே! இவர்களுள் ஒருவரை உனக்குக் கணவனாக வரித்துக்கொள். அந்தத் தேவர்களுடைய அனுக்கிரகத்தாலே தான் ஒருவரும் அறியாமல் உள்ளே புகுந்தேன். இதனாலே தான் ஒருவரும் என்னைப் பார்க்கவுமில்லை, தடுக்கவுமில்லை. இந்தத் தேவர்கள் என்னைத் தூதனாக அனுப்பினார்கள், பாக்கிய முள்ளவளே! நீ பிரியப்பட்டால் உன் அபிப்பிராயத்தைச் சொல் என்றான்.

---

## 56-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—24. தமயந்தி தேவர்களை வணங்கி, நளனைப் பார்த்துப் புன் சிரிப்புடன் மஹா ராஜாவே! சரியானபடி என்னை நேசியும். நான் உமக்கு என்ன செய்ய வேண்டுமோ அதைச் சொல்லும். நானும் என்னுடைய சகல ஐசுவரி

யங்களும் உம்முடையதே. முழு நம்பிக்கை யுடனே என்னை நேசியும். அரசனே! அன்னத்தின் வார்த்தைகள் என் மனதை யெரிக்கின்றன. உமக்காகவே இந்த இராஜ கூட்டங்களை யிங்கே அழைத்தது. நீர் என்னைக் கை விடுவதாயிருந்தால் நான் விஷம் தின்ருவது. தீயில் விழுந்தாவது, நீரில் முழுகியாவது, கயிற்றினால் நான்று கொண்டாவது பிராணனை விட்டு விடுவேன் என்ருள். நளன், லோகபாலர்களாகிய தேவர்கள் வந்திருக்கையில் அவர்களை மறந்துவிட்டு ஒரு மனிதனை நீ யெப்படி விரும்பக் கூடும்? அந்தத் தேவர்கள் லோக இரட்சகர்கள். நான் அவர்களுடைய பாததூளிக்குக் கூடச் சமானமாக மாட்டேன். தேவர்களுடைய கோபத்தினால் அநித்தியமுள்ள மனிதன் சாவான். ஆகையினாலே அழகிய பெண்ணே! என்னைக் காப்பாற்றும் பொருட்டு அவர்களில் ஒருவரை உன் நாயகராகத் தேர்ந்துகொள். நீ தேவர்களை விரும்பி யடைந்தால், ஒரு நாளும் அழுக்கடையாத வஸ்திரங்களையும், பலவர்ணமுள்ள விசித்திரமாலைகளையும், சிறந்த ஆபரணங்களையும் பெறுவாய். சகல வுலகங்களையும் ஒருங்கே யெரிக்கத் தக்க அக்கினி தேவனை எந்தப் பெண் தான் கணவனாக விரும்ப மாட்டாள்? தர்மவழியில் நடவாத ஜீவாத்மாக்களைத் தன்னுடைய கதையால் அடித்துத் தண்டிக்கும் எமதர்மராஜனை எந்தப் பெண் தன் கணவனாக அடைய விரும்ப மாட்டாள்? தானவர்களையும் தைத்தியர்களையும் சங்கரிப்பவனும், புண்ணியாத்துமாவும், மகிமை பெற்றவனும், தேவர்களுக்கு இறைவனுமான மஹேந்திரனைக் கணவனாக அடைய விரும்பாத ஸ்திரீயும் உண்டா? உலகரட்சகர்களுக்குள் சிறந்த வருணனை எப்படித் தடுக்க முடியும். ஆகையால், நான் சொன்னபடி சீக்கிரமாய்ச் செய். சிநேகத்தினால் நான் சொல்வதைக் கேள் என்று சொன்னான். தமயந்தியானவள், பூபாலகரே! நான் உண்மையாகச் சொல்லுகிறேன். எல்லாத் தேவர்களையும் நமஸ்காரம் பண்ணி விட்டு, உம்மையே எனது நாயகராக நிச்சயம் செய்து விட்டேன் என்ருள். நளராஜன், கையை குவித்துக் கும்பிட்டுக்கொண்டு பயந்துடன் நிற்கிற தமயந்தியைப் பார்த்து, மேன்மையுள்ளவளே! குற்றமற்றவளே! உன் இஷ்டப்படி செய், தேவர்களுக்கு வாக்குறுதி கூறி, அவர்களுக்காகத் தூது பேச வந்த நான் என் சொந்த நன்மையை எப்படிக் கருதக் கூடும்? ஒருவன் தன் நன்மையைத் தேடுகிறதே தருமமாக இருந்தால் நானும் அப்படியே செய்வேன். ஆகையால் நான் சொன்ன முறைப்படி நடக்க முயலு என்ருன். தமயந்தி கண்ணீர் சொரிந்து விக்கலுடன் நளனைப் பார்த்துப் புன் நகையோடு சொல்லுகிருள். நான் உம்மை மணம் புரிவதையே தர்மமாக நினைக்கிறேன். இந்திரன் முதலான தேவர்களுடன் சுயம்வர சாலைக்கு வந்து சேரும். அந்தத் தேவர்களுக்கு முன்னாலே உம்மை என் நாயகராக நான் வரிக்கிறேன். அப்போது உமக்குக் குற்றம் வராது என்ருள். பிறகு நளன் தேவர்கள் கூடி யிருக்கிற இடத்துக்கு வந்து சேர்ந்தான். நளன் வந்ததும் தேவர்கள் அங்கே நடந்தவைகளை எல்லாங் கேட்டார்கள்.

25—31. உங்களுடைய கட்டளையினால், பழமையான காவற்காரர்கள் தண்டங்களை யுடையவர்களாய்க் காத்துக்கொண்டிருக்கிற தமயந்தியின் மாளிகையின் உள்ளே ப்ரவேசித்தேன். தமயந்தியினுடைய அழகான அறைக்குப் போனேன் உங்களுடைய கருணையாலே தமயந்தியைத் தவிர வேறொருவரும் என்னைப் பார்க்கவில்லை. அவளுடைய பணிவிடைப் பெண்களும் பார்த்தார்கள். நானும் அவர்களைப் பார்த்தேன். மகிமையுள்ள தேவர்களே! என்னைக் கண்டதும் அவர்கள் ஆச்சரியமடைந்தார்கள். நான் உங்களைப்பற்றி எடுத்துச் சொன்னேன். ஆயினும் தமயந்தி என்னையே கணவனாக விரும்பினாள். என் சுயம்வர மண்டபத்துக்குத் தேவர்களோடு வந்து சேரு. அந்தத் தேவர்களுக்கு முன்னாலே நான உன்னைக் கணவனாக வரிக்கிறேன். இப்படி நான் செய்தால் உன் மேல் குற்றம் அடையாது. ஓ தேவர்களே! அங்கே நடந்தவைகளெல்லா வற்றையும் உள்ளபடி உங்களுக்குச் சொல்லிவிட்டேன். இனிமேல் உங்களுடைய கருத்தின்படி நிச்சயிக்கத் தக்கது என்று சொன்னான்.

---

## 57-வது அத்தியாயம்.

நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி,

1—16. சுயம்வரத்துக்குக் குறிக்கப்பட்ட தகுந்த காலமும் சுபமுகூர்த்தமும் வந்தபோது பீமராஜன் பூலோக இராஜர்கள் எல்லாரையும் சபைக்கு வரும்படி மரியாதையோடு அழைத்தான். இதைக் கேட்ட அரசர்கள் எல்லாரும் தமயந்தியின் மேல் காதல் மிகுந்தவர்களாய்ச் சுயம்வர சாலைக்குப் போனார்கள். சொர்ணமயமான தூண்கள் நிறைந்து அலங்காரமா யிருக்கிறதும், அழகான வாயில்களை யுடையதுமான சுயம்வர மண்டபத்துக்குள்ளே சிங்கங்கள் மலைக் குகைக்குள் புகுவது போல நுழைந்தார்கள். சகல அரசர்களுமணங்கமழும் மாலைகள் புனைந்து, உயர்ந்த ஆபரணங்களைத் தரித்துக்கொண்டு, காதுகளில் இரத்தின குண்டலங்கள் அணிந்துகொண்டு வந்து தத்தமக்குரிய ஆசனங்களில் உட்கார்ந்தார்கள். அந்த அரசர்கள் கூடி யிருந்தது போகவதி நகரத்தில் நாகர்கள் கூடினது போலவும், மலைக் குகையில் புலிகள் கூடினது போலவும் இருந்தது. அவர்களுடைய புஜங்கள் தண்டங்களைப் போல அழகிய உருவமுடையனவாயும், பளபளப்பாயு மிருந்தன. அவர்களுடைய முகங்கள் அழகிய மூக்கினையும், புருவங்களையும் உடையவைகளாய் அழகு நிறைந்து விளங்கின. ஆகாயத்தில் காணப்படுகிற நட்சத்திரங்களைப் போலவும் பிரகாசித்தன. அதன் பின் அழகில் சிறந்த தமயந்தியானவள் சுயம்வரசாலையில் வந்தாள். அவளைப் பார்த்தவுடன் இராஜகூட்டங்களின் கண்களும் மனமும் அவளுடைய அழகில் முழுகிப்போயின. அவர்களுடைய கண்கள் மீட்க முடியாதவைகளாயின. அவர்களுடைய கண்கள் முதலில்

15

தமயந்தியினுடைய எந்த அவயத்தைப் பார்த்ததோ அதை விட்டு அகலாமல் அதிலேயே படிந்திருந்தது. யுதிஷ்டிரரே! அப்போது தாதிகள் இராஜாக்களின் பெயர்களை யெல்லாம் எடுத்துச் சொன்னார்கள். ஐந்து புருஷர்கள் ஒரே வடிவம் உடையவர்களா யிருப்பதைத் தமயந்தி பார்த்தாள். ஐந்து பேர்கள் ஒரே மாதிரியான ரூபம் உடையவர்களா யிருக்கிறதைப் பார்த்தபின் தமயந்தி மனதில் உண்மையான நளன் யாரோ என்கிற சந்தேக முண்டாயிற்று. இவ்வுருவங்களை யுடைய இவர்களில் தேவர்களின்னாரென்பதை யுணர்ந்து, நளனை நிசசயிப்பது எப்படி? என்று நினைத்து மிகத துயரமடைந்தாள். அதன் பிறகு தேவர்களுக் குரிய சில அடையாளங்களைத தான் கேட்டபடி ஆராய்ந்தாள். தேவர்களுக்குச் சில அடையாளங்க ளுண்டென்று பெரியோர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த அடையாளங்கள் உலகத்து அரசர்கள் ஒருவருக்கும் இராது. அதைப் பற்றி பல மாதிரியாக யோசித்துப் பார்த்தாள். கடைசியில் இரண்டு கைகளையும் குவித்துக் கும்பிட்டுக்கொண்டு, அந்தத் தேவர்களைத் துதித்துப் பயத்துடன் சொல்லுகிறாள்.

17—23. ஓ தேவர்களே! ஒரு அன்னபட்சி வந்து எனக்குச் சொன்ன பின் நான் நளமஹாராஜனையே எனக்குக் கணவனாக நிசசயித்துவிட்டேன். ஓ தேவர்களே! அவரைப் பிரதிக்ஞைக்காக எனக்குத் தெரிவியுங்கள். நான் மனதாலும் வாக்காலும் அவரையே உறுதி செய்துவிட்டேன். அதற்காகவும நீங்கள் நளனை யெனக்குக் காட்ட வேண்டும். தேவர்கள் இவ் விஷயத்தை அனுக்கிரகித்த பின் நளனை நான் கணவனாகப் பெற வேண்டும். இந்தச் சத்தியத்துக்காகத் தேவர்கள் எனக்கு நளமஹாராஜனை வெளிப்படுத்த வேண்டும். லோகபாலர்களான தேவர்கள் தங்களுடைய சுயரூபத்தை எடுத்துக்கொண்டு நளமஹாராஜனை வெளிப்படுத்த வேண்டியது அவர்களுக்குக் கடமை யாகும் என்று பிரார்த்தித்தாள். இதைக் கேட்ட தேவர்கள் தமயந்தியினுடைய மன உறுதியையும் நளனிடத்தில் அவள் வைத்திருக்கிற அன்பையும், அவள் களங்கமற்ற இருதயம் உள்ளவளா யிருப்பதையும் உணர்ந்துகொண்டு, அவளுடைய கருத்தை நிறைவேற்றும் பொருட்டுத் தங்களுடைய சுய ரூபத்தைத் தரித்துக்கொண்டார்கள்.

24—32. அதன் பிறகு, தேவர்களுடைய சரீரத்தில் வெயர்வை இல்லாமலிருப்பதையும், கண்கள் இமையாம லிருப்பதையும், அணிந்திருக்கிற மாலை வாடாம லிருப்பதையும், பாதம் பூமியில் படாமலிருப்பதையும் பார்த்தாள். அதற்கு மாறாக நளனுக்கு வெயர்வை யுண்டாயிருப்பதையும், அவன் அணிந்திருக்கிற புஷ்பமாலைகள் வாடி அழுக்கடைந்திருப்பதையும், கண்கள் இமைக்கிறதையும், பாதம் பூமியில் படிய உடகார்ந்திருப்பதையும் கண்டாள். பாரதரே! இந்த வித்தியாசங்களால் தமயந்தி தேவர்களையும் நளனையும் அறிந்து நளனைத் தன் கணவனாக வரித்தாள். அவள் எண்ணம நிறைவேறிற்று. நளன் கழுத்தில் அழகான மலர் மாலையைச சூட்டினாள். இதைக் கண்ட தேவர்க

ளும் மஹா ரிஷிகளும் ஆச்சரியமடைந்து அற்புதம் அற்புதம் என்று கூறிப் புகழ்ந்தார்கள. நளனையும் புகழ்ந்தார்கள். கௌரவரே! வீரசேன மஹாரா ஜன் புத்திரனாகிய நளன் இவ்விதமாகத் தமயந்தியை மனைவியாகப் பெற்றுப் பின் வருகிறபடி அவளுக்குத் தேறுதல் சொன்னான். தேவானுக்கிரகம் பெற்ற வளே! நீ எல்லாத் தேவர்களையும் மறுத்து மனிதனாகிய என்னை உனக்கு நா யகனாக வரித்தாய். ஆகையால் நான் எப்போதும் உன் கட்டளைப்படி நடக்க எப்போதும் சித்தமா யிருக்கிறேன். குற்றமற்ற புன் சிரிப்புடையவளே! என் ஜீவனுள்ள பரியந்தம் இந்தச் சரீரம் உன்னுடையது. என் ஜீவனுள்ளவரைக் கும் நீ என் சரீரத்தில் தங்கியிரு என்று சொன்னான்.

33—39. தமயந்தி தன்னுடைய இரு கைகளையும் கூப்பிக்கொண்டு, அவ னுக்கு மரியாதை செய்தாள். அதன் பிறகு அந்தத் தம்பதிகள் அக்கினி முத லான தேவர்களைப் பார்த்து, தங்களைக் காப்பாற்றும்படி பிரார்த்தித்தார்கள். பின் காந்தி பொருந்திய லோகபாலர்களான தேவர்கள், தமயந்தியை மனைவி யாகப் பெற்ற நளராஜனிடத்தில் கருணை யுடையவர்களாய் அவர்கள் எல்லா ரும் எட்டு வரங்கள் அளித்தார்கள். முதலில் சசிகாந்தனாகிய தேவேந்திர னானவன் நளன் செய்கிற யாகங்களில் தான் பிரசன்னமாய் வருவதாகவும் இகம் பரம் என்கிற இரண்டு உலகங்களிலும் உயர்ந்த இடத்தை அடையவும் வரங் கொடுத்தான். அக்கினிதேவன் நளராஜன் எவ்விடத்தில் இருந்து நினைத்த போதிலும் அவ்வவ்விடங்களில் தான் பிரத்தியட்சமாய் வருவதாகச் சொன்னான். தன்னுடைய வாசஸ்தலம் போன்ற மஹா ஜோதியுள்ள இடத் தை அடையவும் வரங் கொடுத்தான். எமதருமராஜன், சிறந்த போஜனத்தை யும், உயர்ந்த தருமத்தையும் அடையும்படி வரங் கொடுத்தான். வருணதே வன், நளமஹாராஜன் எந்த இடத்தில் தன்னை நினைத்தாலும் அங்கே பிரத்தி யட்சமாவதாகவும் உயர்ந்த வாசனையுள்ள புஷ்பமாலைகளை அடையும்படியாக வும் வரம் கொடுத்தான். இப்படியாக நாலு தேவர்களும் எட்டு வரங்களைக் கொடுத்தார்கள்.

39—47. தேவேந்திரன் முதலான நால்வர்களும் நளனுக்கு வரம் அளி த்தபின் தத்தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். பூலோகத்து அரசர்க ளும் இந்தக் கல்யாணத்தைப் புகழ்ந்து வியந்தார்கள். பின்பு தத்தம் இடம் போய்ச் சேர்ந்தார்கள். எல்லாரும் போனபின், மேலான சித்தமுடைய பீம ராஜன் மன மகிழ்ந்து நளனுக்கும் தமயந்திக்கும் விவாகத்தை நிறைவேற்றி னன். நளமஹாராஜன் கொஞ்ச காலம் தன் மாமன் ஊரில் வசித்துக்கொண் டிருந்து, பிறகு பீமராஜனிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு தன் நகரத்துக்குப் போய்ச் சேர்ந்தான். நளன் இரத்தினம் போன்றவளான தமயந்தி யென்கிற பெண்ணை அடைந்து, அவளோடு தேவேந்திரனும் இந்திராணியும் போலக் கூடி வாழ்ந்தான். தன்னுடைய குடிகளை மிக்க அன்பாய்ப் பரிபாலித்தான். நகுஷராஜன் புத்திரனான யயாதியைப் போலப் பிராமணர்களுக்குத் திரண்ட

தக்ஷிணை கொடுத்து அசுவமேதம் முதலிய அநேக யாகங்கள் செய்தான். தேவர்களைப் போலத் தமயந்தியோடு கூடச் சோலைகளிலும். இன்பமான காடுகளிலும் சஞ்சரித்தான். அவனுக்குத் தமயந்தியினிடமாக இந்திரசேனன் என்று ஒரு புத்திரனும், இந்திரசேனை என்று ஒரு பெண்ணும் பிறந்தார்கள். நளன் அநேக யாகங்களைச் செய்துகொண்டும், செல்வம் நிறைந்த தன் இராஜ்யத்தைப் பரிபாலித்துக்கொண்டும், தமயந்தியோடு சந்தோஷமாய் வாசம் பண்ணிக் கொண்டிருந்தான்.

---

## 58-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—6. தமயந்தி நளனுக்கு மாலை சூட்டின பின் லோகபாலர்களான தேவர்கள் தங்கள் லோகங்களுக்குப் போனார்கள். போகும் வழியில் கலிபுருஷன் துவாபரனோடு சேர்ந்து வருகிறதைப் பார்த்தார்கள். இந்திரன் கலியைப் பார்த்து, கலியே! நீ துவாபரனோடு சேர்ந்து எங்கே போகிறாய்? எனக்குச் சொல் என்று கேட்டான். கலி, நான் தமயந்தியின் சுயம்வரத்தைப் பற்றிக் கேள்விப் பட்டேன். ஆதலால் அங்கே போகிறேன். என் மனம் அவளையே பற்றி யிருக்கிறது. ஆகையால் அவளை நான் மனைவியாக அடையப் போகிறேன் என்றான். இந்திரன் அவனைப்பார்த்துச் சிரித்து அந்தச் சுயம்வரம் நடந்துபோயிற்று, எங்களுக்கு எதிரில், தமயந்தி நளமஹாராஜனுக்கு மாலை சூட்டினாள் என்றான். இதைக் கேட்டவுடன் கலிக்குக் கோபம் பெருகியது. தேவர்களை நோக்கிச் சொல்லுகிறான். தமயந்தியானவள் தேவர்கள் எல்லாரையும் அவமானம் செய்து ஒரு மனிதனுக்கு மாலை சூட்டினபடியால், நியாயப்படி அவளைத் தண்டிக்க வேண்டும் என்றான். தேவேந்திரன் கலியை நோக்கித், தமயந்தி எங்களுடைய கட்டளையாலேதான் நளனை மணந்தாள் என்று பின் வருகிறபடி சொல்லுகிறான்.

8—14. எந்தப் பெண்தான் நளனைக் கணவனாக அடைய விரும்ப மாட்டாள்? அந்த நளனிடத்தில் மேலான சகல சற்குணங்களும் நிறைந்திருக்கின்றன. வைதிக சம்பந்தமான எல்லாவற்றையும் உணர்ந்திருக்கிறான். விரதம் தவறாதவன்; நாலு வேதங்களையும், ஐந்தாவது வேதமென்று பேர்பெற்ற புராணங்களையும் கற்றறிந் திருக்கிறான். விதிப்படி யாகங்களைச் செய்து தேவர்களைத் திருப்தி செய்விக்கிறான்; ஒருவருக்கும் துன்பம் செய்வதில்லை; சத்தியவந்தன்; வாக்குறுதி உள்ளவன். அவனிடத்தில் சதயமும், மன்னிக்கிறதும், ஞானமும், அரிய தவமும், பரிசுத்தமும், தன்னடக்கமும், பொறுமையும் நிலை பெற்றிருக்கின்றன. லோகபாலகர்களைப் போலவே அவனும் மகிமையுள்ள அரசன், கலியே! இப்படிப்பட்ட சகல குணங்களும் நிறைந்த நளமஹாராஜ

ளைச் சபிக்கிற மூடன் தன்னையே சபித்துக்கொண்டவனாகிறான், அவன் தன்னைத் தானே கொலை செய்துகொண்டவனு மாகிறான். சற்குணங்கள் எல்லாம் நிறைந்திருக்கிற அந்த நளனைத் தூஷிக்கிறவன் அளவிடப்படாத ஆழமுள்ள விசாலமான நரகமென்கிற பெரியகுழியில் விழுந்து பலவகையான துன்பங்களை அனுபவிப்பான். தேவர்கள் துவாபரன் கலி யிவர்களிடத்தில் இப்படிச் சொல்லிவிட்டு வானுலகத்துக்குப் போய்விட்டார்கள். அவர்கள் போன பின் கலி துவாபரனை நோக்கித், துவாபரா! எனக்குக் கோபம் அடங்கவில்லை. நான் நளனிடத்தில் பிரவேசித்து அவனை இராஜ்யத்தி னின்றும் விலக்கி விடுகிறேன். பீமராஜன் புத்திரியான தமயந்தியோடு அவன் சுகம் அனுபவித்துக் கொண்டிருக்கக் கூடாது. நான் உன்னை அவனுக்கு எதிரியாக்கிச் சூதாடச் செய்கிறேன். நீ யெனக்கு உபகாரம் செய்ய வேண்டும் என்று சொன்னான்.

―――

## 59-வது அத்தியாயம்.

நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—8. துவாபரனோடு இப்படிப் பேசி நிச்சயம் பண்ணிக்கொண்டபின், கலியானவன் நளனிடத்துக்குப் போனான். எப்போதும் நளனிடத்தில் குற்றம் கண்டுபிடிக்கக் காத்துக்கொண்டிருந்தான். நளனுடைய பட்டணத்திலேயே வசித்துக்கொண் டிருந்தான். பன்னிரண்டாம் வருஷத்தில் நளனிடத்தில் ஒரு குற்றம் கண்டுபிடித்தான். ஒரு நாள் நளன் வாய் கொப்புளித்துவிட்டுக் கால் கழுவாமல் சந்தியாவந்தனம் செய்தான். முதலில் கால் கழுவாமையால் கலி அவனுக்குட் பிரவேசித்தான். நளனுக்குட் பிரவேசித்தபின் கலி புஷ்கர ராஜனிடம் போய், நீ நளனோடு சூதாட வா. என் உதவியால் நீ சூதாட்டத்தில் நளனை ஜயிப்பாய். நளனைத் தோற்கச் செய்து, அவனுடைய இராஜ்யத்தை ஜயித்து நிஷத தேசத்தை நீ ஆளலாம் என்றான். பின் புஷ்கரனுக்கு சூதாடும் வித்தையை நன்றாய்ப் போதித்து அதில் அவனைச் சிறந்தவனாகச் செய்து விட்டான். அதன் பிறகு புஷ்கரன் நளனிடத்துக்குப் போனான். நளனைப் பார்த்துச் சூதாட்டம் விளையாடுவோம் என்று பல முறை சொன்னான். தமயந்திக்கு எதிரில் புஷ்கரன் சூதாட்டத்துக்கு அழைத்தபடியால் நளன் அதை மறுக்கத் துணியாமல் ஒப்புக்கொண்டு, அதற்கு ஒரு காலத்தையும் குறிப்பிட்டான்.

9—13. கலியினால் மயங்கி யிருக்கிற நளன் சூதாட்டத்தில் சொர்ண விக்கிரகங்களையும், வெள்ளி விக்கிரகங்களையும், குதிரைகளுடன் கூடிய தேர்களையும், வஸ்திரங்களையும் தோற்றான். சூதாட்டத்தினால் மதி மயங்கி இருந்தபடியால் தன் சிநேகிதர்களுடைய நல்ல வார்த்தைகளைக் கூடக் கேட்கவில்லை. பிறகு நகரத்திலுள்ள ஜனங்களும், மந்திரிகளும் இதைக் கேள்விப்பட்டுச்

சூதாட்டத்தை விலக்குகிறதற்காக வந்தார்கள். நளனுடைய தேர்க்காரன் தமயந்தியினிடத்தில் வந்து அம்மா! மந்திரிகளும் குடிகளும் வாயிலில் வந்து காத்துக்கொண்டிருக்கிறார்கள். அம்மா! இராஜாவின் சூதாட்டம் அவர்களுக்குச் சம்மதமில்லை. அவர்களோ தர்மத்திலும், அர்த்தத்திலும் தேர்ந்தவர்கள் என்று சொன்னான்.

14—. அதன்பின் பீமராஜன் புத்திரியான தமயந்தி மிக்க துயரமடைந்து, தன்னறிவையும் இழந்து, நளனிடத்துக்குப் போய் விம்மி அழுதுகொண்டு சொல்லுகிறாள். மஹாராஜனே! குடிகளும் மந்திரிகளும் உம்மைப் பார்க்க வந்து வாயிற்படியில் காத்துக்கொண் டிருக்கிறார்கள் என்று பல தரம் சொன்னாள். கலி வசப்பட்ட நளன் அவர்களுக்காவது தன் மனைவிக்காவது ஒரு பதிலும் சொல்லவில்லை. மந்திரிகளும் குடிகளும் மனம் வருந்தி இனி நளன் இராஜ்யத்தில் நிலைத்திருக்கமாட்டான் என்று சொல்லிக்கொண்டு தத்தம் வாசஸ்தலத்துக்குப் போய்விட்டார்கள். பிறகு புஷ்கரனும் நளனும் பல மாதங்கள் வரையில் சூதாடினார்கள். அவற்றில் எல்லாம் நளனே தோல்வியடைந்தான்.

---

## 60-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பாவத் தொடர்ச்சி.

1—10. நளன் சூதாட்டத்தில் பைத்தியம் பிடித்திருக்கிறதையும், அறிவு மயங்கி யிருக்கிறதையும், தமயந்தி அறிந்து ஆற்ற முடியாத துக்கமடைந்தாள். இது தன் நாயகனுக்குப் பெரும் கெடுதியாகவே முடியுமென்று கருதி வருந்தினாள். நளன் சகல சொத்துக்களையும் இழந்துவிட்டதைத் தெரிந்துகொண்டு அவனுக்கு நன்மை செய்ய உத்தேசித்தாள். மதிக்கத் தக்கவர்களும், எல்லாருக்கும் நன்மை செய்வதிலேயே கருத்துள்ளவர்களும, நன்றாய்ப் பேசத் தெரிந்தவர்களுமான தன்னுடைய செவிலி (வளர்த்த தாய்)யையும், வேலைக்காரியையும் பார்த்துச் சொல்லுகிறாள். பிருகத்ஸேநா! நீ நளமஹாராஜன் பேரால் மந்திரிகளை அழைத்து இழந்துபோன பொருள் எவை? இன்னம் பாக்கி யிருக்கிறது என்ன? என்று கேளு என்றாள். நளனுடைய உத்தரவைக் கேட்டதும் "இது நம் எல்லாருக்கும் துர் அதிர்ஷ்டகாலம்" என்று சொல்லிக்கொண்டே நளனிடம் வந்தார்கள். மறுபடியும் தமயந்தி நளனிடம் போய் மந்திரிகள் வந்திருப்பதைச் சொன்னாள். நளன் மறு மொழி ஒன்றும் சொல்லவில்லை. அதனால் தமயந்தி வெட்கமடைந்து தன் அறைக்குப் போய்விட்டாள். நளன் எல்லா ஆட்டத்திலும் தோல்வி யடைவதையும், பொருள்களை இழந்துபோகிறதையும் தன் செவிலியினிடம் சொல்லி, அம்மா! ஆபத்துச் சீக்கிரத்தில் வந்துவிடும். தேர்ப்பாகனை அரசன் ஆக்ஞையால் அழைத்துக்கொண்டு வா என்றாள்.

11—20. செவிலி தேரப்பாகனை அழைத்துக்கொண்டு வந்தாள். தமயந்தி அந்தத் தேர்ப்பாகனை யினிய மொழிகளால் தேற்றி அவனிடத்தில் சமயோசிதமான வசனங்களைச் சொல்லுகிறாள். வார்ஷ்ணேயா! அரசன் உனக்குச் செய்த நன்மைகளை யெல்லாம அறிந்திருப்பாய். ஆகையால் அரசனுக்குத் துக்கம் நேரிட்ட இந்தக் காலத்தில் உதவிசெய். நமது அரசன் புஷ்கரனால் தோல்வி அடைந்து வருகிறார். சீக்கிரத்தில் பிரமாதம் உண்டாகும் என்பதில் சந்தேகமில்லை. சொக்கட்டான் காய புஷ்கரனுடைய இஷ்டம்போல விழுகிறது. நமது அரசனுக்கு விரோதமாக இருக்கிறது. நாம் சொல்லுகிறது ஒன்றும் அரசன்காதில் ஏறகவில்லை. அவர் மேல் குற்றம் சொல்லக்கூடாது. சூதாட்டத்தால் அறிவு மயங்கி யிருக்கிறார். தேரப்பாகனே! நான் இப்பொழுது உன் உதவியை நாடுகிறேன். என் கட்டளைப்படி நட. என் மனம் தீவிரப்படுகிறது. அரசனுக்கு அபாயம் சீக்கிரம் வரும். ஆகையால் நீ சீக்கிரமாய் மஹாராஜாவின் பிரியமுள்ள குதிரைகளைத் தேரில் பூட்டி, என் புத்திரனையும், புத்திரியையும் ஏற்றிக்கொண்டு குண்டினபுரம் போ. என் மாதா பிதாக்களிடத்தில குழந்தைகளையும், தேர் குதிரைகளையும் விட்டுவிடு. அதன் பின நீ உனக்கு இஷ்டமான இடத்துக்குப் போ என்று சொன்னாள்.

21—25. தேரப்பாகன் தமயந்தி சொன்னவைகளை யெல்லாம் பிரதான மந்திரிகளுக்குத் தெளிவாய்ச் சொனனான். அவாகளும் அப்படிச் செய்கிறதே உத்தம மென்று நிசசயித்து அவனுக்கு உத்தரவு கொடுத்தாாகள். தேர்ப்பாகன் நளனுடைய இரண்டு குழந்தைகளையும தேர்மே லேற்றிக்கொண்டு விதாப்ப தேசத்துக்கு விரைந்து போனான். அவவிடத்தில் இரண்டு குழந்தைகளையும் தோ குதிரைகளையும் பீமராஜனிடத்தில் ஒப்புவித்து விட்டுப், பீமனை வணங்கிச செலவு பெற்றுக்கொண்டு, நளனைப் பற்றி மனதில் தீராத் துக்கத்துடன் அயோத்தி நகரம போனான். ரிதுபர்ண ராஜனைக் கண்டு, அவனிடத்தில் தேர்ப்பாகனாக அமர்ந்துவிட்டான்.

---

## 61-வது அத்தியாயம்.

நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—8 தேர்ப்பாகன் போன பின், நளனுடைய இராஜ்யத்தையும், மற்றுமுள்ள அவனுடைய எல்லாப் பொருள்களையும் புஷ்கரன் ஜயித்துக் கொண்டான். பிறகு நளனைப் பார்த்துக் கபடச் சிரிப்புடன் சொல்லுகிறான். நாம் மறுபடியும் சூதாடுவோம். ஆனால் உனக்குப் பந்தயம் வைக்க என்ன இருக்கிறது? தமயந்தி மாத்திரம்தான் இருக்கிறாள். நீ சரி யென்று நினைத்தால் அவளை வைத்து ஆடு என்றான். இப்படிப் புஷ்கரன் சொன்ன

போது நளனுடைய இருதயம் துக்கத்தால் வெடிப்பது போலிருந்தது. ஒரு வார்த்தை கூடப் புஷ்கரனிடத்தில் பேசவில்லை. தான் தரித்துக்கொண்டிருந்த ஆடை ஆபரணங்களை யெல்லாம் கழற்றி வைத்துவிட்டான். ஒரு துண்டு வஸ்திரத்தை மாத்திரம் உடுத்துக்கொண்டு, தன் சரீரமெல்லாம் திறந்துவிட்டுத் தன் அன்பர்கள் எல்லாரும் துக்கப்படத், தன் செல்வத்தையும் இராஜ்யத்தையும் விட்டு விட்டுப் புறப்பட்டுப் போனான். தமயந்தியும் ஒரு துண்டு வஸ்திரத்தை யுடுத்துக்கொண்டு தன் நாயகனைத் தொடர்ந்து போனாள். தன் பத்தினியோடு அந்த நகரத்திற்கு வெளியில் மூன்று இரவு தங்கி யிருந்தான். அதற்குள், புஷ்கரன் யாராவது நளனிடம் போய் அவனை உபசரித்தால், அவர்களைக் கொல்வேன் என்று பிரசித்தப் படுத்தினான்.

9—17. யுதிஷ்டிரரே! புஷ்கரனுடைய கட்டளையால் ஜனங்கள் பயந்து நளனுக்கு மரியாதை செய்யவில்லை. நகரத்துக்கு வெளியில் மூன்று நாள் தண்ணீரை மாத்திரம் குடித்துக்கொண்டு ஜீவனம் செய்தான். அவனுக்குப் பசி அதிகரித்தது. கனி கிழங்குகளைச் சேகரிப்பதற்காகப் புறப்பட்டுப் போனான். தமயந்தியும் கூடவே போனாள். இப்படிப் பல நாள் கழிந்த பின் ஒரு நாள் ஒரு பொன் னிறமான சில பட்சிகள் நளனுக்கு எதிரில் வந்தன அவற்றை நளன் பார்த்து இன்று இவைகளைப் புசிப்போம், இவற்றின் இறகுகள் நமக்கு ஐசுவரியமாகவும் ஆகலாம் என்று தனக்குள் எண்ணிக்கொண்டான். உடனே தான் தரித்துக்கொண் டிருந்த வஸ்திரத்தால் அதை மூடினான். அந்தப் பட்சிகள் துண்டுவஸ்திரத்தோடு ஆகாயத்தில் பறந்து போயின. அப்போது நளன் நிர்வாணியாய்த் தலை குனிந்து விசனத்தோடு பூமியில் உட்கார்ந்துகொண்டான். அவனைப் பார்த்து அந்தப் பட்சிகள் சொல்லுகின்றன. பெரிய மூடனே! நாங்களும் அந்தச் சூதே. உன்னுடைய வஸ்திரத்தைக் கவர்ந்து போவதற்காகவே யிங்கே வந்தோம். நீ வஸ்திர முடுததுக்கொண்டு போகிறது நிச்சயமாகவே எங்களுக்குச் சம்மதமில்லை என்று சொல்லின. அதன் பின் நளன் தமயந்தியைப் பார்த்துச் சொல்லுகிறான்.

18—24. குற்றமற்ற பெண்ணே! என்னை இராஜ செல்வத்தினின்று விலக்கியதும், என் குடிகளை எனக்கு மரியாதை செய்யாதபடி தடுத்ததும் அந்தச் சூதாட்டக்காரனே. அவனே இந்தப் பட்சிரூபமாக வந்து என் வஸ்திரங்களையும் பறித்துக்கொண்டு போனான். நான் இப்போது துக்கத்தாலும் பசியாலும் வருத்தப் படுகிறேன். இனி நான் ஜீவனம் பண்ணுகிறதே கஷ்டம். அவனுடைய கட்டளையால் நமது நகரத்து ஜனங்கள் கூட எனக்கு மரியாதை செய்யாமற் போனார்கள். உன் கணவனாகிய நான் அனேக இடையூறுகளை அடைகிறேன். அறிவு மயங்கி இருக்கிறேன். ஆகையால் உனக்கு நன்மையான வார்த்தைகளைச் சொல்லுகிறேன் கேளு. இதோ உனக் கெதிரிலிருக்கிற இந்த மார்க்கமானது அவந்தி நகரத்துக்குப் போகிறது. அதோ தெரிகிற மலைத் தொடர்தான் விந்தியமலை. அதன் பக்கத்தில் ஒரு நதி ஓடுகிறது.

அதன் கரையில் அநேக ரிஷி ஆச்சிரமங்க ளிருக்கின்றன. அங்கே ஏராள மாகக் காய், கனி, கிழங்குகள் அகப்படும். இந்தப் பாதை விதர்ப்பதேசத்துக் குக் கொண்டுபோய் விடுமென்று பல தரம் எடுத்துச் சொன்னான்.

25—31. இதைக்கேட்ட தமயந்தி விம்மி அழுதுகொண்டு, மிகுந்த துக் கத்தோடு நளனிடத்தில் சொல்லுகிறாள், பூபாலகரே! உமது கருத்தை யோ சித்துப் பார்க்கையில் எனக்குத் துக்கமுண்டாகிறது. மனம் நடுங்குகிறது, என்னுடைய உறுப்புகள் சோர்கின்றன. உம்மை இந்தக் காட்டில் தனியாக விட்டு நான் எப்படிப் பிரிந்து போவேன்? நீரோ இராஜ்யத்தையும் செல்வத் தையு மிழந்து, உடுத்துக்கொள்ள ஒரு துண்டு வஸ்திரங்கூட இல்லாமல் பசி யால் வருந்தித் துன்பப்பட்டுக்கொண்டிருக்கிறீர். மகிமைபெற்ற மன்னவ ரே! நீர் துக்கத்தாலும் பசியாலும் இந்தக் காட்டில் வருத்தப்படுகிறபோது, நீர் முன்பு அனுபவித்த சுகத்தை நினைத்துத் துக்கப்பட நேரிடும். அந்தத் துன்பகா லத்தில் நான் உமக்கு ஆறுதல் சொல்லித் தேற்றுவேன். சகல வகையான துக் கங்களுக்கும் மனைவிக்குச் சமமான ஔஷதம் வேறொன்று மில்லை. இதுதான் வைத்தியர்கள் எல்லாருடைய கருத்தும் என்று நான் நிச்சயமாய்ச் சொல்லு கிறேன் என்றாள். இதைக் கேட்ட நளமஹாராஜன், சிறந்த இடையினை யுடைய தமயந்தீ! நீ சொன்னதெல்லாம் சரிதான். துக்கப் படுகிற மனித னுக்குத் தன் மனைவியைக் காட்டிலும் வேறு உதவி இல்லை யென்பது நிச்ச யம். நீயேன் பயப்படுகிறாய்? நான் உன்னை விட்டு விடுகிறதில்லை என்றான்.

32—36. மஹாராஜாவே! நீர் என்னை விட்டுப் பிரிய நினையாவிட்டால் விதர்ப்ப தேசத்துக்குப் போகிற மார்க்கத்தை அடிக்கடி குறிப்பிட்டு ஏன் சொ ல்லவேண்டும்? மஹாராஜாவே! நீர் என்னை விட்டுப் பிரியமாட்டீ ரென்பது எனக்குத் தெரியும். உம்முடைய மனம் கலியால் கெட்டுப்போ யிருக்கிறது. நீர் அடிக்கடி விதர்ப்பதேசத்துக்குப் போகிற வழியை எனக்குச் சொல்லுகி றீர். இப்படிச் சொல்வதினாலே எனக்குத் துயரத்தை உண்டாக்குகிறீர். நீர் என்னை என்னுடைய சுற்றத்தாரிடம் போகச் சொல்வீரானால் அதுவே உம் மைப் விட்டுப் பிரிவதாகும். நாம் இருவரும் சேர்ந்து விதர்ப்பதேசத்துக்குப் போவோம். விதர்ப்ப தேசத்து அரசன் உம்மைப் பூஜிப்பார். நீர் அங்கே மரியாதை பெறுவீர். அங்கே சுகமாக வாழ்ந்திருக்கலாம் என்றாள்.

---

## 62-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—19. நளன் சொல்லுகிறான். உன் தகப்பனாருடைய இராஜ்யம் என் னுடைய சொந்த இராஜ்யம் போன்றதுதான். இதில் யாதொரு சந்தேகமு மில்லை. இப்பொழுது எந்தக் காரணத்தாலும் வர மாட்டேன். என்னுடைய

விஷயம் குழப்பமா யிருக்கிறபடியால் நான் வரக் கூடாது. என்னுடைய வாழ்வுகளை யெல்லாம் நான் மீண்டும் அடையும்படியான காலம் வரும். உன்னுடைய மனோரதம் அப்பொழுது நிறைவேறும். நானும் அங்கே வருவதால் உனக்கு துக்கம் அதிகப்படும் என்றான். இப்படியாக அடிக்கடி சொல்லித் தமயந்திக்குத் தேறுதல் சொன்னான். தமயந்தி உடுத்திருந்த வஸ்திரத்தின் ஒரு பாதியைத் தான் உடுத்துக்கொண்டான். இருவரும் ஒரு வஸ்திரத்தை உடுத்துக்கொண்டே வனத்தில் அங்கு மிங்கும் அலைந்து திரிந்து பசியாலும் தாகத்தினாலும் களைத்து அங்குள்ள ஒரு சாவடி போய்ச் சேர்ந்தார்கள். நளனும் தமயந்தியும் அவ்விடத்திலே தரையிலே உட்கார்ந்து கொண்டார்கள். பசிக் களைப்பால் மெலிந்து தமயந்தியும் நளனும் புழுதி நிறைந்த தரையில் படுத்துக்கொண்டார்கள். அதிக சுகத்தை அனுபவித்துக்கொண் டிருந்த தமயந்தி திடீரென்று சம்பத்தை யிழந்து தரித்திர தசையை அடைந்தபடியால் தன்னை மறந்து தூங்கிவிட்டாள். நளனுடைய மனம் துக்கத்தால் கலங்கியிருந்தபடியால் அவனுக்கு நித்திரை வரவில்லை. இராஜ்யத்தை யிழந்ததையும், சிநேகிதர்களை விட்டுப் பிரிந்ததையும், காட்டில் நேர்ந்த துக்கத்தையும் பற்றி யோசித்துக்கொண் டிருக்கையில், நாம் இப்படிச் செய்வதால் என்ன வரும்? இப்படிச் செய்யாவிட்டால் என்ன உண்டாகும்? நாம் இப்பொழுது செய்யத் தக்கது யாது? இறந்துபோவதா! அல்லது, மனைவியை விட்டுப் பிரிவதா? என்கிற யோசனை தோன்றியது. தமயந்தியோ நம்மிடத்தில் வெகு நேசமுடையவளா யிருக்கிறாள். இதனாலே தான் இவள் என்னைப் பற்றித் துன்பத்தை அனுபவிக்கிறாள். நான் இவளை விட்டுப் பிரிந்தால் இவள் நிச்சயமாகவே தன் சுற்றத்தாருடன் போய்ச சேர்ந்துவிடுவாள். இவள் நம்மிடத்தில் பக்திஉள்ளவளாய் இருக்கிறபடியால், என்னுடன் கூடி யிருக்கிற வரையில் துன்பத்தைத்தான் அனுபவிக்க வேண்டியவளா யிருக்கிறாள். இவள் துன்பம் அடைகிறதானாலும் இல்லாவிட்டாலும் இவளை விட்டு விலகிப் போகிறது நல்லதா? அல்லது விலகாம லிருக்கிறது நல்லதா என்கிற சந்தேகம் உண்டாகிறது. ஒரு வேளை இவள் சுகத்தையும் அடையலாம். யுதிஷ்டிரமஹாராஜாவே! இந்த விஷயத்தைப் பற்றி அடிக்கடி சிந்தித்தான். நெடுநேரம் சிந்தித்துக், கடைசியாகத் தமயந்தியை விட்டுப் பிரியவே தீர்மானித்தான்.

14—20. பதி பக்தியினால் சிறந்திருக்கிற இவளுடைய வல்லமையினால் ஒருவரும் இவளுக்கு இடையூறு செய்யமாட்டார்கள். ஆகையினாலே மார்க்கத்தில் இவளுக்கு யாதொரு அபவாதமும் நேரிடாது. இப்படியாகக் கலியினுடைய ஏவுதலால் தமயந்தியை விட்டுப் போகவே நிச்சயித்தான். தமயந்தியோடு கூடி வாழும் விருப்பம் ஒழிந்தது. ஆயினும் அவனுக்கு வஸ்திரம் வேண்டியதா யிருந்தது. ஏனென்றால் தமயந்தியும் அவனும் ஒரே வஸ்திரத்தை உடுத்திருந்தார்கள், பின் அவளுடைய வஸ்திரத்தைக் கிழித்து ஒரு துண்டு வஸ்திரத்தை எடுத்துக்கொண்டு போக நினைத்தான். என்னுடைய அன்புள்ள

மனைவி விழுத்துக்கொள்ளாதபடி எப்படி அவள் உடுத்து இருக்கும் வஸ்திரத்தைக் கிழிப்பேன் என்று இப்படிச் சிந்தித்துக்கொண்டு அந்தச் சாவடியில் சுற்றி அலைந்தான். இப்படி அவன் அந்தச் சாவடியில் மேலும் கீழுமாக ஏறி இறங்கித் திரிகிறபோது அந்தச் சாவடியின் கிட்ட உறை யில்லாத ஒரு கத்தி கிடக்கிறதைக் கண்டான். அந்தக் கத்தியினால் தமயந்தியின் வஸ்திரத்தைக் கிழித்து ஒரு பாதியைத் தான் உடுத்துக்கொண்டான். பிறகு, தன் ஸ்மரணை தப்பித் தூங்குகிற விதர்ப்பராஜ புத்திரியை விட்டு வெகு தீவிரமாய்ப் புறப்பட்டுப் போனான். பிறகு அவளை விட்டுப் பிரிய மனம் வராமல் மறுபடியும் அந்தச் சாவடிக்குத் திரும்பிவந்தான். வந்து அவள் இருக்கிற நிலைமையைப் பார்த்துப் புலம்பத் தொடங்கினான்.

2I—29. எனது அன்புக்கிசைந்தவளே! முன்னே உன்னைக் காற்றும் சூரியனும் கூடப் பார்த்திருக்கமாட்டா. இப்பொழுது இந்தச் சாவடியில் ஆதரவு இல்லாதவளாகப் படுத்துக்கொண்டிருக்கிறாய். சிறுத்த இடையையும், இனிய புன் சிரிப்பையும் உடைய இவள் தூக்கத்தி லிருந்து தெளிந்த பின், பைத்தியம் பிடித்தவளைப் போல ஒரு துண்டு வஸ்திரத்தை உடுத்திருப்பதைப் பார்த்து எப்படி ஜீவிப்பாளோ? மகிமை பெற்றவளும், பதிவிரதையுமான தமயந்தி, மனிதசஞ்சாரம் இல்லாததும் மிருகங்களும் சர்ப்பங்களும் வசிக்கிறதுமான இந்தக் காட்டில் என்னை விட்டுத் தனியாக எப்படி அலைந்து திரிவாளோ! மேலான சித்தமுடையவளே! ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், அசுவினிதேவர்கள், வாயுக்கள் இவர்கள்தாம் உன்னைக் காப்பாற்ற வேண்டும். இல்லாவிட்டால் நீயே உன் பதிவிரதா தர்மத்தால் உன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். நளமஹாராஜன் இப்படிச் சொல்லிக்கொண்டே, கலியினாலே மதி மயங்கினான். உலகத்திலே ஒப்பும் உயர்வும் இல்லாத அழகினையுடைய தன் மனைவியை விட்டுப் போகத் தொடங்கினான். இப்படியாகக் கலியும், தமயந்தியி னிடத்திலுள்ள ஆசையும் முன்னும் பின்னுமாக இழுக்க, நளமஹாராஜன் ஊஞ்சலாடுவது போலச் சாவடிக்கு வருகிறதும் போகிறதுமாக நெடு நேரம் அலைந்து கொண்டிருந்தான். கடைசியில் கலியால் மதி யழிந்த நளன் துக்கத்தால் மிகுதியாகப் புலம்பித் தூங்குகிற தன் அன்புள்ள மனைவியை விட்டுப் பிரிந்து போனான். கலியால் புத்திகெட்டுப் பல பல எண்ணங்களை உடையவனாய்த், துக்கம் நிறைந்த மனதோடு தன் மனைவியை விட்டு அந்தக் காட்டில் தனிமையாகப் போய்விட்டான்.

---

## 63-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

I—10. பிருகதசுவர் யுதிஷ்டிரரைப் பார்த்துத் தர்மராஜாவே! நளமஹாராஜன் போன பின் அந்தத் தனிமையான காட்டிலே தமயந்தி களை தெளிந்து

நித்திரையி னின்றும் விழித்துக்கொண்டு நடுக்கத்துட னெழுந்திருந்தாள். தன்னுடைய நாயகனைப் பக்கத்தில் காணாமையால் நடு நடுங்கித் துக்கத்தால் வருந்தி, மஹாராஜாவே! மஹாராஜாவே என்று கூவி அழைத்தாள். மஹிமையுள்ள அரசனே! என் நாயகரே! நீர் ஏன் என்னைக் கைவிட்டீர்? இந்தத் தனிமையான காட்டிலே பயத்தினாலே வருந்துகிறேன்; நான் அழிந்து போனேன். மஹாராஜாவே! நீர் தர்மிஷ்டர்; சத்தியவந்தர்; என்னை விட்டுப் பிரிவதில்லையென்று வாக்குக் கொடுத்தீரே! இப்பொழுது எப்படிப் பிரிந்தீர்? இந்தப் பயங்கரமான காட்டிலே நான் தூங்கும்பொழுது என்னமாய் என்னை விட்டுவிட்டுப் போனீர்? பதிவிரதையும், பக்தியுள்ளவளான உமது பத்தினியை ஏன் துறக்கவேண்டும்? நான் உமக்கு ஒரு தப்பிதமும் செய்யவில்லையே! அன்னியர்கள் உமக்குத் தவறு செய்திருக்கலாமே தவிர நான் யாதொரு குற்றமும் செய்யவில்லையே! ஜனங்களுக்கு இறைவனே! நீர் சொன்ன வார்த்தைகளை யென்னிடத்தில் கிரமமாக நிறைவேற்றியிருக்க வேண்டும். முன் காலத்தில் லோக பாலகர்களான தேவர்களுக்கு முன்னிலையில் நீர் எனக்குக்கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டுமே! புருஷோத்தமரே! அநித்தியர்களா யுள்ளவர்கள் காலம் வருகிறவரையில் இறப்பது கூடாத விஷயம். உம்முடைய அன்புள்ள மனைவியான நான் உம்மைப் பிரிந்து ஒரு நிமிஷம் கூட ஜீவிக்கக் கூடாது. மேன்மை உள்ளவரே! இவ்வளவு பரிகாசம் போதும்; இனிமேல் வேண்டாம். ஜயிக்கப் படாதவரே! இந்தப் பயங்கரமான காட்டில் நான் அச்சத்தால் நடுங்குகிறேன். ஓ மஹாராஜனே! நான் உம்மைக் கண்டு பிடித்துவிட்டேன். நீர் சிறு தூறுகளுக்குப் பின்னாலே மறைந்து கொண்டிருக்கிறீர். ஏன் எனக்குப் பதில் சொல்லாமல் இருக்கிறீர்? அரசர்க் கரசனே! நீர் இப்படிச் செய்கிறது மிகவும் கொடியது. நான் இப்படிப் புலம்புகிறதைப் பார்த்துக்கொண்டிருந்தும் எனக்குத் தேறுதல் சொல்ல ஏன் வராமல் இருக்கிறீர்? சீக்கிரம் வாரும் என்றான்.

11—15. மஹாராஜனே! நான் எனக்காக வருத்தபபடவில்லை. வேறொன்றுக்காகவும் துக்கப்படவில்லை. என்னை விட்டு, நீர் எப்படித் தனியாக ஜீவிப்பீரோ என்பதைக் குறித்தே துக்கப்படுகிறேன். சாயங்கால வேளையில் வேலைசெய்த களையாலே மரத்தடியில் தாகத்தாலும் பசியாலும் வருந்தி உட்கார்ந்திருக்கிறபோது, உமது பக்கத்தில் நான் இல்லாமலிருந்தால் எப்படி நீர் ஜீவிப்பீர்? இப்படிக் கொடிய துக்கத்தாலும், எரிகிற கோபத்தினாலும் வருந்துகிற தமயந்தி இங்கும் அங்கும் அலறிப் புலம்பிக்கொண்டு ஓடினாள். இளம் பருவமுள்ள தமயந்தி ஒரு சமையம் திடீரென்று நிற்பாள்; ஒரு சமையம் மயங்கி விழுவாள். ஒரு சமையம் பயத்தினாலே மறைந்து கொள்வாள். உடனே அழுது புலம்புவாள். பீமராஜனுடைய புத்திரியான கற்புடைய தமயந்தி, மிகுந்த துக்கத்தினாலே மயங்கி அடிக்கடி பெருமூச் செறிந்து, அழுதுகொண்டு சொல்லுகிறாள்.

16—22. எங்களை விட அதிகமான துக்கமடைகிறவர்களும் உண்டா? யாருடைய சாபத்தினால் நளமஹாராஜா இப்படிப்பட்ட சத்துருவை அடைந்திருக்கிறார். தர்ம குணமுள்ள நள மஹாராஜாவுக்கு இப்படிப்பட்ட துன்பத்தை உண்டாக்கின பாபியான அந்தத் துஷ்டன் அவனைப் பார்க்கிலும் பெரிய பகைவனாலே துக்கத்தை அடையக் கடவன். அந்த நளராஜனுடைய பத்தினியான தமயந்தி இப்படிப் புலம்பி, மூர்க்கத்தனமான மிருகங்களால் துன்பமிகுந்துள்ள காட்டிலே தன் கணவனைத் தேட முயன்றாள். பீமராஜன் புத்திரியானவள் ஓயாமல் புலம்பிக்கொண்டு, பைத்தியம் பிடித்தவளைப் போல மஹா ராஜாவே! மஹா ராஜாவே! என்று இரைந்து கத்திக்கொண்டு அங்கும் இங்கும் ஓடித் திரிந்தாள். இப்படி ஒரு பெண் பறவையைப் போல இடை விடாமல் அழுது புலம்பிக்கொண்டு திரிகிறபோது, பசியுள்ள ஒரு பெரிய சர்ப்பத்தின் கிட்டப் போனாள். அது அவளைத் திடீரென்று பிடித்துக் கொண்டது. அப்படிக் கொடிய பாம்பினால் பிடிபட்டபோதும் அவள் தனக்காக வருத்தப்பட இல்லை. நளராஜனாகிய தன் நாயகனுக்காகவே புலம்பி வருந்தினாள்.

23—25. நாயகரே! நீர் ஏன் எனக்காக ஓடிவரவில்லை. ஒரு பெரிய சர்ப்பத்தினாலே விழுங்கப் படுகிறபோதும் கூட ஆதரவற்ற என்னைக் காப்பாற்ற வராமலிருக்கிறீர்? அரசனே! நான் இறந்து போன பின், நீர் என்னை நினைத்துக்கொண்டால் எப்படி ஜீவிப்பீர்? என் நாயகரே! இன்றைய தினம் என்னை விட்டு எப்படிப் போனீர்? உமது சாபமும் ஒழிந்து, உமது சரியான புத்தியையும், ஐசுவரியத்தையும் நீர் அடைந்த பின்பு, என்னை நினைத்துக்கொண்டால் அப்போது என்னை யின்றி எப்படி ஜீவிப்பீர். நிஷததேசாதிபதியே! பாபமில்லாதவரே! கீர்த்திபெற்ற மஹாராஜாவே! நீர் வேலையால் அலுத்து இருக்கிறபோது உமது களைப்பையும், உமது பசியையும், உமது துயரத்தையும் யார் ஆற்றுவார்கள்? என்று சொல்லிப் புலம்பிக் கதறி அழுதாள்,

26—33. அப்போது அந்த நெருங்கின காட்டில் சஞ்சரித்துக்கொண்டிருந்த ஒரு வேடன், தமயந்தியினுடைய அழுகைக்குரலைக் கேட்டுச் சீக்கிரமாக அவளுக்குச் சமீபத்தில் வந்தான். வேட்டையாடிக் கொண்டிருந்த அந்த வேடன் விசாலமான கண்களையுடைய தமயந்தி சர்ப்பத்தால் விழுங்கப் படுவதைக் கண்டு, வெகு சீக்கிரமாய் ஓடிவந்து, கூரிய கத்தியினாலே அதைப் பிளந்தான். ஓ யுதிஷ்டிரரே! அந்த வேடன் தமயந்தியைச் சர்ப்பத்தினின்றும் விடுவித்து, அவளை நீரால் கழுவிச் சிறிது தெளிவித்தபின், அவளை நோக்கி நீ எப்பொழுது ஆகாரம் கொண்டாயென்று கேட்டான், மான் போன்ற கண்களை யுடையவளே! நீ யாருக்கு உரியவள்? இந்தக் காட்டில் எப்படி வந்தாய்? இப்படிப்பட்ட நிலைமையை எவ்வாறு அடைந்தாய்? யுதிஷ்டிரரே! வேடன் இப்படிக் கேட்டபோது தமயந்தி நடந்த எல்லாவற்றையும் அவனுக்குச் சுருக்கமாகச் சொன்னாள். தமயந்தி ஒரு சிறியதுண்டுவஸ்திரம்

உடுத்திருப்பதையும், பருத்தஸ்தனங்களையும், சிறந்து அழகான இடை யினையும், மிருதுவான குற்றமற்ற அவயவங்களையும், பூர்ணசந்திரனைப் போலப் பிரகாசிக்கிற முகத்தையும், கண்மடல் மயிரால் அலங்காரமாய் விளங்குகிற கண்களையும், மதுரமான வசனங்களையும் பார்த்து அந்த வேடன் மன்மதன் வசப்பட்டு மயக்கினான்.

34—39. மோகத்தால் வெறிகொண்டு, சாந்தமாகவும் மெதுவாகவும் பேசத் தொடங்கினான். தமயந்தி அவனுடைய செய்கையைச் சீக்கிரத்தில் அறிந்துகொண்டாள். அந்தத் துராத்மாவின் எண்ணத்தை தெரிந்துகொண்டு, பதிவிரதையான தமயந்தி கோபத்தால் ஜ்வலிக்கிறவள் போலக் காணப்பட்டாள். அந்தத் துஷ்டனான வேடன் மிகுந்த கோபத்தையும், பொங்குகிற காமத்தையும் உடையவனாய், அவளைப் பலாத்காரம் செய்யத் தொடங்கினான். எரிகிற அக்கினி ஜ்வாலையாலும் வெல்ல முடியாதவளும், துக்கத்தால் நிறைந்தவளும், கணவனையும் இராஜ்யத்தையும் விட்டு இருப்பவளுமான தமயந்தியானவள், தன்னுடைய வார்த்தையைக் கேட்டு அடங்காத வேடனைச் சபித்தாள், நிஷத ராஜனைத் தவிர மற்ற ஆடவரை என் மனதினாலாவது நினையாமலிருப்பது நிஜமானால் இந்த அற்பனான வேடன் இறந்து விடக் கடவன் என்று சபித்தாள். அவள் இந்த வார்த்தைகளைச் சொன்ன வுடனே அக்கினியால் எரிக்கப்பட்ட மரத்தைப் போல அந்த வேடன் பூமியில் விழுந்து மடிந்தான்.

---

## 64-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத தொடர்ச்சி.

1—12. தாமரை மலர் போலும் கண்களை உடைய தமயந்தியானவள் அந்த வேடனை அழித்த பின் ஜன சஞ்சார மில்லாத அந்தப் பயங்கரமான அடவிக்குள்ளே நெடுந்தூரம் போய் விட்டாள். சிள் வண்டினுடைய சப்தத்தாலும், சிங்கங்களின் கர்ஜனையாலும், சிவிங்கி, வேங்கை, காட்டெருமை, கரடி, மான் முதலியவற்றின் தொனியாலும், பலவகை பட்சிகளின் ஒலியாலும் எதிரொலி இடுகின்றதும், திருடர்களும், வேறு பல ஈன ஜாதியாரும் நிறைந்திருப்பதும், சால விருட்சங்கள், கிஞ்சுகம், அர்ஜுனம், அரிதமரம், சந்தன மரம், அரசமரம் முதலிய மரங்களடர்ந்ததுமான அந்தக் காட்டில் தனியே அலைந்தாள். பிரம்பு, பத்மகம், நெல்லி, கடம்பு, உடும்பரம், இலந்தை, வில்வம் ஆல், பனை, ஈந்து, அரிதகி, முதலியவைகளும் அடர்ந்திருந்தன. பல உலோகங்கள், நிறைந்த சுரங்கங்கள் நிறைந்த மலைகளையும் கண்டாள். துறுகளில் பலவகைப் பட்சிகள் பாடிக்கொண்டிருந்தன. அழகான பள்ளத் தாக்குகள் இருந்தன. ஆறுகள், ஏரிகள், ஓடைகள், பலவகையான மிருகங்கள் பட்சிகளையும் பார்த்தாள். ஏராளமான சர்ப்பங்கள், அரக்கர்கள் பயங்கரமான உருவமுள்ள

பூதங்கள் எங்கும் காணப்பட்டன. மடுக்கள், குளங்கள், மலைச் சிகரங்கள், எப்பக்கங்களிலும் நிறைந்திருந்தன. சித்திரம் போன்ற அருவிகள் நீரூற்றுகள் முதலியவற்றையும் கண்டாள். மர்தை மர்தையான காட்டெருமைகளையும், பன்றிகளையும், கரடிகளையும், சர்ப்பங்களையும் பார்த்தாள். தர்ம ராஜாவே! பிறகு விதர்ப்பராஜ புத்திரியான தமயந்தி ஒரு கல்லின் மேல் உட்கார்ந்துகொண்டு, தன் கணவனை நினைத்துகொண்டு, துக்கத்தினாலே கை கால் முதலிய அங்கங்கள் பதறப் புலம்பினாள்.

13—31. விசாலமான மார்பையும் நீண்ட புஜங்களையும் உடையவரே! நிஷதநாட்டாருக்கு அரசனே! இந்த ஜனசஞ்சாரம் இல்லாத வனத்தில் என்னைத் தனியாக விட்டு விட்டு இன்று எங்கே போய் விட்டீர்? வீரரே! மனிதருள் சிறந்தவரே! நீர் அசுவமேதம் முதலிய பலவகையான யாகங்களைச் செய்திருக்கிறீர். பூர்ணமான தக்ஷிணை கொடுத்திருக்கிறீர். இப்படிப்பட்ட நீர் என்னிடத்தில் பொய்யாக நடக்கிறது உமக்குத் தகாது. காந்தியுள்ளவரே! மகிமையுள்ளவரே! நீர் எனக்கு எதிரில் செய்த வாக்குத்தத்தை நினைக்க வேண்டும். பூபாலகரே! ஆகாயத்தில் சஞ்சரிக்கிற அன்னபட்சிகள் உம்மிடத்திலும், என்னிடத்திலும் சொன்னவற்றையும் நினைக்க வேண்டும். ஒரு வாக்கை நிறைவேற்றினால், அது நாலுவேதங்களையும் அங்கம் உபாங்கங்களோடு முற்றும் ஓதினபலனைத் தரும் என்பது நிச்சயம். சத்ருக்களைச் சங்கரிக்கிறவரே! பராக்கிரமம் உள்ளவரே! நீர் எனக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றினால், அது நாலு வேதங்களையும் அங்கம் உபாங்கங்களோடு முற்றும் ஓதின பலனைத் தரும் என்பது நிச்சயம். சத்ருக்களைச் சங்கரிப்பவரே! பராக்கிரமமுள்ளவரே! நீர் எனக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டும். நான் உமக்கு உரியவளா யிருந்தும் இந்தப் பயங்கரமான காட்டிலே என் எனக்கு மறுமொழி கூறாமல் இருக்கிறீர்? பெரிய தாடைகளையும், பயங்கரமான வடிவத்தையும் உடைய வனதேவதையும், பசித்துன்பமும் என்னை வருத்துகின்றன. இப்பொழுது நீர் என்னைக் காப்பாற்ற வேண்டாமா? உன்னைப் பார்க்கிலும் எனக்குப் பிரியமானவர்கள் வேறொருவரும் இல்லை என்று நீர் என்னிடத்தில் அநேகம் தடைவைகளில் சொல்லி யிருக்கிறீர். அந்தச் சொல்லை இப்போது உறுதிப்படுத்தும். உமது பிரியமுள்ள பத்தினியாகிய எனக்கு ஏன் பதில் சொல்லாமலிருக்கிறீர்? மஹாராஜனே! பெருமை உள்ளவரே! மெலிந்து, இரத்தம் வற்றி, வெளுத்து மெலிந்து ஆதரவற்று வருந்துகிறவளும், ஒரு துண்டு வஸ்திரத்தை உடுத்துக்கொண்டு, இனம் பிரிந்த மான் போலத் திரிகிறவளுமான என்னை ஏன் கவனிக்க வில்லை. மஹாராஜனே! இந்தப்பெரிய காட்டிலே உமதுபிரியமுள்ளமனைவியாகியநான் உம்மைப் பிரிந்து, வருத்தத்தினால் உம்மைக் கூப்பிடவும் நீர் ஏன் கேளாமல் இருக்கிறீர்? மஹாராஜாவே! உயர்ந்த குடிப் பிறப்பையும், சிறந்த குணங்களையும், அழகான அவயவங்கள் அமைந்த உமது வடிவழகையும், உம்மையும் நான் இன்று காணாமல்

இருக்கிறேன். நீர் என் துக்கத்தை அதிக மாக்குகிறீர். இந்த வனத்திலே சிங்கங்களும் புலிகளும் நிறைந்திருக்கின்றன. அவைகளைக் கண்டு நான் பயப்படுகிறேன். உமக்காக வருந்தித் துக்கப்படுகிறேன். நீர் எங்கேயாவது உட்கார்ந்திருக்கிறீரா? அல்லது படுத்திருக்கிறீரா? எவ்விடத்திலாவது போய் விட்டீரா? நள மஹாராஜனை இந்தக் காட்டிலே கண்டாயா என்று நான் யாரைக் கேட்பேன்? தாமரை போன்ற கண்களை உடைய நள மஹாராஜன் இவ்விடத்தில் நடக்கிறார், அல்லது இந்த இடத்திலே நின்றுகொண்டிருக்கிறார் என்கிற தேன் போன்ற மதுரவசனங்களை எவருடைய வாயினாலே கேட்பேன் காட்டுக்கு அரசனான கொடிய புலிதாடைகளை ஒப்பச் செய்துகொண்டு வருகிறது. அதனிடத்தில் கூட நான் பயம் இல்லாமல் போவேன் என்றாள்.

32—41. பிறகு தமயந்தி அந்தப் புலியைப் பார்த்து, ஓ மிருக ராஜனே! நீ இந்தக் காட்டுக்கு அரசனாயிருக்கிறாய். என்னை, விதர்ப்பராஜனுடைய புத்திரி என்றும், நிஷத தேசாதிபதியான நள மஹா ராஜனுடைய மனைவி என்றும் அறிந்துகொள். மிருகேந்திரனே! எனக்குத் தேறுதல் சொல்லு. வருத்தத்துடனும் துக்கத்துடனும் என் கணவனைத் தேடித் திரிகிறேன். அவரைப் பற்றி ஏதாவது நீ அறிந்திருக்கிறாயா? அல்லது ஒன்றுமே அறியமாட்டாயா? இல்லாவிட்டால் நீ என்னை விழுங்கி துக்கத்திலிருந்து விடுவி. இந்தக் காட்டில் அழுது கொண்டிருக்கிற என் வார்த்தையைக் கேட்டு மிருகேந்திரனான புலி சமுத்திரத்தை நோக்கி ஓடுகிற நதியின் நீரைக் குடிப்பதற்காகப் போய் விட்டது. ஆகையால் ஆகாயத்தை அளாவுகிற அழகிய கொடுமுடிகளையுடையதாய், பரிசுத்தமான பல குன்றுகளை யுடையதாய், பலவகையான உலோகங்கள் நிறைந்ததாய், விநோதமான கற்களை யுடையதாய், சிங்கம், புலி, யானை, காட்டுப்பன்றி, கரடி, மான் முதலிய மிருகங்கள் வசிப்பதாய், பலவகையான பட்சிகளும் பாடிக் கொண்டிருப்பதாய் கிஞ்சுகம், அசோகம், வகுளம், பூத்திருக்கிற கர்ணிகாரம், பிலட்சம் முதலிய மரங்கள் அடர்ந்ததாய், நீர்கோழிகள் நிறைந்துள்ள ஆறுகளை உடையதாய், சிகரங்களினாலே அலங்கரிக்கப்பட்டதாய் விளங்குகிற மலையரசு அதோ இருக்கிறது. அதனிடத்தில் கேட்கிறேன் என்றாள்.

42—48. ஓ மகிமையால் சிறந்த பர்வதமே! பார்வைக்குச் சித்திரம் போல அழகாய் விளங்கும் மலை யரசே! துக்கப் பட்டவர்களுக்குப் புகலிடமே பூமிக்கு ஆதாரமான மலையே! நான் உன்னை வணங்குகிறேன். நான் உன்னிடத்தில் வந்து நமஸ்காரம் பண்ணுகிறேன். நான் ஒரு ராஜகுமாரத்தி, ஒரு அரசனுக்கு மருமகள், இராஜ பத்தினி, என் பேர் தமயந்தி, விதர்ப்ப நாட்டு அரசனான பீமராஜன் என்னுடைய பிதா. பிருது வம்சத்தில் பிறந்தவர். நிறைந்த தக்ஷிணையோடு இராஜசூயம், அசுவமேதம் முதலிய யாகங்கள் செய்தவர்; அவர் விசாலமான அழகிய கண்களையும், பிறைபோல வளைந்த நெற்றியையும் உடையவர், நாலு வேதங்களையும் அறிந்தவர், பக்கத்திலுள்ளவர், சத்தியத்தை

யே பேசுகிறவர், பொறுமை அற்றவர், நற்குணமுடையவர், மகிமை உள்ளவர். அளவில்லாத செல்வ முடையவர், சகல நீதிகளையும் உணர்ந்து பரிசுத்தமாய் இருப்பவர், சத்துருக்களை முற்றும் அடக்கி விதர்ப்ப நாட்டாரைப் பரிபாலிக்கிறவர், ஓ மகிமையுள்ள பர்வதமே! அப்படிப்பட்ட பெருமையுள்ள பீமராஜனுடைய புத்திரியான நான் உன்னிடம் வருகிறேன். என்னுடைய மாமனார் மனிதர்களுக்குள் சிறந்தவர், நிஷத தேசத்துக்கு அரசர், அவர்பேர் வீரசேன ராஜன், மஹா பெருமையுள்ளவர்.

49—60. இவருடைய குமாரர் பராக்கிரமமுடைய வீரர், மஹா ஐசுவரிய முள்ளவர், சக்திபெற்றவர், பிதாவின் பரம்பரையில் வந்த இராஜ்யத்தை ஆளுகிறவர், நளராஜன் என்ற பேர் உள்ளவர், உருக்கி வார்த்த சொர்ணத்தைப் போன்ற வடிவ முடையவர், பிராமண விசுவாசமுள்ளவர், வேதங்களை அறிந்தவர், சற்கருமங்களைப் புரிகிறவர், சோமபானம் செய்கிறவர். அக்கினி தேவனை ஆராதிக்கிறவர், வேள்விகளைச் செய்கிறவர், மிகுந்த தர்மங்களைச் செய்கிறவர், வீரர், பாபிகளைத் தண்டிக்கிறவர், நான் அந்த நளராஜனுடைய மனைவி, இப்பொழுது ஆதரவற்றுப் போனேன். ஆகையாலே உன்னிடம் வந்தேன். நான் வாழ்வை யிழந்தேன், கணவனாலே கை விடப்பட்டேன். ஆதரவற்றுத் துக்கத்தால் வருந்துகிறேன். அவரைப்பற்றி விசாரிக்கிறதற்காக உன்னிடம் வந்திருக்கிறேன். நூறு சிகரங்களை நீ அடைந்திருப்பதால் இந்த அடர்ந்த பயங்கரமான காட்டில் எங்கேயாவது அவரைப் பார்த்தாயா? வெல்லப்படாதவரும் என் நாயகருமான நளராஜனை எங்கேயாவது கண்டாயா? மதயானைபோலக் கம்பீரமான நடையையும், நீண்ட புஜங்களையும், கீர்த்தியையும் மகிமையையும் உடைய அவரை நீ பார்த்தாயா? உயர்ந்த மலைராஜனே! அநாதையாயும், துக்கம் மிகுந்தவளாயும் இருக்கிற என்னை உனது சொந்தப் புத்திரிபோலப் பாவித்து நீ யேன் மறுமொழி கூறாமலிருக்கிறாய்? மிகுந்த சக்தியுடைய மலைராஜனே! நீதியுள்ளவனே! பூமிக்கிறைவனே! நீ இந்தக் காட்டில் இருக்கிறபடியால், நளராஜனை எனக்குக் காண்பி என்று இப்படியாகத் தமயந்தி மலையினிடத்தில் புலம்பி விட்டு மறுபடியும் அந்த வனத்தில் அலையத் தொடங்கினாள்.

61—67. மேலான அழகுள்ள அந்த கன்னியானவள் மூன்று நாள் இரவும் பகலும் சுற்றித் திரிந்தாள். அதன் பின் ஒரு ரிஷியின் ஆச்சிரமத்தைக் கண்டாள். அதிலே ரிஷிகள் வசித்திருந்தார்கள். அவர்கள் வசிஷ்டர், பிருகு, அத்திரி இவர்களைப் போன்றவர்கள். அடக்க முள்ளவர்கள். இந்திரியங்களை வென்றவர்கள். சிலர் நீரை மாத்திரம் அருந்துத்றவர்கள். சிலர் வாயுவை உண்பவர்கள். சிலர் தானாக உதிர்ந்த சருகுகளைப் புசிப்பவர்கள். மோட்ச மார்க்கத்தையே நாடுகிறவர்கள். மரவுரி மான் தோல் உடுப்பவர்கள். ரிஷிகள் குடி யிருக்கிற அந்த ஆச்சிரமத்தில் பல வகை பிராணிகள் வசிக்கிறதையும், வானரங்கள் ஏராளமாக விளையாடிக்கொண்டிருக்கிறதையும் கண்டாள். கருணையுள்ள அந்த ரிஷிகளைக் கண்ட வுடனே

தமயந்திக்குக் கொஞ்சம் ஆறுதல் உண்டாயிற்று. வீரசேன ராஜனுடைய புத்திரனான நளனுக்கு அன்புள்ள மனைவியும், பெண்களில் சிறந்தவளும், கறுத்து அகன்ற கண்களை யுடையவளும், மிகுந்த காந்தியையும் குற்றமற்ற கீர்த்தியையும் உடையவளும், நீண்ட கூந்தலுள்ளவளும், சிறுத்த இடையினை யுடையவளும், அழகிய புருவமுள்ளவளும், முத்துப் போன்ற பற்கள் பிரகாசிக்கிற முகத்தையுடையவளுமான தமயந்தி சந்நியாசிகள் வசிக்கிற அந்த ஆசிரமத்தை அடைந்தாள்.

68—73 தவத்திற் சிறந்த அந்த ரிஷிகளுக்கு நமஸ்காரம் பண்ணி மரியாதையோடு வணக்கமாய் நின்றாள். அந்தக் காட்டிலே தவச்சிரேஷ்டரான ரிஷீசுவரர்கள் தமயந்தியை உபசரித்தார்கள். பிறகு அவளை உட்காரச் சொல்லி, நாங்கள் உனக்கு என்ன செய்யவேண்டும் என்றார்கள். தமயந்தி அவர்களை நோக்கிப், பாபமில்லாத முனிவர்களே! உங்களுடைய தவசுக்கு விரோதமில்லாமல் கிரமமாக நடந்துவருகின்றதா? அக்கினி காரியம் முதலான வைதிக கர்மங்கள் சரியாக நடக்கின்றனவா? பட்சிகள் மிருகங்களால் இடையூறின்றியிருக்கிறதா என்று கேட்டாள் முனிவர்கள், மகிமை யுள்ளவளே! யாதொரு விஷயத்திலும். குறைவில்லை யென்றார்கள். பின் குற்றமற்ற பெண்ணே! உன்னுடைய மேலான அழகினாலும் ஒளியாலும் நாங்கள் ஆச்சரியம் அடைகிறோம். துக்கப்படாதே, தேறுதலடை. நீ யார்? எதைத் தேடுகிறாய் என்று கேட்டார்கள். பின்னும அவளை நோக்கிக குற்றமற்ற பெண்ணே! நீ இந்த வனதேவதையா? மலைவாழுந் தெய்வமா? அல்லது ஜல தேவதையா? நீ யார்? உண்மையைச் சொல்லு என்று சொன்னார்கள்.

74—81. தமயந்தி, ஓ துவிஜர்களே! நான் இந்த வனதேவதையு மல்ல; மலைத் தெய்வமு மல்ல; ஜலதேவதையு மல்ல; நான் மனுஷிதான. தபோநிதிகளே! நான் என்னுடைய சரித்திரததைச் சொல்லுகிறேன். நீங்கள் சற்றுக் கவனமாய்க் கேளுங்கள். விதர்ப்ப தேசத்தை ஆளுகிற பீமராஜன் என்பவருடைய குமாரத்தி. நான் வீரரும், யுத்தத்தில் ஜயத்தையே அடைகிறவரும், நிஷதநாட்டுக்கு அதிபதியும், நளன் என்கிற பெயருடையவரும், கீர்த்தி பெற்றவருமான அரசனுடைய பத்தினி. அந்த நளமஹாராஜன் தேவர்களைப் போலக் காந்தியுள்ளவர். விசாலமான கண்களையும், பூர்ணசந்திரனைப் போன்ற முகத்தையும் உடையவர்; சத்துருக்களை நாசம் செய்கிறவர்; தேவர்களை ஆராதிக்கிறவர்; வேதங்களை ஓதினவர்; சத்துருக்களின் இராஜ்யத்தைப் பிடித்துக் கொள்ளுகிறவர்; பகைவரை அடக்குகிறவர்; சத்திரிய விரதமுடையவர்; அறிவுள்ளவர், மதங்கள் எல்லாவற்றையும் உணர்ந்தவர்; உண்மையான வாக்குறுதியை உடையவர்; நிஷததேசத்தாரைப் பரிபாலிக்கிறவர்; தெய்வ வணக்கம் செய்கிறவர்; துவிஜரிடத்தில் பிரியம் உள்ளவர் ஆகிய அவர் தாம் எனது நாயகர். அவர் யாகங்களைச் செய்கிறவர்; வேதங்களையும் அவற்றின் அங்கங்களையும் அறிந்தவர்; ஒளியால் சந்திரனையும் சூரியனையும் போன்றவர்.

82—90. சத்தியத்தை நிலை நிறுத்துகிறவரும், பூமியை ஆளுகிறவருமான அவரை. துர் எண்ணமுள்ளவனும், ஈனனும், கல்விப் பயிற்சியில்லாதவஞ்சகனும், சூதாட்டததில் வல்லவனுமான ஒரு அரசன் வந்து சூதாட்டத்துக்கு அழைத்தான். அந்தச் சூதாட்டததில் அவர் தோல்வி அடைந்து ஐசுவரியத்தையும் இராஜ்யத்தையும் இழந்து போனார். நான் அந்த மகிமையுள்ள அரசனுடைய மனைவி; என் பேர் தமயந்தி. பிரிந்து போன அவரைக் காண விரும்புகிறேன் அதற்காக இந்தக் காட்டில் குறுக்கும் நெடுக்குமாக அலைந்து கொண்டிருக்கிறேன். எனது நாயகராகிய அவரைக் காண்பதற்காக மலைகள், ஆறுகள், ஏரிகள், குளங்கள், வனங்கள் எங்கும் அலைந்து திரிகிறேன். வேதியர்களே! அவருக்காகப் பயங்கரமான பிராணிகளுள்ளதும், சிங்கம், புலிகள் நிறைந்திருப்பதுமான இந்தக் கொடிய ஆரணியத்தில் அலைந்து கொண்டிருக்கிறேன். சாவ சக்தியுமுள்ள உங்களுடைய இன்பமான ஆச்சிரமத்தை யிப்போது கண்டேன். இன்னும் கொஞ்சநாள் அவரைக் காணமல் இருந்தால் இந்தச் சரீரத்தை ஒழித்துவிட்டுச் சுகமடையக் கருதுகிறேன். மனிதர்களுக்குள் சிரேஷ்டரான அவரைப் பிரிந்த பின் இந்த ஜீவனால் என்ன பிரயோசனம்? அவரைக் குறித்துத் துக்கத்தால் வருந்துகிற நான் இன்று எப்படி உயிர் வாழ்வேன்? என்று சொல்லி வருந்தினாள்.

91—101. சத்தியவந்தர்களான அந்த முனிவர்கள், தன் கணவனைக் குறித்து வருந்துகிற பீமராஜ குமாரியான தமயந்தியை நோக்கிப் பின்வருகிறபடி சொன்னார்கள். வணக்கமும் பெருமையும் உள்ளவளே! இனிமேல் நீ சுகத்தை அடைவாய். கொஞ்ச காலத்துக்குப் பின் நீ அவரை அடைவாயென்று நாங்கள் எங்களுடைய தவசின் வல்லமையால் அறிகிறோம். பீமராஜ குமாரியே! சத்தியவந்தரும், பெருமையுள்ள வீரரும், நிஷத தேசாதிபதியுமான நளமஹாராஜனை இந்தத் துன்பத்தின் முடிவில் காண்பாய். பீமராஜ புத்திரியான தமயந்திக்கு இப்படிச் சொன்ன உடனே, அந்த ரிஷிகள் தங்களுடைய ஓமாக்கினி அந்த ஆச்சிரமம் இவைகளோடு கூடத் திடீரென்று மறைந்து போனார்கள் ஆச்சரியமான இந்தச் சம்பவத்தைக் கண்டதும் தமயந்தி அதிசயத்தால் ஒன்றுந் தோன்றாதவளாய், இது என்ன ஆச்சரியம்! இப்பொழுது நான் சொற்பனம் கண்டேனே? ரிஷிகளும் ரிஷி ஆச்சிரமும் எங்கே? மாயமான பரிசுத்த ஆறுகளும், அதில் வசித்த நீர்க் கோழிகளும் எங்கேபோயின? கனிகளும் மலர்களும் நிறைந்து அழகாயிருந்த விருட்சங்கள் எல்லாம் எங்கே? இப்படிச் சற்று யோசித்து, தன் கணவனைக் குறித்து மிகுந்த துக்கமடைந்து நிறம் மாறி வெளுத்தாள். பின் அவ்விடத்தை விட்டு வேறொரு இடத்துக்குப் போய், ஒரு அசோக மரத்தைக் கண்டு அதன் கீழ் உட்கார்ந்து கொண்டு புலம்பி அழத் தொடங்கினாள். கண்ணீர் பெருக விம்மி அழுதாள்.

102—121. அந்த அசோகமரம் இலைகள் தழைத்து அடர்ந்து, மலர்கள் நிறைந்து வெகு இன்பமா யிருந்தது. பட்சிகள் எல்லாம் எதிரொலி உண்

டாகும்படி பாடிக்கொண்டிருந்தன. அதைப் பார்த்து, ஓ அசோகதருவே! என் துக்கத்தைச் சீக்கிரத்தில் ஆற்று. இந்தக் காட்டில் எங்கேயாவது அரசனான நளனைக் கண்டாயா? என் பிரியமுள்ள நாயகரான நளராஜன் ஒரு துண்டு வஸ்திரம் தரித்திருப்பார். அவர் துக்கத்தினாலே இந்தக் காட்டினுள் போனார். நீ அசோகம் (துக்கத்தை நீக்குகிறது) என்னும் பேரை அடைந்திருக்கிறபடியால், சீக்கிரமாய் என் துக்கத்தை ஒழி. நான் புறப்பட்டுப் போகும்படி செய். பிறகு தமயந்தி அந்த அசோகமரத்தை மூன்றுதரம் பிரதட்சிணம் செய்துவிட்டு அந்தக் காட்டில் அதிகப் பயங்கரமான இடத்துக்குப் போனாள். போகும்போது அநேக விதமான மரங்களையும், ஓடைகளையும், அழகான மலைகளையும், பலவகையான பட்சிகளையும் மிருகங்களையும் பார்த்தாள். அதிசயமான ஆறுகளையும், குகைகளையும், நதி தீரங்களையும் கண்டாள். இப்படிப் போகும்போது அநேகம் வியாபாரிகள் யானைகளையும், குதிரைகளையும், வண்டிகளையும் ஓட்டிக்கொண்டு வந்து அகலமாயும், அழகாயும், இன்பமாயும், குளிர்ந்த ஜலமுடையதாயும் உள்ள ஒரு ஆற்றங்கரையில் தங்கி யிருக்கிறதைப் பார்த்தாள். அந்த ஆறானது பிரப்பஞ் செடிகளாலும், நாரை முதலிய நீர்ப் பறவைகளாலும், நிறைந்திருப்பதையும், சக்கரவாகங்கள் பாடிக் கொண்டிருப்பதையும், ஆமைகள், முதலைகள் மீன்கள் நிறைந்து, இடை யிடையே சிறிய திட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்குவதையும் பார்த்தாள். பிறகு அந்த வியாபாரிகளுக்கு மத்தியில் சென்றாள். தமயந்தியைக் கண்ட சிலர் ஓடிப்போனார்கள். சிலர் இரைந்து கூவினார்கள். சிலர் மனக்கலக்க மடைந்தார்கள். சிலர் சிரித்தார்கள். சிலர் அவளிடத்தில் அன்பு காட்டினார்கள். சிலர் அவளை நோக்கிப் பெண்ணரசியே! நீ யார்? யாருக்கு உரியவள்? இந்தக் காட்டில் நீ எதைத் தேடுகிறாய்? உன்னைப் பார்த்தவுடன் நீ மனுஷியா? அல்லது இந்த வன தேவதையா? மலைத் தெய்வமா என்று சந்தேகம் உண்டாகிறது. நாங்கள் உன்னைச் சரணம் அடைகிறோம். உண்மையைச் சொல் என்று கேட்டார்கள். நீ யட்ச ஸ்திரீயானாலும், இராட்சதியானாலும், தெய்வப்பெண்ணாயிருந்தாலும் எப்படியானாலும் எங்களுக்கு அநுக்கிரகம் செய்யவேண்டும் எங்களையும் எங்கள் பொருள்களையும் காப்பாற்றவேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள்.

122—132. இப்படி அவர்கள் கேட்டதும் தமயந்தி துக்கத்தோடு தன் கணவனைத் தியானித்துக்கொண்டு சொல்லுகிறாள். ஓ வர்த்தகர்களே! வர்த்தக சங்கத் தலைவர்களே! நான் மனுஷஸ்திரீதான். நான் ஒரு இராஜகுமாரத்தி. ஒரு அரசனுடைய மனைவி. என் நாயகரான மன்னவரைத் தேடிக்கொண்டு திரிகிறேன். என் கணவன் நிஷத தேசாதிபதியான நளராஜன். நான் அவருடைய மனைவி. நீங்கள் என் கணவனான நளராஜனைப் பார்த்திருந்தால் தாமதியாமல் உடனே சொல்லுங்கள் என்றாள். அந்த வர்த்தக சங்கத் தலைவனான சுசி என்பவன் சொல்லுகிறான். குற்றமற்ற அழகினையுடையவளே! நான் ஒரு வியாபாரி; இந்த வர்த்தகர் கூட்டத்துக்குத் தலைவன். நளன் என்ற பேருள்ளவரை

நான் பார்த்ததே யில்லை, இவ்வளவு பெரிதான காட்டிலே புலி, சிங்கம், சிறுத்தை, யானை, எருமை முதலிய மிருகங்களையும் பட்சிகளையும், வேறுமுள்ள பிராணிகளையும் பார்த்திருக்கிறேனே தவிர மனிதரைக்கத்தானைப் பார்த்ததே யில்லை. உன்னைத் தவிர வேறு மனிதர்கள் இங்கே சஞ்சரிக்கவில்லை. யட்சராஜனாகிய மணிபத்திரன்தான் இன்றையதினம் எங்களைக் காப்பாற்றவேண்டும். பிறகு, தமயந்தி அவனைப் பார்த்து நீங்கள் எங்கே போகிறீர்கள்? எனக்குச் சொல்லுங்கள் என்றாள். நாங்கள் வியாபாரம் செய்வதற்காகச் சுபாகு மஹாராஜனுடைய இராஜ்யமான சேதி நாட்டுக்குப் போகிறோம் என்றான்.

---

## 65-வது அத்தியாயம்.

நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—19. பிறகு, தமயந்தியும் அந்த வர்த்தகக் கூட்டத்தாரோடு சேர்ந்து தன் கணவனைத் தேடப் புறப்பட்டுப் போனாள். சில நாள் சென்ற பின், அந்தக் காட்டிலே ஒரு பெரிய ஏரி யிருந்தது. அந்த ஏரியில் அழகான தாமரை பூத்து நிறைந்திருந்தது. அதன் கரையில் பல வகையான புற்களும், விறகுகளும், பல வகைக் கனிகளும் மலர்களும் நிறைந்து வெகு அழகா யிருந்தது. அநேகமான பட்சிகள் வசித்தன. அதிலுள்ள ஜலம் தெளிவாயும், குளிர்ச்சியாயு மிருந்தது. அதைக் கண்டதும் வர்த்தகர்கள் அங்கே தங்கினார்கள். சூரியன் அஸ்தமித்தது. நடு ராத்திரியில் எல்லாரும் அயர்ந்து நித்திரை செய்தார்கள். அப்போது யானைக் கூட்டங்கள் வந்தன. மலை ஆறுகளில் நீர் குடிக்கப் போயின. அப்போது அந்த வர்த்தகர்களையும், அவர்களுடைய யானைகளையும் பார்த்தன. மனிதரோடு பழகி யிருக்கிற யானைகளைக் கண்டதும், அந்தக் காட்டானைகள் கோபத்தோடு அவைகளைக் கொல்லும் பொருட்டு அவைகளின்மேல் பாய்ந்தன. அநேக குதிரைகளையும் ஒட்டகங்களையும் கொன்றன. வர்த்தகர்கள் கதறிக்கொண்டு ஓடினார்கள். அவர்களில் அநேகரை யானைகள் கொன்றன. சிலர் மரங்களில் ஏறிக்கொண்டார்கள். சிலரைத் துதிக்கையால் கொன்றன. சிலரைக் காலால் மிதித்துக் கொன்றன. இப்படித் தெய்வகதியாக யானைகளால் அநேகர் மடிந்தார்கள். மூன்று உலகங்களையும் நடுங்கச் செய்யும்படியான கூக்குரல் உண்டாயிற்று. அவ்விடத்தில் நெருப்பும் பற்றி யெரிந்தது. என்னைக் காப்பாற்றும் காப்பாற்றும் என்ற சத்தமே மிகுந்திருந்தது. அநேகர் தங்களுடைய இரத்தினம் முதலியவற்றை எறிந்துவிட்டு உயிர் தப்புவதற்காக ஓடினார்கள். இப்படிக் கொலை சம்பவித்த போது உண்டான சத்தத்தால் தமயந்தி விழித்துக்கொண்டாள்,

20—24. தாமரை மலரின் இதழ் போன்ற கண்களை யுடைய தமயந்தியானவள் தற்செயலாய் நேரிட்ட அந்தக் கொலையைக் கண்ணால் கண்டாள். அது உலகம் முழுமையும் நடுங்கத் தக்கதா யிருந்தது. அதனால் தமயந்தி பய

ந்து திப்பிரமை அடைந்தாள். பரிதாபமுள்ள முகத்தை யுடையவளாய், மூச்சு விடக் கூடச் சக்தியற்றவளாயு மிருந்தாள். கொலை உண்ணாமல் தப்பித்துக் கொண்ட வியாபாரிகள் எல்லாரும் ஒன்றாய்ச் சேர்ந்து இறந்துபோனவர்களை யெல்லாம் பார்த்து, இப்படிப்பட்ட கொலை நடக்கக் காரணமென்ன வென்று யோசித்தார்கள். நாம் ருத்திரமூர்த்தியையாவது, வைசிரவணனை (குபேரனை) யாவது ஆராதியாமல் இருந்திருப்போம். விக்கினங்களை உண்டாக்குகிற தெய்வத்தை வணங்காமல் இருந்திருப்போம். அந்த தேவதைகளுக்குச் செலுத்தவேண்டிய காணிக்கைகளைச் செலுத்தாமல் இருந்திருப்போம். அல்லது இந்த அகால மரணம். நாம் முதலிற் கண்ட பட்சி சகுனத்தின் பயனாய் இருக்கலாம். நமது நட்சத்திரங்களும் விரோதமா யிருக்கவில்லை. இப்படிப்பட்ட கலகம் உண்டாகிறதற்கு வேறு காரணம் ஒன்றையும் காணோம என்றார்கள். தங்களுடைய செல்வத்தையும் சிநேகரையும் இழந்த சிலர் மறுபடியும் சொல்லுகிறார்கள்.

25—30. பைத்தியம் கொண்டவளைப் போல ஒரு பெண் நமது சங்கத்தில் வந்து சேர்ந்தாளே! அவள் மனுஷரிடத்தில் இல்லாத ரூபமுடையவளா யிருக்கிறாள். அவளாலே தான் இந்த அபாயம் சம்பவித்திருக்கலாம். நிச்சயமாகவே அவள், இராட்சதி, யட்சஸ்திரீ, பிசாச ஜாதிப் பெண் இவர்களில் ஒருத்தியா யிருக்கவேண்டும். வேறு காரணம் உண்டென்று சந்தேகிக்க இடம் இல்லாமையால், இவளாலேயே யிந்தக் கொடிய அபாயம் நேர்ந்திருக்கவேண்டும். அநேகமான வர்த்தகருடைய கொலைக்கு மூலமாயிருந்த அவளைக் கண்டால், கல்லெறிந்தாவது, மண் புல் கட்டைகளாலாவது, கையால் அடித்தாவது கொல்லவேண்டும் என்றார்கள். இதைக் கேட்ட தமயந்தி பயத்தையும் வெட்கத்தையும் அடைந்தாள், அவர்களுடைய செய்கையாலே சந்தேகப்பட்டுப் பயத்தோடு அவ்விடத்தை விட்டு ஓடிப்போனாள். போகும்போது பின் வருகிறபடி தன்னைக் கடிந்து பேசிக்கொண்டே போனாள்.

31—36. தேவகோபம் என்மேல் மூர்க்கமாய்ப் பாய்கின்றது. ஆகையால் எனக்குச் சமாதான முண்டாகமாட்டாது. எந்தப் பாபகர்மத்தால் இந்த ஆபத்து வந்திருக்கலாம்? நான் எவருக்காவது ஒரு கெடுதி செய்திருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. மனதாலாவது, செய்கையாலாவது, வார்த்தையாலாவது ஒருவருக்கும் தீங்கு செய்ததில்லை. அப்படிச் செய்ததாக என் மனதுக்குத் தோன்றவுமில்லை ஆகையால் இது எதனால் உண்டாயிருக்கலாம்? இந்தக் கஷ்டங்க ளெல்லாம் பூர்வகர்மங்களைப் பற்றி வந்திருக்கலாம். எனது நாயகர் இராஜ்யத்தை யிழந்ததும், அவருடைய பந்துவாலேயே சூதாட்டத்தில் தோல்வி யடைந்ததையும், கணவனையும் குழந்தைகளையும் பிரிந்ததும், ஆதரவற்ற இந்த நிலைமையும், இந்தக் காட்டில் சஞ்சரிக்கிறதும், ஆகிய இவைக ளெல்லாம் உண்டானதற்குக் காரணமும் அதுவாகத்தா னிருக்கவேண்டும் என்று கூறினாள், மறுநாட் காலையில் மிஞ்சி யிருந்த வியாபாரிகள், இறந்து

போன தங்களுடைய பிதா புத்திரன், சகோதரன், சிநேகிதர் முதலியவர்களுக்காக அழுது புலம்பிக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போனார்கள்.

37—45. பிறகு தமயந்தி மறுபடியும் புலம்புகிறாள். பூர்வத்தில் நான் எப்படிப்பட்ட பாபம் பண்ணியிருக்கிறேன்? மஹா கொடிது. என் துர் அதிர்ஷ்டத்தினால் இந்தக் காட்டில் எனக்குத் துணையாயிருந்த வர்த்தகர்களும் மடிந்துபோனார்கள். இதனாலே நான் இன்னம் நெடு நாளைக்குக் கொடும் துன்பம் அனுபவிக்கநேரிடுமென்று கருதுகிறேன். ஒருவனும் குறிப்பிட்ட காலம் வருகிறவரைக்கும் சாகமாட்டான் என்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அது நிச்சயம்தான். இல்லாவிட்டால் அந்த யானைக் கூட்டங்களால் நானும் ஏன் மடிந்திருக்கக் கூடாது? விதியினாலே உண்டாகிறதைத் தவிர வேறொன்றையும் மனிதன் அடையமாட்டான். என்னுடைய குழந்தைப் பருவமுதலாக ஒருவருக்காவது மனத்தாலும், மொழியாலும், செய்கையாலும் ஒரு தீமையும் செய்ததில்லை. பின் என்ன காரணத்தால் இப்படிப்பட்ட ஆபத்துக்கள் எனக்கு வருகின்றன? என் சுயம்வரம நடந்தகாலத்தில் நான் நளமஹாராஜன் நிமித்தம் தேவர்களை மறுத்துவிட்டேன். அந்தத் தேவர்களாலேதான் இந்தத் துன்பங்கள் வந்திருக்கவேண்டும் என்று நான் நிச்சயமாய் எண்ணுகிறேன். அதனாலேதான நான் கணவனைப் பிரிந்து துக்கப்படுகிறேன் என்று, இப்படிச் சொல்லி, அதன் பின் துக்கத்தோடு கணவனை நமஸ்கரித்துப் புறப்பட்டாள். முன் சொன்ன வர்த்தகர்களோடு சில பிராமணர்களும் வந்திருந்தார்கள். அவர்கள் யானைக் கூட்டங்களுக்கு அகப்படாமல் தப்பித்துக்கொண்டிருந்தார்கள். சதா வேதத்தை ஓதுகிறவர்கள். அந்தப் பிராமணர்களுடன் தமயந்தி சேர்ந்து அவர்களைத் தொடர்ந்து போனாள். அவர்களோடு வேகமாய் நடந்து சாயங்காலம் சேதிராஜனாகிய சுபாகுராஜனுடைய இராஜநகரம் போய்ச் சேர்ந்தாள்.

46—54. தமயந்தி தன் பாதி சரீரத்தை ஒரு சிறிய துண்டு வஸ்திரத்தால் மறைத்துக்கொண்டு அந்தந்த நகரத்துக்குள் நுழைந்தாள். பலஹீனமுள்ளவளாயும், அவிழ்ந்த கூந்தலை யுடையவளாயும், நீராடாமல் அழுக்குப் படிந்த சரீரமுடையவளாயும், பைத்தியம் பிடித்தவள்போலவும் காணப்படுகிற தமயந்தியை நகரத்து ஜனங்கள் பார்த்துப் பயந்தார்கள். அந் நகரத்திலுள்ள சிறுவர்கள் அதிசயமடைந்து அவளைத் தொடர்ந்து போனார்கள். இப்படி நடந்து அரண்மனைக்கு எதிரில் வந்தாள். சுபாகு ராஜாவின் மனைவி அதைப் பார்த்துத் தன் செவிலியை நீ போய் அந்தப் பெண்ணை இங்கே அழைத்துக்கொண்டுவா என்று கட்டளை யிட்டாள். தமயந்தி ஜனங்களால் வருத்தப்படுத்தப்பட்டு, ஆதாவற்றவளாய்த் துக்கத்தோடு தனக்கு ஒத்தாசை செய்கிறவர்களைத் தேடிக்கொண்டிருந்தாள். அப்போது செவிலி வந்து கூட்டத்தை விலக்கிவிட்டுத் தமயந்தியை அரண்மனைக்குள் அழைத்துக்கொண்டு

போனான். அவள் ஆச்சரியம் அடைந்து, தமயந்தியைப் பார்த்து அழகான சரீரமுள்ள உனக்குத் துக்கம் எப்படி வந்தது என்று கேட்டாள். மேகத்தின் மத்தியில் மின்னல் பிரகாசிக்கிறது போல நீ ஒளி வீசிப் பிரகாசிக்கிறாய். ஆபரணங்கள் அணியாமலிருந்தும் நீ அழகால் ஜ்வலிக்கிறாய். இந்த அழகு மனிதர்களுக்கு இராது. நீ யார்? நீ யாருடைய மனைவி? உண்மையைச் சொல் என்று செவிலி கேட்டாள். அதற்குத் தமயந்தி சொல்லுகிறாள்.

55—64. நான் பதி பக்தியுள்ள ஒரு மனுஷ ஸ்திரீ. உயர்ந்த ஜாதியில் பிறந்த பணிவிடைப் பெண். நான் விரும்பின இடத்தில் வசிப்பேன் கிழங்கு கனிகளைப் புசிப்பேன். நான் தனிமையா யிருக்கிறேன். சாயங்கால வேளையில் ஒரு இடத்தில் தங்குவேன். என் நாயகர் அளவில்லாத புண்ணியமுடையவர். என்னிடத்தில் எப்போதும் அன்புள்ளவர். நானும் அவரிடத்தில் அன்புடையவள். அவருடைய நிழலைப்போல அவரைப் பின் தொடர்ந்து வந்தேன். ஒரு சமையம் அவர் சூதாட்டத்தில் தோல்வி யடைந்தார். அதனால் அவர் வனத்தில் வாசம் பண்ண நேர்ந்தது. அவர் உன்மத்தனைப்போல ஒரு துண்டு வஸ்திரத்தை உடுத்துக்கொண்டு துக்கத்துடன் வனத்துக்கு வருவதைப் பார்த்து அவர் மனதுக்கு ஆறுதல் உண்டாம் பொருட்டு நானும் அவர் கூடவே வந்தேன். ஒரு நாள் அவர் பசியால் வருந்தி என்னைப் பிரிந்து போய்விட்டார். அதன் பின் நான் இந்த வஸ்திரத்துடன் அநேகநாள் தூக்கமில்லாமல் அலைந்தேன். நான் தூங்குவதற்காகப் படுத்துக்கொண்டேன். அநேகம் நான் தூங்கிவிட்டேன். அவர் போகும்போது என்னுடைய வஸ்திரத்தைக் கிழித்து ஒரு பாதியை எடுத்துக்கொண்டு போய்விட்டார். நான் அவருக்கு ஒரு குற்றமும் செய்யவில்லை. அப்படி யிருந்தும் அவர் என்னை தனியேவிட்டுப் பிரிந்துபோனார். அதனால் நான் துக்கத்துடன் அவரைத் தேடிக்கொண்டு திரிகிறேன். அவரைக் காண முடியவில்லை. அவர் தேவனைப் போலப் பிரகாசமுடையவர். நான் அவரையே தெய்வமாகக் கொண்டு வணங்குவேன். அவர் என்னிடத்தில் மிகுந்த நேசமுள்ளவர் என்று சொன்னாள். அப்படி தமயந்தி விம்மி அழுதுகொண்டு சொன்னதை அரசி கேட்டு அவளுக்குச் சொல்லுகிறாள்.

65—71. பாக்கியமுள்ளவளே! மேன்மையுள்ளவளே! நீ யிங்கே என்னுடன்கூட இரு. உன்னிடத்தில் நான் பிரியமா யிருக்கிறேன். என் வேலைக்காரர்கள் உன் கணவனைத் தேடுவார்கள். ஒருவேளை, வனத்தில் அலைந்து கொண்டிருக்கிற உன் கணவன் இங்கே வந்தாலும் வரக்கூடும். நீ இங்கே தங்கி யிருந்தால் உன் பர்த்தாவை அடைவாய் என்றாள். அதைக் கேட்ட தமயந்தி சொல்லுகிறாள். அம்மா! உமது இஷ்டம்போல இங்கே உம்மிடத்தில் இருக்கிறேன். ஆனால் நான் சேஷமான அன்னத்தைப் புசிக்கமாட்டேன். ஒரு மனிதரோடும் பேசமாட்டேன். எவனாவது என்னை இச்சித்தால் நீர் அவனைத் தண்டிக்க வேண்டும். பல தடவை என்னை இச்சித்துப் பேசுகிறவனை

மரணதண்டனைக்கு உள்ளாக்கவேண்டும். இது என்னுடைய விரதம். என் பர்த்தாவைத் தேடிக்கொண்டு வரச் சாமர்த்தியமுள்ள பிராமணர்களை நான் காணக்கூடும். நீர் இப்படிச் செய்யச் சம்மதித்தால் நான் உம்மிடத்தில் இருக்கக்கூடும், இல்லாவிட்டால் நான் இங்கே தங்கி யிருக்க விரும்பமாட்டேன் என்றாள். இதைக் கேட்ட பின் அரசி சொல்லுகிறாள்.

72— . அழகான பெண்ணே? நீ கொண்ட விரதம் நன்று யிருக்கிறது. ஆகையால் நீ சொன்னபடி யெல்லாம் நான் நிச்சயமாய்ச் செய்கிறேன் என்று சொல்லிப் பின் தன் குமாரத்தி சுநந்தை என்பவளை அழைத்துச் சொல்லுகிறாள். குழந்தாய்! இந்தப் பெண் நிச்சயமாகவே தெய்வ ஜாதியா யிருக்கவேண்டும். உன்னுடைய சைரந்திரியை விட மேலான ஜாதிப் பெண். உன் வயதுக்குச் சரியான வயசுள்ளவளா யிருக்கிறாள். ஆகையால் இவளை உன் தோழியாக வைத்துக்கொள். இவளோடு எப்போதும் விளையாடிக்கொண்டிரு. மனதில் வேறு மாதிரியான எண்ணம் வையாதே என்று சொன்னாள். சுநந்தையும் மகிழ்ந்து தமயந்தியை மரியாதையாக உபசரித்துத் தனக்குத் தோழியாக வைத்துக்கொண்டாள். தமயந்தியினுடைய மனக் கருத்துக்கள் எல்லாம் சரியாக நிறைவேறி வந்தபடியால் அவள் அங்கே சில காலம் தங்கி யிருந்தாள்.

---

## 66-வது அத்தியாயம்.

நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—9. பிருகதசுவ முனிவர் யுதிஷ்டிரரைப் பார்த்து, மஹாராஜாவே! நளராஜன் தமயந்தியை விட்டுப் பிரிந்து போகிற போது அந்தக் காட்டிலே பெருந் தீ பற்றி எரிந்து கொண்டிருக்கிறதைக் கண்டான். அந்தத் தீயின் மத்தியி லிருந்து ஒரு சத்தம் உண்டாயிற்று. அடிக்கடி நளனை நோக்கி இங்கே வா என்கிற தொனி கேட்கப்பட்டது. நளன் பயப்படாதே என்று சொன்னான். சொல்லிக்கொண்டு அந்த நெருப்புக்கு நடுவில் போய் ஒரு சர்ப்பராஜன் சுருண்டு கிடக்கிறதைப் பார்த்தான். அந்தப் பாம்பு நளனை நோக்கி அரசனே! நான் சர்ப்பராஜனாகிய கார்க்கோடகன். அரசனே! என்னுடைய துஷ்ட நடத்தைக்காக நாரதமுனிவர் கோபித்து நீ இங்கே ஒரு அசையாப் பொருளைப் போலக் கிட, நளராஜன் வந்து உன்னை எடுக்கும் போது உன் சாபம் நீங்கும் என்றார். அந்தச் சாபத்தினாலே ஒரு அடிகூட நகர முடியாமல் கிடக்கிறேன். நீ தான் என்னை விடுவிக்கத் தக்கவன். அதன்பின் உன் க்ஷேமத்தைப் பற்றி உனக்குச் சில வார்த்தை சொல்லுகிறேன். நான் உனக்குத் தோழனா யிருக்கிறேன். நான் கடிக்கமாட்டேன். என்னை யிந்தத் தீயிலிருந்து சீக்கிரமாய் எடுத்துக்கொண்டு போ என்றான். இப்படிச் சொன்னதும் அந்தப் பாம்பு கட்டை விரல் அளவாகச் சுருங்கிப் போயிற்று. நளன் அதை எடுத்துக்கொண்டு தீ யில்லாத இடத்துக்குப் போனான்.

30—26. அக்கினியை விட்டு விலகி நல்ல பூமியில் வந்து நளன் அந்த பாம்பைக் கீழே விடக் கருதினான். அப்போது நாகராஜன் நளனைப் பார்த்து அரசனே! உன் காலடிகளை எண்ணிக்கொண்டு நடந்து என்னைக் கீழே விடு. அப்படிச் செய்தால் உனக்குப் பெரு நன்மை செய்கிறேன் என்றான். அப்படியே நளன் ஒன்று இரண்டு என்று தன் காலடிகளை எண்ணிக்கொண்டே போனான். பத்து என்றபோது நாகராஜன் நளனைக் கடித்துவிட்டான். கடித்த உடனே நளனுடைய சுயரூபம் மாறிவிட்டது அதைப் பார்த்து நளன் அதிசயம் அடைந்தான். நாகம் கூடத் தன் சுயரூபத்தை யெடுத்துக் கொண்டது. பிறகு கார்க்கோடகன் நளனைத் தேற்றி அவனைப் பார்த்துச் சொல்லுகிறான். ஜனங்கள் உன்னை இன்னான் என்று அறிந்துகொள்ளாதிருக்கும்படியாக உன் ரூபத்தை மாற்றினேன். உனக்கு இப்படிப்பட்ட துன்பத்தை உண்டாக்கினவனுக்காகவே இதைச் செய்தேன். என்னுடைய விஷத்தால் வருத்தப்பட்டு வசி. அரசனே! அவன் உன்னை விட்டு விலகாமல் இருக்கிறவரைக்கும், உன் சரீரத்தில் பாவி யிருக்கிற என் விஷத்தினாலே வருத்தப் பட்டுக்கொண்டுதான் உன் சரீரத்தில் இருக்க வேண்டியவனாவான். பகையினாலே உனக்குத் துன்பம் செய்தவனிடத்திலிருந்து உன்னைக் காப்பாற்றினேன். அரசனே! இனி மேல் உனக்கு வக்கிர தந்தங்களை உடைய ஜந்துக்களினாலாவது, சத்துருக்களினாலாவது துன்பம் வராது. வேதாத்தியயனம் பண்ணுகிற பிராமணர்களாலே கூட உனக்குத் துன்பம் உண்டாகாது. நான் உன்னிடத்தில் அவ்வளவு தயவுள்ளவனா யிருக்கிறேன். அரசனே! என் விஷத்தால் உனக்குத் துன்பம் இராது. நீ சண்டையில் எப்போதும் ஜயத்தையே அடைவாய், நிஷதாதிபதியே! நீ அயோத்தி அரசனான ரிதுபர்ணனிடம் போய்ச் சேரு. அந்த அரசன் சூதாடுவதில் மிகவும் சாமர்த்தியம் உள்ளவன். நீ தேரோட்டுகிற தொழிலுள்ளவனென்றும், உன் பேர் வாகுகன் என்றும் சொல்லு. அந்த அரசன் சூதாடும் வித்தையை உனக்குச் சொல்லிகொடுத்துக், குதிரை செலுத்தும் வித்தையை உன்னிடத்தி லிருந்து கற்றுக்கொள்வான். இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த அவன் உனக்குச் சிநேகிதனாவான். அவனிடத்தி லிருந்து சூதாடும் வித்தையைக் கற்றுக்கொள். அதனாலே நீ க்ஷேமத்தை அடைவாய். நீ உன்னுடைய மனைவி மக்களைக் கண்டு வாழ்வாய். இது நிச்சயமானது. நான் உனக்கு உண்மையைச் சொன்னேன். உன் இராஜ்யத்தையும் திரும்பப் பெறுவாய். பின் துன்பம் வராது. இந்தத் துண்டு வஸ்திரங்களை உடுத்துக்கொண்டால் உன் சுயரூபத்தை அடைவாய் என்று சொல்லிக், கார்க்கோடகன் நளனுக்கு விலை உயர்ந்த இரண்டு வஸ்திரம் கொடுத்தான். அதன் பின் சர்ப்பராஜனாகிய கார்க்கோடகன் மறைந்து போனான்.

———

## 67-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—7. கார்க்கோடகன் போன பின், நளன் புறப்பட்டுப் பத்தாவது நாளில் அயோத்தி போய்ச் சேர்ந்தான். ரிதுபர்ண ராஜன் சமூகத்தில் போய் நான் குதிரை வித்தையில் சிறந்தவன், அந்த வேலையில் எனக்கு மேலானவர்கள் உலகத்தில் இரார்கள் என்றான். அது போலவே சமையல் தொழிலிலும் ஒப்பில்லாதவன்; இன்னம் அநேக வித்தைகளிலும் சிறந்தவனா யிருக்கிறேன், நிறைவேற்ற முடியாத வைகளையும் முடிக்கும் திராணியுள்ளவன். ஆகையால் நீர் என்னை ஆதரிக்க வேண்டும் என்று சொன்னான். ரிதுபர்ணன் சொல்லுகிறான். ஓ வாகுகா! நீ என்னிடத்தி லிரு. உனக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும். இந்தத் தொழில்களைச் செய். ஆனால், குதிரையை மஹா வேகமாய் ஓட்டுகிற வித்தையிலேயே என் மனம் படிந்து இருக்கிறது. அதிலேயே விருப்ப மிருக்கிறது. என்னுடைய குதிரைகள் மஹா வேகமாய் ஓடும்படியான ஒரு மார்க்கத்தைத் தேடு. என்னுடைய குதிரைச் சாலைக்குத் தலைவனா யிரு. உனக்குப் பதினாயிரம் பொன் சம்பளம் கொடுப்பேன். வார்ஷ்ணேயன் ஜீவலன் முதலானவர்கள் உனக்கு ஒத்தாசையா யிருக்கட்டும். அவர்களோடு கூடி யிருந்து நீ சுகமாய்க் காலம் கழிக்கலாம். வாகுகா! நீ என்னிடத்திலேயே யிரு என்றான்,

8—11. ரிதுபர்ணன் சொன்னதைக் கேட்டு நளனும் அவனிடத்திலே யிருந்தான், எப்போதும் தமயந்தியை நினைத்துக்கொண்டே யிருந்தான். சாயங்காலம் தினந்தோறும் பின் வருகிற அர்த்தமுள்ள பாட்டைப் பாடுவான். அதாவது, மகிமை யுள்ளவளே! நீ எங்கே படுத்துக்கொண் டிருக்கிறாய்? தர்கத்தாலும் பசியாலும் வருந்தி எங்கே திரிகிறாய்? உன் பிரியமான நாயகனை நினைத்துக்கொண் டிருப்பாய் என்பதாம். ஒரு நாள் இதைக் கேட்டுக்கொண் டிருந்த அவனுடைய தோழன் நளனைப் பார்த்து வாகுகா! நீ யாரைப் பற்றித் தினந்தோறும் புலம்புகிறாய்? எனக்குச் சொல் என்று கேட்டான். நளன் சொல்லுகிறான்.

12— . ஒரு துஷ்ட னிருந்தான். அவன் புத்திகெட்டவன். அவனுக்கு ஒரு மனைவி யிருந்தாள். அவளை எல்லாரும் அறிவார்கள். அவன் தன் மனைவிக்குச் சொன்ன வாக்குத் தவறிப் போனான். ஒரு காரணத்தால் அவளை விட்டுப் பிரிந்துபோனான். அவளைப் பிரிந்த பின் அந்தத் துஷ்டன் அலைந்து திரிந்துகொண் டிருந்தான். அதனால் அவன் மிகுந்த துக்கத்தை அடைந்து இரவும் பகலும் தூங்காம லிருந்தான். இராக்காலத்தில் அவளை நினைத்துக்கொண்டு இந்தப் பாட்டைப் பாடுவான். பிறகு அவன் உலகம் முழுதும் அலைந்து திரிந்தபின் ஒரு இடத்தில் வந்து சுகமாய்த் தங்கி யிருந்தான். அப்போது தன் பத்தினியை நினைத்துத் துக்கப்பட்டுக் கொண்டிருந்தான்.

அவள் கஷ்டகாலத்தில் கூடத் தன் கணவனைக் காட்டில் தொடர்ந்து விடாமல் போனாள். அந்தப் பாபி அவளைப் பிரிந்த பின், அவள் கஷ்டஜீவனத்தாலும் துக்கத்தாலும் வருத்தப்பட்டாள். அந்தப் பெண்ணுக்குக் காட்டுப் பாதைகள் தெரியாது. தன் உயிரைக் காப்பாற்ற வெகு கஷ்டப்படுவாள். பசியாலும் தாகத்தாலும் களைத்தபோது அந்தக் காட்டில் அலைந்து திரியச் சக்தியற்றவள். நண்பனே! மூடனான நிஷத தேசாதிபதி அப்படிப்பட்ட மனைவியை விட்டுப் பிரிந்த பின் அவளை நினைத்துக்கொண்டு இப்படி யெல்லாம் பாடிக்கொண் டிருந்தான் என்று சொன்னான்.

---

## 68-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—9. நளன் இப்படி யிருக்கையில், பீமராஜன் நளனைத் தேடிப் பார்த்துக்கொண்டு வரும் பொருட்டுப் பிராமணர்களை அனுப்பினான். அந்தப் பிராமணர்களுக்கு மிகுந்த திரவியம் கொடுத்தான். அவர்கள் நளனையும் தமயந்தியையும் தேடப் புறப்பட்டார்கள். நளன் எங்கே யிருக்கிறான் என்று கண்டு கொண்டு வந்தாலும், அல்லது நளனையும் தமயந்தியையும் இங்கே அழைத்துக் கொண்டு வந்தாலும் அவனுக்கு ஆயிரம் பசுக்கள், பயிர் நிலங்கள், ஒரு நகரத்தையும் கொடுக்கிறேன் என்றும் தெரியப் படுத்தினான், பிராமணர்கள் எங்குந் தேடிப் பார்த்தும் நளனையாவது தமயந்தியை யாவது காணவில்லை. கடைசியில் சுதேவன் என்கிற பிராமணன் சுபாகுராஜன் பட்டணத்துக்கு வந்தான். இராஜமாளிகைக்குப் போனான். அந்த மாளிகையில் சுநந்தையோடு கூட உட்கார்ந்திருக்கிற தமயந்தியைப் பார்த்தான்.

10—26. அப்போது அவள் தியானத்தி லிருந்தாள். அவள் சோர்ந்தவளாகக் காணப்பட்டாள். அவளுடைய காந்தி புகையால் மூடப்பட்ட நெருப்பைப் போலக் காணப்பட்டது. பெரிய கண்களை உடையவளும், நிறம் மாறியிருப்பவளும், இளைத்திருப்பவளுமான தமயந்தியைப் பார்த்துப் பல விதமாய் யோசித்துக் கடைசியாக இவள் தமயந்தி தான் என்று நிச்சயித்தான். நான் இவளை முன்பு பார்த்திருக்கிறேன். இப்பொழுதும் அப்படியே காணப்படுகிறாள். இவளை நான் கண்டதனாலே இன்றைய தினம் எனக்குச் சுப தினம் என்று நினைக்கிறேன். எல்லாருக்கும் மகிழ்ச்சி தருகிற இலட்சுமிக்குச் சரியானவள் யார்? அவள் தானே! இவள் காந்தியால் சந்திரனைப் போல இருக்கிறாள். இவள் எப்போதும் யௌவனமாகவே காணப் படுகிறாள். தன் ஒளியால் திசையி லுள்ள இருளை யெல்லாம் விலகச் செய்து கொண்டிருக்கிறாள். இரதி தேவியைப் போல இருக்கிறாள். தாமரைப் பூவின் இதழைப் போல விசாலமான நேத்திரங்களை உடையவளா யிருக்கிறாள். பூர்ண சந்திரனுடைய கிரணங்களைப் போல உலகம் முழுமைக்கும் மகிழ்ச்சியை உண்டாக்

குகிறாள். அவள் விதர்ப்ப தேசமாகிற ஏரியை விட்டுத் துர் அதிர்ஷ்டத்தால் பிரிந்த பின், பிடுங்கி நடப்பட்ட தாமரைத் தாளைப் போல விளங்குகிறாள். இராகுவினால் சந்திரன் விழுங்கப்பட்ட பௌர்ணமாவாசையின் இரவைப் போலவும் காணப்படுகிறாள். தன் நாயகனைப் பிரிந்தபடியால் நீர் வற்றின ஆற்றைப் போலவும் இருக்கிறாள். யானையால் கலக்கப்பட்டும், அந்தப் பயத்தினால் பட்சிகளால் விடப்பட்டதுமான தடாகத்தைப் போலவு மிருக்கிறாள். மெல்லிய சரீர இயல்பையும் அழகிய அவயவங்களையும் உடையவளும் சிறந்த அரண்மனையில் வாழத் தக்கவளுமான இவள் பிடுங்கி நடப்பட்ட தாமரை சூரிய கிரணங்களால் வாடி யிருப்பது போலவும் இருக்கிறாள். அழகை உடையவளாயும், ஆபரணங்களால் அலங்கரிக்கப் படாதவளாயும், இருப்பதனால் இளம் பிறை போலவும், அது சிறிய மேகத்தால் மூடப்பட்டிருப்பது போலவும் தோன்றுகிறாள். இவள் எல்லாப் போகங்களையும் இழந்து, சுற்றத்தாரையும் நண்பரையும் பிரிந்து, தன் பர்த்தாவை எப்பொழுதாவது காண்போ மென்கிற நினைப்பினால் உயிர் பிழைத்திருக்கிறாள். யாதொரு ஆபரணமும் அணியாமலிருக்கிற இந்தப் பெண்ணுக்கு அவளுடைய கணவனேதான் ஆபரணம். அந்த ஆபரணத்தை யிழந்து தனித்து இருப்பதால் விளக்கமற்றிருக்கிறாள். இவளைப் பிரிந்த நளனும் வெகு கஷ்டமாய்த் தான் ஜீவித்திருப்பான், வெகு துக்கப்படுவான். கொஞ்ச காலத்துக் கெல்லாம் தமயந்தி தன் கணவனோடு கூடிச், சந்திரனோடு கூடின ரோகிணியைப் போல விளங்குவாள். இராஜ்யத்தை யிழந்த ஒரு அரசன் இராஜ்யத்தை மீண்டும் அடைந்தால் உண்டாகும் மகிழ்ச்சியை, இவளை அடைந்த பின் நளனும் அடைவான். இந்தத் தமயந்தி குணத்தாலும் பிறப்பாலும் நளனுக்கு ஒத்து இருக்கிறாள். ஆகையால் இவளுக்கு நளன் தகுந்த கணவன் தான். அப்படிப்பட்ட இவளை நான் தேற்ற வேண்டும் என்று தனக்குள் நினைத்துக்கொண்டான்.

27—34. இப்படி யெல்லாம் யோசித்து, அவளுடைய பல அடையாளங்களால் தமயந்தி யென்று தீர்மானித்த பின் அவள் கிட்டப் போய்ச் சொல்லுகிறான். பீமராஜ குமாரியே! நான் சுதேவன். உன்னைத் தேடிக்கொண்டுதான் வருகிறேன். நான் உன் சகோதரனுக்கு உயிர்த் தோழன். பீமராஜனுடைய கட்டளையால் உன்னைத் தேட வந்தேன். இராஜ குமாரத்தியே! உன் தந்தை தாய் சகோதரர் எல்லாரும் சுகமா யிருக்கிறார்கள். உன்னுடைய புத்திரன், புத்திரி யிருவர்களும் சுகமா யிருக்கிறார்கள். உன்னுடைய பந்துக்களும் நண்பர்களும் உயிரோ டிருந்தாலும், உன் நிமித்தமாக செத்த பிணம் போல இருக்கிறார்கள். அநேக பிராமணர்கள் உன்னைத் தேடிக்கொண்டு உலக மெல்லாம் திரிகிறார்கள் என்றான். பின் தமயந்திக்குச் சுதேவனைப் பற்றிய ஞாபகம் வந்தது. உடனே தன் பந்துக்கள் நேசர்கள் முதலியவர்களுடைய க்ஷேமத்தை விசாரித்தாள். பிறகு, திடீரென்று சுதேவனைப் பார்த்ததனால் அவளுக்குத் துக்கம் மேலிட்டது. ஆகையால் வெகு துயரத்தோடு புலம்பினாள். தமயந்தி யிப்படிப் புலம்பி அழுகிறதைச் சுநந்தை கண்டு மனம் வருந்தித் தந்

தாயாரிடம் போய், அம்மா! சைரந்திரி மிகுந்த துக்கத்தோடு அழுகிறாள். அதை என்ன என்று பார் என்று சொன்னாள்.

35—39. யுதிஷ்டிரரே! அதன் பிறகு அரசியானவள் தமயந்தி இருக்கிற இடத்துக்கு வந்து சுதேவனை அழைத்து, அந்தப் பெண் யாருடைய மனைவி? யாருடைய புத்திரி? இவள் தன் நாயகனையும் சுற்றத்தாரையும் எவ்வாறு பிரிந்தாள்? அந்தணரே! எப்படி நீர் அவளைக் கண்டு பிடித்தீர்? என்று கேட்டாள். அந்தப் பெண்ணைப் பற்றியவைகளை யெல்லாம் நான் நன்றாய் அறிய விரும்புகிறேன். நீர் எனக்குச் சொல்ல வேண்டும் என்றாள். அந்த வேதியன் சுகமாய் உட்கார்ந்துகொண்டு தமயந்தியின் வரலாற்றைச் சொல்லத் தொடங்கினான்.

---

## 69-வது அத்தியாயம்.

நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—12. இவள், விதர்ப்பதேசத்தை ஆளுகிற மகிமையுள்ள பீமராஜனுடைய புத்திரி. இவளுடைய பேர் தமயந்தி. நிஷததேசத்து வீரசேன மஹாராஜாவின் குமாரனான நளராஜனுடைய மனைவி. நளராஜன் சகோதரனுடன் சூதாடித் தோல்வி யடைந்தார். அதனால் இராஜ்யத்தை யிழந்து ஒருவருக்குந் தெரியாமல் தமயந்தி யுடன் புறப்பட்டுப் போய்விட்டார். நானும் வேறு சில பிராமணர்களும் இந்தத் தமயந்தியையும் நளராஜனையும் தேடிக்கொண்டு உலக மெல்லாந் திரிகிறோம். கடைசியில் இந்த அரண்மனையில் கண்டேன். இவளுக்குச் சமானமான அழகுள்ள பெண்கள் உலகத்தி லில்லை. இவள் இன்னம் இளமைமாறாம லிருக்கிறாள். பிறந்த காலத்தி லிருந்தது போலவே தாமரை போன்ற மறு உள்ள திருமேனியுடையவளா யிருக்கிறாள். அந்த மறுவினாலேதான் அவளைத் தெரிந்து கொண்டேன். இப்பொழுது இவள் சரீரம் அழுக்குப்படிந்திருப்பதினாலே நன்றாய்த் தெரியவில்லை. மேகத்தால் மறைபட்ட சந்திரனைப் போல ஒளி மழுங்கி யிருக்கிறாள். சுப லட்சணமான அந்த மறுவும் செல்வ வாழ்வும் அவளுக்குக் கடவுளால் அளிக்கப்பட்டன. சுக்கிலபட்ச பிரதமை தினத்திலே சாயங்காலத்தில் கலை குறைந்து இருக்கிற சந்திரனைப் போல மழுங்கிக் காணப்படுகின்றன. தேக மெல்லாம் புழுதி படிந்து அழுக்கா யிருந்தாலும் அவளுடைய அழகு குறையவில்லை. சொர்ணத்தைப் போலப் பிரகாசிக்கிறாள். சாம்பலால் மறைந்த நெருப்பை அதன் வெப்பத்தால் கண்டு பிடிப்பது போல, மாறாமலிருக்கிற புருவ நடுவில் உள்ள அந்த மறுவால் இவளைக் கண்டு கொண்டேன் என்றான். இதைக் கேட்ட சுநந்தை தமயந்தியினுடைய புருவ மத்தியிலுள்ள அழுக்கைத் துடைத்தாள். மேகமறைப்பு நீங்கின பின் விளங்குகிற பூர்ண சந்திரனைப் போல அந்த மறு விளங்கியது யுதிஷ்டிரரே! அரசியும் சுநந்தையும் அந்த மறுவைக் கண்டவுடனே சற்று நேரம் அழுதுகொண்டும், தமயந்தியைத் தழுவிக்கொண்டும் நின்றார்கள்.

13—21. பிறகு அரசி கண்ணீர் விட்டு அழுது, ஈன சுரத்தோடு அந்த மச்சத்தால் தெரிந்துகொண்டேன். நீ என் சகோதரியின் புத்திரி. அழகுள்ளவளே! நானும் உன் தாயாரும் தசார்ணவ ராஜாவான சுதாமனுடைய புத்திரிகள். என் சகோதரி பீமராஜனுக்கு வாழ்க்கைப்பட்டாள். நான் வீரபாகு ராஜனை மணம் புரிந்துகொண்டேன். என் தந்தையான தசார்ணவ ராஜாவினுடைய அரண்மனையில் தான் நீ பிறந்தாய். அப்போது நான் உன்னைப் பார்த்தேன். உன் தந்தையின் வீடு உனக்கு எப்படியோ அப்படித் தான் எனக்கும். என்னுடைய வைகளெல்லாம் உனக்குச் சொந்தமான வைகளே என்று சொன்னாள், பிறகு தமயந்தி மன மகிழ்ந்து அரசியை வணங்கிச் சொல்லுகிறாள். நான் உம்மை யினனென்று தெரிந்துகொள்ளா விட்டாலும் இங்கே சுகமாகவே வசித்தேன். எனக்கு ஒன்றாலும் குறைவில்லை. இதை விட இன்பமான இடம் எனக்கு வேறு ஒன்றும் இராது. என்னுடைய குழந்தைகளை என் பிதாவின் வீட்டுக்கு அனுப்பி விட்டேன் அவர்கள் இப்பொழுது அங்கே யிருக்கிறார்கள். தாய் தந்தைகளைப் பிரிந்து இருப்பதினாலே மிகவும் துக்கப்படுவார்கள். ஆகையால் நான விதர்ப்ப நகரம் போக விரும்புகிறேன். தாயே! எனக்கு ஒரு வண்டி சித்தமாகும்படி கட்டளை யிடுங்கள் என்றாள்.

22—28. அரசியும் மன மகிழ்ந்து அப்படியே ஆகட்டுமென்று சொல்லித், தன் புத்திரனுடைய அனுமதியின் மேல் தமயந்தியை ஒரு தேரின்மேலேற்றி, அவளுக்கு ஆடை ஆபரணங்களும், அன்னபானங்களும் கொடுத்து, பலமான காவலோடும அனுப்பினாள். தமயந்தி விதர்ப்பதேசம் போய்ச் சேர்ந்தாள். அவளுடைய சுற்றத்தார்கள் எல்லாரும் மகிழ்ந்து அவளைப் புகழ்ந்தார்கள். தமயந்தி தன் தாய் தந்தை, குழந்தைகளோடு சுகமா யிருந்தாள். தேவர்களையும் அந்தணர்களையும் ஆராதித்தாள். பீமராஜன் தன் புத்திரியைக் கண்டு மகிழ்ந்து, சுதேவனுக்கு ஆயிரம் பசுக்கள், திரண்ட திரவியம், கிராமம் முதலியவைகளை கொடுத்தான். தமயந்தி அன்று இரவு முழுதும் களையாறியிருந்து பின் தன் தாயாருக்குச் சொல்லுகிறாள்.

29—50. அம்மா! நான் உயிரோ டிருக்க நீ விரும்பினால் நளராஜனை யிங்கே அழைப்பிக்க வேண்டும் என்றாள். இதைக் கேட்ட தாயார் கண்ணீர் சொரிந்து, வாய் திறந்து ஒன்றும் பேசாமல் துக்கத்துட னிருந்தாள். அந்தப்புரத்தில் உள்ளவர்கள் எல்லாரும் கண்ணீர் விட்டு அழுதார்கள்.பிறகு அரசி பீமராஜனிடம் போய் உமது குமாரத்தி தன் நாயகனைப் பார்க்க விரும்புகிறாள் என்று சொன்னாள். தமயந்தி வெட்கத்தை விட்டு என்னுடைய மனிதர்கள்தாம் நளராஜனைத் தேட முயலவேண்டு மென்றாள். உடனே பீமராஜன் அநேக பிராமணர்களைக் கூப்பிட்டு நளராஜன் இருக்கிற இடத்தைக் கண்டு அறிந்து வாருங்கள் என்று நாலாபக்கங்களுக்கும் அனுப்பினான். அந்தப் பிராமணர்கள் அரசன் கட்டளையால் தமயந்தியி னிடம் வந்து நாங்கள் நளனைத் தேடப்

போகிறோம் என்று சொன்னார்கள். தமயந்தி அவர்களை நோக்கி நீங்கள் எந்த இடத்திலும், கூட்டமாய்ச் ஜனங்கள் கூடி யிருக்கிற இடத்திலும், "நீ என்னுடைய வஸ்திரத்தைக் கிழித்து எடுத்துக்கொண்டு உன்னுடைய கற்புடைய பத்தினியைக் காட்டிலே தனியாக விட்டுப் போவது நியாயமா? உன்னுடைய கட்டளையால் அவள் பாதி வஸ்திரத் துண்டை உடுத்துக்கொண்டு துக்கத்துடன் உன் வரவை எதிர்ப்பார்த்திருக்கிறாள் என்று சொல்லுங்கள். மனைவியானவள் எப்போதும் கணவனாலே காப்பாற்றவேண்டியவள். நீ நீதியுள்ளவன். இந்த நீதியை ஏன் அநாதரவு செய்தாய்? என்று சொல்லுங்கள். இதற்கு யாராவது பதில் சொன்னால் அந்த மனிதனைப் பற்றி நீங்கள் நன்றாய் யோசிக்க வேண்டும். அவன் என்ன செய்துகொண்டிருக்கிறான், எங்கே வாசம் பண்ணுகிறான் என்று தெரிந்துகொள்ள வேண்டும். உங்கள் வார்த்தைக்குப் பதில் சொல்லுகிறவனுடைய வாய் மொழியையும் கேட்டுக்கொண்டு வந்து எனக்குச சொல்ல வேண்டும். நான் உங்களுக்குச் சொன்ன சமாசாரத்தை நான் சொன்னதாக வெளிப்படுத்த வேண்டாம். அந்த மனிதன் ஏழையா? பணக்காரனா? சக்தியுள்ளவனா? சக்தியற்றவனா? அவனுக்கு விருப்பம் என்ன என்பவைகளையும் தெரிந்து வர வேண்டுமெ என்றாள், யுதிஷ்டிரரே! தமயந்தி சொன்னதை கேட்டுக்கொண்டு அந்தணர்களெல்லாரும் புறப்பட்டு நளனைத் தேடப் போய்விட்டார்கள். நாடு நகரங்களிலும், கிராமங்களிலும், இடையர்கள் கூட்டத்திலும், ரிஷிகள் ஆச்சிரமங்களிலும் நளனைத் தேடினார்கள். அந்த இடங்களிலெல்லாம் தமயந்தி சொன்ன வசனங்களைச் சொன்னார்கள்.

---

## 70-வது அத்தியாயம்.

*நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.*

1-13. அந்தணர்கள் சென்ற நெடு நாள்களுக்குப் பின், பர்ணதன் என்று ஒரு பிராமணன் தமயந்தி இடத்துக்கு வந்து, சொல்லுகிறான். நான் அயோத்தி நகரத்துக்கு போனேன் ரிதுபர்ண ராஜன் சபையில் நீ சொன்ன வசனங்களைச் சொன்னேன். ரிதுபர்ணனாவது, சபையிலுள்ளவர்களாவது மறுமொழி கூறவில்லை. இராஜசபையை விட்டு நான் வருகிறபோது வாகுகன் என்ற பெயருள்ள ஒரு வேலைக்காரன் என்னிடத்தில் தனியாக வந்து சில வார்த்தைகள் சொன்னான். வாகுகன் என்பவன் ரிதுபர்ணராஜனுடைய சாரதி. அவனுடைய ரூபம் விகோதமா யிருக்கிறது. புஜங்கள் குறுகிக் குட்டையா யிருக்கின்றன. குதிரையை வேகமாய் ஓட்டுவதில் வெகு சமர்த்தன். மதுரமாய்ச் சமைக்கிறான். அவன் அடிக்கடி பெருமூச் செறிந்து, அழுதுகொண்டு என் க்ஷேமத்தை விசாரித்தான். பின்பு துக்கம் அடைந்திருந்தபோதிலும், கற்புடைய மாதர் தம்மைத் தாமே காத்துக்கொள்ள வேண்டும். இப்படி நடப்பதினாலே அவர்கள் சொர்க்கவாழ்வு பெறுவார்கள். தன் கணவன் கைவிட்

டாலும் கற்புடைய மாது அவனை வெறுக்கக் கூடாது. நல்ல நடக்கைகளா லே ஜீவனம் பண்ணவேண்டும். சகல சுகங்களையு மிழந்து, துக்கத்தை அடை ந்து, மூடத் தனத்தால் தன்னைக் கைவிட்ட நாயகன்மேலே கோபிக்கக் கூடா து. ஆகாரம் தேடுவதிலே முயன்று, பட்சிகளால் தன் வஸ்திரத்தை யிழந்து துக்கமடைந்து, வருந்துகிற தன் கணவனை இளமை மாறும லிருக்கிற பெண் கோபிக்கத் தகாது. துக்கத்திலே முழுகி யிருக்கிற தன் கணவன் தன்னை மேன்மையாக நடத்தினாலும், நடத்தா விட்டாலும் கற்புள்ள மனைவி அவனை வெறுக்கப்படாது. ஏனென்றால் அவன் தன் இராஜ்யம் சுகம் இரண்டையும் இழந்து வருந்துகிறபடியால் அவனை யிகழ்வது தகாது என்று சொன்னான். இதைக் கேட்ட வுடனே நான் இவ்விடம் நோக்கி வந்து விட்டேன். நீ கேட்ட இந்த வசனங்களை யெல்லாம் அரசனுக்குச் சொல்லு என்று சொன்னான்.

14—22. தர்ம ராஜாவே! பர்ணதன் என்ற வேதியன் சொன்னதைக் கேட்ட தமயந்தி அழுதுகொண்டு, தன் தாயாரிடத்தில் சொல்லுகிறாள். மாதாவே! என் அபிப்பிராயத்தை என் பிதாவுக்கு எந்தக் காரணத்தாலும் சொல்ல வேண்டாம். சுதேவன் என்கிற பிராமணனை உனக்கு முன்னாலே ஒரு வேலையில் அனுப்புகிறேன். நீ என் க்ஷேமத்தைக் கருதி, என் கருத்தை அரசனுக்குத் தெரியாமல் இருக்க வேண்டும். என்னைக் கண்டுபிடித்து அழைத்துக்கொண்டு வந்த சுதேவனையே என் காரியத்தை நிறைவேற்றும்படி அனுப்பு. நள மஹாராஜாவை அழைத்துக்கொண்டு வரும்படி அயோத்திக்கு அனுப்பு என்று சொல்லிச் சுதேவனை அழைத்து அந்தணரே! நளனை இங்கே அழைத்துக்கொண்டு வந்தால் உமக்குத் திரண்ட திரவியம் தருகிறேன். என் னுடைய கணவனை நான் மறுபடியும் அடையும்படி செய்தால் அந்த உபகாரத் தைப் போல எனக்கு வேறொருவராலுஞ் செய்ய முடியாது. நிச்சயமாகவே சொல்லுகிறேன். நான் சொல்லப் போகிற ஒரு காரணத்தாலே தான் நான் என் கணவனை அடைய வேண்டும். இதைத் தவிர வேறு பெரிய உபகார மில்லை என்றாள். சுதேவன் தன் காரியம் நிறைவேறும் என்கிற எண்ண முடையவ னாய் அப்படியே செய்கிறேன் என்றான். தமயந்தி தன் தாயாருக்கு முன்னாலே துக்கத்தோடு சுதேவனுக்குச் சொல்லுகிறாள்.

23—27. நீ பட்சி நேராகப் பறந்துபோகிறது போல அயோத்தி நகரத்துக் குப் போய். ரிதுபர்ண ராஜனிடத்தில், தமயந்திக்கு மறுபடியும் சுயம்வரம் நியமித்திருக்கிறது. அதைக் குறித்து நாலா பக்கங்களிலிருந்தும் அரசர்கள் கூட்டம் கூட்டமாக வந்து சேருகிறார்கள். அந்தச் சுயம்வர தினமும் நாளை த்தான். உம்மால் கூடுமானால் உடனே புறப்பட்டுப் போகலாம். அடுத்த தினம் காலையில் தமயந்தி வேறொரு கணவனைத் தேடி மாலையிடுவாள். ஏனெ ன்றால் அவளுடைய கணவனான நளன் உயிரோடிருக்கிறானோ இல்லையோ என்பது தெரியவில்லை என்று சொல்லும் என்றாள். யுதிஷ்டிரரே! அந்தக்

ட்டளையைப் பெற்றுக்கொண்டு சுதேவன் என்ற பிராமணன் உடனே புறப்பட்டுப் போய், ரிதுபர்ணனிடம் தமயந்தி சொன்னபடி சொன்னான்.

---

## 71-வது அத்தியாயம்.

நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி,

1—10. தர்மராஜரே! ரிதுபர்ணன் சுதேவன் சொன்னதைக் கேட்டு, வாகுகனை அழைத்து அவனிடத்தில் இனிமையாகப் பேசிப் பின் சொல்லுகிறான். விதர்ப்ப தேசத்தில் தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம் நடக்கிறது. அதற்காக நான் போக விரும்புகிறேன். நீ மனம் வைத்தால் நான் ஒரே நாளில் போய்ச் சேரலாம். நீ குதிரை வித்தையில் தேர்ந்தவனாயிருக்கிறாய் என்று சொன்னான். வாகுகன் அதைக் கேட்டுத் தன் மனதில் துக்கம் அடைந்தான். துக்கத்தால் மனம் எரிந்தான். தமயந்தி அதிக துக்கம் அடைந்திருப்பதால் இப்படிச் செய்கிறாள். ஒருகால் அவள் என்னைக் காண விரும்பி இந்த உபாயம் செய்திருக்கலாம். விதர்ப்ப ராஜ புத்திரியான தமயந்தி மறு சுயம்வரத்தை விரும்பி இருந்தால் அது மிகவும் கொடியது. இது நான் அவளை மோசம் செய்ததனால் வந்தது. ஆகையால் நான் மூடனும் பாபியுமாயிருக்கிறேன். இந்த உலகத்தில் பெண்களெல்லாரும் வஞ்சகர்களாகவே யிருக்கிறார்கள். என்னுடைய குற்றமும் பெரியதுதான். ஆகையாலேதான் இந்த முடிவான செய்கையைச் செய்கிறாள். நான் அவளை நெடுங்காலம் பிரிந்து விட்டபடியால் அவள் என் மேல் பிரியமாயிருக்க மாட்டாள். என் நிமித்தமாகத் துக்கப்பட்டுக் கொண்டிருக்கிற அவள் இதைச் செய்யத் துணிய மாட்டாள். ஏனென்றால் என்னால் இரண்டு குழந்தைகளைப் பெற்றிருக்கிறாள். நான் அங்கே போய் இது பொய்யோ மெய்யோ என்று அறிகிறேன். நான் நிச்சயமாகவே ரிதுபர்ணனுடைய பணிவிடையைச் செய்கிறேன். ஏனென்றால் அப்படிச் செய்வதால் நான் என் சொந்தக் காரியத்தைச் செய்து கொண்டவனாகிறேன் என்று நினைத்துக்கொண்டு ரிதுபர்ணனை நோக்கிக் கைகளைக் குவித்துக் கொண்டு சொல்லுகிறான். உம்முடைய கட்டளைப்படியே, ஒரே நாளில் விதர்ப்ப தேசத்துக்குக் குதிரைகளை அதிவேகமாக ஓட்டுகிறேன் என்றான்.

11—18. தர்மராஜரே! அதன் பின் வாகுகன் குதிரைச் சாலைக்குள் புகுந்து குதிரைகளைச் சோதித்தான். ரிதுபர்ணன் அடிக்கடி வாகுகனைக் கேட்டான். அதனால் குதிரைகளைப் பல தரம் சோதித்துப் பார்த்துத் தன் மனதுக்குள் நிச்சயம் பண்ணிக்கொண்டான். அந்தக் குதிரைகள் மிகவும் இளைத்திருந்தன. ஆனால் அதிக சக்தியுள்ளவைகள். நெடுந் தூரம் பிரயாணம் செய்வதற் கேற்றவைகளா யிருந்தன. கெட்ட இலக்கண முடையவையல்ல. விசாலமான மூக்குத் துவாரங்களையும், ஒப்பான கன்னங்களையும்

உடையனவா யிருந்தன. நல்ல சுழிகளை யுடையன. சிந்து தேசத்திலே பிறந்தவை. மஹா வேக முடையன. ரிதுபர்ணன் இவைகளைப் பார்த்ததும் கொஞ்சம் கோப முண்டாயிற்று. உடனே வாகுகனைப் பார்த்து நீ யென்ன செய்ய நினைக்கிறாய்? நீ என்னிடத்தில் விளையாடாதே. இந்த மெலிந்த சக்தியற்ற குதிரைகள் நம்மை யெப்படிக் கொண்டு போகும்? நாம் எவ்வளவு தூரம் போக வேண்டி யிருக்கிறது? என்றான். வாகுகன், மஹா ராஜாவே! இந்தக் குதிரைகளுக்கு நெற்றியில் ஒரு சுழியும், கன்னத்தில் இரண்டும், பக்கங்களில் நாலும், மாரப்பில் நாலு சுழிகளும், முதுகில் ஒரு சுழியும் இருக்கின்றன. ஆகையால் சந்தேக மில்லாமல் விதாப்ப நாடு போய்ச் சேரலாம். அரசனே! உமக்கு வேறு குதிரைகளில் பிரியமிருந்தால் சொல்லும். அவைகளைத் தேரில் பூட்டுகிறேன் என்றான். ரிதுபர்ணன வாகுகா! உனக்குக் குதிரை இலட்சணங்கள் தெரியும். ஆகையால் உனக்கு இஷ்டமானவைகளைப் பூட்டு என்றான்.

19—36. பிறகு புத்திசாலியான நளன் அந்தக் குதிரைகளைத் தேரில் பூட்டினான். ரிதுபர்ணன் அந்தத் தேரின் மேல் ஏறிக் கொண்டான். அந்தக் குதிரைகள் முழங்கால் மண்டியிட்டு வணங்கின. நளன் அவைகளைத் தேற்றி வார்ஷ்ணேயனையும் கூடத் தேரின் மேல் ஏறிக்கொண்டு தேரை அதி வேகமாய்ச் செலுத்தினான். அந்தத் தேர் ஆகாயத்தில் எழும்பிப் பறந்து சென்றன. ரிதுபர்ணன் மலைத்துப் போனான். வாயு வேகமாய்ப் பறந்து செல்வதைக் கண்ட அயோத்தி வேந்தன் மஹா ஆச்சரிய மடைந்தான். வார்ஷ்ணேயன் தேர்ச் சக்கரங்களினுடைய தொனியைக் கேட்டுச் சாரத்தியத் தொழிலில் வாகுகன் மஹா சமர்த்துள்ளவ னென்று புகழ்ந்து கூறினான். அவன் சொன்னதாவது, இவன் இந்திர சாரதியாகிய மாதலி அல்லவா? மாதலிக்குள்ள இலக்கணம இந்த வாகுகனிடத்தில் இருக்கிறது என்றான். அசுவ சாஸ்திரத்தில் வல்லவரான சாலி கோத்திரரா யிருக்க வேண்டும். இல்லா விட்டால் சாலி கோத்திரர் இந்த ரூபமாக வந்திருக்க வேண்டும். அல்லது இவன் நமது நளராஜனாக இருக்க வேண்டும். அவன் ஒரு வேளை இந்த வடிவமாக இங்கே வந்திருக்கலாம் அப்படி யில்லாவிட்டால் நள மஹா ராஜன் கற்றுக்கொண்டிருக்கிற அசுவ சாஸ்திரம் இவனுக்கும் தெரிந்திருக்க வேண்டும். ஏனென்றால் அசுவ சாஸ்திரத்தில் நள ராஜனுக்குள்ள ஞானத்தைப் போலவே வாகுகனுக்கும் இருக்கிறது. நளனும் வாகுகனும் சமானமான வயதுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். இவன் நளனாயிராவிட்டால், நளனுக்குச் சமானமான வேறொரு மனிதனாயிருக்க வேண்டும்.சாஸ்திரங்களில் வல்ல பெரியோர்கள் ஜனங்களிடத்தில் உள்ள தவறுதலைச் சீர் படுத்தவும். அவர்களுக்கு உபதேசிப்பதற்கும் மாறு வேடம் பூண்டு உலகத்தில் சஞ்சரிக்கிறார்கள்.இந்த வாகுகனுடைய விகார ரூபத்தைப் பார்த்தும் என் மனதுக்கு மாறுதல் உண்டாக வில்லை. இவன் மாறு வேஷம் கொண்டவனாகவே எனக்குத் தோன்றுகிறது. இவன் அந்த நளனைப் போலவே யிருக்கிறான். ஆனால் ரூபம் சற்று மாறுபட்டிருக்கி

றது. இந்த வாகுகன் எல்லாவற்றிலும் சித்தி பெற்று இருக்கிறான். ஆகையினாலே இவனை நளராஜன் என்றே நான் நிச்சயிக்கிறேன் என்று இப்படி யோசித்துக் கொண்டே போனான். ரிதுபர்ணராஜனும், வார்ஷ்ணேயனும் வாகுகனுக்குக் குதிரை ஓட்டுவதில் இருக்கிற சாமர்த்தியத்தை யுணர்ந்து சந்தோஷத்திலே முழுகிப் போனார்கள். வாகுகன் கடிவாளம் பிடிக்கிற முறையையும், குதிரைகளைச் செலுத்துவதிலுள்ள கவன சக்தியையும், உற்சாகத்தையும் பார்க்கப் பார்க்க ரிதுபர்ணனுக்கு மகிழ்ச்சி மிகுந்தது.

---

## 72-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—11. பட்சிகள் ஆகாசத்திலே பறப்பது போல வாகுகன் ஆறுகள், காடுகள், மலைகள், ஏரிகள் முதலியவைகளை வெகு வேகமாய்க் கடந்து போனான். இப்படி இரதம் ஓடுகிறபோது ரிதுபர்ணனுடைய வஸ்திரம் கீழே விழுந்தது. அதைப்பார்த்த ரிதுபர்ணன் வாகுகனைப் பார்த்து என்மேல் வஸ்திரம் விழுந்து விட்டது. வார்ஷ்ணேயன் அதை எடுத்துக்கொண்டு வரட்டும். சற்று தேரை நிறுத்துவாயா என்று சொன்னான். உம்முடைய வஸ்திரம் விழுந்த இடத்திற்கும் இதற்கு வெகு தூரமிருக்கிறது. பத்து நாழிகை வழி தூரம் நாம் தாண்டி வந்து விட்டோம். ஆகையால் வஸ்திரத்தைக் கொண்டுவர முடியாது என்று சொன்னான். ரிதுபர்ணன் இதைக் கேட்டுக்கொண்டு ஒரு மரத்தின் அருகில் வந்தான். அந்த மரம் விபிதக (தான்றி) மரம் என்னப்படும். அதில் காய்கள் நிறைந்திருந்தன. அதைப் பார்த்த வுடன் ரிதுபர்ணன் தேர்ப் பாகனைப் பார்த்து, வாகுகா! கணிததத்தில் எனக்கு உள்ள சாமர்த்தியத்தையும் நீ பார். எல்லாருக்கும் எல்லாம் தெரிகிறதில்லை நிச்சயமாகவே எல்லாவற்றையும் முழுமையும் கற்றுக்கொண்டவர்கள் இல்லை. வாகுகா! இந்த இரண்டு கிளைகளிலும் ஐம்பது லட்சம் இலைகள் இருக்கின்றன. இரண்டாயிரத்துத் தொண்ணூற்று ஐந்து காய்கள் இருக்கின்றன. இந்த இரண்டு கிளைகளையும் அவற்றின் கொம்புகளையும் பரீட்சித்துப் பார் என்று சொன்னான்.

12—29 வாகுகன் தேரை நிறுத்திக்கொண்டு சொல்லுகிறான். மஹாராஜனே! நீர் சொல்லுகிறது என் புத்திக் கெட்டாத தாயிருக்கிறது. அந்த மரத்தை வெட்டித் தள்ளி விடுகிறேன். நீர் சொன்னது சரியாக வருமோ தெரியாது. ஆகையால் மஹாராஜாவே! அவற்றிலுள்ள காய்களை மாத்திரம் உமக்கு எதிரில் எண்ணுகிறேன். ஒரு க்ஷண நேரம் வார்ஷ்ணேயன் கடிவாளத்தைப் பிடித்துக் கொள்ளட்டும் என்றான். ரிதுபர்ணன் ஒரு நிமிஷம் கூடத் தாமதிக்கக் கூடாது என்று சொன்னான். வாகுகன் வணக்கத்துடன் ஒரு நிமிஷம் பொறுங்கள். அவசரப்படுகிறதானால் வார்ஷ்ணேயனைச் சாரதியாக வைத்

துக்கொண்டு புறப்பட்டுப் போம். வழி மேடு பள்ளங்கள் இல்லாமல் சமானமாய் இருக்கிறது என்று சொன்னான். தர்ம ராஜாவே! ரிதுபர்ணன் வாகுகனுக்கு இனிய வசனங்கள் சொல்லி, வாகுகா! இரதம் ஓட்டுகிற வித்தையில் உனக்கு ஒப்பாயிருக்கிறவன் இந்த உலகத்தில் இல்லை. நீ அசுவ சாஸ்திரத்தில் கரை கண்டவன். உன்னுடைய உதவியாலே தான் நான் விதர்ப்ப நகரத்துக்குப் போய்ச் சேர வேண்டும். இதற்கு யாதொரு இடையூறும் செய்யாதே. சூரியோதயத்துக்கு முன் நீ என்னை விதர்ப்ப நகரத்துக்குக் கொண்டு போய் விட்டால், நீ எதை விரும்பினாலும் உன் இஷ்டப்படி கொடுப்பேன் என்றான். இந்தக் கிளைகளில் உள்ள இலைகளையும் காய்களையும் எண்ணிச் சரியாகத் தெரிந்து கொண்ட பின் அப்படியே செய்வேன் என்றான். ரிதுபர்ணன் வாகுகா! குதிரை வித்தையில் தேர்ந்திருக்கிற நீ இந்தக் கிளையின் ஒரு பாகத்தில் உள்ள இலை, காய்களை எண்ணிப் பார்த்து நான் சொன்ன உண்மையைத் தெரிந்து கொள்ளலாம் என்றான். நளன் உடனே கீழே யிறங்கி வந்து அந்த மரத்தை வெட்டி விழுத்தினான். அந்தக் கிளையிலுள்ள காய்களை எண்ணிப் பார்த்தான் ரிதுபர்ணன் சொன்ன கணக்குச் சரியாக இருக்கக் கண்டு வெகு ஆச்சரியம் அடைந்தான். உடனே ரிதுபர்ணனைப் பார்த்து மஹா ராஜாவே! இது மஹா ஆச்சரியம்! அற்புதமானது. கணித சாஸ்திரத்தில் உமக்கு இருக்கிற அபார சக்தியைத் தெரிந்து கொண்டேன். இந்த ஞானம் உமக்கு எப்படிக் கிடைத்தது? அதை எனக்குச் சொல்ல வேண்டுமென்று வாகுகன் கேட்டான். ரிதுபர்ணன் இந்தக் கணிதத்திலுள்ள சக்திபோலவே சூதாட்டத்திலும் எனக்கு அற்புதமான ஞானம் உண்டு என்றான் உடனே வாகுகன் ரிதுபர்ணனைப் பார்த்து மஹா ராஜாவே! உமக்குத் தெரிந்த வித்தைகளை எனக்குக் கற்றுக் கொடுத்து, என்னிடத்திலிருந்து அசுவ வித்தையைக் கற்றுக்கொள்ளும் என்றான். வாகுகன் இப்பொழுது தனக்கு அவசியம் வேண்டி யிருப்பதினாலும், குதிரைப் பரீக்ஷையில் தான் அதிக ஆவல் கொண்டிருந்த படியாலும் ரிதுபர்ணன் உடனே சம்மதித்தான். வாகுகா! உனக்குப் பிரிய மிருந்தால் எனக்குத் தெரிந்திருக்கிற சூதாட்டத்தின் இரகசியத்தை உனக்குக் கற்றுக்கொடுக்கிறேன். உனக்குத் தெரிந்த அசுவ சாஸ்திரத்தி இரகசியத்தை யெனக்குச் சொல் என்றான். உடனே ரிதுபர்ணன் நளராஜனுக்குச் சூதாட்ட இரகசியத்தை உபதேசித்தான்.

30—38. நளராஜன் இந்த வித்தையைக் கற்றுக்கொண்ட உடனே அவனுடைய சரீரத்திலிருந்து கலி வெளிப்பட்டான். கார்க்கோடகனுடைய விஷத்தினாலும் தமயந்தி இட்ட சாபத்தாலும் துன்பம் அடைந்து கலி நளன் தேகத்திலிருந்து வெளியில் வந்தான். நளராஜன் இந்தக் கலியால் மிகுந்த கஷ்டத்தை அடைந்தான். கலியானவன் விஷத்திலிருந்து விடுபட்டபடியால் உடனே தன்னுடைய சுய ரூபத்தைப் பெற்றான். நளன் கலியைப் பார்த்தவுடனே அதிக கோபத்தோடு அவனைச் சபிக்க நினைத்தான். அதைக் கண்டு கலி நடுங்கிப் பயந்து; இரண்டு கைகளையும் குவித்துக்கொண்டு, நள மஹாரா

ஜாவே! கோபம் தணியும். அதற்காக நான் உமக்குப் பெரிய கீர்த்தியை உண் டாக்குகிறேன். நீ தமயந்தியை விட்டுப் பிரிந்த போது அவள் என்னை வெறு த்துச் சபித்தாள். அது முதலாக அந்தச் சாபத்தினுலே வெகு துக்கப்பட்டுக் கொண்டிருக்கிறேன். இரவும் பகலும கார்கோடகனுடைய விஷம் எனனைத் தகித்துக் கொண்டிருக்கிறது. இவைகளால் நான் உன் சரீரத்திலே மஹா துன்பத்துடன் இருந்தேன். நான் உன்னைச் சரணம் அடைகிறேன். நான் சொல்வதைக் கேள். என்னைச் சபிக்காதே. நான் உன் அடைக்கலம். உன் சரித்திரத்தைப் படிக்கிறவர்களுக்கு என்னுலே ஒருபோதும் துன்பம் வராமலி ருக்க வரம் கொடுக்கிறேன் என்றான். நளனும் உடனே கோபந் தணிந்தான். கலியானவன் நளனுக்குப் பயந்து அந்தத தான்றி மரத்தில் மறைந்து கொண் டான். இப்படி நளனும் கலியும் பேசிக்கொண்டிருந்தது வேறு ஒருவருக்கும் தெரியாது.

39—43. அது முதல் நளனுடைய கஷ்டங்கள் ஒழிந்தன. அந்தக் கிளை யின் காய்களை எண்ணுகிறபோது நளன் வெகு மகிழ்ச்சியா யிருந்தான். உட னே தேரின் மேலேறிக்கொண்டு குதிரைகளை அதிக வேகமாகச் செலுத்தி னுன். விபீதக விருட்சத்தில் கலி யிருந்தபடியால் அந்த மரம் இழிவை அடைந்தது. நள மஹா ராஜனுடைய இருதயம் மகிழ்ச்சியால் நிரம்பி யிருந் தபடியால் உற்சாகத்தினுலே குதிரைகளை அதிக வேகமாக ஓட்டினுன். குதி ரைகள் பட்சிகளைப் போல ஆகாயத்தில் பறந்து போயின. நளன் அவைகளை விதர்ப்ப தேசத்துக்கு நேராகக் கொண்டுபோனுன். நளன் வெகு தூரம் போய் விட்ட பிறகு கலியும் தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்தான். இப்படிக் கலி நளனை விட்டு நீங்கினதும், நளனுடைய துன்பங்கள் எல்லாமும் விலகிப் போ யின. ஆனுலும் நளராஜன் இன்னம் தன்னுடைய சுய ரூபத்தை அடைய வில்லை.

## 73-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—7. ரிதுபர்ண ராஜன் அன்று சாயந்திரம் விதர்ப்ப நாட்டின் இராஜ தானியான குண்டினபுரம் போய்ச் சேர்ந்தான். தூதர்கள் ரிதுபர்ணன் வந்த சமாசாரத்தைப் பீமனுக்குச் சொன்னுர்கள். பீமராஜன் அவனை மரியாதை யாய் வரவழைத்துக் கொண்டான். அவனுடைய இரதத் தொனியானது திகா ந்தம் வரைக்கும் பரவிற்று. அங்கிருந்த நளராஜனுடைய குதிரைகள் அந்தச் சத்தத்தைக் கேட்டதும் களிப்படைந்தன. அவைகள் நளனிடத்திலிருந்த போது இதே மாதிரி தொனியோடு தேரை யிழுத்தன. ஆதலால் அந்த இனிய தொனியைக் கேட்டதும் அந்தக் குதிரைகளுக்கு ஆனந்தம் உண்டாயிற்று. கார்காலத்தில் மேகத்துக்கு மத்தியில் குமுறிக்கொண்டிருக்கிற இடி முழக்கம்

போல இருக்கிற அந்தத் தேரின் ஒலியைத் தமயந்தியும் கேட்டு மகிழ்ந்தாள். அந்த ஓசையை கேட்டபோது தமயந்திக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. தமயந்தியானவள் தான் வெகு நாளைக்கு முன் நளன் தேர் ஓட்டும்போது கேட்ட தொனிபோலவே யிருக்கிறதென்று ஊகித்தாள். நளன் தன் குதிரையைத் துரிதமாய் ஓட்டினான். அரண்மனையிலிருக்கிற மயில்களும், குதிரைகளும் யானைகளும் கூட அந்தத் தேரொலியைக் கேட்டு மகிழ்ந்தன. யானைகள், குதிரைகள், மயில்கள் முதலிய எல்லாம் அந்தத் தொனி வருகிற திசையை நோக்கிக் கூவின. மயில்களெல்லாம் மேக முழக்கத்தை கேட்கிறதாகவே நினைத்து மனமகிழ்ந்தன. அந்த ஓசையைக் கேட்டுத் தமயந்தி யோசிக்கிறாள்.

8—16. இந்தத் தேர் ஒலியானது பூமிமுழுதும் பரவுகிறது. என் மனது இந்த ஓசையைக் கேட்டு மகிழ்கின்றது. அயோத்தியிலிருந்து நள மஹாராஜனே வருகிறதாகத் தோன்றுகிறது. மஹா புண்ணியசாலியும் வீரருமான அந்த நள மஹா ராஜருடைய பூர்ண சந்திரன் போன்ற முகத்தைக் காணாமலிருந்தால் நான் உயிர் வாழ மாட்டேன். இறந்தே போவேன். அவர் தமது புஜங்களால் என்னைத் தழுவி ஆலிங்கனம் செய்யா விட்டால் நான் இறப்பது நிச்சயம். நள மஹாராஜா மேகமுழக்கம்போன்ற கம்பீரமான தொனியோடு இன்றையதினம் என்னிடம் வந்து பேசாவிட்டால் சொர்ணத்தைப் போல ஜ்வலிக்கிற தீயில் விழுந்து மடிவேன். மஹிமை யுள்ளவரும், சிங்கத்தைப் போலப் பராக்கிரமம் உள்ளவரும், யானையைப் போலத் தைரியம் உள்ளவருமான நளராஜர் என்னிடம் இன்றைய தினம் வந்து சேராமலிருப்பாராகில் நான் இறந்து போவதில் சந்தேகமே யில்லை, நான் அவரிடத்தில் ஒரு பொய்யாவது பார்த்ததில்லை. மற்றவருக்கு ஏதாவது துன்பம் செய்திருக்கிறார் என்பதுமில்லை. அவர் பரிகாசத்துக்காகக் கூடப் பொய்பேசினவரல்ல, அவர் சூரர். குற்றங்களை க்ஷமிக்கிறவர், தியாகி எல்லா அரசர்களுக்கும் மேலான அரசர். ஈனத்தனமுள்ளவர்களோடு ஒருபோதும் கூடினதில்லை. மற்றப் பெண்களிடத்தில் மரியாதையாக நடக்கிறவர். அவருடைய தர்ம குணத்தை எண்ணிப் பார்த்து இரவும் பகலும் என் மனம் அவரிடம் செல்லுகின்றது. அவர் என்னிடம் வந்து சேராமலிருக்கிறதை நினைத்து என் மனம் துக்கத்தால் வெடிக்கின்றது. யுதிஷ்டிரரே! பாரதரே! இப்படிச் சொல்லிப் புலம்பிக்கொண்டு தமயந்தியானவள் நளராஜனைப் பார்க்க விரும்பி உப்பரிகையின் மேல் ஏறினாள்.

17—33. தேருக்கு மத்தியில் வார்ஷ்ணேயன், வாகுகனோடு ரிதுபர்ண ராஜனைக் கண்டாள். அதில் வாகுகனும், வார்ஷ்ணேயனும் தேரை விட்டு இறங்கினார்கள். குதிரையை அவிழ்த்து விட்டார்கள். தேரை ஒரு புறமாக நிறுத்தினார்கள். ரிதுபர்ண ராஜன் தேரை விட்டு இறங்கிப் பீமராஜனிடத்துக்குப் போனான். பீமராஜன் ரிதுபர்ணனை மரியாதையாக வர வேற்று உபசரித்தான். அந்த அழகான பட்டினத்தில் சுயம்வரத்தைப் பற்றி யாதொன்

றும் நடக்கவில்லை. பிறகு பீமராஜன் ரிதுபர்ணனை நோக்கி என்ன காரியமாக இவ்விடத்துக்கு வந்தீர் என்று கேட்டான், ஏனென்றால் இப்படிப்பட்ட அரசர்கள் வரத் தக்க சமையம் நேரிட்டாலன்றி அங்கே வருகிறதில்லை, தவிர சுயம்வர சமாசாரம் பீமராஜனுக்குத் தெரியாது. அங்கே இராஜாகளாவது இராஜ குமாரர்களாவது வரக்காணேம். வேதியர்களும் வரக் காணேம். சுயம்வரத்தைப் பற்றி யாதொரு சமாசாரமும் தனக்கு எட்டவில்லை. ஆகையால் ரிதுபர்ணன் சற்று யோசித்துப், பீமனை நோககி நான் உம்மைக் காணபதற்காகவே வந்தேன் என்றான். நூறு யோசனைக்கு மேற்பட்ட நெடுந் தூரத்திலிருந்து ரிதுபர்ணன் வந்திருக்கிறதைப் பற்றிப் பீமராஜன் அதிசயித்தான். அநேக இராமங்களையும் அரசர்களையும் கடந்து என்னைப் பார்க்கிறதற்காக வந்திருக்க மாட்டான். இவன் ஒரு அற்ப காரணத்தைப் பற்றி வந்திருப்பான். அது எதுவாயிருந்தாலும் இருக்கட்டும். பின்னால் தெரிந்து கொள்வோம். இப்படி யோசித்துக்கொண்டு பீமராஜன் ரிதுபர்ணனை மரியாதையோடு தன்னிடத்தில் நிறுத்திக் கொண்டான். ரிதுபர்ணனை நோக்கி நீர் நெடுந் தூரத்திலிருந்து வந்திருப்பதால் களைத்திருக்கிறீர். ஆகையால் கொஞ்சம் சிரமபரிகாரம் செய்துகொள்ளும் என்று சொன்னார். ரிதுபர்ணனும் மனம் மகிழ்ந்து தனக்கு விடப்பட்ட விடுதிக்குப் போய்ச் சேர்ந்தான். ரிதுபர்ணன் போன பின் வாகுகனும் வார்ஷ்ணேயனும் தேரைக் கொட்டகத்தில் கொண்டுபோய் நிறுத்தினார்கள். குதிரைகளை அவிழ்த்து விட்டு அவைகளை முறைப்படி பாதுகாத்தான். வாகுகன் குதிரைகளை காப்பாற்றி விட்டுத் தேரின் ஒரு பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தான். தமயந்தி துக்கத்தினால் ரிதுபர்ணனையும், வார்ஷ்ணேயனையும், வாகுகனையும் பார்த்தாள். அந்தச் சத்தம் யாருடைய தேரொலி என்று யோசித்துப் பார்த்தாள்.

34. இந்தத் தேர் ஒலியானது நளராஜனுடைய தேரொலியைப் போலிருக்கிறது. ஆனால் நளராஜனை மாத்திரம் காணேம். இந்தச் சாரத்தியத் தொழிலை வார்ஷ்ணேயன் கற்றுக்கொண்டிருக்க வேண்டும். அதனாலேதான் இந்தத் தேரொலி நளனுடையதைப் போல இருக்கிறது. அல்லது அந்த ரிதுபர்ண ராஜன் தேர்த் தொழிலில் நளராஜனுக்குச் சமானமாகவே இருக்க வேண்டும். அதனாலேயாவது இந்தத் தேரொலியானது நளராஜனுடைய தேரொலிபோலக் காணப்படலாம் என்று நினைத்தாள். யுதிஷ்டிரரே! தமயந்தி இப்படி யோசித்துக் கொண்டு ஒரு பணிவிடைப் பெண்ணை நளராஜனைப் பார்த்து வரும்படி அனுப்பினாள்.

---

## 74-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—5. தமயந்தி சொல்லுகிறாள். ஓ கேசினி நீ போய்த் தேரின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிற தேர்ப்பாகனை இன்னானென்று தெரிந்து

கொண்டு வா. குட்டையான புஜங்களையும், விகார ரூபம் உடையவனாக யிருக்கிறானே. அவனைத் தெரிந்து வா என்றாள். குற்றமற்றவளே! அவனிடத்திலே போய் வெகு ஜாக்கிரதையாகப் பேசு. அவனுடைய க்ஷேமத்தை விசாரி. அவனைப் பற்றிய சமாசாரங்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு சமயம் நளமஹாராஜராக இருக்கலாமென்று அஞ்சுகிறேன். ஏனெனால் இந்த விஷயத்தில் எனக்கு நிச்சயமாயும் திருப்தியாயுமிருக்கிறது. நன்றாய் விசாரித்துக் கொண்டபின் வேதியராகிய பாணதர் சொன்ன வார்த்தைகளைச் சொல்லு, அதற்கு அவர் சொல்லுகிற மறுமொழியை அறிந்துகொண்டு வா என்று அவளை அனுப்பிவிட்டுப் பாக்கியவதியான தமயந்தி என்ன நடக்கிறதென்று பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது கேசினி என்கிற வேலைக்காரி போய் வாகுகனைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

6—12. புருஷோத்தமரே! மனிதருக்குள் மேலானவரே! உம் வரவு சுகவரவாக இருக்கட்டும். நான் உமது க்ஷேமத்தை விரும்புகிறேன். இப்பொழுது சொன்ன வசனங்களைக் கேளும். நீர் எப்பொழுது புறப்பட்டீர்? என்ன காரியமாக இங்கு வந்தீர்! அந்த விசேஷங்களை யெல்லாம் சொல்ல வேண்டும். தமயந்தி இவைகளை யெல்லாம் கேட்க விரும்புகிறாள் என்று சொன்னாள். அதைக் கேட்டு வாகுகன் சொல்லுகிறான். எங்கள் அரசனிடம் ஒரு பிராமணன் வந்து தமயந்திக்கு இரண்டாவது சுயம் வரம் நிச்சயித்திருக்கிறது என்று சொன்னா. அதைக் குறித்து எங்கள் அரசன் இவ்விடம் வந்தான். நான் அவனுக்குச் சாரதியாகி, வாயுவேகம் போலத் தேர் ஓட்டிக் கொண்டு வந்தேன். அந்தத் தேரில் கட்டின குதிரைகள் நூறு யோசனை தூரம் செல்லத் தக்கவைகள். காற்றைப் போலப் பறக்கும் என்று சொன்னான். கேசினி வாகுகனைப் பார்த்து உம்மையும், அரசனையுந் தவிர மற்றொருவன் இருக்கிறானே, அவன் எங்கே யிருந்து வந்தான்? அவன் யாருடைய புத்திரன்? நீர் யாருடைய குமாரர்? இந்த வேலையை நீர் என் செய்கிறீர்? என்றாள். வாகுகன், அவன் நளராஜனுடைய தேர்க்காரன்; அவன் பேர் வார்ஷ்ணேயன், நளராஜன் இராஜ்யத்தை யிழந்து விட்டுப் போன பிறகு அவன் ரிதுபர்ண ராஜனிடத்தில் தேர்ப் பாகனாய் அமர்ந்து விட்டான். நானும் அசுவ வித்தையில் தேர்ந்து இருக்கிறேன். அதனாலும் நானும் அந்த அரசனிடத்தில் தேர்ப் பாகனா யிருக்கிறேன். அதுவும் தவிரச் சமையல் வேலையும் செய்கிறேன் என்று சொன்னான்.

13—16. கேசினி மறுபடியும் வாகுகனைப் பார்த்து. ஓ வாகுக! அந்த வார்ஷ்ணேயனுக்கு நளன் இருக்கிற இடம் தெரிந்திருக்குமோ? வார்ஷ்ணேயன் உம்மிடத்தில் சொல்லி யிருக்கலாமே என்று சொன்னாள். வாகுகன், நளராஜனுடைய குழந்தைகளை இவ்விடம் கொண்டு வந்து விட்ட பிறகு வார்ஷ்ணேயன் தனக்கு இஷ்டமான இடத்தை நோக்கிப் போய் விட்டான். ஆகையால் அவனுக்கு நளராஜன் போன இடம் தெரியாது. புண்ணியவதீ! நளனை வேறொருவரும் அறியமாட்டார்கள். நளராஜன் துக்கத்தினால் வரு

ந்தி விகார ரூபத்துடன் உலகத்தில் சஞ்சரிக்கிறான். நளன் தான் நளனை அறிவான். நளனுக் கிரண்டாவதான தமயந்தியும் அந்த நளனை அறிவாள். நளன் தன் சுய ரூபத்தை ஒருவருக்கும் காட்டுகிறதில்லை என்றான். அதைக் கேட்ட கேசினி சொல்லுகிறாள்.

17—22. முதல் தடவை அயோத்திக்கு வந்த அந்தணன், பெண்கள் பேசத்தக்கதான இந்த வசனதகை அடிக்கடி சொன்னான். அதென்னவென்றால், சூதாடுகிறவனே! பிரியமானவனே! நீ எங்கே போய்விட்டாய்; என் வஸ்திரத்தில் ஒரு பாதியை கிழித்து எடுத்துக்கொண்டு என்னை விட்டுப் போய் விட்டாயே! பதிபக்தி யுள்ளவளும், அன்புள்ளவளுமான மனைவியைக் காட்டிலே தூங்குகிறபோது தனியாக விட்டு விட்டு எங்கே போயிருக்கிறாய் என்பது. அவள் நிச்சயமாகவே உன் கட்டளைப்படியே பாதி வஸ்திரத்தை உடுத்துக் கொண்டு இங்கே யிருக்கிறாள். உன் வரவுக்கு எதிர் நோக்கி இருக்கிறாள். நீ பாதி வஸ்திரத்துடன் இரவும் பகலும் துக்கப்பட்டுக்கொண்டிருக்கிறாய். அந்தத் துக்கத்தால் ஓயாமல் புலம்பி கொண்டே யிருக்கிறாள். ஆகையால் நீ அவளிடம் பட்சம் வைத்துச் சரியான பதில் சொல் என்றான். தமயந்தி விரும்புகிறபடி அந்தக் கதையை அவளுக்கு சொல்லு என்று வேதியன் சொன்னதற்கு நீ மறுமொழி சொன்னபடி யிப்பொழுது சொல். ஏனென்றால் தமயந்தி அவைகளைத் தெளிவாய்க் கேட்க விரும்புகிறாள் என்றாள்.

23—31. இப்படிச் சொல்லிய கேசினி வார்த்தையைக் கேட்ட நளனுடைய மனம் துக்கத்தால் வெந்தது, கண்களிலிருந்து நீர் பெருகியது. பின் துக்கத்தை அடக்கிக் கொண்டு, துயரத்துடன் சொல்லுகிறான். கற்புள்ள பெண் துன்பத்தை யடைந்தாலும் தன்னைத் தானே காத்துக் கொள்ளவேண்டும். இப்படிச் செய்தால் அவள் சொர்க்கத்தை அடைவாள். மேலான குணத்தை உடைய பெண்கள் கோபத்தை விட்டுத், தங்களுடைய நல்ல நடக்கையாலே தங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். கணவன் தங்களைக் கைவிட்டாலும் அவன் மேலே கோபியாமல் தம்மைத்தாமே காத்துக்கொள்ள வேண்டும். ஏனென்றால் அவளுடைய கணவனும் துன்பத்தை அடைந்து மதி கெட்டு அவளை விட்டுப் பிரிந்தான். அவன் தன்னுடைய இராஜ்யத்தையும் இழந்துவிட்டான். ஆகையால் அவனைக் கோபித்துக் கொள்ளக் கூடாது. அவன் காட்டில் ஆகாரம் தேடுகிறபோது பட்சிகளால் தன் வஸ்திரத்தை யிழந்தான். அதனால் துக்கத்தால் மனமெரிந்துக் கொண்டிருக்கிறான். ஆகையால் இளமை மாறாத மனைவியானவள் அப்படிப் பட்ட தன் கணவன் மேல் கோபம் வைக்கக் கூடாது. தன் கணவன் நன்மையாக நடந்தாலும், இல்லாவிட்டாலும் மனைவி வெறுக்கப் படாது. ஏனென்றால் அவன் இராஜ்யத்தையும் சுகத்தையும் இழந்து வருந்துகிறான். பசியாலும் களையாலும் துக்கிக்கிறான் என்றான் பாரதரே! நளன் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போதே அவனுக்கு துக்கம் மேலிட்டது, கண்ணீர் ஒழுகியது. பரிதாபமாக அழுதான்.

பிறகு கேசினி திரும்பிப் போய்த் தமயந்திக்கு நடந்த எல்லாவற்றையும் சொன்னாள். நளனுடைய துக்கத்தையும் கூறினாள்.

---

## 75-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—6. தமயந்தி இவைகளைக் கேட்டு இவனே நளராஜனாக இருக்க வேண்டுமென்று சந்தேகித்துத் துயரப்பட்டுக் கொண்டு கேசினியை நோக்கிச் சொல்லுகிறாள். கேசினி! நீ மறுபடியும் வாகுகனிடம் போய், அவனுடைய நடக்கைகளைக் கவனித்துப் பார். ஒன்றும் பேச வேண்டாம். அவன் செய்கிற தொழில்களை நன்றாய்ப் பார்த்துக் கொண்டு வா. அவன் ஏதாவது செய்தால் அதன் காரணம் இன்னதென்று கவனி. அவன் ஏதாவது அதிசயமாகவும் சாமர்த்தியமாகவும் செய்தால் அவைகளைக் குறிப்பாய்ப் பார்த்து வா. அவன் நெருப்பாவது தண்ணீராவது கேட்டால் அவைகளை உடனே அவனுக்குக் கொடாதே. அவனிடத்தில் காண்கிற மனித குணங்களையும், மனிதர்களுக்குக் கிட்டாத மேலானவைகளையும் தெரிந்து கொண்டு வந்து எனக்குச் சொல்லு. இதைத் தவிர அவனிடத்தில் நீ காண்கிற அதிசயங்களையும் கவனித்து வந்து சொல் என்றாள். உடனே கேசினி புறப்பட்டுப் போய் விட்டாள்.

7—17. கேசினி வாகுகனிடம் போய், அவனுடைய செய்கைகளை யெல்லாம் தெரிந்து கொண்டு திரும்பினாள். வாகுகனிடத்தில் தான் கண்ட அதிசயமான செய்கைகளை யெல்லாம் தமயந்திக்குச் சொன்னாள். தமயந்தீ! இவனுக்குப் பஞ்சபூதங்களும் ஏவல் செய்கின்றன. இப்படிப்பட்ட வல்லமையுள்ளவனை நான் பார்த்ததே யில்லை. ஒரு சிறிய துவாரத்தின் கிட்டப் போனால் அவன் அங்கே குனிகிறதாவது, ஒதுங்குகிறதாவது கிடையாது. அந்தத் துவாரம் தானே அவன் தாராளமாய்ப் புகுந்து போகும்படி விசாலமாய் விடுகிறது. அவன் எளிதாய்ப் புகுந்து போகிறான். இப்படிச் சிறிய துவாரமும் அவன் கிட்ட போனவுடன் மிகப் பெரிதாய் விடுகிறது. பலவகையான போஜன பதார்த்தங்களையும், மாமிசத்தையும், நமது பீமராஜன் அவ்விடத்துக்கு அனுப்பினார். மாமிசத்தை அலம்புகிறதற்காக அநேக பாத்திரங்களையும் அனுப்பினார். வாகுகன் அந்தப் பாத்திரங்களைக் கண்ணாலே பார்த்தவுடனே அவைகளில் தானே ஜலம் நிரம்புகிறது. அவைகளைக் கழுவிய பின் வாகுகன் சமையல் செய்ய ஆரம்பித்தான். பிறகு அவன் ஒரு பிடி வைக்கோலை எடுத்துக் கொண்டு, அதைச் சூரியனுக்கு எதிரில் காட்டினான். உடனே அதில் தீப்பற்றிக் கொண்டது. அந்த அதிசயத்தைப் பார்த்து நான் மிக ஆச்சரியமடைந்தேன். அவனிடத்தில் இன்னம் ஒரு அற்புதத்தையும் பார்த்தேன். அதென்னவென்றால் அவன் நெருப்பைத் தொட்டால் அது அவனைச் சுடுகிறதில்லை. அவன் சொன்னவுடனே தண்ணீர் வெகு வேகமாய்ப் பெருகுகிறது. மற்ற ஒரு அதிச

சயம் கண்டேன். அவன் புஷ்பங்களைக் கையில் எடுத்துக் கொண்டு மெது வாய் அழுத்திப் பிடித்தான். அது வதங்கிப் போகிறதற்குப் பதிலாக முன்னிருந்ததை விட அதிக அழகாயும் வாசனையுள்ளதாயும் இருந்தது. இந்த அற்புதங்களைக் கண்ட பின் மிகவும் விரைவாக இங்கே வந்தேன் என்றாள்.

18—28. இப்படிப்பட்ட அதிசயமான செய்கைகளைக் கேட்ட பின், சந்தேகப்பட்ட தமயந்தி நளனைக் கண்டு பிடித்தேன் என்று எண்ணினாள். வாகுகனுடைய அதிசயமான செய்கைகளைக் கேட்ட தமயந்தி சந்தேகம் அடைந்து அழுதாள். கேசினியை அழைத்து அவளிடத்தில் மதுரமொழிகளால் சொல்லுகிறாள். கேசினீ! நீ மறுபடியும் வாகுகனிடத்துக்குப் போ. வாகுகனுக்கு உண்மையை சொல்லாமல் அவன் சமைத்த மாமிசங்களில் கொஞ்சம் வாங்கிக்கொண்டு வா என்றாள். உபகாரியான அந்தக் கேசினி உடனே வாகுகனிடத்துக்குப் போனாள். அங்கிருந்து உஷ்ணமாயுள்ள சமைத்த மாமிசத்தில் கொஞ்சம் எடுத்துக்கொண்டு திரும்பி வந்தாள். ஓ கௌரவோத்தமரே! அதன் பின் கேசினி அந்த மாமிசத்தைத் தமயந்தியிடம் கொடுத்தாள். முன்னாளில் நளனால் பாகம் பண்ணப்பட்ட மாமிசத்தைத் தமயந்தி அநேகம் தடவைகளில் புசித்திருந்தவளாதலால், அந்த மாமிசத்தை ருசி பார்த்த வுடனே வாகுகன் நளனே யென்று நிச்சயித்தாள். மிகுந்த துயரத்தால் கதறி அழுதாள். மிகுந்த துக்கத்தை அடைந்து பின் தன கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். பிறகு தமயந்தி தன்னுடைய இரண்டு குழந்தைகளையும் கேசினியுடன் வாகுகனிடத்துக்கு அனுப்பினாள். நளன் அந்த இரண்டு குழந்தைகளையும் தன்னுடைய குழந்தைகளென்று தெரிந்து கொண்டான். அதன் பின் நளன் சீக்கிரமாய் ஓடிவந்து அந்தக் குழந்தைகளைத் தழுவி யெடுத்துத் தன் மடியின் மேல் வைத்துக் கொண்டான். தெய்வ ஜாதியாரைப் போல விளங்குகிற அந்தக் குழந்தைகளை மறுபடியும் கட்டிக்கொண்டு துயரத்தோடு அழுதான். மெதுவான தொனியோடு பேசினான். அடிக்கடி தன் மனக் கருத்தை வெளியிட்ட பின் குழந்தைகளைத் திடீரென்று கீழே யிறக்கிவிட்டுக் கேசினியைப் பார்த்துச் சொல்லுகிறான். அழகுள்ள பெண்ணே! இந்த இரண்டு குழந்தைகளும் என்னுடைய குழந்தைகளை போல இருக்கிறார்கள். ஆகையால் அவர்களைப் பார்த்த வுடனே என் கண்களிலிருந்து நீர் பெருகியது.

19— . நீ என்னிடத்திற்கு அடிக்கடி வந்தால் ஜனங்கள் குறைவாக நினைப்பார்கள். ஏனென்றால் நாங்கள் அந்நிய நாட்டு மனிதர்கள். ஆகையால் அழகினை உடைய பெண்ணே! உனக்கு இஷ்டமான வேறிடத்துக்குப் போ என்றான்.

## 76-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—6. கேசினியானவள், தர்மிஷ்டனான வாகுகனுடைய மனத்துயரத்தை அறிந்துத் திரும்பி வந்து எல்லாவற்றையும் தமயந்திக்குச் சொன்னாள்.

தமயந்தி மனம் பதைத்துக் கேசினியைத் தன் தாயாரை அழைத்து வரச் சொன்னாள். பிறகு தன் தாயாரைப் பார்த்துத் தமயந்தி சொல்லுகிறாள். அம்மா! நான் வாகுகனைப் பலவகையாலும் பரீட்சித்துப் பார்த்தேன். அவன் தான் நளராஜனென்று சந்தேகிக்கிறேன். ஆனால் அவனுடைய சொரூபத்தி லே மாத்திரம் சந்தேக முண்டாகிறது. அதை நானே பரீக்ஷித்துத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஆகையால் என் பிதாவுக்குச் சொல்லியாவது சொ ல்லாமலாவது அவனை நான் நேரிலே பார்க்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும் அவனையாவது என் அறைக்கு அழைத்துக்கொண்டு வா, அல்லது என்னை யாவது அவனிருக்கு மிடத்துக்கு அனுப்பு என்றாள். தமயந்தியின் தாயார் பீமராஜனுக்குத் தன் புத்திரியின் கருத்தை தெரிவித்தாள். பிறகு மாதா பிதா க்களுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு தமயந்தி நளனைத் தன் அறைக்கு வரும்படி செய்தாள்.

7—16. நளன் அந்த அறைக்குள் புகுந்து தான் எதிர் பாராத தமயந்தி யைப் பார்த்த வுடனே துக்க சாகரத்தில் மூழ்கி விட்டான். தமயந்தியும் கண்ணீர் சொரிந்தாள். நளனை அந்த நிலைமையில் கண்ட தமயந்தி மிகுந்த துயரத்தால் வருந்தினாள். பிறகு அழுக்குப் படிந்த வஸ்திரத்தை உடுத்திருந்த தமயந்தி வாகுகனாகிய நளனைப் பார்த்துச் சொல்லுகிறாள். வாகுகா! தர்மந் தெரிந்த எந்த மனிதனாவது, நடுக்காட்டிலே நித்திரையால் மயங்கியிருந்த தன் பத்தினியைத் தனியாக விட்டுப் போனதைப் பார்த்ததுண்டா? களைத்தவ ளும், குற்றமற்றவளும், தன்னிடத்திலே பிரியமுள்ளவளுமான பத்தினியைத் தூங்குகிறபோது விட்டுப் போனவர்கள் நளராஜனைத் தவிர யாரிருக்கிறார்கள் நான் என் சிறு பிராய முதல்கொண்டு பூலோக மன்னவராகிய அவருக்கு ஒரு குற்றமும் செய்ததில்லை. நான் தூங்கும்போது என்னை என் காட்டிலே தனி யாக விட்டுப் போனார். முன் காலத்திலே தேவர்களைக் கூட நான் அலட்சி யம் பண்ணி அவருக்கு மாலை யிட்டேன். ஆகையால் அவரிடத்தில் பக்தி யும் அன்புமுடையவளும், அவரது குழந்தைகளுக்குத் தாயாயுமிருக்கிற என்னை ஏன் அவர் கை விட வேண்டும்? அவர் அக்கினிக்கும் தேவர்களுக்கும் முன் னிலையில் என்னைக் கை பற்றினார். அவர் எனக்கே உரியவரென்று உறுதி சொன்னார். அந்த உறுதி இப்பொழுது எங்கே போயிற்று. தமயந்தி இப்ப டிச் சொல்லிக்கொண்டே கண்ணீர் சொரிந்தாள். தமயந்தி துக்கத்தால் வரு ந்துகிறதைக் கண்ட நளன் தானும் கண்ணீர் விட்டு அவளைப் பார்த்துச் சொல்லுகிறான்.

17—24. அச்ச முடையவளே! நான் இராஜ்யத்தை யிழந்ததும் என் குற்றமன்று. அது கலியின் செய்கையால் நேர்ந்தது. உன்னைக் காட்டில் விட்டுப் பிரிந்ததும் அவனுடைய செயகையாலே தான். நீ காட்டிலே துக்கத் தால் வருந்தி அலைந்துகொண்டிருந்தபோது அந்தக் கலியைச் சபித்தாய். அது முதலாகக் கலி எரிந்துகொண்டு என்னிடத்தில் வாசம் பண்ணினான். நெருப் பானது நெருப்புக்குள் இருப்பது போல உன் சாபத்தால் எரிந்துகொண்டிரு

## 77-வது அத்தியாயம்.

நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—9. இரவு நீங்கின பின் நளராஜன் அலங்காரம் பண்ணிக் கொண்டு தமயந்தியுடன் பீமராஜனிடத்திற்குப் போனான். தன் மாமனாரை வணங்கினான் தமயந்தியும் தன் பிதாவை வணங்கினாள். பீமராஜன் நளனைத் தன் புத்திரனைப் போலப் பாவித்து மகிழ்ந்தான். நளனுக்குத் தகுந்த மரியாதை செய்து அவனுக்கும் தமயந்திக்கும் இனிய வசனங்களால் தேறுதல் சொன்னான். நளன் பீமராஜன் செய்த மரியாதையைப் பெற்றுக் கொண்டு முறைப்படி அவனை வணங்கினான். இதன் பிறகு அந்த நகரத்திலே சந்தோஷக் கூச்சல் உண்டாயிற்று. நகரத்து ஜனங்கள் நளன் திரும்பி வந்ததற்காக மிகவும் மகிழ்ந்தார்கள். நகரத்தைக் கொடிகளாலும் பூமாலைகளாலும் அழகாய் அலங்கரித்தார்கள். வீதி யெங்கும் தண்ணீர் தெளித்தார்கள். பூமாலைகளாலும் முத்து மாலை முதலியவற்றாலும் அலங்கரித்தார்கள். மாளிகைகளின் வாயிற்படிகளில் பூக்களால் அலங்காரம் பண்ணினார்கள். தேவாலயங்களெல்லாம் அலங்கரிக்கப்பட்டன. இப்படி நடக்கையில் ரிதுபர்ணராஜன், நளன், வாகுகன் சொரூபமாக வந்து தமயந்தியை அடைந்ததைக் கேட்டு அதிசயமடைந்தான். அவன நளனிடம் போய்த் தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்.

10. பேச்சில்வல்லனான ரிதுபர்ணராஜன் எல்லாவற்றின் உண்மைகளை அறிந்தவனாகையால், ஆச்சரியமடைந்து நளனைப் பார்த்து, நீர் உமது மனைவியை மறுபடியும் அடைந்ததனால் மகிழ்ச்சி யடைந் திருக்கிறீர். நீர என் அரண்மனையிலிருந்த போது நான் மனமறிந்தாவது, அறியாமலாவது குற்றம் செய்திருந்தால் பொறுத்துக் கொள்ள வேண்டுகிறேன் என்றான். நளராஜன் ரிதுபர்ணனை நோக்கி நீர எனக்கு ஒரு அற்பக் குற்றம் கூட செய்ததில்லை. நீர் குற்றம் செய்திருந்தாலும் அது க்ஷமிக்கத் தக்கதே. அது எனக்குக் கோபமில்லை. முதலிலே நீர் எனக்குச் சிநேகிதரும் பந்துவுமானவர். ஆகையால் நான் உம்மிடத்திலிருந்து சுகம் அநுபவிக்கத் தக்கவனே. நிச்சயமாக நான் உம்மிடத்திலிருந்த போது என் இஷ்டம் போல எல்லாச் சுகங்களையும் அநுபவித்தேன். என் சொந்த வீட்டிலே கூட இந்தச் சுகமில்லை. நீர் விரும்பின அசுவஹ்ருதய வித்தை ஒன்று இருக்கிறது. இப்பொழுது நீர் அதை விரும்பினால் உமக்கு உபதேசிக்கிறேன் என்று அந்த வித்தையை ரிதுபர்ணனுக்கு உபதேசித்தான், ரிது பர்ணனும் அதைக் கற்றுக் கொண்டான். பிறகு சூதாடும் வித்தையை நளனுக்கு கற்று கொடுத்தான். பிறகு வாகுகனுக்குப் பதிலாக வேறொரு சாரதியை நியமித்துக்கொண்டு ரிதுபர்ணன் அயோத்திக்குப் போய்ச் சேர்ந்தான்.

## 78-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—10. குந்தி புத்திரரே! ரிதுபர்ணன் போன பிறகு நளராஜன் குண்டினபுரத்தில் அதிக காலம் இருக்கவில்லை. ஒரு மாதம் அங்கே தங்கி யிருந்தான் பின் பீமராஜனிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு நிஷததேசம் நோக்கிப் புறப்பட்டான். ஒரு தேர், பதினாறு யானைகள், ஐம்பது குதிரைகள், அறுநூறு பதாதிகளுடன் புறப்பட்டுப் பூமி நடுங்கும்படியாக வேகமாய்ப் போனான். அங்கே போய்ச் சேர்ந்த பின் தன் சகோதரனான புஷ்கரனை நோக்கி நான் திரண்ட திரவியத்துடன் வந்திருக்கிற படியால் மறுபடியும் சூதாட விரும்புகிறேன் என்று தன் கருத்தைச் சொன்னான். தமயந்தி அல்லது என்னுடைய மற்ற எல்லாப் பொருள்களையுமாவது பந்தயம் வைக்கிறேன். நீ உன் இராஜ்யத்தைப் பந்தயமாக வை. நாம் நமக்குரிய எல்லாப் பொருள்களையும் நமது ஜீவனையும் பணையமாக வைத்துச் சூதாடுவோம். இது என்னுடைய உறுதி என்றான். நீ சூதாடப் பிரியப்படாவிட்டால், கத்தி யெடுத்து விளையாடவா. நாம் இருவரும் மாத்திரம் சண்டை போடுவோம். வம்ச பரம்பரையாய்த் தனக்கு வர வேண்டிய இராஜ்யத்தை எந்த வகையாகவாவது அடையலாமென்று சொல்லுகிறார்கள். புஷ்கரா! சூதாட வருகிறாயா? அல்லது யுத்தகளத்தில் வில் வளைத்துப் போர்செய்ய வருகிறாயா? இரண்டில் உனக்கு எது பிரியம் சொல் என்றான்.

11—17. நளராஜன் இப்படிச் சொன்னதைக் கேட்ட புஷ்கரன் தனக்கே ஜயம் வருமென்கிற நிச்சயமான எண்ணமுடையவனாய்ப் புன் சிரிப்புடன் சொல்லுகிறான். நளராஜனே! நீ உன் அதிர்ஷ்டவசத்தால் ஏராளமான பொருளைச் சம்பாதித்துக்கொண்டு வந்து பந்தயம் வைத்து மறுபடியும் சூதாட விரும்புகிறாய். தமயந்தியினுடைய அதிர்ஷ்டத்தால் அவளுடைய துக்கத்துக்கு முடிவு காலம் வந்துவிட்டது. நளராஜனே! நீ இன்னமும் உன் மனைவியுடன் கூடி யிருப்பதும் உன் அதிர்ஷ்டந்தான். நிச்சயமாகவே தமயந்தியானவள் சர்வாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவளாய் உன் சொத்துக்களுடனே என்னை அடையப் போகிறாள். இந்திரனிடத்தில் அப்ஸரஸ் இருப்பது போலத் தமயந்தி யென்னுடன் கூடி யிருப்பாள். ஆகையால் நான் உன்னையே நினைத்துக்கொண்டு உன் வரவுக்கு எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறேன். என் உறவைத் தவிர மற்றவரிடத்தில் சூதாட நான் விரும்புகிறதில்லை. இன்றைய தினத்தில் தமயந்தியினுடைய கைகளைப் பிடித்துக்கொள்வேன். மஹா அழகுள்ளவளும், குற்றமற்ற ரூபத்தை உடையவளுமான தமயந்தியின் கையைப் பற்றிக்கொண்டு நான் வெகு பாக்கியமுள்ளவனாக வாழ்ந்திருப்பேன். ஏனென்றால் அவள் எப்போதும் என் இருதயத்தை விட்டு நீங்காமலிருக்கிறாள் என்றான். புஷ்கரன் இப்படிச் சொன்ன தற்புகழ்ச்சியான வார்த்தைகளை நளன்

கேட்டு மிகுந்த கோபமடைந்தான். தன் வாளால் அவன் தலையை வெட்ட உத்தேசித்தான். நளனுக்கு அவ்வளவு கோபம் உண்டானபோதிலும் புன் சிரிப்புடையவனைப் புஷ்கரனை நோக்கிச் சொல்லுகிறான்.

18—29. நாம் சூதாட ஆரம்பம் செய்வோம். அதை யேன் இப்பொழுது சொல்லுகிறாய்? சூதாடி என்னை ஜயித்த பின் உன் இஷ்டப்படி பேசலாம் என்றான். அதன் பின் இருவரும் சூதாடத் தொடங்கினார்கள். புஷ்கரன் தன்னுடைய ஜீவன் முதல் எல்லாவற்றையும் பந்தயம் வைத்து ஆடத் தொடங்கினான். நளன் அவைகள் எல்லாவற்றையும் ஒரே ஆட்டத்தில் ஜயித்துக்கொண்டான். புஷ்கரன் தன் பொருள்கள் பொக்கிஷம் எல்லாவற்றையும் தோற்றான். நளன் புஷ்கரனை ஜயித்த பின் சிரித்துக்கொண்டு சொல்லுகிறான். இப்பொழுது இராஜ்ய மெல்லாம் வழக்கில்லாமல் என்னுடைய சொந்தம யிற்று. முள்ளுகள் எல்லாம் நாசமாக்கப்பட்டன. அதாவது சத்துருக்களே இல்லாமல் போனார்கள். கெட்ட அரசனே! இப்பொழுது நீ தமயந்தியை உன் கண்களால் பார்க்கக்கூட முடியாது. ஏ மூடா! நீ உன் குடும்பத்தோடு அவளுக்கு அடிமையாய்விட்டாய். முன் தடவை நான் தோற்றது உன் செய்கையால் அல்ல. அது கலியால் நடந்தது. மூடனே நீ இதை அறிய மாட்டாய். மற்றொருவர் எனக்குச் செய்த குற்றத்தை நீ செய்ததாக எண்ண மாட்டேன். நான் உன் உயிரை உனக்குக் கொடுக்கிறேன். நீ சுகமாய் ஜீவித்திரு. முன் போலவே உன் இராஜ்யத்தையும் உனக்குத் தருகிறேன். நான் முன்பு நேசித்தது போலவே யிப்பொழுதும் நேசிக்கிறேன். அந்த அன்பு ஒரு போதும் குறையாது. நீ என் சகோதரன். ஆகையால் நீ நூறு வருஷம் சுகமாய் ஜீவித்திரு என்று நளன் இப்படிச் சொன்ன பின் தன் சகோதரனைத் தழுவிக்கொண்டு அவனைத் தேற்றினான். புஷ்கரன் கைகளைக் குவித்துக்கொண்டு நளனை வணங்கிச் சொல்லுகிறான்.

29—33. மஹாராஜனே! நீர் என் உயிரை எனக்குக் கொடுத்து இராட்சிப்பையும் தந்தபடியால் நீர் பதினாயிரம் வருஷம் சுகத்துடன் வசிக்கக் கடவீர். உமது கீர்த்தி எந்நாளும் அழியாமல் உலகத்தில் நிலைத்திருக்கக் கடவது என்று சொன்னான். பிறகு புஷ்கரன் மனதுக்குள் மகிழ்ச்சி அடைந்தான். நளனுடன் கூட ஒரு மாதம் தங்கி யிருந்தான். அதன் பின் தன் நகரம் போய்ச் சேர்ந்தான். புஷ்கரனைப் பெரிய சைனியத்தோடும், வேலைக்காரரோடும் அவனுக்கு வேண்டியவைகளைக் கொடுத்து அனுப்பிவிட்ட பின், மிகவும் அழகாய் அலங்காரம் செய்திருக்கிற தன் அரண்மனைக்குள்ளே நளராஜன் குடி போனான். நகரத்தாருக்கும் கிராமவாசிகளுக்கும் ஆறுதல் சொல்லிச் சமாதானப்படுத்தினான். மந்திரிகளும் அரசாங்க உத்தியோகஸ்தர்களும் நளராஜனுக்கு எதிரில் வந்து கைகளைக் கூப்பி நின்றுகொண்டு, மஹாராஜாவே! கிராமத்தாரும் நகரத்தாரும் மாகிய ஜனங்கள் எல்லாரும் இன்று உண்மையாகவே களிப்பு அடைகிறோம். தேவேந்திரன் வரவைக் கண்டு மகிழ்கிற தேவர்களைப் போல நாங்கள் உமது வருகையால் ஆனந்த மடைகிறோ மென்றார்கள்.

## 79-வது அத்தியாயம்.

### நளோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—21. மாவிந்த நகரத்தார் சந்தோஷத்தினாலே பெரிய திருவிழாக் கொண்டாடினார்கள். நளராஜன் தமயந்தியை மீண்டும் அழைத்துக்கொண்டு வந்தான். பீமராஜனும் சகல சிறப்புகளுடன் தன் குமாரத்தியை நளராஜனிடம் அனுப்பினான். தேவர்கள் நந்தன வனத்தில் சுகம் அனுபவிப்பது போல நளராஜன் தன் மனைவி மக்களுடன் கூடிச் சகல போகங்களையும் அனுபவித்துக்கொண்டு சுகமாய் அரசு செலுத்தி வந்தான். மஹா மஹிமையுள்ள நள மஹாராஜன் மீண்டும் தன் அரசுரிமையைப் பெற்று அரசர்கள் எல்லாரும் வணங்க இந்த ஜம்புதீவை ஆண்டான். ஏராளமான தட்சிணைகளோடு அநேக யாகங்களைச் செய்தான் என்று பிருகதசுவ முனிவர் சொல்லிவிட்டு, ஓ தர்ம ராஜாவே! நீரும் அவனைப் போலவே வெகு சீக்கிரத்தில் உமது அரசாட்சியைப் பெற்றுப் பந்து மித்திரர்களுடன் அநேக யாகங்களைச் செய்யப் போகிறீர். யுதிஷ்டிரரே! சத்துரு பயங்கரனான நளராஜன் சூதாட்டத்தில் கொண்ட விருப்பத்தினாலே தான் தனியாக இருந்து பெரிய துன்பத்தை அனுபவித்தான். மறுபடியும் இராஜ்யத்தைப் பெற்று மகிழ்ந்து வாழ்ந்தான். நீரோ உமது மனைவி தம்பிமார்கள் சிநேகிதர்களுடன் கூடித் தர்மங்களைச் செய்துகொண்டிருக்கிறீர். வேதங்களைக் கரை கண்ட அநேக அந்தணர்களுடன் கூடியிருக்கிற நீர் துக்கப்படக் காரணமேயில்லை. நாகராஜனாகிய கார்க்கோடகன், தமயந்தி, நளன், இராஜரிஷியான ரிதுபர்ணன் இவர்களுடைய சரித்திரத்தைப் படிக்கிறவர்களிடத்தில் கலி அணுகுவதில்லை. இந்தச் சரித்திரமானது உம்மைப் போன்றவர்களுக்கு ஆறுதலை உண்டாக்குவதாகும். பாரதரே! மனுஷப் பிரயத்தினம் எப்போதும் பயனற்றதென்று அறிந்த நீர் கஷ்டகாலத்தில் துக்கமும் வாழ்வு வந்தபோது மகிழ்ச்சியும் அடையக் கூடாது. ஆகையால் தர்மராஜாவே! இந்தக் கதையைக் கேட்டு மகிழ்ந்திரும். துக்கப்பட வேண்டாம். இந்த நளமஹாராஜனுடைய சரித்திரத்தைப் படிக்கிறவனும், துக்கத்தை அடையவே மாட்டார்கள். மகிமையுள்ளதும் புராதனமாயுள்ளதுமான இந்தச் சரித்திரத்தைக் கேட்கிறவர்கள் தங்களுடைய மனோரதங்கள் எல்லாம் நிறைவேறப் பெறுவார்கள். புத்திர பௌத்திரர்களையும், பசுக்களையும், மேலான நிலைமையையும், சுகத்தையும் மகிழ்ச்சியையும் அடைந்து நெடுங்காலம் வாழ்ந்திருப்பார்கள். இதில் சந்தேகமேயில்லை. பாண்டு புத்திரரே! இன்னம் யாராவது உம்மைச் சூதாட அழைத்தால் நீர் ஆடாதிருக்கும்படி தடுக்கிறேன். குந்தி புத்திரரே! சூதாடும் வித்தை எனக்கு நன்றாய்த் தெரியும். நான் உம்மிடத்தில் அதிக பிரியமாயிருக்கிறபடியால் அந்த வித்தையை உமக்குக் கற்றுக்கொடுக்கிறேன். அதை நீர் கற்றுக்கொள்ளும் என்றார். இதைக் கேட்டதும் யுதிஷ்டிரர் மிகவும் மகிழ்ச்சியடைந்து, பிருகதசுவரை நோக்கி மஹாத்மாவே! அந்த வித்தையை நான் கற்றுக்கொள்ளப் பிரியப்படுகிறேன். கருணை

கூர்ந்து அதை எனக்குக் கற்றுக்கொடும் என்று கேட்டார். பிருகதசுவ முனி வர் தர்ம புத்திரருக்குச் சூதாடும் வித்யையைக் கற்றுக்கொடுத்தார். அதன் பிறகு ஸ்நானம் செய்வதற்காக அசுவசிரஸை நோக்கிப் போய்விட்டார்.

22— . பிருகதசுவர் போன பிறகு, அர்ஜுனன் வாயு பக்ஷணம் செய்துகொண்டு கொடுந் தவசு பண்ணுகிறதை யுதிஷ்டிரர் கேள்விப்பட்டார். காடுகளிலும் மலைகளிலும் இருந்து தவம் புரிகிற ரிஷிகளும், அந்தணர்களும் தர்மராஜாவினிடத்துக்கு வந்தபோது அர்ஜுனன் தவசுபண்ணுகிறதைப் பற்றி அவருக்குச் சொன்னார்கள். அவன் பயங்கரமான தவசு பண்ணுகிறான்; இதற்கு முன் இவனைப் போல ஒருவனும் இப்படிப்பட்ட கடும் தவசு பண்ணி னதே யில்லை; மௌனவிரதம் செய்துகொண்டு, உறுதியாகத் தியானத்திலிரு ந்து தவம் பண்ணுகிறான்; தர்ம தேவதையைப் போல விளங்குகிறான் என்றும் சொன்னார்கள். இப்படிச் சொல்லக் கேட்ட யுதிஷ்டிரர் அர்ஜுனன் பெரிய காட்டிலே யிருந்து அன்னபானங்க ளில்லாமல் தவசுபண்ணுகிறதைக் குறித் துத் துயரப்பட்டார். அந்தத் துயரம் ஆறுவதற்காகப் பிராமணர்களிடத்தில் பேசிக்கொண்டிருந்தார்.

---

## 80-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வம்.*

1—3. ஜனமேஜய மஹாராஜா வைசம்பாயனரை நோக்கி, மஹானுபா வரே! என்னுடைய பெரிய பாட்டனை அர்ஜுனன் தவசு செய்யப் போன பிறகு மற்ற பாண்டவர்கள் காமியக வனத்தில் என்ன செய்து கொண்டிருந் தார்கள்? விஷ்ணு அதிதி புத்திரர்களுக்கு இரக்ஷகரா யிருப்பது போலப் பாண் டவர்கள் எல்லாருக்கும் வில்லாளியான அர்ஜுனன்தான் ஆதரவு என்று நான் கருதுகிறேன். அர்ஜுனன் பிரிந்து போன பிறகு என் பாட்டன்மார்கள் அந்த வனத்தில் எப்படிக் காலம் கழித்தார்கள்? என்று கேட்க வைசம்பாயனர் சொல்லுகிறார்.

4—11. குழந்தாய்! மஹாவீரனை அர்ஜுனன் காமியக வனத்தை விட் டுப் போன பின், பாண்டு புத்திரர்கள் எல்லாரும் வெகு துக்கப்பட்டார்கள். சரடு அறுந்துபோன முத்துமாலை போலவும், சிறகற்ற பறவை போலவும் துக் கத்தில் மூழ்கினார்கள். குற்றமற்ற வீரனை அர்ஜுனன் இல்லாத காமியக வனமானது குபேர னில்லாத சைத்திரரத வனத்தைப் போலத் தோற்றியது. அந்தக் காட்டில் பாண்டவர்கள் சந்தோஷ மில்லாமலே வசித்தார்கள். தேர் வீரர்களான அந்தப் பாண்டவர்கள் விஷ மூட்டப்படாத அம்புகளினாலே பரி சுத்தமான மிருகங்களைக் கொன்று அந்தணர்களுக்கு உணவாகக் கொடுத்தார்

கள். அர்ஜுனன் பிரிந்த பின் பாண்டவர்கள் சந்தோஷ மில்லாமல் துக்கத்தோடு இப்படிக் காலங் கழித்தார்கள். முக்கியமாய்ப் பாஞ்சாலியானவள் மிகுந்த துக்கம் அடைந்து பின் வருகிறபடி யுதிஷ்டிரரிடத்தில் சொன்னாள்.

12—16. இரண்டு கைகளை யுடைய தனஞ்சயன் அநேகம் கைகளை யுடைய கார்த்த வீரியார்ஜுனனுக்குச் சமானமானவன். அவன் இல்லாத இந்த வனம் எனக்கு இரம்மியமுள்ளதாகத் தோன்றவில்லை. நான் எந்த இடத்தைப் பார்த்தபோதிலும் இந்த வனம் பாழடைந்து ஒன்று மில்லாததாக எனக்குக் காண்கிறது. பூத்த மரங்களை யுடையதும் பல விநோத காட்சிகளை யுடையதுமான இந்த வனம் அர்ஜுனன் இல்லாமையால் எனக்கு மகிழ்ச்சி தரவில்லை. நீருண்டமேகம் போன்ற நீலவர்ண மேனியை யுடையவனும், மதங்கொண்ட யானைபோன்ற பராக்கிரமத்தை யுடையவனுமான அந்த அர்ஜுனன் இல்லாமலிருக்கிறதினால் எனக்குக் கொஞ்சங்கூட இன்பமாக யிருக்கவில்லை. இடி முழக்கம் போன்ற நாணொலியையுடைய வில் வீரனாகிய விஜயனை நினைத்துக் கொண்டிருப்பதினாலே என் மனதுக்குச் சுகமே யில்லை யென்று அழுதுகொண்டு சொன்னாள். இதைக் கேட்டுச் சத்துருக்களைச் சங்கரிக்கிற வீரனை பீமசேனன் சொல்லுகிறான்.

17—23. பாக்கியமுள்ளவளே! சிறந்த இடையை யுடையவளே! நீ சொல்லுகிற இன்பமான வசனங்கள் என் மனதுக்கு மகிழ்ச்சி தருகின்றன. அமிர்தம் உண்பதுபோல இருக்கிறது. நீண்டு பருத்துத் திரண்டு எழுகு ஸ்தம்பங்களைப் போன்றவையும், வில் நாணப்பட்ட தழும்போடு கூடினவையும், சகல ஆயுதங்களிலும் பயிற்சியுடையவைகளும், சொர்ணகடகம் பூண்டவைகளும், இரண்டு ஐந்தலை நாகங்களைப் போன்றவைகளுமான புஜங்களை யுடைய அந்த வீரன் இல்லாமையால் இந்த வனம் சூரியனில்லாத ஆகாயம் போலக் காணப்படுகிறது. அவனுடைய சகாயத்தினாலே பாஞ்சாலர்களும் கௌரவர்களும் தேவர்களுக்குக் கூட அஞ்சுகிறதில்லை. இவன் இருப்பதினாலேதான் பூலோகத்திலுள்ள நமது சத்துருக்களெல்லாரும் அழிந்துவிட்டதாக எண்ணிக்கொண்டிருக்கிறோம். இப்பொழுது அவன் இங்கு இராமையால் இந்தக் காமியக வனம் எனக்குப் பிரியமா யிருக்கவில்லை. திக்குகளெல்லாம் வெறுமையாகவும் இருளடைந்தது போலவும் தோன்றுகின்றனவே. நான் எவ்விடத்தில் பார்த்த போதிலும் அவ்விடமெல்லாம் ஒன்று மில்லாததுபோலவே தோன்றுகிறது என்றான். பிறகு நகுலன் விம்மி யழுதுகொண்டு சொல்லுகிறான்.

24—27. யுத்தத்தில் எதிரில்லாதவனென்று தேவர்கள் கூடப் புகழ்ந்து பேசுகிற வீரனை அர்ஜுனன் இல்லாமல் இந்த வனத்தில் என்ன சுக மிருக்கிறது? வடதிசை நோக்கிச் சென்று அளவில்லாத கந்தர்வ இராஜர்களை யுத்தத்தில் வென்று, சிறந்த குதிரைகளைக் கப்பமாக வாங்கிக்கொண்டு வந்து, இராஜசூய யாகத்தில் தன் தமையனாருக்குக் கொடுத்தான். பீமசேனனுக்குத் தம்பியும், தெய்வத்தன்மை யுள்ளவனுமான அந்த வீரனை யின்றி இந்தக் காமியக வனத்தில் வசிக்க எனக்குப் பிரியமே யில்லை என்று சொன்னான்.

28—32. சகதேவன் மஹா ராஜாவே! இந்த ஆச்சிரமத்தில் அர்ஜுனன் இல்லாமல், அவனுடைய படுக்கையை மாத்திரம் பார்க்கிறேன். யுத்தத்தில் அதிரத வீரர்கள் எல்லாரையும் வென்று அளவில்லாத திரவியங்களையும், கன்னிகைகளையும் கப்பமாக வாங்கிக்கொண்டு வந்து, தமயனுருக்குக் கொடுத்து இராஜசூய யாகத்தை நிறைவேற்றினன், கிருஷ்ணபகவானுடைய சம்மதத்தினாலே சுபத்திரையைப் பாணிக்கிரகணம் செய்தபோது எதிர்த்துவந்த யாதவர்களெல்லாரையும் வென்று ஜயம் பெற்றான். துரோணாசாரியாருக்குக் குருதட்சிணை கொடுப்பதற்காகப் பாஞ்சாலதேசம் சென்று, துருபதராஜனை வென்று அவனுடைய பாதி ராஜ்யத்தைத் துரோணருக்கு வாங்கிக்கொடுத்தான். அப்படிப்பட்ட மஹா வீரனைப் பிரிந்து இருப்பதினாலே எனக்கு எவ்விதத்திலும் ஆறுதல் இல்லை. இந்த வனத்தி லிருக்க எனக்குப் பிரியமில்லை. ஆகையால் இந்தக் காமியக வனத்தை விட்டு வேறு காட்டுக்குப் போயிருப்பது தான் நன்மையாக எனக்குத் தோன்றுகிறது என்று சொன்னான்.

---

## 81-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. வைசம்பாயன மஹரிஷியானவர் ஜனமேஜயனைப் பார்த்து, அரசனே! இவைகளைக் கேட்ட தர்மராஜாவானவர் சற்று நேரம் ஏமாறனையற்றவரா யிருந்தார் அப்போது ஜ்வலிக்கிற ஹோமாக்கினியைப் போலப் பிரம தேஜஸால் பிரகாசிக்கிற தேவரிஷியான நாரதமுனிவர் வருகிறதைப் பார்த்தார். உடனே தமது சகோதரர்களுடனே எழுந்திருந்து அந்த முனிவரை முறைப்படி வணங்கினர். சகோதரர்களால் சூழப்பட்ட தர்மராஜாவானவர் தேவர்களால் சூழப்பட்ட இந்திரனைப் போல விளங்கினர். வேதத்தை விட்டுச் சாவித்திரி விலகாமலிருப்பது போலவும், மேருமலையை விட்டுச் சூரிய கிரணம் விலகாமலிருக்கிறது போலவும் திரௌபதியானவள் தன் பர்த்தாவான தர்மராஜாவை விட்டுப் பிரியாமல் அவருடைய பக்கத்தில் நின்றுகொண்டிருந்தாள். நாரதமுனிவர் அவர்களுடைய வணக்கத்தை அங்கீகரித்துக் கொண்டு இனிய வசனங்களினாலே தர்மராஜாவுககுத் தேறுதல் கூறினர். பிறகு யுதிஷ்டிரரைப் பார்த்து ஓ தர்மாத்மாவே! நீ என்னத்தை வேண்டுகிறாய்? நான் உனக்கு என்ன செய்யவேண்டும் என்று நாரதர் கேட்டார். தர்மராஜாவானவர் தமது தம்பிகளோடு அவரை வணங்கிச் சொல்லுகிறார். தேவரிஷியே! நீர் என்னிடத்தில் பிரியம் வைத்தபோதே உமது கருணையாலே என் மனோபீஷ்டங்களெல்லாம் நிறைவேறின. பாபமில்லாதவரான ரிஷிகளவரரே! நானும் என் சகோதரர்களும் உமது கருணை யொன்றையே விரும்புகிறோம். எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது. அதை நீக்கி அருளவேண்டுகிறேன்.

அதென்னவென்றால் தீர்த்தங்களையும், க்ஷேத்திரங்களையும் தரிசிக்க விரும்பி யாத்திரை செய்கிறவன் என்னென்ன குணங்களை உடையவனு யிருக்கவேண்டும்? அதை எனக்குத் தெளிவாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்டார் நாரதர் சொல்லுகிறார்.

12—22. தர்மராஜாவே! பீஷ்மருக்குப் புலஸ்திய முனிவர் கூறியதைச் சொல்லுகிறேன்; நீர் அவைகளைக் கவனமாய்க் கேளும். முன்னொரு காலத்தில் பீஷ்மரானவர் பாகீரதிநதி தீரத்தில் விரதானுஷ்டானம் பண்ணிக்கொண்டிருந்தார். அந்த இடம் மகிழ்ச்சி தரத்தக்கதும் பரிசுத்த முள்ளதுமாக இருந்தது. கங்காநதிக் கரையிலுள்ளது. தேவர்களும் கந்தர்வர்களும் அடிக்கடி வந்து சேவிக்கத் தக்கது. பீஷ்மர் விதிப்படி தேவர்களுக்கும் பிதிர்களுக்கும், ரிஷிகளுக்கும் முறைப்படி அவிசளித்துத் திருப்தி செய்வித்தார். இப்படிச் செய்துகொண்டிருக்கையில் ஒரு நாள் மகிமையுள்ள புலஸ்திய முனிவர் வருகிறதைப் பார்த்தார். உறுதியான தவத்தையுடைய புலஸ்திய முனிவர் வருகிறதைப் பார்த்துப் பீஷ்மர் மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் அடைந்தார். தர்மாத்மாவான பீஷ்மர் தம்மைச் சுத்திசெய்துகொண்டு அர்க்கியம் எடுத்துக்கொண்டு முனிவரிடம் போய்த் தமது பெயரை இரைந்து சொல்லி, விதிப்படி வணங்கினார். சிறந்த தவமுடைய முனீசுவரரே! நான் உமது ஊழியக்காரனாகிய பீஷ்மன். உம்மைத் தரிசித்தவுடனே என்னுடைய பாபங்களெல்லாம் ஒழிந்து பரிசுத்தனாய்விட்டேன் என்று கூறி அஞ்சலியஸ்தராய் நின்று கொண்டிருந்தார். விரதங்களால் மெலிந்த சரீரமுடையவரும், வேதங்களை முற்று முணர்ந்தவருமான முனிவர் பீஷ்மருடைய உபசாரத்தால் மிகவும் களிப்படைந்தார்.

---

## 82-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—7. பிறகு புலஸ்தியமுனிவர் பீஷ்மரை நோக்கித் தர்மங்களை யறிந்த பீஷ்மரே! உமது வணக்கத்தாலும், அடக்கத்தாலும், சத்தியத்தாலும் சந்தோஷம் அடைந்தேன். பாபமில்லாதவனே! குழந்தாய்! உங்களுடைய முன்னோர்களால் அநுஷ்டிக்கப்பட்ட தர்ம நெறியில் தவறாதவனு யிருப்பதினாலேதான் நான் உன்னிடம் வந்தேன். மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். பீஷ்மா! உனக்கு நான் என்ன செய்யவேண்டும்? நீ எதைக் கேட்டாலும் அப்படியே செய்கிறேன்; சொல் என்றார். பீஷ்மர் சொல்லுகிறார். எல்லா உலகத்தாராலும் வணங்கத்தக்கவரே! என்னிடத்தில் பிரியமுள்ளவராக வந்த உம்மைத் தரிசித்தமாத்திரத்திலே நான் சகல சித்திகளையும் அடைந்தேன். மஹானுபாவரே! உமக்கு என்னிடத்தில் உள்ள ஒரு சந்தேகத்தை நீக்கி யருளவேண்டுகிறேன்.

அது என்ன என்றால் தீர்த்தயாத்திரையைப் பற்றிய மத சம்பந்தமான சந்தேகம். அதைக் கேட்க விரும்புகிறேன். ஒவ்வொன்றையும் எனக்குத் தெளிவாகச் சொல்ல வேண்டுகிறேன். பிராமணரிஷியே! தேவர்களுக்குச் சமானமானவரே! க்ஷேத்திரங்களைத் தரிசிக்க விரும்பி யாத்திரை செய்கிறவன் எந்தத் தர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும்? அதை நிச்சயமாய் எனக்குச் சொல்லியருளும் என்றார்.

8—19. புலஸ்தியரானவர், குழந்தாய்! ரிஷிகளுக்குச் சிறந்ததாயுள்ள தீர்த்தயாத்திரைக் குரிய தர்மங்களைச் சொல்லுகிறேன் கவனமாய்க் கேளு. கை, கால், மனம், அறிவு, தவம், செய்கை முதலியவற்றால் அடங்கி யிருக்கிறவன் தீர்த்தயாத்திரையின் பலனை அடைவான் தானம் வாங்காதவனும், கிடைத்த பொருளால் திருப்தி யடைகிறவனும், செருக்கில்லாதவனும், தீர்த்தத்தின் பலனை யடைவான். பாபம் செய்யாதவனும், விருப்பமில்லாமல் கர்மத்தைச் செய்கிறவனும், மிதாகாரம் உண்பவனும், ஆசைகளை ஜயித்தவனும் தீர்த்திரையின் பலனை அடைவான். கோபமில்லாதவனும், சத்தியமுள்ளவனும், தான் கொண்ட விரதத்தில் உறுதியுள்ளவனும், எல்லா ஜீவன்களையும் தன்னைப் போலாகக் கருதுகிறவனும், தீர்த்தயாத்திரையின் பலனை யடைவான். யாகத்தையும், யாகத்தின் பலனையும் முறையே யிம்மையிலும் அடைகிறார்களென்று ரிஷிகள் சொல்லி யிருக்கிறார்கள். பூமிக்கரசனே! ஏழைகளால் யாகம் செய்ய முடியாது. ஏனென்றால் யாகம் செய்வதற்கு அநேக கருவிகளும் ஏராளமான பொருள்களும் வேண்டும். ஆகையால் அரசர்களும், திரண்ட ஐசுவரியமுள்ளவர்களும் தான் செய்யக்கூடும். திரவியமில்லாதவர்களும், சிநேகிதர்கள் இல்லாதவர்களும் வேள்வி செய்யத் தகாதவர்கள். பராக்கிரமசாலியான மன்னவனே! ஏழைகளால் செய்யக் கூடியதும், யாகத்துக்குச் சரியான பலன் அளிப்பதுமான தர்மத்தைச் சொல்லுகிறேன் கேள், பாரதனே! பரிசுத்தமானதும், ரிஷிகளிடத்தில் இரகசியமாய் உள்ளதும், யாகத்துக்கு மேலான பலன் தருவதும் தீர்த்த தரிசனம்தான். தீர்த்தயாத்திரை போய் அங்கே மூன்று இரவு உபவாசம் இராதவனும், சொர்ணத்தையும் பசுவையும் தானம் கொடாதவனும் ஏழை யென்று கருதப்படுகிறான். அதாவது சொற்ப பலனை அடைகிறவன் ஆவான். அக்கினிஹோத்திரம் செய்வதும், பூர்ண தக்ஷிணையோடு யாகங்களைச் செய்வதும் தீர்த்தயாத்திரைக்கு ஈடாகாது.

20—39. பூலோகத்தில் தெய்வத்தன்மையுள்ள ஒரு தீர்த்த மிருக்கிறது. அது மூன்று உலகத்தாராலேயும் கொண்டாடப்படுவது. அதன் பெயர் புஷ்கரதீர்த்தம். அதை அடைகிறவன் தேவர்களுக்கெல்லாம் தேவனாவான். புஷ்கரத்திலே யுள்ள திரிசந்த தீர்த்தத்தில் அநேகம்கோடி தீர்த்தங்கள் வசிக்கின்றன. ஆதித்தியர், வசுக்கள், ருத்திரர்கள், சாத்தியர்கள், மருத்துக்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள் இவர்கள் எல்லாரும் எப்போதும் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். தேவர்கள், தானவர்கள், பிரமரிஷிகள்,

இவர்கள் எல்லாரும் இவ்விடத்தில் தவம் புரிந்ததனால் மஹா புண்ணியத்தையும், தெய்வத்துவ வித்தையும் பெற்றார்கள். அறிவுள்ளவர்கள் அந்தப் புஷ்கர தீர்த்தத்தை மனதினால் சிந்திப்பதினால் கூடச் சகல பாபங்களினின்றும் விடுபட்டுச் சொர்க்கத்தை அடைகிறார்கள். தாமரை பீடத்தில் எழுந்தருளியிருக்கின்ற லோக பிதாமகரான பிரமதேவர் சதா காலமும் இந்தத் தீர்த்தத்தில் வசிக்கிறார். பூர்வகாலத்தில் தேவர்களும், ரிஷிகளும் இந்தப் புஷ்கர தீர்த்தத்தில் புண்ணிய கர்மங்களைச் செய்து சகல சித்திகளையும் பெற்றார்கள். பிதிர்களையும் தேவர்களையும் உத்தேசித்து அந்தத் தீர்த்தத்தில் முழுகுகிறவர்கள் அசுவமேதஞ் செய்த புண்ணியத்தை விடப் பத்து மடங்கு மேலான புண்ணிய மடைவார்கள் என்று ஞானிகள் கூறுகிறார்கள். ஓ பீஷ்மா! புஷ்கராரண்யத்துக்குப் போய் அங்கே ஒரு பிராமணனுக்கு அன்னமிட்டவன் இகபர மிரண்டிலும் சுகத்தை அடைகிறான். அந்தப் புஷ்கராரண்யத்தில் கந்தமூல பலங்களை யுண்டு, அந்த ஆகாரத்தைப் பிராமணர்களுக்கு மரியாதையுடன் உபசரித்துக் கொடுக்கிறவன் அசுவமேத யாக பலனை அடைகிறான். நாலு வருணத்தாரும் அதில் ஸ்நானம் செய்து ஜன்பந்தத்தை ஒழித்துவிடலாம். விசேஷமாய்க் கார்த்திகை மாசம் பௌர்ணமி திதியிலே அதில் ஸ்நாம் செய்கிறவன் அழியாத பிரமபதவியை அடைகிறான். காலை மாலை யாகிய இரண்டு வேளைகளிலும் அஞ்சலியஸ்தனாயிருந்து புஷ்கரதீர்த்தத்தைச்சிந்தித்தால் அவன் சகல தீர்த்தங்களிலும் முறைப்படி ஸ்நானம் பண்ணின பலனை அடைவான். புஷ்கரதீர்த்தத்தில் ஸ்திரீயாவது புருஷனாவது ஸ்நானம் பண்ணினால் அந்த க்ஷணத்திலேயே அவர்கள் ஜனித்தநாள் முதலாகச் செய்துள்ள சகல பாபங்களும் நசித்துப் போகின்றன. விஷ்ணுவானவர் தேவர்களுக்கு உற்பத்தி காரணராவது போலப் புஷ்கர தீர்த்தமானது சகல தீர்த்தங்களுக்கும் மூலமாகின்றது. அந்தப் புஷ்கரதீர்த்தத்தில் பரிசுத்தனாய்ப் பனிரண்டு வருஷம் வசித்தால் அவன் எல்லா யாகங்களையும் செய்த பலனைப் பெற்றுப் பிரமலோகத்தை அடைவான். ஒருவன் கார்த்திகை மாசம் முழுவதும் அதனிடத்தில் வசித்தால் நூறு வருஷம் அக்கினிஹோத்திரம் செய்த பலனைப்பெறுவான். அந்தப் புஷ்கராரணியத்தில் மூன்று சுவேத வெற்புகளும் மூன்று ஆறுகளும் இருக்கின்றன. பூர்வகாலந் தொடங்கி அதைப் புஷ்கரம் என்றே சொல்லுகிறார்கள். அந்தப் பேர் அதற்கு என் வந்ததென்று ஒருவருக்கும் தெரியாது. அந்தப் புஷ்கரத்துக்குப் போவதே அரிது. அவ்விடத்தில் தவம் புரிவது மிகவும் அரிது. அங்கே போய்த் தானம் பண்ணுவதும் அரிதேயாம்.

40—54. அந்தப் புஷ்கரத்தில் பனிரண்டு இரவு உபவாசமிருந்து, பின் அதை வலமாகச் சூழ்ந்து பம்புமார்க்கத்துக்குப் போகவேண்டும். அதில் தேவரிஷிகளும் பிதிர்த்தேவர்களும் சதா வசித்துக்கொண்டிருக்கிறார்கள். அதை அடைந்தவன் அசுவமேதயாக பலனைப் பெறுவான். அவனுடைய மனோபீஷ்டங்களெல்லாம் முற்றுப் பெறும். அதில் ஐந்துராத்திரி வாசம் பண்ணினால் சகல பாவங்களும் விலகிப்போம். அவனுக்கு ஒரு துன்பமும் உண்

டாகாது. மேலான பதவியைப் பெறுவான். மஹாராஜனே! அதை விட்டுப் புறப்பட்டுத் தண்டுலிகாச்ரமத்துக்குப் போகவேண்டும். அதற்குப் போனவனை ஒரு துன்பமும் அணுகாது. அவன் பிரமலோகத்தை அடைவான். அரசனே! பின், அகஸ்தியர் வாவிக்குச் சென்று மூன்று நாள் உபவாச மிருந்து தேவர்களையும் பிதிர்களையும் ஆராதித்தால் அக்னிஷ்டோம யாக பலன் சித்திக்கும். அவ்விடத்தில் கந்தமூல பலாதிகளைப் புசித்துக்கொண்டு வசிக்கிறவன் குமாரத்தன்மையைப் பெறுவான். பிறகு கான்வாச்ரமத்துக்குப் போகவேண்டும். அது சகல லோகத்தாராலும் வணங்கப்படுகிறது. பாரதோத்தமனே! அது தொன்று தொட்டுப் பரிசுத்தமுள்ளதும் புண்ணியம் நிறைந்ததுமாயுள்ள வனம். ஒருவன் அதைச் சேர்ந்தவுடனே அவனுடைய பாவங்கள் அனைத்தும் ஓடிப்போகின்றன. இந்த இடத்தில் போஜன நியமத்துடனே விரதமிருந்து தேவர்களையும் பிதிர்களையும் ஆருதிக்கிறவன் எல்லா யாகங்களையும் செய்த பலனையும், பெற்று, இஷ்ட சித்திகளையும் பெறுவான். அதைப் பிரதக்ஷிணம் செய்துகொண்டு நடந்து, யயாதி விழுந்த புண்ணியவனத்தை அடையவேண்டும். அது அசுவமேதயாக பலனைத் தரும். பிறகு உபவாசம் விரதங்களுடன் மகாகாளத்துக்குப் போகவேண்டும். அங்குள்ள காதி தீர்த்தத்தில் ஸ்னானம் பண்ணினுல் அசுவமேதம் செய்த பலன் கிடைக்கும். பிறகு உமாசகாயனுகிய ஸ்தாணு தீர்த்தத்துக்குப் போகவேண்டும். அது பத்திரவடமென்று மூன்று உலகத்தாராலும் புகழப்படுகிறது. அவ்விடம் போய் ஈசான மூர்த்தியைத் தியானித்தால் ஆயிரம் கோதான பலன் கிடைக்கும். மஹாதேவர் அனுக்கிரகத்தால் கணதிபத்தியத்தைப் பெறுவார்கள். நினைத்த வரங்களையும், சுகவாழ்வையும் ஈசன் கருணையையும் அடையக்கூடும். திரிபுவனங்களாலும் புகழப்படுகிற நாமதை என்று ஒரு புண்ணிய தீர்த்த மிருக்கிறது. அதில் ஸ்னானம் பண்ணி தேவர்களையும் பிதிர்களையும் திருப்தி செய்வித்தால் அக்கினிஷ்டோம யாகபலன் சித்திக்கும். பிறகு தென் சமுத்திரத்தை அடைந்து, ஆசைகளை அடக்கிப் ப்ரமசரிய விரதானுஷ்டானம் செய்கிறவன் அக்கினிஷ்டோம பலனைப் பெற்றுச், சொர்க்கத்தை அடைவான். பின் சர்மண்வதிக்குப் போய் உபவாச மிருந்து விரதம் செய்கிறவன் ரந்திதேவருடைய அனுக்கிரகத்தால் அக்கினிஷ்டோம பலனை அடைவான்.

55—64. புண்ணியாத்மாவான யுதிஷ்டிரா! பின் அற்புதம் என்றஇடத்துக்குப் போகவேண்டும். அவ்விடத்தில் பூமிக்குள் ஒரு துவாரம் செல்லுகிறது. அது வெகு பழமையானது. அங்கே மூன்று உலகத்தாராலும் புகழப்படுகிற வசிஷ்டாச்சிரமம் இருக்கிறது. அவ்விடத்தில் ஒரு இராத்திரி விரதத்தோடு தங்கி யிருந்தால் ஆயிரம் கோதானம் செய்த பலன் கிடைக்கும். புருஷசிரேஷ்டனுன அரசனே! பிரமசரிய விரதத்துடன் பிங்க தீர்த்தத்தில் ஸ்னானம் செய்தால் ஆயிரம் கபிலைத் தானம் பண்ணின பலன் உண்டாகும். அரசர்க்கரசனே! பிறகு பிரபாஸ தீர்த்தத்துக்குப் போகவேண்டும். அங்கே அக்னிதேவன் எப்போதும் வாசம் பண்ணுகிருர். வீரனே! அக்னிதேவன்

தான் தேவர்களுக்கு வாயாக இருக்கிறார். அவருக்கு வாயு இரதமாக இருக்கிறது. மன அடக்கமுள்ளவனாய் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் அப்பொழுதே அவன் நிர்மலனாகிறான். அக்கினிஷ்டோமம் அல்லது அதிராத்திரம் என்கிற யாகம் செய்த பலனை அடைகிறான். பிறகு சரஸ்வதி நதியானது சமுத்திரத்தில் சங்கமமாகிற இடத்துக்குப் போகவேண்டும். அங்கே போனவன் ஆயிரம் கோதான பலனையும் சொர்க்கத்தையும் அடைவான். அவன் எப்போதும் அக்கினியைப் போல ஜ்வலித்துக்கொண்டிருப்பான். சந்திரனைப் போலப் பிரகாசிப்பான். அசுவமேத பலனையும் பெறுவான். அவ்விடத்தில் மூன்று இரவு உபவாசத்துடன் வசித்துப் பிதிர்க்களையும், தேவர்களையும் திருப்தி செய்விக்கவேண்டும். அதன் பின் வசுதேவ தீர்த்தம் போகவேண்டியது. அங்கே துர்வாசர் விஷ்ணுவுக்கு வர மளித்தார். அங்கேயுள்ள வர்த்தன தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் ஆயிரம் கோதானபலன் உண்டாகும்.

65—75. பின், தாராவதிக்குப் போகவேண்டும். அங்குள்ள பிண்டாரக தீர்த்தத்தில் விதிப்படி ஸ்நானம் செய்தால் அநேக சொர்ணதானம் பண்ணின பலன் வரும். பெருமையுள்ள அரசனே! அந்தத் தீர்த்தத்தில் அதிசயம் ஒன்று இருக்கிறது. இப்பொழுதுங் கூடக் காணப்படுகிறது. அது என்னவென்றால் பத்ம முத்திரையிட்ட பொற் காசுகள் அதில் அகப்படுகின்றன. அந்தத் தாமரை முத்திரையில் சூலமுத்திரை யொன்றும் உள்ளது. குருவம்சோத்தமனே! அதில் மஹாதேவர் எப்போதும் வசிக்கிறார். சிந்துநதி சமுத்திரசங்கமமாகிற உத்தமமான இடத்தில் மன அடக்கமுள்ளவனாய் ஸ்நானம் செய்து, தேவர், பிதிர் ரிஷிகளுக்குத் திருப்திசெய்கிறவன் வருணதேஜஸைப் பெற்று வருணலோகத்தை அடைவான். யுதிஷ்டிரா! அங்கே சங்ககர்ணேசுவரரைத் தரிசிக்கிறவன் அசுவமேதம் செய்த பலனை விடப் பதின்மடங்கு அதிக பலனை அடைவான். அந்தத் தீர்த்தத்தை வலஞ்செய்துகொண்டு மூன்று லோகத்திலும் பிரசித்தி பெற்ற திரிமி தீர்த்தத்துக்குப் போகவேண்டும். அவ்விடத்தில் பிரமா முதலான சகல தேவர்களும் மகேசுவரனை ஆராதிக்கிறார்கள். அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து சகல தேவர்களாலும் சூழப்பட்ட ருத்திர மூர்த்தியை ஆராதித்தால் ஜன்மமுதல் செய்த பாபங்கள் எல்லாம் நசிக்கும். எல்லாத் தேவர்களும் திரிமி தீர்த்தத்தை வணங்குகிறார்கள். அதில் ஸ்நானம் பண்ணினால் அசுவமேதபலன் சித்திக்கும். லோக இரட்சகரான மஹாவிஷ்ணுவானவர் இதில் ஸ்நானம்செய்து தைத்தியர்களையும் தானவர்களையும் கொன்ற பாபங்களினின்றும் விடுபட்டுப் பரிசுத்தரானார்.

76—86. புண்ணியாத்மாவான அரசனே! பின், எல்லாராலும் வணங்கப்பட்ட வசுதாரா தீர்த்தத்துக்குப் போய் ஸ்நானம் செய்தால் அசுவமேதபலன் சித்திக்கும். அதில் ஸ்நானம் செய்து தேவர்களுக்கும் பிதிர்களுக்கும் திருப்தி செய்வித்தால் அவன் விஷ்ணுலோகத்தை அடைவான். பாரதனே அந்தத் தீர்த்தத்தில் வசுகூபம் ஒன்று இருக்கிறது. அதில் முழுகி அந்தத் தீர்த்தத்

தைப் பானம் பண்ணினால் அவன் வசுக்களைப் போன்ற பெருமையைப் பெறுவான். அது சிந்துத்தமம் என்னும் பேரால் விளங்குகிறது. சகல பாபங்களையும் போக்கும். அதில் முழுகினவன் சொர்ணதான பலனை அடைவான். பின் பருதுங்க தீர்த்தத்தில் சுசியுள்ளவனாய் ஸ்நானம் செய்தால் அவன் பிரம பதவியை அடைந்து மேலான கதியையும் பெறுவான். பின் குமாரிபக தீர்த்தம் என்னப்படுகிற இந்திர தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் இந்திரபதவியை அடைவான். அது சித்தர்களால் வணங்கப்படுகிறது. ரேணுகா தீர்த்தமென்று ஒன்றுண்டு. அதில் சித்தர்கள் வசிக்கிறார்கள். அதில் ஸ்நானம் பண்ணினவன் சந்திரனைப் போலப் பரிசுத்தனாவான். பின் போஜன நியமத்துடன் பஞ்சநதிக்குப் போகவேண்டும். அதில் ஸ்நானம்பண்ணினால் சாஸ்திரங்களால் புகழப்பட்ட பஞ்சமஹா யாக பலனை அடைவார்கள். பின் பீம க்ஷேத்திரம் போகவேண்டும். அங்குள்ள போணி தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவன் காதில் முத்துக்குண்டலங்களை யணிந்த தேவதையின் குமாரனாவான். ஆயிரம் கோதான பலனையும் பெறுவான். அதன் பிறகு, மூன்று உலகங்களிலும் பிரசித்திபெற்ற ஸ்ரீகுண்டம் போய்ப் பிதாமகனைப் (பிரமாவை) பணிந்தால் ஆயிரம் கோதானபலன் கிடைக்கும்.

(87—99. புண்ணியாதமாவே! சிமிலாதீர்த்தம் போகவேண்டும். அதில் இன்றுகூட வெள்ளி நிறமுள்ளதும் சொர்ண நிறமுள்ளது மான மீன்களிருக்கின்றன. இதிலே முழுகினால் சகல பாபங்களும் நசிக்கும். இந்திரலோகமும் மேலான பதவியும் கிடைக்கும். பின் விதாஸ்தா தீர்த்தத்தில் முழுகித் தேவர்களையும் பிதிர்களையும் ஆராதித்தால் வாஜபேயயாகம் செய்த பலன் கிடைக்கும். அந்த விதாஸ்தா தீர்த்தம் காச்மீரத்தில் இருக்கிறது. அது நாகர்களுக்கும் தட்சகனுக்கும் இருப்பிடமானது. சகல பாபங்களையும் போக்குவது. அதில் ஸ்நானம் பண்ணினவன் நிச்சயமாகவே வாஜபேய பலனை அடைகிறான். அவனுடைய பாபங்களெல்லாம் நசிக்கின்றன. அவனும் மேலான பதவியை அடைகிறான். பின் ஸப்தசரு தீர்த்தத்துக்குப் போகவேண்டும். அது மூவுலகங்களிலும் பிரசித்தியானது. சாயந்திரம் அந்தத் தீர்த்தத்தில் விதிப்படி ஸ்நானம்செய்து, பாலும் வெண்ணெயும் கலந்து பொங்கின அவிசை, ஏழு நாக்குகளையுடைய அக்கினிதேவனுக்கு நைவேத்தியம் பண்ணவேண்டும். பிதிர்களுக்கு அந்த இடத்தில் திருப்திசெய்தால் அது அக்ஷயபலனைத் தருமென்று அறிவுள்ளவர்கள் சொல்லுகிறார்கள். ரிஷிகள், பிதிர்கள், தேவர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள், குஹ்யர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், மனிதர்கள், இராட்சதர்கள், தைத்தியர்கள், ருத்திரர்கள், பிரமதேவர் இவர்கள் எல்லாரும் புலன்களை யடக்கிக்கொண்டு ஆயிரம் வருஷம் தவசு செய்தார்கள். விஷ்ணுவுக்குத் திருப்தியுண்டாக்கும் பொருட்டு, அந்தச் சருவைப் பொங்கி ஒவ்வொருதடவையும் ஏழு ரிக்கு மந்திரங்களை உச்சரித்து விஷ்ணுவுக்குஅவிசு அளித்தார்கள். அதனால் விஷ்ணு திருப்தி யடைந்து பிரத்தியட்சமாய் அவர்களுக்கு அஷ்ட ஐசுவரியங்களையும், அவர்கள் விரும்பின மற்றவைகளையும்

கொடுத்தார். பாரதனே! விஷ்ணுமூர்த்தி அவர்களுக்கு வரம்கொடுத்துவிட்டு அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே மின்னல் மேகத்தில் மறைவது போல மறைந்து போனார். ஏழு ரிக்குகளை யோதி அவிசளித்த காரணத்தால் அந்தத் தீர்த்தத்துக்கு ஸப்தசரு என்று பேர் உண்டாயிற்று. இந்த இடத்தில் ஏழு சருக்களைக் கொடுத்ததால் அது ஆயிரம் கோதானம் பண்ணின பலனை யும், நூறு இராஜசூயம் செய்த பலனையும் தரும். ஆயிரம் அசுவமேதம்செய்த பலனும் வரும்.

100—128. இராஜாதிராஜனே! அந்தத் தீர்த்தத்தை விட்டுப் புறப்பட்டு ரௌத்திர பதத்துக்குப் போகவேண்டும். அவ்விடத்தில் மஹாதேவனை ஆரா தித்தால் ஆயிரம் அசுவமேதபலன் கிடைக்கும். மணிமாந்தாவுக்குப் போய்ப் புலன் அடக்கத்துடன் பிரமசரியத்தை அனுஷ்டித்து ஒரு இரவு வசித்தால் அக்கினிஷ்டோம பலன் சித்திக்கும். பிறகு தேவிகா தீர்த்தம் போகவேண் டும். அது உலகப் பிரசித்தியானது. ஆதியில் பிராமணர்கள் அவ்விடத்தில் வந்து வசித்ததாகத் தெரியவருகிறது. அவ்விடத்தில் ஒரு சிவாலயம் இருக் கிறது. தேவிகா தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி மஹேசுவரனை ஆராதித்து, அவருக்கு அவிசு அளித்தால் சகல யாகங்களும் செய்த பலனை அடைந்து, சகல மனோரதங்களும் நிறைவேறப் பெறலாம். அவ்விடத்தில் காமாக்கியம் என்று மற்றொரு சிவதீர்த்தமு மிருக்கிறது. அதில் தேவர்கள் எல்லாரும் வசிக் கிறார்கள். அதில் ஸ்நானம் செய்த உடனே மோட்சம் கிடைக்கும். யஜ னம், பிருங்கம், வாலுகம், புஷ்பமா என்ற தீர்த்தங்களைத் தொட்டு ஆசமனம் பண்ணுவதனாலேயே சகல துக்கங்களும் ஒழியும். மரணத்தையும் கடக்க லாம். அந்தத் தேவிகா தீர்த்தம் ஐந்துயோசனை நீளமும். அரையோஜன அக லமும் உள்ளது. தேவர்களும் அதில் ஸ்நானம் பண்ணுகிறார்கள். மன்னவ னே! பின் தீர்க்கஸத்திர தீர்த்தம் போகவேண்டும். அவ்விடத்தில் தேவர்க ளும், சித்தர்களும், ரிஷிகளும், பிரமாவும், விதிப்படி தீர்க்கஸத்திர யாகஞ் செய்தார்கள். அரசர்க்கரசனே! சத்துருபயங்கரனே! பாரதனே! தீர்க்க ஸத் திர தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் இராஜசூயம் அசுவமேதம் இவைகள் செய்த பலன் வரும். பிறகு விரதத்துடன் அடக்கமுடையவனாக விநாசன தீர்த்தம் போகவேண்டும். அவ்விடத்தில் சரஸ்வதி மேருவின் மார்பில் மறை கிறது. பிறகு சுமஸ்வேதா, சிவாத்வேதா, நாகவேதா என்ற இடங்களில் வெளிப்படுகிறது. சுமஸ்வேதாவில் முழுகினால் அக்கினிஷ்டோம பலன் சித்திக்கும். சிவாத்வேதாவில் ஸ்நானம்செய்தால் ஆயிரம் கோதான பலன் வரும். நாகவேதாவில் ஸ்நானம்செய்தால் நாகலோகத்தை அடையலாம். அர சர்க்கரசனே! பிறகு சேஷாயனத்துக்குப் போகவேண்டும். இவ்விடத்தில் ஸ்நானம் பண்ணினால் ஆயிரம் கோதானபலன் கிட்டும். பிறகு குமாரகோடிக் குப் போகவேண்டும். அதில் விதிப்படிப் ஸ்நானம்செய்து பிதிர்க்களை ஆரா தித்தால் பதினாயிரம் கோதானபல னுண்டாகும். அவனுடைய வம்சமெல்

லாம் மேலான கதியை அடையும். பிறகு ருத்திரகோடிக்குப் போகவேண்டும். மஹாராஜனே! பூர்வகாலத்தில் அநேகலட்சம் ரிஷிகள் தவம் புரிந்து பரமசிவனைத் தரிசித்து மகிழ்ந்தார்கள். நான் முதலில் ரிஷபத்துவஜனைக் கண்டேன், நான் முதலில் ரிஷபத்துவஜனைக் கண்டேனென்று ரிஷிகள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள். அதன் பின் அவர்களுடைய வழக்கைத் தீர்க்கும் பொருட்டு மஹாதேவன் அநேக ரூபங்களை யெடுத்துக்கொண்டு அவர்களெல்லாருக்கும் பிரத்தியட்சமாய்க் காட்சி கொடுத்தார். அதன் பின் ரிஷிகள் எல்லாரும், தங்களுக்குள் ஒவ்வொருவரும் மஹாதேவனை முதலில் தரிசித்ததாகக் கருதி யடங்கியிருந்தார்கள். மஹாதேவன் அவர்களுடைய தவசுக்கு மகிழ்ந்து, ரிஷிகளை நோக்கி இன்று முதல் உங்களுடைய தவம் அதிகரிக்குமென்று வரமளித்தார். அந்த ருத்திரகோடியில் பரிசுத்தனு யிருந்து ஸ்நானம் பண்ணினுல் அவனுக்கு அசுவமேதபலன் வரும். அவனுடைய வம்சமும் க்ஷேமம் அடையும். அரசர்க்கரசனே! பிறகு லோகப் பிரசித்தியாயுள்ள சங்கமத்துக்குப் போகவேண்டும். அவ்விடத்தில் ஸரஸ்வதிநதி சமுத்திரத்தில் கலக்கிறது. புண்ணியமானது. இவ்விடத்தில் பிரமா, தேவர்கள், ரிஷிகள் எல்லாரும் விஷ்ணுவை ஆராதிக்கிறார்கள். இராஜாதிராஜனே! சித்திரைமாசம் சுக்கிலபட்சம் சதுர்த்தசி தினத்தில் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நாம்பண்ணினுல், திரண்ட திரவியத்தைத் தானம்பண்ணின பலன் கிடைக்கும். அவனுடைய பாவங்கள் எல்லாம் நசித்துப் பரிசுத்தனுவான். அவன் பிரமலோகத்தை அடைவான். அவ்விடத்தில் ரிஷிகள் அநேக யாகங்களைச் செய்தார்கள். ஸத்திரவஸநத்திற்குப் போனுல் ஆயிரம் கோதான பலனை அடைவான்.

---

## 83-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—24. அரசர்க்கரசனே! பிறகு குருக்ஷேத்திரத்துக்குப் போகவேண்டும். அதைத் தரிசித்த மாத்திரத்திலே சகல பிராணிகளுடைய பாவங்களும் நாசமாகின்றன. ஒருவன் நான் குருக்ஷேத்திரத்துக்குப் போவேன். குருக்ஷேத்திரத்தில் வசிப்பேன் என்று சொல்லிக் கொண்டிருந்தாலும் அவனுடைய பாவங்கள் எல்லாம் ஒழியும். அவனும் பரிசுத்தனுவான். காற்றின் வழியாக வருகிற குருக்ஷேத்திரத்தின் தூசி ஒருவன்மேலே பட்டாலும் அவனுடைய பாவங்களெல்லாம் ஒழிந்து பரிசுத்தனுவான். மேலான பதவியையும் பெறுவான். ஸரஸ்வதி நதிக்குத் தெற்கும், திருஷத்வதிக்கு வடக்கும் ஆகிய இரண்டு எல்லைக்கும் உட்பட்ட குருக்ஷேத்திரத்தில் வசிக்கிறவன் நிச்சயமாகவே சொர்க்கத்தில் வசிக்கிறவனுவான். அந்த ஸரஸ்வதி நதிகரையில் ஒருமாதம் வசிக்கவேண்டும். பூமிக்கு அரசனே! பிரமா, தேவர், ரிஷிகள், சித்தர், சார

ணர், கந்தர்வர், அப்ஸரஸ்கள், யட்சர், நாகர் முதலான எல்லாரும் மஹா பரிசுத்தமான அந்தப் பிரமக்ஷேத்திரத்துக்கு அடிக்கடி போகிறார்கள் யுத்தத்தில் பின்னடையாத சூரனே! ஒருவன் குருக்ஷேத்திரத்துக்குப் போக வேண்டுமென்று மனதால் நினைத்தால் கூட அவனுடைய பாபங்கள் எல்லாம் அழியும். அவனும் பிரமபதத்தைப் பெறுவான். குருவம்சத்தைப் பிரகாசிப்பிக்கிறவனே! விதிப்படி குருக்ஷேத்திரம் போனால் இராஜசூயம் அசுவமேதம் இவைகள் செய்தபலன் சித்திக்கும். அவ்விடத்தில் மகிமையுள்ள துவாரபாலர்களான யட்சனையும் மங்கானனையும் வணங்கினால் ஆயிரம் கோதானபலனுண்டாம். புண்ணியாத்மாவே! அரசர்க்கரசனே! பிறகு விஷ்ணு க்ஷேத்திரமாகிய சததம் என்ற இடத்துக்குப் போகவேண்டும். அவ்விடத்தில் விஷ்ணு எப்போதும் பிரசன்னரா யிருக்கிறார். அங்குள்ள தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து மூவுலகங்களையும் படைத்த விஷ்ணுவைத் தரிசிக்கிறவன் அசுவமேதயாகபலனை அடைந்து விஷ்ணு உலகத்தைஅடைகிறான் பிறகு மூன்றுலோகத்திலும் பிரசித்தியா யிருக்கிற பரிப்பிலவ தீர்த்தம் போகவேண்டும்.அவன் அக்கினிஷ்டோமம், அதிராத்திர மென்கிற யாகபலன்களைப் பெறுவான். அதன்பின் பிருதிவி தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் ஆயிரம் கோதானபலனுண்டாம். பிறகு சாலூகினி க்ஷேத்திரம் போய் அங்குள்ள தசாசுவமேத தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் அசுவமேதபல னுண்டாம. பின் சர்ப்பதேவி என்கிற நாகதீர்த்தம் போய் ஸ்நானம் பண்ணினவன் அக்கினிஷ்டோமபலன் பெற்று நாகலோகத்தை அடைவான். பின் துவாரபாலகனான தாரந்துகனைத் தரிசித்து ஒரு இராத்திரி வசித்தால் ஆயிரம கோதானபல னுண்டாம். போஜன நியமத்துடன் மன அடக்கமுடையவனாய்ப் பஞ்சநதிக்குப் போகவேண்டும். கோடி தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் அசுவமேதபலன் உண்டாகும். அசுவினி தீர்த்தத்தில் முழுகினால் காந்தியுண்டாகும். பிறகு தாரக தீர்த்தத்துக்குப் போகவேண்டும். விஷ்ணு வராகமூர்த்தி சொரூபமாக அங்கே வசிக்கிறார். இங்கே ஸ்நானம் பண்ணினால் அக்கினிஷ்டோம பலன் கிட்டும். அரசர்க்கரசனே! பிறகு ஸாமதீர்த்தம் போகவேண்டும். அதில் ஸ்நானம் பண்ணினால் இராஜசூயபலன் வரும். ஏகஹான்ஸ தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் ஆயிரம் கோதானபலன் வரும். பிறகு ஸ்தாணுக்ஷேத்திரத்துக்குப் போகவேண்டும். அது மன்யபதம் என்று கூறப்படுகிறது. அதில் ஒரு இராத்திரி விதிப்படி வசித்தால் கணபதி பதத்தைப் பெறுவார்கள்.

25—41. சாகினி என்ற பேருள்ள ஒரு தீர்த்தமிருக்கிறது. அதில் ஸ்நானம் பண்ணினவன் சகல அபீஷ்டங்களையும் அடைவான். அதுதான் குருக்ஷேத்திரத்துக்கு வாயில் என்று கூறப்படுகிறது. மனஅடக்கத்துடன் அதைப் பிரதட்சிணம் பண்ணிக்கொண்டு போகவேண்டும். அதை ஜமதக்கினி புத்திரரான பாசுராமர் ஏற்படுத்தினார், அது புஷ்கரக்ஷேத்திரத்துக்குச் சமமானது. அதில் ஸ்நானம் பண்ணித் தேவர்களையும் பிதிர்களையும் ஆராதித்தால்

சகலமும் சித்தியாகும். அசுவமேத பலன் உண்டாகும். பின் இராமஹிருதம் என்ற இடத்துக்குப் போகவேண்டும். மிகுந்த காந்தியுள்ள வீரரான பரசுராமர் க்ஷத்திரியர்களை நாசம்பண்ணி, அங்கே ஐந்துமடுக்களை உண்டாக்கினார். அந்த மடுக்களை க்ஷத்திரியர்களுடைய இரத்தத்தால் நிரப்பினார் என்று நாம் கேள்விப்படுகிறோம். அந்த இரத்தத்தினால் பரசுராமர் தமது பிதிர்க்களுக்குத் தர்ப்பணம் செய்தார். பிறகு பிதிர்க்கள் அவருக்குப் பிரத்தியட்சமாய் அவரை நோக்கி, பிருகு வம்சதீபம் போன்ற இராமா! நாங்கள் எல்லாரும் திருப்தி அடைந்தோம். மஹாதமாவே! புத்திரருக்குரிய பக்தியாலும், உன்னுடைய சக்தியாலும் காந்தியுள்ள நீ ஆசீர்வதிக்கப் படுகிறாய். உனக்கு வேண்டிய வரங்களைக் கேள் என்று சொன்னார்கள். இப்படிப் பிதிர்கள் கூறிய வசனங்களைக் கேட்ட பரசுராமர் அஞ்சலியஸ்தராய், ஆகாயத்தில் நிற்கிற பிதிர்க்களை நோக்கிக் கூறுகிறார். ஓ பிதிர்களே! நீங்கள் எனக்கு வரங் கொடுக்கப் பிரியப்பட்டால், நான் உங்களுடைய கருணைக்குப் பாத்திரனாயிருந்தால், நான் மறுபடியும் தவம்புரிய அருகனாம்படி அனுக்கிரகிக்கவேண்டும். நான் கோபத்தினாலே க்ஷத்திரியர்களெல்லாரையும் சங்கரித்த பாபத்தினின்றும் உங்கள் கருணையாலே விடுபடவேண்டும் என்னால் உண்டாக்கப்பட்ட இந்த மடுக்களும் உலகமெல்லாம் புகழும்படியான புண்ணிய தீர்த்த மாகவேண்டும் என்று பிரார்த்தித்தார். பரசுராமர் சொன்ன சிறந்த வசனங்களைக் கேட்ட பிதிர்கள் சந்தோஷமடைந்து அவரை நோக்கிச் சொல்லுகிறார்கள். உன்னுடைய பிதிர் பக்தியாலே உன் தவம் விருத்தியாகக் கடவது. நீ க்ஷத்திரியர்களை கொன்ற பாவங்களெல்லாம் முன்னமேதானே உன்னை அடையாமல் ஒழிந்துபோயின. ஏனென்றால் அந்த க்ஷத்திரியர்கள் தங்களுடைய பாபகர்மத்தாலேயே அழிந்தார்கள். கொஞ்சங்கூடச் சந்தேகமில்லாமல் இந்த மடுக்கள் புண்ணிய தீர்த்தமாகும். இதில் ஸ்நானம் பண்ணிப் பிதிர்களை ஆராதித்தால், உலகத்தில் அடையக்கூடாத விருப்பங்களும் நிறைவேறும். சொர்க்க லோகத்தையும் அடைவார்கள். அரசனே! இந்த வரங்களைக் கொடுத்துவிட்டுப் பிதிர்த்தேவதைகள் அந்தர்த்தானமாய்விட்டார்கள். இவ்விதமாகப் பரசுராமர் உண்டாக்கின ஐந்து மடுக்களும் புண்ணியதீர்த்தங்களாயின. அரசர்க்கரசனே! பிரமசரிய விரதத்துடனே, விரதானுஷ்டானம் செய்து இந்தப் பரசுராம தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிப் பரசுராமரை ஆராதித்தால் வெகு திரவிய தானம்பண்ணின பலன் உண்டாகும்.

42—67. பாரதனே! பிறகு வைகோத தீர்த்தத்துக்குப் போகவேண்டும். அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணினால் சந்தேகமில்லாமல் அவன் பரிசுத்தனாவான். மேலான பதவியையும் பெறுவான். பிறகு லோகாதார தீர்த்தம் போகவேண்டும் மூன்றுலோகங்களிலும் கீர்த்திபெற்றது. அதில் விஷ்ணு பகவான் இங்கேயிருந்துதான் பூர்வத்தில் உலகத்தைச் சிருஷ்டித்தார். இந்த மகிமையுள்ள தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தவன் தனக்காக அநேக புண்ணிய

உலகங்களைச் சம்பாதித்துக் கொள்கிறான். பின் மனோ அடக்கத்துடன் ஸ்ரீ தீர்த்தம் போய் ஸ்நானம் செய்து தேவபிதிர்க்களை ஆராதித்தால் சகல ஐசுவரியங்களும் சித்திக்கும். பின் பிரமசரிய விரதானுஷ்டானம் உடையவனாய் அடக்கத்துடன் கபில தீர்த்தம் போய் ஸ்நானம்பண்ணித் தேவபிதிர்களுக்குத் திருப்திசெய்வித்தால் ஆயிரம் கபிலைகளைத் தானம்பண்ணின பலன் வரும். பிறகு சூரிய தீர்த்தம் போய் ஸ்நானம் பண்ணி உபவாசத்துடன் தேவர்களையும் பிதிர்களையும் திருப்தி செய்வித்தால் அவன் அக்கினிஷ்டோம பலனைப் பெற்றுச் சூரிய லோகத்தை அடைவான். கவாஹனை தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் ஆயிரம் கோதான பலன் சித்திக்கும். குரு குலத்தை விளங்கச் செய்கிறவனே! திவி தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் மிகுந்த சக்தியைப் பெறுவான். அரசர்க்கரசனே! பின் துவாரபாலகனை துரந்தகனைத் தரிசிக்கவேண்டும். சரஸ்வதி நதிக்கரையிலுள்ளவன். யட்சர்களுக்கு தலைவன். அங்குள்ள தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் அக்கினிஷ்டோம பலன் கிட்டும். பின் பிரமவர்த்தத்துக்குப் போகவேண்டும். அதில் ஸ்நானம் செய்தவன் பிரமலோகத்தை அடைவான். பின் ஸுதீர்த்தத்துக்குப் போகவேண்டும். அது அம்பாமதியில் உள்ளது. மிக்க மேன்மை யுள்ளது. அதில் முழுகி தேவ பிதிர்க்களுக்குத் திருப்தி செய்வித்தால் அசுவமேத பலன் வரும். பிரமலோகத்தை அடையலாம். காசீசுவர தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் சகல வியாதிகளும் தீர்ந்து பிரமலோகம் சேரலாம். மாதீ தீர்த்தம் சகல வாழ்வுகளையும் தரும். பின் நியமத்தோடு சீதாவன தீர்த்தம் போக வேண்டும். எங்கும் இல்லாத ஒரு அற்புதம் அங்கே உண்டு. ஒரு மனிதன் அங்கே போனாலும் புண்ணியவான் ஆய் விடுவான். அங்கே க்ஷவரம் செய்து கொண்டால் பரிசுத்தனாய் விடுகிறான். அங்கே சுவிலோமாப தீர்த்த மொன்றிருக்கிறது. அதன் மகிமையை அறிந்த பிராமணர்கள் அடிக்கடி அங்கே போகிறார்கள். அந்தத் தீர்த்தத்தில் க்ஷௌரம் செய்துகொண்டு ஸ்நானம் பண்ணிப் பிராணாயாமஞ் செய்தால் பரிசுத்தனாய் விடுவான். மேலான பதவியை அடைவான். அவ்விடத்தில் தசாசுவமேதம் என்று ஒரு தீர்த்தம் உண்டு. அதில் ஸ்நானம் செய்தால் மேலான பதவி கிடைக்கும். பிறகு மானச தீர்த்தம் போக வேண்டும். இது லோகப் பிரசித்தியானது. கிருஷ்ண மானை ஒரு வேடன் அம்பால் அடித்தான். அந்த மான் துள்ளி மானச தீர்த்தத்தில் குதித்த உடனே மானிட ரூபம் பெற்று விளங்கியது. பிரமசரிய விரதத்துடன் அதில் ஸ்நானம் பண்ணினால் சகல பாபங்களும் விலகிப்போம். பரிசுத்த முண்டாகும். பிரமலோகம் போகலாம்.

43—80. அபாக தீர்த்தம் பிரசித்தியானது. சித்தர்கள் அங்கே வசிக்கிறார்கள். அவ்விடத்தில் தேவர்களுக்கும் பிதிர்க்களுக்கும் ஆராதனை செய்தால் வெகு புண்ணியம் உண்டாகும். அவ்விடத்தில் ஒரு பிராமணனுக்கு அன்ன மிட்டால் கோடி பிராமணர்களுக்கு அன்னதானம் பண்ணின பலன்

றது. அது ஆயிரம் கோதான பலன் தரும். தேவி தீர்த்தம் ஆயிரம் கோதான பலன் கொடுக்கும். கௌசிகி, திருஷத்வதிகளில் ஸ்நானம் பண்ணினால் சகல பாபங்களும் நாசமாகும். பின் வியாசஸ்தலி தீர்த்தம் போக வேண்டும். அது ஆயிரம் கோதான பலன் தரும். கிந்தத்தம் என்ற தீர்த்தத்தில் என்னைப் போட்டு ஸ்நானம் பண்ணினால் சகல கடன்களும் ஒழியும். வேதி தீர்த்தம் ஆயிரம் கோதான பலன் கொடுக்கும். அங்கே அஹஸ், சுதினம் என்று இரண்டு தீர்த்தங்களுண்டு. அவைகளில் ஸ்நானம் பண்ணினவன் சூரியலோகம் அடைவான். மிருகதூம தீர்த்தம் போய் ஸ்நானம் செய்து மஹா தேவனைத் தரிசித்தால் அசுவமேத பலனுண்டாகும். வாமனகத்துக்கு போய் விஷ்ணு பதத்தில் வாமன மூர்த்தியைத் தரிசித்தால் சகல பாபங்களும் ஒழியும். விஷ்ணு லோகம் கிடைக்கும். குலாம்புன தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் அவன் வம்சமெல்லாம் பரிசுத்தமாகும். பாவன தீர்த்தமென்று ஒன்று உண்டு. அது மாருத தீர்த்த மென்று கூறப்படுகிறது. அதில் ஸ்நானம் செய்தவன் வாயு லோகத்தை அடைவான். தேவ தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் தேவலோகம் கிடைக்கும்.

107—134. சாலிகோத்திரரால் உண்டாக்கப்பட்ட சாலி சூரிய தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் ஆயிரம் கோதான பலனுண்டாம். ஸ்ரீகுஞ்ஜ தீர்த்தம் அக்கினிஷ்டோம பலன் தரும். நைமிச குஞ்ஜ தீர்த்தம் யென்று ஒன்று உண்டு. நைமிசாரண்ய ரிஷிகள் பூர்வ காலத்தில் தீர்த்த யாத்திரை போய்க் குரு க்ஷேத்திரத்தை அடைந்தார்கள். சரஸ்வதி தீரத்தில் ஒரு சோலையை உண்டாக்கி அதில் வசித்தார்கள். அது அவர்களுக்கு மகிழ்ச்சியைத் தந்தது. அந்தத் தீர்த்தம் அக்கினிஷ்டோம பலன் தரும். காங்கா தீர்த்தம் ஒன்று இருக்கிறது. அது ஆயிரம் கோதான பலன் தரும். மகிமையுள்ளதான பிரம தீர்த்தம் என்று ஒன்றுண்டு. அதில் ஸ்நானம் செய்தால் கீழ்ப்பட்ட மூன்று வருணத்தாரும் பிராமணதவம் பெறுவார்கள். பிராமணன் ஸ்நானம் பண்ணினால் பரிசுத்தனாய் மேலான பதவியை அடைவான். ஸோம தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவன் ஸோம லோகத்தைப் பெறுவான். பின் ஸப்த ஸாரஸ்வத தீர்த்தம் போகவேண்டும். அவ்விடத்தில் மங்கணக ரிஷி தவ சித்திபெற்றார். அரசனே! முன் காலத்தில் மங்கண ரிஷி குசப்புல்லினால் தமது கையை அறுத்துக் கொண்டார். அந்தக் காயத்தில் இருந்து இரத்தம் வருகிறதற்குப் பதிலாக, மாக்கனி வர்க்கங்களின் சாறு போன்ற இரசம் ஒழுகியது. அதைக் கண்ட ரிஷியானவர் ஆனந்தத்தினால் கூத்தாடினார். அவர் ஆடின போது சரம் அசரம் ஆகிய எல்லாப் பொருளும் நர்த்தனம் செய்தன. பிறகு பிரமாவும், தேவர்களும், ரிஷிகளும் சேர்ந்து ஸ்ரீ பரமேசுவரரிடம் போய் மங்கணக ரிஷியின் சமாசாரத்தைச் சொன்னார்கள். ஓ மஹா தேவனே! நீர் அந்த ரிஷி கூத்தாடுகிற இடத்துக்கு வந்து பார்க்கவேண்டும் என்றார்கள். பரமசிவன் ஆனந்தபரவசத்தினாலே தன்னை மறந்து கூத்தாடுகிற இடத்துக்கு

உண்டாகும். அதில் ஸ்நானம் பண்ணி ஒரு இரவு அவ்விடத்தில் தங்கினால் அக்கினிஷ்டோம பலன் கிடைக்கும். பிறகு பிரமதும்பரத்துக்கு போகவேண்டும். அது பூலோகத்தில் பிரமலோகம் போல்வது. அதில் சப்தரிஷி தீர்த்தம் இருக்கிறது. கபிலரால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம் ஒன்று உண்டு. காதர தீர்த்தமென்று பேர் பெற்றது. பிரமதும்பரத்துக்குப் போனால் அவனுடைய பாவங்கள் எல்லாம் நசிக்கும். அவனுடைய ஆத்மா பரிசுத்தமாகும் பிரமலோகத்தை அடைவான். பிறகு கபிஸ்தலத்திலுள்ள காதர தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் காமரூபியாய் நினைத்த உருவம் கொள்ளலாம். சரக தீர்த்தம் என்ற புண்ணிய தீர்த்தம் ஒன்று உண்டு. அங்கே விருஷபத்வஜரான மஹா தேவன் வசிக்கிறார். கிருஷ்ண பட்சம் சதுர்த் தசியின் அன்று மஹாதேவனை அங்கே தரிசனம் செய்தால் மனோரதங்களெல்லாம் நிறைவேறப் பெற்றுத் தேவலோகத்தை யடையலாம். கௌரவனே! அந்தத் தீர்த்தத்தில் மூன்று கோடி தீர்த்தங்கள் இருக்கின்றன. ருத்திரகோடியிலும், அங்குள்ள வாபி கூபங்களிலும் அப்படியே. இளாஸ்பதம் என்ற ஒரு தீர்த்தமுண்டு. அதில் முழுகித் தேவ பிதிர்க்களை ஆராதித்தால் அவன் ஒரு விதமான துக்கத்தையும் அடைய மாட்டான். வாஜபேயயாக பலன் கிடைக்கும். கிந்தவ தீர்த்தம், கிஞ்சப தீர்த்தம் இவைகளில் ஸ்நானம் செய்தால் அளவில்லாத பலன் கிடைக்கும். கலச தீர்த்தம் அக்கினிஷ்டோம பலனைத் தரும்.

81—106. கௌரவோத்தமனே! சரக தீர்த்தத்துக்குக் கிழக்கில் நாரத தீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்நானம் செய்தவன் நாரதருடைய அநுக்கிரகத்தால் தேகாந்தத்தில் மேலான உலகத்தை அடைவான். புண்டரீகமென்று ஒரு தீர்த்தமுண்டு. சுக்கிலபட்சம் தசமி தினத்தில் அதில் ஸ்நானம் பண்ண வேண்டும். பிறகு திரிபிஷ்டத்துக்குப் போகவேண்டும். அங்கே பாபங்களைப் போக்குகிற பரிசுத்தமான வைதரணி ஓடுகிறது. அதில் ஸ்நானம் பண்ணி சூலபாணியான பரமேசுவரனைத் தரிசித்தவன் சகல பாபங்களும் ஒழிந்து பரிசுத்தனாய் மேலான பதவியை அடைவான். பின் பலகி வனம் போகவேண்டும். அங்கே தேவர்கள் எப்போதும் வசிக்கிறார்கள். அதிலுள்ள பலகி தீர்த்தம் சகல பாபங்களையும் போக்கும். பின் திருஷத்வதி போய் ஸ்நானம் செய்தால் அக்கினிஷ்டோமம் அதிராத்திரம் இவைகளுக்கு மேலான பலனுண்டாகும். சர்வதேவதா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் ஆயிரம் கோதான பலனுண்டாகும். பாணிகட்டத்தில் ஸ்நானம் பண்ணினால் அக்கினிஷ்டோமம் அதிராத்திரங்களை விட அதிக பலன் சித்திக்கும். இராஜசூய பலன் கூடக் கிடைக்கும். ரிஷி லோகத்தை அடையலாம். பின் மிச்ரக தீர்த்தம் போகவேண்டும். பிராமணர்களுக்காக வியாச முனிவர் சகல தீர்த்தங்களையும் அதில் கலந்து வைத்தாரென்று கேள்விப்படுகிறோம். அதில் ஸ்நானம் பண்ணினால் சகல தீர்த்தங்களிலும் ஸ்நானம் பண்ணின பலன் உண்டாகும். பிறகு மன அடக்கத்துடன் வியாச வனம் போக வேண்டும். அங்கே மன்யப தீர்த்த யிக்கி

வந்து, தேவர்களுக்கு நன்மை புண்டாகும்படி அந்த ரிஷியைப் பார்த்துச் சொல்லுகிறார். மஹரிஷியே! நீர் ஏன் கூத்தாடுகிறீர்? நீர் எதற்காக ஆனந்தப்படுகிறீர்? என்றார். ரிஷி சொல்லுகிறார். தேவனே! நான் தர்ம நெறி தவறாமல் தவம் புரிந்தேன், என் கையிலிருந்து ஸ்தாவரங்களில் இரசம் ஒழுகுகிறதைப் பாரும். அதைப் பார்த்துச் சந்தோஷத்தினால் கூத்தாடுகிறேன். மனோவிகாரத்தினால் ஒன்றையும் அறியாமல் இருக்கிற ரிஷியைப் பார்த்து மஹாதேவன் புன் சிரிப்புக்கொண்டு சொல்லுகிறார். பிராமணரே! இதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை என்று சொல்லி மஹாதேவர் தமது கைவிரலால் அந்த ரிஷியின் கட்டை விரலை அழுத்தினார். அரசனே! உடனே அந்த ரிஷியின் கையிலிருந்து பனிபோன்ற வெண்மை நிறமுள்ள விபூதி வந்தது. அதைப் பார்த்து ரிஷி வெட்கம் அடைந்து பரமேசுவரருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். ருத்திர மூர்த்தியை விட மேலானதும், நன்மை தரத்தக்கதும் வேறொன்றும் இல்லை என்று தெரிந்துகொண்டு சொல்லுகிறார். சூலபாணியே! நீர்தாம் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் கதியாயிருக்கிறவர். நீர்தாம் சராசரங்களடங்கிய மூவுலகங்களையும் படைத்தீர். யுக முடிவில் நீர்தாம் அவைகளை ஒடுக்கிக் கொள்வீர். நீர் தேவர்களாலும் அறியப்படாதவர் என்றால் என்னைப் பற்றிச் சொல்ல வேண்டியதென்ன? பிரமா முதலிய தேவர்கள் எல்லாரும் உம்மிடத்தில் காணப்படுகிறார்கள். நீர் எல்லாமாயிருக்கிறீர். நீரே சிருஷ்டிகர்த்தர். உலகத்தை நியமிக்கிறவர். உமது கிருபையினாலே தான் தேவர்கள் அச்சமற்றுக் களித்திருக்கிறார். இப்படி மஹாதேவரை ஸ்தோத்திரம் பண்ணின பின் ரிஷி சொல்லுகிறார். தேவதேவனே எனக்கு உமது கிருபையைத் தந்தருளும். அதனாலே என்னுடைய தவம் குறையாமலிருக்கும் என்றார். மஹாதேவர் சந்தோஷமடைந்து ரிஷிக்குச் சொல்லுகிறார். பிராமணரே! என் கிருபையால் உமது தவம் ஆயிர மடங்கு அதிகமாகட்டும். ரிஷீசுவரரே நான் உம்முடன் உமது ஆச்சிரமத்தில் வசிக்கிறேன். இந்த ஸப்தஸாரஸ்வதத்தில் ஸ்நானம் பண்ணி என்னை ஆராதிக்கிறவர்கள் இகபர மிரண்டிலும் அடைவதற்கு அருமையானவைகளெல்லாவற்றையும் எளிதில் அடைவார்கள் அன்றியும ஸாரஸ்வத பதவியையும் அடைவார்கள் என்று சொல்லி உடனே மஹாதேவர் மறைந்தருளினார்.

185—149. பின் ஆசாநாசத்துக்குப் போகவேண்டும். அங்கே பிரமா முதலான தேவர்களும், ரிஷிகளும், கார்த்திகேயரும் (சுப்பிரமணியர்) பிருகு சந்ததியாருக்கு அனுக்கிரகிக்கும் பொருட்டுத் திரிசந்தியா காலங்களிலும் பிரசன்னரா யிருக்கிறார்கள். கபால மோசன தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் சகல பாபங்களும் ஒழியும். பிறகு அக்கினி தீர்த்தம் போகவேண்டும். அது சகல பாபங்களையும் போக்கி அக்கினி தேவன் உலகத்தை அடைவிக்கும். ஸ்நானம் செய்தவனையும் அவனுடைய வம்சத்தையும் பரிசுத்தமாக்கும். விசுவாமித்திர தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவனுக்குப் பிராமணத்வம் உண்டாகும்.

பிரமயோனி என்ற தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் பிரமலோகம் கிடைக்கும். அவனுடைய முன்னேழு சந்ததிகளும் பின்னேழு சந்ததிகளும் பரிசுத்தமாகும் என்பதில் சந்தேகமேயில்லை. பிருதூதகம் என்று ஒரு தீர்த்தமுண்டு. அது கார்த்திகேயருக் குரியது. அதில் முழுகித் தேவபிதிர்க்களுக்குத் திருப்தி செய்வித்தால் ஆண் பெண் எவராலும் அறிந்தும் அறியாமலும் செய்த பாபங்களெல்லாம் ஒழியப் பெற்றுச் சொர்க்கத்தை அடைவார்கள். அசுவமேத பலனும் கிட்டும். குரு க்ஷேத்திரம் மஹா பரிசுத்தமுள்ளது. அதை விட சரஸ்வதி நதி பரிசுத்தமானது. அதை விடச் சகல தீர்த்தங்களும் கலந்துள்ள மிசிரக தீர்த்தம் பரிசுத்தமானது. அதை விட இந்தப் பிருதூதக தீர்த்தம் மிகவும் பரிசுத்தமானது. அதில் தன் சரீரத்தை விட்டவன் தேவ சரீரம் பெறுவான். அந்தத் தீர்த்தத்தில் ஸனத்குமாரரும், வியாசரும் ஸ்நானம் செய்து மகிமை பெற்றார்கள். வேதத்தில் கூடப் பிருதூதக தீர்த்தத்துக்குப் போய் ஸ்நானம் பண்ணவேண்டுமென்று இருக்கிறது. கௌரவனே! பிருதூதகத்துக்கு மேலான தீர்த்தம் கிடையாது என்பது நிச்சயம். அந்தத் தீர்த்தம் பாபங்களெல்லாவற்றையும் நாசம் செய்து பரிசுத்தி யுண்டாக்கும் என்பதில் சந்தேகமே யில்லை. மஹா பாபாத்மாவாயுள்ளவன் கூட அதில் முழுகினால் பரிசுத்தனாய்ச் சொர்க்கம் போவானென்று அறிவுள்ளோர் சொல்லுகிறார்.

150—172. மதுச்ரவம் என்ற தீர்த்தம் ஆயிரம் கோதான பலன் தரும். ஸரஸ்வதியும் அருணா நதியும் கலக்கிற இடத்தில் ஸ்நானம் பண்ணினால் பிரமஹத்தி தோஷங் கூட ஒழியும். அக்கினிஷ்டோமம் அதிராத்திரங்களுக்கு மேலான பலன் உண்டாகும். முன்னேழு பின்னேழு சந்ததிகள் பாவனமாம். அர்த்தாகில தீர்த்தமென்று ஒன்றுண்டு. தர்ப்பி என்பவர் பிராமணர்களிடத்தில் உண்டான இரக்கத்தால் தமது தவசாலும், விரதத்தாலும், மந்திரத்தாலும் உண்டாக்கினா. மந்திரம் விரதம் ஒன்று மில்லாதவன் கூட அதில் ஸ்நானம் பண்ணி ஞானியாய் மந்திரசித்தி முதலான எல்லாம் அடைந்ததைக் கண்டதாக முன்னோர் கூறி யிருக்கிறார்கள். தர்ப்பி நாலு சமுத்திரங்களையும் அவ்விடத்தில் அழைத்து வைத்திருக்கிறார். அதில் ஸ்நானம் பண்ணினவனுக்கு ஒரு துக்கமும் வராது. ஆயிரம் கோதான பலன் வரும். சதஸஹஸ்ரகம் என்று ஒரு தீர்த்தமுண்டு. அதில் செய்கிற புண்ணியம் ஒன்று ஆயிரமாக விருத்தியாகும். ரேணுகா தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் பாபங்களெல்லாம் ஒழிந்து அக்கினிஷ்டோம பலன் உண்டாகும். விமோசன தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் தானம் வாங்கினதினால் உண்டான பாபங்களெல்லாம் நசிக்கும். பஞ்சவடி என்ற தீர்த்தத்தில் ஆசை புலன்களை அடக்கிப் பிரமசரியத்துடன் ஸ்நானம் பண்ணினால் புண்ணியவானாய்த் தருமதேவதையின் உலகத்தை அடைவான். தயாசம் என்று வருணனுக்குரிய தீர்த்தம் ஒன்று உண்டு. அங்கே யோகிகளுக்கு ஈசனான விருஷபத்வஜர் எப்போதும் பிரசன்னராய்

இருக்கிறார். அவ்விடத்தில் தான் பிரமா முதலிய தேவர்கள் எல்லாரும் சேர்ந்து சுப்பிரமண்ய கடவுளுக்குச் சேனாதிபதி பட்டம் கட்டினார்கள். அவ்விடம் போய்த் தேவசேனை வணக்குகிறவர்கள் சகல சித்திகளையும் பெறுவார்கள். அதற்குக் கிழக்கே குரு என்ற தீர்த்த மிருக்கிறது. அதில் முழுகினால் சகல பாபங்களும் நசித்துப் போம். பிரமலோகம கிடைக்கும். ஸர்க்கத்துவார தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் நிர்மலனாய்ப் பிரமலோகம் போவான். ஆயிரம் கோதான பலன் வரும். அநாரக தீர்த்தத்தில் பிரமா முதலிய தேவர்கள் சூழ நாராயண மூர்த்தி சதா வசிக்கிறார். அதில் ஸ்நானம் செய்தவனுக்கு ஒருபோதும் துக்கம் உண்டாகாது. அவ்விடத்தில் ருத்திர மூர்த்தியின் பத்தினியான உமாதேவியும் வாசம் பண்ணுகிறாள். அந்தத் தேவியை ஆராதனை செய்தவனுக்குத் துக்கமே கிடையாது. அவ்விடத்தில் உமாகாந்தனுகிய பரமேசுவரனுடைய சொரூப விக்கிரகம் ஒன்று இருக்கிறது. அதைத் தரிசிக்கிறவனுடைய சகல பாபங்களும் ஒழிந்து பரிசுத்தனாவான். உத்தித்தாமரை உடைய நாராயண மூர்த்தியைத் தரிசித்தவன் விஷ்ணு லோகத்தை அடைவான்.

173—207. வ்ருஷடிபுர தீர்த்தம் ஒன்றுண்டு. அதைப் பிரதட்சிணம் செய்தால் ஆயிரம் கோதான பலனுண்டாம். பாவன தீர்த்தத்தில் தேவர்களையும் பிதிர்க்களையும் ஆராதித்தால் அக்கினிஷ்டோம பலனுண்டாம். கங்காஹ்ருத தீர்த்தம் என்று ஒரு கிணறு உண்டு. அதில் மூன்று கோடி தீர்த்தங்கள் உள்ளன. அதில் முழுகினவன் தேவலோகத்தை அடைவான். அபகயா தீர்த்தத்தில் முழுகி மஹேசுவரனை ஆராதித்தால் அவன் தன் வம்சத்தை இரட்சிக்கிறான். அவனும் கணாதிபத்தியத்தைப் பெறுவான். மூன்று லோகத்திலும் பிரசித்தியான ஸ்தாணுபத தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் தேவலோகம் கிடைக்கும். வசிஷ்டாச்சிரமத்திலுள்ள வதரிபாசனம் போகவேண்டும். அதில் மூன்று இரவு பதரி பலத்தை உண்டு விரதம் இருந்தால் பன்னிரண்டு வருஷம் பதரிபலம் உண்டு தவம் செய்த பலன் சித்திக்கும். இந்திர மார்க்கம் போய் ஒரு நாள் உ ப வா ச ம் இருந்தால் இந்திர லோகத்தை அடையலாம். ஐகாந்திரத்தல் ஒரு நாளுபவாசம் இருந்தால் பிரமலோகம் சித்திக்கும். ஆதித்தியாச்சிரமத்தில் உள்ள தீர்த்தம் சோம லோகத்தைத் தரும். அதில் மற்றொரு தீர்த்தமும் இருக்கிறது. அதில் ஸ்நானம் பண்ணினாலும் சோமலோகத்தை அடையலாம். ததீசி தீர்த்தம் என்று ஒன்றுண்டு. அதைப் பாவக தீர்த்தம் என்றும் சொல்வார்கள். இவ்விடத்தில் தான் ஸாரஸ்வத வம்சத்தவராயும், தவசுக்குச் சமுத்திரம் போல்பவராயும் உள்ள அங்கிரஸை பிறந்தார். அதில் ஸ்நானம் பண்ணினால் அசுவமேத பலன் வரும். அவன் சரஸ்வதி உலகத்தை அடைவான். கன்னியாசிரம தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் அவன் நூறு அப்ஸரஸ்களுடன் பிரமலோகத்தை அடைவான். ஸான்னிஹதி தீர்த்த மென்பது சிறந்தது. பிரமா முதலான தேவர்களும் ரிஷிகளும் மாதந்தோறும் அங்கே போய் ஸ்நானம்

பண்ணி வெகு புண்ணியத்தை அடைகிறார்கள். சாங்கிலர் தீர்த்தத்தில் சூரிய கிரகண காலத்தில் ஸ்நானம் பண்ணினால் நித்திய பலனைத் தருபவைக ளான அசுவமேத முதலிய அநேக யாக பலன் கிடைக்கும். ஆறுகள், ஏரிகள், மடுக்கள், ஓடைகள், சிறிதும் பெரிதுமான குளங்களாகப் பூமியிலும் ஆகாயத் திலுமுள்ள தீர்த்தங்கள் எல்லாவற்றுக்கும் உரிய தேவதைகள் எல்லாரும் சந்திர கிரகண காலத்தில் இதில் வந்து முழுகுகிறார்கள். ஆகையால் மாதந் தோறும் எல்லாத் தீர்த்தங்களும் ஸாஹிதியில் வந்து சேர்கின்றன என்பதில் சந்தேகமில்லை. சந்திர சூரிய கிரகணங்களில் அதில் முழுகினாலும் அந்த நீரைக் குடித்தாலும் தேவலோகம் போகலாம். இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிச் சிராத்தம் பண்ணினால் ஆயிரம் அசுவமேத பலன் வரும். ஸ்திரீக ளும் புருஷர்களும் அறிந்தாவது அறியாமலாவது செய்த பாவங்களெல்லாம் இதில் முழுகுவதினால் ஒழியும். மசுக்ரகன் என்ற துவார பாலனை வணங்கிக் கோடி தீர்த்தத்தல் ஸ்நானம் பண்ணினால் அளவில்லாத சொர்ணதான பலனு ண்டாம். புவனடக்கத்துடன் கங்காஹ்ருத தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி னால் இராஜசூயம் அசுவமேதம் இவைகளின் பலன் சித்திக்கும். இந்தத் தீர்த் தம் பூமியில் நைமிசம் என்னப்படுகிறது. ஆகாயத்தில் புஷ்கரம் என்னப்படு கிறது. எல்லாவற்றிலும் குருக்ஷேத்திரம் சிறந்தது. குருக்ஷேத்திரத்திலிருந்து காற்றினால் கொண்டுவரப்படுகிற தூசி கூட மஹா பாபங்களை ஒழித்துச் சொர் க்கத்தைத் தரும். குருக்ஷேத்திரத்துக்கு வடக்கில் திருஷத்வதி ஓடுகிறது. தெற்கில் ஸரஸ்வதி ஓடுகிறது. இந்த எல்லைக் குள்பட்ட இடத்தில் வசிக்கிற வன் தேவலோகத்தில் வசிக்கிறவனாவான். நான் குருக்ஷேத்திரத்துக்குப் போ வேன், குருக்ஷேத்திரத்தில் வசிப்பேன் என்று ஒரு தரம் சொன்னாலும் அவன் பாவங்கள் எல்லாம் நாசமாகும், தேவர்கள் வணங்குகிற குருக்ஷேத்திரமானது தேவர்களுடைய யாகவேதிகை யென்று எண்ணப்படுகிறது. அங்கே வசிக்கிறவ ர்கள் ஒருபோதும் துக்கம் அடைகிறதில்லை. தர்ஞதுகா, அரண்டுகா, இரா மர் மடு, மசுக்ரகா இந்த நாலு எல்லைக்குட்பட்ட பூமி குரு க்ஷேத்திரம் என்ன ப்படுகிறது. ஸமந்த பஞ்சகம் என்றும் சொல்லப்படும். அது பிரமாவினு டைய யாக வேதிகை என்றும் சொல்லப்படுகிறது.

---

## 84-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—28. தர்ம தீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் இருக்கிறது. அந்த இடத் தில் தர்மதேவதை உக்கிரமான தவசு செய்தார். அதனால் அதைப் புண்ணிய தீர்த்தமாக்கினார். இதில் ஸ்நானம் பண்ணினவன் தன்னுடைய முன்னேழு பின்னேழு வம்சங்களைப் பரிசுத்தமாக்குகிறான். கணவாபீ தீர்த் தம் அக்னிஷ்டோம பலனையும் ரிஷி லோகத்தையும் தரும். ஸௌகந்திக

வனத்தில் பிரமா, தேவர்கள், ரிஷிகள், சித்தர்கள், சித்தர், சாரணர், கந்தர்வர், கின்னரர், நாகர் எல்லாரும் வசிக்கிறார்கள். அந்த வனத்தை ஒருவன் மிதித்த வுடனே சகல பாவங்களினின்றும் விடுபடுகிறான். அங்கே சிறந்த நதி ஒன்று ஓடுகிறது. அவ்விடத்தில் பிலட்சுதேவி என்ற தேவதை வசிக்கிறாள். மலை யினின்றும் பெருகி வருகிற நதியில் ஸ்நானம் பண்ணித் தேவ பிதுர்க்களை ஆராதித்தால் அசுவமேத பலனுண்டாம். அதற்கு எதிரில் ஈசானோத்புசித நதி இருக்கிறது. அதில் முழுகினால் ஆயிரம் கோதான பலனும், அசுவமேத பலனும் உண்டாம் என்று புராணம் கூறுகின்றது. சுகந்தம், சுதகந்தம், பஞ்ச பக்ஷம் என்ற தீர்த்தங்களும் உண்டு. அவைகளில் முழுகினவன் தேவர்கள் தொழும்படி சொர்க்கத்தில் வசிப்பான். திரிசூல தீர்த்தத்தில் ஸ்நானம் பண் ணினவன் தேகாந்தத்தில் கணபதிபதம் பெறுவான் என்பதில் சந்தேகமில்லை. சாகம்பரி என்னுமிடம் சிறந்தது. சாகம்பரு என்னும் பெண் தேவதையான வள் ஆயிரம் தேவ வருஷம் இங்கே தவசு பண்ணினாள். அப்போது அவள் மாதத்துக்கொரு தரம் இலைகளைப் புசித்தாள். அநேகம் பெண் தவசிகள் அங்கே வந்து சேர்ந்தார்கள். அவர்கள் எல்லாருக்கும் இலைகளைக் கொடு த்து உபசரித்தாள். அதனாலே அவளுக்குச் சாகம்பரி என்ற பேர் வந்தது. மன அடக்கத்துடன் இலைகளைப் புசித்துக்கொண்டு மூன்று இரவு அங்கே வசி த்தால் அந்தத் தேவதையின் கிருபை கிடைக்கும். பின் மூன்று லோகங்களி லும் கீர்த்திபெற்ற சுவர்ண தீர்த்தம் என்று ஒன்று உண்டு. பூர்வகாலத் தில் விஷ்ணுவானவர் ருத்திரரை நோக்கித் தவசு பண்ணித் தேவர்களுக்கு கிட் டாத அநேக சிறந்த வரங்களைப் பெற்றார். அந்தத் தவசுக்கு மகிழ்ந்து திரிபு ராந்தகனாகிய பரமசிவன் விஷ்ணுவைப் பார்த்து, ஓ கிருஷ்ணா! நிச்சயமாகவே நீ உலகத்தில் எல்லாராலும் நேசிக்கப்படுவாய். சந்தேக மில்லாமலே நீ எல் லா உலகங்களிலும் மேலான தேவனாக விளங்குவாய்; அரசர்க்கரசனே! அவ் விடத்தில் சிவ மூர்த்தியை ஆராதனை செய்தவன் அசுவமேத பலனையும், அந் தத்தில் கணபதித்துவத்தையும் பெறுவான். தூமாவதியில் மூன்று இரவு உபவாசம் செய்தவன் மனதில் எண்ணின எல்லா விருப்பங்களையும் பெறு வான். அதற்குத் தெற்கில் ரதவர்தம் என்று ஒன்று இருக்கிறது. ஆசை களை யொழித்து, மன அடக்க முடையவனாய் வணக்கத்துடன் அங்கே போய் மஹாதேவனை ஆராதித்தவன் மேலான பதவியைப் பெறுவான். அதைப் பிரதக்ஷிணம் பண்ணிக்கொண்டு தாரா தீர்த்தம் போகவேண்டும் அதில் ஸ்நா னம் செய்தவன் சகல துக்கங்களும் நீங்கப் பெறுவான். பெரிய மலையை வணங்கிக்கொண்டு கங்கோத்பத்திக்குப் போகவேண்டும். அது சொர்க்கத்து க்கு வாயில் போன்றுள்ளது. அடக்க முடையவனாய்க் காதி தீர்த்தத்தில் ஸ்நா னம் பண்ணினால் பௌண்டரீக யாக பலன் பெறுவான். அவவிடத்தில் ஒரு இரவு வசித்தால் ஆயிரம் கோதான பலன் வரும்.

29—64. ஸப்தகங்கா, திரிகங்கா, சக்ரவர்த்தம் என்பவைகளில் முழுகித் தேவ பிதிர்களுக்கு ஆராதனை செய்தால் புண்ணிய லோகங்களில் மேன்மையாக வாழ்வான். பின் கணகல தீர்த்தத்தில் முழுகி மூன்று இரவு உபவாசம் இருந்தால் அவன் அசுவமேத பலனை அடைந்து தேவலோகம் போவான். கபிலவத தீர்த்தம் போனால் ஆயிரம் கோதான பலன் வரும் அரசர்க்கரசனே கௌரவனே! நாகராஜனுகிய கபிலனிடம் போக வேண்டும். நாக தீர்த்தத்தில் முழுகினால் ஆயிரம் கோதான பலன் வரும். லளிதிகா என்ற ஸ்தாணு தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் துக்க மென்பது அணுகவே அணுகாது. சுகந்தக தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் பாபங்கள் ஒழிந்து பிரமலோகம் போவான். ருத்திரவர்த்த தீர்த்தம் சொர்க்கத்தை அளிக்கும். கங்கா ஸரஸ்வதி சங்கமத்தில் முழுகினால், அசுவமேத பலனை யடைந்து சொர்க்கம் பெறுவான். பத்ரகர்ணேசுவரத்தில் முழுகினால் பாபங்கள் ஒழிந்து தேவலோகத்தைப் பெறுவான். குப்ஜமார்க்க தீர்த்தம் ஆயிரம் கோதான பலனையும் சொர்க்க வாழ்வையும் தரும். சமுத்திரவ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் ஆயிரம் கோதான பலன் உண்டாம். அவனுடைய வம்சமெல்லாம் பரிசுத்தமாம். பிரமவர்த்தம் போனால் அசுவமேத பலன் பெற்று ஸோமலோகத்தைப் பெறுவான். யாமுன தீர்த்தம் தேவலோகத்தைத் தரும்; தர்வி ஸங்கிரமண தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் அசுவமேத பலனுண்டாய்த் தேவலோகம் போவான். ஸிந்துபிரவாசம் சொர்ணதான பலனைத் தரும். வேதி தீர்த்தம் போனால் அசுவமேத பலனுண்டாம். சொர்க்க லோகம் கிடைக்கும். ரிஷிகுலியம், வஸிஷ்டம் என்பவைகளுக்குப்போய் வஸிஷ்டரைத்தரிசித்தால் பிராமணத்துவத்துக்கு வேண்டியவைகள் எல்லாம் சித்தியாம். ரிஷிகுலியம் பாபங்களை ஒழித்து ரிஷி லோகத்தைத் தரும். பிருதுங்க தீர்த்தம் அசுவமேதபலன்சித்தியாம். வீரப்பிரமோட்ச தீர்த்தம் சகல பாபங்களையும் போக்கும். கிருத்திகை தீர்த்தமும் மக தீர்த்தமும் அக்னிஷ்டோம அதிராத்திரம் இவற்றின் பலன்களைத் தரும். வித்தியா தீர்த்தத்தில் சாயந்திர வேளையில் ஸ்நானம் செய்தால் சர்வஞானங்களும் சித்திக்கும். மகாச்ரமத்தில் ஒரு ராத்திரி வஸித்தால் சகல பாவங்களும் நீங்கும். அவ்விடத்தில் ஒருவேளை மாத்திரம் ஆகாரமுண்டு வஸித்தால், அவனுடைய முன் பத்துச் சந்ததிகளும் பின் பத்துச் சந்ததிகளும் நற்கதி பெறுவார்கள். அவனுக்கு அநேக புண்ணிய லோகங்களுண்டு. விதாஸிகத்தில் பிரமதேவர் பிரசன்னராயிருக்கிறார். அங்கே போனவன் அசுவமேத பலனை அடைந்து கணங்களின் தன்மையையும் பெறுவான். சுந்தரீக தீர்த்தத்தில் சித்தர்கள் வஸிக்கிறார்கள். அங்கே சென்றால் மேலான காந்தியையும் அழகையும் பெறுவானென்று புராணம் கூறுகின்றது. பிராமணி தீர்த்தத்தை அடைந்தவன் பிரமலோகத்தைப் பெறுவான். பின் நைமிசம் போகவேண்டும். அங்கே பிரமாவும் தேவர்களும் சதா வாசம் பண்ணுகிறார்கள். ஒருவருக்கு நைமிசம் போகவேண்டு மென்று விருப்பம் உண்டானபோதே அவனுடைய பாவங்களில் பாதி நாசமாகின்றது. அதில் பிரவேசித்த போதே எல்லாப் பாவங்களும் ஒழி

ந்து பரிசுத்தனாவான். அவ்விடத்தில் அநேக தீர்த்தங்களும் இருக்கின்றன. ஆகையால் அங்கே ஒரு மாசம் வசிக்கவேண்டும். புலனையும் மனதையும் அடக்கிக்கொண்டு போஜன நியமத்துடன் அங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணினால் அநேக யாக பலன் உண்டாகும். அவனுடைய முன்னேழு பின்னேழு வம்சங்களும் பரிசுத்தமாகும். ஒருவன் உபவாசத்துடனிருந்து நைமிசத்தில் தன் உடலை விட்டால் அவன் தேவலோகத்தில் களித்து விளையாடிக் கொண்டிருப்பான் என்று அறிவுள்ளவர்கள் சொல்லுகிறார்கள்.

65—90. கங்காத்வேதம் போய் மூன்று இராத்திரி உபவாசமிருந்து வசித்தால் வாஜபேய பலன் வரும். அவனும் பிரமாவாக ஆய்விடுவான். ஸரஸ்வதி தீர்த்தம் போய்த் தேவர்களுக்கும் பிதிர்க்களுக்கும் அர்க்கியம் கொடுத்து ஆராதித்தால் ஸரஸ்வதி லோகம் கிட்டும். பிரமசரிய விரதத்துடன் பகுதா தீர்த்தம் போய் ஒரு இராத்திரி அங்கே தங்கினால் தேவலோகத்தில் மேலான வாழ்வு கிடைக்கும். க்ஷீரவதி போனால் வாஜபேய பலன் வரும். விமல தீர்த்தத்தில் விதிப்படி ஒரு இரவு வசித்தால் தேவலோகத்தில் தேவர்களால் வணங்கப்படுவான். பின் கோப்ராத்திரம் போகவேண்டும். இது சரயுவில் உள்ள சிறந்த தீர்த்தம். இந்த இடத்தில் தான் தசரதராமர் தம்முடைய பரிசனங்களுடன் வைகுண்டம் போனார். அதில் ஸ்நானம் பண்ணினாலும், தன் சரீரத்தை விட்டாலும் அவன் தேவலோகத்தை அடைவான். கோமதியிலுள்ள இராம தீர்த்தம் சகல பாவங்களையும் ஒழித்து அசுவமேத பலனைத் தரும். அங்கேதான் சதஸஹஸ்ரிகா என்ற தீர்த்தம் இருக்கிறது. அது ஆயிரம் கோதான பலனைத் தரும். கோடி தீர்த்தத்தில் முழுகிக் குகனை (சுப்பிரமணியரை) வணங்கினால் ஆயிரம் கோதானபலனையும் சாந்தியையும் பெறுவான். வாரணாசியில் மஹாதேவனை வணங்கிக் கபாலிஹ்ருத தீர்த்ததில் ஸ்நானம் செய்தால் இராஜசூயபலன் வரும். அவிமுக்தம் போய் முழுகினால் பிரமஹத்தி தீரும். தேவதேவனை மஹாதேவனையும் தரிசிக்க வேண்டும். அவ்விடத்தில் தன் ஜீவனை விட்டவன் மோட்சம் பெறுவான். கங்கையும் கௌமதியும் கலக்கிற இடத்திலுள்ள மார்க்கண்டேய தீர்த்தம் அக்கினிஷ்டோம பலனைத் தரும். விதிப்படி கயையில் முழுகினால் அசுவமேத பலனைப் பெறுவான். அக்ஷயவடம் என்ற இடத்தில் பிதிர்க்களை உத்தேசித்து எதைக் கொடுத்தாலும் அக்ஷய பலன் உண்டாகும். மஹாநதத்தில் ஸ்நானம் பண்ணித் தேவ பிதுர்க்களுக்குத் திருப்தி செய்வித்தால் அழிவில்லாத பதவி கிடைக்கும். பிரமசரம் போனால் அன்று இரவு கழிந்தவுடனே அவன் பிரமலோகம் போவான். அந்த மடுவின் அருகில் பிரமதேவர் ஒரு யூபஸ்தம்பத்தை நாட்டி யிருக்கிறார். அதைப் பிரதக்ஷிணம் செய்தால் வாஜபேய பலன் கிட்டும். பிறகு தேனுகா தீர்த்தம் போகவேண்டும். அங்கே ஒரு இரவு வசித்து எள்ளு, பசு இவைகளைத் தானம் செய்தால் அவன் நிச்சயமாகவே ஸோமலோகம் போவான். அரசனே! அந்த மலையில் கபிலையானது தன் கன்றுகளுடன் திரிந்து கொண்டிருந்த அடையாளம்

வெகு அற்புதமாக இன்றும் காணப்படுகிறது. இந்தக் குளம்படி தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் எப்படிப்பட்ட பாவங்களும் தீரும்.

91—118. சூலபாணியான மஹாதேவனுடைய ஸ்தானமான இருத்திரோதம் போய் மஹாதேவனைத் தரிசித்துச், சரீர முழுவதும் விபூதி தரித்துக் கொள்ளவேண்டும். அவன் பிராமணனால் பன்னிரண்டு வருஷ தவப் பலனை அடைவான். மற்ற வருணத்தார்கள் சகல பாவங்களினின்றும் விடுபடுவார்கள். பின் உதயந்த பர்வதம் போகவேண்டும். இங்கே சாவித்திரி திருவடிச் சுவடு இன்னும் காணப்படுகின்றன. அவ்விடத்தில் பிராமணன் ஒரு வேளை சந்தியாவந்தனம் செய்தால் பன்னிரண்டு வருஷம் சந்தியாவந்தனம் செய்த பலன் உண்டாகும். யோனிதுவார தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவன் மறுஜனன துன்பத்தை அடைய மாட்டான். சுக்கிலபட்சம் கிருஷ்ணபட்சம் இரண்டிலும் கயையில் வசித்திருந்தால் அவனுடைய முன்னேழு வம்சமும் பின்னேழு வம்சமும் பரிசுத்தமாகும். கயைக்குப் போக வேண்டிய நிமித்தமாக ஒருவன் அநேக புத்திரர்களைப் பெறவேண்டும். பால்கு தீர்த்தம் அசுவமேத பலனையும் சகல சித்திகளையும் தரும். தர்மப்பிரிஸ்த தீர்த்தத்தில் தருமதேவதை எப்போதும் வசிக்கிறார். அதில் ஸ்நானம் செய்து பிதிர்க்களுக்கும் தேவர்களுக்கும் ஆராதனை செய்தால் எல்லாப் பாவங்களும் ஒழியும். சொர்க்கம் கிடைக்கும். அந்தத் தீர்த்தத்தைக் குடித்தாலும் போதும். அங்கே மதங்க ரிஷி ஆச்சிரமம் இருக்கிறது. அதில் புகுந்த வுடனே சகல துக்கங்களும் நீங்கும். தர்மதேவதையின் விக்கிரகத்தைத் தொட்டால் அசுவமேத பலன் வரும். பிரம க்ஷேத்ரம் போனால் இராஜசூயம் அசுவமேதம் இவைகளில் பலன் உண்டாகும். பின் இராஜ கிருகப் போகவேண்டும். அங்குள்ள தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் சொர்க்கம் கிடைக்கும். அங்கே பரிசுத்தனாய் யக்ஷிணி தேவதையின் பிரசாதத்தை தினந்தோறும் பெற்றுக்கொள்ளவேண்டும். அந்த யக்ஷிணி தெய்வத்தின் கருணையால் பிரமஹத்தி முதலிய சகல பாவங்களும் ஒழியும். மணிநாக தீர்த்தம் போனால் ஆயிரம் கோதான பலனுண்டாம். அந்தத் தீர்த்தத்தில் உள்ள எந்தப் பொருளைத் தின்றாலும் சர்ப்ப விஷத்தால் மரணம் உண்டாகாது. அதில் ஒரு இரவு வசித்தால் சகல பாவங்களுமொழியும். கௌதம வனம் போய் அகல்யா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் மேலான பதவி கிடைக்கும். சகல ஐசுவரியங்களும் உண்டாகும், அங்கே ஒரு கிணறு உண்டு. அதில் முழுகினால் வாஜபேயபலன் உண்டாகும். ஜனக தீர்த்தம் என்று ஒரு கிணறு உண்டு. அதில் முழுகினால் விஷ்ணு லோகம் கிடைக்கும். விநாச தீர்த்தம் சகல பாவங்களையும் போக்கி ஸோம லோகத்தைத் தரும். அத்ஹிவங்க வனம் போனவன் குஹ்ய லோகம் போவான். கண்டகி தீர்த்தம் போய் ஸ்நானம் பண்ணினால் பாவமெல்லாம் ஒழிந்து சூரிய லோகத்தை அடையலாம். விசால தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தவன் அக்கினிஷ்டோம பலனை அடைந்து தேவலோகம் போவான். கம்பன நதியில் முழுகினவன் பௌண்டரிக யாக பலன் பெறுவான். தேவலோகத்தை அடைவான். மஹேஹ

சுவரி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் அசுவமேத பலனுண்டாகும். தேவ தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் ஒரு போதும் துக்கம் உண்டாகாது. அசுவமேத பலன் சித்திக்கும்.

119-163. பிறகு நியமத்துடன் ஸோமபதத்துக்குப் போகவேண்டும். மஹேசுவரபத தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் அசுவமேத பலன் உண்டாகும். அதில் பத்து கோடி தீர்த்தங்களுண்டென்று சொல்லுகிறார்கள். பாரதோத்தமனே! துர்ச்சிந்தையுள்ள ஒரு அசுரன் அதில் ஆமை வடிவாக இருந்து வேதங்களைத் திருடிக் கொண்டிருந்தான். விஷ்ணுபகவான் அதை மீட்டுக் கொண்டு வந்தார். அதில் ஸ்நானம் பண்ணினவன் பௌண்டரீக யாக பலனை பெற்று விஷ்ணு உலகத்தை அடைவான். நாராயண தீர்த்தம் ஒன்று உண்டு. அதன் அருகில் விஷ்ணுபகவான் வசிக்கிறார். பிரமா, ஆதித்தியர், தேவர்கள் ரிஷிகள் ருத்திரர்கள் எல்லாரும் ஜனார்த்தனனை ஆராதிக்கிறார்கள். அதில் சாளகிராமம் கிடைக்கிறது. அவ்விடத்துக்குப் போய் வரந்தரும் நித்தியராகிய விஷ்ணுவை வணங்கினவன் அசுவமேத பலனைப் பெற்று விஷ்ணு உலகத்தை அடைவான். அங்கே சகல பாபங்களையும் போக்குகிற கிணறு உண்டு. அதில் எப்போதும் நாலு சமுத்திரங்கள் வசிக்கின்றன. அதில் ஸ்நானம் பண்ணினவன் சகல துக்கங்களையும் ஒழிந்து ருத்திரலோகம் போவான். சந்திரனைப் போலக் காந்தி பெறுவான். படிஸ்மர தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவனுக்குப் பூர்வஞான முண்டாகும். பின் மஹேசுவர புரம் போய் மஹா தேவனை வணங்கினால் எண்ணம் எல்லாம் கைகூடும். வாமன தீர்த்தம் சகல பாவங்களையும் போக்கும். ஹரி தீர்த்தம் சகல துக்கங்களையும் போக்கும். குசிக தீர்த்தம் சகல பாவங்களையும் போக்கும். கௌசிகி தீர்த்தம் சகல பாவங்களையும் ஒழித்து இராஜசூய பலன் தரும். பின் மகிமையுள்ள சம்பக வனம் போக வேண்டும். அதில் ஒரு இரவு வசித்தால் ஆயிரம் கோதான பலன் வரும். ஜ்யேஷ்டில தீர்த்தம் மைத்திராவருண உலகத்தை அளிக்கும். கன்னியாசம் வேத்யம் போனால் மறு உலகம் கிடைக்கும். அவ்விடத்தில் எந்தத் தானம் பண்ணினாலும் நித்திய பலனைத் தரும். நிச்சிர தீர்த்தம் விஷ்ணு உலகம் கொடுக்கும். அங்கே தானம் பண்ணினால் பிரமலோகம் கிடைக்கும். அங்கே வசிஷ்டாச்சிரமம் இருக்கிறது. தேவர்களும் ரிஷிகளும் வணங்குகிற தேவகூடம் போனால் அசுவமேத பலனுண்டாகும். பின் கௌசிக ரிஷி மடுவுக்கு போகவேண்டும். அங்கே தான் விசுவாமித்திரர் தபசித்தி பெற்றார். அசுவமேதம் வாஜபேயம் இவைகளின் பலனைத்தரும். மஹா ஹிருத தீர்த்தம் துக்கங்களைப் போக்கிச் சொர்ணதான பலனைத் தரும். வீராச்சிரமம் போய்க் குமார கடவுளை வணங்கினால் அசுவமேத பலனுண்டாகும். அக்கினிதாரா தீர்த்தம் அக்கினிஷ்டோம பலன் தரும். இமயமலைக் கருகிலுள்ள பிரமதடாகம் அக்கினிஷ்டோம பலன் தரும். பிரம தடாகத்திலிருந்து குமாரதாரா தீர்த்தம் உற்பத்தியாய் வருகிறது. அது மூவுலகங்களிலும் கீர்த்தி பெற்றது. அதில் ஸ்நானம் பண்ணினால் இஷ்டமெல்லாம் நிறைவேறும். அவ்விடத்தில்

ஆறுநாள் உபவாச மிருந்தால் பிரமஹத்தி தோஷம் கூடத் தீரும். பிறகு மூன்று லோகத்திலும் பிரசித்தியான கௌரி சிகரம போகவேண்டும். அதன் மேல் ஸ்தானகுண்ட மிருக்கிறது. அதில் ஸ்நானம் செய்தால் வாஜபேய பலனுண் டாகும். இந்திரலோகம் கிடைக்கும். தமாருண தீர்த்தம் போனுல் நரமே தபலன் கிட்டும். கல்திகா, கோசிகா, அருணு என்கிற தீர்த்தங்களில் முழுகி மூன்று நாள் உபவாச மிருந்தால் எல்லாப் பாவங்களுந் தீரும். பிறகு ஊர்வசி தீர்த்தம், அதன் பின் ஸோமாச்ரம தீர்த்தம், அதன் பின் கும்பகர்ணுச்ரம தீர்த்தங்களில் முழுகினுல் அவன் உலகத்தில் எல்லாராலும் வணங்கப்படுவான் பின் பிரமசரிய விரதத்துடன் கோகமுக தீர்த்தம் போய் ஸ்நானம் பண்ணினுல் பூர்வ ஜன்மங்களின் ஞானமுண்டாகும் என்று புராணம் கூறுகின்றது. ரிஷப தீவுக்குப் போய் ஸரஸ்வதியில் ஸ்நானம் செய்தால் அவன் தேவலோகத்தை அடைவான். தர்ம தீர்த்தத்தில் முழுகினுல் வாஜபேய பலன் உண்டாகும். அவன் தேவலோகத்தில் தேவர்கள் வணங்க வீற்றிருப்பான். பாகீரதி, துர் தர்ப்பண தீர்த்தங்களில் முழுகினுல் ஆயிரம் கோதான பலனுண்டாகும். பின் லலிதிகா தீர்த்தத்தில் முழுகினுல் இராஜ சூய பலன் பெற்றுத் தேவலோகத் தில் தேவர்கள் வணங்க வீற்றிருப்பான்.

---

## 85-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—34. பின் ஸம்வேத்திய தீர்த்தம் போய்ச் சாயங்காலத்தில் ஸ்நானம் செய்தால் அவனுக்குச் சகல வித்தியா ஞானங்களும் உண்டாகும். லோஹித்திய தீர்த்தம் என்று ஒன்று உண்டு. இராமரால் உண்டாக்கப்பட்டது. அது சொர்ணதான பலன் தரும். கோரோத தீர்த்தம் அசுவமேத பலன் தரும். இது சிருஷ்டி கர்த்தாவின் கட்டளையாம். கங்கை சமுத்திரத்தில் கலக்கிற இடத்தில் ஸ்நானம் பண்ணினுல் அசுவமேத பலனை விடப்பதின்மடங்கு அதிக பலன் தருமென்று அறிவுள்ளவர்கள் சொல்லுகிறுர்கள். கங்கையின் அக்கரைக்குப் போய் மூன்று இரவு வசித்தால் சகல பாவங்களும் ஒழியும். வைதரிணி நதி சகல பாவங்களையும் ஒழிக்கும். விரஜா தீர்த்தத்தில் முழுகினுல் சந்திரனைப் போன்ற ஒளியைப் பெறுவான். பாவம் நீங்கி பரிசுத்தனுவான். ஆயிரம் கோதான பலன் உண்டாகும். ஸோண நதியும் ஜோதிர நதியும் கலக்கிற இடத்தில் தேவர் பிதிர்க்களுக்குத் திருப்தி செய்வித்தால் அக்கினிஷடோம பலன் உண்டாகும். வம்சகுல்ம தீர்த்தத்திலிருந்து தான் சோணு நர்மதா என்கிற நதிகள் உற்பத்தியாகின்றன. அதில் முழுகினுல் அசுவமேத பலன் வரும். கோசலத்திலுள்ள ரிஷப தீர்த்தம் போய் மூன்று நாள் அந்த நீரை அருந்தினுல் வாஜபேய பலன் வரும். கலா தீர்த்தம் பதினெரு ரிஷப தான பலன் தரும. புஷ்பவதத்திய தீர்த்தம் வம்சத்தைப் பாவனம் பண்ணும்.

ஆயிரம் கோதான பலன் உண்டாகும். பதரிக தீர்த்தத்தில் முழுகினால் தேவ லோகம் கிட்டும். தக்ஷகம், சம்பா என்பவைகளில் ஸ்நானம் செய்தால் ஆயிரம் கோதான பலனுண்டாகும். லபதிகா தீர்த்தம் வாஜபேய பலன் தரும். ஜமதக்கினி புத்திரரான பரசுராமர் வசிக்கிற மஹேந்திரம் போய் இராம தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் அசுவமேத பலன் உண்டாகும். காதார தீர்த்தம் என்கிற மதங்க தீர்த்தம் ஆயிரம் கோதான பலன் தரும். ஸ்ரீபர்வதத்திலுள்ள நதியில் முழுகினால் அசுவமேத பலன் வரும். அந்த மலையில் ரிஷபத்துவஜரான மஹாதேவர் உமாதேவியாருடன் வசிக்கிறார். பிரமா முதலிய தேவர்களும் வசிக்கிறார்கள். மஹாதேவனை வணங்கினால் அசுவமேத பலன் உண்டாகும். தேவராத தீர்த்தத்தில் முழுகினால் அசுவமேத பலனுண்டாம். மேலான கதி யுண்டாகும். பாண்டிய நாட்டிலுள்ள ரிஷபகிரி தேவர்களாலும் வணங்கப்படுவது. அது வாஜபேய பலன் தரும். அப்ஸரஸ்களால் சூழப்பட்ட காவேரி நதி ஆயிரம் கோதான பலன் தரும். கீழ் கடற்கரையிலுள்ள கன்னியா தீர்த்தம் சகல பாபங்களையும் போக்கும். சமுத்திர நடுவில் கோகர்ணம் இருக்கிறது. மூன்று உலகமும் புகழ்வது. அந்தக் கோகர்ண க்ஷேத்தரத்தில் பிரமா, தேவர்கள், பூதர்கள், யக்ஷர், கின்னரர், நாகர், சித்தர், சாரணர், கந்தர்வர், உரகர், நதிகள் சமுத்திரங்கள், மலைகள் எல்லாரும் உமாநாதனாகிய பரமேசுவரைப் பணிகிறார்கள். அவ்விடத்தில் ஈசானரைப் பணிந்து மூன்று இரவு வசித்தால் அசுவமேதபலனைப் பெற்றுக் கணாதிபதித்வத்தையும் அடையலாம். பன்னிரண்டு வருஷம் வசித்தால் ஆத்ம சுத்தி யுண்டாகும். பின் காயத்திரி க்ஷேத்திரம் போய் மூன்று இராத்திரி வசித்தால் ஆயிரம் கோதான பலன் சித்திக்கும். பின் ஸம்வத்ஸரிஷி தடாகம் போகவேண்டும். அதில் ஸ்நானம் செய்தால் சரீரகாந்தியும் ஐசுவரியமும் உண்டாகும். வேணா தீர்த்தத்தில் முழுகி தேவர் பிதிர்க்களிக்குப் பலி கொடுத்தால் அவன் மயில்களும் அன்னங்களும் இழுக்கும்படியான இரதத்தை அடைவான். கோதாவிரியை அடைந்து முழுகினால் கோமேத பலன் உண்டாகும். வாசுகிப்தவி கிட்டும். வேணாசங்கமம் வாஜபேயபலன் தரும்.

35—57. வாரதநதி சங்கமம் ஆயிரம் கோதான பலன் தரும். பிரமஸ்தானம் போய் மூன்று இரவு தங்கினால் ஆயிரம் கோதான பலன் பெற்றுத் தேவலோகத்தை அடைவான். குசப்பிலவம் போய் மூன்று இராத்திரி உபவாசமிருந்தால் அசுவமேத பலனுண்டாம். கிருஷ்ணா நதியும் வேணாநதியும் வந்து சேருகிற தேவராத தீர்த்தத்திலும், படிச்ரமஹருத தீர்த்தத்திலும் முழுகினால் பூர்வ ஞானம் உண்டாகும். இவ்விடத்தில் இந்திரன் நூறு அசுவமேத யாகம் பண்ணினான். அதனாலே தேவலோகத்தை அடைந்தான். அவ்விடத்தில் போனாலும் கூட அக்கினிஷ்டோம பலன் உண்டாகும். சார்ணதேவி ஹ்ருதத்தில் ஸ்நானம் பண்ணினால் ஆயிரம் கோதான பலனுண்டாகும். பயோஷ்ணீ தீர்த்தத்தில் முழுகினால் ஆயிரம் கோதான பலனுண்டாகும். தண்டகாரணியம் போய் அங்குள்ள தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் உடனே சகல தான

ங்களும் செய்த பலனுண்டாகும். சுக்கிரனுக்குரிய சர்வங்காச்சிரமம் போன வனுக்கு ஒருபோதும் துக்கம் உண்டாகாது. அவனுடைய வம்சம் எல்லாம் பாவனமாகும். சூர்ப்பாக்கம் போகவேண்டும். அங்கே பரசுராமர் அடிக்கடி வருவார். அங்குள்ள இராம தீர்த்தத்தில் முழுகினால் சொர்ணதான பலன் வரும். நியமத்துடன் சப்தகோதாவரியில் ஸ்நானம் பண்ணினால் மஹா புண்ணியத்தை அடைந்து சொர்க்கம் போவான். தேவபதத்தில் முழுகினால் தேவ யாக பலன் வரும். துங்காரகம் என்று ஒரு தீர்த்தமுண்டு. அவ்விடத்தில் ஸாரஸ்வத ரிஷியானவர் தபசிகளுக்கு வேதத்தை உபதேசித்தார். வேதங்களை யிழந்து போனபோது ஆங்கிரசர் புத்திரர் ரிஷிகளுடைய அங்கவஸ்திரத்தில் சுகமாய் உட்கார்ந்துகொண்டு பிரணவத்தைத் தெளிவாய் உச்சரித்தார். உடனே அந்த ரிஷிகளுக்கு முன்னே கற்று மறந்த வேதமெல்லாம் ஞாபகத்தில் வந்துவிட்டது. பிறகு ரிஷிகள், தேவர்கள் வருணன், அக்கினி, பிரஜாபதி, ஹரி நாராயணர், மஹாதேவர், பிதாமகரான பிரமதேவர், இவர்களெல்லாரும் யாகம் செய்யும்படி பிருகு முனிவரை நியமித்தார்கள். பிருகு முனிவர் அக்கினியில் நெய்யைச் சொரிந்து, ரிஷிகளுக்காக அக்கினி தியானமென்னும் யாகத்தைச் செய்தார். பிறகு தேவர்களும் ரிஷிகளும் தத்தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். அந்தத் துங்க வனத்திற்குள் ஆணாவது பெண்ணாவது போனவுடனே பரிசுத்தராகிறார்கள். நியமத்துடனே அவ்விடத்தில் ஒரு மாதம் வசிக்க வேண்டும். மேதாவிக தீர்த்தத்தில் நியமத்துடன் ஸ்நானம் செய்து தேவர்களையும் பிதுர்க்களையும் ஆராதித்தால் அக்கினிஷ்டோம பலனுண்டாகும். நல்ல ஞாபகமும் ஞானமும் உண்டாகும். காலாஞ்சர மலையிலுள்ள தீர்த்தத்தில் முழுகினால் ஆயிரம் கோதான பலனுண்டாகும். தேவர்களுக்கும் பிதுர்க்களுக்கும் ஆராதனை செய்தால் சொர்க்கம் கிடைக்கும்.

58—97. மந்தாகினி தீர்த்தம் சகல பாவங்களையும் போக்கும். சித்திரகூட மலை போய் அங்குள்ள தீர்த்தத்தில் முழுகித் தேவர்களையும் பிதிர்க்களையும் ஆராதித்தால் அசுவமேத பலன் உண்டாகும். பர்த்திரி ஸ்தானம் போனால் சகல சித்திகளும் உண்டாகும். அங்குள்ள கோடி தீர்த்தம் ஆயிரம் கோதான பலன் தரும். சிருங்கபுரம் வெகு சிலாக்கியமானது. தசரதர் இராமர் பூர்வத்தில் அவ்விடத்திலிருந்து தான் கங்கையைத் தாண்டி தண்டகாரணியம் போனார். அந்த தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் சகல பாபங்களும் நீங்கும் வாஜபேயம் செய்த பலனுண்டாகும். பிறகு சிவஸ்தலமான மங்கா பதத்துக்குப் போகவேண்டும். அங்கே சிவனை வணங்கிப் பிரதட்சிணம் செய்தால் அவன் கணாதிபதியாவான். பிரயாகையில் பிரமா, லோகபாலகர்கள், சித்தர்கள், ரிஷிகள், பிதிர்க்கள் எல்லாரும் வசிக்கிறார்கள். நிர்மலர்களான சனத்குமாரர், ஆங்கிரஸர் முதலானவர்களும், உரகர், கருடர், சித்தர், நாகர், கந்தர்வர், அப்ஸரஸ்கள், சமுத்திரங்கள், ஆறுகள் எல்லாரும் வசிக்கிறார்கள். அங்கே மூன்று பள்ளங்கள் இருக்கின்றன. அவ்விடத்தில் கங்கைப் புனல் வெகு வேகமாகச் சுழலுகிறது. யமுனா நதி கங்கையுடன் கலக்கிற இடம் இதுதான்.

அவ்விடத்தில் பிரயாகை வெகு விசேஷமான இடம். இவ்விடத்தில் தேவர்களும் யாகம் செய்வார்கள். பிரமதேவர் அங்கே வசிக்கிறார். ஆகையால் பிரயாகை வெகு விசேஷமான தீர்த்தம். ஒருவன் பிரயாகைக்குப் போய் அதன் நாமத்தைச் உச்சரித்து அதிலிருந்து கொஞ்சம் மண் எடுத்தால் அவனுடைய பாபமெல்லாம் ஓடிப்போம். இதில் ஸ்நானம் பண்ணுகிறவனுக்கு அசுவமேத இராஜசூயம் இவைகளின் பலனுண்டாம். இங்கே தானம் கொடுத்தால் ஒன்று ஆயிர மடங்கு பலன் தரும். வேதங்களாவது மனிதர்களாவது உண்டாகும் தடையைக் கவனியாமல் இந்த இடத்தில் பிராணனை விடவேண்டியது. மூன்று கோடி தீர்த்தங்களும், பதினாயிரம் தீர்த்தங்களும் இதிலுள்ளனவென்று ஞானிகள் சொல்லுகிறார்கள். இந்த இடத்தில் போகவதி என்கிற வாசுகி தீர்த்தம் ஒன்று உண்டு. அதில் முழுகினால் அசுவமேத பலன் வரும். கங்கையில் ஹம்ஸப்ரபதன் என்று ஒரு தீர்த்த முண்டு. அது பத்து யாகம் செய்த பலன் தரும். நெருப்பானது சருகைத் தகிக்கிறது போலக் கங்கா ஜலம் சகல பாவங்களையும் ஒழித்து விடும். ஸத்திய யுகத்தில் எல்லாம் தீர்த்தங்களும் பரிசுத்தமாயிருந்தன. திரேதா யுகத்தில் புஷ்கர தீர்த்தம் மாத்திரம் பரிசுத்தமானது. துவாபர யுகத்தில் குரு க்ஷேத்திரம் பரிசுத்தமானது. கலியுகத்தில் கங்கை மாத்திரம் பரிசுத்தமானது என்று சொல்லப்படுகிறது. புஷ்கரத்தில் தவம் செய்யவேண்டும். மோஹாலயத்தில் தானம் பண்ணவேண்டும். மலயாசலத்தில் சரீரம் தகிக்கப்பட வேண்டும். பிருகுதுங்கத்தில் சரீரத்தை விடவேண்டும். கங்கையிலும், புஷ்கர தீர்த்தத்திலும் ஸ்நானம் செய்தால் முன்னேழு பின்னேழு வம்சங்களும் பாவனமாகும். கங்கையின் பேரை உச்சரித்தாலே பாவம் ஒழிந்து பரிசுத்த முண்டாகும். அதைத் தரிசித்தால் வாழ்வுண்டாகும். ஸ்நானம் பண்ணினால் அவனுடைய வம்சமெல்லாம் பரிசுத்தி பெறும் அரசனே! ஒருவனுடைய எலும்பு எத்தனை காலம் கங்கையில் கிடக்குமோ அதுவரையில் அவன் தேவலோகத்தில் தேவர்களால் வணங்கப்படுவான். கங்கையைத் தரிசித்தவனும், அதன் நீரை குடித்தவனும், அதில் முழுகினவனும் தேவலோகத்தில் தேவர்கள் வணங்க வாழ்வான். கங்கைக்குச் சமானமான தீர்த்தமில்லை. கேசவனுக்குச் சமானமான தெய்வமில்லை. பிராமணனுக்கு மேலான வருணமில்லை என்று பிரமதேவர் சொன்னார். கங்கா ஜலம் இருக்கிற இடமும், கங்கைக் கரையிலுள்ள காடும் தவத்துக்கு யோக்கியமானது கங்கை ஓடுகிற நாடு தவாச்சிரமமாம்.

98—111. இந்தத் தீர்த்த மகிமை பிராமணனுக்கு மாத்திரம் சொல்லவேண்டும். பக்திமான்களுக்கும், தன் சொந்த புத்திரர்களும், ஹிதேஹிதர்களுக்கும், சிஷ்யர்களுக்கும், தன்னை அனுசரித்திருப்பவர்களுக்கும் மாத்திரம்சொல்லவேண்டும். இந்தத் தீர்த்த மகிமை ஒப்பற்றது; மகிமையுள்ளது; பரிசுத்தமானது; சொர்க்கமளிப்பது; இன்பமானது; பரிசுத்தம் செய்யத் தக்கது; மேலான பதவியைத் தரத் தக்கது. இது பாவத்தை ஒழிக்கிறதற்காக ரிஷிகளிடத்திலுள்ள இரகசியம். இந்தப் பரிசுத்தமான தீர்த்த மகிமையை ஒருவன்

பிராமணர்களுக்கு முன் படித்தால் அவன் சொர்க்கத்தை அடைவான். இது மங்களமானது; சொர்க்கம் போகு மார்க்கமுமுள்ளது, பரிசுத்தமானது; மகிமையுள்ளது; சத்துரு நாசம் செய்யத் தக்கது; இந்தத் தீர்த்த மகிமையானது எல்லாச் சரிததிரங்களிலும் மேலானது; மேலான ஞானம் தருவது. இதைப் படித்தால் புத்திரனில்லாதவன் புத்திரனை அடைவான். தரித்திரன் செல்வததைப் பெறுவான். அரசன் உலகத்தை ஜெயிப்பான். வைசியன் சம்பத்தை அடைவான். சூத்திரன் சகல மனோபீஷ்டங்களையும் பெறுவான். பிராமணன் சம்சாரமான கடலைக் கடந்துபோவான். இதைத் தினம் படிக்கிறவன் பூர்வ ஜென்ம ஞானத்தைப் பெறுவான். சொர்க்கத்தில் சுகமாய் வாழ்வான். இதில் சொல்லப்பட்ட தீர்த்தங்களில் சில அடையத் தக்கனவும் சில அடையக் கூடாதனவுமாக இருக்கின்றன. அவைகளை அடைய விருப்பமுள்ளவன் தன் மனசாலேயாவது போக வேண்டும் வசுக்கள், சித்தர்கள், ஆதித்தியர்கள், மருத்துக்கள், அசுவினிகள் தேவர்களுக்கு ஒப்பான ரிஷிகள் இவர்கள் எல்லாரும் தங்கள் புண்ணியத்தினாலே அவ்விடங்களில் போய் ஸ்நானம் செய்திருக்கிறார்கள். கௌரவனே! நீயும் விதிப்படி செய். மன அடக்கமுடையவனாய் இந்தத் தீர்த்தங்களைத் தரிசித்துப் புண்ணியத்தை ஏராளமாகத் தேடிக் கொள். யோக்கியமுள்ளவனும், சாஸ்திரங்களைக் கற்று உணர்ந்தவனும் பரிசுத்தனாயிருப்பதினாலும், தெய்வ நம்பிக்கையாலும், வேதாத்தியயனத்தாலும், இந்தத் தீர்த்தங்களைத் தரிசிக்கலாம். விரதமில்லாதவனும், அடக்கமில்லாதவனும், பரிசுத்தியற்றவனும், திருட்டுத்தன முள்ளவனும், கெட்ட மனமுள்ளவனும், இந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணக் கூடாது. கௌரவனே! நீ எப்போதும் தர்ம சிந்தையுள்ளவன் • சதாசாரமுள்ளவன். நீ உன் தர்மத்தினால் உன் பிதாவுக்கு எப்போதும் மகிழ்ச்சி யுண்டாக்குகிறாய். உன் பிதாமகன், பிரபிதாமகன், பிரமா முதலிய தேவர்கள் இவர்களுக்கும் ரிஷிகளுக்கும் சந்தோஷம் உண்டாக்குகிறாய். புண்ணியசாலியே! இந்திரனைப் போன்ற வீரனே! பீஷ்மா! நீ வசுபதத்தைப் பெறுவாய். பூலோகத்திலும் அழியாத கீர்த்தியுள்ளவனுவாய் என்று புலஸ்தியர் சொன்னார்.

112—132. புலஸ்தியர் இப்படியாகப் பீஷ்மருக்குச் சொன்ன பின் மனமகிழ்ச்சியுடன் அவ்விடம் விட்டுப் போய்விட்டார். யுதிஷ்டிரா! பீஷ்மர் கூட சாஸ்திரங்களின் உண்மையை உணர்ந்து புலஸ்தியர் உத்தரவால் தீர்த்த யாத்திரை செய்தார். இந்தப் பிரயாகையைத் தரிசித்துச் சகல பாவங்களும் ஒழிந்து பரிசுத்தரானார். விதிப்படி யாத்திரை செய்கிறவன் நூறு அசுவமேத பலனை அடைந்து மோட்சத்தையும் பெறுவான். பார்த்தனே! நீ பீஷ்மர் பெற்றதை விட எண் மடங்கு பலன் அதிகமாக அடைவாய். இந்த ரிஷிகளுடன் கூட யாத்திரை போனால் எட்டு மடங்கு அதிக பலனைப் பெறுவாய். தீர்த்தங்களை இராக்ஷதர்கள் கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆதையால் உன்னைத் தவிர மற்றொருவனும் அங்கே போக முடியாது. புலஸ்தியர் கூறிய இந்தத் தீர்த்த மகிமைகளை காலையில் எழுந்த வுடனே சொல்லுகிறவன் சகல

பாவங்களிலிருந்தும் விடுபடுவான். வால்மீகி, கசியபர், ஆத்திரேயர், குண்டயாத்திரர், விசுவாமித்திரர், கௌதமர், அசிதர், தேவலர், மார்க்கண்டேயர், காலவர், பரத்துவாஜர், வசிஷ்டர், உத்தாலகர், புத்திரனுடன் கூடின சௌனகர், வியாசர், ஜாபாலி, துர்வாசர், முதலிய ரிஷி சிரேஷ்டர்கள் எல்லாரும் உனக்காக அங்கே காத்திருக்கிறார்கள். இந்தத் தீர்த்த யாத்திரை காரணமாக அவர்கள் எல்லாரையும் தரிசனம் செய். மஹாராஜனே! ரோமச மஹரிஷி உன்னிடம் வருவார். அவரோடு கூடத் தீர்த்த யாத்திரை செய். என்னோடு கூடச் சில தீர்த்தங்களுக்கு நீ வரலாம். இதனால் மஹாவிஷ இராஜன் யயாதி, புரூரவன் இவர்களைப் போலப் பெருங் கீர்த்தி பெறுவாய். நீ உன புண்ணியத்தினாலே பிரகாசிப்பாய். பகீரதன், இராமன் இவர்களைப் போல அரசர்களுக்குள் சூரியனைப் போல பிரகாசிப்பாய். மனு, இக்ஷ்வாகு, கீர்த்தியுள்ள புருவேனன், இவர்களைப் போல கீர்த்தி பெறுவாய். பூர்வ காலத்தில் இந்திரன் விருத்திராசுரனைக் கொன்று, சத்துருக்களை நாசம் பண்ணிக் கவலை யற்று வாழ்ந்தது போல நீயும் உன் சத்துருக்களை வென்று உலகத்தை ஆளுவாய். அரசனே! நீ உன் க்ஷத்திரிய தர்மப்படி சத்துருக்களை வென்று, உன புண்ணியத்தினாலே கார்த்த வீரியார்ஜுனனைப் போலக் கீர்த்தியைப் பெறுவாய். ஓ ஜனமேஜய மஹாராஜனே! நாரத முனிவர் தீர்த்த யாத்திரை போகும்படி யுதிஷ்டிரருக்குச் சொல்லிவிட்டு அவ்விடத்தை விட்டு மறைந்து போனார். யுதிஷ்டிரரும் இவைகளை யெல்லாம் ரிஷிகளுக்குச் சொன்னார் என்று வைசம்பாயனர் ஜனமேஜயனுக்குச் சொன்னார்.

---

## 86-வது அத்தியாயம்.

### தீர்த்த யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1— . தர்மராஜாவானவர் தமது சகோதரருடைய அபிப்பிராயங்களையும், நாரதர் சொன்னதையும் பிரமதேவனுக்கு ஒப்பான தௌமியருக்குச் சொன்னார். புருஷ சிரேஷ்டனும், எதிர்க்கப்படாத பராக்கிரம முள்ளவனும், மஹாபாகுவும், மிகுந்த புத்தியுள்ளவனுமான அர்ஜுனனை ஆயுதம் பெற்று வரும்படி அனுப்பினேன். அவன் எனக்கு அதிக பிரியமுள்ளவன். வல்லமைசாலி, சகல ஆயுதங்களிலும் வல்லவன். கிருஷ்ணனுக்குச் சமானமானவன். பிராமணோத்தமரே! அர்ஜுனன் கிருஷ்ணன் இவ்விருவரும் சத்துருக்களைச் சங்கரிப்பவர்கள் என்று நான் நன்றாய் அறிவேன். இவ்விருவரும் ஆறு குணங்களை யுடைய விஷ்ணுவே. வியாசரும் நாரதரும் இதை அறிவார்கள். ஏனென்றால் அவர்கள் எனக்கு இதைப் பற்றி பல தரம் சொல்லி யிருக்கிறார்கள். அவ்விருவரும் நர நாராயணர்கள் என்று எனக்குத் தெரியும். அர்ஜுனனுடைய மகிமையை அறிந்து தான் அவனை ஆயுதம் பெற்று வர அனுப்பினேன். அவன் இந்திரனுக்குத் தாழ்ந்தவன் அல்ல. சகல விதத்திலும் அர்ஜுனன் இந்திரனுக்குச் சரியானவன். இந்திர குமாரனான அர்ஜுனனை

இந்திரனைத் தரிசித்து ஆயுதங்களைப் பெற்று வர அனுப்பினேன். பீஷ்மரும் துரோணரும் மஹா வல்லமையுள்ள தேர் வீரர்கள். கிருபரும் அசுவத்தாமரும் ஜயிக்கப்படாதவர்கள். இவர்களைத் துரியோதனன் தன் சேனைகளுக்கு அதிபதிகளாக நியமித்திருக்கிறான். அவர்கள் எல்லாரும் வேதமுணர்ந்தவர்கள். எல்லா ஆயுதங்களும் தெரிந்தவர்கள். அந்த வீராகள் மஹா வீரர்கள். எப்போதும் அர்ஜுனனுடன் போர்புரியும் விருப்பமுள்ளவாகள். சூத புத்திரனை கர்ணன் தேவாயுதங்களை நன்றாய் அறிந்தவன். ஆயுத வேகத்தினாலே வாயுவைப் போன்ற பலமுள்ளவன். அவன் எரிகிற நெருப்பின் சிகை போன்றவன்; அவனுடைய அம்புகள் அக்கினியினுடைய நாக்குப் போன்றவைகள். யுத்த பூமியிலிருந்து மேலே கிளம்புகிற புழுதி அதன் புகை போல்வது. தோலுறையிட்ட அவனுடைய இடது கையின் தாக்குதலே அவ்வக்கினியிலுண்டாகும் தொனி. துரியோதனனுடைய தாண்டுதலே நெருப்பாகும். இதனாலே கர்ணன் யுகமுடிவு காலத்தில் வாயுவொடு கூடின நெருப்பைப் போன்றுள்ளவன். எமனுக்குச் சரியானவன். நிச்சயமாகவே அவன் என்னுடைய சைனியங்களை அக்கினி துரும்பை எரிப்பது போல எரித்து விடுவான். அர்ஜுனனாகிய காளமேக கிருஷ்ணனாகிய காற்றுடன் கூடித், தேவாயுதங்களாகிற மின்னலை வீசி. மேகத்தின் கீழே பறக்கிற நாரைகளைப் போல வெள்ளைக் குதிரைகளைச் செலுத்திக், காண்டீபமாகிற இந்திரதனுசுடன் சேர்ந்து ஓயாமல் பொழிகிற சரமாரியாலேதான் அந்தக் கர்ணனாகிய நெருப்பு அணையும். அர்ஜுனன் இந்திரனிடத்திலிருந்து எல்லாத் தேவாயுதங்களையும் பெற்று வருவான் என்பதில் சந்தேகமே யில்லை. அர்ஜுனன் ஒருவனே துரியோதனாதிகள் எல்லாருக்கும் சரியானவன் என்பது என்னுடைய கருத்து. தேவாயுதங்கள் இல்லாத பட்சத்தில் அந்தச் சத்துருக்கள் எல்லாரையும் ஜயிப்பது முடியாத காரியம். அர்ஜுனன் சகல ஆயுதங்களையும் பெற்றுவருகிறதை நாங்கள் எல்லாரும் பார்ப்போம். ஏனென்றால் அர்ஜுனன் ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கினால் கொஞ்சம் கூடத் தளர்ச்சி அடையமாட்டான். அவன் இல்லாதபோது நாங்களும் திரௌபதியும் இந்தக் காமியக வனத்தில் மகிழ்ச்சி யடைந்திருக்க முடியாது. ஆதலால் மஹாரிஷீசுவரரே! கனிகள் நிறைந்து, வேண்டிய ஆகாரம் கிடைப்பதாய்ச் சாதுக்களான ஜனங்கள் வசிப்பதாயுள்ள வேறு ஒரு வனத்தை எனக்குச் சொல்லுங்கள். அந்த இடத்தில் அர்ஜுனன் வருகிறவரைக்கும் சாதகப் பட்சியானது மழைத் துளிகளுக்குக் காத்திருப்பது போல அவனை யெதிர்பார்த்து வாசம் பண்ணுவோம். துவிஜர்கள் வசிக்கத் தக்க ஆச்சிரமங்கள் நிறைந்ததும், ஏரிகள், ஆறுகள், மலைகள் உள்ளதுமான இடத்தைச் சொல்ல வேண்டும். அர்ஜுனன் இல்லாத சமயத்தில் நாங்கள் இந்தக் காமியக வனத்தில் வசிக்க மாட்டோம். வேறிடத்துக்கு நாங்கள் அவசியம் போக வேண்டும் என்று சொன்னார்.

---

## 87-வது அத்தியாயம்.

தீர்த்த யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—22. பாண்டவர்கள் இப்படிக் கவலையுடன் துக்கப்படுகிறதைப் பார்த்துப் பிருகஸ்பதிக்குச் சமானமான தௌமியர் அவர்களைத் தேற்றிச் சொல்லுகிறார். பாரதோத்தமர்களே! பரிசுத்தமான சில ஆச்சிரமங்களையும், க்ஷேத்திரங்களையும் தீர்த்தங்களையும், மலைகளையும் உங்களுக்குச் சொல்லுகிறேன் கேளுங்கள். அவைகளெல்லாம் பிராமணர்களால் அங்கீகரிக்கப் பட்டவைகள். திரௌபதியோடும் சகோதரர்களோடும் உங்களுக்குள்ள துக்கம் எல்லாமொழியும். அவைகளைக் கேட்ட மாத்திரத்திலேயே உங்களுக்குப் புண்ணியம் உண்டாகும். கிழக்குத் திசையிலுள்ளவையும் இராஜரிஷிகளால் விரும்பப் பட்டவைகளுமானவைகளில் எனக்கு ஞாபகத்திலிருக்கிற சிலவற்றை முதலில் சொல்லுகிறேன். தேவரிஷிகளால் விரும்பிச் சொல்லப் பட்ட நைமிசம் என்று ஒரு தீர்த்தம் உண்டு. அதில் தெய்வத் தன்மையுள்ள அநேக கட்டங்கள் இருக்கின்றன. இவ்விடத்தில் பரிசுத்தமான கௌமதியாறு ஓடுகிறது. தேவரிஷிகளால் வணங்கப்படுவது. தேவர்களுடைய யாகசாலையும், சூரியனுடைய யூபஸ்தம்பமும் உண்டு. இங்கே சிறந்த மலையும், பரிசுத்தமான கயையும், பிரமாவினுடைய மடுவும், இருக்கின்றன. தேவர்கள் அடிக்கடி வருவார்கள். இதனாலே தான் ஒருவன பல புத்திரர்களைப் பெற வேண்டும்; ஏனென்றால் அவர்களில் ஒருவனாவது கயைக்குப் போய் வருவான் என்றும் ஒருவனாவது அசுவமேத யாகம் செய்வானென்றும் அதனாலே அந்த வம்சம் சுகம் பெறுமென்றும் பெரியோர் சொல்லுகிறார்கள். அரசனே! அங்கே பெரிய நதி ஒன்று இருக்கிறது. காயாசுரனிருக்கிறான். நித்தியத்துவமுடையதென்று பிராமணாகள் சொல்லுகிற பெரிய ஆலமரம் ஒன்று இருக்கிறது. அரசனே! இவ்விடத்தில் பிதிரக்களுக்குப் பிண்டம் அளித்தால் நித்தியமான பலனுண்டாகும். பால்கு நதி யென்கிற புண்ணிய தீர்த்தமொன்றும் இருக்கிறது. கௌசிகி நதியும் ஓடுகிறது. பல வகையான கிழங்குகளும் கனிகளும் மிகுதியாக கிடைக்கக் கூடியது. இங்கே தான் விசுவாமித்திரர பிராமணத்துவத்தை அடைந்தார். இந்த இடத்தில் கங்கை யென்னும் புண்ணிய நதி ஓடுகிறது. அதன் கரையில் பூரணமான தட்சிணையோடு அநேக யாகங்கள் செய்யப்பட்டன. கௌரவோத்தமரே! பாஞ்சால நாட்டில் உத்பலா என்கிற வனம் இருக்கிறது. அவ்விடத்தில் விசுவாமித்திரர் யாகம் செய்தார். இவ்விடத்தில் பரசுராமர் விசுவாமித்திரருக்கு அவருடைய பூர்வ வம்ச சரிதையைச்சொன்னார். விசுவாமித்திரர் காமியக வனத்தில் இந்திரனுடன் சோம பானம் பண்ணினார். அதன் பிறகு தான் விசுவாமித்திரர் க்ஷத்திரியத் தன்மையை ஒழித்து விட்டுப் பிராமணன் ஆனேன் என்று சொன்னார். அவ்விடத்தில் கங்கா யமுனா சங்கமும் இருக்கிறது. அது மூவிலகங்களிலும் பிரசித்தியானது. புண்ணியமானது. பாவங்களைப் போக்குவது. புண்ணியாத்துமாக்களான

ரிஷிகளால் வணங்கப்படுவது. இந்த இடத்தில் தான் பிரமதேவர் யாகம் செய்தார். அதற்குப் பிரயாகை என்று பேர். அரசர்க்கரசனே! அங்கே அகஸ்திய ஆச்சிரமும் தபசா என்கிற வனமும் இருக்கிறது. காலாஞ்சிர பர்வதத்தில் ஹிரண்ய பிந்து என்கிற தீர்த்தம் இருக்கிறது. அகஸ்திய மலையுமுண்டு. அது சுகமானது. இன்பம் தரத் தக்கது. மஹேந்திரம் என்கிற மலை ஒன்று இருக்கிறது. அது பரசுராமருக்குப் பிரியமானது. பூர்வத்தில் பிரமதேவர் இவ்விடத்தில் யாகம் செய்தார்.

22— . யுதிஷ்டிரரே! பாகீரதி நதியானது இந்த இடத்தில் ஒரு ஏரியில் பாய்கிறது. பிரமசாலா என்ற ஒரு புண்ணிய நதியும் இருக்கிறது. அதைப் பார்த்தவுடனே மிகுந்த புண்ணியம் உண்டாகும் அதன் கரையில் பாபமற்ற புண்ணியாத்மாக்கள் வசிக்கிறார்கள். அங்கே புண்ணியமானதும், சுபகரமானதும், பெருமையுள்ளதும், மகிமையுள்ளதுமான மதங்காச்சிரமம் இருக்கிறது. அது கேதாரம் என்று சொல்லப்படுகிறது. கனிகளும், கிழங்குகளும், நிறைந்துள்ளதும், நீர் வளம் பெற்றதும், மகிழ்ச்சி தருவதுமான குந்தோத மலையும் இருக்கிறது. இங்கே நிஷத இராஜனாகிய நளன் கொஞ்ச காலம் தங்கித் தாகம் தீர்த்துக்கொண்டான். இவ்விடத்தில் இன்பமான தேவவனமும் இருக்கிறது. அங்கே அநேக ரிஷிகள் வசிக்கிறார்கள். அந்த மலையின் உச்சியில் பகுதா, நந்தா என்கிற நதிகளும் இருக்கின்றன. மஹாராஜனே! கீழ் நாட்டிலுள்ள தீர்த்தங்கள், நதிகள், மலைகள், புண்ணிய க்ஷேத்திரங்கள் எல்லாவற்றையும் சொன்னேன். மற்ற மூன்று திக்குகளிலும் உள்ளவைகளைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

---

## 88-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—9. யுதிஷ்டிரரே! தெற்கே உள்ள தீர்த்தம் முதலியவைகளை நான் அறிந்த மட்டும் தெளிவாய்ச் சொல்லுகிறேன் கவனமாய்க் கேளும். இந்தத் திசையில் கோதாவரி நதி ஓடுகிறது. பூர்ணமாக நீரையுடையது. சோலைகள் நிறைந்தது. ரிஷிகள் விரும்பி வரத் தக்கது. வேணநதியும், பீமரதியாறும் இருக்கின்றன. அவை பயத்தையும் பாவத்தையும் அச்சத்தையும் போக்கும். அங்கே பட்சிகளும் மான்களும் மிகுதியாக உண்டு. ரிஷி ஆச்சிரமங்கள் நிறைந்திருக்கும் பயசினி ஆறும் உண்டு. அது இராஜரிஷியான நிருக இராஜனுக்குரியது. நீர் நிறைந்திருப்பது. இன்பமானது; பிராமணர்களால் விரும்பி அடையத் தக்கது. இந்த இடத்தில் மகிமையுள்ள மார்க்கண்டேய யோகியானவர் நிருகராஜனையும் புகழ்ந்தார். அவன் செய்த யாகங்களைப் பற்றியும் கேள்விப் பட்டு இருக்கிறோம். பயசினியிலுள்ள வராக தீர்த்தத்தில் நிருகராஜன் யாகம் செய்த போது தேவேந்திரன் சோமபானத்தால் மயங்கி

ஞன். பிராமணர்கள் கொடையால் இறுமாந்தார்கள். பயசினி ஆற்றின் தண்ணீரை ஒரு பாத்திரத்தில் எடுப்பதாலும், காற்றினுல் தெளிக்கப்பட்டாலும் ஒரு மனிதன் மரண பரியந்தம் செய்கிற பாவங்கள் ஒழியும். அது சொர்க்கத்தை விட மேலானது. அது சூலபாணியாகிய சிவனுல் உண்டாக்கப்பட்டது. அவ்விடத்தில் சிவ விக்கிரகத்தை தரிசித்தவன் சிவலோகத்தை அடைவான். கங்காநதியை ஒரு தராசு தட்டிலும், மற்றத் தீர்த்தங்கள் எல்லாவற்றையும் மற்ருெரு தட்டிலும் வைத்தால் சமமாயிருக்கும் ஆனுல் பயசினி இவை எல்லாவற்றிலும் மேலானதென்று நான் எண்ணுகிறேன்.

10—18. பரதவம்சோத்தமரே! வருணசுரோதஸா என்கிற மலையில் புண்ணியமும் சுகமுமுள்ள மதுரவனம் இருக்கிறது. அதில் கிழங்குகளும் கனிகளும் நிறைந்திருக்கும். யூபஸ்தம்பங்களும் உண்டு. பயசினி வடகரையில் கண்வாச்சிரமம் இருக்கிறது. அதன் அருகில் ரிஷிகள் வசிக்கிற அநேக வனங்களுண்டு. ஸர்ம்பராகம் என்ற தீர்த்தக் கரையில், பசனம், புனச்சரணம் என்ற பரசுராமருடைய இரண்டு வேதிகைகள் இருக்கின்றன. குந்தி புத்திரரே! அசோக தீர்த்தம் இருக்கிறது. அங்கே பல ரிஷி ஆச்சிரமங்கள் இருக்கின்றன. பாண்டிய நாட்டில் அகுஸ்தா, வருணு என்ற தீர்த்தங்கள் இருக்கின்றன. அங்கே குமரி என்கிற தீர்த்தமும் உண்டு. தாமபிரபாணத்தைப் பற்றிச் சொல்லுகிறேன் கேளும். இந்த ஆச்சிரமத்தில் தேவர்கள் மோட்சத்தை உத்தேசித்துத் தவம் புரிந்தார்கள். இவ்விடத்தில் கோகருணம் என்ற க்ஷேத்திரமிருக்கிறது. அது மூவுலகங்களிலும் புகழ் பெற்றது. அவ்விடத்தில் குளிர்ந்த நீர் உண்டு. அந்த மடு புண்ணியம் அளிக்கத்தக்கது. மங்களமானது. பாவிகளால் அணுகப்படாதது. அதனருகில் அகஸ்தியர் சிஷ்யருடைய ஆச்சிரமம் இருக்கிறது. தேவஸபா என்று பேருள்ளது. மரங்களும், புற்களும், கனிகளும் கிழங்குகளும், நிறைந்திருப்பது. அங்கே வைடூர்ய மலையும் உண்டு. புண்ணியம் தரத் தக்கது. அந்த மலையில் கனிகளும், கிழங்குகளும், நீரும் நிறைந்த அகஸ்தியாச்சிரமம் இருக்கிறது.

19—27. யுதிஷ்டிரரே! ஸௌராஷ்டிர தேசத்திலிருக்கிற ஆச்சிரமங்கள் புண்ணிய க்ஷேத்திரங்கள், ஆறுகள். மடுகள், இவைகளைச் சொல்லுகிறேன் கேளும். கடற்கரையில் சமசோதவேதனம், பிரபாஸம் என்ற தீர்த்தங்கள் உண்டென்று பிராமணர்கள் சொல்லுகிருர்கள். அவைகள் தேவர்களால் வணங்கப்பட்டவை. ரிஷிகளால் அடையத்தக்கதும், மிகுந்த புண்ணியத்தைக் கொடுப்பதுமான பிந்தாரக மென்ற தீர்த்தமிருக்கிறது. ஆங்கே உஜ்ஜயந்தி என்று ஒரு மலையிருக்கிறது.அது சித்திகளை அளிக்கும். தேவரிஷியாகிய நாரதர் இந்த மலையைப் பற்றி ஒரு சுலோகம் சொல்லியிருக்கிருர். அதைக் கேளும். ஸௌராஸ்டிர தேசத்திலுள்ளதும், பட்சிகளும், மிருகங்களும் நிறைந்ததுமான உஜ்ஜயந்தி மலையில் தவம் பண்ணுகிறவன் தேவலோகத்தில் தேவர்கள் வணங்க வாழ்ந்திருப்பான் என்பதாம். அங்கே கோவதி என்னும்

தீர்த்தமுமிருக்கிறது. மஹா புண்ணியமானது. மதுவைச் சங்கரித்தவரும் அநாதி நித்திய தரும சொரூபரான திருமால் அங்கே வசிக்கிறார். வேதங்களையும், தத்துவ சாஸ்திரங்களையும் உணர்ந்தவர்களும், பிராமணர்கள் மகிமையுள்ள கிருஷ்ணனை நித்திய தரும சொரூபி என்று சொல்லுகிறார்கள். பரிசுத்தமானவைகளெல்லாவற்றிலும் கோவிந்தனே பரிசுத்தமானவன்; தருமங்கள் எல்லாவற்றிலும மேலான தருமமாயுள்ளவன; மங்களங்களுக் கெல்லாம் மங்களமானவன். தாமரைக் கண்ணனான கண்ணனே நித்தியமானவன். எல்லாவற்றுக்கும் தலைவன். மனதுக் கெட்டாதவரான அந்தக் கிருஷ்ணன் அங்கே வசிக்கிறார்.

---

## 89-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—18. யுதிஷ்டிரரே! மேற்கே உள்ளவைகளைச் சொல்லுகிறேன் கேளும் என்று தௌமியர் சொல்லுகிறார். அநாநர்த தேசத்தில் நர்மதை நதியானது மேற்கு முகமாக ஓடுகிறது. சகல தீர்த்தங்களும், க்ஷேத்திரங்களும், நதிகளும், வனங்களும், சிறந்த மலைகளும், பிரமதேவருடன் எல்லாத் தேவர்களும், ரிஷிகளும், சித்தர் சாரணர்களும் எப்போதும் அந்த நர்மதையில் வந்து ஸ்நானம் செய்கிறார்கள். அங்கே விசுவசிரவ ரிஷியினுடைய ஆச்சிரமம் இருக்கிறது. நரவாகனத்தை யுடைய குபேரன் அங்கே தான் பிறந்தான். அங்கே வைடூர்யமலை யிருக்கிறது. பசிய இலைகளும், கனிகளும், மலர்களும் நிறைந்த விருட்சங்கள் அநேகம உண்டு. அந்த மலைமேலே தாமரை நிறைந்த ஒரு மடு இருக்கிறது. தேவர்களும் கந்தர்வர்களும் அங்கே அடிக்கடி வருவார்கள். தேவர்களும், தேவரிஷிகளும் அந்த மலையைத் தரிசிக்கிறார்கள். அதில் அநேக அற்புதங்கள் உண்டு. அங்கே விசுவாமித்திரா என்று ஒரு நதி யுண்டு. அது இராஜ ரிஷியாகிய விசுவாமித்திரரால் அந்தப் பேர் பெற்றது. அநேக புண்ணிய தீர்த்தங்கள் அடங்கியுள்ளது. அந்த நதிக் கரையிலே தான் நகுஷ புத்திரனாகிய யயாதி சொர்க்கத்திலிருந்து விழுந்தான். அங்கிருந்து மறுபடியும் சொர்க்கம் போனான். அங்கே புண்ணியம் என்று பேருள்ள ஒரு நதி யிருக்கிறது. மாணிக்க மலை யென்றும், அசித மலை யென்றும் இரண்டு மலைகளுண்டு. அவைகளில் கிழங்குகளும் கனிகளும் ஏராளமாயுண்டு. கக்ஷசேனர், சியவனர், இவர்களுடைய ஆசிரமங்களும் இருக்கின்றன. அங்கே சொற்பமான தவம் செய்தவர்களும் பெரும் பயனை அடைவார்கள். பம்புமார்க் காச்சிரமும் இருக்கின்றது. அங்கே மான்களும் பறவைகளும் நிறைந்திருக்கும். மேதமா, கங்காதரா, சைந்தவா என்கிற வனங்களும் உண்டு. அவைகளில் பிராமணர்கள் நிறைந்திருப்பார்கள். புஷ்கரம் என்னப்பட்ட பிரமா மடுவும் இருக்கிறது. வாலகில்லியருடைய ஆச்சிரமம் அங்கே தான் இருக்கிறது சித்தாச்சிரமங்க

ளும் ரிஷிபாச்சிரமங்களும் உண்டு. அதை அடைய வேண்டு மென்கிற விருப்பத்தினாலே பிரமதேர் ஒரு கவி சொல்லியிருக்கிறார். பரிசுத்தமான மனிதன் தன் மனதினாலே அந்தப் புஷ்கரத்தைச் சிந்தித்தாலும், சகல பாவங்களினின்றும் விடுபட்டுச் சொர்க்கத்தை அடைகிறான் என்று சொன்னார்.

---

## 90-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—19. வடதிசையிலுள்ளவைகளைச் சொல்லுகிறேன் கேளும் என்று தௌமியர் சொல்லுகிறார். யுதிஷ்டிரரே! ஒருவன் வணக்கத்தோடு இதைக் கேட்பதினாலேயே பரிசுத்தனாகிறான். மிகுந்த நன்மைகளைப் பெறுகிறான். ஆகையால் கவனமாய்க் கேளும். இங்கே அநேக தீர்த்தங்கள் நிறைந்த சரஸ்வதி நதி ஓடுகிறது. யமுனையும் இங்கேதான் ஓடுகிறது. பிலக்ஷவதரணம என்ற புண்ணியதீர்த்தம் இருக்கிறது பிராமணர்கள் ஸரஸ்வதியாகம் செய்த பின் அபவிருத ஸ்நானம் செய்த இடம். அக்கினிசரம் என்ற பரிசுத்தமான தெய்வ தீர்த்தம் இருக்கிறது. இங்கே சகாதேவன் சிறந்த யாகம் செய்தான். யுதிஷ்டிரரே! இந்த காரணத்தாலே சகாதேவனைப் பற்றிப் புகழ்ந்து ஒரு பாட்டுச சொன்னார்கள். அதைப் பிராமணர்கள் இன்னமும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். யமுனா நதிக் கரையில் சகாதேவன் பிராமணர்களுக்கு மிகுந்த தக்ஷிணை கொடுத்து அக்கினி தேவனை ஆராதித்தான். பரதகண்ட சக்கிரவர்த்தியாகிய அவ்வரசன் இவ்விடத்தில் முப்பத்தைந்து அசுவமேதங்கள் செய்தான். பிராமணர்களுக்குப் பிரியரான சரபங்க மஹாரிஷியினுடைய ஆச்சிரமம் இங்கேதான் பூர்வத்திலிருந்ததென்று நாம் கேள்விப் படுகிறோம். பக்திமான்களால் வணங்கப்படுகிற சரஸ்வதி நதி இங்கே யிருக்கிறது. அதன் கரையில் வாலகில்லிய மஹாரிஷிகள் முன்னே யாகம் செய்தார்கள். மஹா கீர்த்தியுள்ள திருஷாவதி என்னும் புண்ணிய நதியுமிருக்கிறது. நக்ரதாக்கியை, பஞ்சாலயை, புண்ணியாக்கியை என்பவைகளும் இங்கே யிருக்கின்றன. விஷயாகரா என்பதும் இங்கே யிருக்கிறது. இந்திரன், தேவர், வருணன் முதலானவர்கள் இங்கே வந்து தவம் புரிந்தார்கள். அதனால் இது புண்ணியமுள்ளதாயிற்று. பலசாகை என்பதும் இருக்கிறது. இவ்விடத்தில் ஜமதக்கினி முனிவர் யாகம் செய்தார். இவ்விடத்தில் எல்லா நதிகளும் வடிவமெடுத்துக் கொண்டு, தங்கள் தங்களுக்குரிய தீர்த்தத்தைச் சுமந்துகொண்டு, அந்த மஹாரிஷியைச் சூழ்ந்து நின்றுகொண்டிருந்தன. அக்கினிதேவன் இங்கே வந்து அந்த ஒப்பற்ற ரிஷியைப் பார்த்து ஒரு சுலோகம் சொன்னார். ஜமதக்கினி தேவாராதனை செய்யும் போது நதிகளெல்லாம் தேன் கொண்டுவந்து கொடுக்கும்.

20—34. யுதிஷ்டிரரே! கங்கா நதியானது ஹிமாலயமலையைப் பிளந்து கொண்டு பாய்கிற இடத்தில் கந்தர்வர், யட்சர், அப்ஸரஸ், கின்னரர், இராட்சதர், கிராதர்கள் எல்லாரும் வசிக்கிறார்கள். அந்த இடத்துக்குக் கங்கா துவாரம் என்று பேர். தேவரிஷிகள் இவ்விடம் தேடி வருவார்கள். மஹா புண்ணியமானது. இவ்விடத்தில் புருமலை இருக்கின்றது. அதிலே தான் புரூரவன் பிறந்தான். அங்கே பிருகு முனிவர் தவம் செய்தார். அதனால் அந்த மலைக்குப் பிருகுதுங்கம் என்று பேர். பதரிகாசிரமம் இங்கே யிருக்கிறது. அதில் முக்காலத்திலும் உள்ளவரான நாராயணர் வசிககிறார். அதன் சமீபத்தில் கங்கை ஓடுகிறது. பூர்வ காலத்தில் அதன் ஜலம் உஷ்ணமுள்ளதா யிருக்தது. அதன் கரையிலுள்ள மணல் எல்லாம் சொர்ணமா யிருந்தது. தேவரிஷிகளும் தேவர்களும் அங்கே நாராயணரை வணங்க வருகிறார்கள். நாராயணர் வசிக்கிற இடத்தில் சகல தீர்த்தங்களும் க்ஷேத்திரங்களும இருக்கின்றன. தேவதேவரான நாராயணரைத் தியானிக்கிறவர்களுக்கு ஒரு போதும் துக்கம் கிடையாது. அங்கே ரிஷிகளும், தேவரிஷிகளும், சித்தர்களும் வசிக்கிறார்கள். அரசனே! பூமியில் இவைகளே சிறந்த இடங்களும், தீர்த்தங்களுமாம். இவைகளெல்லாம் தேவர்கள், சித்தர்கள், வசுக்கள், ஆதித்தியர்கள், மருத்துக்கள், அசுவினிகள், மஹாத்மாக்களான தேவ ரிஷிகள் இவர்களால் வணங்கப்பட்டவைகளாம். குந்தி குமாரரே! நீர் உமது தம்பிகளோடும், பிராமணர்களோடும் போய் இவைகளைத் தரிசியும். உமது கவலைகளெல்லாம் நீங்கும் என்று தௌமியர் சொன்னார்.

---

## 91-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—16. வைசம்பாயனர் சொல்லுகிறார். ஜனமேஜய மஹா ராஜாவே தௌமியர் இப்படிச் சொல்லிக் கொண்டிருககிற போது, மஹா தேஜசுள்ள ரோமரிஷி வந்தார். தேவர்கள் சூழ வீற்றிருக்கும் இந்திரனைப் போலப் பிராமணர்களும் சகோதரர்களும் சூழ இருந்த தர்ம ராஜாவானவர் அந்த மஹா ரிஷியை விதிப்படி வணங்கி, அவர் வந்த காரணத்தையும், அவரது அபிப்பிராயத்தையும் வினவினார். பாண்டு புத்திரனான தர்மராஜா கூறிய வசனங்களால் ரோமசர் மகிழ்ந்து, இனிய வசனங்களால் பேசிப் பாண்டவர்களை மகிழ்வித்தார். பிறகு மஹாராஜாவை நோக்கிக் குந்தி புத்திரா! நான் என் இஷ்டப்படி உலகமெல்லாம் சுற்றித் திரிந்து, இந்திரலோகம் போய் இந்திரனைப் பார்த்தேன். அவ்விடத்தில் உன் தம்பி அர்ஜுனனையும் பார்த்தேன். அர்ஜுனன் இந்திரனோடு அர்த்தாசனத்தில் வீற்றிருந்தான். நான் அதைப் பார்த்து ஆச்சரியப்பட்டேன். அப்போது தேவேந்திரன் என்னைப் பார்த்து நீர் தர்மராஜாவிடம் போக வேண்டுமென்று சொன்னான். இந்திரனும் மஹாத்மாவான பார்த்

தனும் கேட்டுக் கொண்டபடியால் உம்மையும் உமது சகோதரர்களையும் பார்க்கிற நிமித்தம் வெகு வேகமாய் வந்தேன். பாண்டு புத்திரனே! அரசனே! குழந்தாய்! நான் சில சங்கதி சொல்லுகிறேன். அவைகள் உங்களுக்கு மிக மகிழ்ச்சி யுண்டாக்கும். திரௌபதியோடும், பிராமணர்களோடும், சாவதானமாய்க் கேளும். மஹாராஜனே! பாரதோத்தமனே! உமது கட்டளைப்படியே, அர்ஜுனன் தேவ பூமிக்குப் போய் உக்கிரமான தவம் புரிந்து, ருத்திர மூர்த்தியினிடத்திலிருந்து ஆயுதத்தைப்பெற்றுக்கொண்டான். அந்தப் பயங்கரமான ஆயுதத்துக்குப் பிரமசிரஸ் என்று பேர். அது அமிர்தத்துடன் பிறந்தது. அதைப் பிரயோக உபசம்கார மந்திரங்களுடன் அர்ஜுனன் அடைந்தான். வஜ்ராயுதம், சுதாயுதம் முதலிய சிறந்த ஆயுதங்களையும் இந்திரன், யமன், வருணன், குபேரன் முதலியவர்களிடமிருந்து பெற்றுக்கொண்டான். விசுவாவசுவின் புத்திரனிடமிருந்து சங்கீதம், வாத்தியம், சாமவேதம் இவைகளையும் கற்றுக்கொண்டான். தம்பியான அர்ஜுனன் சகல ஆயுதங்களையும் அடைந்த பின், கந்தர்வ வேதத்தைக் கற்றுக்கொண்டு தேவலோகத்தில் சுகமாக வசிக்கிறான். யுதிஷ்டிரரே! தேவேந்திரன் என்னிடம் சொன்ன முக்கியமான விஷயத்தைச் சொல்லுகிறேன் கேளும்.

17—25. தேவேந்திரன் என்னை அழைத்து நீர் மனித உலகத்துக்குப் போய் யுதிஷ்டிரரிடம் நான் சொல்வதைச் சொல்லும் என்றார். அதைச் சொல்லுகிறேன். உமது தம்பி சீக்கிரம் திரும்பி வருவான். எல்லா ஆயுதங்களையும் பெற்றுக்கொண்டு, ஒருவராலும் செய்ய முடியாத சில தேவ காரியங்களை நிறைவேற்றி விட்டுச் சீக்கிரம் வருவான். உமது சகோதரர்களுடன் நீர் தவம் செய்யும். தவசுக்கு மேலானது ஒன்று மில்லை. தவசு எல்லாப் பலன்களையும் கொடுக்கும். அரசனே! கர்ணன் மஹா பலமும் சாமர்த்தியமும் உடையவன், ஒப்பில்லாதவன். யுத்த தந்திரங்களில் தேர்ந்தவன். வில்லிற் சிறந்தவன். எல்லா ஆயுதங்களிலும் தேர்ந்தவன். சூரிய புத்திரனான கர்ணன் ருத்திரனை ஒப்பானவன். அர்ஜுனனுடைய ஒப்பற்ற வல்லமையும் எனக்குத் தெரியும். அர்ஜுனனுடைய சக்தியில் பதினாறில் ஒரு பங்குக்குக் கூடக் கர்ணன் சமானமாக மாட்டான். சத்துரு பயங்கரனே! கர்ணனைப் பற்றிய பயத்தை உமது மனதில் வைக்க வேண்டாம். அர்ஜுனன் சொர்க்கத்திலிருந்து பூலோகத்துக்கு வந்த வுடனே உமது அச்சம் ஒழியும். நீர் விரும்பின தீர்த்த யாத்திரையைப் பற்றி ரோமசர் உம்மிடத்தில் பேசுவார். பாரதனே! பிரமரிஷியான ரோமசர் சொல்வதைக் கேட்டு அதன் படியே நடவும். என்று சொல்லச் சொன்னார்.

---

## 92-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—13. ரோமசர் மறுபடியும் யுதிஷ்டிரரை நோக்கி சொல்லுகிறார். யுதிஷ்டிரரே! உமது தம்பி அர்ஜுனன் சொன்னதைச் சொல்லுகிறேன் கேளும். அவன் சொன்னதாவது, என் தமையனான யுதிஷ்டிர ராஜாவைத் தவம் பண்ணும்படி சொல்லும். மஹாரிஷியே! உமக்கு மதம், தவம், க்ஷத்திரிய தர்மம் எல்லாம் தெரியும். ஆகையால் தர்ம புத்திரரைத் தீர்த்த யாத்திரை பண்ணும்படி அழைத்துக்கொண்டு போம். அவரைத் தர்மங்களைச் செய்யச் சொல்லும் என்று அர்ஜுனன் எனக்குச் சொன்னான். மஹாரிஷியே நீர் என் தமையனை உமது பாதுகாவலில் வைத்துக்கொண்டு தீர்த்தயாத்திரைக்கு அழைத்துக்கொண்டு போம். தீர்த்தங்களில் உண்டாகும் இராட்சதர் பயத்தினின்று அவரைக் காப்பாற்றும். பிராமணோத்தமரே! ததீசி முனிவர் தேவர்களைக் காப்பாற்றினது போலவும், அங்கிரஸர் சூரியனைக் காப்பாற்றினது போலவும் நீர் இராட்சதர் பயத்தினின்றும் குந்தி புத்திரர்களைக் காப்பாற்ற வேண்டும். பாதைகளெல்லாம் மலைபோன்ற அரக்கர்களால் நிறைந்திருக்கின்றன. குந்தி புத்திரர்களை நீர் உமது காப்பில் வைத்துக் கொண்டிருந்தால் இராட்சதர் அவர்களை ஒன்றும் செய்ய முடியாது என்றான். அர்ஜுனனுடைய பிரார்த்தனையாலும், இந்திரனுடைய வேண்டுகோளாலும் உங்களுக்கு அபாயம் நேரிடாதபடி உங்களைத் தீர்த்தயாத்திரை செய்விப்பேன். குந்தி புத்திரரே! இதற்கு முன்னால் இரண்டு தரம் தீர்த்தயாத்திரை செய்திருக்கிறேன் மூன்றாந்தடவை இப்போது உம்முடன் கூடித் தீர்த்தயாத்திரை செய்கிறேன். மனுவும், புண்ணியாத்துமாக்களான ரிஷிகளும் தீர்த்தயாத்திரை செய்து பயம் ஒழிந்தார்கள். கொடிய சித்தமுள்ளவர்களும், தன்னடக்க மில்லாதவர்களும், கல்வியறிவில்லாதவர்களும், பாவிகளும், தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணத் தகாதவாகள். உமது மனம் எப்போதும் தர்மத்திலேயே பற்றுதலுடையதாயிருக்கிறது; நீர் எல்லாவற்றையும் கற்றிருக்கிறீர்; சத்தியசந்தர்; ஆகையால் நீர் நிச்சயமாகவே சகல பயங்களில் நின்றும் விடுபடுவீர். பாண்டு புத்திரரே! நீர் பகிரத மஹாராஜனைப் போல இருக்கிறீர். அல்லது கயன், யயாதி இவர்களுக்கு ஒப்பாக இருக்கிறீர் என்றார்.

14—18. இதைக் கேட்ட யுதிஷ்டிரர் முனிவரை நோக்கி, நான் சந்தோஷத்தினால் உமக்குப் பதில் சொல்ல முடியாமலிருக்கிறேன். என் வாயில் வார்த்தைகள் வரவில்லை. தேவராஜன் ஞாபகத்தில் வைக்கத்தக்கவர்கள் யாரிருக்கிறார்கள். அந்தப் பாக்கியத்தை யடைய நான் அதிர்ஷ்டம் பெற்றேன். உம்முடன் கூடி யிருப்பவர்களை விட பாக்கியம் பெற்றவர்கள் யார். அர்ஜுனனைச் சகோதரனாகப் பெறும் பாக்கியம் யாருக்குக் கிடைக்கும். அர்ஜுனனுடைய சொற்படி நீர் சொன்ன தீர்த்தயாத்திரை செய்யச் சித்தமாயிருக்கிறேன். முனிவரே! எப்போது புறப்படும்படி நீர் நியமிக்கிறீரோ அப்போது

புறப்படச் சித்தமாயிருக்கிறேன் என்றார். ரோமசர், தீர்த்த யாத்திரைக்குச் சித்தமாயிருக்கிற யுதிஷ்டிரரைப் பார்த்து பரிவார பளுவைக் குறைத்துக் கொள்ளும். அப்படிச் செய்தால் நீர் எளிதாகத் தீர்த்த யாத்திரை செய்யலாம் என்றார்.

19—27. அதனைக் கேட்ட யுதிஷ்டிரர் தம் பரிஜனங்களை நோக்கிப், பசி தாகங்களைச் சகிக்க முடியாதவர்களான சந்நியாசிகளும், பிராமணர்களும் யோகிகளும், என்னைத் தொடர்ந்து வர வேண்டாம். வழிநடையாலுண்டாகும் களைப்பையும், சிரமத்தையும், மழையாலுண்டாகும் துன்பத்தையும் உங்களால் தாங்க முடியாது. சுவையுள்ள போஜனத்தை விரும்புகிறவர்களும், சமையல் செய்த ஆகாரத்தை புசிப்பவர்களும் என் கூட வர வேண்டாம். நீங்கள் எல்லாரும் திருதராஷ்டிர மஹா ராஜனிடம் போங்கள். அவர் உங்களைக் கிரமமாய்ப் போஷிப்பார். அவர் போஷியாமற் போனால் பாஞ்சால இராஜன் போஷிப்பார் என்றார். அதன் பின் அவர்கள் எல்லாரும் யுதிஷ்டிரரைப் பிரிய மனமில்லாதவர்களாய் மன வருத்தத்துடன் அஸ்தினபுரம் போய்ச் சேர்ந்தார்கள். திருதராஷ்டிரன் தர்மஹாராஜாவிடத்திலுண்டான பிரியத்தினாலே அவர்களை அங்கீகாரம் பண்ணிக்கொண்டு மகிழ்வித்தான். பிறகு யுதிஷ்டிரர் சில பிராமணர்களுடன் காமிய வனத்தில் மூன்று இரவு தங்கினார்.

---

## 93-வது அத்தியாயம்.

தீர்த்தயாத்திரா பர்வத தொடர்ச்சி.

1—15. வைசம்பாயனர் ஜனமேஜய மஹாராஜனைப் பார்த்து அரசனே! பிறகு காமியக வனத்திலுள்ள பிராமணர்கள் யுதிஷ்டிரரைப் பார்த்துச் சொல்லுகிறார்கள். தர்மராஜாவே! நீர் உமது சகோதரர்களோடும் மஹாத்மாவான ரோமசமஹரிஷியோடும் தீர்த்த யாத்திரை போகப் போகிறீர். பாண்டு புத்திரரே! எங்களையும் கூட அழைத்துக்கொண்டு போகவேண்டும். உம்மை யின்றி நாங்கள் மாத்திரம் தனியாகப் போய் அவைகளைத் தரிசிக்க முடியாது. அவைகளெல்லாம் அபாயகரமானவை! துஷ்ட மிருகங்களால் நிறைந்திருப்பவை. எங்களால் அணுக முடியாதவைகள். கரடு முரடான பாதையுள்ளவைகள். கொஞ்சமான ஜனங்கள் அவைகளைத் தரிசிக்க முடியாது. அரசனே! உமது சகோதரர்கள் எல்லாரும் வீரர்கள். வில்லிற் சிறந்த உம்மாலே நாங்களும் புண்ணிய தீர்த்தங்களையும் வனங்களையும் தரிசித்து அவற்றின் பயனை அடைகிறோம். உமது சக்தியால் காப்பாற்றப்பட்ட நாங்கள் அவைகளைத் தரிசித்தும், தீர்த்தங்களில் ஸ்நானம் செய்தும் பாபம் ஒழிந்து பரிசுத்தர்களாகிறோம். மஹாராஜாவே! நீர் இந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணி, ஒருவராலும் அடையப்படாததும், கார்த்தவீரியன், ஆஸ்தகன், இராஜரிஷியான ரோமபாதன், பரதன் இவர்கள் அடைந்த பதத்தைப் பெறுவீர். பிரபாசம் முதலிய தீர்த்தங்களையும், மஹேந்திரம் முதலிய மலைகளையும், கங்கை

முதலான நதிகளையும், பிலக்ஷம் முதலிய வனங்களையும், உம்முடன் கூட வந்து பார்க்க விரும்புகிறோம். உமக்கு பிராமணர்களிடத்தில் மதிப்பு இருந்தால் நாங்கள் சொன்னபடி செய்யும். அதனால் உமக்கு க்ஷேமம் உண்டாகும். தவசிகளுக்கு இடையூறு செய்ய விரும்புகிற இராக்ஷதர்கள் தீர்த்தங்களில் நிறைந்திருக்கிறார்கள். அவர்களின்றும் எங்களைக் காப்பாற்றும். தௌமியரும் ரோமசரும் சொன்னபடி தீர்த்த யாத்திரை செய்யும். நாங்களும் கூட வருகிறோம் என்றார்கள். அதைக் கேட்ட யுதிஷ்டிரர் சந்தோஷத்தினால் கண்ணீர் சொரிந்தார்.

16—27. பிறகு பீமசேனன் முதலியவர்களும், யுதிஷ்டிரரும் அப்படியே ஆகட்டும் என்று சொன்னார்கள். பின் தௌமியர், ரோமசர் இவர்களுடைய அனுமதியினால் திரௌபதியுடன் கூடப் பிரயாணப்படுவதற்குப் பாண்டவர்கள் நிச்சயித்தார்கள். அப்போது வியாசர், பர்வதர், நாரதர் முதலியவர்கள் தர்மராஜாவைப் பார்க்க விரும்பிக் காமியக வனம் வந்தார்கள். யுதிஷ்டிரர் அவர்கள் எல்லாரையும் விதிப்படி வணங்கினார். அவர்களெல்லாரும் மகிழ்ந்து யுதிஷ்டிரரை நோக்கிச் சொல்லுகிறார்கள். யுதிஷ்டிரரே! இரட்டையர்களே! பீமசேனா! உங்களுடைய மனதிலுள்ள கெட்ட எண்ணங்களையெல்லாம் ஒழித்துவிட்டுத் தீர்த்த யாத்திரை செய்யுங்கள். சரீரத்தை பரிசுத்த மாக்குவது மனித தர்மமென்றும், மனதைப் பரிசுத்தப் படுத்துவது தெய்வ தருமமென்றும் பிராமணர்கள் சொல்லுகிறார்கள். கெட்ட எண்ணங்களை ஒழிப்பதினால் மனம் பரிசுத்தமாகிறது. ஆகையால் எல்லாப் பிராணிகளிடத்திலும் நேசமுடையவர்களாய் உங்களைப் பரிசுத்தம் பண்ணிக்கொண்டு பிறகு தீர்த்தங்களைத் தரிசியுங்கள். மனுஷ்ய தர்மத்தை அனுசரித்துச் சரீரத்தைச் சுத்தம் பண்ணிக் கொள்ளுங்கள். தேவ தர்மத்தை அனுசரித்து மனதைச் சுத்தி செய்து கொள்ளுங்கள். பிறகு தீர்த்தங்களைத் தரிசியுங்கள் என்றார்கள். பாண்டவர்கள் அப்படியே ஆகட்டும் என்று சொல்லிவிட்டுத், தேவரிஷிகளும் மனுஷரிஷிகளும் அனுஷ்டித்தபடி செய்யத் தொடங்கினார்கள். பிறகு ரோமசர், வியாசர், நாரதர், பர்வதர் முதலியவர்களுடைய பாதங்களில் வணங்கினார். பூர்வ பட்சத்தில் நல்ல சுப நட்சத்திரம், யோகம், கரணம், இராசிகள் கூடின சுப தினத்தில் சுப முகூர்த்தத்தில் தௌமியர் முதலானவர்களோடு பிரயாணப் பட்டார். மரவுரி ஜடைமுடி தரித்துச் சர்வாயுததாரிகளாய் இந்திரசேனனுடனும், சில பரிசாரகருடனும், பதினாலு இரதங்களுடனும் புறப்பட்டுக் கீழ் திசை நோக்கிச் சென்றார்.

## 94-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—2. யுதிஷ்டிரர் தேவ ரிஷியை நோக்கி! ஓ தேவரிஷியே! நான் கொஞ்சமாவது புண்ணியம் இல்லாதவன் என்று நினைக்கவில்லை. நான் மிகு

ந்த தூக்கமுடையவனாக இருக்கிறேன். அதனால் என்னைப் போலொத்த அரசன் ஒருவனும் இருந்திருக்க மாட்டானென்று கருதுகிறேன்; ரோமசமுனிவரே! என் பகைவர்கள் கொஞ்சங் கூடப் புண்ணியமில்லாதவர்கள்; தர்மமில்லாதவர்கள். இரக்கமில்லாதவர்கள்; அப்படிப் பட்டவர்கள் உலகத்தில் க்ஷேமமாய் வாழ்கிறார்கள்; அது என்ன காரணம்? என்று கேட்டார்.

3—22. ரோமசர் சொல்லுகிறார். தர்மராஜரே! அந்தப் பாவிகள் அவர்கள் செய்த பாவச் செயல்களாலே சுகமடைவதைப் பற்றி வருந்த வேண்டாம். ஒரு மனிதன் தன் பாவச் செய்கையாலும் வாழ்வடைவான் பெரும் பயனைப் பெறுவான்; தன் சத்துருக்களைக் கூட ஜயிப்பான். முடிவில் அவன் தன் வம்சத்துடன் நிர்மூலமாய்விடுவன். பூலோகாதிபனே! அநேக தைத்தியர்களும் தானவர்களும் பாவத்தினால் வாழ்வடைந்ததைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் நிர்மூலமாய் அழிந்ததையும் பார்த்திருக்கிறேன். அரசனே! இவைகளைத் தேவயுகமான முதலாவது யுகத்தில் பார்த்திருக்கிறேன். அப்போது தேவர்கள் புண்ணியத்தைச் செய்தார்கள். அசுரர்கள் பாவத்தைச் செய்தார்கள். தேவர்கள் தீர்த்தங்களைத் தரிசித்தார்கள். அசுரர்கள் தரிசிக்க வில்லை. அந்தப் பாவிகள் முதலில் கர்வித்திருந்தார்கள். இறுமாப்பு மமதையை உண்டாக்குகிறது மமதை செல்வத்தை உண்டாக்குகிறது. அந்தச் செல்வத்தினால் சகல துர்க்குணங்களும் உண்டாயின. அந்த துர்க்குணத்தால் வெட்கமற்றது. அதனால் நல்லொழுக்கம் கெட்டது. வெட்கமின்மை, துர்க்குணம், ஒழுக்கமின்மை, முதலியவற்றால் சகல நீதிகளும் அவர்களை விட்டு ஒழிந்தன. அதனாலே இலட்சுமி தேவி தேவர்களை அடைந்தாள். மூதேவி அசுரர்களை அடைந்தாள். உடனே அசுரர்கள் இறுமாப்பினாலே புத்தியற்றுப் போனார்கள். பின் தைத்தியர்களையும் தானவர்களையும் கலி பற்றிக் கொண்டான். அந்தக் கலியால் அவர்கள் அழிந்து போனார்கள். குந்தி புத்திரனே! இறுமாப்பினால், தருமங்களையும் யாகங்களையுமிழந்து, நீதியற்றுப் போனார்கள். மமதை அடைந்து அழிந்து போனார்கள். தைத்தியர்கள் அபகீர்த்தி நிறைந்தவர்களாய் அழிந்து போனார்கள். பாண்டு புத்திரனே? தேவர்கள் நல்லொழுக்கமுடையவர்களாய்த் தீர்த்தங்களையும், க்ஷேத்திரங்களையும் தரிசித்துத் தவத்தினாலும், யாகத்தினாலும் பரிசுத்தர்களாய்ப் பெரு வாழ்வை அடைந்தார்கள். ஏனென்றால் தேவர்கள் பாவ கர்மங்கள் எல்லாவற்றையும் விலக்கிச், சற்கருமங்களெல்லாம் செய்தார்கள். எல்லாத் தீர்த்தங்களையும் தரிசித்தார்கள். அதனால் மஹாதைசுவரியத்தை அடைந்தார்கள். ஆகையினால் தர்மராஜாவே! நீரும் உமது தம்பிகளோடு தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணிப் பெரிய செல்வத்தை அடையும். இது நித்தியமான மார்க்கம். நிருகன், ஆசீனரன், பகீரதன், வசுமனன், கயன், புரு, புரூரவன், முதலானவர்கள் தவத்தினாலும் தீர்த்த ஸ்நானங்களினாலும், புண்ணியாத்மாக்களைத் தரிசிப்பதாலும், கீர்த்தி, புண்ணியம், ஐசுவரியம்இவைகளைப் பெற்றார்கள். அப்படியே நீரும் பெருவாழ்வை அடைவீர் இக்ஷ்வாகு, அவன் புத்திரர்கள், மசுகுண்டன், மாந்தாதா, மருத்தராஜன் முதலி

யவர்களைப் போலப் பெருஞ்செல்வத்தையும், கீர்த்தியையும் புண்ணியத்தையும் அடையும். தேவர்களும் தேவரிஷிகளும் தவத்தினாலேயே பெருமை அடைந்தார்கள். பாபவசப்பட்ட திருதராஷ்டிர புத்திரர்கள் தைத்தியர்களைப் போலச் சீக்கிரத்தில் அழிவார்களென்று சொன்னார்.

---

## 95 வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—16. வைசம்பாயினர் சொல்லுகிறார். ஜனமேஜய மஹாராஜனே! வீரர்களான பாண்டவர்கள் தம்மைச் சேர்ந்தவர்களோடு பல பல விடங்களைத் தரிசித்துக்கொண்டு நைமிசாரணியம் போய்ச் சேர்ந்தார்கள். பாண்டவர்கள் கோமதியில் ஸ்நானம் பண்ணி விட்டுக் கோதானம் செய்தார்கள். திரவியதானமும் செய்தார்கள். பின்னும் அநேக தீர்த்தங்களைத் தரிசித்து தேவபித்ரிஷிகளுக்குத் தர்ப்பணாதிகள் செய்து கொண்டு பகுதாவுக்கு வந்து சேர்ந்தார்கள். தேவர்களுடைய யாகசாலைக்குப் போய்ப் பரிசுத்தர்களாய்க் கங்கா யமுனா சங்கமத்தில் ஸ்நானம் செய்து நல்ல தவம் புரிந்தார்கள். பிராமணர்களுக்கு அநேக திரவிய தானம் செய்தார்கள். பின் பிரமா யாகம் செய்த யாக வேதிக்குப் போனார்கள். அங்கே தவம் செய்தார்கள். பழங்களையும் நெய்யையும் பிராமணர்களுக்குக் கொடுத்துத் திருப்தி செய்வித்தார்கள். பின் மஹீத்தாராவுக்குப் போனார்கள். இராஜரிஷியான கயமஹாராஜன் தவம் செய்த இடம். இங்கே கயாசிரமலை இருக்கிறது. இதில் ஒரு பரிசுத்த நதி ஓடிவருகிறது. அந்த மலையின் உச்சியில் பிரமசரஸ் என்று ஒரு தீர்த்தமுண்டு. ரிஷிகளால் விரும்பத் தக்கது. அங்கேதான் அகஸ்தியர் வைவஸ்வதனைத் தரிசித்தார். அங்கே எமதர்மராஜன் வசித்தார். எல்லாத் தீர்த்தங்களும் இதிலிருந்து தான் உற்பத்தியாகின்றன. பிநாகபாணியாகிய மஹாதேவன் எப்போதும் அதன் அருகில் வசிக்கிறார். பாண்டவர்கள் அங்கே சாதுர்மாசிக சடங்கு செய்தார்கள். இங்கே அக்ஷயவடம் என்கிற ஆலமரம் இருக்கிறது. இங்கே எந்த யாகத்தைச் செய்தாலும் அது அக்ஷய பலனைத் தரும். பாண்டவர்கள் மன அடக்கமுடையவர்களாய் உபவாசமிருந்தார்கள். அநேக பிராமண ரிஷிகள் பாண்டவர்களிடம் வந்தார்கள். அந்தப் பிராமணர்களெல்லாரும் வேதங்களைக் கரை கண்டவர்கள். முதிர்ந்த அறிவுள்ளவர்கள். சாதுர்மாசிகத்தை முடித்தவர்கள். பாண்டவர் சபைக்கு வந்து பலபல விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள்.

17—29. அரசனே ஸமதர் என்பவர் கயனைப் பற்றிச் சொல்லியிருக்கிறதென்னவென்றால்,[1] அமூர்த்தயா என்பவருடைய புத்திரனுக்குக் கயன் என்று பேர். நான் அந்த ராஜரிஷியின் தர்மச் செய்கைகளைச் சொல்லுகிறேன் கே

ளும். இவ்விடத்தில் அவன் அநேக யாகங்கள் செய்தான். அந்த யாகங்களி லெல்லாம் அவன் செய்த அன்னதானம் அளவு கடந்தது. சமைத்த சாதம் ஆயிரம் ஆயிரம் மலைகளாகக் குவிந்து கிடந்தன. நெய்யும் தயிரும் அநேகமா யிரம் ஏரிகள் ஆறுகளாகக் கிடந்தன. சமைத்த கறிகளுக்கு அளவே கிடை யாது. கேட்டபோதெல்லாம் போஜனம் அளிக்கப்பட்டது. பிராமணர்களு க்கு பரிசுத்தமான போஜனம் இடப்பட்டது. தக்ஷிணை கொடுக்கும்போது உண்டான வேதகோஷமானது ஆகாயத்தை அளவும், பூமி முழுமையும் பரவும். அநேக அற்புதங்கள் நடந்தன. அன்னபானாதிகளால் திருப்தி அடைந்தவர் கள் பின் வரும் பாட்டைப் பலதேசங்களிலும் பாடிக்கொண்டு போனார்கள். இன்று தினம் கயமஹாராஜன் யாகத்தில் போஜனம் செய்ததை விட அதிகம் புஜிக்க விரும்புகிறவன் எவன்? இன்னும் இருபத்தைந்து பர்வதம் போலச் சமைத்த பதார்த்தங்கள் செலவாகாமல் கிடக்கின்றன கயன் யாகம் செய்த தைப் போல முன்பு ஒருவரும் செய்ததில்லை. இனிமேலும் செய்கிறவர்களும் கிடையாது. தேவர்களுக்கு அளவு கடந்த நெய்யை அளித்தான். இன்னம் யாகம் செய்து நெய்யைக் கொடுத்தாலும் அதை விரும்பாதிருக்கும்படியாக அவ்வளவு நெய் சொரிந்தான். பூமியிலுள்ள மணலையும், வானத்திலுள்ள நட்சத்திரங்களையும், மழைத் துளிகளையும் எண்ண முடியாதது போலக் கயரா ஜன் கொடுத்தத் தக்ஷிணையும் கணக்கிட முடியாது என்பதாம். ஓ தர்மரா ஜாவே! கயராஜன் இதைப் போன்ற அநேக யாகங்களை இந்த மடுக்கரையில் செய்தான்.

---

## 96 வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—13. தர்மராஜாவானவர் அவ்விடத்தில் அநேக தானங்களைச் செய்த பின் அகஸ்தியர் ஆச்சிரமத்தை அடைந்தார். துர்ஜயா என்ற இடத்தில் தங் கினார். யுதிஷ்டிரர் ரோமசரைப் பார்த்து முனிவரே! வாதாபி என்ற அசுரன் ஏன் அகஸ்தியரால் சங்கரிக்கப்பட்டான் என்று கேட்டார். அவனுடைய சாமர்த்தியமென்ன? அகஸ்தியர் ஏன் அவன் மேல் கோபம் அடைந்தார் என்று கேட்டார். ரோமசர் சொல்லுகிறார். யுதிஷ்டிரரே! பூர்வ காலத் தில் இல்வலன் என்று ஒரு அசுரன் இருந்தான். அவன் தன் தம்பியான வா தாபி என்பவனோடு மணிமதி என்ற நகரத்தில் வசித்து வந்தான். அவன் ஒரு நாள் ஒரு பிராமரிஷியைப் பார்த்து எனக்கு இந்திரனுக்குச் சரியான ஒரு புத் திரனை அருளவேண்டுமென்று கேட்டான். முனிவர் அப்படிக் கொடுக்க சம்மதிக்க வில்லை. அதனால் அந்த அசுரன் கோபம் அடைந்தான். அன்று முதலாக இல்வலன் பிராமணர்களைக் கொல்ல ஆரம்பித்தான். தன்னுடைய மாயா சக்தியால் தன் தம்பியை ஆட்டுக்கடா ஆகச் செய்தான். வாதாபி தினை

த்த வடிவம் எடுத்துக்கொள்ளக் கூடியவன். ஆகையால் உடனே ஆடாய்விட்டான். அந்த ஆட்டைச் சமைத்துப் பிராமணாகளுக்குப் போட்டு அவர்களைக கொன்ருன். வாதாபியோ தமையன் கூப்பிடுகிற குரல் காதிலே பட்ட உடனே உயிர்பெற்று மீண்டு வந்து விடுவான். ஆகையால் இல்வலன் கூப்பிட்ட உடனே புஜித்த பிராமணர்களுடைய விலாப்புறத்தைக் கிழித்துக்கொண்டு வெளிப்பட்டு வந்து விடுவது வழக்கம். இப்படியாக இல்வலன் பிராமணர்களைக் கொலை செய்துகொணடு வந்தான்.

14—30. இதற்கு மத்தியில் அகஸ்தியா அலைந்துகொண்டிருந்தபோது அவருடைய பிதிர்க்கள் ஒரு குழியில் தலை கீழாகத தொங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தார். அகஸ்தியா அவாகளை நோக்கி நீங்கள் யார்? உங்களுக்கு ஏன் இப்படிச சம்பவிததது? என்று கேட்டார். அவர்கள், நாங்கள் எல்லாரும் உன்னுடைய பூர்வ பிதாக்கள். சந்ததி யில்லாமையால் இந்த கதி வந்தது. அகஸ்தியா! நீ ஒரு சந்ததியை உற்பத்தி செய்தால் நாங்கள் இதை விட்டுச் சுகப்படுவோம். நீயும் மேலான கதியைப் பெறுவாய் என்று சொன்ஞர்கள். அகஸ்தியர் பிதிர்க்களே! நான் உங்களிஷ்டப்படியே சந்ததியை விருததி யாக்குகிறேன். உங்களுடைய கவலையை நிவிர்ததி செய்கிறேன் என்று சொன்ஞா. பிறகு தகுந்த பத்தினியை அடைய முயற்சி செய்தார். விதர்ப்ப ராஜன் தன் தவசிஞல் ஒரு புத்திரியைப் பெற்ருன். மின்னலைப் போலும் ஒளியுள்ள அந்தப் பெண்ணும் நாளுக்கு நாள் அழகாய் வளர்ந்து வந்தாள். அரசன் அந்தப பெண் பிறந்த வுடனே தனக்கு உண்டான சந்தோஷத்திஞலே இந்தப் பெண் பிராமணர்களுககே உரியவள் என்று சொன்ஞன். அரசன் தன் பெண்ணுக்கு லோபாமுத்திரை யென்று பேரிட்டு வளர்த்து வந்தான், தாமரை நீரில் விருத்தியாவது போலவும், அக்கினியில் ஜ்வாலை யுண்டாவது போலவும் சீக்கிரத்தில் வெகு அழகுடன் வளர்ந்தாள். அவளுக்கு வயது வந்த போது நூறு கன்னிகைகளும் நூறு பணிவிடைப் பெண்களும் சூழ வீற்றிருந்தாள். நட்சத்திரங்களின் மத்தியில் ரோகிணி விளங்குவது போல் லோபாமுததிரையும் நூறு பணிவிடைப் பெண்களுக்கும் நூறு கன்னிகைகளுக்கும் மததியில் பிரகாசித்துக் கொண்டிருந்தாள். அவள் பருவ காலத்தை அடைந்தும் அவளை ஒருவரும் கேட்கவில்லை. எல்லாரும் மகிமையுள்ள அவள் தகப்பனுக்குப் பயந்திருந்தார்கள். லோபாமுத்திரை அப்ஸரஸ்களைப் போன்ற அழகுளளவளாய்த் தன் நடக்கையால் மாதா பிதாக்களுக்கும் சுற்றத்தார்களுக்கும் மகிழச்சி உண்டாக்கி வந்தாள். அவளுக்குப் பருவம் வந்த போது இவளை யாருக்கு நான் கொடுப்பேன் என்று விதர்ப்பராஜன் கவலைப் பட்டுக் கொண்டிருந்தான்.

---

## 97-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத தொடர்ச்சி.*

1—13. அகஸ்தியர் தாம் கிரகஸ்தாச்சிரமத்தை அடைய விரும்பின உடனே விதர்ப்பராஜனிடம் போய்ச் சொல்லுகிறார். அரசனே! நான் சந்ததியை உத்தேசித்து கிருகஸ்தாச்சிரமத்தை அடைய விரும்புகிறேன். ஆகையால் உமது புத்திரி லோபாமுத்திரையை எனக்குக் கொடும் என்று கேட்டார் அகஸ்தியர் இப்படி லோபாமுத்திரையைக் கேட்டவுடனே அரசன் மனம் தளர்ந்து போனான் அகஸ்தியரை மறுக்க முடியவில்லை. அவருக்குக் கொடுக்க பிரியமில்லாமலே தன் மனைவியிடம் போய்ச் சொல்லுகிறான். அகஸ்திய முனிவர் மஹா வல்லமையுள்ளவர். அவர் கோபித்தால் நம்மைச் சாபமிட்டு எரித்துவிடுவார். ஆகையால் நீ இப்பொழுது என்ன செய்ய விரும்புகிறாய்? இதைக் கேட்டவுடனே அவன் பத்தினி ஒன்றும் பேசவில்லை. அரசனும் பத்தினியும் விசனப்பட்டுக் கொண்டிருந்தார்கள் அப்போது லோபாமுத்திரை அங்கே வந்து அவர்களைப் பார்த்துச் சொல்லுகிறாள். தந்தையே! நீர் எனக்காக விசனப்பட வேண்டாம். அகஸ்திய முனிவருக்கு நீர் என்னைக் கொடுத்து சுகப்படும் என்றாள். அதனால் அரசன் லோபாமுத்திரையை விதிப்படி அகஸ்தியருக்குக் கொடுத்தான். அகஸ்தியர் லோபாமுத்திரையை அடைந்தவுடனே அவளை நோக்கி இந்த விலை உயர்ந்த வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் கழற்றி எறிந்து விடு என்றார். அவளும் உடனே கழற்றி எறிந்துவிட்டாள். மரவுரி புனைந்துகொண்டு தன் கணவனுக்குத் தக்கபடி தவப் பெண்ணானாள். அகஸ்தியர் கங்கோற்பத்திக்கு வந்ததும் தமது மனைவியின் உதவி கொண்டு உக்கிர தவம் செய்தார். லோபாமுத்திரை சிறந்த பக்தி சிரத்தையுடனும் மனமகிழ்ச்சியுடனும் தன் பர்த்தாவுக்குப் பணிவிடை செய்தாள். அகஸ்தியரும் அவளிடத்தில் மிகுந்த ஆசையுள்ளவராகவும் பட்சமுள்ளவராகவும் இருந்தார்.

14—25. நெடுநாள் சென்றபின் ஒரு நாள் லோபாமுத்திரை ருது ஸ்நானம் செய்து தவ ஒளியால் பிரகாசித்துக்கொண்டு வருகிறதைப் பார்த்தார். லோபாமுத்திரையின் பணிவிடையாலும், பரிசுத்தத் தன்மையாலும் தன்னடக்கத்தாலும், குணத்தாலும், அழகாலும் அகஸ்தியர் மன மகிழ்ந்து அவளுடன் கூட விரும்பினார். லோபாமுத்திரை அவர் கருத்தை அறிந்து இருகரங்களையும் குவித்துக்கொண்டு சொல்லுகிறாள். முனிவரே! புத்திர உற்பத்தியைக் குறித்துத் தான் விவாகம் செய்கிறதானாலும், நான் உம்மிடத்தில் பிரியம் வைத்திருப்பதால் என்னையும் திருப்தி செய்விக்க வேண்டும். ஆகையால் நான் பிதாவின் அரண்மனையில் படுத்துக்கொண்டிருந்தது போன்ற படுக்கையில் நீர் என்னோடு சயனிக்க வேண்டும். நீரும் பூமாலை முதலியவைகளால் அலங்கரித்துக்கொள்ள வேண்டும். நானும் எனக்குப் பிரியமான ஆபரணங்களை அணிந்து கொள்ள வேண்டும். இந்தச் சாயமூட்டின கந்தை

களை உடுத்துக்கொண்டால் அந்த ஆபரணங்களுக்கு ஒத்து இராது என்றாள். அகஸ்தியர், லோபாமுத்திரையே! நான் உன் பிதாவைப் போல் அவ்வளவு தனவந்தன் அல்லவே என்றான். லோபாமுத்திரை முனிவரே! உமது தபோமஹிமையால் உலகத்திலுள்ள செல்வ மெல்லாவற்றையும் இங்கே அழைப்பிக்கக் கூடும் என்றாள். அகஸ்தியர், அது சரிதான். ஆனால் அது என் தவத்துக்கு இடையூறாகும் என்றார். முனிவரே! என் ருது காலம் நாள் நில்லாது. மற்ற நாளில் உம்முடன் கூட எனக்குப் பிரியமில்லை. உமது தவத்தைக் கெடுக்கவும் விரும்பவில்லை. ஆகையால் உமது தவத்துக்கு யாதொரு இடையூறும் நேராதபடி என்னை சந்தோஷிப்பிக்க வேண்டுகிறேன் என்றாள். அகஸ்தியர் மனமகிழ்ந்து மனைவியைப் பார்த்து பாக்கியவதியே! உன் உறுதி அப்படி இருந்தால் நான் திரவியம் தேடிக்கொண்டு வரப்போகிறேன். இந்த ஆசிரமத்தில் உன் இஷ்டம் போலிரு என்றார்.

---

## 98 வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத தொடர்ச்சி.

1—20 ரோமசர் யுதிஷ்டிரரை நோக்கித் தர்மராஜாவே! அகஸ்தியர் திரவியம் யாசிப்பதற்காக சுருதர்வராஜனிடம் போனார். அவன் எல்லா அரசர்களையும் விடத் திரண்ட திரவியமுள்ளவனென்று பேர் பெற்றிருந்தான். அவ்வரசன் கும்பமுனிவர் வந்திருப்பதை அறிந்து, தன் மந்திரிகளுடன் அவரை எதிர்கொண்டு போய் மரியாதையுடன் அழைத்து வந்தான். அர்க்கிய பாத்தியாதிகள் கொடுத்து உபசரித்தான். இருகரங்களையும் குவித்து நின்றுகொண்டு வந்த காரணம் என்னவென்று வணக்கமாய்க் கேட்டான். அகஸ்தியர், மஹாராஜனே! நான் திரவியத்தை உத்தேசித்து உம்மிடம் வந்தேன். உன் சக்திக்கேற்றபடி உன் செல்வத்தில் ஒரு பாகம் எனக்குக் கொடு என்றார். அரசன் தன் வருமானத்தையும் செலவையும் சொல்லி உமக்குப் பிரியமான திரவியத்தை எடுத்துக்கொண்டு போமென்றான். அவனுக்கு வரவும் செலவும் சரியாயிருந்தபடியால் அகஸ்தியர் அவனுக்கு வருத்தம் உண்டாக்கவில்லை. ஆகையால் அவனையும் அழைத்துக்கொண்டு பிருத்நாசுவ மஹாராஜனிடம் போனார். அவனுக்கும் அப்படியே வரவுக்கும் செலவுக்கும் சரியாயிருந்தபடியால் அவனிடத்திலும் திரவிய அபேக்ஷையை ஒழித்துவிட்டு அவனையும் அழைத்துக்கொண்டு புருகுத்ஸராஜன் புதல்வனிடம் போனார். அவ்வரசனுக்கும் அப்படியே வரவும் செலவும் சரியாயிருந்தது. அப்போது அவ்வரசர்கள் எல்லாரும் சேர்ந்து அகஸ்தியரை நோக்கிப் பிராமணரே! இல்வலன் என்று ஒரு தானவன் இருக்கிறான். அவனிடம் திரண்ட செல்வமிருக்கிறது. இன்றைய தினம் திரவியத்தைக் குறித்து அவனிடம் போவோமென்றார்கள். அது நியாயமாக இருந்த படியால் எல்லாரும் அவனை நோக்கிச் சென்றார்கள்.

---

## 99-வது அத்தியாயம்

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—4. அகஸ்தியரும் அரசர்களும் இல்வலனுடைய இராஜ்யத்தின் எல்லைக்கு வந்தார்கள். அதை அறிந்து இல்வலன் வந்து அவர்களை வணங்கி மரியாதை செய்தான். தன் வீட்டுக்கு அவர்களை அழைத்துக்கொண்டு போய் உபசரித்து, வாதாபியாகிய ஆட்டை அடித்துக் கறி சமைத்தான் எல்லா அரசர்களும் துக்கத்தினால் வருந்தி மதியழிந்தார்கள். அகஸ்தியர் அந்த இராஜரிஷிகளைப் பார்த்து நீங்கள் வருத்தப்பட வேண்டியதில்லை. நான் இந்த அசுரனைத் தின்று விடுகிறேன் என்று சொன்னார்.

5—13. பிறகு அந்த மஹாரிஷியானவர் போஜனம் செய்வதற்காக ஒரு உயர்ந்த ஆசனத்தில் உட்கார்ந்தார். இல்வலன் சிரித்துக்கொண்டே போஜனம் பரிமாறினான். அகஸ்தியர் சமைக்கப்பட்ட வாதாபியின் மாமிசம் முழுவதையும் புஜித்து விட்டார். போஜனம் முடிந்த பின் இல்வலன் வாதாபியைக் கூப்பிட்டான். அப்போது அகஸ்தியர் வயற்றிலிருந்து கொஞ்சம் காற்று வெளியில் வந்தது. அந்தக் காற்றின் சப்தம் மேக கர்ஜனை போலிருந்தது. இல்வலன் வாதாபீ! வாதாபீ! என்று பல தரம் கூப்பிட்டான். அகஸ்தியர் சிரித்துக்கொண்டு வாதாபி என் வயிற்றில் ஜீர்ணமாய் விட்டான். அவன் எப்படி வருவான்? என்று சொன்னார். வாதாபி ஜீரணமாய்ப் போனதைப் பற்றி இல்வலன் மிகவும் விசனப்பட்டான் இல்வலன் தன் மந்திரிகளுடன் வந்து இரண்டு கைகளையும் குவித்துக் கும்பிட்டுக்கொண்டு, நீர் எதற்காக இங்கே வந்தீர்? உமக்கு நான் என்ன செய்ய வேண்டும்? என்று கேட்டான். அகஸ்தியர் புன்னகையோடு அவனைப் பார்த்து அசுரனே! நீ மஹா வல்லமையுள்ளவனென்றும், ஏராளமான திரவியமுடையவனென்றும் நான் அறிவேன் இந்த அரசர்கள் செல்வமுடையவர்களல்ல. எனக்கோ திரவியம் அவசியம் வேண்டியதாயிருக்கிறது. ஆகையால் பிறருக்குத் துன்பமுண்டாகாதபடி நீ எவ்வளவு கொடுக்கக் கூடுமோ அவ்வளவு திரவியத்தைக் கொடு என்றார். இல்வலன் முனிவரை வணங்கி, முனிவரே! நான் உமக்கு எவ்வளவு கொடுக்க நினைத்திருக்கிறேன் என்பதைச் சொன்னால் அதன் பின் கொடுக்கிறேன் என்றான்.

14—25. அகஸ்தியர் அசுரனே! நீ இந்த இராஜர்களில் ஒவ்வொருவருக்கும் பதினாயிரம் பசுக்களும் அவ்வளவு தங்க நாணயங்களும் கொடுக்க உத்தேசித்திருக்கிறாய் அதற்கு இரட்டிப்பான வைகளையும் ஒரு தங்க இரதத்தையும், மனோவேகமுள்ள இரண்டு குதிரைகளையும் கொடுக்க நினைத்திருக்கிறாய் இப்போது நீ விசாரித்துப் பார்த்தால் உன்னுடைய தேர் தங்கத்தால் செய்யப்பட்டதென்று நீ அறிவாய் என்றார். குந்தி புத்திரனே! இல்வலன் விசாரித்துத் தன்னுடைய தேர் தங்கத்தால் செய்யப்பட்டதென்று தெரிந்துகொண்டு

மன வருத்தத்துடன் அப்படியே அவர்களுக்குக் கொடுத்தான். அகஸ்தியர் அந்தத் தேரின் மேல் அரசர்களையும், திரவியத்தையும் ஏற்றிக்கொண்டு ஒரு இமைப்பொழுதில் தமது ஆச்சிரமத்துக்கு வந்துசேர்ந்தார். பிறகு அவ்வரசர்கள் அகஸ்தியரிடம் செலவு பெற்றுக்கொண்டு தத்தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். அகஸ்தியர் தமது மனைவி லோபாமுத்திரை விரும்பின எல்லாவற்றையும் செய்தார். லோபாமுத்திரை முனிவரை நோக்கி, மஹாத்மாவே! என்னுடைய மனோபீஷ்டங்களை யெல்லாம் நிறைவேற்றி வைத்தீர். இனிமேல் என்னிடத்தில் வல்லமையும் தருமமும்உள்ள புத்திரனை நீர் அடையலாமென்றாள். அகஸ்தியர் பாக்கியவதியே! அழகானவளே! உன்னுடைய நடக்கையால் நான் சந்தோஷமடைந்தேன். புத்திரர்களை அடையும் விஷயத்திலே நான் சொல்வதைக் கேளு. உனக்கு ஆயிரம் புத்திரர்கள் வேண்டுமோ? அல்லது, ஒவ்வொருவனும் நூறு பேருக்குச் சமானமாய் இருக்கும்படியான நூறு புத்திரர்களைப் பெற விரும்புகிறாயா? ஆயிரம் பேர்களுக்குச் சமானமாயிருக்கிற ஒரே ஒரு புத்திரனை விரும்புகிறாயா? சொல் என்றார். லோபாமுத்திரை சுவாமீ! ஆயிரம் பேர்களுக்குச் சமானமான ஒரே புத்திரனையே நான் அடைய விரும்புகிறேன் படித்தவனும் நற்குணமுள்ளவனுமான ஒரு புத்திரன் துர்க்குணமுள்ள அநேக புத்திரர்களை விட மேலானவனாகும் என்றாள். முனிவர் அப்படியே யாகட்டும் என்று கூறிப், பக்தியும் நல்லொழுக்கமு முள்ள தன் மனைவியிடத்தில் கூடி வாழ்ந்திருந்தார். பிறகு அகஸ்தியர் வனத்துக்குப் போய் விட்டார். அவர் காட்டுக்குப் போன பின் அந்தக் கர்ப்பம் ஏழு வருஷம் வரையும் வளர்ந்து வந்தது.

26—40. பாரதனே! ஏழாம் வருஷம் முடிந்ததும் சாஸ்திரங்கள் எல்லாவற்றையும் உணர்ந்த அகஸ்திய முனிவர் அந்தக் குழந்தையை அழைத்தார். அந்தக் குழந்தை கர்ப்பாசயத்திலிருந்து நெருப்பைப் போல ஜ்வலித்துக்கொண்டு வெளியில் வந்தது பிறக்கும் போதே வேத வேதாந்தங்களையும் உபநிஷத்துக்களையும் உச்சரித்துக்கொண்டே பிறந்தது. அவன் குழந்தையாயிருக்கும்போதே மஹா வல்லமை யுடையவனாய் யாகத்துக்கு வேண்டிய விறகு கட்டைகளைச் சுமந்துகொண்டு வருவான். அதனால் அவன் இத்மவாஹன் என்னப்பட்டான். அவன் அவ்வளவு சாமர்த்திய முடையவனா யிருப்பதைப் பார்த்து அகஸ்தியர் மகிழ்ச்சி யடைந்தார். இவ்விதமாக அகஸ்தியர் புத்திரனைப் பேற்றார். இதனாலே அகஸ்தியருடைய முன்னோர்கள் அவர்கள் விரும்பினபடி நற்கதி அடைந்தார்கள். அது முதலாக இந்த இடம் அகஸ்தியாச்சிரமம் என்று உலகத்தில் கீர்த்தி பெற்றது. பிராகிருத வம்சத்தில் பிறந்த வாதாபியைக் கொன்ற அகஸ்தியருடைய ஆச்சிரமம் இது தான். இந்த ஆச்சிரமம் மனோகரமானது. அழகுள்ளது. புண்ணியமான இந்தப் பாகீரதியானது தேவர்களாலும் கந்தர்வர்களாலும் சேவிக்கப்படுவது. ஆகாயத்தில் மெதுவான காற்றினால் அசைக்கப்படுகிற மனிதனைப்போல உருண்டு கொண்டு வரு

கிறது. பாறைகளுள்ள மலைச் சிகரத்திலிருந்து படிப்படியாக கீழே யிறங்கி வருகிறதைப் பார்த்தால் மலைச்சரிவிலே ஒரு பெரிய பெண் பாம்பு படுத்துக் கொண்டிருப்பதைப் போலக் காணப்படுகிறது. பரமசிவனுடைய ஜடையிலிருந்து தோன்றி வருகிற சமுத்திர ராஜபத்தினியாகிய இந்தக் கங்கை தென் தேசங்களிலே பாய்ந்து, அந்த நாடுகளுக்குத் தாய் போலப் போஷிக்கிறது. மஹா புண்ணியமான இந்த நதியில் ஸ்நானம் பண்ணு என்று ரோமசரிஷி சொன்னார். யுதிஷ்டிர மஹாராஜாவே! மூன்று உலகங்களிலும் கீர்த்தி பெற்ற இந்தப் பிருகு தீர்த்தத்தைப் பார். இது மஹரிஷிகளால் சேவிக்கப் பட்டது. இராமர் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்துதான் தம்முடைய பூர்வ சக்தியைப் பெற்றார். நீரும் உம்முடைய சகோதரர்களோடும் திரௌபதியோடும் இதில் ஸ்நானம் பண்ணித் துரியோதனனால் அபகரிக்கப் பட்ட உமது தேஜஸை அடையும் என்றார். யுதிஷ்டிர தமது சகோதரர்களோடும் திரௌபதியோடும் அதில் ஸ்நானம் செய்து தேவர்களையும் பிதிர்க்களையும் ஆராதித்தார். யுதிஷ்டிரர் அதில் ஸ்நானம் பண்ணினபின் மிகுந்த தேஜஸை அடைந்து சத்துருக்கள் எவராலும் ஜயிக்கப்படாதவரானார். அதன் பின் யுதிஷ்டிரர் ரோமசரைப் பார்த்து மஹிமையுள்ள முனிவரே! எந்தக் காரணத்தால் இராமர் தமது தேஜஸை யிழந்தார்? எப்படி அதை மறுபடியும் அடைந்தார்? நான் கேட்க விரும்புகிறேன். அவைகளெல்லாவற்றையும் எனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்டார்

41—53. ரோமசர் தர்மராஜரைப் பார்த்து அரசர்க்கரசனே! தசரத குமாரரான இராமருடைய சரித்திரத்தையும், பிருகு வம்சஸ்தரான பரசுராமருடைய சரித்திரத்தையும் சொல்லுகிறேன் கேள். இராவண சங்காரத்தின் பொருட்டு மஹாவிஷ்ணுவானவர் தசரதருக்குப் புத்திரராகப் பிறந்தார். அவர் அயோத்தியில் தசரதருக்குப் புத்திரராகப் பிறந்ததை நாங்கள் பார்த்தோம். ரேணுகைக்கும் ரிசிகருக்கும் பிறந்த பரசுராமர், தசரதராமர் பிறந்ததைக் கேட்டுத் தம்முடைய வில்லை யெடுத்துக்கொண்டு அயோத்திக்குப் போனார். தசரதராமருடைய மஹிமையை உறுதிப் படுத்துவதற்காகவே போனார். பரசுராமர் அயோத்திக்குச் சமீபமாய் வருகிறதைத் தசரதர் கேள்விப்பட்டு, அவரை எதிர் கொள்ளும்படி தமது புத்திரனாகிய இராமனை அனுப்பினார். தசரதராமர் தமது ஆயுதங்களை உயர்த்திப் பிடித்துக் கொண்டு, பரசுராமருக்கு எதிரில் வந்து நின்றார். பரசுராமர் அதைப் பார்த்து புன்சிரிப்பு சிரித்துக்கொண்டு, இராமரைப் பார்த்து இராஜகுமாரனே! பூமிக்கதிபனே! என் கையிலிருக்கிற இந்த வில் க்ஷத்திரியர்களைச் சங்கரிக்கிறதற்காகவே உண்டாக்கப்பட்டது. உன்னால் கூடுமானால் உன்னுடைய பூர்ண பலத்தோடும் இந்த வில்லை வளைத்து நாணேற்று என்று சொன்னார். அதைக் கேட்ட தசரத புத்திரரான இராமர் பரசுராமரை நோக்கி மஹிமையுள்ளவரே! நீர் இப்படி என்னை நிந்திக்கத் தகாது. நான் பிராமண ஜாதியில் பிறந்தவனல்ல. ஆகையால் க்ஷத்திரிய

தர்மத்தில் குறைவுள்ளவனல்ல. இக்ஷ்வாகு வம்சத்தவர்கள் தங்கள் பெருமையைத் தாங்களே புகழ்ந்துகொள்ளுகிறதில்லை என்றார். பரசுராமர் அதைக் கேட்டு இராகவா! முரட்டுத்தனமாய்ப் பேசாதே. இந்த வில்லைக் கையிலெடு என்றார். தசரதராமர் கோபத்துடன் பிரக்யாதிபெற்ற க்ஷத்திரியர்களைச் சங்கரித்த அந்த தெய்வீக வில்லை பரசுராமரிடத்திலிருந்து வாங்கிக் கொண்டார். உடனே கொஞ்சங்கூடத் தடைபடாமல் அந்த வில்லை நாணேற்றி நாணொலி செய்தார். நாணொலியாகிய அந்தப் பேரிடி முழக்கத்தினாலே சகல ஜீவன்களையும் நடுங்கச் செய்தார். பின் பரசுராமரைப் பார்த்துச் சொல்லுகிறார்.

54--66. அந்தணரே! நான் இந்த வில்லை நாணேற்றி விட்டேன். உமக்கு நான் இன்னம் என்ன செய்ய வேண்டும்? என்றார். ஜமதக்கினி புத்திரரான இராமர் ஒரு தேவாஸ்திரத்தை அவர் கையில் கொடுத்து, இதை அந்த வில்லில் வைத்து காது பரியந்தம் இழு என்றார் தசரதராமர் அப்படியே செய்துபரசுராமரைப் பார்த்துப் பிருகு வம்சத்தவரே! நீர் சொன்னதை நான் கேட்டேன். உம்மையும் மன்னித்தேன். நீர் மாயையால் முற்றும் மயங்கியிருக்கிறீர். நீர் பிரமதேவருடைய அநுக்கிரகத்தால் க்ஷத்திரியர்களுக்கு மேலான சக்தியை அடைந்திருக்கிறீர். ஆகையால் நீர் நிச்சயமாகவே என்னை அவமதிப்பீர் நீர் என்னை என்னுடைய சுய ரூபத்துடன் பாரும். உமக்கு ஞான கண்ணைத் தருகிறேன் என்று சொன்னார். பிறகு பரசுராமர் தசரதராமருடைய சரீரத்தை நோக்கினார். அப்போது தசரதராமருடைய சரீரத்திலே ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், மருத்துக்கள், பிதிர்க்கள், அக்கினி, நட்சத்திரங்கள், கிரகங்கள், கந்தர்வர்கள், இராட்சதர்கள், நதிகள், தீர்த்தங்கள், பிரமதேவருக்குச் சரியான வாலகில்லியர்கள், தேவரிஷிகள், சமுத்திரங்கள், மலைகள், வேதங்கள், உபநிஷத்துக்கள், வஷட்காரங்கள், யாகங்கள், சாமங்கள், தநுர் வேதங்கள், மழையுடன் கூடின மேகங்கள், மின்னல்கள் எல்லாவற்றையும் பார்த்தார். யுதிஷ்டிரா! பாரதா! பிறகு மகிமையுள்ள விஷ்ணுவானவர் அம்பை யெய்தார் அதனாலே எழுந்திருந்த பேரிடி போன்ற சத்தமானது உலகமுழுவதும் பரவிற்று. எரி கொள்ளி அக்கினி ஜ்வாலைகளை வீசிக்கொண்டு ஆகாயமெங்கும் பரந்தது. மழைத்துளி சிதறின. புழுதி யெழுந்தது. பூகம்பம் உண்டாயிற்று. சுழல் காற்றடித்தது. எவ்விடத்திலும் அச்சம் உண்டாயிற்று. அந்த அம்பின் ஒளியினாலே பரசுராமரும் மயங்கினார். அந்த அம்பு மீண்டும் இராமரிடம் வந்து சேர்ந்தது. மயக்கத்தை யடைந்த பரசுராமர் பிரக்ஞை அடைந்தார் தசரத ராமரை வணங்கினார். தசரத ராமருடைய கட்டளையால் மகேந்திர மலைக்குப் போய் விட்டார். அங்கே பயத்துடனும் வெட்கத்துடனும் வசித்துக்கொண்டிருந்தார்.

67—77. ஒரு வருஷத்துக்குப் பின் பரசுராமர் மகிமை கெட்டுச், சக்தியழிந்து, கர்வம் ஒழிந்து வருந்துகிறதைப் பிதிர்தேவர்கள் கண்டு, அவரிடம் வந்து சொல்லுகிறார்கள். புத்திரா! நீ விஷ்ணுவினிடம் எதிர்த்துச் சென்றதினாலே உன் நடக்கை கெட்டதாயிற்று. அவர் வணங்கத்தக்கவர். மூன்று

உலகங்களாலும் மரியாதை செய்யத் தக்கவர். புத்திரா! ஆகையால் வடசரம் என்கிற நதிக்குப் போய்ச் சேரு. அதிலுள்ள எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்தால், நீ முன்பிருந்த உன்னுடைய தேஜஸை அடைவாய். அங்கே திபதடம் என்று ஒரு தீர்த்தமிருக்கிறது. தேவ யுகத்தில் உன் பிதாமகரான பிருகு முனிவர் அந்தத் தீர்த்தத்தில் சிறந்த தவம் புரிந்தார் என்றார்கள். பரசுராமர் பிதிரக்கள் சொன்னபடியே செய்து பழைய காந்தியைப் பெற்றார். குழந்தாய்! யுதிஷ்டிரா! பூர்வ காலத்தில் குற்றமற்ற பரசுராமர் விஷ்ணுவை யெதிர்த்த போது இவ்வாறு நடந்தது என்று ரோமசர் சொன்னார்.

---

## 100-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத தொடர்ச்சி.

1—2 யுதிஷ்டிரர் மறுபடியும் ரோமசரைப் பார்த்து மஹிமையுள்ள அந்தணரே! அகஸ்திய முனிவருடைய அரிய செயல்களை இன்னும் விரிவாய்க் கேட்க விரும்புகிறேன் என்று சொன்னார். அதைக் கேட்ட ரோமசர் தர்மராஜாவை நோக்கி மஹா ராஜனே! அகஸ்தியரையும் அவருடைய பெரிய சக்தியையும் பற்றிச் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லுகிறார்.

3—12. கிரேதா யுகத்தில் ஒருவராலும் யுத்தத்தில் ஜயிக்கப்படாத சில தானவர்கள் இருந்தார்கள். அவர்களைக் காலகேயர் என்பார்கள். அவர்கள் பிறர் அஞ்சத் தக்க சாமர்த்தியமுள்ள வீரர்கள். அவர்களுக்கு விருத்திராசுரன் என்பவன் அரசன். சகல ஆயுதங்களிலும் வல்லவர்கள். அவர்கள் தேவர்களையும் இந்திரனையும் எல்லாத திசைகளிலும் துரத்திக்கொண்டு தொடர்ந்தார்கள் அதன் பின் தேவர்களெல்லாரும் அந்த விருத்திரனைக் கொல்ல நினைத்து இந்திரனை முன்னிட்டுக்கொண்டு பிரமாவிடம் போனார்கள். பிரமதேவர் தமக்கு எதிரில் கைகளைக் கூப்பிக்கொண்டு நிற்கிற தேவர்களைப் பார்த்துத், தேவர்களே! நீங்கள் விரும்பி வந்த விஷயம் எனக்குத் தெரியும். விருத்திரனைக் கொல்லுகிறதற்கு உபாயம் சொல்லுகிறேன். மஹாமகிமையுள்ள ததீசி முனிவரிடம் போங்கள். அவரை ஒரு வரம் கேளுங்கள். தர்மசிந்தையுள்ள அந்த முனிவர் மகிழ்ந்து அந்த வரத்தைக் கொடுப்பார். நீங்கள் ஜயத்தை விரும்பி அவரிடம் போய், மூவுலகங்களுக்கும் நன்மை செய்யும் பொருட்டு உமது எலும்பைக் கொடும் என்று கேளுங்கள். அவர் தன் சரீரத்தை விட்டு உங்களுக்கு எலும்பைக் கொடுப்பார். அந்த எலும்பினாலே அஞ்சத் தக்க பலமுள்ள வஜ்ராயுதத்தைச் செய்துகொள்ளுங்கள். அது ஆறு பக்கங்களையுடையதாயிருக்க வேண்டும். அது பயங்கரமாயிருக்கும். பயங்கரமான தொனியை யுடையதாயிருக்கும். எவ்விதமான கொடிய சத்துருக்களையும் கொல்லும். தேவேந்திரன் அந்த வஜ்ராயுதத்தினாலே விருத்திரனைக் கொல்வான். நான் சொல்ல வேண்டியவைகளைச் சொல்லிவிட்டேன். தாமதியாமல் இவைகளை உடனே செய்யுங்கள் என்று சொன்னார்.

13—25. தேவர்களுடனே நாரசனை முன்னிட்டுக்கொண்டு ததீசி ஆச்சிரமத்துக்குப் போனார்கள். அந்த ஆசிரமம் சரஸ்வதியின் கரையிலுள்ளது. பல வகைச் செடிகளும் நிறைந்திருப்பது. தேனீக்கள் சாமகானம் பண்ணுவது போல ரீங்காரம் செய்து கொண்டிருக்கும். பெண் குயில் சக்கிரவாகம் இவைகளின் தொனியினால் எதிரொலி உண்டாயிருக்கும். எருமைகளும் காடிகளும் மான்களும், சமர மிருகங்களும் அச்சமில்லாமல் யதேச்சையாய் உலாவிக்கொண்டிருக்கும். ஆண் யானைகள் மதச்சுவடுகளிலிருந்து மத மொழுகப் பெண் யானைகளுடன் ஓடைகளில் விளையாடிக் கொண்டிருக்கும். அவ்விடம் அவைகளின் கர்ஜனையால் நிரம்பியிருக்கும். சிங்கம் புலி யிவற்றின் கர்ஜனையால் எதிரொலியிட்டுக்கொண்டிருக்கும். ஆங்காங்குள்ள குகைகளில் பயங்கரமான பிடரி மயிரை யுடைய சிங்கங்கள் வசித்துக் கொண்டிருக்கிறதைப் பார்க்கலாம். இப்படிப்பட்ட அழகினையுடைய அந்த ஆச்சிரமத்துக்குத் தேவர்கள் போனார்கள். அது தேவலோகம் போல விளங்கியது. அந்த ஆச்சிரமத்தில் சூரியனைப்போன்ற தேஜஸையும் பிரமதேவரைப் போன்ற கருணையையும் உடைய ததீசி முனிவரைக் கண்டார்கள். அரசனே! தேவர்கள் அந்த முனிவருடைய பாதங்களில் வணங்கிப் பிரமதேவர் கூறியபடி வரம் கேட்டார்கள். ததீசி முனிவர் மிகவும் மகிழ்ந்து தேவர்களை நோக்கி, உங்களுடைய நன்மைக்காக வேண்டியதைச் செய்கிறேன். என் உயிரைக் கேட்டாலும் கொடுப்பேன் என்றார். இப்படி சொல்லிக் கொண்டே தம் பிராணனை விட்டு விட்டார். தேவர்கள் அவருடைய எலும்பை யெடுத்துக்கொண்டு போய், விசுவகர்மாவிடம் கொடுத்துப் பிரமாவினுடைய கட்டளையின்படி வஜ்ராயுதம் செய்யச் சொன்னார்கள். அதைக் கேட்டு விசுவகர்மா மனமகிழ்ந்து வஜ்ராயுதத்தைச் செய்து இந்திரனை நோக்கித் தேவனே யிந்த வஜ்ராயுதத்தால் பயங்கரமான நமது சத்துருக்களைச் சாம்பலாக்கிவிடும். சத்துருக்களை கொன்று உமது நேசர்களுடன் சொர்க்கத்தை மகிழ்ச்சியுடன் பரிபாலனம் பண்ணுங்கள் என்று சொன்னான். இந்திரனும் அவனுடைய சொற்களால் மகிழ்ந்து அந்த ஆயுதத்தை மரியாதையுடன் பெற்றுக்கொண்டான்.

---

## 101 வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—15. பிறகு இந்திரன் வஜ்ராயுதத்தைத் தரித்துக்கொண்டு தேவர்கள் சூழ்ந்துவரப், பூமியையும் சொர்க்கத்தையும் அபகரித்துக் கொண்டிருக்கிற விருத்திரனிடம் போனான். மலை போன்ற சரீரத்தையுடைய அநேக காலகேயர்கள் ஆயுததாரிகளாய் விருத்திரனைப் பாதுகாத்துக் கொண்டிருந்தார்கள். பாரதோத்தமனே! பிறகு கொஞ்ச நேரம் வரைக்கும் தேவர்களுக்கும் தானவர்களுக்கும் மூன்று உலகங்களிலும் கீர்த்தி பெற்ற பெரிய யுத்தம் நடந்தது.

ஆயுதங்கள் ஒன்றோடொன்று மோதுகிற சப்தமும், வீரர்களுடைய கையினால் தடுக்கப்படுகிற ஒலியும் நிறைந்தது. பனம்பழம் உதிர்வது போல ஆகாயத்தினின்றும் வீரர்களுடைய சிரசுகள் பூமியில் விழுந்தன. காலகேயர்கள் சொர்ணகவசம் தரித்து, எழுகு ஆயுதங்களுடனே அக்கினியை ஊடறுத்துச் செல்லும் பர்வதங்களைப் போலத் தேவர்களைத் தாக்கினார்கள். அசுரர்களுக்கு ஆற்றமாட்டாத தேவர்கள் பயந்து சிதறி ஓடிப் போனார்கள். தேவர்கள் பயந்து ஓடுகிறதையும் விருத்திரன் அதிக தைரியத்தோடு எதிர்த்து வருவதையும் பார்த்து இந்திரனும் பயந்து நாராயணரைத் தாமதியாமல் உதவி செய்யும்படி வேண்டினான். தேவேந்திரன் பயத்தினால் மயங்கித் தக்கிக்கிறதை அறிந்த விஷ்ணுவானவர் தமது சக்தியில் ஒரு பாகத்தை அவனிடத்தில் வைத்தார். விஷ்ணு இந்திரனுக்கு அனுக்கிரகம் பண்ணினதை உணர்ந்த தேவர்களும் ரிஷிகளும் தங்களுடைய சக்தியையும் இந்திரனிடம் விடுத்தார்கள். இதனால் இந்திரன் முன்பிருந்ததை விட அதிக பலமுள்ளவனானான். ரிஷிகள் முதலியவர்களுடைய தவத்தினால் தேவேந்திரன் நிறைந்திருப்பதை யறிந்து விருத்திரன் பயங்கரமாகச் சிங்கநாதம் செய்தான். அந்தக் கர்ஜனையால் திக்குகள், பூமி, ஆகாயம், மலை, கடல்கள் எல்லாம் நடுங்கின. அதைக் கேட்ட இந்திரன் பயத்தையும் துக்கத்தையும் அடைந்து விருத்திரனைக் கொல்லக் கருதி பூர்வத்தில் விஷ்ணுவினால் எறியப்பட்டு விழுந்த மந்தரகிரியைப் போல பூமியில் விழுந்தான். விருத்திரன் செத்துப் போயிருந்தும், இந்திரன் அவன் சாகவில்லையென்று நினைத்துப் பயந்து ஓடிப் போய் ஒரு தடாகத்தில் ஒளிந்து கொண்டான். தேவர்களும் ரிஷிகளும் மகிழ்ந்து இந்திரனைப் புகழ்ந்தார்கள். விருத்திரன் இறந்ததனால் பலஹீனம அடைந்த தைத்தியர்களைத் தேவர்கள் துரத்தி யடித்துக் கொன்றார்கள். தேவர்களுக்குப் பயந்த அசுரர்கள் பெரிய சமுத்திரத்தில் ஒளித்துக்கொண்டார்கள். பிறகு அந்த அசுரர்களெல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து மூன்று உலகங்களையும் அழித்துவிட யோசித்தார்கள்.

19—23. அவர்களுக்குள் புத்திசாலியான சிலர் தங்களுக்குத் தோன்றியபடி சில உபாயங்களைச் சொன்னார்கள். கடைசியில் ஞானிகளையும், தவசிகளையும் முதலில் அழித்துவிட வேண்டுமென்று பயங்கரமான யோசனையைச் செய்தார்கள். ஏனென்றால் எல்லா உலகமும் தவசால் நிலைபெறுகின்றன. ஆதலால் தாமதம் பண்ணாமல் தவம் செய்கிறவர்களைக் கொல்ல வேண்டுமென்று தீர்மானித்தார்கள். பூமியிலே தவம் செய்கிறவர்களையும், தர்மோபதேசம் செய்கிற அறிஞர்களையும் அழிக்க வேண்டும். ஏனென்றால் அவர்கள் மடிந்தால் உலகமுழுமையும் அழிந்தாற் போலாய்விடும். உலகமுழுவதையும் அழிக்கத்தக்க இந்த யோசனையைச் செய்து முடித்து அவ்வசுரர்களெல்லாரும் மனமகிழ்ந்தார்கள். பிறகு மலைகளை ஒத்த அலைகளையுடைய கடலைத் தங்களுக்குக் கோட்டையாகக் கொண்டார்கள்.

## 102-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—16. ரோமசர் யுதிஷ்டிரரை நோக்கித் தர்மராஜனே! அந்தக் காலகேயர்கள் வருணனுக் கிருப்பிடமான சமுத்திரத்தில் வசித்துக் கொண்டு உலகங்களை அழிக்கத் தொடங்கினார்கள். அவர்கள் கோபத்துடனே இரவில் வெளிப்பட்டுத் தங்களுக் கெதிரப்பட்ட ஆச்சிரமங்களிலும் புண்ணியங்களிலும் உள்ள ரிஷிகளை விழுங்கத் தொடங்கினார்கள். துர்ச்சிந்தையுள்ள அந்தத் தைத்தியர்கள் வசிஷ்டாச்சிரமத்திலுள்ள நூற்றெண்பது பிராமணர்களையும், ரிஷிகளையும் தின்றுவிட்டார்கள். சயவனாச்சிரமம் போய் அங்கே காய்கனி கிழங்குகளைப் புசித்துத் தவம் பண்ணிக்கொண்டிருந்த நூறு ரிஷிகளை விழுங்கிவிட்டார்கள். இரவில் இப்படிச் செய்துகொண்டு பகலில் கடலுக்குள் புகுந்து மறைந்து கொள்வார்கள். அவர்கள் பரத்துவாஜருடைய ஆச்சிரமத்தில் புகுந்து அங்கே வாயுபட்சணம் செய்துகொண்டு, பிரமசரிய விரதத்துடன் தவம் பண்ணிக்கொண்டிருந்த இரண்டு ரிஷிகளைப் பட்சித்துவிட்டார்கள். இப்படியே ஒவ்வொரு ஆச்சிரமங்களிலும் பிரவேசிக்கத் தொடங்கினார்கள். இவ்வாறு காலகேயர்கள் பிராமணர்களையும் பிரமரிஷிகளையும் அழித்துக்கொண்டிருக்கவும் அவர்களை ஒருவரும் கண்டு பிடிக்கவில்லை. தினந்தோறும் காலவேளையில் ரிஷி ஆச்சிரமங்களில் செத்துப்போன ரிஷிகளுடைய பிணங்களை அடிக்கடி பார்த்தார்கள். அந்தப் பிரேத சரீரங்களில் அநேகம் மாமிசமும் இரத்தமும் இல்லாமல் இருந்தன. குடல்களில்லாமலும், அவயவங்கள் தனித்தனியாகவும் சிதறிக்கிடந்தன. அவ்விடங்களில் எலும்புகள், சங்கத்தின் ஓடுகளைப்போலக் குவியல் குவியல்களாகக் கிடந்தன. யாகசாலைக்குரிய பானைகளும், கரண்டிகளும், யாகாக்கினிகளும் சிதறப்பட்டுக் கிடந்தன. காலகேயர்களுடைய பயத்தினாலே உலகமெல்லாம் நடுங்கின. வேதாத்தியனம் ஒழிந்துபோயிற்று. மந்திரங்களும், யாகங்களும், வைதிக தர்மங்களும் ஒழிந்தன. மனிதர்களுக் கரசனே! தர்மராஜனே! இப்படிப் பிராமணர்கள் எல்லாரும் அழியவே மிஞ்சி யிருந்தவர்கள் தங்களுடைய ஜீவனைக் காத்துக் கொள்ளும் பொருட்டு நாலாதிசைகளிலும் சிதறி ஓடிப் போனார்கள். சிலர் நிலவறைக்குள் புகுந்து ஒளிந்து கொண்டார்கள். சிலர் மலை யாறுகளுக்கப் பால் ஓடிப் பதுங்கினார்கள். சிலர் பயத்தினாலே ஜீவனை விட்டார்கள். அவர்களுக்குள் வில்லாளிகளாயும், வீரர்களாயும் இருந்தவர்கள் தைரியமாய் அந்த அசுரர்களைக் கண்டு பிடிக்கும்படி தேடிக்கொண்டு திரிந்தார்கள், கடலுக்குள் மறைந்திருக்கும் அசுரர்களைக் கண்டு பிடிக்க முடியாமையால் துக்கத்துடனே தங்களிருப்பிடம் வந்து விட்டார்கள்.

17— . நராதிபனே! இப்படி உலகம் அழிந்து, யாகங்களும் வைதிக கர்மங்களும் கெடுக்கப்படவே தேவர்கள் எல்லாரும் வருந்தினார்கள். எல்லாத் தேவர்களும் இந்திரனைத் தலைவனாகக்கொண்டு ஒரு சங்கங்கூடிப் பயத்துடன்

யோசனை செய்தார்கள். எல்லாரும் சுயம்புவான நாராயண மூர்த்தியை உதவி செய்யும்படி கேட்டார்கள். எல்லாத் தேவர்களும் வைகுண்டத்துக்குப் போய் விஷ்ணுவை வணங்கிப் பின் வருமாறு சொல்லுகிறார்கள். தேவனே! நீரே சிருஷ்டிகர்; இரட்சகர்; உலகங்கள் எல்லாவற்றையும் சங்கரிக்கிறவர்; ஸ்தாவர ஜங்கமங்கள் அடங்கின எல்லா உலகங்களையும் படைத்தது நீரே; செந்தாமரைக் கண்ணனே! சமுத்திரத்திலே முழுகிக்கிடந்த உலகத்தை வராக ரூபம்கொண்டு மேலே தூக்கிவைத்து எல்லாச் சீவர்களையும் இரட்சித்தீர். புருஷோத்தமனே! பூர்வ காலத்திலே நரசிங்க ரூபம் கொண்டு ஹிரண்யகசிபு என்கிற தைத்தியனைக் கொன்று உலகத்தைக் காப்பாற்றினீர். பலி என்று ஒரு அசுரனிருந்தான். அவன் ஒருவராலும் ஜயிக்கப்படாதவன். நீர் வாமன உருவம் கொண்டு அவனை மூவுலகங்களுக்கும் அப்பாலே ஓட்டி விட்டீர். மஹா பல பராக்கிரமசாலியும், வில்லாளியும், யாக கருமங்களுக்கு விரோதியாயும் இருந்த ஜம்பாசுரனையும் வதம் செய்தீர். உமது அரும் செயல்கள் சொல்ல முடியாதவை. அச்சத்தையும் துன்பத்தையும் அடைந்தவர்கள் எல்லாருக்கும் நீரே கதி. தேவ தேவனே! உமது மகிமை இப்படியிருப்பதால் எங்களுக்கு இப்பொழுது நேரிட்டிருக்கிற துன்பத்தையும் உம்மிடத்தில் சொல்லிக் கொள்கிறோம். உலகத்தையும், தேவர்களையும், நீர் காப்பாற்றியருள வேண்டும் என்றார்கள்.

---

## 103-வது அத்தியாயம்.

*தீர்த்த யாத்திரா பர்வத் தொடர்ச்சி*

1—5. பின்னும் தேவர்கள் விஷ்ணுவைப் பார்த்து நாலு வருணங்களும் உமது கருணையால் விருத்தியாகின்றன. தேவர்களுக்கும் பிதிர்களுக்கும் உரிய ஹவ்ய கவ்யங்களும் கிரமமாய் நடத்தப்படுகின்றன. இப்படி உம்மால் இரட்சிக்கப்படுவதால் ஒரு துன்பமுமில்லை உமது கிருபையால் ஒருவரை யொருவர் அண்டி மனிதர் விருத்தி யடைகிறார்கள். இப்பொழுது ஜனங்களுக்கு ஒரு பயம் உண்டாயிருக்கிறது. இரவிலே பிராமணர்களை எவர்கள் கொல்லுகிறார்கள் என்று எங்களுக்குத் தெரியவில்லை. பிராமணர்கள் மடிந்து போனால் உலகம் கூட அழிந்து போகும். பூவுலகம் அழிந்தால் வானுலகமும் அழிந்து போகும். மஹா பாகுவான லோக கர்த்தாவே! உம்மால் காக்கப்படுகிற ஜனங்கள் அழியாதபடி காத்தருள வேண்டும் என்றார்.

6—12. விஷ்ணு தேவர்களைப் பார்த்து ஓ தேவர்களே! ஜனங்கள் அழிகிற காரணம் எனக்குத் தெரியும். அந்தக் காரணங்களைச் சொல்லுகிறேன் கவலையை விட்டுக் கேளுங்கள். காலகேயர் என்ற ஒரு வகைத் தானவர்களிருக்கிறார்கள். அவர்களுக்கு விருத்திரன் தலைவனாயிருந்தான். அந்த விருத்தி

ரனை இந்திரன் கொன்று விட்டான். அதன் பின் அந்தக் காலகேயர்கள் தங்கள் ஜீவனைக் காப்பாற்றிக் கொள்வதற்காக வருணனுக்கு இருப்பிடமான சமுத்திரத்தில் ஒளிந்து கொண்டிருக்கிறார்கள். இராக்காலத்தில் வெளியிற் கிளம்பி வந்து ரிஷிகளைக் கொல்லுகிறார்கள். அப்படிச் செய்வதனால் உலகம் முழுவதையும் அழித்து விடலாமென்பது அவர்களுடைய கருத்து. அவர்கள் கடலுக்குள் மறைந்திருப்பதால் அவர்களைக் கொல்ல முடியாது. ஆகையால் சமுத்திரத்தை வற்றச் செய்ய வேண்டும். அதற்குத் தகுந்த உபாயம் தேடவேண்டியது அவசியம். அகஸ்திய முனிவரைத் தவிர வேறு ஒருவராலும் சமுத்திரத்தை வற்றச்செய்ய முடியாது. சமுத்திரம் வரண்டு போகாமல் இருந்தால் அந்தத் தைத்தியர்களைக் கொல்வது முடியாது என்று சொன்னார். இப்படி விஷ்ணு பகவான் சொன்னதைக் கேட்ட தேவர்கள் பிரமாவினுடைய அனுமதியின் மேல் அகஸ்தியருடைய ஆசிரமத்தை நோக்கிச் சென்றார்கள்.

13—18. அங்கே வருணகுமாரரும் மஹாத்மாவுமான அகஸ்தியர் பிரமதேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு அநேக ரிஷிகள் சூழத், தேவர்களால் சூழப்பட்ட பிரமதேவரைப் போலப் பிரகாசித்துக் கொண்டிருப்பதைத் தேவர்கள் பார்த்தார்கள். மித்திர வருணபுத்திரரும் மஹாத்மாவும் குற்றமற்ற மனமுள்ளவருமான அகஸ்தியர் ஒரு தவசீலைப் போல உட்கார்ந்திருக்கிறதைக் கண்டு அவரிடம் போய் அவருடைய அரிய செயல்களைக் கூறிப் புகழ்ந்து துதித்தார்கள். பூர்வ காலத்தில் நகுஷனால் வருத்தப் படுத்தப்பட்ட பிரஜைகளைக் காப்பாற்றினீர். அவன் சொர்க்க லோகத்துக்கு முள்ளை ஒத்திருந்தான். அவனைச் சொர்க்கத்தினின்றும் தள்ளி விட்டீர். மலைமையில் சிறந்த விந்திய பர்வதமானது சூரியனோடு கோபித்துக்கொண்டு மிக உயரமாய் வளர்ந்தது. அது உமது கட்டளைக்கு உட்படாமையால் நீர் அதை அடக்கி உயராமல் செய்து விட்டீர். அப்போது இருளால் வருந்தி மடிந்த ஜீவாத்மாக்களுக்கு நீரே கதியாக இருந்தீர். மஹாத்மாவே! எங்களுக்குத் துன்பம் உண்டானபோதெல்லாம் நாங்கள் உம்மிடத்தில் வந்து வரம் கேட்போம். நீரும் தடையில்லாமல் நாங்கள் கேட்ட வரங்களைக் கொடுத்து எங்களை இரட்சிப்பீர்.

---

## 104-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—10. யுதிஷ்டிரர் ரோமசரை நோக்கி மஹாரிஷியே! விந்திய மலை ஏன் புத்தியில்லாமல் கோபங்கொண்டு வளர ஆரம்பித்தது? அதைக் கேட்க விரும்புகிறேன் என்றார். ரோமசர் சொல்லுகிறார். சூரியன் உதிக்கும் போதும் அஸ்தமிக்கும்போதும் மலை யரசனாகிய மஹா மேருவைப் பிரதக்ஷிணம் செய்து கொண்டு போகிறான். இதை யறிந்து விந்திய மலை சூரியனைப் பார்த்து நீ தினந்தோறும் மேருவைப் பிரதக்ஷிணம் பண்ணி மரியாதை செய்கிறாய்.

அது போல என்னையும் வலமாகச் சூழ்ந்து போ என்றது. சூரியன் ஓ விந்திய பர்வதமே! நான் என்னுடைய பிரியத்தினாலே மேருவை வலமாகச் சூழ்ந்து போகவில்லை. சிருஷ்டி கர்த்தாவே எனக்கு இந்த வழியை நியமித்திருக்கிறார் என்றான். இதைக் கேட்ட விந்திய பர்வதம் கோபத்துச் சூரியனும் சந்திரனும் செல்லுகிற வழியைத் தடுக்கக் கருதித் திடீரென்று வளர்ந்தது. தேவர்கள் எல்லாரும் கூடி மலையரசனான விந்திய மலையினிடம் போய்த் தடுக்க முயன்றார்கள். விந்தியபர்வதம் அவர்கள் சொன்னதைக் கவனிக்கவில்லை. பிறகு தேவர்கள் எல்லாரும் சேர்ந்து மஹரிஷியான அகஸ்தியருடைய ஆச்சிரமத்துக்குப் போய் அவரிடம் எல்லாவற்றையும் சொன்னார்கள். மஹாத்மாவே! விந்திய மலை கோபங்கொண்டு சந்திர சூரியர்களும் நட்சத்திரங்களும் செல்லுகிற மார்க்கத்தைத் தடுத்து நிற்கின்றது. பிராமணோத்தமரே! உம்மைத் தவிர ஒருவராலும் அதைத் தடுக்க முடியாது என்றார்கள்.

11—16. தேவர்கள் கூறியதைக் கேட்ட அகஸ்திய முனிவர் தமது தர்மபத்தினியுடன் விந்திய மலையிடம் போய் மகிமையிற் சிறந்த மலையரசனே! நான் ஒரு காரியத்தை உத்தேசித்துத் தென்னாட்டுக்குப் போகிறேன். எனக்கு வழி விட வேண்டும். மலையரசனே! நான் மீண்டு வருகிறவரைக்கும் வளராமல் காத்திருக்க வேண்டுகிறேன். அதன் பின் உன் விருப்பம் போல நீ வளரலாம் என்றார். சத்துரு பயங்கரனே! இவ்விதமான ஏற்பாட்டைச் செய்து கொண்டு அகஸ்தியர் தென்னாடு போனார். அதன் பின் அவர் திரும்பி வரவே யில்லை. தர்ம ராஜாவே! நீர் விரும்பினபடி அகஸ்திய முனிவர் விந்திய மலையை அடக்கின சரித்திரத்தை உமக்குச் சொன்னேன். இனிமேல், தேவர்கள் அகஸ்தியரைப் பிரார்த்தித்த பின் காலகேயர்களை வதைத்த கதையைச் சொல்லுகிறேன் கேளும் என்று ரோமசர் சொல்லுகிறார்.

17—24. அகஸ்தியர் தேவர்கள் சொன்னதைக் கேட்டு, நீங்கள் எதை உத்தேசித்து வந்தீர்கள்? என்னிடத்தில் எந்த வரத்தை அடைய விரும்புகிறீர்கள்? என்று கேட்டார். தேவர்கள், முனிவரே! நீர் சமுத்திரத்தைக் குடிக்க வேண்டும். இந்த வரந்தான் நாங்கள் விரும்புகிறது. பிறகு தேவர்களுக்கு விரோதிகளான காலகேயர்களை நாங்கள் கொல்வோம் என்றார்கள். அகஸ்தியர் அப்படியே ஆகட்டும். நீங்கள் விரும்பினது மூவுலகங்களுக்கும் உபகாரமாயிருப்பதால் நான் அப்படியே செய்கிறேன் என்றார். தர்ம ராஜாவே! அதன் பின் முனிவர் நதிகளுக்கு அரசனான சமுத்திரத்தினிடம் போனார். ரிஷிகளும் தேவர்களும் கூடவே போனார்கள். மனிதர், நாகர், கந்தர்வர், யட்சர், கின்னரர் முதலானவர்களும் இந்த அற்புதத்தைப் பார்க்கும்படியாகக் கூடத் தொடர்ந்து போனார்கள். காற்றினால் உண்டாகிற அலைகளினாலே நர்த்தனம் செய்வது போலவும், பயங்கரமாகக் கர்ஜித்துக்கொண்டிருக்கிறதுமான சமுத்திரத்தினிடம் போனார்கள்.

---

## 105-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—13. சமுத்திரத்தினிடம் போய்த் தேவர்களையும் ரிஷிகளையும் பார்த்து அகஸ்தியர் சொல்லுகிறார். உலகத்தின் க்ஷேமத்தைக் குறித்து வருணனுக்கு இருப்பிடமான இந்தச் சமுத்திரத்தை நான் குடித்து விடுகிறேன். உடனே நீங்கள் செய்ய வேண்டியதைச் செய்யச் சித்தமாயிருங்கள் என்று சொல்லிவிட்டுக் கோபத்துடன் உலகத்தா ரெல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே கடலைக் குடிக்க ஆரம்பித்தார் அகஸ்திய முனிவர் எப்படி கடலைக் குடிப்பாரோ என்று தேவேந்திரன் ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். தேவர்களெல்லாரும் முனிவருடைய பெருமையைக் கூறிப் புகழ்ந்து வணங்கினார்கள். உலக இரட்சகரே! நீரே இரட்சகர்த்தா; நீரே உலகத்தை சிருஷ்டிப்பவர்; உமது கருணையாலே தேவர்களும் மூவுலகத்தாரும் அழியாமல் காப்பாற்றப் படுகிறார்கள் என்று புகழ்ந்து வணங்கினார்கள். கந்தர்வர்கள் வாத்தியங்களை வாசித்துக் கொண்டு கீதம் பாடினார்கள். தேவர்கள் பூமாரி பெய்தார்கள். அப்போது அகஸ்திய முனிவர் கடலைக் குடித்து வற்றச் செய்தார். சமுத்திரம் வற்றிப் போனதைப் பார்த்துத் தேவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். தேவாயுதங்களை யெடுத்துக் கொண்டு தானவர்களை மனோதைரியத்துடன் கொல்லத் தொடங்கினார்கள். வல்லமைசாலிகளான தேவர்கள் காஜித்துக்கொண்டு வெகு வேகமாய்த் தாக்கினபோது தானவர்கள் எதிர்த்துப் போர் செய்ய வல்லமையற்றுப் போனார்கள். ஆயினும் தானவர்கள் அட்டகாசம் செய்துகொண்டு கொஞ்ச நேரம் கொடும் போர் புரிந்தார்கள். ஆனாலும் அவர்கள் முன்பு முனிவர்களைக் கொன்று புஜித்த பாவத்தொழிலால் வெந்து பலனற்றிருந்தார்கள் அதனால் அவர்கள் தங்களுடைய வல்லமையுடன் எதிர்த்து யுத்தம் செய்தாலும் அவர்கள் எல்லாரையும் தேவர்கள் கொன்றார்கள். சொர்ண ஆபரணங்களையும் கடுக்கன்களையும் அணிந்து கொண்டிருந்த தானவர்கள் கொல்லப்பட்டபோது புஷ்பித்த பலாசமரங்களைப் போலக் காணப்பட்டார்கள். சாகாமல் தப்பி யிருந்தவர்கள் பாதாள உலகம் போய்ப் பதுங்கினார்கள். தானவர்கள் அழிந்த பின் தேவர்களெல்லாரும் அகஸ்தியரைப் பலவிதமாகப் புகழ்ந்து பேசினார்கள்.

14—20. மஹாத்மாவே! உமது கருணையால் உலகம் க்ஷேமத்தை அடைந்தது. உமது சக்தியினாலே மஹா பராக்கிரமசாலிகளான காலகேயர்கள் அழிந்து போனார்கள். இரட்சகரே! நீர் குடித்த ஜலத்தை விட்டு மறுபடியும் கடலை நிரப்பி விடும் என்று பிரார்த்தித்தார்கள். முனிவர் அவர்களை நோக்கித் தேவர்களே! நான் குடித்த கடல் நீர் ஜீரணமாய் விட்டபடியால் அதை நிரப்புகிறதற்கு வேறு உபாயம் தேடுங்கள் என்று சொன்னார். இதைக் கேட்ட தேவர்கள் அதிசயத்தையும் விசனத்தையும் அடைந்து தத்தம் இருப்பிடம்

போய்ச் சேர்ந்தார்கள். தேவர்கள் விஷ்ணுவுடன் கூடிப் பிரமதேவரிடம் போய்க் கடலை நிரப்புவதைக் குறித்து யோசித்தார்கள் எல்லாரும் கைகளைக் கும்பிட்டுக்கொண்டு பிரமாவைப் பிரார்த்தித்தார்கள்.

---

## 106-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—6. பிரமதேவர் ஓ தேவர்களே! நீங்கள் விரும்புகிற இடத்துக்குப் போங்கள். வெகு நாட்களுக்குப் பின் பகீரத ராஜனால் சமுத்திரம் நீரால் நிரம்பிப் பூர்வ நிலைமையை அடையும் என்றார். தேவர்கள் அப்படியே தங்களுக்கு இஷ்டமான இடங்களுக்குப் போய்க் கடல் நிரம்புகிற காலத்தை எதிர்ப் பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்று ரோமசர் தர்ம ராஜாவுக்குச் சொன்னார். பிறகு யுதிஷ்டிரர் ரோமசரை நோக்கி அந்தணரே! மஹரிஷியே! பகீரதன் எப்படிக் கடலை நிரப்பினான்? அதற்குக் காரணமென்ன! நீர் சொன்ன அந்தப் பகீரதனுடைய சரித்திரத்தை விரிவாய்க் கேட்க விரும்புகிறேன், என்றார். இப்படித் தர்ம ராஜா கேட்டபின் ரோமச முனிவர் பகீரதன் கதையைச் சொல்லத் தொடங்கினார்.

7—17. இக்ஷ்வாகு வம்சத்திலே சகரன் என்று ஒரு அரசன் பிறந்தான். மகிமையுள்ள அவன் மிக்க அழகுள்ளவன். பராக்கிரமசாலி அவனுக்குக் குழந்தைகள் இல்லை. கைகேயர் முதலிய அரசர்களை வென்று கீழ்ப் படுத்தி அரசு புரிந்தான். அவனுக்கு இரண்டு மனைவிகள். அவ்விருவரும் யௌவனத்தாலும் அழகினாலும் சிறந்திருந்தார்கள். அவர்களுள் ஒருத்தி விதர்ப்ப ராஜன் புத்திரி. மற்றொருத்தி சிபியின் புத்திரி. அந்தச் சகரன் புத்திரர்களை விரும்பி மனைவிமார்களோடு கைலாச மலைக்குப் போனான். அங்கே கொடுந் தவம் புரிந்தான். பின் திரிபுராந்தகரான முக்கண் மூர்த்தியைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்தான். ஓ சங்கரா! சிவா! ஈசானா! பினாகி! சூலபாணி! திரியம்பகா! பவா! உக்கிரேசா! உமாகாந்தா! என்று துதித்து மனைவிகளுடன் வணங்கிப் புத்திரனைக் குறித்து வரங் கேட்டான் பரமசிவன் மகிழ்ந்து. அரசனே! நீ புத்திர வரங் கேட்ட காலத்தை யோசிக்கும்போது உன்னுடைய மனைவிகளில் ஒருத்திக்கு அறுபதினாயிரம் புத்திரர்கள் பிறப்பார்கள். ஆனாலும் அவர்கள் இறந்து போவார்கள். மற்றவளுக்கு ஒரே புத்திரன் பிறப்பான். அவனால் உன் வம்சம் விளங்கும் என்று வரம் அருளி ருத்திரமூர்த்தி அந்தர்த்தானமாய் விட்டார். சகர ராஜனும் தன் இராஜ்யம் போய்ச் சேர்ந்தான்.

18—23. சகர ராஜன் வீடு வந்து சேர்ந்த பின் தாமரை மலர் போன்ற கண்களையுடைய அவனது இரண்டு மனைவிகளும் கர்ப்பம் அடைந்தார்கள் அவர்களுள் விதர்ப்ப ராஜ புத்திரிக்கு ஒரு பேய்ச் சுரக்காய் பிறந்தது. சிபி

யின் புத்திரிக்கு ஒரு பிள்ளை பிறந்தது. சகர ராஜன் அந்த சுரைக்காயை எறிந்து விட உத்தேசித்தான். அப்போது அரசனே! அவசரப்பட்டு இப்படிப்பட்ட குற்றமான காரியத்தைச் செய்து விடாதே. உன் புத்திரனைத் தள்ளி விடாதே. அந்தச் சுரைக்காயின் விரையை எடுத்து ஒரு பாத்திரத்தில் இட்டு அதில் நெய்யை விட்டு வை. பின் நீ அறுபதினாயிரம் புத்திரர்களை அடைவாய். கவலைப் பட வேண்டாம் என்று ஆகாசவாணி கூறிற்று.

---

## 107-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. ஆகாசவாணியின் வசனங்களைக் கேட்ட அரசன் வணக்கத்துடன் அதை அங்கீகாரம் பண்ணிக்கொண்டு அப்படியே செய்தான். அந்தச் சுரைக்காயின் விரைகளைத் தனித் தனியாக எடுத்து பாண்டங்களில் போட்டு நெய்யை ஊற்றி வைத்தான். குழந்தைகளைக் காப்பாற்ற விரும்பி ஒவ்வொரு பாண்டத்துக்கும் ஒவ்வொரு வேலைக்காரியை நியமித்துப் பாதுகாக்கச் செய்தான் வெகு காலத்துக்குப் பின் மஹா சக்தியுள்ள அறுபதினாயிரம் பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்கள் கொடியவர்களும் கொடுஞ்செய்கையில் விருப்பமுள்ளவர்களுமா யிருந்தார்கள். அவர்கள் மேலே கிளம்பி ஆகாயத்திலே பறந்து திரியவும் சக்தியுள்ளவர்கள். அவர்கள் தொகையில் அதிகமானவர்கள். ஆகையால் தேவர்கள் எல்லாரையும் இம்சிக்கத் தொடங்கினார்கள். யுத்தப் பிரியர்கள். தேவர்கள் கந்தர்வர்கள் இராட்சதர்கள் முதல் எல்லாரையும் வெல்வார்கள். சகரனுடைய அந்தத் துஷ்ட புத்திரர்களாலே இம்சிக்கப்பட்ட தேவர்களெல்லாரும் பிரமாவிடம் போய்ப் பிரார்த்தித்தார்கள் பிரமதேவர் ஓ தேவர்களே! நீங்கள் எல்லாரும் உங்களிடம் போய்ச் சேருங்கள். இந்தச் சகர குமாரர்கள் எல்லாரும் தங்களுடைய துஷ்டச் செய்கையால் வெகு சீக்கிரத்தில் அழிந்து போவார்கள் என்று சொன்னார். நராதிபனே! யுதிஷ்டிரா! அதைக் கேட்ட தேவர்களும் மற்றவர்களும் பிரமதேவரை வணங்கி தாங்கள் வந்த விடம் போய்ச் சேர்ந்தார்கள். நெடுங்காலத்துக்குப் பின் சகர ராஜன் அசுவமேத யாகம் செய்ய ஆரம்பித்தான்.

12—38. சகரனுடைய குதிரை அவன் புத்திரர்களால் பாதுகாக்கப் பட்டது. அப்படிக் காக்கப்பட்டும் அது ஜலம் வற்றிப் பயங்கரமா யிருந்த கடலினருகில் போய் மறைந்து விட்டது. குழந்தாய்! அந்தச் சகர புத்திரர்கள் அந்தக் குதிரையை யாரோ திருடிக்கொண்டு போய் விட்டதாகக் கருதினார்கள். அவர்கள் தங்கள் பிதாவினிடத்துக்கு மீண்டு வந்து குதிரை காணாமற் போனதைச் சொன்னார்கள். சகரன், தன் புத்திரர்களை நோக்கி நீங்கள் நாலு திசைகளுக்கும் போய்க் குதிரையைத் தேடுங்கள் என்றான். அப்படியே

உலகம் எங்கும் தேடினார்கள். குதிரையையாவது அதைத் திருடிக்கொண்டு போனவர்களையாவது காணவில்லை. அவர்கள் மறுபடியும் பிதாவினிடம் வந்து அஞ்சலியஸ்தர்களாய் அரசனே! நராதிபனே! பூமிக்கிறைவனே! உமது கட்டளைப்படியே நாங்கள் போய்க் கடல், வனம், தீவுகள், ஆறுகள், குகைகள் மலைகள் எங்கும் தேடிப் பார்த்தோம். குதிரையையாவது குதிரையைத் திருடினவர்களையாவது கண்டு பிடிக்க முடியவில்லை என்று சொன்னார்கள். சகர ராஜன் இதைக் கேட்டு அதிக கோபம் கொண்டு, விதிவசத்தினாலே புத்திரர்களே! நீங்கள் போய் விடுங்கள். மறுபடியும் திரும்பி வராதீர்கள். புத்திரர்களே! மறுபடியும் எத்திசைகளிலும் தேடுங்கள் யாகத்துக்குரிய குதிரை யில்லாமல் இங்கே வர வேண்டாம் என்று சொன்னான். பிதாவினுடைய இந்த கட்டளையைப் பெற்றுக்கொண்டு, மறுபடியும் தேடத் தொடங்கினார்கள். ஒரு இடத்தில் சிறிய குழி ஒன்று இருந்ததைப் பார்த்து அதைத் தோண்டத் தொடங்கினார்கள். மண்வெட்டி முதலிய ஆயுதங்களைக் கொண்டு வெட்டினார்கள். வருணனுக்கு இடமான அந்தக் கடலை அவர்கள் எல்லாரும் சேர்ந்து தோண்டினார்கள். அப்படித் தோண்டும்போது அசுரர், நாகர், ராக்ஷஸர்களும் மற்றுமுள்ள அநேக ஜீவ ஜந்துக்களும் கூட வெட்டப்படுதலால் ஓ என்கிற சத்தம் உண்டாயிற்று. அநேக ஜந்துக்கள் தலையற்றன. கை கால் முதலிய அவயவங்கள் வெட்டுண்டு விழுந்தன. அநேகம் தோலற்றனவும், எலும்புகள் நொறுங்கினவும் ஆயின. இவ்வாறு நெடுங்காலம் கடல் வெட்டியும் குதிரை காணப்படவில்லை. அவர்கள் கோபத்துடன் அந்தக் கடலில் வட கீழ்த் திசையில் வெட்டினார்கள். பாதாளம் வரையும் வெட்டினார்கள். அங்கே தங்களுடைய குதிரை உலாவிக் கொண்டிருக்கிறதைக் கண்டார்கள். தபசினாலே அக்கினியைப் போல ஜ்வலித்துக்கொண்டு இருக்கிற கபில முனிவரையும் பார்த்தார்கள். அந்த முனிவரையும் குதிரையையும் பார்த்து அவர்கள் களிப்படைந்தார்கள். விதிவசத்தினாலே கபில முனிவரை மதியாமல் அலட்சியம் பண்ணினார்கள். குதிரையைப் பெற வேண்டுமென்கிற விருப்பத்தினாலே எல்லாரும் அதை நோக்கி ஓடினார்கள். வாசுதேவர் என்று கூறப்படுகிற அந்த மகிமையுள்ள கபில முனிவர் கோபங்கொண்டு தமது கண்களினின்றும் அக்கினியைப் பிரயோகித்தார். அதனாலே சகரனுடைய மதிகெட்ட புத்திரர்கள் எல்லாரும் ஒருங்கே எரிந்து போனார்கள். அவர்கள் எரிந்து சாம்பலாய்ப் போனதை அறிந்த நாரத முனிவர் சகரனிடம் போய் அதைச் சொன்னார். நாரதர் சொன்ன இந்தப் பயங்கரமான வசனங்களைக் கேட்டதும் சகரன் சற்று நேரம் மெய் மறந்திருந்தான். பிறகு பரமசிவன் கூறிய வார்த்தை அவன் ஞாபகத்தில் வந்தது. பிறகு அசமஞ்சன் புத்திரனான அம்சுமானை அழைத்துக் குழந்தாய்! என்னுடைய அறுபதினாயிரம் புத்திரர்களும் கபில முனிவருடைய கோபத்தால் எரிந்து போனார்கள். என்னுடைய தர்மத்தைப் பரிபாலிப்பதற்காகவும், ஜனங்களை இரட்சிப்பதற்காகவும் நான் உனது பிதாவை வனத்துக்கு ஓட்டி விட்டேன் என்று சொன்னான். என் பிதா ரோமசர்

சொன்ன போது யுதிஷ்டிரர் அவரை நோக்கி மஹரிஷியே சகரன் விலக்கத் தகாத புத்திரனை என் வனத்துக்கு அனுப்பினான்? என்று கேட்க ரோமசர் சொல்லுகிறார்.

39—46. சகரனுக்குச் சிபியின் புத்திரியிடத்தில் பிறந்த குமாரனுக்கு அசமஞ்சன் என்று பெயர். அவன் நகரத்துப் பிரஜைகளின் குழந்தைகளைக் கதறக் கதறத் தொண்டையைப் பிடித்தூத் தூக்கி ஓடுகிற நதியில் எறிந்து விட்டு மகிழ்வான். இதனால் நகரத்தார் விசன மடைந்து ஒன்றாய்க் கூடிச் சகரராஜனிடம் போனார்கள். கைகளைக் குவித்துக்கொண்டு அரசனுக் கெதிரில் நின்று, மஹாராஜனே! பெரிய சத்துருக்களின் பீடத்திலிருந்து எங்களைக் காப்பாற்றுகிறவர் நீர். ஆகையால் உம்முடைய புத்திரனால் எங்களுக்கு உண்டான துன்பத்தை நீக்க வேண்டும் என்று சொன்னார்கள். அரசன் ஜனங்கள் சொன்னதைக் கேட்டுச் சற்று நேரம் மெய்மறந்திருந்தார். பிறகு தன் மந்திரிகளை அழைத்து என் புத்திரன் அசமஞ்சனை நாட்டை விட்டுத் துரத்தி விடுங்கள். நீங்கள் என் பிரியத்தைச் செய்கிறவர்களாயிருந்தால் இதை உடனே செய்யுங்கள் என்றான். மந்திரிகள் அரசன் கட்டளைப்படி உடனே செய்தார்கள். அரசனே! சகரராஜன் ஜனங்களுக்கு நன்மை செய்வதற்காகத் தன் புத்திரனை நாட்டை விட்டுத் துரத்தின சரித்திரத்தை உமக்குச் சொன்னேன். இனி வில்லாளியான அம்சுமானிடத்தில் சகரன் சொன்னதைச் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லுகிறார்.

47—66. என் புத்திரனைத் துரத்தி விட்டதைப் பற்றி நான் துக்கப்பட்டுக் கொண்டிருக்கிறேன். மற்றப் புத்திரர்கள் மடிந்து போனதையும், குதிரையை இழந்து போனதையும் பற்றி இப்பொழுது வருந்துகிறேன். என்னுடைய யாகத்துக்கு இடையூறு உண்டானது எனக்குப் பெரிய துக்கமாயிருக்கிறது. நீ அந்தக் குதிரையைக் கொண்டு வந்து என்னைப் பாபத்தினின்றும் விலக்கிப் பரிசுத்தனாக்கவேண்டும் என்று சொன்னான். அம்சுமான் அப்படியே சகரர் கடலைத் தோண்டின இடத்துக்குப்போய்க், கபிலாச்ரமத்தை அடைந்து, அந்த முனிவரையும் குதிரையும் கண்டான். உடனே தேஜசுடன் விளங்குகிற கபில முனிவரது பாதத்தில் நமஸ்கரித்துத் தான் வந்த காரணத்தைச் சொன்னான் மஹாராஜனே! பாரதனே! கபிலர் மகிழ்ந்து அம்சுமானை நோக்கி உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் என்றார் முதலில் யாகத்துக்காகக் குதிரையைத் தரும்படி கேட்டான். இரண்டாவது தன் சிற்றப்பன்மார்களை பிழைப்பிக்க வேண்டுமென்று கேட்டான். கபிலர் அம்சுமானைப் பார்த்து இராஜ குமாரனே! பாபமில்லாதவனே! நீ கேட்டபடியே கொடுத்தேன். உன்னிடத்தில் சத்தியமும் நீதியும் நிலைத்திருக்கும். உன்னாலே சகரனுடைய எண்ணங்கள் நிறைவேறும் உன்னுடைய சக்தியினாலே உனது சிற்றப்பன்மார்கள் சொர்க்கம் போவார்கள். உன்னுடைய பேரன் திரிபதை என்கிற கங்கையை ஆகாயத்திலிருந்து பூமிக்குக் கொண்டு வருவான் அதனால் சகர குமாரர்கள் பரிசுத்த

களாய்ச் சொர்க்க மடைவார்கள். நீயாகக் குதிரையை ஓட்டிக்கொண்டு போ என்றார். இதைக்கேட்ட அம்சுமான் குதிரையை ஓட்டிக்கொண்டு யாகசாலைக்கு வந்து சகரனை வணங்கி நடந்தவைகளை யெல்லாம் சொன்னான். சகரன் மகிழ்ந்து அம்சுமானைப் புகழ்ந்து யாகத்தை நிறைவேற்றினான். யாகம் முடிந்ததும் சகரன் எல்லாத் தேவர்களையும் உபசரித்தான். பிறகு நெடுங்காலம் அரசுபுரிந்தான் பிறகு தன் பேரனை அம்சுமானிடத்தில் இராஜ்யத்தை ஒப்புவித்து விட்டுச் சகரன்சொர்க்கம் போய்ச் சேர்ந்தான். அம்சுமானும் தன்பிதாமகனைப் போலவே கடல்சூழ்ந்த உலகத்தை நீதியாய்ப் பரிபாலித்தான். அவனுடைய புத்திரன் தர்மங்களை உணர்ந்தவனான திலீபன். அம்சுமான் திலீபனுக்கு முடி சூட்டிவிட்டுச் சுவர்க்கம் சேர்ந்தான்.

67—70. திலீபன் சகரர்களுடைய துர்மரணத்தைக் கேட்டு வருந்தித் துக்கப்பட்டு, அவர்களுக்கு நற்கதி யளிக்க முயன்றான். ஆகாயகங்கையைப் பூமியில் கொண்டுவருகிறதற்காக வெகு பிரயாசைப் பட்டான். எவ்வளவு பிரயாசைப்பட்டும் முடியாமல் போய் விட்டது. அவனுக்குத் தர்மமும் அழகுமுள்ள ஒரு புத்திரன் பிறந்தான். இவன்தான் பகீரதன். சத்தியவான். செருவம் முதலிய துர்க்குணங்கள் இல்லாதவன். அவன் தவம் புரியக் கருதி வனத்துக்குப் போனான். அங்கே உக்கிரமான தவம் புரிந்து சித்தியடைந்த பின் சொர்க்கம் சென்றான்.

---

## 108 வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—3. வில்லாளியும் நேர்வீரனுமான பகீரதன் எல்லாருடைய கண்களுக்கும் மனதுக்கும் மகிழ்ச்சியுண்டாக்கி வந்தான். அவன் தன்னுடைய பூர்வ பிதாக்களான சகரர்கள் கபில முனிவருடைய கோபத்தால் அழிந்து போனதையும், கதிபெறாமல் இருப்பதையும் கேள்விபட்டு வருந்தினான். உடனே தன் அரசாட்சியை மந்திரிகளிடத்தில் ஒப்புவித்து விட்டுத் தவம் செய்வதற்காக இமயமலை நோக்கிச் சென்றான்.

4—15. அந்த மலையானது அழகு பொருந்தியுள்ள அநேக சிகரங்களால் வெகு அலங்காரமா யிருந்தது. பலவகைப் பொருள்களாலும நிரம்பி யிருந்தது. காற்றினால் அடித்துக்கொண்டு போகப்படுகிற மேகங்கள் அதனது நாலா பக்கங்களிலும் மழைத் துளிகளைச் சிதறிக்கொண்டிருந்தன. ஆறுகளும், சோலைகளும், கற்பாறைகளும் நிறைந்து மனோகரமா யிருந்தது. குகைகளிலும், பள்ளங்களிலும், சிங்கங்களும், புலிகளும் வசித்துக் கொண்டிருந்தன. வாத்து, நீர்க்கோழி, சக்கரவாகம் முதலிய பலவகைப் பட்சிகளின் தொனியால் விளங்கிக் கொண்டிருந்தது. பல வர்ணமுள்ள தோகையை யுடைய மயில்களும்,

குயில்களும், சகோரங்களும், தங்கள் தங்களுடைய குஞ்சுகளைக் காப்பாற்றிக் கொண்டிருந்தன. தாமரைகள் செழித்திருக்கும் நீர்த் துறைகள் தோறும் கொக்குகளின் இன்பமான தொனிகள் மலிந்திருந்தன. பாறைகளிலே கின்னரர்களும் அப்ஸரஸ்களும் உட்கார்ந்திருந்தார்கள். மரங்களெல்லாம் யானைத் துதிக்கைகளால் அசைக்கப்பட்டன. வித்தியாதரர்கள் உலாவிக் கொண்டிருந்தார்கள். மாணிக்கத்தையும் கொடிய விஷத்தையும் உடைய சர்ப்பங்கள் குடி கொண்டிருந்தன. அஞ்சனக் குவியல் போன்ற அந்த இமய மலையில் பகீரதன் வந்த இடமானது இத்தன்மையதா யிருந்தது. கீர்த்தி பெற்ற பகீரதன் கனிகள், கிழங்குகளையும், தண்ணீரையும் புசித்துக்கொண்டு உக்கிரமான தவசு செய்தான். இப்படியாக ஆயிரம் தேவ வருஷங்கள் கழிந்தன. அதன் பின் கங்காதேவி திவ்ய சொரூபத்துடன் பிரத்தியட்சமானாள். பகீரதனை நோக்கி மனிதருட் சிறந்தவனே! மஹாராஜனே! உனக்கு என்ன வேண்டும்? நான் உனக்கு என்ன வரங் கொடுக்க வேண்டும்? சொல்லு, நீ சொன்னபடியே செய்கிறேன் என்றாள்.

16—27. பகீரதன் இமயமலை யரசன் புத்திரியான கங்காதேவியைப் பார்த்துச் சொல்லுகிறான். வரத்தை அளிப்பவளே! மஹாநதி சொரூபியே என்னுடைய பிதாமகர்கள் கபிலருடைய கோபத்தினாலே எமபுரம் சேர்ந்தார்கள். அவர்கள் மகிமையுள்ள சகரராஜனுடைய புத்திரர்கள். அறுபதினாயிரம் பேர்கள். கபிலரை யெதிர்த்துச் சந்நிதியில் இறந்து போனார்கள். அவர்கள் சொர்க்க லோகத்தில் இடம் பெற வில்லை. மஹாநதியே! உன்னுடைய பரிசுத்தமான நீரால் அவர்கள் சரீரம் நனைகிறவரையில் அவர்களுக்குக் கதியில்லை. ஆகையால் சகர புத்திரர்களாகிய அவர்களை நீ சொர்க்க லோகம் சேர்ப்பிக்க வேண்டும். அவர்களுடைய நன்மையைக் குறித்தே நான் உன்னைப் பிரார்த்திக்கிறேன் என்றான். இதைக் கேட்டுக் கங்கா தேவி மகிழ்ந்து சொல்லுகிறாள். மஹா ராஜனே! நிச்சயமாகவே நீ சொன்னபடி நான் செய்கிறேன. நான் வானத்திலிருந்து பூமியிலிறங்கும் போது என் வேகத்தை பூமி தாங்க மாட்டாது. அரசனே நீலகண்ட மூர்த்தியாகிய பரமசிவனைத் தவிர என் வேகத்தைத் தாங்கி நிற்கிறவர்கள் மூன்று உலகங்களிலும் ஒருவரும் கிடையாது. அரசனே! ஆகையால் வரத்தை அளிப்பவரான பரமசிவனை நோக்கி நீ தவம் செய். அந்த மஹா தேவன், நான் பூமியில் இறங்கும் போது என்னைத் தமது சிரசில் தாங்கிக் கொள்வார்கள். உன்னுடைய பூர்வ பிதாக்களின் நிமித்தம் நீ விரும்புகிறபடி அவர் செய்வார் என்று சொன்னாள். அதைக் கேட்ட பகீரதன் கைலாச மலைக்குப் போய்ப் பரமசிவனை நோக்கித் தவம் செய்தான். கொஞ்ச காலத்துக்குப் பின் பரமசிவன் அவனுக்கு பிரத்தியட்சமாய்க் கங்கையைத் தன் சிரசில் தாங்கிக் கொள்வதாக வர மளித்தார்.

---

## 109-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—10. யுதிஷ்டிரா! பகீரதன் சொன்னதைக் கேட்ட சூலபாணியானவர் அவனை நோக்கி அரசனே! அப்படியே யாகட்டும். பரிசுத்தமான அந்தத் தெய்வ நதி பூமியில் வரும் போது, அதை உன் ப்ரீதிக்காக நான் என் சிரசில் தாங்கிக் கொள்கிறேன் என்று சொல்லி விட்டுத் தம்முடைய பரிவாரங்களுடன் இமயமலை வந்து சேர்ந்தார். அங்கே வந்ததும், அவர் பகீரதனைப் பார்த்து அரசனே! ஹிமாலய புத்திரியான கங்கையை வரும்படி வேண்டு. அந்த நதியை நான் சிரசில் ஏற்றுக் கொள்கிறேன் என்றார். பகீரதனும் உடனே கங்கையைத் தியானித்தான். அரசன் தியானித்ததையும், ஈசானர் வந்து நிற்பதையும் பார்த்து கங்கா தேவி வெகு வேகமாய்ப் பூமியில் இறங்குகிறாள். அதைக் கண்டு தேவர்கள், ரிஷிகள், கந்தர்வர், நாகர், யக்ஷர் எல்லாரும் வேடிக்கை பார்க்க வந்தார்கள். மீன்கள் முதலைகளுடன் கங்காதேவி பயங்கரமாக வானத்திலிருந்து இறங்குகிறாள் பரமசிவன் உடனே அதைத் தன் சிரசில் தாங்கிக் கொண்டார். அவருடைய நெற்றியில் கங்கை விழுந்த உடனே ஒரு முத்து மாலை போல விளங்கியது. பிறகு அந்த நதியானது மூன்று பங்காகப் பிரிந்து ஓடிற்று.

11—21. செல்லும் போது அநேக அன்னப் பறவைகள் பரவியது போலவும், சில இடத்தில் வளைந்தும், சில விடத்தில் பின்னல் போலவும், மற்ற நதிகளைப் போலச் சில விடங்களில் கலங்கியும், நுரைகளினுலே வஸ்திரங்களாற் போர்க்கப்பட்டது போலவும், சில விடங்களில் மதுபானம் பண்ணின ஸ்திரீகளைப் போலவும் சென்றது. சில விடங்களில் மேலெழுந்து கர்ஜித்துக் கொண்டும், பல வகையான தோற்றங்களுடன் பூமியிலிறங்கிப் பகீரதனைப் பார்த்து அரசனே! நான் போக வேண்டிய வழியைக் காட்டு. அரசனே! நான் உனக்காகப் பூமியில் வந்திருக்கிறேன் என்றாள். பகீரதன் சகரர்களுடைய சரீரங்கள் கிடக்கும் இடத்தை நோக்கி முன்னே சென்றான். எல்லா உலகத்தாராலும் வணங்கப்படுகிற சிவன் கங்கையைத் தாங்கினபின் கைலாசம் போய்ச் சேர்ந்தார். பகீரதன் கங்கையுடன் கூடச் சென்று, வருணனுடைய இருப்பிடமான சமுத்திரத்தை நீரால் நிரப்பினான். அந்தக் கங்கையும் அவனுக்குப் புத்திரியானாள். இப்படியாகத் தன் கருத்து நிறைவேறினதும், பகீரதன் அந்த நீரினாலே தர்ப்பணமுதலிய நீர்க்கடன்களைச் செய்து முடித்தான் என்றுகூறி, ரோமசர் தர்மராஜாவைப் பார்த்து மஹாராஜாவே! திரிபதகை யென்கிற கங்கை பூமியில் வந்து கடலை நிரப்பினதையும், மஹாத்மாவான அகஸ்தியர் கடலைக் குடித்ததையும், வாதாபியைச் சங்கரித்ததையும் மற்றும் நீ கேட்ட எல்லாவற்றையும் சொல்லி விட்டேன் என்றார்.

———

## 110-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—6. வைசம்பாயனர் ஜனமேஜயனை நோக்கிப், பாரதனே! பிறகு குந்தி புத்திரர்கள் பயத்தை போக்குவனவான நந்தா, அபரநந்தா என்னும் நதிகளை நோக்கிச் சென்றார்கள். பிறகு வைராக்கியமுள்ள ஹேமகூட மலையை அடைந்தார்கள். அங்கே அநேக அற்புதங்களையும் எண்ணற்கரிய காட்சிகளையும் கண்டார்கள். காற்றினாலே மேகங்கள் திரண்டு மழை பொழிந்தன. பல சடைவைகளில் ஆலங்கட்டி மழை பெய்ததனால் ஜனங்கள் மேலே ஏறிப் போக முடியாமல் துயரப் பட்டார்கள். சதா காற்று வீசிக்கொண்டேயிருந்தது. தேவர்கள் பூமாரி பெய்து கொண்டேயிருந்தார்கள். எப்போதும் வேதகோஷம் கேட்கப்பட்டது. ஆயினும் கண்ணுக்கு ஒருவரும் புலப்படவில்லை. காலையும் மாலையும் ஹோமாக்கினி காணப்பட்டது. வண்டுகள் மனிதர்களைக் கடித்தன. அங்கே தவத்திற்கு இடையூறு உண்டாயிற்று. அவ்விடத்தில் பலர் வியாதிப்பட்டார்கள். எல்லாருடைய மனதிலும் துக்கம் நிறைந்தது. இவைகளை எல்லாம் பார்த்து யுதிஷ்டிரர் அந்த அற்புதங்களை விளக்கும்படி கேட்டார்.

7—21. ரோமசர் யுதிஷ்டிரரை நோக்கி, சத்ரு சங்காரனே! நான் அவைகளைப் பற்றி முன் காலத்தில் கேட்டிருக்கிறபடி தெளிவாய்ச் சொல்லுகிறேன் கவனமாய்க் கேளு என்று சொல்லுகிறார். இந்த ரிஷப மலையில் ரிஷப ரிஷி என்று பெயர் கொண்ட ஒரு முனிவர் அநேக நூறு வருஷம் தவசு புரிந்தார். அவர் கோபமுள்ளவர். அவரை அநேகர் பேர் கூறி அழைத்தார்கள். அதனால் அவர் கோபங்கொண்டு மலையை நோக்கி, மலையே! எவனாவது இவ்விடத்தில் வாய் திறந்து பேசினால் அவன் மேல் கல்லை எறி காற்றை நோக்கி இங்கே சப்தம் உண்டாகாதபடி செய் என்றார். அதனால் எவனாவது இவ்விடத்தில் பேசினால் இடி முழக்கம் தடுக்கிறது. அரசனே! இவை யெல்லாம் அந்த முனிவருடைய செய்கை என்று அறிந்து கொள். சில காரியங்களை கோபத்தினால் செய்தார். சிலவற்றைக் கோபத்தைத் தடுக்கும்படி செய்து வைத்தார். பூர்வ காலத்தில் தேவர்கள் இந்த நந்தா நதிக்கு அடிக்கடி வந்தார்கள். மனிதர்கள் அந்தத் தேவர்களைப் பார்க்க விரும்பிப் போவார்கள். தேவர்களுக்கும் இந்திரனுக்கும் மனிதர்களால் காணப்படுகிறதற்கு இஷ்டமில்லை. ஆகையால் இந்த மலைமேல் ஒருவரும் ஏறி வர முடியாதபடி இந்த இடத்தை உயரமாகச் செய்து விட்டார்கள். குந்தி குமாரனே! அது முதல் இந்த மலையைக் காணக்கூட முடியாமற் போயிற்று என்றால் மனிதர்களால் எப்படி ஏற முடியும். தவம் செய்து சித்தி பெற்றவனைத் தவிர மற்றவரால் பார்க்கவாவது ஏறவாவது முடியாது என்று பரம்பரையாய்க் கூறி வருகிறார்கள். ஆகையால் நீ பேசாமலிரு. தேவர்கள் இந்த இடத்தில் சிறந்த யாகங்கள் செய்தார்கள். அவற்றின் அடையாளம் இன்னும் காணப்படுகின்றன. அரசனே! இந்தப் புல்

குசப்புல் போல இருக்கின்றது. ஆதலால் இந்த இடம் முழுமையும் பரிசுத்த மான அந்தப் புல்லால் நிறைந்திருக்கிறது. இவ்விடத்திலுள்ள அநேக மரங் கள் யூபஸ்தம்பங்களைப் போலக் காணப்படுகின்றன. பாரதனே! தேவர்களும் ரிஷிகளும் எப்பொழுதும் இங்கே வசிக்கிறார்கள். காலையும் மாலையும் அவர் கள் செய்யும் ஹோமாக்னி காணப் படுகின்றது. குந்தி புத்திரனே! இதில் ஸ்நானம் செய்தவன் உடனே சகல பாபங்களினின்றும் விடுபடுவான். ஆகையால் உன் சகோதரர்களுடன் நித்திய கடன்களைச் செய். பிறகு நந்தா வில் ஸ்நானம் செய்து பரிசுத்தமான பின், விசுவாமித்திரர் உக்கிரமான தவம் பண்ணின கௌசிகி நதிக்குப் போகலாம் என்றார். யுதிஷ்டிரர் அவ்வாறே தமது மனிதர்களுடன் ஸ்நானம் செய்து பின், குளிர்ந்த நீரையுடைய கௌ சிகி நதிக்குப் போனார்.

22—31. ரோமசர் சொல்லுகிறார். பாரதனே! இது தான் கௌசிகி நதி. புண்ணியமானது. தெய்வத் தன்மை யுள்ளது. இங்கே விசுவாமித் திரருடைய ஆச்சிரம மிருக்கிறது. இந்த ஆச்சிரமம் காசியபர் புத்திரரான ரிசிய சிருங்கருடையது. இவர் தமது தவ வல்லமையால் இங்கே மழை பொ ழியும்படி கட்டளை யிட்டார். வலனையும் விருத்திரனையும் சங்கரித்த இந்தி ரன் அவருக்குப் பயந்து, அது முதல் அடிக்கடி ஓயாமல் மழை பொழியச் செய்கிறான். ரிசிய சிருங்கர் மான் வடிவமாகப் பிறந்தார். ரோமபாத ராஜ னுடைய நாட்டில் பெரிய அற்புதம் செய்தார். ரிசிய சிருங்கர் (கலைக் கோ ட்டு முனிவர்) ரோமபாதன் ராஜ்யத்தில் மழை பொழியச் செய்தார். அதனால் அந்த நாட்டில் தானியங்கள் விருத்தியாயின பின் ரோமபாதன் தன் குமா ரத்தி சாந்தை என்பவளை அவருக்கு விவாகம் செய்து கொடுத்தான் என்று சொன்னார். யுதிஷ்டிரர், காசியபருக்கு ரிசிய சிருங்கர் மான் உருவமாக எப் படி ஜனித்தார்? உலக விவகாரத்துக்கு மாறாகப் பிறந்த அவர் எப்படி தவம் புரிந்தார்? வலனையும் விருத்திரனையும் சங்கரித்த தேவேந்திரன் ஏன அந்தச் சிறுவனுக்குப் பயந்து மழை பொழிவித்தான்? சாந்தை எப்படிப்பட்டவள்? ரோமபாதன் தர்மிஷ்டன் என்று அறிந்தும் அவன் இராஜ்யத்தில் ஏன இந்தி ரன் மழை பொழிய வில்லை? மகிமை யுள்ளவரே! ரிசிய சிருங்கரைப் பற்றின இந்தச் சரித்திரங்களை எனக்குத் தெளிவாகச் சொல்ல வேண்டுமென்று கே ட்க ரோமசர் சொல்லுகிறார்.

32—40. ரிசிய சிருங்கருடைய பிறப்பு முதலியவைகளைச் சொல்லுகி றேன் கேள். காசியபர் வம்சத்தில் விபாண்டகர் என்று ஒருவரிருந்தார். அவர் தன்னடக்க முள்ளவர், ஜிதேந்திரியர்; தவத்தில் சிறந்தவர்; அவரது பிந்து வியர்த்தமாகிற தில்லை; சகல கலைகளையும் கற்றவர்; பிரமாவைப் போன்ற தேஜசுள்ளவர். அந்த விபாண்டகருடைய புத்திரரான ரிசிய சிருங்கர் எல் லாராலும் பெருமையாக மதிக்கப்பட்டவர். சிறு பிள்ளையா யிருந்தாலும் பெ ரியோர்களும் கூட அவரை மதித்துக் கனம் செய்வார்கள். மிகுந்த மகிமை

யுள்ளவர் காசியப புத்திரரான விபாண்டகர் ஒரு பெரிய மடுவினிடம் தங்கி அங்கே உக்கிரமான தவசு செய்தார். தேவர்களுக்குச் சமானமாகிய அந்த முனிவர் வெகு காலத்துக்குப் பின் களைப்படைந்தார். அப்போது அந்த மடுவில் தமது முகத்தை அலம்பினர். ஜலத்துக்குள் ஊர்வசி என்னும் அப்சரஸின் பிரதிபிம்பம் தோன்றியது. அந்த வடிவைப் பார்த்த உடனே அவரது வீரியம் ஸ்கலிதமாய் நீரில் விழுந்தது. பிரமாவினுடைய அனுக்ஞையின்படி ஒரு பெண் மான் அங்கே தண்ணீர் குடிக்க வந்து நீரோடு அதையும் குடித்தது. உடனே கருத் தரித்தது. அப்சரஸானவள் பிரமாவின் சாபத்தால் மானு யிருந்தாள். ஒரு ரிஷியைப் பெற்றவுடன் சாபம் நீங்கும்படி வரந் தந்தருளினர். அந்தப் பிரமவசனம் தவருமல் நடந்தது. அந்தப் பெண் மான் வயிற்றினின்று தான் விபாண்டகர் புத்திரரான ரிசிய சிருங்கர் பிறந்தார். பிறந்தது முதல் சதா உக்கிரமான தவம் புரிந்தார். வனத்திலேயே காலங் கழித்து வந்தார். அவருடைய சிரசில் ஒரு கலை மான் கொம்பிருந்தது. அதனாலே அவருக்கு ரிசிய சிருங்கர் என்று பேருண்டாயிற்று. அவர் தமது பிதாவைத் தவிர வேறு ஒரு மனிதரையும் பார்த்த தில்லை. ஆகையால் அவருடைய மனம் பிரமசரியத்தில் நிலைத்திருந்தது.

41—48. யுதிஷ்டிரா! இந்தக் காலத்தில், அங்கநாட்டை அரசாண்டு வந்த ரோமபாதன் என்று ஒரு அரசனிருந்தான். அவன் தசரதனுக்குச் சிநேகிதன். அந்த அரசன் பிராமணர்களிடத்தில் மனமறிந்து ஒரு பொய் சொன்னன்: ஆகையால் எல்லாப் பிராமணர்களும் அவனைக் கைவிட்டார்கள். குரு இல்லாமையால் அந்த அரசன் பாவியானன். ஆகையால் ஆயிரங்கண்ணனை இந்திரன் மழை பெய்யாமல் செய்து விட்டான். மழை யில்லாமையால் ரோமபாதனுடைய பிரஜைகள் துன்ப மடைந்தார்கள். பூமிக்கிறைவனே! அப்போது ரோமபாதன் அறிவும் வல்லமையுமுள்ள அந்தணர்களை நோக்கி எப்படிச் செய்தால் இந்திரன் மழை பொழிவான் என்று கேட்டான். மேகம் எக் காரணத்தால் மழை பொழியும் அதைத் தெரிந்து சொல்லுங்களென்முன். அந்தப் பிராமணர்கள் எல்லாரும் ஒன்ருய்க் கூடித் தத்தம் கருத்தை வெளிப் படுத்தினர்கள். கடைசியில் ஒரு பெரிய முனிவர் அரசனை நோக்கி அரசர்க் கரசனே! பிராமணர்கள் உன் மேல் கோபமா யிருக்கிருர்கள். முதலில் அவர்களைச் சமாதானப்படுத்தும். அரசனே! பின்பு விபாண்டகமுனிவரின் புத்திரரான ரிசிய சிருங்கமுனிவரை அழைத்து வரச் சொல்லும். அவர் ஒருபோதும் பெண்களைப் பார்த்து அறியாதவர். அவர் வனத்திலேயே வசித்துக்கொண்டிருக்கிருர். கொஞ்சத்திலேயே மகிழ்ச்சி யடைந்து விடுவார். அந்த மஹரிஷி உமது நாட்டில் வந்தவுடனே, கொஞ்சங்கூடச் சந்தேக மில்லாமல் மேகம் மழை பொழிந்து கொண்டிருக்கும் என்று சொன்னர்.

49—52. யுதிஷ்டிரராஜனே! ரோமபாதராஜன் அந்த வசனங்களைக் கேட்டதும், தன்னுடைய துர்ச்செய்கைக்காகப் பிராயச்சித்தம் செய்து கொ

ள்ள வேண்டியது அவசியம் தான் என்று உடன்பட்டான். உடனே பிராமணர்களிடம் போய் அவர்களைச் சமாதானமாகப் படுத்திக் கொண்டு நகரத்துக்குத் திரும்பி வந்தான். அரசன் அவ்வாறு வந்ததைக் கேட்ட ஜனங்கள் மிகவும் சந்தோஷப்பட்டார்கள். உடனே மந்திராலோசனையில் சிறந்த மந்திரிகளை வரும்படி அரசன் ஆக்ஞாபித்தான். அந்த மந்திரிகள் எல்லாரும் சாஸ்திரங்களை உணர்ந்தவர்கள். உலக விவகாரங்களில் தேர்ந்தவர்கள். எப்போதும் ஆராய்ந்தறியும் சக்தியுள்ளவர்கள். ரிசியசிருங்கரை அழைத்து வருவதற்குத் தக்க முயற்சிகளைச் செய்வதைப் பற்றி அவர்களிடம் யோசனை கேட்டான். அவர்களுடைய உதவியால் ஒரு உபாயம் கண்டு பிடித்துக்கொண்டான். அதன் பின் நாட்டில் எல்லா விஷயங்களிலும் தேர்ந்தவர்களாயிருக்கிற சில கணிகையர்களை வரவழைத்து அவர்களிடம் சொல்லுகிறான்.

53—58 மாதர்களே! ரிஷிகுமாரராகிய ரிசியசிருங்க முனிவரை இந்த நகரத்துக்கு அழைத்துக் கொண்டு வருகிறதற்கு ஒரு உபாயம் பண்ணுங்கள். அழகான மாதர்களே! அவரை மயக்கஞ் செய்து, அவருடைய கிருபையையடைந்து இந்த ராஜ்யத்துக்குள் அழைத்துக் கொண்டு வாருங்கள் என்றான். அதைக் கேட்ட பெண்கள் அரசனுடைய கட்டளைக்கும், அந்த முனிவருடைய மகிமைக்கும் அஞ்சி நடுங்கினார்கள். அவர்கள் முகம் வெளுத்தன. மனம் கலங்கின. பின் அரசனை நோக்கி இந்தக் காரியத்தை நிறைவேற்ற எங்களால் ஆகாது என்றார்கள். அதன் பின் அவர்களுள் ஒரு கிழவி அரசனை நோக்கிச் சொல்லுகிறாள். மஹாராஜனே! அந்த முனிவரை அழைத்துக் கொண்டு வருகிறதற்கு உபாயம் செய்கிறேன். அதற்கு வேண்டிய பொருள்களை நான் எப்போது கேட்டாலும் தடையில்லாமல் கொடுக்கும்படி உத்தரவு செய்ய வேண்டும் என்றாள். அரசன் அவளுக்கு மிகுந்த திரவியமும், இரத்தினங்களும், ஆபரணங்களும் கொடுத்தான். அந்தக் கிழவி கேட்டவைகளைத் தடையின்றிக் கொடுக்கும்படி உத்தரவு செய்தான். யுதிஷ்டிர மஹாராஜனே! அந்தக் கிழவி அழகும் யௌவனமுமுள்ள சில பெண்களையும் தன்னுடன் சேர்த்துக் கொண்டு வனத்தை நோக்கிப் போனாள்.

---

## 111-வது அத்தியாயம்.

### தீர்த்த யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—5 ரோமசர் சொல்லுகிறார். பாரதனே! அரசனுடைய காரியத்தை நிறைவேற்றும் பொருட்டு அந்தக் கிழவி வனத்தில் ஒரு மிதவை ஆச்சிரமதலை [illegible] கொண்டாள். அந்தக் காரியம் அரசனால் கட்டளையிடப்பட்டதும் தவிர அவளுடைய மனதுக்கும் உடன் பாடாயிருந்தது. அந்த இன்பமான மிதவை யாச்சிரமம் மேன்மை யுள்ளதாயும், விநோதமாயும்,

மஹா அழகுள்ளதாயும், மகிழ்ச்சி யுண்டாக்கக் கூடியதா யிருந்தது பல வகையான செடிகளும், கொடிகளும் நிரம்ப இருந்தன. விசித்திரங்கள் அமைந்த பல செய்மரங்கள் பூத்தும் காய்த்தும் உள்ளன போலச் செய்து வைக்கப்பட்டிருந்தன. பல வகையான கனி தரும் மரங்களும் நிறைந்திருந்தன. அதன் பின் அந்த மிதவை ஆச்சிரமத்தை (நீரில் மிதக்கும் படி தெப்பம் போலச் செய்யப்பட்டது) நங்கூரம் போட்டுச், செலுத்திக்கொண்டு போய் விபாண்டகா ஆச்சிரமத்தருகே நிறுத்தினாள். அதன் பின் ரிசிய சிருங்கர் அடிக்கடி வருகிற இடத்தைத் தெரிந்து கொண்டு வரும்படி மனிதர்களை அனுப்பினாள். பிறகு தன் மனதுக்குள் ஒரு உபாயத்தை யோசித்து வைத்துக்கொண்டு, அதற்குத் தக்க சமையம் பார்த்துக் கொண்டிருந்தாள். எல்லாவற்றிலும் மிகுந்த சாமர்த்திய முடைய தன்னுடைய குமாரத்தியை அழைத்து வைத்துக்கொண்டாள். அந்தப் பெண்ணைக் கலைக்கோட்டு முனிவரிடம் அனுப்பினாள்.

6—10. வல்லமையுள்ள அந்தப் பெண் முனிவராச்சிரமத்தை நோக்கிச் சென்று, அவர் சமீபத்தில் போய் அவரைப் பார்த்தாள். அதன் பின் அவரை நோக்கிச் சொல்லுகிறாள் ரிஷிகுமாரரே! தவத்துக்குரிய எல்லாம் இங்கே நிறைந்திருக்கின்றன. கனிகளும், கிழங்குகளும் இவ்விடத்தில் நிரம்பக் கிடைக்குமென்று எண்ணுகிறேன். இந்த ஆச்சிரமத்தில் நீர் மகிழ்ந்து வசிக்கிறீர். நான் தங்களைப் பார்க்க விரும்பி வந்திருக்கிறேன். இவ்விடத்திலிருக்கிற தவசிகளுடைய தவசு அபிவிருத்தியாகும். உமது பிதா மஹா சக்தியுள்ளவர்: அவர் உமயிடத்தில் பிரியமா யிருப்பாரென்றே கருதுகிறேன். முனீசுவரரே! நீர் கற்க வேண்டிய கல்விகளைக் கற்றுக்கொண்டு இருக்கிறீரென்று நினைக்கிறேன் என்று சொன்னாள். முனிவர் அவளை நோக்கி நீ மின்னலொளியைப் போலப் பிரகாசிக்கிறாய். நீ வணங்கத் தக்கவளென்று நான் எண்ணுகிறேன். உன் கால்களைக் கழுவிக் கொள்ள நீரும், நீ விரும்பினபடி கிழங்குகளும் கனிகளும் என் குலாசார முறைப்படி தருகிறேன். குசப்புல்லால் செய்யப்பட்ட இந்த ஆசனத்தின் மேல் உன் சௌக்கியம் போல உட்காரு. உன் ஆச்சிரமம் எங்கே யிருக்கிறது? என்று கேட்டார். உன் பேர் என்ன? நீ அனுஷ்டிக்கும் இந்த விரதம் என்ன? என்று கேட்டார்.

11--18 அந்தப் பெண் சொல்லுகிறாள். கசியப புத்திரரே! என்னுடைய ஆச்சிரமம் இங்கே யிருந்து மூன்று யோசனை தூரத்தில் இருக்கிறது. அதோ தெரிகிற மலைக்கு அப்பால் உள்ளது. என்னுடைய ஜாதி முதலியவை வணங்கத்தக்கனவல்ல. நான் என் கால்களை அலம்ப நீரைத் தொடவே மாட்டேன். அந்தணரே! நான் உமது வணக்கத்தை அங்கீகரிக்கக் கூடாது நான் உம்மை வணங்கலாம். நான் ஒரு விரதம் கொண்டிருக்கிறேன். அதென்னவென்றால் நீர் என்னை ஆலிங்கனம் செய்துகொள்ள வேண்டுமென்று சொன்னாள். ரிசிய சிருங்கர் அவளை நோக்கி நான் உனக்குப் பழுத்த பல கனிகளை கொடுத்துப் பிரியத்துடன் புசிக்க வேண்டும் என்றார். அவளோ! அந்தக்

கனிகளை எடுத்துத் தூரத்தில் வைத்து விட்டு, அந்த முனிவர் புஜிக்கத் தகாத உணவை அவருக்குக் கொடுத்தாள். அவைகள் வெகு அழகாயும், நேர்த்தியாயும் இருந்தன. அவைகளெல்லாம் அவருக்குப் பிரியமாயிருந்தன அன்றியும் நல்ல வாசனையுள்ள மாலைகளையும், ஒளிவிடுகிற நல்ல வஸ்திரங்களையும் கொடுத்தாள். பிறகு அவருக்கு மதுவை அளித்தாள். அதன் பின் அவள் அவரோடு விளையாடினாள். எதிரில் அவர் மயங்குமாறு சிரித்தாள். அவரைத் தழுவிக் கொண்டாள். ஒரு பூங்கொடி தன் கனியோடு வளைவது போல வளைந்து பந்தாடினாள், பிறகு அவரைத் தன் சரீரத்தோடு தழுவிக் கொண்டாள். பிறகு அவள் வளைந்து, மரங்களிலுள்ள பூங்கொம்புகளை ஒடித்தாள். அது வெகு அழகாயிருந்தது; மதுபானத்தினால் மயங்கியிருக்கிற முனிவரை வசீகரித்தாள். ரிசிய சிருங்கர் மதிமயங்கியிருக்கிற சமையத்தில் அடிக்கடி அவரைத் தன் சரீரத்தோடு அணைத்துக் கொண்டாள். தன் கடைக் கண் வலையை அவர் மேல் வீசி விட்டு மெதுவாகப் போய் விட்டாள். அக்கினி ஹோத்திரம் செய்யப் போகவேண்டுமென்று சொல்லி விட்டுப் போய் விட்டாள்.

19—23. அவள் பிரிந்து போனபின் ரிசியசிருங்கர் அவள் மேல் அதிக காதல் கொண்டார். புத்தி மயங்கினார். அவள் மயமாய் விட்டார். வெற்றுடம்பாயினார். அடிக்கடி பெருமூச்செறிந்தார். மிகுந்த துக்கமடைந்தார். அப்போது விபாண்டகர் தம் புத்திரனிடம் வந்தார். அவருடைய கண்கள் சிங்கத்தின் கண்களைப் போலப் பிங்களவர்ணமாயிருந்தன. அவருடைய சரீரத்தில் மயிர் நிரம்ப இருந்தன. அந்த மயிர் அவருடைய பாதம் வரையிலும் தொங்கிக் கொண்டிருந்தன. சகல சாஸ்திரங்களையும் உணர்ந்தவர். பரிசுத்தமானவர். தம் ஆயுள் நாள்களெல்லா வற்றையும் தவத்தில் கழித்தார். அவர் உள்ளே வந்த போது தம் புத்திரன் தனிமையாய் உட்கார்ந்திருக்கிறதையும், துக்கமாயிருக்கிறதையும் பார்த்தார். ரிசியசிருங்கர் உயரப் பார்த்துக் கொண்டும், அடிக்கடி பெருமூச்செறிந்து கொண்டு இருந்தார். விபாண்டகர் துக்கப்பட்டுக் கொண்டிருக்கிற தமது புத்திரனைப் பார்த்துச் சொல்லுகிறார். குழந்தாய்! அக்கினி ஹோத்திரத்துக்காக ஏன் விறகு வெட்டவில்லை? இன்றைய தினம் நீ அக்கினி ஹோத்திரத்தைச் செய்து விட்டாயென்று நான் எண்ணுகிறேன். அக்கினி ஹோத்திரக் கரண்டி முதலிய வற்றைச் சுத்தி செய்து விட்டாயா? பசுவையும் கன்றுக் குட்டியையும் வெளியில் கொண்டு வந்து விட்டாயா? புத்திரா! நீ இன்று எப்போதும் போலிருக்கவில்லை. துக்கமாயும் புத்தி மயங்கினவனாயு மிருக்கிறாய். இன்றைய தினம் ஏன் துக்கமாயிருக்கிறாய்? இன்றைய தினம் இங்கே வந்தது யார்? எனக்குச் சொல் என்றார்.

---

## 112-வது அத்தியாயம்,

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. ரிசிய சிருங்கர் சொல்கிறார். ஜடைமுடி தரித்த ஒரு பிரமசாரி இங்கே வந்தார். அவர் அதிக உயரமாயுமில்லை. குட்டையாயு மில்லை. அவருடைய தோற்றம் சொர்ணமயமா யிருந்தது அவருடைய கண்கள் விசாலமாயும் செந்தாமரை மலரைப் போலவு மிருந்தன தேவனைப் போல அழகுள்ளவராயும் பிரகாச முள்ளவராயு மிருந்தார். அவருடைய அழகு சூரியனைப் போல இருந்தது. அவருடைய கண்கள் அழகாயும் கறுப்பாயும் இருந்தன. அவருடைய ஜடைமுடி நீலவர்ணமா யிருந்தது. வாசனை யுள்ளதாயும் நீண்டும் இருந்தது. தங்கச் சங்கிலிகள் அந்தச் சடையில் அணிந்திருந்தது. அழகான ஒரு நகை அவருடைய கழுத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அது வானத்தில் காணப்படும். மின்னலை ஒத்திருந்தது. அவருடைய மார்பில் சதைப் பற்றுள்ளனவாயும், உரோம மற்றனவாயும், வெகு அழகுள்ளனவாயும் வழவழப்பாகவுமுள்ள இரண்டு பந்துகள் இருந்தன. அவருடைய இடுப்பு வெகு சிறியதாயிருந்தது. தொப்புள் நோத்தியா யிருந்தது. விலாப்புறம் வழவழப்பாய் அழகா யிருந்தது. நான் தரித்திருக்கிற அரை நாணைப் போல அவர் இடுப்பிலும் ஒரு தங்க அரை நாணிருந்தது. அவரது பாதத்தில் அழகான பொருள்கள் இருந்தன. அவை கலகலவென்று ஒலித்தன. அவருடைய மணிக்கட்டுகளிலும் சில அழகான ஆபரணங்க ளிருந்தன. அவைகளும் இனிமையாய்ச் சப்தித்தன. அவர் நடக்கிற போது அவர் காலிலுள்ள ஆபரணங்கள், குளத்தில் உலாவும் அன்னப் பறவைகளைப் போல ஒலித்தன. அவருடைய வஸ்திரம் வெகு அழகா யிருந்தது. என்னுடைய வஸ்திரம் அவ்வளவு அழகாயிருக்க வில்லை, அவருடைய முகம் வெகு அழகா யிருந்தது அவருடைய தொனி மனதுக்கு மகிழ்ச்சி தந்தது. அவருடைய வார்த்தைகள் பெண் குயில் போலிருந்தன. நான் அவைகளைக் கேட்டு வெகு மகிழ்ச்சி யடைந்தேன். வசந்த காலத்தின் மத்தியில் இளங் காற்று வீசும்போது வனங்கள் எப்படி அழகா யிருக்குமோ அவ்வளவு அழகாயக் காணப்பட்டார். அவருடைய தலைமயிர் பின்னப்பட்டிருந்தது. அவருடைய கண்கள் சக்கிரவாகப் பறவைப் போலிருந்தன. அவர் கையில் ஒரு உருண்டையான பழ மிருந்தது. அது பூமியில் விழுந்து அடிக்கடி ஆகாயத்தை நோக்கிச் சென்றது. அது பார்க்க விநோதமா யிருந்தது. அவர் சுழன்று சுழன்று அதை அடித்தார். காற்றினால் அசைக்கப்படுகிற மரத்தைப் போல அவர் சுழன்றார். பிதாவே! நான் அவரைப் பார்த்த போது அவர் ஒரு தேவ குமாரனைப் போலத் தோன்றினார். எனக்கு மஹா சந்தோஷ முண்டாயிற்று. நான் மகிழ்ந்திருந்தேன்.

21—19. அவர் என் சரீரத்தைத் தழுவிக் கொண்டார். அவர் என் ஜடையைப்பற்றி என் முகத்தை வளைத்துத், தன் முகத்தை என் முகத்தோடு சேர்த்து வைத்தார். என் வாயோடு அவர் வாயைச் சேர்த்து அணைத்தார்.

அவர் ஒரு இசை பாடினார். அது எனக்கு மிகவும் இன்பமா யிருந்தது. நான் கால் கழுவும் பொருட்டு அவருக்குக் கொடுத்த நீரையும், கனிகளையும் அவர் இலட்சியம் பண்ணவே யில்லை. அது அவருடைய விரதமென்று சொன்னார். அவர் எனக்குச் சில பழங்களைத் தந்தார். அவற்றை நான் சுவைத்துப் பார்த்தேன். இங்கே உள்ள பழங்கள் அவற்றுக்கு ஒப்பாக மாட்டா. இவ்விடத்துக் கனிகளுக்கு இருப்பது போல அவற்றுக்குத் தோலுமில்லை கொட்டையுமில்லை. கம்பீரமான தோற்றத்தை யுடைய அவர் குடிக்கும்படி எனக்குக் கொஞ்சம் நீர் கொடுத்தார். அது வெகு சுவையுள்ளதா யிருந்தது. அதைக் குடித்ததும் எனக்கு வெகு இன்பம் உண்டாயிற்று. என் பாதத்தின் கீழிருக்கிற பூமி சுழல்கிறது போல எனக்குத் தோன்றியது. பட்டுக் கயிற்றில் கோத்த இந்த அழகும் வாசனையுமுள்ள மாலைகள் அவருடையன. தவத்தினால் ஜ்வலித்துக் கொண்டிருந்தபடியால் இந்த மாலைகளை இங்கே எறிந்து விட்டுப் போனார். பிறகு அவர் தமது ஆசிரமத்துக்குப் போய் விட்டார். அவருடைய பிரிவினாலே என் மனம் வருந்துகின்றது. என் தேகம் எரிகிறது போலக் காண்கிறது. கூடிய சீக்கிரத்தில் நான் அவரிடம் போக விரும்புகிறேன். அவரும் எப்போதும் இங்கே வந்து கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். பிதாவே! இந்த க்ஷணத்திலேயே நான் அவரிடம் போக வேண்டும். அவர் அநுசரித்த பிரமசரியத்தின் பேர் என்ன? நானும் அதைப் பற்றி நடக்கப் பிரியப்படுகிறேன். அவர் கொண்ட ஒழுக்கத்தைப் பற்றுவதிலேயே எனக்குப் பிரியமிருக்கிறது. அவரைக் காணாவிட்டால் என் மனம் வேகிறது என்றார்.

---

## 113-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—4. விபாண்டகர் சொல்லுகிறார். குழந்தாய்! அவர்கள் இராட்சதர்கள். அவர்கள் அற்புதமான அழகுள்ள சொரூபத்துடன் இங்கே வருவார்கள். அவர்களுடைய சக்திக்கு ஒப்பு இல்லை. அவர்களுடைய அழகு அற்புதமானது. அவர்கள் எப்போதும் தவத்தை அழிக்க விரும்புகிறவர்கள், புத்திரனே! அவர்கள் அழகான சொரூபத்தை எடுத்துக் கொண்டு, மனிதர்களைப் பல விதத்திலும் மயக்குகிறார்கள். பயங்கரமான அவர்கள் ரிஷிகளை முத்தி யுலகத்திலிருந்து வனங்களில் தள்ளி விடுகிறார்கள். புண்ணிய லோகங்களை அடைய விரும்புகிறவர்களும், அடக்கமுள்ளவர்களுமான ரிஷிகளை முத்தி யுலகத்திலிருந்து வனங்களில் தள்ளிவிடுகிறார்கள். புண்ணிய லோகங்களை அடைய விரும்புகிறவர்களும், அடக்கமுள்ளவர்களுமான ரிஷிகள் அவர்களை ஒருபோதும் அநுசரிக்கக் கூடாது. அந்தப் பாபாத்மாக்கள் எப்போதும் தவத்தை அழிக்க விரும்புகிறார்கள். ஆகையால் துறவிகள் அவர்களைப்

பார்க்கவே கூடாது. புத்திரா! நீ குடித்தபானம் புத்தியை மயக்கும் மது. அதைத் துஷ்டர்கள் அருந்துவார்கள். நல்ல மனிதர்கள் அதைத் தொடவும் கூடாது. ஒளியும் பலவண்ணமும் உள்ள இந்த மாலைகள் ரிஷிகளுக்கு ஏற்றவை யல்ல என்று சொன்னார்.

5—9. விபாண்டகர் அவர்கள் இராட்சதர் என்று தம் புத்திரனுக்குச் சொல்லித் தடுத்து விட்டு, அவளைத் தேடிக்கொண்டு போனார். மூன்று நாள் தேடியும் அகப்படாமையால் விபாண்டகர் தமது ஆச்சிரமத்தை அடைந்தார். விபாண்டகர் கனிகளுக்காக வெளியிற் போயிருந்த சமையத்தில் அந்தப்பெண் மறுபடியும் ரிசிய சிருங்கரிடம் வந்தாள். அவளைக் கண்ட வுடனே ரிசிய சிருங்கர் மிகவும் மகிழ்ந்தார். உடனே அவர் எழுந்திருந்து அவளுக்கு எதிர் கொண்டு போய், என் பிதா வருகிறதற்குள் நாம் உன் ஆச்சிரமத்துக்குப் போவோம் என்றார். யுதிஷ்டிர மஹா ராஜனே! விபாண்டகருடைய ஒரே புத்திரரான அவரைப் படகின் மேலேற்றிக்கொண்ட வுடனே நங்கூரத்தை எடுத்து விட்டுப் படகை ஓடச் செய்தாள். பல விதங்களாலும் அவரை மகிழச் செய்து அங்கதேசத்து அரசனிடம் அவரைக் கொணர்ந்து சேர்த்தாள். பிறகு முற்றும் வெண்ணிறமான படகை நீரினின்றும் எடுத்து ஆச்சிரமத்துக்கு எதிரில் வைத்தாள், பிறகு சிறந்த காடுகளை உண்டாக்கி அதற்கு மிதவை ஆசிரமம் என்று பேரிட்டாள்.

10—13. உரோமபாத ராஜன் ரிசிய சிருங்கரைப் பெண்கள் வசிக்குமிடத்திலேயே வைத்திருந்தான். பிறகு வானத்திலிருந்து திடீரென்று மழை பெய்தது. பூமியெங்கும் நீர் வெள்ளமாய்ப் பெருகியது. ரோமபாதன் தன் எண்ணம் நிறைவேறினதும் தன் குமாரத்தி சாந்தையை என்பவளை அவருக்குப் பாணிகிரகணம் செய்து கொடுத்தான். விபாண்டகருடைய கோபத்தை சாந்தப்படுத்துவதற்காகப் பசுக்களை வழி யெங்கும் நிறுத்தினான். நிலங்களை யெல்லாம் உழுது வைத்தான். விபாண்டகர் வரக்கூடிய இடங்களிலெங்கும் அநேக மிருகங்களை வைத்தான். அவற்றைக் காக்க அநேக வீரர்களையும் ஆங்காங்கே நிறுத்தினான். அவர்களை நோக்கி மஹரிஷியாகிய விபாண்டகர் வந்து தமது குமாரரைப் பற்றி விசாரித்தால், நீங்கள் அஞ்சலியஸ்தர்களாய் நின்று கொண்டு, இந்தப் பசுக்களும் மிருகங்களும் உழுதிருக்கும் நிலங்களும் உமது குமாரருடையன. மஹரிஷியே! நாங்கள் உமக்கு என்ன வேலை செய்ய வேண்டும்? நாங்கள் எல்லாரும் தமது ஊழியக்காரர்கள் உமது கட்டளைக்கு உள் அடங்கியிருப்பவர்கள் என்று சொல்ல [illegible] பட்டப் படுத்தி வைத்தான்.

14—25. இந்த [illegible] வரான விபாண்டகர் கனிகளையும் கிழங்குகளை [illegible] தமது ஆச்சிரமத்துக்கு வந்து சேர்ந்தார். தமது [illegible] காணப்படாமையால் அவருக்கு மஹா கோபமுண்டாயிற்று. [illegible] ஜ்வலித்துக்கொண்டு

அரசனையும், நகரத்தையும், அந்த நாட்டையும் எரித்துவிட வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு, அங்க நாட்டை நோக்கிச் சென்றார். பசியினாலே களைத்துப் பசுக்களிருக்கும் இடம் வந்து சேர்ந்தார். ஆயர்கள் அவருக்கு மிக மரியாதைசெய்து உபசரித்தார்கள். விபாண்டகர் அன்று இரவை அவ்விடத்தில் ஒரு இராஜனைப் போலக் கழித்தார். உபசரித்து வணங்கப் பட்ட அவர் அந்த ஆயர்களை நோக்கி நீங்கள் யாருக்கு உரியவர்கள்? என்று கேட்டார். அவர்களெல்லாரும் அவரிடம் வந்து இந்தப் பாக்கியங்களெல்லாம் உமது குமாரருடையன என்றார்கள். இதே மாதிரியாகப் பல விடங்களிலும் உபசரிக்கப்பட்டார். ஒரே மாதிரியான இனிய வசனங்களையும் கேட்டார். இதனால் அவருடைய கோபம் மிகவும் சாந்தமாயிற்று. பிறகு விபாண்டகர் நகரத்துக்குள் புகுந்து அரசனுக்கெதிரில் வந்து சேர்ந்தார். அரசன் அவரை வணங்கி உபசரித்தான். பிறகு விபாண்டகர் தமது குமாரன் தேவேந்திரனைப் போல வீற்றிருப்பதைக் கண்டார். தம்முடைய மருமகளான சாந்தை மின்னலைப் போல பிரகாசிக்கிறதையும் பார்த்தார். தமது குமாரனுக்குச் சொந்தமான கிராமங்களையும், பசுந்தொழுவங்களையும், சாந்தையையும் பார்த்து அவருடைய பெருங்கோபம் தணிந்து விட்டது. அதன் பின் விபாண்டகர் அங்கராஜனை நோக்கித் தாம் மிக்க திருப்தி யடைந்திருப்பதாகச் சொன்னார். பின் தமது புத்திரனைப் பார்த்து. அக்கினியையும் சூரியனையும போன்ற காந்தியுள்ள விபாண்டகர் சொல்லுகிறார். குழந்தாய்? அரசனுக்குப் பிரியமான எல்லாவற்றையும் நிறைவேற்றிவை. உனக்கு ஒரு புத்திரன் பிறந்ததும் வனத்துக்கு வந்து சேரு. ரிசியசிருங்கர் தமது பிதா சொன்னபடியே செய்தார். பிறகு விபாண்டகர் இருக்குமிடம் போய்ச் சேர்ந்தார். சாந்தையானவள் வணக்கத்துடன் ரோகிணி சந்திரனை விட்டுப் பிரியாமலிருப்பதுபோலத் தன் பர்த்தாவை விட்டகலாமலிருந்தாள். வசிஷ்டரிடம் அருந்ததி போலவும் அகஸ்தியரிடம் லோபாமுத்திரை போலவும் தன் நாயகனிடம் சாந்தை உபசரித்துக் கொண்டிருந்தாள். நளனுக்குத் தமயந்தியையும், இந்திரனுக்குச் சசீ தேவியையும் போல ரிசிய சிருங்கருக்குச் சாந்தை அமைந்திருந்தாள். மூத்கலரிடத்தில் இந்திரசேனை போலவும் விளங்கினாள். யுதிஷ்டிரனே! சாந்தை வனத்தில் உள்ள தன் பர்த்தாவை இப்படி உபசரித்தாள். இது தான் அவருடைய புண்ணியாச்சிரமம். இந்தப் பெரிய ஏரி இவ்விடத்துக்கு அழகை உண்டாக்கிக் கொண்டிருக்கிறது. களங்கமற்ற புகழை யுடையது. இதில் ஸ்நானம் செய்து உமது எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளும். தர்ம ராஜாவே! இதில் ஸ்நானம் செய்து பரிசுத்தரான பின் வேறு தீர்த்தங்களுக்குப் போகலாம் என்றார்.

---

## 114-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—3 ஜனமேஜய மஹா ராஜனே! பிறகு பாண்டவர்கள் கௌசிகி நதியை விட்டுப் புறப்பட்டுப் போய் ஒன்றின் பின் ஒன்றாக அநேக புண்ணிய ஸ்தலங்களைத் தரிசித்தார்கள். கங்கையும் யமுனையும் கூடுகிற இடத்துக்குப் போனார்கள். ஐந்நூறு நதிகள் கூடி யிடத்துக்கு நடுவில் யுதிஷ்டிரர் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்தார். பாரதனே! பிறகு யுதிஷ்டிரர் தமது சகோதரர்களுடனே சமுத்திரக் கரையோரமாய் நடந்து போய்க் கலிங்க தேசம் சேர்ந்தார். அப்போது ரோமசா யுதிஷ்டிரரை நோக்கிச் சொல்லுகிறார்.

4—10. குந்தி புத்திரனே! இது கலிங்க தேசம். இவ்விடத்தில் வைதரணி என்கிற ஆறு ஓடுகிறது. அந்த நதியின் கரையில் தர்மராஜன் (எமன்) யாகங்களைச் செய்தான். தேவர்கள் அந்த யாகத்தைப் பாதுகாத்தார்கள். இது வைதரணி நதியின் வட கரை. பிராமணர்கள் எப்போதும் தேடி வருவார்கள். ரிஷிகள் இங்கே வசிக்கிறார்கள். யாகம் செய்யத் தக்க இடம். மலைகள் நிறைந்திருக்கின்றன. புண்ணியவான்கள் வானுலகம் போகும் போது தேவலோகம் போகும் வழியை இந்த வைதரணி ஆறு தடுக்கிறது. பூர்வ காலத்தில் ரிஷிகள் இங்கே தவம் செய்தார்கள் இந்த இடத்தில் ருத்திர மூர்த்தி வந்து யாக பசுக்களைக் கைப்பற்றிக் கொண்டார். பின் இந்தப் பசுக்கள் என் பாகம் என்று கூறினார். இவ்வாறு யாக பசுக்களைக் கொண்டு போனார். தேவர்கள் அவரை நோக்கி அந்நியர் பொருள்களில் ஆசை வைக்கக் கூடாது. தர்ம நெறியை அலட்சியம் பண்ணக் கூடாது என்றார்கள். பிறகு ருத்திர மூர்த்திக்குப் பிரியம் உண்டாகும்படி இனிய வசனங்களைக் கூறினார்கள். ஒரு யாகத்தினால் அவருக்குத் திருப்தி செய்வித்தார்கள். அவருக்குத் தகுந்த உபசாரம் செய்தார்கள். பிறகு அவர் யாக பசுக்களைக் கொடுத்து விட்டுப் போய் விட்டார். யுதிஷ்டிரா! அதன் பின் நடந்ததைச் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லுகிறார்.

11—18. தேவர்கள் எல்லாரும் ருத்திரருக்குப் பயந்து, எல்லாவற்றிலும் சிறந்த பங்கை எப்போதும் அவருக்குக் கொடுக்கிறதென்று தீர்மானித்தார்கள். அந்தப் பாகம் புதியதாயும் ஊசிக் கெட்டுப் போகாததாயு மிருந்தது. இந்த இடத்தில் ஸ்நானம் செய்து இந்தப் புராதனமான சரித்திரத்தைச் சொல்லுகிறவன் சொர்க்கத்துக்குப் போகும மார்க்கத்தைத் தன் கண்களால் காண்பான் என்றார். அதன் பின் பாண்டவர்கள் திரௌபதி யுடன் வைதரணி யாற்றில் இறங்கி மூழுகிப் பிதிர்க் கடன்களைக் கழித்தார்கள். அப்போது யுதிஷ்டிரர் ரோமசரைப் பார்த்து இது மஹா புண்ணியமான செய்கையா யிருக்கிறது. இதில் கிரமப்படி ஸ்நானம் செய்த பின் நான் இந்த மனித உலகத்தில் இருப்பதாகத் தோன்றவே யில்லை. மஹாநுபாவரே! நான் எல்லா உலகங்களையும்

பார்க்கிறேன். இது உமது கிருபைதான். இது மஹாத்மாக்களான ரிஷிகளின் வேதகோஷம் என்றார். அப்போது ரோமசர் யுதிஷ்டிரரைப் பார்த்து நீ கேட்கிற வேத ஒலி மூன்று லட்சம் யோசனை தூரத்திலிருந்து வருகிறது. நீ பேசாம லிரு. அரசனே இந்த வனம் தேவர்களுடையது. பிரமாவே இதை உண்டாக்கினார். அவருக்குச் சொந்தமானது. இவ்விடத்தில் விசுவாமித்திரர் யாகம் செய்தார். அந்த யாகங்களில் பிரமதேவர் கசியப ரிஷிக்கு மலைகள், ஆறுகள், நகரங்களடங்கிய இந்த உலகம் முழுவதையும் தட்சிணையாகக் கொடுத்தார்.

19— . இந்தப் பூமியைக் கொடுத்த வுடனே பூமாதேவி துக்கமுடையவளானாள். அதனால் அவள் கோபித்துப் பிரமதேவரை நோக்கித் தேவனே! நீர் என்னை மனிதருக்குக் கொடுப்பது கூடாது. அப்படிச் செய்த உமது செய்கை பயன்பெறாது. ஏனென்றால் நான் மறு உலகத்துக்குச் செல்கிறேன். அரசனே! பூமிதேவி துக்கமும் நம்பிக்கையின்மையு முள்ளவளாயிருக்கிறதைக் கசியபர் கண்டு பரிகாரம் பண்ணத் தக்க முறைப்படி செய்து அவளைத் திருப்தியாக்குவித்தார் அதன் பிறகு அவருடைய தவசினால் இந்தப் பூமி மகிழ்ச்சி யடைந்தது. அதன் பிறகு அவள் நீரிலிருந்து மேலெழும்பி ஒரு பலி பீடமாக இருந்தாள். அரசனே! நமக்கு எதிரில் அதோ அந்த வேதிகை யிருந்த இடம் தெரிகிறது பார். மஹாராஜனே! அதன் மேல் ஏறி மஹா சக்தியுள்ளவனாக இரு. இந்த யாக வேதிகை கடல் பரியந்தம் நீண்டிருக்கிறது. அதன் மேலேறிப் பாக்கியசாலியாக இரு. நீ இந்தச் சமுத்திரத்தைக் கடந்து செல். நீ இன்றைய தினம் அதன் மேலேறுகிறபோது உன்னிடத்திலுள்ள தீமைகளைப் போக்குகிற கிரியைகளை நான் செய்கிறேன். அரசனே! இந்த வேதிகையை மனிதர் தொட்டவுடன் கடலுக்குள் முழுகிப் போய் விடுகிறது. "எல்லா உலகங்களையும் இரட்சிக்கிற தேவனை நான் வணங்குகிறேன். இந்த உலகத்தைக் கடந்தவரான தேவனை நான் வணங்குகிறேன் தேவதேவனே! இந்த உவர்க் கடலின் சமீபத்தில் வாரும் அக்கினி, சூரியன், உத்பத்திமூலம், நீர், தேவதை, விஷ்ணுவின் பிந்து, அமிர்தம்; அக்கினி தேவனே உன் உத்பத்தி காரணன். பூமி உன்னுடைய சரீரம். நீ அடங்கி யிருக்கிற விதையை விஷ்ணு தந்தார். நீ உக்தி அமிர்தம்." பாண்டு புத்திரனே! மேற் சொன்ன வசனங்களை நீ உச்சரி. உச்சரித்தவுடனே சீக்கிரமாய் அதன் மேலேறு. இந்த வசனங்களைத் தெளிவான தொனியோடு உச்சரிக்க வேண்டும். அதை உச்சரிக்கிறபோது ஒருவன் சமுத்திரத்தில் முழுக வேண்டும். குந்தி புத்திரனே! கௌரவனே! இந்தச் சமுத்திரம் தெய்வத்தன்மை யுள்ளதா யிருக்கிறபடியால் குசப் புல்லின் நுனியால் கூட அதைத் தொடக் கூடாது என்றார். பிறகு தீமையை விலக்குகிறதற் குரிய சடங்குகள் செய்யப் பட்டன. மஹாத்மாவான யுதிஷ்டிரர் சமுத்திரத்துக்குப் போனார். ரோமசர் சொன்னபடி யெல்லாம் செய்த பின்பு யுதிஷ்டிரர் மகேந்திர மலைக்குப் போய் அங்கே இரவில் தங்கி யிருந்தார்.

---

# 115-வது அத்தியாயம்.

தீர்த்தயாத்திரா பர்வத தொடர்ச்சி.

1—8. பூமிக்கதிபதியாகிய யுதிஷ்டிரர் அந்த மலையில் ஒரு இரவு தங்கினார். தமது சகோதரர்களுடன் அங்குள்ள முனிவர்களுக்கு மரியாதை செய்தார். ரோமசர் அங்கே யிருக்கிற முனிவர்களுடைய பேர்களை யுதிஷ்டிரருக்குச் சொன்னார். அவர்கள் பிருகு, அங்கீரசர், வசிஷ்டர், கசியபர் என்பவர்களாம். இராஜரிஷியான யுதிஷ்டிரர் அவர்களெல்லாரிடமும் போய் அஞ்சலியஸ்தராய் அவர்களை வணங்கினார். பிறகு பரசுராமருடைய சிஷ்யரான அகிருதவர்ணரைப் பார்த்து மஹாத்மாவான பரசுராமர் எப்போது இங்குள்ளவர்களுக்குத் தரிசனம் அளிப்பார்? அப்போது பிருகு வம்சத்தவரான அவரை நான் பார்க்க விரும்புகிறேன் என்றார். அகிருதவர்ணர், யுதிஷ்டிரரே! சர்வக்ஞத்துவமுடையவரான பரசுராமர் நீர் வந்திருக்கிறதை அறிந்திருப்பார். அவர் உம்மிடத்தில் பிரியமாயிருக்கிறார். உமக்கு சீக்கிரம் தரிசனம் அருளுவார். அமரபட்ச சதுர்த்தசி அஷ்டமி யில் பரசுராமர் இங்கேயுள்ள ரிஷிகளுக்குத் தரிசனந் தருவார். இன்று இரவோடு சதுர்த்தசி முடிகிறது என்றார். யுதிஷ்டிரர் அவரை நோக்கி நீர் ஜமதக்கினி புத்திரரான மகிமையுள்ள பரசுராமருடைய சிஷ்யராயிருக்கிறீர். அவர் பூர்வகாலத்தில் செய்த அரிய செயல்களை நீர் நன்றாய் அறிந்திருக்கிறீர். ஆகையால் அவர் பூர்வத்தில் க்ஷத்திரியர்களை வென்றதையும் அதன் காரணத்தையும் இன்றையதினம் எங்களுக்குச் சொல்ல வேண்டுகிறேன் என்றார்.

9—18. அகிருதவர்ணர் சொல்லுகிறார் மஹா ராஜனே! பாரதனே! பரசுராமருடைய தேவர்களை யொத்த அரிய செயல்களைப் பிரியத்தோடு சொல்லுகிறேன். ஜமதக்கினி புத்திரரான பரசுராமர் பிருகு வம்சத்தில் பிறந்தவர். ஹைஹேயருக்கு அரசனான கார்த்தவீரியனைப் பற்றிய சரித்திரத்தையும் உமக்குச் சொல்லுகிறேன். ஹைஹேய ராஜனான கார்த்த வீரியார்ஜுனனைப் பரசுராமர் கொன்றார். அரசனே! அந்த அர்ஜுனன் ஆயிரம் கைகளையும், அற்புதமான எழு ஆயுதங்களையும் உடையவன். பூமிக்கிறைவனே! தத்தாத்திரேயருடைய கருணையாலே அந்த அர்ஜுனன் ஒரு தங்கத் தேரை அடைந்தான். சகல சராசரங்களும் அடங்கின உலகம் முழுவதும் அவனுக்குச் சொந்தமான பொருள். அவன் அந்தச் சொர்ண இரதத்தி லேறிக் கொண்டு தடையில்லாமல் எவ்விடத்துக்கும் போய் வருவான். அவனுக்குச் சிறந்த அநேக வரங்கள் உண்டு. தேவர்கள், ரிஷிகள், யட்சர்கள், முதல் எல்லாரையும் கீழ்ப் படுத்தினான். சகல ஜந்துக்களுக்கும் இடைஞ்சல் செய்தான். பின் தேவர்களும் தவம் புரியும் ரிஷிகளும் ஒன்றாய்க் கூடினார்கள். இராட்சத வைரியான மஹாவிஷ்ணுவினிடம் இதைத் தெரிவித்தார்கள். தேவ

னே! அர்ஜுனனைக் கொன்று எல்லாப் பிராணிகளையும் காப்பாற்றும். சொர்ண இரதத்தையுடைய அவன் இந்திராணியோடு விளையாடிக் கொண்டிருந்த இந்திரனை இம்சித்தான். ஆகையால் அவனைக் கொல்லும் என்றார். விஷ்ணு இந்திரனுடன் யோசித்து அர்ஜுனனைக் கொல்லும் உபாயத்தைத் தேடினார். இந்திரன் உலகத்துக்குச் செய்ய வேண்டிய உபகாரங்களை யெல்லாம் எடுத்துச் சொன்னான். விஷ்ணுவும் அவைகள் எல்லாவற்றையும் செய்வதாக ஒப்புக் கொண்டார்.

19—30. பிறகு விஷ்ணு தமக்குப் பிரியமுள்ள பதரிகாச்சிரமத்தை அடைந்தார். அந்தச் சமையத்தில் கன்யாகுப்ஜத்தில் பிரபலமான ஒரு அரசனிருந்தான். அவன் மஹா பராக்கிரமசாலி. அவன் பெயர் காதி. அவன் வனத்துக்குத் தவம் செய்யப் போய் விட்டான். அவன் வனத்தில் வசிக்கும் போது அவனுக்கு அப்ஸரஸைப் போல அழகுள்ள ஒரு பெண் பிறந்தாள். பிருகு புத்திரரான ரிசிகர் அவளை மணம் புரியக் கேட்டார். காதி சொல்கிறான். எங்கள் குலத்தில் நெடுங்காலமாக நடந்து வருகிற ஒரு வழக்கம் உண்டு. அதென்னவென்றால் மாப்பிள்ளையாக வருகிறவன் ஊதாவாணமுள்ளதும், வேகமுள்ளதும், காது கறுத்திருப்பதுமான ஆயிரம் குதிரைகளைப் பரிசமாகத் தரவேண்டும். பிருகு புத்திரரே! மகிமையுள்ளவரே! உம்மிடத்தில் அப்படிப் பட்ட பரிசம் கேட்கத் தகாது. நீர் பெண் கேட்ட பின் உம்மை மறுக்கவும் கூடாது. ஆகையால் எது செய்யத் தக்கதோ அதைச் செய்யும் என்றான். ரிசிகர் நீர் கேட்டபடியே ஊதா நிறமும், வேகமும், கறுத்த காதுகளையுடைய ஆயிரங் குதிரைகள் கொடுக்கிறேன். உமது புத்திரியை எனக்கு மனைவியாகத் தாருமென்றார். அப்படிச் சொன்ன பின் ரிசிகர் வருணனை நோக்கி ஊதா நிறமும் வேகமும் கறுத்த காதுகளையும் உடைய ஆயிரம் குதிரைகள் எனக்கு வேண்டும் என்று கேட்டார். வருணன் உடனே ஆயிரம் குதிரைகளைக் கொடுத்தான். கன்யாகுப்ஜ நாட்டில், கங்கையிலிருந்து குதிரைகள் கிளம்பின இடம் அசுவ தீர்த்தம் என்று இன்றும் வழங்கப்படுகிறது. பிறகு காதி அரசன் தன் புத்திரி சத்தியவதியை ரிஷிகருக்குக் கொடுத்தான். காதிராஜன் புத்திரி கல்யாணத்தில் தேவர்கள் கூட வந்திருந்தார்கள். மகிமையுள்ள அந்தணரான ரிசிகர் வருணனிடமிருந்து ஆயிரம் குதிரைகளைப் பெற்றதும் தவிரத் தேவர்கள் எல்லாரையும் பார்த்தார். முறைப்படி மனைவியையும் அடைந்தார். பிறகு ரிசிகர் அழகிய சிற்றிடையை யுடைய அந்த இளப் பருவ மங்கையுடன் தமது இஷ்டம் போல விளையாடிக் கொண்டிருந்தார்.

31—37. விவாகம் ஆனபின் பிருகு முனிவர் தமது புத்திரரான ரிசிகரைப் பார்க்க வந்தார். ரிசிகர் தமது மனைவியுடன் கூடப் பிதாவை வணங்கினார். பிருகுமுனிவர் அதனால் மிகவும் மகிழ்ச்சி யடைந்தார். தேவர்களாலும் வணங்கப் படுகிற பிருகுமுனிவர் உட்கார்ந்த பின் ரிசிகரும் அவருடைய பத்தினியும் அஞ்சலியஸ்தர்களாய் அவருக் கெதிரில் நின்றுகொண்டு, அவரது

ஏவலுக்குக் காத்திருந்தார்கள். பிருகு முனிவர் மிகவும் மகிழ்ந்து தமது மரு மகளைப் பார்த்து பாக்கியவதியான பெண்ணே! நீ விரும்புகிற வரத்தைக் கேளு. நீ எதைக் கேட்டாலும் அதைப் பிரியத்துடன் கொடுப்பேன் என ரூர். அவள், பிருகு முனிவருக்கு மகிழ்ச்சி யுண்டாக்கித் தனக்கும் தன் தா யாருக்கும் குழந்தைகளை அருளிச்செய்ய வேண்டுமென்று கேட்டாள் பிருகு முனிவரும் அப்படியே வரமளித்தார். முனிவா அந்தப் பெண்ணைப் பார்த்து, ருது காலத்தில் ஸ்நானம் செய்த பின் நீ அத்தி மரத்தை ஆலிங்கனம் செய்து கொள். உன் தாயாா அரச விருட்சத்தை ஆலிங்கனம் செய்து கொள்ளட் டும் பாக்கியவதியே! நான் எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்து இந்த இர ண்டு சருக்களையும் ஏற்படுத்தி யிருக்கிறேன். வெகு ஜாக்கிரதையுடன் அதை நிறைவேற்ற வேண்டும் என று கூறிப் பிருகு முனிவர் போய் விட்டார். அந்த மாதர் இருவரும் விருட்சங்களை மாறாக ஆலிங்கனம் செய்து கொண்டார்கள்.

38—45 வெகு காலத்துக்குப் பின் மகிமையுள்ள பிருகு முனிவர் மறு படியும் அங்கே வந்தார். எல்லாவற்றையும் தமது ஞான திருஷ்டி வல்லமை யால் அறிந்து அவவிடம் வந்தார். அதன் பின் பிருகு முனிவர் தன் மருமக ளான சத்தியவதியை நோக்கிப் பின் வருகிறபடி சொன்னார். பாக்கியவதியே அழகிய புருவங்களை யுடையவளே! நீ தப்பான சருவை யுண்டு மாறான விருட் சத்தை அணைந்தாய். உன தாயார் உன்னை ஏமாற்றி விட்டபடியால் நீ அப்படிச் செய்து விட்டாய். உன் வயிற்றில் பிறக்கும் புத்திரன் பிராமணனு யிருந்த போதிலும் க்ஷத்திரிய தர்மத்தை அடைவான். உன் தாயாருக்குப் பிறக்கிற புத்திரன் க்ஷத்திரியனு யிருந்தாலும் பிராமண கிருத்தியங்களையே கை பற்றிக் கொள்வான். அவன் வல்லமை பெரிதா யிருக்கும். அவன் தர்ம மார்க்கத் திலேயே நடப்பான் என்றார். அதன் பின் சத்தியவதி அடிக்கடி தன் மாமனு ரை வணங்கி என் புத்திரன் அப்படி யிராதபடி அநுக்கிரகம் பண்ண வேண் டும் என்றும், என் பௌத்திரன் அப்படி யிருக்கட்டும் என்றும் கேட்டுக் கொ ண்டாள். பாண்டு குமாரா! பிருகு முனிவரும் அப்படியே ஆகட்டும் என்று அருள் செய்தார். தன் மருமகளுடைய விருப்பத்தை நிறைவேற்ற வேண்டு மென்று அப்படிச் செய்தார். பிறகு சரியான காலம் வந்தபோது அவளுக் குப் புத்திரன் பிறந்தான். அவன்தான் ஜமதக்கினி. இந்தப் பிருகு சந்ததி மகிமையும் கருணையும் உள்ளது ஜமதக்கினி கிரமப்படி வளர்ந்து சரியான காலத்தில் வேதங்களை அத்தியயனம் செய்தார். பாரதனே! தனுர் சாஸ்தி ரமும், நால் வகை ஆயுதப் பயிற்சியும், சூரியனைப் போன்ற சக்தியும் அவரிடத் தில் தாமாகவே வந்தடைந்தன. ஜமதக்கினி அவைகளை ஓதாமலே உணர்ந்து கொண்டார்.

———

## 116-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—12 மஹாரிஷியான ஜமதக்கினி வேதாப்பியாசம் செய்து வந்தார். அதன் பின் பெரும தவம் செய்தார். கிரமம கிரமமாய்ப் படித்து வேதம் முழுவதையும கரை கண்டார். அரசனே! பிரஸனஜித் என்கிற அரசனிடம் போய் அவன் புத்திரி ரேணுகையைக் கேட்டார். அவனும் தட்டாமல் தன் குமாரத்தி ரேணுகையை அவருக்கு விவாகம செய்து கொடுத்தான். ரேணுகையை மணஞ் செய்துகொண்டு அவளோடு கூட தமது ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தார். பின் அவளுடைய உதவியைக் கொண்டு தவம செய்தார். அவளுக்கு நாலு குமாரர்கள் பிறந்தார்கள். இராமர் ஐந்தாவது புத்திரர். பரசுராமர் சின்னவரா யிருந்தாலும் குணத்திலே எல்லாருக்கும் மேலானவரா யிருந்தார். ஒருகாலத்தில் அவளுடைய புத்திரர்கள் எல்லாரும் கனிகள் சேகரிக்கும் பொருட்டு வெளியிலே போய் இருந்தார்கள், தவமுதபதிவிரதையான ரேணுகை ஸ்நானம பண்ணப் போனாள். அவள் இப்படித் தன் இச்சையாகச் சென்ற போது, சித்திரரதன் என்கிற அரசன் தாமரைமலர் மாலையைத் தரித்துக்கொண்டு தன் பத்தினிகளுடன் விளையாடிக்கொண்டிருப்பதைப் பார்த்தாள். உடனே அவளுக்கு காதல் பெருகியது. அதை அடக்க முடியாமல் தன் மனதைக் களங்கப் படுத்திக் கொண்டாள். மனதில் திகிலடைந்து தன் வீட்டுக்குத் திரும்பி வந்து சேர்ந்தாள். அவள் பதிவிரதா தர்மத்தை யிழந்து போய்விட்டதையும், அவளுடைய மனச் சஞ்சலத்தையும் ஜமதக்கினி அறிந்து சீ! சீ! என்று சொல்லிக் கொண்டு அவள் கிட்ட வந்தார். அப்போது ஜமதக்கினியின் மூத்த புத்திரனான ருமானுவனும், அதன் பின் சுசேனனும், அதன் பின் வசுவும், அதன் பின் விசுவாவசுவும் வந்தார்கள். ஜமதக்கினி அவர்களுள் ஒவ்வொருவரையும் நோக்கி உன் தாயாரைக் கொல் என்று சொன்னார். ஒருவரும் உடன்படவில்லை. பதில் சொல்லாமல் இருந்து விட்டார்கள். முனிவர் அதிக சினம் கொண்டு அவர்களைக் கொடுமையாகச் சபித்தார். அந்தக் கொடிய சாபத்தை அடைந்த அவர்கள் ஜடப் பொருள்களைப் போல் ஆய் அறிவிழந்து போனார்கள். பட்சிகளையும் மிருகங்களையும் போன்ற செய்கையுடையவரானார்கள்.

13—21. கடைசியில் பகைத்த சத்துருக்களைச் சங்கரிப்பவரான இராமர் வந்தார். ஜமதக்கினி அவரைப் பார்த்து குமாரா! பாபியான உன் தாயாரை உடனே கொல். கொஞ்சமாவது விசனம் வையாதே என்றார். இராமர் உடனே கோடரியை எடுத்துக்கொண்டு தாயாரை வெட்டி விட்டார். பிறகு மகிமையுள்ள ஜமதக்கினியின் கோபம் தணிந்து போயிற்று. மிகவும் மகிழ்ந்து இராமரை நோக்கிக் குழந்தாய்! தர்மசாலியே! நீ என்னுடைய இந்தக் கொடிய கட்டளையை உடனே செய்து முடித்து விட்டயே. நீ விரும்

பின வரத்தைக் கேள். நீ எதை விரும்பினாலும் தருகிறேன் என்றார். இராமர் முதலில் தாயார் பிழைத்து எழுந்திருக்க வேண்டு மென்று கேட்டார். நீர் இந்தக் கொடிய செய்கையை மனதில் வைக்கக் கூடாது. என்னை ஒரு பாபமும் அணுகக் கூடாது. என் சகோதரர்கள் சாபம் நீங்க வேண்டு மென்ற வரங்களைக் கேட்டார். பின்னும், நான் சண்டையில் ஒருபோதும் தோல்வி யடையக் கூடாது. நான் சமானமற்றவனாக இருக்க வேண்டும் என்று கேட்டார். பாரதனே! ஜமதக்கினி இராமர் விரும்பினவைகளெல்லாம் கொடுத்தார் ஒரு சமையத்திலே ஜமதக்கினியின் புத்திரர்களெல்லாரும் கனிகளின் நிமித்தம் வனத்துக்குப் போயிருந்தார்கள் அப்போது அந்த நாட்டு அரசனான கார்த்தவீரியன் ஜமதக்கினியின் ஆச்சிரமத்திற்கு வந்தான். ரேணுகை வந்து அவனை உபசரித்தாள் பராக்கிரமத்தினாலே கர்வமடைந்திருந்த அவ்வரசன் அந்த உபசாரத்தை மதிக்கவில்லை ஒரு தடைக்கும் அடங்காமல் பலாத்காரத்தினாலும் துணிவினாலும் யாகத்துக்குரிய பசுவை பிடித்துக் கொண்டான். அதன் கன்று கதறுகிறதையும் கவனிக்கவில்லை. ஆச்சிரமத்தை விட்டு வெளிப்படுத்திக் கொண்டு போய்விட்டான். அந்த வனத்திலுள்ள மரங்களை யெல்லாம் முறித்தெறிந்து விட்டான்.

22—30. இராமர் வீட்டுக்கு வந்தவுடனே அவருடைய பிதா நடந்தவைகளை யெல்லாம் அவருக்குச் சொன்னார். கன்று கதறுகிறதைப் பார்த்ததும் இராமருக்கு மிகுந்த கோபமுண்டாயிற்று. உடனே அர்ஜுனனிடத்துக்குப் போனார். மரணத்துக்குச் சித்தமாயிருந்த அவனோடு யுத்தம் தொடங்கினார். பிருகு வம்சத்தவரான இராமர் யுத்தத்தில் தமது பராக்கிரமத்தை வெளியிட்டுப் போராடினார். அழகிய வில்லினின்றும் விடப்பட்ட தமது கூரிய அம்புகளினாலே அர்ஜுனனுடைய ஆயிரம் புயங்களையும் வெட்டித் தள்ளினார். அவனுக்கு மரணகாலம் கிட்டினபடியாலே இராமரால் வெல்லப்பட்டான். பரசுராமர் கார்த்த வீரியார்ஜுனனைக் கொன்றார். அவனுடைய சுற்றத்தார் கோபங்கொண்டு இராமரை எதிர்க்கச் சென்றார்கள். ஒரு நாள் இராமர் இல்லாதபோது அவர்கள் ஜமதக்கினியின் ஆச்சிரமத்தில் புகுந்து, தவம் செய்துகொண்டிருந்த ஜமதக்கினி முனிவரைக் கொன்று விட்டார்கள். யுதிஷ்டிரா! அவர்கள் எதிர்த்தபோது ஜமதக்கினி முனிவர் இராமா! இராமா! என்று பரிதாபமாய்க் கூவினார். கார்த்த வீரியன் புத்திரர்கள் கூர்மையான அம்புகளாலே அவரைத் துளைத்துவிட்டார்கள். தங்களுடைய சத்துருவை இவ்வாறு வதைத்த பின் வந்த வழியே திரும்பிப் போனார்கள். அவர்கள் வெகு தூரம் போனபின் ஜமதக்கினி முனிவர் தமது ஆவியை விட்டார் அதன் பின் இராமர் அக்கினி காரியத்துக்காக விறகொடித்துக்கொண்டு வீடு வந்து சேர்ந்தார். தமது பிதா கொலையுண்டிருப்பதைக் கண்டார். பிதாவடைந்த கதியைக் குறித்துப் புலம்பிக் கதறி அழுதார்.

---

## 117-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—6. பிதாவே! ஈனரும் மூடருமான கார்த்த வீரியனுடைய புத்திரர்கள் காட்டில் மானைக் கொல்வது போல உம்மைக் கொன்று விட்டார்கள். இது என்னுடைய தப்பிதமே யாகும். நீர் எப்போதும் தர்மிஷ்டரும் நன் மார்க்கத்திலிருந்து தவறாதவருமா யிருந்தீர். அப்படிப்பட்ட நீர் இவ்விதமாக மரணமடையும்படி விதி செய்து விட்டது. அவர்கள் கொடிய பாபத்தைச் செய்து விட்டார்கள். எப்போதும் தவம் செய்து கொண்டிருந்த உம்மை அநேக அம்புகளாலே கொன்று விட்டார்கள். நீரோ அவர்களிடத்தில் யுத்தம் பண்ண விரும்பாதவர். விருத்தாப்பியர். துஷ்டர்கள் தம்முடைய சிநேகிதரிடத்திலும் உறவினரிடத்திலும் இந்த கெட்ட செய்கையைப் பற்றி எப்படிப் பேசுவார்கள்? சண்டைசெய்ய விருப்பமில்லாத ஒரு புண்ணிய புருஷனைக் கொன்ற தை வெட்க மில்லாமல் பிறரிடம் சொல்லிக் கொள்வார்களா! என்று புலம்பினார். பாரதனே! இராமர் இப்படிப் பரிதாபமாய்ப் புலம்பின பின், பிதாவுக்குரிய பிரேதக்கிருத்தியங்களை எல்லாம் செய்வித்துப் பிதாவைத் தகனம் பண்ணினார். அதன் பிறகு க்ஷத்திரியர்களை எல்லாம் சங்கரிப்பதாகச் சபதம் செய்து கொண்டார்.

7—14. பராக்கிரமசாலியான வீரரும், யுத்தம் செய்வதில் வல்லமையுள்ளவரும், எமதர்ம ராஜனுக்குச் சமானமானவருமாகிய இராமர் கோபத்தினாலே ஆயுதத்தைக் கையில் எடுத்துக் கொண்டார். அவர் ஒருவராகவே அர்ஜுனனுடைய புத்திரர்கள் எல்லாரையும் கொன்றார். க்ஷத்திரியோத்தமரே! யுத்த வீரர்கள் எல்லாரிலும் சிறந்தவரான இராமர் அவர்களைச் சேர்ந்தவர்கள் எல்லாரையும் அழித்து நாசம் பண்ணினார். பரசுராமர் இருபத்தொரு தடவை பூமியில் க்ஷத்திரியர்களில்லாதபடி நாசம் பண்ணி விட்டார். சமந்தபஞ்சகத்தில் அவர்களுடைய இரத்தத்தினாலே ஐந்து மடுக்களை உண்டாக்கினார். அதன் பின் தமது பிதிர்களுக்கு அந்த நீரினாலே தர்ப்பணம் செய்தார். பிறகு ரிசிகர் மனித ரூபத்துடன் எதிர் வந்து க்ஷத்திரியர்களைச் சங்கரிப்பதை நிறுத்தினார் பிறகு ஜமதக்கினி புத்திரரான இராமர் யாகம் செய்து அதில் தேவ தேவனுக்கு அவிசு அளித்தார். அந்த யாகத்தில் ரித்துவிக்குகளுக்குப் பூமியைத் தட்சிணையாகக் கொடுத்து விட்டார். பிறகு சொர்ணத்தினால் யாக வேதிகை ஒன்று கட்டினார். அது நாற்பது முழ விசாலமும் ஒன்பது முழ உயரமு முள்ளது. அதை மஹாத்மாவான காசியபருக்குத் தானமாகக் கொடுத்தார். பின் காசியபருடைய அனுமதியாலே பிராமணர்கள் பகிர்ந்து கொண்டார்கள். அதனால் அந்தப் பிராமணர்களுக்குக் காண்டவாயனர் என்ற பேர் வந்தது. பரசுராமர் பூமி முழுவதையும் காசியபருக்குக் கொடுத்து விட்டுத், தவம் செய்வதற்காக மஹேந்திர பர்வதத்திற்குப் போய் விட்டார்.

15—18. வைசம்பாயனர் ஜனமேஜயனைப் பார்த்து அரசனே! பூர்வத்தில் க்ஷத்திரியர்களுக்கும் பரசுராமருக்கும் இவ்விதமாகப் பகை யுண்டாயிற்று மகிமையுள்ள பரசுராமர் உலகம் முழுவதையும் ஜயித்துக் கொண்டார் என்று சொன்னார். பதினாலாவது திதியின் பகலில் பரசுராமர் யுதிஷ்டிரருக்கும் மற்றவர்களுக்கும் பிரத்தியட்சமானார். யுதிஷ்டிரர் சகோதரர்களுடனே அவருக்கு வணங்கி நமஸ்காரம் பண்ணி மரியாதை செய்தார். பரசுராமரும் யுதிஷ்டிரருக்கு மரியாதை செய்தார். யுதிஷ்டிரர் அன்றிரவு மஹேந்திர மலையில் தங்கினார். அப்புறம் புறப்பட்டுத் தென் திசை நோக்கிச் சென்றார்.

---

## 118-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—10. மஹாத்மாவான யுதிஷ்டிரர் கடற் கரையிலுள்ள அநேக க்ஷேத்திரங்களுக்குப் போனார். அவைகளெல்லாம் பிராமணர்களாலே நிறைந்திருந்தன. அநேக தீர்த்தங்களுக்குப் போய் அவைகளைத் தரிசித்தார். யுதிஷ்டிரர் அவைகளில் ஸ்நானம பண்ணி அநேக திரவியங்களைத் தானம் செய்தார். பிறகு பெரிய நதிகளில் ஸ்நானம் பண்ணி தேவ பிதிர்களுக்குத் தர்ப்பணம் செய்தார். பிராமணர்களுக்கு மிகுந்த பொருளைத் தானம் பண்ணி விட்டுப் பின் சமுத்திர காமினியாகிய கோதாவரிக்குப் போனார். அவ்விடத்தில் பாபத்தைப் போக்கிக் கொண்டு பரிசுத்தராய்த் திராவிட தேசத்திலுள்ள சமுத்திரக் கரையை யடைந்தார். பரிசுத்தமானதும் புண்ணியமுள்ளதுமான அகஸ்திய தீர்த்தத்திலும் நாரீ தீர்த்தத்திலும் ஸ்நானம் செய்தார். அங்கே வில் வீரனாகிய அர்ஜுனன் செய்த சிறந்த பராக்கிரமச் செய்கைகளைக் கேட்டார். அது மனித சக்திக்கு எட்டாதது என்று ரிஷிகளாற் புகழ்ந்து கூறக் கேட்டு யுதிஷ்டிரர் மகிழ்ந்திருந்தார். பூமிக்கதிபதியாகிய யுதிஷ்டிரர் திரௌபதியோடும், சகோதரர்களோடும் அர்ஜுனன் வல்லமையைப் புகழ்ந்து பேசிக் கொண்டு மகிழ்ச்சியுடன் அங்கே தங்கி யிருந்தார். பிறகு அந்தத் தீர்த்தத்தில் ஆயிரம் கோதானம் செய்தார். தமது சகோதரர்களுடன் அர்ஜுனன் செய்த கோதானத்தைப் புகழ்ந்து பேசிக் கொண்டிருந்தார். பிறகு ஒன்றின் பின் ஒன்றாக எல்லாத் தீர்த்தங்களையும் தரிசித்தார. அநேக புண்ணிய ஸ்தலங்களுக்கும் போனா. இவ்வாறாக யுதிஷ்டிரரது கருத்து நிறைவேறியது. பின் சூர்ப்பாரகத்தை அடைந்தார். இப்படியாகக் கடற் கரையிலுள்ள நாடுகளைக் கடந்து, மூவுலகத்திலும் கீர்த்தி பெற்ற ஒரு வனதத்தை அடைந்தார். பூர்வ காலத்தில் தேவர்கள் அங்கே தவம் செய்தார்கள். இராஜர்கள் யாகம் செய்தார்கள். நீண்டு பருத்த புஜங்களை யுடைய யுதிஷ்டிரர் ரிசிக புத்திரருடைய மகிமையுள்ள வேதிகையைத் தரிசித்தார். அஙகே அநேக ரிஷிகள் சூழ்ந்திருந்தார்கள். புண்ணியவான்கள் வணங்கத் தக்கதாகவும் இருந்தது.

11—17. யுதிஷ்டிரர் பிறகு எல்லாத் தேவர்களுடைய புண்ணியமான ஆலயங்களையும் தரிசித்தார். வசுக்கள், மருத்துக்கள், அசுவினி தேவர்கள், எமன், ஆதித்தியர், தனபதியான குபேரன், இந்திரன், விஷ்ணு, சிவன், சந்திரன், சூரியன், வருணன், சாத்தியர்கள், பிரமதேவா, பிதிர்த்தேவர்கள், மஹாத்மாவான ருத்திரன், சரஸ்வதி, சித்தர்கள் முதலிய தேவர்களுடைய ஆலயங்களையும் தரிசித்தார். அந்தத் தீர்த்தங்களில் எல்லாம் யுதிஷ்டிரர் உபவாச மிருந்து நோற்றார். விலையுயர்ந்த அநேக ரத்தினங்களைத் தானம் கொடுத்தார். இவ்விடங்களில் ஸ்நானம் பண்ணின பின் சுபர்ணகத்துக்கு வந்தார். கடற் கரையிலுள்ள தீர்த்தங்களை எல்லாம் சகோதரரோடு சென்று தரிசித்தார். பிறகு பிரபாசத்தை அடைந்தார். பிராமணர்களால் அதன் புகழ் உலகம் எல்லாம் பரவி யிருந்தது. அகன்று சிவந்த கண்களையுடைய யுதிஷ்டிரர் சகோதரர்களோடு அதில் ஸ்நானம் பண்ணித் தேவர்களுக்கும் பிதிர்க்களுக்கும் ஆராதனை செய்தார். திரௌபதியும், மற்றப் பிராமணர்களும், ரோமசரும் ஸ்நானம் பண்ணினார்கள். யுதிஷ்டிரர் பன்னிரண்டு நாள் வாயுவையும் நீரையும் ஆகாரமாகக் கொண்டிருந்தார். காலையும் மாலையும் அதில் ஸ்நானம் செய்தார். பஞ்சாக்கினியின் நடுவிலிருந்து தவம் செய்து கொண்டிருந்தார்.

18—23. யுதிஷ்டிரர் தவம் செய்து கொண்டிருப்பதைப் பலராம கிருஷ்ணர்கள் கேட்டார்கள். விருஷ்ணி குலத் தலைவர்களான அவ்விருவரும் சேனைகளுடன் யுதிஷ்டிரரிடம் போனார்கள். பாண்டு புத்திரர்கள் தரையில் படுத்துக் கொண்டிருப்பதையும், உடம்பெங்கும் புழுதி படிந்திருப்பதையும், விருஷ்ணிகள் பார்த்தார்கள். திரௌபதியைத் துக்ககரமான நிலையில் பார்த்து இராம கிருஷ்ணர் இருவரும் இரைந்து புலம்பி அழுதார்கள். நீக்க முடியாத துக்கத்தை யுடைய யுதிஷ்டிரர் இராம கிருஷ்ணர்களை மகிழ்ச்சியோடு கண்டார். சாம்பன், சினி முதலியவர்களுக்கும் தக்க மரியாதை செய்தார் அவர்களும் யுதிஷ்டிரருக்கு மரியாதை செய்தார்கள். தேவர்கள் இந்திரனைச் சூழ்ந்திருப்பது போல அவர்கள் எல்லாரும் யுதிஷ்டிரரைச் சூழ்ந்து உட்கார்ந்தார்கள். யுதிஷ்டிரர் மிகவும் மகிழ்ந்து சத்துருக்கள் செய்த வஞ்சனைகள் எல்லாவற்றையும் அவர்களுக்குச் சொன்னார். தாம் வனத்தில் வசித்ததையும், அர்ஜுனன் இந்திரலோகம் சென்றதையும் மகிழ்ச்சி யுடன் கூறினார். அவர்களும் இவ்விஷயங்களை யுதிஷ்டிரர் வாயாற் கேட்பதை விரும்பினார்கள். பாண்டவர்கள் மெலிந்திருப்பதைப் பார்த்துக் கண்ணீர் சொரிந்தார்.

---

## 119-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—2. ஜனமேஜய மஹாராஜர் வைசம்பாயனரைப் பார்த்து ரிஷீசுவரரே! பிரபாசத்தில் விருஷ்ணிகளும் பாண்டவர்களும் கூடினபோது அவர்கள்

என்ன செய்தார்கள்? எவ்வெவ் விஷயங்களைப் பற்றி அவர்கள் சம்பாஷித்தார்கள்? ஏனென்றால் அவர்கள் எல்லாரும் மஹாத்மாக்கள். சகல சாஸ்திரங்களையும் உணர்ந்தவர்கள். ஒருவரோடு சிநேகிதர்களாய்க் கலந்திருந்தார்கள். ஆகையால் அவைகளைக் கேட்க விரும்புகிறேன் என்று கூற வைசம்பாயனர் சொல்லுகிறார்.

3—22. சமுத்திர தீரத்திலுள்ள அந்தப் புண்ணிய தீர்த்தத்துக்கு வந்த பின், சூரர்களான விருஷ்ணிகள் பாண்டு புத்திரர்களைச் சூழ்ந்திருந்தார்கள். அதன் பின், கலப்பையை ஆயுதமாக உடையவரும், பசுவின் பாலைப் போலவும், குந்த மலரைப் போலவும், சந்திரனைப் போலவும். வெள்ளியைப் போலவும், தாமரைக் கிழங்கைப் போலவும் வெளுத்த நிறத்தை யுடையவரும், காட்டு மலர் மாலைகளைத் தரித்தவருமான பலராமர் செந்தாமரைக் கண்ணனை கிருஷ்ணனை நோக்கிக், கிருஷ்ணா! தர்மமானது எவ்விதமான நன்மையையும் தருவதில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. பாபகர்மம் தீமையைத் தரும் என்றாவது எனக்குத் தோன்ற வில்லை. ஏனென்றால் மஹாத்மாவான யுதிஷ்டிரர் சடைமுடி புனைந்து துக்கப் பட்டுக் கொண்டிருக்கிறார். மரவுரியை உடுத்து வனத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார் பாபாத்மாவான துரியோதனன் பூமியை ஆளுகிறான். இந்தப் பூமி அவனை விழுங்காமலிருக்கிறது. இருவராலேயும் அற்பப் புத்தியுள்ளவன் கூட பாபகர்மிக்கும் தர்மவானுக்கும் நேரிடுவதை எளிதில் அறிந்து கொள்ளலாம். தர்மிஷ்டனை விடப் பாபியின் வாழ்வே சிறப்புடையதென்று உணரக் கூடும் துரியோதனன் அபிவிருத்தியிலிருக்கிறான். யுதிஷ்டிரர் இராஜ்யத்தை இழந்து துக்கப் படுகிறார். இது எல்லா மனிதருடைய புத்தியையும் கலக்கத் தக்க ஒரு பெரும் சந்தேகம். மனிதர்களுக்கு அரசனை இந்த யுதிஷ்டிரர் எமதர்மராஜனுக்குப் பிறந்தவர், தாம நெறியில் உறுதியாயிருப்பவர் சத்தியமுள்ளவர் தயாளசித்தமுள்ளவர். இப்படிப்பட்ட குந்தி புத்திரர் இராஜ்யத்தை விட்டதனால் எவர்தாம் தாம நெறியைக் கடவாமலிருப்பார்கள்! பீஷ்மர், கிருபர், துரோணர், முதிர்ந்த வயதுள்ள திருதராஷ்டிரன், மற்றுமுள்ள கௌரவ சிரேஷ்டர்கள் இவர்களெல்லாரும் பிருதையின் புத்திரர்களை வனத்துக்கு ஓட்டிவிட்டு எப்படிச் சந்தோஷமாய் ஜீவிக்கிறார்கள்? பேராசையுள்ள பரத வம்சம் கெட்டது சீ! சீ! பாபியான அந்த அரசன் மறு உலகத்தில் தம் பூர்வீகர்களைக் கண்டால் அவர்களிடத்தில் என்ன சொல்வான்? குற்றமற்ற தன் புத்திரர்களை இராஜ்யத்தினின்றும் துரத்திவிட்டு அவர்களைச் செம்மையாக நடத்தினதாகச் சொல்லிக் கொள்வானா? திருதராஷ்டிர ராஜன் தான் ஏன் பார்வையற்றவனாக இருக்கிறானென்றும், இந்த உலகத்திலிருக்கும் அரசர்களுக்குள் குருடனாக ஏன் வளர்ந்திருக்கிறானென்றும் அவன் தன் மனக் கண்ணால் ஊகித்தறியமாட்டான். ஏனென்றால் அவன் குந்தி குமாரர்களைத் துரத்திவிட்டானல்லவா? இதோ இருக்கிற பீமசேனன் ஒருவனே பிறர் உதவி யில்லாமலும் ஆயுதமொன்றுமில்லாமலும் பகைவருடைய படைகளை

வெல்லத் தக்க புஜபலமுடையவன். இவனுடைய வீரதொனியைக் கேட்ட உடனே சத்ருக்கள் மனம் தளர்ந்து போவார்கள். மஹா பலமுள்ள வீர னை இவன் பசியாலும் தாகத்தாலும் வருந்துகிறான். கஷ்டமான பிரயாணத் தினாலும் மெலிந்து போய் விட்டான். குளிராலும், வெப்பத்தாலும், காற்றா லும் சோர்கிறான். அப்படியிருந்தாலும் யுத்தத்தில் எதிர்த்து நிற்கும்போது எல்லாரையும் சங்கரிப்பான். இவன் ஒருவனே கீழ்நாட்டு அரசர்களையும் அவர்களைச் சேர்ந்த எல்லாரையும் யுத்த களத்தில் வென்றான். தன் தேகத் தில் ஒரு காயங் கூடப் படாமல் க்ஷேமமாய்த் திரும்பி வந்தான். அவன் கூட மரப்பட்டைகளை உடுத்துக் கொண்டு துக்கத்துடன் வனத்தில் காலம் கழிக்கிறான். இந்தச் சகதேவன் தென் தேசத்து அரசர்கள் எல்லாரையும் வென்றான். அவன் இப்போது சந்நியாசி வேஷம் தரித்திருக்கிறான். இந்த நகுலன் மேற்றிசை அரசர்கள் எல்லாரையும் தான் ஒருவனாகவே ஜயித்தான். அவன் இப்போது சடை தரித்து, உடம்பெல்லாம் புழுதி படிய, கனி கிழங்குக ளைப் புசித்துக்கொண்டு வனத்தில் அலைகிறான். இராஜ குமாரத்தியும், யாக குண்டத்திலிருந்து பிறந்தவளும், சுகமாய் வசிக்கிறவளுமான இந்தத் திரௌ பதி இப்பொழுது காட்டில் துக்கத்துடன் ஜீவிக்கிறாள். தர்மார்த்த காமங்க ளில் சிறந்த தர்மராஜா, தர்மதேவதையின் குமாரர். இவன் வாயு புத்திரன். அவன் இந்திர குமாரன் இவ்விருவரும் அசுவினி தேவர்களின் குமாரர்கள். ஆகையால் இவர்கள் எல்லாரும் சுகத்தை அனுபவித்தவர்கள். இப்பொழுது சகல சுகங்களையு மிழந்து வனத்தில் வசிக்கிறார்கள். தர்மராஜா சூது போரில் தோல்வி யடைந்தும், மனைவி சகோதரருடன் வனத்துக்கு அனுப்பப்பட்டும், துரியோதனன் விருத்தி யடையத் தொடங்கியும் இந்தப் பூமி மலைகளுடன் முழுகிப் போகாமலிருக்கிறது என்ன அதிசயம் என்றார்.

---

## 120-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—22. சாத்தியகி சொல்லுகிறார் ; இராமா ! இது துக்கப் படுகிறதற் குச் சமையமில்லை. இந்தக் காலத்துக்கு எது செய்யத் தக்கதோ, எது சரி யானதோ அதை யோசித்துத் தாமதியாமல் செய்ய வேண்டும். யுதிஷ்டிரர் யாதொன்றும் பேசாமலிருந்தாலும் அவசியமில்லை. தங்களுக்கு உதவி செய் யத் தக்க மனிதர்களை உடையவர்களாயிருப்பவர்கள் தம்மைப் பற்றிக் கவலைப் படுகிறதில்லை ஏனென்றால் மற்றவர்கள் அதைச் செய்து விடுவார்கள். சிபியும் யயாதியும் அப்படியே நடந்தார்கள். உதவி செய்யும் நண்பர்கள் அவர்களுடைய கருத்தைப் போலவே காரியங்களைச் செய்கிறார்கள். தமது காரியங்களைக் கவனிக்கத்தக்க நண்பர்களை உடையவர்கள் ஒருபோதும் வருத்தப்படுகிறதில் லை. நண்பர்கள் இல்லாதவர்களே துக்கப் படுகிறார்கள். இராமர், கிருஷ்ணர்,

பிரத்தியும்னன், சாம்பன், நாம் எல்லாரும் இருக்கிறோம். நாமெல்லாரும் மூவுலகங்களையும் காக்கத் தக்கவர்கள். நாம் இருக்கிறபோது கூடப் பிருதை யின் புத்திரர்களாகிய இவர்கள் என் வனத்தில் வசிக்க வேண்டும்? இன்றைய தினமே நமது சைனியம் சர்வாயுததாரிகளாகப் புறப்பட வேண்டும். விருஷ்ணிகுலத்துப் போர் வீரர்கள் புறப்பட்டுப் போய்த் திருதராஷ்டிரன் புத்திரர்களைத் தாக்க வேண்டும். அவர்கள் எல்லாரையும் அவர்களைச் சேர்ந்தவர்களோடு எமபுரத்துக்கு அனுப்ப வேண்டும். கோபித்து எழுந்தால் முழுவதையும் தலை குப்புறக் கவிழ்க்க வல்ல நீரும், இந்தக் கிருஷ்ணனும், இந்திரன் விருத்திரனைக் கொன்றது போலத் திருதராஷ்டிர புத்திரர்களைக் கொல்ல வேண்டும். பிருதையின் புத்திரனான அர்ஜுனன் தான் எனக்குச் சகோதரன்; எனக்கு நண்பன் எனக்கு குருவாகவும் இருக்கிறான். இரண்டாவது கிருஷ்ணன் போலவும் இருக்கிறான். இந்தக் காரணத்தைப் பற்றியே மனிதர்கள் தகுந்த புத்திரர்களையும், குருவானவன் உபசரிக்கிறவனும் வணக்கமுள்ளவனுமான சிஷ்யனையும், தேடுகிறார்கள். இப்பொழுது அப்படிப்பட்ட சிறந்ததும் செய்வதற்கு அருமையான காரியம் நேர்ந்திருக்கிறது. நான் என்னுடைய சிறந்த ஆயுதங்களாலே துரியோதனனுடைய அஸ்திர சாஸ்திரங்கள் எல்லாவற்றையும் தடுத்து விடுவேன். யுத்தத்தில் எல்லாரையும் விட மேலான சாமார்த்தியம் எனக்கு இருக்கிறது. சர்ப்பத்துக்கும் நெருப்புக்கும் விஷத்துக்கும் சமானமாயிருக்கிற என்னுடைய பாணத்தாலே துரியோதனனுடைய சிரசையும் உடலையும் வேறாகத் துண்டித்து விடுவேன் யுத்த களத்திலே. எதிர்த்து என் வாளாலே அவன் தலையைத் துண்டித்து விடுவேன். அவனைச் சேர்ந்தவர்களையும் எல்லாக் கௌரவர்களையும் சங்கரித்து விடுவேன். யுகாந்த காலத்தில் பிரளயாக்கினி துரும்பைப் பற்றி யெரிப்பது போல எல்லாக் கௌரவர்களையுந் தகித்து விடுவேன். ரோகிணி புத்திரரே! நான் ஆயுதத்தைக் கைக்கொண்டு யுத்த களத்திலே செய்வதைப் பீமனைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் பார்த்து மகிழட்டும். பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன், விகர்ணன் முதலிய வீரர்கள் எல்லாரும் பிரத்தியும்னனுடைய பாணங்களுக்கு எதிரில் நிற்கவும் சக்தியற்றவர்கள். கிருஷ்ணனுடைய புத்திரன் சக்தியை நான் அறிவேன். அவன் யுத்த களத்தில் செய்கிற சாமர்த்தியமும் எனக்குத் தெரியும். துச்சாதனனை அவனது தேர் குதிரை சாரதிகளோடு சாம்பன் கொன்று விடுவான். யுத்தத்தில் பின் வாங்காத வீரனான சாம்பனோடு எதிர்த்து யுத்தம் செய்து தப்பிப் போகிறவர்கள் ஒருவருமில்லை. அவன் சிறுவனாக இருந்த போதே தைத்தியனாகிய சால்வனுடைய சைனியங்களை நாசம் செய்து விட்டான். நீண்ட புஜங்களை யுடைய பராகிரமசாலியான அசுவசக்கிரனை அவன் கொன்று விட்டான். தேர் வீரனாகிய சாம்பனை எதிர்த்து நிற்பவர்கள் யார்? எமனுடைய வளைந்த நகங்களுக்கு இடையில் அகப்பட்ட மனிதர்கள் தப்பி வர முடியாதது போல யுத்தகளத்தில சாம்பனுக்கு எதிர்ப்பட்டவர்களும் தப்புவதில்லை மஹாரத வீரர்களான பீஷ்மர்,

துரோணர், சோமதத்தன், முதலானவர்களையும் அவர்களுடைய சேனைகளை யும் இந்தச் சாம்பன் தனது பாணாக்கினியாலே தகித்து விடுவான். தேவ லோகம் முதலாகச் சகல லோகங்களிலும் உள்ளவர்களில் கிருஷ்ணனால் வெ ல்லப்படாதவர்கள் யார்? வாள், சக்கரம், பாணம் முதலியவற்றைத் தரித்து கொண்டு யுத்த களத்தில் பிரவேசிக்கிற கிருஷ்ணனுக்குச் சமமாக எதிர்த்து நிற்கிறவர்கள் யார்? சமானமே கிடையாது. அநிருத்தன் கேடகத்தையும் வாளையும் எடுத்துக்கொண்டு யுத்த களத்தில் புகுந்து, திருதராஷ்டிரன் புத்தி ரருடைய சிரசுகளை அரிந்து, யாக வேதிகை குசப்புல்லால் நிறைந்திருப்பது போல பிரேதங்களாலே பூமியைப் போர்த்து விடட்டும். கதன், உல்முகன், வாகுகன், பானு, நீதன், சரணன், சாருதேஷ்ணன் இவர்களெல்லாரும் இணை யற்ற யுத்த வீரர்கள். இவர்கள் எல்லாரும் தங்கள் வம்சத்துக்குரிய பராக்கி ரமத்தைச் செலுத்தட்டும். ஸாத்வதர், சூரர் இவர்களுடைய சைனியங்களை ஒன்றாய்ச் சேர்த்துக் கொண்டு விருஷ்ணிகளும் அந்தகர்களும் போய் யுத்தம் செய்து திருதராஷ்டிரன் புத்திரர்களைச் சங்கரித்துத் தங்களுடைய கீர்த்தி பிரதாபம் உலகமெங்கும் பரவும்படி செய்யக் கடவர்கள். மஹாத்மாவான யுதிஷ்டிரர் சூதாடின காலத்தில் ஒத்துக்கொண்ட வனவாச விரதத்தை நிறை வேற்றி வருகிறமட்டும் அபிமன்யு பூமியைப் பரிபாலனம் பண்ணு வான். நமது பாணங்களாலே சத்துருக்களெல்லாரும் நாசம் செய்யப்பட்ட பின் புண்ணியவானான தர்ம ராஜா அரசாட்சி செய்யப்படட்டும். துரியோதன னும் கர்ணனும் அப்புறம் இருக்க மாட்டார்கள். இது தான் நாம் செய்ய வேண்டிய முக்கியமான வேலை நிச்சயமாகவே இது நமக்குக் கீர்த்தியை உண்டாக்கும் என்று சொன்னான்.

23—26 கிருஷ்ணன் சாத்யகியைப் பார்த்து மதுவம்சத்தவனே நீ சொல்வதெல்லாம் சரி இதில் சந்தேகமில்லை. மஹாபராக்கிரம சாலியான வீரனே! நீ சொன்னவைகளை நாங்கள் ஒப்புக்கொள்கிறோம் குருவம்சத்தவ ரான இந்த யுதிஷ்டிரர் தம்முடைய சொந்த சாமர்த்தியத்தால் ஜயிக்கப்படாத இராஜ்யத்தை அடையப் பிரியப்படவில்லை. இந்த யுதிஷ்டிரர் விருப்பத்தினு லாவது பயத்தினாலாவது பொருளாசையாலாவது க்ஷத்திரிய தர்மத்தைக் கை விட விரும்புகிறதில்லை. பீமார்ஜுன நகுல சகாதேவர்களும் திரௌபதி புத்திரர்களும் அப்படிப் பட்டவர்களே. பீமனும் அர்ஜுனனும் இவ்வுலகத் தில் ஒப்பற்ற போர்வீரர்கள். மாத்திரி புத்திரர்களிருவரும் அவருடைய எண்ணத்தை நிறைவேற்றக் காத்திருக்கிறார்கள். இப்படியிருக்கையில் யுதிஷ் டிரருக்கு எப்படி இராஜ்யம் கிடைக்காமற் போகும்? பாஞ்சாலர், கேகயர், நாம் எல்லாரும் ஒன்றாய்ச் சேர்ந்து நமது பராக்கிரமத்தைச் செலுத்தினால் யுதிஷ்டிரருடைய சத்துருக்கள் நிர்மூலமாய்ப் போவது நிச்சயம் என்றார்.

27—29. யுதிஷ்டிரர் சொல்லுகிறார். மது வம்சத்தவனே! சாத்யகீ! இப்படி நீ பேசுவது ஆச்சரியமல்ல. இராஜத்துவத்தைப் பார்க்கிலும் சத்தியமே

எனக்கு மேலானது. நான் எப்படிப்பட்டவனென்று கிருஷ்ணனுக்குத் தெரியும். கிருஷ்ணன் தன்மை எனக்குத் தான் தெரியும். நமது பராக்கிரமத்தைச் செலுத்துவதற்குத் தகுந்த காலம் வருகிற சமயம் கிருஷ்ணனுக்குத் தெரியும். அப்போது நீயும் அவரும் சேர்ந்து துரியோதனனை வெல்லலாம். இந்த தசார் வம்ச வீரர்கள் இன்று திரும்பிப் போகட்டும். இவர்களெல்லாரும் என் துணைவர்கள். இவர்கள் எல்லாரும் என்னைப் பார்க்க வந்திருக்கிறார்கள் பராக்கிரமசாலிகளான வீரர்களே தர்ம நெறியிலிருந்து ஒரு போதும் தவறாதீர்கள். மறுபடியும் நீங்கள் எல்லாரும் மகிழ்ச்சியுடன் கூடுகிறதை நான் பார்ப்பேன் என்றார்.

30—32. பிறகு பாண்டவர்களும் யாதவர்களும் ஒருவரை ஒருவர் உபசரித்தும், பெரியவர்களை வணங்கியும் இளையவர்களைத் தழுவியும் மரியாதை செய்து பிரிந்து போனார்கள். யாதவர் தங்களுடைய வீட்டுக்குப் போனார்கள். பாண்டவர் தீர்த்த யாத்திரை போனார்கள். தர்மராஜா கிருஷ்ணனையும் பிரிந்த பின் தமது சகோதரர், ரோமசர், வேலைக்காரர்களுடன், பயசினி நதியை அடைந்தார்கள். சோமரசத்துடன் சேர்ந்திருக்கிற நீரையுடைய அந்த நதிக்கரையில் தங்கினார்கள். அப்போது அங்கே உள்ள முக்கியமான பிராமணர்கள் வந்து அவர்களைப் புகழ்ந்து உபசரித்து மரியாதை செய்தார்கள்.

---

## 121-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—15. ரோமசர் தர்மராஜாவைப் பார்த்து, கிருக ராஜன் இங்கே யாகம் செய்தான். அப்போது அவ்வரசன் தேவேந்திரனைச் சோமரசத்தால் திருப்தி செய்தான். அதனால் இந்திரன் மிகவும் மகிழ்ந்தான். இந்திரன் முதலிய தேவர்களும், பிரமாவும் இவ்விடத்தில் அநேக யாகங்களைச் செய்தார்கள். குருமார்களுக்கு மிகுந்த தட்சிணை கொடுத்தார்கள். அமூர்த்தராயஸ ராஜன் இவ்விடத்தில் அசுவமேத யாகங்கள் செய்தான். இந்திரனைச் சோமரசத்தால் திருப்தி செய்தான். மற்றைய யாகங்களில் யாக பாத்திரங்கள் எல்லாம் மரத்தாலும் மண்ணாலும் செய்யப் பட்டிருக்கும். இந்த ஏழு யாகங்களிலும் அவைகளெல்லாம் சொர்ணத்தால் செய்யப்பட்டன. இந்த பாத்திரங்கள் ஒவ்வொரு யாகத்துக்கும் ஒவ்வொரு ஜோடியாக ஏழு யாகங்களும் ஏழு ஜோடி செய்யப்பட்டன. தேவர்களும் இந்திரனும் கூடத் தங்கத்தால் யூபஸ்தம்பங்களை நிறுத்தி யாகம் செய்தார்கள். பெருமையுள்ள இந்த யாகங்களிலெல்லாம் கயராஜன் இந்திரனுக்குச் சோமரசம் கொடுத்துத் திருப்தி செய்தான். பிராமணர்களான குருமார்களும் ஏராளமான தக்ஷிணை கொடுத்தான். பூமியின் மணலையும், மழைத் துளிகளையும், ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்க

ளையும் கணக்கிடமுடியும். கயராஜன் கொடுத்த திரவியத்தைக் கணக்கிட முடியாது. மேல் குதித்தவைகளைக் கணக்கிட்டாலும், குருமார்களுக்குக் கொடுத்த தட்சிணையைக் கணக்கிட முடியாது. விசுவகர்மா சொர்ணத்தால் சரஸ்வதி விக்கிரகங்கள் செய்து கொடுத்தான். கயன் நாலா பக்கங்களிலு மிருந்து வந்த பிராமணர்களுக்கு அவைகளைக் கொடுத்து உபசரித்தான். யுதிஷ்டிரா! கயன் யாகம் செய்த போது பூமியில் எங்கும் இடமில்லை யென்று சொல்லும்படியாக அளவிறந்த யூபஸ்தம்பங்களை நாட்டினான். தர்மராஜாவே! இதனால் கயன் இந்திர லோகத்தை அடைந்தான். இந்தப் பயசினி நதியில் ஸ்நானம் பண்ணுகிறவன் கயன் பெற்ற பதவியைப் பெறுவான். ஆகையால் அரசர்க்கரசனே! பூமிக்கிறைவனே! குற்றமற்றவனே? நீயும் உன் சகோத ரர்களும் இந்த நதியில் ஸ்நானம் செய்ய வேண்டும். செய்தவுடனே சகல பா வங்களும் ஒழியும் என்று சொன்னார்.

16—23. கீர்த்தியுள்ளவனே! பாபமற்றவனே! தர்மராஜா தமது சகோதரர்களுடன் அதில் ஸ்நானம் பண்ணி விட்டு வைடூர்ய மலையை நோக்கிச் சென்றார். பின் நர்மதைக்குப் போனார். ரோமசர் அங்குள்ள தீர்த்த மகிமைகளை யெல்லாம் அவர்களுக்குச் சொன்னார். பிறகு தமது விருப்பத்துக்கும், சௌகரியத்துக்கும் தக்கபடி பல ஸ்தலங்களுக்கும் சென்றார். அங் கங்கே அநேக திரவிய தானம் செய்தார். ரோமசர், தர்மராஜாவே! இந்த வைடூர்ய மலையைத் தரிசித்து, நர்மதையில் ஸ்நானம் பண்ணுகிறவன் தேவ லோகத்தை அடைவான் குந்திபுத்திரனே! இது துவாபர யுக கலியுகங்க ளின் சந்தி. ஒருவன் தன் பாபங்களைப் போக்கிக் கொள்வதற்கு இது தான் சமையம். சரியதி என்பவன் யாகம் செய்தான். இந்திரனும் அசுவினி தேவர் களும் பிரத்தியட்சமாய் வந்து சோமபானம் பண்ணினார்கள். பாரதனே! பிருகுவம்சத்தவரான சியவனர் இந்திரனைக் கோபித்து வென்று சுகன்னியை மணம் புரிந்தார் என்று சொன்னார். யுதிஷ்டிரர், அந்த மஹரிஷி இந்திரனை ஏன் கோபித்தார்? அவர் ஏன் அசுவினி தேவர்களுக்குச் சோமரசம் கொடுத் தார். அதை விபரமாகச் சொல்ல வேண்டு மென்று கேட்க ரோமசர் சொல் லுகிறார்.

---

## 122-வது அத்தியாயம்.

### தீர்த்த யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—9. பரதவம்சத்தவனே! பிருகு மஹரிஷியின் புத்திரருக்குச் சியவ னர் என்று பேர். அந்த மஹரிஷியானவர் அதோ தெரிகிற ஏரியின் அருகில் தவம் பண்ணிக் கொண்டிருந்தார். அவர் வீராசனத்திலிருந்து கொண்டு நெடுங்காலம் தவம் செய்தார். வெகு காலத்துக்குப் பின் கரையான் புற்று

அவரை மூடிக்கொண்டது. அதன்மேல் அநேக கொடிகள் படர்ந்தன. அவர் மேல் எறும்புக் கூட்டங்கள் வசித்தன. எறும்புகள் ஒரு மண்மேடு போலத் தோன்றியது. இப்படி யிருந்து கொண்டு அவர் பெரும் தவம் செய்தார். வெகு காலத்துக்குப் பின் சர்யாதிராஜன் அந்த ஏரிக்கரையில் வந்து உல்லாசமாயிருந்தான். அவன் கூட நாலாயிரம் ஸ்திரீகளிருந்தார்கள். அவனுடைய புத்திரியான அழகுள்ள சுகன்னியும் வந்திருந்தாள் அழகான ஆபரணங்களை யணிந்து கொண்டு தன் தோழிகளுடன் பிருகு புத்திரர் தவம் செய்கிற எறும்புப் புற்றினருகில் வந்தாள். அங்கே விளையாடிக்கொண்டிருந்த போது, அங்கே யுள்ள விநோதங்களையும், பெரிய மரங்களையும் பார்த்துக்கொண்டு வந்தாள். அவள் அழகும் யௌவனமும் உள்ளவள். சரசலீலைகளுக்கு ஏற்றவள். ஆகையால் மலர் நிறைந்த மரக்கொம்புகளை ஒடிக்கத் தொடங்கினாள்.

10—21. பிருகு புத்திரரான சியவனர் அவள் தனிமையா யிருப்பதைப் பார்த்தார். ஒற்றை வஸ்திரம் தரித்து, ஆபரணங்களை யணிந்து கொண்டு மின்னலைப் போல அந்த வனத்தில் உலாவிக் கொண்டிருந்தாள். அவள் அப்படி உல்லாசமாய் உலாவிக் கொண்டிருக்கிறதைப் பார்த்துச் சியவனர் அவள் மேல் காதல் கொண்டார். அவளை கூப்பிட்டார். அவளுக்கு அது கேட்கவில்லை. பிறகு சுகன்னி கறையான் புற்றிலிருக்கிற சியவன முனிவருடைய கண்களைப் பார்த்தாள். உடனே ஆச்சரியத்தால் மதி மயங்கிப்போனாள். இது என்ன என்று சொல்லிக் கொண்டே ஒரு முள்ளை யெடுத்து அந்தக் கண்களைக் குத்தினாள். அதனால் அவர் வருந்தி மிகவும் விசனங் கொண்டார். உடனே சர்யாதி யிராஜனுடைய பரிவாரத்தாருக்கு மலஜல விசர்ஜனம் இல்லாமலிருக்கும்படி செய்து விட்டார். அதனால் அந்தச் சேனைகள் மிக்க கஷ்டப்பட்டார்கள். அதை யறிந்த அரசன் பிருகு புத்திரரான முனிவருக்குத் துன்பமுண்டாக்கினது யார் என்று கேட்டான். அவர் வயது சென்றவர். எப்போதும் தவம் செய்கிறவர். அதிக கோபமுள்ளவர். நீங்கள் அறிந்திருந்தால் தாமசமில்லாமல் உடனே சொல்லுங்கள். எல்லாரும் இது எங்களுக்குத் தெரியாது என்று சொன்னார்கள். இதை விசாரித்து உமக்கு இஷ்டமானபடி செய்யும் என்று கூறினார்கள். அரசன் நயத்தாலும் பயத்தாலும் கேட்டான். தன் சிநேகிதர்களையும் கேட்டான். அவர்களும் நாங்கள் அறியோ மென்றார்கள். ஜனங்களுடைய கஷ்டத்தையும் அரசனுடைய துக்கத்தையும் சுகன்னி பார்த்து, தன் பிதாவினிடம் வந்து, நான் வனத்தில் உலாவிக் கொண்டிருக்கிற போது கறையான் புற்றில் ஏதோ ப்ரகாசமா யிருக்கிறதைப் பார்த்தேன். அது மின் மினிப் பூச்சியாயிருக்கு மென்று நினைத்து முள்ளால் அதைக் குத்தினே னென்றாள். அரசன் இதைக் கேட்டவுடனே அவசரமாய் அந்தப் புற்றினிடத்துக்குப் போனான்.

22. அங்கே போய்த் தவத்தாலும் வயதாலும் பெரியவரான பிருகு புத்திரரைக் கண்டான். பிறகு அஞ்சலியஸ்தனாய் நின்றுகொண்டு கருணை

செய்யும்படி பிரார்த்தனை செய்யத் தொடங்கினான். இந்தப் பெண் அறியாமையினாலே செய்த குற்றத்தைப் பொறுத் தருள வேண்டும் என்றான். பிறகு பிருகு புத்திரரான சியவனர் அரசனைப் பார்த்து, இந்தப் பெண் கருவம் கொண்டிருக்கிறாள். அதனாலே என் கண்களைத் துளைத்து விட்டாள். இவள் அழகாயிருப்பதாலும், அறியாமையால் குற்றம் செய்தவளாதலாலும் உன் புத்திரியாகிய இவளை நான் மனைவியாக அடைய வேண்டும். இப்படிச் செய்தால் தான் நான் உன்னை க்ஷமிப்பேன் என்று நிச்சயமாய்ச் சொல்லுகிறேன் என்றார். அதைக் கேட்ட வுடனே யாதொரு தடையும் சொல்லாமல் தன் குமாரத்தியை அவருக்குக் கொடுத்து விட்டான். அவளை மனைவியாகப் பெற்றதும் முனிவர் அரசனுக்கு அனுக்கிரகம் செய்தார். அந்த முனிவன் கிருபையை பெற்றுக்கொண்ட அரசன் தன் பரிவாரத்தோடு நகரம் போய்ச் சேர்ந்தான். சுகன்னி முனிவரைக் கணவனாக அடைந்து அவரை உபசரித்துக்கொண்டு கிரமமாகத் தவம் செய்து கொண்டிருந்தாள். அழகான குற்றமற்ற அந்தப் பெண் சியவனரைத் தொழுது கொண்டும், அதிதிகளை உபசரித்துக் கொண்டும் ஹோமாக்னியைக் காப்பாற்றிக்கொண்டும் இருந்தாள்.

---

## 123-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—14. பிறகு ஒரு காலத்தில் அசுவினி தேவர்களிருவரும் சுகன்னியைப் பார்த்தார்கள். அப்போது அவள் வஸ்திரமில்லாமல் ஸ்நானம் செய்து கொண்டிருந்தாள். தேவேந்திரனுடைய குமாரத்தியைப் போல விளங்குகிற அழகான அந்தப் பெண்ணினிடம் வந்து சொல்லுகிறார்கள். அழகான பெண்ணே! நீ யாருடைய புத்திரி? இந்தக் காட்டில் என்ன செய்கிறாய்? நாங்கள் இதை அறிய விரும்புகிறோம். ஆகையால் எங்களுக்குச் சொல்லு என்று கேட்டார்கள். சுகன்னி அந்தத் தேவர்களை நோக்கி நாணத்துடன் சொல்லுகிறாள். நான் சர்யாதி ராஜன் புத்திரி. சியவன முனிவருடைய மனைவி என்றாள். தேவர்கள், மங்களமானவளே! சீக்கிரத்தில் மரணம் அடையப் போகிறவனான அந்த மனிதனுக்கு உன் பிதா ஏன் கொடுத்தார். அச்சமுள்ளவளே! நீ இந்த வனத்தில் மின்னல் கொடியைப் போலச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறாய். அழகான பெண்ணே! உன்னைப் போல அழகுள்ள பெண்கள் தேவலோகத்தில் கூட இல்லை. நீ ஆபரணங்களையும் சிறந்த வஸ்திரங்களையும் அணிந்து கொள்ளாமலிருந்தாலும் உன் இயற்கை அழகால் இந்த வனத்தை அலங்கரிக்கிறாய். குற்றமற்ற அவயவங்களை யுடையவளே! உன் சரீரம் புழுதி படிந்து இருப்பதால் அதிக அழகாகக் காணப்படா விட்டாலும் சிறந்த ஆடையாபரணங்களை அணிந்திருப்பவளைப் போலவே அழகாக

விளங்குகிறாய். சுபமானவளே! இப்படிப்பட்ட அழகுள்ள நீ ஒரு மெலிந்த கிழக் கணவனுக்கு ஏன் பணிவிடை செய்து கொண்டிருக்கிறாய்? இன்பம் அநுபவிக்கத் தகாதவன். உன்னைக் காப்பாற்றவும் போஷிக்கவும் சக்தி யற்றவன். ஆகையால் சியவன முனிவரைத் தள்ளி விட்டு எங்களில் ஒருவரைக் கணவனாக அடை. உன் மனதை திடப் படுத்திக்கொண்டு, உன் கணவனை எங்களிடம் அழைத்துக்கொண்டு வா, உன் யௌவனத்தை வியர்த்தமாக்காதே என்றார்கள். அதைக் கேட்ட சுகன்னி நான் கணவனிடம் பக்தி யுள்ளவள். இதில் சந்தேகமில்லை என்றாள். அசுவினி தேவர்கள் மறுபடியும் அவளை நோக்கி நாங்கள் இருவரும் தேவ வைத்தியர்கள். உன் கணவனை அழகும் யௌவனமும் உள்ளவராகச் செய்து விடுவோம். பிறகு எங்கள் மூவருக்குள் ஒருவனை நீ கணவனாக வரித்துக் கொள். நீ இதற்கு உடன் பட்டு உன் கணவனை அழைத்துக்கொண்டு வா என்றார்கள். சுகன்னி அப்படியே தன் கணவனிடம் போனாள்.

15—. அரசனே! அவரிடம் போய் அசுவினி தேவர்கள் சொன்னதைச் சொன்னாள். அவரும் அப்படியே செய் என்றார். அவள் திரும்பி வந்து அசுவினிதேவர்களை நோக்கி நீங்கள் சொன்னபடி செய்யுங்கள் என்றாள். தேவர்கள் உன் கணவன் இந்தத் தண்ணீரில் முழுகட்டும் என்றார்கள். சியவனர் அப்படியே அந்த ஏரிநீரில் முழுகினார். அசுவினி தேவர்களும் முழுகினார்கள். கொஞ்ச நேரத்துக் கெல்லாம் மூவரும் வெளியே வந்தார்கள். அவர்கள் மூவரும் ஒரே மாதிரியான யௌவனமும் அழகும் உடையவர்களாயும், ஒரே மாதிரியான வடிவமுடையவர்களாயும், மனதுக்கு மகிழ்ச்சியளிப்பவராயும், விளங்கினார்கள். அம்மூவரும் அவளைநோக்கி, மகிமையுள்ளவளே! பாக்கியவதியே! அழகான பெண்ணே! எங்களுக்குள் ஒருவரை உனக்குக் கணவனாகத் தேர்ந்தெடு. நீ விரும்பினவனை வரி என்றார்கள். அவர்களெல்லாரும் ஒரே மாதிரி வடிவமாக இருப்பதைப் பார்த்துச் சற்று நேரம் யோசித்துக், கடைசியில் நிதானித்துத் தன் கணவனைத் தெரிந்துகொண்டு வரித்தாள். சியவனர் தாம் விரும்பினபடி அழகையும் மனைவியையும் அடைந்தார். பிறகு சியவனர்அசுவினி தேவர்களைப் பார்த்து, நான் கிழவனாயிருந்தும் உங்களாலே அழகையும் யௌவனத்தையும் மனைவியையும் அடைந்தேன். ஆகையால் தேவராஜனுக்கு எதிரில் உங்களுக்கு யாகத்தில் சோமபானம் அளிக்கின்றேன் என்றார். அதைக் கேட்ட அசுவினி தேவர்கள் மகிழ்ச்சியுடன் தேவலோகம் போனார்கள். சியவனரும் சுகன்னியும் தேவர்களைப் போலச் சுகமாய் வசித்துக் கொண்டிருந்தார்கள்.

---

## 124-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—7. சியவனர் யௌவனரானதைக் கேட்டுச், சர்யாதிராஜன் மிக வும் மகிழ்ச்சி யடைந்து, சியவனருடைய ஆச்சிரமத்துக்குத் தன் பரிவாரங்க ளுடன் வந்தான். சியவனரும் சுகன்னியும் தேவர்களைப் போல விளங்குவ தைப் பார்த்தான். சர்யாதியும் அவன் மனைவியும் உலகம் முழுவதையும் அடைந்தவர்களைப் போல மகிழ்ந்தார்கள். சியவனரும் சுகன்னியும் அவர்களை மரியாதையாக வரவழைத்துக்கொண்டார்கள். அரசன் முனிவர் கிட்ட உட் கார்ந்துகொண்டு சந்தோஷமாகச் சம்பாஷித்துக்கொண்டிருந்தான். அரச னே! பிருகு புத்திரரான சியவனர் அரசனை நோக்கிச் சொல்லுகிறார். அரச னே! நான் உமது யாகத்தை நிறைவேற்றி வைக்கிறேன். அதற்கு வேண்டிய வைகளைச் சேகரியும் என்றார். பூமிக்கிறைவனான சர்யாதி மகிழ்ச்சி யடைந் தான் அவர் சொன்னபடி செய்ய உடன்பட்டான். ஒரு நாளில் நல்ல முகூர் த்தத்தில் சிறந்த யாகசாலை நிர்மிக்கக் கட்டளை யிட்டான். வேண்டிய சகல வஸ்துக்களையும் அதில் நிறைத்துவைத்தான் தர்மராஜாவே! பிருகு குமார ராகிய சியவனர் சர்யாதியின் யாகத்தைச் செய்துவைத்தார். இந்த இடத் தில் தான் அந்த அற்புதமான விஷயம் நடந்தது.

8—12. சியவன முனிவர் கொஞ்சம் சோமரசத்தை எடுத்தார். தேவ வைத்தியர்களான அசுவினிதேவர்களுக்கு அதைக் கொடுக்கப்போனார். தே வேந்திரன் அதைத் தடுத்துச் சொல்லுகிறான். இந்த அசுவினித் தேவர்கள் இருவரும் சோமரசத்தைப் பெற்றுக்கொள்ளத் தக்கவர்கள் அல்ல. அவர் கள் தேவர்களுக்கு வைத்தியர்கள். ஆகையால் அவர்கள் விலக்கப்பட்டிருக்கி றார்கள் என்றான். சியவனர் இந்திரனே! இவ்விருவரும் மிகுந்த சக்தியுள்ள வர்கள். மஹாத்மாக்கள் அழகுள்ளவர்கள். என்னைத் தேவர்களைப் போல எப்போதும் இளமையாயிருக்கச் செய்தார்கள். நீயும் மற்றத் தேவர்களும் சோமரசம்பெறும்படி பாத்தியமுள்ளவர்களாயிருப்பதும் இவ்விருவரும் அதி காரமில்லாமலிருப்பதும் என்னத்தினாலே? தேவராஜனே! அசுவினிகளும் தே வர்களே யென்று அறிந்துகொள் என்றார். இவ்விருவரும் வைத்தியர்கள் ஆகையால் இவர்கள் எங்களுக்குப் பணிவிடைக்காரர்கள். அவர்கள் தங்க ளிஷ்டப்படி பல விதமான வடிவங்களை யெடுத்துக்கொண்டு மனித உலகத் தில் சஞ்சரிப்பவர்கள். ஆகையால் அவர்கள் சோமரசத்துக்கு அருகர்கள் ஆக மாட்டார்கள் என்றான்

13—25. இந்திரன் இப்படிச் சொன்னவுடனே சியவனர் அந்த இந்தி ரனை மதிக்கவில்லை. சோமரசத்தை யெடுத்து அசுவினிதேவர்களுக்குக் கொ டுக்கப் போனார். அதைக் கண்டு வலனுக்கு வைரியான இந்திரன் சொல்லுகி றான். நீர் இந்தச் சோமரசத்தை அசுவினிதேவர்களுக்குக் கொடுத்தால்

ஆயுதங்கள் எல்லாவற்றிலும் சிறந்த வஜ்ராயுதத்தை உம்மேலே எவுவேன் என்றான். இதைக் கேட்டுப் பிருகு புத்திரர் புன்சிரிப்புடன் இந்திரனைப் பார்த்துக் கொண்டே சிறந்த சோமரசத்தை அச்வினித் தேவர்களுக்குக் கொடுத்தார். இந்திரன் கோபங்கொண்டு அவர் மேல் பயங்கரமான வஜ்ராயுதத்தை எறிந்தான். சியவனர் அதை ஸ்தம்பிக்கச் செய்துவிட்டார். இந்திரனுடைய கைகளையும் ஸ்தம்பிக்கச்செய்துவிட்டு, வேதமந்திரோச் சாரணத்துடன் அக்கினியில் ஆகுதி கொடுத்து ஹோமம் செய்தார். மஹா சக்தியுள்ள சியவனர் இப்படித் தமது கருத்தை நிறைவேற்றின பின் இந்திரனைக் கொல்ல நினைத்தார். அதன்பின் அந்த மஹரிஷி தமது வல்லமையினால் பெரிய சரீரத்தையுடைய மதன் என்ற ஒரு அசுரனை உண்டாக்கினார். அவனுடைய சரீரம் தேவர்களாலும் அசுரர்களாலும் அளவிடமுடியாத காத்திரமுள்ளது. அவனுடைய வாய் மிகவும் பயங்கரமானது. கூர்மையான பெரிய பற்களை யுடையது. அவனுடைய கன்னங்களில் ஒன்று பூமியில் புரளும், மற்றொன்று ஆகாயத்தை முட்டும். அவனுடைய வக்கிரதந்தங்கள் நூறு யோசனை நீளமுள்ளன. மற்றப் பற்களும் அப்படியே. அவைகள் அரண்மனையின் மேலுள்ள சிகரங்களைப்போலத் தோன்றும். ஈட்டியைப் போல கூர்மையுள்ளவை. அவனுடைய இரண்டு தோள்களும், இரண்டு மலைகளைப் போன்றன. அவைகள் சரியான பருமனும், பதினாயிரம் யோசனை உயரமும் உள்ளன. இரண்டு கண்களும் சந்திரசூரியர்களைப் போன்றிருக்கும் அவனுடைய முகம் பிரளய காலாக்கினி போலிருக்கும். அவன் தன்னுடைய நாக்கினால் வாயைத் துலாவிக்கொண்டே யிருப்பன், அது மறையாத மின்னலைப் போல விளங்கும் வாய் திறந்து இருக்கும். அவன் பார்வை பயங்கரமாயிருக்கும். உலகமுழுவதையும் விழுங்கி விடுகிறவனைப் போலத் தோன்றினான். அப்படிப்பட்ட அசுரன் இந்திரனை விழுங்கும்படி அவன்மேல் பாய்ந்தான். அப்போது அந்த அசுரனுடைய கர்ஜனையால் உலகம் எல்லாம் எதிரொலியுண்டாயிற்று.

---

## 125-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. இப்படித் தன்னை விழுங்கும்படி தன்மேல் பாய்ந்து வருகிற அசுரனைப் பார்த்து இந்திரன் பயந்து நடுநடுங்கித் துயரத்துடன் சியவனரைப் பார்த்துச் சொல்லுகிறான். பிருகு புத்திரரே! அந்தணரே! இன்று முதல் அசுவினி தேவர்களும் சோம பாகம் பெறக் கடவர்கள். ஆகையால் என் மேல் இரக்கம் வையும். பிராமண ரிஷியே! உமது முயற்சி எப்போதும் பலனுள்ளதாய் இருக்கட்டும். இதுவே விதியாக இருக்கக் கடவது. உமது செய்கை வீணாகாது என்று எனக்குத் தெரியும். பிருகு புத்திரரே! நீர் இன்றைக்குச் செய்தது போலவே இந்த அசுவினி தேவர்களும் எப்போதும் சோமரசம்

பெறத் தகுதியுள்ளவர்களாகட்டும் உமது மகிமையுள்ள கீர்த்தி எங்கும் பர வும்படி நான் இதைச் செய்தேன். என்னுடைய கருத்தானது சுகன்னி பிதா வின் புகழ் உலக மெங்கும் பரவ வேண்டு மென்பதே. அதனாலே தான் நான் இப்படிச் செய்தேன். நான் இப்படிச் செய்ததனாலே உமது புகழும் உலக மெங்கும் பரவக் கடவது. ஆகையால் எனக்கு இரங்கும். உமது விருப்பம் நிறைவேறட்டும் என்றான் இந்திரன் இப்படிப் பிரார்த்தித்த போது பிருகு புத் திரர் சாந்தமானார். உடனே இந்திரனை விடுதலை செய்துவிட்டார். அந்த மதாசுரனைப் பல பாகங்களாக்கிக், குடிக்கிற மதுவிலும், ஸ்திரீகளினி டத்திலும், சூதாட்டத்திலும், விளையாட்டினிடத்திலும் இருக்கும்படி செய் தார். பூர்வ காலத்தில் இந்த மதாசுரன் பல தரம் உண்டாக்கப்பட்டான். மதாசுரனை யிப்படிச் செய்துவிட்டு இந்திரனுக்கும் சோமபானம் கொடுத்து வணங்கினார். பிறகு சர்யாதி மஹாராஜன் செய்த யாகங்கள எல்லாவற்றி லும் தேவர்களுடன அசுவினிதேவர்களுக்கும் பாகம் கொடுப்பித்தார். இப் படிச் சியவனருடைய புகழ் உலகமெல்லாம் பரவியது. யுதிஷ்டிர மஹாராஜ னே! பிறகு சியவனமுனிவர் தமது பிரியமுள்ள மனைவி சுகன்னியுடன் இந்த வனத்தில் சுகமாக வசித்துக்கொண்டிருந்தார். பறவைகள் ஒலித்துக்கொண் டிருக்கிற இந்த ஏரி அவருடையது.

12—26. பூமிக்கிறைவனே! பாரதனே! உம்முடைய சகோதரர்களு டன் இங்கே தேவர்களையும் பிதிர்க்களையும் ஆராதனை செய்யும். இதையும் சிகடாட்சத்தையும் தரிசித்தபின் சைந்தவாரணியம் போக வேண்டும். அங் கே அநேகமான விநோத நதிகளைப் பார்க்கலாம். அங்குள்ள நதிகளில் எல்லாம் ஸ்நானம் பண்ணலாம். அதன் பின் ஸ்தாணுவின் மந்திரங்களை உச்சரித் துத் தவசித்தி பெறலாம். புருஷ சிரேஷ்டனே! இது திரேதாயுக துவாபர யுகங்களின் சந்தி. பார்த்தனே! இதைப் பார்த்த மாத்திரத்தில் சகல பாவங் களும் ஒழிந்து பரிசுத்தனாகலாம் எல்லாப் பாவங்களையும் போக்கத் தக்க இவ் விடத்தில் தேவ பிதிர்களுக்குப் பலி கொடும். அதோ அர்ச்சிக மலை யிருக் கிறது. அங்கே தவசிகள் மிகுதியாக வசிக்கிறார்கள். எல்லாப் பருவங்களிலு முண்டாகிற கனிக ளெல்லாம் அங்கே உண்டு. ஆறுகள் எப்போதும் வற்றா மல் ஓடுகின்றன. ஆகையால் அது சிறந்த ஸ்தலம். யுதிஷ்டிரா! இவ்விடத் தில் அநேக நிலவறைகளுண்டு. அவைகள் தேவர்களாலுண்டாக்கப்பட்டவை கள். அது சந்திர தீர்த்தம். அதைச் சூழ ரிஷிகள் வசிக்கிறார்கள். அவர் கள் வைசியர், வாலகில்லியர், பாவகர், வாயு வேகர் என்னப்படுவோர்கள். அங் கே மூன்று சிகரங்களும் மூன்று புண்ணிய நதிகளும் இருக்கின்றன. அவை களில் ஒவ்வொன்றையும் நீ பிரதட்சிணம் பண்ண வேண்டும். உன் இஷ்டம் போல ஆராதனை செய்யலாம். அரசர்க்கரசனே! நராதிபனே! ஸந்தனு, ஸநகர், நரன், நாராயணன், இவர்கள் இங்கே யிருந்து தான் அழியாத பதவி களை அடைந்தார்கள். யுதிஷ்டிரா! இவ்விடத்தில் தேவர்கள், ரிஷிகள், பிதிர்க் கள் இவர்கள் எப்போதும் வசிக்கிறார்கள். அவர்க ளெல்லாரும் ஆர்ச்சிக

மலையில் தவம் புரிந்தார்கள். இங்கே யாகம் செய்தார்கள். அரசனே! 'வ் விடத்தில் தான் அவர்கள் எல்லாரும் ரிஷிகளுடன் கூடி சருவைச் (பாலன்னம்) சமைத்தார்கள். யமுனா நதி இவ்விடத்தில் தான் ஓடுகிறது. அதன் கரையில் கிருஷ்ணர் தவஞ் செய்தார். பாண்டு குமாரனே! சத்துருவைச் சங்கரிக்கிறவனே! நகுல சகதேவர்கள், பீமசேனன், திரௌபதி மற்றுமுள்ள நாங்கள் எல்லாரும் இவ்விடத்தில் உம்முடன் இருக்கிறோம். நராதிபனே! இது இந்திர தீர்த்தம். இதிலிருந்து தான் தாதா, விதாதா, வருணன் இவர்கள் மேலே எழுந்திருந்தார்கள். பொறுமையும், புண்ணியமு முள்ளவர்கள் இங்கே வசிப்பார்கள். இது சிறந்ததும், மேன்மை யுள்ளதுமான மலை. அன்புடையவர்களும் கபடமற்றவர்களும் வசிக்கத் தகுந்த இடம். அரசனே! இது தான் ரிஷிகள் தேடி வருகிற யமுனா நதி. இது பரிசுத்தமானது. பயத்தையும் பாவத்தையும் போக்குவது. குந்தி புத்திரனே! இங்கே சிறந்த வில்லாளியான மாந்தாதா யாகம் செய்தான். ஸோமகனும் செய்தான்.

---

## 126-வது அத்தியாயம்.

தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—3. யுதிஷ்டிரர் ரோமசரை நோக்கி, மஹிமையுள்ள அந்தணரே! அரசரிற் சிறந்தயுவனாசுவ மஹாராஜாவின் புத்திரனும், மூன்று உலகங்களிலும் கீர்த்திபெற்றவனுமான மாந்தாதா எவ்வாறு பிறந்தான். மூன்று உலகங்களும் மஹாவிஷ்ணுவின் ஆக்கினைக்குட் பட்டிருப்பதுபோல, அவனுடைய ஆக்கினைக்கும் எவ்வாறு அடங்கியிருந்தன. அந்தச் சக்தி அவனுக்கு எப்படி உண்டாயிற்று? மஹிமையுள்ள அந்த அரசனுடைய சரித்திரங்களை நான் கேட்க விரும்புகிறேன். அவனுக்கு மாந்தாதா எனகிற பேர் எப்போது, எவ்வாறு வந்தது? ஒப்பற்ற அவ்வரசன் எப்படிப் பிறந்தான்? சகல விஷயங்களையும் நீர் சொல்ல வல்லவராயிருக்கிறீர். ஆகையால் இவைகளை எனக்குச் சொல்ல வேண்டுமென்றார்.

4—16. ரோமசர் சொல்லுகிறார் அரசனே! மஹாத்மாவான அந்த மாந்தாதாவின் பேர் எப்படி உலகமெங்கும் பரவிக் கீர்த்தி யடைந்தது என்பதைச் சொல்லுகிறேன். கவனமாய்க் கேள். யுவனாசுவராஜன் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தான். அவன் திரண்டதட்சிணை கொடுத்து அநேக யாகங்களைச் செய்தான். புண்ணிய சீலனான யுவனாசுவராஜன் ஆயிரம் அசுவமேத யாகஞ் செய்தான். இன்னம் அநேகயாகங்களையும் செய்தான். அவைகளிலெல்லாம் தட்சிணை மிகுதியாகக் கொடுத்தான். அந்த ராஜரிஷிக்குப் புத்திரனில்லை. ஆகையால் மகாத்மாவான அவ்வரசன் மந்திரிகளிடத்தில் இராஜ்யத்தை ஒப்புவித்துவிட்டு வனத்தில் வசிக்கப் போனான். மஹாத்மாவான அவ்வரசன் சாஸ்திரங்களிற் கூறியபடி அரிய தவம் செய்தான். அரசனே! அவன் ஒரு நாள் உபவாசத்தால் வருந்தித் துயரப்பட்டான். பசிநோயால் மிகவும் வருந்தினன். அவன் ஜீவன் தாகத்தால் களைத்தது. பிறகு அவன் பிருகு முனிவரது ஆச்ரமத்

தில் புகுந்தான். அரசர்க்கரசனே! அன்று இரவில் பிறகு வம்சத்து அந்த முனிவர் புத்திரோற்பத்தியைக் குறித்து ஒரு பெரிய சடங்கைச் செய்தார். ஒரு பெரிய பாத்திரத்தில் மந்திராவாகனத்துடன் நீர் நிரப்பி யிருந்தது. நீர் ஸௌதாமினி என்னும் அவனுடைய மனைவி கர்ப்பந்தரிப்பதைக் குறித்து வைக்கப்பட்டிருந்தது. இந்திரனுக்குச் சமானமான புத்திரனை அவள் கர்ப்பந்தரிக்க வேண்டுமென்கிற அபிபிராயத்துடன் செய்து வைத்தது. அந்த ரிஷிகள் எல்லாரும் களைப்படைந்தவர்களாதலால் அந்தத் தீர்த்தபாத்திரத்தை வேதிகைமேல் வைத்துவிட்டு நித்திரை செய்தார்கள். தாகத்தால் வருந்தின அரசனுடைய நாக்கு வரண்டுபோயிற்று. ஆதலால் வெகு ஆவலோடு தண்ணீரைத் தேடினான். அந்த ஆச்ரமத்துக்குள் புகுந்து தண்ணீர் கேட்டான். களைத்து உலர்ந்த தொண்டையுள்ளவனாதலால் மெதுவான குரலோடு கேட்டான். ஒருவருக்கும் அவனுடைய சத்தம் கேட்கவில்லை. பிறகு அரசன் நீர் நிறைந்த அந்தப் பாத்திரத்தைப் பார்த்துச், சீக்கிரமாய் அதனிடம் போய், அந்தத் தீர்த்தத்தைக் குடித்துவிட்டுப் பாத்திரத்தைக் கீழே வைத்துவிட்டான். புத்திசாலியானஅவ்வரசன் வெகு ஆவலுடன அந்தக் குளிர்ந்த நீரைக் குடித்ததும் தாகம் தணிந்து மகிழ்ச்சி யடைந்தான்.

17—26. தபோநிதிகளான அந்த முனிவர்கள் தூக்கம் தெளிந்து எழுந்திருந்தார்கள் நீர்ப் பாத்திரம் வேதிகைமேல் இல்லாமலிருப்பதைக் கண்டார்கள். அவர்கள் எல்லாரும் ஒன்றுய்க் கூடி, இதை யார் செய்தது என்று ஒருவரை ஒருவர் கேட்டார்கள். பின் சத்தியசந்தனை யுவனாசுவராஜன் நான்தான் செய்தேன் என்று சொன்னான். பிருகுபுத்திரர் அவனை நோக்கி நீர் செய்தது சரியல்ல. உமக்குப் புத்திரன் பிறப்பதைக் குறித்து வைத்திருந்தது. இது தவச் சக்தியால் நிறைந்தது நான் அருந்தவம் புரிந்த அந்தச் சக்தியை இந்த நீரில் அமைத்திருந்தேன் அதனால் உமக்குப் புத்திரன் பிறப்பான். இராஜ ரிஷியே! அந்தப் புத்திரன் மஹா பராக்கிரமசாலியா யிருப்பான். தைரியமும் தவ வல்லமையும் நிறைந்தவனு யிருப்பான். அவனுடைய பராக்கிரமத்தால் இந்திரன் கூட எம பட்டணததுக்கு அனுப்பப்படுவான். அப்படிப் பட்ட வல்லமை யோடு இந்த தீர்த்தத்தை என்னால் அபிமந்திரிக்கப் பட்டிருந்தது இந்த நீரைக் குடித்ததனால் நீர் தகாத காரியத்தைச் செய்து விட்டீர். இப்போது நேரிட்ட தவறுதலை விலக்குகிறது முடியாத காரியம். நீர் செய்தது நிச்சயமாகவே விதியால் சம்பவித்தது. அந்த நீரைக் குடித்ததனால் உமது வயிற்றி லிருந்தே மேற் குறித்தபடியுள்ள புத்திரன் பிறக்க வேண்டும். உமக்காக நான் ஒரு அற்புதமான யாகம் செய்கிறேன். அதனால் நீர் உபாதி சிறிதும் இல்லாமல் புத்திரனைப் பெறுவீர் என்றார.

27—47. நூறு வருஷங்கள் சென்ற பின் சூரியனைப் போன்ற தேஜசுள்ள ஒரு புத்திரன் பிறந்தான். இடது விலாவைக் கிழித்துக்கொண்டு பிறந்தான். ஆயினும் யுவனாசுவன் மரிக்கவில்லை. இது பெரிய ஆச்சரியம் என்

யதில் சந்தேகமில்லை. மஹா சக்தியுள்ள தேவேந்திரன் அந்தக் குழந்தையைப் பார்க்க விரும்பி அவ்விடத்துக்கு வந்தான். அப்பொழுது தேவர்கள் எல்லாரும் இந்திரனை நோக்கி, இந்தப் பிள்ளை எவ்வாறு பால் குடிப்பான் என்று கேட்டார்கள். இந்திரன் தன்னுடைய சுட்டு விரலை அந்தக் குழந்தையின் வாயில் வைத்து இவன் என்னையே உறிஞ்சிப் பால் குடிப்பான் என்று சொன்னான். பிறகு இந்திரனும் தேவர்களும் அந்தப் பிள்ளைக்கு மாந்தாதா என்று பேரிட்டார்கள். இந்திரனுடைய சுட்டுவிரலை உறிஞ்சினபடியால் அந்தப் பிள்ளை மஹா பலவானானான். அந்தப் பிள்ளை பதின்மூன்று முழ உயரம் வளர்ந்தான். அரசனே! அந்தப் பிள்ளைக்குச் சகல சாஸ்திரங்களும், ஞானமும், தனுர்வேதமும் ஓதாமலே தெரிந்துவிட்டன. உலகமெல்லாம் கீர்த்தி பெற்ற அஜாகவம் என்கிற வில்லும், அளவில்லாத பாணங்களும், உடைக்கப்படாத கவசமும் அன்றைய தினத்திலேயே அவனிடம் வந்துசேர்ந்தன. தேவேந்திரனே அவனைச் சிம்மாசனத்தில் உட்காரவைத்தான். அதன் பிறகு மாந்தாதா மூன்று உலகங்களையும் நியாய மார்க்கத்தாலேயே ஜயித்தான். விஷ்ணு மூன்றடிகளால் ஜயித்தது போல மூவுலகங்களையும் வென்றான். மாஹாத்மாவான அவ்வரசனுடைய தேருருள்கள் ஒருபோதும் தடைபடுவதில்லை. இரத்தினங்களும் ஆபரணங்களும் தாமாகவே அவனிடம் வந்துசேர்ந்தன. பூமிக்கிறைவனே! இது ஒரு காலத்தில் அவனுடைய உலகமாயிருந்தது. அளவில்லாத ஐசுவரியங்களால் நிறைந்திருந்தது. அவன் அநேக யாகங்கள் செய்தான். அளவில்லாத தட்சிணை கொடுத்தான். தானங்கள் கணக்கிறந்தன செய்தான். பராக்கிரமமும் அளவில்லாத சக்தியுமுள்ள அவ்வரசன் அநேக யாக வேதிகைகள் கட்டினான். அநேக சற்கருமங்களைச் செய்தான். அதனாலே அவன் இந்திரனுக் சருகில் உட்காரும்படியான பெருமையை அடைந்தான். நகரங்கள், சமுத்திரங்களுடன் கூடிய இந்தப் பூமியை நீதி முறையால் ஜயித்து அரசாண்டான். அவனால் நிர்மிக்கப்பட்ட யாகசாலைகளை உலகம் எங்கும் காணலாம். அது இல்லாத இடம் காண்பதரிது. பராக்கிரமசாலியான அவ்வரசன் பிராமணர்களுக்குப் பதினாயிரம் பத்மநிதியும், பசுக்களும் கொடுத்ததாகச் சொல்வார்கள். பன்னிரண்டு வருஷம் மழை பெய்யாமலிருந்தபோது இந்திரனை இலட்சியம் பண்ணாமல் மழை பொழியச் செய்தான். சந்திரவம்சத்தில் பிறந்த மஹா பராக்கிரமசாலியான காந்தார இராஜன் மாந்தாதாவை எதிர்த்து மாண்டான். அரசனே! மாந்தாதா நாலு வருணங்களையும் கிரமமாய்ப் பரிபாலித்தான். தவ வலிமையாலும், அற நெறியாலும் துன்பமில்லாமல் உலகைப் பரிபாலித்தான். சூரியனைப் போன்ற காந்தியுள்ள அவ்வரசன் இந்த இடத்திலேதான் யாகம் செய்து தேவர்களுக்குப் பிரீதி செய்வித்தான். அதைப் பார் அதோ குருக்ஷேத்திரத்துக்கு மத்தியிலிருக்கிறது. அரசனே! மாந்தாதாவின் வரலாறுகளை உனக்குச் சொல்லிவிட்டேன். அவன் உற்பத்தியான விதத்தையும் சொன்னேன் என்றார். இதைக் கேட்ட யுதிஷ்டிரர் ஸோமகனைப் பற்றிக் கேட்டார்.

## 127-வது அத்தியாயம்.

தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. யுதிஷ்டிரர் ரோமசரைப் பார்த்துப் பேசுவதில் வல்லவரே! ஸோமகராஜனுடைய சாமர்த்தியம் கேட்க விரும்புகிறேன் என்றார். ரோமசர் யுதிஷ்டிரரைப் பார்த்து அரசனே! ஸோமகன் என்கிற பேருள்ள ஒரு புண்ணியசாலியான அரசனிருந்தான். அவனுக்கு நூறு பத்தினிகள். அவர்கள் எல்லாரும் அவனுக்கு ஒத்திருந்தார்கள். வெகுகாலமாகியும் அவனுக்குப் புத்திரர்களில்லை. அவன் கிழவனான பின் ஒரு நாள் புத்திரர்களைக் குறித்து முயற்சி செய்தான். கடைசியில் ஒரு மனைவிக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு ஜந்தன் என்று பேர். நூறு தாய்மார்களும் அவனைச் சூழ்ந்திருந்து போஷித்தார்கள். ஒரு நாள் எறும்பு ஒன்று அவனுடைய இடுப்பில் கொட்டிவிட்டது. அதனால் அவன் கதறி அழுதான். அவனுடைய தாயார்களும் வருந்தி அழுதார்கள். மந்திரிகளுடனும் புரோகிதருடனும் உட்கார்ந்திருந்த அரசன் தன் மனைவிகள் அழுகிறதைக் கேட்டு, அது என்ன என்று கேட்டுக்கொண்டு வரும்படி ஒரு மனிதனை அனுப்பினான். அவன் போய்க் குழந்தைக்கு நேர்ந்ததைத் தெரிந்துகொண்டு வந்து சொன்னான். உடனே அரசன் எழுந்திருந்து மந்திரிகளுடன் போய்த் தன் குழந்தையைத் தேற்றினான். குழந்தையைச் சமாதானப் படுத்தினபின் அந்தப்புரத்தை விட்டுவந்து தன் மந்திரி, புரோகிதர்களுடன் உட்கார்ந்தான்.

12—21. சீ! ஒரு புத்திரனை உடையவனா யிருப்பதை விட நான் புத்திரனில்லாதவனா யிருப்பது நல்லது. ஒரே புத்திரனைக் குறித்தே நான் இவ்வளவு மனைவிமார்களை விவாகம் செய்துகொண்டேன். ஆயினும் அவர்களுக்குப் புத்திரர் பிறக்கவில்லை. கடைசியில் ஜந்தன் ஒருவனே பிறந்தான். இதை விட வேறு துக்கம் என்ன இருக்கிறது? நான் கிழவனாய் விட்டேன். என் மனைவிகளும் அப்படியே. ஆகையால் இந்த ஒரு புத்திரன் எல்லாருக்கும் அருமையாக இருக்கிறான். நூறு புத்திரர்களைப் பெறும்படியாக ஏதாவது சடங்கு செய்யக் கூடுமோ? அது பெரிதா யிருந்தாலும் சிறிதா யிருந்தாலும் சரி. செய்வதற்கு எளிதாயிருந்தாலும் கஷ்டமாயிருந்தாலும் இருக்கட்டும், சொல்லும் என்றான். குரு சொல்லுகிறார் நூறு புத்திரர்களைப் பெறுவதற்குரிய ஒரு யாகம் இருக்கிறது. அரசனே? நீர் அதை நிறைவேற்றச் சக்தியுள்ளவரா யிருந்தால் சொல்லும். பின்பு அதனை விளங்கச் சொல்லுகிறேன் என்றார். ஸோமகராஜன் அவரை நோக்கி நூறு புத்திரர்களைப் பெறக்கூடிய அது நல்லதானாலும் கெட்டதானாலும் எனக்கு விளங்கச் சொல்லும். குரு சொல்கிறார். அரசனே? நான் அந்த யாகத்தை உமக்குச் செய்துவைக்கிறேன். நீர் உமது புத்திரனை அந்த யாகத்தில் பலியிட வேண்டும். பிறகு உமக்கு அழகான நூறு குழந்தைகள் பிறக்கும் என்றார். உமது புத்திரனுடைய மாமிசத்தை அக்கினியில் ஹோமம் செய்தவுடனே உமது பத்தினிகள் இந்தப் புகையை முகர வேண்

டும். பிறகு இவர்கள் தைரியமும் பலமும் உள்ள குழந்தைகளைப் பெறுவார்கள் ஜாந்தன் மறுபடியும் தன் தாயின் கர்ப்பத்தில் தங்கி உதிப்பான். அவன் முதுகில் சொர்ணமயமான ஒரு மறு இருக்கும் என்றார்.

---

## 128-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—18. ஸோமகன், அந்தணரே! எதைச் செய்ய வேண்டுமோ அதைச் சரியாய்ச் செய்யும். எனக்கு அநேக புதல்வர்கள் வேண்டும் நீர் சொன்னபடி யெல்லாம் நான் செய்கிறேன் என்றான். அதன்பின் அந்த யாகத்தைச் செய்தான். ஜாந்தனை ஆகுதி கொடுத்தார்கள். அவனுடைய தாய்மார்கள் அதைச் சகியாமல் அவனுடைய வலது கையைப் பிடித்துக்கொண்டு கோவென்றலறி அழுதார்கள். அவனை விடமாட்டோ மென்றார்கள். குருவானவர் அவனைத் தமது வலது கையால் பிடித்து இழுத்தார். ஸ்திரீகள் எல்லாரும் மரண வேதனைப் படுகிறவர்களைப் போலப் புலம்பி அழுதார்கள். குரு அவனைக் கொன்று அவன் சதையை ஆகுதி கொடுத்தார். நூறு தாய்மார்களும் அந்தப் புகையை முகர்ந்தார்கள். உடனே பூமியில் திடீரென்று விழுந்து விட்டார்கள். அந்த நூறுபேரும் கர்ப்பந்தரித்தார்கள். பத்து மாதங்கள் சென்றதும் நூறு ஸ்திரீகளும் நூறு புத்திரர்களைப் பெற்றார்கள். ஜாந்தன் தன்னுடைய தாயார் வயிற்றிலேயே கருத் தங்கி மூத்த குமாரனுகப் பிறந்தான். எல்லாத் தாய்மார்களும் அவனை அதிகமாக நேசித்தார்கள். தங்களுடைய சொந்தப் புத்திரனைக் கூட அவ்வளவாக நேசிக்கவில்லை. அவனுடைய முதுகில் சொர்ண மறு ஒன்று இருந்தது. நூறு பிள்ளைகளுக்குள் அவனே எல்லா விஷயங்களிலும் மேலானவனுக இருந்தான். பிறகு அந்தக் குருவும் இறந்தார். ஸோமகனும் இறந்தான். பெருமையுள்ள அந்தக் குருவை ஒரு கொடிய நரகில் கஷ்டப்படுகிறதை ஸோமகன் கண்டான். அரசன் அந்தக் குருவை நோக்கி அந்தணரே! இந்தக் கொடிய நரகில் ஏன் நீர் கஷ்டப்படுகிறீர் என்று கேட்டான். அந்தக் குரு அரசனே! உமக்கு யாகம் செய்து வைத்ததின் பயன் என்று சொன்னார். இதைக் கேட்ட அரசன் எமதர்மராஜனை நோக்கி நான் இந்த எரிநரகில் விழுகிறேன். என் குருவை விடுதலை யாக்கும் என்றான். ஏனென்றால் இந்த உத்தம புருஷர் எனக்காக நரகில் வேதனைப் படுகிறார் என்றான். தர்மராஜன் அரசனே! ஒருவர் செய்த கர்மத்துக்காக மற்றவர் தண்டிக்கப்படலாகாது. இதோ இருக்கிறதே இது உன்னுடைய கர்மத்தின் பலன். இந்த இடங்களைப் பார் என்றான். அரசன், இந்த அந்தணர் இங்கே துன்பப் படுகிறபோது நான் புண்ணிய லோகத்தை அடைய விரும்பேன். ஆகையால் நானும் அவருடன் கூடவே யிந்த நரகத்தில் வசிக்க விரும்புகிறேன். தேவனே நான் செய்த கருமமும் அவருடைய கர்மத்துக்குச் சரியானது. ஆகையால் இருவருக்

கும் பலனும் ஒன்ருகவே யிருக்க வேண்டும் என்ருன். தர்மராஜன் அரசனே உன் விருப்பம் இதுவாளுல் நீயும் அவன் கூடத் நிரகில் துன்பத்தை அனுபவி. பிறகு புண்ணிய லோகத்தை அடைவாய் என்ருன். அரசன் அப்படியே செய்தான். பிறகு பாவம் ஒழிந்தபின் இருவரும் புண்ணிய பதவியை அடைந்தார்கள்.

19—21. யுதிஷ்டிரனே! குருபக்தியுள்ள அரசன் தன் குருவின் நியித்தமாகத் தனக்குரிய புண்ணிய பதவிகளையும் விட்டு விட்டான். இதுதான் அந்த ஆச்சிரமம்.ஆசையை அடக்கிக்கொண்டு ஆறு இரவு இதில் வசிக்கிறவன் புண்ணிய லோகத்தை அடைவான். அரசர்க்கரசனே! குருவம்சத்தை விளங்கச் செய்கிறவனே! நாம் ஊக்கத்துடன் புலன்களை அடக்கிக்கொண்டு, இவ்விடத்தில் ஆறு இரவுகளைக் கழிக்க வேண்டும். ஆகையால் சித்தமாயிரு என்ருர்.

---

## 129-வது அத்தியாயம்.

*தீர்த்த யாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—12. ரோமசர் யுதிஷ்டிரரை நோக்கி அரசனே! பூர்வ காலத்தில் பிரஜாபதி ஒரு யாகம் செய்தார். அதற்கு இஷ்டிகிருதம் என்று பேர். அந்த யாகம் முடிய ஆயிரம் வருஷங்கள் சென்றன. நாபாகன் புத்திரனை ஆர்பிரஷன் பாமுனு நதிக்கருகில் ஒரு யாகம் செய்தான். அந்த யாகத்தில் பத்துப் பத்மம் தங்க நாணயங்களை ஷடங்கர்களுக்குத் தானம் செய்தான். அந்த யாகத்தால் அவன் பெரிய சித்திகளை அடைந்தான். தவ பலத்தையும் பெற்ருன். இந்த இடத்தில்தான் அரசர்க் கரசனும் நகுஷ குமாரனுமான யயாதி யாகம் செய்தான். அவன் இந்திரனுக்குச் சமானமாகும்படி இவ்விடத்தில் யாகம் செய்தான். யாகவேதிகைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கிற இந்த இடத்தைப் பார். இந்தப் பூமி யயாதியின் சற்கருமங்களுக்குள் முழுகியிருக்கிறது போலக் காணப்படுகிறதைப் பார். இங்கே ஒரு சமீ விருட்சம் இருக்கிறது. அதில் ஒரே இலை இருக்கிறதைப் பார். இது ஒரு விநோதமான வேலை. இராமர் மடுவையும், நாராயணுச்சிரமத்தையும் பார். ரிசிகருடைய புத்திரரானவர் சென்ற மார்க்கம் இதுதான் பார். அவர் யோகத்தில் நிலைபெற்றவர். உலகமுழுமையும் திரிந்துகொண்டிருந்தார். உலக்கைகளையே ஆபரணமாகக் கொண்ட ஒரு பிசாசஸ்திரீ நான் வம்சாவளியைச் சொல்கிறேன் என்று கூறிக்கொண்டிருந்தாள். யுகந்தரத்தில் தயிரை உண்டு, அச்சுதக்ஷேத்திரத்தில் வசித்துப் புத்திலயத்தில் முழுகிளுல் நீ உன் புத்திரர்களுடன் வசிப்பாய் என்ருள் முதல் நாள் இரவைக் கழித்து இரண்டாவது இரவையும் கழித்தால் இரவுக்கும் பகலுக்கும் விஷயம் வேறுபடுவதைக் காண்பாய். (பாவம்கழிவது) ஆகையால் குந்தி புத்திரனே! பாரதனே! நாம் இன்று இரவு இங்கே

வசிப்போம். இதுதான் குருக்ஷேத்திரத்துக்கு வாயில் அரசனே! நகுஷபுத்திரனாகிய யயாதி இங்கே யாகம் செய்து மிகுதியான இரத்தினங்களைத் தானம் செய்தான். அதனாலே இந்திரன் மிக்க திருப்தி யடைந்தான்.

13—22. இது பிலட்சவதரணம் பாமுனாவில் சிறந்த தீர்த்தம். சற்றறிந்த பெரியோர்கள் இதைச் சொர்க்கத்துக்கு வாயில் என்று சொல்கிறார்கள், குழந்தாய்! மஹரிஷிகள் ஸாரஸ்வத யாகம் செய்தபின், யூபஸ்தம்பங்களைத் தண்டங்களாகக் கொண்டு, யாகமுடிவில் செய்கிற அபவிருத ஸ்நானத்தை யிங்கே செய்தார்கள். அரசனாகிய பரதனும் இங்கே யாகம் செய்தான். ஒரு அசுவமேதம் செய்கையில், யாகபலியாக ஏயமிககப்பட்டிருந்த குதிரையை இம்சிக்காமல் விட்டு விட்டான். அந்தக் குதிரையின்மேல் கறுப்புக்கோடு இருந்தது. அவன் உலகத்தை நீதியாகப் பரிபாலித்தான். மருதராஜன் சாம்பரத மஹரிஷியின் உதவியைக்கொண்டு சிறந்த யாகங்களைச் செய்து முடித்தான். அரசர்க்கரசனே இதில் ஸ்நானம் செய்தவன் எல்லாப் புண்ணிய லோகங்களையும் அடைவான். சகல பாபகர்மங்களினின்றும் விடுபடுவான். ஆகையால் இதில் ஸ்நானம் பண்ணு. ரோமசரால் புகழப்பட்ட அந்தந்த தீர்த்தத்தில் யுதிஷ்டிரர் சகோதரர்களுடன் ஸ்நானம் செய்தார். பிறகு ரோமசரை நோக்கிப் பாண்டவோத்தமரான யுதிஷ்டிரர் சொல்கிறார், மஹாத்மாவான ரிஷீசுவரரே! நான் புண்ணிய பலத்தினாலே எல்லாவுலகங்களையும் காண்கிறேன். அர்ஜுனனைக் கூடப் பார்க்கிறேன் என்றார். ரோமசர், மஹாபாகுவான வீரனே! நீ சொல்லுவது சரியே. இப்படித் தான் எல்லா முனிவர்களும் காண்கிறார்கள். புண்ணியமான சரஸ்வதி அதோ இருக்கிறது. அதைத் தங்களுக்கு அடைக்கல ஸ்தானமாகக் கருதிச் சகல ஜனங்களும் அங்கே நிறைந்திருக்கிறார்கள். அதில் ஸ்நானம் செய்தால் உன்னுடைய பாவங்கள் எல்லாம் விலகும். குந்திகுமாரனே! தேவரிஷிகள் இங்கே ஸாரஸ்வத யாகம் செய்தார்கள். அப்படியே சகல ரிஷிகளும இராஜ ரிஷிகளும் செய்தார்கள். இதுதான் பிரஜாபதியின் யாகவேதிகை. இது ஐந்து யோசனை விஸ்தாரமுள்ளது. எப்போதும் யாகம் செய்துகொண்டிருந்த மஹாத்மாவான குருவின் ஸ்தலம் இது.

---

## 130-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—20. ரோமசர், யுதிஷ்டிரனே! இவ்விடத்தில் தேகத்தை விட்டவர்கள் சொர்க்கத்தை அடைவார்கள். அரசனே! அநேகமாயிரம் மனிதர்கள் இந்த இடத்தில் மரணம் அடையும் விருப்பத்துடன் வருகிறார்கள். பூர்வகாலத்தில் தட்சன இங்கே யாகம் செய்தான். அப்போது இந்த இடத்தைக்

குறித்து ஒரு வசனம் சொன்னான். அது என்னவென்றால், "இதில் தன் தேகத்தை விடுகிறவன் சொர்க்கத்தை அடையக் கடவன்" என்றான். அரசனே இவ்விடத்தில் பூர்ணமாக நீரையுடைய சரஸ்வதி என்கிற தெய்வ நதியிருக்கிறது. இங்கே சரஸ்வதியில் விநாசன (சரஸ்வதி மறைகிற) தீர்த்தம் இருக்கிறது. வீரனே! இங்கே நிஷாத இராஜ்யத்தின் வாயில் இருக்கிறது. நிஷாதத்தாரிடம் விரோதம்கொண்டமையால் அந்நாட்டார் காணாதிருக்கும்படி சரஸ்வதி மறைந்து போனாள். சுமோஷட்பேத தீர்த்தமும் இருக்கிறது (சரஸ்வதி வெளிப் பட்ட இடம்) இங்கே அநேக நதிகள் வந்து சரஸ்வதியில் கலக்கின்றன, சிந்து என்கிற பரிசுத்த ஸ்தலமும் இங்கே யிருக்கிறது. இங்கேதான் லோபா முத்திரை அகஸ்தியரைக் கணவனாக அடைந்தாள். சூரியன் போன்ற காந்தியுள்ள வீரனே! இங்கேதான் கீர்த்தி பெற்ற பிரபாஸ தீர்த்த மிருக்கிறது; அது பாவங்களைப் போக்குவது; இந்திரனுக்குப் பிரியமானது அதோ விஷ்ணு பதம் என்கிற தீர்த்த மிருக்கிறது விபாசம் என்கிற பரிசுத்தமான புண்ணிய நதியும் இருக்கிறது. இந்த நதியில் தான் வசிஷ்டர் புத்திர சோகத்தால் விழுந்தார். சாகாமல் மீண்டும் எழுந் திருந்தார். சத்துரு பயங்கரனே! உன் சகோதரர்களுடன் அதோ தெரிகிற காச்மீர தேசத்தைப் பார் ரிஷிகள் அவ்விடத்தை விரும்பிப் போவார்கள் பாரதனே! இவ்விடத்தில் அக்கினி தேவனுக்கும் கசியப ரிஷிக்கும், நகுஷ புத்திரனான யயாதிக்கும் வடக்கிலுள்ள ரிஷிகளுக்கும் ஸம்பாஷணை நடந்தது. மஹா ராஜனே! அதோ மானசத்துவாரம் தெரிகிறது. இந்த மலைக்கு நடுவில் இராமர் ஒரு துவாரமுண்டாக்கினார் கீர்த்தி பெற்ற வேதி காந்தமும் இங்கே யிருக்கிறது. புருஷோத்தமனே! இவ்விடத்தில் ஒரு விசேஷ முண்டு. அதென்ன வென்றால், ஒவ்வொரு யுக முடிவிலும் பரமேசுவரரானவர் உமாதேவி யாரோடும் பரிவாரத்தாரோடும் தரிசன மளிப்பார். அதோ இருக்கிற ஏரியில் மனிதர்கள் சுகத்தை அடையும் பொருட்டுச், சித்திரை மாசத்தில் பரமசிவனைக் குறித்து யாகம் செய்வார்கள். இங்கே ருக்குமினி ஆச்ரமம் இருக்கிறது. அவ்விடத்தில் ருக்குமினி கோபத்தை ஜயித்துச் சாந்தமடைந்தாள். பாண்டுபுத்திரனே! அரசர்க்கரசனே! நீ பிருகுதுங்கம் என்கிற மலையைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயே. அந்த மலை அதோ இருக்கிறது பார். அரசர்க்கரசனே! சகல பாவங்களையும் போக்குகிறவிதாஸ்தா வைத்தரிசி இருக்கிறது. அதன் நீர் மிகக் குளிர்ச்சி யுள்ளது. ரிஷிகள் விரும்பி வரத் தக்கது.

21—24. பாமுனாநதியின் இரு பக்கத்திலும் ஓடுகிற ஜலா உபஜலா என்கிற நதிகளைப் பார். இவ்விடத்தில் உசீநரன் யாகம் செய்து இந்திரனை மேற்கொண்டான். பாரதனே! இந்திரனும் அக்கினியும் அந்த அரசனைச் சோதிக்கும் பொருட்டு அவனுடைய சபைக்கு வந்தார்கள். அவனைச் சோதித்து அவனுக்கு வரம் கொடுக்க விரும்பி இந்திரன் பருந்தாகவும், அக்கினி புறாவாகவும் வடிவம் கொண்டு அவ்வரசனுடைய யாகசாலைக்கு வந்தார்கள், புறா

பருந்துக்குப் பயந்து அவ்வரசனுடைய மடியில் விழுந்தது. பயத்தினால் செத்தது போலிருந்தது.

---

## 131-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—6. பருந்து உசீநரனைப் பார்த்து, அரசனே! உலகத்திலுள்ள அரசர்கள் எல்லாரும் உம்மைத் தர்மசாலி என்று சொல்லுகிறார்கள். தர்மத்துக்கு விரோதமான காரியத்தை ஏன் செய்கிறீர்? அரசனே! நான் பசியால் வருந்துகிறேன். ஆகையால் நான் சம்பாதித்த ஆகாரத்தை நீர் வைத்துக்கொள்வது தகுதியல்ல. நீர் தருமவானென்று நம்பி வந்தேன். ஆனால் நீர் அப்படியல்ல என்றது. அரசன் பருந்தை நோக்கிப், பெரிய பட்சியே! இது உன் பயத்தால் வருந்தியிருக்கிறது. உன்னிடத்திலிருந்து தப்பித்துக்கொள்ள விரும்பி வேகமாய் வந்து என்னிடம் அடைக்கலம் புகுந்தது. பருந்தே! இந்தப் புறா பயத்தினால் நடுங்குகிறது. தன் உயிரைக் காப்பாற்றும்படி என்னிடம் வந்திருக்கிறது. ஆகையால் இதை உன்னிடம் கொடாமலிருப்பது எனக்குத் தர்மமாகும் என்று நீ ஏன் தெரிந்துகொள்ளவில்லை? இதை விடுவது எனக்குத் தர்மமாகாது. பிராமணனையும் பசுவையும் கொல்லுகிறவனும், அடைக்கலம் புகுந்தவனை விடுகிறவனும் ஆகிய இருவருக்கும் பாவம் சரிசமானமாகும் என்றான்.

7—13. பருந்து சொல்லுகிறது; பூமிக்கு இறைவனே! எல்லாச் சீவன்களும் ஆகாரத்தால் ஜீவிக்கின்றன. மனிதன் தனக்குப் பிரியமானவைகளை விட்டு ஜீவிக்கலாம் ஆனால் ஆகாரமில்லாமல் ஜீவிக்க முடியாது. அரசனே! இன்றைய தினம் ஆகாரமில்லாவிட்டால் நான் இறப்பேன். அரசனே! நான் இறந்தால் என் மனைவியும் குழந்தைகளும் மடிவார்கள். நீ இந்த ஒரு புறாவைக் காப்பாற்றுவதனால் அநேக ஜீவன்களைக் கொல்லுகிறீர். ஒரு தர்மமானது மற்றொரு தர்மத்துக்கு விரோதமாயிருந்தால் அது அதர்மமேயாம். மற்றொன்றுக்கு விரோதமில்லாத தர்மமே சரியான தர்மமாம். மாறுபட்ட தர்மங்களை ஆராய்ந்து ஒற்றுப் பார்த்து விரோதமில்லாததையே கொள்ள வேண்டும் ஒன்றுக்கொன்று மாறுபடாமலிருந்தால் அவற்றுள் மேலானதையே கைப்பற்ற வேண்டும் என்றது.

14—25. அரசன், சிறந்த பறவையே! நீ சொல்வன வெல்லாம் நன்மைகளாகவே யிருக்கின்றன. நீ பட்சி ராஜனாகிய கருடனாதலால் சகல தர்மங்களையும் உணர்ந் திருப்பாய் நீ பல வகையான தர்மங்களைப் பற்றிப் பேசுகிற படியால் உனக்குத் தெரியாதது ஒன்று மில்லை யென்று எண்ணுகிறேன். ஆகையால் அடைக்கல மாக வந்தவனைக் கைவிடுகிறதைத் தர்ம மென்று என்

கருதுகிறாய்? நீ ஆகாரத்தை மாத்திரந்தான் தேடுகிறாய் இதை விட அதிகமான வேறு ஆகாரத்தைத் தேடி நீ பசி தீரலாம். உனக்குப் பிரியமான வேறு ஆகாரமாக நீ எதைக் கேட்டாலும் தருகிறேன். எருதோ, பன்றியோ, மானோ, எருமையோ எதைக் கேட்டாலும் தருகிறேன் என்றான். பருந்து, அரசனே! பன்றி எருது முதலிய மற்ற மிருகங்களை நான் விரும்பவில்லை. அவற்றால் எனக்குப் பிரயோசனமென்ன? பூமிக்கிறைவனே! க்ஷத்திரியோத்தமனே! ஆகையால் தேவர்களால் எனக்குக் கொடுக்கப்பட்ட இந்தப் புறாவையே ஆகாரமாக எனக்குத் தாரும். பருந்து புறாவைத் தின்பது எப்போதும் உள்ள விதி வலுவற்றதாயிருக்கு மென்பதை யுணராமல் வாழைமரத்தைத் துணையாக அடையாதேயும் என்றது. அரசன் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் பட்சியே! என் வம்சத்துக்குரிமையான இந்த இராஜ்யத்தை விரும்பினாலும் உனக்குத் தருகிறேன். எல்லாச் செல்வத்தையும் தருகிறேன். நீ வேறு எதைக கேட்டாலும் தருகிறேன். என்னிடத்தில் அடைக்கலம் புகுந்த இந்தப் புறாவை மட்டும் தர மாட்டேன். இந்தப் புறாவுக்குப் பதிலாக வேறு என்ன வேண்டும்? அதைச் சொல்லு இந்தப் புறாவை மாத்திரம் கொடுக்க எனக்குப் பிரியமில்லை என்றான். பருந்து, உசீநரா! நராதிபனே! இந்தப் புறாவினிடத்தில் நீர் அவ்வளவு பிரியம் வைத்திருந்தால் உமது சரீரத்தில் இருந்து இந்தப் புறாவுக்குச் சரியான எடையுள்ள மாமிசத்தை அறுத்து எடுத்துக் கொடும். அதனால் நான் திருப்தியடைகிறேன் என்றது. அரசன், பருந்தே நீ தயவினாலே தான் இப்படிக் கேட்டாய். இந்தப் புறாவுக்குச் சரியான நிறையுள்ள மாமிசத்தை என் தேகத்திலிருந்து அறுத்துத் தருகிறேன் என்றான்.

26—34. பிறகு உசீநரன் தன் மாமிசத்தை அறுத்து வைத்தான். அது புறாவின் எடைக்குக் குறைந்திருந்தபடியால் மறுபடியும் கொஞ்சம் அறுத்து வைத்தான். அதுவும் சரியாக இருக்கவில்லை. மறுபடியும் அறுத்துவைத்தான். இப்படிக் கொஞ்சங் கொஞ்சமாகத் தன் சரீரத்திலுள்ள மாமிசம் முழுவதையும் அறுத்துவைத்தும் புறாவின் நிறைக்குச் சரியாகவில்லை. ஆகையால் அரசன் தானே தராசு தட்டில் ஏறி நின்றான். அப்போது பருந்து அரசனை நோக்கி, புண்ணியாத்மாவான அரசனே! நான் இந்திரன் இந்தப் புறா அக்கினி தேவன் உன்னுடைய தர்ம குணத்தைச் சோதிப்பதற்காக இந்த யாகசாலைக்கு வந்தோம். நீ உன் சரீரத்திலிருந்து மாம்சத்தை அறுத்து வைத்ததனால் உனது பிரதாபம் மஹா பிரகாசமாயிற்று. பூலோகத்திலுள்ள மனிதர்களால் உன் பேர் எதுவரைக்கும் புகழப்படுமோ அது வரைக்கும் நீ அழியாத புண்ணிய உலகத்தில் வசிக்கக்கடவாய் என்றான். பிறகு இந்திரன் சொர்க்கலோகம் போய்விட்டான். உசீநரனும் தன் கீர்த்தியை உலகமெல்லாம் பரவச் செய்தபின் சோதிமயமான சொரூபத்துடன் சொர்க்கம் போய்ச் சேர்ந்தான். யுதிஷ்டிரராஜனே! அந்த அரசனுடைய வாசஸ்தானம் அதோ இருக்கிறது. அது பரிசுத்தமுள்ளது. பாபங்களைப் போக்குவது, அதைத் தரிச

னம் செய். தேவர்களும் அழியாத ரிஷிகளும் புண்ணியாத்மாக்களும் எப்போதும் இங்கே காணப்படுகிறார்கள்.

---

## 132-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—7. ரோமசர் யுதிஷ்டிரரைப் பார்த்து, நராதிபனே! உத்தாலகருடைய புத்திரரான சுவேதகேதுவின் ஆச்ரமம் அதோ இருக்கிறது பார். அவர் மந்திரங்களில் கைதேர்ந்தவர். அவருடைய கீர்த்தி உலகம் முழுவதும் பரவியது. அந்த ஆச்ரமம் எப்போதும் கனிவர்க்கங்களால் நிறைந்திருப்பது. இவ்விடத்தில் சுவேதகேதுவானவர் சரஸ்வதி தேவியை அவளுடைய சுயரூபத்துடன் தரிசித்தார். அப்போது அவர் சரஸ்வதியைப் பார்த்துச் சகல கல்வியும் நிறைந்திருக்க வரம் அருள் என்று கேட்டார். அந்த யுகத்தில் சுவேதகேதுவும் அஷ்டவக்கிரரும் வேதாதிகலைகளில் மிகத் தேர்ந்தவர்கள். மஹா சக்தியுள்ளவர்களான அவ்விருவரும் வைதேக ராஜனுடைய யாகசாலைக்குப் போனார்கள். அவ்விடத்தில் சேர்ந்த விவாதத்தில் வந்தி என்பவரை வென்றார்கள். அந்த ஆச்ரமத்தை உன் சகோதரரோடும் தரிசனம்செய். குழந்தையாயிருக்கும்போதே வந்தியை வாதில் வென்று நதியில் முழுகச் செய்த அஷ்டவக்கிரர் இங்கேதான் வசித்தார் என்றார். யுதிஷ்டிரர், ரோமசமுனிவரே! வந்தியை ஜயித்த அவருடைய மகிமைகளையெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும். அவர் ஏன் அஷ்டவக்கிரராய்ப் பிறந்தார்? என்று கேட்க ரோமசர் சொல்லுகிறார்.

8—16. உத்தாலகருக்குக் கோஹடர் என்ற ஒரு சிஷ்யர் இருந்தார். அவர் புலன் அடக்கமுள்ளவர். சிறந்த குரு பக்தியுள்ளவர். நெடுங்காலம் கல்வி பயின்றார் தன் குருவுக்கு வெகு காலம் பணிவிடை செய்தார். உத்தாலகர் தமது சிஷ்யராகிய அவருக்குச் சகல சாஸ்திரங்களிலும் வல்லமையுண்டாகும்படி வரம் அளித்தார். தமது புத்திரி சுஜாதா என்பவளை மணம்புரிவித்தார். அவளுக்கு அக்கினியைப் போலத் தேஜசுள்ள ஒரு புத்திரன் உண்டானான். அவன் கர்ப்பாசயத்திலிருந்து, படித்துக்கொண்டிருக்கும்போது தன் பிதாவைப் பார்த்துப் பிதாவே! நீர் இரா முழுமையும் படிக்கிறீர். ஆனாலும் உமது படிப்புச் சரியானதாக இல்லை. உமது கருணையால் நான் சகல சாஸ்திரங்களையும், வேத வேதாங்கங்களையும் கற்றுக்கொண்டாலும் எனக்கும் இப்படித்தானிருக்கும். உமது உதடுகளிலிருந்து வருகிற வார்த்தைகள் ஒன்றும் சரியாக யிருக்கவில்லை யென்று சொல்லுகிறேன் என்றான். தமது சிஷ்யர்களுக்கு எதிரில் தம்மை யிப்படி அவமானம் செய்தபடியால் அவர் கோபங்கொண்டு, கர்ப்பத்திலிருந்த குழந்தையைச் சபித்தார் எப்படி யென்றால் நீ கர்ப்பாசயத்துக்குள் இருந்து இப்படி நிந்தித்தபடியால் நீ எட்டுக்கோணல்

உள்ளவனாகப் பிறக்கக் கடவாய் என்று சபித்தார். அதனாலே அவர் தம் சரீரத்தில் எட்டுக் கோணலுடன் பிறந்து அஷ்டவக்கிரர் என்று பேர் பெற்றார். அவருக்குச் சுவேதகேது என்று ஒரு மாமன் இருந்தான். இருவரும் சமமான வயதுள்ளவர்கள் அப்போது சுஜாதாவுக்குப் பத்து மாதமாயிற்று. பிரசவ காலம் சமீபித்தது. அவள் கர்ப்பத்தால் வருந்தினாள்; திரவியம் வேண்டுமென்கிற அபேட்சை அவளுக்கு இருந்தது. அவள் தன் பர்த்தாவைப் பார்த்து, எனக்குப் பத்தாவது மாதம் வந்துவிட்டது. பேறுகாலம் ஸமீபித்தது. உமக்கும் திரவியம் இல்லை. எனக்கும் திரவியம் இல்லை. இந்தக் கஷ்டம் நிவர்த்தியாக மார்க்கமில்லை. நான் என்ன செய்வேன் என்றார்கள். அது கேட்ட கோகதா திரவியநிமித்தமாக ஜனக மஹாராஜனிடம் போனார். அங்கிருந்த தர்க்கசாஸ்திரி வந்திக்கும் அவருக்கும் தர்க்கம் நேரிட்டது. கோஹதர் தோற்றுப்போய் ஆற்றில் முழுகிவிட்டார்.

17—24 உத்தாலகர் தன் மருமகன் வாதில் தோல்வி யடைந்து ஆற்றில் விழுந்ததைக் கேட்டுத், தன் குமாரத்தி சுஜாதாவை அழைத்து இந்த அஷ்டவக்கிரனுக்குச சொல்லாதே. இரகசியமாக மறைத்துவை என்று சொன்னார். அவளும் அப்படியே அஷ்டவக்கிரருக்குச் சொல்லாமல் மறைத்துவைத்தாள். இதனால் அஷ்டவக்கிரர் பிறந்தபோது இந்தச் சமாசாரம் ஒன்றும் அவருக்குத் தெரியாது உத்தாலகரைத் தமது பிதாவாகவும், சுவேதகேதுவைச் சகோதரனாகவும் கருதியிருந்தார். அஷ்டவக்கிரருக்குப் பன்னிரண்டாவது வயது வந்தது அவர் உத்தாலகருடைய மடியில் உட்கார்ந்தார். அதைச் சுவேதகேது பார்த்தார். உடனே அஷ்டவக்கிரரை நோக்கி இது உன் பிதாவின் மடியல்ல என்று சொல்லி அவருடைய கையைப் பிடித்து இழுத்துவிட்டார். அஷ்டவக்கிரர் துக்கத்துடன் அழுதுகொண்டு தன் தாயாரிடம்போய் என் பிதா எங்கேயென்று கேட்டார். சுஜாதா துக்கத்துடனே, அவர் சாபம் இடுவாரென்று பயந்து நடந்ததை உள்ளபடி சொல்லிவிட்டாள், இதைக் கேட்ட அஷ்டவக்கிரர் இரவில் சுவேதகேதுவுடன் சொல்லுகிறார். நாம் ஜனகருடைய யாகசாலைக்குப் போவோம். அங்கே அநேக விநோதங்கள் உண்டென்று கேள்விப்படுகிறேன். பிராமணர்கள் தர்க்கம் செய்வதையும் கேட்கலாம் நல்ல போஜனத்தையும் புசிக்கலாம் நமக்கும் நல்ல பயிற்சியுண்டாகும். வேதாத்தியயனம் கேட்க இன்பமாயிருக்கும் என்றார். அதன்பின் மாமனும் மருமகனுமாகிய அவ்விருவரும் ஜனகராஜனுடைய வேள்விச் சாலைக்குப் போனார்கள். துவாரகபாலகர் தடுத்தார்கள். பிறகு ஜனகனைப் பார்த்தார்கள்.

## 133-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—16. ஜனகனைப் பார்த்துச் சொல்லுகிறார். பிராமணர் பாதையில் நடவாமலிருந்தால் அந்தப் பாதை முதலில் குருடர்களுக்குச் சொந்தம் இரண்டாவது செவிடர்களுக் குரியதாம். மூன்றாவது ஸ்திரீகளுக் குரியதாம். நாலாவது சுமைகாரர்களுக்குப் பாத்தியம். கடைசியில் அரசனுக்குச் சொந்தமாம் என்றார். ஜனகன், நான் வழி விடுகிறேன். நீர் விரும்புகிற இடத்துக்குச் செல்லும் என்றான். சிறிய நெருப்புக் கூடக் அற்பமான தென்று கருதப் படாது. இந்திரன் கூடப் பிராமணர்களை வணங்குகிறான் என்றார். அஷ்டவக்கிரர் அரசனே! நாங்கள் உமது யாகத்தைப் பார்க்க விரும்பி வந்தோம். நாங்கள் உமக்கு அதிதியாக வந்திருக்கிறோம் உமது யாகத்தையும் உம்மையும் பார்க்கவும், உம்முடன் பேசவும் விரும்பி வந்தோம். காவலாளர் தடுக்கின்றார்கள் அதனால் நாங்கள் கோபம் கொண்டிருக்கிறோம் என்றார். துவாரபாலகர் அரசனை நோக்கி வந்தியின் உத்தாரப்படி நாங்கள் நடந்தோம். வந்தி சிறிய பிள்ளைகளை உள்ளே விடாதீர்கள் முதியவர்களையும் படித்தவர்களையும் மாத்திரம் விடுங்கள் என்று சொன்னார். அஷ்டவக்கிரர் துவாரபாலகரைப் பார்த்து, அப்படியானால் நாங்களும் முதியவர்களே. கடின நோன்புகளைச் செய்கிறோம். வேதத்தில் சாமர்த்தியம் உடையவர்களாக இருக்கிறோம். குரு பணிவிடை செய்திருக்கிறோம். ஆசையை அடக்கி யிருக்கிறோம். சிறந்த அறிவையும் பெற்றிருக்கிறோம். பிராமணச் சிறுவனைக்கூட அற்பமாய் நினைக்கப் படாது. நெருப்பு சிறிதா யிருந்தாலும் தொட்டால் சுடும். துவாரபாலகர், சிறு பிள்ளையே! நீ, பரம்பொருளை விளக்குகிறதும், தேவரிஷிகளாலே வணங்கப் படுகிறதும், ஏகாட்சரத்தினுள் அடங்கி யிருக்கிறதுமான வேதத்தை உணர்ந்திருந்தால் உன்னைப் பெருமையாகப் பேசிக்கொள்ள மாட்டாய். படித்தவர்கள் காணப்படுவது அரிது என்றார்கள். முதுமைத் தன்மையானது சரீரவளர்ச்சியால் மாத்திரம் அனுமானிக்கப் படுவதில்லை.சால்மலிவிருட்சத்தின்வளர்ச்சியால் அது முதிர்ந்த வயதுடையதென்று சொல்லப்படாததுபோல மனிதர்களும் உயரமாய் வளர்ந்து விட்டதனாலே முதிர்ந்தவர்களென்று எண்ணக் கூடாது, மெல்லியதாகவும் குட்டையாகவும் இருந்தாலும் கனிகள் நிறைந்திருந்தால்தான் அதை முதிர்ந்ததென்பார்கள். துவாரபாலகர், பிள்ளாய்! சிறுவர்கள் பெரியவர்க ளிடத்திலிருந்து கல்வியைக் கற்றுக் கொள்ளுகிறார்கள். பிறகு சரியான காலத்தில் பெரியவ ராகின்றார்கள். கல்வியறிவு கொஞ்ச காலத்துக்குள் அடையப் படுகிறதில்லை. ஆகையால் நீ சிறு பையனாக இருந்தும் பெரியவர்களைப் போல ஏன் பேசுகிறாய்! என்றான். அஷ்டவக்கிரர் ஒரு மனிதன் கிழவனாகிறதில்லை. ஏனென்றால் அவனுடைய மயிர்தான் வெண்மையாக மாறுகிறது. சிறுவனா யிருந்தாலும் அறிவுள்ளவனானால் அவனைப் பெரியவனென்று தேவர்கள் சொல்லுகிறார்கள். மனிதர்கள் வயதினாலே

தான் பெரியவர்களாகிறார்களென்று ரிஷிகள் கொள்ளுகிறதில்லை. நரைத்த மயிரினாலாவது, செல்வத்தினாலாவது, நட்பினாலாவது பெரியவர்களென்று கருதுகிறதில்லை. வேத முணர்ந்தவனையே பெரியவனென்று ரிஷிகள் ஒப்புக் கொள்ளுகிறார்கள். துவாரபாலகனே? நான வந்தியைப் பார்க்கவே விரும்பி வந்திருக்கிறேன் தாமரைப் பூமாலை புனைந்த ஜனகரிடம் போய்ச் சொல். இன்றைய தினம் எல்லாப் பிராமணர்களுடனும் வந்தியுடனும் தர்க்கம் செய்வதை நீ பார்ப்பாய் நான் வந்தியை வெல்வதையும் காண்பாய். என்னோடு எதிர்த்தவர்கள் எல்லாரும் வாய்திறவாமல் அடங்கி யிருப்பார்கள். அப்போது அரசனும், அரசனுடைய குருவும் என்னுடைய உயர்வு தாழ்வுகளைப் பற்றி எடுத்துப் பேசுவார்கள் என்றார். துவாரக பாலகன், குழந்தாய்! உனக்குப் பத்து வயதுதான் இருக்கும். படித்தவர்கள் கூடுகிற கூட்டத்தில்போய்ச் சேர முடியுமா. அந்தக்கூட்டத்தில் படித்தவர்கள் மாத்திரந்தான் அங்கீகரிக்கப் படுகிறார்கள். உன்னை அவவிடத்தில் சேர்த்துக் கொள்ளும் பொருட்டு என்னால் கூடியமட்டும் பிரயாசப்படுகிறேன். நீயும் முயற்சி செய் என்றான்.

17—19. அஷடவக்கிரர் அரசனை நோக்கி, அரசனே? ஜனகவம்சோத்தமனே? நீ சக்கிரவர்த்தியா யிருக்கிறாய். உன்னிடம் சகல ஐசுவரியங்களும் நிறைந்திருக்கின்றன. முன்காலத்தில் யயாதி யாகம் செய்வதில் கீர்த்தி பெற்றிருந்தான். இந்த காலத்தில் நீ யாகம் புரிவதில் பெரியவனா யிருக்கிறாய், கல்வியிற் சிறந்த வந்தியைப் பற்றி நாங்கள் கேள்விப்பட் டிருக்கிறோம். தர்க்கத்தில் சிறந்தவர்களைத் தோல்வி யாக்கினபின் அவர்களை உன்னால் நியமிக்கப்பட்டிருக்கிற வேலைக்காரர்களைக் கொண்டு நதியில் அமிழ்த்தி விடுகிறான். இந்தச் சமாசாரத்தைப் பிராமணர்கள் மூலமாய்க் கேள்விப்பட்டேன். கடவுளால் கொடுக்கப்பட்ட கொள்கைகளை விளக்கிப் பிரசித்தம் பண்ண வந்திருக்கிறேன் அந்த வந்தி எங்கே யிருக்கிறான்? சொல்லும். சூரியன் நட்சத்திரங்களை அழிப்பது போல, அவனை நான் அழித்து விடுகிறேன் என்றார்.

20—22. அரசன் சொல்லுகிறான். நீ வந்தியை வெல்ல விரும்புகிறாயா அப்படியானால் அவனுடைய வல்லமை உனக்குத் தெரியாது, அவனை நன்றாய் அறிந்தவர்கள் உன்னைப் போலப் பேசுவார்களா? தர்க்கத்தில் சிறந்த பிராமணர்கள் எல்லாரும் அவனைப பரிட்சித்து ஆயிற்று. அவனுடைய வல்லமையை அறியாமையாலேதான் நீ அவனை ஜயிக்க விரும்புகிறாய். சூரியனுக்கு எதிரில் நட்சத்திரங்கள் பிரகாசியாதது போல அநேக பிராமணர்கள் அவனுக்கு எதிரில் பிரகாசியாமல் போனார்கள். கல்வியால் இறுமாந்து அவனை ஜயிக்க விரும்பி வந்த பிராமணர்கள் எல்லாரும், அவனுக்கு முன் எதிர்ப்பட்ட மாத்திரத்திலேயே தங்களுடைய மகிமையை இழந்துபோனார்கள். அந்த [illegible] சேர்ந்திருப்பவர்களுக்கு முன்னே கூடப் பேசச் சக்தி யற்றுப் போனார்கள் [illegible]ன்றான்.

23—1. அஷ்டவக்கிரர், வந்தி என்னைப் போல் ஒத்தவர்களுடன் ஒரு போதும் வாதம் செய்திருக்க மாட்டான். இந்தக் காரணத்தினாலே தான் அவன் தன்னை ஒரு சிங்கத்தைப் போல மதித்துக் கர்ஜித்து உலாவிக்கொண்டிருக்கிறான் என்றார் அரசன் வந்தி முப்பது பிரிவுகளையும், பன்னிரண்டு பங்குகளையும் இருபத்து நாலு சந்திகளையும், முந்நூற்றறுபது ஆரைகளையும் நிச்சயமாகவே நன்றாயுணர்ந்தவன் என்றார். அஷ்டவக்கிரர், இருபத்துநாலு சந்துகளும், ஆறு ஆரைக்குடங்களும், பன்னிரண்டு சக்கிரங்களும், அறுபது ஆரைக்கால்களும் உள்ள சக்கரம் எப்போதும் சுழலும் தன்மையுள்ளது என்றார் அரசன், வண்டியிற் பூட்டின இரண்டு குதிரைகளைப் போல ஒன்று சேர்ந்து போகத் தக்கதும், இராஜாளியைப் போல உறுஞ்சிப் பறித்துக்கொண்டு போகிறதுமான இரண்டு பொருள்களைப் பிறப்பிக்கிற தேவன் யார்? அந்தத் தேவனைப் பிறப்பிக்கிற அவ்விரண்டு யாவை? என்று கேட்டான். அஷ்டவக்கிரர், அரசனே! இடியும் மின்னலுமாகிய அவ்விரண்டும் உன் கிருகத்திலாவது உன் சத்துருக்களின் கிருகங்களிலாவது விழாமலிருக்கும்படி கடவுள் காப்பாராக காற்றைத் தேர்க்காரனாகக் கொண்டு அதனுடன் தோன்றுகிற மேகம் அல்லது மனதுதான் தேவர்களை உற்பத்தியாக்குகின்றன. அந்தத் தேவர்களும் அவைகளை ஜனிப்பிக்கிறார்கள் என்றார். அரசன், தூங்குகிற வேளையில் கூடக் கண்மூடாமலிருப்பது எது? பிறந்த பின்னும் அசையாமலிருக்கிற (ஜீவன்) எது? இருதயம் இல்லாமலிருக்கிறது எது? ஓடுகிறபோது விருத்தியாகிறது எது? என்றான். அஷ்டவக்கிரர்; அரசனே! தூங்குகிறபோதும் கண்மூடாமலிருப்பது மீன். பிறந்த பின்னும் நகராமலிருப்பது முட்டை. இருதயம் இல்லாதது கல். தன் வேகத்திலே விருத்தியாகிறது ஆறு என்றார். அரசன் சொல்லுகிறான். நீர் திவ்யஞான முள்ளவர். நீர் மனிதப் பிறவியாகத் தோன்றவில்லை. உம்மைச் சிறு பிள்ளையென்று நான் நினைக்கவில்லை. நீர் பெரியமனிதரென்று கருதுகிறேன். படிப்பில் உமக்குச் சமானமாகச் சொல்லத் தக்கவன் ஒருவனுமே யில்லை. ஆகையால் உம்மைப் பண்டிதர் சங்கத்தில் சேர்த்துக் கொள்கிறேன். வந்தி அதோ இருக்கிறார் என்றான்.

---

## 134-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—7. அரசனே! பெரிய சேனைக்கு அதிபனே! நான் வந்தியைக் காண முடியாது, ஒப்பற்ற வல்லமையுள்ள இந்த இராஜ சபையில் கூடியிருக்கிற தார்க்கீகர் சபையில் நான் வந்தியை எப்படிக்கண்டு பிடிப்பேன்? விசாலமான பெரிய மடுவில் அன்னப் பறவையைத் தேடுவதுபோல இந்தப் பெரியசபையில் நான் வந்தியைத்தேடுகிறேன். ஆ வந்தீ! நீ சிறந்த தார்க்கீகனென்று கருதியிருக்கிறாய். நீ என்னிடத்தில் தர்க்கம் புரிய வந்தால் (அணையிடப்பட்ட)

ஆற்றின் ஓட்டத்தைப் போலத் தடைபட்டு நின்று விடுவாய். நான் எரிகிற நெருப்பைப் போலிருக்கிறேன். எனக்கெதிரில் மௌனமாயிரு. தூங்குகிற புலியை எழுப்பிவிடாதே. விஷப்பாம்பின் தலையை மிதித்தால் அதன் கடிக்கு நீ தப்பிப் போக மாட்டாயென்று நினை. அந்தப் பாம்பு நாக்கினால் தன் வாயின் ஓரத்தை நக்கிக்கொண்டிருக்கிறது. அது உன் காலால் துன்பப்படுத்தப் பட்டது. பலஹீனனான ஒருவன் தன்னைப் பலவானென்று மதித்துக்கொண்டு ஒரு மலையின்மேல் அடிக்கிறான். அதனால் தன்கைக்கும் நகத்துக்கும் துன்பமுண்டாக்கிக் கொள்கிறான். மலைக்கு யாதொரு துன்பமும் செய்ய அவனால் ஆகாது. எல்லா மலைகளும் மைநாக மலைக்குத் தாழ்ந்தன. கன்றுகள் எல்லாம் எருதுக்குத் தாழ்ந்தன. அதுபோல உலகத்திலுள்ள அரசர்கள் எல்லாரும் மிதிலைப்பதி அரசனுக்குத் தாழ்ந்தவர்கள் இந்திரன் தேவர்களுக்குள் சிறந்தவன், கங்காநதி ஆறுகளுக்குள் சிறந்தது. அதுபோல அரசனே! நீ மன்னவர்களுக்குள் சிறந்தவனாக இருக்கிறாய். ஆகையால் வந்தியை என்முன்னே வரும்படி சொல்லு என்றார். யுதிஷ்டிரனே! அஷ்டவக்கிரர் இப்படிச் சொல்லி, வந்தியின்மேல் வெகு கோபமுடையவராய், அந்தச் சபையில் கர்ஜித்தார். நீ என்னுடைய கேள்விக்கு விடை கொடு நான் உன் கேள்விக்கு விடை தருகிறேன் என்றார்.

8—20. யுதிஷ்டிரராஜனே! அப்போது வந்தி அஷ்டவக்கிரரை நோக்கிச் சொல்லுகிறான். நெருப்பு ஒன்றே பல சொரூபங்களாகப் பிரகாசிக்கிறது. சூரியன் ஒன்றே உலகம் முழுமையும் பிரகாசிப்பிக்கிறது. தேவராஜனாகிய ஒருவனே வீரன், சத்துருக்கள் எல்லாரையும் சங்கரிக்கிறான். எமன் ஒருவனே பிதிர்க்களுக்கு இறைவன். அஷ்டவக்கிரர், இந்திரனும் அக்கினியுமாகிய இருவருமே இரண்டு சிநேகிதர்கள். நாரதரும் பர்வதருமாகிய இருவரே தேவரிஷிகள். அசுவினி தேவர்கள் இருவர். வண்டியின் சக்கரம் இரண்டு. தெய்வக் கட்டளையால் சேர்ந்து வசிப்பவர்கள் மனைவியும் புருஷனுமாகிய இருவரே. வந்தி, கர்மவசத்தால் பிறந்த ஜீவர்கள் மூவகை. வாஜபேய யாகம் செய்வதற்குரியன மூன்று வேதங்கள். மூன்றுவகையான காலத்தில் அத்வர்யுக்கள் வேள்விகளைத் தொடங்குகிறார்கள். தெய்வத்தன்மையுள்ள ஜோதிகள் மூன்று. அஷ்டவக்கிரர், அந்தணர்க்குரிய ஆச்சிரமங்கள் நாலு. யாகவிதிகள் நாலு சிரேஷ்டமான திசைகள் நாலு. எழுத்துகளின் எண் நாலு. பசுவின் கால் நாலு. வந்தி, தீயின் எண் ஐந்து பந்திகள் ஐந்து யாகங்கள் ஐந்து. அப்ஸரஸ்களின் சிரசில் ஐந்து சிகை உண்டென்று வேதங்களில் கூறப்படுகிறது. உலகத்தில் புண்ணிய நதிகள் ஐந்து. அஷ்டவக்கிரர், அக்கினியாதானத்தில் தட்சிணையாகக் கொடுக்கப்படும் பசுக்கள் ஆறு. கால சக்கரத்துக்குரிய பருவம் ஆறு. கிருத்திகா நட்சத்திரம் ஆறு. சத்யாஸ்க யாகத்தின் எண் ஆறு. வந்தி, கிருகத்துக்குரிய பிராணிகள் ஏழு. காட்டுப் பிராணிகளும் ஏழு. யாகமுடிவில் உபயோகிக்கிற சந்தங்கள் ஏழு. ரிஷிகள் ஏழு. வணக்கம் ஏழு. விந்தியத்தின் தொடர்ச்சி ஏழு. அஷ்டவக்

கிரர், சுமைகள் எட்டு, சர்பத்தின் எண் எட்டு, தேவர்களில் வசுக்கள் எட்டு, யூபதேவர்கள் எட்டு. வந்தி, பிதிர்யாகத்தில் அக்கினி மூட்டுவதில் உபயோகிக்கும் மந்திரம் ஒன்பது. சிருஷ்டி விருத்திக்கு ஏற்பட்ட தொழில் ஒன்பது. விருஹதி என்னும் தளையின் எழுத்துக்கள் ஒன்பது. கணக் கிடுவதில் எண் ஒன்பது. அஷ்டவக்கிரர், திக்குகள் பத்து பத்து நூறு ஆயிரமாகிறது. பெண்களின்பேறு காலஅளவைமாதம் பத்து. நல்ல அறிவுள்ள ஆசிரியர்கள் பத்து அறிவுக்கு விரோதிகளும் பத்து. அவ்வறிவை அடையவாகளும பத்து. வந்தி. அனுபவப் பொருள்கள் பதினொன்று. யூபத்தின் எண் பதினொன்று. ஜீவஜந்துக்களின் சுபாவ நிலைமை பதினொனறு. உருத்திரர்களின எண்பதினொன்று அஷ்டவக்கிரர் வருஷத்தில் மாதங்கள் பன்னிரண்டு பயதி தளையில் எழுத்துக்கள் பன்னிரண்டு. யாகஙகள் பன்னிரண்டு. ஆதித்தியர் பன்னிருவா. வந்தி சந்திரனுக்குரிய பதின்மூன்று நாட்கள் மங்களமான வை. பதினமூன்று தீவுகள் உலகத்தில் உண்டு என்று இப்படி அரைச் சுலோகம் சொன்னதும் வந்தி தடைபட்டு நின்று விட்டான். அஷ்டவக்கிரர், கேசியால் பதின் மூன்று யாகங்கள் சிறப்பித்துக் கூறப்பட்டன. வேதத்தின் அதிசந்தஸால் பதின் மூன்று விழுங்கப்பட்டன என்று மறுபாதி சுலோகத்தை முடித்து விட்டார்.

21—25. அஷ்டவக்கிரர் இப்படிச் சொன்னதைக் கேட்ட சூத புத்திரனை வந்தி வாய் பேசாமல் துக்கத்துடன் தலை குனிந்து உட்கார்ந்திருந்தான் அந்தச் சங்கத்தி லிருந்த மனிதர்க ளெல்வாரும் சந்தோஷத்தினால் கூச்சலிட்டார்கள். ஜனகராஜன் சபையில் இப்படிப்பட்ட குழப்பம் உண்டான போது பிராமணர்கள் எல்லாரும் மனதில் மகிழ்ச்சி யடைந்து, கைகளைக் குவித்துக் கொண்டு அஷ்டவக்கிரர் அருகில்வந்து, அவருக்கு வணக்கம் செய்து உபசரித்தார்கள். வந்தி, பிராமணர்களைத் தர்க்கத்தில் ஜயித்தபின் அவாகளைத் தண்ணீரில் தூக்கிப் போட்டு விடுவான். இன்றைய தினம் வந்தியும் அதே கதியை அடையத்தான் வேண்டும். ஆகையால் அவனைப் பிடித்துத் தண்ணீரில் அமிழ்த்தும் என்றார்கள். வந்தி, ஜனகராஜனே! நான் வருணனுடைய புத்திரன். உன்னுடை யாகத்துடன் கூட வருணனும் ஒருயாகம் தொடங்கினான். அது சமுத்திரத்துக்குள் நடக்கிறது. பன்னிரண்டு வருஷமாக நடத்தப் படுகிறது. ஆகையால் உத்தமரான பிராமணர்களை நான் அவ்விடத்துக்கு அனுப்பினேன். அவர்கள் எல்லாரும் வருணனுடைய யாகத்தைப் பார்க்கப் போயிருக்கிறார்கள். அவர்கள் எல்லாரும் வருகிறதைப் பார். நான் அஷ்டவக்கிரருக்கு வணங்குகிறேன். அவர் இன்று தினம் என்னைப் பிறப்பிக்கின்றார் (கொல்லாம லிருக்க வேண்டும்.) ஆதலால் அவருடன் நான் சேர்ந்து கூடி வாழ்கிறேன் என்றான்.

26—36. அஷ்டவக்கிரர் சொல்லுகிறார். இவன் தன் பேச்சினலாவது தந்திரத்தினலாவது பிராமணர்களை ஜயித்தபின் அவர்களைத் தண்ணீருக்குள் அமிழ்த்து விட்டான். நான் என்னுடைய அறிவின் பலத்தினால் இன்று அவர்களை மீட்டேன். நன்மை தீமைகளின் இலட்சணத்தை அறிந்த அக்கினி

யோக்கியர்களைச் சுடாமல் விடுகிறது, அதுபோல நல்லமனிதர்கள், வாக்குவல்லமை யுள்ள சிறுவர்களையும் மதிக்க வேண்டும். ஜனகராஜனே நீரும் அக்கினியைப் போலச் சிறுவர்க்கும் பெரியவர்க்கும் ஒரே மாதிரியாக நடப்பிக்க வேண்டும். நீர் என் வார்த்தையைக் கேட்டும் சிலேஷுமாதகி மரத்தின் பழத்தைத்தின்றவர்களைப் போல மயங்கி யிருக்கிறீர் முகஸ்துதி செய்கிறவர்களுடைய வார்த்தையால் மதிமோசம் போய்விட்டீர் யானையானது அங்குசத்தால் குத்தப்பட்டது போல என் வார்த்தைகளால் துளைக்கப்பட்டும், அதை மதியாமல் இருக்கிறீர் என்றார். ஜனகன், நான் உமது வார்த்தைகளை மிகவும் சிரேஷ்டமாகவும், தெய்வத் தன்மையுள்ளவைகளாகவும் மதிக்கிறேன். உம்மையும் தேவனைப் போலவே மதிக்கிறேன். நீர் அன்றைய தினம் வந்தியை ஜயித்துவிட்டபடியால் உமது தீர்மானத்தின்படியே அவனுக்கு நடப்பிக்கிறேன் என்றான். அஷ்டவக்கிரர், ஜனகராஜனே! வந்தி உயிருடனிருப்பதினாலே எனக்குப் பயன் ஒன்றுமில்லை. நிச்சயமாகவே வருணன் இவனுக்குப் பிதாவாயிருந்தால், அவனை சமுத்திரத்தில் முழுகட்டும் என்று சொன்னார். வந்தி, நான் வருண ராஜனுடைய புத்திரன் தான். ஆகையால் சமுத்திரத்தில் முழுகிறதற்குப் பயப்பட மாட்டேன். இதே க்ஷணத்திலே அஷ்டவக்கிரர் தமது மரித்த பிதாவைக் காண்பார். பிறகு வருணனைத் தொழுத பின் எல்லாப் பிராமணர்களும் எழுந்திருந்து வந்தார்கள். கோகதர், அரசனை நோக்கி ஜனக மஹாராஜனே! இந்தக் காரணத்தை யிட்டுத் தான் மனிதர்கள் புண்ணிய கர்மங்களைச் செய்வதால் புத்திரர்களைப் பெற விரும்புகிறார்கள். நான் தவறிப் போன விஷயம் என் புத்திரனால் நிறைவேறப் பட்டது. அரசனே! துர்ப் பலமுள்ள மனிதன் பலமான புத்திரர்களைப் பெறவும் கூடும். மூடனானவன் அறிவுள்ள புத்திரர்களைப் பெறலாம். படிப்பில்லாதவன் கல்வி யறிவிற்சிறந்த புத்திரனைப்பெறவும் கூடும் என்றார். வந்தி அரசனை நோக்கி மஹாராஜனே! எமன் உமது மழுவா யுதத்தினாலே சத்துருக்களின் தலையை வெட்டுகிறான். உமக்கு மங்கள முண்டாகட்டும் என்றான். ஜனக ராஜனுடைய அந்தயாகத்தில் வேதமந்திரங்கள் சரியான உச்சரிப்புடன் ஓதப்பட்டன. சோமபானம் ஒழுங்காகச் செய்யப்பட்டது. தேவர்கள் மகிழ்ச்சி யுடன் வந்து தங்கள் தங்கள் பாகத்தைப் பெற்றுக் கொண்டார்கள்.

37—41. ரோமசர் யுதிஷ்டிரரைப் பார்த்து அரசனே! ஜலத்திலிருந்து எழுந்திருந்து வந்தப் பிராமணர்களுடைய தேஜசு மிகவும் அதிகமாய் விளங்கிற்று. ஜனகனுடைய கட்டளையால் வந்தி சமுத்திரத்தில் முழுகிப் போனான். பிறகு அஷ்டவக்கிரர் தம்முடைய பிதாவுன் பாதத்தில் வணங்கினார். பிராமணர்கள் எல்லாரும் அஷ்டவக்கிரரை வணங்கினார்கள். அஷ்டவக்கிரர் வந்தியை ஜயித்தபின் தமது மாமனுடன் ஆச்சிரமம் போய்ச் சேர்ந்தார். கோகதர் சுஜாதாவாவுக்கு எதிரில் அஷ்டவக்கிரரை நோக்கி இந்த ஸமாங்கம் என்ற நதியில் சீக்கிரம் ஸ்நானம் செய்து எழுந்திரு என்றார். அப்படியே அவர்முழுகினவுடனே கோணலான அவருடைய அவயவங்களெல்லாம் நேராக நிமிர்ந்தன. அன்று முதல் தான் அந்த நதிக்கு ஸமாங்கம் என்றபேர் வந்தது.

அது பாவங்களைப் போக்கத் தக்கது. அதில் ஸ்நானம் செய்கிறவன் சகல பாபங்களினின்றும் விடுபடுவான். ஆகையால் நீ உன் சகோதரர்களுடன் இவ்விடத்தில் எல்லாப் புண்ணிய கர்மங்களையும் செய் என்றார்.

---

## 135-வது அத்தியாயம்

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—9. ரோமசர் தர்மராஜாவைப் பார்த்து அரசனே! இவ்விடத்தில் தான் ஸமாங்கநதி தோன்றுகிறது, இவ்விடத்தில் இது மதுவிலம் என்று சொல்லப்படுகிறது. அதோ கர்த்தமிலம் இருக்கிறது. அது பரதனுடைய ஸ்நானகட்டம. சசீதேவி நாயகனாகிய இந்திரன் விருத்திரனைக் கொன்றதனால் தன் ஐசுவரியத்தை யிழந்து விட்டான். இந்த ஸமாங்க நதியில் ஸ்நானம பண்ணித்தான் பாபம் நீங்கிப் பரிசுத்தனானன். இவ்விடத்தில் தான் மைநாக மலை பூமிக்குள் புகுந்து மறைந்தது. அதனால் இதற்கு விநாசனம் என்று பேர். முன் காலத்தில் புத்திரரை விரும்பின அதிதி இவ்விடத்தில் தான் அவிசு சமைத்தாள். யுதிஷ்டிரா! இந்த உயரமான மலையின் மேலேறி உன்னுடைய கஷ்டங்கள் எல்லாவற்றையும் ஒழித்துக் கொள். அதோ கங்கை யிருக்கிறது. பூர்வம ஸநத்குமாரரிஷி இவவிடத்தில் தான் தவச்சித்தி பெற்றார். நீ இதில் ஸ்நானம் செய்தால் உனது பாவங்கள் எல்லாம் நாசமாகும். குந்தி குமாரனே! உன் பரிவாரததாருடன் புண்ணியம் என்கிற இந்த மடுவில் முழுகி பிருகுதுங்கமலையைத் தரிசி. இந்த இரண்டு நதிகளுக்கும் கூணிகங்கா என்று பேர். அதோ சுவேதகேது ஆச்சிரமம் இருக்கிறது. சினத்தையும் புலன்களையும் அடக்கிக்கொண்டு தரிசி. அதோ ரைப்பியருடைய புண்ணிய ஆச்சிரமம் இருக்கிறது. பரத்துவாஜருடைய குமாரனும் வேதங்களை யுணர்ந்தவனுமான யுவாகிருது என்பவர் இங்கேதான் மரணம் அடைந்தார்.

10—18. யுதிஷ்டிரர் முனிவரே! மகிமையுள்ள பரத்துவாஜர் குமாரரான யுவாகிருது எவ்வாறு வேதத்தை உணர்ந்தார்? அவர் எவ்வாறாக மரணமடைந்தார். இவைகளை யெல்லாம் நான் கேட்க விரும்புகிறேன். தேவர்களைப் போன்றவர்களான புண்ணியாத்மாக்களின் சரித்திரங்களை கேட்பதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி யுண்டாகிறது என்றார். ரோமசர் சொல்லுகிறார். பரத்துவாஜரும் ரைப்பியரும் சிநேகிதர்கள். இவ்விடத்தில் அந்த இரண்டு பேரும் மகிழ்ச்சியுடன் வசித்துக் கொண்டிருந்தார்கள். ரைப்பியர்க்கு ஆவாவசு, பிரபாவசு என்று இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். பரத்துவாஜருக்கு யுவாகிருது என்ற ஒரே குமாரனிருந்தான். ரைப்பியரும் அவருடைய புத்திரர்களும் நன்றாய்க் கல்வி பயின்றிருந்தார்கள். பரத்துவாஜர் தவசையே செய்து கொண்டிருந்தார். தவசையொன்றையே செய்து கொண்டிருக்கிற பரத்து

வாஜனைப் பிராமணர்கள் அவ்வளவாக மதிக்கவில்லை. ரைப்பியனையும் அவருடைய குமாரர்களையும் வெகு பெருமையாக மதித்து வந்தார்கள். இதனாலே மஹாத்மாவான யவாகிருதுக்குத் துக்கம் மிகுந்தது. சரீரம் வெளுத்துப் போயிற்று. அதனாலே அவன் தனக்கு வேதத்தில் பூர்ண ஞானம் உண்டாவதைக் குறித்துத் தவசு செய்தான். எரிகிற நெருப்பை மத்தியிலிருந்து கொண்டு கொடுந் தவம் செய்தான். அதனாலே தேவேந்திரனுக்கு மனக்கவலையுண்டாயிற்று. தேவேந்திரன் யவாகிருதுவின் அருகில் போய், நீ யேன் இப்படிப்பட்ட கொடுந்தவம் செய்கிறாய்? என்றான். யவாகிருது, இந்திரனை வணங்கித் தேவனே வேதத்தில் பூர்ண ஞானம் பெற விரும்பித் தவம் புரிகிறேன். பிராமணர்களால் அறியப்படாத வேத இரகஸியங்களை எல்லாம் நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். தேவனே! குருவின்மூலமாக வேதத்தைச் கற்றுக்கொள்வதற்கு நெடுங்காலம் ஆகும். அதனாலே தான் நான் தவம் புரிந்து சீக்கிரம் தெரிந்து கொள்ள முயலுகிறேன் என்றான். இந்திரன் பிராமண ரிஷியே! நீ கொண்ட மார்க்கம் சரியானதல்ல. ஏன் உன் சரீரத்தை வருத்தப்படுத்திக் கொள்கிறாய்? நீ புறப்பட்டுப் போய்க் குருவின் மூலமாகக் கற்றுக்கொள் என்று சொல்லி விட்டு இந்திரன் போய்விட்டான். யவாகிருது மறுபடியும் உக்கிரமான தவசையே செய்தான். யுதிஷ்டிரா! இப்படித் தவம் செய்கிறதினால் மறுபடியும் இந்திரனுக்கு அச்சத்தை உண்டாக்கினான். வலாரியாகிய இந்திரன் மறுபடியும் அந்த மஹாரிஷியினிடம் வந்து தவம் புரியாதபடி தடுத்தான். மஹாரிஷியே! உனக்கும் உன் பிதாவுக்கும் வேதத்தில் பூர்ணஞானம் உண்டாவதைக் குறித்தே இப்படிப்பட்ட உக்கிரதவம் செய்கிறாய். உன் முயற்சி பயன் படாது. ஏனென்றால் இந்த வழி சரியானதல்ல என்றான். யவாகிருது, தேவராஜனே! நான் விரும்பினபடி நீ செய்யாவிட்டால் மறுபடியும் கொடுந்தவம் புரிவேன். தேவராஜனே! என் எண்ணம் நிறைவேறாமல் போனால் என்னுடைய உறுப்புக்களை அறுத்து அக்கினியில் ஹோமம் செய்வேன் என்றான். யவாகிருதுவினுடைய உறுதியை அறிந்து இந்திரன் சற்று யோசித்து வேறு நியாயம் சொல்லி அவன் தவம் செய்வதைத் தடுக்க நினைத்து, அநேக நூறு வருஷம் சென்ற ஒரு ரிஷியைப் போல வேஷம் தரித்துக்கொண்டு, பலஹீனனைப் போலவும், க்ஷயரோகமுள்ளவனைப் போலவும், பாசாங்கு செய்து, யவாகிருது சந்தியாவந்தனாதிகளைச் செய்கிற இடத்தில் உட்கார்ந்து கொண்டான். அந்தப் பகீரதிநதிக்கு மணலால் ஒரு பாலம் உண்டாக்குகிறவனைப் போல இருந்தான். இடைவிடாமல் ஒரு பிடிமணலை அள்ளி கங்கையாற்றில் போட்டுக்கொண்டேயிருந்தான்.

34—43. மஹாரிஷியான யவாகிருது, அந்தக் கிழவன் மணலால் பாலம் கட்ட முயல்கிறதைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு சொல்லுகிறான். அந்தணரே! நீர் என்ன காரியம் பண்ணுகிறீர்? உம்முடைய அபிப்பிராயம் என்ன? ஏன் இப்படி வீணாகப் பிரயாசப் படுகிறீர் என்று கேட்டான். இந்திரன், ஐயா! இந்தக் கங்கா நதியைச் சுலபமாகத் தாண்டிப் போகும் பொருட்டு ஒரு பாலம் கட்ட முயற்சி செய்கிறேன். ஏனென்றால் இந்த ஆற்றைக் கடந்து போக முடி

யாமல் ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள் என்றான். யுவாகிருது, தபோசிதியே! இந்தப் பெரிய நதிக்கு உம்மால் பாலங் கட்ட முடியாது. முடியாத இந்தத் தொழிலை விட்டு விட்டுச் சாத்தியமான மற்றொன்றைச் செய்யும் என்றான். இந்திரன், நீ வேதத்தைக் கற்றுக் கொள்ளத் தவம் புரிவது போல நானும் இப்படிப் பிரயாசப் படுகிறேன் என்றான். யுவாகிருது, தேவராஜனே! உம்முடைய செய்கையைப் போலவே என் செய்கையும் பலனற்றதானால், என் எண்ணம் நிறைவேறத் தக்க சாத்தியமானது ஒன்றைச் சொல்லும். நான் மற்றவர்களை விட மேலானவனா யிருக்கும்படி வரம் கொடும் என்று கேட்டான். இந்திரன் அவன் விருப்பத்தின்படியே வரம் கொடுத்தான். நீ விரும்பினபடியே உனக்கும் உன் பிதாவுக்கும் நிறைந்த வேத ஞானம் உண்டாகட்டும் என்று அநுக்கிரகம் செய்தான். உன்னுடைய மற்ற விருப்பங்களும் நிறைவேறட்டும் என்றான். பிறகு யுவாகிருது தன் பிதாவினிடம் போய்ச் சொல்லுகிறான், பிதாவே! உமக்கும் எனக்கும் வேத ஞானம் நிரம்ப வந்து விட்டது. நாம் மற்ற எல்லா மனிதர்களையும் ஜயிக்கும்படியான வரம் பெற்றுக்கொண்டு வந்திருக்கிறேன் என்றான்.

44—60. பரத்துவாஜர், குழந்தாய்! நீ விரும்பின எல்லாவற்றையும் அடைந்து விட்டாய். அதனால் நீ கருவம் அடைவாய். கருவம் உண்டான போதே அழிந்து போவாய். இதற்குத் திருஷ்டாந்தமாகத் தேவர்களால் சொல்லப்பட்ட ஒரு கதை யுண்டு. முன் காலத்தில் வலாதி என்று ஒரு பெரிய ரிஷி யிருந்தார். அவர் தமது குமாரனுடைய மரணத்தைக் குறித்து வருந்தினார். ஆகையால் மரண மடையா திருக்கிற புத்திரனைப் பெற விரும்பிப் பெருந் தவம் செய்தார். அப்படிப்பட்ட புத்திரனையும் பெற்றார். ஆனால் தேவர்கள் தங்களைப் போல அழிவில்லாமலிருக்கிற புத்திரனைக் கொடுக்க இஷ்டப்படவில்லை. அதனால் ஏதாவது ஒரு ஏற்பாடு இல்லாமல் அழியாத புத்திரனை நீர் பெற முடியாது என்றார்கள். தேவர்களே! இந்த மலை எப்போதும் அழிவற்றதா யிருக்கட்டும். அவைகள் அழியாமலிருக்கிறதே என் புத்திரன் அழியாமலிருக்கிறதற்குக் காரணமாக இருக்கட்டும் என்று சொன்னார். பிறகு வலாதிக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு மேதாவி என்று பேர். அவன் வெகு கோப முள்ளவன். அவன் தன் பிறப்பைத் தெரிந்து கொண்ட பின் ரிஷிகளை நிந்தித்துத் துஷ்டனாய்த் திரிந்து கொண்டிருந்தான். பூமியில் உள்ள ரிஷிகள் எல்லாருக்கும் துன்பம் செய்து கொண்டே யிருந்தான். ஒரு நாள் பெரியவரும், அறிவுள்ளவரும், சக்தி யுள்ளவருமான தனுஷாக்ஷர் என்ற மஹாரிஷியைக் கண்டு அவமதித்தான். அந்த முனிவர் கோபங் கொண்டு அவனைச் சாம்பலாகப் போகும்படி சபித்தார். அவன் சாம்பலாக வில்லை. அழியாமலிருக்கிற காரணத்தை அறிந்து மலையை எருமைகளால் தகர்க்கும்படி செய்தார். அவன் உயிர் நிலைக்குக் காரணமாயிருக்கிற மலை அழியவே மேதாவியும் இறந்தான். அதை அறிந்த வலாதி இறந்துபோன தன் குமார

னைத் தூக்கித் தமது மடியில் வைத்துக்கொண்டு புலம்பி அழுதார். வேதங்களை யுணர்ந்த ரிஷிகள் வலாதிபுலம்புகிறதைப் பார்த்து, அவருக்குச் சொல்லுகிறார்கள். விதியைத் தவிர அழியாமலிருக்கிறதற்குக் காரணம் ஒன்றுமில்லை மேதாவியின் மரணமில்லாமைக்குக் காரணமாயிருந்த மலையைத் துஷகர் எருமைகளால் இடித்து அழித்து விட்டார் என்று சொன்னார்கள். இளம்பருவமுள்ள ரிஷிகள் வரம் பெற்றதனால் இறுமாப்படைந்து அகாலத்தில் மரணம் அடைகிறார்கள். நீயும் அப்படி மரணம் அடைந்தவர்களைப் போல அழிந்து போகாதே. புத்திரா! ரைப்பியர் மஹா வல்லமையுள்ளவர். அவருடைய புத்திரர்களும் அப்படிப்பட்டவர்களே. ஆகையால் அவர்களிடம் அணுகாதே. ரைப்பியர் பெரியவா, தவத்திற் சிறந்தவர், கோபகுணமுள்ளவர். அவர் கோபித்துக்கொண்டால் உனக்கு அபாயம் நேரிடும் என்றார். அதைக் கேட்ட யுவாகிருது, பிதாவே! நீர் சொன்னபடியே நடக்கிறேன். அதைப் பற்றி நீர் கவலைப் படவேண்டாம். என் பிதாவாகிய உம்மைப் போலவே ரைப்பியரும் என்னால் மரியாதை செய்யத் தக்கவர் என்று தன் பிதா மகிழும்படியாக இனிமையாகச் சொன்னான். ஆனால் அவன் நிர்ப்பயமாய் ரிஷிகளுக்குத் துன்பம் செய்யத் தொடங்கினான்.

---

## 136-வது அத்தியாயம்.

*தீர்த்த யாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—12. வைகாசி மாசத்தில் ஒரு நாள் யுவாகிருது ரைப்பியருடைய ஆசிரமத்துக்கு வந்தான். அந்த ஆசிரமம் புஷ்பித்த விருட்சங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மனதுக்கு மகிழ்ச்சி தருவதாக இருந்தது. ரைப்பியருடைய மருமகள் கின்னரி பட்சியைப் போல விளங்கிக் கொண்டிருந்தாள். யுவாகிருது காமத்தால் அறிவிழந்து, நாணத்துடன் நிற்கிற அந்தப் பெண்ணை பார்த்து என்னுடன் கூடியிரு என்று வெட்கமில்லாமல் சொன்னான். அந்தப் பெண் அவனுடைய குணத்தை அறிந்து அவனுடைய நடத்தைக்குப் பயந்து, ரைப்பியருடைய வல்லமையையும் சிந்தித்துப், பிறகு அவனை நோக்கி அப்படியே ஆகட்டும் என்று சொன்னாள். அவனை இரகசியமாக மறைத்து வைத்திருந்தாள். கொஞ்ச காலத்துக்குப் பின் ரைப்பியர் ஆச்சிரமத்துக்குத் திரும்பி வந்தார். அப்போது பராவசுவின் மனைவியான தமது மருமகள் கண்களில் நீர் பெருக நிற்பதைப் பார்த்து, இனிய வசனங்களால் அவளைச் சமாதானப் படுத்தி நீ அழுகிறதற்குக் காரணம் என்ன என்று கேட்டார். அவள் யுவாகிருது சொன்னதை அவருக்குச் சொன்னாள். தான் சொன்னதையும் சொன்னாள். யுவாகிருதுவினுடைய துஷ்ட நடத்தையைக் கேட்ட வுடனே ரைப்பியருடைய மனம் கோபத்தால் எரிந்தது. கோபங்கொண்ட ரைப்பியர் உடனே தமது சிரசிலிருந்து ஒரு சடையை எடுத்துச, சரியான மந்திரோச்சார

ணத்துடன் அதை நெருப்பி விட்டார். அதிலிருந்து அவருடைய மருமகளைப் போலவே வடிவம் உள்ள ஒரு பெண் தோன்றினள். மறுபடியும் ஒரு சடையைப் பிடித்து ஹோமம் செய்தார். அதிலிருந்து பயங்கரமான கண்களையுடைய ஒரு இராட்சதன் தோன்றினன். அவ்விருவரும் ரைப்பியரை நோக்கி நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டார்கள். ரைப்பியர் நீங்கள் இருவரும் போய் யுவாகிருதுவைக் கொல்லுங்கள் என்று சொன்னர். அவ்விருவரும் அப்படியே செய்கிறோம் என்று சொல்லி, யுவாகிருதுவைக கொல்லக் கருதிப் புறப்பட்டுப் போனர்கள்.

13—20. பரதவம்சத்தரசனே! அந்தப் பெண் யுவாகிருதுவினுடைய ஜல பாத்திரத்தைக் கவர்ந்து கொண்டாள். பிறகு அசுசியாயிருக்கிற யுவாகிருதுவின் மேலே அந்த இராட்சதன் பாய்ந்தான். இராட்சதன் ஈட்டியைத் தூக்கிக்கொண்டு தன் மேல் பாய்ந்து வருகிறதை யுவாகிருது பார்த்தது சிரமென்று எழுந்திருந்து குளத்தை நோக்கி ஓடினன். குளத்தில் ஜலம் இல்லை, பிறகு நதிகளை நோக்கி ஓடினன். நதிகளெல்லாம் வரண்டிருந்தன. யுவாகிருது பயந்து தன் பிதாவின் அக்கினிஹோத்திர சாலையை நோக்கி ஒடினன். அந்த வாசல்படியில் குருடனை ஒரு சூத்திரன் அவனை உள்ளே போகாதபடி தடுத்துப் பிடித்துக்கொண்டான். அதனல் யுவாகிருது அசையாமல் நின்று விட்டான். இராட்சதன் ஈட்டியால் யுவாகிருதுவைக் குத்தினன். யுவாகிருது இருதயம் துளைப்புண்டு கீழே விழுந்து மடிந்தான. யுவாகிருதுவைக் கொன்ற பின் இராட்சதனும் அந்த ஸ்திரீயும் ரைப்பியரிடம் போனர்கள். ரைப்பியர் இராட்சதனை நோக்கி உன் மனைவியாகிய இந்தப் பெண்ணுடன் கூடி இவ்விடத்தில் வசித்துக்கொண்டிரு என்று கட்டளையிட்டார். அவ்விருவரும் அங்கேயே வாசம்பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

---

## 137-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—9. ரோமசர், குந்திபுத்திரனே! பிறகு பரதத்துவாஜர் மத்தியான்ன கடமைகளை முடித்துச் சமித்துக்களைப் பொறுக்கிக்கொண்டு ஆச்சிரமத்துக்கு வந்து சேர்ந்தார். அவருடைய புத்திரன் இறந்துபோனபடியால் அவருடைய அக்கினி வழக்கம் போல அவரை உபசரிக்க வரவில்லை இப்படிப்பட்ட மாறுதலை யறிந்த பரத்துவாஜர், வாசலில் உட்கார்ந்திருக்கிற சூத்திரனை நோக்கி, சூத்திரா! இன்றைய தினம் என் அக்கினி என்னை உபசரிக்க வரவில்லை? நீயும் தினம் இருப்பது போல இன்று மகிழ்ச்சியாயிருக்க வில்லையே! ஆச்சிரமத்தில் எல்லாம் சரியா யிருக்கிறதா? என்று கேட்டார். என்னுடைய புத்திரனை மூடன் ரைப்பியருடைய ஆச்சிரமத்துக்குப் போனனே? இவைகளைச்

சீக்கிரமாக எனக்குச் சொல்லு என்றார். அந்தச் சூத்திரன், உம்முடைய புத்திரன் ரைப்பியருடைய ஆச்சிரமத்துக்குப் போனான். அதனால் ஒரு கொடிய இராட்சதன் வந்து அவனைக் கொன்றுவிட்டான். அவனும் செத்து முகம் குப்புற விழுந்து கிடக்கிறான் என்றான். இராட்சதன் விரட்டிக்கொண்டு வரும்போது உமது குமாரன் இந்த அக்கினிஹோத்திர சாலையில் நுழைந்தான். நான் உள்ளே புகாதபடி தடுத்தேன். அவன் நீரைத் தேடிக்கொண்டு அசுத்தனாய் வந்தபடியால் நான் தடை செய்தேன். அந்தச் சமயத்தில் ஈட்டியுடன் வந்த இராட்சதன் அவனைக் குத்திக் கொன்றான் என்று சொன்னான். இப்படிப்பட்ட துக்க சமாசாரத்தைக் கேட்டபின் பரத்துவாஜர் தமது புத்திரனைக் கட்டிக்கொண்டு புலம்பினார்.

10—19. குழந்தாய்! நீ பிராமணத்துவத்துக்காகப் பெரும் தவம் புரிந்தாய். அதனால் பிராமணர்களால் அறியப்படாதிருந்த வேதங்களையும் நீ தெரிந்துகொண்டாய். நீ எப்போதும் பிராமணர்களுக்கு நன்மை யுண்டாகும்படி நடந்தாய். எல்லாச் சீவன்களுக்கும் நன்மையையே செய்தாய். கடைசியில் துஷ்டனாக மாறிப் போனாய். ரைப்பியருடைய ஆச்சிரமத்துக்குப் போகாதே என்று உனக்குச் சொன்னேன். எமனைப் போலிருக்கிற அந்த ஆச்சிரமத்துக்குப் போனாய். அந்த மஹரிஷி என்னைக் கிழவன் என்று அறிவார். எனக்கு ஒரே புத்திரன் தான் என்பதும் அவருக்குத் தெரியும். ஆயினும் துஷ்ட சித்தமுள்ள அவர் கோபத்துக்கு வசப்பட்டிருக்கிறார். ரைப்பியராலே நான் புத்திர சோகத்தை அடைந்தேன். புத்திரா! உன் மரணத்துக்காக நானும் என் ஜீவனை விட்டு விடுகிறேன். நான் புத்திர சோகத்தால் உயிர் விடுகிறதைப் போலவே ரைப்பியருடைய மூத்த புத்திரனும் அவரைச் கொல்வான். ஆகையால் புத்திரன் இல்லாதவர்களுக்கே மகிழ்ச்சி யுண்டு. அவர்களுக்குப் புத்திர சோகமில்லாமையால் அவர்கள் சந்தோஷமாய்ச் சஞ்சரித்துக் கொண்டிருப்பார்கள். புத்திரன் இறந்த துக்கத்தால் மதி யிழந்து தன் சிநேகிதர்களைச் சபிக்கிறவனைப் போலப் பாவி உலகத்தில் வேறு இல்லை. என் புத்திரன் இறந்து கிடப்பதைப் பார்த்து நான் என் சிநேகிதனைச் சபித்தேன். இதைப் போன்ற துக்கமுள்ளவன் வேறு யார்? இப்படிப் பல விதமாகச் சொல்லிக்கொண்டு புத்திரனுக்காகப் புலம்பினார். பிறகு தமது புத்திரனுக்குத் தகன கிரியை செய்தார். தாமும் எரிகிற அக்கினியில் இறங்கி விட்டார்.

---

## 138-வது அத்தியாயம்

### தீர்த்தயாத்திரா பர்வத தொடர்ச்சி.

1—10 இந்தக்காலத்தில் பிரதாபமுள்ள பிருகத்யும்ன மஹாராஜன் உலகத்தைப் பரிபாலனம் செய்தான். அவன் ஒரு யாகம் செய்தான். ரைப்பியருடைய இரண்டு குமாரர்களும் பிருகத்யும்ன ராஜனுக்கு யாகம் செய்து

வைத்துக் கொண்டிருந்தார்கள். அவ்விருவரும் பிதாவினிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு போனார்கள். ரைப்பியரும் அவருடைய மூத்த புத்திரனுடைய மனைவியும் ஆச்சிரமத்திலிருந்தார்கள். ஒரு நாள் பராவசு தன் மனைவியைப் பார்க்கிறதற்காகத் தனிமையாக ஆச்சிரமத்துக்கு வந்தான். அந்தக் காட்டில் கிருஷ்ணமான் தோலைப் போர்த்துக்கொண்டிருந்த தன் பிதாவைக் கண்டான். அப்போது இருள் அதிகமாயிருந்தது. பராவசுவுக்கு நித்திரை மயக்கமா யிருந்தது. அதனால் ரைப்பியரைக் கிருஷ்ணமானென்று நினைத்தான். தன் சரீரத்தைக் காப்பாற்றிக்கொள்ளுகிற நிமித்தம் மானென்று கருதின தன் பிதாவை அடித்துக்கொன்றான். பிறகு அவருக்குத் தகனகிரியைகளை செய்துவிட்டு யாகசாலைக்குப் போய்த் தன் சகோதரனைப் பார்த்து, நான் மானென்று நினைத்துக்கொண்டு நமது பிதாவைக் கொன்றுவிட்டேன். ஆகையால் நீ ஒருவனாக இந்த யாகத்தை நிறைவேற்றி வைக்க முடியாது. ஆகையால் பிரமஹத்திதோஷ நிவாரணத்துக்காக நான் செய்யவேண்டிய விரதத்தை நீ செய். நான் ஒருவனாகவே யிந்த யாகத்தைச் செய்துமுடிப்பேன் என்றான். அப்படியானால் நீ யிந்த யாகத்தைச் செய். நான் புலனடக்கம் உடையவனாக உனக்காக விரதானுஷ்டானம் செய்கிறேன் என்றான்.

11—28. ரோமசர், யுதிஷ்டிர மஹாராஜனே! அர்வாவசு பின்பு யாகசாலைக்கு வந்தான். பராவசு தன் சகோதரனைப் பார்த்ததும் பின் வருகிறபடி சொன்னான். அரசனே! பிரமஹத்தி செய்த இவன் உன் யாகசாலைக்குள் வரக் கூடாது. அவனைப் பார்க்கவும் கூடாது. பிரமஹத்தி செய்தவனைப் பா பார்ப்பது கூட உன் யாகத்துக்கு இடையூறு செய்யும் என்றான். பிருகத்யும்ன ராஜன் இதைக் கேட்டவுடன், தன் சேவகர்களை நோக்கி அர்வாவசுவை வெளியில் தள்ளும்படி சொன்னான். சேவகர்கள் அர்வாவசுவை நோக்கி நீ பிராமணனைக் கொலை செய்தாய் உள்ளே வராதே என்று பலதரம் சொல்லி அவனை துரத்தினார்கள். அவன் நான் பிரமஹத்தி செய்யவில்லை. என் தமையன் தான் பிராமணனைக் கொலை செய்தான். அவனுக்காக நான் விரதானுஷ்டானம் பண்ணி அவனைப் பரிசுத்தனாக்கினேன். அதைக் கூடக் கவனியாமல் அவன் பேசுகிறான என்றான். அதைக் கவனியாமல் சேவகர்கள் அவனை அதட்டித் துரத்தி விட்டார்கள். பிறகு அர்வாவசு வனத்துக்குப் போய் விட்டான். அங்கே உக்கிரமான தவசு செய்தான். அவன் சூரியனிடத்தில் உதவி கேட்டான். சூரியன் மனித சொரூபமாகப் பிரத்தியட்சமாய் வந்தான். தேவர்கள் எல்லாரும் அர்வாவசுவின் நற்செய்கைக்காக அவனிடம் பிரியமாய் இந்த யாகத்துக்கு அவனைப் பிரதான குருவாக வைத்துக்கொண்டு பராவசுவை விலக்கினார்கள். அக்கினி முதலான தேவர்கள் அவனுக்கு வேண்டிய வரங்களை அளித்தார்கள். அர்வாவசு தன் பிதா மறுபடியும் உயிர் பெற்று வரவேண்டும் என்று வரம் கேட்டான். தன் சகோதரனும் பிதாவைக் கொன்ற தோஷத்தினின்றும் விடுபட வேண்டுமென்றுங் கேட்டுக் கொண்டான். பரத்துவாஜரும், அவர் புத்திரன் யவக்கிருதுவும் உயிர் பெற்று வர வேண்டும் யெ

ன்றும் வரங் கேட்டான். தேவர்கள் எல்லாரும் அப்படியே ஆகுக என்றார்கள் எல்லாரும் பிழைத் தெழுந்தார்கள். யுவாகிருது அக்கினி முதலிய தேவர்களை நோக்கித், தேவர்களே! நான் எல்லா வேதங்களையும் அறிந்திருக்கிறேன். நோன்புகளையும் செய்திருக்கிறேன். தவசியா யிருக்கிற என்னை ரைப்பியர் கொன்றது எப்படி? தேவர்களே! ரைப்பியர் அவ்விதமாகக் கொல்லக் கூடுமா என்றான். தேவர்கள், யுவாகிருதுவைப் பார்த்து ரிஷியே! நீ கஷ்டப் படாமல் வரத்தினாலே வேதங்களை எளிதில் உணர்ந்து கொண்டாய். ரைப்பியர் குரு மூலமாக நெடுங்காலம் கஷ்டப்பட்டு உணர்ந்து கொண்டார். அதனாலே தான் அவர் உன்னைக் கொன்றார் என்று கூறி இந்திரன் முதலிய தேவர்கள் சொர்க்க லோகம் போய் விட்டார்கள். யுதிஷ்டிரா! அந்த ரிஷியினுடைய ஆச்சிரமம் இதோ இருக்கிறது. மலர்களும் கனிகளும் நிறைந்த விருட்சங்களால் வெகு அலங்காரமாய் விளங்குகிறது. சகல பாபங்களையும் போக்கக் கூடியது என்று சொன்னார்.

---

## 139-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—17. ரோமசர், யுதிஷ்டிரமஹாராஜனே! உசீனரமலை, மைநாகபர்வதம், சுவேதமலை காலமலை இவைகளைக் கடந்து வந்துவிட்டோம். பாரதனே! இதோ உனக்கு எதிரில் ஸப்தகங்காநதி ஓடுகிறது. இந்த இடம் பரிசுத்தமும் புண்ணியமுமானது. இவ்விடத்தில் அக்கினிதேவன் எப்போதும் விளங்கிக் கொண்டிருக்கிறான். இந்த அதிசயங்களை ஒருவனும் பார்க்க முடியாது. நீ மனதை ஒருமைப்படுத்தி இந்தத் தீர்த்தங்களைக் கவனமாய்ப் பார். தர்மராஜாவே! நாம் இப்போது கோசல பர்வதத்தைக் கடந்து வந்துவிட்டோம். தேவர்கள் விளையாடுகிற இடத்தைப் பார். அவர்களுடைய காலடிச்சுவடு தோன்றுகின்றன. நாம் இப்போது சுவேதமலை மந்திரகிரி மலைகளின்மேல் ஏறுவோம். அவ்விடத்தில் மணிபத்திரன், யக்ஷன், குபேரன் முதலியவர்கள் வசிக்கிறார்கள். புருஷோத்தமனே! இவ்விடத்தில் எண்ணாயிரம் கந்தர்வர்களும், எண்ணாயிரம் கிம்புருஷர்களும், அவற்றுக்கு நாலுமடங்கான யட்சர்களும் ஆயுதபாணிகளாய்ச் சூழ யட்சராஜனான மணிபத்திரன் வசிக்கிறான். இவ்விடத்தில் அவர்களுக்குச் சக்தி அதிகம். அவர்களுடைய வேகம் வாயுவைப்போன்றிருக்கும் இவர்கள் இந்திரனைக் கூடப் பட்டத்தினின்று விலக்கத்தக்க வல்லமை யுடையவர்கள். அவர்கள் காக்கப்படுவதும் தவிர இராட்சதர்களும் காத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த மலைகளில் ஏறுவது முடியாத காரியம். ஆகையால் ஏக சித்தமாயிரு குந்திபுத்திரனே! இவ்விடத்தில் குபேரனுடைய மந்திரிகளும சித்தர்களும இருக்கிறார்கள். கொடிய இராட்சதர்கள் சூழ்ந்திருக்கிறார்கள். நாம் அவர்களைக் காண வேண்டும். ஆகை

யால் தைரியமா யிரு. கைலாசமலை ஆறு யோசனை உயர மிருக்கிறது. இவ்விடத்தில் முக்கியமாய் யட்சர், இராட்சதர், கின்னரர், நாகர், உரகர், கந்தர்வர்கள் வசிக்கிறார்கள். என்றாலும் பீமனுடைய பலத்தாலும் உன்னுடைய தவ வலிமையாலும் காக்கப்பட்டு இன்று இங்கே சுகமாயிரு. வருணன், எமன், கங்கை, யமுனை, பர்வதம், மருத்துகள், அசுவினிகள், நதிகள், ஏரிகள் இவர்கள் எல்லாரும் இன்று தினம் உன்னைப் பத்திரமாய்க் காப்பார்களாக. தேவர்கள் அசுரர்கள் வசுக்களிடத்தினின்றும் காக்கப்படுவாயாக கங்காதேவி! இந்திரனுக் குரிய இந்தச் சொர்ண மலையா லிருந்து நாங்கள் உன்னுடைய கர்ஜனையைக் கேட்கிறோம். மகிமை புள்ளவளே! அஜமீடன் வம்சத்தை விளக்குகிற இவனைக் காப்பாற்று. பர்வத புத்திரியே! இந்த அரசன் இந்த மலைப் பிரதேசத்தில் இன்று செல்ல வேண்டும். ஆகையால் நீ அவனைக் காப்பாற்று; சமுத்திர காமினியாகிய அந்த நதியைப் பிரார்த்தனை செய்த பின் ரோமசர் யுதிஷ்டிரனை ஜாக்கிரதையாய் இரு என்றார்.

18—20 ரோமசர் இப்படிக் கலக்க மடைந்ததைப் பார்த்து யுதிஷ்டிரர் ஆச்சரியம் அடைந்து நீங்கள் எல்லாரும் திரௌபதியைப் பத்திரமாய்க் காப்பாற்றுங்கள். அஜாக்கிரதையாய் இராதீர்கள். இந்த மலைமேல் ஏறுவதற்கு மிகவும் கஷ்டமானதென்று அவர் அறிவார். நீங்கள் எல்லாரும் மிகவும் பரிசுத்தர்களா யிருங்கள் என்று சொல்லிப் பின் பீமனைப் பார்த்துக் குழந்தாய்! திரௌபதியைப் பத்திரமாய்ப் பாதுகார். அர்ஜுனன் பக்கத்திலிருந்தாலும் இராவிட்டாலும் அச்சமுண்டான சமையத்தில் திரௌபதி உன்னையே நம்புகிறாள் என்றார். பின் இரட்டையர்களை நோக்கி, அவர்கள் கிட்டப் போய் அவர்களை உச்சி மோந்து, உடம்பைத் தடவிப் பயப்படாதீர்கள். ஜாக்கிரதையாய் நடவுங்கள் என்றார்.

---

## 140-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—7. யுதிஷ்டிரர் பீமனை நோக்கி விருகோதரா! இவ்விடத்தில் கண்ணால் பார்க்க முடியாதவர்களும், மஹா சக்தியுள்ளவர்களும் வசிக்கிறார்கள். எப்படி யிருந்தாலும் நம்முடைய தவபலத்தாலும், அக்கினிஹோத்திர பலத்தாலும் அவர்களைக் கடந்து போக வேண்டும் குந்திபுத்திரனே! உன் பசிதாகங்களை அடக்கிக் கொண்டும், உன் பலம் சக்தி முதலியவற்றை விடாமலிரு. குந்திகுமாரா! கைலாசமலையைப் பற்றி ரோமசமுனிவர் சொன்னது உனக்குத் தெரியுமே. அதை யோசிக்கையில் கிருஷ்ணை இவ்விடத்தில் எப்படி நடந்து வருவாள், கஷ்ட மாயிருக்கு மென்று தான் நினைக்கிறேன். நீயும் சகதேவனும் திரௌபதியையும் தௌமியரையும் மற்றுமுள்ள எல்லாரையும் அழைத்துக் கொண்டு திரும்பிப் போய் விடுகிறது நல்லது. நான் நகுலன் ரோமசர் மூவ

ரும் இந்த மலையிலிருந்து விரதங்களை நிறைவேற்றி வருவோம். நான் வரும் வரையில் கங்கோத்பத்தி ஸ்தானத்தில் திரௌபதியுடன் இரு. அவளைப் பத்திரமாய்க் காப்பாற்று என்றார்.

8—21. பீமசேனன் சொல்லுகிறான். பரதவம்சோத்தமரே! இராஜகுமாரத்தியாகிய இந்தத் திரௌபதி கஷ்டப்பட்டாலும் அர்ஜுனனைப் பார்க்க வேண்டு மென்கிற விருப்பங் கொண்டிருக்கிறவள். ஆகையால் எளிதாக நடந்து வருவாள். யுத்தத்தில் பின்வாங்காத வீரனை அர்ஜுனனைக் காணாமையால் நீரும் மிகவும் மயங்கி யிருக்கிறீர். நீர் சகதேவனைப் பாராவிட்டால் மனம் வருந்துவீர். என்னையும் திரௌபதியையும் பாராம லிருந்தாலும் துக்கப் படுவீர். பிராமணர்களும், தேர்க்காரர் முதலிய பரிஜனங்களும் திரும்பிப் போகட்டும். நான் இங்கே உம்மைத் தனியாக விட்டுப் போக மாட்டேன். கரடுமுரடாயும் ஏற முடியாததாயும் இராட்சதர்கள் வசிப்பதாயும் உள்ள இவ்விடத்தில் உம்மை விட்டுவிட்டுப் போகமாட்டேன். திரௌபதி பதிபக்தியுள்ளவள் ஆகையால் உம்மைப் பிரிந்திருக்கமாட்டாள். ஸகதேவனும் உம்மிடத்தில் பக்தி விசுவாச முடையவன். அவனுடைய சுபாவம் எனக்குத் தெரியும் ஆகையால் அவனும் உம்மை விட்டு ஒருபோதும் தனித்திருக்க மாட்டான். நாங்கள் எல்லாரும் அர்ஜுனனைப் பார்க்க வெகு ஆசையாயிருக்கிறோம். ஆகையால் நாங்களும் கூடவே வருகிறோம் கஷ்டமான இடங்களில் தேர்கள் நடக்கக் கூடாமல் இருந்தால் நாங்கள் காலால் நடந்து வருகிறோம். திரௌபதி எந்த இடத்தில் அல்லது எப்போது நடக்க முடியாதவளாயிருக்கிறாளோ அந்தச் சமையங்களில் அவளை நான் தூக்கிக்கொண்டு வருகிறேன். இப்படி முன்னமே தானே என் மனதில் தீர்மானம் பண்ணிக்கொண்டிருக்கிறேன். இதைக் குறித்து நீர் கவலைப்பட வேண்டாம். மாத்திரிக்கு மகிழ்ச்சிதரும் அன்புள்ள குமாரர்களான நகுல சகதேவர்களைக் கூட அவர்களுக்குக் கஷ்டமான இடங்களில் தூக்கிக்கொண்டு நடப்பேன் என்று சொன்னான். யுதிஷ்டிரர், பீமசேனா! நீ இப்படிச் சொல்லுகிறபடியால் உன் பலம் விருத்தியாகக் கடவது, பாஞ்சாலி நகுல சகதேவர் இம்மூவரையும் தூக்கிக்கொண்டு நடக்கிறதாகத் தைரியமாய்ச் சொல்லுகிறாய், இந்தத் தைரியம் வேறொருவருக்கும் உண்டாகாது. உன்னுடைய பலமும் கீர்த்தியும் தர்மமும் அபிவிருத்தியாகக் கடவது. இவ்வளவு தைரியமாகச் சொன்ன உனக்குக் களைப்பாவது தோல்வியாவது வாராமலிருக்கக்கடவது என்றார். அப்போது திரௌபதி புன்சிரிப்புடன் யுதிஷ்டிரரைப் பார்த்து பாரதரே! நான் நடந்து வருவேன், என்னைப் பற்றி நீர் கவலைப் பட வேண்டாமென்று சொன்னாள்.

22—28. லோமசர் யுதிஷ்டிரரை நோக்கிக் குந்திபுத்திரா! தவமுடையவன்தான் கந்தமாதன பர்வதத்தை அடையலாம். ஆகையால் நாம் எல்லாரும் தவம் செய்வோம் என்றார். குந்திபுத்திரனே! அரசனே! பிறகு நீ, நான் பீமன், நகுலன், சகதேவன் எல்லாரும் அர்ஜுனனைக் காண்போம் என்றார்.

பிறகு விசாலமாயும் மகிழ்ச்சிதரத் தக்கதாயுமிருக்கிற சுபாகனுடைய இராஜ்யத்தைச் சந்தோஷத்துடன் பார்த்தார்கள். அந்த இராஜ்யத்தில் யானைகளும் குதிரைகளும் நிறைந்திருந்தன. கிராதர்கள், தங்கணர்கள், புளிந்தர்கள் கூட்டம் கூட்டமாய் வாசம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். தேவர்கள் உலாவிக்கொண்டிருந்தார்கள். அநேக விநோதங்களிருந்தன. புளிந்த ராஜனை சுபாகன் அவர்களைப் பார்த்து எதிர்கொண்டு போய் மகிழ்ச்சியுடனும் மரியாதையுடனும் அழைத்துக்கொண்டு போனான். அவர்கள் அவ்விடத்தில் கொஞ்ச காலம் சுகமாய் வாசம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். சூரியன் தன் கிரணங்களை வீசிப் பூர்ணமாய்ப் பிரகாசித்தபோது இமயமலையை நோக்கிப் புறப்பட்டார்கள். தங்களுடைய தேர்கள், ஆபரணங்கள், வேலைக்காரர்கள், சமையற்காரர்கள் மற்றுமுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் புளிந்த ராஜனிடம் வைத்துவிட்டுக் குரு வம்சத்தில் பிறந்த அந்த வீரர்கள் பாத்திரம் புறப்பட்டார்கள். திரௌபதியுடன் கூட வெகு ஜாக்கிரதையுடன் நடந்தார்கள். அர்ஜுனனைக் காணவேண்டுமென்கிற விருப்பத்துடன் எல்லாரும் மகிழ்ச்சியுடன் போனார்கள்.

---

## 141-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—22. யுதிஷ்டிரர், பீமசேனா! திரௌபதி! நகுல சகதேவர்களே! கேளுங்கள். பிராணிகள் ஒன்றும் அழிவதில்லை. பாருங்கள் நாம் இப்போது வனசஞ்சாரிகளாக இருக்கிறோம். நாம் எல்லாரும் மெலிந்தும் களைத்தும் இருப்பதனால் கஷ்டமான இடங்களில் ஒருவரை யொருவர் பாதுகாக்க வேண்டியவர்களா யிருக்கிறோம். அசாத்தியமானதா யிருந்தாலும் அர்ஜுனனைக் காணும் விருப்பத்தால் நாம் போக வேண்டும். பஞ்சுக் குவியலை நெருப் பற்றி யெரிப்பது போல அர்ஜுனன் பிரிவு என்னை யெரிக்கிறது. வீரனாகிய அர்ஜுனனை யென் அருகில் காணாமலிருக்கிறேனே! அவனைக் காணும் ஆசையாலே தான் என் சகோதரர்களுடன் நான் காட்டில் வசிக்கிறேன். திரௌபதிக்குச் செய்த கொடுமையும் என்னை யெரிக்கிறது. பீமசேனா! நகுலனுக்கு அடுத்த மூத்தவனான தனஞ்செயனை யின்னம் நான் காணவில்லையே! அளவிடப்படாத சக்தியுள்ளவனும், ஒருவராலும் ஜயிக்கப்படாத வீரனும், பலமான காண்டீவமென்னும் வில்லைத் தரித்தவனுமான அர்ஜுனனைக் காணாமலிருக்கிற துக்கமே பீமா! என்னைத் தகிக்கின்றது. சத்தியமுடையவனான தனஞ்செயனைக் காண்பதற்காகவே உங்களுடன் கூட ஐந்து வருஷமளவும் காட்டில் அலைந்தும் தீர்த்தங்களைத் தரிசித்தும் வருகிறேன். இன்பமான வனங்களையும் மடுக்களையும் தரிசித்தேன். இன்னமும் அர்ஜுனனைக் காணாமலிருக்கிறேன். அதனால் நான் மிகவும் துக்கப்படுகிறேன். நீண்ட புஜங்களை

யும், கறுத்த நிறத்தையும், சுருண்ட மயிரினையும் சிங்கத்தைப் போன்ற தோற்றத்தையும் உடையவனான தனஞ்செயனை யின்னம் காணாமலிருக்கிறேனே அதனாலே நான் துக்கமுள்ளவனாக இருக்கிறேன். பீமசேனா! குருவம்சோத்தமனும், ஆயுதங்களில் தேர்ந்தவனும், யுத்தத்தில் சிறந்தவனும், வில்லாளிகளில் ஒப்பற்றவனுமான அர்ஜுனனைக் காணாமையால் நான் வருந்துகிறேன். பீமசேனா! பால்குனியில் பிறந்தவனும், சர்வசங்கார காலத்தில் தோன்றுகிற எமனைப் போலப் பகைவர் நடுவில் உலாவுகிறவனும், மதம் பொழிகிற யானையைப் போன்ற பலமுள்ளவனும், சிங்கத்தைப் போன்ற தோள்களை யுடையவனும், சாமர்த்தியத்தில் இந்திரனுக்குத் தாழ்ந்தவனும், இரட்டையர்களுக்கு மூத்தவனும், வெள்ளைக் குதிரைகளை வாகனமாக உடையவனும், அளவில்லாத ஆற்றலுடையவனும்,ஒருவராலும் ஜயிக்கப்படாதவனும், வலிய வில்லை யுடையவனுமானஅர்ஜுனனைக் காணாமையால் நான் துர்ப்பாக்கிய முடையவனே ஈனரான பகைவர் நிந்தித்தபோதிலும் அதைப் பொறுக்கும் குணமுடையவன். நீதிமான்களைக் காப்பாற்றும் இயல்பு உள்ளவன் வஞ்சகமுள்ளவன் தனக்குத் துன்பஞ் செய்ய நினைத்தால், அவன் வச்சிராயுதத்தை யுடையஇந்திரனானாலும் கொடு விஷமுள்ள சர்ப்பத்தைப் போன்று அழிப்பவன், மகாத்மாவும் மஹாபலபராக்கிரமசாலியான அவன் அடிபட்டு வீழ்ந்த சத்துருவினிடத்திலும் இரக்கம் வைத்துக் காப்பாற்றும் குணமுள்ளவன், அவனே நம் எல்லாருக்கும் ஆதரவானவன். யுத்தத்தில் எதிர்த்த பகைவரை நாசம் பண்ணுகிறவன். சகல சம்பத்துக்களையும் சேகரித்து நம் எல்லாரையும் சுகமாயிருக்கச் செய்கிறவன். அவனுடைய சாமர்த்தியத்தினாலேயே முன்காலத்தில் சிறந்த இரத்தினாபரணங்களை யுடையவனாயிருந்தேன். சுயோதனன் இப்போது அவைகளை அனுபவிக்கிறான். வீரனே! பாண்டுகுமாரனே! அவனுடைய சாமர்த்தியத்தாலேயே சகலமான இரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், மூவுலகங்களிலும் கீர்த்தி பெற்றதுமான சபாமண்டபத்தை நான் அடைந்தேன் அவன் சக்தியில் வாசுதேவனுக்குச் சமானமானவன், கார்த்த வீரியனைப்போல யுத்தத்தில் ஜயிக்கப்படாதவன், ஒப்பற்றவன், அந்தப் பல்குனனை நான் இன்னம் பாராமலிருக்கிறேன். சத்துரு பயங்கரனான அர்ஜுனன் பலதேவரையும் கிருஷ்ணனையும் போல ஜயிக்கப்படாதவன். சக்தியிலும் ஆயுதத்திலும் பலத்திலும் இந்திரனுக்குச் சமானமானவன். வேகத்தில் வாயுவைப் போன்றவன். அழகில் சந்திரனைப் போன்றவன். கோபத்தில் எமனைப் போன்றவன். மஹாபாகுவான பீமா! அந்த வீரனைக் காண்பதற்காகவே நாம் எல்லாரும் கந்தமாதன பர்வதம் போகிறோம்.

23—28. அவ்விடத்தில் நரநாராயணர்களுடைய ஆச்சிரமம் இருக்கின்றது. பெருமையுள்ள பதரி (இலந்தை) விருட்சம் இருக்கிறது. அங்கே யட்சர்கள் வசிக்கிறார்கள். மகிமையுள்ள அந்த மலையை நாம் பார்ப்போம். சிறந்த தவத்தைச் செய்து, இராட்சதர்களால் காக்கப்படுகிற இன்பமான மலையை

நோக்கிச் செல்வோம். விருகோதரா! அங்கே வாகனங்கள் போக முடியாது. கொடியவனும், பொறாமையுள்ளவனும், துர்க்குணமுள்ளவனும் அங்கே போக முடியாது. பீமா! நாம் அர்ஜுனனைக் காண்பதற்காகக் கத்தியையும் வில்லையும் தரித்துக்கொண்டு போவோம். உறுதியான நோன்பினை யுடைய பிராமணர்களுடன் சேர்ந்து போவோம். அவ்விடத்தில் பாபிகள் சென்றால் ஈக்களும், குருட்டு ஈக்களும், கொசுக்களும், புலிகளும் சிங்கங்களும், பல வகைப் பூச்சிகளும் அவர்களை இம்சிக்கும். புண்ணிய சாலிகளிடம் வருவதில்லை. ஆகையால் மிதாகாரமும் ஆசை யடக்கமும் உடையவர்களாய், அர்ஜுனனைக் காண்பதற்காகக் கந்தமாதனத்துக்குப் போவோம் என்றார்.

---

## 142-வது அத்தியாயம்.

### தீர்த்த யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—10. ரோமசர், யுதிஷ்டிரா! நீ பல மலைகளையும், ஆறுகளையும், நகரங்களையும், வனங்களையும், இன்பமான தீர்த்தங்களையும் தரிசித்தாய். இந்த வழி தான் தெய்வத் தன்மையுள்ள மந்தர மலைக்குப் போகிற மார்க்கம். ஆகையால் ஜாக்கிரதையாயும் கவலை யில்லாமலு மிரு. புண்ணிய கர்மங்களைச் செய்கிற தேவரிஷிகள் வசிக்கிற இடத்துக்கு இப்போது நீ போக வேண்டும். இவ்விடத்தில் அளகாநந்தம் என்கிற பரிசுத்த நதி ஓடுகிறது. அது பதரிவிருட்சத்தி லிருந்து உற்பத்தியாகிறது தேவரிஷிகளால் சேவிக்கப்படுவது. வியாசராலும் வாலகில்யராலும், கந்தர்வர்களாலும் எப்போதும் வணங்கப்படுவது. மரீசி, புலகர், பிருகு, அங்கிரசர் முதலானவர்கள் இவ்விடத்தில் ஸாமகானம் செய்துகொண்டிருப்பார்கள். தேவர்களுக்கு அரசனான இந்திரன் மருத்துக்களுடன் கூடி யிவ்விடத்தில் நித்தியம் ஜபம் பண்ணுவான். அசுவினிகளும், சித்தர்களும் அவனைச் சூழ்ந்திருப்பார்கள். சந்திரன், சூரியன், கிரகங்கள் முதலிய எல்லா வான ஜோதிகளும் இரவும் பகலும் இந்த நதிக்கு வருவார்கள். பரமேசுவரரானவர் கங்கோத்பத்தியிலிருந்து, இந்த நதியின் நீரை எல்லாம் தமது சிரசால் தாங்கிவிடுகிறார். குழந்தாய்! இப்போது ஷட்குணங்களையுடைய பரதேவதையின் (ஆகாயகங்கை) சந்நிதிக்கு வந்து விட்டோம். ஏக சித்தமுடையவனாய் அவள் சந்நிதியில் வணங்கு என்றார்.

11—24. மஹாத்மாவான ரோமசமுனிவர் சொன்னதைக் கேட்ட பாண்டவர்கள் ஆகாயத்திலிருந்து இறங்கிவருகிற கங்கையைப் பக்தி விநயத்துடன் வணங்கினார்கள். அதன்பின் பாண்டவர்கள் முனிவருடன் கூட நடந்து போனார்கள். கொஞ்சதூரத்தில் மஹாமேரு மலையைப் போல வெண்மையாக ஒன்று தோன்றுவதை அவர்கள் பார்த்து முனிவரைக் கேட்கத் தொடங்கினார்கள், பாண்டவர்கள் அதைப் பற்றிக் கேட்க வெகு பிரியமாயிருக்கிற

யை ரோமசர் பார்த்து, ஓ பாண்டு புத்திரர்களே! கேளுங்கள். உங்களுக்கு எதிரில் உள்ளதும், மலை போல இருக்கிறதும், கைலாச மலையைப் போல அழகாயிருப்பதுமான அது நரகாசுரன் என்ற ஒரு தைத்தியனுடைய எலும்பு. பூர்வ காலத்தில் இந்த அசுரன் விஷ்ணுவினால் கொல்லப்பட்டான். தேவேந்திரனுக்கு நன்மை செய்வதற்காகக் கொன்றார். அவன் இந்திரனுடைய அரசாட்சியைத் தான் அடைவதற்காகப் பதினாயிர வருஷம் உக்கிரமான தவசு செய்தான். அந்தத் தவசினாலே ஒப்பற்ற பலமுடையவனாய் இந்திரனுக்கு அடிக்கடி இடைஞ்சல் செய்தான். அதனால் இந்திரன் கலக்கமடைந்தான். அந்த அசுரனுடைய பலத்தையும், தபசையும், விரதானுஷ்டானத்தையும் கேட்டு இந்திரன் பயந்தான். இந்திரன் விஷ்ணுவைத் தியானித்தான். எங்கும் நிறைந்த விஷ்ணுமூர்த்தி அவனுக்குப் பிரத்தியட்சமானார். ரிஷிகளும் தேவர்களும் விஷ்ணுவைத் துதித்தார்கள். அவருடைய சந்நிதியில் அக்கினிதேவனும் தன் ஒளி மழுங்கி நின்றான். வஜ்ராயுதத்தையுடைய இந்திரன் விஷ்ணுவுக்கு எதிரில் கைகளைக் கூப்பித் தலை குனிந்து நின்று கொண்டு தனக்குண்டான பயத்தைச் சொன்னான்.

25—34. விஷ்ணுமூர்த்தி, இந்திரா! நரகாசுரனால் உனக்குப் பயமுண்டாயிருப்பது எனக்குத் தெரியும். அவன் தன்னுடைய தவசின் பலத்தால் இந்திரனுடைய இராஜ்யத்தைக் கவர்ந்துகொள்ள விரும்புகிறான். தேவராஜனே! அவன் தவவலியுடையவனாயிருந்தாலும் உனக்கு நன்மை யுண்டாவதற்காக அவனைச் சங்கரிப்பேன். ஒரு க்ஷணம் பொறு என்றார். அதன்பின் விஷ்ணு மூர்த்தி தமது கையால் நரகனை அடித்து அவன் புத்தியைக் கலங்கச் செய்தார். நரகாசுரன் பிணமாய் மலை போலப் பூமியில் விழுந்தான். இப்படி அவன் ஆச்சரியமாகக் கொல்லப்பட்ட பின் அவனுடைய எலும்புகளைத் திரட்டி இந்த இடத்தில் வைத்தார்கள். மஹாவிஷ்ணுவினால் மற்றொரு அற்புதமும் செய்யப்பட்டது. ஒரு காலத்தில் பூமியானது முழுகிப்போய்விட்டது. அப்போது விஷ்ணு மூர்த்தி வராக சொரூபம் தரித்துப் பூமியை மேலே தூக்கி நிலைநிறுத்தினார் என்றார். யுதிஷ்டிரர், முனிவரை நோக்கி மஹானுபாவரே! விஷ்ணுமூர்த்தி நூறு யோசனை தூரம் கீழே அழுந்திப்போன பூமியை எப்படி மேலே யெடுத்தார். அதை விவரமாகச் சொல்ல வேண்டுகிறேன். சகல பொருள்களுக்கும், சகல ஜீவன்களுக்கும் ஆதாரமாயிருந்த பூமி எவ்வாறு நிலை நிறுத்தப்பட்டது? நூறுயோசனை தூரம் யாரால் உழுத்தப்பட்டது. எந்தக் காரணத்துக்காக விஷ்ணுமூர்த்தி இந்த வீரச் செய்கையைச் செய்தார்! இதை விரிவாகக் கேட்க விரும்புகிறேன். எல்லாம் தெரிந்த நீர் எனக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்டார்.

35—53. ரோமசர் யுதிஷ்டிரா! நீ கேட்ட கதையைச் சொல்கிறேன் கேள். குழந்தாய்! முன் கிரேதா யுகத்தில் ஒரு பயங்கரமான காலம் உண்டாயிற்று. அப்போது மூலகாரணரான கடவுள் எமனுடைய தொழிலைத் தாமே

செய்தார். தேவதேவனாகிய கடவுள் எமனுடைய தொழிலைச் செய்தபோது ஒருவருக்கும் மரணமே கிடையாது. பிறப்பு மாத்திரம் ஏராளமாயிருந்தது. பக்ஷிகளும், மிருகங்களும் பசுக்களும், ஆடுகளும், மானகளும் பெருகின! மனிதர்களும் ஆயிரம் பதினாயிரமாக ஜலத்தைப் போலப் பெருகினார்கள். இப்படிப் பிராணிகள் பெருகினபடியால் ஆயிரம் யோசனை அழுந்திப்போயிற்று. இந்தப் பாரத்தினால் சரீரம் வருந்தி, அறிவை யிழந்து பூமிதேவி நாராயணர்களுடைய உதவியை நாடினாள். தேவனே! உமது கருணையால் நான் இதுவரைக்கும் பெரும் பாரத்தைத் தாங்கிக்கொண்டிருந்தேன். இப்பொழுது என் சக்திக்கு மேலான பாரம் சுமந்துபோனபடியால் என்னால் தாங்க முடியாது; தேவனே இந்தப் பாரத்தை ஒழியும். உமது ஆதரவை நான் தேடுகிறேன். என் மேல் கருணை வையும் என்றாள். ஆறு குணங்களையுடைய நாராயணர் மனமகிழ்ச்சியுடன் அவளை நோக்கிப், பூமாதேவியே! சகல ஐசுவரியங்களையும் உடையவளே! நீ பயப்படாதே. உன் பாரம் ஒழியும்படியான உபாயத்தை நான் செய்கிறேன் என்றார். பருவதங்களைக் காதணியாகக் கொண்ட பூமாதேவிக்கு இவ்வாறு சொல்லி அனுப்பிவிட்டு, ஒரு கொம்பை யுடைய பெரிய பன்றி வடிவம் கொண்டார். தமது சிவந்த கண்களால் அச்சத்தை உண்டாக்கிக்கொண்டும், ஒளியால் புகையை வீசிக்கொண்டும், பெரிய உருவமாகப் பெருக்கத் தொடங்கினார். பிறகு தம்முடைய ஒரு கொம்பினால் பூமியை நூறு யோசனை மேலே தூக்கினார். அப்போது தேவர்களும், ரிஷிகளும், தவசிகளும் நடுங்கினார்கள். பூமி அந்தரம் சொர்க்கம் மூன்றிடங்களிலும் சமாதானமே யில்லை. எல்லாரும் கலங்கினார்கள். ஆ! ஆ! என்ற கூச்சல் உண்டாயிற்று. தேவர்களும் ரிஷிகளும் சேர்ந்து தமது சொந்தத் தேஜசால் பிரகாசித்துக்கொண்டிருக்கிற பிரம்மாவிடம் போனார்கள். அவருக்கு எதிரில் அஞ்சலியஸ்தராய் நின்றுகொண்டு, தேவனே! எல்லாப் பிராணிகளும் நடுங்குகின்றன. சரம் அசரம் என்கிற இரு பொருள்களுக்கும் ஆறுதலில்லை. சமுத்திரம் கூடக் கலங்குகிறது. இந்தப் பூமி நூறு யோசனை கீழே போய் விட்டது. இவைகளுக்குக் காரணம் என்ன? எவராலே யிந்த நடுக்கம் உண்டாயிற்று? நாங்களும் மயங்குகிறோம். ஆகையால் தாமதியாமல் சொல்லும் என்றார்கள்.

54— . பிரமதேவர் சொல்கிறார். தேவர்களே! அசுரர்களாலே யாதொரு பயமும் எவ்விடத்திலும் உண்டாகவில்லை. அந்தக் காரணத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். சர்வ வியாபகரும், நித்தியரும், அழிவற்றவருமான தேவனாலேயே யிந்த நடுக்கம் உண்டாயிற்று. அந்த விஷ்ணுபகவான் அழுந்திப்போயிருந்த பூமியைத் தூக்கினார். அப்படிப் பூமியைத் தூக்கினதினாலே யிந்த நடுக்கம் உண்டாயிற்று. இது தான் காரணம். உங்கள் சந்தேகத்தை ஒழியுங்கள் என்றார். தேவர்கள் மகிழ்ந்து தேவனே! பூமியை இவ்வளவு இலேசாக எடுத்த அந்தக் கடவுள் எங்கே யிருக்கிறார். அந்த இடத்தைச் சொல்லும். நாங்கள் அங்கே போய்ப் பார்க்கிறோம் என்றார்கள். பிரமதேவர், நீங்கள் போய் நந்தனத்தில் அவரைப் பாருங்கள். அதோ மகிமையுள்ள

கருடன் இருக்கிறான். அவர் பூமியை எடுத்தபின் வராக ரூபமாயிருக்கிற அவர் பிரளயகால அக்கினியைப் போலப் பிரகாசிப்பார். அவர் மார்பில் ஸ்ரீவத்ஸமணி பிரகாசித்துக்கொண்டிருக்கும். அதனால் அடையாளம் தெரிந்து கொள்ளுங்கள் என்று கூறிப், பிரமதேவர் அவர்களுடன் கூடப் போனார். அவர்கள் எல்லாரும் பூமியை எடுத்த வராக மூர்த்தியைத் தரிசித்துப் புகழ்ந்து தங்களுடைய இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள் என்றார். பாண்டவர்கள் இந்தக் கதைகளைக் கேட்டு மகிழ்ந்து, ரோமசர் காட்டின மார்க்கமாய் நடந்து சென்றார்கள்.

---

## 143-வது அத்தியாயம்

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—6. வைசம்பாயனர் ஜனமேஜயனை நோக்கி, அரசனே! வில்வீரர்களும், அளவில்லாத ஆற்றலுடையவர்களுமான பாண்டவர்கள் தூணிகளையும் பாணங்களையும் தரித்துக்கொண்டு, கததிகளையும் நாணேற்றின வில்லையும் எடுத்துக்கொண்டு, விரல் உறை பூண்டு திரௌபதியோடும் மற்றப் பிராமணர்களோடும் கந்தமாதனத்தை நோக்கிச் சென்றார்கள். போகும்போது மலைச் சிகரங்களில் விசாலமான நிழலைக் கொடுத்துக் கொண்டு நிற்கிற விருட்சங்களையும், அநேக மலைகளையும், ஆறுகளையும், மடுக்களையும் பார்த்துக்கொண்டே போனார்கள். எல்லாப் பருவங்களிலும் காய்த்தும் பூத்து மிருக்கிற மரங்கள் நிறைந்த இடங்களையும், தேவரிஷிகள் வசிக்கிற இடங்களையும் பார்த்துக் கொண்டு போனார்கள், தங்களுடைய ஆத்மாவை ஆத்மாவுக்குள் அடக்கிக் கனிகளையும் கிழங்குகளையும் புசித்துக்கொண்டிருக்கிற ரிஷிகளின் ஆச்சிரமங்களைத் தரிசித்துக்கொண்டு போனார்கள். கரடுமுரடாயும், பாறைகளாயும், கஷ்டமாயும இடங்களிலெல்லாம் பல வகையான பிராணிகளைப் பார்த்துக் கொண்டு போனார்கள். அதன் பிறகு மஹாத்மாக்களான அந்த வீரர்கள் ரிஷிகள் வாசம்பண்ணுகிறதும் சித்தர்களும், தேவர்களும், கின்னரர்களும், வசிக்கிறதும், கந்தர்வர்களுக்கும் அப்ஸரஸ்களுக்கும் பிரியமானதுமாகிய மலையை அடைந்தார்கள்.

7—23. வைசம்பாயனர், ஜனமேஜய மஹாராஜனே! பாண்டவர்கள் கந்தமாதன பர்வதத்தில் சென்ற வுடனே பெரிய காற்றும் மழையும் கலந்து அடித்தது. தூளிபடலங்களும், சருகுகளும் கிளம்பிப் பூமியையும் ஆகாயத்தையும் மறைத்து விட்டன. ஆகாயம் தூசியால் மறைந்தது. ஒன்றும் தெரியவில்லை தங்கள் கருத்தை ஒருவர்க்கொருவர் வார்த்தையால் தெரிவித்துக் கொள்ளவும் முடியாமல் போயிற்று. இருளால் கண்கள் மறைந்தன. காற்று கல் பொடிகளை வீசிற்று. அதனால் ஒருவரை ஒருவர் பார்க்கவும் முடியாமல் போயிற்று. மரங்களிலிருந்து பெரிய சப்தமுண்டாயிற்று. மரங்கள் காற்றி

ளால் முறிந்தன. அநேக மரங்கள் வேர்பறியுண்டு விழுந்தன. காற்றினால் எல்லாரும் மனங்கலங்கித் தங்கள் மனதுக்குள்ளே வானம் இறங்கி வருகின்றதோ, பூமியும் மலையும் பிளக்கின்றனவோ? என்று எண்ணினார்கள். காற்றினால் தள்ளப்பட்டார்கள். மனந் திகைத்தார்கள். கைகளினால் வழியைத் தட்டிக்கொண்டு நடந்தார்கள். பக்கங்களிலுள்ள மரங்களின் கீழே ஒதுங்கி நின்றார்கள். எறும்பு புற்றுக்களையும் பள்ளங்களையும் ஆதாரமாகப் போய் அடைந்தார்கள். பீமன் திரௌபதியையும், வில்லையும் கையினால் பிடித்துக்கொண்டு ஒரு மரத்தின் கீழ் ஒதுங்கினான். தர்ம ராஜாவும் தௌமியரும் அடர்ந்திருக்கிற காட்டில் ஒதுங்கினார்கள். சகதேவன் ஹோமாக்னியை எடுத்துக்கொண்டு ஒரு பாறையின் கீழே போய் நின்றான். ரோமசர் நகுலன் மற்ற பிராமணர்கள் எல்லாரும் ஒவ்வொரு மரத்தின் கீழ் ஒதுங்கி மனங்கலங்கி நின்றார்கள். காற்று தணிந்தது; புழுதியும் குறைந்தது. பின் பெரு மழை பொழிந்தது. மலையின் மேல் மழை பொழிவதனால் ஒரு பெரும் சத்த முண்டாயிற்று. அது இடி ஒலிபோலிருந்தது. இடைவிடாமல் மேகத்தில் மின்னல் உண்டாயிற்று. காற்றின் உதவியால் நாலா பக்கங்களிலும் ஓயாமல் மழை பொழிந்தது. ஜலம் ஓடுவதனாலே நுரையும் மண்ணும் எவ்விடத்திலும் நிரம்பி யிருந்தன. பிரவாகமான ஜலம் நுரையுடன் கூடி மரங்களின் வேரைப் பறித்துக்கொண்டு ஓடிற்று. சத்தம் அடங்கினதும் காற்றும் ஓய்ந்தது தண்ணீர் வற்றிற்று. பின் சூரியன் பிரகாசித்தது. எல்லாரும் ஜாக்கிரதையாக வெளியில் வந்து ஒன்றாய்க் கூடினார்கள். அவர்கள் எல்லாரும் கந்தமாதனத்தை நோக்கிப் போனார்கள்.

---

## 144-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—9. அவர்கள் இரண்டு யோசனை தூரம் போனதும் திரௌபதி நடக்க முடியாமல் கீழே உட்கார்ந்து கொண்டாள். அவள் புசலாலும் மழையாலும் தளர்ந்து மெலிந்து களைத்தாள். நடக்கவும் நிற்கவும் முடியாமல் நடுங்கித் துடையைப் பிடித்துக்கொண்டு நின்றாள். பின் காற்றினால் தள்ளப்பட்ட வாழை மரத்தைப் போலப் பூமியில் விழுந்தாள். முறிந்த கொடியைப் போல அவள் கீழே விழுகிறதை நகுலன் பார்த்து ஓடிப் போய்த் தாங்கிக்கொண்டான். தர்ம ராஜாவைப் பார்த்து அரசனே! பாஞ்சால புத்திரி களைப்பினால் நடக்க மாட்டாமல் விழுந்து விட்டாள் என்று சொன்னான். துன்பப்படத் தகாத இந்தப் பாஞ்சாலி மிகவும் கஷ்டப்படுகிறாள். ஆகையால் அவளைத் தேற்றும் என்றான். இதைக் கேட்ட வுடனே அரசனும், பீமனும், சகதேவனும் மனம் வருந்தி அவளிடம் ஓடி வந்தார்கள். அவளுடைய முக ஒளி குறைந்திருப்பதையும் தேகம் வாடி யிருப்பதையும் பார்த்து அவளைத் தூக்கித் தமது மடியில் வைத்துக்கொண்டு தர்மராஜா புலம்பினார்.

10—12. சுக வாழ்விலிருந்தவளும், அந்தப்புரத்தில் அழகான படுக்கையில் படுத்து நித்திரை செய்தவளுமான இந்த அழகான திரௌபதி தரையில் எப்படிப் படுப்பாள். இவளுடைய மெல்லிய அழகான கைகளும், தாமரை மலர் போன்ற பாதங்களும் என் நிமித்தமாகக் கறுத்து வாடியிருக்கின்றன. சூதாட்டத்தில் பிரியம் வைத்து நான் மூடனானேன். நான் இவளுடன் மிருகங்கள் வாழும் வனத்தில் சஞ்சரிக்கிறேன். விசாலமான கண்களையுடைய இவளை இவளுடைய பிதா எனக்குக் கொடுத்தார். பாண்டவர்களைக் கணவராக அடைவதனால் இவள் சுகமாக வாழ்ந்திருப்பாள் என்று அவர் எண்ணியிருந்தார். என்னுடைய மூடத்தனமான செய்கையால் இப்பொழுது பூமியில் குப்புறவிழுந்து கிடக்கிறாள். துக்கத்தாலும், கஷ்டத்தாலும், நடையாலும் மெலிந்து வருந்துகிறாள். அவளுடைய எண்ணம் நிறைவேறவில்லை. தர்மராஜா இப்படிப் புலம்புகிறபோது தௌமியர் முதலிய பிராமணர்கள் அங்கே வந்தார்கள் அவர்கள் அரசனுக்குத் தேறுதல் சொன்னார்கள். அவரை ஆசீர்வதித்தார்கள். இராட்சதர்களை அழிக்கத் தக்க மந்திரங்களை உச்சரித்தார்கள். சில சடங்குகளையும் செய்தார்கள். அந்த மந்திர பலத்தாலும் பாண்டவர்கள் குளிர்ந்த கைகளால் தொடுவதாலும், நீரோடு கலந்த குளிர்ந்த காற்று வீசுவதினாலும் பாஞ்சாலி களை தெளிந்து அறிவு பெற்று மெதுவாக எழுந்திருந்தாள். ஒரு மான் தோலை விரித்து அதன் மேல் அவளை உட்கார வைத்துச் சற்று நேரம் சிரமபரிகாரம் செய்வித்தார்கள். நகுல சகதேவர்கள் அவளுடைய பாதங்களைக் கைகளால் மெதுவாகப் பிடித்தார்கள். தர்மராஜா அவளுக்கு ஆறுதல் கூறிப் பின் பீமனைப் பார்த்து, பீமா! நமக்கு முன்னால் பனி நிறைந்ததும் காடுகளுள்ளதுமான மலைகள் பல இருக்கின்றன. அவ்விடங்களில் திரௌபதி எப்படி நடப்பாள்? என்றார்.

23—28. பீமன்! அரசனே! நான் இவளையும், இரட்டையர்களையும், உம்மையும் தூக்கிக் கொண்டு நடப்பேன். நீர் மனதில் கவலைப்படவேண்டாம் என்றான். பாபமற்றவரே! உமது கட்டளையால் என்னைப் போலப் பலமுள்ளவனும், ஆகாயத்தில் பறக்கக் கூடியவனுமான கடோத்கஜன் நம் எல்லாரையும் தூக்கிக்கொண்டு போவான் என்று சொன்னான். தர்மராஜாவின் கட்டளையால் பீமன் கடோத்கஜனை நினைத்தான். நினைத்த உடனே கடோத்கஜன் அவர்களுக்கு எதிரில் வந்து நின்றான். அவன் பாண்டவர்களையும் பிராமணர்களையும் வணங்கி அஞ்சலியஸ்தனாக எதிரில் நின்று கொண்டிருந்தான். அவர்கள் எல்லாரும் அவனுக்கு உபசாரம் சொன்னார்கள். பிறகு கடோத்கஜன் பீமனைப் பார்த்து நீர் என்னை நினைத்தவுடனே உமது பணிவிடைகளைச் செய்வதற்காக விரைந்து வந்தேன். மஹா பாகுவான வீரரே! எனக்குக் கட்டளை யிடுங்கள். அது எதுவாயிருந்தாலும் தடையில்லாமல் செய்து முடிப்பேன் என்றான் அதைக் கேட்டதும் பீமன் அவனைத் தழுவிக் கொண்டான்.

———

## 145-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. யுதிஷ்டிரர், பீமசேனு! உன்னுடைய புத்திரனும், நம்மிடத்தில் எப்போதும் பக்தியுள்ளவனும், உண்மையைப் பேசுகிறவனுமான இவன் தன்னுடைய மாதாவாகிய திரௌபதியைத் தூக்கிக்கொண்டு நடக்கட்டும் என்றார். வீரனே! உன்னுடைய புஜபலத்தினாலேதான் நான் கந்தமாதனம் போகவேண்டும் என்றார். பீமன் கடோத்கஜனை நோக்கி ஹிடிம்பி குமாரனே! குழந்தாய்! ஆகாயத்தில் சஞ்சரிக்கத் தக்கவனே! நீ உன் இஷ்டம்போல எவ்விடத்திலும் சஞ்சரிக்க வல்லவனுயிருக்கிறாய் உன் மாதா களைப்பால் வருந்துகிறாள், ஆகையால் அவளைத் தூக்கிக்கொண்டு நட. அதிக உயரமாகப் போகவேண்டாம். அவள் பயப்படாதபடி எங்கள் தலைக்குச் சமீபமாகவே நட, உனக்கு மங்களம் உண்டாகும் என்றான். கடோத்கஜன், நான் ஒருவனே உங்கள் எல்லாரையும் தூக்கிக்கொண்டு போகச் சக்தியுள்ளவன். எனக்கு ஒத்தாசைக்காகப் பலர் இருக்கும்போது எல்லாரையும் கொண்டு போவது அதிசயமா! என்றான். ஆகாயத்தில் பறந்து செல்லத் தக்க அநேக இராட்சதர்கள் இருக்கிறார்கள். இஷ்டமான ரூபத்தை அடைய வல்லவர்கள். அவர்கள் உங்களையும் மற்றப் பிராமணர்களையும் தூக்கிக்கொண்டு போவார்கள் என்று சொல்லிக் கடோத்கஜன் திரௌபதியைத் தூக்கிக்கொண்டு பாண்டவர்களுக்கு நடுவில் சென்றான். மற்ற இராட்சதர்கள் பாண்டவர்களைத் தூக்கிக்கொண்டு போனார்கள். லோமசர்தம்முடைய தவவலிமையால் ஆகாயத்தில் இரண்டாவது சூரியனைப் போலச் சென்றார். கடோத்கஜன் கட்டளையால் மற்ற அரக்கர்கள் பிராமணர்கள் எல்லாரையும் தங்கள் தோளின் மேலேற்றிக்கொண்டு ஆகாயத்தில் சென்றார்கள். அநேக வனங்களைப் பார்த்துக்கொண்டு பதரி விருட்சத்தை நோக்கிச் சென்றார்கள்.

12—26. அநேக யோஜனை தூரத்தைச் சற்று நேரத்துக்குள் கடந்து போகக் கூடிய வேகமுள்ள இராட்சத வீரர்கள் தூக்கிக்கொண்டு பறக்கிறபடியால் நெடுந் தூரத்தை வெகு சுலபமாகக் கடந்து போனார்கள். மிலேச்சர்கள் வசிக்கிறதும், இரத்தினச் சுரங்கங்களை யுடையதுமான பிரதேசங்களையும், பல வகை உலோகங்கள் நிறைந்த குன்றுகளையும் கண்டார்கள். இரு பக்கங்களிலும் கின்னரர்களும், கிம்புருஷர்களும், கந்தர்வர்களும் நிறைந்திருப்பதும் குரங்குகள் விளையாடிக்கொண்டு இருப்பதும், மயில்கள், சமர மிருகங்கள் பல வகையான மான்கள், கரடிகள், கவயமிருகங்கள், எருமைகள், மகிழ்ச்சி தரத்தக்க சிற்றாறுகள், பல வகையான பறவைகள், பல வகையான மிருகங்கள், அழகான யானைகள் முதலியவைகளையும் பார்த்தார்கள். அநேக தேசங்களையும், உத்தர குருவில் பல நாடுகளையும் பார்த்துக்கொண்டு போனார்கள். பிறகு அற்புதமான காட்சியுள்ள கைலாச மலையைப் பார்த்தார்கள். பிறகு நாராயண

களுடைய ஆச்சிரமத்தைத் தரிசித்தார்கள். பிறகு பெரிய அடியை யுடைய பதரி விருட்சத்தைத் தரிசித்தார்கள். அவ்விடம் மிகவும் குளிர்ந்திருந்தது; நிழல் நிறைந்திருந்தது; மிக அழகாயும் அடர்ந்து மிருந்தது; மெதுவாயும் பசுமையாயுமுள்ள இலைகள் அடர்ந்திருந்தது. மங்களகரமாயும் சுகமுள்ளதாயுமிருந்தது. நீண்டு பருத்த கிளைகளையும், இணையற்ற செழிப்பையும், மிக உயர்ச்சியையும், பரிசுத்தமான ருசியுள்ள கனிகளையும் உடையதா யிருந்தது. எவ்விடத்திலும் தேன் சொட்டிக்கொண்டிருந்தது. ரிஷிகள் அங்கே வசித்துக்கொண்டிருந்தார்கள். மதர்த்த பறவைகள் தங்கி யிருந்தன. ஈக்களும், கொசுகுகளும், எறும்புகளும் இல்லாத அந்த இடத்தில் வளர்ந்திருந்தது. அந்த இடத்தில் கனிகளும், கிழங்குகளும், தண்ணீரும் நிறைந்திருந்தது. பசிய புல் பரந்து செறிந்து இருந்தது. அங்கே தேவர்களும் கந்தர்வர்களும் வசித்தார்கள். மங்களமாயும், சுகமாயும் சமனுயும் உள்ள இடத்தில் அந்த மரம் வளர்ந்திருந்தது. முள் இல்லாமலும், அழகாயும், குளிர்ந்தும், தொடுவதற்கு இன்பமுள்ளதாயு மிருந்தது. பாண்டவர்கள் பிராமணர்களுடன் அவ்விடத்துக்குப் போய் அரக்கர் தோள்களிலிருந்து மெல்ல இறங்கினர்கள். மஹாத்மாக்களான அவர்கள் பிராமணர்களுடன் அங்கே தங்கினர்கள்.

27—35. அந்த பரிசுத்தமான நரநாராயணுச்சிரமத்தில் சூரிய கிரணம் படுவதில்லை; பசி, தாகம், உஷ்ணம், குளிர்ச்சி முதலிய துன்பங்கள் கிடையாது. எல்லாத் துன்பங்களையும் ஒழிக்கத் தக்கது. வேதங்களை முற்றும் உணர்ந்த ரிஷிகளுக்கு இருப்பிடமா யுள்ளது; புண்ணிய மில்லாதவர்கள் அடைவதற்கரியது. தேவர்களுக்கு ஹவ்யம் அளிக்கத் தக்கது. புழுதி யில்லாமல் வாசனை நிறைந்துள்ளது. தெய்வ லோகத்திற்குரிய மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருப்பது. யாக வேதிகளாலும் யூபஸ்தம்பங்களாலும் பூரண கும்பங்களாலும் நிறைந்திருப்பது. சகல பிராணிகளுக்கும் உறைவிடமானது. வேத கோஷத்தால் நிறைந்திருப்பது. சொர்க்கத்துக்குச் சமானமானது. பரிசுத்தமான ஆச்சிரமங்களுக்கு ஏற்றது. சகல துன்பங்களையும் போக்குவது. மஹா மகிமை பொருந்தியது. அளவில்லாத புண்ணியத்தை அளிப்பது. தெய்வத் தன்மை யுள்ளது. மனதை அடக்கிக் காய், கனி, கிழங்குகளைப் புசித்துக்கொண்டு, கிருஷ்ணாஜினம் தரித்து, சூரியனையும் அக்கினியையும் போன்ற தேஜசுள்ளவர்களாய்ப் பந்தமறுத்து முத்தி பெறுவதை யுத்தேசித்துத் தவம் புரிந்து, புண்ணியாத்துமாக்களாய் விளங்குகிற மஹாரிஷிகள் குடியிருப்பது. அந்த ரிஷிகள் எல்லாரும் வானப் பிரஸ்த தர்மத்தை அனுசரிப்பவர்கள். பரபிரமத்தைச் சிந்தித்துக் கொண்டிருப்பவர்கள். வேதத்தை அத்தியயனம் செய்கிறவர்கள். அவர்கள் எல்லாரும் ஞானதிருஷ்டியால் யுதிஷ்டிரர் வருகிறதை யுணர்ந்திருந்தார்கள். யுதிஷ்டிரர் தம் சகோதரர்களுடன் பரிசுத்தமாய்ப் புலன்களை அடக்கிக்கொண்டு அந்த ரிஷிகளிடம் போனர்.

36—54. அந்த ரிஷிகள் மனமகிழ்ச்சியுடன் தர்ம புத்திரரை வரவேற்றுக் கொண்டு, வேதமந்திரங்களினாலே ஆசீர்வதித்தார்கள். அக்கினியைப் போன்றவர்களான அந்த ரிஷிகள் மகிழ்ச்சியுடன் விதிப்படி யுதிஷ்டிரரை உபசரித்தார்கள். ரிஷிகள் செய்த உபசாரத்தைத் தர்மராஜா மரியாதையுடன் பெற்றுக்கொண்டார். யுதிஷ்டிரர் தமது சகோதரர்கள் திரௌபதியுடனும், வேதங்களை புணர்ந்த ஆயிரம் பிராமணர்களுடனும், இந்திரலோகத்தைப் போன்ற அந்த ஆச்சிரமத்தில் புகுந்தார். அந்த ஆச்சிரமமெங்கும் தெய்வமணம் வீசிக்கொண்டிருந்தது. பாகிரதியாறு சூழ்ந்து அழகாய் விளங்குகிறதும், தேவர்களாலும் தேவரிஷிகளாலும் நிறைந்திருப்பதுமான நரநாராயணர்களுடைய புண்ணியாச்சிரமத்தை யுதிஷ்டிரர் மகிழ்ச்சியுடன் பார்த்தார். பிராமண ரிஷிகள் நிறையப் பெற்றுத் தேன் கசிந்து ஒழுகும் கனிகளால் நிறைந்தருமான அந்த ஆச்சிரமத்தைப் பாண்டவர்கள் பார்த்து மிகவும் மகிழ்ச்சியுடையவர்களாய் விளையாடிக் கொண்டிருந்தார்கள் சொர்ணமயமான மைநாக மலையின் சிகரங்களையும், பல வகையான பறவைகள் நிறைந்திருக்கிற விந்த மலையையும் கண்டு மகிழ்ந்து, எல்லாப் பருவங்களுக்கும் உரிய சகல வித மலர்களாலும் நிறைந்து இன்பமாயிருக்கிற அந்த வனத்தில் திரௌபதியுடன் உலாவித் திரிந்தார்கள். அந்த வனம் எங்கும் ஊதாவர்ணமான மலர்களால் நிறைந்தும், இனிய கனிகளால் நிறைந்து தழைத்த கிளைகளையுடைய வைகளுமான பல வகை விருட்சங்களாலும் நிறைந்திருந்தது. ஆண் குயில்கள் பாடிக்கொண்டிருந்தன. பளபளப்பான அழகிய தளிர்களால் நிறைந்து குளிர்ந்த நிழலையுடையதாய், பளிங்கு போலத் தெளிந்த நீரை யுடைய மடுக்களை உடையதாய் வெகு அழகாயும் இன்பமாயுமிருந்தது. நீலோத்பலம் தாமரைகள் எங்கும் மலர்ந்து இருந்தன. இந்த இன்பமான காட்சிகளைப் பார்த்துக்கொண்டு பாண்டவர்கள் திரௌபதியுடன் மகிழ்ந்திருந்தார்கள். சிறந்த வாசனையை யுடைய மந்தமாருதம் குளிர்ந்து வீசிக்கொண்டிருந்தது. பதரி மரத்தின் அருகில் பாகீரதிநதி குளிர்ந்த நீருடன் இறங்குகிறதையும், அழகிய தாமரைகளால் அலங்காரமாய்த் தோன்றுவதையும், பவளத்தாலும், பத்மராகமணிகளாலுமியற்றப்பட்ட படிகளையும், அழகான மரங்களையும் தெய்வமலர்கள் சிதறிக்கிடப்பதையும் மனமகிழ்ச்சி யுடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பாண்டவர்கள் ஸ்நானஞ்செய்து பரிசுத்தர்களாய் அந்தப் பாகீரதியின் நீரால் தேவரிஷி பிதிர்களுக்குத் தர்ப்பணம் செய்தார்கள். தேவரிஷிகளால் மாத்திரம் போகக் கூடியதும், மற்றவரால் அணுகப்படாததுமான உயரத்திலிருந்து பாகீரதி இறங்கிவந்து கொண்டிருந்தது. அதன்பின் பாண்டவர்கள் வேதங்களை ஓதிக்கொண்டும் ஜபம் செய்துகொண்டு மிருந்தார்கள். பிராமணர்களுடன் அங்கே வசித்தார்கள். பல பல காட்சிகளையும் பார்த்துத் திரௌபதியுடன் மகிழ்ந்திருந்தார்கள்.

# 146-வது அத்தியாயம்.

## தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—4. புருஷருள் சிறந்த வீரர்களான பாண்டவர்கள் பரிசுத்தர்களாய்த் தனஞ்சயனைப் பார்க்கிற விருப்பத்துடன் ஆறு இரவு அங்கே தங்கியிருந்தார்கள். பிறகு வடகிழக்கிலிருந்து ஒரு காற்று வீசியது. அப்போது தெய்வ மணமுள்ள ஒரு ஆயிர இதழ்த் தாமரை மலர் வந்து அங்கே விழுந்தது. காற்றினால் கொண்டுவரப்பட்ட திவ்யவாசனையுள்ள அந்தத் தெய்வத் தாமரையைப் பாஞ்சால புத்திரி கண்டாள். அந்த அழகான மணம்பொருந்திய அந்த மலரை அவள் எடுத்துக்கொண்டு மிக மகிழ்ச்சி யடைந்தாள். உடனே பீமனிடம் வந்து சொல்லுகிறாள்.

5—39. பீமசேனா! திவ்யவாசனையுள்ள இந்தத் தெய்வ மலரைப் பாரும். இதனுடைய வாசனை என் மனதுக்கு நிரம்பவும் மகிழ்ச்சி தருகின்றது. சத்துருக்களைச் சங்கரிக்கிறவரே! நான் இதைத் தரும ராஜாவுக்குக் கொடுக்க வேண்டும். இது போன்ற வேறு புஷ்பங்கள் எனக்கு வேண்டும். நான் அவைகளைக் காமியக வனத்துக்குக் கொண்டுபோவேன். பார்த்தனே! என்னிடத்தில் உமக்குப் பிரியமிருந்தால், இதுபோன்ற பூக்களை எனக்குக் கொண்டுவந்து கொடும். காமியக வனத்திலுள்ள நமது ஆச்சிரமத்துக்கு இவைகளைக்கொண்டு போகப் பிரியப்படுகிறேன்' என்று பீமனிடம் சொல்லிவிட்டுத் திரௌபதி அந்த மலரை யெடுத்துக் கொண்டு தர்மராஜாவிடம் போனாள். திரௌபதிக்கு அந்த மலரிலிருக்கிற ஆசையை யறிந்த பராக்கிரமசாலியான பீமன், அவளைத் திருப்திசெய்து வைப்பதற்காக உடனே பிரயாணப்பட்டான். மலரைக் கொண்டுவரும் விருப்பத்தோடு, அந்தக் காற்றுவரும் திசையை நோக்கி வெகு வேகமாய்ச் சென்றான். தங்கமிழைத்த வில்லையும், விஷப்பாம்பு போன்ற அம்புகளையும், எடுத்துக்கொண்டு சினமுள்ள சிங்கத்தைப் போலவும், மதங்கொண்ட யானைப் போலவும் வேகமாய்ப் போனான். வில்லையும் அம்புகளையும் உடைய அந்த வீரனைச் சகல பிராணிகளும் உற்று நோக்கின. சோர்வு, களை, பயம், கலக்கம் யாது மில்லாமல் வாயுவைப் போலச் சென்றான். தளர்ச்சியும், பயமுமில்லாமல் அந்தமலையின் மேலேறினான். மரங்கள், கொடிகள் செடிகளநிறைந்து நீலக்கற்களால் தளவரிசை யிட்டதும் கின்னரர்கள் வசிப்பதுமான அழகிய அவ்விடங்களிலெங்கும் உலாவினான். அவ்விடங்களில் பல வகையான போகங்களும், மிருகங்களும், பறவைகளும், நிறைந்திருந்தது. அந்தச் சிகரம் பூமாதேவியானவள் சகல ஆபரணங்களையும் அணிந்து கொண்டிருக்கிற தன்னுடைய கையை உயரத் தூக்கிக் கொண்டிருக்கிறதைப் போன்றிருந்தது. ஒப்பற்ற பலம் பொருந்திய பீமன் சகல மலர்களாலும் நிறைந்திருக்கிற கந்தமாதனத்தின் சரியான இடங்களைப் பார்த்துக்கொண்டும், மனதிலே பல எண்ணங்களுடனும், ஆண் குயில்களும், கரிய தேனீக்க

ளும், பாடிக்கொண்டிருக்கிற இடத்திலேயே மனது, காது, கண் முதலியவற்றைச் செலுத்தி மதம் கொண்ட யானை போல உலாவினான். கந்தமாதனத்திலிருந்து குளிர்ந்த காற்றுச் சிறந்த மணத்துடன் மெதுவாக அவன்மேல் வீசிற்று. அவனுடைய களை தீர்ந்தது. சத்துருக்களைச் சங்கரிப்பவனான பீமன் யட்சர்கள், கந்தர்வர்கள், தேவர்கள், பிராமணர்கள் ரிஷிகள் வசிக்கிற அந்த மலை முழுவதிலும் புஷ்பத்தைத் தேடிக்கொண்டு திரிந்தான். சிவப்பு, கறுப்பு, வெளுப்பு நிறமுள்ள தாதுப் பொருள்களால் உராயப்பெற்று அவனுடைய சரீரம் விரலினால் பல வர்ணம் பூசப் பெற்றதுபோலக் காணப்பட்டது. அந்த மலையானது பக்கங்களில் சூழ்ந்திருக்கிற மேகங்களினால் விரித்த சிறகினால் நர்த்தனம் செய்வது போலத் தோன்றியது. ஊற்றுக்களின் மினுமினுப்பினால் அந்த மலை முத்து மாலை யணிந்து கொண்டிருப்பதுபோல விளங்கிற்று. குகைகளும், மலை யாறுகளும், நிலவறைகளும் ஆங்காங்கு காணப்பட்டன. மலைச் சிகரங்கள் அப்ஸரஸ்திரீகளினுடைய பாகு வலயங்களால் [illegible]ரிக்கொண்டிருந்தது. அம்மலையின் மேற்புறமெல்லாம் யானைகளினுடைய துதிக்கைகளாலே தேய்க்கப்பட்டிருந்தது. அருவிகள் ஒழுகுவதினாலே அதனுடைய மேல் வஸ்திரம் நழுவி விழுகிறது போலக் காணப்பட்டது. வாயுபுத்திரனான பீமன் செடிகொடிகளை பூடறுத்துக்கொண்டு, மகிழ்ச்சியுடன் சென்றான். மான்கள் புற்களை வாயில் கௌவிக்கொண்டு ஆச்சரியத்துடன் அவனை நோக்கி ஒடி வந்தன. அவைகளுக்குப் பயமென்பதே தெரியாது. ஆகையால் அவை பயப்படவுமில்லை. தூரத்தில் ஒடிப் போகவுமில்லை. அழகிய கண்களையுடையவனும், சிங்கத்தைப் போன்ற பலமுள்ள சரீரத்தை யுடையவனும், மத யானை போல நடப்பவனும், மதயானை போன்ற பலமுள்ளவனும், மதயானைபோன்ற சிவந்த கண்களை யுடையவனும், மதயானையைஅடக்கும் சக்தி யுள்ளவனுமான பீமன், பெரிய கந்தமாதன மலைப்பக்கங்களைப் பார்த்துக்கொண்டு, திரௌபதியின் விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டு மலர்களைத் தேடிச் சென்றான். யட்சர்களும் கந்தர்வர்களும் தங்களுடைய பத்தினிகளுடன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்துக்கொண்டு போனான், துரியோதனனால் உண்டான பல வகையான துக்கங்களைச் சிந்தித்துக் கொண்டே சென்றான். வனத்திலிருக்கிற திரௌபதிக்கு விருப்பமான வேலையை செய்ய வேண்டும் அர்ஜுனன் சொர்க்கம் போயிருக்கிறான். நான் மலருக்காகத் தூரத்தில் வந்துவிட்டேன். யுதிஷ்டிரர் அன்பினாலே யாது செய்வாரோ! யுதிஷ்டிரர் நகுல சகதேவர்களுடைய பலத்தில் நம்பிக்கை யற்றவராதலால் நம்மைத் தேடும்படி அவர்களை அனுப்ப மாட்டார். நான் அந்த மலரை எவ்வாறு சீக்கிரம் அடைவேன் என்று யோசித்தான். இப்படி யோசித்து மலரைத் தேடிக்கொண்டு கருடனைப் போல வேகமாய்ச் சென்றான். அவன் வேகமாய் நடப்பதினாலே பூமி நடுங்கிற்று. யானைக் கூட்டங்களும், சிங்கங்களும், புலிகளும், மான்களும் அவனைக் கண்டு பயந்து, ஓடின மதயானையைப் போலப் பெரிய மரங்களை முறித்து விழுத்திக்கொண்டும், செடிகொடிகளை நொறுக்கிக்கொண்டும், மலையின் மேல்

உயரமான இடங்களில் ஏறினான். மின்னலுடன் கூடின மேகங்களைப்போலக் கர்ஜித்தான்.

40—60. அந்தக் கர்ஜனையால் குகைக்குள் பதுங்கியிருந்த புலிகள் வெளியில் ஓடிவந்தன. வெளியிலிருந்த பிராணிகளெல்லாம் ஓடி ஒளிந்தன. பறவைகள் கலக்கத்துடன் பறந்தன. மான்கள் நாலா பக்கங்களிலும் சிதறி ஓடின. பட்சிகள் மரங்களை விட்டுப் பறந்தன. புலிகள் குகையை விட்டு ஓடின. சிங்கங்கள் துயிலை விட்டு எழுந்தன. எருமைகள் ஓடின. ஆண் யானைகள் மயக்கமுடையவைகளாய்ப், பெண் யானைகளுடன் கூடியிருந்த வனத்தை விட்டு வேறிடந் தேடி ஓடின. பன்றி, மான், சிங்கம், எருமை, புலி, நரி, கவயமிருகம் இவை யெல்லாம் கூட்டங் கூட்டமாய்ச் சேர்ந்து இரைந்து கூவின. கிளி, குயில் முதலான எல்லாப் பறவைகளும் மயக்கத்தை யடைந்து பறந்து சிதறின. பெண்யானைகளால் தூண்டிவிடப்பட்ட சில ஆண் யானைகளும், [illegible]களும். புலிகளும் பீமன் மேலே பாய்ந்தன. பயத்தினாலே மயங்கின மிருகங்கள் மல ஜலங்களை விட்டுக்கொண்டு வாயைத் திறந்து கொண்டு ஊளையிட்டன. அப்போது பீமன் கோபங்கொண்டு யானையை யானையால் மோதியும், சிங்கத்தைச் சிங்கத்தால் மோதியும் கொல்லத் தொடங்கினான். சிறிய மிருகங்களை யெல்லாம் உதைத்துக் கொன்றான். பிறகு பீமன் அந்த வனம் எதிரொலிசெய்யும்படி கர்ஜித்துக்கொண்டு, போகையில் அந்த மலைச் சரிவிலே ஒரு பெரிய வாழைத் தோட்டத்தைக் கண்டான். அது பல யோசனை தூரம் பரவியிருந்தது. அதை நோக்கி விரைந்து சென்றான். பல மரங்களை முறித்துக்கொண்டும் பனை உயரமுள்ள அநேக வாழைகளை ஒன்றின்மேல் ஒன்றாக வீழ்த்தி நொறுக்கிக் கொண்டும் சென்றான். பிறகு சிங்கத்தைப் போலக் கர்ஜித்தான். மான், கரடி, சிங்கம், எருமை முதலிய மிருகங்களும் கர்ஜித்தன. அவ்விரு முழக்கங்களையும் கேட்டு மற்ற கானகத்திலுள்ள பிராணிகளும் மயங்கின. இந்தச் சப்தத்தைக் கேட்டு நீரில் வசித்துக்கொண்டிருக்கும் பறவைகளும் வானத்தில் எழுந்து பறந்தன. பிறகு பீமன் அந்தத் திசையை நோக்கி நடந்தான். அங்கே பெரிய ஒரு தடாகத்தைக் கண்டான். அதன் கரையில் சொர்ண வாழைகள் இளங்காற்றினால் அசைகொண்டிருந்தன. அதனருகில் போனான். அதில் தாமரைகளும், ஆம்பல்களும் நிறைந்த அந்தத் தடாகத்தில் மதயானையைப் போலச் சிறிது நேரம் விளையாடிப் பின் எழுந்திருந்து, மரங்கள் அடர்ந்த வனத்தில் புகுந்து சென்றான்.

61—86. அங்கே சங்கை யெடுத்து ஊதினான். தோளோடு தோள்தட்டினான். இதனால் ஆகாயம் எதிரொலியிட்டது. சங்கத் தொனியாலும், சிங்கநாதத்தாலும், புஜத்தைத் தட்டுவதனால் உண்டாம் ஒலியாலும் மலைக்குகைகளெல்லாம் கர்ஜிப்பன போலத் தோன்றின. பீமன் தோள்தட்டுதலால் உண்டாகும் இடி போன்ற சப்தத்தைக் கேட்டுக், குகைகளில் தூங்கிக் கொண்டிருந்த சிங்கங்களும் விழித்துக்கொண்டு கர்ஜித்தன. சிங்கத்தின் கர்ஜனையைக்

கேட்ட யானைகளும் பெருஞ்சத்த மிட்டன. அந்த ஒலி மலை முழுதும் நிரம்பிற்று. அப்போது அங்கே யிருந்த அனுமான் பீமனைத் தமது சகோதரன் என்று உணர்ந்து அவனுக்கு நன்மை செய்யக் கருதி வானம் வரைக்கும் உயர்ந்து வழியை மறித்துக்கொண்டு நின்றார். பீமசேனனுக்கு ஏதாயினும் துன்பம் நேராதபடியும், சாபம் வராமலிருக்கும் பொருட்டும் அவ்வழியைத் தடுத்துக்கொண்டு தூங்குகிறவரைப் போலிருந்தார். கொட்டாவி விட்டுக்கொண்டும், இந்திரனுடைய யூபஸ்தம்பத்தைப் போன்ற வாலை அசைத்துக் கொண்டும், இடிமுழக்கம் போலக் குறட்டை விட்டுக்கொண்டும் இருந்தார். அதனால் பக்கத்திலுள்ள மலைகளெல்லாம் குகைகளாகிய தம்முடைய வாய்களைத் திறந்து கொண்டு கர்ஜிப்பது போல எதிரொலி யிட்டன. அவருடைய வாலின் அசைதலாலே மலைகள் நடுங்கின. அதனாலே அம்மலையிலுள்ள மத யானைகளின் முழக்கத்தைப் போல அந்த வாலசைவின் தொனி எங்கும் பரவிற்று. மலையின் மைதானத்தில் இருந்த பீமன் இந்தத் தொனிபால் சற்று நின்று பிறகு அந்தத் தொனி வருகிற வழியைத் தேடிக்கொண்டு போனான். உயர்ந்த மலையில் படுத்துக்கொண்டிருந்த அனுமானைக் கண்டான். அவர் மின்னலைப் போலப் பிரகாசித்துக்கொண்டு கண்ணால் பார்க்க முடியாதவரா யிருந்தார். தாம்பிர வர்ண முடையவரா யிருந்தார். மின்னலைப் போல அவ்வளவு சீக்கிரத்தில் நகரக் கூடியவராகவு மிருந்தார். கழுத்துக் குறுகித் தோளோடு கூடி யிருந்தது. இடுப்பு சிறுத்து இருந்தது அவரது வால் மயிரடர்ந்து நுனி வளைந்து துவசத்தைப் போன்று உயர்ந்திருந்தது. பீமன் அவருடைய சிறிய தலையையும், அழகிய உதட்டையும், சிவந்த முகத்தையும், நீண்ட நாக்கையும், சிவந்த காதுகளையும் கூரிய பற்களையும் கண்டான். அவருடைய தலையில் அசோக புஷ்பங்களைப் போன்ற வெள்ளிய மயிரால் நிறைந்திருந்தது. அவர் தங்க மயமான பனைமரங்களுக்கிடையில் படுத்துக் கொண்டிருந்தார். அவருடைய சரீரம் அக்கினியைப் போல ஜ்வலித்துக் கொண்டிருந்தது. அனுமான் வழியை மறித்துக்கொண்டு இமயமலைப் போலப் படுத்துக்கொண்டிருக்கிறதைப் பீமன் பார்த்து அவர் கிட்டப் போய்ப் பட்சிகளும், மிருகங்களும் நடுங்கும்படி சிங்கத்தைப் போலக் கர்ஜித்தான். அநுமான் கொஞ்சம் கண்களைத் திறந்து, மயக்கத்தால் சிவந்திருக்கிற அந்தக் கண்களால் பீமனை அலட்சியமாகப் பார்த்தார். பிறகு புன் சிரிப்புடன் பீமனை நோக்கிச் சொல்லுகிறார்.

87—96. நான் வியாதியா யிருக்கிறேன். நீ யேன் என்னை யெழுப்புகிறாய்? நான் சுகமாய்த் தூங்குகிறேன். நீ அறிவுள்ளவனாதலாலே எல்லாப் பிராணிகளிடத்திலும் இரக்க முள்ளவனாய் இருக்க வேண்டும். நாங்கள் மிருக ஜந்துக்களா யிருக்கிறபடியால் தர்மம் இன்னதென்று அறியமாட்டோம். மனிதர்கள் பகுத்தறிவுள்ளவர்களாகையால் எல்லாப் பிராணிகளிடத்திலும் தயவாய் இருக்க வேண்டும் உன்னைப் போன்ற சிறந்த மனிதர்கள் மனோவாக்குக் காயங்களினாலே துன்பத்தையும், தர்ம விரோத முள்ளதுமான செயல்களை ஏன் செய்ய வேண்டும்? தர்மத்தை நீ அறியாய். அறிந்தவர்களுடைய உப

தேசத்தையும் நீ கேட்க வில்லை. நீ சிற்றறிவுள்ளவனா யிருக்கிறாய். ஆகை யால் சிறு பிள்ளைத் தனமாய்ச் சிறிய பிராணிகளைக் கொல்லுகிறாய். நீ யார்? கருணையும், மனிதர்களும் இல்லாத இந்த வனத்துக்கு ஏன் வந்தாய்? நீ இப்பொழுது எங்கே போக விரும்புகிறாய்? எனக்குச் சொல்லு. இதற்கு அப்புறம் உன்னால் போக முடியாது. அதோ இருக்கிற மலைமேல் ஏற முடியாது. வீரனே! தவச் சித்தி யிருந்தால் தான் போகலாம். இது தேவ லோகத்துக்குப் போகிற வழி ஒரு போதும் மனிதரால் செல்ல முடியாது. வீரனே! அரசனே! உன்னிடத்திலுள்ள பிரியத்தினால் உன்னைத் தடுக்கிறேன். என் வார்த்தையைக் கேள். இதற்கு அப்புறம் உன்னால் போக முடியாது. ஆகையால் நில். இவ்விடத்தில் இன்றை தினம் சுகமா யிரு. நீ என் வார்த்தைக்கு உடன் பட்டால் அமிர்தம் போன்ற ருசியுள்ள பழங்களையும் கிழங்குகளையும் புசி. பிராணிகளைக் கொல்லாதே என்றார்.

---

## 147-வது அத்தியாயம்

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—16. அனுமார் சொல்லிய வசனங்களைக் கேட்ட பீமன் பின் வருமாறு சொல்லுகிறான். நீ யார்? நீ யேன் இப்படிக் குரங்கு வடிவமா யிருக்கிறாய்? உன்னைக் கேட்கிற நான் பிராமண வருணத்துக் கடுத்த க்ஷத்திரிய குலத்தான் சந்திர வம்சத்தில் குரு குலத்தில் பிறந்தவன். பாண்டு மஹாராஜாவுக்குக் குந்தி வயிற்றில் வாயுவினால் பிறந்தவன். என் பேர் பீமசேனன். இதைக் கேட்ட அனுமார் சிரித்துக்கொண்டு வாயு புத்திரனான பீமனை நோக்கிச் சொல்லுகிறார். நான் ஒரு குரங்கு. உன் விருப்பம் போல இவ்வழியிலே நடக்க விட மாட்டேன். யோக்கியமுள்ள மனிதர்களைப் போலத் திரும்பிப் போய் விடு. அழிந்து போகாதே என்றார். ஓ குரங்கே! நான் சாவைப பற்றியாவது மற்றதைப் பற்றியாவது உன்னைக் கேட்க வில்லை. எழுந்திரு எனக்கு வழி விடு. என் கையால் துன்ப மடையாதே என்றான். அனுமார் நான் நோயால் வருந்துகிற படியால் எனக்கு எழுந்திருக்கச் சக்தி யில்லை. நீ போக விரும்பினால் என்னைத் தாண்டிப் போ என்றார். பீமன், குணங் குறியற்ற பரபிரமம் எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருக்கின்றது. ஞானத்தால் மாத்திரம் அறிந்த அந்தப் பரபிரமத்தை அலட்சியம் பண்ணக் கூடாதே. ஆகையால் நான் உன்னைத் தாண்ட மாட்டேன். சகல பிராணிகளுக்கும் உற்பத்தி காரணரான அவரை நான் அறியாம லிருந்தால் உன்னைத் தாண்டிப் போகக் கூடும். அனுமார் சமுத்திரத்தைத் தாண்டிச் சென்றது போல நான் இந்த மலையையும் செல்லக் கூடும் என்றான். அனுமார், சமுத்திரத்தைக் கடந்த அனுமான் என்பவன் யார்? உன்னால் சொல்லக் கூடுமானால் எனக்குச் சொல் என்றார். பீமன், அவர் எனக்குத் தமையனார். எந்தக் காரியத்தையும் முடிக்க

வல்லவர். ஞானம் புலம் இரண்டிலும் சிறந்தவர். அழகும் மேன்மையுள்ள அந்த வானர வீரரைப் பற்றி, இராமாயணம் கூறும். இராமருடைய பத்தினியைத் தேடுவதற்காக நூறு யோசனை விசாலமுள்ள சமுத்திரத்தை அவர் தாண்டிப் போனார். மஹா பல பராக்கிரமசாலியான அவர் எனக்கு மூத்தவர். நானும் அவருக்குச் சமானமான பல முடையவன். உன்னைக் கூட வெல்லச் சக்தியுள்ளவனு யிருக்கிறேன். எழுந்திரு. எனக்கு வழிவிடு. இல்லாவிட்டால் இன்றைய தினம் என் வல்லமையைப் பார். நான் சொன்னதை நீ கேளாவிட்டால் உன்னை எமலோகத்துக்கு அனுப்பிவிடுவேன் என்றான். அனுமான், இவன் மதுபானத்தால் மதிமயங்கி யிருக்கிறான். அதனாலே தான் தன் புஜபலத்தைப் பற்றிக் கர்வம் கொண்டு பேசுகிறான் என்று அறிந்து, அவனை அலட்சியம் பண்ணிச் சொல்லுகிறார். பாபமில்லாதவனே! என்னிடம் தயவாயிரு. நான் கிழவனாயிருக்கிறபடியால் எழுந்திருக்க முடியாது. என் மேல் இரக்கம் வைத்து என் வாலைத்தூக்கி அப்புறம் வைத்து விட்டுப் போ என்றார்.

17—25. அனுமார் சொன்னதைக் கேட்ட பீமன், தன் பலத்தினால் இறுமாந்து இந்தக் குரங்கு பலமில்லாதது என்று அற்பமாய் நினைத்துக் கொண்டு, இவனுடைய வாலைப் பிடித்து, இழுத்து, அற்பமான இந்தக் குரங்கை எமலோகத்துக்கு அனுப்பி விடுவேன் என்று எண்ணிக் கொண்டு, அலட்சியமாக இடது கையினால் அந்த வாலைத் தூக்கினான். அதை அசைக்க முடியவில்லை, இந்திரனுடைய யூபஸ்தம்பத்தைப் போலிருக்கிற அந்த வாலையிரண்டு கைகளாலும் தூக்கினான். பீமனுடைய கண்கள் குழிந்து சுழன்றன. முகம் சுருக்கிற்று. உடம்பில் வேர்வை ஒழுகிற்று. வாலைத் தூக்க முடியாமல் போயிற்று. நெடுநேரம் முயன்றும் முடியாமல் போனபடியால் பீமன் அனுமார் பக்கத்தில் வந்து வெட்கத்துடன் நின்றான் பிறகு பீமன் அவரை வணங்கி, அஞ்சலியஸ்தனாய் நின்று கொண்டு சொல்லுகிறான். உத்தமமான வானரமே! என் மேல் தயவுவையும். நான் கூறிய கொடுஞ் சொற்களைப் பொறுத்துக் கொள்ளும். நீர் சித்தனா! தேவனா! கந்தர்வனா! குஹ்யகனா! நான் ஆச்சரியமடைந்து கேட்கிறேன். குரங்கு ரூபமாயிருக்கிற நீர் யார்? பராக்கிரமசாலீ! இரகசியமில்லா திருந்தால் எனக்குச் சொல்ல வேண்டும். பாபமில்லாதவரே! நான் உம்மை அடுத்துச் சிஷ்யனாயிருந்து கேட்கிறேன் என்றான்.

26—34. அனுமான், பீமனை நோக்கிச் சத்துருக்களைச் சங்கரிக்கிறவனே! நீ என்னைப் பற்றி யறிய ஆச்சரியத்துடன் கேட்கிறபடியால், எல்லாவற்றையும் சொல்லுகிறேன். பாண்டு புத்திரனே கவனமாய்க் கேளு. தாமரை போன்ற கண்களையுடைய வீரனே! நான் வாயுதேவனால் கேசரிக்குப் பிறந்தேன். என் பேர் அனுமான். வீரனே! வானரவீரர்கள் எல்லாரும் சூரிய புத்திரனாகிய சுக்கிரீவனுக்கும், இந்திர குமாரனான வாலிக்கும் அடங்கியிருந்தார்கள். நானும் சுக்கிரீவனும் காற்றையும் நெருப்பையும் போலச் சிநேகிதர்களா யிருந்தோம். சில காரணங்களால் வாலி சுக்கிரீவனைத் துரத்திவிட்

படியால், நானும் சுக்ரீவனும் ரிசியமுக பர்வதத்தில் கொஞ்ச காலம் வாசம் பண்ணிக் கொண்டிருந்தோம். ஒரு காலத்தில் விஷ்ணு தசரதராமனாக அவதாரம் செய்து வனத்தில் அலைந்துகொண்டிருந்தார். அவர் தமது பிதா வாக்கியத்தைப் பரிபாலிப்பதற்காக மனைவி சகோதரருடன் வில்லை யணிந்து கொண்டு தண்டகாரணியத்தில் வசித்தார். பாபமற்றவனே! அவர் ஜனஸ்தானத்திலிருக்கும்போது இராவணன் என்னும் கொடிய அரக்கன் மாரீசனைக் கொண்டு உபாயம்செய்து அவருடைய பத்தினியைக் கவர்ந்து கொண்டு போனான். மாரீசன் இரத்தினத்தாலும் சொர்ணத்தாலும் ஆகிய மான் வடிவங் கொண்டு வந்து ஏமாற்றி விட்டான்.

---

## 148-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத தொடர்ச்சி.*

1—19. பாண்டவோத்தமனே! பத்தினியை யிழந்த இராகவர் தமது தம்பியுடன் அவளைத் தேடிக் கொண்டு வரும்போது, அந்த மலைமேல் சுக்ரீவனைக் கண்டார். பிறகு அவ்விருவரும் சிநேகிதரானார்கள். இராமர் வாலியைக் கொன்று சுக்ரீவனுக்கு இராஜ்யத்தைக் கொடுத்தார். இராஜ்யத்தைப் பெற்றுக்கொண்ட சுக்ரீவன் சீதையைத் தேடும் பொருட்டு அநேகமாயிரம் வானரவீரர்களை அனுப்பினான். சம்பாதி என்னும் கழுகினால் இராவணன் இருக்கிற இடத்தின் செய்தியைத் தெரிந்து கொண்டேன். இராமருடைய காரியத்தை நிறை வேற்றுவதற்காக நூறு யோசனை விஸ்தீர்ணமுள்ள சமுத்திரத்தை நான் தாண்டிப் போனேன். பாரதோத்தமனே! சுறாமீன்களும் முதலைகளும் வசிக்கிற சமுத்திரத்தைத் தாண்டிச் சென்றபின், இராவணன் ஊரில் தெய்வப் பெண் போன்ற ஜனக புத்திரியான சீதையைக் கண்டேன். அதன் பின் கோபுரம், மதில், வாசல்களுடன் கூடின இலங்கையைக் கொளுத்திவிட்டுத் திரும்பி வந்தேன். என்னால் சமாசாரம் தெரிந்துகொண்ட இராமர் வானர வீரர்களைக் கொண்டு சமுத்திரத்தில் ஒரு அணை கட்டினார். பின் வானர சேனைகளுடன் கடலைக் கடந்துபோனார். அதன பின் இராமர் தமது பராக்கிரமத்தால் இராட்சதர்கள் எல்லாரையும் சங்கரித்தார். இராவணனையும் அவனுடைய சகோதரர் புத்திரர் சுற்றத்தாருடன் கொன்றார். பிறகு தர்மசீலரான விபீஷணருக்கு இலங்கையில் இராஜ்யாபிஷேகம் செய்தார். பிறகு இராமர் தமது தர்மபத்தினியுடன் வேகமாய் அயோத்திபோய்ச் சேர்ந்து அங்கேயே வாசம்பண்ணிக் கொண்டிருந்தார். அவர் அரசாட்சியைக் கைக் கொண்டபோது நான் அவரிடத்தில் ஒரு வரம் கேட்டுக் கொண்டேன். அதாவது, "உமது சரித்திரம் பூமியில் நிலை பெற்றிருக்கிற காலம் வரைக்கும் நானும் ஜீவித்திருக்க வேண்டும்" என்று கேட்டேன். அவரும் அப்படியே ஆகட்டும் என்று கூறி எனக்கு வரமளித்தார். பீமா! சீதையின் கருணையால்

இவ்விடத்தில் விருப்பமுள்ள எல்லாப் பொருள்களும் கிடைக்கின்றன. இராமர் பதினோராயிர வருஷம் பூமியைப் பரிபாலனம செய்தார். அதன் பின் தமது உலகத்துக்குப் போய் விட்டார்.

20—22. பாபமற்றவனே! குழந்தாய்! அதுமுதலாக அப்ஸரஸ்களும், கந்தர்வர்களும், இராமருடைய சரித்திரத்தைப் பாடுவதால் எனக்கு மகிழ்ச்சி யுண்டாக்குகிறார்கள். ஓ கௌரவனே! இந்தப் பாதை மனிதர்களால் கடக்க முடியாதது. இந்தக் காரணத்தினாலும், உன்னை யொருவரும அவமதிக்காமலும் சபிக்காமலும் இருப்பதற்காகவுமே இவ்விடத்தில் உன்னைத் தடுத்துக்கொண்டு நின்றேன். ஏனென்றால் இவ்விடத்தில் தேவர்கள் சஞ்சரிக்கிறார்கள். விண் ணுலகம் போகிறதற்குரிய வழிகளில் இதுவும் ஒன்று. மனிதர்கள் இந்த வழியில் நடக்கக் கூடாது. நீ தேடிக்கொண்டு வருகிற தடாகம் அந்தத் திசை யில் இருக்கிறது என்றார்.

---

## 149-வது அத்தியாயம்.

தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—5. இதைக் கேட்ட வுடன் பீமசேனன் மன மகிழ்ச்சி யுடன் தன் தமையன் பாதத்தில் வணங்கினான். பிறகு, நான் எனது தமையனாரைக் கண்டுதரிசித்த படியால் என்னைப் பார்க்கிலும் பாக்கியசாலிகள் ஒருவருமில்லை. என் மேல் பெருங் கருணை வைத்தீர். நான் களை கடந்த சந்தோஷ மடைந் தேன். இன்றைய தினம் மனோரதத்தை நிறைவேற்றி யருள்வீரென்று பிரார் திக்கிறேன். அதாவது, சுறா மீன்களும் முதலைகளும் வசிக்கிற சமுத்திரத்தைத் தாண்டும் பொருட்டு நீர் எடுத்துக்கொண்ட உமது பெரிய வடிவத்தைத் தரி சிக்க விரும்புகிறேன். பிறகு நான் மன மகிழ்ந்து உமது வார்த்தையில் விசு வாச முடையவனாக இருப்பேன் என்று சொன்னான்.

6—10. அனுமான் சிரித்துக்கொண்டு குழந்தாய்! அந்தச் சொரூபத் தை நீயாவது வேறு எவராவது பார்க்க முடியாது. அந்தக் காலத்தில தன் மை வேறு. கிருதாயுகத்தின் தன்மை வேறு. திரேதாயுகத்தின் தன்மை வேறு. துவாபர யுகத்தின் தன்மை வேறு. இக்காலத்தில் எல்லாம் சக்தி குறைந்தவைகளா யிருக்கின்றன. ஆகையால் இப்போது எனக்கு அந்தச் சொரூ பம் வராது. பூமி, ஆறு, பூண்டுகள், மலைகள், சித்தர்கள், தேவர்கள், மகரி ஷிகள், கூடக் காலத்துக்குத் தக்கபடி மாறுதல் அடைகிறார்கள். யுகந்தோ றும் அப்படியே மாறுகின்றன. ஆகையால் கௌரவனே அந்தச் சொரூபத் தைப் பார்க்க விரும்புகிற ஆசையை விட்டு விடு. காலம் வெல்லப் படாதது. ஆகையால் நானும் இந்த யுகத்திற் கேற்றபடியே யிருக்க விரும்புகிறேன் என் றார். பீமன், யுகந்தோறும் எவ்விதமான மாறுதல் உண்டாகின்றன? நாசிகம்

வழக்கம், தர்மம், இன்பம், பயன், தொழில், ஆயுசு, பலம், சக்தி, மரணம் இவைகள் அந்தந்த யுகங்களில் எவ்வாறு மாறுபடுகின்றன? எனக்குச் சொல்ல வேண்டும் என்றான்.

11—22. அனுமான், குழந்தாய்! கிருத யுகத்தில் சத்திய மென்பது ஒன்றே நிலைத்திருந்தது. மதமும் ஒன்றாக இருந்தது. எல்லாரும் அதில் பூர்த்தி யடைந்திருந்தார்கள். தர்மம் குறைவற்றதா யிருந்தது. இதனாலேதான் அந்த யுகம் கிருத (பூர்ணம்) என்ற பேர் பெற்றது. காளடைவில் அதன் குணம் குறைந்தது. அந்த யுகத்தில் தேவர்கள், தானவர், கந்தர்வர், யட்சர் ராட்சதர், நாகர்கள் என்கிற வேற்றுமை யில்லை. விற்பதும் கொள்வதும் இல்லை. ரிக்கு, யஜுஸ், சாமம் என்கிற வேற்றுமையு மில்லை. கைத் தொழில்களு மில்லை. எண்ணுகிற மாத்திரத்தில் எல்லாப் பொருள்களும் அவர்களுக்குக் கிடைத்தன. வியாதி புத்தி மாறுதல் முதலிய வில்லை. பொறாமை கர்வம், வஞ்சனை, பேதம், தந்திரம், பகை, பயம், துக்கம், பேராசை என்பன கிடையா. இந்தக் காரணத்தினாலே தான் எல்லாரும் பிரமத்தை அறிந்திருந்தார்கள். பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் எல்லாரும் ஒரே தன்மை யுடையவர்களா யிருந்தார்கள். ஒவ்வொருவரும் தத்தமக்குரிய தொழில்களை செய்து கொண்டிருந்தார்கள். பிராமணர்கள் எல்லா மனிதர்களுக்கும் ஆதரவா யிருந்தார்கள். அவர்களுடைய ஆசாரம் தொழில்கள் எல்லாம் பிரமத்தை அடைவதைப் பற்றியே யிருந்தன. அவர்களுடைய ஞானமும் அவ்வாறே. அதனால் எல்லாரும் ஒரே தன்மை யுடையவர்களா யிருந்தார்கள். ஒரே தெய்வத்தை எல்லாரும் தியானித்துக் கொண்டிருந்தார்கள். ஒரே மதம் இருந்தது. நாராயணன் வெண்ணிற முடையவனா யிருந்தான். வெள்ளாடை தரித்திருந்தான். பல வகையான குணங்களை யுடையவர்களா யிருந்தாலும், ஒரே வேதத்தையும் ஒரே மதத்தையும் அனுசரித்தார்கள். கால வேறுபாட்டுக்கு ஏற்றபடி நாலு வருணாச்சிரமங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். இந்த வழியை அனுசரித்து அவர்கள் பந்த மொழிந்து வாழ்ந்தார்கள். பிரமத்துடன் ஏகமாய்க் கலந்து நிற்பதாகிய ஒரே மதம் அந்த கிருத யுகத்தில் இருந்தது. கிருத யுகத்தில் இத்தன்மையவாய் எல்லா மிருந்தன.

23—26. திரேதா யுகத்தைப் பற்றிச் சொல்லுகிறேன் கேள். திரேதா யுகத்திலே தான் யாகங்கள் உண்டாயின. இந்த யுகத்தில் கால் பங்கு தர்மங் குறைந்து போயிற்று. நாராயணன் செந்நிற முடையவனா யிருந்தான். மனிதர்கள் சத்திய முடையவர்களாய் இருந்தார்கள். மதங்களையும் மதா சாரங்களையும் அனுஷ்டித்து வந்தார்கள். யாகங்களைச் செய்ய ஏற்பட்டார்கள். அநேகமான தர்ம விதிகளேற்பட்டன. பலனைக் கருதி அடைய விரும்பினார்கள். அந்தப் பலனைத் தானத்தாலும், கர்மத்தாலும் அடைந்தார்கள். மனிதர்கள் தர்ம நெறியினின்றும் தவறாமலிருந்தார்கள். எப்போதும் தவத்திலேயே முயற்சியாய் இருந்தார்கள். தானம் கொடுத்து வந்தார்கள். நான்கு வருணத்

தாரும் தத்தமக்குரிய விதிகளை அனுஷ்டித்து வந்தார்கள். திரேதா யுகத்தில் மனிதர்கள் இப்படி யிருந்தார்கள்.

27—33. துவாபர யுகத்தில் தர்மம் பாதி குறைந்து போயிற்று. விஷ்ணு மஞ்சல் வர்ண முடையவரானார். வேதம் நாலு பங்காகப் பிரிக்கப்பட்டது. சிலர் மாத்திரம் நாலு வேதங்களையும் உணர்ந்தார்கள். சிலர் மூன்றை உணர்ந்தார்கள். சிலர் இரண்டை அறிந்தார்கள். சிலர் ஒன்றையு முணராமல் இருந்தார்கள். சாஸ்திரம் இப்படிப் பகுக்கப்பட்டன. தர்மாசாரங்களும் பலவாயின. பெரும்பான்மை ஆசை யுடையவர்களானார். தவத்தையும் தானத்தையும் செய்தார்கள். மனிதர்கள் வேதம் முழுவதையும் கற்றுக்கொள்ளச் சக்தியற்றிருந்த படியால் அது பலவாக வகுக்கப்பட்டது. மனிதர்களுக்கு ஞானம் குறைந்தது. சிலரே சத்தியத்தில் விருப்ப முடையவரானார்கள். மனிதர்கள் சத்தியம் தவறவே அவர்கள் அநேக நோய்களை யடைந்தார்கள். காமம் அவர்களை மேற் கொண்டது. பிராணிகளுக்குச் சுபாவமான துக்கமும் அவர்களை அடைந்தது. இவைகளால் வருந்தின சிலர் தவத்தை அடைந்தார்கள். வேறு சிலர் உலக இன்பத்தை அடைவதற்கும், சொர்க்க லோகத்தை அடைவதற்கும் சொர்க்கலோகததைப் பெறுவதற்கும் விருப்ப முடையவர்களாய் வேள்விகளை செய்தார்கள். குந்தி குமாரனே! துவாபர யுகத்தில் மனிதர்கள் தெய்வ பக்தி யற்றுச் சீர்கெட்டுப் போனார்கள்.

34—40. கலி யுகத்தில் தர்மம் கால் பங்குதா னிருக்கிறது இந்தக் காலத்தில் நாராயணன் கரிய நிறம் உடையவரா யிருப்பர். வேதமும், விதிகளும், தர்மமும், யாகமும், மதக் கொள்கையுமாகிய எல்லாம் உபயோக மில்லாமல் போகும். அதிவிருஷ்டி, எலிகள், வெட்டுக் கிளிகள், பட்சிகள் அரசர்கள், நோய்கள், சோம்பல், கோபம், அக்கிரமம், பசிவியாதித் துன்பங்கள், கவலைகள், பஞ்சம், பயம் இவைகளால் உலகம் நிறைந்திருக்கும். இந்த யுகத்தில் நாளுக்கு நாள் தர்மம் குறையும. தர்மம் குறைவினால் ஜனங்கள் சீர்கேட்டை அடைவார்கள். பிராணிகள் அவகேட்ட யடைவதால் அவர்களுடைய சுபாவமும் கெடும். குறைவுள்ள இந்த யுகத்தில் செய்யப்படுகிற கர்மங்களும் விரோத பலன்களைத் தரும். அநேக யுகங்களாக ஜீவித்திருப்பவர்கள் கூட அந்தக் காலத்துக்கு ஏற்றபடி மாறுதல் அடைவார்கள். சத்துருவை அடக்குகிறவனே! உன் விருப்பத்தின் படி எல்லாவற்றையும் சொல்லி விட்டேன். அறிவுள்ள மனிதன் அதிகமாகத் தெரிந்து கொள்ள விரும்ப வேண்டியதில்லை மஹா பல முடையவனே! நீ கேட்டபடி யுக வேறுபாடுகளை சொல்லி விட்டேன். உனக்கு மங்கள முண்டாகட்டும். நீ வந்த வழியே திரும்பிப் போ என்றார்.

---

## 150-வது அத்தியாயம்.

*தீர்த்த யாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—9. பீமசேனன் அனுமானை நோக்கி, நான் உமது பழைய சொரூபத்தைப் பாராமல் போகவே மாட்டேன் என்னிடத்தில் உமக்குப் பிரியமிருந்தால் உமது சொரூபத்தை எனக்குக் காட்டியருளும். அதைக் கேட்ட அனுமான் கடலைத் தாண்டின தமது சொரூபத்தைக் காட்டினார். தமது சகோதரனை பீமனை மகிழ்விக்கும் பொருட்டு உயரத்திலும் பெருமனிலும் அளவிடப் படாத தமது பெரிய ரூபத்தைக் காட்டியருளினார். வாழைமரங்கள் நிறைந்திருந்த அந்தப் பெரிய காடு முழுமையும் அவருடைய சரீரத்தின் பருமன் வியாபித்திருந்தது. விந்திய பருவதத்தின் அளவு உயர்ந்திருந்தார். மற்றொரு பர்வதம் போல உயர்ந்து பருத்திருக்கிற சரீரத்தையும் சிவந்த கண்களையும், கூரிய பற்களையும் உடைய உக்கிரமான முகத்தையும், அசைகின்ற பெரிய வாலையும் உடையவராய் எல்லாத் திசைகளையும் மறைத்துக் கொண்டிருக்கிற அவரது சொரூபத்தைப் பீமசேனன் பார்த்து ஆச்சரியம் அடைந்தான். சூரியனைப் போலப் பிரகாசிக்கிறதும், மஹா மேருமலை போன்றதும், ஜ்வலித்தெரிகிற ஆகாயத்தை ஒத்திருப்பதுமான அந்தச் சொரூபத்தைப் பார்த்ததும் பீமன் தனது கண்களை மூடிக்கொண்டான். அனுமான் புன்சிரிப்புடன் பீமனைப் பார்த்துச் சொல்லுகிறார். பீமா! குற்றமற்றவனே! இம்மட்டில்தான் என் சரீரத்தை நீ பார்க்கக் கூடும். நான் எவ்வளவாகப் பருத்து உயர வேண்டுமென்று கருதுகிறேனோ அவ்வளவு பருத்து உயரக் கூடும். சத்துருக்களுக்கு மத்தியில் என் வடிவம் வளர்ந்துகொண்டே யிருக்கும் என்று சொன்னார்.

10—25. ஆச்சரியப்படத் தக்கதும் பயங்கரமுள்ளதுமான அனுமானுடைய மலை போன்ற பெரிய வடிவத்தைப் பீமன் பார்த்து மதி மயங்கினான். மஹாத்மாவான பீமசேனன் இரண்டு கைகளையும் கூப்பிக் கொண்டு சொல்லுகிறான். மஹானுபாவரே! உமது பெரிய சொரூபத்தைப் பார்த்தேன். அந்தப் பெரிய சொரூபத்தைச் சுருக்கி விடுங்கள். உதிக்கிற சூரியனைப் போல விளங்குகிற உமது சொரூபத்தைப் பார்க்க நான் சக்தியில்லாதவனாக இருக்கிறேன். நீர் பக்கத்திலிருக்கையிலும் இராமர் இராவணனுடன் போர் புரிந்ததைப் பற்றி ஆச்சரியபடுகிறேன். நீர் ஒருவரே யானை குதிரை தேர் பதாதிகளாகிய நால்வகைச் சேனைகளுடன் கூடின இலங்கையை முற்றும் அழிக்க வல்லவரா யிருக்கிறீர். வாயுகுமாரரே! உம்மால் ஆகாத காரியம் ஒன்று மில்லை. தன் சைனியத்துடன் கூடின இராவணன் உமக்குச் சமானமாக மாட்டான். உமது ஒரு கையிக்கே அவர்கள் பற்றமாட்டார்கள் என்றான். அதைக்கேட்ட அனுமான் பீமனை நோக்கிச் சொல்லுகிறார். பாரதா! பீமசேனா! நீ சொன்னது சரிதான். இராவணன் எனக்கு ஈடாக மாட்டான். நான் இராவணனைக் கொன்றுவிட்டால் இராமருடைய புகழுக்குக் குறைவுண்டாகும். இத

னாலேதான் நான் இராவணனைக் கொல்ல வில்லை. இராமர் இராவணனைச் சங்கரித்து விட்டு, சீதையை அயோத்திக்கு அழைத்துக் கொண்டு வந்ததனாலேதான், அவருடைய கீர்த்தி உலகத்தில் நிலை பெற்றது. புத்தி யுள்ளவனே! உன் சகோதரர்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்துச் சுகமாகப் போ. வாயு உன்னைப் பாதுகாப்பார். பீமசேனா! இந்த வழி குபேரனுடைய சௌகந்திக வனத்துக்குக் கொண்டு போய்விடும். அந்த வனம் யட்சராலும் இராட்சதராலும் காக்கப்படுகிறது. அந்த வனத்திலிருந்து பலாத்காரமாக ஒரு பூவைக் கூடப் பறிக்காதே. எனென்றும் மனிதர்கள் தேவர்களிடத்தில் மரியாதையாய் நடக்க வேண்டும். பாரதனே! மனிதர்கள் ஹோமத்தாலும், யாகத்தாலும் தேவர்களைத் திருப்தி செய்விக்கத் தக்கவர்கள். மனிதர்கள் தேவ மந்திரங்களினாலே தேவர்களைத் துதித்து வணங்க வேண்டும். ஆகையால் குழந்தாய்! மூட்டுத் தனமாய் நடவாதே. உன்னுடைய கடமையினின்றும் தவறாதே. உன் குல தர்மத்தை நினைத்து நெறி தவறாமல் நட.

26—37. தன் குல தர்மத்தை அறியாமலும், பெரியோர்களுக்கு மரியாதை செய்யாமலும் இருக்கிற மனிதர்கள் பிருகஸ்பதிக்குச் சமானமானவர்களாயிருந்த போதிலும், அவர்கள் தர்மார்த்தங்களை அடைவதில்லை. பகுத்துணராமலும் உணர்ச்சி இல்லாமலும் நடக்கிறவர்கள் துக்கத்தையே அடைவார்கள். நாலு வருணாச்சிரமங்களும் தர்மத்தினாலேயே நடை பெறுகின்றன. வேதம் தர்மதிலேயே நிலை பெருகின்றது. வேதத்தினாலே யாகங்கள் விளங்குகின்றன. யாகங்களினாலே தேவர்கள் நிலை பெறுகின்றார்கள். வேதங்களில் கூறிய விதிப்படி செய்கிற யாகங்களினாலே தேவர்கள் ஆதரிக்கப்படுகிறார்கள். மனிதர்களோ பிருகஸ்பதி உசனர் இவர்கள் கூறிய விதிப்படி நடந்து தம்மைத் தாமே இரட்சித்துக்கொள்ள வேண்டும் கூலிக்கு வேலை செய்தலும், வரி வாங்குதலும், வாணிபம் செய்தலும், பயிரிடுதலும், ஆடுமாடுகளைப் பாதுகாத்தலுமாகிய தொழில்களினாலேயே உலகம் நிலைபெறுகின்றது. வேதமோதுவதும், பயிரிடுதலும், வியாபாரம் செய்தலும், அரசியலும் பிராமணர் முதலிய நால்வருக்கும் ஜீவனோபாயமாக அறிஞரால் நியமிக்கப்பட்டன இவைகளைக் கிரமமாய் அனுஷ்டித்து வருதனாலே உலகம் சுகமாய்க் காப்பாற்றப்படுகிறது. மனிதர்கள் தங்கள் குல தர்மப்படி நடவா விட்டால் வைதிக நெறியும் அரசாட்சி முறையும் கெடும். மனிதர்கள் தத்தமக்குரிய தொழில்களைச் செய்யா விட்டால் சீக்கிரத்தில் கெடுவார்கள். தங்கள் தொழிலைத் தவறாமல் செய்ததினாலேயே அவர்கள் புண்ணியத்தை அடைகிறார்கள். பிராமண மதம் ஆத்மஞானத்தையுடையதா யிருக்கிறது. உலகமெல்லாம் அவ்வண்ணமாகவே யிருக்கிறது. வேள்வி, வேதாத்தியயனம், தானம் இவை மூன்றும் பிரசித்தமான பிராமணருக்குரிய சாதாரண தர்மங்களாம். யாகம் செய்வித்தல், ஓதுவித்தல், தானம் வாங்குதல் இம்மூன்று தர்மங்களும் பிராமணர்களுக்குரியனவே யாம். உலகத்தை நீதியாய்ப் பரிபாலிப்பதே க்ஷத்திரியருக்குரிய சுதர்மமாம். பசுக்களைப் பாதுகாத்தலே வைசிய தர்மமாம்.

துவிஜர்களுக்குப் பணிவிடை செய்வதே சூத்திரருக்குரிய தர்மமாம். சூத்திரர்கள் யாசகம் செய்யவும், ஹோமஞ் செய்யவும், விரதாநுஷ்டானம் பண்ணவும் கூடாது. அவர்கள் தங்களுடைய எஜமானர்களுடைய வீட்டிலேயே வசிக்கவேண்டும் குந்தி புத்திரா! மனிதர்களைப் பரிபாலிக்கிற க்ஷத்திரிய தர்மமே உனக்குரியது. ஆகையால் ஆசையை அடக்கி, வணக்கத்துடன் உன் குலதர்மத்தை நீ செய்.

38—49 யோக்கியர்களும், அறிவுள்ளவர்களும், படித்துணர்ந்தவர்களுமான மந்திரிகளுடைய யோசனையைக் கேட்டு அதன்படி நடக்கிறவனே உலகத்தைப் பரிபாலனம் செய்வதற்குரிய அரசனாவான் பாபியான அரசன் எப்போதும் தோல்வியடைகிறான் அரசன் தண்டிக்க வெண்டியகாலத்தில் கிரமமாய்த் தண்டித்தும், தகுந்த காலத்தில் தயவு பாராட்டியும் பரிபாலித்தால்தான் உலகம் சரியான நிலைமையிலிருக்கும். ஆகையால் பகைவருடைய தேசம், துர்க்கம், துணைவலி, சுகதுக்கங்கள் இவைகளை ஒற்றர்களால் உணர்ந்து கொண்டு ஜாக்கிரதையா யிருக்க வேண்டும். அரசர்களுக்கு ஒற்றர்களே பிரதானமான உதவி. விளைத்திறம், ஸ்தானுபத்தியம், சாமர்த்தியம், தண்டனை, பராக்கிரமம் இவைகள் காரிய சித்தியைக் கொடுக்கும். சாமம், தானம், பேதம், தண்டம் என்பவற்றாலும் சித்தி கைகூடும். இராஜாங்கத்துக்கு ஸ்தானுதிபதியே மூலமாம். ஸ்தானுதி ஒற்றர்களுக்குரிய முக்கிய குணமாம். நன்றாய் யோஜித்துத் தீர்மானம் செய்தலே அரச முறையில் சித்தி தரும். ஆகையால் இராஜாங்க காரியங்களில் தகுந்த பிராமணர்களுடைய யோசனையைக் கேட்டு நடப்பதே தகுதி. மந்திராலோசனையில் ஸ்திரீகள், மூடன், சிறுவன், பேராசையுள்ளவன், ஈனகுணமுள்ளவன், உன்மத்த குணமுள்ளவன் இவர்களைச் சேர்க்கக் கூடாது. அறிவிற் சிறந்தவர்களுடனேயே யோசனை செய்ய வேண்டும், சாமர்த்திய முள்ளவர்களைக் கொண்டே இராஜாங்க காரியங்களை நடத்த வேண்டும். சிநேகிதமான மனிதர்கள் மூலமாகவே ஸ்தானுபத்தியத்தை நடத்த வேண்டும். மூடர்களை எப்பொழுதும் விலக்க வேண்டும். மத விஷயங்களில் பக்திமான்களையும், இலாப மடையும் விஷயங்களில் கற்றறிந்தவர்களையும், பெண்கள் விஷயத்தில் அண்ணகர்களையும், மற்ற முரட்டுத்தனமான வேலைகளில் மூடர்களையும் நியமிக்க வேண்டும். சத்துருக்கள் விஷயத்தில் செய்யத் தக்கதையும் செய்யத் தகாததையும் தீர்மானிப்பதிலும், அவர்களுடைய பலாபலங்களை நிர்ணயம் செய்வதிலும் தன்னுடைய தூதர்களையும் எதிரிகளின் தூதர்களையும் அனுசரித்தே செய்ய வேண்டும். புத்திசாலித்தனமாய் வந்து அடைந்த யோக்கியர்களுக்குத் தயவு பாராட்ட வேண்டும். நியாய விதியைக் கடந்தவர்களையும், அடங்காதவர்களையும் எப்போதும் தண்டிக்க வேண்டும். அரசன் நியாயமாய்த் தண்டித்தும், தயவு பாராட்டியும் நீதி செலுத்தினுல் தர்மம் ஒழுங்காய்ப் பரிபாலிக்கப்படும். அதனுல் ப்ரஜைகள் சரியான வழியில் நடப்பார்கள்,

50—52. பார்த்தனே! அறியதற்குரிய இராஜ நீதிகளை யுனக்குச் சொன்னேன். நான் சொன்னபடியே உன்னுடைய குல தர்மத்தைச் செய். பிராமணர்கள் தவத்தினாலும், புலனை அடக்குவதாலும், யாகங்களைச் செய்வதாலும் சொர்க்க மடைவார்கள். வைசியர்கள் தானத்தினாலும், அதிதி பூஜையினாலும் தர்மஞ் செய்வதாலும் சொர்க்கம் பெறுவார்கள். க்ஷத்திரியர்கள் ஜனங்களை சிட்சிப்பதாலும் இரட்சிப்பதாலும் சொர்க்க மடைவார்கள். காமம், பொறாமை, ஆசை, கோபம் இவைகளை விட்டுத் தன் குடிகளை நீதிப்படி தண்டிக்கிற அரசன் தர்மாத்மாக்கள் அடைகிற மேலான கதியை அடைவான் என்று அனுமான் பீமசேனனுக்கு இராஜ நீதி முறைமைகளை யெடுத்துச் சொன்னார்.

---

## 151-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. அதன் பின் அனுமான் தாம் எடுத்துக் கொண்ட பெரிய சொரூபத்தைச் சுருக்கிக் கொண்டு, பீமசேனனை இரு கைகளாலும் தழுவிக்கொண்டார். இப்படித் தழுவிக்கொண்ட போது பீமனுடைய களைப்பு முற்றும் ஒழிந்தது. பழய பலம் வந்து விட்டது. பீமன் அதிக பலத்தை யடைந்து தனக்குச் சமானமான பலசாலிகளில்லை யென்று கருதினான். அனுமான் மறுபடியும் பீமனிடத்திலுண்டான அன்பினாலே கண்களில் நீர் சொரிய மொழி குழறப் பீமனை நோக்கிச் சொல்லுகிறார். வீரனே! இனி உன் இருப்பிடத்தை நோக்கிச் செல். நீ என்னை ஞாபகத்தில் வை. நான் இங்கே வசிப்பதை ஒருவருக்கும் சொல்லாதே. தேவர் கந்தர்வர் இவர்களுடைய பத்தினிமார்கள் இவ்விடத்தில் எப்போதும் வருகிறார்கள். அவர்கள் வருகிற காலம் சமீபித்தது உன்னைப் பார்த்ததனால் என் கண்கள் பாக்கியம் பெற்றன. இரகு வம்சத்தில் இராமன் என்ற பெயருடன் அவதரித்தவரும், உலகத்துக் கெல்லாம் மகிழ்ச்சி தருபவரும், சீதையாகிய தாமரைக்கும், இராவணாதிகளான இருட்டுக்கும் சூரியனைப் போன்று பிரகாசிக்கிறவருமான அந்த மஹா விஷ்ணுவை நான் எப்போதும் மனதில் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். நீ என்னோடு சம்பாஷித்தது வியர்த்தமாகக் கூடாது. சகோதர வாஞ்சையால் நீ என்னிடத்திலிருந்து ஒரு வரத்தைக் கேட்டுக் கொள். உனக்கு விருப்பமிருந்தால் நான் இப்பொழுதே அஸ்தினாபுரத்துக்குப் போய்த் துஷ்டனான துரியோதனனையும் அவனுடைய சகோதரர்களையும் சங்கரித்து விடுகிறேன். அல்லது அந்த நகரத்தைக் கல்லினாலே அரைத்து விடுகிறேன். அல்லது துரியோதனனைக் கட்டி யிங்கே இழுத்துக் கொண்டு வந்து விடுகிறேன். இவைகளை யெல்லாம் இன்றைக்குள் செய்து விடுகிறேன் என்றார்.

12—19. இதைக் கேட்ட பீமன் மனம் மகிழ்ந்து சொல்கிறான். மஹாபாகுவானவரே! உம்மாலே இவைகள் எல்லாம் செய்யப்பட்டவைகளாகவே

நான் கருதுகிறேன். உமக்கு நன்மை யுண்டாகட்டும். நீர் என்னிடத்தில் கிருபையுள்ளவரா யிருக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். மஹாநுபாவரே! நீர் எங்களுக்கு இரட்சகராக ஏற்பட்டபோதே பாண்டவர்கள் அரசாட்சியை அடைந்து விட்டார்களென்றே நினைக்கிறேன். உமது மகிமையாலே நாங்கள் சத்துருக்களை யெல்லாம் ஜயித்து விடுவோம் என்றான். பிறகு அநுமான் சொல்லுகிறார். பீமசேனா! சகோதர சேஷத்தாலேயும், சிநேகிதத்தினாலேயும், உனக்கு ஒரு நன்மை செய்கிறேன். அம்புகளையும் ஆயுதங்களையும் தரித்துக் கொண்டிருக்கிற சத்துருவின் சேனைகளுக்குள் புகுந்து நீ சிங்கநாதம் செய்கிறபோது அந்தச் சப்தத்துடன் நானும் சேர்ந்து கர்ஜிப்பேன். அப்போது இரண்டு தொனியும் ஒன்றாய்க் கலந்து எழும்புவதினாலே சத்துருக்கள் கலங்குவார்கள். அர்ஜுனனுடைய கொடியில் நானிருந்து கொண்டு கர்ஜிப்பேன். அந்தத் தொனி பகைவர்களுடைய தைரியத்தை நாசம் பண்ணிவிடும். பிறகு நீங்கள் எளிதில் பகைவர்களைச் சங்கரித்து விடலாம் என்று சொல்லிப், பீமசேனனுக்கு அவன் போக வேண்டிய வழியைக் காட்டி விட்டு அநுமான் மறைந்து போனார்.

---

## 152-வது அத்தியாயம்.

*தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—14. அநுமான் மறைந்து போன பின், பீமன் அவர் காட்டின வழியாகச் சென்றான். அநுமானுடைய சரீரத்தையும், உலகத்தில் ஒப்பற்ற அவருடைய மகிமையையும், இராமருடைய சரித்திரத்தையும், உலகத்தில் ஒப்பற்ற அவருடைய மகிமையையும், இராமருடைய பெருமையையும் சிந்தித்துக் கொண்டே போனான். தாமரை மலர் இருக்கிற தடாகத்தைத் தேடிக் கொண்டு வனங்கள், சோலைகள், ஆறுகள், ஏரிகள், மலர்கள் நிறைந்த மரங்களடர்ந்த காடுகள் எல்லாவற்றையுங் கடந்து சென்றான். புழுதிபடிந்த சரீரத்தையுடைய மதயானைக் கூட்டங்களைக் கண்டான். அவைகள் மழை பொழிகிற மேகக் கூட்டங்களைப் போன்றிருந்தன. மான்கள் கூட்டங் கூட்டமாய் வாயில் புல்லைக் கௌவிக்கொண் டிருப்பதைப் பார்த்துக் கொண்டே போனான். தன் பராக்கிரமத்தினால் அச்சமற்றிருக்கிற பீமன், எருமை, கரடி, சிறுத்தை, சிவிங்கி முதலிய துஷ்ட மிருகங்கள் வசிக்கிறதும், செக்கிறமான இலைகளையும் பரிமளம் வீசுகின்ற மலர்களுள்ளதும், காற்றினால் அசைந்து கொண்டிருக்கிறதுமான மரங்கள் அடர்ந்ததுமான வனத்தில் நுழைந்து சென்றான். தாமரைகளும் அல்லிகளும் நிறைந்த ஆழமான துறைகளை யுடைய ஏரிகளையும் வண்டுகள் ஒலித்துக் கொண்டிருக்கிற வனங்களையும் கடந்து சென்றான், அந்த ஏரிகள் தாமரை மலராகிய கைகளினாலே பீமனுக்குக் கும்பிடுகிறது போலத் தோன்றின. மலைச் சரிவுகளைப் பார்த்துக் கொண்டு வெகு வேக

மாய்ச் சென்றான். பகல் பொழுது கடந்தபோது அவ்வனத்தில் மான்கள் உலாவிக் கொண்டிருப்பதையும், சொர்ணத் தாமரைப் பூக்களையுடைய நதியையும் கண்டான். அன்னங்களும் நீர்க் காக்கைகளும், சக்கரவாகப் பறவைகளும் நிறைந்திருக்கிற அந்த நதியானது மலை யரசன் பூண்டு கொண்டிருக்கிற தாமரை மலர் மாலையைப் போலக் காணப்பட்டது. பீமன் சூரியனைப் போல ஒளி வீசிக் கொண்டிருக்கிற ஸௌகந்திகம் என்னும் இன்பமான வனத்தைக் கண்டான். அதைப் பார்த்த வுடனே தன்னுடைய கருத்து நிறைவேறி விட்டதென்று கருதி மனம் மகிழ்ந்தான். திரௌபதி அந்த மலர் மாலையை அணிந்து கொண்டதாகவே எண்ணினான்.

---

## 153 வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—10. அவ்விடம் போன வுடனே பீமசேனன் கைலாச பர்வதத்தின் சிகரத்தைப் பார்த்தான். அந்தச் சரசு தாமரைகளால் நிறைந்தும், அழகான வனங்களால் சூழப்பட்டு மிருந்தது. இராட்சதர்கள் காவல் செய்து கொண்டிருந்தார்கள். குபேரனுடைய இடத்துக்குச் சமீபத்திலுள்ள மலை யருவியால் அந்தத் தடாகம் நிறைக்கப்பட்டது. இன்பமாயிருந்தது. விசாலமான நிழல் பரந்திருந்தது. பல வகையான மரங்களாலும் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பசுமையான அல்லிகள் நிறைந்திருந்தன. சொர்ணத் தாமரை மலர்கள் அடர்ந்திருந்தன. பல வகையான பறவைகள் ஒலித்துக் கொண்டிருந்தன அதன் கரை அழகாயும் சேறில்லாததாயு மிருந்தது. அம்மலைமே லிருந்த அந்தத் தடாகம் உலகத்திலில்லாத அற்புதமானதா யிருந்தது. பார்வைக்கு இனியதாயும் அழகுள்ளதாயு மிருந்தது. பீமன் அந்த அமிர்த தடாகத்தைக் கண்டான். அதன் நீர் குளிர்ச்சியுள்ளதா யிருந்தது. பிரகாசமாயும் தெளிவாயும், ஒளி யுள்ளதாமிருந்தது. பீமன் அதன் நீரை நிரம்பக் குடித்தான். அந்த நதி தெய்வத் தன்மை யுள்ள சௌகந்திகம் என்னும் தாமரையால் நிறைந்திருந்தது. வெகு அழகாயும் வைடூரியம் செம்புகளாகிய காம்புகளையுடைய பல வகைத் தாமரை மலர்களால் நிறைந்திருந்தது. காரண்டங்களாலும அன்னங்களாலும் அலைக்கப்படுதலால் அழகான மகரந்தங்களைச் சிந்திக் கொண்டிருந்தன. அது குபேரன் விளையாடுகிற இடம். அங்கே தேவர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள் வாசம் பண்ணிக் கொண்டிருந்தார்கள் தேவ ரிஷிகளும், கிம்புருஷர்களும், யட்சர்களும் அங்கே அடிக்கடி வருவார்கள், குபேரனால் கடுமையாகக் காவல் செய்யப்பட்டுள்ளது. அந்தத் தெய்வ தடாகத்தைக் கண்டதும் பீமசேனனுக்கு மகிழ்ச்சி யுண்டாயிற்று. குபேரனுடைய கட்டளையால் குரோதவசர் என்னும் அளவில்லாத அரக்கர்கள் ஆயுதபாணிகளாய் அதைக் காத்துக்கொண்டு சூழ்ந்திருந்தார்கள். சத்துருக்களுக்கு அச்சத்தை

யுண்டாக்குகிற வல்லமையுள்ள பீமசேனன் பயமில்லாமல் அந்த மலர்களைப் பறிக்க ஆரம்பித்தான். காவலரான இராட்சதர்கள் அவனைப் பார்த்தார்கள். உடனே அவர்கள் ஒருவரை யொருவர் கூவி யழைத்தார்கள். மான் தோலைத் தரித்துக் கொண்டிருக்கிற இந்த மனிதன் ஆயுதபாணியாய் இங்கே ஏன் வந்தான் என்று கேளுங்கள் என்று சொன்னார்கள். அவர்கள் எல்லாரும் ஒன்றாய்க் கூடிப் பீமனிடம் வந்து, நாங்கள் கேட்கிற கேள்விக்குப் பதில் சொல். மான் தோலை யணிந்து தவசியைப் போலிருக்கிறாய். ஆயுதங்களுந் தரித்திருக்கிறாய், நீ என்ன கருதி இங்கே வந்தாய் எங்களுக்குச் சொல் என்றார்கள்.

---

## 154-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—3. பீமன் சொல்லுகிறான். நான் பாண்டு மஹாராஜனுடைய குமாரன். யுதிஷ்டிரருக்குப் பின் பிறந்தவன். என் பேர் பீமசேனன். நான் என் தமையனுருடன் பதரிக்கு வந்திருக்கிறேன். அவ்விடத்தில் பாஞ்சாலி ஒரு தாமரை மலரைக் கண்டாள். அதைப் போன்ற அநேக தாமரைகள் வேண்டும் என்று விரும்பினாள். நிசாசரர்களே! நான் எப்போதும் என் தர்ம பத்தினியினுடைய மனோரதத்தை நிறைவேற்றி வைப்பது வழக்கம். ஆகையால் இந்த மலர்கள் கொய்யும் பொருட்டு இங்கே வந்தேன் என்றான்.

4—8. காவற்காரர்கள் சொல்லுகிறார். மனிதருட் சிறந்தவனே! இது குபேரனுக்குப் பிரியமான உத்தியான வனம். மனிதர்கள் இங்கே வரக் கூடாது. தேவ ரிஷிகளும் யட்சர்களும் குபேரனுடைய உத்தரவை அடைந்து, பின்பு இந்தத் தடாகத்தை அடைந்து விளையாடுவார்கள் இதன் நீரைக் குடிப்பார்கள். கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் வருவார்கள். குபேரனுடைய உத்தரவைப் பெறாமல் அநியாயமாய் இங்கே வருகிறவன் நிச்சயமாகவே அழிவான். நீ குபேரனுடைய உத்தரவைப் பெறாமல் பலாத்காரமாக மலர்களைக் கொண்டு போகக் கருதுகிறாய். இப்படி அநியாயம் செய்கிற நீ தர்மராஜனுடைய தம்பி என்று ஏன் சொல்லிக் கொள்கிறாய்? முன்னால் குபேரனிடம் உத்தரவு கேள். பிறகு இந்தத் தண்ணீரைக் குடித்து விட்டு உனக்கு வேண்டிய மலர்களைப் பறித்துக்கொண்டு போ. அப்படிச் செய்யா விட்டால், நீ இந்த மலர்களைக் கண்ணால் கூடப் பார்க்கக் கூடாது என்றார்கள்.

9—13. பீமசேனன், ஓ இராட்சதர்களே! குபேரனை நான் இவ்விடத்தில் காணவில்லை. கண்ட போதிலும் இந்த மலர்களுக்காக யான் அவனைக் கெஞ்ச மாட்டேன். ஏனென்றால் க்ஷத்திரியர்கள் யாசிப்பதில்லை. இது க்ஷத்திரியர்களுடைய நித்தியமான தர்மம். நான் க்ஷத்திரிய தர்மத்தை யிழக்கப் பிரியப்பட வில்லை, இந்தத் தடாகம் மலை நடுவில் உண்டாயிருக்கிறது. குபே

ரனுடைய பட்டணத்தில் இருக்க வில்லை. ஆகையால் குபேரனைப் போலவே எல்லாரும் இதற்குப் பாத்திய முடையவர்களாயிருக்கிறார்கள். இப்படி யிருப்பதால் அவனைக் கெஞ்ச வேண்டிய அவசியம் என்ன? என்றான். மஹா பாகுவும், பொறாமை யற்றவனும் மஹா பராக்கிரம முடையவனுமான பீமன் அந்தக் குளத்தில் முழுகினான்.

14—24. இராட்சதர்கள் அப்படிச் செய்யாதே என்று சொல்லி அவனைத் தடுத்தார்கள். வைதுகொண்டு நாற் புறத்திலும் சூழ்ந்தார்கள். பீமன் அவர்களைக் கொஞ்சம் கூட மதியாமல் அதில் ஸ்நானம் பண்ணினான். இராட்சதர்கள் அவனை எதிர்க்கத் தொடங்கினார்கள். அவர்களுடைய கண்கள் கோபத்தினால் சுழன்றன. ஆயுதங்களை ஓங்கிக்கொண்டு அவனை நோக்கி ஓடினார்கள். சிலர் அவனைப் பிடித்துக் கட்டுங்கள் என்றார்கள். சிலர் இவனை வெட்டுங்கள் என்றார்கள். சிலர் இவனைக் கடித்துத் தின்னுங்கள் என்றார்கள். பராக்கிரமசாலியான பீமன் காலதண்டம் போன்ற தனது கதாயுதத்தைதை எடுத்துக்கொண்டு அவர்களைத் திரும்பிப் பார்த்து நில்லுங்கள் நில்லுங்கள் என்று கூறி எதிர்த்தான். இராட்சதர்கள் ஈட்டி, கதை, கோடரி முதலிய ஆயுதங்களை ஓங்கிக்கொண்டு அவன் மேல் பாய்ந்தார்கள். பீமனைக் கொல்லக் கருதி அந்த அரக்கர்கள் அவனை நாற் புறத்திலும் சூழ்ந்து கொண்டார்கள். பீமன் வாயு புத்திரனாதலால் அதிக தைரிய முடையவனும் ஒருவராலும் ஜயிக்க முடியாதவனும், தர்மமும் சத்தியமு முள்ளவனுமு மிருந்தான். ஆகையால் அந்த அரக்கர்களை வென்று அவர்களுடைய ஆயுதங்களை நாசம் பண்ணி விட்டான். அவர்களுள் நூறு பேர்களுக்கு மேல் கொன்று விட்டான். பீமனுடைய பலத்தையும் சாமர்த்தியத்தையும் பார்த்து, அரக்கர்கள் அவனுக்கு எதிரில் நிற்க ஆற்றாதவர்களாய் ஓட்டம் பிடித்தார்கள். யுத்த பூமியை விட்டு ஓடிப் போனார்கள் ஆகாயமாய்க் கைலாச மலையை நோக்கிப் பறந்து ஓடினார்கள். இந்திரன் தானவர்களையும் தைத்தியர்களையும் வெல்வது போல பீமசேனன் அந்த அரக்கர்களை வென்று ஜயம் கொண்ட பின் மறுபடியும் அந்தக் குளத்தில் முழுகினான். புஷ்பங்களையும் திரௌபதிக்காகப் பறிக்கத் தொடங்கினான். அந்த நீரைக் குடித்த வுடனே பீமனுக்குப் பலமும் ஊக்கமும் அதிகமாயின. அநேக மலர்களைப் பறித்துக் கொண்டான்.

25—27. இதற்கு மத்தியில் பீமனால் அடித்துத் துரத்தப்பட்ட குரோதவசர்கள் மிகவும் பயந்து, குபேரனிடம் போய்ப் பீமனுடைய பலத்தையும் அவன் செய்ததையும் சொன்னார்கள். அதைக் கேட்ட குபேரன் புன் சிரிப்புடனே அவர்களைப் பார்த்துத் திரௌபதிக்காகப் பீமசேனன் வேண்டிய மலர்களைப் பறித்துக் கொள்ளட்டும். இது எனக்கு முன்னாலேயே தெரியும் என்று சொன்னான். அதன் பின் அந்த அரக்கர்கள் கோபத்தை விட்டுத் திரும்பிப் போய் அந்தத் தாமரைத் தடாகத்தில் பீமன் ஒருவனாய் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

## 155-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. வைசம்பாயனர் ஜனமேஜயனைப் பார்த்து அரசனே! பீமசேனன் அருமையும், தெய்வத் தன்மையுமுள்ள பல வகையான மலர்களை வேண்டியமட்டும் பறித்துக் கொண்டான். பீமன் இங்கே யுத்தம் செய்கையில் பதரியில் திடீரென்று ஒரு பெரிய காற்று எழுந்து கற்களையும் பரல்களையும் வாரியிறைத்தது. பிறகு இடி முழக்கத்துடன் எரி கொள்ளிகள் விழுந்தன. இருள் மூடிக்கொண்டது. சூரிய கிரணம் மறைந்து போயிற்று. ஆகாயத்தில் பயங்கரமான சப்தம் உண்டாயிற்று. பூமி நடுங்கிற்று. மண்மாரி பெய்தது. பறவைகளும் மிருகங்களும் கத்தின. எல்லா வற்றையும் இருள் மூடிக் கொண்டது. ஒன்றும் கண்ணுக்குத் தெரியவில்லை. இன்னும் பல அபசகுனங்களும் தோன்றின. இவைகளைக் கண்ட யுதிஷ்டிரர் யார் நம் மேல் எதிர்த்து வருகிறவர்கள்? யுத்தத்தில் தோல்வி யடையாத பாண்டவர்களே! க்ஷேமமாய் இருங்கள் ஆயுதங்களை யெடுத்துக் கொள்ளுங்கள். இந்தத் துர்ச்சகுனங்களாலே யுத்தம் நேரிடுமென்று நினைக்கிறேன் இப்படிச் சொல்லிக் கொண்டு தர்மராஜா நாற்புறமும் சுற்றிப் பார்த்தார். பீமனை அங்கே காணவில்லை உடனே தமது அருகிலிருந்த திரௌபதியையும் இரட்டையர்களையும் நோக்கிப் பீமன் எங்கே என்றார். பாஞ்சாலி! பீமன் ஏதாவது பெரிய செய்கையைச் செய்ய நினைத்தானா? அல்லது தன் பராக்கிரமத்தைக் காட்டும்படியான தொழிலை மேற்கொண்டு போயிருக்கிறானா! இந்த அபசகுனங்கள் பெரிய சண்டைக்கும், அபாயத்துக்கும் அடையாளமாக இருக்கின்றன என்றார். உடனே திரௌபதி சிரிப்புடன் சொல்லுகிறாள்.

12—19. மஹாராஜாவே! காற்றினால் இங்கே கொண்டு வரப்பட்ட தாமரை மலரைப் பீமனுக்குக் காட்டி அந்த மலரைக் கொண்டு வந்து தரும்படி கேட்டேன். உம்மால் கூடுமானால் இம்மாதிரியான மலர்களைப் பறித்துக் கொண்டு சீக்கிரம் வாருமென்று சொன்னேன். மஹாராஜாவே! அந்த வீரர் என் விருப்பத்தைச் செய்யும் பொருட்டு வட கீழ்த்திசை நோக்கிப் போயிருப்பார் என்றாள், இதைக் கேட்ட தர்மராஜா இரட்டையர்களைப் பார்த்து, நாம் எல்லாரும் பீமன் சென்ற வழியைப் பற்றிச் செல்ல வேண்டும். களைத்திருக்கிற பிராமணர்களை இராக்ஷதர்கள் தூக்கிக் கொண்டு செல்லட்டும். கடோத்கசா! நீ திரௌபதியைத் தூக்கிக்கொள். பீமன் இந்தப் பெரிய காட்டுக்குள் புகுந்திருப்பான். காற்றைப் போல வேகமுள்ள அவன் போய் வெகு நேரமாயிற்று. அவன் பூமியில் தாண்டி நடக்கும் போது கருடனைப் போலத் தோன்றுகிறான். அவன் ஆகாயத்தில் கூடத் தாண்டிச் சென்று மீளுவான். ஓ நிசாசரர்களே! உங்களுடைய உதவியைக் கொண்டு நாங்கள் பீமனைத் தேடியடைய வேண்டும் என்றார்.

20—33. கடோத்கசனும் மற்றைய இராக்ஷசர்களும் அப்படியே ஆக ட்டும் என்று சொன்னார்கள். குபேரனுடைய அந்தத் தடாகமிருக்கிற இடம் அவர்களுக்குத் தெரிந்திருக்கிறபடியால் ரோமசர் பாண்டவர்களையும் மற்று முள்ள பிராமணர்களையும் தூக்கிக்கொண்டு வானமார்க்கமாய்ச் சென்றார் கள். வேகமாய்ப் போய் அந்த வனத்தை அடைந்தார்கள். சொர்ணத் தாம ரைகளும் ஆம்பல்களும் நிறையப் பூத்திருக்கிற அந்த ஏரிக்கரையில் பீமனைப் பார்த்தார்கள். அங்கே பீமனால் கொல்லப்பட்டுக் கண்கள், தலைகள், கால் கள், தொடைகள் சிதறிக் கிடக்கிறவர்களையும் பார்த்தார்கள். பீமன் கண்கள் சிவக்க, உதட்டைக் கடித்துக்கொண்டும், கதையை ஓங்கிக்கொண்டும் யுக முடிவு காலத்தில் காலதண்டத்துடன் தோன்றுகிற எமனைப் போல நின்று கொண்டிருக்கிற பீமசேனனைப் பார்த்துத், தர்மராஜா அவனைப் பல முறை தழுவிக்கொண்டு இனிய வசனங்களால் சொல்லுகிறார். குந்தி குமாரா! என்ன காரியம் செய்தாய்? உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். நீ எனக்கு நன் மை செய்ய விரும்பினால் இப்படிப்பட்ட கெட்ட காரியத்தைச் செய்யாதே. தேவர்களுக்குக் கோபம் உண்டாக்காதே என்றார். பிறகு தேவர்களைப் போ ன்ற அவர்கள் அந்தத் தடாகத்தில் முழுகி விளையாடினார்கள். அப்போது அந்த வனக்காவலாளர்கள் ஆயுதம் தரித்த மலைகளைப் போல அங்கே வந்து தர் மர், ரோமசர், நகுல சகதேவர்கள் முதலானவர்களைப் பார்த்து, அவர்கள் பாத த்தில் வணங்கினார்கள். யுதிஷ்டிரர் அவர்களுக்குச் சமாதானம் கூறினார். அவர்களும் மனம் மகிழ்ந்தார்கள். பிறகு குபேரனுடைய உத்தரவின் மேல் அர்ஜுனன் வருகையை எதிர் பார்த்துக்கொண்டு அவ்விடத்தில் கொஞ்ச காலம் வசித்தார்கள்.

---

## 156-வது அத்தியாயம்.

### தீர்த்தயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—12. அவர்கள் அங்கே வசிக்கும் போது யுதிஷ்டிரர், திரௌபதி யையும் தமது தம்பிமார்களையும், மற்றுமுள்ள பிராமணர்களையும் நோக்கிச் சொல்லுகிறார். நாம் ஒன்றின் பின் ஒன்றாக அநேக தீர்த்தங்களையும், பார்ப்ப தற்கு இன்பமான பல வனங்களையும் தரிசித்தோம். அவைகளெல்லாம் முன்பு தேவர்களாலும் மகாத்மாக்களான ரிஷிகளாலும் தரிசிக்கப்பட்டவைகள். அநேக ஆச்சிரமங்களில் பிராமணர்களுடன் அநேக யக்ஞங்களையும் செய்தோம், அநேக ரிஷிகளுடைய சரித்திரங்களையும், மகிமைகளையும் கேட்டோம். பூர்வ காலத்து இராஜரிஷிகளின் சரித்திரங்களையும் கேட்டோம். தேவர்களை மல ராலும் நீராலும் ஆராதித்தோம். அங்கங்கே கிடைக்கக் கூடிய கனிகளா லும் கிழங்குகளாலும் பிதிர்களுக்குத் திருப்தி செய்வித்தோம், சிறந்த மலை களிலும், தீர்த்தங்களிலும், கடல்களிலும் தர்ப்பண ஹோமாதிகளைச் செய்

தோம். ஸிந்து, சரஸ்வதி, நர்மதை முதலிய தீர்த்தங்களிலும் பிராமணர்களுடன் ஸ்நானம் பண்ணினேம். கங்கை செல்லும் மார்க்கமாகப் போய் அநேக மலைகளையும், இமய மலையையும் தரிசித்தோம். நரநாராயணர்களுடைய ஆச்சிரமம் இருக்கிற பதரியையும் கண்டு வணங்கினேம். தேவரிஷிகளும், தேவர்களும் வணங்குகிற மடுவையும் தரிசித்தோம். இவைகளெல்லாவற்றையும் மஹாத்மாவான ரோமசருடனே சென்று தரிசித்தோம். ஓ பீமா! இப்போது அதோ இருக்கிற குபேரனுடைய இருப்பிடத்துக்குப் போகப் போகிறேம். அங்கே செல்லும்படியான உபாயத்தை யோசி என்றார்.

13—21. இப்படி அவர் சொல்லிக்கொண்டிருக்கிற போது ஒரு அசரீரி யுதிஷ்டிரரை அழைத்து நீர் குபேர நகரம் போக முடியாது. இதோ இருக்கிற வழியாகத் திரும்பிப் போய் நரநாராயணாச்சிரமத்தை அடையும். குந்தி புத்திரரே! அங்கிருந்து விருஷபர்வாவின் ஆச்சிரமத்துக்குப் போகலாம். அவ்விடத்தில் மலர்களும், கனிகளும் நிறைந்திருக்கும். சித்தர்களும் சாரணர்களும் அவ்விடத்துக்கு அடிக்கடி வருவார்கள். அதைக் கடந்தால் அர்ஷ்டிஷேணாசிரமத்துக்குப் போகலாம். அங்கிருந்து நீர் குபேர நகரத்தைப் பார்க்கலாம் என்றது. அப்போது நல்ல காற்று இன்பமாயும், குளிர்ச்சியாயும் வீசிற்று. தெய்வீக மணத்துடன் மலர் மாரி பெய்தது. இந்த ஆகாய வாணியின் வசனத்தைக் கேட்டதும் யுதிஷ்டிரர் முதலானவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். அப்போது தௌமியா யுதிஷ்டிரரைப் பார்த்து அரசனே! இது மறுத்துப் பேசப்படாதது. ஆகையால் அப்படியே செய்வோம் என்றார். யுதிஷ்டிரரும் அதற்கு உடன்பட்டார். உடனே நரநாராயண ஆச்சிரமம் போய் அங்கே எல்லாரோமே தங்கினர்.

---

## 157-வது அத்தியயம்.

ஜடாசுர வத பர்வம்

1—11. பாண்டவர்கள் மலை யாசாகிய அம்மலையில் வசிக்க இச்சித்தபோது கடோத்கசன் முதலியவர்கள் புறப்பட்டுத் தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். பீமன் அந்த மலையில் யதேச்சையாய்த் திரிந்துகொண்டிருந்தான். அப்போது யாரோ ஒரு இராட்சதன் தர்ம ராஜனை நகுல சகதேவர் திரௌபதியுடன் தூக்கிக்கொண்டு போய்விட்டான். அவ்வரக்கன் பாண்டவர்களுடைய வில், அம்பு முதலிய ஆயுதங்களை அபகரிக்க விரும்பினான். அதனால் அவன் தான் பிராமணனென்றும், சமயோசிதமான யுக்திகளை யோசித்துச் சொல்ல வல்லவன் என்றும், எல்லாச் சாஸ்திரங்களிலும் வல்லவனென்றும் சொல்லிக்கொண்டு எப்போதும் பாண்டவர்கள் கூடவே வாசம் பண்ணிக் கொண்டிருந்தான். தன் கருத்தை நிறைவேற்றச் சமையம் பார்த்துக் கொ

ண்டிருந்தான். அன்றியும் திரௌபதியை அபகரித்துக்கொண்டு போவதையே முக்கியமாகக் கருதி யிருந்தான். அந்தத் துஷ்ட அரக்கனுக்கு ஜடாசுரன் என்று பேர். ஜனமேஜய மஹாராஜனே! யுதிஷ்டிரர் அவனைப் போஷித்து வந்தார். சாம்பல் பூத்த நெருப்பைப் போல் இருக்கிறானென்று ஒருவராலும் அறியக் கூட வில்லை. பீமன் வேட்டைக்குப் போயிருக்கிறதையும், கடோற்கஜன் முதலியவர்கள் போய் விட்டதையும் உணர்ந்த அந்தத் துஷ்டன், ரோமசர் முதலியவர்கள் ஸ்நானாதிகள் செய்யப் போயிருக்கிற சமையத்தில் ஒரு பயங்கரமான பெரிய ரூபத்தை எடுத்துக் கொண்டான். உடனே எல்லா ஆயுதங்களையும் திரௌபதியையும் எடுத்துக்கொண்டு, மற்றப் பாண்டவர்களையும் தூக்கிக்கொண்டு ஓடிப் போய் விட்டான். சகதேவன் மாத்திரம் பெரிய முயற்சி செய்து தப்பித்துக் கொண்டான். அவன் ஜடாசுரன் கையிலிருந்து கௌசிகம் என்கிற கத்தியைப் பிடுங்கிக்கொண்டு, பீமனைக் கூப்பிட்டுக்கொண்டு இராட்சசனைத் தொடர்ந்து சென்றான்.

12—30. அப்போது யுதிஷ்டிரர் ஜடாசுரனை நோக்கி அடே மூடா! உன்னால் தருமம் கெடுகிறதை நீ யோசிக்க வில்லை. மனிதராகப் பிறந்தவர்களும், ஈன ஜந்துக்களா யிருந்தாலும் தர்மத்தை மதிக்க வேண்டும். இராட்சதர்களே தர்மத்துக்கு மூலமா யிருக்கிறார்கள். ஆகையால் அவர்களே முக்கியமாய்த் தர்மத்தைக் கனம் பண்ண வேண்டும். ஆதியில் எல்லாரையும் விட இராட்சதர்களே தர்மத்தை நன்றாய் அறிந்திருந்தார்கள். இவற்றை யோசித்து நீ தர்மத்தை அனுசரிக்க வேண்டும். அடே இராட்சதா! தேவர்கள், ரிஷிகள், பிதிர்க்கள், சித்தர்கள், கந்தர்வர்கள், புழு, எறும்பு முதலிய ஜந்துக்களும் மனிதர்களை அனுசரித்து ஜீவிக்கிறார்கள். நீ கூட மனிதர்களை அனுசரித்தே ஜீவிக்க வேண்டியவன். மனிதர்களுக்கு க்ஷேமம் உண்டானால் உங்கள் ஜாதிக்கும் க்ஷேமம் உண்டாகிறது. மனிதர்களுக்குத் துன்பம் உண்டானால் தேவர்களும் கூடக் கஷ்டப்படுவார்கள். துஷ்டனே! நாங்கள் இராஜ்யங்களை காக்கிறவர்கள், அதிகாரம் செலுத்துகிறவர்கள், இராஜ்யம் காப்பாற்றப்படா விட்டால் க்ஷேமம் எப்படி உண்டாகும். ஏதாவது தங்களுக்குத் துன்பத்தை உண்டாக்கினால் அன்றி இராட்சதர்கள் அரசர்களுக்கு விரோதமாக எழுந்திருப்பதில்லை. நாங்கள் ஒரு குற்றமும் செய்ய வில்லையே. நாங்கள் தேவர்களையும், பெரியவர்களையும், பிராமணர்களையும் சதா வணங்கிக் கொண்டிருக்கிறோம். சிநேகிதன், நம்பிக்கை வைத்திருக்கிறவன், அன்னம் அளித்தவன், அபயந் தந்தவன் இவர்களுக்கு ஒருபோதும் துன்பம் செய்யக் கூடாது. நீ என்னிடத்தில் சுகமாய் வாழ்ந்து கொண்டிருந்தாய் நாங்கள் உனக்கு முறைப்படி மரியாதை செய்தோம். துஷ்டனே! எங்களிடத்தில் உண்டு வாழ்ந்திருந்த நீ எப்படித் துரோகம் செய்யத் துணிந்தாய்? உன் நடத்தை சரியானதல்ல. நீ பயன் இன்றி வளர்ந்து முதிர்ந்தாய். உன் குணம் சரியானதா யில்லாதபடியால், நீயும் விருதாவில் அழிய வேண்டி யிருக்கிறது.

நிச்சயமாகவே நீ இன்றைக்குச் சாவாய். நீ உண்மையாகவே துஷ்ட குணமுள்ளவனும். தர்ம நெறி கடந்தவனுமா யிருந்தால் எங்களுடைய ஆயுதங்களை எங்களிடம் கொடுத்து விடு. யுத்தம் செய்து எங்களை ஜயித்த பின் திரௌபதியைக் கொண்டு போ. மூடத் தனத்தினாலேதான் நீ இப்படிச் செய்திருக்க வேண்டும். இதனால் அதர்மத்தையும் அபகீர்த்தியையும் பெறுவாய். நீ இந்த மானிடப் பெண்ணை பலாத்காரமாகக் கொண்டு போவதால் பாத்திரத்தைக் கலக்கி அதிலுள்ள விஷத்தைப் பானம் பண்ணுகிறவனாகிறாய் என்று சொல்லிப் பின் அதிக பார முள்ளவரானார். அந்தப் பாரத்தினால் வருந்தின அரக்கன் வேகமாய்ப் போகச் சக்தி யில்லாமல் போனான். பிறகு யுதிஷ்டிரர் நகுலனையும் திரௌபதியையும் நோக்கி, நீங்கள் இந்தஇராட்சதனுக்குப் பயப்பட வேண்டாம். இவனுடைய வேகத்தைத் தடுத்து விட்டேன். ஆகையால் இவன் வேகமாய்ப் போக முடியாது. வாயு புத்திரனான பீமன் இருக்க வில்லை. பீமன் வந்த பின் இந்த இராட்சதன் ஒரு க்ஷணம் கூடப் பிழைத்திருக்க மாட்டான் என்றார்.

31—36. சகதேவன் அந்த அரக்கனைப் பார்த்துத் தன் அறிவை யிழந்து யுதிஷ்டிரரை நோக்கி, மஹாராஜாவே! க்ஷத்திரியர்களுக்குச் சௌரியத்தை தவிர மேலானது யாது இருக்கிறது? சத்துருக்களைக் கொல்வதொன்று, அல்லது யுத்த களத்தில் சாவதொன்று, இதுதான் க்ஷத்திரியர்களுக்கு இயல்பு, ஆகையால் நாம் யுத்தம் புரிவோம். நாம் இவனைக் கொல்வோம், அல்லது இவன் நம்மைக் கொல்லட்டும். மஹாராஜாவே! நம்முடைய க்ஷத்திரிய தர்மத்தை வெளிப்படுத்த இது தான் தகுந்த சமையம். இந்தச் சத்துருவைக் கொன்றாவது அல்லது இவனால் கொல்லப்பட்டாவது மேலான பதவியைப் பெறுவோம். சூரியன் அஸ்தமித்தால் இவன் சாக மாட்டான். நாம் க்ஷத்திரியராக இருப்பதினால்இதை விடஅதிகமாக நான் பேசத் தக்கது ஒன்றுமில்லை ஓ அரக்கனே! நான் பாண்டு புத்திரனாகிய சகதேவன் நில்லு நில்லு போகாதே. எங்களைக் கொன்ற பின் இந்த ஸ்திரீயைக் கொண்டு போ. அல்லது எங்களால் கொல்லப்பட்டு இவ்விடத்தில் அறிவற்றுக் கிட என்றான். இப்படி சொன்ன சகதேவன் வார்த்தையைக் கேட்ட பின் பீமசேனன் கர்ஜித்துக் கொண்டு அவ்விடம் வந்து சேர்ந்தான்.

87—47. வஜ்ராயுதத்தை உடைய இரண்டாவது தேவேந்திரனைப் போலக் கையில் கதையை ஏந்திக்கொண்டு வந்துவிட்டான். தன் சகோதரர்களையும் திரௌபதியையும் பார்த்தான். சகதேவன் இராட்சதனை அதட்டுகிறதையும் கேட்டான். அந்த இராட்சதன் விதிவசத்தால் அறிவு கெட்டுப் புத்தி மயங்கிப் பல திசைகளிலும் அலைந்துகொண்டிருந்தான். திரௌபதியையும் தன் சகோதரர்களையும் இராட்சதன் கொண்டு போகிறதைப் பார்த்துப் பீமசேனனுக்குக் கோபம்மூண்டது. ஜடாசுரனை நோக்கி அடா பாபீ! துஷ்டா! நீ எங்களுடைய ஆயுதங்களை அபகரிக்கக் கருதியிருக்கிறாய் என்பதை நான் கெடு

நாளைக்கு முன்னாலேயே அறிவேன். நான் உனக்குப் பயப்படாமையால உன்னைக் கொல்லாமலிருந்தேன். நீ பிராமணனைப் போலப் பேசிக்கொண்டிருந்தாய். எங்களிடத்தில் கொடுஞ்சொல் ஒன்றும் சொல்லாமலிருந்தாய். எங்களை மகிழச் செய்வதிலேயே பிரியனாகக் காணப்பட்டாய். எங்களுக்கு யாதொரு கெடுதியும் செய்ததில்லை. தவிர நீ எங்களுக்கு விருந்தாளியாக இருந்தாய். ஆகையாலும் பிராமண வேஷத்துடனிருந்தபடியாலும உன்னை எப்படிக் கொல்வது? இப்படிப்பட்டவனை அரக்கனென்று அறிந்தாலும் கொல்லக் கூடாது. கொன்றால் நரகம் வரும். அதுவும் தவிர உனக்கு மரணகாலம் வருகிறதற்குமுன் நீ எப்படிச் சாவாய்? அந்தக் காலம் இன்று நிச்சயமாய் வந்துவிட்டது. அற்புத காரியங்களைச் செய்கிற விதிதான் திரௌபதியைக் கொண்டு போகும்படி உன்னைத் தூண்டிவிட்டது. இப்படிச் செய்ததனால் விதியான தூண்டிலில் மாட்டிக் கொண்டவனானாய். தூண்டிலில் அகப்பட்ட மீனைப் போல நீ இன்றைக்கு சாகப்போகிறாய். நீ போக நினைத்த இடத்துக்கு நீ போக மாட்டாய். இடும்பன், பகன் முதலானவர்கள் அடைந்த இடத்துக்கு இன்று போகப் போகிறாய். இப்படிச் சொன்ன பீமன் வசனத்தைக் கேட்டு அரக்கன் மனங்கலங்கி, அவர்களைக் கீழே விட்டு விட்டு விதிவசத்தினால் பீமனை நோக்கி வந்தான்.

48—72. கோபத்தினால் அவன் உதடு துடித்தது. பீமனை நோக்கி அடா பாவீ! அடா துஷ்டா! நான் புத்தி மயக்கமில்லை உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன். இன்றுதினம் உன் இரத்தத்தை அவர்களுக்குப் பானம் பண்ணும்படி கொடுக்கப்போகிறேன் என்றான். இதைக் கேட்ட பீமன் யுகாந்த காலத்தில் உலகத்தை அழிக்கிற எமனைப் போலக் கோபங்கொண்டு, அரக்கன் மேல் பாய்ந்து அவனுடைய தாடையில் அடித்து, அவனை உறுக்கிப் பார்த்துத் தன் புஜங்களைத் தட்டிக்கொண்டு நின்றான். பீமன் யுத்தத்துக்குச் சித்தமாயிருக்கிறதை உணர்ந்த அரக்கன் இந்திரன் மேல் கோபித்துச் சென்ற பலியைப் போலப் பீமன்மேற் பாய்ந்து, அவன் தாடையில் அடித்தான். அவ்விருவரும் ஒப்பற்ற மல்யுத்தம் செய்யும்போது நகுல சகதேவர்களும் அவன்மேல் கோபத்துடன் பாய்ந்தார்கள். பீமன் புன்சிரிப்புடன் அவர்களைப் பார்த்து நில்லுங்கள் என்று தடுத்து, நான் இவ்வரக்கனுக்கு மேற்பட்டவன். அரசனே! என்மேலும் என் சகோதரர்மேலும், என் தர்மத்தின்மேலும், என் புண்ணியத்தின்மேலும், என் யாகத்தின்மேலும், சத்தியம்பண்ணிச் சொல்கிறேன். இந்த அரக்கனை நான் இன்று கொல்வேன் என்றான். பிறகு இருவரும் கைகலந்து யுத்தம் செய்தார்கள், மரங்களை வேரோடு பிடுங்கிக்கொண்டு மோகந்தம்போலக் கர்ஜித்து ஒருவரை ஒருவர் அடித்தார்கள். அவ்விருவரும் ஒருவரையொருவர் கொல்லக்கருதிப் போர் புரிந்தார்கள். அப்போது அவர்களுடைய துடையின் வேகத்தால் அநேக பெரிய மரங்கள் முறிந்து வீழ்ந்தன. ஒரு தேவனும் அசுரனும் போர்வது போலிருந்தது. அவ்விருவரும் தங்களுக் கெதிர்ப்பட்ட பெரிய மரங்களை வேரோடு பிடுங்கிக்கொண்டு ஒருவரை யொருவர்

அடித்து இடிபோலக் கர்ஜித்தார்கள். ஒருவரை யொருவர் கொல்ல விரும்பிச் செய்த அந்தக்கொடிய சண்டை, ஒரு பெண்ணுக்காகச் சண்டை யிட்ட வாலி சுக்கிரீவருடைய போரை ஒத்திருந்தது. மரங்கள் அற்றுப் போகவே குன்றுகளைப் பெயர்த்து எடுத்துக்கொண்டு கொடும்போர் செய்தார்கள். பிறகு பல்லை நெற நெற வென்று கடித்துக்கொண்டு கைகளால் குத்தியும் அடித்தும் இடித்தும் போர் புரிந்தார்கள். கடைசியில் பீமன் மிஞ்சி ஐந்து தலை நாகததைப் போலப் பொங்கி யெழுந்து ஜடாசுரன் கழுத்தில் ஒரு குத்துக் குத்தினான். அதனால் அரக்கன் களைத்துப் போனான். பீமன் அவனை அசையவொட்டாமல் பிடித்துக்கொண்டான். பின்பு தேவர்களைப்போன்ற பராக்கிரமசாலியான பீமன் அவனை உயரத்தூக்கிப் பூமியில் மோதினான். பின்பல்லைக் கடித்துக் கொண்டு, ஒரு பழத்தை அதன் காம்பினின்றுந் திருகி எடுப்பதுபோல அவன் தலையைத் திருகி எறிந்தான். அதன்பின் பீமன் ஜயத்துடன் யுதிஷ்டிரரிடம் வந்து சேர்ந்தான. எல்லாரும் அவனைப் புகழ்ந்தார்கள்

---

## 158-வது அத்தியாயம்.

### யட்சயுத்த பர்வம்.

1—14. அந்த அசுரனைக் கொன்ற பிறகு யுதிஷ்டிரர் நரநாராயணாச்சிரமதுக்கு வந்து அங்கே தங்கினார். ஒரு நாள் தர்மராஜாவானவர் அர்ஜுனனை நினைத்துக்கொண்டு தம்பிமார்களையும் திரௌபதியையும் அழைத்துச் சொல்கிறார். நாம் இந்த நாலு வருஷமாக வனங்களில் மகிழ்ச்சியுடன் சஞ்சரிக்கிறோம். ஐந்தாம் வருஷம் வந்துவிட்டது. இதுதான் அர்ஜுனன் வருகிறதற்குரிய காலம். மலைகளுக்குக் கரசான கைலாச மலையைஅடைவான். அது மலைச்சிகரங்கள் எல்லாவற்றிலும் உயர்ந்தது. எப்பொழுதும் உற்சவம் கொண்டாடப்படுவது. மங்களகரமானது. பூதத செடி கொடிகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. குயில்களும் தேன் வண்டுகளும் மகிழ்ச்சியுடன் பாடிக்கொண்டிருப்பது. சாதகப் பறவைகளும் மயில்களும் வசிப்பது. புலி, பன்றி, எருமை, கவயமா, மான், ருரு முதலிய பல மிருகங்களுக்கும் இருப்பிடமா யுள்ளது. நூறிதழ்த் தாமரைகளாலும் ஆயிர இதழ்த் தாமரைகளாலும் அழகாய் விளங்குவது. ஆம்பல் நீலோத்பலம் முதலியவற்றால் அலங்காரமாயுள்ளது. தேவர்களும் அசுரர்களும் வசிப்பதற்குரியது. அர்ஜுனனைப் பார்ப்பதற்காக நாமும் அந்த மலைக்குப் போகவேண்டும். இது ஒப்பற்ற பார்த்தனால் வியமிக்கப்பட்டது யுத்த தந்திரங்களை யெல்லாம் கற்றுக்கொள்ளும் பொருட்டு அவன் ஐந்து வருஷம் தேவலோகத்தில் வசிக்க வேண்டும். சத்துரு பயங்கரனான அர்ஜுனன் சகல ஆயுதங்களையும் பெற்றுக்கொண்டு தேவலோகத்திலிருந்து கைலாச மலை வந்து சேருவான். காண்டீவதரனை நாம் அங்கே பார்க்கலாம். யுதிஷ்டிரர் இப்படிச் சொல்லி பிராமண சங்கத்தை உபசரித்தார். அவர்களைப் பிரதட்சிணம்

பண்ணி வணங்கி இந்தச் சமாசாரத்தை அவர்களிடம் சொன்னார். பிராமணர்கள் எல்லாரும் அதை அங்கீகாரம் பண்ணிக்கொண்டு அவருக்கு மங்களவாழ்த்துக் கூறிப் பாரதோத்தமரே! உமது துன்பமெல்லாம் தொலைந்து போயின. இனி சுகமே பெருகும். அதன்பின் நீர் மனுநீதிப்படி உலகத்தைப் பரிபாலனம் செய்வீர். பின் தர்மராஜா முனிவர்கள ஆசனங்களைக் கேட்டு வணங்கிப், பிராமணர்களுடன் கைலை மலையை நோக்கிப் புறப்பட்டார்.

15--29. ரோமசா அவர்களுக்குப் பாதுகாவலாக உடன் சென்றார். உதவிக்காக இராட்சதர்களும் கூடப் போனார்கள். ஒப்பற்ற சக்தியும், பக்தியும், விரதமும் உள்ள தர்மராஜா சில இடங்களில் நடந்து போனார். கஷ்டமான இடங்களில் இராட்சதர்கள் தூக்கிக்கொண்டு போனார்கள். பல கஷ்டங்களை அடைந்து, யானை, புலி, சிங்கங்கள் வசிக்கிற வடதிசை நோக்கிச் சென்றார். கந்தமாதனத்தின் அடிவாரத்தையும், கைலாசத்தையும், மைநாக மலையையும், புண்ணியமான அநேக நதிகளையும், மலையருவிகளையும் பார்த்துக்கொண்டே போனார். பதினேழாவது நாளில் இமயமலையின் அடிவாரத்தை அடைந்தார். கந்தமாதனத்தின் பக்கங்களிலும், இமயமலை யடிவாரத்திலும் பல வகையான மரங்களும் கொடிகளும் நிறைந்து அலங்காரமா யிருந்தது. விருஷபர்வாவினுடைய ஆச்சிரமத்தைப் பார்த்தார். கொஞ்சம் சிரம பரிகாரம் செய்துகொண்டபின் இராஜரிஷியாகிய விருஷபர்வா விடம் போய் வணங்கினார்கள். அந்த இராஜரிஷி பாண்டவர்களைத் தன் புத்திரர்களைப்போலக் கருதி உபசரித்தார். பாண்டவர்கள் அங்கே ஏழு இரவு தங்கினார்கள். எட்டாவது நாளில் அந்த இராஜரிஷியை வணங்கி மரியாதை செய்து தாங்கள் பிரயாணப்பட வேண்டுமென்பதைத் தெரிவித்தார்கள். தக்க சமையத்தில் தமக்குச் சினேகிதர்களாக இருந்த பிராமணர்களை விருஷபர்வாவுக்குத் தெரிவித்தார். தங்களுடைய வஸ்திராபரணங்கள் யாக பாத்திரங்கள் எல்லாவற்றையும் அங்கேயே வைத்தார்கள். விருஷபர்வா எல்லாத் தர்மங்களையும் உணர்ந்தவர். சென்ற கால எதிர் கால சம்பவங்களை அறியும் அறிவுள்ளவர். ஆகையால் அவர்களுக்குச் சொல்ல வேண்டியவைகளை யெல்லாம் சொல்லிக் கொஞ்ச தூரம் கூடவே போனார். பின் அவர்கள் போக வேண்டிய பாதையைக் காட்டிப் பிராமணர்களுடன் அனுப்பிவிட்டுத் திரும்பினார்.

30—77. பிறகு யுதிஷ்டிரர் பல வகையான மிருகங்கள் வசிக்கும்படியான அந்த மார்க்கங்களில் காலால் நடந்து போனார். தங்குமிடத்தில் தங்கி, நாலாவது நாளில் கைலாசத்தை அடைந்தார். புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்ததும், இரத்தினங்களும், தங்கம், வெள்ளி, பல வர்ணக்கற்கள், அநேகமான மலைகள் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டே போனார்கள். மலையின்மேலே அநேக குகைகள் இருந்தன. அந்த இடங்கள் ஏறிச் செல்ல முடியாதனவா யிருந்தன. ஆயினும் அவைகளை மகிழ்ச்சியுடன் கடந்து சென்றார்கள். தௌமியர், ரோமசர், பாண்டவர் திரௌபதி இவர்கள் எல்லாரும் ஒன்றாய்ச் சேர்ந்து நடந்தார்கள். ஒருவராவது பின் தங்கவில்லை. களைக்கவுமில்லை. பின், அழகியதும்,

புண்ணிய முள்ளதும், உயரமானதும், மகிமையுள்ளதுமான மலயவனமென்னும் பர்வதத்தை அடைந்தார்கள். அந்த மலையில் பட்சிகளின் ஒலியும் மிருகங்களின் ஒலியும் நிறைந்திருந்தன. அநேக மரங்களும் கொடிகளும் அழகாய் விளங்கிக் கொண்டிருந்தன. பல வகையான குரங்குகள் வசித்தன. தாமரைத் தடாகங்களும், சதுப்பு நிலங்களும, பெரிய வனங்களும் இருந்தன. கடைசியில் கந்தமாதனத்தின் முடியிலே கிம்புருஷர்களும், சித்தர்களும், சாரணர்களும் வசிக்குமிடங்களைப் பார்த்தார்கள். வித்தியாதரர்களும் கின்னரர்களும் வசித்தார்கள். யானைக் கூட்டங்களும், புலிகளும், சிங்கங்களும் வசித்துக்கொண்டிருந்தன. சரபங்கள் கர்ஜித்துக் கொண்டிருந்தன. இன்னும் பல வகைப் பிராணிகளும் வசித்தன. தேவர்களுடைய நந்தனத்தைப் போல விளங்குகிற அந்த வனத்திலே பாண்டவர்கள் சென்றார்கள். அந்த வனம் மனதுக்கும் இருதயத்துக்கும் மகிழ்ச்சி தருவதாயிருந்தது. அழகுடையதாகவும், வசிக்கத் தக்கதாயுமிருந்தது. பாண்டவர்களும் பிராமணர்களும் இன்பமாகவும் மகிழ்ச்சி தரத் தக்கதாகவும் பாடுகிற பட்சிகளின் இனிய பாடல்களைக் கேட்டுக்கொண்டு அந்த வனத்தில் நடந்தார்கள். எல்லாப் பர்வங்களிலும் பூக்கிறதும், கனிகளின் பாரத்தால் தழைந்திருப்பதுமான பல வகை விருட்சங்களையும் பார்த்தார்கள். தென்னை, மா, பலா, அமிருதகம், மாதுளை, கொய்யா, வாழை, பேரீந்து, சம்பகம், பர்ப்பதம், வில்வம், விளா, நாவல், இலந்தை, கடம்பு, ஆல், அரசு, செல்லி, அரிதகி, இங்குடி முதலிய அநேக மரங்கள் அந்தக் கந்தமாதன தாழ்வரையிலிருக்கக் கண்டார்கள், அமிர்தம்போன்ற கனிகள் உள்ள மரங்கள் விளங்கின. இவையும் தவிர சம்பகம், அசோகம், ஆகுலம், புன்னாகம், ஸப்தபர்ணம், கர்ணிகாரம், குடஜம், மந்தாரை, பாரிஜாதம், கோவிதாரம், தேவதாரம், சாலம், தாலம், தமாலம், இலவு, கிஞ்சுகம், சரளம் இவ்வகையான மரங்கள் நிறைந்து, சகோரம் கிளி முதலிய பட்சிகளும் வசித்துக்கொண்டிருந்தன. அநேக தடாகங்கள் நீர்வாழும் பறவைகளுடன் விளங்கின. அவைகளில் குமுதம், தாமரை, கோகந்தம், உத்பலம், கல்ஹாரம், கமலம் முதலியவை வளர்ந்திருந்தன. சக்கரவாகம், நீர்க்கோழி, நீர்காக்கை, அன்னம், நாரை, கொக்கு முதலிய பறவைகள் நிறைந்திருந்தன. கந்தமாதன தடாகங்களில் உள்ள தாமரைகளில் தேனீக்களும், கருவண்டுகளும் இனிமையாகப் பாடிக் கொண்டும், மதுவைக்குடித்து மயங்கியுமிருந்தன. மேக முழக்கத்தைக் கேட்டு சில மயில்கள் தோகையை விரித்துக்கொண்டு பெட்டைகளுடன் சேர்ந்து நர்த்தனம் பண்ணிக் கொண்டிருந்தன சில மயில் கொடிகளால் பின்னப்பட்டிருக்கிற குடஜ விருட்சங்களில் பெண்மயிலுடன் கூடி மகிழ்ச்சியாய் உட்கார்ந்திருந்தன. சில மயில்கள் தோகையை விரித்துக்கொண்டு குடஜ விருட்சத்துக்கு முடி சூட்டினது போல அம்மரக் கிளைகளின் மேல் உட்கார்ந்திருந்தன. சில மரப் பொந்துகளிலிருந்து வெகு அழகாய் காணப்பட்டன. தாமரை உத்பலம் முதலியவற்றின் வாசனையுடன் கலந்து குளிர்ந்த காற்று வீசிற்று. இவைகளைப் பார்த்து யுதிஷ்டிரர் பீமனை நோக்கிச் சொல்லுகிறார்.

78—103. பீமசேனு! இந்தக் கந்தமாதன அரணியம் உண்மையாகவே வெகு இரம்மியமா யிருக்கின்றது. காட்டுமரங்களும், கொடிகளும் தழைத்துப், பூத்துக், காய்த்துப், பழுத்து மனோகரமாய் விளங்குகின்றன. அழகான மலர்கள் நிறைந்திருக்கின்றன. களித்த ஆண்குயில்கள் கூவிக்கொண்டிருக்கின்றன. முள்ளுள்ளதும், பூவில்லாததுமான மரங்கள் இவ்விடத்தில் இல்லை. இங்குள்ள மரங்கள் எல்லாம் பூக்களாலும் கனிகளாலும் நிறைந்திருக்கின்றன. அந்தத் தடாகத்தைப் பார். தாமரைகள் மலர்ந்து வண்டுகள் பாடிக்கொண்டிருப்பது எத்தனை அழகாயிருக்கிறது. அந்த ஏரியைப் பார். செந்தாமரை மலர்கள் நிறைந்திருப்பதனால் தாமரை மாலை புனைந்த மற்றொரு இலட்சுமியைப் போல விளங்குகிறது. எங்கே பார்த்தாலும் தேவர்கள் களித்து விளையாடிக் கொண்டிருக்கிற இடங்களா யிருப்பதைப் பார். பீமா! நாம் இங்கே வந்ததும் மேலான நிலைமையை யடைந்து மனோரதமெல்லாம் நிறைவேறப் பெற்றோம். பறவைகளெல்லாம் தத்தம் பெட்டையுடன் கூடி விளையாடிக் களித்திருப்பதைப் பார். ஆற்றங்கரைகளில் சகோரம் நாரை முதலிய ஜந்துக்கள் சகல பிராணிகளுக்கும் மகிழ்ச்சி யுண்டாகும்படி பாடுகிறதைக் கேள். நாலு தந்தங்களையும் தாமரை வண்ணத்தையும் உடைய யானைகள் பெண் யானைகளுடன் கூடித் தாமரைத் தடாகத்தைக் கலக்குகின்றன பார். அது எத்தனை அழகா யிருக்கிறது. மலைச் சிகரத்தில் கந்தர்வர்கள் தங்கள் பத்தினிகளுடன் உட்கார்ந் திருப்பதைக் காண். வேதகானம் பண்ணுகிறது எவ்வளவு இன்பமா யிருக்கிறது! பரிசுத்தமான தெய்வத் தன்மையுள்ள மஹா கங்கையைப் பார். அன்னங்கள் நிறைந்திருக்கின்றன. ரிஷிகளும் கின்னரர்களும் சேவிக்கிறார்கள். மலைபமாகிய இதில் பலவகை லோகங்களும், ஆறுகளும், மான்களும், பறவைகளும், கந்தர்வர்களும், அப்ஸரஸ்களும் வசிக்கிறார்கள். அநேக சோலைகளிருக்கின்றன. பலவகையான வடிவமுடையனவும், நூறு தலைகளை யுடையனவுமான அளவிறந்த சர்ப்பங்கள் உலாவுகின்றன பார் என்று கூறினர். பாண்டவர்களும், திரௌபதியும் பிராமணர்களும அந்த மலையின் வளப்பத்தைப் பல தரம் பார்த்தும் வெறுப்பு தோன்றவில்லை மனதில் மகிழ்ச்சி யடைந்தார்கள். பிறகு ஆர்ஸ்தி சேனருடைய ஆச்சிரமத்தைக் கண்டார்கள். சகல சாஸ்திரங்களிலும் உயர்ந்தவரான அந்த இராஜ ரிஷியினிடம் போனர்கள்.

---

## 159-வது அத்தியாயம்.

### யட்சயுத்த பர்வத் தொடர்ச்சி.

1—5. தவத்தினலே பாவங்களைத் தகித்துவிட்டிருக்கிற ஆர்ஸ்தி சேனரிடத்தில் போய் யுதிஷ்டிரர் தமது பேரைச் சொல்லி வணங்கினர். திரௌபதி, பீமன், நகுல சகதேவர் இவர்களும் வணங்கினர்கள். பிறகு தர்மாத்மாவான தௌமியர் வந்து சேர்ந்தார். ஞான திருஷ்டியால் பாண்டவர்களை உணர்ந்த

அந்த இராஜ ரிஷியானவர் அவர்கள் எல்லாரையும் உட்காருங்கள் என்று சொன்னார். அவர்கள உட்கார்ந்த பின் ஆர்ஸ்திஷேனர் யுதிஷ்டிரரை க்ஷேமம் விசாரித்தார்.

6—14. உமது மனம் சத்தியத்தினின்றும் தவறாம லிருக்கிறதா? தர்ம நெறியில் தவறாம லிருக்கிறதா? மாதாபிதாக்களி னிடத்தில் மரியாதையும் அன்பும் செடாம லிருக்கின்றனவா? பெரியோர்களையும்; மூத்தவர்களையும் வேதம் அறிந்தவர்களையும் வணங்குகிறீரா? பாபகர்மத்தில் மனம் செல்லாம லிருக்கிறதா? புகழத் தக்க நற்காரியங்களைச் செய்யவும்.துர்க்கிரியைகளை விலக்கவும் உபாயம் தெரியுமா? அகங்கார மில்லாம லிருக்கிறீரா புண்ணியாத்மாக்கள் உன்னால் மரியாதை செய்யப்பட்டு மகிழ்கின்றார்களா? நீர் வனவாசம் பண்ணினாலும் தர்மத்தை அனுசரிக்கிறீரா? தௌமியா உம்மிடத்தில் வருத்தப்படா திருக்கும்படி நடந்து கொள்கிறீரா? தர்மம், மதாசாரம், பக்தி, சுத்தம், கபடமின்மை, பொறுமை முதலியவற்றில் உமது முன்னோர்களை அனுசரித்து நடக்கிறீரா? இராஜ ரிஷிகளின் நெறியைப் பற்றி நடக்கிறீரா? ஒரு குலத்தில் புத்திரனாவது பேரனாவது பிறந்தால் பிதிர்லோகத்தி லிருக்கிற முன்னோர்கள் சந்தோஷத்தையாவது துக்கத்தையாவது அடைவார்கள். ஏனென்றால் பிறந்தவனுடைய துர்க் கர்மத்தினால் அவர்களுக்குத் துன்பம் உண்டாகிறது. அல்லது நற்செய்கையால் சுகம் உண்டாகிறது. மாதாபிதாக்களையும், குருவையும், அக்கினியையும், தன் ஆத்மாவையும் கனம் பண்ணுகிறவன் இகலோகம் பரலோகம் இரண்டையும் ஜயிக்கிறான் என்றார்.

15—32. யுதிஷ்டிரர் சொல்லுகிறார். மஹாத்மாவே! நீர் குறிப்பிட்டுக் கேட்ட தர்மங்களெல்லாம் மிகவும் சிறந்தவைகள். அவைகள் எல்லாவற்றையும் என் சக்திக்கு ஏற்றவாறு செய்துகொண்டு வருகிறேன் என்றார். ஆர்ஸ்திஷேனர் பர்வ காலங்களில் ரிஷிகள் காற்றையும நீரையும் புஜித்து, இந்த மலையாளைத் தரிசிக்கிறார்கள். காதலனும் காதலியும் ஒருவரை யொருவர் நேசித்து ஒருமித்து வாழ்கிறார்கள். மலைச் சிகரங்களில் கிம்புருஷர்கள் காணப்படுகிறார்கள். வெண்பட்டாடை உடுத்த அப்ஸரஸ்களும் கந்தர்வர்களும் இங்கே காணப்படுகிறார்கள். வித்தியாதரர்களும், நாகர்களும், கருடர்களும் இங்கே வருகிறார்கள். பர்வகாலங்களில் பேரிகை, மேளம், சங்கம் முதலிய வாத்திய கோஷங்கள் இந்த மலைச் சிகரத்தில் கேட்கப்படுகின்றன. அப்படிக் கேட்கப்பட்டாலும் நீ அவ்விடம் போய்ப் பார்க்க முடியாது.இதற்கு அப்பால் ஒருவராலும் போக முடியாது. அவை தேவர்கள் விளையாடுகிற இடம். மனிதர்கள் அவ்விடம் போகச் சக்தியற்றவர்கள். இவ்விடத்திலுள்ள பிராணிகளெல்லாம் தடுக்கப்படுகின்றன ஏனென்றால் கொஞ்சம் துணிவு கொண்டவர்களையும் அசுரர் கொன்றுவிடுகிறார்கள். கைலாச சிகரத்துக்கப்பால் பிராசையுள்ள தேவரிஷிகளுக்குரிய மார்க்கம். எவனாவது மூடத்தனத்தினால் இவ்விடத்துக்கப்பால் போகத் துணிந்தால் அவனை அரக்கர்கள் ஆயுதங்களால் அடித்துக் கொல்லுகி

ஞர்கள் இவ்விடத்திலும் பர்வ காலத்தில் தனாதிபதியான குபேரன் வருவது கண்டு மனிதர்கள் அவனைத் தூக்கிக்கொண்டு போகிறார்கள். அப்ஸரஸ்கள் அவனைச் சூழ்ந்து செல்லுகிறார்கள். அப்போது, இந்த மலையுச்சியில் உதயகால சூரியனைப்போல விளங்குகிற இராக்ஷத அரசனை எல்லாரும் பார்க்கிறார்கள். அந்த மலைச் சிகரம் தேவதானவர்களும், சித்தர்களும் விளையாடுகிற இடம். பிரிய முள்ளவனே! பர்வகாலங்களில் தும்புருக்கள் குபேரனை வணங்குகிறார்கள். அப்போது பாடப்படுகிற சாமவேதம் இந்த மலைப் பிரதேசம் எங்கும் கேட்கப்படும். இந்தக் கந்தமாதனத்தில் உள்ளவர்கள் பர்வ காலத்தில் நடக்கும் இந்த அற்புதத்தைப் பல தடவை பார்த்திருக்கிறார்கள். ஆகையால் பாண்டவோத்தமரே! அர்ஜுனனைப் பார்க்கிற வரைக்கும் ரிஷிகள் புசிக்கிற மதுரமான கனிகளைப் புசித்துக்கொண்டு இங்கே யிரும். இங்கே உள்ளவரைக்கும் ஒரு தார்க் கர்மத்தையும் செய்ய வேண்டாம். இவ்விடத்தில் உமது இஷ்டப்படி சுகமாய் வசிக்கலாம். கொஞ்சகாலத்துக்குள் பூமியைப் பரிபாலனம் செய்வீர் என்றார்.

---

## 160-வது அத்தியாயம்

### யட்சயுத்த பர்வத் தொடர்ச்சி.

1—6. கந்தமாதன பர்வதத்திலுள்ள ஆர்ஷ்டிஷேணராச்சிரமத்தில் என் மூதாதைகளான பாண்டவர்கள் எவ்வளவு காலம் வசித்தார்கள்? அங்கே யிருக்கும்போது என்ன விநோதங்களைச் செய்தார்கள். எதைப் புசித்தார்கள்? எத்தன்மையான வீரச் செய்கைகளைச் செய்தார்கள்? இமயமலையில் வசிக்கும்போது மஹா பராக்கிரமசாலியான பீமசேன மஹாராஜா என்ன செய்தார்? பிராமணோத்தமரே! யட்சர்களோடு வேறு வேறு சண்டைகள் நடக்கவில்லையா? பாண்டவர்கள் குபேரனைப் பார்த்தார்களா! ஆர்ஷ்டிஷேணர், அவ்விடத்துக்குக் குபேரன் வருவாரென்று உறுதியாகச் சொன்னாரே! இவைகளையெல்லாம் நான் விரிவாகக் கேட்க விரும்புகிறேன். எனக்கு இவைகளைச் சொல்லவேண்டும். அவர்களுடைய பெரும் செய்கைகளைக் கேட்ட எனக்கு இன்னும் திருப்தி யுண்டாகவில்லை என்று ஜனமேஜய மஹா ராஜன் கேட்க வைசம்பாயனர் சொல்லுகிறார்.

7—19. ஒப்பற்ற மகிமையுள்ள ஆர்ஷ்டிஷேணர் சொன்னதைக் கேட்ட பாரதோத்தமர்கள் அவ்விடத்திலே முறைப்படி வசித்தார்கள். ரிஷிகள் புசிக்கிற கனிகளையும் மானுடைய மாம்சத்தையும் தேனையும் புசித்துக்கொண்டு அவ்விடத்திலேயே வசித்தார்கள், இப்படி ஜீவனம் பண்ணிக்கொண்டும், ரோமசரிடத்தில் கதைகளைக் கேட்டுக்கொண்டும் இமய மலையில் வசித்தார்கள். இதற்கு முன்னாலேயே கடோத்கஜன், நீங்கள் நினைத்த போது வந்து

சேருகிறேனென்று கூறிப் பாண்டவர்களிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு, அரக்கர்களுடன் புறப்பட்டுப் போய்விட்டான். பல அற்புதங்களைக் கண்டு மகிழ்ந்து அனேக மாதம் வரைக்கும் ஆர்ஸ்திசேனருடைய ஆச்சிரமத்தில் வாசம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். பாண்டவர்கள் அவ்விடத்தில் சுகமாய் விளையாடிக்கொண்டிருக்கிற போது ஆசையற்ற மனதை யுடைய மஹரிஷிகளும், பரிசுத்தாத்மாக்களான சாரணர்களும், தவசிகளும் அவரைப் பார்க்கும் பொருட்டு வருவார்கள். மகிமையிற் சிறந்த பாண்டவர்கள் தெய்வ சம்பந்தமான விஷயங்களைப் பற்றிப் பேசுவார்கள். இப்படிச் சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் கருடனென்பவர் ஒரு ஏரியிலிருந்த பெரிய சர்ப்பத்தைத் தூக்கிக் கொண்டு அந்த மலையின் உச்சிக்கு வந்தார். அப்போது உண்டான காற்றினால் அம்மலையிலிருந்த பல வகையான சுகந்த புஷ்பங்களும் பாண்டவரிடம் வந்து விழுந்தன. பாண்டவர்களும் திரௌபதி முதலானவர்களும் பஞ்ச வர்ணங்களுள்ள அந்த மலரைக் கண்டு மகிழ்ந்தார்கள். பீமசேனன் ஒரு இடத்தில் சுகமாய் உட்கார்ந்திருந்தான், திரௌபதி அவனிடத்தில் வந்து சொல்லுகிறாள்.

20—30. பாரதோத்தமரே! பஞ்ச வர்ணங்களுள்ள இந்தப் புஷ்பங்கள் கருடனால் உண்டாக்கப்பட்ட காற்றினால் வந்தன என்பது எல்லாருக்குந் தெரியும். அவை காற்றினால் அசுவரத நதியில் விழுந்து அதன் வழியாக வந்தன. உமது சகோதரனும் மஹாத்மாவுமான அர்ஜுனன் காண்டவ தகனம் செய்த காலத்தில் கந்தர்வர், உரகர், இராட்சதர்கள் எல்லாரையும் எதிர்த்துப் போர் புரிந்தான். தேவேந்திரனைக் கூடத் தடுத்துப் போர் புரிந்தான். நினைத்த வடிவங்களை எடுத்துக் கொள்ளக் கூடிய மாயாவிகளான அநேகமாயிரம் அரக்கர்களைச் சங்கரித்தான்! அதனால் காண்டீவம் என்கிற சிறந்த தனுசையும் பெற்றான். ஆகையால் பீமசேனா! உம்முடைய புஜ பலத்தினாலே இங்குள்ள இராட்சதர்களையும் நடுங்கச் செய்ய வேண்டும் இப்பொழுதே பத்துத் திசைகளுக்கும் செல்லும். உம்முடைய நண்பர்கள் எல்லாரும் பயமும் துக்கமும் ஒழிந்திருக்கட்டும். பல வகை மலர்களால் நிறைந்திருக்கிற இந்த மலைச்சிகரத்தையும் பார்த்து வாரும். ஓ பீமசேனா! இந்த எண்ணம் என் மனதில் நெடு நாளாக இருந்து கொண்டிருக்கிறது. உமது புஜ பலத்தால் நிர்ப்பயமாக்கப்பட்ட இந்த மலைச் சிகரத்தின் மேலேறிப் பார்க்க விரும்புகிறேன் என்றாள். சத்துருக்களை வதைக்கிற மஹா பாகுவான பீமசேனன் திரௌபதி சொன்னதைப் பற்றித் தன் மனதுக்குள் ஆராய்ந்தான். அதனால் காயப்படுத்தப் பட்ட உயர்ந்த ஜாதி எருதைப் போலத் தோன்றினான். அவள் சொன்ன குறையைக் கேட்டுச் சகிக்காதவனானான். ரிஷபத்தையும் சிங்கத்தையும் போன்ற நடையையும், மிகுந்த அழகையும், தங்கத்தைப் போல காந்தியையும் நல்ல மனதையும், சிறந்த சக்தியையும், இறுமாப்பையும், அறிவையும், பராக்கிரமத்தையும், சிவந்த கண்களையும், பரந்த தோள்களையும், மதயானை போன்ற பலத்தையும், சிங்கத்தைப் போன்ற பற்களையும், ஒத்த பரிமாணத்தையும், சங்கம்

போன்ற கழுத்தையும், நீண்ட புஜங்களையு முடைய மஹா வல்லமைசாலியான பீமன் தங்கத் தகடு அமைத்த முதுகை யுடைய வில்லையும் அம்புகளையும் கத்தி முதலிய ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு புறப்பட்டான்.

31—40. சிங்கம் போன்ற கர்வத்தையும், மதயானை போன்ற தோற்றத்தையும் உடைய பலவானான பீமன் பயமும் துன்பமும் இல்லாமல் அம்மலையை நோக்கிச் சென்றான். எல்லாப் பிராணிகளுக்கும் வில்லையும் அம்பையும் தரித்த சிங்கத்தைப் போலக் காணப்பட்டான். த்ரௌபதிக்குச் சந்தோஷமுண்டாக்கும்படி கதையை எடுத்துக்கொண்டு அம்மலையை நோக்கிச் சென்றான். குந்திக்கும் வாயு பகவானுக்கும் புத்திரனான பீமன் களைப்பு பயம் ஒன்றையும் அடைய வில்லை. ஒருவன் மாத்திரம் நடக்கக் கூடிய ஒரு பாதையை அடைந்தான். கரடு முரடுகளையும் பாறைகளையும், பயங்கரமான சிகரத்தையும், அநேக பனை அளவுள்ள உயரத்தையும் உடைய மலைமே லேறினான். மஹா பலத்தை யுடைய பீமன் கின்னரர்கள் மஹா நாகர்கள், ரிஷிகள், இராட்சதர்கள் முதலியவர்களுக்கு மகிழ்ச்சியை உண்டாக்கிக்கொண்டு அந்த மலை மேல் ஏறினான். அங்கிருந்து தங்கத்தாலும், பளிங்கினாலும் கட்டப்பட்ட வீடுகளையுடைய குபேர நகரத்தைப் பார்த்தான். அது நாலு பக்கங்களிலும், தங்கச் சுவர்களால் சூழப்பட்டிருந்தது. எல்லா வகை இரத்தினங்களும், எல்லா வகைப் பொழில்களையும் உடையதா யிருந்தது. பருவதங்களை விட உயரமான மதில்களையும், கோபுரங்களையும், கதவுகளுடன் கூடின வாயில்களையும் கொடி வரிசைகளையும், மனதை மயக்கும் அழகினை யுடைய நாட்டியப் பெண்களையும், காற்றினாலே படபடவென்று ஆட்டப்படுகிற கொடிகளையும் பார்த்தான். வில்லை நிறுத்தி அதன் மேல் சாய்ந்துகொண்டு துக்கத்துடன் அந்த நகரத்தைப் பார்த்துக் கொண்டே நின்றான். இப்பொழுதுள்ள தன்னுடைய துர்ப்பாக்கிய நிலைமையே அவனுடைய துக்கத்துக்குக் காரணம்.

42—48. அப்போது அந்த மலையில் தோன்றின இன்பமான இளங் காற்றானது சகல வகையான வாசனைகளுடனே மெத்தன வீசிற்று. மனதுக்கெட்டாத அழகினை யுடையவைகளும் பல விதமான வர்ணங்களுள்ளவைகளும், பூத்திருக்கின்றனவுமான அநேக மரங்களைப் பீமசேனன் கண்டான். எப்பக்கங்களிலும் இரத்தின குவியல்களால் மூடப்பட்டதும், பல வகை மாலைகளால் அலங்கரிக்கப் பட்டிருப்பதுமான குபேரனுடைய அரண்மனையைப் பார்த்தான். அதைப் பார்த்ததும் அறிவும் முற்றும் நீங்கியது. வில் அம்பு கதைகளையுடைய ஒரு கற் பாறையைப் போல அசை வற்று நின்று விட்டான். சத்துருக்களுக்கு அச்சத்தை உண்டாக்குகிற தன் சங்கை ஊதினான். நாணொலி காட்டினான். தோள்களைத் தட்டிக்கொண்டு எல்லாப் பிராணிகளுக்கும் அச்சத்தை யுண்டாக்கினான். அந்தத் தொனியைக் கேட்ட யட்ச ராட்சதர்களும் கந்தர்வர்களும் கோபம் கொண்டு சத்தம் வந்த திசை வழியாகப் பீமனை நோக்கி ஓடி வந்தார்கள். இராட்சதர்கள் கையில் பிடித்துக்கொண்டிருந்த ஈட்டி,

கதை, சக்தி, கோடாரி முதலிய ஆயுதங்கள் பிரகாசித்தன. பீமனுக்கும் அவர்களுக்கும் சண்டை யுண்டாயிற்று.

49—60. பரத வம்சத்தவரான ஜனமேஜயரே! சண்டை தொடங்கின போது இராட்சதர்களுடைய அஸ்திர சஸ்திரங்களைப் பீமன் வெட்டி யெறிந்தான். இராட்சதர்களால் பிரயோகிக்கப்பட்ட மயக்கத்தைக் கொடுக்கிற கோடரிகளைப் பலமான அம்புகளால் வெட்டினான். பூமியிலும் ஆகாயத்திலும் நின்றுகொண்டு போர் புரியும் அவர்களுடைய சரீரங்களைக் கூரிய அம்புகளால் துளைத்து விட்டான். அவர்கள் சரீரத்தினின்று ஒழுகுகிற இரத்தவெள்ளம் நாலா பக்கங்களிலும் ஓடிற்று. பீமசேனனுடைய ஆயுதங்களால் இராட்சதர்களுடைய சரீரங்களும் சிரசுகளும் வெட்டுண்டு விழுந்தன. இராட்சதர்களால் சூழப்பட்ட பீமன் மேகத்தால் மறைக்கப்பட்ட சூரியனைப் போலத் தோன்றினான். சூரியன் தன் கிரணங்களால் சகல பிராணிகளையும் மூடுகிறது போலப் பீமன் சத்துருக்களுக்கு மரணத்தை உண்டாக்குகிற தன்னுடைய அம்புகளால் இராட்சதர்கள் எல்லாரையும் மூடினான். பீமன் ஜய கோஷம் செய்து, அட்டகாசம் பண்ணினான். இராட்சதர்கள் அதைக் கேட்க வில்லை. அறிவு மயங்கிக் கிடந்தார்கள். யட்சகர்கள் தங்களுடைய தேகம் முற்றும் பீமனாலே துளைக்கப்பட்ட படியால் பயந்து நடு நடுங்கி, ஆயுதங்களை யெறிந்து விட்டுக் கதறினார்கள். சகல ஆயுதங்களையும் எறிந்து விட்டுத் தென் திசையை நோக்கி ஓடினார்கள். அவ்விடத்தில் குபேரனுக்குச் சிநேகிதனும், மஹா பல முள்ளவனும், நீண்ட புஜங்களையும் அகன்ற மார்பையும் உடையவனுமான மணிமான் என்னும் இராட்சதன் ஆயுதபாணியாய் நின்று கொண்டிருந்தான். அவன் ஓடிவருகிறவர்களைப் பார்த்துப் புன் சிரிப்புடன் சொல்லுகிறான்.

61—77. நீங்கள் தனபதியாகிய குபேரனிடத்துக்குப் போய், ஒரு மனிதனால் அளவில்லாத யட்சர்கள் மடிந்து போய் விட்டார்கள் என்று எப்படிச் சொல்லத் துணிவீர்கள்! இப்படிச் சொல்லிப் பின் கதை, சக்தி முதலிய தன் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு பீமன் மேலே சீறிக்கொண்டு வந்தான். மணிமான் மதங்கொண்ட யானையைப் போல வருகிறதைப் பீமன் கண்டு, மூன்று அம்புகளினால் அவனுடைய விலாப்புறங்களைத் துளைத்து விட்டான். மணிமான் பயங்கரமான ஒரு கதையைப் பீமன் மேல் எறிந்தான். பீமன் அதைத் தடுப்பதற்காக அனேக அம்புகளை யெய்தான. அந்த அம்புகள் கதையைத் தடுக்கும் சக்தியில்லாமல் விழுந்து விட்டன. அந்தக் கதை அக்கினி ஜ்வாலைகளை வீசிக் கர்ஜித்துக்கொண்டு வந்து பீமனுடைய வலது புஜத்தைத் துளைத்து விட்டது. பீமனுக்கு கோபத்தினாலே கண்கள் சுழன்றன. உடனே கதையைக் கையில் எடுத்துக் கொண்டான். சத்துருக்கள் நடுங்கும்படி சிங்கநாதம் செய்தான். பிறகு இருவரும் கதா யுத்தம் செய்தார்கள். மணிமான் தன் கதையால் பீமனை அடித்தான். பீமசேனன் அதைத் தன் கதையால் முறித்து விட்டுக், கருடன் சர்ப்பத்தைக் கொல்லப் பாய்வதைப் போல மணிமானைக்

கொல்லும் பொருட்டு அவன் மேல் பாய்ந்தான். உடனே தன் கதையைச் சுழற்றி மணிமான் மேல் எறிந்தான். மணிமான் இடியுண்ட மரம் போலப் பீமன் கதையால் அடியுண்டு விழுந்தான். சிங்கம் ஒரு ரிஷபத்தைக் கொல்வது போலப் பீமசேனன் மணிமானைக் கொன்றதைப் பார்த்துக்கொண்டிருந்த இராட்சதர்கள் பயத்தினால் கதறிக்கொண்டு கீழ்த்திசை நோக்கி ஓடினார்கள்.

---

## 161-வது அத்தியாயம்.

### யட்சயுத்த பர்வத் தொடர்ச்சி.

1—9. மலைக் குகைகளெல்லாம் எதிரொலி யிடுவதையும், பீமசேனன் அங்கு இல்லாமலிருப்பதையும் பார்த்து, அஜாத சத்துருவான யுதிஷ்டிரர், திரௌபதி, நகுல சகாதேவர்கள், தௌமியர் முதலான எல்லாரும் மனதில் துயரம் அடைந்தார்கள். பிறகு பாண்டவர்கள், திரௌபதியை ஆர்ஷ்டிஷேணரிடத்தில் ஒப்புவித்து விட்டு, ஆயுதபாணிகளாய் மலையின் மேல் ஏறினார்கள். தேர் வீரர்களான அவர்கள் மலையின் சிகரத்தின் மேலேறி நாலு பக்கங்களையும் சுற்றிப் பார்த்துப், பீமசேனனைக் கண்டார்கள். பீமசேனன் மஹா பலசாலிகளான அரக்கர்களைக் கொன்றதையும், இராட்சதர்களில் அநேகர் செத்துப் பிணமாய்க் கிடப்பதையும், அநேகர் அசைந்து கிடப்பதையும், தானவர்களைச் சங்கரித்த தேவேந்திரனைப் போலப் பீமசேனன் யுத்த களத்தில் உலாவிக்கொண்டு இருப்பதையும் கண்டு, பீமசேனனைத் தழுவிக் கொண்டார்கள். பிறகு ஒரு இடத்தில் உட்கார்ந்தார்கள். நாலு வில் வீரர்களும் உட்கார்ந்து கொண்டிருப்பதினாலே லோக பாலகர்களான தேவர்களுடன் கூடி யிருப்பது போல அந்த மலைச் சிகரம் வெகு அழகுடையதாய் இருந்தது. பூமிக்கு நாதரான யுதிஷ்டிரர், குபேரனுடைய பட்டணத்தையும், பீமசேனன் அளவில்லாத இராட்சதர்களைக் கொன்றதையும் பார்த்து, பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருந்த பீமனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

10—14. பீமசேனா! நீ அறியாமையாலாவது, முரட்டுத் தனத்தினாலாவது இந்தப் பாவச் செய்கையைச் செய்து விட்டாய். தவசிகளுக்குப் பொய் பேசுதல் தகாதவாறு போல உனக்குச் இச்செய்கை தகாது. நீதிமானான மனிதன் அரசனுக்குக் கோப முண்டாகிற செய்கையைக் கூடச் செய்யக் கூடாது. நீ தேவர்களுக்குக் கூட மன வருத்தத்தையும் கோபத்தையும் உண்டாக்குகிற செய்கையைச் செய்து விட்டாய். பார்த்தனே! இலாபத்தையும் புண்ணியத்தையும் கவனியாமல் பாபத் தொழிலைச் செய்கிறவன் நிச்சயமாகவே தண்டனையை அடைவான். நீ என் க்ஷேமத்தை விரும்பினால் இன்னொரு தரம் இப்படிப்பட்ட செய்கையைச் செய்யாதே. தர்மமும் உறுதியுமுள்ள யுதிஷ்டிரர் இப்படிப் பயனுள்ள சில வசனங்களைப் பீமனுக்குச் சொல்லிவிட்டு

அந்த விஷயத்தைப் பற்றி யோசித்துக்கொண்டு பேசாமலிருந்தார். இப்படி நடந்திராவிட்டால் மிச்சமாயிருக்கிற இராட்சதர்களையும் பீமசேனன் கொன்றிருப்பான்.

15—29. பின் மிச்சமான இராட்சதர்கள் குபேர பட்டணத்தை நோக்கி ஓடினார்கள். வெகு வேகமாய் ஓடிச் சீக்கிரத்தில் குபேர பட்டணத்தை அடைந்தார்கள். பீமசேனனால் உண்டான பயத்தினாலே விரைந்து கதறினார்கள். ஆயுதங்களை இழந்து இரத்தம் படிந்த சரீரமுள்ள அவர்கள் குபேரனைப் பார்த்து, யட்ச ராஜனே! கதை, சக்தி, ஈட்டி, தோமரம் முதலிய ஆயுதங்களைக் கொண்டு போர் புரிந்த கீர்த்தியுள்ள இராட்சதர்கள் எல்லாரும் கொலை யுண்டார்கள். ஒரே ஒரு மனிதன் வெகு வேகத்துடன் இந்த மலைமேல் ஏறி வந்து யுத்தம் செய்து அநேக இராட்சதர்களையும் கொன்றுவிட்டான். சிறந்த இராக்ஷதர்களையும் யட்சர்களையும் கொன்றுவிட்டான். நாங்கள் மாத்திரம் தப்பி வந்தோம். உமது சிநேகிதனாகிய மணிமானும் கொல்லப்பட்டான். இவை எல்லாம் ஒரே மனிதனால் செய்யப்பட்டன. ஆகையால் எது செய்யத் தக்கதோ அதைச் செய்யும் என்றார்கள் இதைக் கேட்டுக் குபேரன் மிகுந்த கோபம் கொண்டான். கண்கள் தீப் போலச் சிவந்தன. பீமனால் செய்யப்பட்ட இரண்டாவது குற்றத்தைக் கேட்டதும் அடங்காத கோபங்கொண்ட குபேரன் இது என்ன! என்றான். பிறகு யட்ச ராஜன் கோபத்தினால் பக்கத்திலிருந்தவர்களைப் பார்த்து என் தேரைப் பூட்டுங்கள் என்றான். உடனே வேலைக்காரர்கள் கரிய மேகம் போன்ற நிறத்தை யுடையவைகளும், சொர்ண மாலைகளைத் தரித்திருப்பவைகளுமான குதிரைகளைத் தேரில் பூட்டினார்கள். தெளிவான கண்களையும், மேலான குணங்களையும், சிறந்த ஒளியும், மிகுந்த பலமும் உடையவைகளும், பல வகை இரத்தினங்களினால் அலங்கரிக்கப்பட்டவைகளும், அழகிய தோற்றத்தை உடையவைகளுமான குதிரைகள் காற்றைப் போலப் பறப்பன போலத் தோன்றின. ஐயத்துக் கடையாளமாகக் கனைக்கத் தொடங்கின. யட்ச ராஜனான குபேரன் அந்தத் தேரின் மேலேறிக்கொண்டு தேவர்களும், கந்தர்வர்களும் சூழப் புறப்பட்டான். சிவந்த கண்களையும், சொர்ணம் போன்ற நிறத்தையும், பெரிய தேகத்தையும், மஹா பலத்தையும் உடைய அநேக யட்சத் தலைவர்கள் ஆயுதங்களை யணிந்துகொண்டு தங்கள் தலைவனாகிய யட்ச ராஜனைத் தொடர்ந்து போனார்கள். குபேரனுடைய குதிரைகள் மஹா வேகத்துடன் ஆகாயத்தில் பறந்து கந்தமாதனத்தை அடைந்தன. அவைகள் தேரை இழுத்துக்கொண்டு வந்தது, வானத்தையே இழுத்துக்கொண்டு வருகிறது போலக் காணப்பட்டது.

30—51. பாண்டவர் சந்தோஷத்தினால் மயிர் பொடிக்க மன மகிழ்ச்சியுடன் அந்தக் குதிரைகளையும் குபேரனையும் பார்த்தார்கள். குபேரனும் வில் முதலிய ஆயுதங்களையும், மஹா பல பராக்கிரமத்தையும் உடைய பாண்டு புத்திரர்களான அந்தத் தேர்வீரர்களைக் கண்டு மன மகிழ்ச்சி யடைந்தான். தேவ

காரியத்தை நிறைவேற்றுகிறதற்காக அவர்களிடத்தில் மகிழ்ச்சி கொண்டான். குபேரனும் அவனுடைய பரிசனங்களும் பட்சிகளைப் போல வேகமாய் வந்து மலைச் சிகரத்தின மேலேறிப் பாண்டவர்களுக்கு முன் வந்து நின்றார்கள். குபேரன் பாண்டவர்களிடத்தில் பிரியமாய் இருக்கிறதைப் பார்த்து உபேட்சையாய் நின்றார்கள். தேர் வீரர்களும் மஹாதமாக்களுமான நகுல சகதேவர்களும், புண்ணியாத்மாவான தர்ம ராஜாவும் தனபதியான குபேரனை வணங்கித், தாங்கள் குற்ற முடையவர்களாய் இருப்பதை யுணர்ந்து, அஞ்சலியஸ்தர்களாய் அவனைச் சூழ்ந்து நின்றார்கள். பல வர்ணங்களை யுடைய புஷ்பக விமானத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிற குபேரனை அநேக யட்சர்களும், இராட்சதர்களும் சூழ்ந்திருந்தார்கள். கழுத்தில் சொர்ண மாலையையும், வில், வாள், கதை முதலிய ஆயுதங்களையு மணிந்து கொண்டிருக்கிற பீமன் குபேரனைப் பார்த்தான். தான் செய்த குற்றத்தைப் பற்றியாவது, குபேரனைக் கண்டதனாலாவது கொஞ்சம் கூட மனதில் வருத்தம் இல்லாம லிருந்தான். குபேரன் யுத்த வீரனான பீமனைப் பார்த்தான். பிறகு யுதிஷ்டிரரை நோக்கிச் சொல்லுகிறான். நீர் சகல பிராணிகளுக்கும் க்ஷேமத்தையே விரும்புகிறீர். எல்லாப் பிராணிகளும் சந்தோஷமாய் இருக்கின்றன. ஆதலால் நீங்கள் மலைச் சிகரத்தில் பயமில்லாமல் வாசம் பண்ணிக்கொண்டிருங்கள். பாண்டவரே நீர் பீமசேனனைக் கோபிக்க வேண்டாம். யட்சர்களும் இராட்சதர்களும் விதியினால் கொல்லப்பட்டார்கள். பீமசேனன் அதற்குக் கருவியாக மாத்திரம் இருந்தான். பீமனுடைய முரட்டுத் தனமான செய்கைக்காக நீர் வருத்தப்பட்டு வெட்கம் அடையவேண்டாம். இந்த ராட்சதர்களுக்கும யக்ஷர்களுக்கும் இப்படி அழிவுண்டாகு மென்று பூர்வத்திலேயே தேவர்களாலே விதிக்கப்பட்டிருக்கிறது. பாரதோத்தமனே! நான் பீமனைக் கோபிக்கிறதற்குப் பதிலாக அவனிடத்தில் அதிக அன்புடையவனாக இருக்கிறேன். பீமசேனனுடைய இந்தச் செய்கை எனக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தது என்று இப்படித் தர்ம ராஜாவுக்குச் சொல்லி விட்டுப் பின் பீமனை நோக்கி ஒ குழந்தாய்! நீ செய்ததை நான் கவனிக்கிற தில்லை. நீ உன்னுடைய புஜ பலத்தையே பெரிதாக மதித்துத் தேவர்களை அவமதித்தாய். யட்சர்களையும் இராட்சதர்களையும் கொன்றாய். திரௌபதியைத் திருப்தி செய்வதற்காக முரட்டுத் தனமான இந்த வேலையைச் செய்த படியால நான் மகிழ்ச்சி யடைகிறேன். பீமா! பூர்வத்தில் நான் ஒரு குற்றஞ் செய்த படியால் அகஸ்திய முனிவர் கோபம் கொண்டு எனக்குக் கொடிய சாபமிட்டார். நீ செய்த இந்தச் செய்கையால் இன்றையு தினம் அந்தச் சாபம் நீங்கிற்று. அதனால் நான் சந்தோஷிக்கிறேன். இப்படிப்பட்ட அவமானம் எனக்கு நேரும் என்று முன்னாலேயே விதிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் நான உன்னை மெச்சுகிறேன் என்றான்.

52—63. யுதிஷ்டிரர் குபேரனை நோக்கி நீர் எதற்காக அகஸ்தியரால் சாப மடைந்தீர்? ஒ தேவனே! அந்தச் சாபத்தின் காரணத்தைக் கேட்க விரும்புகிறேன். மஹாரிஷியான அகஸ்திய முனிவருடைய கோபத்தினாலே

நீர் உம்முடைய சேனையோடு அந்த நிமிஷத்திலேயே அழியாம லிருந்ததைப் பற்றி நான் ஆச்சரியப் படுகிறேன் என்றார். குபேரன், பூலோக ராஜனே! பூர்வ காலத்தில் குசாவதி க்ஷேத்திரத்தில் தேவர்கள் ஒரு சங்கம் கூடினார்கள். அந்தச் சங்கத்துக்கு நானும் முந்நூறு மஹா பத்மம் என்கிற எண்ணிக்கையுள்ள பயங்கரமான தோற்றத்தையுடைய யட்ச சேனைகளுடன் போனேன். பல வகையான புஷ்பச் செடிகளும், பல வகையான பறவைகளும் நிறைந்திருக்கிற யமுனா நதிக் கரையில், மகிமையுள்ள அகஸ்தியர் உக்கிரமான தவம் செய்து கொண்டிருக்கிறதைக் கண்டேன். அவர் அக்கினியைப் போல ஜ்வலித்துக் கொண்டு, இரண்டு கைகளையும் உயரத் தூக்கிக்கொண்டு சூரியாபிமுகமாக இருந்து தவம் செய்வதைப் பார்த்து, என் சிநேகிதனும் இராட்சதத் தலைவனுமான மணிமான் என்பவன் மூடத் தனத்தினாலே அவர் தலையில் எச்சிலை யுமிழ்ந்தான். அதனால் அகஸ்தியருக்குக் கோபம் மூண்டது. கோபத்தினால் எல்லாத் திக்குகளையும் எரித்து விடுபவர் போலக் காணப்பட்டார். என்னைப் பார்த்து ஓ தனபதியே! உன் சிநேகிதனை துஷ்ட சித்தமுள்ள இந்த மணிமான் உனக்கு எதிரில் என்னை அவமானம் பண்ணினான். அதனாலே அவன் தன் சேனைகளுடன் ஒரு மனிதனாலே கொல்லப்படுவான். உன்னுடைய சேனைகளும் அழியும். நீயும் அதனால் கொடிய துக்கத்தை அடைவாய். அந்த மனிதனைப் பார்த்ததும் நீ உன் பாவத்தினின்றும் விடுபட்டுப் பரிசுத்தனாவாய். இந்தச் சாபம் உன் சேனா வீரர்களுடைய புத்திர பௌத்திரர்களைப் பற்றாது. அவர்கள் உனக்கு வணங்கி ஏவல் புரிவார்கள் என்று சொன்னார். தர்மராஜாவே! நான் முன்பு அகஸ்தியரால் இப்படிப்பட்ட சாபத்தை அடைந்தேன். அந்தச் சாபம் உமது சகோதரனால் ஒழிக்கப்பட்டது என்றான்.

---

## 162-வது அத்தியாயம்.

### யட்சயுத்த பர்வத் தொடர்ச்சி.

1—26. குபேரன் யுதிஷ்டிரரைப் பார்த்துத் தர்ம ராஜாவே! மனிதர்கள் காரியசித்தி பெறுவதற்கு உறுதி, சக்தி, காலம், இடம் இந்த நாலும் காரணங்களா யிருக்கின்றன. பாரதரே! கிருதயுகத்திலிருந்த மனிதர்கள் தங்கள் காரியத்தில் உறுதியும் சாமர்த்தியமும் உள்ளவர்களா யிருந்தார்கள். யுத்தவிதியை நன்றாய் அறிந்திருந்தார்கள். க்ஷத்திரியர்களுக்குள் உத்தமரே! பொறுமையை யுடையவனும், காலத்தையும் இடத்தையும் உணர்ந்தவனும், எல்லாக் கர்மங்களுக்குரிய விதிகளை அறிந்தவனுமான க்ஷத்திரியன் நெடுங் காலம் பூமியைப் பரிபாலிப்பான். எல்லாக் காரியங்களிலும் இந்த விதிகளை அனுசரித்து நடக்கிற க்ஷத்திரியன் பூமியின் புகழ் பெறுவான். மறுமையில் மேலான கதியையும் பெறுவான். விருத்திராரியான இந்திரன் கூடக் கால தேசங்களை அனுசரித்து நடந்ததினாலேயே சொர்க்கலோக அரசாட்சியைப் பெற்றான். கோபத்தி

ளுலே நாசம் வரும் என்பதை உணராதவனும், துஷ்டசித்த முள்ளவனும், பேராசை யுள்ளவனும் பாவத்தையே செய்கிறான். காரியாகாரிய முறைமைகளை அறியாதவன் இம்மை மறுமை யிரண்டிலும் நாசத்தை அடைகிறான். காலம் காரியம் முதலியவற்றின் தன்மையை உணராத மூடன் தன் முயற்சியால் பயன் பெருமல் இம்மை மறுமை யிரண்டிலுந் துக்கத்தை அனுபவிக்கிறான். முரட்டுத்தனமும், வஞ்சகமும், துர்ச்சிந்தையும் உடையவர்கள் தாம் மேன்மையை அடைய விரும்பிக் கொடிய பாபகர்மங்களைப் புரிகிறார்கள். இந்தப் பீமசேனன் சிறு பிள்ளையைப் போல நெறி கடந்தவனும், இறுமாப்புள்ளவனும், புத்தியற்றவனும், பயமில்லாதனுமாக இருக்கிறான். ஆகையால் பரதரே! அப்படிச் செய்யவொட்டாமல் அவனைக் கண்டிக்க வேண்டும். இராஜரிஷியாகிய ஆர்ஷ்டிசேனருடைய ஆச்சிரமத்துக்குப் போய்ச் சேருங்கள். ஒரு பட்சம்வரைக்கும் அங்கே பயமில்லாமல் வசியுங்கள். என்னால் நியமிக்கப்பட்டிருக்கிற கந்தர்வர்களும், கின்னரர்களும், யட்சர்களும், உங்களைப் பாதுகாப்பார்கள். பரிசுத்தமானவரே! புண்ணியாத்மாவே! அரசரே! பீமன் முரட்டுத்தனத்தினாலே இவ்விடம் வந்தான். ஆகையால் அவனை அடக்கும், இது முதல் இந்த மலையில் வசிக்கிற பிராணிகள் உங்களிடம் வரும். உங்களைப் பாதுகாக்கும். என் பரிசனத்தார் மதுரமான உணவுகளையும் பானங்களையும் உங்களுக்குக் கொடுப்பார்கள். அர்ஜுனன் மஹேந்திரனுடைய ஆதரவையில் இருக்கிறபடியால் அந்த முறைமைபற்றி நான் உங்களை ஆதரிக்கக் கடமைப் பட்டிருக்கிறேன். பீமனுக் கடுத்தவனான அர்ஜுனன் பிரயோசனமுள்ள எல்லாச் சாஸ்திரங்களையும் அறிந்திருக்கிறான். சகல கர்மங்களின் விதிகளையும் உணர்ந்திருக்கிறான். சொர்க்கலோகத்தில் சுகமாக இருக்கிறான். சொர்க்கத்தைக் கொடுப்பதாகக் கருதப்பட்ட குணங்களெல்லாம் அர்ஜுனன் பிறக்கும் போதே அவன் கூடப் பிறந்திருக்கின்றன. மஹாத்மாவும், ஒப்பற்ற சக்தியும் உடைய அர்ஜுனனிடத்தில் புலனடக்கம், தர்மம், பலம், புத்தி, மரியாதை, பொறுமை, ஊக்கம் முதலிய குணங்களெல்லாம் நிறைந்திருக்கின்றன. பாண்டவர்களே! அர்ஜுனன் அறியாமையால் கூட இழிவான தொழிலைச் செய்ததில்லை. அவன் ஒருபோதும் தன் தோழர்களிடம் பொய் பேசுகிறதில்லை. கௌரவர்களுடைய மகிமையை விருத்தியாக்குகிற அந்த அர்ஜுனன் தேவர்கள், பிதிர்க்கள், கந்தர்வர்கள் முதலியவர்களால் கௌரவிக்கப்பட்டு, இந்திரன் உலகத்தில் தனுர்வேதங்களைக் கற்றுக்கொண்டிருக்கிறான். அரசனே! நீதிமார்க்கமாக அரசர்களெல்லாரையும் கீழ்ப்படுத்தினவரும், மஹாவல்லமையும் ஊக்கமும் உள்ளவரும், உமது பிதாவுக்குப் பிதாமகருமான சந்தனு மஹாராஜாவும் காண்டீவந் தரித்த குருவம்ச தீபம் போன்ற அர்ஜுனனைப் பார்த்து மகிழ்ச்சி யடைகிறார். உறுதியான பக்தியோடு தேவர் பிதிர்ரிஷிகளையும், பிராமணர்களையும் யமுனா நதிக்கரையில் ஆராதித்தவரும், அவ்விடத்தில் ஏழு அசுவமேதங்களைச் செய்தவரும் உமது பிரபிதாமகருமான சந்தனு மஹாராஜா சொர்க்கத்தில் வசிக்கிறார். அவர் உங்களுடைய க்ஷேமலாபங்களைப் பற்றி விசாரித்துக் கொண்டிருக்கிறார் என்று சொன்னான்.

27—32. செல்வத்தை யருளவல்ல குபேரன் சொன்ன வசனங்களைக் கேட்டுப் பாண்டவர்கள் எல்லாரும் மிகவும் மகிழ்ச்சி யடைந்தார்கள். பீமசேனனும் சத்தி, கதை, வில் முதலிய ஆயுதங்களைக் கீழே வைத்து விட்டுக் குபேரனை வணங்கினான். தனது காவலரை அழித்தவனை அந்தப் பீமனைக் குபேரன் பார்த்துப் பீமசேனா! உன் சத்துருக்களுடைய கர்வத்தைத் தொலை, உனது நண்பர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடு, சத்துருக்களை அழிப்பவனே! உனக்குப் பிரியமான இடத்தில் வசி. யட்சர்கள் நீ விரும்பின பொருள்களை யெல்லாம் கொண்டுவந்து உனக்குக் கொடுப்பார்கள். யுத்த சாஸ்திரங்கள் எல்லாவற்றையுங் கற்றுக்கொண்டு அர்ஜுனன் சீக்கிரம் வருவான். அர்ஜுனன் தேவேந்திரனுக்குக் கூட நன்மைகளைச் செய்துவிட்டுச் சீக்கிரத்தில் உங்களைப் பார்க்க வருவான்" என்று யக்ஷராஜனாகிய குபேரன் சற்கருமங்களைச் செய்யும்படி யுதிஷ்டிரருக்குச் சொல்லிவிட்டு அந்த மலையினின்று மறைந்துபோனான்.

33—38. அநேக மாயிரம் யட்சர்களும் இராட்சதர்களும் தத்தம் வாகனங்களி லேறிக்கொண்டு குபேரனைத் தொடர்ந்து சென்றார்கள். குபேரனுடைய வேகமுள்ள குதிரைகள் பட்சிகளைப் போல ஆகாயத்தில் பறந்து போகையில் இந்திரலோகத்தில் ஒரு சத்த முண்டாயிற்று. குபேரனுடைய சிறந்த குதிரைகள் ஆகாயத்தையே இழுத்துக்கொண்டு போவது போலவும், காற்றைக் குடிக்கிறது போலவும் தேரை இழுத்துக்கொண்டு சென்றன. பிறகு குபேரனுடைய கட்டளையால் மலைச் சிகரத்தில் கிடந்த இராட்சதப் பிணங்களை எல்லாம் விலக்கும்படி கட்டளை யிட்டான். இந்தக் காலத்தில் தான் அவர்கள் அழியும்படியாக அகஸ்தியர் குறிப்பிட்டிருந்தபடியால், அவர்கள் சாபத்தினின்றும் விடுதலை யானார்கள். நல்ல சித்தமுள்ள பாண்டவர்கள் அந்த இடத்தில் யாதொரு கவலையு மில்லாமல் அநேக நாள் வாசம் பண்ணினார்கள். இராட்சதர்கள் எல்லாரும் பாண்டவர்களைக் கௌரவித்தார்கள்.

---

## 163-வது அத்தியாயம்.

யட்சயுத்த பர்வத் தொடர்ச்சி.

1—9. சூரியோதயமானதும், தௌமியர் அக்கினி ஹோத்திராதி கடமைகளை முடித்து விட்டு ஆர்ஷ்டிசேனருடன் வந்து பாண்டவர்களைப் பார்த்தார். பாண்டவர்கள் தௌமியருக்கும் ஆர்ஷ்டிசேனருக்கும் நமஸ்காரம் பண்ணி, அஞ்சலியஸ்தர்களாய் மற்றப் பிராமணர்கள் எல்லாருக்கும் மரியாதை செய்தார்கள். பிறகு தௌமியர் தர்மராஜாவைத் தமது வலது பக்கத்தில் வைத்துக்கொண்டு, கிழக்கு திசையைப் பார்த்துக்கொண்டு சொல்லுகிறார். மஹாராஜாவே! மலையரசாகிய இந்த மந்தரகிரி சமுத்திர பரியந்தம் பூமியை மூடிக்கொண்டிருக்கிறது. பாண்டவர்களே! அநேக மலைகளையும் உடைய இந்தத் திசை இந்திரனாலும் குபேரனாலும் காக்கப்படுகிறது. குழந்தாய்!

சகல விதிகளையும் அறிந்த ரிஷிகள் இவ்விடம் மஹேந்திரனுக்கும் குபேரனுக்கும் உரியது என்று சொல்லுகிறார்கள். துவிஜாகளும், புண்ணியாத்மாக்களான ரிஷிகளும், சித்த சாத்தியர்களும், தேவர்களும் இவ்விடத்திலிருந்து உதயமாகிற சூரியனை வணங்குகிறார்கள். எல்லாப் பிராணிகளுக்கும் நாதனுகிய நீதியுள்ள யமன் இறந்து போன ஆத்மாக்கள் செல்லுகிற வழியாகிய தென் திசையில் வசிக்கிறார். அவனுடைய உலகம் பரிசுத்தமானது; சிறந்தது; பார்க்குந்தோறும் ஆச்சரியம் உண்டாக்குவது; நிறைந்த இன்பத்தை யுடையது.

10—26. எப்போதும் சத்தியத்தையே ஆசரிக்கிற சூரியன் அடைகிற இடமென்று அஸ்தகிரியைச் சொல்லுகிறார்கள். வருணராஜன் கடலில் இருப்பது போலவே இந்த மலையிலிருந்துகொண்டு பிராணிகளைக் காப்பாற்றுகிறனென்று அறிஞர் கூறுகிறார்கள். பாக்கியசாலியானவரே! வட திசையில் அழகான மஹா மேரு பர்வதம் ஒளி வீசிக்கொண்டு பரவி யிருக்கிறது. பிரமதேவர் அவ்விடத்தில் இருந்துகொண்டு சராசரங்கள் எல்லாவற்றையும் சிருஷ்டிக்கிறார். அது மங்களம் உள்ளதும் இன்பம் நிறைந்ததுமான தட்சப்பிரஜாபதியின் வாசஸ்தானமும், பிரமாவின் மானச புத்திரர்கள் என்று சொல்லப்படுகிற மற்றவர்களும் வசிக்கிற இடமுமாம். வசிஷ்டர் முதலான தெய்வத் தன்மையுள்ள சப்த ரிஷிகளும் உட்கார்ந்து எழுந்திருக்கிறாகள். ஆதமஞானத்தில் இன்ப மடைந்திருக்கிற பிரமதேவர் தேவர்களுடன் வீற்றிருக்கிற பிரகாசமுள்ள சபை பிரகாசிக்கிறதைப் பார். அந்தப் பிரமதேவருடைய ஸ்தானத்துக்குப் பக்கத்தில் ஆதியந்த மில்லாத நாராயண மூர்த்தி வசிக்கிற இடம் இருக்கிறது. அந்த நாராயணர் தான் பிரபஞ்சோற்பத்திக்கு ஆதிகாரணர் என்று சொல்லப்படுகிறார். சர்வ சக்தியுள்ள தேவர்களால் கூடப் பார்க்க முடியாதது. அது தனது பிரகாசத்தினால் சூரியனுக்கும் அக்கினிக்கும் மேற்பட்டு விளங்குகிறது. அந்த விஷ்ணு ஸ்தானமானது தேவ தானவர்களாலும் கூடக் காணப்படுவதில்லை. அது சிருஷ்டி கர்த்தாவான பிரமாவின் ஸ்தானத்துக்குக் கீழ் புறத்திலுள்ளது. பிரம ரிஷிகளைக் கூட அங்கே விடுவதில்லை என்றால் மற்ற மஹரிஷிகளால் எப்படி அடையக் கூடும்? யதிகள் மாத்திரந்தான் அங்கே செல்லலாம். கிரக நட்சத்திரங்களெல்லாம் அவராலேயே பிரகாசிக்கின்றன. இங்கே தான் காண முடியாத தெய்வத்தின் ஸ்தானமுள்ளது. புண்ணிய கர்மங்களாலும் தெய்வ பக்தியாலும் பரிசுத்தமா யிருக்கிறவர்களும் அருந்தவ முடையவர்களுமான யதிகள் இவ்விடத்தில் நாராயணனை அடைகிறார்கள். மஹாத்மாக்களான அவர்கள் யோகத்தினால் பூர்ண ஞானம் பெற்று, அகந்தையும் அஞ்ஞானமும் அற்றிருக்கிறார்கள். அவ்விடத்திற்குப் போய் சுயம்புவான நித்தியாத்மாவை அடைகிறார்கள். பாரதா! அவர்கள் மீண்டும் இந்த உலகங்களுக்கு வருகிறதில்லை. மஹா பாக்கியசாலியான யுதிஷ்டிரரே! இந்த இடம் தோன்றுதலும் அழிதலும் இல்லாத நித்தியமானது. ஏனென்றால் அந்தக் கடவுளினுடைய நித்திய ஜீவனுகவே யிருக்கிறது.

27—42. சூரிய சந்திரர்கள் தினந்தோறும் மஹா மேரு மலையைப் பிரதட்சிணஞ் செய்கிறார்கள். மற்றக் கிரகங்களும் கூடப் பிரதட்சணஞ் செய்கின்றன. இருளைப் போக்குகிற ஆதித்தியன் கூட எல்லா வானஜோதிகளையும் தன் கவர்ச்சியில் அடக்கிக்கொண்டு இதைச் சூழ்ந்து போகிறான். பகலை உண்டாக்குகிற அவன் கீழே சென்று இரவைக் கழித்து மறுபடியும் இந்த மலையினுடைய வட திசையை அடைகிறான். அந்தச் சவிதா சகல ஜீவாத்மாக்களின் சௌக்கியத்தினிமித்தம் மேருவின் சமீபத்தில் வந்து பின் கீழ் முகமாகச் செல்லுகிறான். அதைப் போலவே சந்திரனும் நட்சத்திரங்களுடன் கூடி, மாசத்தைப் பல பகுதிகளாக வகுத்துக்கொண்டு இந்த மலையைப் பிரதட்சிணம் செய்து, பருவங்களை அடைகிறான். சந்திரன் மஹா மேருவை இவ்வாறு கடந்து பிராணிகளைப் பரிபாலித்து மீண்டும் மந்தர மலையை அடைகிறான். இருட்டை ஒழிக்கிற ஆதித்தியன் தனது கிரணங்களால் எல்லாவற்றையும் விளக்கிக்கொண்டு, தடைபடாத இந்தப் பாதையில் செல்லுகிறான். பனியை உண்டாக்கும் எண்ணத்துடன் தென் திசையைச் சூரியன் அடைகிற போது குளிர் காலம் உண்டாகிறது. தன்னுடைய சொந்த சக்தியினாலே திரும்பும் போது, சராசரங்களாகிற எல்லாப் பொருள்களிலுமுள்ள சக்தியைக் கிரகித்துக் கொள்கிறான். இந்த வெயர்வை யுண்டாகிற காரணத்தினால் எல்லாப் பிராணிகளுக்கும் களை, சோம்பல், மயக்கம் முதலியன உண்டாகின்றன. அதனாலே எல்லாப் பிராணிகளும் நித்திரையை விரும்புகின்றன பிறகு சூரியன் வானமார்க்கமாகச் செல்லுகிறான். எல்லாப் பிராணிகளுக்கும் மழை, காற்று, வெப்பம் முதலியவற்றால் சுகத்தை உண்டாக்கிப் போஷித்த பின்னர் பழைய மார்க்கத்தை அடைகிறான். இவ்வாறு காலசக்கரம் இடைவிடாமல் சுழன்று கொண்டிருக்கிறது. எல்லா ஜீவராசிகளையும் நடத்திக் கொண்டு சூரியன் தன் மார்க்கத்தில் உலாவிக் கொண்டிருக்கிறான். சூரியனுக்கு ஒருபோதும் களையாறுதல் இல்லை. எப்போதும் அவனுடைய நடை தடை படுவதுமில்லை. சகல ஜீவன்களுடைய சக்தியையும் தான் இழுத்துக் கொண்டு மீண்டும் கொடுக்கிறான். பாரதா! எல்லாப் பிராணிகளுக்கும் ஜீவனையும் இயக்கத்தையும் கொடுத்துக்கொண்டும், இரவு பகல், கலை காஷ்டம் முதலிய காலபேதங்களை உண்டாக்கிக் கொண்டும் இருக்கிறான் என்றார்.

---

## 164-வது அத்தியாயம்.

### யக்ஷயுத்த பர்வத் தொடர்ச்சி.

1—12. பெருந்தன்மையுள்ள அந்தப் பாண்டவர்கள் அர்ஜுனனுடைய விருப்பத்தினாலே அந்த மலைச் சிகரத்தில் மனமகிழ்ச்சியுடன் வசித்துக்கொண்டிருந்தார்கள். அளவற்ற கந்தர்வர்களும் மஹரிஷிகளும் ஆசையற்ற பாண்டவர்

களிடம் வந்து அவர்களைக் காண்பார்கள். புஷ்பித்த மரங்கள் நிறைந்திருக்கிற அந்த மலையின் மேலேறி பாண்டவர்கள் சந்தோஷத்துடன் உலாவிக்கொண்டும் விளையாடிக்கொண்டு மிருந்தார்கள் மலைச் சிகரங்களையும், தாழ்வரைகளையும், அவ்விடங்களில் நிறைந்திருக்கிற மலர்களின் அழகையும், பார்த்தும் மயில்களின் தொனியையும் நாரைகளின் ஒலியையும் கேட்டும் மகிழ்ந்து வாசம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். அந்தச் சிறப்புள்ள மலையின் மேல்அநேக குளங்களைக் கண்டார்கள். குபேரன் அவைகளைத் தன் உபயோகத்துக்காக வெட்டுவித்தான். அவைகளெல்லாம் தாமரை மலர்களாலும் கடம்ப கரண்டங்களாலும் நிறைந்திருந்தன. அன்னங்கள் உலாவிக் கொண்டிருந்தன. அவற்றின் கரைகளில் பல வகையான மரங்கள் வளர்ந்திருந்தன. அநேக விளையாட்டிடங்களையும் பார்த்தார்கள். அவைகள் அழகிய மாலைகளாலும் இரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. அவற்றில் குபேரன் வந்து விளையாடுவது வழக்கம். மகரிஷிகளும் அங்கே வருவார்கள். ஒருவராலும் ஏற முடியாத உன்னதமான அம்மலைச் சிகரம் பல வர்ணமுள்ள அநேக வகை மரங்களாலும், மேக படலங்களாலும் நிறைந்திருக்கும். ஜனமேஜய மஹாராஜனே! அந்த மலையினுடைய சுய ஒளியாலும், செடிகளினுடைய பிரகாசத்தினாலும் அவ்விடத்தில் இராப்பகல் என்கிற வேறுபாடு காணப்படுவதில்லை. பாண்டவர்கள் அங்கே வசித்தபோது சூரியன் உதிக்கிறதையும் அஸ்தமிக்கிறதையும் கண்டார்கள். எல்லாத் திசைகளிலும் சூரிய கிரணங்கள் பரவி யிருப்பதையும பார்த்தார்கள். அர்ஜுனனுடைய வரவை எதிர்பார்த்து, வேதங்களை யோதிக்கொண்டும், கர்மவிதிகளை ஆராய்ந்துகொண்டு மிருந்தார்கள். தர்மங்களையும் விரதங்களையும் அனுஷ்டித்து வந்தார்கள். சீக்கிரம் அர்ஜுனன் வந்துவிடுவான். நாம் யெல்லோரும் ஒன்றாய்ச் சேர்ந்து சந்தோஷத்தை அடைவோம் என்று சொல்லிக்கொண்டு மகிழ்ந்திருந்தார்கள். யோகப்பயிற்சி செய்துவந்தார்கள்.

18—20. அவர்களுக்கு எப்போதும் அர்ஜுனனைப் பற்றிய கவலை ஒழியவில்லை. ஒவ்வொரு பகலும், இரவும் ஒரு வருஷத்தினளவாகக் காணப்பட்டன. அர்ஜுனன் தௌமியருடைய உத்தரவினால் ஜடை தரித்துக்கொண்டு புறப்பட்டுப் போன அந்த க்ஷணம் முதலாகப் பாண்டவர்களுக்கு மகிழ்ச்சியேயில்லை. யுதிஷ்டிரருடைய கட்டளையால் அர்ஜுனன் எப்பொழுது புறப்பட்டு மதயானை போலச் சென்றானோ அது முதலாகப் பாண்டவர்கள் துக்கத்தை அடைந்தார்கள். இப்படி ஒரு மாதமளவும் வெகு வருத்தத்துடன் அம்மலை மேல் வசித்தார்கள். தேவலோகம் போயிருக்கிற அர்ஜுனனையே சிந்தித்துக்கொண்டிருந்தார்கள். அர்ஜுனன் தேவாஸ்திரங்களைப் பெறும்படி ஐந்து வருஷ காலமளவும் இந்திர போகத்தில் வசித்தான். அக்கினி, வருணன், சோமன், பிருகு, விஷ்ணு, இந்திரன், பசுபதி, பிரமா, பரமேஷ்டி, பிரஜாபதி, எமன், தாதா, சவிதா, குபேரன் முதலிய தேவர்களுடைய ஆயுதங்களையும் அடையும் பொருட்டுத் தேவேந்திரனை ஆராதித்துக்கொண்டு தேவலோகத்தில் ஐந்து

வருஷம் வசித்தான். பிறகு இந்திரனைப் பிரதட்சிணம் பண்ணி வணங்கி அவனுடைய கட்டளையால் கந்தமாதனம் வந்துசேர்ந்தான்.

---

## 165-வது அத்தியாயம்.

*நிவாதகவச யுத்த பர்வம்.*

1--9 வைசம்பாயனர் ஜனமேஜயனை நோக்கிச் சொல்லுகிறார் தேர் வீரர்களாகிய பாண்டவர்கள் இப்படி அர்ஜுனனை நினைத்துக் கொண்டிருக்கையில் ஒரு சமையம், மாதலியால் செலுத்தப்பட்ட மஹேந்திரனுடைய தேரானது ஆகாயம் முழுவதையும் பிரகாசிப்பித்துக் கொண்டுவந்ததைக் கண்டார்கள். குதிரைகள் பூட்டி விளங்குகிற அந்தத் தேர் மின்னலைப் போல ஒளி வீசிக்கொண்டு திடீரென்று வந்ததைக்கண்டு மகிழ்ந்தார்கள். விண்ணிலிருந்து விழுகிற கொள்ளியைப் போலவும், புகையற்றிருக்கிற அக்கினியின் நாக்கைப் போலவும் ஜ்வலித்துக்கொண்டு வந்தது. புதிய மாலைகளையும் கிரீடத்தையும், ஆபரணங்களையும் தரித்துக் கொண்டிருக்கிற அர்ஜுனன் அழகிலும் வல்லமையாலும் இந்திரனைப் போல விளங்கினான் அந்த ரதம் கந்தமாதன மலையில் வந்து இறங்கிற்று. கிரீடத்தையும் மாலைகளையும் அணிந்துகொண்டிருக்கிற அர்ஜுனன மஹேந்திரனுடைய தேரினின்றும் கீழே இறங்கி வந்து, முதலில் தௌமியர் பாதத்தில் வணங்கிப் பின் யுதிஷ்டிரர் பாதத்தில் வணங்கினான். பின் பீமன் பாதத்தில் பணிந்தான். இரட்டையர்கள் வந்து அர்ஜுனனை வணங்கினார்கள். பிறகு அர்ஜுனன் திரௌபதியினிடம் போய் அவளுக்கு ஆறுதல் சொல்லித் தாமராஜாவிடம் வந்து வணக்கத்துடனே நின்றான். இணையற்ற அர்ஜுனனைக் கண்டவுடன் அவ்விடத்தி லிருந்தவர்களெல்லாரும் ஆனந்த மடைந்தார்கள். மகுடத்தையும் மாலையையும் பூண்ட அர்ஜுனனும் மனமகிழ்ந்து மஹாராஜாவைப் புகழ்ந்தான். நமுசியை வென்றவனும், தைத்தியர்களுடைய ஏழு படைகளை வென்றவனுமாகிய இந்திரனுடைய தேரைப் பாண்டவர்கள் பிரதட்சிணம் பண்ணினார்கள். மாதலியையும் வணங்கினார்கள். தேவர்களுடைய க்ஷேமலாபத்தை விசாரித்தார்கள். மாதலியும் அவர்களை உபசரித்தான். பிறகு மாதலி தன் சொந்த புத்திரனுக்குச் சொல்வது போலப் பாண்டவர்களுக்குப் புத்திகளை உபதேசித்துவிட்டுத் தேருடன் திரும்பவும சொர்க்கம் போய்விட்டான்.

10— . மாதலி போன பிறகு, சத்துரு பயங்கரனான அர்ஜுனன், இந்திரனால் பரிசளிக்கப்பட்டதும், சூரியனைப் போலப் பிரகாசிக்கிறதுமான இரத்தினாபரணங்களைத் தன் காதலிக்குக் கொடுத்தான். பிறகு எல்லாருக்கும் நடுவில் உட்கார்ந்துகொண்டு, தேவலோகத்தில் நடந்தவைகளை யெல்லாம் அவர்களுக்குச் சொல்லி, இவவாறாக இந்திரன், வாயு, சிவன் முதலானவர்க

னிடத்திலிருந்து அஸ்திர வித்தைகளைத் தெரிந்துகொண்டேன் என்று கூறி னன் வணக்கத்துடனும், மன அடக்கத்துடனு மிருந்து எல்லாத் தேவர்களு க்கும் திருப்தி யுண்டாக்கினேன். கிரீடி, இவ்வாறு சொர்க்கலோகத்துச் சங்க திகளை யெல்லாம் அவர்களுக்குச் சொல்லிவிட்டு, நகுல சகதேவர்களுடன் அன்றிரவு சுகமாய்த் தூங்கினன்.

## 166-வது அத்தியாயம்

நிவாதகவச யுத்த பர்வத் தொடர்ச்சி.

1—15. இரவு கழிந்ததும் தனஞ்செயன் தன்னுடைய எல்லாச் சகோ தரர்களுடனும் தர்மராஜாவை வணங்கினன் அச்சமயத்தில் வெகு பயங்கர மாகத் தெய்வவாத்திய தொனி கேட்கப்பட்டது. தேர்ச்சக்கரத் தொனியும், மணி யோசையுங்கூடக் கேட்டது. அவ்விடத்திலுள்ள மிருகங்களும் பறவைக ளும் கூவின. அநேகமாயிரம் கந்தர்வர்களும், அப்ஸரஸ்களும் அந்தத் தேரைச் சூழ்ந்து வந்தார்கள். தங்கமிழைத்து, அழகிய குதிரைகள் பூட்டப்பெற்றுச் சூரியனைப் போலப் பிரகாசிக்கிற அந்தத் தேரிலேறிக்கொண்டு, தேவேந்திரன் பாண்டவர்களைப் பார்க்க வந்தான். அம் மலையில் வந்து தேரை விட்டுஇறங்கி னன், மஹாத்மாவான இந்திரனைப் பார்த்ததும் தர்மராஜா சகோதரர்களோடு போய் அவனை வணங்கினர். அர்ஜுனனும் இந்திரனை வணங்கி அவனுக் கெதிரில் ஒரு சேவகனைப் போல மரியாதையாய் நின்றான். அவ்வாறு நிற்கும் குற்றமற்ற அர்ஜுனனைப் பார்த்து யுதிஷ்டிரர் கரைகடந்த மகிழ்ச்சியால் தம்மை மறந்து பரவசராய்ச், சந்தோஷத்துடன் இந்திரனை வணங்கினர். இந் திரன் யுதிஷ்டிரரைப் பார்த்து, அரசனே! பாண்டவனே! நீ பூமி முழுதையும் ஆள்வாய்; உனக்கு மங்கள முண்டாகட்டும்; குந்தி குமாரனே! இனி நீ காமி யகவனம் போகலாம். இந்தத் தனஞ்செயன் எனக்குப் பிரியமாய் நடந்து என்னிடமிருந்து சகல அஸ்திரங்களையும் பெற்றுக்கொண்டான். மூன்று லோகங்களிலும் அவனுக்கு ஈடானவர்கள் கிடையாது. யுதிஷ்டிரருக்கு இப் படிச் சொல்லிவிட்டு, மஹரிஷிகளால் வணங்கப்பட்டுத், தேவேந்திரன் தேவ லோகம் நோக்கிச் சென்றான்.

16—17. ஒரு வருஷகாலம் பிரமசரியத்தை அனுசரித்து, ஆசையை அடக்கி, விரதானுஷ்டானத்துடன். குபேரனுடைய இராஜ்யத்திலிருந்த பாண் டவர்களும் இந்திரனும் சந்தித்த இந்தச் சரித்திரத்தைப் படிக்கிறவன் நூறு வருஷம் சுகஜீவியாக வாழ்ந்திருப்பான்.

# 167-வது அத்தியாயம்.

## நிவாதகவச யுத்த பர்வத் தொடர்ச்சி.

1—8. இந்திரன் தன் உலகம் போனபின் அர்ஜுனன் தன் சகோதரர்களோடும் திரௌபதியோடும் தர்மராஜனை சேவை செய்துகொண்டிருந்தான். தன்னை வணங்கின அர்ஜுனனை எடுத்து அணைத்து உச்சிமோந்து, ஆனந்தக் களிப்பினால் தழுதழுத்த வார்த்தையோடு பின்வருகிறபடி சொல்லுகிறார். அர்ஜுனா! இத்தனை நாளும் நீ எப்படிச் சொர்க்கத்தில் வசித்தாய்? எப்படி ஆயுதங்களைப் பெற்றாய்? எப்படி இந்திரனை மகிழ்வித்தாய்? நீ அஸ்திரங்கள் எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டாயா? இந்திரனும் ருத்திரனும் மன மகிழ்ச்சியோடு உனக்கு ஆயுதங்களைக் கொடுத்தார்களா? இந்திரனையும் சிவனையும் எப்படித் தரிசித்தாய்? அவர்களை யெப்படி வணங்கினாய்? ஆயுதங்களை எப்படிப் பெற்றுக் கொண்டாய்? இந்திரன் உன்னிடத்தில் வெகு திருப்தியா யிருக்கிறதாகச் சொன்னாரல்லவா? அதற்கு நீ என்ன பணிவிடை செய்தாய்? நான் இவைகளைத் தெளிவாய்க் கேட்க விரும்புகிறேன், மஹாதேவனும்இந்திரனும் உன்னால் மகிழ்விக்கப்பட்டது எப்படி? இவைகளை யெல்லாம் தனஞ்செயா! எனக்குச் சொல் என்று கேட்க அர்ஜுனன் சொல்கிறான்.

9—24. மஹாராஜாவே! நான் இந்திரனையும், மஹாதேவனையும் தரிசித்த விதத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். உம்மிடத்தில் மந்திரத்தைப் பெற்றுக்கொண்டு, உமது கட்டளைப் பிரகாரம் நீர் சொன்ன வனத்தை நோக்கிச் சென்றேன். பிருகுதுங்கத்துக்குப் போய் ஒரு இரவு தங்கினேன். போகும் வழியில் ஒரு பிராமணனைப் பார்த்தேன். அவன் என்னைப் பார்த்து, குந்தி குமாரா! நீ எங்கே போகிறாய்? என்று கேட்டார். நான் அவருக்கு உண்மையைச் சொன்னேன். அவர் மனமகிழ்ந்து, நீ தவஞ்செய். தவத்தினால் தேவதேவனை நீ சீக்கிரம் காண்பாயென்று சொன்னார். அவர் சொன்னபடியே ஹிமயமலைபோய்த் தவம் செய்தேன். முதலாவது மாதத்தில் கனிகளையும் கிழங்குகளையும் புசித்தேன். மஹாராஜாவே! இரண்டாம் மாதத்தில் நீரை மாத்திரம் அருந்தினேன் மூன்றும் மாதம் ஒன்றையும் புசிக்கவில்லை. நாலாம் மாதத்தில் என் கைகளை உயர வெடுத்துக்கொண்டு தவம்செய்தேன். என் பலம் குறையவில்லை. ஐந்தாவது மாதம் முதலாவது தினம் கழிந்ததும், ஒரு பன்றி எனக்கு எதிரில் வந்தது அது தன் வாயால் பூமியை உழுது கொண்டும், காலால் இடித்துக் கொண்டும், வயிறு பூமியில் உராய வெகு பயங்கரமாய் இங்கும் அங்கும் உலாவிற்று. அதற்குப் பின்னால் ஒரு வேடன் வந்தான். கையில்-வில் அம்பு கத்தி முதலியதுக் தரித்துக் கொண்டிருந்தான். பெண்கள் அவனைச் சூழ்ந்திருந்தார்கள். நான் என் வில்லை யெடுத்துக்கொண்டு ஒரு அம்பினால் அந்தப் பன்றியைத் துளைத்தேன். அந்த வேடனும் தன் அம்பினால் அடித்துப் பன்றியைப் பிளந்தான். பிறகு அவன் என்னைப் பார்த்து, அரசனே! வேட்டையாடும் விதிக்கு மாறாக, என்னால் குறிவைத்தடிக்கப்பட்ட பன்றியை நீ யேன்

அடித்தாய். சற்று நில்! இந்தக் கூரிய அம்பினால் உன் கருவத்தைத் தொலைத்து விடுகிறேன் என்று சொல்லி, வில்லை யெடுத்துக்கொண்டு என் எதிரில் வந்தான்.

25—41. மேகமானது மழைத் தாரைகளால் மலையை மூடுவது போல அவன் சிறந்த அம்புகளால் என்னை மூடிவிட்டான். நானும் என் அம்புகளால் அவனை மறைத்து விட்டேன். இடியானது மலையைத் துளைப்பதுபோல நான் அவன் சரீரத்தைத் துளைத்துவிட்டேன். அதன்பின் அவன் சரீரம் ஆயிரம் ஆயிரமாக வளர்ந்து விட்டது. மறுபடியும் அந்தச் சரீரம் முழுமையும் துளைத்துவிட்டேன். பிறகு அந்தத் தேகங்களெல்லாம் ஒன்றாகிவிட்டன. மறுபடியும் என் அம்புகளால் அவன் உடலைத் துளைத்தேன். அவன் இப்போது சிறிய உடலும் பெரிய தலையும் உள்ளதும், பின் சிறிய தலையும் பெரிய உடலுமுள்ள சரீரங்களை அடைந்தான். பிறகு பழைய வடிவத்தை யெடுத்துக்கொண்டு யுத்தம் செய்ய வந்தான். அம்புகளினால் அவனைக் கொல்ல முடியாமல் வாயுதேவனால் கொடுக்கப்பட்ட ஆயுதத்தை எவினேன். அந்த ஆயுதங்கூட அவனைத் துளைக்கச் சக்தியற்றதா யிருந்தது; பிறகு ஏராளமான ஆயுதங்களினாலே அவனை மறைத்தேன், பிறகு தேவாயுதங்களையும் பிரயோகித்தேன். நான் பிரயோகித்த ஆயுதங்களெல்லாவற்றையும் அவன் விழுங்கிவிட்டான். அதன் பின் பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்தேன். அதினின்றும் அக்கினியைக் கக்குகிற அநேகம் ஆயுதங்களுண்டாய் அவனை மறைத்தது. அவன் சரீரம் பெரிதாக வளர்ந்துவிட்டது. நான் எய்த பிரமாஸ்திரத்தால் உலகமெல்லாம் நடுங்கிற்று. அந்த வேடன் அந்தப் பிரமாஸ்திரத்தைக் கூடத் தடுத்துவிட்டான். உடனே எனக்குப் பயம் உண்டாயிற்று. நான் பிரயோகித்த ஆயுதங்களையெல்லாம் அவன் விழுங்கியும், தடுத்தும் அழித்துவிடவே நான் அவனோடு கைச் சண்டை செய்யத் தொடங்கினேன். அதிலும் நான் அவனை ஜயிக்க முடியாமல் களைத்து அறிவிழந்து பூமியில் விழுந்துவிட்டேன். பிறகு அவன் என்னைப் பார்த்துச் சிரித்துவிட்டுப் பெண்களுடன் மறைந்துபோனான். இது எனக்கு மஹா அதிசயமா யிருந்தது.

42— . மஹாராஜாவே! பிறகு அவன் தன் வேடரூபத்தை விட்டு, உயர்ந்த ஆடையா பரணங்களைத் தரித்துக்கொண்டு திவ்ய சொரூபத்துடன் வந்து நின்றான். பல சொரூபங்களையும் எடுத்துக்கொள்ளக் கூடிய மஹா தேவன் சர்ப்பாபரண தாரியாய் உமாதேவியுடன் ரிஷபவாகனத்தில் காட்சியருளினார். சூலபாணியாகிய அவர், என் கிட்டவந்து யுத்தத்துக்குச் சித்தமா யிருக்கிற என்னைப் பார்த்துச், சத்துரு சங்காரனே! நான் உன்மேல் பிரியமா யிருக்கிறேன். குந்தி புத்திரா! நான் உனக்கு என்ன செய்ய வேண்டும்? உன் விருப்பம் யாது? சொல் அதை நிறைவேற்றுகிறேன். நித்தியத்துவத்தைத் தவிர மற்ற எதுவா யிருந்தாலும் அதை உடனே அளிப்பேன் என்றார். நான் கைகளை குவித்துக்கொண்டு மஹாதேவனே! தேவாஸ்திரங்கள் எல்லாவற்றையும் நான் அடைய வேண்டுமென்று கேட்டேன். மஹாதேவன் மனம் மகிழ்ந்து, அவைக

கள் எல்லாவற்றையும் உனக்குக் கொடுக்கிறேன். என்னுடைய ருத்திராயுத மானது உன்னிடத்தில் பிரசன்னமாயிருக்கும் என்றுகூறி மனமகிழ்ச்சியுடன் அழிவற்ற பாசுபதாஸ்திரத்தையும் கொடுத்தருளினார். இந்தப் பாசுபதாஸ்திர த்தை எந்தக் காரணத்தாலாயினும் மனிதர்களின் மேல் பிரயோகம் பண்ணாதே. அற்பப் பலமுள்ளவர்கள் மேல் பிரயோகம் செய்தால் இந்த ஆயுதம் உலகத்தையே அழித்துவிடும். உனக்கு மிகுந்த கஷ்டம் வந்தபோது மாத்திரம் இதைப் பிரயோகிக்கவேண்டும் இந்தத் தெய்வாஸ்திரம எல்லா ஆயுதங்களையும் தடுத்துவிடும். எதிரிகளின் ஆயுதங்களைத் தடுக்க மாத்திரம் எப்போதும் பிர யோகிக்கலாம் என்று கூறி விருஷபத்வஜராகிய மஹாதேவர் அந்த அஸ்திரத் தை உபதேசித்துக் கொண்டிருந்தார். ஒப்பற்றதும், தேவர், தானவர், இராட் சதர்களாலும் தாங்க முடியாத சக்தியுள்ள பாசுபதாஸ்திரத்தை எனக்கு அரு ள்புரிந்தபின், என்னை உட்காரக் கட்டளையிட்டார். நான் உட்கார்ந்து கொண் டபின், நான் பார்த்துக்கொண்டிருக்கும்போதே மறைந்தருளினர்.

---

## 168 வது அத்தியாயம்.

நிவாதகவச யுத்த பர்வத் தொடர்ச்சி.

I—16. பாரதரே! தேவதேவனுன திரியம்பகருடைய கருணையால் அன் றிரவைச் சுகமாக கழித்தேன். விடிந்ததும் காலைக் கடன்களை முடித்துக் கொண்டிருக்கையில் நான் முன்னாலே பார்த்த அந்த வேதியர் வந்தார். நான் மஹாதேவனைத் தரிசனம் செய்ததை அன்புடன் அவருக்குச் சொன்னேன். இராஜாதிராஜனே! அந்த வேதியர் மனமகிழ்ந்து உன்னைத் தவிர மற்றெவரா லும் மஹாதேவனைக் காண முடியாது. பாபமற்றவனே! நீ தேவராஜனையும் காண்பாய், எமன் முதலான லோகபாலர்களுடன் அவர் வருவார், அவர்கள் எல்லாரும் அஸ்திரங்களை அருள் புரிவார்கள் என்று கூறி, அவர் என்னைப் பல தரம் தழுவிக்கொண்டு போய்விட்டார் சத்துரு சங்காரரே! அன்று பகலு க்குமே சுத்தமான நல்ல காற்று வீசிற்று. அந்த இமயமலையின் அடியில் நான் உட்கார்ந்திருந்த இடத்தில் என்னைச் சூழச் சுகந்த புஷ்பங்கள் மலர்ந்தன. எப்பக்கத்திலும் இந்திரனைக் குறித்துப் பாடுகிற பாடலும் இனிய இசைக ளும் கேட்டன. கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் தேவராஜனுக்கு முன்பாக அநேக வகையான பாடல்களைப் பாடினார்கள். தேவர்கள் எல்லாரும் மாஹேந் திரனைச் சூழ்ந்திருந்தார்கள். அலங்கரிக்கப்பட்டுக் குதிரைகளால் இழுக்கப் படுகிற தேரில் தேவராஜன் இந்திராணியுடன் வந்தார். மஹாராஜாவே! அப் பொழுதே குபேரன் நரவாகனனுடனும் தோன்றினர். தென் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிற எமனையும், தத்தம் இடங்களில் உட்கார்ந்து கொண்டிருக்கிற மற்ற திக்குப் பாலகர்களையும் கண்டேன். அவர்கள் எல்லா ரும் மகிழ்ச்சியுடன் என்னை நோக்கி, மனிதசிரேஷ்டனே! சவ்யசாசீ! லோக

பாலகர்களாகிய நாங்கள் உட்கார்ந்துகொண் டிருக்கிறதைப் பார். தேவகாரியத்தை நிறைவேற்றும் பொருட்டு நீ மஹாதேவரைத் தரிசித்தாய். இப்பொழுது எங்களுடைய ஆயுதங்களையும் பெற்றுக்கொள் என்றார்கள்.

17—24. மஹாராஜனே! நான் அவர்கள் எல்லாரையும் வணங்கி அந்த ஆயுதங்களைப் பெற்றுக் கொண்டேன். அவைகளைப் பெற்றுக் கொண்டதும் அந்தத் தேவர்கள் என்னையும் தங்களுள் ஒருவனாக மதித்தார்கள். பிறகு தேவர்கள் எல்லாரும் தத்தம் இடங்களுக்குப் போய் விட்டார்கள். தேவராஜன் கூடத் தேரின் மேலேறிக்கொண்டு என்னைப் பார்த்துப் பல்குனா! நீ தேவலோகத்தைப் பார்க்க வேண்டும். தனஞ்செயா! நான் இங்கே வருகிறதற்கு முன்னாலேயே நீ வருவாயென்று நான் அறிவேன். நான் உன்னைத் தேவர்களுக்குத் தெரிவிப்பேன். பாண்டவனே! நீ முன்னாலே அநேக தீர்த்தங்களைச் சேவை செய்திருக்கிறாய் அநேக தவங்களையும் செய்திருக்கிறாய் ஆகையால் தேவலோகத்தைப் பார்க்க அருகனாயிருக்கிறாய். நீ இந்த மனித சரீரத்துடன் தேவலோகத்துக்கு வந்து வசிக்க வேண்டும். ஆகையால் நீ மறுபடியும் உக்கிரதவசு செய்ய வேண்டும். என்னுடைய கட்டளையால் மாதலி வந்து உன்னைத் தேவலோகத்துக்கு அழைத்துக்கொண்டு வருவான். தேவர்களும் ரிஷிகளும் உன்னை முன்னாலேயே அறிவார்கள் என்றார். நான் அவரை நோக்கித் தேவராஜனே! என்மேல் கருணையாயிரும். நான் தேவாயுதங்களைக் கற்க விரும்புகிறேன். நீர் எனக்குக் குருவாயிருந்து உபதேசம் செய்தருளும் என்றேன்.

25—62. சத்துருவைச் சங்கரிக்கிறவனே! குழந்தாய்! ஆயுதவித்தையை அடைய விரும்புகிற உன் எண்ணம் சீக்கிரத்தில் நிறைவேறும். நீ என் புத்திரனாயிருக்கிறபடியால் நீ சொல்லிய வார்த்தை தகுதியானதே. என்னுடைய நகரத்துக்கு வந்து வாயு, அக்கினி, வசு, நிருதி, பிதாமகன் முதலானவர்களுடைய ஆயுதங்களைத் தெரிந்து கொள் என்று கூறி மறைந்து போனார். அதன் பின் ஆச்சரியமான தெய்வ ரதத்தைக் கண்டேன். அதை மாதலி ஓட்டிக்கொண்டு வந்தான். லோக பாலகர்கள் போய் விட்டார்கள். மாதலி என்னைப் பார்த்து, ஒப்பற்ற காந்தி யுள்ளவனே! மஹேந்திரன் உன்னைப் பார்க்க விரும்புகிறார். ஆதலால் புண்ணிய உலகங்களைப் பார்த்துக் கொண்டே, இந்த மனித சரீரத்துடன் சொர்க்கத்துக்கு வா. பாரதனே! ஆயிரங் கண்களை யுடைய இந்திரன் உன்னைப் பார்க்க விரும்புகிறார் என்று சொன்னான். நான் இமயமலையைப் புகழ்ந்து, தேரைப் பிரதட்சிணம் பண்ணி அதிலேறிக் கொண்டேன். தேர் வித்தையில் கைதேர்ந்த மாதலி வாயுவேக மனோவேகமாக நடத்தினான். தேர் ஓடும் போது நான் அதில் அசையாமல் உறுதியாய் உட்கார்ந்திருப்பதை மாதலி பார்த்து ஆச்சரியப்பட்டு, என்னைப் பார்த்து ஓ பாரதா! நீ உன் இடத்தை விட்டு அசையாமலிருப்பது வெகு ஆச்சரியமாய் இருக்கிறது. தேவேந்திரன் கூடக், குதிரைகள் இழுக்கத் தொடங்குகையில் அசையாமலிருப்பதில்லை. தேரோடுகையில் நீ அசையாமலிருப்பதனால் உன் வல்லமை தேவராஜனுக்கும் மேற்பட்டது என்று கருதுகிறேன் என்று சொ

ல்லித் தேரை உயரத்தில் செலுத்தினான். தேவர்களுடைய உலகங்களையும் அரண்மனைகளையும் காட்டினான். அதன் மேல் அந்தக் குதிரைகள் பூட்டின இரதம் மேலே பறந்தது. தேவர்களும் முனிவர்களும் அதற்கு வணக்கம் செய்தார்கள். அப்போது தேவ ரிஷிகளுடைய உலகங்களையும், கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள் இவர்களுடைய ஸ்தானங்களையும் பார்த்தேன். சீக்கிரமாகத் தேரை நடத்தித் தேவ நந்தனத்தையும், மற்றுமுள்ள பூங்கா வனங்களையும் மாதலி எனக்குக் காட்டினான். பிறகு அமராவதியில் இந்திரனுடைய அரண்மனையைப் பார்த்தேன். இரத்தினங்களினால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. நினைத்த பொழுது நினைத்த கனிகளைக் கொடுக்கக் கூடிய விருட்சங்கள் நிறைந்து இருந்தன. அங்கே சூரிய வெப்பம் கிடையாது. குளிர்ச்சியு மில்லை. இளைப்புக் களைப்புகளும் இல்லை. மூப்பு இல்லை. துக்கமும் தரித்திரமும் இல்லை. கோபமும் பேராசையும் அவ்வுலகத்தில் இல்லை. மஹாராஜாவே! அவ்விடத்தில் உள்ளவர்கள் எப்போதும் களித்திருக்கிறார்கள். அங்குள்ள மரங்களில் எப்போதும் பசிய இலைகளும், காய் கனி மலர்களும் இருக்கின்றன. குளங்களெல்லாம் தாமரைகளால் அலங்காரமாக இருக்கிறது. காற்றுக் குளிர்ந்து வாசனையும் சுத்தமும் உள்ளதா யிருக்கிறது. பூமியும் பல வகை இரத்தினங்களாலும் மலர்களாலும் அலங்காரமா யிருக்கிறது. அழகிய மிருகங்களும், இனிய குரலுள்ள பல வகைப் பட்சிகளும் இருக்கின்றன. அநேகமான ஆகாய சஞ்சாரிகள் காணப்படுகிறார்கள். வசுக்கள், ருத்திரர்கள், சாத்தியர்கள், மருத்துக்கள், ஆதித்தியர்கள், அசுவினிகள் இவர்களையும் பார்த்து வணங்கினேன். பலம், புகழ், மகிமை, சக்தி யுத்தத்தில் ஜயம் இவைகள் எல்லாம் உண்டாகக் கடவதென்று என்னை ஆசீர்வதித்தார்கள். தேவ கந்தர்வர்களால் வணங்கப்படுகிற அந்த நகரத்தை அடைந்தேன். ஆயிரம் கண்களையுடைய இந்திரனுக்கு முன்னால் அஞ்சலியஸ்தனாய் நின்று கொண்டிருந்தேன். இந்திரன் தம்முடைய ஆசனத்தில் பாதி யிடம் கொடுத்து அதில் உட்காரச் சொன்னார். வாசவன் என்னை மகிமைப் படுத்தி என் சரீரத்தைத் தடவிக் கொடுத்தார். அங்குள்ள தேவ கந்தர்வர்களுடன் ஆயுதப் பயிற்சி செய்ய ஆரம்பித்தேன். விசுவாவசுவின் புத்திரனான சித்திரசேனன் எனக்குச் சிநேகிதனானான். கந்தர்வர்களால் அறியப்பட்ட அஸ்திரசாஸ்திரம் முற்றும் அவனாலேதான் நான் அறிந்து கொண்டேன். நான் இந்திர நகரத்தில் மரியாதையுடனும், சந்தோஷமாகவும், அஸ்திர வித்தைகளைக் கற்றுக்கொண்டும், பாட்டுக்களையும் இனிய ஓசையுள்ள வாத்தியங்களையும் கேட்டுக் கொண்டும், அப்ஸரஸ்களுடைய நடனத்தைப் பார்த்துக் கொண்டும் சுகமா யிருந்தேன். அப்படியிருந்தும் அஸ்திரசாஸ்திரத்தை அசட்டை பண்ணாமல் கற்றுக்கொண்டு வந்தேன். ஆயிரம் கண்ணனானவன் விருப்பத்தைக் கண்டு மகிழ்ந்தார். நான் இவ்விதமாக இத்தனை காட்களை அமராவதியில் கழித்தேன். அஸ்திர வித்தையில் தேர்ந்து, தேவராஜனுக்கு நம்பிக்கை யுள்ளவனான பிறகு, அவர் என்னைப் பார்த்து இந்த வசனங்களைச் சொன்னார்.

63— . தேவர்கள் கூட உன்னை ஜயிக்க மாட்டார்கள். மனிதர்களைப் பற்றிப் பேசுவானேன். நீ பலத்தில் ஒப்பற்றவன். யுத்தத்திலும் உனக்கு ஒப்பு இல்லை. நீ தோல்வி அடைய மாட்டாய் என்றார். உடனே அவருடைய தேகத்தில் மயிர்க் கூச்செறிந்தது. மறுபடியும் என்னைப் பார்த்து, அஸ்திரங்களிலும், யுத்தம் செய்வதிலும் உனக்கு ஈடு ஒருவருமில்லை நீ ஐந்தும் பத்துமான ஆயுதங்களைத் தெரிந்து கொண்டாய். அவற்றை உபயோகிக்கிற ஐந்து வகைகளையும் கற்றுக் கொண்டாய். அவற்றைப் பிரயோகிக்கிற முறையையும், உபசம்ஹாரம் பண்ணுகிற முறையையுந் தெரிந்து கொண்டாய் ஆகையால் நீ உன்னுடைய குருவுக்குத் தட்சணை கொடுக்க வேண்டிய காலம் வந்திருக்கிறது. நீ கொடுப்பதாக வாக்குக் கொடு. அதன் பிறகு நீ இன்னது செய்ய வேண்டுமென்பதைச் சொல்லுகிறேன் என்றார். நான் அதை நிறைவேற்றும் படியான சக்தி என்னிடத்திலிருந்தால் அந்தக் காரியம் முடிந்து விட்டதென்று கருதுங்கள் என்றேன். மஹாராஜாவே! பிறகு தேவராஜன் என்னைப் பார்த்துப் புன் சிரிப்புடன், உன்னால் நிறைவேற்ற முடியாத காரியம் இந்த மூன்று உலகங்களிலுமில்லை. நிவாதகவசர்கள் என்கிற தானவர்கள் எனக்குப் பகைவர்கள். அவர்கள் சமுத்திர மத்தியில் கோட்டைக் கட்டிக்கொண்டு வசிக்கிறார்கள். அவர்கள் மூன்று கோடி தானவர்கள். எல்லாரும் சமமான சக்தியும் பலமு முடையவர்கள். குந்தி புத்திரனே! நீ அவர்களை அழிக்க வேண்டும். அதுதான் நீ எனக்குக் கொடுக்கும் குரு தட்சிணை என்றார். பின் மயிலிறகு போன்ற நிறமுள்ள குதிரைகள் பூட்டி மாதலியால் செலுத்தப்பட்ட இரதத்தைக் கொடுத்தார். இந்தச் சிறந்த கிரீடத்தைக் என் சிரசில் வைத்தார். தாம் அணிந்து கொள்ளத் தக்க ஆபரணங்களையும் கொடுத்தார். இந்தச் சிறந்த கவசமும் அளித்தார். நான் காண்டீவ நாணொசையை உண்டாக்கி அந்தத் தேரில் ஏறிக்கொண்டு புறப்பட்டுப் போனேன். தேவராஜன் பலியை ஜயித்த காலத்தில் இந்தத் தேர் செலுத்தப்பட்டது. ஆகையால் அந்தத் தேர் தொனியைக் கேட்ட வுடனே அதைப் பார்க்க ஆவல்கொண்டு தேவர்கள் எல்லாரும் வந்தார்கள். என்னைத் தேவேந்திரனென்று தவறுதலாக எண்ணிக்கொண்டு என் சமீபத்தில் வந்தார்கள். என்னைப் பார்த்ததும், ஓ பல்குனா! நீ என்ன செய்யப் போகிறாய்? நான் அவர்களுக்கு உண்மைச் சமாசாரத்தைச் சொன்னேன். நான் நிவாதகவசர்களை வதைக்கப் போகிறதை அறிந்த தேவர்கள் எனக்கு வெற்றி உண்டாகும்படி வாழ்த்தினார்கள். இந்திரனுக்குச் செய்யும் வணக்கத்தை எனக்குச் செய்தார்கள். இந்தத் தேரில் ஏறிக்கொண்டுதான் மேகவாகனன் சம்பராசுரனை வென்றார். நமுசி, விருத்திரன், வலன், பிரஹாதன், நரகன் முதலானவர்களையும், அநேக கோடி தைத்தியர்களையும் வென்றார். குந்தி புத்திரனே! நீயும் இந்திரனைப் போலவே நிவாதகவசர்களை வென்று வரக் கடவை. இதோ இருக்கிற சங்கத்தினால் நீ அசுரர்களை வென்று ஜயங் கொள்வாய். இதன் உதவியாலேயே இந்திரன் உலக முழுவதையும் ஜயித்தது என்று கூறித் தேவதத்தம் என்கிற இந்தச் சங்கத்தை

யும் தேவர்கள் கொடுத்தார்கள். நானும் ஜயத்துக்காக அதைப் பெற்றுக் கொண்டேன். பிறகு தேவர்கள் என்னைப் புகழ்ந்தார்கள். இந்தக் கவசம், சங்கம், வில் முதலியவற்றை அணிந்துகொண்டு நான் தானவர்களோடு யுத்தம் செய்ய விரும்பிப் புறப்பட்டு பயங்கரமான நிவாதகவசர் இருக்குமிடத்தை நோக்கிச் சென்றன.

---

## 169-வது அத்தியாயம்.

### நிவாதகவசர் யுத்த பர்வத் தொடர்ச்சி.

1—11. நாலா பக்கங்களிலும் மஹரிஷிகள் நின்று புகழ்ந்தார்கள். நான் குறைவற்ற ஜலத்தையுடைய பயங்கரமான சமுத்திரத்தைக் கண்டேன். நுரையும், ஒன்றோடொன்று மோதிக் கொள்கிற பெரிய மலை போன்ற அலைகளும் காணப்பட்டன. நிரம்பிய இரத்தினங்களை யுடைய கப்பல்கள் தோன்றின. ஆமைகளும், திமிங்கிலங்களும், மகரங்களும் ஜலத்தின் கீழுள்ள கற்பாறைகளும் விளங்கின. தண்ணீருள் முழுகியிருக்கும் அநேகமாயிரம் சங்குகள், இரவில் வெள்ளிய மேகத்தினிடையில் காணப்படுகிற நட்சத்திரங்களைப் போலத் துலங்கின. அளவற்ற இரத்தினங்கள் கும்பல் கும்பலாக ஒளிர்ந்தன. சமுத்திர மத்தியில் சுழல் காற்றைப் போலப் பயங்கரமான காற்று எழுந்தது. அது எனக்கு அதிசயமாகக் கண்டது. சகல நீர்களுக்கும் அரசாகிய சமுத்ரத்தில் தானவர்கள் நிறைந்திருக்கிற அந்தத் தைத்தியர் நகரம் எனக்குத் தோன்றிற்று. அந்தப் பாதாள லோகத்துக்குப் போனவுடனே கைதேர்ந்த மாதலியானவன் உறுதியாய் உட்கார்ந்துகொண்டு, தேரைப் பலமாய் ஓட்டினன். தேரின் கரகர தொனியால் அந்த நகரம் எதிரொலியிடும்படி ஓட்டினன். வானத்தில் உண்டாகும் மேகத் தொனி போன்ற அந்த ஓசையைக் கேட்ட தானவர்கள் என்னை இந்திரனென்று நினைத்துச் சற்றுத் தயங்கினார்கள். பயத்தால் மனம் நடுங்கி வில், அம்பு, கத்தி, கதை, கோடரி முதலிய ஆயுதங்களை யெடுத்துக் கொண்டு நின்றார்கள். தங்களுடைய காத்துக் கொள்ள வேண்டிய முயற்சியைச் செய்துகொண்டு மனத்திகிலுடன் கோட்டைவாயிற் கபாடங்களை மூடிக் கொண்டார்கள்.

12—24. பிறகு நான் மனமகிழ்ச்சியுடன் தேவத்தத்தையெடுத்துப் பலமுறை ஊதினேன். அந்த ஒலி வானத்தை முட்டி யெதிரொலித்தது. அதனால் வல்லமைசாலிகளான அவர்கள் நடுங்கினார்கள். நிவாதகவசர்கள் பல ஆபரணங்களையும் போர்க் கவசங்களையும் அணிந்துகொண்டு, தத்தமக்குரிய ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு ஆயிரமாயிரமாகப் புறப்பட்டார்கள். பிறகு மாதலி தேரைப் பூமியில் நடத்தினன். காற்றைப் போல வேகமாய் நடத்தப் பட்ட அந்தத் தேரின் குதிரைகள் என் கண்களுக்குப் புலப்படவில்லை. அது வெகு ஆச்சரியமாயிருந்தது. தானவர்கள் ஒன்றுக்கொன்று ஒவ்வாதனவும்,

விகாரரூபத்தையுமுடைய வாத்தியங்களை எடுத்துக் கொடுமையான ஓசை யுண்டாகும்படி முழக்கினார்கள். அந்தச் சமுத்திரத்தில் வசிக்கிற மலை போன்ற மீன்கள் அந்த ஒலியால் மயங்கிச் சமுத்திரத்தினின்றும் பறந்து போயின. பின் தானவர்கள் என் மேல் எதிர்த்து வந்து அளவில்லாத கூரிய அம்புகளை யெய்தார்கள். பாரதரே! நிவாதகவசர்களை நாசப்படுத்துகிற அந்தப் பயங்கரமான சண்டை எனக்கும் அவர்களுக்கும் நடந்தது. அந்தக் கொடும் போரைக் காணும்படி தேவ ரிஷிகளும், தானவ ரிஷிகளும், பிரம ரிஷிகளும், சித்தர்களும் அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். அந்த முனிவர்கள் எனக்கு ஜயமுண்டாக விரும்பி, பிருகஸ்பதி பத்தினியான தாரை நிமித்தமுண்டான போரில் அவர்கள் இந்திரனைப் புகழ்ந்தது போல இனிய வசனங்களால் என்னைப் புகழ்ந்தார்கள்.

---

## 170-வது அத்தியாயம்.

### நிவாத கவசயுத்த பர்வத் தொடர்ச்சி.

1—17. பாரதரே! பிறகு நிவாதகவசர்கள் ஆயுதபாணிகளாய் யுத்தம் புரியும்படி என்னை நோக்கி வந்தார்கள். அந்த வல்லமைசாலிகளான தேர் வீரர்கள் என் தேரின் வழியைத் தடுத்துக் கர்ஜனை செய்துகொண்டு, என்னை நாற்புறத்தும் சூழ்ந்து நின்று, மழை போல அம்புகளைச் சொரிந்து என்னை மறைத்து விட்டார்கள். மற்றத் தானவர்கள் புசுண்டி, ஈட்டி முதலிய ஆயுதங்களை என்மேல் விடுவித்தார்கள். இடைவிடாமல் அவர்கள் பொழிந்த ஆயுத மழை என் தேரின் மேல் விழுந்தது. பயங்கரமான தோற்றத்தை யுடைய மற்றவர்கள் ஆயுதங்களையும் வில்லையும்கொண்டு என்னை யெதிர்த்து வந்தார்கள். நான் அவர்களுக்கு மாறாக என் காண்டீவத்தை வளைத்து நேராய்ச் செல்லுகிற அநேகமாயிரம் அம்புகளை யேவிப், பத்துப் பத்துப் பாணங்களால் ஒவ்வொருவர் சரீரத்தையுந் துளைத்துவிட்டேன். என்னுடைய கூரிய அம்புகளால் அவர்களைப் பின்வாங்கும்படி அடித்தேன்; மாதலி குதிரைகளை வேகமாய்ச் செலுத்தினான். வாயுவைப் போன்ற பல வகைக் கதிகளாகச் செலுத்தப் பட்ட அந்தத் தேர் திதி புத்திரர்களைத் துளைத்தது. நூறு குதிரைகள் பூட்டப் பட்டிருந்தும் மாதலி செலுத்துகிற சாமர்த்தியத்தால் சில குதிரைகளே உள்ளனபோலத் தோன்றியது. குதிரைக் குளம்புகளின் மிதித்தலினாலும், இடி போன்ற தேர்சக்கர ஒலியாலும், என்னுடைய பாணங்களாலும் நூறு தானவர்கள் செத்து விழுந்தார்கள். அநேகர் இறந்து போனார்கள், அவர்களுடைய சாரதிகளும் மடிந்தார்கள். ஆயினும் தேர்க்குதிரை அவர்களை அங்குமிங்கும் இழுத்துக்கொண்டு போயின. கைதேர்ந்தவர்களான அந்தத் தானவர்கள் எப்பக்கங்களையும் எத்திசைகளையும் தடுத்துக்கொண்டு, பல வகை ஆயுதங்களைச் சொரிந்து போர் புரிந்தார்கள். என் மனமும் வருந்திற்று. அப்போது மாதலி வேகமுள்ள அந்தக் குதிரைகளை வெகு அநாயாசமாக ஓட்டினான். அச்செயல்

எனக்கு அதிசயமா யிருந்தது. மஹாராஜாவே! அந்தச் சண்டையில் பல வகை ஆயுதங்களைக் கொண்டு யுத்தம் செய்த அந்தத் தானவர்களை நூற்றுக் கணக்காகவும் ஆயிரங் கணக்காகவும் வெட்டித் தள்ளினேன். சத்துரு சங்காரரே! சாரதியாகிய மாதலி யுத்தகளத்தில் நான் நடந்துகொண்ட மாதிரியைப் பார்த்து மிகுதியும் மகிழ்ச்சி யடைந்தான். தேராலும் குதிரைகளாலும் மிதிக்கப் பட்டு அநேக தானவர்கள் மடிந்தார்கள். சிலர் ஓடிப்போனார்கள். மற்றவர்களை நான் எதிர்த்து அம்புகளால் வருத்தியும், அநேக ஆயுதங்களை யேவிப் போர் புரிந்தார்கள்.

18—29. அதன்பின், நான் பிரமாஸ்திர சம்பந்தமான மந்திரோச்சாரணத்துடன் வேகமுள்ள அநேகமாயிரம் அம்புகளை யெய்து தானவர்களை நூற்றுக் கணக்காகவும் ஆயிரங் கணக்காகவும் தகிக்கத் தொடங்கினேன். என்னால் மிகுதியும் வருத்தப்பட்ட அவ்வசுரர்கள் ஒரே காலத்தில் அநேகமாயிரம் கத்திகளையும், கதைகளையும் எறிந்து போர்புரிந்தார்கள். பிறகு மாதவம் என்கிற தேவராஜனுடைய கத்தியை எடுத்துக்கொண்டு, அவர்கள் எறிந்த கத்தி, சூலம் தோமரம் முதலிய படைகளை யெல்லாம் நூறு நூறு துண்டுகளாக வெட்டி எறிந்தேன். அதன்பின் கோபத்துடன் ஒவ்வொருவரையும் பத்துப்பத்துப் பாணங்களால் துளைத்துவிட்டேன். அந்த யுத்தத்தில் எனது காண்டீவத்தினின்றும் விடுபட்டுக் கரிய தேனீக் கூட்டங்களைப் போலப் பறந்த அம்புக் கூட்டங்களைக் கண்டு மாதலி மிக ஆச்சரியப்பட்டான். தானவர்களுடைய ஆயுதங்கள் என்னைச் சூழ்ந்து சொணடதையும், நான் பாணங்களைப் பிரயோகித்த சாமர்த்தியத்தையும், எதிரிகளின் ஆயுதக் கூட்டங்கள் வெட்டுண்ட விந்தையையும் பார்த்த மாதலிக்கு மிகக ஆச்சரிய முண்டாயிற்று. இப்படி அடிபட்ட தானவர்கள் மறுபடியும் என்னைச் சூழ்ந்துகொண்டு சரமாரி பெய்தார்கள். நான் எதிரிகளின் ஆயுதங்களை அழிக்கத் தக்க ஆயுதங்களை மந்திர பூர்வகமாக விடுத்து, அவர்களையும் துளைத்தேன். மழைகாலத்தில் மலைச் சிகரங்களிலிருந்து நீரொழுவதுபோல, அவர்களுடைய பெரிய சரீரத்தினின்றும் இரத்தம் பெருகி ஓடிற்று. நேராகச் செல்லுகிற அம்புக் கூட்டங்களினாலே அடிபட்டு இந்திரனுடைய வஜ்ராயுதத்தினா லடிபட்டவர்களைப் போல் மிகவும் மதிகலங்கி நின்றார்கள். அவர்களுடைய சரீரங்கள் நூறு துண்டுகளாக வெட்டுண்டு விழுந்தன. அவர்களுடைய ஆயுதங்கள் வலிமை யற்றுப் போயின. பிறகு நிவாத கவசர்கள் மாயையினால் போர் புரியத் தொடங்கினார்கள்.

---

## 171-வது அத்தியாயம்.

### நிவாத கவசயுத்த பர்வத் தொடர்ச்சி.

1—11. பிறகு எப்பக்கங்களிலும் பெரிய கல்மழை பொழிந்தது. ஒவ்வொரு கல்லும் ஒரு பெரிய குன்றளவாக இருந்தது. மஹேந்திரனுடைய வஜ்

ராயுதத்தினின்று பிறக்கும் இடிகளைப் போன்ற அம்புக் கூட்டங்களினால் அந்தக் கற்களைத் தூளாக்கிவிட்டேன். பொடியான கற்களினின்றும் நெருப்புக் கிளம்பிற்று. அந்த கல் துண்டுகள் நெருப்புப் பொறிகளைப் போல விழுந்தன. அழிக்கப்பட்ட கற்களெல்லாம் இரும்பு கம்பிகளைப் போன்ற மழைத்தாரைகளைப் போல நீர் உருவமாக என் சமீபத்தில் விழுந்தன.அநேக நீர்த் தாரைகள் வானத்தையும் பத்துத் திசைகளையும் மூடிக்கொண்டு பொழிந்தன. அந்தக் கொடிய மழையாலும், பெருங் காற்றினாலும், தைத்தியருடைய கர்ஜனையாலும் நான் சற்று மயங்கினேன். அந்த மழை வானம் பூமி யிரண்டையும் மறைத்துக்கொண்டு இடைவிடாமல் பெய்ததனால் நானும் மயங்கினேன். பிறகு நான் மஹேந்திரனிடத்தில் கற்றுக்கொண்ட விசோஷணாஸ்திரத்தைப் பிரயோகித்தேன். அக்கினிஜ்வாலைகளை வீசுகிற அந்தப் பயங்கரமான தெய்வாஸ்திரம் ஜலம் முற்றையும் வற்றச் செய்துவிட்டது. கல்மழையும், நீர்மழையும் என்னால் அழிக்கப்படவே தானவர்கள் மாயையால் அக்கினியையும் காற்றையும் உற்பத்தியாக்கி யுத்தம் செய்தார்கள், நான் அக்கினியை ஸலிலாஸ்திரத்தால் அழித்துவிட்டேன். காற்றைப் பர்வதாஸ்திரத்தால் கெடுத்துவிட்டேன். இம்மாயைகள் இவ்வாறு அழியவே வேறு வகையான மாயைகளைக் கொண்டு யுத்தம் செய்தார்கள்.

12—21 பிறகு பெரிய கல்மழையும், அக்கினி ஆயுத மழைகளையும், காற்றையும் எழுப்பினார்கள். அவைகள் எவ்விடத்தும் பரவி இருளை யுண்டாக்கின. அப்போது குதிரைகள் பின்வாங்கின. மாதலி மயங்கிப்போனான். தங்கச்சவுக்கு அவன் கையினின்றும் நழுவிக் கீழே விழுந்தது. அவன் பயமடைந்து நீ எங்கே யிருக்கிறாய்? எங்கே யிருக்கிறாய்? யென்று பல தரம் கதறினான். அவன் மதியிழந்தபோது நானும் பயந்தேன். இப்படி மயங்கின மாதலி என்னை நோக்கிப் பாபமற்றவனே! பூர்வ காலத்தில் அமிர்தத்தைப் பற்றித் தேவர்களுக்கும் தானவர்களுக்கும் ஒரு பயங்கரமான சண்டை நடந்தது. அதை நான் பார்த்தேன். பயங்கரமான பெரிய சண்டையில் சம்பானுக்கும் இந்திரனுக்கும் யுத்தம் நேர்ந்தது. அப்போது நான் இந்திரனுக்குத் தேர் ஓட்டினேன். பயங்கரமான விருத்திராசுர சம்மாரத்திலும், விரோசனனோடு நேர்ந்த யுத்தத்திலும் நான் இருந்து பார்த்தேன். அவைகளி லெல்லாம் இந்தச் சண்டையி லுண்டானது போல நான் மதிமயங்கவில்லை. சர்வ சிருஷ்டிகரான பிரமதேவரால் இந்தச் சண்டையில் உலகமெல்லாம் அழியும்படி விதிக்கப்பட் டிருக்கிறது போலத் தோன்றுகிறது. அதைத் தவிர வேறு காரணங்கள் எனக்குத் தோன்றவில்லை யென்று அவசரப்பட்டுச் சொன்னான்.

22—30. மாதலியின் வார்த்தையைக் கேட்டு என் மனதைத் தான் சமாதானப் படுத்திக்கொண்டு, தானவர்களா லுண்டாக்கப்பட்ட இந்த மாயையை அழிக்கும் உபாயத்தை என்னுக்குள் யோசித்துத் தீர்மானம் பண்ணிக் கொண்டபின், திகிலடைந்த மாதலியைப் பார்த்து, நீ என் புஜபலிமையையும், என்

ஆயுத பலத்தையும், காண்டீப வில்லின் வலிமையையும் நீ பார். சாரதியே? பயப்படாதே! உன்னைச் சாந்தப் படுத்திக்கொள். இன்று அவர்களால் செய்யப்பட்ட மாயையும், இந்த இருளையும் போக்கடித்து விடுகிறேன் என்று சொன்னேன். நராதிபதியே! நான் இப்படிச் சொல்லிவிட்டுத் தேவர்களுடைய நன்மைக்காகச் சகல பிராணிகளையும் மயக்கும்படியான ஒரு மாயாஸ்திரத்தைப் பிரயோகித்தேன். அதனால் அவர்களுடைய மாயை தொலைந்தது. ஒப்பற்ற சாமர்த்தியத்ஸத யுடைய அவ்வசுரர்களில் சிலர் வேறு பல மாயைகளை யுண்டாக்கினார்கள். அதனால் இந்த உலகம் நன்றாய்த் தெரிந்தது. உடனே இருளால் மறைந்தது. உடனே மறைந்து போயிற்று. பிறகு நீருக்குள் மூழ்கிற்று. அது வெளிப்பட்டபோது மாதலி குதிரைகளைச் செவ்வையாய் நடத்தினான். அப்போது தானவர்கள் என்னை நோக்கி வந்தார்கள். இந்தச் சமையத்தில் அவர்களை எமபுரம் அனுப்ப உத்தேசித்தேன். அப்போது என் கண் எதிரில் சஞ்சரித்த தானவர்கள் எல்லாரும் உடனே மாயையால் மறைந்து போனார்கள்.

---

## 172-வது அத்தியாயம்.

### நிவாதகவச யுத்த பர்வத் தொடர்ச்சி.

1—20. தானவர்கள் மாயையால் மறைந்துகொண்டு யுத்தம் செய்தார்கள். நான் கண்ணுக்குத் தெரியாத பொருள்களை அடிக்கிற அஸ்திரங்களினால் போர்செய்தேன். காண்டீவத்தினின்றும் விடுபட்ட அந்த அஸ்திரங்களால் மறைந்திருந்த தானவர்களுடைய தலையை அவ்வவ் விடங்களிலேயே வெட்டித் தள்ளினேன். என்னால் அடிக்கப்பட்ட அவர்கள் உடனே திடீரென்று மறைந்து நகரத்துக்குள் புகுந்தார்கள். தானவர்களும் அங்கிருந்த பொருள்களும் மறைந்தபின் அவ்விடத்தில் நூற்றுக் கணக்காகவும் ஆயிரக் கணக்காகவும் தானவர்கள் கொலையுண்டு விழுந்திருப்பதையும், அநேகர் ஆயுதங்களும், ஆபரணங்களும், உறுப்புக்களும் சிதைவுண்டு கிடப்பதையும் பார்த்தேன். யுத்தகள முழுமையும் பிணங்களால் நிறைந்திருந்த படியால், குதிரைகள் அடியெடுத்து வைக்கக் கூட அங்கே யிடமில்லை, உடனே தானவர்கள் வானத்திலேறி மறைந்துவிட்டார்கள். நிவாதகவசர் மறைந்து நின்றுகொண்டு, வானம் முழுவதும் பரவியிருந்து கல்மழை பொழிந்தார்கள். சிலர் பூமிக்குள் மறைந்து நின்று குதிரைகளின் குளம்புகளைப் பிடித்துக் கொண்டார்கள். சிலர் தேர்ச் சக்கரங்களைப் பிடித்துக் கொண்டார்கள். நான் போர் புரியத் தொடங்குகையில் அவர்கள் தேர்க் கால்களையும் குதிரைக் கால்களையும் பற்றிக்கொண்டு, என் தேரைச் சூழக் குன்றுகளை மாரிபோலப் பொழிந்து திசை தெரியாமல் மறைத்து விட்டார்கள். கற்களால் மூடப்பட் டிருப்பதாலும், எங்களைச் சூழக் கற்கள் விழுந்துகொண் டிருப்பதாலும் நாங்களிருந்த இடம் ஒரு குகைபோ

லத் தோன்றிற்று. மலைகளாற் சூழப்பட்டது எனக்கு வருத்தமாகவே யிருந்தது. குதிரைகளை வருத்துவதை மாதலி கண்டான். உடனே என்னைப் பார்த்து அர்ஜுனா பயப்படாமல் வஜ்ராயுதத்தைப் பிரயோகம் பண்ணு என்றான். நான் உடனே அந்த வஜ்ராயுதத்தை மந்திரத்தை யுச்சரித்து அநேகம் அம்புகளை யெய்தேன். அவைகள் வஜ்ராயுதங்களாக மாறி மாயையைத் தொலைத்துப், பூமிக்குள்ளிருந்து குதிரைகளைப் பிடித்துக்கொண்ட தானவர்களை எமபுரம் சேர்த்து விட்டது. மற்றவர்கள் வஜ்ராயுதத்தால் அடிபட்டு ஒருவர்மேல் ஒருவர் மோதிக்கொண்டு விழுந்தார்கள். அந்த இடம் முழுமையும் அடிப்பட்டுக் காயம் அடைந்தவர்களும் இறந்தவர்களுமான நிவாதகவசர்களால் நிறைந்துவிட்டது. நானாவது மாதலியாவது குதிரைகளாவது கொஞ்சங்கூடத் துன்பமடையவே யில்லை. அச்செயல் வெகு ஆச்சரியமாக இருந்தது. பிறகு மாதலி புன்சிரிப்புடன் என்னைப் பார்த்துத், உன்னுடைய சாமர்த்தியம் தேவர்களிடத்திலும் கிடையாது என்றான்.

21—27. தானவரான சத்துருக்கள் கொல்லப்பட்ட போது, அவர்களுடைய தேவிமார்கள் இலையுதிர் காலத்து நாரைகளைப் போலக் கத்தினார்கள். பிறகு மாதலியுடன் நான் அந்த நகரத்துக்குள் நுழைந்தேன். அதிலுள்ள பெண்கள், தேர்க்கால் ஒலியால் திகில்பட்டு, மயில் போன்ற பதினாயிரம் குதிரைகள் பூண்ட அந்தத் தேரைப் பார்த்துக் கூட்டம் கூட்டமாக ஓட்டம் பிடித்தார்கள். அப்போது அவர்கள் அணிந்து கொண்டிருந்த ஆபரணங்கள் கழன்று விழுந்தன. அதனால் ஆலங்கட்டி விழுவது போலத் தொனியுண்டாயிற்று. அந்தப் பெண்கள் எல்லாரும் இரத்தின மிழைத்திருக்கிற தங்களுடைய சொர்ண அரண்மனைக்குட் புகுந்துகொண்டார்கள். தேவேந்திரனுடைய நகரத்துக்கும் மேலான சிறப்புள்ள நகரத்தைப் பார்த்ததும், நான் மாதலியைப் பார்த்து, இது தேவ நகரத்துக்கு மேற்பட்டு விளங்குகிறது. தேவர்கள் இப்படிப்பட்ட நகரத்தில் ஏன் வசிக்கவில்லை யென்று கேட்டேன்.

28.—35. மாதலி, பார்த்தனே! இது முன்பு நமது தேவராஜனுடையது. நிவாத கவசர்கள் இதிலிருந்து தேவர்களைத் துரத்திவிட்டார்கள். இந்தத் தானவர்கள் பிரமாவை நோக்கிக் கொடுந்தவம் செய்து, அவரைச் சந்தோஷப்படுத்தி, தாங்கள் இதில் வசிக்கவும், யுத்தத்தில் தேவர்களால் தங்களுக்குப் பயமில்லாம லிருக்கவும் வரங் கேட்டுக் கொண்டார்கள். பிறகு தேவேந்திரன் சுயம்புவான சிவபெருமானைக் கண்டு தேவர்களுடைய நன்மையைக் குறித்து உமக்கிஷ்டமானபடி செய்தருளு மென்றான். பரமசிவன், இந்திரா! நீ வேறு ஒரு சரீர மெடுத்துக்கொண்டு நிவாத கவசர்களைக் கொல்வாய் என்றார். அதனாலேதான் இந்திரன் இந்தத் தானவர்களைக் கொல்லும்படியான ஆயுதங்களை உனக்குக் கொடுத்தார். உன்னால் கொல்லபபட்டவர்கள் தேவர்களாலும் வெல்ல முடியாத வலிமை யுடையவர்கள். நீ அவர்களைக் கொல்லும்படியாக நியமித்திருந்த காலத்தில் வந்து சேர்ந்தாய். இவர்களைக்

கொல்வதற்காகவே உனக்கு அப்படிப்பட்ட சக்தியை இந்திரன் கொடுத்தார் என்றான். தானவர்களைக் கொன்று, அவர்களுடைய நகரத்தை வசப்படுத்திக் கொண்டபின் நான் மாதலியுடன் தேவலோகம் போனேன்.

---

## 173-வது அத்தியாயம்.

*நிவாதகவசர் யுத்த பர்வத் தொடர்ச்சி.*

1—6. இந்திர லோகத்துககுத் திரும்பிப்போகிற வழியில் ஒரு பெரிய தெய்வ நகரத்தைப் பார்த்தேன். அது இச்சைப்படி உலாவிக் கொண்டிருந்தது. அக்கினியையும் சூரியனையும் போல ஒளி வீசிக்கொண்டிருந்தது. இரத்தினங்களால் உண்டாக்கப்பட்ட மரங்களும், இனிய குரலுள்ள அழகிய பட்சிகளும் நிறைந்திருந்தன. எப்பொழுதும் சந்தோஷமா யிருக்கிற பௌலமர்களும், காலகேயர்களும் வாசம்பண்ணிக் கொண்டிருந்தார்கள். நாலு கோட்டை வாயில்களும், கோபுரங்களும் உடையதாய் ஆச்சரியப்படத் தக்கதாயிருந்தது. மரங்களெல்லாம் இரத்தினங்களால் உண்டாக்கப்பட்டு நிறைந்த கனிகளையும் மலர்களையும் உடையனவா யிருந்தன. அழகிய தெய்வத் தன்மையுள்ள பட்சிகள் நிறைந்திருந்தன. நாலு பக்கங்களிலும் அசுரர்கள் காத்துக்கொண் டிருந்தார்கள். அவர்கள் எப்போதும் களிப்புள்ளவர்களாயிருந்தார்கள். அழகிய மாலைகளை அணிந்திருந்தார்கள். கையில் கத்தி, வில், கதை, தோமரம், ஈட்டி முதலிய ஆயுதங்களைத் தரித்திருந்தார்கள். மஹா ராஜனே! அதிசயமான அந்த நகரத்தைப் பார்த்ததும், மாதலியை நோக்கி அதோ காணப்படுகிற ஆச்சரியமான பட்டணம் யாது? என்று கேட்டேன்.

7—15. மாதலி சொல்லுகிறான், பூர்வத்தில் புலமை என்று ஒரு தைத்திய ஸ்திரீ இருந்தாள். காலகை என்று மற்றொரு தைத்திய ஸ்திரீயும் இருந்தாள். அவ்விருவரும் பிரமதேவனை நோக்கித், தேவ வருஷத்தில் ஆயிர வருஷம் தவம் புரிந்தார்கள். அவர்களுடைய தவம் முடிந்ததும், சுயம்புவான பிரமதேவர் அவர்களுக்குப் பிரசன்னமானார், இராஜாதி ராஜனே! அந்தப் பெண்கள் பிரமாவை நோக்கி எங்களுடைய புத்திரர்கள் ஒருபோதும் துக்கத்தை அடையக் கூடாது. வாயு மயமான ஒரு நகரம் அவர்களுககு இருக்க வேண்டும். அது ஒப்பற்ற அழகும், விசாலமும், ஒளியும் உள்ளதா யிருக்க வேண்டும். சகல இரத்தினங்களும் நிறைந்திருக்க வேண்டும். யட்சர், இராட்சதர், கந்தர்வர், தேவர்கள், மஹா ரிஷிகள், உரகர், அசுரர் ஒருவராலும் அழிக்கப்படாததா யிருக்கவேண்டும் என்று வரம் கேட்டுக் கொண்டார்கள். அதனால் காலகேயர்களுக்காகப் பிரமதேவரால் இந்த நகரம் சிருஷ்டிக்கப்பட்டது. இது தான் அந்தத் திவ்ய நகரம். அதில் வசிக்கிறவர்களுக்குத் துக்கமும் நோயும் இல்லை. அதில் தேவர்கள் வசிப்பதில்லை. அந்த நகரம் வாயு மயமாதலால் சதா அசைந்துகொண்டிருக்கும். இதில் பௌலமர்களும், காலகேயர்

களும் வசிக்கிறார்கள். மகிமையுள்ள இந்த நகரத்துக்கு ஹிரண்யபுரம் என்று பேர். வல்லமைசாலியான அசுரர்களும், காலகேயர்களும், பௌலமர்களும், அதைக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அரசர்க்கரசனே! அவர்கள் அந்த நகரத்தில் சந்தோஷமாயும், தேவர்களாலும் வெல்லப்படாதவர்களாயும், கவலையற்றவர்களாயும், எல்லா விருப்பங்களும் நிறைவேறப் பெற்றவர்களாயும் வசித்துக்கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் மனிதனால் அழிய வேண்டுமென்று பிரமதேவரால் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் பார்த்தனே! ஜயிக்கப்படாத இவர்களை யுத்தம் செய்து வஜ்ராயுதத்தால் அழித்து விடக் கடவாய் என்று சொன்னான்.

16—31. பூமிக்கரசனே! அவர்கள் தேவர்களாலும் அசுரர்களாலும் அழியாதவர்களென்று தெரிந்துகொண்ட பின், நான் மன மகிழ்ச்சியுடன் மாதலியை நோக்கி அந்த நகரத்துக்குத் தேரைச் செலுத்து, தேவர்களுக்குச் சத்துருக்களான இவர்களை என்னுடைய ஆயுதத்தால் அழித்து விடுகிறேன். அதன் பின் தேவர்களுக்குப் பகைவர்களே யிருக்கமாட்டார்கள் என்று சொன்னேன். மாதலி சீக்கிரமாய் ஹிரண்யபுரத்துக்கருகில் என்னைக் கொண்டு போய் விட்டான். பல வகை உடைகளை அணிந்துகொண்டு, இரதாரூடர்களாயிருக்கிற தைத்தியர்கள் என்னைப் பார்த்த வுடனே வெகு ஊர்க்கமாய் என் மேல் பாய்ந்து வந்தார்கள். வல்லவர்களான அந்தத் தானவர்கள் கோபத்துடனே சூலம், சத்தி, தோமரம் முதலிய ஆயுதங்களைப் பிரயோகித்து என்னைத் தடுத்துப் போர் செய்தார்கள். மஹா ராஜனே! பிறகு நான் என் பாணங்களைப் பிரயோகித்து அவைகளை யெல்லாம் தடுத்து கெடுத்து விட்டேன். அன்றியும் அந்தப் பாணங்கள் யுத்த களத்திலுள்ள தானவர்களுடைய தேரில் புகுந்து அவர்களைச் மயங்கச் செய்தன. அதனால் தானவர்கள் ஒருவர் பின் ஒருவராகக் கீழே விழத் தொடங்கினார்கள். என்னால் அடிப்பட்ட அந்தத் தானவர்கள் நகரத்துக்குள் போய்ப் புகுந்து கொண்டார்கள். பின் அந்த நகரத்துடனே வானத்தில் சென்று நின்றுகொண்டு, தானவர்களுக்குரிய அதிசயமான மாயையால் யுத்தம் புரிந்தார்கள். மஹாராஜனே! அதன் பின் என்னுடைய பாண வருஷங்களால் அவர்களை அசைய வொட்டாமல் தடுத்து விட்டேன். அவர்கள் தங்களுடைய வரத்தின் மகிமையால் எளிதாக என் அம்பைக் கெடுத்துத் தங்களுடைய இசைப்படி அந்த நகரத்தை நடத்தினார்கள். அந்த நகரம் ஒரு முறை பூமிக்குள் புகுந்து மறையும், மறுபடி கிளம்பும். ஒரு முறை வளைந்து வளைந்து பறந்து செல்லும், ஒரு சமயம் சமுத்திரத்துக்குள் முழுகி மறைந்து போகும். அந்த நகரத்திலிருந்து அளவில்லாத ஆயுதங்கள் வந்து என்னைச் சூழ்ந்துகொண்டன. பாரதோத்தமரே! என்னுடைய தெய்வாஸ்திரங்களால் அந்த நகரத்தையும் தைத்தியர்களையும் அசைய வொட்டாமல் நிறுத்தி வருத்தினேன். நான் பெய்த அம்புகளால் அந்த அசுர நகரம் பிளந்து முறிந்து பூமியில் விழுந்தது. அசுரர்கள் காயம்பட்டு, விதிவசத்தால் அங்குமிங்கும் திரிந்தார்கள்.

32—41. ஆகாயத்தில் சூரியன் போலப் பிரகாசித்துக் கொண்டிருந்த என் தேரை மாதலி பூமிக்குக் கொண்டுவந்தான். சண்டையை விரும்பின அசுரர்கள் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள் அறுபதினாயிரம் காலகேயர்களும் அறுபதினாயிரம் தேர்களுடன் என்னைச் சுற்றிலும் நின்றுகொண்டு போர் செய்தார்கள். நான் அவர்களுடைய இரதங்களைச் சிதைத்து அழித்து விட்டேன். அவர்கள் கடல் அலைகளைப் போல என்னைச் சூழ்ந்து போர் செய்தார்கள். மானுஷீகச் சண்டைகளால் அவர்கள் அழியமாட்டார்கள் என்று உணர்ந்து, தேவாஸ்திரங்களைப் பிரயோகம் பண்ணினேன். கைதேர்ந்த வீரர்களான காலகேயர்களுடைய பாணங்கள் என் பாணங்களைத் தடுத்து ஒழித்துவிட்டன. நூற்றுக் கணக்காகவும் ஆயிரங் கணக்காகவும் அசுரர்கள் தேரின்மேலிருந்து உலாவக் கண்டேன். என்னுடைய பாண வருஷத்தால் அவர்களை வருத்தி யடக்கக் கூடவில்லை. அவர்கள் என்னை மிகுதியும் துன்பப் படுத்தினார்கள். அந்தக் கொடிய சண்டையில் நான் மிகுதியும் பயந்தேன். பிறகு தைரியமடைந்து தேவதேவனை ருத்திரமூர்த்தியை வணங்கி ஓ தேவனே! உலகத்திலுள்ள சகல பிராணிகளும் ஜீவித்திருக்க வேண்டுமானால் சர்வ சத்துருக்களையும் சங்கரிக்கும்படியான ருத்திரம் என்னும் பேர்கொண்ட உமது ஆயுதத்தை அனுப்ப வேண்டும் என்று பிரார்த்தித்தேன்.

42—56. பாரதரே! உடனே, மூன்று சிரசுகளும், ஒன்பது கண்களும், மூன்று முகங்களும், ஆறு புஜங்களும், சூரியனையும் அக்கினியையும் போலப் பிரகாசிக்கும் ஜடைகளும், நாவை நீட்டிக்கொண் டிருக்கிற சர்ப்பாபரணங்களும் விளங்குகிற ஒரு திவ்ய புருஷன் எனக்கு எதிரில் தோன்றினார். பாரதரே! பயங்கரமானவரும், நித்தியருமான ருத்திர பகவானைப் பார்த்ததும் அச்சத்தை விட்டு திரிநேத்திரங்களையும், இணையற்ற வல்லமையையும் உடைய அவரை வணங்கிக் காண்டீவத்தில் ருத்திர சொரூபமான அந்த அஸ்திரத்தை தொடுத்து,ஒப்பற்ற காலகேயர்களைக் கொல்லும்படி பிரயோகம் பண்ணினேன் காண்டீவத்திலிருந்து புறப்பட்ட உடனே அது ஆயிரம் வடிவங்கள் கொண்டு பரவத் தொடங்கிற்று. அது புறப்பட்ட உடனே, மான்கள், சிங்கங்கள், புலிகள், பன்றிகள், எருமைகள், கரடிகள், சர்ப்பங்கள், பசுக்கள், சரபங்கள், யானைகள், அளவில்லாத குரங்குகள், எருதுகள், பூனைகள், நாய்கள், பேய்கள், இராசாளிகள், கருடர்கள், சமரங்கள், தேவர்கள் ரிஷிகள், கந்தர்வர்கள், பிசாசர்கள், யட்சர்கள், அசுரர்கள், குஹ்யர்கள், நிருதர்கள், யானையைப் போன்ற வாயுள்ள சுறாமீன்கள், ஆந்தைகள், மீன்கள், குதிரைகள், வாள், கதை, கத்தி முதலிய பூண்ட வீரர்களாகிய பல வடிவங்களைக் கொண்டு யுத்தகளம் முழுவதும் பரவிற்று. மாம்சத்தால் நிறைந்ததும், கொழுத்ததும், எலும்புள்ளதும், மூன்று தலைகளையும், நாலு வக்கிர தந்தங்களையும் நாலு வாய்களையும், நாலு புஜங்களையும் உடைய பிராணிகளாலே வதைக்கப்பட்டுத் தானவர்கள் மடிந்தார்கள். பாரதரே! சூரியனைப் போல விளங்குகிற மின்னலைப் போலப் பளிச்சுப் பளிச்சு என்று மின்னுகிறதுமான பாணங்களை யேவி

ஒரு நிமிஷத்துக்குள் எல்லாத் தானவர்களையும் கொன்று விட்டேன். காண்டீவத்தினின்றும் புறப்பட்ட பாணங்களால் வெட்டுண்டு, உயிரை யிழந்து ஆகாயத்திலிருந்து கீழே விழுந்தார்கள். திரிபுராந்தகனாகிய தேவதேவனை மறுபடியும் வணங்கினேன்.

57—66. தேவேந்திர சாரதி மாதலியான என்னுடைய ருத்திராஸ்திரத்தால் காலகேயர்கள் எல்லாரும் ஆவி யிழந்ததைப் பார்த்து மிகவும் மகிழ்ந்தான். தேவர்களாலும் நிறைவேற்ற முடியாத இந்தப் பெருங் காரியத்தை நிறைவேற்றினதைப் பற்றி மாதலி என்னைப் புகழ்ந்தான். அவன் சந்தோஷத்தால் கை கூப்பி நின்றுகொண்டு, நீ முடித்த இந்தக் காரியம் தேவர்களாலும், அசுரர்களாலும் கூடச் செய்வதற்கு முடியாதது. யுத்தத்தில் நீ செய்த காரியம் தேவராஜனால் கூடச் செய்ய முடியாதது. இந்த வாயு நகரம் தேவர்களாலும், அசுரர்களாலும் அழிக்க முடியாதது. உன்னால் அழிந்தது. தவத்தினால் நீ பெற்ற பலமும் சாமர்த்தியமும் வியக்கத் தக்கது. அந்த நகரத்துடன் தானவர்களும் அழிந்து போனார்கள் என்றான். துயரம் கொண்ட அவர்களுடைய தேவிமார்கள் துக்கத்தால் பீடிக்கப்பட்டுக் கூந்தலை விரித்துக்கொண்டு குரரிப் பட்சியைப் போலப் புலம்பினார்கள். தங்களுடைய தகப்பன், புத்திரன், சகோதரர்கள் இவர்களைக் குறித்தும், தங்களுடைய கணவர்களைக் குறித்தும் அழுது புலம்பினார்கள். மார்பில் அடித்துக் கொண்டார்கள். பூமியில் விழுந்து புரண்டார்கள். அவர்களுடைய ஆபரணங்கள் தரையில் சிதறின. கந்தர்வ நகரம் போன்ற அந்தத் தானவர்களுடைய நகரம் புலம்பலால் நிரம்பிற்று அழகை யிழந்தது. தனது தலைவர்களை யிழந்ததனால் யானையை யிழந்த மடுவைப் போலவும், மரங்களை யிழந்த வனத்தைப் போலவும் காணப்பட்டது. பிறகு மறைந்து போய் விட்டது. மிக மகிழ்ந்த மாதலி வெகு வேகமாய்த் தேரைச் செலுத்திக்கொண்டு தேவலோகம் நோக்கிச் சென்றான்.

67—75. என்னை அனுப்பின காரியம் நிறைவேறிற்று. ஹிரண்ய புரத்தையும், காலகேய நிவாதகவசர்களையும் அழித்து விட்டு நான் இந்திரனிடம் போனேன். மிகுந்த காந்தியுள்ள மன்னவரே! மாதலியானவன் யுத்தத்தில் நான் காட்டின சாமர்த்தியங்களை யெல்லாம் இந்திரனுக்குத் தெளிவாய்ச் சொன்னான். ஆயிரம் கண்களையுடைய தேவேந்திரன் வசுக்களுடனிருந்து ஹிரண்யபுரத்தைப் பற்றியும், தானவர்களுடைய மாயையைஅழித்ததைப் பற்றியும், யுத்தத்தில் நிவாத கவசர்கள் இறந்ததைப் பற்றியும் கேட்டு மிகுந்த மகிழ்ச்சியுடன் சபாசு சபாசு என்று சொன்னார். தேவர்களும் தேவராஜனும் அடிக்கடி என்னைச் சந்தோஷப்படுத்தி, நீ யுத்தத்தில் செய்து நிறைவேற்றின இந்தக் காரியம் தேவர்களாலும் அசுரர்களாலும் செய்வதற் கருமையானது. என்னுடைய கொடிய பகைவர்களைச் சங்கரித்ததனால் நீ உன் குருதட்சிணையைக் கொடுத்தாயிற்று. இப்படியே எப்போதும் யுத்தத்தில் மகிழ்ச்சியடைந்தவனாயிரு. தவறுதலில்லாமல் சமயோசிதமாக ஆயுதங்களைப் பிரயோகிக்கும்

புத்தியுடையவனுயிரு. தேவதானவ யட்சகந்தர்வர்களாவது, அசுரர் தானவர் இராட்சதர்களாவது, பசுபட்சி சர்ப்பங்களாவது உன்னை யெதிர்க்கச் சக்தி யற்றவர்களா யிருக்கக் கடவது. உன்னுடைய புஜபலத்தினுல் உலகம் முழுவதையும் வென்று குந்தி புத்திரராகிய யுதிஷ்டிரர் அரசுபுரியக் கடவர் என்று ஆசீர்வதித்தார்.

---

## 174-வது அத்தியாயம்.

*நிவாத கவசயுத்த பர்வத் தொடர்ச்சி.*

1—10. பிறகு தேவராஜன் என்னைப் பார்த்து, தேவாயுதங்களெல்லாம் உன் வசத்திலிருக்கின்றன. ஆகையால் பூலோகத்திலுள்ள மனிதர்களால் உன்னை எந்த விதத்திலும் வெல்ல முடியாது. புத்திரனே! நீ யுத்தத்தில் பிரவேசிக்கும்போது பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன், சகுனி இவர்கள் எல்லாரும் சேர்ந்தாலும் உன் பலத்தில் பதினுறில் ஒன்றுக்கு ஈடாகமாட்டார்கள் என்று கூறித், தேவராஜன் என் தேகத்தைப் பாதுகாக்கும்படி உடைபடாத இந்தக் கவசத்தையும், இந்தச் சொர்ண மாலையையும் கொடுத்தார். தேவதத்தம் என்கிற இந்தச் சங்கத்தையும் கொடுத்துத் தேவேந்திரர் தமது கையினுலேயே இந்தக் கிரீடத்தை என் சிரசில் சூட்டினுர். தெய்வத் தன்மையுள்ள இந்த ஆடையாபரணங்களையும் தந்தார். இவ்வாறு தேவர்களால் கௌரவிக்கப்பட்டுத் தேவலோகத்தில் கந்தர்வ குமாரர்களுடன் கூடிக் களித்திருந்தேன் பிறகு தேவராஜன் என்னை நோக்கி அர்ஜுனு! நீ என்னை விட்டுப் பிரிந்து போகிற காலம் வந்துவிட்டது. உன் சகோதரர்கள் உன்னையே நினைத்து வருந்திக் கொண்டிருக்கிருர்கள் என்ருர். மஹாராஜாவே! இந்த ஐந்து வருஷகாலமும், சூதாட்டத்தால் நமக்கு நேர்ந்ததைக் குறித்து மனம்வருந்திக் கொண்டிருந்தேன். பிறகு என் சகோதரர்களால் சூழப்பட்டிருக்கிற உம்மை இந்தக் கந்தமாதனச் சிகரத்தில் வந்து பார்த்தேன் என்ருன்.

11—17. யுதிஷ்டிரர் சொல்லுகிருர். ஓ தனஞ்செயா! பாக்கிய வசத்தினுலே நீ இந்தத் தேவாயுதங்களைப் பெற்ருய். நீ தேவராஜனைச் சேவை செய்ததும் அதிர்ஷ்டவசந்தான். சத்துரு பயங்கரனே! நீ உமாதேவியோடு பரமசிவனையும் தரிசித்து யுத்தத்தினுல் அவர்களை மகிழ்வித்தாய். லோகபாலகர்களையும் கண்டு தரிசித்தாய். நீ பாக்கியவந்தனு யிருக்கிறபடியாலேதான் நாங்கள் க்ஷேமத்தை அடைகிருேம். எங்களுடைய அதிர்ஷ்ட வசத்தால் நீ மீண்டு வந்தாய். நான் இப்போது பல நகரங்களுடன் கூடிய பூமி முழுவதையும் வென்றுவிட்டதாகவும், திருதராஷ்டிர குமாரர்களைக் கீழ்ப்படுத்தி விட்டதாகவும் கருதி மகிழ்கிறேன். ஓ பாரதனே! நீ நிவாத கவசர்களைச் சங்கரித்த அந்தத் தேவாயுதங்களை நான் பார்க்க விரும்புகிறேன் என்ருர். நிவாத கவசர்களைச் சங்கரித்த அந்த ஆயுதங்களை நாளைக் காலையில் நீர் பார்க்கலாம் என்

றான். இவ்வாறு தனஞ்செயன் தன் வரலாறுகளைச் சொல்லிக்கொண்டு தன் சகோதரர்களுடன் அன்றிரவைக் கழித்தான்.

---

## 175-வது அத்தியாயம்

### நிவாத கவசயுத்த பர்வத் தொடர்ச்சி.

1—11. இரவு கழிந்ததும் புண்ணியாத்மாவான யுதிஷ்டிரர் விழித்துக் கொண்டு, தன் சகோதரர்களுடன் காலைக் கடமைகளை முடித்தார். பிறகு யுதிஷ்டிரர் மாதாவைப் போன்ற மகிழ்ச்சி யுடையவராய் அர்ஜுனனை நோக்கி குந்திபுத்திரனே! நீ தானவர்களைச் சங்கரித்த தேவாயுதங்களைக் காட்டு என்றார். பிறகு அர்ஜுனன் தேவர்களால் கொடுக்கப்பட்ட எல்லா ஆயுதங்களையும் அவருக்குக் காட்டினான். மஹா பராக்கிரம சாலியான தனஞ்செயன் பூமியையே தேராகக்கொண்டு உட்கார்ந்தான். அந்தத் தேருக்கு மலையே ஸ்தம்பமாகவும், மலையடிவாரமே அச்சாகவும், அழகிய மூங்கில்களே சுற்று ஸ்தம்பங்களாகவும், காணப்பட்டன. மஹாபாகுவான தனஞ்செயன் கையில் காண்டீவத்தை யேந்திக்கொண்டும் தேவர்களால் கொடுக்கப்பட்ட சங்கத்தைத் தரித்துக்கொண்டும் தேவாயுதங்களைக் காட்ட உட்கார்ந்தான். தேவாயுதங்களைக் காட்ட அர்ஜுனன் உட்கார்ந்தபோது அவனுடைய பாதங்களால் அழுத்தப்பட்ட பூமி மரங்கள் ஆறுகளுடன் நடுங்கிற்று. சமுத்திரங்கள் கலங்கின. மலைகள் பிளந்தன. காற்று ஓய்ந்தது. சூரியன் ஒளி மழுங்கிற்று. நெருப்புத் தணிந்தது. வேதியர்கள் வேத மோதவில்லை. சகல பிராணிகளும் திகில் அடைந்தன. வாடின முகத்துடன் அர்ஜுனனை சூழ்ந்து கொண்டன.

12—25. தெய்வாஸ்திரங்களினால் வாடித் தங்களுடைய ஜீவனைக் காப்பாற்றும்படி அர்ஜுனனைப் பிரார்த்தித்தன. பிரம ரிஷிகள், சித்தர்கள் அசையும் பிராணிகள் எல்லாம் வந்து சேர்ந்தன. தேவ ரிஷிகள், தேவர்கள், யட்சர்கள், இராட்சதர்கள், இரக்கைகளை யுடையவைகள், வானத்தில் சஞ்சரிப்பவைகள் எல்லாம் வந்து சேர்ந்தன. பிதாமஹன், லோகபாலகர், மஹா தேவர் இவர்களும் வந்தார்கள். பிறகு வாயுதேவன் தெய்வ மலர்களைக் கொண்டு வந்து அர்ஜுனன் மேலே தூவினான். கந்தர்வர்கள் பாடினார்கள். அப்ஸரஸ்கள் ஆடினார்கள். அப்போது தேவர்களால் அனுப்பப்பட்ட நாரத முனிவர் வந்து இந்த வசனங்களை அர்ஜுனன் காதுகளோடு சொன்னார். அர்ஜுனா! பார்த்தா! பொறு பொறு. இந்த அஸ்திரங்களைப் பிரயோகம் செய்யாதே. காரண மில்லாமலும், இலட்சியம் ஒன்று மில்லாமலும் இந்த அஸ்திரங்களை எய்யக் கூடாது. இலட்சியம் உள்ள போதும் மஹா கஷ்டம் நேர்ந்தாலன்றி இவைகளைப் பிரயோகிக்கக் கூடாது. யோசியாமல் இவைகளை யெய்தால் மிகுந்த கஷ்டம் நேரிடும். இவற்றை ஜாக்கிரதையாய்க் காப்பாற்றா விட்டால் மூன்று லோகங்களையும் எரித்து விடும். தனஞ்செயா! இப்படிப்பட்ட செய்

கையை இனி ஒருபோதும் செய்யத் துணியாதே என்று கூறினார். பின் யுதிஷ்டிரரை நோக்கி அஜாத சத்துருவே! யுத்த காலத்தில் அர்ஜுனன் உன் பகைவர்களைக் கொல்லுகையில் நீர் இந்த ஆயுத மகிமைகளைப் பார்க்கலாம். ஜனமேஜய மஹாராஜாவே! இப்படி அர்ஜுனனைத் தடுத்து விட்டுத் தேவர்கள் தமது இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். தேவர்கள் எல்லாரும் போன பின், பாண்டவர்கள் கிருஷ்ணை யுடன் அந்த வனத்தில் வசித்துக்கொண்டு இருந்தார்கள்.

---

## 176-வது அத்தியாயம்.

*அஜகர பர்வம்*

1. ஜனமேஜய மஹாராஜன் வைசம்பாயனரைப் பார்த்து அந்தணரே! அர்ஜுனன் ஆயுதங்களைப் பெற்றுக்கொண்டு இந்திரலோகத்திலிருந்து வந்த பின், அவருடன் கூடி யிருந்த பாண்டவர்கள் என்ன செய்தார்கள்? என்று கேட்க வைசம்பாயனர் சொல்லுகிறார்.

2—5. இந்திரனுக்குச் சமானமான வீரமுள்ள அந்தப் புருஷோத்தமர்கள் அர்ஜுனனுடன் கூடி அந்தக் குபேர வனத்தில் மகிழ்ந்திருந்தார்கள். அந்த வனத்திலும், பெரிய மலையிலும் தங்கினார்கள். ஒப்பற்ற இடங்களையும் பூஞ்சோலைகளையும், அழகிய விருட்சங்களையும் பார்த்து மகிழ்ந்தார்கள். அர்ஜுனன் கை வில்லுடன் அந்த வனத்தில் உலாவிக்கொண்டிருந்தான். குபேரனுடைய கிருபையால் ஒரு இருப்பிடத்தைப் பெற்று நாலு வருஷம் அதில் சுகத்துடன் வசித்தார்கள். அந்தக் காலம் அவர்களுக்கு வெகு இன்பமாய் இருந்தது. பூலோக வாழ்வை அவர்கள் விரும்பவே யில்லை. அந்த நாலு வருஷங்களும், ஒரு நாளாகக் கழிந்தன. முன்னால் சென்ற ஆறு வருஷங்களும் இந்த நாலு வருஷங்களும் ஆக பத்து வருஷங்களாகிய அவர்களுடைய வனவாச காலம் எளிதாகக் கழிந்து போயிற்று.

6—13. ஒரு நாள் யுதிஷ்டிரர் தமது சகோதரர்களுடன் சுகமாய் உட்கார்ந்திருக்கும் போது, பீமனுனவன், அர்ஜுனன், நகுல சகதேவர்களுடன் சேர்ந்து யுதிஷ்டிரரை நோக்கி இனிய வசனங்களால் இரகசியமாகச் சொல்கிறான். கௌரவராஜனே! நாம் இங்குள்ள பரியந்தம் உங்களுடைய சபதப்படி சுயோதனனை அவனுடைய பரிவாரத்துடன் கொல்ல முடியாது. நம்முடைய சுகவாழ்வுகளைச் சுயோதனன் கவர்ந்து கொண்டாலும் இந்தப் பதினொரு வருஷ காலமும் நாம் வெகு சுகமாய்க் கழித்தோம். இன்னமும் நம்முடைய ஸ்திதியைக் கவனியாமல் உமது கட்டளைப்படி இந்த வனத்தில் வசித்துக்கொண் டிருக்கிறோம். துரியோதனன் நாம் தூரத்திலுள்ள நாடுகளில் வாசம் பண்ணினதாக நம்பமாட்டான். நாம் ஒரு வருஷம் அக்ஞாதவாசம்

செய்துமுடித்து, நமது வர்மத்தைச் சாதித்துத் துரியோதனனையும், அவனைச் சேர்ந்தவர்களையும், நமது சத்துருக்களை ஒழித்துவிட்டு, நமது இராஜ்யத்தை மீண்டும் பெறவேண்டும். தேவலோகத்துக்குச் சமானமானஇவ்விடத்தில் நாம் வசித்துக்கொண்டிருந்தால் நம்முடைய துக்கங்களை மறந்துவிடுவோம். அப்படியானால் இந்தச் சராசரப் பிரபஞ்சத்தில் உமது கீர்த்தியின் பரிசுத்தமான தெய்வீகமணம் பரிமளியாது. நீர் குரு நாட்டைப் பெற்றுக் கொண்டால் மேலான புண்ணிய கர்மங்களைச் செய்யலாம். அப்படி நேர்ந்தால் நாம் இப்போது குபேரனால் அனுபவிக்கிற சுக வாழ்வை நீர் எப்போதும் பெற்று வாழலாம். ஆகையால் பாரதரே! உமக்குக் குற்றம் செய்த சத்துருக்களைத் தண்டிப்பதில் மனதைத் திருப்பும்.

14—23. மஹாராஜாவே! உமது சக்தியை வஜ்ரபாணியாகிய இந்திரன்கூடத் தாங்கமாட்டான். கருடத்வஜனாகிய கிருஷ்ணன், சினியின் பேரனான சாத்யகி இருவரும் உமது நன்மையையே கருதுகிறவர்கள். அவர்கள் உமக்காகத் தேவர்களோடு எதிர்த்துப் போர்செய்யவும் அஞ்சமாட்டார்கள். அர்ஜுனன் யுத்தத்தில் ஒப்பற்றிருப்பது போலவே நானும் இருக்கிறேன். நான் உமது நன்மையைக் கருதுவதுபோலவே யாதவர்களுடன் கூடின கிருஷ்ணனும் கருதுகிறார். நகுல சகதேவர்களும் யுத்தத்தில் சாமர்த்தியமுடையவர்கள். உம்முடைய சத்துருக்களுடன் சண்டைசெய்து அவர்களைக் கொன்று உமது ஐசுவரியத்தையும், வாழ்வையும் மீட்பதே எங்களுடைய முக்கிய அபிப்பிராயம். ஆகையால் நாம் இவ்விடத்தை விட்டுப் பூமிக்குப் போவோம் என்று சொன்னான். தர்மராஜாவானவர் தமது சகோதரர்களுடைய எண்ணத்தை அறிந்துகொண்டு, குபேராச்சிரமத்தைப் பிரதட்சிணம் செய்தார். அங்குள்ள இடங்களையும், ஆறுகளையும், மடுக்களையும், இராட்சதர்களையும் உபசரித்தார். பிறகு அந்த மலையை நோக்கி, மலைராஜனே! நான் வேலையை முடித்துக்கொண்டு, என் பகைவர்களை வென்று, என் இராஜ்யத்தை மீட்டுக்கொண்டு, அதன் பிறகு எனது நண்பர்களோடு புலனடக்கத்துடன் தவம் செய்வதற்காக இங்கேவந்து உன்னை மறுபடியும் தரிசிப்பேன். பிறகு தர்மராஜா தமது சகோதரர்களுடனும், பிராமணர்களுடனும் முன்வந்த வழியைப் பற்றி நடக்கத் தொடங்கினார். ரோமசர், தமது சொந்தப் புத்திரர்களுக்குச் சொல்வதுபோலப் பாண்டவர்களுக்கு அநேக புத்திகளை உபதேசித்துவிட்டுத் தேவலோகம் போய்ச்சேர்ந்தார். ஆர்ஸ்திஷேணரும் உரோமசரைப் போலவே பாண்டவர்களுக்கு வேண்டிய புத்திகளைச் சொல்லி அனுப்பினார். பாண்டவர்கள் அநேக தீர்த்தங்களையும் க்ஷேத்திரங்களையும் தரிசித்துக் கொண்டு முன்வந்த வழியாகவே நடந்து சென்றார்கள்.

---

# 177-வது அத்தியாயம்.

## அஜகர பர்வத் தொடர்ச்சி.

1—24. பாண்டவர்கள் அந்த மலையை விட்டுப் புறப்பட்டபின் அஷ்டதிக்கு யானைகளும், கின்னரர்களும், பறவைகளும் மகிழ்ச்சியற்றிருந்தன. பரதகுலோத்தமர்களான பாண்டவர்கள் மறுபடியும் குபேரனுக்குப் பிரியமான அந்த மலையையும், மேகம் போல வெளுத்த கைலாச மலையையும் பார்த்து மகிழ்ந்தார்கள். வில்லையும் வாளையும் உடைய அந்தப் பாண்டவர்கள் போகும் வழியில் அநேக மலைச் சிகரங்களையும், சிங்கத்தின் குகைகளையும், கற்பாறைகளையும், அநேக அருவிகளையும், பள்ளத் தாக்குகளையும், மான்கள் பறவைகள் யானைகள் வசிக்கும்படியான அநேக வனங்களையும் பார்த்து மகிழ்ந்து சென்றார்கள். கடைசியில் விருஷபர்வாவின் ஆச்சிரமம் போய்ச் சேர்ந்தார்கள். விருஷபர்வா அவர்களை மரியாதையோடு வரவேற்று உபசரித்தார். அங்கே சிரமபரிகாரம் செய்துகொண்ட பின் தாங்கள் தங்கியிருந்த மலையில் நடந்த விசேஷங்கள் எல்லாவற்றையும் அவருக்குச் சொன்னார்கள். ஒரு இரவு அவ்விடத்தில் சுகமாக வசித்தார்கள். பிறகு நாராயணாச்சிரமம் போனார்கள். சித்தர்களும் சாத்தியர்களும் சேவிக்கிற குபேரனுடைய பெரிய ஏரியைப் பார்த்துத் துயரமற்று அங்கே தங்கினார்கள். பதரியில் ஒரு மாதம் சுகமாய் வசித்த பின், சுபாகுவின் நகரத்தை நோக்கிச் சென்றார்கள். சீனதேசம் குளிந்ததேசம் முதலியவற்றைக் கடந்து கடைசியில் சுபாகுவின் பிரதான நகரை அடைந்தார்கள் அவர்கள் வருவதைக் கேட்ட சுபாகு மனமகிழ்ச்சியோடு எதிர்கொண்டு உபசரித்தான். கௌரவர்களும அவனை உபசரித்தார்கள். அந்த நகரத்தில் ஒரு இரவு சுகமாய்த் தங்கி யிருந்தார்கள். அங்கிருந்து தங்களுடைய பரிவாரத்துடன் புறப்பட்டு நடந்து விஷாக்கியம் என்கிற வனத்தை அடைந்தார்கள். அந்த வனத்தில் ஒரு வருஷம் தங்கி யிருந்தார்கள். அவ்விடத்தில் ஒரு பெரிய மலைப்பாம்பு பீமசேனனைப் பற்றிக்கொண்டது. மஹா வல்லமையுள்ள யுதிஷ்டிரர் வந்து பீமனை விடுவித்தார். அவர்களுடைய வனவாசத்தின் பன்னிரண்டாவது வருஷம் தொடங்கினபோது அங்கிருந்து புறப்பட்டுச் சரஸ்வதி நதி தீரத்தை யடைந்து துவைதவனம் போனார்கள். துவைத வனத்தில் வசிக்கிற தவசிகள் பாண்டவர்கள் வருகிறதைக் கேள்விப்பட்டுத், தர்ப்பைப் புல்லால் செய்யப்பட்ட பாய்களையும், கமண்டலங்களையும் எடுத்துக்கொண்டு அவர்களை காணவந்தார்கள். சரஸ்வதி நதிக்கரையில் அத்தி மரங்களும், ருத்திராட்ச மரங்களும், சமீ. இங்குடி முதலிய பல வகை விருட்சங்கள் நிறைந்திருநதன. யட்சர்கள், கந்தர்வர்கள், மஹரிஷிகளால் விரும்பப்படுகிற அந்தச் சரஸ்வதி நதிக்கரை தேவலோகம் போல விளங்கியது. பாண்டவர்கள் அவ்விடத்தில் சுகமாய் வசித்துக்கொண்டிருந்தார்கள்.

## 178-வது அத்தியாயம்.

### அஜகர பர்வத் தொடர்ச்சி.

1—4. ஜனமேஜய ராஜன் வைசம்பாயனரைப் பார்த்துப் பதினாயிரம் யானை பலமுடைய பீமசேனன் அந்தப் பயங்கரமான பாம்பினிடத்தில் ஏன் அகப்பட்டுக் கொண்டார்? சத்துருக்களை வதைக்கிற அவர் புலஸ்திய குமாரனும், செல்வத்துக்கு அரசனுமான குபேர நகரத்தில், தாமரை மலருக்காக யட்சர்களையும் இராட்சதர்களையும் கொன்று ஜயங்கொண்டாரென்று நீர் சொன்னீரல்லவா? அப்படிப்பட்ட பீமசேனன் ஒரு பாம்புக்கு ஏன் பயந்தார்? இது எனக்கு அதிசயமா யிருக்கிறது. அதை அறிய விரும்புகிறேன் என்றார்.

5--27. தேவர்களும் கந்தர்வர்களும் வசிக்கிற அந்த வனத்தில் பீமசேனன் வில் வாள் முதலிய ஆயுதங்களைத் தரித்து உலாவிக் கொண்டிருந்தான். இமய மலையைச் சேர்ந்ததும், தேவரிஷிகளும் சித்தர்களும் அப்ஸரஸ்களும் வசிக்கிறதுமான இடங்களை விநோதமாகப் பார்த்துக்கொண்டு போனான். சக்கரவாகம் உபசக்கரவாகம், கோகிலம்முதலிய பட்சிகள் மகிழ்ச்சியாய்ப் பாடிக் கொண்டிருந்தன. நிழலைக் கொடுக்கும் விருட்சங்கள் ஏராளமா யிருந்தன. அவைகள் பூவும் காயும் உள்ளனவாய் மனதுக்கும் கண்களுக்கும் மகிழ்ச்சி தருவனவா யிருந்தன. பனிபோன்ற வெண்ணிறத்தை யுடையதும், வைடூர்ய கற்களைப் போல மினுமினுப்புள்ளதுமான குளிர்ந்த நீரை யுடைய நீரோடைகளுமிருந்தன. அவற்றில் வாத்துகளும், காரண்டவங்களும் வசித்தன. தேவதாரு விருட்சங்கள் அடர்ந்த வனத்தையும், மஞ்சள் நிறமுள்ள சந்தன மரங்கள் நிறைந்த துங்கம் கலிங்கம் என்கிற வனங்களையும் பார்த்து மகிழ்ந்தான். அவ்விடத்திலுள்ள பன்றிகள் முதலிய துஷ்ட விலங்குகளை அம்புகளால் கொன்று கொண்டு போனான். அநேகம் பெரிய மரங்களை முறித்து விழுத்தினான். அதனால் பூமியும், அந்தக் காடும் அவற்றை அடுத்த இடங்களும் ஒலியால் நிறைந்தது. அந்த வனத்தில் பீமன் புஜங்களைத் தட்டியும் அட்டகாசஞ் செய்தும் தொனியை உண்டாக்கிக் கொண்டும், கைகளைத் தட்டிக்கொண்டும் உலாவித் திரிகையில் பீமனுடைய கர்ஜனையால் பெரிய யானைகளும் சிங்கங்களும் பயந்து அவ்விடத்தை விட்டு ஓடிப்போயின. அந்த வனத்தில் பீமசேனன் பயமில்லாமல் வன சஞ்சாரிகளைப் போலத் திரிந்தான். அப்போது அவனுடைய கர்ஜனையால் பாம்புகளெல்லாம் பயந்து தங்களுடைய குகைக்குள் நுழைந்துகொண்டன. அப்போது ஒரு பெரிய சர்ப்பமானது தனது பெரிய சரீரத்தால் குகையை மறைத்துக் கொண்டிருந்ததைக் கண்டான். அதன் சரீரம் ஒரு மலை போலக் காணப்பட்டது. அது மஹா பலமுடையது. அதன் நிறம் மஞ்சள் வர்ணமா யிருந்தது. அநேகம் புள்ளிகளை யுடையதா யிருந்தது. அதன் வாய் நாலு பற்களை யுடையதாய் ஒரு பெரிய குகைபோன்றிருந்தது. அதன் கண்கள் செவந்திருந்தன. அடிக்கடி கடைவாயை நக்கிக்கொண்

டிருந்தது. அது எல்லாப் பிராணிகளுக்கும் அச்சத்தை உண்டாக்கிக் கொண்டு எமனைப் போன்றிருந்தது. சிறுதலால் அச்சுறுத்திக் கொண்டிருந்தது.

28—33. பீமசேனன் தன் கிட்ட வந்த போது சடுதியில் அவனுடைய இரு புஜங்களையும் பற்றிப் பிடித்துக் கொண்டது. அந்தச் சர்ப்பம் தான் பெற்றிருந்த வரத்தினாலே பீமனைப் பற்றி இறுக்கினபோது பீமசேனன் அறிவை யிழந்தான். பதினாயிரம் யானை பலமுள்ள பீமசேனனுடைய புஜங்கள் அந்தச் சர்ப்பத்துக்கு அடங்கிவிட்டது. பீமசேனன் பயமடைந்து தப்பித்துக்கொள்ள யாதொரு முயற்சியும் பண்ணவில்லை. அந்தப் பாம்பு பெற்ற வரத்தினாலே பீமனை யிறுகப் பற்றி வருத்தும்போது சிங்கம்போன்ற தோள்களையும், நீண்ட புஜங்களையு முடைய பீமசேனன் பலமற்றுப் போனான். அவன் தப்பித்துக் கொள்ள முயன்றும் அந்தச் சர்ப்பத்தை மேற்கொள்ளச் சக்தி யற்றுப் போனான்.

---

## 179-வது அத்தியாயம்.

### அஜகர பர்வத் தொடர்ச்சி.

1—7. மஹா பலசாலியான பீமன் பாம்பினாலே பிடிக்கப்பட்டபோது, அந்தப் பாம்பினுடைய சக்தியையும் பலத்தையும் பற்றி யோசித்துக் கொண்டிருந்தான். பிறகு அந்தப் பாம்பை நோக்கி ஓ சர்ப்பமே! நீ யார்? என்னை என்ன செய்யப் போகிறாய்? எனக்குச் சொல்ல வேண்டுமென்றான். நான் பாண்டு மஹாராஜாவின் புத்திரன், தர்மராஜாவுக்கு இளையவன், என் பேர் பீமசேனன் நான் பதினாயிரம் யானை பலமுள்ளவன். உன் பலத்துக்கு நான் அடங்கிப்போனது என்ன காரணம்? நான் யுத்தத்தில் அநேக சிங்கங்களைக் கொன்றிருக்கிறேன். பிடரி மயிரையுடைய சிங்கங்கள், புலிகள், எருமைகள், யானைகள் இவைகள் ஒன்றாய்ச் சேர்ந்து எதிர்த்தபோதும் அவைகளை ஜயித்தேன். சர்ப்பராஜனே! மஹா சக்தியுடைய இராட்சதர்கள், பிசாசர்கள், பன்னகர் முதலான பேர்களும் என் புஜபலத்தைத் தாங்கமாட்டார்கள். நான் தப்பித்துக்கொள்ள முடியாமல் உன்னிடம் சிக்கிக்கொண்டது ஏதாவது சாஸ்திர பலத்தினாலா? அல்லது நீ பெற்ற வரத்தினாலா? சர்ப்பராஜனே! நீ என்னை மேற்கொண்டு என்னை அடக்கினபடியால் மனிதருடைய பலம் பயனற்றதென்றே நினைக்கிறேன் என்றான்.

8—24. பீமசேனன் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போது அந்தப் பெரிய சர்ப்பமானது தனது உடலால் பீமனை முற்றிலும் சுற்றிக்கொண்டது. மஹா பாகுவான பீமனை இப்படி அடக்கிக்கொண்ட பிறகு பீமனை நோக்கிச் சொல்லுகிறது. ஓ பராக்கிரமசாலியே! நான் வெகு காலமாய்ப் பசியா யிருக்கிறேன். என்னுடைய அதிர்ஷ்ட வசத்தினாலே இன்று உன்னை

எனக்கு ஆகாரமாகக் கடவுள் நியமித்திருக்கிறார். ஸ்தூல சரீரமுடைய பிராணிகளுக்கு எல்லாம் ஜீவன் மிக்க அருமையானது. சத்துருவைச் சங்கரிக்கிறவனே! நான் இந்தச் சரீரத்தைப் பெற்ற வரலாற்றை உண்மையாய்ச் சொல்லுகிறேன் கேள். நான் மஹாரிஷியினுடைய சாபத்தினாலே இந்தச் சரீரத்தைப் பெற்றேன். இன்றைய தினம் அந்தச் சாபத்தினின்றும் விடுதலையாக விரும்பி யிருக்கிறபடியால் எல்லாவற்றையும் உனக்குச் சொல்லுகிறேன். பூர்வத்தில் நகுஷன் என்று பேர்கொண்ட ஒரு இராஜரிஷி யிருந்தது எல்லாருக்குந் தெரியும். நீ கூட அவனைப் பற்றிக் கேட்டிருப்பாய். அவன் உன்னுடைய பூர்வ பிதாக்களுக்கு மூலபுருஷன், ஆயுவின் புத்திரன், தன் குலத்தை விளக்குகிறவன். நான்தான் அந்த நகுஷன். நான் பிராமணர்களை அவமதித்த படியால் அகஸ்திய முனிவர் இந்த உருவத்தை அடையும்படி சபித்தார். என்னுடைய துர்ப்பாக்கியத்தைப் பார். நீ என் சந்ததியாகவும், சிறந்த அழகுள்ளவனாகவும், என்னால் கொல்லத்தகாதவனாகவும் இருந்தபோதிலும் நான் இன்றைக்கு உன்னைத தின்னப் போகிறேன். மனிதருள் சிறந்தவனே! ஒரு பகலின் ஆறுவது பாகத்தில் எனக்கு எதிரப்பட்டது பசுவோ எருமையோ எதுவானாலும் தப்பிப் போகாது. நீ தாழ்ந்த ஜந்துக்களால் மேற்கொள்ளப்படமாட்டாய். நான் பெற்ற வரத்தினாலேதான் உன்னை மேற்கொண்டேன். நான் அகஸ்தியரால் சபிக்கப்பட்டு, இந்திராசனத்திலிருந்து பூமியில் விழுகிறபோது, அந்தச் சாபத்தினின்றும் விடுதலை யாக்கும்படி தெய்வத் தன்மையுள்ள அகஸ்திய முனிவரைப் பிரார்த்தித்தேன். அவர் என்மேல் இரக்கம் வைத்து நீ கொஞ்ச காலம் கழித்து விடுதலையாவாய் என்றார். நான் உடனே பூமியில் விழுந்தேன். என் அறிவுமாத்திரம் நீங்கவில்லை. அது வெகு காலம் கடந்து விட்டபோதிலும் போனகால சம்பவங்களை நான் மறக்கவில்லை. ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள சம்பந்தத்தை யுணர்ந்தவன் வந்து உன் கேள்விகளுக்குப் பதில் சொல்லுகிறபோது உன் சாபம் நீங்கும் என்றும், உனக்கு மேற்பட்ட பலமுடையவர்க ளானாலும் நீ பிடித்தவுடனே அவர்களுடைய பலம் குறைந்து போகும் என்று சொல்லிவிட்டு அவர் மறைந்துபோனார். அதுமுதல் அநேக கொடுஞ் செய்கைகளைச் செய்துகொண்டு, என் சாப நிவாரண காலத்தை யெதிர் பார்த்துக்கொண்டு வசிக்கிறேன் என்று சொல்லிற்று.

25—38. மஹா பாகுவான பீமசேனன் சர்ப்பத்தை நோக்கிச் சொல்லுகிறான். மஹா பலசாலியே! நான் என்னைக் குறித்து வருத்தப்படவில்லை. ஏனென்றால், மனிதன் சில சமையம் வல்லமை யுள்ளவனாகவும், சில சமையம் சக்தியற்றவனாகவும் இருக்கிறான். அதைக் குறித்து ஒருவனும் வருந்தக் கூடாது. ஒருவனும் தன் சொந்த முயற்சியால் விதியை வெல்ல முடியாது. ஆகையால் விதியே மேலானது. சொந்த முயற்சி பயனற்றது என்று நான் நினைக்கிறேன். ஏனென்றால் இன்றைய தினம் விதிவசத்தால் நான் பலத்தை யிழந்து இப்படிப்பட்ட நிலைமையை அடைந்தேன். இதற்கு விதியைத் தவிர வேறு காரணம் கிடையாது. நான் என்னுடைய மரணத்தைப் பற்றி அவ்வள

வாக வருத்தப்படவில்லை. என்னுடைய சகோதரர்களைப் பற்றி மிகவும் வருத்தப்படுகிறேன். அவர்கள் எங்களுடைய இராஜ்யத்தை விட்டு வனத்துக்குத்துரத்தப்பட் டிருக்கிறார்கள். என்னைத் தேடி என் சகோதரர்கள் துயரப்பட்டு மனச் சோர்வடைவார்கள். நான் இறந்ததை அவர்கள் அறிந்தால் இராஜ்யத்தை மீட்கும் முயற்சியை முற்றும் விட்டு விடுவார்கள். நான் ஒருவன்தான் அதில் அதிக முயற்சி யுள்ளவனாய்க் கொடுஞ்சொற்கள் சொல்லி அவர்களை முயற்சி செய்யும்படி தூண்டிவிடுகிறவன். அர்ஜுனன் ஒருவன் மாத்திரம் என்னைக் குறித்து வருந்தாம லிருக்கலாம். ஏனென்றால் அவன் புத்திசாலி, எல்லா ஆயுதங்களையு முணர்ந்தவன், தேவர் கந்தர்வர் இராட்சதர்களாலேயும் வெல்ல முடியாதவன். திருதராஷ்டிர புத்திரர்களைப் பற்றிப் பேச வேண்டிய தில்லை. என் தாயார் குழந்தைகளிடத்தில் அதிக பிரியமுள்ளவள், சத்துருக்களை ஜயித்து நாங்கள் மேன்மையை அடைய வேண்டுமென்கிற விருப்பமுள்ளவள். அவளைக் குறித்து நான் துக்கப்படுகிறேன். என் மரணத்தினால் அவளுடைய விருப்பங்களெல்லாம் அழிந்துபோயின. நகுல சகதேவர்கள் ஆண்மையுள்ளவர்கள். என் புஜபலத்தால் காக்கப்பட்டவர்கள். அவர்கள் என் மரணத்தினால் மனந்தளர்ந்து, வல்லமை யற்றுத் துக்கத்தால் பீடிக்கப் படுவார்கள். இதைப் பற்றித்தான் நான் இப்போது சிந்திக்கிறேன் என்றான்.

39—53. இதனால் பீமன் தன் துக்கத்தை முற்றும் விட்டுவிட்டான். சர்ப்பமானது அவன் சரீர முழுவதையும் சுற்றி இறுக்கிக் கொண்டிருக்கிறபடியால்தான் தப்பித்துக்கொள்ள யாதொரு முயற்சியும் செய்யவில்லை. இப்படி யிருக்கையில் யுதிஷ்டிரர் சில துர்ச் சகுனங்களைக் கண்டு மனம் வருந்தினார். அதைச் சூழ நரிகள் நின்றுகொண்டு இரைந்து ஊளையிட்டன. கொடுங் காற்று வீசிற்று. மிருகங்களும் பட்சிகளும் கதறின. கரியகாகங்கள் போபோ என்று கத்தின. யுதிஷ்டிரருடைய வலதுகை நடுங்கிற்று. இடதுகாலும் இருதயமும் துடித்தன. இடது கண் துர்க்குறியைத தெரிவித்தது. இதை யுணர்ந்த யுதிஷ்டிரர் திரௌபதியை நோக்கிப் பீமன் எங்கே என்று கேட்டார். அவள் பீமன் போய் நெடுநேரமாயிற்று என்றாள். உடனே யுதிஷ்டிரர் அர்ஜுனனை நோக்கித் திரௌபதியைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள் என்றார். பின் நகுல சகதேவர்களை நோக்கி இந்தப் பிராமணர்களைக் காத்திருங்கள் யென்று கூறி விட்டுப், பீமனுடைய அடிச்சுவட்டைப் பற்றி அவனைத் தேடிக் கொண்டு போனார். மேல் புறத்தில் அநேக யானைகள் இறந்து கிடந்தன; பீமனுடைய அடிச்சுவடுகள் நிறைந்திருந்தன. பிறகு அநேக மான்களும், சிங்கங்களும் இறந்து கிடந்தன. அதனால் பீமன் சென்ற மார்க்கத்தை அறிந்துகொண்டு போனார். பீமன் நடக்கிற போது அவனுடைய துடையினாலுண்டான காற்றின் வேகத்தால் அநேக மரங்கள் முறிந்து விழுந்து கிடந்தன. இந்த அடையாளங்களைப் பற்றிக்கொண்டே போகும்போது, உவர்ப்புத் தன்மையுடையதும், ஏற முடியாததும், கரடு முரடான இடங்களை யுடையதும், உஷ்

ணமான காற்றுள்ளதும், இலைகளற்ற மரங்களை யுடையதும், முட் செடிகள் நிறைந்திருப்பதும், பருக்கைக் கற்கள் நிறைந்திருப்பதும், குத்துச் செடிகள் மிகுதியாயிருப்பதுமான ஒரு இடத்தை அடைந்தார். அங்கே ஒரு குகையில் பீமன் பெரிய பாம்பினால் சுற்றிக்கொள்ளப்பட்டு மதிமயங்கிக் கிடப்பதைக் கண்டார்.

## 180-வது அத்தியாயம்.

### அஜகர பர்வத் தொடர்ச்சி.

1—10. பேரறிவுள்ள யுதிஷ்டிரர் பாம்பினால் சுற்றப்பட்டிருக்கிற பீமனைப் பார்த்துச் சொல்லுகிறார். குந்தி புத்திரனே! உனக்கு இந்தக் கதி எப்படி நேர்ந்தது? மலை போன்ற சரீரத்தை யுடைய இந்தப் பாம்பு யார்? என்று கேட்டார். பீமன் தன்னுடைய தமையனுருக்கு நடந்த சங்கதிகளைச் சொன்னான். அண்ணாவே! இந்தச் சர்ப்பம் இரைக்காக என்னைப் பிடித்துக் கொண்டது. இராஜ ரிஷியாகிய நகுஷன் இந்தச் சர்ப்ப வடிவா யிருக்கிறார் என்றான். யுதிஷ்டிரர் சர்ப்பத்தை நோக்கிச் சர்ப்ப ராஜனே! மஹா பராக்கிரமசாலியான பீமனை விட்டு விடு. உனக்குப் போதுமானபடி வேறு ஆகாரங்களைக் கொடுக்கிறேனென்றார். என் வாயின் கிட்ட வந்தபடியால் இந்த இராஜ குமாரனை நான் ஆகாரமாகப் பிடித்துக் கொண்டேன். நீ இவ்விடத்தை விட்டுப் போய் விடு. நீ இங்கே யிருக்கக் கூடாது. நீ இருந்தால் நாளைய தினம் உன்னையும் தின்று விடுவேன். மஹா பாகுவான குழந்தாய்! என் அதிகார ஸ்தலத்தில் வந்தவர்களைத் தின்னும்படி எனக்கு விதிக்கப்பட்டு இருக்கிறது. நீயும் என் அதிகாரத்தில் அடங்கி யிருக்கிறாய் நான் நெடுங்காலம் பசியால் வருந்திக் கிடந்தேன். இன்று உன் சகோதரனைப் பிடித்துக்கொண்டேன். நான் இவனை விட மாட்டேன். எனக்கு வேறு ஆகாரமும் வேண்டாம் என்றது. பிறகு யுதிஷ்டிரர் சர்ப்பத்தை நோக்கிச சர்ப்பமே! நீ தேவனா? இராட்சதனா? உரகனா? நீ என்னத்திற்காகப் பீமனைப் பிடித்துக்கொண்டாய்? உண்மையைச் சொல் நீ எதைப் பெற்றால் சந்தோஷப்படுவாய்? எவ்விதமான ஆகாரம் உனக்கு வேண்டும்? என்ன நிபந்தனை செய்தால் நீ அவனை விடுவாய்? என்று கேட்டார்.

11—17. சர்ப்பம் சொல்லுகிறது. பாபமற்றவனே! அரசனே! நான் உனது வம்சத்துக்கு மூலபுருஷன். ஆயுவின் புத்திரன். சந்திரனுடைய ஐந்தாவது சந்ததி. நகுஷன் என்று பேருள்ளவன். யாகங்களாலும், தவசாலும், வேதாத்தியனத்தாலும், புலனடக்கத்தாலும், வல்லமையாலும் மூன்று உலகங்களுக்கும் அதிகார ஸ்தானத்தை யடைந்தேன். அப்படிப்பட்ட பெருமையை அடைந்ததனால் இறுமாப்புக் கொண்டேன். ஆயிரம் பிராமணர்கள் என் பல்லக்கைத் தூக்கினார்கள். அந்த வாழ்வால் மயங்கிப் பிராமணர்களை நிந்தித்

தேன். அதனால் அகஸ்தியர் கோபத்துக்குள்ளாய் இந்தக் கதியை அடைந்தேன். பாண்டவனே! இன்னமும் நான் என் ஞாபகத்தை யிழக்கவில்லை. அகஸ்தியருடைய அனுக்கிரகத்தால் தினத்தின் ஆறுவது பகுப்பில் உன் தம்பியை ஆகாரமாகப் பெற்றேன். ஆகையால் அவனை விடவும்மாட்டேன். வேறு ஆகாரத்தையும் வேண்டேன். ஆனால் நான் இப்போது நான் கேட்கிற கேள்விகளுக்கு நீ விடை கொடுத்தால் உன் தம்பியை விடுவேன் என்றது.

18—3. யுதிஷ்டிரர், ஓ சர்ப்பமே! நீ விரும்பினதைக் கேள். என்னால் கூடுமானால் விடை கொடுக்கிறேன். பிராமணர்கள் அறிய வேண்டுவனவற்றை நீயும் அறிந்திருப்பா யென்பதில் சந்தேகமில்லை. ஆகையால் உன் வசனங்களைக் கேட்டபின் பதில் சொல்கிறேன் என்றார். சர்ப்பம், ஓ யுதிஷ்டிரா! பிராமணன் என்பவன் யார்? எதை அறிய வேண்டும்? இதற்கு நீ பதில் சொல்லுவதினாலே நீ பேரறி வுள்ளவனென்று நான் தெரிந்து கொள்வேன். யுதிஷ்டிரர், சர்ப்பராஜனே! சத்தியம், தர்மம், பொறுமை, நல்லொழுக்கம், பரோபகாரம், தவம், இரக்கம் முதலிய குணங்களை யுடையவனே பிராமணன் என்று சொல்லப்படுவான். இன்பதுன்ப மற்றதும், தன்னை யடைந்த பிராணிகளினுடைய சகல துன்பங்களையு மொழிப்பதுமான பரமாத்மாவையே அறியவேண்டும். சர்ப்பம், யுதிஷ்டிரா! சூத்திரனிடத்திலும் சத்தியம், தர்மம், பொறுமை, இரக்கம், அன்பு, வேத உணர்ச்சி முதலியன இருக்கிறது. அப்போது எவ்வாறு கொள்வது? இன்பதுன்ப மற்றது எது? இந்த உணர்ச்சியில்லாத பொருள் ஒன்றுமில்லை. யுதிஷ்டிரர், முன் குறித்த குணங்கள் சூத்திரனிடத்தி லிருந்தால் அவன் சூத்திரனில்லை; இந்தக் குணங்களில்லாத பிராமணனும் பிராமணனில்லை என்று அவர்களுக்கு வேறுபாடு கூறி யிருக்கின்றது. இன்பதுன்ப உணர்ச்சி யில்லாத பொருள் இராதென்றது நியாயமாகவே தோன்றும். ஆனால் குளிர்ச்சி யில்லாதது உஷ்ணம்; உஷ்ணமில்லாதது குளிர்ச்சி என்று கூறப்படுவது போல, இன்பதுன்ப மிரண்டு மில்லாமை யென்பது அதன் இலக்கணமாகக் கொள்ளலா மென்பது என் கருத்து. அரசனே! முற்கூறிய சில குணங்களினாலேதான் பிராமணனென்று நீ சொன்னதினாலே, ஜாதியினாலே பயனில்லை. பிராமண குலத்தில் பிறந்தவன் இந்தக் குணங்களை அடைகிற வரைக்கும் பிராமணனாக மாட்டானே! இந்த உலகத்தில் நாலு வருணங்களும் கலந்து கிடப்பதினாலே ஜாதி வித்தியாசம் சொல்ல முடியாது. எல்லா வருணத்தாரும் கட்டுப்பா டில்லாமல் எல்லா ஜாதிப் பெண்களிடத்திலும் புத்திரர்களைப் பெறுகிறார்கள். பேச்சும், சகவாசமும், ஜனன மரணங்களும் எல்லாருக்கும் சமானமாகவே யிருக்கின்றன. அதனாலேதான், நாம் எந்த ஜாதியாக இருந்த போதிலும் யாகங்களைச் செய்வோமென்று ரிஷிகளால் கூறப்பட்டுள்ளது. இதனாலேயே அறிஞர்கள் குணமே பிரதானம் என்று சொல்லுகிறார்கள். ஆகையாலே தான் நற்குண நல்ல நடக்க யுள்ளவனே பிராமணனென்று கூறினேன் என்றார். சர்ப்பம், ஓ யுதிஷ்டிரா! நான் உன் வசனங்க

ளைக் கேட்டேன். நீ அறிய வேண்டியவைகளை அறிந்திருக்கிறாய். ஆகையால் நான் உன் தம்பியை எப்படி விழுங்கக் கூடும்? என்றது.

---

## 181-வது அத்தியாயம்.

### அஜகர பர்வத் தொடர்ச்சி.

1—15. யுதிஷ்டிரர் சர்ப்பத்தை நோக்கிச், சர்ப்ப ராஜனே! நீர் இந்த உலகத்திலே வேத வேதாங்கங்களை நன்றாய் அறிந்திருக்கிறீர். எதைச் செய்தால் மனிதன் சொர்க்கத்தை அடைவான். எனக்குச் சொல்ல வேண்டும் என்றார். சர்ப்பம், பாரதனே! தர்மங் கொடுத்தல், இனிய வசனங் கூறல், சத்தியம், பகையின்றி யிருத்தல் முதலியவற்றால் மனிதன் சொர்க்கத்தை அடைவானென்பது என் கருத்து என்றது. யுதிஷடிரர், சர்ப்ப ராஜனே! சத்தியம் உபகாரம் இவ்விரண்டிலும் சிறந்தது எது? பொறாமை யின்மை நல்லொழுக்கம் இவற்றுள் சிறந்தது எது? சர்ப்பம், அரசனே! அவைகள் அவற்றின் பலனால் அறியத் தக்கது. சில சமையங்களில் தர்மத்தை விடச் சத்தியம் மேன்மையுள்ளதாகக் கருதப்படுகிறது. சில சமையம் தர்மம் சத்தியத்தை விடச் சிறந்ததாக மதிக்கப்படுகிறது. அவற்றின் உயர்வுந் தாழ்வும் அவைகள் தரும் பலனாலேயே நிதானிக்கத் தக்கது. யுதிஷடிரா! இன்னமும் ஏதாவது கேட்க வேண்டி யிருந்தால் கேள். நான் சந்தேகத்தை நிவர்த்தி செய்கிறேன். யுதிஷ்டிரா, சர்ப்ப ராஜனே! சரீரத்தை விட்ட ஆத்மா எவ்வாறு சொர்க்க மடைகின்றது. கர்மத்துக் கேற்றபடி சுக துக்கங்களை எப்படி அனுபவிக்கின்றன? சர்ப்பம், மனிதர்கள் தங்களுடைய கர்மத்தால் மறுபடியும் மனிதராய்ப் பிறப்பது, தேவர்களாகிறது, ஈன ஜந்துக்களாக பிறக்கிறது என்கிற மூன்று நிலைமையில் ஒன்றை அடைவார்கள். தர்மம், அழுக்காறின்மை, சோம்பலின்மை முதலியவற்றால் சொர்க்கத்தை அடைவான். அவற்றுக்கு மாறான செய்கையால் மனிதனாய்ப் பிறத்தல் அல்லது தாழ்ந்த ஜந்துவாய்ப் பிறத்தல்களை அடைவான். காமம், கோபம், பொறாமை, ஆசை இவைகளை யுடையவன் தாழ்ந்த ஜந்துவாய் பிறப்பான். அதிலிருந்து முறைப்படி மீண்டும் மனித ஜன்மததை அடைவான். பசுக்கள் குதிரைகள் மற்ற ஜந்துக்களும் கூடச் சில சமையம் தேவ சரீரத்தை பெறுகின்றன. மறு பிறப்பானது பிராணிகளின் கர்மத்தைப் பற்றியதாக இருக்கிறது. அறிவுள்ளவன் தன் ஆத்மாவைப் பிரமத்தினிடத்தில் சேர்த்துச் சுகிக்கிறான். ஸ்தூல சரீரமுள்ள ஜீவன்களும் கர்மத்துக்குத் தக்கபடி சுக துக்கங்களை அனுபவிக்கின்றன. அடிக்கடி செத்துப் பிறக்கின்றன. கர்ம பந்தம் ஒழிந்தவன் எல்லாப் பிராணிகளினுடைய விதியையும் அறிகிறான் என்றது.

16—23. யுதிஷ்டிரர் சர்ப்ப ராஜனே! அவசரப் படாமல் எனக்கு உண்மையாய்ச் சொல்ல வேண்டும். ஸ்தூல சரீரத்தை விட்ட ஜீவன் சப்த, ஸ்பரிச,

இரச, ரூப, கந்தங்களை எப்படி உணர்கின்றது? மேலான மனதை யுடைய பிராணியே! நீ ஐம்புலன்களின் வழியாக சப்தம் முதலிய ஐந்து விஷயங்களை யும் ஒரே முறையில் உணர்வதில்லையா? இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டுகிறேன் என்றார். சர்ப்பம், அரசனே! ஆத்மா என்று சொல்லப்பட்ட பொருளானது ஜட சரீரத்தைப் பெற்று, பஞ்சேந்திரியங்களின் வழியாகத் தனக்கு எதிரப்பட்ட விஷயங்களை அனுபவிக்கிறது. ஆத்மாக்கள் விஷயங்களை அனுபவிக்கிறது. ஆத்மாக்கள் விஷயங்களை அனுபவிக்கிற போது புலன், மனம், அறிவு மூன்றும் உதவியாக இருக்கின்றன. அந்தப் புலன் மனம் அறிவு மூன்றுக்கும் கரணம் என்று பேர். ஆத்மா தன் இருப்பிடத்தை விட்டு நகர்ந்து சென்று புலன் வழிச் சென்று விஷயங்களைக் கிரகிக்கிற மனதின் ஒத்தாசையால் தான் எல்லா விஷயங்களையும் முறையாக அனுபவிக்கின்றது. மனமே இந்திரிய ஞானத்துக்குக் காரணமாகும். ஆகையால் ஒரே காலத்தில் எல்லா விஷயங்களையும் அந்த மனம் கிரகிக்க மாட்டாது. ஆத்மாவானது புருவ மத்தியிலிருந்து கொண்டு, பல வேறுபட்ட விஷயங்களை உணரும்படி ஏற்றத் தாழ்வான அறிவைச் செலுத்துகின்றது. யோகியின் அறிவானது சைதன்னியத்தினின்றும் அடையப்படுவதனால் ஆத்மாவின் செயலாகவே யிருக்கின்றது என்று கூறிற்று.

24—29. யுதிஷ்டிரர், சர்ப்பராஜனே! மனம், சைதன்னியம் இவ்விரண்டின் குணங்களையும் எனக்குத் தெளிவாகச் சொல்ல வேண்டும். அவற்றின் தொழிலாலாகும் ஞானமே பரப்பிரமத்தை அறிகிறதற்குப் பிரதானமாய்க் கொள்ளப்படுகிறது என்றார். சர்ப்பம், விஷய உணர்ச்சியின் குறைவால் ஞானத்துக்கு ஆத்மா விஷயமாகிறது, இந்தக் காரணத்தால் ஞானமானது மனதுக்கு அடங்கி யுள்ளதாகக் காணப்பட்டாலும் அதை நடத்துகிறது. ஞானமானது சைதன்னியத்தின் தொழிலால் விருத்தியாகிறது. மனம் தானாகவே வியாபிக்கின்றது. இதனால் இன்பதுன்பங்களை யுணரச் செய்வது மனமே தவிர ஞானமல்ல. குழந்தாய்! இதுதான் மனதுக்கும், அறிவுக்குமுள்ள வேறுபாடு. நீயும் இவ்விஷயத்தை யுணர்ந்திருப்பாய், என்ன சொல்கிறாய்? என்றது. யுதிஷ்டிரர், ஞானிகளில் சிறந்த சர்ப்பராஜனே! நீ சிறந்த ஞான முள்ளவனாயிருக்கிற போது என்னை யேன் கேட்கிறாய், அறிய வேண்டியவைகளை யெல்லாம் நீ அறிந்திருக்கிறாய். மேலான கர்மங்களைச் செய்து சொர்க்கத்தை அடைந்த உனக்கு இப்படிப்பட்ட மாயை வந்தது எப்படி யென்று எனக்குத் தோன்றவில்லை என்றார்.

30—48. மேலான அறிவுள்ளவனும் வாழ்வினால் கொழுப்படைகின்றான். ஆகையால் பெரும் போகங்களை நுகர்கிறவன் புத்தியை யிழந்து விடுகிறானென்பது என் கருத்து. யுதிஷ்டிரா! ஆகையால், நானும் போகங்களை அருந்தி மயங்கி இந்த நிலைமையை அடைந்தேன். என்னுடைய அறிவை நான் மீண்டுமடைந்தேன். அதனால் உனக்குச் சொல்லுகிறேன். சத்துருக்களை வருத்

துகிறவனே? நீ எனக்குச் சிறந்த பணிவிடை செய்தாய், பக்திமானுகிய உன்னோடு சம்பாஷணை செய்தபடியால் இந்தக் கொடிய சாபத்தினின்றும் விடுதலையானேன். முன் காலத்தில் நான் தேவ விமானத்தில் ஏறிக்கொண்டு இறுமாந்து வானத்தில் சஞ்சரித்தேன். நான் வேறொன்றையும் கவனிக்கவேயில்லை. பிரம ரிஷிகளும், தேவர்களும், கந்தர்வர்களும், யட்சர்களும், இராட்சதர்களும் பன்னகர்களும், மூன்று உலகத்தில் வசிக்கிற சகலரும் எனக்குக் கடமை செலுத்தினுர்கள். வசீகர சக்தியினுலே எனக்கு எதிர்ப்பட்ட எல்லாப் பிராணிகளின் சக்தியையும் நான் கவர்ந்துகொண்டேன். ஆயிரம் பிரமரிஷிகள் என் பல்லக்கைச் சுமந்தார்கள். ஒரு நாள் அகஸ்தியமுனிவர் என் பல்லக்கைச் சுமந்துகொண்டு போகும்போது என் கால் அவர் மேல் பட்டது. அந்தப் பாவச் செய்கையால் அகஸ்தியர் கோபித்து நீ பாம்பாகக் கடவாய் என்று சபித்தார், அதனுல் நான் அந்த வாழ்வை யிழந்து அந்த வாகனத்தி லிருந்து பூமியில் விழுந்தேன். நான் விழுந்துகொண் டிருக்கும்போதே எனக்குப் பாம்பு ரூபம் வந்துவிட்டது, நான் தலை கீழாக விழும்போது என் சாபத்தை நீக்கும்படி அந்த முனிவர் மனமிரங்கித், தார்மிகர்களில் சிறந்த யுதிஷ்டிரன் உன் சாபத்தினின்று உன்னை விடுவிப்பான் என்று சொன்னுர். அவனுல் இந்தக் கொடிய சாபம் நீங்கினதும், நீ உன் புண்ணியத்தின் பலனை அனுபவிப்பாய் என்றுர். அந்த முனிவருடைய தபோபலத்தைக் கண்டு நான் ஆச்சரிய பரவசனுனேன். அதனுலேதான் பிராமணர்களுக்கும் பிரமத்துக்கும உள்ள சம்பந்த விஷயமான இந்தக் கேள்விகளை உன்னிடம் கேட்டேன். மோட்ச மடைவதற்குச் சத்தியம், புலனடக்கம், தவம், பரோபகாரம், பகையின்மை, தர்மம் இவைகளே காரணம். ஜாதி முதலியவற்றுல் பயனில்லை, உன் தம்பியாகிய பீமசேனன் சுகமாய் வாழ்ந்திருக்கட்டும். மஹாராஜனே! நீ சுகமாயிரு. நான் இப்போது சொர்க்கம் போகிறேன் என்றுன்.

44— . நகுஷ ராஜன் இப்படிச் சொல்லிப், பாம்பு வடிவத்தை விட்டுத், தேவ ரூபத்தை அடைந்து, மறுபடியும் சொர்க்கம் போனுன். புண்ணியாத்மாவான தர்ம புத்திரர் பீமசேனனை அழைத்துக்கொண்டு தமதாச்சிரமம் போய்ச் சேர்ந்தார். அங்குள்ள பிராமணர்களுக்கு நடந்த எல்லாவற்றையும் சொன்னுர். பிராமணர்களும், மற்றப் பாண்டவர்களும், திரௌபதியும் ஆச்சரியப்பட்டார்கள். பாண்டவர்களுடைய க்ஷேமத்தையே விரும்புகிற அந்தப் பிராமணர்கள் பீமனுடைய துடுக்கான செயல்களைக் கண்டித்து, இனிமேல் அப்படிச் செய்ய வேண்டாமென்று அவனுக்குச் சொன்னுர்கள். பீமசேனன் அந்தப் பெரிய ஆபத்தினின்றும் தப்பி வந்ததற்காகப் பாண்டவர்களெல்லாரும் மகிழ்ச்சி அடைந்தார்கள். அவ்விடத்திலேயே சுகமாக வசித்துக்கொண்டு இருந்தார்கள்.

---

## 182-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வம்.

1—9. பாண்டவர்கள் அங்கே வசிக்கும் போது கோடையை ஒழிப்பதும், எல்லாப் பிராணிகளுக்கும் பிரிய முள்ளதுமான மழை காலந் தோன்றியது. அநேகமாயிரம் கரிய மேகங்கள் வான வட்டத்தையும், திக்குகளையும் மறைத்துக்கொண்டு பரவின. இடி முழக்கங்களுண்டாயின. கூடார மிட்டது போலக் காணப்பட்ட அந்த மழை காலத்தில் இரவும் பகலும் ஓயாமல் மழை பொழிந்தன. சூரியனொளி மறைந்து போயிற்று. அதற்குப் பதிலாகக் களங்க மில்லாத மின்னலொளி பரந்தது. பூமி எங்கும் புற்கள் முளைத்தன. கொசுகுகள் பரந்தன. நிலமெல்லாம் செழிப்படைந்து, நீர் நிறைந்து குளிர்ந்து, பார்க்க ரம்மியமா யிருந்தது. பூமி யெங்கும் நீரால் நிறைந்ததனால், பூமியையும் ஆறு குளங்களையும் வேறு பிரித்துக் காண முடியாம லிருந்தது. கோடை காலத்தின் முடிவிலே, ஆறுகள் எல்லாம் நீரால் நிறைந்து, சத்தித்துக்கொண்டு வேகமாய் ஓடி வனங்களுக்கு அழகு கொடுத்தன. பன்றிகளும், மான்களும், பறவைகளும், நீரால் நனைந்து வனங்களெங்கும் ஒலித்துக் கொண்டிருந்தன. மயில்களும், ஆண் குயில்களும், தவளைகளும், நீர்க் காக்கைகளும், மகிழ்ந்து களித்து எங்கும் விளையாடின. பாண்டவர்கள் உலர்ந்ததும், மணலுள்ளதுமான மலைப்பிரதேசங்களில் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது பல வகையான காட்சிகளை யுடையதும், மேக முழக்கங்களை யுடையதுமான மகிழ்ச்சி தரும் மழைகாலம் கழிந்து போயிற்று.

10— . சிசிரருது வந்தது. கொக்குகளும், நாரைகளும் நிறைந்தன. வனங்க ளெல்லாம் பசந்து தோன்றின. நீரோடைக ளெல்லாம் தெளிவடைந்தன. வானமும் நட்சத்திரங்களும் மாசற்று ஒளிர்ந்தன. நாடுகள் மிருகங்களாலும் பறவைகளாலும் நிறைந்திருந்தன. அந்தக்காலம் மஹாத்மாக்களான பாண்டவர்களுக்கு வெகு சுகமானதாக இருந்தது. இரவில் குளிரும், மேகங்களும், தூசியுமில்லாமல், சந்திரன், நட்சத்திரம், கிரகம் முதலியவைகளால் அழகாய் விளங்கின. ஆறு குளங்கள் எல்லாம் பூர்ண ஜல முடையனவாய், அல்லி தாமரைகளை யுடையனவாய்க் கண்ணுக் கினிமையா யிருப்பதை யறிந்த பாண்டவர்கள், ஆகாயத்தைப் போல விளங்குகிறதும், பிரம்புகள் நிறைந்துள்ளதுமான ஸரஸ்வதி நதி தீரத்தில் மகிழ்ந்து சஞ்சரித்தார்கள். சரஸ்வதி யாற்றின் தெளிவான ஜலத்தைக் கண்டு மகிழ்ந்தார்கள். அவர்கள் அங்கே வசிக்கும் போது கார்த்திகை மாதத்தில் பரிசுத்தமான பௌர்ணமை கழிந்தது. பாண்டவர்களும் மற்றவர்களும் தேவாராதனை செய்துகொண் டிருந்தார்கள். கிருஷ்ணபட்சம் நீங்கினதும் அவர்கள் எல்லாரும் காமியக வனத்தை நோக்கிச் சென்றார்கள்.

## 183-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—13. காமியக வனத்தை அடைந்த உடனே, ரிஷிகளெல்லாரும் பாண்டவர்களை உபசரித்தார்கள். பாண்டவர்கள் கிருஷ்ணையுடன் அங்கே சுகமாய் வசித்தார்கள். அப்போது அநேக பிராமணர்கள் வந்து கூடினார்கள். அப்போது ஒரு பிராமணன் அர்ஜுனனை நோக்கி உன் தோழனான கண்ணபிரான் உன்னைப் பார்க்கும்படி சீக்கிரமாக இங்கே வருவார். நீ வந்திருக்கிறது அவருக்குத் தெரியும். தவத்திற் சிறந்தவரும், நெடுங் காலங் கண்டவருமான மார்க்கண்டேய முனிவரும் சீக்கிரத்தில் வருவார் என்று சொன்னான். இப்படிப் பேசிக்கொண் டிருக்கும்போதே கேசவன் வந்து விட்டார். தேவகி புத்திரனனவர் பாண்டவர்களைப் பார்க்கும்படி சைப்பியம், சுக்கிரீவம் என்கிற குதிரைகள் பூட்டிய தேரின் மேலேறிக்கொண்டு, சத்தியபாமை யுடன் இந்திரன் சசிதேவியுடன் வருகிறது போல வந்தார். தேரை விட்டிறங்கினதும் வழக்கம் போலத் தர்ம ராஜாவையும் பீமனையும் உபசரித்தார். பிறகு தௌமியரை வணங்கினார். நகுல சகதேவர்களால் வணங்கப்பட்டார். அர்ஜுனனைத் தழுவிக்கொண்டு இனிய வசனம் கூறினார். நெடுங் காலத்துக்குப் பின் பார்த்தபடியால் அர்ஜுனனைப் பல முறை தழுவிக் கொண்டார். கிருஷ்ணனுடைய பிரிய நாயகியான சத்தியபாமை திரௌபதியைத் தழுவி உபசரித்தாள். பாண்டவர்களும் பிராமணர்களும் கிருஷ்ணனை வணங்கி யுபசரித்து அவரைச் சூழ உட்கார்ந்தார்கள். அர்ஜுனனுடன் கூடியிருக்கிற கிருஷ்ணன் கார்த்திகேயருடன் கூடியிருக்கிற பரமசிவனைப் போலக் காணப்பட்டார்.

14—23. பிறகு, இந்திரன் அளித்த கிரீடத்தை யணிந்துகொண் டிருக்கிற கிரீடியானவன் தனக்குத் தமையனை கிருஷ்ணனுக்கு நடந்தவைகளை யெல்லாம் விளக்கமாய்ச் சொல்லிப், பின் சுபத்திரையும் அபிமன்யுவும் எப்படியிருக்கிறார்கள் என்று கேட்டான். மதுவைச் சங்கரித்த கண்ணன் வழக்கப்படி அர்ஜுனனுக்கும் திரௌபதிக்கும், தௌமியருக்கும் மரியாதை செய்து, தர்மராஜாவைப் புகழ்ந்து துதித்தார். பிறகு தமது ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு சொல்கிறார். பாண்டவரே! இராஜ்யத்தை ஜயிக்கிறதற்குப் புண்ணியமே சிறந்ததென்று அறிஞர் கூறுகிறார்கள். அந்தப் புண்ணியத்தை விருத்தியாக்குகிறது தவமேயாம். நீர் சத்தியத்தில் உறுதியாக இருந்து மனக் களங்கமொழிந்து இவ்வுலகம் மறு உலகம் இரண்டையும் ஜயித்துவிட்டீர். நீர் முறைப்படி வேதாத்தியயனம் செய்தீர். பிறகு அஸ்திர வித்தையில் மேன்மையடைந்தீர். பிறகு க்ஷத்திரிய தர்மப்படி ஐசுவரியத்தை யடைந்து முறைப்படி யாகங்களைச் செய்தீர். மன்னர் மன்னனே! நீர் விஷய சுகங்களையாவது வேறு சுயநலத்தைக் கருதியாவது, செல்வத்தை விரும்பியாவது தருமத்தைச் செய்யவில்லை. அதனாலேதான் நீர் தர்மராஜா என்று பிரசித்தி பெற்றிருக்கிறீர்.

மஹாராஜனே! நீர் இராஜ்யத்தையும், செல்வத்தையும் சகல விதமான போகங்களையும் பெற்றிருந்தும் தர்ம்ம, சத்தியம், தவம், விசுவாசம், தியானம், பொறுமை, சாந்தம் முதலியவற்றை விடாமலிருக்கிறீர். குருஜங்கால நாட்டின் குடிகள் எல்லாரும், இராஜ சபையில் கிருஷ்ணையை அவமானம் பண்ணினதைப் பார்த்திருந்தார்கள். நீர் அந்தக் கௌரவர்களை அப்பொழுதே கண்டிக்கக் கூடும். ஆயினும் தர்மத்தை நோக்கி அடங்கி யிருந்தீர். அதனால் உம்முடைய எண்ணங்களெல்லாம் நிறைவேறப் பெற்றீர். இனி நீர் பெருமையோடு இராஜ்யத்தை ஆள்வீர். உம்முடைய வனவாசம் முடிந்ததும் நாங்கள் கௌரவர்களைக் கண்டிக்க முயல்வோம் என்று கூறினார். மறுபடியும் தௌமியர், பீமன், யுதிஷ்டிரர், நகுல சகாதேவர், திரௌபதி இவர்களைப் பார்த்து, உங்களுடைய அதிர்ஷ்ட வசத்தினாலே கிரீடியானவன் தேவலோகம் போய்ச் சகல அஸ்திர வித்தைகளையும் தெரிந்துகொண்டு மனமகிழ்ச்சியோடு திரும்பிவந்திருக்கிறான் என்றார்.

24—36 பிறகு திரௌபதியைப் பார்த்து, நீ பலமும் ஆண்மையுமுள்ள அர்ஜுனனுடன் கூடியிருப்பது உன் அதிர்ஷ்டந்தான். யக்ஞசேனீ! உன்னுடைய இந்தக் குழந்தைகள் விசேஷமாய்த் தநுர்வேதத்தில் பயிற்சியடைந்திருக்கிறார்கள். நல்லொழுக்க முடையவர்களாய்த் தங்களுடைய நண்பர்களைப் போலவே நடந்து கொள்கிறார்கள். உன்னுடைய பிதாவும் சகோதரர்களும் இவர்களை இராஜ்ய காரியங்களில் பழக்கினார்கள் ஆயினும் அவர்களுக்கு அதில் விருப்ப முண்டாகவில்லை. அவர்கள் க்ஷேமமாய் ஆனர்த்த நாட்டையடைந்து, விருஷ்ணிகள் வசிக்கிற நகரத்துக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்குத் தேவ லோகங்களில் கூட விருப்பமில்லை. ஆயுதவித்தை கற்பதிலேயே ஆவலா யிருக்கிறார்கள். உன்னைப் போலவும், குந்திதேவியைப் போலவும் சுபத்திரையானவள் அவர்களுக்கு நல்வழியைப் போதிக்கிறாள். ருக்குமிணி புத்திரனாகிய பிரத்தியுமனனானவன் அநிருத்தன், அபிமன்யு, சுநீதன், பானு, உனது புத்திரர்கள் இவர்களுக்கு ஆசிரியனாயிருந்து நடத்துகிறான். போதிப்பதில் வல்லவனான அபிமன்யு அஸ்திர சஸ்திர வித்தைகளிலும், தேரோட்டுவதிலும் மற்றுமுள்ள யுத்த தந்திரங்களிலும் உன் புத்திரர்களைப் பழக்குகிறான். பிரத்தியுமனன் அவர்களுக்கு ஆயுத வித்தைகளைப் பூரணமாய்க் கற்பித்து உன் புத்திரர்கள், அபிமன்யு இவர்களுடைய வீரத்தனத்தைக் கண்டு மகிழ்கிறான். உன் புத்திரர்கள் வெளியில் விளையாடப் போகும்போது யானை, குதிரை, தேர் முதலியவெல்லாம் அவர்கள் கூடப் போகின்றன என்று சொல்லிப் பின், தர்மராஜாவை நோக்கி மஹாராஜாவே! விருஷ்ணிகள், குகுரர்கள் அந்தகர்கள் ஆகிய எல்லாரும் உம்முடைய ஏவல்களைச் செய்துகொண்டு உம்மிடத்தில் காத்திருக்கப் பட்டவர்கள். அரசனே! பலராமரால் நடத்தப்படுகிற மது வம்சத்தாரின் படைகள் எல்லாம் உமது ஏவல்செய்யக் காத்திருக்கின்றன. நீர் இராஜசபையில் கூறிய வனவாசகாலம் வரைக்கும் உமக்கு இஷ்டமான

இடத்தில் வசியும். அதன்பின் அஸ்திஞபுரமானது வரவுக்கு எதிர்பார்த்திருக்கும். எங்களுடைய சைனியங்கள் உமது சத்துருக்களை வெட்டி மடித்து விடுவார்கள். அது வரைக்கும் துயரத்தை விட்டுப், பாபங்களை ஒழித்து உமக்கு இஷ்டமான இடத்தில் வசியும். பிறகு நீர் அஸ்திஞபுரத்தை மகிழ்ச்சியுடன் அடைவீர் என்றார்.

37—44. பிறகு மஹாத்மாவான தர்மராஜாவானவர், கைகளைக் கூப்பிக்கொண்டு கிருஷ்ணனை நோக்கிச் சொல்கிறார். கேசவா! நீர் பாண்டவர்களுக்குச் சகாயரென்பது சத்தியமல்லவோ? பாண்டவர்கள் உம்முடைய பாதுகாவலில் இருக்கிறார்கள். சமையம் வந்தபோது நீர் சொன்னபடியே செய்வதில் சந்தேகமே இல்லை. நாங்கள் சொன்னபடி பன்னிரண்டு வருஷங்களையும் ஜனசஞ்சார மில்லாத வனத்தில் கழிக்கிறோம். அக்ஞாத வாசத்தையும் முடித்தபின் பாண்டவர்கள் உமது ஆதரவில் வந்து சேர்வார்கள். இந்த எண்ணம் எப்போதும் உம்மிடமிருக்க வேண்டும். ஏனென்றால் சத்திய சீலர்களான பாண்டவர்கள் புத்திர மித்திர களத்திரர்களுடன் உமது பாதுகாவலையே எப்போதும் அண்டி யிருக்கிறார்கள். இப்படி பாண்டவர்களும் கிருஷ்ணனும் பேசிக்கொண் டிருக்கையில் மஹாத்மாவும், பக்தியிற் சிறந்தவரும், தவத்தினால் பெரிய அறிவை அடைந்தவரும், அநேகம் ஆயிரவருஷமாய் ஜீவித்திருப்பவருமாகிய மார்க்கண்டேய முனிவர் வருகிறதைக் கண்டார்கள். மனிதராக இருந்தும், மூப்பு இல்லாமல் அழகும் ஆண்மையும் உடையவராய், இருபத்தைந்து வயதுள்ள யௌவன புருஷனைப் போல இருந்தார். அநேகமாயிர வருஷங்களைக் கண்ட அந்த முனிவர் வந்து சேர்ந்தார். பிராமணர்களும் பாண்டவர்களும் கிருஷ்ணரும் அந்த முனிவருக்கு வணங்கினார்கள். அதன்பின் மார்க்கண்டேயர் மகிழ்ச்சியுடன் ஒரு ஆசனத்தில் உட்கார்ந்தார். அதன்பின் கிருஷ்ணபகவான் மார்க்கண்டேயரை நோக்கிச் சொல்லுகிறார்.

45—52. முனிவரே! பாண்டவர்களும், பிராமண சங்கத்தாரும், திரௌபதி சத்தியபாமையும், நானும் உமது மகிமையுள்ள வசனங்களைக் கேட்க விரும்புகிறோம். ஆகையால் தேவரீர் கருணை கூர்ந்து பூர்வ காலத்திய விசேஷ சமாசாரங்களையும், தர்ம விதிகளையும், அரசர்கள், ஸ்திரீகள், ரிஷிகள் இவர்கள் கொண்டிருந்த ஒழுக்கங்களையும் எங்களுக்குச் சொல்ல வேண்டும் என்று கேட்டார். அவர்கள் எல்லாரும் உட்கார்ந்து கொண்டிருந்தபோது பரிசுத்தரும் தேவ ரிஷியுமான நாரத முனிவரும் பாண்டவரைப் பார்க்க விருப்பங்கொண்டு அங்கே வந்தார். அப்போது மனித சிரேஷ்டர்களான அவர்களெல்லாரும் நாரத முனிவருக்குப் பாத்தியம் அர்க்கியம் முதலியன கொடுத்து உபசரித்தார்கள். எல்லாரும் மார்க்கண்டேயருடைய வசனங்களைக் கேட்க பிரியப்படுகிறதை உணர்ந்த நாரதரும் அதற்கிணங்கி அப்படியே யாகட்டும் என்றார். பிறகு சித்தியராகிய கிருஷ்ண பகவான் சரியான சமையத்தை யறிந்து மார்க்கண்டேயரை நோக்கி ஓ பிரம ரிஷியே! உங்களுக்குப் பிரியமான

தைப் பாண்டவர்களுக்குச் சொல்லுங்கள் என்றார். அதைக் கேட்ட மார்க் கண்டேயர் சற்றுப் பொறுங்கள், நான் அளவில்லாத விஷயங்களைச் சொல்லு கிறேன் என்றார் பிறகு பாண்டவர்களும் பிராமணர்களும் மத்தியான காலத் துச் சூரியனைப் போல விளங்குகிற மார்க்கண்டேயரைப் பார்த்துக்கொண்டே இருந்தார்.

53—60. வைசம்பாயனர் ஜனமேஜய மஹாராஜாவைப் பார்த்து ஓ மன் னவனே! கௌரவ ராஜனும் பாண்டு புத்திரனுமான தர்மராஜாவானவர், மார்க்கண்டேய முனிவர் பேச விரும்புகிறதை யுணர்ந்து, அதற்கேற்ற விஷயங் களை எடுத்துரைக்கக் கருதிச் சொல்லுகிறார். முனிவரே! நீர் வெகு காலம் சென்றவர். ஆகையால் தேவர்கள், தானவர்கள், மஹாத்மாக்களான ரிஷி கள், இராஜ ரிஷிகள் இவர்களைப் பற்றிய எல்லா விஷயங்களும் உமக்குத் தெ ரியும். நீர் வணக்கத்துக்கும் மரியாதைக்கும் உரியவர். நாங்கள் வெகு நா ளாக உம்மைப் பார்க்க விரும்பி யிருந்தோம். தேவகி புத்திரரான கிருஷ்ண பகவான் கூட எங்களைப் பார்க்கும் பொருட்டு இங்கே வந்திருக்கிறார். நான் யோசித்துப் பார்க்கையில், நான் யாதொரு தப்பிதமும் செய்யாமலே சகல சுகங்களையு மிழந்து இராஜ்யாதி பத்தியத்தினின்றும் விலக்கப்பட்டேன். திருத ராஷ்டிரனுடைய புத்திரனாகிய துஷ்டசித்தமுள்ள துரியோதனன் எல்லா விதத்திலும் சுகத்தையே அனுபவிக்கிறான். இது எனக்கு ஆச்சரியமா யிருக் கிறது. ஏனென்றால் அவன் துஷ்டகிருத்தியங்களிலே சிறந்தவன். அவன் தன்னுடைய கருமத்தின் பலனை அனுபவிக்கிறான். இதற்குக் கடவுள் எப் படி அதிகாரியாவார்? பிரமத்தை யுணர்ந்தவர்களில் சிறந்தவரே! மனிதன் இன்பத்துக்கும் துன்பத்துக்கும் என் ஆளாகிறான்? அவன் தன் கருமத்துக் குரிய பலனை அனுபவிப்பது இந்த உலகத்திலா, அல்லது மறு உலகங்களிலா? ஸ்தூல சரீராத்மாக்களால் செய்யப்படுகிற புண்ணிய பாவ கர்மங்கள் இந்த உலகத்திலாவது அல்லது மறு உலகத்திலாவது அவ்வாத்மாக்களைத் தொடர் ந்து செல்வது எப்படி? நமது கர்மத்தின் பலனை இவ்வுலகத்திலேயே அனுப விப்போமா! அல்லது மறு உலகங்களில் அனுபவிப்போமா? பிருகு வம்சோத் தமரே! ஜீவாத்மாக்கள் இறந்து போன பிறகு தத்தம் கரும பலன்களை எங் கே பெறும்? என்று கேட்டார்.

61—74. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரைப் பார்த்து பேசுவதில் வல்லவ ரே! இந்தக் கேள்வி உமக்குத் தகுதியானதே. இது கேட்கத் தக்கதுதான் நீர் சொன்னதெல்லாம் அறிந்துகொள்ளத் தக்கவைகளே. மனிதர்கள் இவ் வுலகத்திலும் மறு உலகத்திலும் அனுபவிக்கிறதை உமக்குச் சொல்லுகிறேன் கவனமாய்க் கேளும். பரபிரமத்திலிருந்து முதலிலுண்டான பிரஜாபதியான வர், ஜீவாத்மாக்களுக்குச் சரீரத்தையும் மாசின்மத்தையும், பரிசுத்தத்தையும் படைத்துத் தர்மத்தையும் கொடுத்தார். ஆதி மனிதர்கள் புண்ணிய கர்மத்தினு லேயே விரும்பிய எல்லாவற்றையும் அடைந்தார்கள். சத்தியமும், பரிசுத்தமான

தேவர்களைப் போலவே நல்லவர்களா யிருந்தார்கள். சொர்க்கத்துக்குப் போக வும், மீண்டு பூமிக்கு வரவும் கூடியவர்களா யிருந்தார்கள். அவர்கள் விரும்பின இடங்களுக்குப் போகவும் வரவும் சக்தி யுடையவர்களா யிருந்தார்கள். ஜீவ னையும் மரணத்தையும் அடக்கி யாண்டார்கள். அவர்களுக்குக் கஷ்டமும் பய முமில்லை. அவர்களுடைய விருப்பங்கள் எல்லாம் நிறைவேறின துன்பங்கள் இல்லை. கடவுளையும் ரிஷிகளையும் காணக் கூடியவர்கள். வைதிகவிதிகள் எல் லாமுணர்ந்தவர்கள். புலனடக்க முள்ளவர்கள். பகைமை யற்றவர்கள். அவர் கள் ஆயிரம் வருஷம் ஜீவித்தார்கள். அவ்வளவு புத்திரர்களையும பெற்றூர்கள். காலக்கிரமத்தில் அவர்களுடைய சக்தி குறைக்கப்பட்டது. பூலோகத்தில் சுயேச்சையாய் நடக்க முடியாமல் போயிற்று. அவர்கள் காமத்துக்கும் கோபத் துக்கும் ஆளானூர்கள். பொய்யும் கபடமும் அவர்களிடம் குடிகொண்டன. ஆசையும் அறியாமையும் மேற்பட்டன. இப்படிப்பட்ட துஷ்டர்க ளிறந்தபின் தாழ்ந்த ஜந்துக்களாகப் பிறப்பார்கள். அல்லது நரகில் விழுவார்கள். அவர்கள் தங்களுடைய பாபகர்மங்களுக்காக அடிக்கடி பிறப்பார்கள். அவர்களுடைய விருப்பமும், அறிவும். கர்மங்களும் பலனளிப்பதில்லை. அவர்கள் எல்லாவற்றுக் கும் பயப்பட்டார்கள். அவர்களுடைய அறிவும் மழுங்கியது. துக்கத்தால் பீடிக் கப்பட்டார்கள். துர்க்கருமங்களிலே பேர்பெற்றூர்கள். ஈன ஜாதியிற் பிறந்தார் கள். பல நோய்களை அடைந்தார்கள். துஷ்டசித்த முடையவர்களாய் எல்லா ரையும் அச்சுறுத்தினூர்கள். அவர்களுக்கு ஆயுசு குறைந்தது. அவர்களுடைய துர்க் கருமங்களுக்கே தண்டனையை அடைந்தார்கள். எல்லாவற்றிலும் ஆசை யுடையவர்களா யிருந்தார்கள். குந்தி புத்திரனே! ஜீவாத்மாக்கள் இந்த உலகத் தில் செய்த கர்மத்துக்குத் தக்கபடியே சுகதுக்கானுபவமும் சம்பவிக்கின்றன. அறிவுள்ளவன் செய்த புண்ணிய கர்மத்துக்கும், மூடன் செய்கிற பாபகர்மத் துக்குமுரிய செல்வம் எங்கே யுண்டாகும் என்று கேட்ட கேள்விக்கு விடை கொடுக்கிறேன்.

75—86. கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட பலவீனமான சரீரத்தினூல், மனிதன் பாபபுண்ணிய கர்மங்களை யோராளமாய்த் தேடிக்கொள்கிறுன் அவ னுக்குக் குறிக்கப்பட்ட ஆயுசு நாள் முடிந்தால் இந்தச் சரீரத்தை விட்டு மற் ளுரு பிராணியாக ஜனிக்கிறுன். அவன் ஒரு நிமிஷங்கூடச் சரீரமின்றி யிரு ப்பதில்லை அந்தச் சரீரத்தி லிருக்கும்போது அவனுடைய கர்மங்களும் அவ னுடைய நிழலைப் போலத் தொடர்ந்து செல்லுகின்றன. ஆகையால் அந்தச் சரீரத்தில் அவற்றின் பலனூகிய இன்பதுன்பங்களை அனுபவிக்கிறுன். எல் லாப் பிராணிகளும் விலக்கமுடியாத விதியினூல் கட்டுண்டிருக்கின்றன வென் பதை அறிவுள்ளவன்தான் அறிவான். எமனூல் விதிக்கப்படுகிற விதிப்படி பாப புண்ணியங்களுக் குரிய சுகதுக்கங்களை அனுபவித்தே தீர வேண்டும். அது தவறுது. புத்தி மயங்கின அறிவீனருடைய விதியைப் பற்றிச் சொன்னேன். அறிவுள்ளவர்கள் அடைகிற சிறந்த கதியைச் சொல்கிறேன் கேளும். இவர்கள் தபோபலத்தினூலும், வேதம் ஆகமம் முதலியவற்றின் ஆராய்ச்சியாலும் தங்க

ளுடைய நியமங்களில் உறுதி யுள்ளவர்களாயும், சத்தியவந்தர்களாயும் பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வதாலும் நல் வழியில் நடந்து, யோகத்தில் பழகிப் பொறுமை, புலனடக்கம், ஊக்க முடையவர்களாய்ப் பிறந்து பெருமை பெறுகிறார்கள் ஆசையை அடக்குவதால் மனதை வசப்படுத்துகிறார்கள். யோகாப்பியாசத்தினால் நோயற்று, துக்கமும் அச்சமு மில்லாதவர்களாய் இருக்கிறாகள். காலத்திலாவது, அகாலத்திலாவது, கர்ப்பத்திலிருக்கும்போதாவது, எந்த நிலைமையிலும் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள சம்பந்தத்தை ஞானதிருஷ்டியா லுணர்ந்து கொள்வார்கள். தீர்க்க ஞானம், அல்லது இயற்கை அறிவுடன் பிறந்து புண்ணிய கர்மங்களைச்செய்து மறுபடியும் தேவலோகத்துக்குப் போவார்கள். மஹாராஜனே! யோகாப்பியாசத்தாலும், விதியாலும், தங்களுடைய சொந்தக் கர்மத்தாலுமே மனிதர்கள் சுகதுக்கங்களை அடைகிறார்கள், வேறு வகையாலல்ல.

87— . பேச்சில் வல்லவரான யுதிஷ்டிரரே! இந்த உலகத்தில் மிக்க நன்மை யுடையதென்று நான் கருதுகிறதைச் சொல்லுகிறேன் கேளும். சிலர் இவ்வுலகத்தில் சுகத்தை அனுபவிக்கிறார்கள். மறு உலகத்தில் அடைவதில்லை சிலர் மறுமையில் சுகததைப் பெறுகிறார்கள். இவவுலகத்தில் அடைகிறதில்லை. சிலர் இவ்வுலகத்திலும அவவுலகத்திலும அடைகிறதில்லை. மிகுந்த ஐசுவரியமுள்ளவர்கள் தினந்தோறும் ஆடையாபரணங்களால் அலங்கரித்துககொண்டு மகிழ்கிறார்கள். அவாகள் சரீர சுகத்தையே விரும்பி இவ்வுலகத்தில் மகிழ்ந்திருக்கிறாகள். மறு உலகத்தில் சுகம் பெறுவதில்லை. பகைவரை வதைக்கிறவனே! ஆத்மஞான முள்ளவர்கள் தவஞ்செய்தும், வேதமோதியும், சரீரத்தை வருததியும் புலன்களை அடககியும், ஜீவ இம்சை செய்யாமலு மிருந்து மறுமையில் பேரின்பத்தை அடைகிறாகள். இவ்வுலகத்தில் அடைவதில்லை சிலர் பிரமசரியத்தில் முறைப்படி யிருந்து, பிறகு திரவியந்தேடிப், பின் விவாகம் பண்ணிக்கொண்டு யாகங்களைச்செய்து நிறைவேற்றி யிம்மைமறுமை யிரண்டிலும் இனபமனுப விக்கிறார்கள். கல்லாமலும், தவம் செய்யாமலும், தர்மம் பண்ணாமலும், அன்பில்லாமலு மிருக்கிற மூடர்கள் இம்மை மறுமை இரண்டிலும் சுகப்படுவதில்லை. நீங்கள் எல்லாரும் வல்லமைசாலிகள், தைரியமுள்ளவர்கள், தேவர்களைப் போன்ற பராக்கிரம முடையவர்கள். நன்றாய் படித்துணர்ந்தவர்கள், தேவகாரியத்தை நிறைவேற்றுகிறதற்காகப் பூமியில் பிறந்திருக்கிறீர்கள். துஷ்டர்களைச் சங்கரிப்பீர்கள். மகிமையுள்ள காரியங்களைச் செய்து, தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும், பிதிர்க்களுக்கும் திருப்தி யுண்டாக்கி, வீரர்களாய்ப் புலனடக்க முள்ளவர்களாய், பரிசுத்தர்களாய், ஊக்க முள்ளவர்களா யிருந்து பிறகு தேவலோகத்தை அடைவீர்கள். உங்களுடைய சற்கருமங்களால் புண்ணிய லோகங்களை அடைவீர்கள். கௌரவராஜனே! நீர் மனதில் வருந்த வேண்டாம், இந்தத் துன்பமெல்லாம் ஒழிந்து இன்பத்தை அனுபவிப்பீர்.

---

## 184-வது அத்தியாயம்

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—17. பிறகு யுதிஷ்டிரர் மார்க்கண்டேயரை நோக்கி நாங்கள் பிராமணர்களைப் பற்றிக் கேட்க விரும்புகிறோம். ஆகையால் பிராமணர்களுடைய மகிமையை எங்களுக்குச் சொல்லுங்கள் என்றார். இப்படிச் சொன்னதைக் கேட்ட மார்க்கண்டேயர் சொல்கிறார். ஹைஹேய வம்சத்தில் அழகும் ஆண்மையுமுள்ள ஒரு அரசகுமாரனிருந்தான். ஒரு நாள் அவன் வேட்டையாடப் போனான். புற்களும் கொடிகளும் நிறைந்திருக்கிற வனத்துக்குப் போய்ச் சஞ்சரித்துக்கொண்டிருக்கையில், கிருஷ்ணாஜினத்தைப் போர்த்துக்கொண்டு தவம் செய்கிற ஒரு முனிவரைப் பார்த்தான். அரசகுமாரன் அவரை மானென்றே கருதி அம்பினால் அடித்துக் கொன்றுவிட்டான். பிறகு தான் செய்த காரியத்துக்காகத் துக்கப்பட்டு வருந்தினான். உடனே ஹைஹேய ராஜனிடம் போய் நடந்ததைச் சொன்னான். அதைக் கேட்ட அரசன் முதலியவர்கள் அவ்விடத்துக்குப் போய் முனிவர் இறந்து கிடப்பதைக் கண்டு வருந்தினார்கள். பிறகு அந்த முனிவன் யாருடைய புத்திரன் என்று விசாரித்துக்கொண்டு காசியபர் புத்திரரான அரிஷ்டநேமியிடம் போனார்கள். அவரை வணங்கி எதிரில் நின்றுகொண்டிருந்தார்கள் அந்த முனிவரும் அவர்களுக்கு மரியாதை செய்தார். நாங்கள் ஒரு பிராமணனைக் கொலைசெய்து விட்டோம். ஆகையால் உம்மால் உபசரிக்கப் படுகிறதற்கு அருகரில்லாதவர்களாயிருக்கிறோம் என்றார்கள். முனிவர், நீங்கள் எப்படிப்பிராமணனைக்கொலைசெய்தீர்கள் என்று கேட்டார். அவன் எங்கேயிருக்கிறான் சொல்லுங்கள். என் தவத்தின் மகிமையைப் பாருங்கள் என்றார். அரசன் எல்லாவற்றையும் சொல்லி, அந்த இடத்துக்கு வந்தபோது செத்த பிணம் அங்கேயில்லை. எங்கும் தேடினார்கள். அகப்படாமையால் வெட்கத்துடன் அரிஷ்டநேமியிடம் வந்து நின்றார்கள். அரிஷ்டநேமி அரசனைப் பார்த்து மன்னவனே! நீங்கள் கொன்ற பிராமணன் இவன்தானா பாருங்கள். இவன் என்னுடைய புத்திரன் என்றார். அதைப் பார்த்த அரசன் முதலியவர்கள் ஆச்சரியமடைந்து இது அதிசயம். இது அதிசயம் என்றார்கள். இறந்துபோன இவர் எப்படி மீண்டும் உயிர் பெற்றார்? அவர் பிழைத்தது தவவலிமையாலேயா? எங்களுக்குச் சொல்ல வேண்டும் என்றார்கள். முனிவர் சொல்கிறார்.

18—23. ஓ அரசனே! மரணமானது எங்களிடத்தில் தன் வல்லமையைக் காட்டாது. நாங்கள் எங்களுடைய கடமைகளில் தவறாமல் நடந்து வருகிறோம், ஆகையால் எங்களுக்கு மரணபயமில்லை. நாங்கள் எப்போதும் பிராமணர்களை ஸ்தோத்திரம் பண்ணுகிறோம். ஒருபோதும் அவர்களை அவமதிக்கிறதில்லை, ஆகையால் நாங்கள் மரணத்துக்குப் பயப்படுகிறதில்லை. எங்களுக்குக் கிடைத்திருக்கிற ஆகாரத்தை அதிதிகளுக்குக் கொடுத்து உபசரித்துப் பின் மிகுந்திருக்கிறதைப் புசிக்கிறோம், ஆகையால் எங்களுக்கு மரணபயம் கிடை

யாது. நாங்கள் சாந்தமுள்ளவர்களாயும் தர்மிஷ்டர்களாயும், புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசிக்கப் பிரியமுள்ளவர்களாயும் இருக்கிறோம், பரோபகாரம் செய்கிறவர்களாயும், புண்ணிய க்ஷேத்திரங்கள் வசிக்கிறவர்களாயு மிருக்கிறோம், ஆகையால் எங்களை மரணபயம் அடையாது. எங்களுடைய தபோமகிமையில் கொஞ்சம் சொன்னேன். ஆகையால் அரசனே! கருவத்தையும் அகங்காரத்தையும் விட்டுவிடும். நீங்கள் எல்லாரும் உங்களுடைய வீட்டுக்குப் போய்ச் சேருங்கள் என்றார். யுதிஷ்டிரரே! பிறகு அந்த அரசர்கள் அப்படியே யாகட்டும் என்று சொல்லிவிட்டுத் தங்களுடைய நகரம் போய்ச் சேர்ந்தார்கள்.

---

## 185-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—7. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரை நோக்கி அரசனே! கேளும். வைணியன் என்கிற இராஜ ரிஷி அசுவமேதம் செய்துகொண் டிருந்தான். அத்திரி முனிவர் யாசக நிமித்தமாக அவ்வரசனிடம் போகக் கருதியிருந்தார். ஆயினும் பக்திமார்க்க விருபபமுடையவராய்ச செல்வத்தை அடையும் எண்ணத்தை ஒழித்துவிட்டார் அவர் தீர்க்காலோசனை செய்து கடைசியில் வனத்தில் வசிக்க நிச்சயித்தார்.பிறகு தமது மனைவியையும் புத்திரர்களையும் அழைத்துச் சொல்லுகிறார். நீங்கள் எல்லாரும் வனத்தில் வசிக்கக் கருதுங்கள். நாம் அங்கே போனால் நம்முடைய விருப்பங்கள் எளிதாகவும் சுகமாகவும் நிறைவேறும் என்றார். தர்மசிந்தையுள்ள அவருடைய மனைவி அதற்குச் சம்மதித்துச் சொல்லுகிறாள். தர்மசிந்தையுள்ள வைணியராஜனிடம் போய்ப் பொருளை வேண்டும். அவ்வரசன் அசுவமேதம் செய்கிறபடியால் நீர் விரும்பிக் கேட்கிற படி மிகுந்த திரவியம் கொடுப்பான். அவனிடத்திலிருந்து திரண்ட செல்வத்தைப் பெற்றுக்கொண்டு வந்து புத்திரர்களுக்கும் வேலைக்காரர்களுக்கும் பாகம் பண்ணிக் கொடுத்துவிட்டு நீர் விரும்பின இடத்துக்குப போகலாம். இதுதான் பக்திமான்களுடைய சிறந்த தர்மச் செய்கையாம் என்றாள்.

8—23. அத்திரி முனிவர் தம் மனைவியை நோக்கி மஹா பாக்கியவதி! வைணியன் பக்திமானென்று கௌதமர் எனக்குச் சொல்லி யிருக்கிறார். அவன் சாஸ்திரங்களை யுணர்ந்தவன், சத்தியவந்தன். ஆனாலும் எனக்கு விரோதிகளான அநேகம் பிராமணர்கள் அவனைச் சூழ்ந்திருக்கிறார்கள். இதைக் கௌதமர் எனக்குச் சொன்னார். அதனால் நான் அவ் வரசனிடம் போக விரும்பவில்லை. நான் பிரயோசன முள்ளதும், பக்தி விஷயமா யுள்ளதுமான விஷயங்களைச் சொன்னால் கூட அந்தப் பிராமணர்கள் என்னை யெதிர்த்துப் பேசி அதைத் தடுப்பார்கள். ஆனாலும் உன் இஷ்டப்படி போகிறேன் என்று சொல்லி அத்திரி முனிவர் அரசனிடம்போய், யாகசாலையை அடைந்து சிறந்த வசனங்

களாலே அரசனைப் புகழ்ந்தார். ஓ அரசனே! நிச்சயமாகவே நீர் பாக்கியவந்தர். நீர் சகல பிராணிகளுக்கும் இறைவர். உலகத்திலே பெரிய அரசனு யிருக்கிறீர். முனிவர்கள் உன்னை வந்தனம் செய்கிறார்கள். உன்னை விடப் பக்தியிற் சிறந்தவர்கள் கிடையாது என்று சொன்னார். அதைக் கேட்டுப் பெருந்தவசுள்ள கௌதம முனிவர் கோபத்துடனே சொல்லுகிறார். அத்திரி முனிவரே! இப்படிப்பட்ட முட்டாள்தனமான வார்த்தைகளை மறுபடியும் சொல்லாமலிரும். மஹேந்திரனே! எல்லாப் பிராணிகளுக்கும் இறைவன். அவனே எல்லா அரசர்களுக்கும் மேலான அரசன் என்றார். அத்திரி முனிவர், இந்த அரசனும் தேவேந்திரனைப் போலவே நமக்குப் பாக்கியத்தை நியமிக்கிறார். நீர் அறியாமையால் மயங்கி யிருக்கிறபடியால் உமக்கு நல்லறிவில்லை யென்றார். கௌதமர், நான் அறியாதவன் அல்ல. நீர்தான் இவ்விஷயத்தில் தப்பான அபிப்பிராய முடையவரா யிருக்கிறீர். அரசனுடைய தயவைச் சம்பாதிப்பதற்காக இந்தச் சபையில் அரசனை வீணாகப் புகழ்ந்து பேசுகிறீர். செய்யத்தக்க மேலான கர்மம் இன்னதென்று உமக்குத் தெரியாது. அதை அறிகிற எண்ணமும் இல்லை. நீர் குழந்தைகளைப் போல அறிவில்லாதவரா யிருக்கிறீர். வயதினாலே மாத்திரம் பெரியவராய் வளர்ந்து விட்டீர் என்றார். அவ்விருவரும் இப்படி விவாதம் பண்ணிக்கொண்டு இருக்கையில் யாக கிரியை செய்துகொண்டிருக்கிற முனிவர்கள் அவ்விருவரும் என் வழக்கிடுகிறார்கள்? வைசிய மன்னவன் சபையில் அவர்களை யார் விட்டது? எதற்காக அவர்கள் வழக்கிடுகிறார்கள் என்றார்கள். அப்போது சகல விதிகளையும் உணர்ந்த காசியபர் அவர்களிடம் வந்து நீங்கள் எதைக் குறித்துத் தர்க்கம் பண்ணுகிறீர்கள் என்று கேட்டார். கௌதமர், சபையை நோக்கிப் பிராமணோத்தமர்களே! எங்களுடைய வழக்கை கேளுங்கள். வைசிய ராஜன் நமது அதிர்ஷ்டத்துக்கும் அரசனு யிருக்கிறான் என்று அத்திரி சொல்லுகிறார் என்றார். காசியபர் சனத்குமாரரை அழைத்து அவர்களுடைய வழக்கைத் தீர்க்கும்படி சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

24—31. தெய்வத் தன்மையுள்ள சனத்குமாரர் அவ்விருவரையும் நோக்கி உண்மையான வசனங்களைச் சொல்லுகிறார். நெருப்பு காற்றுடன் சேர்ந்தபோது வனத்தைத் தகிக்கின்றது. பிராமண தேஜஸானது க்ஷத்திரிய தேஜஸுடன் கூடினால் சத்துருக்களை யெரிக்கிறது. அரசன் மதங்களை ஸ்தாபிப்பதில் பிரசித்தி அடைந்திருக்கிறான். தன் குடிகளைக் காப்பாற்றுகிறான். அதனால் அவன் எல்லாப் பிராணிகளையும் பரிபாலிக்கிற இந்திரனைப் போன்றிருக்கிறான். நீதியைப் போதிப்பதனால் சுக்கிரனை ஒப்பாக இருக்கிறான். புத்தி கூறுவதினால் பிருகஸ்பதிக்குச் சமானமாகிறான், ஆகையால் அரசன் நமது அதிர்ஷ்டத்தை ஆளுகிறான். எல்லா மனிதர்களாலும் வணங்கப்பட்டும், எல்லாருக்கும் மேலானவனு யிருப்பதினாலே பிரஜாபதி, விராட், ஸம்ராட், பூபதி முதலிய பேர்களாலே புகழப்படுகிறான். சகலருக்கும் விதிகளைத் தந்

பிக்கிறதனாலும், யுத்தத்தில் வெற்றிகொண்டு சமாதானத்தை நிறுத்துகிற தினாலும், உலகத்தைக் காக்கிறதினாலும், சொர்க்கத்துக்குச் செலுத்துகிறதினாலும், விஷ்ணு வென்று கருதப்படுகிறான். கோபத்தினாலும் யுத்தத்தில் வெற்றி கொள்வதினாலும் உண்மையான மதத்தை நிலை நிறுத்துகிறான். ரிஷிகளும் கூட அரசர்களுக்கு பயந்தே பாவம் செய்யாமலிருக்கிறார்கள். விண்ணுலகத்தில் உள்ள தேவர்களுக்குள் சிறந்தவனான சூரியன் தன்னுடைய கிரணங்களினாலே உலகத்திலுள்ள இருட்டை அழிப்பது போல, மனிதருள் சிறந்த அரசன் உலகத்திலுள்ள பாவங்களை அழிக்கிறான். சாஸ்திரப் பிரமாணங்களினாலே அரசனுடைய மகிமை நிலை நிறுத்தப்படுகிறபடியாலே அரசனுக்குச் சார்பாகப் பேசினவர் பட்சத்தை நான் அங்கீகரித்துப் பேசுகிறேன் என்றார்.

32—37. அதைக் கேட்ட நல்ல மனதை யுடைய அரசன் மிகவும் திருப்தியடைந்து, அரசனைப் பற்றி மேன்மையாகப் பேசி வெற்றிகொண்ட பட்சத்தைச் சார்ந்து மன மகிழ்ச்சியுடன் சொல்லுகிறான். ஓ பிராமண ரிஷியே! நீர் என்னைப் பெரியவனென்றும் மனிதர்களுக்குள் சிறந்தவனென்றும் நிலை நிறுத்தினபடியாலும், என்னைத் தேவனுக்குச் சமானமாகக் கூறினபடியாலும் உமக்குப் பல வகையான திரண்ட ஐசுவரியத்தைக் கொடுக்கிறேன். நல்ல ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஆயிரம் பணிவிடைப் பெண்களையும், பத்து லட்சம் தங்க நாணயங்களையும், பத்து பாரம் தங்கமும் கொடுக்கிறேன். நீர் எல்லா விஷயங்களிலும் தேர்ந்திருக்கிறீர் என்று நான் நம்புகிறேன். மகிமையுள்ள அத்திரி முனிவர் அரசனால் இப்படிப் பெருமைப் படுத்தப்பட்டார். அரசன் கொடுத்த திரவியங்களைப் பெற்றுக்கொண்டு வீடு போய்ச் சேர்ந்தார். அந்தத் திரவியங்களைத் தம்முடைய புத்திரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து விட்டுத் தவம் புரியும் விருப்ப முடையவராய் வனத்துக்குப் போய்விட்டார்.

---

## 186-வது அத்தியாயம்.

*மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.*

1—4 சத்துருக்களின் நகரங்களை ஜயிக்கிறவனே! வீரனே! ஞானவானாகிய தார்க்ஷ்ய முனிவர் இவ்விஷயத்தைப் பற்றிச் சரஸ்வதியைக் கேட்ட போது சரஸ்வதி சொன்னதைச் சொல்லுகிறேன் கேள். தார்க்ஷ்ய முனிவர் சரஸ்வதியைப் பார்த்து மஹா தேவீ! மனிதன் பூலோகத்தில் செய்ய வேண்டிய சிறந்த விஷயம் யாது? தர்ம நெறியினின்றும் தவறாமலிருக்கிறதற்கு எதைச் செய்ய வேண்டும்? அழகானவளே! எல்லாவற்றையும் எனக்குச்சொல்ல வேண்டும். நீ சொல்லுகிறபடியே நடந்து நான் தர்ம நெறி கடவாமல் நடக்கிறேன். மனிதன் தர்மம் கெடாதபடி எப்பொழுது அக்கினி காரியத்தைச் செய்ய வேண்டும்? அதை எவ்விதமாகச் செய்ய வேண்டும்? எந்தக் காலத்தில்

தெய்வ வணக்கம் செய்ய வேண்டும்? ஓ மஹாதேவீ! இவைகளை எல்லாம் எனக்குச் சொல்ல வேண்டும். அதைக் கேட்டு நான் இந்த லோகத்தில் கோபம் ஆசை முதலியவை யில்லாமல் ஜீவிப்பேன் என்றார். சந்தோஷமுள்ள அந்த முனிவர் இப்படிக் கேட்க, அவர் இவைகளைத் தெரிந்துகொள்வதில் மிகவும் ஆசையுள்ளவரா யிருப்பதையும், பேரறிவுள்ளவரா யிருப்பதையும் அறிந்து அவரை நோக்கிச் சரஸ்வதி தர்ம நெறிகளை அவருக்குச் சொல்லுகிறாள்.

5—17. பிரமத்தை அறிகிறவனும், பரிசுத்தனுய்ச் சாந்தத்துடன் பரப்பிரமத்தை உணர்கிறவனும் தேவலோகத்தை அடைந்து, அவ்விடத்தில் தேவர்களுடன் மேலான போகங்களை அனுபவிக்கிறான். அங்கே பெரிதும் அழகுள்ளதும், பரிசுத்தமுள்ளதுமான அநேக தடாகங்கள் இருக்கின்றன. அவைகளில் அழகிய மீன்களும், மலர்களும், சொர்ணத் தாமரைகளும் இருக்கின்றன. அவைகளைப் பார்த்த மாத்திரத்தில் எல்லாத் துக்கங்களும் விலகிப் போகின்றன. புண்ணியவான்கள், நன்றாய் அலங்கரித்துக்கொண்டு இருக்கிறவர்களும், சொர்ண வடிவுள்ளவர்களுமான அப்ஸரஸ்களால் அங்கே வணங்கப்படுகிறார்கள். அவர்கள் அந்தத் தடாகக் கரையில் மனத் திருப்தி யுடையவர்களாய் மகிழ்ச்சி யுடன் வசிக்கிறார்கள். இவ்வுலகத்திலே பிராமணர்களுக்குக் கோதானம் பண்ணுகிறவன் மேலான பதவியை அடைவான். ரிஷபதானம் பண்ணுகிறவன் சூரிய லோகத்தை அடைவான். வஸ்திர தானம் செய்கிறவன் சந்திர லோகத்தை அடைவான். சொர்ணதானம் பண்ணுகிறவன் தெய்வ லோகத்தை அடைவான். நன்றாய்க் கறக்கிறதும், ஓடிப் போகாமலிருக்கிறதுமான அழகான பசுவைக் கன்றுடன் தானம் பண்ணுகிறவன், அந்தப் பசுவின் தேகத்தில் எவ்வளவு மயிர் இருக்கிறதோ அவ்வளவு வருஷ காலம் வரைக்கும் தேவலோகத்தில் வசிப்பான். அழகுள்ளதும், பலமும் சக்தியுமுள்ளதும், கலப்பையை யிழுக்கத் தக்கதும், சுமை சுமைக்க யோக்கியமுள்ளதுமான ஒரு நல்ல காளை மாட்டைத் தானம் செய்கிறவன், பத்து கபிலைகளைத் தானம் செய்கிறவர்கள் அடையத் தக்க புண்ணிய லோகத்தை அடைவான். நல்ல நிறத்தை யுடைய கபிலைப் பசுவைப் பால் கறக்கும் வெண்கலப் பாத்திரத்துடனும், பணத்துடனும் தானம் பண்ணுகிறவனும், அந்தப் பசுவின் தேகத்தில் எத்தனை மயிருள்ளனவோ அவ்வளவு வருஷ காலம் புண்ணிய லோகங்களை அனுபவிப்பான். அன்றியும் தன்னுடைய முன் எழு பின் எழு தலை முறைகளையும் நரகத்தில் நின்றும் விடுதலை செய்வான். தங்கத்தினுல் கொம்புகளை அமைத்து எள்ளினுல் செய்யப்பட்ட பசுவைத் தட்சிணையுடனும் பால் கறக்கிற பித்தளைப் பாத்திரத்துடனும் பிராமணர்களுக்குத் தானம் பண்ணுகிறவன் எளிதாக வசுலோகத்தை அடைவான். ஒரு மனிதன் தன் செய்கையாலேயே இருள் நிறைந்ததும், துஷ்ட ஜந்துக்கள் உடையதுமான தாழ்ந்த உலகத்தை (நரக லோகத்தை) அடைகிறான். ஒரு கப்பலானது புசற்காற்றால் சமுத்திரத்தில் முழுகிப் போவது போல ஆழமான இருள் நரகத்திலே அமிழ்கிறான்

பசுதானமானது அந்தத் துன்பத்தினின்றும் அவனைக் காப்பாற்றி மறு உலக வாழ்வைத் தருகின்றது. தன் புத்திரியைப் பிராம விதிப்படி விவாகஞ் செய்து கொடுப்பவனும், பிராமணர்களுக்குப் பூதானம் பண்ணுகிறவனும், மற்றுமுள்ள வேறு தானங்கள் கொடுப்பவனும் இந்திர லோகத்தை அடைகிறான். தார்க்ஷியா! ஏழு வருஷம் இடைவிடாமல் அக்கினி ஹோத்திரம் செய்கிறவன் தன்னுடைய முன் ஏழு பின் ஏழு சந்ததிகளைக் காப்பாற்றுகிறான். என்று சரஸ்வதி தேவி கூறினாள். தார்க்ஷியர் சரஸ்வதியைப் பார்த்து, தேவீ! வேதத்தில் சொல்லியிருக்கிறபடி அக்கினி ஹோத்திரம் செய்யும் விதியை எனக்குச் சொல்ல வேண்டும். நான் உன்னிடத்திலிருந்து அக்கினி ஹோத்திரத்துக்குரிய சரியான காலத்தையும், விதிகளையும் தெரிந்துகொள்ள விரும்புகிறேன் என்றார்.

---

## 187-வது அத்தியாயம்

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—12. பிறகு யுதிஷ்டிரர் மார்க்கண்டேயரை நோக்கி வைவசுவதமனுவின் சரித்திரத்தை எனக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்டார். மார்க்கண்டேயர், அரசனே! நரோத்தமனே! மகிமையுள்ள ஒரு பெரிய ரிஷி இருந்தார். அவர் வைவசுவதனுடைய புத்திரர். பிரம தேவரைப் போன்ற தேஜசுள்ளவர். அவர் சக்தியினால் தமது பிதாவுக்கும் பிதாமகருக்கும் மேலானவர். பலத்தாலும், பாக்கியத்தாலும், தவசாலும் கூட மேலானவரா யிருந்தார். அவர் பதரிகாச்சிரமத்தில் ஒரு காலால் நின்றுகொண்டும், இரு கரங்களையும் உயரத் தூக்கிக்கொண்டும், உக்கிரமான தவம் புரிந்தார். அண்ணாந்துகொண்டும் இரண்டு கண்களையும் இமையால் திறந்துகொண்டும் பதினாறு வருஷம் கொடுமையான தவம் செய்தார். அவர் ஒரு காலத்தில் சடை தரித்து, ஈர வஸ்திரத்துடன் செரிவியின் கரையிலிருந்து தவம் பண்ணுகிறபோது, ஒரு மீன் வந்து அவரைப் பார்த்துச் சொல்லுகிறது. மகிமையுள்ளவரே! நான் ஆதரவற்ற சிறிய மீன். பெரிய மீன்களுக்குப் பயப்படுகிறேன். விரதானுஷ்டானம் செய்கிற ரிஷியே நீர் என்னைக் காப்பாற்ற வேண்டும். சின்னமீன்கள் பெரிய மீன்களுக்கு ஆகாரமாகிற கெட்டவழக்கம் எங்கள் ஜாதியிலிருக்கிறது. ஆகையால், இந்தப் பயங்கரமான சமுத்திரத்தில் நான் முழுகிப்போகாதபடி என்னைக் காப்பாற்றும். நீர் எனக்குச் செய்கிற உபகாரத்துக்குப் பதில் உபகாரம் செய்வேன் என்றது. அந்த மீன் சொன்னதைக் கேட்ட வைவசுவதமனு அந்த மீனைத் தமது கையில் எடுத்துக்கொண்டார். அந்த மீனின் சரீரம் சந்திரனுடைய நிலாவைப்போலப் பிரகாசித்தது. அதை ஒரு நீர் நிறைந்த மண் பாண்டத்தில் விட்டு வளர்த்தார். அது பெருத்தது. மனு அதைத் தமது சொந்தப் புத்திரனைப் போல வளர்த்தார்.

13—27. வெகு காலத்துக்குப் பின் அந்த மீன் வளர்ந்துவிட்டபடியால் அந்த மண்பாத்திரம் அதற்குப்போதவில்லை. அப்போது அது மனுவை நோக்கி மகிமை யுள்ளவரே! என்னை வேறொரு நல்ல இடத்தில் வையும் என்றது. பெருமையுள்ள மனுவானவர் அதை யெடுத்து நீர் நிறைந்த ஒரு குளத்தில் விட்டார். அந்தக் குளம் இரண்டு யோசனை நீளமும் ஒரு யோசனை அகலமும் உள்ளது. அந்த மீன் வெகு காலத்துக்குப் பின் அதிக பெரிதாய் வளர்ந்து விட்டபடியால் அந்தக் குளமும் அதற்கு வசிக்கப் போதாமல் போயிற்று. தாமரை போன்ற கண்களையுடைய குந்தி புத்திரனே அந்த மீன் மனுவைப் பார்த்து, மஹானுபாவரே! பக்தி யுடையவரே! என்னைச் சமுத்திர ராஜனுக்குப் பிரிய பத்தினியான கங்கையில் கொண்டுபோய்விடும். நான் உமது கருணையால் இவ்வளவு பெரிதாக வளர்ந்திருக்கிறபடியால், நீர் எவ்விதமான கட்டளையிட்ட போதிலும் மகிழ்ச்சியுடன் அதை நிறைவேற்றுவேன் என்றது அதைக் கேட்ட நீதியுள்ளவரும், ஆசையற்றவரும், வணங்கப்படத் தக்கவருமான மனு அந்த மீனை எடுத்துக் கொண்டுபோய்க் கங்கா நதியில் விட்டார் அந்தமீன் அவ்விடத்திலும் பெரிதாய் வளர்ந்து மனுவைப் பார்த்து, இறைவனே நான் மிகப் பெரிய தேகமுடையவனா யிருக்கிறபடியால் இந்தக் கங்காநதி எனக்குப் போதவில்லை. என்னைச் சீக்கிரமாய்ச் சமுத்திரத்தில் கொண்டுபோய்விடும் என்றது. அது அவ்வளவு பெரிதா யிருந்தபோதிலும் மனு அந்த மீனைச் சமுத்திரத்தில் விட்டவுடனே அது புன்சிரிப்புடன் மனுவைப் பார்த்து, நீர் செய்ய வேண்டியதைச் சொல்லுகிறேன் கேளும் என்று சொல்லுகிறது.

28—40. பெருமை யுள்ளவரே! பாக்கியசாலியே! இந்த சராசரப் பொருள்கள் எல்லாம் அழிகிறகாலம் சமீபித்துவிட்டது. இந்தப் பூமி சுத்தியாக்கப் படுகிற காலம் கிட்டவந்துவிட்டது. ஆகையால் உமக்கு நன்மையானதைச் சொல்கிறேன். உலகத்தில் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற அசையும்பொருள் அசையாப் பொருள்கள் எல்லாம் அழிந்துபோகிற காலம் வந்துவிட்டது. ஆகையால் ஒரு பெரிய பெட்டி பண்ணும், அதில் ஒரு நீளமான கயிறு கட்டிவையும். சப்தரிஷிகளுடன் நீர் அதில் ஏறிக்கொள்ளும். பூர்வகாலத்தில் பிராமணர்களால் மதிக்கப்பட்ட எல்லாத் தானியங்களையும் எடுத்துக்கொள்ளும். அவற்றைத்தனியாக வைத்துக் காப்பாற்றும். பிறகு நான்ஒரு கொம்புள்ளஜந்துவாக உமக்கு முன்பாகத் தோன்றுவேன். அப்போது என்னைத் தெரிந்துகொள்ளும். நான் உம்மை விட்டுப் பிரிந்துபோகிறேன். நான் சொன்னபடி யெல்லாம் செய்யும், ஏனென்றால் அந்தப் பயங்கரமான பிரளயவெள்ளத்தில் என்னுடைய உதவியில்லாமல் நீர் தப்பித்துக்கொள்ள முடியாது என்றது. மனு மீனுக்குச் சொல்லுகிறார். இறைவனே நீர் சொன்னவைகளில் நான் சந்தேகப் படவே யில்லை. ஆகையால் அவைகளை எல்லாம் நான் செய்வேன். இப்படி ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டபின் அவ்விருவரும் பிரிந்து போனார்கள். பிறகு மனுவானவர் மீன் சொன்னபடி எல்லா வித தானியங்களையும் எடுத்துக்கொண்டு, தகுதியுள்ள கப்பலில் ஏறிக்கொண்டு அலை வீசும் கடலில் சென்

ரூர். பூமிக்கிறைவனே! பிறகு மனு அந்த மீனை நினைத்தார். அதுவும் அவருடைய எண்ணத்தை அறிந்துகொண்டு தலையில் இரண்டு கொம்புகளுடன் அவருக்கு எதிரில் வந்தது. தலையில் கொம்புகளை யுடைய மலையைப் போல காணப்படுகிற அந்த மீனின் கொம்புகளில் மனுவானவர் கயிற்றைக் கட்டினார்.

38—48. கயிற்றைக் கட்டினதும் அந்த மீன் வெகு பலத்துடன் அந்தப் பெரிய பேழையை இழுத்தது. கோஷித்துகொண்டு அலை வீசுகிற அந்தச் சமுத்திரத்தில் கப்பலை மீன் இழுத்துக்கொண்டு போயிற்று. புசற்காற்று மோதி யடிக்கிறபடியால் அந்தக் கப்பலானது சமுத்திரத்தில், குடித்திருக்கிற கணிகையைப் போல ஆடிற்று. அப்போது பூமி திசை ஒன்றும் தெரியவில்லை நராதிபதியே! அப்போது எங்கே பார்த்தாலும் நீர் மயமாயிருந்தது. ஜலமானது பூமி, ஆகாசம் இரண்டையும் மூடிக் கொண்டது. இப்படிப் பட்ட பெரு வெள்ளம் உண்டான போது மனு சப்த ரிஷிகள், அந்த மீன் இவர்களைத் தவிர வேறு ஒரு பொருளும் காணப்படவே யில்லை. அந்த மீனானது அநேக வருஷம் அளவும் கப்பலை வெள்ளத்தில் இழுத்துக் கொண்டிருந்தது. கௌரவ வம்சோத்பவனே! பாரதனே! கடைசியில் கப்பலை இமய மலையின் சிகரத்துக்கு இழுத்துக்கொண்டு வந்தது. பின் மீன் அந்த ரிஷிகளை பார்த்துப் புன் சிரிப்புடன் சொல்லுகிறது.

49—55. தவக்கம் செய்யாமல் இமயமலையின் சிகரத்தில் இந்தக் கப்பலைக் கட்டுங்கள் என்றது. அப்படியே அவர்களும் சீக்கிரமாய்க் கட்டினார்கள். அந்த நாள் முதலாக இமயமலையின் அந்தச் சிகரமானது நௌபந்தனம் என்று சொல்லப்படுகிறது இப்பொழுதும் அந்தச் சிகரம் கொண்டாடப் படுகிறது. பிறகு அந்த மீன் ரிஷிகளைப் பார்த்து, நான் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமா. எனக்கு மேற்பட்டவர் ஒருவருமில்லை. மீன் வடிவம் கொண்டு உங்களை ஆபத்தினின்றும் காப்பாற்றினேன். தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் முதலான சகல சராசரங்களையும் மனு சிருஷ்டிப்பார். உக்கிரமான தவம் செய்வதினால் மனுவுக்குச் சிருஷ்டிக்கும் சக்தி யுண்டாகும் என்னுடைய அநுக்கிரகத்தால் மனுவை மாயை மறைக்காது என்று இப்படிச் சொல்லிவிட்டு ஒரு நிமிஷத்துக்குள் அந்த மீன் மறைந்து போய் விட்டது. வைவசுவதமனுவும் சிருஷ்டி செய்ய விருப்பம் கொண்டார்.

56--58. சிருஷ்டிக்கிற போது மனுவை மாயை மறைத்து விட்டது. ஆகையால் அவர் பெரிய தவசு செய்தார். தவத்தில் சித்தி பெற்ற பின் மனு சரியானபடி சிருஷ்டிக்கத் தொடங்கினார். மீனோபாக்கியானமென்கிற புராதன கதையை உனக்குச் சொன்னேன். இந்த வைவசுவத மனுவின் கதையைத் தினந்தோறும் படிக்கிறவன் எண்ணின எண்ணங்க ளெல்லாம் நிறைவேறப் சகல பாக்கியங்களையும் அடைந்து அந்தத்தில் சொர்க்கத்தை அடைவான்.

---

## 188-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—16. பிறகு யுதிஷ்டிரர் மிகவும் வணக்கத்துடன் மார்க்கண்டேயரைப் பார்த்து, மஹரிஷியே! சென்று போன அநேக ஆயிர வருஷங்களை நீர் பார்த்திருக்கிறீர். உம்மைப் போல அவ்வளவு நீடித்த காலம் ஜீவித்தவர்கள் இந்த உலகத்தில் ஒருவருமில்லை. இந்த விஷயத்தில் பிரமாவைத் தவிர உமக்குச் சமானமாகச் சொல்லத் தக்கவர்கள் ஒருவருமில்லை. பிராமணரே! பூமி ஆகாயம் தேவர் தானவர் ஒருவரு மில்லாத சர்வ சங்கார காலத்திலே பிரமத்தைத் தொழுது இருக்கிறீர். பிரளயம் நீங்கிப் பிதாமகர் விழித்துக்கொண்டு திக்குகளை உண்டாக்கி, காற்றால் அவற்றை நிரப்பி, ஜலத்தைச் சரியான ஸ்திதியில் நிறுத்தி, நாலு வருணங்களையும் மறுபடி சிருஷ்டித்தபோது நீர் ஒருவரே அந்தப் பிரமாவைத் தரிசிக்கிறீர். பிராமணோத்தமரே! நீர் உமது மஹா சமாதியில் அந்தப் பிரமாவைத் தரிசித்திருக்கிறீர். அநேக சிருஷ்டி காலங்களை நீர் கண்டிருக்கிறீர். உக்கிரமான தவம்செய்து நீர் தேவர்களுக்கும் மேற்பட்டிருக்கிறீர். மறு உலகத்தில் நாராயணரைப் போல நீர் இவ்வுலகத்தில் கருதப்படுகிறீர் முன் காலத்தில் அநேகம் தடவை மேலான சிருஷ்டிகர்த்தரை உமது கண்களால் பார்த்திருக்கிறீர். பரமஞானத்தினால் அறியப்படுகிற பரப்பிரமத்தை உமது இருதய கமலத்தில் தரிசித்திருக்கிறீர். பரமேஷ்டியின் அனுக்கிரகத்தினால் மரணத்தையும் ஜனனத்தையும் வென்று இருக்கிறீர். சந்திர சூரியாக்கினிகள், ஆகாயம், பூமி, வாயு ஒன்று மில்லாமல், சராசரங்களெல்லாம் அழிந்து சமுத்திரம்போலக் காணப்பட்டு தேவர் அசுரர் நாகர்கள் எல்லாரும் அழிந்து, பிரமதேவர் கமலாசனத்தில் நித்திரை செய்கிறபோது நீர் மாத்திரம் அழியாமலிருந்து அவரைத் தரிசித்துக்கொண் டிருக்கிறீர். முன்னாலே நடந்தவைகளை நீர் நேரில் பார்த்து அறிந்திருக்கிறீர். உமது அறிவினாலும் அநேக விஷயங்களை உணர்ந்திருக்கிறீர். உமக்குத் தெரியாதது உலகத்தில் ஒன்றுமில்லை. ஆகையால் எல்லாவிஷயங்களையும் நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன் என்று யுதிஷ்டிரர் சொன்னார்.

17—36. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரை நோக்கி, சுயம்புவும் ஆதிகாரணமுமான பரம்பொருளை வணங்கி, நித்தியரும், அழிவற்றவரும், காணப்படாதவரும், குறி குணங்களைக் கடந்தவருமான அந்தப் பரம்பொருளை வணங்கி உனக்கு எல்லாவற்றையும் சொல்லுகிறேன். நராதிபனே! பீதாம்பரத்தை அணிந்திருக்கிற ஜனார்த்தனன் எல்லாவற்றையும் நடத்துகிறவனும் சிருஷ்டிக்கிறவனுமா யிருக்கிறான். அவனே எல்லாவற்றுக்கும் ஆத்மாவும் சிருஷ்டிகனுமாவான். அவனுக்கு ஆதியும் அந்தமுமில்லை. அவன் உலகத்தை வியாபித்துக் கொண்டிருக்கிறான். அவன் விகாரமில்லாதவன். அழிவில்லாதவன். அவன் எல்லாவற்றையும் சிருஷ்டிக்கிறான். அவனைச் சிருஷ்டிப்பவர் ஒருவரும் இல்லை. அவனே எல்லாவற்றுக்கும் மூலமானவன். அவன் அறிவு எல்லாத் தேவர்க

ளுக்கும் மேலானது. இப்பிராணிகளெல்லாம் அழிந்தபின் மறுபடியும் உற்பத்தியாகின்றன. கிருதயுகம் நாலாயிரம் வருஷங்கொண்டது. அதன் சந்திவருஷம் நானூறு. திரேதாயுகம் மூவாயிரவருஷ முள்ளது. அதின் சந்தி வருஷம் முந்நூறு. துவாபரயுகம் இரண்டாயிர வருஷம் கொண்டது. அதன் சந்தி வருஷம் இருநூறு. கலியுகம் ஆயிரவருஷம் கொண்டது. அதன்சந்தி நூறு வருஷம். யுகங்களின் முதல்சந்தியும். பின்சந்தியும் சரியான காலத்தை யுடையது. கலியுகம் முடிந்ததும் மறுபடியும் கிருத யுகம் தொடங்குகிறது. இப்படியே யுகங்கள் சுழன்று வருகின்றன. நாலு யுகங்களுக்கும் வருஷம் பன்னீராயிரம். இப்படிப்பட்ட சதுர்யுகம் ஆயிரம் கொண்டது பிரமாவுக்கு ஒரு பகல். இதில் சிருஷ்டிக்கப்படுகிற பிராணிகளெல்லாம் மூலத்தில் ஒடுங்குகிறதைக் கற்றறிந்தவர்கள் சர்வசங்காரம் என்கிறார்கள். கடைசியில் சொல்லப்பட்ட காலத்தின் முடிவிலுள்ளஆயிர வருஷம் மனிதர்கள் பொய்யரா யிருப்பார்கள். அதன் பிறகு உபதேசகர்களால் தானங்களையும் யாகங்களையும் செய்வார்கள். விரதங்களையும் அனுஷ்டிப்பார்கள். பிறகு பிராமணர்கள், சூத்திரர்கள் அனுஷ்டிக்க வேண்டிய விதிகளை ஏற்படுத்துவார்கள். சூத்திரர்கள் ஐசுவரியம் சம்பாதிக்கத் தொடங்குவார்கள் க்ஷத்திரியர்களும் பிராமண தர்மங்களைக் கைக்கொள்வார்கள். கலியுகத்தில் பிராமணர்கள் யாகத்தையும் வேதத்தையும் விடுவார்கள். தண்டத்தையும மான்தோலையும் ஒழிப்பார்கள். எல்லாவற்றையும் உண்பார்கள். ஜபத்தை விட்டுவிடுவார்கள். அவைகளைச் சூத்திரர்கள் கைக்கொள்வாரகள். நாளடைவில் உலகம் நடை மாறிப்போகும். அதுதான் உலக முடிவுக்கு அடையாளமாகும். அப்போது அநேக மிலேச்ச அரசர்கள் அரசு புரிவார்கள். ஸாகர். புலிந்தர், யவனர் முதலிய பாபிகளான மிலேச்ச அரசர்கள் பொய்யர்களாய்ப் பொய்யினாலேயே அரசுபுரிவார்கள். அவர்களே தைரியசாலிகளாய்ப் பூமிக்கு அதிபதியாவாரகள். ஒரு பிராமணன்கூடத் தன் குலாசாரப்படி நடக்கமாட்டான். நராதிபனே ! கலியுகாந்தத்தில் இப்படியெல்லாம் நடக்கும்.

37—47. அரசனே ! க்ஷத்திரிய வைசியர்களும் தங்கள் குலாசார நெறி கடந்து மாறாய் நடப்பார்கள். மனிதர்கள் அற்பாயுசுள்ளவர்களாய், ஊக்கம் பலம், சக்தி இவைகள் குறைந்து மிருப்பார்கள். மனிதர்கள் அற்ப பலமும் சிறுத்த சரீரமு முடையவாகளா யிருப்பார்கள். மனிதர்கள் பொய்யர்களாகவே யிருப்பார்கள். நகரங்கள் காடுகளாய், எங்கே பார்த்தாலும் துஷ்ட மிருகங்களும் துஷ்ட ஜந்துக்களும் வசிக்கும். அரசனே ! கலியுக முடிவில் வேதம் அரியதாய் விடும். சூத்திரர்கள் "அடே" என்று அழைப்பார்கள். பிராமணர்கள் "தனமுள்ள ஐயா!" என்று கூப்பிடுவார்கள். மனித சிரேஷ்டனே ! அப்போது மிருகங்கள் ஏராளமாய் விருத்தியாகும். வாசனைத் திரவியங்கள் நன்மணம் கமழா ; பதார்த்தங்கள் நாவுக்கு ருசியாயிரா. ஸ்திரீகள் சிறிய சரீரமுள்ள அநேக பிள்ளைகளைப் பெறுவார்கள். அவர்கள் நல்லொழுக்கமும் நல்ல நெறியும் அற்றவர்களா யிருப்பார்கள், பெண்கள் உலக விவகாரத்தை

யே பேசுவார்கள். மன்னவனே! யுக முடிவிலே எங்கும் பஞ்சம் பீடிக்கும். தெருவுகளில் துர்ச் சரிதமுள்ள பெண்கள் அலைந்துகொண்டு இருப்பார்கள். பெண்கள் கற்பை யிழந்து, தங்கள் கணவனையே பகைப்பார்கள். நராதிபனே! பசுக்கள் சொற்பப் பால் கறக்கும். மரங்கள் காககூட்டங்களால் நிறைந்திருக்கும். அவைகள் மலர்களையும் கனிகளையும் கொடா. பூமிக்கு இறைவனே! பிராமணர்கள் எல்லாரும் பிரமஹத்திதோஷம் உடையவர்களா யிருப்பார்கள். பொய்யர்களான அரசர்களிடத்தில் தானம் வாங்குவார்கள். பொறாமையும், அறிவின்மையும் உள்ளவர்களா யிருப்பார்கள். பிராமணர்கள் மதாசாரத்துக்கு விரோதமான சின்னங்களைத் தரித்துககொண்டு, பிச்சை யெடுத்து ஜனங்களை வருத்துவார்கள். குடும்பத்தி லிருப்பவர்கள் வரிகளால் கஷ்டமடைந்து வஞ்சகர்கள் ஆவார்கள். பிராமணர்கள் தவத்தை வெறுத்து வர்த்தகம் செய்து பொருள் தேடுவார்கள். அவர்கள் பொருளாசையால் சந்நியாசவேஷம் தரிப்பார்கள்.

48—56. யுதிஷ்டிரா! அப்படிப்பட்ட காலத்தில் மனிதர்கள் தங்களுடைய ஆசாரங்களுக்கு மாறாகவே நடப்பார்கள். மதுபானம் பண்ணுவார்கள். பலாத்காரமாய்க் குரு தல்பகமனம் செய்வார்கள். உலக இன்பத்தில் மயங்கிக் கிடப்பார்கள். மாம்சத்தையும் இரத்தத்தையும் விருத்தியாக்குகிறதற்கு உரிய பொருள்களையே தேடுவார்கள். நரோத்தமனே! கலியுகாந்தத்தில் ரிஷி ஆச்சிரமங்களில் பாபிகளும் சோம்பேறிகளுமான துஷ்டர்கள் நிறைந்திருப்பார்கள். பிறனைப்பற்றி ஜீவிப்பதையே பெருமையாக எண்ணுவார்கள். பகசங்காரியான இந்திரன் சரியான காலத்தில் மழைபெய்விக்கமாட்டான். நிலத்தில் விதைத்த விதைகள் முளையா. மனதாலும் செய்கையாலும் கெடுதி செய்பவர்களாய்ப் பகையும் பொறாமையும் உடையவர்களா யிருப்பார்கள். உலகம் முற்றும் பாபமும் துன்மார்க்கமும் நிறைந்திருக்கும். அரசனே! அக்காலத்தில் தர்மிஷ்டனா யிருப்பவன் அற்பாயுசாய் விடுவான். எல்லா விதத்திலும் தர்மம் கெடும். வர்த்தகர்கள் வஞ்சகர்களாய்ப் பண்டங்களைத் தப்பாக நிறுத்தும் அளந்தும் விற்பார்கள். தர்மசாலி க்ஷேமத்தை யடையமாட்டான். பாவியானவன் மிகுந்த ஐசுவரியத்துடன் வாழ்வான். தர்மம் பலஹீனப்படும். பாபம் மஹா பலமுடையதா யிருக்கும். தர்மத்தை அனுசரிக்கிறவன் ஏழையாயும் அற்பாயுசுள்ளவனாயும் இருப்பான். பாபியானவன் ஐசுவரியவானாயும், நீண்ட ஆயுசுள்ளவனாயும் இருப்பான். கலியுகத்தின் முடிவில் பகிரங்கமாய்ச் செய்யப்படுகிற விருந்து முதலியவைகளில்கூடப் பாபத்தையே அனுசரித்து நடப்பார்கள். மனிதர்கள் பாப மார்க்கத்தினாலேயே தங்கள் எண்ணத்தை நிறைவேற்ற முயல்வார்கள்.

57.—66. யுதிஷ்டிரா! மனிதர்கள் சொற்ப காசைச் சம்பாதித்தாலும் செல்வச் செருக்குள்ளவர்களாய் மஹா பிரபுக்களைப் போல இறுமாந்து நடப்பார்கள். பிறர் தங்களிடத்தில் அடைக்கலமாக வைத்திருக்கிற பொருளை அபகரிக்க முயலுவார்கள். பாபச் செய்கைகளை யுடையவர்களாய் வெட்கமில்லா-

மல் வாங்கின பொருள்களை யில்லையென்று மறுத்துச் சொல்வார்கள். எவ்வி டத்தும் மாம்ச பட்சணிகளான மிருகங்களும், பட்சிகளும் பமுத்திருக்கும். நக ரங்களிலும், பட்டணங்களிலும், தேவாலயங்களிலும் அவ்வாறே யிருக்கும். மஹாராஜனே! ஏழு, எட்டுவயதுள்ள பெண்கள் குழந்தைகளைப் பெறுவார்கள். பத்து அல்லது பன்னிரண்டு வயதுள்ள ஆணும் பிள்ளைகளைப் பெறுவான். பதினாறு வயதில் மனிதர்கள் விருத்தாப்பியத்தை அடைவார்கள். மனிதனு டைய ஜீவகாலம் சீக்கிரத்தில் ஒழிந்துபோம். மனிதர்கள் அவ்வளவு குறைந்த ஆயுசுடையவர்களா யிருக்கிறபடியால் இளமையிலேயே பெரியவர்களைப்போல நடிக்கிறார்கள். ஆனாலும் அவர்களுடைய முதுமையிலும் இளம்பருவப் புத் தியே இருக்கும். பெண்கள் துர்மார்க்க நடத்தைகளை யுடையவர்களாய்க் கெ ட்டபேர் பெறுவதில் சிறப்படைந்திருப்பார்கள். நல்ல குணமுடைய கணவ னையும் வஞ்சித்து, வேலைக்காரர்கள், அடிமைக்காரர்க ளிடத்திலும், மிருகங்க ளினிடத்திலும் கலப்பார்கள். நற்குணமுடைய கணவனை அடைந்திருப்பவர்க ளும், அவன் உயிரோ டிருக்கும்போதே மறுபுருஷர்களோடு கலந்து உறவாடு வார்கள். யுகமுடிவாகிய ஆயிரம் வருஷத்தில் மனிதர்கள் அவ்வளவு குறைந்த ஆயுசை யுடையவர்களா யிருப்பதால், அந்தக் காலம் அநேக வருஷங்களைப் போலத் தோன்றும். பூமிக்கு அதிபனே! அப்போது பிராணிகள் குறைந்த ஆயு ளையும் அற்ப பலத்தையும் உடையவர்களாய்ப் பட்டினியால் வருந்தி ஆயிரம் கணக்காக மடிவார்கள்.

67—73. அரசனே! அப்போது ஏழு சூரியர்கள் வானத்தில் தோன்றி, ஆற்றிலும் சமுத்திரத்திலும் நீரை வற்றச் செய்வார்கள். பாரதோத்தமனே! அப்போது ஈரமானதும், காய்ந்ததுமான புல், செடி கொடி மரங்கள் எல் லாம் எரிந்து சாம்பலாய்ப்போம். பிறகு ஸம்பஸ்தகம் என்கிற நெருப்பு காற் றின் உதவியால் தோன்றும். அந்த அக்கினியானது பற்றி எரிந்து பூமியை ஊடுருவிப்போய்ப் பாதாளத்தையும் அடையும். அதனால் தேவர்களுக்கும், தானவர்களுக்கும், அரக்கர்களுக்கும் அச்சத்தை உண்டாக்கும். அந்த நெரு ப்புப் பாதாளபரியந்தம் ஊடுருவிச் சகல பொருள்களையும் ஒரு நிமிஷத்தில் எரித்துவிடும் நூறுயிரம் யோசனை விஸ்தீர்ணமுள்ள இந்த உலகத்தை அந்த ஸம்பஸ்தக நெருப்பு இப்படித் தகிக்கும். எல்லாவற்றுக்கும் இறைவனாகிய அந்த நெருப்பு மிக்க ஒளியுடன் ஜ்வாலித்து எரிந்து தேவர்கள் யட்சர்கள் தானவர்கள், அசுரர்கள், இராட்சதர்கள், நாகர்களுடனே இந்த உலகத்தை எரித்துவிடும்.

74—78. அதன்பின் கரிய யானைக் கூட்டங்களைப் போன்ற மேகங்கள் வானத்தில் தோன்றும். அந்த மேகங்கள் மின்னலை மாலையாகத் தரித்துக்கொ ண்டு கண்களுக்கு அழகாய்க் காணப்படும். அந்த மேகங்களுள் சில நீலோத் பலம் போலவும், சில அல்லி மலர்களைப் போன்ற நிறமுள்ளனவும், சில தாம ரை நூல் போன்ற நிறமுள்ளனவும், சில செந்தாமரையைப் போலவும் காணப்

படும். சில மஞ்சள் நிறமாயிருக்கும். சில காக்கையின் முட்டைபோன்ற நிற முள்ளவைகளா யிருக்கும். சில தாமரை யிலைபோன்றிருக்கும். சில ஜாதிலிங்கம்போலச் சிவந்திருக்கும். சில மேகங்கள் நகரங்களைப்போன்ற வடிவம் உள்ளவைகளாயும், சில யானைகளைப் போன்றவைகளாயும், சில பல்லிகளைப் போலவும், சில முதலைகளைப் போலவும், சில சுறா மீன்களைப்போலவும் தோன்றும். அரசனே! இப்படிப்பட்ட மேகங்கள் மின்னலாகிய மாலைகளை அணிந்து, சமுத்திரத்தைப்போல ஆகாசத்தில் பரந்து, பயங்கரமாகக் கர்ஜிக்கும். அவைகள் ஆகாயத்தை மறைத்துக்கொண்டு மழைபொழியும்.

79—86. மஹாராஜனே! அந்த மேகங்கள், வெள்ளம் பரந்து மலைகள் காடுகளுடன் கூடின பூமியை மூடும்படியாகப் பெரு மழை பொழியும். பிரம தேவருடைய கட்டளையால் எங்கும் பெருவெள்ளமாக மழைபொழிந்து, பூமியை வெள்ளத்தால் நிரப்பிப் பயங்கரமான அந்த ஸம்பவர்த்தக நெருப்பை அணைக்கும். பிரம தேவருடைய கட்டளையால் இப்படிப் பனிரண்டு வருஷம் பொழியும். பாரதனே! பிறகு சமுத்திரம் கரைகடந்து பெருகும். மலைகள் துண்டு துண்டாய்விடும். பூமி வெள்ளத்தில் முழுகிப்போகும். பிறகு திடீரென்று ஒரு காற்று உண்டாய் மேகங்களைச் சிதறவடிக்கும். மேகங்கள் மறைந்துபோகும். சுயம்புவும், மூலகாரணரும், பதுமாசனத்தில் இருப்பவருமான பிரமதேவர் அந்தக் காற்றைக் குடித்துவிட்டு நித்திரை செய்யப்போவார். அப்போது இந்தப் பூமி முழுமையும் ஒரே சமுத்திரம் போலிருக்கும். அசையும் பொருள்கள் அசையாப் பொருள்கள் எல்லாம் அழிந்துபோகும், தேவாசுரர்களும் அழிந்து போவார்கள், யட்சராட்சதர்கள் ஒருவரும் இருக்கமாட்டார்கள்.

87—98. நராதிபனே! மனிதர்கள் இல்லாமலும், மரங்களும காட்டு மிருகங்களும் காணப்படாமலு மிருந்தபோது நான் மாத்திரம் ஒருவனாக வருத்தத்துடன் அலைந்துகொண் டிருந்தேன். மஹாராஜனே! ஒரு சமயம் யாதொரு ஜந்துக்களும் இல்லாமையால் மன வருத்தத்துடன் அந்த வெள்ளத்தில் அலைந்துகொண்டிருந்தேன், இப்படி நெடுங்காலம் அலைந்து களைத்துப் போனேன். இளைப்பாற ஒரு இடமும் இல்லை. அதன்பின் ஒரு நாள் அந்தப் பெரிய சமுத்திரத்தில் ஒரு பெரிய ஆலமரத்தைக் கண்டேன். அந்த மரத்தினுடைய பெரிய கிளையில் திவ்யமான கட்டிலின்மேலுள்ள படுக்கையில், தாமரை மலரையும், சந்திரனையும் போன்ற அழகுள்ள முகத்தையும், மலர்ந்த செந்தாமரை யிதழ் போன்ற கண்களையும் உடைய சிறிய பிள்ளை யிருக்கக் கண்டேன். அதைப் பார்த்ததும் நான் மிகவும் ஆச்சரியம் அடைந்து, எல்லாம் அழிந்து போயிருக்கையில், இந்தச் சிறுவன் மாத்திரம் இந்த ஆலமரத்தில் எப்படிப் படுத்துக்கொண் டிருக்கக்கூடும் என்று மனதுக்குள் எண்ணினேன். நான் தபோபலத்தால் முக்கால வர்த்தமானங்களையும் அறியக் கூடியவனா யிருந்தும் இந்தச் சிறுவன் விஷயத்தில் எனக்கு யாதொன்றும் தோன்றவில்லை. துளசியையும், ஸ்ரீ வத்ஸமும் உடையவனா யிருந்தபடியால் அவன் இலட்சுமிக்கு வாசஸ்தான

மானவன் (விஷ்ணு) என்று எனக்குத் தோன்றிற்று. மிகுந்த காந்தியும் தாம ரைக் கண்களையும் உடைய அவன் என்னைப்பார்த்துக் காதுக்கினிய வசனங்க ளாலே, ஏ குழந்தாய்! நீ களைப்படைந் திருக்கிறாயென்றும், களையாற இடம் தேடுகிறாய் என்றும் எனக்குத் தெரியும். பிருகு வம்சத்தவனே! மார்க்கண்டே யனே! உனக்கு இஷ்டமான வரைக்கும் இங்கே களைப்பாறு. மஹரிஷியே! என் சரீரத்துக்குள் புகுந்து அங்கே களையாறு. அந்த இடத்தைத்தான் உனக் குக் களையாற வைத்திருக்கிறேன். நான் உன்னிடத்தில் மகிழ்ச்சியடைந் திருக் கிறேன் என்றான்.

99—126. பாரதனே! நான் நீண்ட ஆயுள் உள்ளவனும், மனுஷத்து வம் உடையவனுயுமிருக்கிற என்னை மரியாதை யில்லாமலும், மதியாமலும் அந்தச் சிறுவன் பேசின உடனே தன் வாயைத் திறந்தான். உடனே நான் யா தொரு செயலுமில்லாதவனாய் அவன் வாயின் உள் புகுந்தேன். அவனுடைய வயிற்றில் புகுந்ததும், நாடு நகரங்களுடன் கூடின உலக முழுமையும் அங்கே பார்த்தேன். அவனுடைய வயிற்றுக்குள் அலைந்து கொண்டிருக்கும் போது கங்கை, சத்துரு, யமுனை, கௌசிகி, சர்மண்வதி, வேத்திரவதி, நளினி, நர்ம தை, ஸரஸ்வதி, சிந்து, கோதாவரி, கிருஷ்ணவேணி, காவேரி, மஹாநதி முத லிய எல்லா நதிகளையும் பார்த்தேன். சுறா மீன்கள், முதலைகள் பல வகை இரத்தினங்கள் இவைகளுக்கு இருப்பிடமான சமுத்திரத்தையும் கண்டேன். சந்திரன், சூரியன் நட்சத்திரங்களுடன் கூடிப் பிரகாசிக்கிற வானத்தையும் பார்த்தேன், அரசனே! அழகிய அரணியங்கள், வனங்களுடன் கூடின பூமி யையும் பார்த்தேன். அதில் அநேக பிராமணர்கள் யாகம் செய்துகொண்டி ருக்கிறதையும் கண்டேன். மற்ற வருணத்து ஜனங்களுக்கு நன்மையையே செ ய்து கொண்டிருக்கிற க்ஷத்திரியர்களையும், விவசாயத் தொழில் செய்துகொண் டிருக்கிற வைசியர்களையும், பிராமணர்களுக்குப் பணிவிடை செய்துகொண் டிருக்கிற அநேக சூத்திரர்களையும் பார்த்தேன். இமயமலை, ஹேமகூடம், நிஷ தம், சுவேதம், கந்தயாதனம், மந்தரம், நீலம், மேரு, மஹேந்திரம், விந்தியம், மலயம் முதலிய அநேக மலைகளையும் பார்த்தேன். சிங்கம், புலி, காடி முத லிய சகல பிராணிகளையும் பார்த்தேன். தேவர்கள், இந்திரன், சாத்தியர், ஆதித்தியர், பிதிர்க்கள், நாகர், வசுக்கள், கந்தர்வர், ரிஷிகள், தானவர்கள் பன்னகர் முதலானவர்களையும், தேவர்களுக்குப் பகைவர்களான எல்லாரையும் கண்டேன். சகல பிராணிகளுடன் கூடின உலகத்தில் அலைந்துகொண்டு அவன் வயிற்றில் நெடுங் காலம் வசித்தேன். ஆயினும் அவனுடைய சரீரத்து க்கு எல்லையை மாத்திரம் காணவில்லை. அந்த மஹாத்மாவின் சரீரத்தின் முடிவைக் காண விரும்பி வெகு ஆவலுடன் அலைந்து திரிந்தும் காண முடிய வில்லை. பிறகு, இவர் தான் மூலகாரணர் என்று தெரிந்துகொண்டு, வரம் அளிப்பவராகிய அவருடைய ஆதாரவை நாடினேன். பிறகு ஒரு பெரிய காற் றினாலே அவனுடைய திறந்த வாயினின்றும் வெளியில் வந்தேன்.

127—143. அரசனே! நரோத்தமனே! சகல உலகங்களையும் விழுங்கின அந்தச் சிறுவன், ஸ்ரீவத்ஸமறுவுடனே ஆலமரக் கிளையில் பிரகாசித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்தேன். பீதாம்பரமும், ஸ்ரீவத்ஸமறுவையும் உடைய அவர் மகிழ்ச்சியுடன் என்னைப் பார்த்துப் புன் சிரிப்புடன், சிறந்த ரிஷியே! மார்க்கண்டேயனே! நீ சில காலம் என் வயிற்றுக்குள் வசித்திருந்தாய். ஆகையால் நான் உன்னிடத்தில் பேசுகிறேன் என்றார். அந்த க்ஷணத்திலேயே நான் புதிய பார்வையை (ஞானக் கண்) அடைந்தேன். அதனாலே நான் உலக மாயை ஒழிந்து மெய்ஞ் ஞானத்தை அடைந்தேன். அவருடைய மஹா சக்தியை அறிந்ததும், அழகும் மகிமையு முள்ளவைகளும் சிவந்த விரல்களை யுடையவைகளுமான அவருடைய சிவந்த பாதங்களில் வணங்கினேன். அவர் பாதங்களில் தலையால் வணங்கி, இரண்டு கைகளையும் குவித்துக்கொண்டு அவரிடம் போய், எல்லாவற்றுக்கும் உயிராயும், தாமரை யிதழ் போன்ற கண்களை யுடையவராயும் உள்ள அந்தத் தேவனை வணக்கத்துடன் தரிசித்தேன். பிறகு அவரை நோக்கி ஓ தேவனே! உம்மையும், ஆச்சரியமான உமது மாயையும் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். நான் உமது வாயின் வழியாக உமது வயிற்றில் புகுந்து முழுமையும் பார்த்தேன். தேவனே! தேவர்கள், தானவர்கள், இராட்சதர், யட்சர், கந்தர்வர், நாகர் முதலானவர்களையும், சராசரமயமான உலகம் எல்லாவற்றையும் உமது வயிற்றில் பார்த்தேன். உமது சரீரத்தில் முற்றும் உலாவித் திரிந்தேன். உமது கருணையால் நான் ஞாபக சக்தியை இழக்க வில்லை உமது இச்சைப்படியே நான் வெளியில் வந்தேன். என் இச்சையால் வர வில்லை. ஆகையால் குற்றமற்றவராகிய உம்மை அறிந்துகொள்ள விரும்புகிறேன். நீர் உலகத்தை முற்றும் விழுங்கி விட்டு, ஒரு சிறிய பிள்ளையைப் போல இங்கே ஏன் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்? இவைகளை யெல்லாம் நீர் எனக்குச் சொல்லவேண்டும். உலகம் உமது வயிற்றில் ஏன் இருக்கிறது? எத்தனை காலம் இங்கே யிருப்பீர்! தேவர்களுக்கு இறைவனே இவைகளை யெல்லாம் எனக்கு விரிவாய்ச் சொல்லவேண்டும். தாமரை போல் கண்களை யுடையவரே! பிராமணர்கள் இவைகளைத் தெரிந்து கொள்ள விரும்பக் கூடாது நான் பார்த்த காட்சி மனதுக்கு எட்டாததாயும், அதிசயமாயும் இருக்கிறது என்று கேட்டேன். தேவதேவனாகிய அவர் எனக்குச் சமாதானம் சொல்லிப் பிறகு சொல்லுகிறார்.

---

## 189-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—23. பிராமணா! தேவர்கள் கூட என் உண்மையை அறிய மாட்டார்கள். நான் உன்னிடத்தில் பிரியமாயிருக்கிற படியால் நான் உலகத்தைச் சிருஷ்டித்த வகையைச் சொல்லுகிறேன். நீ உண்மையான பக்தன். ஏன்

னுடைய ஆதரவை விரும்புகிறாய். உன் பார்வையினாலே நீ பெரிய பிரம்சாரியாய் இருக்கிறாய் என்று தெரிய வருகிறது. நான் பூர்வ காலத்தில் ஜலத்துக்கு நாரம் என்று பேரிட்டேன். அந்த ஜலம் எனக்கு அயனமாய் (இருப்பிடமாய்) இருந்தபடியால் எனக்கு நாராயணன் என்று பேர் வந்தது. பிராமணா! நான் நாராயணன். எல்லாவற்றுக்கும் காரணமானவன். நித்தியன். விகாரம் இல்லாதவன். எல்லாவற்றையும் சிருஷ்டித்துச் சங்கரிக்கிறவன் நானே. நான் விஷ்ணு; நான் பிரமா; நான் இந்திரன்; நான் குபேரன்; நான் யமன்; நான் சிவன்; நான் சோமன்; எல்லாவற்றையும் நடத்துகிறவன்; காசியபன்; நானே தாதா விதாதா; நான் யக்ஞசொரூபி; என் வாய் அக்கினி; பூமி எனக்குப் பாதம்; சந்திர சூரியர்கள் என்னுடைய கண்கள்; வானம் என்னுடைய தலை; ஆகாயமும், திசைகளும எனக்குக் காதுகள்; ஜலம் என்னுடைய வேர்வை; வெளியே எனது சரீரம்; வாயு எனது மனம். நிறைந்த தட்சிணைகளோடு அநேக யாகங்களைச் செய்திருக்கிறேன். தேவர்களுடைய யாகத்தில் நான் எப்போதும் பிரசன்னமாயிருப்பேன். வேதத்தை அறிந்தவர்கள் எனக்கு வேள்வியைச் செய்கிறார்கள். பூமியில் உள்ள க்ஷத்திரியர், வைசியர்கள் எல்லாரும் சொர்க்கத்தை விரும்பி என்னை வணங்குகிறார்கள். மேரு மந்தரபர்வதங்களால் அலங்காரமாயுள்ளதும், நாலு சமுத்திரங்களால் சூழப்பட்டதுமான இந்தப் பூமியை நான் சேஷன் வடிவமாய்த் தாங்குகிறேன். முன் காலத்தில் ஜலத்தில் முழுகியிருந்த பூமியை நான் வராக உருவம்கொண்டு தூக்கியெடுத்தேன். படவாமுகாக்கினியாயிருந்து ஜலத்தைக் குடிக்கிறேன். அவைகளை மறுபடியும் உண்டாக்குகிறேன். என்னுடைய சக்தியினாலே என் முகத்திலிருந்து பிராமணர்களும், புஜத்திலிருந்து க்ஷத்திரியர்களும், தொடையிலிருந்து வைசியர்களும், பாதத்திலிருந்து சூத்திரர்களும் உத்பத்தியானார்கள். ரிக்கு, யஜுஸ், சாமம், அதர்வணம் என்கிற வேதங்கள் என்னிடத்திலே தோன்றி, என்னிடத்திலேயே ஒடுங்குகின்றன. தவம் பண்ணுகிறவர்களும், சாந்தமுள்ளவர்களும், முற்றும் அடங்கினவர்களும், ஞானத்தை விரும்புகிறவர்களும், காமம், கோபம், பகை இவைகளை ஒழித்தவர்களும், உலக ஆசையை முழுதும் ஒழித்தவர்களும், தர்மத்தைச் செய்கிறவர்களும், கர்வம் இல்லாதவர்களும், பூர்ணமான ஆத்மஞான முள்ளவர்களுமான பிராமணர்கள் எல்லாரும் ஆழ்ந்த பக்தியுடன் என்னை வணங்குகிறார்கள். ஸம்வர்த்தகம் என்கிற அக்கினியும், ஸம்வர்த்தகம் என்கிற காற்றும் நான்தான். வானத்தில் காணப்படுகிற நட்சத்திரங்கள் எல்லாம் என் தேகத்திலுள்ள மயிர்த் துவாரங்கள் என்று அறி. நாலு திசைகளும் சமுத்திரங்களும் எனக்கு வஸ்திரமும் படுக்கையும், இருப்பிடமுமாகும் என்று அறிந்துகொள். அவைகள் தேவ காரியத்துக்காக என்னால் பரப்பப்பட்டிருக்கிறது என்று தெரிந்து கொள். உத்தமனே! ஆசை, கோபம், மகிழ்ச்சி, பயம், அறியாமை இவைகள் எல்லாம் என்னுடைய பல வகையான சொரூபங்களாம் என்று அறிந்துகொள். சத்தியம், தர்மம், தவம், சமாதானம், ஜீவ இம்சை செய்யாமை, மற்றுமுள்ள சற்கருமங்களினாலே

மனிதர்கள் அடைவனவெல்லாம் என்னால் நியமிக்கப்பட்டவைகள் என்று உணர்ந்து கொள். என்னுடைய விதியால் நடத்தப்பட்டு, என் சரீரத்தில் உலாவுகிற மனிதர்கள் எல்லாரும் என்னாலேயே புத்தி மயங்குகிறார்கள். அவர்கள் தங்கள் இஷ்டப்படி நடக்க முடியாது, என்னால் நடத்தப்படுகிறார்கள்.

24—49. வேதங்களை யுணர்ந்தவர்களும், ஆத்மாவிலே திருப்தி யடைந்திருப்பவர்களும், கோப மில்லாதவர்களுமாகிய பிராமணர்கள் தவம் செய்து பெரிய பயனைப் பெறுவார்கள். துர் நடக்கை யுள்ளவர்களும், பொருளாசை யுள்ளவர்களும், இழிந்தவர்களும், அசுத்தமானவர்களும் அப்படிப்பட்ட பயனை அடைய மாட்டார்கள். புலனடக்க முள்ளவர்களே, அப்படிப்பட்ட பயனை அடைவார்களென்றும், மூடர்கள் அடைய மாட்டார்களென்றும், தவமே அப்படிப்பட்ட சித்தியை அளிப்பதென்றும் தெரிந்துகொள். எப்போது நீதியும் தர்மமும் குறைந்து, பாபமும் துாமார்க்கமும அதிகரிக்குமோ அப்போது நான் அவதாரம் பண்ணுவேன். பயங்கரமானவர்களும், துஷ்ட சித்தமுள்ளவர்களும் கொடியவர்களுமான தைத்தியர்கள் பூமியிற் பிறந்து, தேவர்களால் கூடச் சங்கரிக்கப்படாதவர்களா யிருக்கிற காலத்தில், நான் புண்ணிய குலத்தில் மனிதாவதார மெடுப்பேன். பாபிகளைச் சங்கரித்துத் தீமைகளை ஒழித்துச், சமாதானத்தை நிலை நிறுத்துவேன். என்னுடைய சொந்த மாயையாலே தேவர், கந்தர்வர், அரக்கர்களேயும் மற்றமுள்ள சராசரங்களையும் நான் சிருஷ்டிப்பேன். காலம் வந்த போது அவைகளை மீண்டும் சங்கரிப்பேன். தர்மத்தை பரிபாலிப்பதற்காக மனித சொரூபமெடுப்பேன். காலம் வந்தபோது அறியப்படாத சொரூபத்தையும் கொள்வேன். சத்திய யுகத்தில் (கிருதயுகம்) நான் வெண்மை நிறமுள்ளவனா யிருப்பேன். திரேதா யுகததில் மஞ்சள் நிறமாய் இருப்பேன். துவாபர யுகத்தில் செம்மை நிறமாயிருப்பேன். கலி யுகத்தில் கரிய நிறமுள்ளவனா யிருப்பேன். கலியுகத்தில் தர்மம் நாலில் ஒரு பாகந்தான் இருக்கும். அந்த யுக முடிவில் நான் மரண தேவதை வடிவங்கொண்டு எல்லாவற்றையும் சங்கரிப்பேன். மூன்று உலகங்களையும் சகல சராசரங்களுடன் அழித்து விடுவேன். எல்லா உலகங்களையும் மூன்று அடிகளால் மறைத்து விடுவேன். நான் உலகத்திற்கு ஆத்மா. சகல சுகங்களுக்கும் நான்தான் மூலம். சகல கர்வங்களையும் அடக்குகிறவன் நான்தான். நான் சர்வ வியாபகன், நான் அகண்டன், நான்தான் புலன்களுக்கு அதிபதி, நான் சர்வ வல்லமை யுள்ளவனை பிராமணோத்தமா! நான் கால சக்கரத்தை நடத்துகிறவன். உருவ மற்றவன். நான் எல்லாப் பொருள்களையும் சங்கரிக்கிறவன். சகலத்துக்கும் காரணமானவன். நான் எல்லாப் பிராணிகளையும் வியாபித்திருப்பேன. பிராமணா! என்னை ஒருவரும் அறிய மாட்டார்கள். நானே பக்தி ரூபமானவன். எல்லா உலகத்தாராலும் வணங்கப்படுகிறவன் நீ என் வயிற்றுக்குள் துன்பமடைந்தவைகளெல்லாம் உன்னுடைய நன்மைக்கு என்றே நினை. என் வயிற்றுக்குள் நீ பார்த்தவைக ளெல்லாம் சர்வ வியாபகனாகிய என் ஆக்ஞைக்கு உள்பட்டவைகள். சகல லோக பிதாமகனான பிரம தேவன் என் சரீரத்தில் பாதியாய்

உள்ளவன். நான் சங்கு, சக்கரம், கதை தரித்த நாராயணன். நாலு யுகங்களை விட ஆயிரம் மடங்கான காலம் நான் தூங்குவேன். அப்போது ஜீவாத்மாக்கள் எல்லாம் அறிவற்றிருக்கும். நான் அந்தக் கால மெல்லாம் இங்கே வசிப்பேன். பிராமணரே! நான் பெரியவனு யிருந்த போதிலும் பிரமதேவன் தூங்குகிற வரைக்கும், குழந்தை வடிவமாய் இங்கே யிருப்பேன். உனக்கு வரம் கொடுத்த பிரமா நான்தான். நான் உன்னிடத்தில் பிரியமா யிருக்கிறேன். பிரமாண்டமான வெள்ளத்தையும், சகல பிராணிகளும் அழிந்து போனதை பார்த்து நீ வருத்தப்பட்டாய். அதை நான் அறிவேன். அதற்காகத்தான் என் வயிற்றுக்குள் இருக்கிற சகல சராசரங்களையும் உனக்குக் காட்டினேன். அதைப் பார்த்து நீ அதிசய மடைந்து மயங்கினாய். அதனாலேதான் உன்னை சீக்கிரமாக வெளியில் கொண்டு வந்தேன். தேவர்களாலும் அசுரர்களாலும் அறியப்படாத பொருளைப் பற்றி உனக்குச் சொன்னேன். பிரமதேவன் விழித்துக் கொள்கிற போது நான் சகல பிராணிகளையும், ஆகாயம், பூமிகளையும், சந்திர சூரியர்களாகிய ஒளிகளையும் வாயு மண்டலத்தையும், தண்ணீரையும் சிருஷ்டிப்பேன் என்று சொன்னார்.

50—59. ஓ குழந்தாய்! இப்படிச் சொல்லிவிட்டு அந்த அற்புத தெய்வம் மறைந்து போய் விட்டது. இதற்குப் பின் பல வகையான ஜீவ சிருஷ்டியானதையும் கண்டேன். அரசனே! நரோத்தமனே! புண்ணியாத்மாக்களுக்குள் சிறந்தவனே! யுக முடிவு காலத்தில் இந்த அதிசயங்களெல்லாம் கண்டேன். முன் காலத்தில் நான் கண்ட அந்தத் தெய்வந்தான் இந்தக் கிருஷ்ணன். அவர் உங்களுக்கு உறவாக அவதரித்திருக்கிறார். குழந்தாய்! ஓ குந்தி புத்திரா! அவர் முன் காலத்தில் எனக்குக் கொடுத்திருக்கிற வரத்தினால் எனக்கு ஒரு போதும் மறதி யுண்டாவதே யில்லை, என் ஆயுசும் நீடித்திருக்கிறது. மரணம் கூட எனக்கு அடங்கி யிருக்கிறது. புராதன தெய்வமானவரும், மனதுக் கெட்டாதவரும், ஹரி என்னும் திருநாமத்தை யுடையவரும், மஹாபாகுவான வீரருமான அந்தக் கடவுள் இப்போது விருஷ்ணி வம்சத்தில் பிறந்து கிருஷ்ணன் என்கிற திருநாமம் கொண்டு பூலோகத்திலே விளையாடுகிறார். அவனே தாதாவும் விதாதாவும்; அவனே சங்காரகர்த்தா; நித்தியர், மார்பில் ஸ்ரீவத்ஸமறுவுடையவர்; கோவிந்தர்; எல்லாவற்றுக்கும் இறைவர்; மேலானவற்றுக்கு எல்லாம் மேலானவர். விருஷ்ணி குலத் தலைவரான கண்ணனைப் பார்த்து, இந்தப் பீதாம்பரதராகிய கண்ணனைக் கண்ட வுடனே பூர்வத்தில் கண்ட காட்சி என் ஞாபகத்தில் வருகிறது. மது வம்சத்தவரான இந்தக் கண்ணனே சகல பிராணிகளுக்கும் மாதாவும் பிதாவும். கௌரவ சிரேஷ்டனான யுதிஷ்டிரா! இரட்சகராகிய இவரைச் சரணம் அடை. இதைக் கேட்ட வுடனே தர்மராஜா தம்பிகளுடனும் திரௌபதி யுடனும் ஜனார்த்தனன் பாதத்தில் வணங்கினார். கிருஷ்ணனும் இனிய வசனங்களால் அவர்களைத் தேற்றினார்.

## 190-வது அத்தியாயம்

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—6. குந்தி குமாரராகிய யுதிஷ்டிரர், மார்க்கண்டேய மஹரிஷியினிடத்தில் வருங்கால சம்பவங்களைக் கேட்க விரும்பி, அவரை நோக்கிப் பிருகுவம்சோத்பவரே! பேசுகிறதில் வல்லவரே! யுக முடிவு காலத்தில் உண்டாகும் உலக நாசத்தையும், மறு சிருஷ்டியையும் பற்றி நீர் கூறியது மிகவும் ஆச்சரியமாக இருந்தது. கலி யுகத்தில் என்னென்ன சம்பவிக்கும், தர்மம் எப்போது அழியும், என்ன மிகுந்திருக்கும் என்பவைகளை அறிய ஆவலா யிருக்கிறேன். அப்போது மனிதர்களுடைய சக்தி எவ்வளவா யிருக்கும், அவர்களுக்கு உணவு யாது, அவர்களுக்கு மகிழ்ச்சி எதில். அவர்களுடைய ஆயுசுகாலம் எவ்வளவு, அவர்களுடைய உடை எவ்விதமானது, கால அளவு எவ்வளவு அப்புறம் கிருத யுகம் எப்போது பிறக்கும், மஹா முனிவரே! இவைகளை எல்லாம் எனக்குச் சொல்லவேண்டும். நீங்கள் சொல்பவைகள் எல்லாம் விநோதமாயிருக்கின்றன. இதைக் கேட்ட முனிவர் கிருஷ்ணனையும் பாண்டவர்களையும் மகிழ்விக்கக் கருதிச் சொல்லத் தொடங்கினார்.

7—22. யுதிஷ்டிர மஹா ராஜனே! தேவதேவனுடைய கிருபையினாலே நான் கேட்டிருப்பவைகளையும், அறிந்திருக்கிறவைகளையும் சொல்லுகிறேன் கேள். அரசனே! நான் சொன்னபடி பாபம் நிறைந்த காலம் எப்போது வரும் என்பதைச் சொல்லுகிறேன். கிருத யுகத்தில் யாவும் வஞ்சனை யற்றிருந்தன. பொறாமையும் லோபமும் கிடை யாது. பசு வடிவமான தர்ம தேவதை நாலு பாதங்களால் நடந்தன். திரேதா யுகத்தில் பாபம் தோன்றித் தரும தேவதையின் ஒரு காலைக் கெடுத்து விட்டது. ஆகையால் அப்போது மூன்று பாதங்களால் நடந்தது. துவாபர யுகத்தில் பாபம் அரைப் பங்கும் புண்ணியம் அரைப் பங்குமா யிருந்தது. இருண்ட கலியுகத்தில் பாவம் தர்மத்தில் மூன்று பங்கை விழுங்கி விடும். ஆகையால் கால் பங்கு தர்மந்தான் மனிதரிடத்தில் நிலைக்கும். யுதிஷ்டிரா! மனிதருடைய ஆயுசு காலம், சக்தி, அறிவு சரீர பலம் இவைகள் யுகத்துக்கு யுகம் குறையும். பிராமணர், க்ஷத்திரியர் வைசியர், சூத்திரர்களாகிய இவர்கள் வஞ்சனையாகவே தருமம் செய்வார்கள். மனிதர்கள் தம்மைச் சேர்ந்தவர்களை வஞ்சகமான தர்ம வலைக்குள் சிக்குப் படுத்துவார்கள். படித்தவர்களைப் போல நடிப்பார்கள். சத்தியத்தை யிழந்து விடுகிறபடியால் அவர்களுக்கு வாணாள் குறையும். ஆயுசு குறைகிறபடியால் அதிகமான அறிவை அடையச் சக்தி யற்றுப் போகிறார்கள். கல்வி அறிவு குறைந்திருக்கிறபடியால் அவர்களுக்கு ஞானமும் குறைவு. அதனால் பொறாமையும் லோபமும் அதிகமாகிறது. அப்போது மனிதர்களுக்குப் பொருளாசை, கோபம், அறியாமை, காமம் முதலியன உண்டாகின்றன. இதனால் ஒருவரை யொருவர் பகைத்துக் கொலைத் தொழிலைச் செய்வார்கள். இப்படித்

தர்மம் குறைவுபடும். தவமும் சத்தியமும் வைசியரை அடையும். பிராமணரும், க்ஷத்திரியரும் சூத்திரருக்குச் சமானமா யிருப்பார்கள். தாழ்ந்த வருணத்தார் உயர் வருணத்தவராகக் கருதப்படுவார்கள். உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்களாவார்கள். யுக முடிவு காலத்தில் உலகத்தின் நிலைமை இப்படி இருக்கும். சணலால் நெய்த வஸ்திரம் மேன்மையுள்ளதாகக் கருதப்படும். யவைதானியமே சிறந்த உணவாகக் கொள்ளப்படும் யுக முடிவு காலத்தில் புருஷர்கள் ஸ்திரீகளையே தங்களுடைய சிநேகிதர்களாக நினைப்பார்கள். ஆட்டு மாம்சமும் ஆட்டுப் பாலும் அவர்களுக்கு ஆகாரமாகும். ஏனென்றால் அப்போது பசுக்கள் இல்லாமல் போய் விடும். அப்போது செய்யப்படுகிற தர்மமெல்லாம் வஞ்சனையாகவே இருக்கும். யுக முடிவு காலத்தில் ஒருவரை யொருவர் பகைத்து. ஒருவர் உயிரை ஒருவர் அழிக்க முயலுவார்கள். அவர்கள் நாஸ்திகர்களாயும் இருப்பார்கள். நதியின் கரைகளைக் கூடப் பாறைகளால் வெட்டி விதை விதைப்பார்கள். அவ்விடம் கூட வரட்டு நிலமாக இருந்து பலன் தாராது, தேவபித்ரு கர்மங்களில் விருப்பமுள்ளவர்கள் கூட லோபத்தனத்தால் அந்நியர் சொத்தைக், கவர்ந்து கொள்வார்கள் புத்திரனுக்குச் சொந்தமானதைப் பிதா அனுபவிப்பான். பிதாவுக்குச் சொந்தமானதைப் புத்திரன் அனுபவிப்பான் சாஸ்திரங்களால் விலக்கப்பட்டவைகள் எல்லாம் மனிதர்களால் அனுபவிக்கப்படும். பிராமணர்கள் வேதத்தை நிந்திப்பார்கள். அவர்கள் நோன்புகளை அனுஷ்டிக்கமாட்டார்கள். அவர்கள் அறிவு தர்க்க யுக்திகளால் மறைபட்டிருக்கும். யாகங்களையும் ஹோமங்களையும் செய்யமாட்டார்கள், தர்க்கசாஸ்திரங்களால் மயங்கிக்கிடக்கும் அவர்களுடைய புத்தி யீனமும் தாழ்வுமான விஷயங்களையே நாடும். மனிதர்கள் தாழ்ந்த நிலங்களை உழுவார்கள். ஒரு வயதுள்ள இளங்கன்றுகளையும் கட்டி உழுவார்கள். அவைகளின் மேல் சுமைகளை யேற்றுவார்கள். புத்திரன் பிதாவைக் கொலை செய்வான். பிதா தன் புத்ரனைக் கொலைசெய்வான். அதனால் அவர்களுக்கு அபகீர்த்தி உண்டாகாது. இப்படிப்பட்ட செய்கைளால் மகிழ்ச்சி யடைவார்கள், உலகம் முழுவதும் மிலேச்சாசாரமும் மிலேச்சருடைய அபிப்பிராயங்களும் பரவி நிறைந்திருக்கும் மதாசாரங்களும் யாகங்களும் விலக்கப்படும் எல்லா விடத்திலும் மகிழ்ச்சி யிராது. உற்சவக் கொண்டாட்டங்களெல்லாம் ஒழிந்து போகும். மனிதர்கள் ஆதரவற்ற ஜனங்களினுடைய சொத்துக்களை அபகரித்துக் கொள்வாகள். சிநேகிதர்கள் இல்லாமல் இருக்கிறவர்கள் உடைய சொத்துக்களையும், விதவைகளின் சொத்துக்களையும் அபகரித்துக் கொள்வார்கள். மனிதர்கள் அற்ப ஊக்கமும் பலமும் உடையவர்களாய் அறிவற்றவர்களாய்ப் பொருளாசையும் அறிவீனமும் உள்ளவர்களாய்ப் பாவச் செய்கை யுடையவர்களாய்த் துஷ்டர்களால் கொடுக்கப்படுகிற தானங்களை இகழ்ச்சியான வசனங்களோடு ஏற்றுக்கொள்வார்கள்.

33—44. குந்திபுத்திரனே! இராஜாக்கள் பாபச் சிந்தையுடன் அறிவில்லாதவர்களா யிருந்தும் அறிவுள்ளவர்களைப் போல நடித்து இறுமாந்து, ஒருவரை யொருவர் கொல்லும்படி சண்டை யிடுவார்கள். யுக முடிவில் இராஜாக்

களே லோக கண்டகர்களாவார்கள். நிறைந்த பொருளாசையும், கருவமும், மயக்க அறிவு முடையவர்களாய்ப் பிரஜைகளைக் காப்பற்றச்சக்தியும் பிரியமும் இல்லாதவர்களாய்க் குடிகளைத் தண்டிப்பதிலேயே விருப்பமுடையவர்களா யிருப்பார்கள். அதனாலே மகிழ்ச்சி யடைவார்கள். நல்லவர்களும் யோக்கியர்களுமா யிருக்கிறவர்களை அடிக்கடி எதிர்த்து வருத்தி, அவர்கள் துன்பத்தினால் கதறி அழுதாலும் இரக்க மில்லாதவர்களாய், அவர்களுடைய மனைவியையும் செல்வத்தையும் அரசர்கள் அபகரிப்பார்கள். அந்தக் காலத்தில் ஒருவரும் பெண்களை விவாகம்செய்து தரும்படிகேட்கமாட்டார்கள். பெண்களை விவாகம் செய்துகொடுக்கவும் மாட்டார்கள். பெண்கள் தாமாகவே கணவர்களைத் தேடிக்கொள்வார்கள். இராஜாக்கள் அஞ்ஞானத்தினால் புத்தி மழுங்கித், தாங்கள் அடைந்திருக்கிற பொருளினாலே திருப்தி அடையாமல், குடிகளின் சொத்துக்களை எவ்வகையிலும் அபகரிப்பார்கள். நிச்சயமாகவே உலகம் முழுமையும் மிலேச்சத்தன்மையாலே நிறைந்து வாடும். அந்தக்கலியுகம் வந்தபோது வலக்கை யிடக்கையை மோசஞ்செய்யும். இடக்கை வலக்கையை மோசம் பண்ணும். மனிதர்கள் படித்தறிந்தவர்களைப் போல நடந்து உண்மையைக் கெடுப்பார்கள். முதியவர்கள் யௌவனர்களைப் போலப் பேதைமை யுள்ளவர்களா யிருப்பார்கள். யௌவன புருஷர்கள் கிழவர்களைப் போலப் புத்தி மழுக்கமடைவார்கள். கோழை மனமுள்ளவன் தைரிய முள்ளவனைப் போலப் புகழ் பெறுவான். தைரியமுள்ளவன் பேதைகளைப் போல மனச்சோர்வுள்ளவனாய்க் கலங்குவான். மனிதர்கள் ஒருவரை யொருவர் நம்பமாட்டார்கள். பொருளாசையாலும் அறிவீனத்தினாலும் உலகம் முழுவதும்ஒரேவிதமான உணவை உண்ணும். பாபம் விருத்தியாகும். புண்ணியம் மழுங்கிப் போகும். ஜனங்களை ஆளுகிறவனே! பிராமணர், க்ஷத்திரியர், வைசியர்கள் இல்லாமற் போய் விடுவார்கள். அந்த ஜாதிகளின் அடையாளமே யில்லாமற் போம். மனிதர்கள் எல்லாரும் ஒரே ஜாதியாய் விடுவார்கள். பிதாக்கள் தமது புத்திரர்களை மன்னிக்க மாட்டார்கள். புத்திரர்களும் பிதாக்களை மன்னிக்கமாட்டார்கள். இந்தக் காலத்தில் மனைவிமார்கள் தங்கள் கணவர்களுக்கு வணங்கிப் பணிவிடை செய்யமாட்டார்கள். இந்தக் காலத்தில் ஜனங்கள், விசேஷமாய் வார்க் கோதுமையும், கோதுமையும் ஆகாரமாய் வழங்குகிற நாட்டைத் தேடி அடைவார்கள்.

45--59. யுதிஷ்டிர மஹா ராஜனே! அக்காலத்தில் ஸ்திரீகளும் புருஷர்களும் சுயேச்சையாய் நடப்பார்கள். ஒருவர் செய்வதை மற்றொருவர் செய்ய மாட்டார்கள். உலகம் முழுமையும் மிலேச்சாசாரமா யிருக்கும். மனிதர்கள் சிராத்தாதிக் கிரியைகளால் தேவர்களை ஆராதிக்க மாட்டார்கள். ஒருவர் மற்றொருவருடைய வார்த்தையைக் கேட்க மாட்டார்கள். ஒருவர் மற்றொருவருக்குக் குருவாகக் கருதப்பட மாட்டார்கள். உலகம் முழுமையும் அஞ்ஞானத்தால் மூடப்பட்டிருக்கும். அப்போது மனிதர்களுடைய ஆயுசு நாள் பதினாறு வருஷமாகக் குறைந்திருக்கும். மனிதர்கள் இந்த வயதுக்குள்

மரிப்பார்கள். பெண்கள் ஐந்து ஆறு வயதில் புத்திரர்களைப் பெறுவார்கள். புருஷர்கள் ஏழு, எட்டு வயதில் புத்திரர்களுக்குப் பிதாவாக இருப்பார்கள். அரசனே! மன்னவர்களுக்குள் சிறந்தவனே! இந்தக் காலத்தில் ஸ்திரீகள் தங்களுடைய கணவர்களால் மாத்திரம் திருப்தி அடைய மாட்டார்கள். புருஷர்களும் தங்களுடைய மனைவிகளால் மாத்திரம் திருப்தி யடைய மாட்டார்கள். அப்போது மனிதர்களுடைய திரவியம் சொற்பமா யிருக்கும். மனிதர்கள் பொய்யாக மதச் சின்னங்களை அணிவார்கள். உலகம் பொருளாசையாலும் எரிச்சலாலும் நிறைந்திருக்கும். ஒருவனும் பிறனுக்குக் கொடுக்க மாட்டான், உலக மெங்கும் பஞ்சம் நிறைந்திருக்கும். சாலைகளெல்லாம் காமுகர்களாலும் விபசாரப் பெண்களாலும் நிறைந்திருக்கும். பெண்கள் தங்கள் கணவனைப் பகைப்பார்கள். மனிதர்கள் எல்லாவற்றையும் புசிப்பார்கள். எல்லாச் செய்கைகளிலும் சுயேச்சையா யிருப்பார்கள். மனிதர்கள் பொருளாசையால் கொள்ளல் விற்றலிலும் ஒருவரை யொருவர் மோசம் பண்ணுவார்கள். அப்போது முறைமை தெரியாமல் கருமங்களைச் செய்வார்கள். தாங்கள் விரும்பினபடி நடப்பார்கள். துர்நடக்கை யுடையவர்களாய் ஒருவரை ஒருவர் நிந்திப்பார்கள். இரக்க மில்லாமல் மரங்களையும் சோலைகளையும் அழிப்பார்கள். தங்களுடைய ஜீவனத்தைக் குறித்துக் கவலை அடைந்திருப்பார்கள். பொறாமையினாலே மனிதர்கள் பிராமணர்களைக் கொன்று அவர்களுடைய சொத்துக்களை அபகரித்து அனுபவிப்பார்கள். பிராமணர்கள் சூத்திரர்களால் துன்பம் அடைந்து ஐயோ என்று அழுவார்கள். உலகம் முழுவதிலும் அலைந்தாலும் அவர்களை ஒருவரும் காப்பாற்ற மாட்டார்கள்.

60—67. மனிதர்கள் எப்போது ஒருவரை யொருவர் கொல்லுகிறார்களோ, எப்போது அவர்கள் துஷ்டர்களாகிறார்களோ, எப்போது இதர பிராணிகளை வதைக்கிறார்களோ அப்போது கலியுகம் வந்து விட்டதென்று கருத வேண்டும். கௌரவ வம்சத்தை விளக்குகிறவனே! அரசனே! பிராமணர்களுடைய சொத்துக்களை யெல்லாம் திருடர்கள் கொள்ளை யிடுவார்கள். அவர்கள் பயந்து காக்கைகளைப்போலக் கதறிக்கொண்டு ஆறுகளையும், தகாத இடங்களையும் தேடி ஓடுவார்கள். அந்தப் பயங்கரமான காலத்தில் அரசர்கள் பிராமணர்களுக்குக் கடினமான வேலை யிடுவார்கள். அவர்கள் தகாத வேலைகளையும் செய்வார்கள். சூத்திரர்களுக்கு வேலைக் காரர்கள் ஆவார்கள். சூத்திரர்கள் மத உபதேசம் செய்வார்கள். பிராமணர்கள் அதைக் கேட்டு அவர்கள் சொன்னபடி நடப்பார்கள். தாழ்ந்தவர்கள் உயர்வார்கள். எல்லாம் மாறுதலை அடையும். மனிதர்கள் தேவாராதனையை விட்டு எலும்பு முதலானவற்றை வணங்குவார்கள். அப்போது சூத்திரர்கள் பிராமணர்களுக்குப் பணிவிடை செய்யமாட்டார்கள். பிராமணர்களுடைய ஆச்சிரமங்களிலும், பள்ளிக்கூடங்களிலும், சர்வ கலாசாலைகளிலும், பரிசுத்த தேவாலயங்களிலும், புண்ணிய ஸ்தலங்களிலும் புண்ணிய தீர்த்தங்களிலும், கல்லறைகள் கட்டப்பட்டு அவ

லட்சணமாய் இருக்கும். அவற்றில் பிரேதங்கள் அடக்கம் செய்யப்படும். தேவாலயங்கள் இருப்பதில்லை. இவைகளெல்லாம் கலியுகத்தில்நடக்கும்.

68—82. யுதிஷ்டிரா, இவைகள் எல்லாம் கலியுகத்துக்கு அடையாள மென்று தெரிந்து கொள். எப்பொழுது மனிதர்கள் கொடியவர்களாயும், பாபிகளாயும், மாம்ச பட்சணிகளாயும், குடித்து வெறிப்பவர்களாயும், இருக்கிறார்களோ அப்போது கலி பிறந்ததென்று அறிய வேண்டும். அரசனே! எப்போது ஒரு புஷ்பத்தில் புஷ்பம் உண்டாகிறதோ, காயில் காய் உண்டாகிறதோ அப்போது கலி வந்தது. அந்த யுகத்தில் சரியான்காலமழை பொழியாது. கிரியைகள் சரியாய் முறைப்படி செய்யப் படமாட்டா. சூத்திரர்கள் பிராமணரிடத்தில் சண்டை யிடுவார்கள். சீக்கிரத்தில் மிலேச்சர்கள் எங்கும் நிறைந்து விடுவார்கள். பிராமணர்கள் கொடிய வரிளுக்குப் பயந்து திக்குகடோறும் சிதறி ஓடுவார்கள். மனிதர்களுக்குள் வேற்றுமை யிராது. மனிதர்கள் காட்டுக்குப் போய்க் காய் கனி கிழங்குகளைத் தின்று ஜீவிப்பார்கள். இப்படிக் கஷ்டப்படுகிற காலத்தில் ஜனங்களிடத்தில் சரியான நடக்கை யிராது. சிஷ்யன் குருவின் உபதேசத்தை மதிக்கமாட்டான். குருவை இம்சிக்கவும் தொடங்குவார்கள். குருமார்கள் தரித்திரர்களா யிருப்பதினால் மனிதர்களால் அவமதிக்கப் படுவார்கள். சினேகிதர்களும், சுற்றத்தார்களும் திரவியாபேட்சைபற்றியே நேசமாயிருப்பார்கள், அக்காலத்தில் ஒவ்வொருவனும் தரித்திர னாயிருப்பான். திக்குகள் எல்லாம் எரிந்து கொண்டிருக்கும். நட்சத்திரங்கள் முதலியன ஒளியற்றுப்போம். கிரகங்களும் கிரகசம்பந்தங்களும் கொடுமையாயிருக்கும். காற்றும் மயக்கமாய்வீசும். அநேக விண்கொள்ளிகள் தோன்றிப் பிரகாசிப்பதினால் பயமுண்டாயிருக்கும். சூரியன் வேறு ஆறு சூரியர்களுடன் சேர்ந்து உதிப்பான். எவ்விடத்திலும் பெரிய சத்தமுண்டாயிருக்கும். எங்கே பார்த்தாலும் பெரு நெருப்பாயிருக்கும். சூரியன் உதித்து அஸ்தமிக்கிறவரைக்கும் இராகுவால் பீடிக்கப் படுவான். அக்காலத்தில் தானியங்கள் நல்ல பலன் தாரா. பெண்கள் எப்போதும் கொடுமையாகப் பேசுவார்கள். அவர்கள் இரக்கமில்லாதவர்களாய் எப்போதும் அழுது கொண்டு இருப்பார்கள். தங்கள் கணவனுக்கு அடங்கமாட்டார்கள். பிள்ளை தாய்தந்தையரைக் கொல்வான். பெண்கள் சுயாதிகாரிகளாய்க் கிளம்பிக் கணவனையும் புத்திரர்களையும் கொல்வார்கள். அப்போது இராகு அகாலத்தில் சூரியனை விழுங்குவான்.

83—97. அந்தக்காலம் வருகிறபோது திசைகளெல்லாம் நெருப்பு பற்றி யெரியும். பிரயாணிகளுக்கு ஆகாரம் அகப்படாது. யாசித்தாலும் குடிக்கத் தண்ணீரும் தங்க நிழலும் அகப்படமாட்டா. பாதைகளின் ஓரத்தில் படுப்பார்கள். காக்கைகள், சர்ப்பங்கள், கழுகுகள், பருந்துகள், முதலியவைகளும், மற்றுமுள்ள பிராணிகளும் மாறுபாடாகக் கத்திக்கொண்டிருக்கும். அப்போது மனிதர்கள் சினேகிதர்களையும் சுற்றத்தார்களையும் விட்டுவிடுவார்

கள். அந்தக்காலத்தில் மனிதர்கள் தங்களுடைய வீடுகள், நகரங்கள், நாடுகள், கிராமங்கள், இவைகளை விட்டுப் புதிதான இடங்களைத் தேடுவார்கள். அப்பா! குழந்தாய்! என்கிற கொடுங்குரல் எங்கும் கேட்கப்படும். மனிதர்கள் துன்பத்தையுடையவர்களாய்ப் பல தேசங்களிலும் அலைந்து திரிவார்கள். இப்படிப்பட்ட பயங்கரமான காலம் நீங்கிப் போனபின் பிராமணர்களை முன்னிட்ட சகல பிராணிகளும், மறுபடியும் உண்டாகும். தெய்வச் செயலால் எல்லாம் சுபமாய் உண்டாகும். சூரியன், சந்திரன், பூசநட்சத்திரத்துடன் கூடின பிருகஸ்பதி எல்லாம் கிரமமாய்த் தோன்றும். மேகம் இடைவிடாமல் மழை பொழியும். நட்சத்திரங்களும் கிரகங்களும் சுபமாயிருக்கும். கிரகங்கள் மண்டலத்தில் கிரமமாய்ச் சுழல்வதினால் எல்லாம் மிகவும் சுபமாயிருக்கும். எவ்விடத்திலும் ஏராளமான செல்வமும், சமாதானமும் நிறைந்து க்ஷேமமாயிருக்கும். காலம் வேறுபட்ட அப்போது கல்கி என்கிற ஒரு பிராமணன் பிறப்பான். அவன் மஹா கீர்த்தியும், ஞானமும், சக்தியும் உடையவனாயிருப்பான். ஸம்பலா என்கிற கிராமத்தில் பாகயவந்தனான ஒரு பிராமணனுடைய குடும்பத்தில் பிறப்பான். அவன் நினைத்தமாத்திரத்தில் வாகனங்கள், ஆயுதங்கள், போர் வீரர்கள், அஸ்திரங்கள் கவசங்கள் எல்லாம் வந்து அவனுடைய கட்டளையில் நிற்கும். அவன் உலகத்தை ஆளுகிற அரசனாய், தர்ம பலத்தினாலே ஜயங்கொண்டு பூமியை ஆள்வான். பிரஜைகள் நிறைந்திருக்கிற உலகத்துக்குச் சட்டங்களையும் சமாதானத்தையும் உண்டாக்குவான். மகிமையும் வலிமையுமுள்ள அந்தப்பிராமணன் எல்லாவற்றையும் அழித்து விடுவான். அவனே எல்லாவற்றையும் சங்கரிக்கிறவன். அவனே புதிய யுகத்தை உண்டாக்குகிறவன். அவன் பிராமணர்களால் சூழப்பட்டு மிலேச்சர்கள் எல்லாரையும் கண்ட இடத்தில் சங்கரிப்பான்.

---

## 191-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—6. கல்கி எல்லாத் திருடர்களையும் சங்கரித்துவிட்டு, ஒரு பெரிய அசுவமேத யாகம் செய்து, அந்த யாகத்தில் பூமியைப் பிராமணர்களுக்குக் கொடுத்துவிடுவான். பிரமாவினுடைய சரியான கட்டளைகளை நிறைவேற்றிப் புகழத்தக்க நற்கருமங்களையுடைய அந்தக் கல்கி இன்பமான வனத்துக்குப் போய்விடுவான். உலகத்து ஜனங்கள் அவனுடைய ஆசாரங்களை அனுஷ்டிப்பார்கள். பிராமணர்களிலே திருடர்களும், கொள்ளைக்காரர்களும், நிர்மூலமானபின் எங்கும் சுபமாயிருக்கும். உலகத்தைக் கீழ்ப்படுத்திக் கொண்டபின், ஈட்டி சூலம் முதலிய ஆயுதங்களைவிட்டு பிராமணர்களுக்கு மரியாதை செய்து கொண்டிருப்பான். பிராமணர்களால் வணங்கப்பட்டுப் பூமியில் சஞ்சரிப்பான். கல்கி திருடர்களைச் சங்கரிக்கிறபோது அப்பா! அம்மா! குழந்தாய்! என்று கதறுகிற அழுகை எங்கும் நிறைந்திருக்கும்.

7—18. பாரதனே கிருதயுகந் தோற்றுகிறபோது இப்படிப் பாவம் ஒழிக்கப்படும். மனிதர்களிடத்தில் தர்மம் பெருகும் மனிதர்கள் மதகிருத்தியங்கள் சரியாய் நடத்தப்படும். பயிரிடப்பட்ட தோட்டங்களும், யாக சாலைகளும், பெரியதடாகங்களும், வேத பாடசாலைகளும், ஸம்ஸ்கிருதபாடசாலைகளும், குளங்களும், கோவில்களும், எவ்விடத்திலும் விளங்கும் பலவகையான யாகங்கள் தொடங்கிச் செய்யப்படும் பிராமணர்கள் யோக்கியர்களும் நல்லவர்களுமாயிருப்பார்கள். தவம் செய்து ரிஷிகளாவார்கள். துஷ்டர்களால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்த ஆசிரமங்களில் சத்திய சந்தர்களான ரிஷிகள் வசிப்பார்கள். ஜனங்கள் யோக்கியர்களும் சத்தியவந்தர்களுமாயிருப்பார்கள் பூமியில்விதைக்கப்பட்ட விதைகள் நன்றாக வளரும். அரசர்க்கரசனே! அந்தந்தப் பருவங்களில் அதற்குரிய தானியங்கள் விருத்தியாகும். மனிதர்கள் தர்மங்களையும், நோன்புகளையும், மதாசார கருமங்களையும் பக்தியுடன் ஆசரிப்பார்கள். பிராமணர்கள் பக்தியுடன் தியானங்களையும் யாகங்களையும் செய்து, தர்மாத்மாக்களாயும், நற்குணமுடையவர்களாயு மிருப்பார்கள் அரசர்கள் தர்மமாய் உலக பரிபாலனம் பண்ணுவார்கள். கிருத யுகத்தில் வைசியர்கள் வர்த்தகத்தில் பிரியமாயிருப்பார்கள். பிராமணர்கள் தங்களுடைய ஆறு வகைத் தொழிலில் தவறாமல் நடப்பார்கள். க்ஷத்திரியர்கள் சௌரியமுள்ளவர்களா யிருப்பார்கள். சூத்திரர்கள் மூவருணத்தாருக்கும் பணிவிடை செய்வார்கள். கிருத யுக, திரேதாயுக, துவாபர யுகங்களில் இப்படியாக இருக்கும். பாண்டு புத்திரனே! நான் எல்லாவற்றையும் உனக்குச் சொல்லிவிட்டேன். நான் அறிந்திருக்கிறபடி யுகதருமங்களையெல்லாம் உள்ளபடி சொல்லிவிட்டேன். நான் இப்பொழுது சொன்ன செல்கால வருங்கால சம்பவங்களெல்லாம் ரிஷிகளால் கொண்டாடப்படுகிற வாயு புராணத்தில் வாயுவால் சொல்லப்பட்டிருக்கின்றன. நான் அழிவற்றவனா யிருக்கிறபடியால் அநேகம் தடவைகளில் உலகத்தின் நடக்கையைப் பார்த்திருக்கிறேன். நான் நேரில் பார்த்து அறிந்தவைகளையே உனக்குச் சொன்னேன். உன்னுடைய சந்தேகங்கள் தீரும்படி இன்னும் சில வசனங்கள் சொல்கிறேன். உன் சகோதரர்களுடன் கவனமாய்க் கேள்.

19—22. புண்ணியசாலிகளில் சிறந்தவனே! நீ உன் ஆத்மாவை தர்மத்திலேயே நிறுத்தி யிருக்கவேண்டும். ஏனென்றால் தர்ம சிந்தையுள்ளவன் இகலோகம் பரலோக மிரண்டிலும் வாழ்வைப் பெறுகிறான். பாவமற்றவனே! இப்பொழுது நான் உனக்குச் சொல்லுற சில சுபகரமான வசனங்களைக் கேள். நீ பிராமணர்களை எப்போதும் நிந்தியாதே பிராமணனுக்குக் கோபம் உண்டானால் தன் தபோ மகிமையால் மூவுலகங்களையும் நாசம் பண்ணி விடக்கூடும் என்றார். மார்க்கண்டேய முனிவர் கூறியவசனங்களைக்கேட்ட கௌரவ சிரேஷ்டராகிய யுதிஷ்டிரர் புத்திசாலித்தனமாய்ச் சொல்லுகிறார். மஹாரிஷியே! நான் பிரஜாபாலனம் பண்ணுகிறதற்கு எந்த வகையான செய்கையை அனுசரிக்கவேண்டும்? என் குல தர்மம் தவறாமல் இருப்பதற்கு நான் எப்படி

நடக்கவேண்டும்? என்று கேட்டார். அதற்கு மார்க்கண்டேயர் மறுமொழி கூறுகிறார்.

23—31. எல்லாப் பிராணிகளிடத்திலும் பட்சமாயிரு. அவற்றின் நன்மைகளிலே கருத்தாயிரு. ஒன்றையாவது பகைக்காமல் எல்லாப் பிராணிகளிடத்திலும் பிரியமாயிரு. சத்திய முடையவனாயிரு. புலன்களை அடக்கு. உன் குடிகளைக் காப்பதில் ஸ்திரமாயிரு. தர்மத்தைச் செய். பாவத்தை ஒழி. தேவர்களையும் பிதிர்க்களையும் வணங்கு. அறியாமையால் தவறு செய்துவிட்டால் தர்மம் செய்வதால் அதை விலக்கிக் கொள். கருவத்தை விட்டொழித்து எப்போதும் வணக்கமுள்ளவனாயிரு. உலகம் முழுவதையும் ஜயித்துச் சுகமாயும் சந்தோஷமாயுமிரு. இதுதான் தர்ம மார்க்கத்துக்குரிய நடக்கை. இதுதான் தர்மமாகக் கருதப்படுகிறது. முன்னும் கருதப்பட்டது. ஆகையால் குழந்தாய்! நீ அடைந்திருக்கிற இந்த ஸ்திதியைப் பற்றித் துக்கப் படாதே. சென்ற காலத்திலும் எதிர்காலத்திலும் உன்னால் அறியப்படாதது ஒன்றுமில்லை. குழந்தாய்! கஷ்டகாலம் வந்தபோது அறிவுள்ளவர்கள் துக்கப்படுகிறதில்லை மஹாபாகுவான வீரனே! காலமானது தேவர்களுக்குக் கூடப் பெரியதாயிருக்கிறது. குழந்தாய்! காலம் எல்லாப் பிராணிகளையும் வருத்துகிறது. மாசற்றவனே! நான் சொன்ன விஷயங்களில் சந்தேகப்படாதே. உன் மனதில் சந்தேகம் உண்டானால் உன் தர்மம் கெடும். பாரதனே! நீ புகழ்பெற்ற குருவம்சத்தில் பிறந்திருக்கிறாய். ஆகையால் நான் சொன்னவைகளை மனமொழி மெய்களால் தவறில்லாமல் நடக்கவேண்டுமென்று மார்க்கண்டேயர் சொன்னார்.

32—35. அதைக்கேட்ட யுதிஷ்டிரர் பிராமணோத்தமரே! நீர் எனக்குச் சொன்ன வசனங்கள் கேட்கிறதற்கு இனிமையாயிருக்கின்றன. ஆண்டவரே! உமது கட்டளைப்படி தவறாமல் அவைகளை அனுஷ்டிப்பேன். பிராமணோத்தமரே! எனக்குப் பொருளாசை, காமம், பயம், கர்வம் என்பன இல்லை. ஆகையால் நீர் சொன்னபடியே நடப்பேன் என்றார். மார்க்கண்டேயருடைய வசனங்களைக்கேட்ட பாண்டவர்களும், சாரங்கபாணியான கண்ணனும், பிராமணர்களும், மற்றுமுள்ளவர்களும், மிரம்பச் சந்தோஷமானார்கள். மார்க்கண்டேயர் கூறிய புராதனமான சரித்திரங்களைக் கேட்டு எல்லாரும் மகிழ்ச்சியடைந்தார்கள்.

---

## 192-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—2. ஜனமேஜயர், வைசம்பாயனரை நோக்கி முனிவரே! மார்க்கண்டேயமுனிவர் பாண்டவர்களுக்குச்சொன்ன பிராமணருடைய மகிமைகளை நீர்

எனக்குச் சொல்ல வேண்டும் என்றார். வைசம்பாயனர்,பாண்டவர்கள் மார்க்கண்டேயரை நோக்கி இன்னமும் எங்களுக்குக்குப் பிராமணருடைய மகிமைகளைச் சொல்ல வேண்டுமென்று கேட்க, மார்க்கண்டேயர் பூர்வ காலத்துப் பிராமணர்களுடைய சரித்திரங்களைக் கேளுங்கள் என்று சொல்லுகிறார்.

3—14. அயோத்தியில், இட்சுவாகு வம்சத்தில் பிறந்த பரிக்ஷித்து என்ற அரசன் வேட்டையாடப் போனான். ஒரு மானைக் கண்டு அதை அடிக்கும்படி தன் சேனைகளையும் நேசர்களையும் பிரிந்து, ஒற்றைக் குதிரையுடன் தனியாக நெடுந் தூரம் போனான். களைத்துப் பசியாலும் தாகத்தாலும் வருந்தி, அடர்ந்து இருண்டிருக்கிற ஒரு வனத்தில் புகுந்தான். அவ்விடத்தில் ஒரு மனோகரமான தடாகத்தைக் கண்டு, அதில் குதிரையுடன் நீராடினான். களையாறின பின் உண்பதற்காகச் சில தாமரைத் தண்டுகளைக் குதிரைக்கு முன்னால் போட்டு வைத்துக்கொண்டு, அந்த ஏரிக்கரையில் உட்கார்ந்தான். பிறகு பூமியிலே படுத்துக்கொண்டான். அப்போது ஒரு இனிய வாத்திய தொனி கேட்டது. அரசன், மனிதர் கால் சுவடு கூட இல்லாமல் இருக்கிற இவ்விடத்தில் இந்த வாத்திய கோஷம் எப்படி உண்டாகிறது. இந்த வாத்தியத்தை எவர் வாசிக்கிறார்கள் என்று சிந்தித்து வருந்தினான். பிறகு, ஒரு இளம்பருவப் பெண் பாடிக்கொண்டு மலர் கொய்வதைக் கண்டான். அவள் சீக்கிரமாய் அரசனுக்குச் சமீபத்தில் வந்தாள். அரசன் அவளைப் பார்த்துப் பாக்கியவதியே! நீ யார்? யாருக்குச் சொந்தமானவள்? என்று கேட்டான். அவள் நான் கன்னிகை என்றாள். அரசன் அப்படியானால் நீ எனக்கு மனைவியாகும்படி உன்னைக் கேட்கிறேன் என்றான். அவள் நீ எனக்கு ஒரு வாக்குறுதி செய்து தந்தால் நான் உனக்குச் சொந்தமாவேன் என்றாள். அரசன் அது என்ன என்றான். கன்னிகை என்னைத் தண்ணீரின் கிட்டக்கொண்டு போகக்கூடாது என்றாள். அரசன் அப்படியே ஆகட்டுமென்று உறுதி கூறி அவளை மணந்தபின் அவளுடன் விளையாடிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அப்போது அவனுடைய போர்வீரர்கள் அங்கே வந்து சேர்ந்தார்கள். அரசன் சேனைகளைக் கண்டு மகிழ்ந்து மனைவியுடன் பல்லக்கிலேறிக்கொண்டு நகரம் போய்ச் சேர்ந்து அவளுடன் அந்தப்புரத்தில் வசித்தான்.

15—22. அரசனுக்கு அருகிலிருப்பவர்கள் மன்னவனைக் காணமுடியாமல் போயிற்று. அவனுடைய பிரதான மந்திரிகள் காவற்காரப் பெண்களை நோக்கி நீங்கள் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள் என்று கேட்டார்கள். அவர்கள், இங்கே ஒப்பில்லாத அழகுள்ள ஒரு பெண் இருக்கிறாள். அவளுக்கு ஒருபோதும் தண்ணீரைக் காட்டுவதில்லை யென்று பிரதிக்ஞை செய்து கொடுத்து அவளை மணம்புரிந்திருக்கிறார். அவளை நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கிறோமென்றார்கள். அதைக் கேட்ட மந்திரி திரண்ட கனிகளையும் மலர்களையும் உடைய மரங்களடர்ந்த பொழிலை உண்டாக்கினான். அந்தப் பொழிலின் ஒரு மூலையில் ஆழமுள்ள ஒரு பெரிய தடாகத்தை வெட்டிவைத்தான். முத்து

வலையால் அதை மூடிவைத்தான். அதன் நீர் அமிர்தம் போன்றிருந்தது. ஒரு நாள் அரசனிடத்தில் வந்து, இங்கே ஒரு அழகான சோலை இருக்கிறது. அதில் தண்ணீர் இல்லை. நீர் அதில் விளையாடிக் கொண்டிரும் என்று சொன்னான். அதைக் கேட்ட அரசன் தன் மனைவியோடு அந்தச் சோலைக்குச் சென்றான். அதில் விளையாடிக்கொண்டிருக்கையில் ஒருநாள் பசியாலும் தாகத்தாலும் களைத்து, மாதவியின் கிளைகளால் செய்யப்பட்ட ஒரு கொடி வீட்டைக் கண்டான். தன்னுடைய மனைவியுடன் அதில் புகுந்து அமிர்தம் போன்ற மதுரமான சுவையுள்ள நீர் நிறைந்த தடாகத்தைக் கண்டு அதன் கரையில் தன் மனைவியுடன் உட்கார்ந்தான் பிறகு அரசன் தன் மனைவியைப் பார்த்து, இந்தத் தண்ணீரில் மகிழ்ச்சியுடன் குளி என்றான். அதைக் கேட்டவுடன் அவள் அந்தக் குளத்தில் இறங்கி முழுகி மறைந்துபோனாள். அவள் திரும்பி வரவே யில்லை.

28—30. பிறகு அரசன் அவளைத் தேடிப் பார்த்தான். எவ்விடத்திலும் அகப்படவில்லை. அந்தக் குளத்தின் நீரை இறைக்கும்படி கட்டளை யிட்டான். அதன் பின் ஒரு தவளையானது ஒரு வளையின் துவாரத்தில் உட்கார்ந்திருக்கக் கண்டான். அதைக் கண்ட வுடன் அரசன் கோபங்கொண்டு, தவளைகளை எங்கே கண்டாலும் கொல்லும்படி கட்டளை யிட்டான். அப்போது தவளைகளுக்குப் பயங்கரமான சங்காரம் நேரிட்டது. தவளைகள் எல்லாம் பயந்து தங்கள் அரசனிடம் போய் நடந்ததைச் சொல்லின அதன் பின் ஒரு தவளை ரிஷி உருவம் கொண்டு அரசனிடத்தில் வந்து அவனைப் பார்த்து அரசனே! கோபத்துக்கு இடம் கொடாதே. பட்சமுள்ளவனாயிரு தவளைகளைக் கொல்லாதே. கோபத்தை அடக்கு. வாழ்வும் தவ ஒழுக்கமும் உள்ளவர்கள் கூட அஞ்ஞானத்தினால் துன்பம் அடைகிறார்கள். நீ தவளைகளின் மேல் கோபங் கொள்ளாதே. நீ ஏன் இப்படிப்பட்ட பாபத் தொழிலைச் செய்கிறாய்? தவளைகளைக் கொல்வதினால் உனக்கு என்ன லாபம் என்று கேட்டது. மனைவியை இழந்த துக்கத்தால் வருந்துகிற அரசன் சொல்லுகிறான்.

31—37. நான் ஒருபோதும் தவளைக்கு இரங்க மாட்டேன். நிச்சயமாக அவைகளைக் கொன்று நிர்மூலமாக்குவேன். ஒரு தவளை என்னுடைய அன்புள்ள மனைவியை விழுங்கி விட்டது. ஆகையால் தவளைகளை நான் அவசியம் கொல்வேன். கற்றுணர்ந்த பிராமணரே! நீர் அவைகளுக்காகப் பரிந்து பேசவேண்டா மென்றான். அதைக் கேட்டதும் தவளை இராஜன் மனம் வருந்தி, அரசனே! நான் தவளைகளுக்கு அரசன். என் பேர் ஆயுஷன். அந்தப் பெண் என் புத்திரி. சுசவனை என்று பேருள்ளவள். இவள் அடிக்கடி இப்படிப்பட்ட துஷ்டத்தனம் செய்வது வழக்கம். முன்னாலேயும் அவள் அநேக அரசர்களை மோசம் செய்திருக்கிறாள் என்றது. அரசன் அப்படியானால் அவளை நான் அடைய விரும்புகிறேன். நீ அவளை விவாகம் செய்து கொடு என்று கேட்டான். அதன் பின் ஆயுஷன் தன் புத்திரியை அழைத்து அரசனிடம் ஒப்புவித்து அவளை நோக்கி நீ இவ்வரசனிடத்திலேயே இரு என்று

சொல்லி, நீ அநேக அரசர்களை ஏமாற்றி மோசம் பண்ணினபடியால் உன் புத்திரர்கள் பிராமண துவேஷியா யிருக்கக் கடவர்கள் என்று அவளைச் சபித்தான். அரசன் அவளைப் பெற்றுக்கொண்டு, தான் மூன்று உலகங்களையும் பெற்றது போல மனம் மகிழ்ந்து, அந்தத் தவளை அரசனுக்கு வணங்கிச் சந்தோஷத்தினால் மொழி குழறத் தவளை அரசனை நோக்கி நான் உமது பெருங் கருணையைப் பெற்றேன் என்றது. பிறகு தவளை அரசன் தன் புத்திரியை ஆசீர்வதித்து விட்டுத் தன் இருப்பிடம் போய் விட்டான்.

38—43. கொஞ்ச காலத்துக்குப் பிறகு அரசனுக்கு மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களுக்கு முறையே சாலன், தாலன், வலன் என்று பேர். கொஞ்ச காலத்துக்குப் பின் அரசன் மூத்த குமாரனுக்கு முடி சூட்டி அரசாள வைத்து விட்டுத் தவம் செய்வதற்காக வனத்துக்குப் போய் விட்டான். ஒரு நாள் சாலன் வேட்டை யாடப் போன போது ஒரு மானைப் பார்த்து, அதைத் தொடர்ந்து தேரை ஓட்டிக்கொண்டு போனான். சாரதியை நோக்கி வேகமாய் ஓட்டு என்றான். சாரதி, அரசனே! வீண் பிரயாசப்படாதே இந்த மானை உன்னால் பிடிக்க முடியாது. வாமி என்கிற குதிரைகளைப் பூட்டி ஓட்டினால்தான் பிடிக்கக் கூடும் என்றான். அந்தக் குதிரைகளைப் பற்றி எனக்குச் சொல்லு, இல்லா விட்டால் உன்னைக் கொல்லுவேன் என்றான். சாரதி, அரசனுக்கும் வாம தேவருக்கும் பயந்து ஒன்றும் பேசாமலிருந்தான். அரசன் கத்தியை உருவிக்கொண்டு அதைச் சொல்லா விட்டால் உன்னைக் கொல்வேன் என்றான். சாரதி பயந்து, வாம தேவருடைய குதிரைகளுக்கு வாமி என்று பேர். அவைகள் மனதைப் போன்ற வேக முடையன என்றான். அரசன், சாரதியே! இப்போதே வாம தேவருடைய ஆச்சிரமத்துக்கு குதிரைகளை ஓட்டு என்றான். வாம தேவருடைய ஆச்சிரமம் போய் அவரை நோக்கி, மஹானுபாவரே! என்னால் அடிப்பட்ட ஒரு மான் ஓடிப் போயிற்று. அதை நான் பிடிக்க வேண்டும். அதற்காக உமது குதிரைகளை எனக்குக் கொடும் என்றான். வாமதேவர், அரசனே! என் குதிரைகளைத் தருகிறேன். உன் காரியம் முடிந்ததும் அவைகளை என்னிடம் கொடுத்து விட வேண்டும். என்று சொல்லிக் குதிரைகளைக் கொடுத்தார். அரசன் அவைகளைத் தேரில் பூட்டிக்கொண்டு மானைத் தொடர்ந்து போனான். கொஞ்ச தூரம் போனதும் சாரதியை நோக்கி இந்தக் குதிரைகள் பிராமணர்களுக்கு ஏற்றன அல்ல. ஆகையால் இவைகளை வாமதேவருக்குத் திரும்பக் கொடுக்கக் கூடாது என்று சொல்லி, மானைப் பிடித்துக்கொண்ட பின் தன் நகரத்துக்குப் போய், அந்தக் குதிரைகளைத் தன் அந்தப்புரத்தில் வைத்துக் கொண்டான்.

44—56. அதன் பின் வாமதேவர், இந்த அரசன் சிறுவன். நமது சிறந்த குதிரைகளைப் பெற்றுக்கொண்டு திரும்பக் கொடாமல் தானே வைத்துக் கொண்டு மகிழ்ந்திருக்கிறான். ஐயோ! இதென்ன பரிதாபம்! என்று தமது மனதில் நினைத்துக்கொண்டு தமது சிஷ்யர்களில் ஒருவனை நோக்கி ஆத்திரே

யா! அரசன் குதிரைகளை வாங்கிக்கொண்டு போய் ஒரு மாதம் ஆய்விட்டது. நீ அரசனிடம் போய் என் குருவின் குதிரைகளைக் கொடு என்று கேள் என்றார், அவன் போய்க் குதிரைகளைக் கொடும் என்று கேட்டான். அரசன், இந்தக் குதிரைகள் அரசருக்கே தகுதியானவைகள். இரத்தினம் போன்ற இந்தச் சிறந்த குதிரைகளைப் பிராமணர்கள் வைத்துக் கொள்ளத் தகாது. பிராமணர்களுக்குக் குதிரைகள் என்னத்துக்கு? அந்த ஆசையை ஒழித்து விட்டு திரும்பிப் போ என்று சொன்னான். சிஷ்யன் திரும்பிப் போய் நடந்தவைகளை குருவுக்குச் சொன்னான். இந்த துக்கமான சமாசாரத்தைக் கேட்டதும் வாமதேவருக்குக் கோபம் மூண்டது. உடனே அவர் தாமே அரசனிடம் போய் குதிரைகளை கொடு என்று கேட்டார். அரசன் குதிரைகளுக்காக நீர் கேட்டதைத் தருகிறேன் என்றான் வாமதேவர், அரசனே! என் வாமிக் குதிரைகளைக் கொடு. உன்னால் நிறைவேற்ற முடியாத காரியத்தை அந்தக் குதிரைகளால் நிறைவேற்றிக் கொண்டாய். க்ஷத்திரியர்களுக்கும், பிராமணர்களுக்கும் உரிய விருத்திகளைக் கடந்து நடந்து வருணனுடைய பயங்கரமான சாபத்துக்குள்ளாய் அழிந்து போகாதே என்றார். அரசன் வாமதேவரே! நன்றாய்ப் பழக்கப்பட்டவைகளும், அடக்க முள்ளவைகளும், சிறந்தவைகளுமான இந்தக் குதிரைகள் பிராமணர்களுக்கு ஏற்றவைகள். அவைகளை ஓட்டிக்கொண்டு உமக்கு இஷ்டமான இடத்துக்குப் போம். உம்மைப் போன்றவர்களை வேதமே விரும்பின இடத்துக்குக் கொண்டு போகும். ஆகையால் உமக்குக் குதிரைகள் என்னத்துக்கு என்றான். வாமதேவர், அரசனே! வேதம் பிராமணர்களைக் கொண்டுபோவது நிச்சயந்தான். அது மறு உலகத்தைப் பற்றியது. இந்த உலகத்தில் என்னையும், என்னைப் போன்றவர்களையும், மற்றவர்களையும் குதிரைகளே சுமந்துகொண்டு செல்கின்றன என்றார். அரசன், நாலு கழுதைகள் அல்லது நாலு உயர்ந்த ஜாதி கோவேறு கழுதைகள் அல்லது காற்றைப் போன்ற வேகமுள்ள நாலு குதிரைகள் உமக்குப் போதும், அவைகளை ஓட்டிக்கொண்டு போம். இந்த வாமிக் குதிரைகள் க்ஷத்திரியர்களுக்கே உரியன. ஆகையால் இந்தக் குதிரைகள் உமது அல்ல என்று அறியும் என்றான். வாமதேவர், அரசனே! பிராமணர்களுக்குக் கடுமையான விரதங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை நான் நினைத்தால் பயங்கரமான நாலு அரக்கர்கள் வருவார்கள். அவர்கள் சரீரம் இரும்பு போல இருக்கும். அவர்கள் உன்னை பிடித்துக் கொன்று நாலு துண்டுகளாக வெட்டி, ஈட்டியில் அவைகளைக் குத்தித் தூக்கிக்கொண்டு போவார்கள் என்றார். அரசன், வாமதேவரே! அவர்கள் பிரகாசமுள்ள ஈட்டி, கத்திகளைத் தரித்துக்கொண்டு வரட்டும். மனதாலும், வார்த்தையாலும், செய்கையாலும் மற்றவர்களைக் கொல்லுகிற பிராமணனென்று உம்மைத் தெரிந்துகொண்ட பின் என்னுடைய கட்டளையால் உம்மையும், உமது சிஷ்யர்களையும் கொல்வார்கள் என்றான். வாமதேவர், அரசனே! நீ என்னிடம் குதிரைகளை வாங்கும் போது திரும்பக் கொடுத்து விடுகிறேன் என்று உறுதி சொல்லி வாங்கிக் கொண்டாய். நீ பிழைத்திருக்க வேண்டுமா

ஞல் அந்த வாமிக் குதிரைகளைக் கொடுத்து விடு என்றார். அரசன் வாமதேவ ரே! க்ஷத்திரியர்களுக்கு வேட்டை யாடுதல் விதிக்கப்பட்டிருக்கிறது. உம் முடைய பொய்க்காக நான் உம்மைத் தண்டிப்பதில்லை. நான் உங்களுடைய எல்லா கட்டளைகளுக்கும் கீழ்ப்படிந்தே நான் இந்த அரசாட்சியை அடைந் தேன் என்றான். எண்ணத்தாலாவது, சொல்லாலாவது, செய்கையாலாவது பிராமணர்கள் ஒருபோதும் தண்டிக்கத் தகாதவர்கள். பிராமணன் இந்த உல கத்தில் மேன்மை பெறுவதில்லை என்பதை உணர்ந்தே அறிவுள்ளவன் தவ சித்தியை அடைகிறான் என்றார்.

57--68. யுதிஷ்டிரனே! வாமதேவர் இப்படிச் சொன்னதும், பயங்கர மான சொரூபமுள்ள நாலு அரக்கர்கள் வெளிப்பட்டார்கள். அவர்கள் ஈட் டிகளுடன் அரசனைக் கொல்ல வந்தார்கள். அரசன் ஓ பிராமணு! இக்ஷ்வாகு வம்சத்தார்களும் என் சகோதரன் தாலனும் இந்த வைசியர்களும் சொன்ன லும் கூட நான் இந்தக் குதிரைகளை வாமதேவருக்குக் கொடுக்க மாட்டேன் என்றான். அரசன் இப்படிச் சொன்ன உடனே இராட்சதர்கள் அவனைக் கொன்றார்கள். பூமிக்கு இறைவனாகிய அரசன் தரையில் விழுந்தான். தாலன் சிம்மாசனமேறினான். பிறகு வாமதேவர் அரசனிடம் போய் அவனைப் பார் த்து அரசனே! பிராமணர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று எல்லாச் சாஸ் திரங்களுங் கூறுகின்றன. நீ பாவத்துக்குப் பயப்படுகிறவனாயிருந்தால் தடை சொல்லாமல் என் குதிரைகளைக் கொடுத்து விடு என்றார். இதைக் கேட்ட வுடனே அரசனுக்கு அதிக கோபமுண்டாயிற்று. உடனே தன் தேர்க் காரனைப் பார்த்து, விஷ மூட்டி அழகாயிருக்கிற அந்த அம்பை எடுத்துக்கொ ண்டுவா. அதனாலே வாமதேவனைத் துளைத்து விடுகிறேன். வாமதேவன் செத் துப் பிணமாகட்டும். அவன் உடலை நாய்கள் கிழித்துத் தின்னட்டும் என்றான். வாமதேவர் அரசனே! உனக்குப் பத்து வயதுள்ள ஒரு புத்திரன் இருப்பதை நான் அறிவேன். என்னுடைய வசனங்களாலே இந்த அம்பு அவனைக் கொல் லட்டும் என்றார். வாமதேவர் இப்படிச் சொன்னவுடனே அந்த அம்பு, அந்தப் புரத்திலிருந்த இராஜ புத்திரனைக் கொன்றுவிட்டது. அரசன்: இட்சுவாகு வம்சத்தவர்களே! இன்றைய தினம் நான் உங்களுக்கு நன்மையைச் செய்கி றேன். நான் இந்தப் பிராமணர்களைக் கொன்றுவிடுகிறேன். மிகுந்த சக்தி யுள்ள வேறொரு அம்பைக் கொண்டுவாருங்கள் என்றான். வாமதேவர், அர சனே! நீ என்னை இலட்சியமாக வைத்து எய்யப் போகிற அம்பைப் பிரயோகி க்கவாவது, குறிக்கவாவது உனக்குச் சக்தி யில்லாமற் போய் விடும். என் வல் லமையைப் பார் என்றார். அரசன், இக்ஷ்வாகு ஜனங்களே! நான் எடுத்த அம்பை எய்ய நான் சக்தி யற்றுப் போனேன். இந்தப் பிராமணனைக் கொல்ல முடியவில்லை. ஆகையால் வாமதேவர் நீடூழிகாலம் வாழ்வாராக என்றான். வாம தேவர், அரசனே! இந்த அம்பினாலே உன் மனைவியைத் தொடு. உன்னுடைய பாவங்கள் ஒழிந்து நீ பரிசுத்தனாவாய் என்றார். அரசன் அப்படியே செய் தான். இராஜ பத்தினி வாமதேவரை நோக்கிச் சொல்லுகிறாள்..

69—72. வாமதேவரே! என்னுடைய புத்தியில்லாத கணவனுக்கு நாள் தோறும நல்ல விஷயங்களைப் போதிக்க எனக்குச் சக்தி உண்டாக வேண்டும். நான் பிராமணர்களுக்குப் பணிவிடை செய்து மறுமையில் புண்ணிய லோகத்தை யடைய வேண்டும்; இப்படி எனக்கு அனுக்கிரகிக்க வேண்டும் என்றாள். வாமதேவர், இராஜ புத்திரியே! அழகிய கண்களை உடையவளே! இந்த இராஜ வம்சத்தை நீ காப்பாற்றிவிட்டாய். ஒப்பற்றதான மற்றொரு வரத்தைக் கேட்டுக் கொள். நீ எதைக் கேட்டாலும் கொடுப்பேன் குற்றமற்றவளே! உன்னுடைய சுற்றத்தாரையும், இட்சுவாகுவின் இராஜ்யத்தையும் நீ ஆளக்கடவை என்றார். இராஜ பத்தினி, மகிமையுள்ளவரே! இந்த வரந்தான் நான் கேட்டது. என் கணவன் பாபத்தினின்றும் விடுபட்டான். அவனுடைய புத்திரர்களுக்கும் சுற்றத்தார்களுக்கும் நன்மையுண்டாகும்படி நீர் சிந்திக்க வேண்டும். மஹானுபாவரே! இந்த வரந்தான் எனக்கு வேண்டியது என்றாள். வாமதேவர், "அப்படியே ஆகட்டும்" என்றார். அதன்பிறகு அரசன் மகிழ்ந்து வாமதேவருக்கு வணங்கி அவருடைய குதிரைகளை அவருக்குக் கொடுத்து விட்டான்

---

## 193-வது அத்தியாயம்

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—5. ரிஷிகளும், பிராமணர்களும், யுதிஷ்டிரரும் மார்க்கண்டேயரை நோக்கி, பகர் என்னும் ரிஷியானவர் எப்படி நீண்ட ஆயுளைப் பெற்றார் என்று கேட்டார்கள். மார்க்கண்டேயர், பகர் என்ற இராஜரிஷி நெடுங்காலம் ஜீவித்தார். அதன் காரணத்தை நீங்கள் கேட்க வேண்டாம என்றார். யுதிஷ்டிரர் மறுபடியும் மார்க்கண்டேயரை நோக்கி, பகரும், தாலியரும் நெடுங்காலம் ஜீவித்தார்களென்றும், உலகத்தில் எல்லாராலும் மரியாதை செய்யப்பட்டார்கள் என்றும், தேவேந்திரனுக்குச் சிநேகிதர்களாயிருந்தார்கள் என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம். இந்திரனும் பகரிஷியும் சந்தித்துச் சம்பாதித்த விஷயம் மகிழ்ச்சியும் துக்கமுமுள்ளதாயிருக்கும் என்பார்கள். அதைத் தெளிவாய்ச் சொல்ல வேண்டுமென்று கேட்டார். மார்க்கண்டேயர் சொல்லுகிறார்.

6—17. யுதிஷ்டிர ராஜனே! தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த பயங்கரமான சண்டை முடிந்தபின் இந்திரன் எல்லா உலகங்களுக்கும் அரசனானான். மேகம் நன்றாய் மழை பொழிந்தது. ஜனங்கள் நிரம்பத் தானியங்களைப் பெற்றார்கள். அவர்களுக்குப் பொறாமையாவது கெட்ட எண்ணங்களாவது இல்லை. எல்லாரும் தாங்கள் குலாசாரம் தவறாமல் நடந்தார்கள். எல்லாரும் தர்மிஷ்டர்களாயிருந்தார்கள். தங்கள் குலாசாரங்களை அனுஷ்டித்துக் கொண்டு ஜனங்கள் எல்லாரும் மகிழ்ச்சியாயிருந்தார்கள். எல்லா ஜனங்

னும் மகிழ்ச்சியாயிருப்பதை வலாரியாகிய இந்திரன் அறிந்து, அவனும் மகிழ்ச்சி அடைந்தான். ஐராவதத்தின்மேல் ஏறிக்கொண்டு தன் பிரஜைகளின் சந்தோஷத்தைப் பார்த்துக்கொண்டு வந்தான். பல வகையான ஆச்சிரமங்களும், ஆறுகளும், மங்களகரமான பட்டணங்களும், கிராமங்களும், நாட்டுப்புறங்களும், சகல வஸ்துக்களாலும் ஸ்ரமபி மகிழ்ச்சியா யிருப்பதைக் கண்டு மகிழ்ந்தான். அரசர்கள் எல்லாரும் தர்மிஷ்டர்களாயும், குடிகளைச் சாமார்த்தியமாய்ப் பரிபாலிக்கிறதையும் கண்டான். தடாகங்கள் கிணறுகள், ஏரிகள், சிறுகுளங்கள் எல்லாம் நீரால் நிறைந்தும், அவற்றின் கரைகளில் சிறந்த பிராமணர்கள் தவம் செய்து கொண்டிருக்கிறதையும் கண்டான். பிறகு இந்திரன் பூமியில் இறங்கி வந்து, கீழ்கடல் கரையிலிருக்கிற மரங்கள் அடர்ந்து சிறந்த தேசங்களை நோக்கிச் சென்றான். அங்கே மிருகங்களும் பட்சிகளும் நிறைந்து அழகாயிருக்கிற பகருடைய ஆச்சிரமத்தைக் கண்டான். பகரும் இந்திரனைக் கண்டு மகிழ்ச்சி யடைந்தார். அவர் இந்திரனுக்கு அர்க்கிய பாத்தியங்களும் கனி கிழங்குகளும் கொடுத்து உபசரித்தார். வரங்களைக் கொடுப்பவனும், வலனைச் சங்கரித்தவனுமான இந்திரன் சுகமாய் உட்கார்ந்து கொண்டபின் பகரை நோக்கிப் பாபமற்ற மஹரிஷியே! நீர் இலட்சம் வருஷம் வாழ்ந்திருக்கிறீர். நெடுங்காலம் வசிக்கிறவர்களுக்கு துக்கம் என்ன உண்டு? அதைச் சொல்லும் என்று கேட்டான். பகர் சொல்லுகிறார்.

18—27. மனதுக்கு ஒவ்வாதவர்களோடு வசித்தலும், மனது ஒத்தவர்களும் நேசமுள்ளவர்களுமான மனிதர்களை விட்டுப்பிரிவதும், துஷ்டர்களுடன் கூடுவதும் நெடுங்காலம் ஜீவிப்பவர்களுக்குத் துக்கங்களாம். புத்திரர்களும், மனைவியும், சுற்றத்தாரும், சிநேகிதர்களும் இறப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பதையும், அதன் பின் மற்றவர்களை அண்டி யிருப்பதையும் விட வேறு துக்கம் எது? தங்களுக்குள்ள செல்வத்தை யிழந்து, செல்வமுள்ளவர்களால் நிந்திக்கப் படுகிறதை விடப் பரிதாபமான துக்கம் வேறு என்ன இருக்கிறது குடும்பத்தில் வாழ்வைப் பெறாமலிருக்கிறவர்கள் சம்பத்தை யடைந்து மேலாக வாழ்வதையும், குடும்பவாழ்வில் மேலாகச் சிறந்து வாழ்ந்தவர்கள் அதை யிழந்து விடுவதையும், ஒற்றுமையையும், பிரிவினையையும் ஆகிய இவைகளை நெடுங்காலம் ஜீவிக்கிறவன் எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருக்கிறான். குடும்ப யோக்கியமில்லாதவன் ஐசுவரியத்தைப் பெறுகிறான். இதைக் காட்டிலும் குடும்பத்துக்கு மாறுதல் என்ன இருக்கிறது நீ நெடுங்காலம் ஜீவித்தால் இவைகளை யெல்லாம் உன் கண்களால் பார்ப்பாய். தேவர்கள், தானவர்கள், கந்தர்வர், நாகர், இராட்சதர், மனிதர்கள் இவர்களுக்குள் மாறுதல் உண்டாகிறதைப் பார்த்துக் கொண்டிருப்பதை விடப் பெரிய துக்கம் என்ன இருக்கிறது? உயர் குலத்தில் பிறந்திருக்கிறவர்கள் தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்களுக்கு அடங்கினவர்களாய்க் கஷ்டப்படுகிறார்கள். ஏழைகள் தனவான்களால் இகழப்படுகிறார்கள். இவைகளைத் தவிரப் பெரிய துக்கம் எது? இப்படி மாறுபட்ட நியமங்களை நெடுங்காலமிருப்பவன் அடிக்கடி பார்த்

கிறான். படித்தவர்களும், அறிவுள்ளவர்களும் துக்கத்தை அடைகிறார்கள். மூடர்களும், அறியாதவர்களும் சிறந்து மகிழ்ச்சி அடைகிறார்கள். இவ்வுலகத்தில் உள்ள மனிதர்களுக்குத் துக்கமே அடிக்கடி சம்பவிக்கிறது என்றார். இந்திரன், மகிமை யுள்ளவரே! நெடுங் காலம் ஜீவிப்பவர்களுக்குச் சந்தோஷம் என்ன? தேவர்களாலும் ரிஷிகளாலும் புகழப்படுகிற அந்த மகிழ்ச்சியைச் சொல்லும் என்றான். பகர் சொல்லுகிறார்.

28—37. ஒரு நாளில் எட்டாவது அல்லது பன்னிரண்டாவது பகுதியில் கீரைகளையாவது தானே சமைத்து புசிக்கிறவனும், துஷ்டர்களாகிய சிநேகிதர்கள் இல்லாதவனும் ஆகிய இவர்களை விடச் சந்தோஷமுள்ளவர்கள் யார்? எவன் விஷயத்தில் நாள்கள் கணக்கிடப்படாம லிருக்கிறதோ அவன் பெருந் தீனிக்காரன் அல்ல. எவன் கொஞ்சம் கீரையையாவது தானே பாகம் செய்து புசிக்கிறானோ அவன் பாக்கியமுள்ளவன். பிறரை அடுத்துச் சேவியாமல், தன் சொந்த முயற்சியால் சம்பாதித்த கனிகளையாயினும், இலைகளையாயினும் தன் வீட்டில் புசிக்கிறவன் பெருமையுள்ளவன் பாக்கியவான். பிறர் வீட்டில் அலட்சியமாக இடப்படுகிற போஜனம் சிறந்ததும், உருசியுள்ளதுமாயிருந்தாலும் அது வெறுக்கத் தக்கதே. பிறர் வீட்டில் இடுகிற இழிவான சோற்றை, அறிவுள்ளவர்கள் நாயென்றும், இராட்சதனென்றும் கூறி யிகழ்கிறார்கள். அதிதிகளையும், வேலைக்காரர்களையும் முதலில் உண்பித்து பிதிர்க்களை ஆராதித்து மிஞ்சினதைப் புசிக்கிற சிறந்த பிராமணன் மிகவும் சந்தோஷமுள்ளவன். அவனை விடப் பாக்கியசாலி யில்லை. அந்த உணவை விடப் பரிசுத்தமானதும் உருசியுள்ளதும் கிடையாது. அதிதிகளைப் புசிப்பித்த பின் உண்ணுகிற உணவில் ஒவ்வொரு கவளமும் ஆயிரம் கபிலைத் தானத்துக்குச் சமானமாகும். அவன் தன் சிறு வயதில் எப்படிப்பட்ட பாவங்களைச் செய்திருந்தாலும் அவைகளெல்லாம் நாசமாகின்றன. தட்சிணைகளுடன் மரியாதையாகப் புசிப்பிக்கப்படுகிற அதிதியின் கையிலிருக்கிற தண்ணீரானது, அன்னமிட்டவன் மேலே தெறித்தால் அவன் செய்திருக்கிற பாவங்களை எல்லாம் உடனே நாசமடையும். இந்திரன் இதையும் வேறு சில சிறந்த விஷயங்களையும் பேசிக்கொண்டிருந்து தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்தான் என்று மார்க்கண்டேயர் சொன்னார்.

---

## 194-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

I—3. பாண்டவர்கள் மார்க்கண்டேயரைப் பார்த்து, எங்களுக்கு இதுவரைக்கும் பிராமணர்களுடைய மகிமைகளைப் பற்றிச் சொன்னீர்கள். இப்பொழுது இராஜ ரிஷிகளின் பெருமையைக் கேட்க விரும்புகிறோம் என்றார்கள். மார்க்கண்டேயர் சொல்லுகிறார். குரு வம்சத்தில் சுஹோத்திரன் வெ

ன்று ஒரு அரசன் இருந்தான். அவன் பெரிய ரிஷிகளைப் பார்க்க விரும்பிப் போனான். திரும்பி வரும் போது சிபி என்னும் அரசனைக் கண்டான். இருவரும் சந்தித்தார்கள். தங்களுடைய வயதுக்கேற்றபடி ஒருவரை யொருவர் வணங்கினார்கள். அவ்விருவரும் சரிசமானர்களா யிருந்தபடியால் ஒருவருக்கு ஒருவர் வழிவிட வில்லை. அந்தச் சமையத்தில் நாரத முனிவர் வந்தார். நீங்கள் ஒருவரை யொருவர் வழி மறித்துக்கொண்டு ஏன் நிற்கிறீர்கள்? என்று கேட்டார். அவர்கள் நாரதரைப் பார்த்து மஹானுபாவரே! நீர் இப்படிச் சொல்லக் கூடாது. தனக்கு மேலானவனுக்கும், சக்தி யுள்ளவனுக்கும் வழி விட வேண்டுமென்று பெரியோர் சொல்லுகிறார்கள். எந்த வகையிலும் நாங்கள் இருவரும் ஒருவருக்கு ஒருவர் சமானமா யிருக்கிறபடியால் வழி தடுத்து நிற்கிறோம் எங்களுக்குள் உயர்வும் தாழ்வுமில்லை என்று சொன்னார்கள். அதைக் கேட்டதும் நாரதர் ஒரு சுலோகம் சொன்னார்.

4—8. 'கௌரவனே! கொடுமையுள்ளவன் அடக்க முள்ளவனிடத்திலும் கொடுமையாய் நடக்கிறான் வணக்க முள்ளவன் துஷ்டனிடத்திலும் வணக்கமாயும் யோக்கியமாயும் நடக்கிறான், யோக்கியன் அயோக்கியனிடத்திலும் யோக்கியமாய் நடக்கிறான். அப்படி யிருக்கையில், யோக்கியன் யோக்கியனிடத்தில் ஏன் யோக்கியமாய் நடக்கக் கூடாது? யோக்கியன், ஒருவன் தனக்குச் செய்த வேலை அற்பமானதா யிருந்தாலும் அதை நூறு மடங்கு பெரிதாக எண்ணுகிறான். இப்படித் தேவர்களுக்குள் வழக்கமாயிருக்கிறது. கௌரவனே! உஷீனரன் புத்திரனாகிய சிபி உன்னை விட அதிகமான நற்குண முள்ளவன். ஒருவன் இழிந்தவனைத் தர்மத்தால் வெல்ல வேண்டும். பொய்யை மெய்யால் வெல்ல வேண்டும். கொடுமையைப் பொறுமையால் வெல்ல வேண்டும் அயோக்கியனை யோக்கியத்தால் வெல்ல வேண்டும். நீங்கள் இருவரும் தயாள சித்த முடையவர்கள். ஆகையால் இந்தச் சுலோகத்தில் சொன்னபடி ஒருவர் விலகி நின்று மற்றவருக்கு வழி விடுங்கள் என்றார். இதை கேட்ட சுகோத்திரன் சிபியைப் பிரதக்ஷிணம் செய்து, அவனுடைய சற்குணங்களைப் புகழ்ந்து அவனுக்கு வழி விட்டான். இப்படி க்ஷத்திரியருடைய தருமம் நாரதரால் கூறப்பட்டது.

---

## 195-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1— . மற்றொரு கதை சொல்லுகிறேன் கேளுங்க ளென்று மார்க்கண்டேயர் சொல்லுகிறார். நகுஷ புத்திரனாகிய யயாதி நகரத்தார் சூழச் சிங்காசனத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அப்போது ஒரு பிராமணன் தன் குருவுக்காகத் திரவியம் யாசிக்க வந்தான். அரசனைப் பார்த்து, மஹா ராஜாவே! நான் குருவுக்குச் சொன்ன உறுதி மொழிப்படி திரவியம் யாசிக்க வந்

தேன் என்றான். யயாதி, மஹானுபாவரே! அந்த உறுதி என்ன என்று கேட்டான். இவ்வுலகத்தில் ஒருவன் யாசித்தால் அவனை வெறுக்கிறார்கள். என் மனதில் உள்ளதைச் சொல்லிக் கேட்டால் நீ என்ன எண்ணத்துடன் கொடுப்பாய் என்றான். யயாதி, நான் எதையாவது கொடுத்து விட்டு, அதன் பிறகு பெருமையாகப் பேசிக்கொண்ட தில்லை. கொடுக்க முடியாத பொருளைப் பற்றிப் புகழ்ந்து பேசுகிறதை நான் கேட்கிறதுமில்லை. கொடுக்கக் கூடியவைகளின் புகழ்ச்சியையே கேட்கிறேன். கொடுத்த பின் எப்போதும் சந்தோஷமாகவே யிருக்கிறேன், நான் உமக்கு ஆயிரம் பசுக்கள் கொடுக்கிறேன். பிராமணர்கள் தானம் கொடுக்கும்படி கேட்கும் போது அவர்களிடத்தில் நான் பிரியமாகவே யிருக்கிறேன். என்னை யாசிப்பவனிடத்தில் நான் கோபிப்பதுமில்லை. கொடுத்த பிறகு ஒருபோதும் வருத்தப்படுகிறது மில்லை என்று சொல்லி, அரசன் அந்தப் பிராமணனுக்கு ஆயிரம் பசுக்கள் கொடுத்தான். அந்தப் பிராமணனும் அவைகளைப் பெற்றுக்கொண்டு போனான்.

---

## 196-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—7. பாண்டவர்கள் இன்னமும் க்ஷத்திரியர்களுடைய பெருமைகளைச் சொல்ல வேண்டுமென்று கேட்க, மார்க்கண்டேயர் சொல்லுகிறார். விருஷதர்ப்பன், ஸேதுகன் என்று இரண்டு அரசர்கள் இருந்தார்கள். அவ்விருவரும் எல்லா நீதிகளையும், ஆயுதங்களைப் பிரயோகித்தல், எதிரியின் ஆயுதத்தை தடுத்தல் முதலியவற்றையும் உணர்ந்திருந்தார்கள். விருஷதர்ப்பன் பிராமணர்களுக்குத் தங்க நாணயத்தையும், வெள்ளி நாணயத்தையும் தவிர மற்றொன்றையும் கொடுப்பதில்லை யென்று விரதம் கொண்டிருந்தான். இது சிறு பிராயம் முதல் ஸேதுகனுக்குத் தெரியும். ஒரு காலத்தில் ஒரு பிராமணன் வேதாத்தியயனத்தை முடித்து விட்டு ஸேதுகனிடம் வந்தான். தன் குருவுக்குக் கொடுப்பதற்காக அவ்வரசனிடம் யாசித்தான். எனக்கு ஆயிரம் குதிரை கொடு என்று கேட்டான். ஸேதுகன், அவ்வளவு கொடுக்க என்னால் முடியாது. ஆகையால் விருஷதர்ப்பனிடம் போ. அவன் தர்மிஷ்டன். அவனிடம் போய் யாசகம் பண்ணினால் அவன் அவசியம் கொடுப்பான். ஏனென்றால் அது அவனுடைய விரதம் என்று சொன்னான்.

8— . அதன் பின் அந்தப் பிராமணன் விருஷதர்ப்பனிடம் போய் ஆயிரம் குதிரைகள் வேண்டுமென்று யாசித்தான். விருஷதர்ப்பன் அந்தப் பிராமணனை சவுக்கால் அடித்தான். பிராமணன், நான் ஒன்றையும் அறியேன். என்னை ஏன் இப்படி அடித்தாயென்று கேட்டான். இப்படிக் கேட்ட பின் விருஷதர்ப்பனைச் சபிக்கத் தொடங்கினான். அரசன் நீ கேட்ட பொருளைக் கொடாதவனைச் சபிப்பாயா? இப்படிச் செய்வது பிராமணனுக்கு ஏற்றதா?

என்றான். பிராமணன், அரசர்க்கரசனே! ஸேதுகன் உம்மிடத்துக்கு என்னை அனுப்பினான். நான் அப்படியே உம்மிடத்தில் யாசிக்க வந்தேன். உம்முடைய தூர் நடத்தைக்காக உம்மைச் சபிக்கப் போகிறேன் என்றான். பிறகு, இந்தக் கால வேளை முடிகிறதற்குள்ளாக எனக்கு வருகிற பகுதிப் பணத்தை உமக்குத் தருகிறேன். என்றால் அடிக்கப்பட்டவனை வெறுங் கையுடன் அனுப்ப எனக்குப் பிரியமில்லை என்றான். பின் காலையில் வந்த பணத் தொகையைக் கொடுத்தான். அது ஆயிரம் குதிரைகளுக்கு மேலான தொகையாய் இருந்தது.

---

## 197-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—8. ஒரு நாள் தேவர்கள் பூமிக்குப் போய்ச் சிபியின் தர்மத்தைப் பரிசோதிக்கத் தீர்மானித்தார்கள். அப்படியே அக்னியும் இந்திரனும் பூமிக்குப் போனார்கள். அக்கினி தேவன் புறா வடிவம் கொண்டு பறந்து போனான். இந்திரன் இராஜாளி வடிவம் கொண்டு புறாவைத் தொடர்ந்து சென்றான். புறாவானது சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கிற சிபியின் மடியில் வந்து விழுந்தது. சிபியின் குருவானவர் அரசனைப் பார்த்து, இந்தப் புறா இராஜாளிக்குப் பயந்து, தன் ஜீவனைக் காப்பாற்றிக் கொள்வதற்காக உம்மிடத்தில் வந்து விழுந்தது. புறா ஒருவன் மடியில் விழுந்தால் அவனுக்குப் பெரிய அபாயம் வருவதைத் தெரிவிக்கிற குறி யென்று பெரியோர் சொல்வார்கள் என்றார். சிபி, திரவியச் செலவு செய்து பிராயச்சித்தம் பண்ணிக் கொள்ள வேண்டுமென்று அறிவான். அப்போது அந்தப் புறா அரசனை நோக்கி நான் இராஜாளிக்குப் பயந்து என் ஜீவனைக் காப்பாற்றும்படி உம்மிடம் அடைக்கலம் புகுந்தேன். நான் ஒரு ரிஷி. புறாவின் வடிவத்தை எடுத்துக்கொண்டு உம்மைச் சரணம் அடைந்தேன். நீர்தான் என் ஜீவனென்று நான் நினைக்கிறேன். நான் வேதங்களை உணர்ந்து பிரமசரிய விரதத்தை அனுஷ்டிக்கிறவன். புலனடக்கமுள்ளவன். தவம் செய்கிறவன். குருவினிடத்தில் கெட்ட வார்த்தை பேசாதவன். எல்லாத் தர்மங்களையும் உடையவன். பாபமற்றவன். நான் வேதாத்தியயனம் செய்கிறவன். வேதங்களை எழுத்தெழுத்தாகப் படித்திருக்கிறவன். நான் புறாவல்ல. ஆகையால் என்னை இராஜாளியினிடத்தில் கொடுத்து விடாதேயும். படித்து அறிந்தவனும், மேன்மை யுள்ளவனுமானவனைக் கொடுப்பது நல்ல தானமாகாது என்றது.

9—19. பிறகு இராஜாளி அரசனைப் பார்த்து அரசனே! பிராணிகள் தம் இஷ்டம் போல உடனே பிறப்பதில்லை. பூர்வ ஜன்மத்தில் இந்தப் புறாவுக்கு நீ பிறந்திருந்தாய். இந்தப் புறாவைக் காப்பாற்றி என் ஆகாரத்தைக் கெடுப்பது நியாயமில்லை என்றது. அரசன், பட்சிகள் மனிதரைப் போலப்

சத்தமாய்ப் பேசுகிறதை இதற்கு முன்பு எவனாவது பார்த்திருப்பானா? இந்தப் புறாவும் இராஜாளியும் பேசுகிறதைப்பார்த்த பின் என்ன செய்தால் நமக்கு நன்மையா யிருக்கும்? தன் சத்துருவுக்குப் பயந்து அடைக்கலம் புகுந்த பிராணியைக் கை விடுகிறவன், தனக்கு ஆபத்து வந்தபோது உதவியை அடைய மாட்டான். அவனுக்கு மேகம் கால மழை பொழியாது. விதை விதைத்தாலும் முளைகாளாது. சத்துருக்களுக்குப் பயந்து சரணம் புகுந்த பிராணியைக் கை விடுகிறவனுடைய குழந்தைகள் இளம் பருவத்திலேயே அழியும். அவனுடைய பிதிர்க்களும் சொர்க்கத்தை அடைய மாட்டார்கள். தேவர்களும் அவன் செய்கிற ஹோமாதிகளை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். அடைக்கலம் புகுந்தவனைக் கை விடுகிறவன் தலையில் இடி விழும். ஒருவன் உண்ணுகிற ஆகாரத்தைக் கெடுக்கிறவன் சொர்க்கத்திலிருந்து விழுந்து விடுவான் என்று இப்படி நினைத்து, இராஜாளியைப் பார்த்து, இராஜாளியே! ஒரு எருதையும் சமைத்த சோற்றையும் கொடுக்கிறேன். நீ அதை ஏற்றுக்கொண்டு இந்தப் புறாவை விட்டு விடு என்றான். இராஜாளி, அரசனே! நான் எருதையாவது வேறு எந்த மாம்சத்தையாவது, இந்தப் புறாவைக் காட்டிலும் அதிகமானதையாவது நான் கேட்க வில்லை. இன்றைய தினம் இந்தப் புறாவைக் கடவுள் எனக்கு ஆகாரமாக விதித்திருக்கிறார் ஆகையால் இந்தப் புறாவை எனக்கு கொடும் என்றது அங்கப்பழுது இல்லாத ஒரு எருதைக் கொண்டுவந்து தருகிறேன் இந்தப் புறாவைக் கொல்லாதே. இராஜாளியே! என் உயிரை வேண்டுமானால் கொடுத்து விடுவேன். இந்தப் புறாவைக் கொடுக்க மாட்டேன். இந்தப் புறா யாகத்தில் ஸோம பானம் செய்து இருப்பது போலக் காணப்படுகிறது. ஆகையால் அதை வருத்தப்படுத்தக் கூடாது. நான் இந்தப் புறாவைக் கொடுக்க மாட்டேன். இராஜாளியே! உனக்குப் பிரியமானால், உனக்கு எதில் விருப்பமோ அதைக் கொண்டு வரும்படி கட்டளை யிடு. அதைக் கொடுப்பதினால் என்னைப் புகழ்ந்து மகிழ்வார்கள். நீ எதைச் செய்யச் சொன்னபோதிலும் அதைத் தடையில்லாமல் செய்வேன் என்றான்.

20—24. இராஜாளி, அரசனே! இந்தப் புறாவுக்குச் சரியான எடையுள்ள மாம்சத்தை உனது வலது தொடையிலிருந்து அறுத்துக் கொடுத்தால் இந்தப் புறாவைக் காப்பாற்றலாம் எனக்குப் பிரியமான இதைச் செய்தால் ஜனங்கள் எல்லாரும் உன்னைப் பற்றி அதிக பெருமையாகப் புகழ்ந்து பேசுவார்கள். சிபி அப்படியே தன் வலது தொடையை அறுத்து ஒரு துண்டு மாம்சத்தையும் புறாவையும் வைத்து நிறுத்தான். புறாவின் எடை அதிகமாய் இருந்தது. பிறகு மற்றொரு துண்டை அறுத்து வைத்தான், அப்போதும் புறாவின் எடை அதிகமாய் இருந்தது. பிறகு தன் சரீரத்தின் அவயவங்கள் எல்லாம் அறுத்து வைத்து நிறுத்தும் புறாவின் எடைக்குச் சரியாய் இருக்க வில்லை. பிறகு அரசன் தானும் தராசில் ஏறி நின்றான். அரசன் அதற்காக கொஞ்சமும் கூட வருத்தப்பட வில்லை. இராஜாளி இதைப் பார்த்து "புறா காப்பாற்றப்பட்டது" என்று சொல்லி விட்டு மறைந்து போயிற்று. பிறகு

அரசன் புருவை நோக்கிப் புருவே! இந்த இராஜாளி யார்? சிபியின் ஜனங்கள் தெரிந்து கொள்ளும்படி சொல்ல வேண்டுமென்றான். சிருஷ்டிக்கர்த்தாவைத் தவிர மற்றெவராலும் இப்படிப்பட்ட செய்கை செய்ய முடியாது என் கேள்விக்குப் பதில் சொல் என்று கேட்டான்.

25—28. அரசனே! நான் புகைக் கொடியை யுடைய அக்கினிதேவன். இராஜாளி சசி தேவியின் கணவனான வச்சிரபாணி. நீ மனிதர்களுக்குள் சிறந்தவன். நாங்கள் உன்னைப் பரிட்சிக்க வந்தோம். நீ என்னைக் காப்பாற்றும்படி நீ உன் மாமிசத்தை அறுத்தாய். அது உன் சரீரத்தில் பிளப்புகளை உண்டாக்கிற்று. நான் அவைகளை மங்களகரமாகச் செய்கிறேன். அவைகள் தங்க நிறமும் நல்லவாசனையும் உடையவைகளாயிருக்கும். உன் சரீரத்துக்கு அழகை உண்டாக்கும். நீ பெருங் கீர்த்தியை அடைந்து, தேவர்களால் மரியாதை செய்யபபட்டு நெடுங்காலம் இந்த ஜனங்களைப் பரிபாலனம் பண்ணக்கடவாய். சீக்கிரத்தில் உனக்குக் கபோதரமணன் என்று ஒரு புத்திரன் பிறப்பான். உன்னுடைய சொந்த சரீரத்திலிருந்து இந்தப் புத்திரன் பிறப்பான். அவன் வீரனும், கீர்த்தியால் பிரகாசிக்கிறவனும், மிகுந்த தைரியசாலியாயும், அழகுள்ளவனும் இருப்பான் என்றது.

---

## 198-வது அத்தியாயம்

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—5. பாண்டவர்கள் மறுபடியும் மார்க்கண்டேயரை நோக்கி இன்னமும் எங்களுக்கு இராஜ தர்மங்களைச் சொல்ல வேண்டுமென்று கேட்க மார்க்கண்டேயர் சொல்லுகிறார். விசுவாமித்திரருடைய வம்சத்தில் பிறந்த அஷ்டக ராஜன் ஒரு அசுவமேதம் செய்தான். அதைக் காணும்பொருட்டு எல்லா அரசர்களும் வந்தார்கள். அவனுடைய சகோதரர்களான பிரதர்த்தனன், விசுமனன், உசீனரன் குமாரனான சிபி இவர்களும் வந்தார்கள். அந்த யாகம் முடிந்ததும் அஷ்டகன் தன் சகோதரர்களுடன் ஒரு தேர்மேல் ஏறிக்கொண்டு போனான். அப்போது நாரதமுனிவர் அவர்களுக்கு எதிரில் வந்தார். அவர்கள் எல்லாரும் முனிவரை வணங்கி நீரும் எங்களுடன் இந்தத் தேரின்மேல் ஏறிக்கொள்ளும் என்றார்கள். அவரும் அப்படியே ஆகட்டும் என்று தேரில் ஏறிக்கொண்டார். வசுமனன் முனிவரை உபசரித்து மகிழ்வித்து, முனிவரே! நாங்கள் நால்வரும் நீண்ட ஆயுளையும், எல்லாத் தர்மங்களையும் உடையவர்களாயிருக்கிறோம். நாங்கள் எல்லாரும் ஒரு புண்ணிய உலகத்தை அடைந்து, அங்கே நெடுங்காலம் வசிப்போம். இது நிச்சயம். எங்களுக்குள் முதலில் கீழே விழுகிறவன் யார்? என்று கேட்டான். இந்த அஷ்டகராஜன் தான் முதலில் விழுவான் என்று நாரதர் சொன்னார். அதற்கு என்ன காரணம் என்று அவன் கேட்டான். முனிவர், நான் இந்த அஷ்டகனுடைய அரண்

மனையில் சில நாள் வசித்தேன். ஒரு நாள் அஷ்டகன் என்னையும் தேர்மே லேற்றிக்கொண்டு நகரத்துக்கு வெளியில் போனான். அங்கே பல வர்ணங் களை யுடைய ஆயிரம் பசுக்கள் அடங்கின ஒரு பசு மந்தை யிருக்கிறதை நான் பார்த்தேன். நான் அஷ்டகனைப் பார்த்து இந்தப் பசு மந்தை யாருடையது என்று கேட்டேன். அதற்கு அஷ்டகன் " நான் எனக்கு இந்தப் பசு மந் தையைத் தானம் செய்துகொண்டேன் " என்று இறுமாந்து கூறித் தன்னைப் புகழ்ந்து கொண்டான். இந்தக் காரணத்தினால் அவன் முதலில் விழுவான் என்று சொன்னார்.

6—10. பிறகு எங்கள் மூவருக்குள் எவன் முதலில் விழுவான் என்று கேட்டான். முனிவர் பிரதர்த்தனன் என்று சொன்னார். அரசன், அதற்கு என்ன காரணம் என்று கேட்டான். முனிவர், நான் பிரதர்த்தனனுடைய அரண் மனையிலும் சில நாள் வசித்தேன் ஒரு நாள் நானும் அவனும் தேரின்மேல் ஏறிக்கொண்டுபோனோம். அப்படிப் போகையில் ஒரு பிராமணன் வந்து அரசனே! எனக்கு ஒரு குதிரை கொடும் என்று கேட்டான். பிரதர்த் தனன் நான் திரும்பி வந்ததும் தருகிறேன் என்றான் பிராமணன் தாமசம் பண்ணாமல் இப்போதே கொடும் என்று கேட்டான். தேரின் வலப்புறத்தில் கட்டி யிருந்த குதிரைகளில் ஒன்றை அவிழ்த்து அந்தப் பிராமணனுக்குக் கொடுத்தான். பிறகு மற்றொரு பிராமணன் வந்து எனக்கு ஒரு குதிரை வேண்டுமென்று கேட்டான். தேரின் இடப்புறத்திலுள்ள ஒரு குதிரையை அவிழ்த்து அவனுக்குக் கொடுத்தான். போகும் வழியில் மற்றொரு பிராம ணன் வந்து ஒரு குதிரை வேண்டுமென்று யாசித்தான். தேரின் இடப் புறத் தில் முன்னாலே கட்டியிருந்த குதிரையை அவிழ்த்து அவனுக்குக் கொடுத்து விட்டுப் போகையில் மற்றொரு பிராமணன் வந்து ஒரு குதிரை வேண்டு மென்று கேட்டான். தன்னிடத்திலிருந்து ஒரு குதிரையையும் அந்தப் பிரா மணனுக்குக்கொடுத்துவிட்டு இரதத்தைத் தான் இழுத்துக்கொண்டுபோனான். போகையில் இனி பிராமணனுக்குக் கொடுப்பதற்கு யாதொன்று மில்லை என்று சொன்னான். இந்த அரசன் தர்மம் செய்தாலும் புகழ்ச்சியை விரும்பிக் கொடுத்தான். ஆகையால் அவன் முந்தி விழுவான் என்றார்.

11—15. எங்கள் இருவருக்குள் யார் முந்தி விழுவார் என்று வசுமனன் கேட்டான். வசுமனன் விழுவான் என்று முனிவர் சொன்னார். வசுமனன் அதற்கு என்ன காரணம் என்று கேட்டான். நாரத முனிவர், நான் எங்கும் அலைந்து விட்டு வசுமனன் அரண்மனைக்கு வந்தேன். அப்போது வசுமனன் ஒரு புஷ்ப இரதத்தைக் குறித்து சஷ்டிவசனம் என்கிற சடங்கைச் செய்து கொண்டிருந்தான். பிராமணர்கள் அந்த வேள்வியை முடித்ததும் அந்த இர தம் வெளிப்பட்டது. நான் அந்த இரதத்தைப் புகழ்ந்து பேசினேன். வசு மனன் என்னைப் பார்த்து முனிவரே! நீர் இந்த இரதத்தைப் புகழ்ந்தபடியால் இந்த இரதம் உம்முடையதாக இருக்கட்டும் என்று சொன்னான், பிறகு ஒரு

காலத்தில் நான் அவனிடம் போனேன். அப்போது தேரை விரும்பித்தான் அவனிடம் போனேன். அரசன் இந்தத் தேர் உம்முடையது என்று சொன்னான். நான் மூன்றும் தடவையும் அவனிடம் போய் அந்தத் தேரைப் புகழ்ந்தேன். அப்போது அரசன் அந்தப் புஷ்பத் தேரைப் பிராமணர்களுக்குக் காட்டிக் கொண்டிருந்தான். அப்போதும் அவன் என்னைப் பார்த்து முனிவரே! நீரும் இந்த இரதத்தைப் புகழ்ந்தீர் என்று சொன்னானே தவிரத் தேரை எனக்குக் கொடுக்கவில்லை. ஆகையால் அவன் சொர்க்கத்திலிருந்து விழுவான் என்றார்.

16—27. அப்போது அவர்களுள் ஒருவன் முனிவரைப் பார்த்து நீரும் சிபியும் சொர்க்கம் போனால் யார் சொர்க்கத்தை அடைவார்கள்? யார் விழுவார்கள்? என்று கேட்டான். நாரதர், சிபி சொர்க்கம் போவான். நான் விழுவேன் என்றார். அரசன் அதற்குக் காரணம் யாது என்று கேட்டான். நாரதர் நான் சிபிக்குச் சரியானவன் அல்ல. ஒரு நாள் ஒரு பிராமணன் சிபியினிடத்தில் வந்து, நான் போஜனத்தை விரும்பி வந்தேன் என்றான். சிபி, நான் என்ன செய்ய வேண்டும்? அதைக் கட்டளையிடுங்கள் என்றான். உன்னுடைய புத்திரனை பிருஹத்ரதனைக் கொன்று சமயல் செய்து எனக்கு இடவேண்டும் என்றான். சிபி என்ன சொல்வானோ வென்று அறியும்படி நான் காத்துக் கொண்டிருந்தேன். சிபி அப்படியே தன் குமாரனைக் கொன்று சமைத்து ஒரு பாத்திரத்தில் இட்டுத், தன் தலையில் வைத்துக்கொண்டு, அந்தப் பிராமணனைத் தேடிக்கொண்டு போனான். போகும் போது சிலர் சிபியைப் பார்த்து அந்தப் பிராமணன் நகரத்துக்குள் புகுந்து கோபத்தாலே உன்னுடைய மாளிகை, அந்தப்புரம், பொக்கிஷ சாலை, குதிரை லாயம், ஆயுத சாலை எல்லாவற்றையும் தீ யிட்டுக் கொளுத்துகிறான் என்று சொன்னார்கள். சிபி அவைகளை கேட்ட போதும் முகத்தில் வேறுபாடு தோன்றாமலிருந்தான். பிறகு நகரத்துக்குப் போய் அந்தப் பிராமணனைப் பார்த்து, மஹாத்மாவே! போஜனம் சித்தமாயிருக்கிறது என்றான். இதைக் கேட்ட பிராமணன் மௌனமாய் நின்றான். அதிசயத்தால் கீழ்ப் பார்வையாக நோக்கிக்கொண்டு நின்றான். சிபி, அந்தப் பிராமணனுக்கு மகிழ்ச்சி யுண்டாகும்படி பேசி, மஹானுபாவரே! நீர் போஜனம் செய்தருளும் என்றான். பிராமணன் சற்று நேரம் சும்மா இருந்து பிறகு சிபியைப் பார்த்து அதை நீ புசி என்றான். சிபி அப்படியே ஆகட்டுமென்று சொல்லி அந்த மாமிசத்தை உண்பதற்காகக் கையில் எடுத்தான். உடனே பிராமணன் சிபியின் கையைப் பிடித்துக்கொண்டு, அரசனே! நீ உண்மையாகவே கோபத்தை ஜயித்து விட்டாய். உன்னாலே பிராமணர்களுக்குக் கொடுக்கக் கூடாதது ஒன்றும் இல்லை. பிறகு பிராமணன் சிபியை வணங்கினான். பிறகு சிபி, தன் புத்திரன் தேவ குமாரனைப் போலத் தனக்கு எதிரில் நிற்பதைக் கண்டான். அந்தச் சிறுவன் சர்வாபரணங்களையும் அணிந்தவனாய் சரீரத்தில் சுகந்த பரிமளம் வீச நின்றான். அந்தப் பிராமணன் இவைகளைச் செய்து விட்டு உடனே மறைந்து போனான். விதாதா என்னப்பட்ட தேவன் சிபியைப் பரிட்சிக்கும்படி பிராமண ரூபமாக வந்து இவைகளைச் செய்தான்.

விதாதா போனபின் மந்திரிகள் அரசனிடம் வந்து உமக்கு எல்லாம் தெரியும். அப்படி யிருந்தும் இப்படிப்பட்ட காரியம் என் செய்கிறீர் என்று கேட்டார்கள். சிபி, நான் புகழ்ச்சிக்காகவாவது, ஐசுவரியத்தை இச்சித்தாவது, வேறு சுக போகங்களை அடைய விரும்பியாவது நான் இவைகளைச் செய்யவில்லை. ஆனால் இது ஒருபோதும் பாப மார்க்கமாவதில்லை. அதைப் பற்றித் தான் நான் செய்கிறேன் என்றான். தர்ம மார்க்கமானது புகழப்படுவதாயிருக்கிறது என் இருதயம் எப்போதும் அந்த வழியையே விரும்புகிறது என்றான். சிபியின் மகிமையை விளக்குகிற இந்தத் திருஷ்டாந்த சரித்திரம் எனக்குத் தெரியும். ஆகையால் இதை உங்களுக்குச் சொன்னேன் என்று மார்க்கண்டேயர் சொன்னார்.

---

## 199-வது அத்தியாயம்.

*மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.*

1—11. பிறகு பாண்டவர்களும் ரிஷிகளும் மார்க்கண்டேயரைப் பார்த்து உம்மை விட நீண்ட ஆயுசுள்ளவர்கள் எவராவது இருக்கிறார்களா என்று கேட்டார்கள். மார்க்கண்டேயர், ஆம் இந்திரத்யும்னன் என்று ஒரு இராஜரிஷி யிருக்கிறான் அவனுடைய புண்ணியம் குறைந்து சொர்க்கத்திலிருந்து கீழே விழுந்தான். அப்போது அவன் என்னிடத்தில் வந்து நீர் என்னை அறிவீரா? என்று கேட்டான். நான் அவனைப் பார்த்து அரசனே! நான் புண்ணியத்தை விரும்புகிறவனாதலால் ஒரே இடத்தில் தங்கி யிருப்பதில்லை. ஒரு நகரம், அல்லது கிராமத்தில் ஒரு இரவுக்கு மேல் தங்குகிறதில்லை. ஆகையால் என்னைப் போன்ற ஒருவன் உன்னை அறிவது கூடாத காரியம். விரதத்தாலும் உபவாசத்தாலும் எங்களுடைய சரீரம் மெலிந்திருக்கின்றது ஆகையால் உலக இன்பங்களை யடைவதற்காகப் பொருள் தேட முயற்சிப்பதில்லை என்றேன். அரசன், அப்படியானால் உம்மை விட நீண்ட ஆயுசுள்ளவர்கள் எவராவது இருக்கிறார்களா என்று கேட்டான். இமயமலையில் பிராவாகர்ணன் என்று ஒரு ஆந்தை இருக்கிறது. அது என்னை விட முதிர்ந்த வயசுள்ளது. அது உன்னை அறிந்திருக்கலாம். அது வசிக்கிற இடம் வெகு தூரத்திலிருக்கிறது என்று சொன்னேன். அரசன் ஒரு குதிரை வடிவம் கொண்டு என்னை முதுகின் மேல் ஏற்றிக்கொண்டு ஆந்தையினிடம் போனான். அந்த ஆந்தையைப் பார்த்து நீர் என்னை அறிவீரா? என்று கேட்டான். அது சற்று நேரம் யோசித்து நான் உன்னை அறிய மாட்டேன் என்றது. அரசன் உம்மை விடப் பெரியவர்கள் இருக்கிறார்களா? என்றான். இந்திரத்யும்னம் என்கிற மடுவில் நாடிஜங்கம் என்று ஒரு கொக்கு இருக்கிறது. அது எங்களை விட வயதில் பெரியது. அதைக் கேட்கலாம் என்றது. அரசன் எங்களிருவரையும் தூக்கிக்கொண்டு கொக்கினிடம் போய்ச் சேர்ந்தான். நாங்கள் கொக்

னைப் பார்த்து இந்திரத்யும்னனை அறிவீரா என்று கேட்டோம். அதுவும் சற்று யோசித்து இந்திரத்யும்னராஜனை அறியமாட்டேன் என்றது. உம்மை விட வயதில் மூத்தவர்கள் இருக்கிறார்களா? என்று கேட்டோம். அது ஆம்; இங்கே ஒரு மடு இருக்கிறது. அதில் ஆகுபாரன் என்று ஒரு ஆமை இருக்கிறது. அது என்னை விடப் பெரியது. அது உன்னைப் பற்றி அறிந்திருக்கலாம். அதைக் கேள் என்றது. நாங்கள் அவ்விடத்துக்குப் போனோம். கொக்கு ஆகுபாரனை நோக்கி நாங்கள் உம்மிடத்தில் ஒரு விஷயம் கேட்க விரும்புகிறோம். ஆகையால் எங்களிடம் வரவேண்டும் என்றது. ஆமை எங்கள் கிட்ட வந்தது. அப்போது நாங்கள் இந்த இந்திரத்யும்னனைப் பற்றி ஏதாவது அறிந்திருப்பீரா? என்று கேட்டோம். ஆமை ஒரு க்ஷணம் யோசித்தது; பிறகு அதின் கண்களில் நின்று நீர் சொரிகியது. மனம் கலங்கிற்று. சரீரம் நடுங்கிற்று. ஸ்மரணை அற்று இருந்தது. பிறகு கைகளைக் குவித்துக்கொண்டு நான் ஏன் இவ்வரசனை அறியாதிருப்பேன். அவன் ஆயிரம் தடவை யூபஸ்தம்பங்களை நாட்டினான். இவ்வரசன் யாகம் செய்து முடித்ததும் பிராமணர்களுக்குத் தானம் கொடுத்த பசுவின் கால் குளம்பினாலேயே இந்த மடு உண்டாயிற்று. அது முதலாக நான் இந்தக் குளத்தில் வசிக்கிறேன் என்றது.

12—18. இப்படி ஆமை சொல்வதை நாங்கள் கேட்டுக் கொண்டிருக்கும்போதே ஒரு தெய்வவிமானம் அங்கே வந்தது. அரசனே! நீ விரும்பின புண்ணிய லோகத்துக்குப் போய்ச் சேரு. உன் புண்ணியச் செய்கை பெரிது. ஆகையால் உனக்காக ஏற்பட்ட புண்ணியலோகம் போ என்று ஒரு அசரீரி வாக்கு கேட்டது. புண்ணிய கர்மம் உலகமெல்லாம் பரவிப் பின் சொர்க்கத்தைச் சேருகிறது. அந்தக் கீர்த்தி உலகத்தில் பெற்றிருக்கும் அளவும் அவன் சொர்க்கத்தில் வசிப்பான். எவனுடைய பாபகர்மம் உலகத்தில் பேசப்படுகிறதோ அதுவரைக்கும் அவன் நரகத்தில் கிடப்பான். ஆகையால் மனிதன் புகழப்படுகிற கர்மத்தையே செய்ய வேண்டும் அப்படிச் செய்தால் அவன் சொர்க்கத்தை அடைவான், நிறைந்த பாப சிந்தையுள்ளவன் தர்மத்தைத் தேட வேண்டும் என்ற பாடலும் பாடப்பட்டது. இதைக் கேட்ட அரசன், நான் இவர்களை அவர்களிருந்த இடத்துக்கு க்கொண்டுபோய் விட்டு வருகிறவரைக்கும் இந்த விமானம் இங்கே நிற்கட்டும் என்று சொல்லி நாங்கள் இருந்த இடத்துக்கு எங்களைக் கொண்டு வந்து விட்டான். அதன் பின் விமானத்தில் ஏறிக்கொண்டு அவனுக்கென்று நியமிக்கப்பட்ட புண்ணிய பதவியை அடைந்தான். நான் நெடுங்காலமாக ஜீவித்திருக்கிறபடியால் இவைகளைக் கண்டேன் என்று சொன்னார். அப்போது பாண்டவர்கள் மார்க்கண்டேயரைப் பார்த்து, மஹானுபாவரே! சொர்க்கத்திலிருந்து விழுந்த இந்திரத்யும்னராஜன் மறுபடியும் சொர்க்கத்தை அடையும்படியாகச் சரியான மார்க்கத்தைக் காட்டி அவனைக் காப்பாற்றினீர் என்றார்கள். மார்க்கண்டேயர், இந்தக் கிருஷ்ணன் கூட பிருகன் என்ற இராஜரிஷியைக் காப்பாற்றினார். அவன் சொர்க்கத்திலிருந்து நரகத்தில் விழுந்தான். அவனைச் சொர்க்கம் போய்ச் சேரும்படி கிருஷ்ணன் செய்தார் என்று சொன்னார்.

# 200-வது அத்தியாயம்.

## மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—3. மார்க்கண்டேயரால் இந்திரத்யும்நன் சரித்திரத்தைக் கேட்ட யுதிஷ்டிர மஹாராஜா மார்க்கண்டேயரை நோக்கி, மஹரிஷியே! ஒருவன் சொர்க்கம் போக விரும்பினால் அவன் எப்படித் தர்மங்களைச் செய்ய வேண்டும். பெரியவனான பிறகு பழக வேண்டுமா? அல்லது பால பருவத்திலேயே பழக வேண்டுமா? அல்லது கௌமார பருவத்திலா? அல்லது விருத்தாப்பியத்திலா? இவைகளை எனக்குச் சொல்ல வேண்டுமே என்று கேட்டார்.

4—12. மார்க்கண்டேயர் சொல்லுகிறார். நாலுவகையான வாழ்வு பயனற்றது. பதினாறு வகையான தர்மம் பயனற்றது. பயனற்ற நால் வகை வாழ்வாவது, குழந்தைகளில்லாத வாழ்வு; தர்மமில்லாத வாழ்வு; பிறர் பொருளால் ஜீவிக்கும் வாழ்வு; தனக்கென்று சமைத்துண்ணும் வாழ்வு இவைகளே. பதினாறு வகை தானங்களாவது, தர்ம நெறி கடந்து கொடுத்தல்; அதர்மத்தால் சம்பாதித்த பொருள்களைக் கொடுப்பது; அயோக்கியத்தாலும் சம்பாதித்த பொருள்களைக் கொடுத்தல்; நெறிகெட்ட பார்ப்பானுக்குக் கொடுப்பது; கள்ளத்தனமான குருவுக்குக் கொடுத்தல்; திருடனுக்குக் கொடுத்தல்; பொய்யனுக்குக் கொடுப்பது, கிராம புரோகிதனுக்குக் கொடுப்பது; வேத விக்கிரயம் பண்ணுகிறவனுக்குக் கொடுப்பது; சூத்திரனுக்குச் சமைத்துப் போடுகிற பார்ப்பானுக்குக் கொடுப்பது; ஜாதியால் மாத்திரம் பார்ப்பானாயிருப்பவனுக்குக் கொடுப்பது; பிராமணாசார மில்லாதவனுக்குக் கொடுப்பது; ருதுவான பெண்ணை மணந்த பிராமணனுக்குக் கொடுப்பது; பெண்ணுக்குக் கொடுப்பது; பாம்பாட்டுகிறவனுக்குக் கொடுப்பது; விகடம் பண்ணுகிறவனுக்குக் கொடுத்தல்; ஆகிய இந்தப் பதினாறு வகைத் தானங்களும் பயனற்றனவாம். பயத்தினாலாவது கோபத்தினாலாவது கொடுப்பதும் பயன் தாராது. ஆகையால் யுதிஷ்டிர மஹாராஜனே! சொர்க்கத்தை விரும்புகிறவன் இவைகளை யறிந்து சற்பாத்திரமான பிராமணனுக்குக் கொடுக்க வேண்டும் என்றார். யுதிஷ்டிரர் மஹானுபாவரே! நாலு வருணத்தாரிடத்திலும் வாங்குகிற பிராமணர்கள் தங்களையும் தானம் கொடுப்பவர்களையும் எப்படி யிரட்சிப்பார்கள் என்று கேட்க மார்க்கண்டேயர் சொல்லுகிறார்,

13—32. மந்திர ஜபத்தாலும், ஹோமத்தாலும் வேதாத்தியயனத்தாலும் பிராமணர்கள் ஒரு வேதபடகை உண்டாக்கி அதனால் தம்மையும் மற்றவர்களையும் கரையேற்றுகிறார்கள். பிராமணர்களைத் திருப்தி செய்விக்கிறவனைத் தேவர்கள் சந்தோஷப் படுத்துகிறார்கள். ஒரு பிராமணனுடைய கட்டளையால் ஒரு மனிதன் சொர்க்கத்துக்குப் போகிறான். அரசனே! நீர் தேவ பிதிர் ரிஷிகளை ஆராதிப்பதாலும், பிராமணர்களை வணங்குகிறதினாலும் நிச்சயமாகவே சொர்க்கத்தை அடைவீர். தர்மத்தையும் சொர்க்கத்தையும் அடைய விரும்

புகிறவன் பிராமணர்களை வணங்க வேண்டும். சிராத்த காலத்தில் பிராமணர் களைப் பக்தி சிரத்தைகளுடன் உபசரிக்க வேண்டும். சபிக்கப்பட்டவனும், நெறி கெட்டவனும், மிக்க அழுக்குள்ளவனும், மிகக் கறுப்பானவனும், நகமில் லாதவனும், குஷ்டரோகியும், வஞ்சகனும், துராசாரமுள்ளவனும், விதவைக் குப் பிறந்தவனும், தேசாந்திரம் போயிருக்கிறவனுடைய மனைவிக்குப் பிறந்தவ னும், ஆயுத வித்தையால் ஜீவிக்கிறவனும் ஆகிய பிராமணர்களை விலக்கி விட வேண்டும். தவறாகச் செய்யப்படுகிற சிராத்தமானது, நெருப்பு உலர்ந்த காட்டைத் தகிப்பது போலக் கர்த்தாவைத் தகித்துவிடும். ஊமை, குருடு, செவிடு முதலிய குற்றமுள்ளவர்களைச் சிராத்த பிராமணர்களாக வரிக்கப் படாது அவ்விஷயத்தில் வேதமுணர்ந்த பிராமணர்களைக் கேட்டுச் செய்ய வேண்டும், அரசனே! கொடுக்கத்தக்கவைகளைச் சொல்லுகிறேன். தன் னையும் தானம் கொடுக்கிற கர்த்தாவையும் காப்பாற்றத் தக்க வேதபிராமணனுக் குத் தான் தானம் கொடுக்க வேண்டும். ஏனென்றால் அவன்தான் தானம் வாங்குகிறதற்கு அருகனான பிராமணன் அரசனே! பரிசுத்தமான அக்கினி தேவன் அதிதி பூஜையால் மகிழ்வது போல மற்ற எதனாலும் மகிழ்ச்சி அடைவ தில்லை. ஆகையால் அதிதிகளை எவ்வகையாலும் பூசனை செய். அதிதிகளுக் குக் கால் கழுவ நீரும், களைத்துப் போயிருக்கிற கால்களுக்குத் தடவ வெண் ணெயும், இருட்டுக்கு வெளிச்சமும், உணவும், தங்க இடமும், கொடுக்கிற வன் எமனிடம் போகவே மாட்டான். தேவ நிர்மாலியமான மாலைகள், பிரா மணர்கள் புசித்த சேஷம் முதலியவற்றை விலக்கித், தான் சித்தம் பண்ணின ஆகாரத்தைக் கொடுத்து உபசரித்தால் கோதானத்தை விட மேலான பலனுண் டாகும். கபிலை தானமானது கொடுத்தவனை நரகத்தில் நின்றும் காப்பாற்று கிறது ஆகையால் மனிதன் கோதானம் செய்ய வேண்டும் உயர் குலத்தில் பிறந்தவனும், வேதம் கற்றவனும், அழகானவனும், கிருகஸ்தனும், மனைவி புத் திரர்களை யுடையவனும் அக்கினி ஹோத்திரம் செய்கிறவனும், உன்னிடம் காத்திராதவனுமான பிராமணனுக்குக் கொடுக்க வேண்டும். பணக்காரர் களுக்குக் கொடுக்கப்படாது. ஒரு பசுவை ஒரு பிராமணனுக்குக் கொடுக்க வேண்டும். பலருக்குக் கொடுக்கக் கூடாது. அந்தப் பசு விற்கப்பட்டால் கர்த்தாவின் மூன்று தலை முறைகளை நரகத்தில் விழுத்தும். அந்தத் தானம் கொடுத்தவன், வாங்கினவன் இருவரையும் கெடுத்து விடும். சொர்ணதானம் செய்கிறவன் நித்திய இன்பத்தைப் பெறுவான். உழவுக்குரிய எருதைத் தானம் கொடுக்கிறவன் ஒருபோதும் துக்கத்தை அடையமாட்டான். அவன் நிச்சய மாகவே சொர்க்கத்தை அடைவான். பிராமணர்களுக்குப் பூதானம் செய்கிற வன் எல்லா மனோரதங்களையும் பெறுவான்.

83—42. பிரயாணியானவன் மெலிந்த அவயவங்களுடனும், புழுதியடைந் த பாதங்களுடனும் களைத்துத் தனக்கு அன்னம் அளிக்கக்கூடியவனிடம் வந்து ஆகாரம் கேட்கிறான். அப்போது போஜனம் இடக்கூடியவனை அந்த அதிதி க்குத் தெரிவித்தால் அதுவே அன்னம் இட்டதற்குச் சமானமான புண்ணி

யம் ஆகையால், அன்னதானத்துக்குச் சமமான தானம் மற்றொன்றும் கிடையாது. ஆகையால் புத்தியுள்ள மனிதன் தன்சக்திக்குத் தக்கபடி நன்றாய்ச் சமைக்கப்பட்ட அன்னத்தைப் பிராமணர்களுக்குக் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுக்கிற மனிதன் பிரஜாபதியுடன் கூடி வாழ்வான். அன்னதானத்திற்கு மேற்பட்ட தானமில்லை யென்று அறிந்துகொள். அன்னமே பிரஜாபதி(பிரமா) என்று கருதப்படுகிறது. பிரஜாபதியே வருஷங்களாகவும், வருஷ யாகமாகவும் சொல்லப்படுகிறார். சராசரங்களெல்லாம் யாகத்தில் நின்றே உற்பத்தியாகின்றன. இதனாலே அன்னமானது சகல பிராணிகளுக்கும் முக்கியமானது. ஏரிகள், பெரிய குளங்கள், கிணறுகள். குட்டைகள், தங்க இடம், இனிய வசனங்களுடன் ஆகாரம் முதலிய கொடுக்கிறவர்கள் எமனிடம் போவதில்லை. சன்மார்க்கத்தில் நடக்கிற பிராமணனுக்கு அன்னமும், தன் முயற்சியால் சம்பாதித்த திரவியம் கொடுக்கிறவனை உலகமெல்லாம் புகழும். பூமியானது அந்த மனிதனுக்கு ஐசுவரியத்தை மழை போலச் சொரியும். அன்னதானம் செய்கிறவன் முதன்மையானவன். இரண்டாவது சத்தியத்தைப் பேசுகிறவன். மூன்றாவது கேளாமல் கொடுக்கிறவன். இம்மூவரும் ஒரே பதவியை அடைவார்கள் என்று மார்க்கண்டேயர் கூறினார்.

43—45. யுதிஷ்டிரர்தமது சகோதரர்களுடன் ஆச்சரியம் அடைந்தவராய் மறுபடியும் மார்கண்டேயரை நோக்கி, மஹரிஷியே! எமனுலகம் எத்தனைதூரம் இருக்கிறது. அதனுடைய அளவு எத்தனை? ஒரு மனிதன் எப்படி அதைக் கடந்து போவான்! இவைகளை எனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்டார். மார்க்கண்டேயர், மனிதர்களுக்குள் சிறந்தவனே! இந்தக் கேள்வி மிகவும் இரகசியமானது. அது பரிசுத்தமானது. இது ரிஷிகளால் புகழப்படுகிறது. இதை நான் உனக்குச் சொல்கிறேன் என்று சொல்கிறார்.

46—63. நராதிபனே! எமனுலகமானது பூலோகத்தில் இருந்து எண்பத்தாறாயிரம் யோசனை தூரத்தில் இருக்கிறது. அதற்குப் போகும் வழி ஆகாயத்தில் உள்ளது. அங்கே தண்ணீர் கிடையாது. அது பார்க்கப் பயங்கரமாயிருக்கும். அவ்விடங்களில் நிழலாவது, மரங்களாவது, தண்ணீராவது, தங்குமிடமாவது கிடையா. ஆகையால் களைத்த மனிதர்கள் களையாற முடியாது. எமதூதர்கள் இந்த வழியாகத்தான் ஜீவாத்மாக்களைக் கொண்டுபோவார்கள். புருஷர்களும் ஸ்திரீகளும், சகல பிராணிகளும் இந்த வழியிலே தான் போகவேண்டும். சற்பிராமணர்களுக்குக் குதிரை முதலிய வாகனதானம் கொடுத்தவர் அந்த வாகனங்களின்மேல் ஏறிக்கொண்டு போவார்கள். குடை கொடுத்தவன் அந்தக் குடை நிழலில் போவான். அன்னதானம் செய்தவன் பசி உபாதியின்றிச் செல்வான். அன்னதானம் செய்யாதவன்பசியால் உபாதியடைந்து கொண்டே போவான். வஸ்திரதானம் செய்தவன் வஸ்திரதாரணம் செய்துகொண்டு போவான். அது செய்யாதவன் நிர்வாணியாகப் போவான். சொர்ணதானம் செய்தவன் சந்தோஷமாகப் போவான். பூதானம் செய்தவன் சந்தோஷமாகப் போவான். பூதானஞ் செய்தவன் எல்லா எண்ணங்களும் நிறை

வேறப்பெற்றவனும் மகிழ்ந்து செல்வான். தானியதானம் பண்ணினவன் யாதொரு கவலையும் இல்லாமல் மகிழ்ந்து செல்வான். வீடு தானம் செய்தவன் இரதத்தின் மேலேறிக்கொண்டு போவான். சோதானம செய்தவன் தாகத் தால் வருந்தாமல் மகிழ்ச்சியுடன் போவான். தீப தானம் செய்தவன் வெளிச் சத்துடன் போவான். கோதானம் பண்ணினவன் பாவம் அற்றவனாய்ப் போ வான். ஒரு மாதம் உபவாச மிருந்தவன் அன்னங்களால் இழுக்கப்படும்தேரின் மேல் செல்வான். பாண்டு புத்திரனே! ஆறு இரவு உபவாசம் இருந்தவன் மயில்களால் இழுக்கப்படும் தேரின்மேல் போவான். ஒரே வேளை புசித்துக் கொண்டு மூன்று நாள் விரதமிருந்தவன், வியாதியும் கவலையும் இல்லாமல் போவான். தண்ணீர் தானமானது அந்த மார்க்கத்தில் மிகவும்சந்தோஷத்தைக் கொடுக்கிறது. அங்கே புஷ்பதகம் என்று ஒரு ஆறு ஓடுகிறது அதிலுள்ள அமிர்தம்போன்ற நீரைப் பானம் பண்ணுவார்கள். துர்க் கர்மிகள் அவர்களுக் கென்று ஏற்படுத்தப்பட்டிருக்கிற சீறு நீரைப் பானம் பண்ணுவார்கள். அந்த ஆறானது குடிப்பவருடைய சகல விருப்பங்களையும் நிறைவேறச் செய்யும். அரசர்க்கரசனே! வழி நடையால் களைத்து, புழுதிபடிந்து வருகிற பிராமணனை ஆராதிக்க வேண்டும். அவனைத் தேவேந்திரனும் எல்லாத் தேவர்களும் தொடர்ந்து வருவார்கள். ஏனென்றால் அந்தப் பிராமணனை ஆராதிப்பதனால் இந்திரன் முதலான தேவர்கள் திருப்தி அடைகிறார்கள். ஆகையால் அரச னே! களைத்து வருகிற அதிதிகளாகிய பிராமணர்களை ஆராதனை செய். நான் உனக்கு நூறு விஷயங்களைச் சொன்னேன். இன்னம் உனக்கு என்ன சொல்ல வேண்டும் என்று கேட்டார்.

64—80. யுதிஷ்டிரர், மஹானுபாவரே! தர்மம் நீதி இவைகளையே நான் கேட்க விரும்புகிறேன் என்றார். மார்கண்டேயர், சகல பாவங்களையும் தொ லைப்பதான ஒரு விஷயத்தைச் சொல்கிறேன். கவனமாய்க்கேள். அரசனே! பிராமணர்களுடைய பாதங்களை அலம்புகிறவன் புஷ்கர தீர்த்தத்தில் கோதா னம் செய்த பலனை அடைகிறான். பிராமணனுடைய பாதங்களைக் கழுவின தண்ணீரால் எதுவரைக்கும் பூமி ஈரமாயிருக்கிறதோ அது வரையிலும் அவ னுடைய பிதிர்க்கள் தாமரையிலுள்ள நீரைப் பானம் பண்ணுகிறார்கள். ஒரு அதிதியை உபசரித்து அழைத்தால் அக்கினிதேவன் திருப்தி அடைகிறான் அதிதிக்கு ஆசனம் கொடுத்தால் இந்திரன் மகிழ்கிறான். அதிதியின் பாதங் களைக் கழுவினால் பிதிர்க்கள் திருப்தி அடைகிறார்கள். அதிதிக்குப் போஜ னம் அளித்தால் பிரம தேவன் திருப்தி அடைகிறான் மன அடக்கம் உடை யவனாய், கன்றினுடைய பாதங்களும் தலையும் வெளிப்படுகிற தருணத்தில் உள்ள பசுவைத் தானம் பண்ண வேண்டும். கன்று பூமியில் விழுகிறதற்கு முன் அந்தப் பசு பூமிக்கு ஒப்பானதாகக் கருதப்படுகிறது. அப்படிப்பட்ட பசுவைத் தானம் பண்ணினவன், அந்தப்பசு கன்றுக்குட்டி யிரண்டின் சரீரத்தில் எத்தனை மயிர்கள் இருக்கின்றனவோ அத்தனை யுகம் தேவலோகத்தில் தேவர்கள் வண

ங்க வசிப்பான். பாரதோத்தமனே! அதைத் தானம் வாங்கினவன் உடனே அதை யோக்கியனும் தர்மிஷ்டனுமானவனுக்குத் தானம் கொடுப்பான் ஆனால் அவன் மஹா புண்ணியத்தை அடைகிறான். பூமி முழுவதையும் தானம் பண்ணின பலன் உண்டாகும். தன் முழங்கால்களுக்கு இடையில் கைகளை வைத்துக்கொண்டு மௌனமாய்ப் புசிக்கிற பிராமணன் நிச்சயமாய் மற்றவரை யிரட்சிப்பான். மதுபானம் செய்யாதவனும், பிறரால் நிந்திக்கப்படாதவனும், தினந்தோறும் ஸம்ஹிதைகளைப் படிக்கிறவனுமான பிராமணன் பிறரை யிரட்சிப்பான். வேதம் உணர்ந்த பிராமணனுக்கே ஹவ்விய கவ்வியங்களைக் கொடுக்க வேண்டும். அவன் அக்கினியில் ஹோமம் செய்கிற நெய் ஒருபோதும் வியர்த்தமாவதில்லை. அதுபோல வேதம் உணர்ந்த பிராமணனுக்குக் கொடுக்கிற தானம் வீணாவதில்லை. பிராமணர்களுக்குக் கோபமே ஆயுதம். இரும்பு, எஃகு முதலியவற்றால் செய்யப்படுகிற ஆயுதங்களைக் கொண்டு அவர்கள் சண்டை செய்வதில்லை பிராமணர்கள் தங்களுடைய கோபத்தினாலேயே சத்துருக்களைச் சங்கரிக்கிறார்கள். அவர்களுடைய கோபமானது அசுரர்களைக் கொல்கிற வஜ்ராயுதத்துக்கு ஒப்பானது. பாவமற்றவனே! தர்மம் நீதிகளைப் பற்றிய விஷயங்கள் எல்லாம் முடிந்தன என்றார். அதைக் கேட்ட ரிஷிகளும், நைமிசாரணிய வாசிகளும் மிக மகிழ்ச்சி யடைந்தார்கள். இதைக் கேட்ட எல்லாரும் துக்கம், பயம், கோபம், எல்லாவற்றையும் விட்டுப் பாவம் ஒழிந்து நிர்மலரானார்கள். இதைக் கேட்கிறவர்கள் மறுபிறப்பை அடைய மாட்டார்கள்.

81—101. யுதிஷ்டிரர், மார்க்கண்டேயரை நோக்கி மஹாத்மாவே! பிராமணர்கள் எதனால் பரிசுத்தராகிறார்கள்? அதை நான் கேட்க விரும்புகிறேன் என்றார். மார்க்கண்டேயர் அரசனே! பரிசுத்தம் மூன்று வகையாயிருக்கிறது. அதாவது வாக்கு, கர்மம், ஜலம். இம்மூன்றுந்தான் பிராமணர்களுக்குப் பரிசுத்த முண்டாக்குவன. இம் மூன்றையும் உடையவன் நிச்சயமாகவே சொர்க்கத்தை அடைவான். காலைமாலை யிருவேளையும் சந்தியா தேவதையை உபாசித்து வேதமாதாவான காயத்திரியை ஜபிக்கிற பிராமணன் சகல பாபங்களினின்றும் விடுபடுகிறான். அவன் பூமி முழுவதையும் தானம் வாங்கினாலும் துன்பம் அடையமாட்டான். விரோதமா யிருக்கிற சூரியன் முதலிய கிரகங்கள்கூட அவனுக்குச் சுபத்தையே செய்யும். மாம்ச பட்சணிகளான பயங்கரமுள்ள இராட்சதர்களும் அந்தப் பிராமணனுக்கு ஒரு தீங்கும் செய்யமாட்டார்கள். அவர்கள் போதிப்பதாலும், யாகம் செய்து வைப்பதாலும், தானம் வாங்குவதாலும் தீங்கு அடையமாட்டார்கள். அந்தப் பிராமணர்கள் நெருப்புக்குச் சமானமானவர்கள். பிராமணர்கள் வேதமோதினாலும் ஓதாவிட்டாலும், பரிசுத்தரானாலும் இல்லா விட்டாலும், அவர்களை ஒருபோதும் நிந்திக்கப்படாது. ஏனென்றால் அவர்கள் நீறுபூத்த நெருப்பைப் போலிருக்கிறார்கள். அசுத்தமான இடத்தில் எரிகிற நெருப்பு குற்றப் படுகிறதில்லை. அதுபோலப் பிராமணன் படித்தவனானாலும் படியாதவனானாலும்

பரிசுத்தனே. அவன் தேவர்களுக்கும் மேலானவன். மதில்கள், கோட்டை வாயில்கள், அரண்மனைகள் முதலியவற்றால் விளங்குகிற நகரங்கள் பிராமணர்கள் இல்லாவிட்டால் சிறப்பு அடையமாட்டா. அரசனே! வேதங்களைக் கற்றவர்களும், தங்கள் வருணத்துக்குரிய தர்மங்களைச் சரியாய்ச் செய்கிறவர்களும், ஞானமும் தவமும் உள்ளவர்களுமான பிராமணர்கள் வசிப்பதே சரியான நகரமாம் பார்த்தனே! காடாயிருந்தாலும், சதுப்பு நிலமாயிருந்தாலும் பிராமணர்கள் வசித்தால் அவைகளே நகரங்களாம். அவைகளே தீர்த்தங்களுமாம். தன் குடிகளைக் கிரமமாய்ப் பரிபாலிக்கிற அரசன், தவ மகிமையுள்ள பிராமணன் இவ்விருவர்களிடம் போவதும் அவர்களை வணங்குவதும் பாவங்களைத் தொலைக்கும் விதிகளாம். பரிசுத்தமான தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதும், பரிசுத்தமானவர்களுடைய நாமங்களை உச்சரிப்பதும், நல்லவர்களுடன் சம்பாஷிப்பதும், தர்மம் செய்வதும் புகழப்படுவனவாம் என்று கற்றோர் கூறுகிறார்கள். நல்லவர்களுடன் கூடியிருப்பதும், புண்ணிய தீர்த்தயாத்திரையும், பரிசுத்தமான சம்பாஷணையும் பாவங்களைப் போக்குவனவாம் திரிதண்டம் தாங்குவது, மௌனவிரத மிருப்பது, சடைதரிப்பது. முண்டனம் செய்துகொள்வது, மரவுரி கிருஷ்ணாஜினந் தரிப்பது, நோன்பு நோற்பது, தீர்த்தஸ்நானம், அக்னியாராதனை, வனத்தில் வசித்தல், இவைகளெல்லாம் மனசுத்த மில்லாதவர்களுக்குப் பலன் தருவதில்லை. அரசர்க் கரசனே! ஆறு இந்திரியங்களையும் அடக்க வேண்டும். அவைகளுக்குள் மனமானது மிகவும் கொடியது. பேச்சினாலும் மனதாலும் பாவம் பண்ணாமலிருக்கிற புண்ணியவானே தவம் புரியத் தக்கவன். தன்னைப் போல தன்னைச் சேர்ந்தவர்களையும் நேசியாதவன் பாபத்தினின்றும் விடுபடான். இரக்கமில்லாத மனசு தவசுக்குச் சத்துரு. சதா பரிசுத்தனு யிருப்பவனும் தன், வாழ்நாள் முழுவதிலும் தர்மம் செய்பவனும், குடும்பத்தில் வசித்தாலும் ரிஷிகளுக்கு ஒப்பாவான். அவன் சகல பாவங்களினின்றும் விடுபடுவான்.

102—119. உபவாசத்தாலும், தவத்தாலும் சரீரத்தை வாட்டி மெலியச்செய்தாலும் பாவம் ஒழியாது. மனப் பரிசுத்தமில்லாதவன் தவத்தால் சரீரத்தை வருத்துவது அறிவில்லாமையேயாம். அவன் அதனால் பாபத்தினின்றும் விடுபடுவதில்லை. ஆராதிக்கிற அக்கினி பாவத்தைப் போக்கமாட்டாது. பரிசுத்தத்தாலும், தர்மத்தினாலுமே ஒருவன் புண்ணிய லோகத்தை அடையவேண்டும், அவனுடைய தவம் விரதம் இரண்டும் பலன் தரும். கந்தமூல பலங்களைப் புசிப்பது, மவுன விரத மிருப்பது, வாயுபட்சணம் செய்வது, முண்டனம் செய்து கொள்வது, கிருகவாசத்தை விடுவது, சடை தரிப்பது, வெளியில் படுப்பது, நித்திய உபவாசமிருப்பது, அக்கினியை வணங்குவது, நீரில் முழுகித் தரையில் படுப்பது, இவைகள் சொர்க்கத்தைக் கொடா. பரிசுத்தம், தர்மச் செய்கை இவைகளே நோய், மூப்பு, மரணம் இவைகளை ஜயிக்கும் கருவிகளாம். அவற்றாலே மேலான பதவியை அடையலாம். வறுக்கப்பட்ட விதை

மூளையாதது போல ஞானத்தால் தகிக்கப்பட்ட ஆத்மாதன்பும் அடையாது. ஜீவன் பிரிந்த பின் மரக் கட்டைக்கு ஒப்பாயிருக்கிற இந்தச் சரீரமானது நீரில் தோன்றுகிற குமிழியைப் போல அற்ப வாழ்வை யுடையது. வேத வாக்கியத்தில் ஒன்று அல்லது பாதியின் உதவியாலே எல்லாச் சரீரங்களிலும் வசிக்கிற பிரமத்தை அறிகிறவனுக்கு வேறொன்றும் வேண்டியதில்லை. வேத வாக்கியத்திலுள்ள இரண்டொரு எழுத்துக்களினாலே உணர்த்தப் படுகிற பிரம ஞானமானது நூறு அல்லது ஆயிரம் சுலோகங்களினாலே விளக்கப் படுகிறது. பிரம ஞானமே மோட்ச காரணமாகும் எந்த உலகத்திலுள்ளவர்களுக்கும் பிரம தத்துவத்தில் சந்தேகம் உண்டாகும். ஆதலால் வேத வாக்கியத்தில் நம்பிக்கை வைக்க வேண்டுமென்று சற்றறிந்த பெரியோர்கள் கூறுகின்றார்கள். வேத வாக்கியத்தின் உண்மையான அர்த்தத்தை அறிகிறவன் அதன் உபயோகத்தையும் உணர்வான். பெரு நெருப்புக்குப் பயப்படுகிறது போல அவன் வேத விதிகளுக்கு அஞ்சுவான். வீண் வாதங்களை ஒழித்து விட்டு, ஸ்மிருதி சுருதி யிவற்றை ஆதாரமாகக் கொண்டு நித்தியமான பிரமப் பொருளை ஆராய்ந்து அறிய வேண்டும் ஒருவன் புத்தியைக் கொண்டு யோசித்து அறிவது பயன் படாது. ஆகையால் வேத உதவி கொண்டே ஆராய வேண்டும். வேதம் உண்மையானது. அது பிரமத்தின் சரீரம். அதுவே பிரமம். சகல ஜீவன்களிலும் இருக்கிற பிரமம் வேதம் உணர்ந்தவனுக்கே வெளியாகும். வேதங்களில் தேவர் முதலிய சகல பிராணிகளின் நிலைமைகளைப் பற்றி விளக்கப்பட்டிருக்கின்றன. அப்படியே யுகங்கள் தோறும் சம்பவிக்கின்றன. புலன்களின் கலக்கமே பந்தமாகும். தவத்தினால் சொர்க்கத்தை அடையலாம். புண்ணிய கருமத்தினால் பொருளையும் இன்பத்தையும் பெறலாம். தீர்த்த ஸ்நானத்தினால் பாவங்களை ஒழிக்கலாம் ஆனால் ஞானமின்றி முத்தி அடையக் கூடாது என்று சொன்னார். அதைக் கேட்ட யுதிஷ்டிரர், மஹானுபாவரே! உண்மையான தர்ம விதிகளை யறிய விரும்புகிறேன் என்று கேட்க மார்க்கண்டேயர் சொல்லுகிறார்.

120—129. அரசர்க் காசனே! யுதிஷ்டிரா! நீ கேட்கிற தர்ம விதி மிகவும் சிறப்புடையது. சுருதியிலும், ஸ்மிருதியிலும் சொல்லப்படுகிற தர்ம இரகசியத்தைச் சொல்லுகிறேன் கேள். கோஜலாசயத்தில் அசுவத விருட்சத்தின் நிழலில் சிராத்தம் செய்கிறவன் இலட்சம் கல்பம் நற்பயனை அனுபவிப்பான் மரணதருவாயிலிருப்பவனுக்கு உணவு கொடுப்பவனும், ஒருவனுக்குக் கிருகதானம் பண்ணுகிறவனும் சகல யாகங்களையும் செய்த பலனை அடைவார்கள். எதிர் முகமாய் ஓடுகிற ஆற்றின் கரையில் குதிரை தானம் செய்பவன் அக்ஷய பலனை அடைவான். போஜனத்தை உத்தேசித்து வருகிற அதிதி இந்திரனுக்குச் சமானம். அவனை உபசரிக்கிறவன் நித்திய பலனை அடைவான். அதிதிக்குத் தவிசு கொடுப்பவன், படகினால் நதியைக் கடப்பது போலப் பாவத்தைக் கடக்கிறான். ஆகையினால் பிராமணர்களுக்குக் கொடுக்கிற தானமானது நித்திய பலனைத் தரும். புண்ணிய தினங்களில் கொடுக்கிற தானம்

இரு மடங்கு பலனைத் தரும். புண்ணிய காலத்தில் கொடுக்கிற தானமானது பத்து மடங்கு அதிக பலன் தரும். விசேஷமான வருஷத்தில் செய்த தானம் நூறு மடங்கு பலனைத் தரும். மாதத்தின் கடைசி தினத்தில் கொடுக்கிறதானம் அழியாத பலனைத் தரும். உத்தராயண தட்சிணாயன புண்ணிய காலங்களில் கொடுக்கிற தானமும், சூரிய சந்திர கிரகண புண்ணிய காலங்களில் கொடுகிற தானமும் அழிவற்ற பலனைத்தரும். அரசர்க்கரசனே! பூதானம் செய்யாதவன் பூமியை அடைய மாட்டான். வாகன தானம் செய்யாதவன் வாகனங்களை யடைய மாட்டான். எவன் எந்தப் பொருளைப் பிராமணர்களுக்குக் கொடுக்கிறானோ அந்தப் பொருளை அவன் மறு பிறப்பில் அனுபவிப்பான். அக்கினியிலிருந்து சொர்ணம் உண்டாயிற்று. விஷ்ணுவினிட மிருந்து பூமி உற்பத்தி ஆயிற்று. பசு, சூரியனிடத்தி லிருந்து உண்டாயிற்று. ஆகையால் சொர்ணம், பூமி, பசு முதலியவற்றைத் தானம் பண்ணுகிறவன் அக்கினி, விஷ்ணு, சூரியன் இவர்களுடைய உலகங்களை அடைவான். தானத்தைப் போல நித்திய பலனைத் தருவது வேறொன்றுமில்லை. அதை விடச் சிறந்தது மூன்று உலகங்களிலும் இல்லை. கற்றறிந்தவர்கள் எல்லாரும் அப்படியே சொல்லுகிறார்கள்.

---

## 200-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—9. வைசம்பாயனர் ஜனமேஜயனைப் பார்த்து மஹாராஜனே? யுதிஷ்டிரர், இராஜரிஷியாகிய இந்திரத்யும்னன் சொர்க்கத்தை அடைந்ததைப் பற்றி மார்க்கண்டேயர் சொல்லக் கேட்டு மகிழ்ந்து, அவரை நோக்கிப் புண்ணியாத்மாவே! நீர் தேவர், தானவர். இராட்சதர், அநேக இராஜவம்சங்கள், ரிஷிகளின் வம்சங்கள் இவர்கள் எல்லாருடைய சரித்திரங்களையும் அறிவீர். உமக்குத் தெரியாதது உலகத்தில் ஒன்றும் இல்லை. மனிதர், நாகர், இராட்சதர்களுடைய சிறந்த சரித்திரங்களும் உமக்குத் தெரியும். யட்சர், கந்தர்வர், கின்னரர், அப்ஸரஸ்கள் முதலியவர்களுடைய சரித்திரங்களையும் நீர் அறிவீர். நான் இவைகள் எல்லாவற்றையும் உம்மால் தெரிந்துகொள்ள விரும்புகிறேன் ஜயிக்கப்படாத இட்சுவாகு வம்சத்தில் பிறந்த குவலாசுவனுக்குத் துந்துமாரன் என்றபேர் ஏன் வந்தது. பிருகு வம்சத்தவரே! இதை எனக்குத் தெளிவாய்ச் சொல்ல வேண்டும் என்று சொன்னார். மார்க்கண்டேயர், யுதிஷ்டிர மஹாராஜனே! துந்துமாரனுடைய தர்மசரித்திரத்தைச் சொல்லுகிறேன்; கவனமாய்க் கேளும் என்று சொல்லுகிறார்.

10—24. பூமிக்கு இறைவனே! உதங்கர் என்று ஒரு மஹரிஷி இருந்தார். அவர் விஷ்ணுவின் கிருபையைப் பெறுவதற்காக நெடியதவம் செய்தார்.

அநேக வருஷம் தவம் புரிந்தார். திருமால் அவருடைய தவசுக்கு மகிழ்ந்து பிரத்தியட்சமானார். உதங்கர் கடவுளைக் கண்டவுடனே மரியாதை யுடன் வணங்கித் தோத்திரம் செய்தார். தேவனே! சரம் அசரம் என்கிற பொருள் களும், தேவர் அசுரர் மனிதர்களும், பிரமா, வேதம் முதலான யாவும் உம் மால் சிருஷ்டிக்கப்பட்டன. கடவுளே! வானம் உமது சிரசு; சூரிய சந்திரர் கள் உமது கண்கள்; வாயு உமது சுவாசம்; அக்கினி உமது தேஜசு; திக்கு கள் உமது கைகள்; வாயுமண்டலம் உமது இடுப்பு; பூமி உமது பாதம்; ஓஷதிகள் உமது தேகம்; இந்திரன், சோமன், அக்கினி, வருணன், தேவர், அசுரர், நாகர் இவர்கள் எல்லாரும் உம்மைப் பல விதமான பாடல்களால் துதிக் கிறார்கள்; வணங்குகிறார்கள். எல்லாப் பொருள்களையும் நீர் வியாபித்திருக் கிறீர். மஹாரிஷிகளும் யோகிகளும் உம்மைத் துதித்து வணங்குகிறார்கள். நீர் மகிழ்கிறபோது எல்லாப் பிராணிகளும் சமாதானமாய் வாழ்கின்றன. நீர் கோபித்தால் அவைகள் அச்சத்தை அடைகின்றன. நீரே அச்சத்தை ஒழிக் கிறவர். நீரே மேலான பரம்பொருள். நீரே தேவர்கள் மனிதர்களுடைய சந் தோஷத்துக்குக் காரணம். நீர் மூன்று அடிகளால் மூன்று உலகங்களையும் அளந்தீர். அசுரர்கள் பெருகினபோது அவர்களை அழித்தீர். உமது சத்தியா லேயே தேவர் வாழ்வை அடைந்தார்கள். உமது கோபத்தாலே தைத்தியர்கள் மடிந்தார்கள். நீரே சிருஷ்டிகர்! நீரே சங்கரிப்பவர். தேவர்கள் உம்மை வணங்கியே சொர்க்க லோகத்தையும் வாழ்வையும் அடைந்தாகள என்று இப்படி உதங்கர் ஸ்தோத்திரம் பண்ணினார்.

25—34. திருமால் மகிழ்ந்து உதங்கரை நோக்கி நான் திருப்தி அடைந் தேன். நீ வேண்டிய வரத்தைக் கேள் என்றார். உதங்கர், நீர் எனக்குப் பிரத் தியட்சமானதே பெரிய வரம் என்றார். நீர் ஹரி! நித்தியமானவர்; தேவர் களைச் சிருஷ்டித்தவர்! எல்லாவற்றுக்கும் இறைவர் என்றார். திருமால் சிறந்த வனே! உனது பெரிய தவத்துக்கும் சொற்ப விருப்பத்துக்கும் நான் மிகவும் மகிழ்ந்தேன். பிராமணா! நீ என்னிடத்தில் ஏதாவது வரம் பெற வேண்டும் என்று சொல்ல, உதங்கர் அஞ்சலியஸ்தராய் நின்றுகொண்டு பங்கயக் கண்ண னே! நீர் எனக்கு வரம் கொடுக்க விரும்பினால் என் மனசு எப்போதும் தர்மத்தி லே நிலைக்கட்டும். சத்தியமும் திருப்தியும் உடையதா யிருக்கட்டும். எப் போதும் உம்மையே சிந்திக்கட்டும் என்று கேட்டார். திருமால் பிராமணா! இவையெல்லாம் உனக்குக் கிடைக்கும். உனக்கு யோகம் சித்திக்கும். அந்த வல்லமையால் தேவாகளுக்கும் மூவுலகத்தார்களுக்கும் க்ஷேமத்தைச் செய் வாய். துந்து என்கிற ஒரு அசுரன் மூன்று உலகங்களையும் அழிக்கும்பொருட்டு உக்கிரமான தவம் செய்கிறான். இக்ஷ்வாகு வம்சத்தில் பிருகதசுவன் என்று ஒருவராலும் வெல்லப்படாத ஒரு அரசன் தோன்றுவான். அவனுடைய புத் திரன் வல்லமைசாலியும், புலனடக்க முள்ளவனும், பரிசுத்தனுமா யிருப்பான். அவன் குவலாசுவன் என்று பேர் உள்ளவனாயிருப்பான். அவன் என்னால்

யோகசித்தியைப் பெறுவான். உன்னுடைய கட்டளையால் அவன் அந்த அசுரனைக் கொல்வான் என்று கூறி விஷ்ணு மறைந்து போனார்.

---

## 201-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—8. அரசனே! இக்ஷ்வாகு இறந்தபின், சரதன் அயோத்திக்கு அரசனானான். அவனுடைய புத்திரன் ககுஸதன், அவன் புத்திரன் அநேநன். அநேநன் புத்திரன் பிருது அவன் குமாரன் விசுவகோஷன், அவன் குமாரன் அத்ரி. அத்ரிகுமாரன் யுவனுசுவன். யுவனுசுவனுக்குச் சரவஸ்தன் பிறந்தான் அவனே சிரவஸ்தி என்னும் நகரை உண்டாக்கினவன். அவனுடைய புத்திரன் பிருகதசுவன். அவன் புத்திரன் குவலாசுவன். குவலாசுவனுக்கு இருபத்தோராயிரம் குமாரர்கள. இவர்கள் எல்லாரும் வீரர்களும் கல்வியிற் சிறந்தவர்களுமா யிருந்தார்கள். பிருகதசுவராஜன் தகுந்த காலத்தில் குவலாசுவனுக்கு மகுடஞ்சூட்டி சிங்காசனத்தில் ஏற்றினான். பின் பிருகதசுவன் தவம் செய்யும்பொருட்டு வனத்துக்குப் போனான்.

9—15. இந்தச் சமாசாரம் உதங்கருக்குத் தெரியவந்தது. உடனே அவர் பிருகதசுவனிடத்தில் வந்து அரசனே! உமது குலதர்மம் பிரஜைகளைக் காப்பது. அந்தத் தொழிலைச் சரியாய்ச் செய்யும். அப்படிச் செய்தால் நாங்கள் கவலையற்று இருப்போம். அரசனே! இந்த உலகம் மகிமையுள்ள உம்மால் பரிபாலிக்கப்பட்டது. ஆகையால் உலகம் மகிழ்ச்சி யடைந்திருக்க வேண்டும் இந்தக் காரணத்தால் நீர் வனத்துக்குப் போகக் கூடாது. பிரஜா பரிபாலனத்தால் மஹா புண்ணியம் உண்டாகிறது. இந்தப் புண்ணியம் வனத்தில் அடையப்படாது. ஆகையால் நீர் வனத்துக்குப் போகிற ஆசையை விட்டுவிடும். பூர்வ காலத்திலும் இராஜரிஷிகள் பிரஜா பரிபாலனத்தினால் பெரும் புண்ணியத்தை அடைந்தார்கள். அப்படிப்பட்ட புண்ணியம் வேறு எவ்வகையிலும் பெறுவது கூடாது.

16—31. என் ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் ஒரு பெரிய வன மிருக்கிறது. அது ஒரு பெரிய பாலைவனம். மணல் நிறைந்து சமுத்திரம் போல்வது. அதற்கு உஜ்ஜாக வனம் என்று பேர். அதில் சமனான ஒரு தேசம் இருக்கிறது. அங்கே தண்ணீரே கிடையாது. அது அநேக யோஜனை அகலமும் நீளமும் உள்ளது. அதில் மஹாபலவானான ஒரு தானவ அரசன் இருக்கிறான். அவன் பயங்கரமான மதுகைடவருடைய புத்திரன். அவனுக்குத் துந்து என்று பேர் இவன் பூமிக்குள் வசிக்கிறான். அரசனே! அவனை முதலில் கொல்லும்; பிறகு வனத்துக்குப் போம். இப்போது அவன் உலகம் முழுவதையும் அழிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் உக்கிரமான தவசு செய்கிறான். அவன்

தேவர்களாலும் தைத்தியர்களாலும், இராட்சதர்களாலும் வெல்ல முடியாதவன். அவன் பிரமதேவரிடத்தில் நாகர், யட்சர், கந்தர்வர்கள் முதலிய எல்லாராலும் வெல்ல முடியாத வரம் பெற்று இருக்கிறான். அவனைக் கொல்லும். நீர் க்ஷேமத்தை அடைவீர். வேறு ஒன்றையும் நினையாதேயும். அவனைக் கொல்வதனால் காரிய சித்தியையும் அழியாத கீர்த்தியையும் பெறுவீர். அரசனே! பூமிக்குள் மறைந்து கிடக்கிற அந்த அசுரன் ஒவ்வொரு வருஷத்தின் முடிவிலும் மூச்சுவிடுகிறான். அப்போது அவனுடைய சுவாசத்தினால் காடு மலைகளுடன் கூடியிருக்கிற பூமி நடுங்குகிறது. அவனுடைய சுவாசத்தினால் அவ்வனத்திலுள்ள மணல் மேகபடலம் போல மேலே கிளம்பிச் சூரியனையும் மறைத்து விடுகின்றது. ஏழு நாள் வரைக்கும் பூமி நடுங்குகிறது. புகையுடன் கூடின அக்கினிஜ்வாலையும் பரவுகிறது. இதனால் நான் அமைதியாயிருந்து தவம் செய்ய முடியவில்லை. அரசனே; உலகக்ஷேமத்தின் பொருட்டு அவனைக் கொல்லும். இந்த அசுரர்கள் மடிந்தால்தான் மூன்று உலகமும் க்ஷேமத்தை அடையும். நீர்தான் அவனைக் கொல்லத் தக்கவர் என்பது என் கருத்து. உமக்கு விஷ்ணுவைப் போன்ற சக்தியுண்டாகும். அவ்வாறு விஷ்ணுவினால் உமக்கு வரம் அளிக்கப் பட்டிருக்கிறது. மற்ற எவராலும் அடையப்படாத அந்த விஷ்ணுவின் சக்தியை அடைந்து அவ்வசுரனைக் கொல்லும். நூறு வருஷம் பிரயாசைப்பட்டாலும் அந்த அசுரன் மற்ற எவராலும் கொல்லப்படமாட்டான் என்றார்.

---

## 202-வது அத்தியாயம்

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—6. இப்படி உதங்கர் சொல்லக் கேட்ட அவ்வரசன் அஞ்சலியஸ்தனாய் உதங்கரை நோக்கிச் சொல்லுகிறான். பிராமணோத்தமரே! உமது வருகை வியர்த்தமாகக் கூடாது. என் புத்திரனான இந்தக் குவலாசுவன் ஊக்கமும் உறுதியுமுள்ளவன். பூமியில் எதிரற்ற பராக்கிரமம் உடையவன். உமது விருப்பத்தை இவன் தவறாமல் நிறைவேற்றுவான். இருப்புத் தூண்களைப் போன்ற புஜங்களையுடைய அவனுடைய புத்திரர்களும் இவ்விஷயத்தில் அவனுக்கு உதவியாவார்கள். நான் ஆயுதங்களை யெல்லாம் விட்டுவிட்டேன். ஆகையால் எனக்கு விடைகொடும் என்று கேட்டான். அதைக் கேட்ட உதங்கர் அப்படியே ஆகட்டும் என்றார். பிருகதசுவன், உதங்கர்மனம்போல நடக்கும்படி தன் புத்திரனுக்குச் சொல்லிவிட்டு ஒரு சிறந்த வனம் போய்ச் சேர்ந்தான்.

7—23. இதைக் கேட்ட யுதிஷ்டிரர் மார்க்கண்டேயரை நோக்கி மஹானுபாவரே! இந்த அசுரன் யார்? எவனுடைய புத்திரன்? எவனுடைய பேரன்? இவனைப் பற்றி ஒருபோதும் நான் கேட்டதே யில்லை. ஆகையால் இவை

களை விஸ்தாரமாய் எனக்குச் சொல்லவேண்டும் என்று கேட்க, மார்க்கண்டேயர் அரசனே? இவற்றைத் தெளிவாய்ச் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லுகிறார். மஹாராஜனே! சரமும் அசரமுமாகிய எல்லாப் பொருள்களும் அழிந்து, உலகமெல்லாம் வெள்ளத்தில் முழுகி, எங்கும் ஜலமயமாய்க் கடல் போல இருந்தது. அப்போது பிரபஞ்சத்துக்குக் காரணரும், சிருஷ்டிகரும்; நித்தியரும், விகாரமற்றவரும், தவசித்தி பெற்ற மஹரிஷிகளால் லோக கர்த்தாவென்று புகழப் பட்டவருமான விஷ்ணுவானவர், அந்த வெள்ள நடுவிலே சர்ப்ப சயனத்தின் மேல் யோக நித்திரை செய்து கொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய தொப்புளில் இருந்து சூரியனைப் போல ஒளியுள்ளதும் அழகியதுமான ஒரு சொர்ண தாமரை உண்டாயிற்று. அந்த தாமரை மலரில இருந்து சர்வ லோக பிதாமகரும், லோககர்த்தரும், நாலு வேதங்களை யுடையவரும், நாலு வடிவங்களையும் நாலு முகங்களையும் உடையவரும், மிகுந்த பலமும் சக்தியுமுள்ளவருமான பிரமதேவர் தோன்றினார். அதன் பின் ஒரு காலத்தில் மது, கைடவன் என்கிற மஹா பராக்கிரமசாலிகளான இரண்டு தானவர்கள் கிரீடம், கௌஸ்துபமணி பீதாம்பரம் முதலியவைகளைத் தரித்துக் கொண்டு, அநேக யோஜனை நீளமும் அகலமும் உடையதாய், ஆயிரம் சூரியர்கள் ஒரு இடத்தில் கூடி யிருப்பது போன்ற பிரகாசமுடையதா இருக்கிற சேஷ சயனத்தின்மேல் படுத்துக் கொண்டிருக்கிற மஹாவிஷ்ணுவைக் கண்டார்கள். அவரது உந்தியில் பூத்த தாமரையின் மேல் பிரமதேவர் உட்கார்ந்திருப்பதையும் கண்டு மிகவும் ஆச்சரியம் அடைந்தார்கள். பிறகு அந்தப் பிரமதேவனைப் பயமுறுத்தத் தொடங்கினார்கள், பிரமதேவன் பயந்து நடுங்கினான். அப்போது திருமால் விழித்துக் கொண்டு அந்த இரண்டு தானவர்களையும் பார்த்தார். அவர்களை நோக்கி பராக்கிரம முள்ளவர்களே! வாருங்கள். நான் உங்களிடத்தில் பிரியமா யிருக்கிறேன். ஆகையால் உங்களுக்குச சிறந்த வரங்கள் தருகிறேன் என்றார.

24—31. யுதிஷ்டிர ராஜனே! அதைக் கேட்ட பராக்கிரம சாலிகளான மது கைடவர்கள் சிரித்துத், தேவனே! எங்களிடத்திலிருந்தும் நீ சில வரங்களைக் கேள். நீ விரும்பின வரங்களைத் தருகிறோம் என்றார்கள். திருமால் அப்படியானால் நான் வரங்கேட்டுக் கொள்கிறேன். உலகத்தில் ஒப்பற்ற வீரர்களான உங்கள் இருவரையும் நான் கொல்ல வேண்டும். உலக க்ஷேமத்துக்காக இந்த வரத்தைத்தான் நான் அடைய விரும்புகிறேன் என்றார். தானவர்கள், புருஷோத்தமனே! நாங்கள் முன்பு ஒருபோதும் பொய் சொன்னதில்லை. விளையாட்டுக்காகக் கூடப் பொய் சொன்னதில்லை. மற்ற வேளைகளில் என் பொய் சொல்ல வேண்டும்? நாங்கள் எப்போதும் சத்தியத்தையும் நீதியையுமே அனுசரிக்கிறோம். பராக்கிரமத்தில் எங்களுக்கு ஒப்பானவர்கள் ஒருவரும் இல்லை. தோற்றம், அழகு, தர்மம், தவம், இரக்கம், நடக்கை, நன்மை, புலனடக்கம் முதலியவைகளிலும் எங்களுக்குச் சமானமில்லை. கேசவா! எங்களுக்குப் பெரிய அபாயம் வந்து விட்டது. காலத்தை வெல்ல ஒருவராலும்

ஆகாது. ஆகையால் உன் இஷ்டம்போல நடத்திக்கொள். ஆனால் தேவ தேவனே! நாங்கள் விரும்புகிறது ஒன்று உண்டு. அதென்னவென்றால், ஒன்றாலும் மறைக்கப்படாமலிருக்கிற இடத்தில் எங்களைக் கொல்ல வேண்டும். நாங்கள் உனக்குப் புத்திரர்களாகப் பிறக்க வேண்டும் என்று கேட்டார்கள். திருமால் அவ்வாறே செய்வதாக ஒப்புக்கொண்டார். ஒன்றாலும் மூடப்படாமலிருக்கிற ஆகாசம் கிடைப்பதரிதாயிற்று. ஆகாசத்துக்குப் பூமியும் பூமிக்கு ஆகாசமும் உறைபோல இருக்கிறது. இவர்களை எவ்விடத்தில் வைத்துக் கொல்லலாமென்று திருமால் சிந்தித்தார். பிறகு தமது தொடையின்மேல் வைத்துக்கொண்டு, சக்கிராயுதத்தால் அவர்களை சங்கரித்தார்.

---

## 203-வது அத்தியாயம்

*மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.*

**1—14.** மஹாராஜனே! துந்து என்பவன் அந்த மது கைடவர்களுடைய புத்திரன். மஹா வீரபராக்கிரமம் உள்ளவன். அவன் தவசு செய்யத் தொடங்கி ஒரு காலால் நின்று கொண்டு, பிரமனை நோக்கிப் பதினாயிரம் வருஷம் தவம் செய்தான். அவனுடைய தவசுக்கு மகிழ்ந்த பிரமதேவர் அவனுக்கும் பிரத்தியட்சமாய், நான் உன் தவசால் மகிழ்ந்தேன். நீ விரும்பின வரங்களைக் கேள் என்றார். துந்து பிரமனை நோக்கி நான் தேவர்களாலும் தானவர்களாலும், யட்சர்களாலும், கந்தர்வர்களாலும், உரகர்களாலும், இராட்சதர்களாலும், கொல்லப் படாதவனாக இருக்க வேண்டும். இதுவே நான் கேட்கிற வரம் என்று சொன்னான். அப்படியே ஆகக்கடவதென்று பிரமதேவர் அளித்தார். துந்து பிரமதேவர் பாதங்களில் சிரம்பட வணங்கிப் போய் விட்டான். அப்படிப்பட்ட வரம் பெற்றுக்கொண்ட துந்துவானவன் விஷ்ணு தன் பிதாவைக் கொன்றதை நினைத்துப் பழி தீர்த்துக் கொள்ளக்கருதி அவரை வருத்தத் தொடங்கினான். தேவர்களையும், யட்சகந்தர்வர்களையும் தன் பராக்கிரமத்தால் ஜயித்தான். தேவர்களையும் விஷ்ணுவையும் வருத்தினான். ஸமுத்திர தீரத்தில் மணல் நிறைந்த ஒரு இடத்துக்குப் போனான். அதற்குச் சமீபத்தில் தான் உதங்க முனிவர் ஆசிரமம் இருந்தது. அந்தத் துஷ்டன் அவ்விடம் போய்ப் பூமிக்குள்ளே ஒரு நிலவறையை உண்டாக்கிக் கொண்டான். மேலே மணலால் மூடப்பட்டிருக்கிற அதிலிருந்து கொண்டு உலகத்தை நாசம் செய்யக் கருதினான். அக்காலத்தில் தான் குவலாசுவன் என்ற பராக்கிரமசாலியான அரசன் அரசாண்டான். சத்துரு பயங்கரனான அந்த அரசனுக்கு இருபத்தோராயிரம் புத்திரர்கள். அந்தக் குவலாசுவன் உதங்கருடைய கட்டளையால் உலகத்துக்கு நன்மை செய்ய விரும்பித் துந்துவைக் கொல்லப் போனான். அவன் விஷ்ணுவின் அம்சத்தைப் பெற்றிருந்தான். துந்துவைச்

சங்கரித்ததனாலேதான் குவலாசுவன் துந்துமாரன் என்ற பேரை அடைந்தான்.

15—34. அப்போது தேவர்கள் எல்லாரும் பூமழை பெய்தார்கள். தேவ துந்துபிகளை முழக்கினார்கள். காற்றுச் சுபகாரமாய் வீசிற்று இந்திரனுடைய கட்டளையால் மழை பெய்து பூமியிலுள்ள புழுதியை அடக்கிற்று. மிருக பட்சிகளெல்லாம் வலமாகப் பிரதட்சிணம் செய்து கொண்டு உலாவின. துந்துவுக்கும் குவலாசுவனுக்கும் நடக்கப்போகிற யுத்தத்தைப் பார்க்கும்பொருட்டுத் தேவர்கள் எல்லாரும் விமானத்திலேறிக்கொண்டு ஆகாசத்தில் வந்து நிறைந்து நின்றார்கள். யட்ச கந்தர்வர்களும், மஹரிஷிகளும் மங்கழசபியுடன் வந்து கூடினார்கள். குவலாசுவனுடைய புத்திரர்கள் பத்துத் திசைகளிலும் நின்று துந்துவிருக்கிற விடத்தைச் சூழ்ந்து கொண்டார்கள். உதங்கருடைய ஏவுதலால் உலகத்துக்கு க்ஷேமத்தைச் செய்ய விரும்பின குவலாசுவனுடைய புத்திரர்கள் சீக்கிரமாக, அந்தச் சமுத்திர தீரத்தைத் தோண்டினார்கள். இப்படி ஏழு நாள் தோண்டின பின் துந்துவைக் கண்டார்கள். அந்தப் பிலத்துக்குள்ளே மஹா பலவானான துந்து மஹா பயங்கரமான ரூபத்துடனும் சூரியனைப் போன்ற தேஜஸுடனும் மேற்கே தலையை வைத்துப் படுத்துக் கொண்டிருந்தான். இப்படிக் காலாக்கினியைப் போலப் படுத்துக் கொண்டிருக்கிற துந்துவைக் கண்ட குவலாசுவனுடைய புத்திரர்கள் அவனைச் சூழ்ந்துகொண்டு கூர்மையான வாள், கதை, முசலம், பட்டஸம், பரிகம், பளபளப்பான பரசு, பாஸம் முதலிய ஆயுதங்களை அவன்மேலே பிரயோகித்தார்கள். ஸம்வர்த்தாக்கினிக்குச் சமானமான துந்து தன் தேஜசால் அந்த ஆயுதங்கள் எல்லாவற்றையும் விழுங்கி விட்டான். கபிலரானவர் சகர புத்திரர்களை யெரித்தது போலக் குவலாசுவன் புத்திரர்களையும் எரித்துவிட்டான். கும்பகர்ணனைப் போல நித்திரை செய்துகொண்டிருந்த அந்தத் துந்துவினிடத்திலிருந்துண்டான அக்கினியைக் குவலாசுவன் தன் சரீரத்திலுண்டான ஜலப்பிரவாகத்தினாலே அணைத்துத் தணித்துவிட்டான். பின் அந்தத் துந்துவினிடம் இருந்து ஜலப்பிரவாஹமுண்டாயிற்று. யோகியாகிய குவலாசுவன் அதைத் தனது யோகாக்கினியால் அழித்துவிட்டான். பிறகு புருஷ சிரேஷ்டனான குவலாசுவன் லோக க்ஷேமத்துக்காக பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்துத் துந்துவைச் சங்கரித்தான். இவ்வாறு தேவசத்துருவான துந்துவைச் சங்கரித்ததனால் குவலாசுவன் துந்துமாரன் என்று மூன்று லோகத்தாராலும் புகழப்பட்டான். அசரீரியும் துந்துமாரன் பேரால் அவனைப் புகழ்ந்து கூறிற்று. அப்போது தேவர்களும் மஹரிஷிகளும் குவலாசுவனை நோக்கி உனக்குப் பிரியமான வரத்தைக் கேள் என்றார்கள்.

35—38. துந்துமாரன் அப்போது அஞ்சலியஸ்தனாய் அவர்களை வணங்கிச் சொல்லுகிறான். நான் எப்போதும் சத்தியத்தையே பேச வேண்டும். பிராமணர்களுக்குத் திரவியங்களைத் தானம் செய்ய வேண்டும். சத்துருக்களாலே

ஜயிக்கப்படாமலிருக்க வேண்டும். விஷ்ணுவைப் பக்தி செய்துகொண்டிருக்க வேண்டும். தர்மத்திலே விருப்பம் உள்ளவனு யிருக்க வேண்டும். அழியாத சொர்க்கத்தில் எப்போதும் வசித்திருக்க வேண்டும். அவ்வரசனிடத்திலுண்டான பிரீதியினாலே தேவர்கள் எல்லாரும் அப்படியே ஆகக் கடவதென்று வரம் கொடுத்தார்கள். பிறகு தேவர், கந்தர்வர், மஹரிஷிகள் எல்லாரும் துந்துமாரனைப் பல விதமாக ஆசீர்வதித்து விட்டுத் தத்தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

39—45. துந்துவால் குவலாசுவன் புத்திரர்கள் எரிக்கப்பட்டபோது, த்ருடாசுவன், கபிலாசுவன், பத்திராசுவன் என்ற மூன்று புத்திரர்கள் எரிந்து போகாமல் தப்பி யிருந்தார்கள். குவலாசுவனுடைய அந்த மூன்று புத்திரர்களாலே இக்ஷ்வாகு வம்சம் விருத்தியாயிற்று. மதுகைடவர்களுடைய புத்திரனும், மஹா பல பராக்கிரமசாலியுமான துந்து என்னும் தைத்தியனைச் சங்கரித்தபடியினாலே தான குவலாசுவ மஹா ராஜன் துந்துமாரன் என்று புகழப்பட்டான். பாரதா! யுதிஷ்டிரா! நீ கேட்டவைகளை யெல்லாம் உள்ளபடி உனக்குச் சொல்லிவிட்டேன். துந்துமாரோபாக்கியானம் என்கிற இந்த சரித்திரத்தை விஷ்ணுபக்தியுடன் வாசிக்கிறவனும், கேட்கிறவனும், புண்ணியாத்மாவாய்ப், புத்திர பிராப்தியையும், ஆயுசு விருத்தியையும், ஐசுவரியத்தையும் அடைவான். பர்வகாலத்தில் படித்தால் ஜுரம் முதலிய வியாதியும் நீங்கும்.



## 204-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—15. யுதிஷ்டிரர் மார்க்கண்டேயரை நோக்கிப் பகவானே! உத்தமமான ஸ்திரீ தர்மத்தைக் கேட்க விரும்புகிறேன். பிராமணோத்தமரே! அந்த சூட்சும தர்ம உண்மையை எனக்குச் சொல்ல வேண்டும். சூரியன், சந்திரன், வாயு, பூமி, அக்கினி, பிதா, மாதா, குரு இவர்கள் எல்லாரும் பிரத்தியட்ச தெய்வமா யிருக்கிறார்கள். அந்தத் தேவர்களை எல்லாம் தன் பதிஸ்வரூபமாகக் கருதித் தன் கணவன் ஒருவனையே வழிபட்டு ஆராதிக்கிற அந்தப் பதிவிரதைகளின் சரித்திரத்தைச் சொல்ல வேண்டும். பணிவிடை செய்வது துர்லபம். பார்க்கவரே! பதியையே தெய்வமாகக் கருதிப் பஞ்சேந்திரியங்களையும், மனதையும் அடக்கிச், சிந்தையை யெல்லாம் அவன்மேல் வைத்து மாதா பிதாக்களுடன் கூடின, பதியின் பணிவிடை முதலியவற்றைச் செய்கிற ஸ்திரீ தர்மம் அதிக கொடுமையானது. மாதா பிதா குரு தெய்வம் எல்லாம் தன் பதி ஒருவனே என்று அவனையே பக்தி செய்கிற பெண் சதாசாரமுடையவளாய், உண்மை யுடையவளாய்ப் புண்ணியவதியாயிருக்க வேண்டும். பத்து மாதம் கர்ப்பத்தை வயிற்றில் தரித்து வருந்தவேண்டும். பத்து மாதமான வுடனே

சரியான காலத்தில் பிரசவிக்க வேண்டும். இது அற்புதமேயாம், அப்போது பிரசவ வேதனையால் பிராணசம்சய முண்டாகிறது. அப்படிப்பட்ட துக்கத்துடன் புத்திரர்களைப் பெறுகிறார்கள். குழந்தைகளைப் பெற்ற பின் அதிக பிரியத்துடன் அவைகளை வளர்க்கிறார்கள். அந்தக் குழந்தைகளினுடைய நடக்கைகளைப் பற்றித் துக்க முண்டாகிறது. மாமியார், மாமனார், அதிதி இவர்களையும் பூஜிக்க வேண்டும். இப்படிப்பட்ட ஸ்திரீ தர்மம் மிகவும் கொடியது. இந்த ஸ்திரீ தர்மத்தை க்ஷத்திரிய தர்மங்களை அனுசரித்து, உம்மை வழிபட்டு உமக்குப் பணிவிடை செய்கிற எனக்குச் சொல்ல வேண்டும் என்று கேட்டார்.

16—25. மார்க்கண்டேயர்; யுதிஷ்டிரரை நோக்கித் தர்மராஜாவே! அருமையாக நீ கேட்டவைகளைச் சொல்லுகிறேன். இது இரகசியமானது. மாதாவானவள் புத்திரர்களைப் பெறுவது கஷ்டமாம். தவஸாலும், தேவாராதனையாலும் மற்றுமுள்ள பல புண்ணியச் செயலாலும் புத்திரர்களை அடைய விரும்புகிறார்கள். கிருச்சிரம் முதலிய விரதத்தாலும் புத்திரர்களை யடைவது கஷ்டம். இப்படிப்பட்ட கடினமானவைகளைச் செய்து மாதா பிதாக்கள் புத்திரர்களை அடைய விரும்புகிறார்கள். தேஜசு, கீர்த்தி, ஐசுவரியம், தர்மம் இவைகள் சற்புத்திரனைப் பெற்ற மாதா பிதாக்களுக்கு உண்டாகின்றன. இல்லற தர்மத்தினாலே எல்லாம் அடையப்படுகின்றன. அப்படிப்பட்ட புத்திரர்களைப் பெறுவதே பதிவிரதைகளின் அரிய செய்கை. அந்தப் பதிவிரதைகளுக்கு யக்ஞம் வேண்டுவதில்லை. சிராத்தம் உபவாசம் முதலியவைகளை அனுஷ்டிக்கவும் வேண்டுவதில்லை. பர்த்தாவின் பணிவிடையே போதுமானது. அதனாலேயே ஸ்திரீ நித்திய சொர்க்கத்தை அடைகிறாள். அப்படிப்பட்ட பதிவிரதைகளின் சரித்திரங்களை உனக்கு முறையாகச் சொல்லுகிறேன் கேள் என்று மார்க்கண்டேயர் சொல்லுகிறார்.

---

## 205-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—10. வேதாத்தியயனம் செய்த பிராமண வம்சத்தில் ஒரு பிராமணன் இருந்தான். அவன் பேர் கௌசிகன். அவன் வேதங்களையும் உபநிஷத்துக்களையும் ஸாங்கோபாங்கமாக அத்தியயனம் பண்ணினான். அவன் ஒரு மரத்தினடியிலிருந்துகொண்டு, வேதத்தை ஓதிக்கொண்டிருந்தான். அந்த விருட்சத்தின் மேல் சில கொக்குகள் உட்கார்ந்திருந்தன. ஒரு கொக்கு அந்தப் பிராமணன் மேலே எச்சமிட்டது. அந்தப் பிராமணன் அதிக கோபத்துடனே அந்தக் கொக்கைப் பார்த்தான். உடனே அந்தக் கொக்கு மரத்தின்மேலிருந்து தலைகீழாக விழுந்தது. உடனே செத்துப் போயிற்று. அந்தப் பிராமணன் அதைப் பார்த்து நமது கோபத்தினாலே இந்தக் கொக்கு இறந்தது என்று அதன்மே

ஷிரத்தைக்கொண்டு தூக்கித்தான். இராகத்வேஷங்களால் செய்யத்தகாத காரியங்கள் செய்யப்படுகிறது. ஆகையால் இராக த்வேஷங்கள் கொடியன என்று வருந்தினான். பிறகு பிக்ஷையெடுக்குதற்பொருட்டு ஒரு கிராமத்துக்குப் போனான். பரிசுத்தமான பிராமணவீடுகளில் பிக்ஷைக்காகப் போனான். ஒரு வீட்டில் ஒரு ஸ்திரீயைக் கண்டான். அவளை நோக்கிப் பிக்ஷை கொடு என்று கேட்டான். அவள் அப்போது பாத்திரங்களைத் தேய்த்துச் சுத்தி செய்து கொண்டிருந்தபடியால் சற்று "இரும்" என்று சொன்னாள். அக்காலத்தில் அவளுடைய பர்த்தா பசியால் களைத்து வருகிறதைப் பார்த்தாள்.

11—18. அந்த ஸ்திரீ பதிவிரதைகளில் சிறந்தவளாதலால் தன் நாயகனைக் கண்டவுடனே அவனை உபசரிக்கப் போய் விட்டாள். அந்த ஸ்திரீ தினந்தோறும், தன் பர்த்தாவைக் கண்டவுடனே எழுந்து விரைந்து சென்று, அவனுக்குப் பாத்தியம், அர்க்கியம், ஆசமனீயம் கொடுத்து உபசரித்து, ஒரு ஆசனமிட்டு உட்காரவைத்து, மிகப் பிரியத்துடன் அவனுக்குப் பட்சணம் அன்னம் முதலிய கொடுத்து, இனிமையான வசனங்களைக் கூறிப் புசிப்பித்து, அவன் புசித்த பின் அந்தச் சேஷத்தைத் தான் புசிப்பது வழக்கம். கணவனையே தெய்வமாகக் கருதுவாள். அவனுடைய விருப்பத்தின்படியே நடப்பாள். மனோவாக்குக் காயங்களால் அவனுடைய பணிவிடைகளையே விரும்பிச் செய்வாள். அவன் மனதுக்கு விரோதமானதை ஒருபோதும் செய்ய மாட்டாள். எல்லா விதத்தாலும் பர்த்தாவின் பணிவிடைகளையே செய்வாள். சதாசாரம், பரிசுத்தம், குடும்ப இரக்ஷணை இவைகளைத் தவறாமல் நடத்துவாள். எப்போதும் கணவனுடைய நன்மைகளையே சிந்திப்பாள். தேவதை, அதிதி, வேலைக்காரர்கள் மாமனார், மாமியார் இவர்களைப் பிரியத்தோடு நித்தியம் உபசரிப்பாள். இப்படிப்பட்ட குணவதியான அந்தப் பெண் தன் கணவன் பசித்துக் களைத்து வருகிறதைப் பார்த்து உடனே எழுந்து போய் அவனை யுபசரித்துக்கொண்டிருந்தாள். அதன் பின் பிக்ஷைக்கு வந்த பிராமணனைக் கண்டு, கால தாமசம் செய்ததற்காக வருந்திப் பிக்ஷையை எடுத்துக் கொண்டு வந்தாள்.

19—25. பிட்சைக்கு வந்த கௌசிகன் அந்த மாதைப் பார்த்து, பாக்கியவதி! என்ன காரியம் செய்தாய்? என்னை இரு என்று சொல்லிப் போய் விட்டாய். பிறகு போ என்று கூடச் சொல்லவில்லை என்று சொல்லிக் கோபத்தினாலே எரிகிற அக்கினி போல ஜ்வலித்தார். அதைப் பார்த்த பெண்மணி சாந்தமாகச் சொல்லுகிறாள். சுவாமி! பொறுக்க வேண்டும். ஜடம் போன்ற ஸ்திரீயைக் கோபிக்க வேண்டாம். பிராமணோத்தமரே! என் மேல் கிருபையாக இரும். எனக்குக் கணவனே தெய்வம். அவருக்கு உபசரித்துக் கொண்டிருந்தேன். அந்தக் காரியத்தை முடித்து விட்டு வந்தேன். கோபியாதேயும் என்றாள். கௌசிகன், அந்தப் பெண்ணை நோக்கி நீ கிருகஸ்த தர்மத்திலிருக்கிறாய். பிராமணனை அவமதித்து விட்டுப் பதிபணிவிடை செய்தாய்.

பிராமணனை அவமானம் பண்ணலாமா? பிராமணர்களை இந்திரன் கூட வணங்குகிறான். மனிதர்களுக்குச் சொல்ல வேண்டுமோ? அவமதிக்கப் பட்ட பிராமணர்கள் கோபித்துக் கொண்டால் வனபர்வத தீவுகளுடன் கூடின பூமியைக் கூடத் தகித்து விடுவார்கள் என்றான்.

26— . பிராமணோத்தமா! நான் கொக்கல்ல. ஆகையால் கோபத்தை விட்டுவிடும். உமது கோபப் பார்வையால் என்னை என்ன செய்ய முடியும்? பிராமணர்கள் தேவர்களுக்குச் சமானமானவரென்று நான் அறியமாட்டேன். நான் செய்த தப்பிதத்தைப் பொறுத்துக் கொள்ளும். உப்புநீருள்ள சமுத் திரம் போன்ற கோபத்தால் என்ன பயன்? தவசிகளாகிய முனிவர்களும் கோபத்தை வெறுக்கிறார்கள். கோபாக்கினியானது முனிவர்களாலே தடுக் கப் பட்டிருக்கிறது. பிராமண த்வேஷியும் துராத்மாவுமான வாதாபி அக ஸ்திய முனிவரால் உண்டு ஜீரணித்துக்கொள்ளப்பட்டான். பிராமணர்க ளாகிய மஹாத்மாக்களைப் பற்றி அநேகமாய்ச் சாஸ்திரங்கள் புகழ்கின்றன. அப்படிப்பட்ட பிராமணர்களை எந்த மூடன் அவமதிப்பான். மஹாத்மாக்கள் கோபத்தை விட்டு அநுக்கிரகமே செய்கிறார்கள். ஓ பிராமணா! அப்படியே நீரும் என் அபராதத்தைப் பொறுத்துக் கொள்ளும். பிராமணா! பதிபணி விடையே எனக்குச் சிறந்தது. அந்தப் பர்த்தாவுக்கு மேலான தெய்வம் எனக்கு ஒன்றும் கிடையாது. அந்தச் சிறந்த தர்மத்தை நான் செய்கிறேன். மனுஷர்களுக்குக் கோபம் சத்துருவாகும். பதிவிரதையா யிருக்கப்பட்ட என்னைக் கொக்கைப் போல எரிக்க முடியாது. கோபத்தையும் லோபத்தை யும் விட்டவனே பிராமணன். எவன் சத்தியவந்தனாய்க் குருவைச் சந்தோ ஷிக்கிறானோ அவன் பிராமணன். ஜீவ ஹிம்சை செய்யாதவன் பிராமணன் என்னப்படுகிறான். ஜிதேந்திரியனாய், தர்ம நிஷ்டனாய், அத்தியயனம் பண் ணுகிறவனாய்ச், சுத்தனாய், காமக்குரோதங்களை விட்டிருப்பவனைப் பிராமணர் கள் என்று சொல்லுகிறார்கள். உலகத்திலுள்ள சர்வ ஜீவாத்மாக்களையும் தன்னைப் போலப் பாவித்துத், தர்ம சிந்தையுள்ளவனாய் எல்லாத் தர்மங்களை யும் செய்கிறவனைப் பிராமணன் என்பார்கள். யாகம் செய்தும், யாகம் செய் வித்தும், தன் சக்திக்கேற்றபடி தானம் செய்கிறவனைப் பிராமணன் என்று தேவர்கள் கூறுகிறார்கள். பிரமசரியம் தவறாமல் நடந்து வேதாத்தியயனம் செய்துள்ளவனைப் பிராமணன் என்பார்கள். சகல ஜீவன்களுடைய க்ஷேம த்தை விரும்புகிறவன் பிராமணன். அசத்தியத்தை மனசால் கூட நினையா மல் சத்தியமாய் நடக்கிறவன் பிராமணன். தான் சம்பாதித்த பொருளைப் பிராமணர்களுக்குக் கொடுத்து, இந்திரிய நிக்கிரகம் செய்து உள்ளவனைப் பிரா மணன்என்று சொல்கிறார்கள். வேதங்களில் சொல்லப்படுகிறதே சரியான தர் மம். ஆதலால் தர்மங்கள் எல்லாம் வேதப்பிரமாணங்களுக்கு ஒத்திருக்க வேண் டும். அப்படி இருந்தாலும் தர்மம் என்பது அதிசூட்சும்மாயுள்ளது. ஓ பிராமணோ த்தமா! நீர் தர்மம் அறிந்தவராயும், அத்தியயனம் செய்தவராயும், பரிசுத்தமா யும் இருக்கிறீர், ஆகையாலே பகவானே! எனக்கு இதற்கு மேற்பட்ட தர்மம்

இல்லை. நீர் இன்னும் தர்மத்தை அறிய விரும்பினால் மிதிலாபுரியிலுள்ள தர்ம வியாதரிடம் போய் அவரைக் கேளும். மிதிலையில், தர்மவியாதர் மாத பிதாக்களுடைய சிசுருஷை செய்து கொண்டு, ஜிதேந்திரியராய், சதா தர்ம நிஷ்டராய், இருக்கிறார். உமக்கு இச்சையாயிருந்தால் தர்ம ரகசியம் அறியும் பொருட்டு அங்கே போம். அந்த மஹாத்மாவான தர்மவியாதர் உம்முடைய சந்தேகங்கள் எல்லாவற்றையும் ஒழித்துத் தர்மசூட்சுமங்களைச் சொல்லுவார். ஸ்திரீகளை வதை செய்யக்கூடாதென்று தர்ம சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகையால் என்மேல் கொண்ட கோபத்தை விட்டு விடும் என்று சொன்னாள். இதைக் கேட்ட கௌசிகன், அவளைப் பார்த்துச் சுபமானவளே! என் கோபம் போய்விட்டது, உன்னுடைய தர்ம வசனங்களினாலே மகிழ்ந்தேன். உனக்குச் சுகம் உண்டாகட்டும். உனக்கு மகிமை உண்டாகட்டும். நான் போகிறேன் என்று சொல்லிவிட்டுக் கௌசிகர் போய்விட்டார். இப்படித் தம்முடைய துர்க்கிருத்தியத்தை யிழந்துகொண்டும், அந்தப் பதிவிரதையைப் புகழ்ந்துகொண்டும் கௌசிகர் தமது வீடுபோய்ச் சேர்ந்தாரென்று மார்க்கண்டேயா யுதிஷ்டிரருக்குச் சொன்னார்.

---

## 206-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—11. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரைப் பார்த்து, அந்தக் கௌசிகர் தாம் கொக்கை எரித்து விட்டதையும் தர்ம இரகசியங்களையும் அந்த ஸ்திரீ அறிந்து சொன்னதற்காக ஆச்சரிய மடைந்து அதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே தமது கிருகத்துக்குப் போனார். பின் நான் சிரத்தை யுடனும் சந்தோஷத்துடனும், தர்மவியாதர் வசிக்கிற மிதிலா புரிக்குப் போய் அவரிடத்தில் தர்ம இரகசியங்களைக் கேட்பேனென்று மனதில் தீர்மானித்துக் கொண்டார். தாம் கொக்கை எரித்ததை அறிந்து சொன்னதையும், தர்ம சூட்சமங்களை எடுத்துச் சொன்னதையும் சிந்தித்து, அம்மாதின் வாக்கியத்தில் நம்பிக்கை யுடையவராய்ச் சந்தோஷத்துடன் மிதிலைக்குப் பிரயாணப்பட்டார். வனங்களையும், கிராமங்களையும், நகரங்களையும் கடந்து ஜனகரால் பரிபாலிக்கப் படுகிற மிதிலையை அடைந்தார். அந்த மிதிலை தர்மமாகிற கரையினாலே சூழப் பட்டதாயும், யக்ஞம் உத்ஸவம் முதலிய சுப காரியங்களால் நிறைந்ததாயும், கோபுர மண்டபங்களை யுடையதாயும், பிராகாரங்களாலும், மாளிகைகளாலும் விமானங்களாலும் அலங்கரிக்கப் பட்டதாயும் பிரகாசித்துக் கொண்டிருந்தது. யானைகளாலும் குதிரைகளாலும் அலங்காரமா யிருந்தது. ஜனங்கள் எல்லாரும் நித்திய உற்சவம் கொண்டாடி ஆனந்த முடையவர்களாயிருந்தார்கள். அவ்விடத்தில் உள்ள பிராமணர்களாலே தர்மவியாதர் இருக்கும் இடத்தைத் தெரிந்து கொண்டு அங்கேபோனார். அந்தத் தர்மவியாதர் மாம்சம் விற்கிற இடத்தில் பன்

றி, எருமை முதலியவற்றின் மாம்சங்களை விற்பனை செய்து கொண்டிருந்தார். வியாபாரம் செய்கிறவர்கள் சூழ்ந்திருந்தார்கள் அதனால் கௌசிகர் சற்று வருந்தி ஒரு தனிமையான இடத்தில் போயிருந்தார். அதை உணர்ந்த தர்ம வியாதர் கௌசிகர் இருக்கிற இடத்துக்குப் போனார்.

12—20. அங்கே போய்க் கௌசிகரைக் கண்டு பகவானே! உமக்கு நமஸ்கரிக்கிறேன். உமது வரவு நல் வரவாகட்டும். நான் தர்மவியாதன். உமக்கு நான் என்ன செய்ய வேண்டும்? பதிவிரதையான அந்த ஸ்திரீயினாலே அனுப்பப்பட்டிருக்கிறீர் அல்லவா? அந்த அம்மாள் சொன்னபடி உண்மை யானவைகளைத் தெரிந்து கொள்ளலாம் என்றார். தர்மவியாதருடைய அந்த வசனங்களைக் கேட்ட பிராமணன் பிரமித்து, இரண்டாவது ஆச்சரியம் என்று சிந்தித்துக் கொண்டிருந்தார். அப்போது தர்மவியாதர் இது சரியான இட மல்ல ஆகையால் பகவானே! என்னுடைய வீட்டுக்குப் போவோம் எழுந்த ருளும் என்று கூறினார் அதைக் கேட்ட பிராமணர் அப்படியே தர்மவியா தர் கூடப் போனார். தர்ம வியாதர் அந்தப் பிராமணனை முன்னிட்டுக்கொ ண்டு தமது அழகான வீட்டுக்குப் போய், ஒரு ஆசனமிட்டு அதில் அவரை உட்காரவைத்து பாத்திய ஆசமனீயங்களால் அவரை உபசரித்தார். கௌசி கர் அந்த அதிதி பூஜையை ஏற்றுக்கொண்டு சுகமாய் உட்கார்ந்தபின் தர்ம வியாதரைப் பார்த்து நீர் செய்கிற கோரமான கொடிய கர்மம் செய்யத் தகா தென்று நான் நினைக்கிறேன் என்றார்.

21—40. பிராமணோத்தமரே! இது என் குல தர்மம். இந்தத் தர்மம் என் பிதா, பிதாமகர் முதலானவர்களாலும் பரம்பரையாகச் செய்யப்பட்டு வருகிறது. பூர்வ கர்மத்தை அனுசரித்துப் பிரமதேவனால் இந்தக் கர்மம் எனக்குக் கட்டளை யிடப்பட்டது. ஆகையால் என் குல தர்மமான இந்தக் கர்மத்தைச் செய்து விருத்தர்களான என் மாதா பிதாக்களைப் போஷித்து அவர்களுக்குப் பணிவிடை செய்கிறேன் சத்தியத்தையே பேசுகிறேன். என் சக்திக்குத் தக்கபடி தர்மம் கொடுக்கிறேன். தேவர்களையும் அதிதிகளையும் வேலைக்காரர்களையும் பூஜிக்கிறேன். நான் ஈனமானது ஒன்றையும் செய்ய வில்லை. புராதனமான என் சுஜாதி தர்மத்தையே நான் செய்கிறேன், பூர்வ கர்மத்தின்படி பிரமதேவனால் எனக்கு இந்தக் கர்மம் விதிக்கப்பட்டது. கிருஷி, கோரட்சணம், வியாபாரம், தண்டநீதி, மூன்று வேதங்களை யோதல் இவைகளே இவ்வுலகில் ஜீவனாதாரங்களாக இருக்கின்றன. சூத்திர வைசி யர்களுக்குப் பயிரிடும் தொழிலும், க்ஷத்திரியர்களுக்கு சத்துருக்களைச் சங்கரித் தலும் பிராமணர்களுக்குப் பிரமசரியம், தவசு, மந்திர தியானம், சத்தியம், இவைகளும் நித்திய தர்மங்களாம். அரசன் தான் தர்மநிஷ்டனா யிருந்து கொ ண்டு பிரஜைகளைச் சுதர்மம் செய்யும்படி பரிபாலிக்க வேண்டும். வேறு கர்மங்க ளைச் செய்கிறவர்களைச் சிட்சித்துச் சுதர்மங்களைச் செய்யும்படி அரசன் செய்ய வேண்டும். ஜனகருடைய இராஜ்யத்தில் சுதர்மத்தைச் செய்யாதவர்கள் இல்லை. நான்கு வருணத்தாரும் தத்தம் சுதர்மங்களையே செய்து கொண்டிருக்கிறார்

கள் துர்க்கர்மம் செய்கிறவர்களும், செய்யத் தகாத கர்மங்களைச் செய்கிறவர்களும் தனது புத்திரர்களா யிருந்தாலும் ஜனக மஹாராஜா அவர்களை நியாயப்படி தண்டிப்பார். சுதர்மத்தில் நிலைத்திருக்கும்படி செய்வார். சுதர்மத்தைச் செய்கிற அரசனாலே சகல தர்மங்களும் நடக்கின்றன. ஐசுவரியம், இராஜ்யம் தண்டம் இவைகள் அரசர்களுக்குரியன. அரசன் சுதர்மத்தினாலேயே அவைகளை அடைகிறான். மற்ற வர்ணங்களெல்லாம் அரசனைப் பின் பற்றியே நடக்கின்றன. பிராமணோத்தமரே! மற்றவர்களாலே கொல்லப்பட்ட பன்றி, எருமை முதலியவற்றின் மாமிசங்களை நான் விலைக்கு வாங்கி வியாபாரம் பண்ணுகிறேன். நான் ஒருபோதும் ஜீவவதம் செய்து விற்பதில்லை. ருதுகால கமனத்தை உத்தேசித்து நானும் பட்சிக்கிறேன். உபவாசமும் செய்கிறேன். இரவிலும் உண்கிறேன். துராசாரனா யிருக்கிறவனும் சுசீலனாகிறான். ஜீவ இம்சை செய்கிறவன் கூடத் தர்மிஷ்டனாய்விடுகிறான். அரசனுடைய தவறுதலாலே தர்மம் கெடுகிறது. அதர்மம் விருத்தியாகிறது. அதர்மம் விருத்தியாவதினாலே ஜாதி சங்கரம் உண்டாகிறது. அதனாலே கோர ரூப முள்ளவர்களும், குள்ளர்களும், பெரு வயிறுள்ளவர்களும், பெரிய தலை யுள்ளவர்களும், விபசாரிகளும் உண்டாகிறார்கள். அரசனுடைய தர்மத்தினாலேயே பிரஜைகள் தர்மத்தைச் செய்கிறார்கள். ஆகையால் ஜனக மஹா ராஜாவினால் பிரஜைகள் தர்மமாகப் பரிபாலிக்கப் படுகிறார்கள். சுதர்மத்தைச் செய்கிறவர்களை அரசன் அனுக்கிரகிக்கிறான். அவர்களைப் பெருமைப் படுத்துகிறான். சுதர்மத்தை விட்டு மேலான தர்மத்தைச் செய்கிறவனை அரசன் கொல்கிறான்.

41—61. சக்திக்குத் தக்கபடி அன்னதானம் செய்ய வேண்டும். ஆசையை ஒழிக்க வேண்டும். அதிதிகளைப் பூசிக்க வேண்டும். பிராணிகளுக்கு இதத்தையே எப்போதும் சிந்திக்க வேண்டும். சற்குணமுள்ள புருஷன் தானம் கொடுக்க வேண்டும். அன்னமிட வேண்டும். பொய் பேசுவது கூடாது. எல்லாருக்கும் பிரியமான வசனங்களைப் பேச வேண்டும். காமம், டம்பம், துவேஷம் இவைகளை விட்டுத் தர்மத்தைச் செய்ய வேண்டும். பிரியமான விஷயங்களாலே சந்தோஷப்படுத்துவதும், துன்பமுண்டானதினாலே துக்கப்படுவதும் கூடாது ஆசையாலாவது, காமத்தினாலாவது தர்மத்தை விடக் கூடாது. ஒரு காரியத்தை உத்தேசித்தாவது, வேறு பலனைக் கருதியாவது தர்மத்தைச் செய்யக் கூடாது. சொர்க்கத்தை உத்தேசித்தே தர்மத்தைச் செய்ய வேண்டும். கெடுதி செய்தவர்களுக்குக் கெடுதியைச் செய்யக் கூடாது. இப்படித் தர்மத்தைச் செய்தால் பாபங்கள் தாமாகவே விலகிப் போய் விடும். சாதுக்களால் செய்யப்படுகிற கர்மத்தைச் செய்ய வேண்டும். துஷ்டர்களுடைய கிருத்தியங்களைச் செய்யக் கூடாது. பரிசுத்தவான்களுடைய தர்மத்தையே ஆசரிக்க வேண்டும். சிரத்தை யில்லாமல் செய்யப்படுகிற தர்மம் பலன் தாராது. தர்மிஷ்டர்கள் எந்தக் காரியத்தையாவது உத்தேசித்து எங்கே சென்றாலும் அவர்களுக்கு அந்தக் காரியம் தடையறச் சித்தியாகின்றது. மூடர்

கள் கொள்கைகளையும் பயனில்லாதவைகளையும் விட்டவன் அந்தராத்மாவை அறிந்தவனென்று கருதப்படுகிறான். சூரியனுதித்தவளவில் இருள் நீங்கச், சகல பொருள்களையும் காண்பது போல அவன் ஞானோதயம் பெற்று எல்லாவற்றையும் அறிகிறான். எவன் தன்னைத் தானே புகழ்ந்து பேசுகிறானோ அவன் உலகத்தாரால் நிந்திக்கப்படுகிறான். குணமுள்ளவன் கீர்த்தி பெற்று வாழ்கிறான். அறியாமல் பாபத்தைச் செய்து விட்டால் அதைக் குறித்து வருந்தி, மறுபடியும் அதைச் செய்யாதிருக்கும்படி முயல வேண்டும். செய்த பாவத்துக்குப்பரிகாரம் செய்து கொள்ள வேண்டும். இந்தத் தர்மம் சுருதியிலும் சொல்லப் பட்டுள்ளது. பாப கர்மத்தைச் செய்தவன் அதைப் பரிகரித்துக் கொண்டு மறுபடியும் செய்யாதபடி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இனி இப்படிப்பட்ட கர்மத்தைச் செய்வதில்லை யென்று நிச்சயித்துக்கொள்ள வேண்டும். அசூயை யில்லாதவனாய்ச் சிரத்தையுடன் தானம் செய்கிறவன் சொர்க்கத்தை அடைகிறான். வஸ்திரத்தில் உண்டான துவாரங்கள் அந்த வஸ்திரத்தைக் கிழித்து நாசம் பண்ணுவது போல பாபமானது செய்தவனை அழித்து விடுகின்றது. மேகமந்தாரமானது கொஞ்சம் கொஞ்சமாய் விலகச் சந்திரன் வெளிப்பட்டுப் பிரகாசிப்பது போல தாமத்தைச் செய்கிறவனும் பாபங்களினின்றும் விடுபட்டுப் பிரகாசிப்பான். சூரிய உதயத்தினாலே பூத இருள் விலகுவது போல தார்மிகனும் பாபங்கள் விலகச் சபத்தைப் பெற்று விளங்குகிறான். லோபம் மோகம் இவற்றினிடத்திலிருந்தே பாபம் உண்டாகின்றன். ஆதலால் அவைகளை ஒழித்து விட வேண்டும். லோபாதிகளாலேயே மனிதர்கள் அறிவற்றவர்களாய்ப் பாபத்தைச் செய்கின்றார்கள். அஞ்ஞான முடையவர்கள் அதர்மத்தைத் தர்மமாக எண்ணிக் கொண்டு பாபியாகிறார்கள். சருகாதிகளால் மூடப்பட்ட கிணற்றை அஜாக்கிரதையால் அறியாமல் அதில் விழுந்து வருந்துவது போல அஞ்ஞானிகள் அதர்மத்தைத் தர்மமாக நினைத்துச் செய்து நரகில் விழுந்து வருந்துகிறார்கள். பரிசுத்தத்தைக் கொடுக்கிற ஐந்து வகைச் சிஷ்டாசாரங்களை அறிந்து அவற்றை அநுசரிக்க வேண்டும். சிஷ்டாசாரத்தை அறிந்து நடப்பவர்கள் கிடைப்பது அரிது.

62—85. இதைக் கேட்ட துவிஜோத்தமனான கௌசிகன் தர்மவியாதரை நோக்கிச், சிஷ்டாசாரம் இன்னதென்று எனக்குத் தெரியவில்லை. அதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன், சிஷ்டாசாரத்தை எனக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்கத் தர்மவியாதர் சொல்லுகிறார். யாகம், தானம், தவம், வேதாத்தியயனம், சத்தியம் என்கிற இந்த ஐந்தும் நித்தியமான சிஷ்டாசாரங்களாம். இவைகள் பரிசுத்தமானவைகள். காமம், குரோதம், லோபம், டம்பம், பொய் இவைகள் அவற்றுக்கு விரோதிகளாம். அவைகளை விட்டு விட வேண்டும். இவைகளே சிஷ்டாசார தர்மங்களாம். சிஷ்டர்களுடைய சம்மதமுமாம். யக்ஞம் செய்வதும், அத்தியயனம் செய்வதும் ஒழுக்கம் இவைகளும் சிஷ்ட லட்சணங்களாம். குரு பணிவிடை, சத்தியம், கோபமில்லாமை, தானம் இந்த நாலும் சிஷ்டாசாரமாகிய நித்திய தர்மங்களாம். இந்தச் சிஷ்

டாசாரங்களைத் தெரிந்துகொண்டு தர்மங்களைச் செய்ய வேண்டும். வேத இரகசியமானது சத்தியம் ; சத்தியத்தின் இரகசியம் தமம். தமத்தின் இரகசியம் தானமாம். இவைகளும் சிஷ்டாசாரங்களாம். அஞ்ஞானத்தினாலே தர்மங்கள் கெடுகின்றன. வேதத்தில் தானமே தர்மம் என்று நிச்சயிக்கப்பட்டது. சிஷ்டாசாரங்களை யுணர்ந்து தானம் செய்ய வேண்டும். குருவின் உபதேசப்படி தர்ம நிச்சயத்தை யுணர்ந்து தர்மம் செய்ய வேண்டும். நாஸ்திகர் மரியாதை யற்றவர்கள், துஷ்டர்கள், பாபிகள் இவர்களை ஒழித்து விட்டுத் தார்மிகர்களையே சேர வேண்டும். அவர்களையே அனுசரிக்க வேண்டும். பஞ்சேந்திரியங்களாகிற ஜலம் நிறைந்ததும், காமக்ரோதாதிகளென்கிற முதலைகளை யுடையதுமான ஜனனசாகரத்தை ஞானமென்கிற ஓடத்தைக்கொண்டு தாண்டிக் கரையேற வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாகத் தர்மத்தைத் செய்து சேர்த்துக் கொள்ள வேண்டும். சாதுக்கள் சிஷ்டாசாரங்களை அனுசரிக்கிறதினால் வெள்ளை வஸ்திரத்தில் சிவப்புக் சாயமூட்டினது போலப் பிரகாசிக்கிறாகள். அஹிம்ஸை , சத்தியம், பிராணிகளிடத்தில் அன்பு இவைகளை ஆசரிக்க வேண்டும். இவற்றுள் பொல்லாமையே எல்லாத் தர்மங்களிலும் மேலான தர்மம். அது சத்தியத்தினாலே நிலை பெறுகிறது. ஆகையால் சத்தியம் சிஷ்டாசாரமாகக் கொண்டாடப்படுகிறது. ஆசாரமும், தர்மமும் சிஷ்டாசார லட்சணங்களாம். பிராணிகளினுடைய சுபாவகுணம் அவைகளை விட்டு நீங்குவதில்லை. அது போலவே பாபிகளுக்கும் துர்க்குணங்களாகிற காம குரோதமோகலோபங்கள் ஒழிவதில்லை. நியாய மார்க்கத்தினாலேயே தருமத்தைச் செய்ய வேண்டும். குரோதம், அசூயை, அகங்காரம், மற்சரம், இவைகளை ஒழித்துச் சத்தியத்தை அனுசரித்துத் தர்மத்தைச் செய்வதே சிஷ்டாசாரமாம். மூன்று வேதங்களை அத்தியயனம் செய்தல், சுத்தி, குரு பணிவிடை வேதாந்த விசாரம் இவைகளும் சிஷ்டாசாரங்களாம். இவைகளைச் சத்துவ குணத்துடன் சுதர்மத்தைச் செய்ய வேண்டும். இந்த ஆசாரங்கள் அற்புதமுள்ளதும் புராதனமானதுமாகிய சிஷ்டாசார தர்மங்களாம். ஆஸ்திக புத்தி, அகங்காரமில்லாமைகளை யுடையவர்களைப் பிராமணர்கள் பூஜிக்கிறார்கன், சுதர்மமான தர்மங்களைச் செய்வதனாலே மனிதர்கள் சொர்க்கத்தை அடைகிறார்கள். தர்ம நிச்சயங்களைக் குரு மூலமாயுணர்ந்து செய்கிறவன் சொர்க்கத்தில் எப்போதும் வசிப்பான்.

86—104. வேதோக்தமாகச் செய்யப்படுகிற தர்மம் சிரேஷ்டமானது. தர்மசாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. சிஷ்டாசாரம் ஆகிய இந்த மூன்றும் தர்ம லட்சணங்களை யுடையன. வேதாத்தியயனம், தீர்த்த யாத்திரை, பொருமை, சத்தியம், சௌசம், இவைகள் சிஷ்டாசாரங்களாம். பிராணிகளுக்கு ஹிம்சை உண்டாக்கக் கூடாது. எல்லாப் பிராணிகளிடத்திலும் தயையா யிருக்க வேண்டும். சுக துக்கங்களைப் பூர்வ கர்மபலன் என்று கருத வேண்டும். இதுவும் சிஷ்டாசாரமாம். நியாயத்தையும், நற்குணங்களையும், லோக க்ஷேமத்தையும் கருதுகிறவன் பரிசுத்தவானாய்ச் சொர்க்கத்தை

அடைகிறான். கொடை, எளியவர்களுக்கிரங்கல், தவசு, பிராணிகளிடத்தில் தயை இவைகளை யுடையவனு யிருப்பதும் சிஷ்டாசாரமாம். சிஷ்டாகளைப் பூஜிக்கிறவனும், சிரத்தையுடன் தானம் செய்கிறவனும், தவமுள்ளவனும், தானம் செய்கிறவனும் சொர்க்கத்தை அடைவான். மனைவி முதலியவாகளாலும் மற்றவாகளாலும் நெருக்கப்பட்டபோதிலும், கொஞ்சமாவது தாமத்தைச செய்ய வேண்டும். அஹிம்சை, சத்தியம் பேசுதல், அகங்கார மின்மை, பொய் சொல்லாமை, துரோஹம் செய்யாமை, அபிமானம் இல்லாமை, ஆசை யில்லாமை, பொறுமை, சந்தோஷம், சமம, தமம், துரோகம் செய்யாமை, லோகத்துக்கு க்ஷேமத்தைக் கருதுதல், வேதாத்தியயனம் செய்தல் இவைகளெல்லாம் சொர்க்கத்தை அளிப்பவைகளாம். இவைகளெல்லாம் சிஷ்டாசாரங்களாகக கூறப்படுகின்றன. அசூயை யில்லாமை, பொறுமை, சாந்தி, சந்தோஷம் பிரிய வசனம் கூறுதல், காம குரோதங்களை ஒழித்தல் இவைகள் சிஷ்டாசாரங்கள் என்று கொண்டாடப்படுகின்றன, சன்மார்க்கத்தில் நடந்து கர்மத்தைச செய்கிறவன் சிஷ்டாசார முடையவன். அவன் ஞான மெனகிற உப்பரிகையின் மேல் இருந்துகொண்டு, அறிவுள்ளவர்களையும், மூடர்களையும், பல விதங்களாகிற உலக விருத்தாந்தங்களையும் பார்த்துக்கொண்டிருக்கிறான். நான் அறிந்த மாத்திரம் சிஷ்டாசாரங்களைச் சொல்லி விட்டேன். பிராமணோத்தமரே! இவற்றைத தெரிந்துகொள்ளும் என்று தர்மவியாதர் கௌசிகருக்குச் சிஷ்டாசாரங்களைக் கூறினார்.

---

## 207-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—19. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரை நோக்கித் தர்மராஜாவே! தர்ம வியாதர் கௌசிகரைப் பார்த்து, நான் செய்கிற கர்மம் கொடுமையானதுதான் பிராமணரே! விதி பலமுடையது. கடக்க முடியாதது. பூர்வ ஜன்மங்களில் செய்த கர்மம் பாப புண்ணிய பலனை யளிப்பது, அப்படிப்பட்ட தோஷங்களை எவ்விதமான முயற்சியாலும் தடுக்க முடியாது. கொலை முதலிய துர்க் கர்மங்கள் எல்லாம் பூர்வ கர்ம பலனுக வருகின்றன. கொலை செய்கிறவன் அதற்கு நிமித்த காரணனுகிறான். அப்படிப் பிறரால் கொல்லப்பட்ட ஜந்துக்களின் மாம்சத்தை வாங்கி நான் விற்கிறேன். அப்படிச் செய்வது உபயோகபடுத்தும் முறையாக விநியோகித்துப் புசித்தால் பாபமாகாது. அதாவது தேவதைகள், அதிதிகள், பிதிர்க்களுக்குப் பூசை செய்து பின் புசிக்கலாம். செடிகள் கொடிகள், ஆடு, மான், பட்சி முதலியவைகள் போஜன பதார்த்தங்களாக உலகத்தில் உபயோகிக்கப்படுகின்றன. இது வேத சம்மதமாம். உசீனர புத்திரனுகிய சிபி தன் தேகத்திலுள்ள மாம்சத்தை அறுத்துக் கொடுத்தும், பிறரால் அடையப் படாத சொர்க்கத்தை அடைந்தான், பிராமணோத்தமரே! பூர்வத்தில் ரந்தி

தேவன் என்ற இராஜா ஒரு யாகம் செய்தான். அந்த யாகத்தில் அடிக்கடி அநேக மான் பசுக்களைச் சமைத்தார்கள். அநேகமாயிரம் பிராமணர்களுக்குப் போஜனம் செய்வித்தார்கள் அப்படிச் செய்ததனாலே அந்த அரசன் ஒப்பற்ற கீர்த்தியை அடைந்தான். சாதுர்மாஸ்யம் என்கிற யக்ஞசத்தில் பசுவதம் செய்கிறது விதநிய தர்மமாயிருக்கிறது. அக்கினி பகவான் மாம்ஸ பட்சணம் செய்வதில் பிரியமுள்ளவர். அது வேதத்தில் சொல்லப்பட்டது. மந்திர விதிப்படி அந்த யாகங்களைச் செய்கிறவர்கள் சொர்க்கம் அடைகிறார்கள். அக்கினி தேவன் முதலில் மாம்ச பட்சணம் செய்யாவிட்டால் ஒருவரும் மாம்ச பட்சணம் செய்ய மாட்டார்கள். அக்கினி தேவனைப் புசிப்பித்த பிறகு புசிக்கிறதினால் தோஷம் உண்டாகிறதில்லை. ரிஷிகள் விதிப்படி மாம்ச பட்சணம் செய்கிறார்கள். தேவர்களும், பிதிர்களும் பசனம் செய்த மாம்சத்தைப் புசிக்கின்றார்கள். விதியுடனும் சிரத்தையுடனும் மாம்ச பட்சணம் செய்யப்படுதல் தூஷிக்கப்படுகிறதில்லை. இது வேதத்தில் சொல்லப்பட்டது. ருது காலத்தில் தன் பத்தினியுடன் கலக்கிறவன் பிரமசாரி என்று புகழப்படுவது போல விதிப்படி மாம்சம் புசிப்பதும் நிந்திக்கப்படுகிறதில்லை. சௌதாசேனன் என்ற அரசன் சாபத்தினாலே மாம்சத்தைப் புசித்தான். அது குற்றமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. ஏனென்றால் சுதர்மத்தை அனுஷ்டிப்பதினாலே குற்றமாகாது. இவைகளெல்லாம் பிராணிகளுக்கு அவற்றின் பூர்வ கர்மங்களினாலே சம்பவிக்கின்றன. பிராமணா! சுதர்மத்தை விட்டு விடுகிறது அதர்மம் என்று கருதப்படுகிறது. சுதர்மத்தையே செய்கிறவன் தார்மிகன் என்று கருதப்படுகிறான். இது நிச்சயம். பூர்வ கர்மத்தினாலே பிராணிகளுக்கு ஆகாரம் உண்டாகிறது. இது பிரமதேவனாலே பிராணிகளுக்கு விதிக்கப்பட்டது. பிராணிகளின் கர்மத்தை அனுசரித்தே பிரமா அவைகளுக்கு விதிக்கிறார். பூர்வ கர்ம பலத்தினாலே சுபாசுப கர்மங்களைப் பிராணிகள் செய்கின்றன. குரூர கர்மங்களும் முன் கர்ம பலனாலேயே செய்யப்படுகின்றன.

20—29. பிராமணோத்தமரே! நான் குரூர கர்மத்தைச் செய்தாலும், தானம் செய்கிறேன். உண்மையைப் பேசுகிறேன். குரு பணிவிடை செய்கிறேன். பிராமணர்களைப் பூஜிக்கிறேன். எப்போதும் தர்மத்தில் விருப்பமுள்ளவனாயிருக்கிறேன். வாதத்தையும் அகங்காரத்தையும் விட்டு இருக்கிறேன். சிலர் கிருஷித் தொழில் பாபமற்றதென்று நினைக்கிறார்கள். அதுவும் பாபமேயாம். ஏனென்றால் பயிர் செய்யும் போது பூமியை உழுவதனாலே அநேக ஜீவன்கள் கொல்லப்படுவதினாலே அதுவும் பாபமென்று எனக்குத் தோன்றுகிறது. தானியங்களும் புற்களும் ஜீவனுள்ள பிராணிகளே என்று எனக்குத் தோன்றுகிறது. பிராணிகளும் பட்சிக்கும் நிமித்தம் கொல்லப்படுகின்றன. மரங்களும் கொடிகளும் ஜீவனுள்ளவைகளே. விருட்சங்களும் பலங்களும் ஜீவனுள்ளவைகளே என்று கருதப்படுகின்றன. தண்ணீர் கூட

ஜீவப்பிராணியே என்று எனக்குத் தோன்றுகிறது. பூலோகத்தில் நிறைந்திருக்கிற பிராணிகளெல்லாம் பிராணிகளைப் புசித்தே ஜீவிக்கின்றன. பெரிய மீன்களெல்லாம் சிறிய மீன்களைப் பட்சிக்கின்றன. அது குற்றமில்லை என்றே தோன்றுகிறது. ஆகையால் ஜீவன் ஜீவனாலேயே ஜீவிக்கின்றது.

30—39. உலகமெல்லாம் ஜீவப் பிராணிகளாலேயே நிறைந்திருக்கிறது. ஆகையால் நடக்கிறதினாலும், உட்கார்ந்திருக்கிறதினாலும், படுக்கிறதினாலும் கூட ஜீவ இம்சை உண்டாகிறதென்று எனக்குத் தோன்றுகிறது. ஆகாசம் பூமி யெங்கும் பிராணிமயமாகவே யிருக்கிறது. ஆகையால் அறிந்தும் அறியாமலும் பிராணிவதம் உண்டாகிறதென்றே தோன்றுகிறது. இப்படிப்பட்ட இம்சைகளெல்லாம் பூர்வ கர்ம பலனாலேயே நேர்கிறதென்று தோன்றுகிறது. பூமியில் ஜீவ வதை செய்யாதவர்களென்று எண்ணப்படுகிறவர்கள் எல்லாரும் ஜீவ இம்சை செய்கிறவர்களேயாம். ஏனென்றால் அவர்கள் பிராணி இம்சை செய்யாதிருப்பது கொஞ்சந்தான். இம்சையோ பெரிதா யிருக்கின்றது. அதை அவர்கள் அறிவதில்லை. நல்ல குலத்தில் பிறந்த சற்குணமுடையவர்களும் வெட்கத்தை விட்டுக் கொலை செய்கிறார்கள் நல்லவர்கள் நல்லதையும், துஷ்டர்கள் துர்க்கருமத்தையும் விதியின் ஏவுதலால் செய்கிறார்கள். மனிதர்கள் நற்கருமத்தையே செய்கிறார்கள் என்பதில்லை. திரண்ட ஐசுவரியமுள்ளவன் தன் பந்துக்களைக் காப்பாற்றுகிறதில்லை. கைவிடுகிறார்கள். பண்டிதனாயிருக்கிறவன் மூடத்தனத்தினாலே தன் குருவை நிந்திக்கிறான். எல்லாம் விபரீதமாகவே காணப்படுகின்றன. தர்மத்தைப் போல அதர்மம் செய்யப்படுகிறதென்று தோன்றுகிறது. தர்மமும் அதர்மமும் ஆகிய கர்மங்கள் அளவிடப்படா. அவற்றின் சூட்சுமத்தை அறியச் சாத்தியப் படுகிறதில்லை. தன் குலாசாரமாகிய சுதர்மத்தை விடாமல் செய்கிறவனே கீர்த்திமானாவான். ஆகையால் தன் சுதர்மத்தை விடாமல் செய்வதே தர்மமாம்.

---

## 208-வது அத்தியாயம்

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—25. கௌசிகர் தர்ம ரகசியங்களை யின்னமும் சொல்ல வேண்டுமென்று கேட்கத், சகல தர்மங்களையும் அறிந்தவரான தர்மவியாதர் கூறுகிறார். தர்மங்களுக்கு வேதப் பிரமாணம் இருக்க வேண்டும் என்பது பெரியோர்களுடைய தீர்மானம். தர்ம இரகசியங்கள் அநந்த விதமாயுள்ளன. பிராண இரக்ஷணையிலும், விவாகத்திலும் பொய் சொல்ல வேண்டி யிருக்கிறது. அந்தச் சமையங்களில் சத்தியம் அசத்தியமாகவும், ஆகின்றன. எது ஜீவன்களுக்கு இதத்தைச் செய்யுமோ அதுவே சத்தியமென்று கொள்ளப்படுகிறது. அகர்மங்கள் எல்லாம் சுபகர்மமாகவே சொல்லப்படுகின்றன. தர்ம

சூட்சமங்கள் விபரீதமாகவே தோன்றுகின்றன. இவைகள் அவசியம் மனிதர்களாலே செய்யப்படுகின்றன. மூடத்தனத்தினாலாவது, சபலத்தினாலாவது தனக்கென்று கர்மத்தைச் செய்கிறவன் அந்தக் கர்மத்தினாலே பந்தப்படுகிறான். அதன் பலனை அடைந்தே விடுகிறான். அதனாலே சுகமும் துக்கமும் உண்டாகின்றன. அறிவினாலாவது, நீதியினாலாவது ஒரு பலனைக் கருதித் தர்மஞ் செய்தால் அதன் பலனாகிய சுக துக்கங்கள் அனுபவித்துத்தான் ஒழிகின்றன. எந்தக் கர்மங்கள் தனக்கென்று செய்யப்படுகின்றனவோ அவைகளெல்லாம் நிஷ்பலன்களாய் விடுகின்றன. ஜீவ ஹிம்சையாலும் வஞ்சனையாலும் உலகம் நிறைந்திருக்கிறது. சில கர்மங்கள் விரோத பலனையே கொடுக்கின்றன. புத்திரர்களை விரும்பி தேவர்களை நோக்கித் தவம் பண்ணுகிறார்கள். விரதமிருக்கிறார்கள். தான தர்மங்களைச் செய்கிறார்கள். தாயானவள் பத்து மாதம் கர்ப்பத்தில் தரித்துக் கஷ்டப்பட்டுப் புத்திரனைப் பெறுகிறாள். அந்தப் புத்திரன் வளர்ந்து குலத்தைக் கெடுக்கிறான். புண்ணிய கர்மங்களைச் செய்தும் பாப கர்ம பலனே சித்தித்தது. சிலர் ஒரு பிரயத்தனமும் செய்யாமல் பிதாவினால் சம்பாதிக்கப்பட்ட தனதானியங்களை கொண்டு ஜீவிக்கிறார்கள். சிலர் செல்வ மிருந்தும் வியாதிகளால் அனுபவிக்க முடியாதவர்களாகிறார்கள். கர்மத்தினாலே தேக முண்டாகிறது. அந்தத் தேகத்துக்குக் காமம் காரணமாகவே வியாதிகளுண்டாகின்றன. வேடர்கள் துஷ்ட மிருகங்களை வருத்துகிறது போல அந்த வியாதிகள் மனிதர்களை வருத்துகின்றன. அந்த வியாதிகள் புத்தியுள்ளவனும், பண்டிதனும், சமர்த்தனும் அநேக மருந்துகளை உடையவனுமான வைத்தியனால் நீக்கப்படுகின்றன. அனுபவிக்கத் தக்கவனாயிருந்தும் பூர்வ கர்ம வசத்தினால் உண்டான வியாதி காரணமாக அனுபவிக்க முடியாமல் போகிறது. மெலிந்த சரீரத்தை யுடையவனாயிருந்தும் புஜபல முள்ளவனாய் வெற்றி பெறுகிறான் உணவினாலேயும் துக்கங்கள் உண்டாகின்றன. இப்படி உலகமானது மோகத்தினாலும் சோகத்தினாலும் [illegible]க்கப்படுகின்றது. பிரியம் இல்லாதவைகளும் விதியினால் வருகின்றன. பிரி[illegible]ள்ளதும் வருகின்றன. தமக்கு இஷ்டமானதை அடையும் பொருட்டு [illegible] மேலும் முயலுகிறார்கள். ஆயினும் எண்ணினபடியே அடைவதில்லை. [illegible] நட்சத்திரங்கள் வானத்தில் பிரகாசிப்பதைப் போல பலாபலன்களும் உண்டாகின்றன. கர்மசித்திகளில் கர்மங்கள் மாறுபடுகின்றன. எவ்வளவு முயன்றாலும் முயற்சியின்படி பலன் அடைவதில்லை. ஆதலால் பூர்வ ஜன்மங்களில் செய்த காம பலன்களே இந்த ஜன்மத்தில் சித்திக்கின்றன. வேதமும் அப்படியே சொல்லுகின்றன. சகல பிராணிகளுக்கும் தேக நாசம் மாத்திரம் உண்டாவதே யொழிய ஜீவன் அழியாமலிருக்கிறது. அது கர்மாகர்ம பலன்களை அனுபவிக்கின்றது என்று தர்மவியாதர் சொன்னார்.

26— . கௌசிகர் தர்மவியாதரை நோக்கித் தர்ம முணர்ந்தவர்களில் சிரேஷ்டரே! ஜீவன் சாசுவதமானது என்று கூறினீரே, அதனை எனக்கு விளங்கச் சொல்ல வேண்டும் என்று கேட்கத் தர்மவியாதர் சொல்லுகிறார். ஜீவன்

ஒருபோதும் நாசம் அடைவதில்லை. மாயா சம்பந்தமான தேக பேதங்களே அழிகின்றன. ஜீவன் சரீரம் போனபின் மற்றொரு சரீரத்தைப் பெறுகின்றது. அந்தச் சரீரத்தைப் பெற்றுக் கர்மத்துக்குத் தக்கபடி சுக துக்கங்களை அனுபவிக்கின்றது. அந்தக் கர்மம் அனுபவித்ததும் நாச மடையும். பாபாத்மாக்கள் பாபத்தையும் புண்ணியாத்மாக்கள் புண்ணியத்தையும் செய்கின்றன. கர்ம சேஷத்தை அனுசரித்தே ஜீவர்கள் கர்மத்தைச் செய்கிறார்கள் என்றார்.

26—30. கௌசிகர் தர்மவியாதரை நோக்கி ஜீவன் அழிகிறது என்ற விஷயத்தை விளக்க வேண்டுமென்று கேட்டார். தர்மவியாதர் கூறுகின்றார். அறிவில்லாதவர்கள் ஆத்மா அழிகின்றதென்று சொல்வார்கள். அது தப்பு; ஏனென்றால் ஆத்மா ஒருபோதும் அழிகிறதில்லை. நித்தியமானது. இவ்வுலகத்தில் செய்த கர்மம் அழிகிறதில்லை. அது செய்தவனையே பின் பற்றித் தொடரும். செய்தவனைத் தவிர மற்ற எவரும் அந்தக் கர்மத்தின் பலனை அனுபவிக்க மாட்டார்கள் மனிதன் இறந்த பின் முன் கர்மத்துக்குத் தக்கபடியே புதிய சரீரத்தை யெடுக்கின்றது என்றார். பிராமணன் தர்மவியாதரை நோக்கி, சரீரம் எப்படி வேற்றுமைப்படுகிறது? கர்மாகர்ங்களுக்குத் தக்கபடி உயாவும் தாழ்வுமான சரீரம் எவவாறு உண்டாகின்றன? என்று கேட்கத் தர்மவியாதர் சொல்லுகிறார். கர்மம் சர்ப்பத்திலேயே கர்ப்பாதானத்தினாலே அமைகின்றன. ஆத்மா மறு சரீரத்தை யடையும்போது பூர்வ கர்மப்படி சுத்தமான அல்லது அசுத்தமான சரீரத்தைப் பெறுகின்றது. புண்ணிய கர்மத்தையே செய்கிறவன் தேவ சரீரத்தை அடைகிறான். புண்ணியம் பாவம் இரண்டுமுள்ள ஆத்மா மனித சரீரத்தை அடைகின்றது. பாபம் ஒன்றையே செய்கிற ஆத்மா தாழ்ந்த ஜன்மங்களை யெடுத்து நரக வேதனையையும் அனுபவிக்கின்றது. அந்தக் கர்மபலத்தினாலேயே ஜனன மரணங்களை அடைந்து வருந்துகின்றது. மூப்பு வியாதிகளையும் பெறுகின்றன. மிருகங்கள் பட்சிகள் புழுக்கள் முதலியனவாகவும் ஜனிக்கின்றது. பாபாத்மா தன் கர்மத்திற்குத் தக்க பலனை துன்பத்தை அனுபவிக்கிறபோது மேலும் கர்மத்தைச் செய்கிறது. வியாதிக்காரன அஜீர்ண பதார்த்தங்களை உண்பது போல மீண்டும் பாபகர்மத்தையே செய்கின்றது. அது கடின துன்பமென்று கருதாமல் சுகமாக எண்ணுகின்றது. இதனால் அதிகமான கர்மத்தைச் செய்து பந்தப்பட்டுச் சமுசார சக்கரத்திலே சுழன்றுகொண்டு திரிகிறது. தவம் முதலிய நற்கருமங்களைச் செய்து சுத்தமான ஆத்மா பந்தமற்று தர்மிஷ்டர்கள் அடையும் மேலான கதியை அடைகின்றது. பாபிகள் பாபத்தைச்செய்து ஒருபோதும் பந்தமொழிவதில்லை. ஆகையால் தர்மத்தையே செய்ய வேண்டும். அதர்மத்தை யெவ்வகையிலும் ஒழித்து விட வேண்டும் பிறருடைய நற் செய்கைகளிலே குற்றம் கருதக் கூடாது. பிறர் செய்த உபகாரத்தை மறக்கக் கூடாது. அப்படிப்பட்டவன் தர்மம், அர்த்தம், இன்பம், மோட்சம் இவைகளை அடைவான். இந்திரியங்களை அடக்குகின்றவனும், பரிசுத்தனா யிருக்கிறவனும், மனதை அடக்கிக் கொள்கிறவனும் பாக்கியவான்; அறிவுள்ளவன்; அவன்

இம்மை மறுமைகளில் சுகத்தை அடைவான். ஆகையால் மனிதர்கள் பெரியோர் சென்ற மார்க்கத்தில் நடக்க வேண்டும். அவர்கள் செய்கிற நற் கருமத்தையே செய்ய வேண்டும், பிறருக்குத் துன்பம் உண்டாகாதபடி சம் பாதிக்க வேண்டும். சரியான வழியில் நடந்தால் தர்மம் கெடாது. அறிவுள் ளவர்கள் தர்மத்தையே செய்கிறார்கள் நீதி மார்க்கத்தினாலேயே சம்பாதிக் கிறார்கள். அந்தத் திரவியத்தினாலே தர்மத்தை விருத்தியாக்கி அதன் பயனை அடைவதற்குக் காத்திருக்கிறார்கள். இப்படியாகத் தர்மம் செய்கிறவன் இக லோக பரலோகங்களில் சுகத்தை அடைகிறான். பெருமையையும் அடைகி றான். இது தான் தர்மத்தின் பலன். புண்ணியவான்கள் சோர்வடையாமல் தர்மத்தைச் செய்வார்கள். அதனால் வைராக்கியம் பெறுகிறார்கள். அவர்க ளுக்குக் கோபமும் பகையும் கிடையாது

61— . உலகம் அநித்தியம் என்பதை உணர்ந்து, பிரபஞ்ச வாழ்வில் வைராக்கியம் அடைந்து, தர்மத்திலேயே சிந்தையுள்ளவர்களாய், விதியை அனுசரித்து நடந்து, மோட்சம் அடையும் உபாயத்தைத் தேடிக்கொண்டிருப் பார்கள். இப்படி நடப்பதினாலே பாபத்தைக் கடந்து வைராக்கியமுள்ளவர்க ளாகிறார்கள் அவன் தர்மத்தைச் செய்து மோட்சத்தை அடைவான். தவத் தினால் ஞானத்தை அடைவதே மோட்சத்துக்கு மார்க்கமாகும். இந்திரிய நிக்கிரகமே அந்த ஞானத்துக்கு மூலமாகின்றது. இந்திரிய நிக்கிரகம் சத்தி யம் இவைகள் இரண்டுமே பிரம பதம் என்கிற மேலான பதவியை அளிக்கின் றன. எண்ணங்களை யெல்லாம் பூர்த்தி செய்கின்றன என்று சொன்னார். இப்படிச் சொல்லிய தர்மவியாதருடைய வார்த்தையைக் கேட்ட பிராமணன், புலன்கள் என்பன யாவை? அவைகளை யேன் அடக்க வேண்டும்? அத னாலே பலன் யாது? அதை யெப்படி அடைகிறது? இவைகளை நான் அறிய விரும்புகிறேன் என்று சொல்லத் தர்மவியாதர் சொல்லுகிறார்.

---

## 210-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்.

1—10. மனிதருடைய மனம் புத்தியை அடைகிறது. அதன் பின் ஆசையுண்டாகிறது. அது காரணமாகக் கோபம் உண்டாகிறது. இவைக ளாலே பொருள் சம்பாதிக்க விருப்பமுண்டாய் அதைப் பெற அநேக உபாயங் கள் செய்யப்படுகின்றன. பின் மதத்தை அடைகிறான் அதனால் அவன் காம வசப்படுகிறான் காமம் பகையை உண்டாக்குகிறது. பகை பொறாமையை உண்டாக்குகிறது. பொறாமை மூடத்தனத்தை உண்டாக்குகிறது. இப்படி யாக மனிதன் பேராசைக்குள்ளாய்க் காமத்தாலும் துர்ச்சிந்தையாலும் கெடுகி றான். அவன் தர்மத்தையும் வஞ்சனையாகச் செய்கிறான். வஞ்சனையாலேயே

பொருள் தேடுகிறான். பொருள் தேட ஆரம்பிக்கும்போதே வஞ்சனையைத் தொடங்குகிறான். நண்பர்களும், பெரியோர்களும் வேதப் பிரமாணங்களைக் காட்டித் தடுத்தாலும் அவன் கேட்கிறதில்லை. அவர்கள் சொன்னபடி நடப்பதில்லை. அவன் பாபத்தையே விரும்பிச் செய்கிறான். காமமும் பகையும் காரணமாக மனதாலும், பேச்சாலும், செயலாலும் பாபத்தைச் செய்கிறான். ஆகையால் பாபமும் மூவகைப்படுகின்றன. தார்மிகர்களுடைய சிநேகத்தை வெறுக்கிறவன் இகபரங்களில் துக்கத்தையே அனுபவிக்கிறான். இது பாவிகளின் நிலைமை. இனி புண்ணியவான்களின் தன்மையைச் சொல்லுகிறேன் கேளும் என்று சொல்லுகிறார்.

11—21. மேற்சொன்ன கர்மங்கள் பாபமென்று தெரிந்து கொண்டு அவைகளை விட்டுவிடுகிறவன் புத்திமான். அவன் அந்தக் கர்மங்களின் பலாபலங்களை அறிந்துகொண்டு பெரியோரிடம் சிநேகம் செய்து கொள்ளுகிறான். அவன் எதைப் பெறுவதாயிருந்தாலும் பாபத்தைச் செய்யக் கருதான். தர்ம நெறி நின்றுந் தவறான் என்றார். இதைக்கேட்ட பிராமணன் தர்மவியாதரை நோக்கி, உமது வசனங்களெல்லாம் அமிர்தம் போல ருசியா யிருக்கின்றன. உமக்குச் சமானமான சக்திவந்தாகள் இல்லையென்று நான் நினைக்கிறேன். நீர் பெரிய ரிஷி என்றார். தர்மவியாதா, பிராமணர்களையும் பிதிர்க்களையும் உபசரிக்க வேண்டும். ஆகையால் புத்தியுள்ள அவ்விருவரையும் சகல பிரயத்தனங்களாலும் திருப்தி செய்விக்க வேண்டும். பிராமணனை வணங்கி உனக்கு விருப்பமானதைச் சொல்லுகிறேன். ஞானமே பிரமம். பரமாத்மாவான பரபிரமம் அதற்குத் தூரத்தில் இல்லை. மேலான ஐந்து பொருள்கள் இருக்கின்றன. அவை ஆகாசம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி என்பனவாம். இவைகள் முறையே சப்தம், ஸ்பரிசம், ரூபம், இரசம், கந்தம் என ஐந்து குணங்களை யுடையன. ஆறாவது மனம் என்பது; ஏழாவது புத்தி; எட்டாவது ஆசை; ஒன்பது, பத்து, பதினொன்று, பன்னிரண்டு, பதின்மூன்றாவது பொருள்கள், பஞ்சேந்திரியங்கள்; பதினாலாவது ஆத்மா; பதினைந்தாவது சத்துவகுணம்; பதினாறாவது இராஜோ குணம்; பதினேழாவது தமோ குணம்; இந்தப் பதினேழும் பிரகிருதி என்னப்படும். இவைகளெல்லாம் இந்திரியங்களுக்கு விஷயங்களாம். இருபத்து நாலு தத்துவங்களுமாம். இவற்றுக்கு அப்பாற்பட்டதே பிரமம். ஓ பிராமணா! நீர் விரும்பினவைகளை எல்லாம் சொல்லி விட்டேன். நீர் அறிந்துகொள்ள வேண்டியது இன்னம் ஏதாவதுண்டா? என்று கேட்டார்,

# 211-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1— . மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரைப் பார்த்துத் தர்மராஜாவே! தர்மவியாதர் சொன்னதைக் கேட்ட பிராமணன் பஞ்சபூதங்களின் தன்மைகளைத் தெளிவாய் அறிய விரும்புகிறேன் என்றார். வியாதர் சொல்லுகிறார். பிருதிவி அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பவைகளே பஞ்சபூதங்களாம். பிருதிவியினிடத்தில் சப்தம், ஸ்பரிசம், ரூபம், இரசம், கந்தம் என்கிற ஐந்து குணங்களும் உண்டு. சப்தம், ஸ்பரிசம், இரசம், ரூபம் இந்த நாலு குணங்கள் அப்புவுக்கு உண்டு. அக்கினிக்குச் சப்தம், ஸ்பரிசம், ரூபம் ஆகிய மூன்று குணங்கள். வாயுவுக்குச் சப்தம், ஸ்பரிசமாகிய இரண்டு குணஙகள். ஆகாசத்துக்குச் சப்தமாகிய ஒரே குணம். ஆகப் பஞ்ச பூதங்களின் குணங்கள் பதினைந்தாம். இவைகள் எல்லாப் பிராணிகளின் சரீரததிலும் காணப்படும். அவைகள் வசிக்கிற உலகத்திலுமுண்டு. இந்தப் பூதங்களாலுண்டான சரீரமும் ஆத்மாவும் ஒன்றை ஒன்று ஆசிரயித்திருக்கின்றது. ஆத்மா இந்தத் தத்துவங்களை விட்டு விலகும் போது சரீரம் அழிகின்றது. ஆத்மாவோ வேறொரு சரீரத்தைப் பெறுகிறது. இதுவே ஜனன மரணங்களின் முறைமையாம். பஞ்ச பூதங்களின் உற்பத்தியை உலகமெங்கும் காணலாம். இந்திரிய விஷயமான பொருள்கள் வியக்தம் என்னப்படும். இந்திரியங்களுக்கு விஷயமாகாதவைகள் எல்லாம் அவ்வியக்தம் என்னப்படும் மனிதன் இந்திரியங்களை அடக்கித் தவம் செய்யும் போது உலகத்தை எல்லாம் தன்னிடத்தில் காண்கிறான். பிரமஞானத்தினாலேயே உலகமெல்லாம தன்னிடத்தில் தோன்றுகின்றன, அப்படிக் காண்கிறவனே புண்ணிய பாவங்களாகிற கர்மபந்த மொழிந்தவனாவான். அஞ்ஞானமே சகல தீமைகளுக்கும் காரணமாம். ஞானியாக விரும்புகிறவன் அறிவை அடைய வேண்டும் ஜீவன்முத்தி பெற்ற ஆதமா ஆதியந்தம் அற்றது. ஆத்மயோனி, அழிவில்லாதது. உருவமற்றது. ஒப்பற்றது. இந்தத் தன்மையை அடைகிறதற்குத் தவமே காரணம் இந்திரிய நிககிரகமில்லாவிட்டால் தவசு சித்தியாக மாட்டாது. இந்த புலன்கள் சொர்க்கத்தைச் சேர்ப்பிக்கவும் நரகத்தில் தள்ளவும் வல்லமை யுடையது. இந்திரியங்களை அடக்கித் தவம் பண்ணுகிறவன் சொர்க்கத்தை அடைவான். இந்திரியங்களுக்கு வசப்பட்டிருக்கிறவன் நரகத்தை அடைவான். இதுவே யோக மார்க்கமாம். தவசுக்கும், சொர்க்க நரகங்களுக்கும் புலன்களே காரணங்களாகின்றன. அவற்றை அடக்கா விட்டால் தீமைகள் வருகின்றன. அடக்குகிறதினாலே மகிமையும் சுகமும் உண்டாகின்றன. ஆறு புலன்களையும் அடக்கிக் கொள்கிறவன் பாவங்களைக் கடந்தவனாகிறான். இந்தச் சரீரத்தை ஒரு தேராகவும், ஆத்மா சாரதியாகவும், புலன்கள் அந்தத் தேரில் கட்டுகிறதற்குரிய குதிரைகளாகவும் கருதவேண்டும். சக்தியுள்ளவனும், பொறுமையுள்ளவனும், அந்தக் குதிரைகளை நல்ல மார்க்கத்தில் நடத்தக் கூடியவனும், வேகமான அந்த ஆறு குதிரைகளை

யும் அடக்கியாளும் திறமையுள்ளவனுமான ஆத்மாவே நல்ல சாரதியாம். அந்தப் புலன்களை நன்றாய் நடத்தக் கூடியவனே, அவற்றை அடக்கும் உபாயத்தை அறிந்த சாரதியாவான். விஷய ஆசைக்கு அடிமையானவன், புசல் காற்றடிக்கும்போது சமுத்திரத்தில் படகுகள் சேதமடைவது போலத் தன் ஞானத்தை யிழந்து விடுவான். ஆசைக்கு அடிமைபட்டவனுக்குச் சகல விதமான துக்கங்களையும் அனுபவிப்பான். அதை அடக்கினவன் தன் ஆத்மா உலகமெங்கும் வியாபித்திருப்பதைக் கண்டு மகிழ்வான். தேவனை ஞானக் கண்களால் கண்டு மேலான பதவியை அடைவான்.



## 212-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—12. தெய்வத் தன்மையுள்ள வியாதர் இப்படிச் சொல்லி முடித்ததும், கௌசிகர் அவரை நோக்கிச் சத்துவ இரஜோ தமோகுணங்களின் இயல்பை எனக்குச் சொல்லவேண்டு மென்று கேட்க வியாதர் சொல்லுகிறார். அந்த முக்குணங்களுள் தமோகுணமானது இருள் மயமான அஞ்ஞானமாம். இரஜோகுணம் அஞ்ஞானத்துக்கு ஏதுவானது. சத்துவ குணமே ஒளிமயமான ஞானமாம். ஆகையால் சத்துவமே முக்குணங்களிலும் சிரேஷ்டமானது. தீய ஒழுக்கம், அஞ்ஞானம், புத்தி யின்மை, பேராசை, கோபம் இவை தமோ குணத்தின் இலக்கணங்களாம். முரட்டுத்தனம், குற்றங்களை உணராமை, பொறாமை, அடக்க மின்மை, கருவம் இவைகள் இரஜோ குணத்தின் இலக்கணங்களாம். ஆழ்ந்த படிப்பு, திருப்தி, ஆசை யின்மை, பிறர் குற்றம் நயவாமை சினமின்மை, புலனடக்கம் இவைகள் சத்துவ குணத்தின் இலக்கணங்களாம். சத்துவ குணமுள்ளவன் உலக இன்பங்களைக் கருதான். பிரமஞானத்தைப் பெற முயல்வான். கருவம் அற்றிருப்பான். உலக மயக்கத்தினால் அவன் மனம் மருளாது. உலகத்தில் உண்டாகும் மான அவமானங்களைக் கவனியான். கவலைப்படான். சூத்திரன் தர்ம நெறி தவறாமல் நடந்தால் வைசியன் அல்லது க்ஷத்திரியனாவான். நீதி நெறியாலேயே பிரமஞானம் அடையப்படுகிறது. ஓ பிராமணோத்தமரே! நீர் கேட்டவைகளை எல்லாம் சொல்லி விட்டேன். இன்னம் என்ன சொல்ல வேண்டும் என்று வியாதர் கேட்டார்.

---

## 213-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—22. பிறகு கௌசிகர் வியாதரைப் பார்த்து உலகப் பொருள்களில் அக்கினி எப்படி கலந்திருக்கிறது? நரம்புகளின் வழியாக எவ்வாறு சரீரத்தில்

வியாபிக்கின்றது? அதை அறிய விரும்புகிறேன் என வியாதர் சொல்லுகிறார். அக்கினி நெற்றியில் இருக்கிறது. அங்கிருந்து பரவுகிறது. சரீரத்தை நடத்துகிறது. முக்காலங்களிலும் ஜீவனில் அது நிலைபெறுகின்றது. ஆகையால் ஜீவன் எல்லாவற்றிலும் சிறந்தது. ஜீவன் பிரமத்தின் அனுக்கிரகம் என்று புகழப்படுகிறது. அந்தப் பிரமமே ஆத்மா. சகல ஜீவர்களுக்கும் மூல காரணம் ஞானத்துக்கு விஷயம். எல்லாப் பொருள்களுக்கும் வலிமை தருவது. அபான வாயு சரீரத்தின் கீழ்ப் பாகத்திலிருந்து கொண்டு அசுத்தங்களை வெளிப்படுத்தும். உதானவாயு கண்ட ஸ்தானத்திலுள்ளது. அது, அசையவும், பாரங்களைச் சுமக்கவும் சக்தி கொடுக்கிறது. வியான வாயு சரீரத்தின் சந்து மூட்டுக்களிலுள்ளது. அக்கினி யுடனும் மற்றவற்றினுடனும் கலந்து நின்று எல்லாவற்றையும் சமப்படுத்துகிறது சமானன். ஆறு வாயுக்களும் (பஞ்ச வாயுக்களும் வெளி வாயுவும் சேர்ந்தது ஆறு) சேர்ந்து உண்டாகிற உஷ்ணமே ஜாடராக்கினி எனப்படும். ஜாடராக்கினியே ஆகாரத்தை ஜீரணம் செய்கிறது. பிராணுபான வாயுக்கள் சமான உதானவாயுக்களுடன் கலந்தபோது அக்கினியுடன் கூடிச் சரீரத்துக்குத் தளர்ச்சியை யுண்டாக்குகிறது. தீ ஆகாயத்திலிருந்து உண்டாகின்றது. அது அபான வாயுவுடன் கூடி ஆகாரத்தை ஜீரணம் ஆக்குகிறது. ஆகாயம் நெருப்புடன் கூடி அபான வாயுவை இயக்குகின்றது. மறுபடியும் வந்து தீயுடன் கலந்து கொள்கிறது. ஆகாரம் ஜீரணம் ஆகிற இடம் தொப்புளுக்குக் கீழிருக்கிறது. ஜீரணம் ஆகாதது அதற்கு மேல் இருக்கிறது. எல்லா வாயுக்களும் மத்திய ஸ்தானத்தில் இருக்கின்றன. சரீரத்தில் வலை போலப் பின்னிக்கொண்டிருக்கிற இரத்த நரம்புகள் தசவாயுக்களின் உதவியால் ஆகாரத்தைச் சரீரமெங்கும் செலுத்துகின்றன. தசவாயுக்களாவன பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், கூர்மன், கிரிகரன், நாகன், தேவதத்தன், தனஞ்செயன் என்பவைகளாம். ஞானமும், திருப்தியும் உள்ள யோகியானவன் பிரமத்தை யடையவதும், பிராண வாயுவைக் கபால ஸ்தானத்துக்குச் செலுத்துவது மான மார்க்கம் இதுதான். இப்படிப் பிராண அபான வாயுக்கள் சரீரம் முழுவதும் பரவுகிறது. சரீரத்துக்குப் பத்து இந்திரியங்களுண்டு. அவற்றுள் முதலாவது மனசு, பதினாறு கலைகள், தீ இவைகளே. இவைகளுக்குள் ஜீவன் நிலைபெற்றிருக்கின்றது. யோகிகள் அதை அடக்க முயலுகிறார்கள். சரீரத்தை விளங்கச் செய்கிற பிராணுக்கினியில் தேவன் வசிக்கிறார். வசித்தாலும் தாமரை இலையிலுள்ள தண்ணீர்த் துளிகளைப் போலச் சரீரத்தில் தாக்கற்றிருக்கிறார். ஜீவாத்மா சத்துவ இராஜோதமோ குணங்களுடன் கூடி யிருக்கிறது. பரமாத்மாவோ அவைகளுடன் கலவாமல் தனித்திருக்கிறது. பரமாத்மாவும், ஜீவாத்மாவும், பிம்பமும், கண்ணாடியின் பிரதி பிம்பமும் போன்றுள்ளன. ஆத்மாவே ஜீவனும் குணங்களும் இருக்கிற இடமாம். இவைகளைக் கடந்திருக்கிறவனே லோக கர்த்தாவாம்.

23—49. அந்தக் கர்த்தாவே தன் ஒளியை எல்லா ஜீவர்களிடத்தும் பரவச் செய்கிறான். ஞானிகள் அவனை அடங்கின சிறந்த அறிவினலே தரிசிக்

கிறார்கள். தன் மனதைப் பரிசுத்தமாக்கிப் பாவ புண்ணிய கர்மங்களுடன் சம்பந்தப்படாமலிருக்கிறவன் மேலான பதவியையும் மோட்சத்தையும் அடைகிறான். சரியான போஜனத்தை உண்ட மனிதன் அயர்ந்து நித்திரை செய்கிறதைப் போலவும், காற்றில்லாத இடத்தில் தீபம் பிரகாசிப்பது போலவும் அசைவற்றிருந்து, மிதபோஜன முடையவனாய்ப் பிரமத்தைத் தியானிக்கிறவன் மனமாகிய விளக்கைக் கொண்டு தனக்குள்ளிருக்கிற ஆத்மாவைத் தரிசிக்கிறான். ஆசையையும் கோபத்தையும் அடக்குகிறதே சிறந்த தவமும், மோட்சத்துக்குரிய நல்ல மார்க்கமாம். கோபத்தை விட்டுத் தவத்தையும் வஞ்சனையை ஒழித்துத் தர்மத்தையும், கர்வத்தை விட்டு அறிவையும், திருப்தியையும், காப்பாற்றிக்கொள்ள வேண்டும். கொல்லாமையே சிறந்த தருமமாம். பொறுமையே வலிமையாகும். ஆத்ம ஞானமே சிறந்த ஞானம். சத்தியமே சிறந்த நோன்பாம். சத்தியம் என்பது சிறந்ததும், உபயோகமுள்ளதும், வணங்கத் தக்கதுமாம். பதில் உபகாரத்தை விரும்பாமல் செய்கிறவனும், பலனைவிரும்பாமல் யக்ஞ ஹோமங்களைச் செய்கிறவனுமே பரோபகாரியும் அறிவுள்ளவனுமாம். ஒருவன் தன்னுடைய தவசை வெளிப்படுத்தாமல் மௌனமாயிருந்து செய்ய வேண்டும். யோகத்தில் முக்கிய கவனம் வைக்க வேண்டும். பிறருக்குத் துன்ப முண்டாக்க எண்ணவே கூடாது. எல்லாரையும் உறவாகவே நினைக்க வேண்டும். சகல ஆசைகளையும் சபலங்களையும் விட்டிருப்பது ஞானத்துக்கு அறிகுறியாம். இரகசியமாக நோன்புகளைச் செய்கிறவன் மறுமையில் அழியாத பதவியை அடைவான். தவசை யுடையவனும், புலன்களை அடக்கினவனும், மனக் களங்கம் அற்றவனும், நல்லோர் சங்கத்தில் பழகுகிறவனும் வெல்ல முடியாத ஜனன மரணங்களை வெல்ல விரும்புகிறவனும் இந்த பிரம ஞானத்தைப் பெறுவதற்காகத் தவம் செய்ய வேண்டும். தன் நலத்தைக் கருதாமையும், ஏகாந்த ஸ்தானத்திலிருந்து தியானம் செய்கிறதும், பிரம ஞானத்தின் ஒரு பகுதியேயாம். உலக சிற்றின்பங்களை வெறுத்து, ஏகாந்தமா யிருப்பது பிரமத்தை யடையும் வழியாம். பிராமணரே! நான் அறிந்த மட்டும் ஞானத்தைப் பற்றிச் சொல்லி விட்டேன். இன்னம் ஏதாவது தெரிந்துகொள்ள வேண்டியது இருக்கிறதா? என்று வியாதர் கேட்டார்.

---

## 214-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—18. தர்ம வியாதர் மோட்சத்தைப் பற்றிய விஷயங்களைப் பேசி முடித்ததும், கௌசிகர் மிகுதியும் மகிழ்ச்சி யடைந்து, தர்ம வியாதரை நோக்கி நீர் சொன்ன தெல்லாம் உண்மையே. நீர் அறியாதது உலகத்தில் ஒன்றுமில்லை என்று எண்ணுகிறேன் என்று சொன்னார். தர்ம வியாதர் நான் அனு

ஷ்டிக்கிறதும், எனக்கு இவ்வளவு பெருமையைக் கொடுத்ததுமான தர்மத்தை உமக்குத் தெரிவிக்கிறேன். என் வீட்டுக்குள் வந்து எனது மாதா பிதாக்களைப் பாரும் என்றார். கௌசிகா அப்படியே உள்ளே போய் அங்கே இன்பமான ஒரு இடத்தைப் பார்த்தார். அதில் நாலு அறைகளிருந்தன. அது தேவாலயம் போல அலங்கரிக்கப்பட்டிருந்தது. பரிமளம் கமழ்ந்து கொண்டிருந்தது. அங்கே அநேக தவிசுகளும், படுக்கைகளு மிருந்தன தர்ம வியாதருடைய மாதா பிதாக்கள் வெள்ளை வஸ்திரம் தரித்துக்கொண்டு ஒரு பீடத்தின் மேல் மகிழ்ச்சியாய் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள், தர்மவியாதர் அவர்களைக் கண்ட வுடனே அவர்களுடைய பாதத்தில் வணங்கினார். தாய் தந்தையர் அவரை நோக்கிப் புத்திசாலியான குழந்தாய் எழுந்திரு. கடவுள் உனக்குத் தீர்க்காயுசைக் கொடுக்கட்டும். தர்மம் உன்னைக் காக்கட்டும். நீ உனது எண்ணத்தைப் போல ஞானத்தைப் பெறக் கடவாய் நீ மேதா என்கிற ஞானத்தை அடை. நீ சரியான காலத்தில் எங்களைப் போஷிக்கிறாய். நீ தேவனுக்குச் செய்வது போல எங்களுக்குச் சிறந்த மரியாதை செய்கிறாய். நீ பிராமணர்களைப் போலப் புலனை ஜயித்திருக்கிறாய். உன்னுடைய இந்தக் குணங்களாலும், நீ எங்களுக்குச் செய்கிற பணிவிடைகளாலும் முதியவர்களாகிய நாங்கள் உன்னிடம் மகிழ்ச்சியா யிருக்கிறோம். நீ எங்களிடம் வைத்த மதிப்பு குறையாம லிருக்கிறது. மனப் பூர்த்தியாய் எங்களுக்குப் பணிவிடை செய்கிறாய். உன் பேச்சு, செய்கை, ஞானம் இவைகள் ஒருபோதும் கெடுதியாயிருப்பதில்லை. ஜமதக்கினி புத்திரரான பரசுராமரை விட அதிகமாக மாதா பிதாக்களிடத்தில் அன்புள்ளவனாக இருக்கிறாய். நீ எங்களுக்கு பணிவிடை செய்கிறது போலவே பரசுராமரும் தமது மாதா பிதாக்களுக்குப் பணிவிடை செய்தார் என்று சொன்னார்கள். பிறகு தர்ம வியாதர் கௌசிகர் வந்திருப்பதை அவர்களுக்குச் சொன்னார். அவர்களும் பிராமணனை நல் வரவு விசாரித்து அவனை வணங்கினார்கள். பிராமணன் அவர்களுடைய வணக்கத்தை அங்கீகரித்துக்கொண்டு, அவர்கள் குழந்தைகள் முதலானவர்களின் யோக க்ஷேமத்தை விசாரித்தார அவர்களும் நாங்களும் சுகமா யிருக்கிறோம். உமக்கு வந்தனம் செய்கிறோம் என்றார்கள். பிராமணன் மகிழ்ந்து, அவர்களுக்குச் சரியான பதில் சொன்னான்.

19—30. தர்ம வியாதர் கௌசிகரை நோக்கி இவர்கள் என்னுடைய தாய் தந்தைகள். அவர்களைத் தேவர்களைப் போல வணங்குகிறேன். மற்றத் தேவர்கள் முப்பத்து முக்கோடி தேவர்களையும், இந்திரனையும், வணங்குவது போல நான் இவர்களை வணங்குகிறேன். ஒரு பிராமணன் தான் சம்பாதித்ததைக் கொண்டு யக்ஞம் செய்து தேவர்களைத் திருப்தி செய்விப்பது போல நான் சம்பாதிப்பது எல்லாவற்றையும் இவர்களுக்குச் சமர்ப்பித்து வருகிறேன். இவர்களே என் தெய்வம். கனிகள், மலர்கள், நகைகள் முதலியவைகளை அவர்களுடைய விருப்பம் போலக் கொடுத்து ஆராதிக்கிறேன். அவர்களை அக்கினியாகவும், நாலு வேதங்களாகவும், யக்யங்களாகவும் மதித்து வருகிறேன்

என் ஜீவன், செல்வம், மனைவி, மக்கள், நண்பர்கள் எல்லாரும் இவர்களுக்கே உரியன. நான் மனைவி புத்திரர்களுடன் கூடி எப்போதும் இவர்களை வணங்குகிறேன். என் சொந்தக் கைகளினாலேயே இவர்களுக்கு ஸ்நானம் செய்வித்து, இவர்களுடைய பாதங்களைக் கழுவி, ஆகாரம் கொடுத்து வருகிறேன். இவர்களுக்குப் பிரிய மில்லாததை ஒருபோதும் சொல்ல மாட்டேன். அவர்கள் சொல்வது அதர்மமானாலும் தடையின்றிச் செய்து முடிப்பேன். இவர்கள் சொல்வதைச் செய்வதே என் கடமை என்று கருதுகிறேன். இவர்களுடைய பணிவிடைகளைச் சோர்வின்றிச் செய்கிறேன். புகழ்ச்சியை அடைய விரும்புகிறவன் மாதா, பிதா, அக்கினி, ஆத்மா, குரு ஆகிய ஐந்து பெரியோர்களையும் திருப்தி செய்விக்க வேண்டும். இப்படிச் செய்கிறவன் கிருகஸ்தாசிரமத்தை நிறைவேற்றினவனாவன் என்றார்.

---

## 215 வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—15. இப்படித் தமது மாதா பிதாக்களைப் பற்றிச் சொன்ன பின் தர்ம வியாதர் மறுபடியும் பிராமணனைப் பார்த்து, உம்மை மிதிலைக்கு வரும்படி புத்தி சொன்ன பதிவிரதையும், நற்குணமுள்ளவளும், நல்லொழுக்க முள்ளவளுமான அந்தப் பிராமண மாதை நான் என் ஞானக் கண்களால் கண்டு கொண்டேன். இந்த ஞானம் மாதா பிதாக்களைப் பூசிப்பதினாலே பெற்றேன் என்றார். கௌசிகர், அந்தப் பதிவிரதை கூறிய வார்த்தைகளினாலேயே நான் உம்மைத் தர்மங்களுக்கு இருப்பிடமாகக் கருதினேன் என்றார். வியாதர், நீர் சொன்னது சரி. அந்தப் பதிவிரதையும் என்னை அறிந்திருக்கிறாள். நானும் அந்த அம்மாளை அறிந்திருக்கிறேன். இப்படி நாங்கள் ஒருவரை ஒருவர் தெரிந்து கொண்டதும் ஞானத்தினாலேயே. நான் இப்போது உம்மை வணங்கி ஒரு புத்தி சொல்லுகிறேன். நீர் உமது மாதா பிதாக்களின் உத்தரவைப் பெறாமல் வேதத்தை ஓதவந்தது சரியல்ல. அவர்கள் உம்மைக் காணாமையால் வருந்துகிறார்கள். சீக்கிரமாகப் போய் அவர்களைச் சந்தோஷப்படுத்தும். உமது மாதா பிதாக்களைத் திருப்தி செய்விக்கா விட்டால் உம்முடைய கர்மங்கள் எல்லாம் வீணேயாம். நான் சொல்வதைக் கேட்டு இப்போதே போய் அவர்களை சந்தோஷப்படுத்தும். நீர் வேறொன்றும் செய்ய வேண்டாம். இதுதான் உமக்கு க்ஷேமமாகும் என்றார். கௌசிகர், வியாதரே! நீர் சத்திய சீலர், தர்மிஷ்டர் ஆகையால் நான் உம்மிடம் மகிழ்ச்சி யடைந்திருக்கிறேன் என்றார். வியாதர் கௌசிகரைப் பார்த்து நான் உம்மைத் தெய்வமாக மதித்து மரியாதை செய்கிறேன். நீர் அனுஷ்டித்த தர்மம் பரிசுத்தமானது. புராதனமானது. தெய்வத் தன்மை யுள்ளது. பிறரால் செய்ய முடியாதது. மன அழுக்குள்ள

வர்களால் செய்ய முடியாதது. இப்பொழுது புறப்பட்டுப் போய் உமது மாதா பிதாக்களை வணங்கும். இதற்கு மேலான தர்மம் உண்டென்று நான் நினைக்கவே யில்லை என்றார்.

16—23. கௌசிகர், நான் இங்கே வந்து உம்மைக் கண்டதனால் பாக்கியவானானேன். உம்மைப் போன்ற தார்மிகர்களை உலகத்தில் காண்பதரிது. ஆயிரத்தில் ஒருவர் தாம சிந்தை யுள்ளவர்களா யிருப்பார்கள். உமது சத்தியத்திற்காக நான் மன மகிழ்கிறேன். கடவுள் உம்மை இரட்சிக்க வேண்டும். நீர் என்னை நரகத்தினின்றும் கரை யேற்றினீர். விதிதான் என்னை உம்மிடம் கொண்டுவந்து விட்டது. யயாதி சொர்க்கத்திலிருந்து நரகத்தில் விழுந்த போது அவனைக் காப்பாற்றினவர்களைப் போல நீர் என்னைக் காப்பாற்றினீர். நீர் எனக்குப் போதித்தது போலவே நான் என் தாய் தந்தைகளை ஆராதிப்பேன். அசுத்தமான மன முடையவர்கள் தர்ம அதர்மங்களைப் பகுத்து அறிய மாட்டார்கள். உம்மைப் போன்ற அறிவை அடைவது சூத்திரர்களுக்கு இயலாது. ஆகையால் நீர் சூத்திரர் அல்ல நீர் சூத்திரர் வீட்டில் பிறந்திருப்பதற்குக் காரணம் தெரிந்துகொள்ள விரும்புகிறேன் என்றார்.

24—29. வியாதர் கௌசிகரை நோக்கிப் பிராமணோத்தமரே! நான் பூர்வஜன்மத்தில் பிராமணன் வேதம் வேதாங்கம்முதலியவைகளை நன்றாய் ஓதியுணர்ந்திருந்தேன், என்னுடைய தப்பிதத்தினாலே இந்த ஜன்மத்தை அடைந்தேன். என்ன வென்றால், வில்லாளியான ஒரு இராஜ குமாரன் எனக்குச சிநேகிதனாய் இருந்தான். அவன் எனக்கு வில் வித்தைகளையும் கற்பித்துக் கொடுத்தான். ஒரு நாள் அவன் வேட்டையாடப் போனான். நானும் கூடப் போனேன். அவனுடைய மந்திரிகள் ஒரு ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் அநேக மான்களை வதைத்தார்கள். அப்போது நானும் ஒரு மானை இலக்கு வைத்து ஒரு அம்மை எய்தேன். அது ஒரு ரிஷி. அந்த அம்பு பட்டதும் அவர் காயப்பட்டுக் கீழே விழுந்தார். விழும்போது குற்றமற்ற என்னை அடித்தவன் யார் என்று சொல்லிக்கொண்டு விழுந்தார். நான் அவர் கிட்டப்போய், அவர் காயப்பட்டு புலம்புகிறதைக் கண்டு எனக்கு விசனம் உண்டாயிற்று. பின்பு நான் அவரை நோக்கிச் சுவாமீ! நான் அறியாமையாலே யிந்தக் குற்றத்தைச் செய்துவிட்டேன்; பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தேன். அந்த முனிவர் என்னைக் கோபமாகப் பார்த்து, இந்தத் துஷ்டச் செய்கைக்காக நீ சூத்திரன் வீட்டில் பிறந்து மாம்சம் விற்று ஜீவிக்கக் கடவாய் என்று சபித்தார்.

---

## 216-வது அத்தியாயம்

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—15. வியாதர் கௌசிகரைப் பார்த்து, அந்த முனிவர் இப்படி என்னைச் சபித்ததும், நான் வணக்கத்துடன் என்னை க்ஷமிக்கும்படி வேண்டினேன். நான் அறியாமல் இந்தக் குற்றத்தைச் செய்து விட்டேன் ஆகையால் பொறுத்துக் கொண்டு சாபத்தை விலக்க வேண்டுமென்று இரந்து கேட்டேன். அந்த முனிவர் என் சாபம் தடுக்கப் படாதது. ஆகையால் நீ சூத்திர வம்சத்தில் பிறந்தாலும் தர்ம நெறி தவறுதிருப்பாயாக. மாதா பிதாக்களிடம் பக்தியாயிருப்பாயாக. அதனால் நீ மகிமை பெறுவாயாக என்று வரம் கொடுக்கிறேன் என்று கூறி இந்த வரத்தை அளித்தார். நீ பூர்வ ஜன்ம ஞானத்தையும் பெறுவாய். இறந்து போன பின் மோட்சத்தை அடைவாய் என்றார், பிறகு நான் அவர் மேலிருந்த அம்பை எடுத்து விட்டு ஆச்சிரமத்துக்குக் கொண்டு போனேன். அவர் இறந்து போனார். இது என் பூர்வ ஜன்ம விருத்தாந்தம். வெகு சீக்கிரத்தில் நான் சொர்க்கம் போவேன் என்றார். கௌசிகர் உலகத்திலுள்ள ஜனங்கள் எல்லாரும் இன்ப துன்ப வசப்பட்டவர்கள். நீ அவசரப்பட வேண்டாம். நீர் தார்மிகரும், அறிந்தவருமாக இருக்கிறீர். அருமையான கர்மத்தைச் செய்திருக்கிறீர். உம்மைப் பிறப்பினாலே குற்றம் சொல்பவன் ஒருவனுமில்லை. இன்னம் கொஞ்ச நாள் இங்கே யிரும், நீர் பிராமணராய் விடுவீர். இது முதலாக நீர் பிராமணராயிருப்பீரென்று நினைக்கிறேன். படித்த பிராமணன் துர்க் கர்மங்களையும், வஞ்சனையையும் செய்கிறான். சூத்திரன் சத்தியம், தர்மம், புலனடக்கம் இவைகளை யுடையவனு யிருக்கிறான். இவைகளே பிராமணனுக்கு இலக்கணங்கள். ஆதலால் உம்மிடம் இந்த இலக்கணங்களிருக்கின்றன. அவரவர்களுடைய கர்மத்தினாலேயே பிராமணர்களும் சூத்திரர்களும் வேறு பிரித்து அறியப்படுகிறார்கள். துர்க்கர்மம் நரகத்தைக் கொடுக்கும். நீர் எவ்வகையிலும் குற்றமற்றவரா யிருக்கிறீர், ஆகையால் நீர் துக்கப்படமாட்டீர். இகலோக பரலோக தர்மங்களை யறிந்திருக்கிற உம்மைப் போன்ற புண்ணியவான்கள் வருத்தப்படமாட்டார்கள் என்றார்.

16—31. வியாதர், அறிவுள்ளவர்கள் ஞானத்தினாலே மனோதுக்கத்தைப் போக்கடித்துக் கொள்வார்கள். அதிர்ஷ்டம் மாறுவதால் மூடர்கள் வருந்துகிறார்கள். இன்பதுன்பம், கூட்டம் பிரிவு இவைகள் எல்லா மனிதர்களுக்கும் உண்டு. அதைப் பற்றிக் கவனிப்பதனால் துன்பம் மிகுதியாவதே ஒழிய நன்மை யில்லை. இன்ப துன்பங்களைக் கவனியாமல் இருக்கிறவனே அறிவுள்ளவன். அதிருப்தி மூடர்களுக்குச் சிறந்த இலக்கணமாம். அறிவுள்ளவர்கள் எப்போதும் திருப்தியாகவே யிருப்பார்கள். திருப்தி யடைவதில் மஹா சுகமிருக்கிறது. அதிருப்திக்கு முடிவே யில்லை. ஆகையால் அறிவுள்ளவர்கள் ஒருபோதும் துக்கப்படமாட்டார்கள். துக்கமென்பது கொடிய விஷத்துக்

ருச் சமானம் ஒரு சர்ப்பம் ஒரு குழந்தையைக் கொல்வது போலத் துக்க மானது அறிவுள்ளவர்களைக் கொல்லுகிறது. தைரியத்தைக் காட்ட வேண்டிய சமயத்தில் துக்கப்படுகிறவன் சாமர்த்தியமான காரியத்தைச் செய்ய மாட்டான். செய்த கர்மத்தின் பலனை அனுபவித்தே தீர வேண்டும். சந்நியாசியாவதில் பலனில்லை. துக்கத்தை நிவிருத்தி செய்ய முயல வேண்டும். துக்கப்படக்கூடாது. நல்லவனா யிருக்க வேண்டும். துர்ச்செய்கைகளைச் செய்யக் கூடாது. ஜீவாத்மாக்களிடத்தில் நேசத்தையும் பகையையும் வையாமலிருக்கிறவனே பிரம ஞானியாவான். அவன் மோட்சத்தைத் தவிர வேறொன்றையும் விரும்ப மாட்டான். ஆகையால் நான் ஒன்றையும் இலட்சியம் பண்ணுகிறதில்லை. எனக்குத் துக்கம். அதைக் கேட்ட கௌசிகர், தர்மவியாதரை நோக்கி, நீர் மஹா ஞானியா யிருக்கிறீர். நான் உமக்குத் துன்பம் உண்டா யிருக்க வேண்டும் நான் உம்மிடம் விடை பெற்றுக் கொள்கிறேன். நீர் மகிழ்ச்சியாயிரும். உமது தர்மம் உம்மைக் காக்கும் என்றார்.

32—37 இதைக் கேட்ட தர்மவியாதர் கைகளைக் குவித்துக் கொண்டு வணங்கி விடை கொடுத்தார். பிராமணன் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டு, நல்லறிவைப் பெற்றவராய்ப் போய் வீட்டை அடைந்து மாதா பிதாக்களை ஆராதித்தான். யுதிஷ்டிரா! நீ என்னைச் சொல்லும்படி கேட்ட தர்ம சரித்திரங்களை யெல்லாம் சொல்லிவிட்டேன். பதிவிரதையின் சரித்திரத்தையும் மாதா பிதாக்களை ஆராதிப்பதினால் உண்டாகும் பலன்களையும் சொன்னேன் என்று சொன்னார். யுதிஷ்டிரர் மார்க்கண்டேயரை வணங்கி அவருடைய சம்பாஷணையைப் புகழ்ந்தார். இவ்வளவு காலமும் ஒரு நிமிஷத்தைப் போலக் கழிந்து போயின. உமது வசனத்தைக் கேட்பதில் இன்னமும் எனக்கு விருப்பம் ஒழியவில்லை என்றார்.

---

## 217-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1— . வைசம்பாயனர் ஜனமேஜயரை நோக்கி மஹாராஜனே! இப்படி மார்க்கண்டேயர் சொன்னதும், யுதிஷ்டிரர் அவரை நோக்கி முன் காலத்தில் அக்கினிதேவன் என் நீரிலே மறைந்து கொண்டிருந்தார்? பலிகளை ஏற்கும் பொருட்டு எப்படி அக்கினி வடிவம் கொண்டிருந்தார்? ஒரே அக்கினிதேவனிருக்கிறான்; அவன் என் சமயத்துக்குத் தக்கபடி பல வடிவங்களை யெடுத்துக் கொள்ளுகிறான்? எனக்குக் கார்த்திகேயருடைய உற்பத்தியைச் சொல்ல வேண்டும் கார்த்திகேயர் அக்கினி புத்திரரென்று ஏன் சொல்லப்படுகிறார். அவர் ருத்திர மூர்த்தியால் கங்கையில் எப்படி உற்பத்தியானார்? இந்த அற்புதங்களை நான் கேட்க விரும்புகிறேன் என்று கேட்க மார்க்கண்டே

யர் சொல்லுகிறார். அக்கினி தேவன் தவம் செய்கிறதற்காகத் தண்ணீரினுள் புகுந்திருந்தார். அவனே இருட்டை நீக்குவதற்காக அங்கிரா வடிவமா யிருந் தான். அங்கிரா கொடுந் தவம் செய்து கொண்டிருந்தார். அதனால் அக்கினி யை விட மிகுந்த மகிமையும் ஒளியும் உள்ளவரா யிருந்தார். அக்கினி தே வன் அங்கிராவுக்கு முன்னால் தான் இழிவு பட்டிருப்பதாகவும், தன்னை யிழிவு செய்வதற்காகவே பிரமதேவர் அங்கிராவைப் படைத்திருக்கிறாரென்றும் கரு தினன். இந்தத் துக்கத்தை நீக்குவது எப்படி என்று யோசித்துக்கொண்டிருந் தான். அப்போது அங்கிரா தனக்கு எதிரில் வருகிறதை அக்கினி தேவன் கண்டு மெதுவாய் அங்கிரா கண்ணிற் படாமல் மறைந்து கொண்டான். அங்கி ரா அதை அறிந்து அக்கினி தேவனை நோக்கி நீர் உமது பழைய மகிமையை அடையும். உலகத்துக்கு ஜீவனாயிரும். இருட்டை விலக்கும். உமது பத வியை உடனே அடையும் என்றார். அக்கினி தேவன் இதைக் கேட்டு, நீர் பிறந்தது முதல் என் மகிமை ஒழிந்து போயிற்று. உமக்கு முன்னால் நான் அக்கினி ஆக மாட்டேன் ஆகையால் என் அதிகாரத்தை உமக்குக் கொடுத்து விட்டு இரண்டாவதாக நான் இருக்கிறேன் என்றான். அங்கிரா, பலிகளை ஏற் றுக்கொள்ளும், இருட்டை விலக்கும். என்னை உமது முதற் புத்திரனாகச் செய்து கொள்ளும் என்றார். அக்கினி தேவன் அங்கிராவைத் தன் முதற் புத்திரனாகக் கொண்டான். அங்கிராவுக்குப் பிருகஸ்பதி பிறந்தார் பிருகஸ் பதி, அக்கினி அங்கிரா இருவரிடமிருந்தும் பிறந்ததை அறிந்த தேவர்கள் அவ ரிடம் போய் அவரது உற்பத்தி காரணத்தை விசாரித்துத் தெரிந்து கொண்டு பிருகஸ்பதியைத் தங்களுக்குக் குருவாகக் கொண்டார்கள். அக்கினி பலவித காமங்களில் பலவித சொரூப முள்ளவனா யிருப்பதைப் பற்றிச் சொல்கிறேன் என்று சொல்லுகிறார்,

---

## 218-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—8. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரை நோக்கி அங்கிராவின் வம்சத் தைப் பற்றிச் சொல்லுகிறேன் கேளும. அங்கிரா பிரமாவின் மூன்றாவது புத் திரர், அவருடைய மனைவி ஸுபகா என்பவள், பிருகஸ்பதியைப் பெற்றாள். பிருகஸ்பதி மகிமை, புகழ், வேதாத்தியயனம், கல்வி, யோசனை இவைகள் எல்லாவற்றிலும் சிறந்திருந்தார். பிறகு அங்கிராவுக்குப் பினுமத் என்று பெண் பிறந்தாள். அவள் அங்கிராவின் மற்றப் புத்திரர்கள் புத்திரிகள் எல் லாரினும் மிக்க அழகுள்ளவள், அவருடைய இரண்டாவது புத்திரி எல்லாப் பிராணிகளிடத்திலும் பிரியமுள்ளவளா யிருந்தாள். ஆதலால் அவளுக்கு ராகா என்று பேர், மூன்றாவது புத்திரிக்கு ஸினீவாலி என்று பேர். இவளுக் குக் கபர்த்திஸுதா என்று மறு பேர் வழங்கும். நாலாவது குமாரத்திக்கு

அர்ச்சிஷ்மதி என்று பேர். ஐந்தாவது பெண்ணுக்கு ஹவிஷ்மதி என்று பேர். ஆறாவது பெண்ணுக்கு மாஹிஷ்மதி. ஏழாவதுபெண் மஹாமதி என்பவள். எட்டாவது குமாரத்திக்குக் குகு என்று பேர்

---

## 219-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—25. பிருகஸ்பதியின் மனைவி சாந்திரமாஸீ என்பவள், அவள் ஆறு அக்கினிகளையும் ஒரு புத்திரியையும் பெற்றாள். முதல் புத்திரனுக்கு சம்யு என்று பேர். இவன் சாதுர்மாஸ்யம், அசுவமேதாதிகளில் முதல் பாகத்தைப் பெறுகிறவன். மழை காலத்தில் வணங்கத் தக்கவன். இவன் தர்ம தேவதையின் புத்திரி சத்தியை என்பவளை மணந்தான். சத்தியை பதிவிரதையும் ஒப்பற்ற அழகுள்ளவளுமாம். அவளுககுத் தீப்தாக்கினி என்கிற ஒரு புத்திரனும், மூன்று பெண்களும் பிறந்தார்கள். மூத்த பெண்ணுக்கு ஸுவிருதா என்று பேர். தீப்தாக்கினிக்குப் பரத்துவாஜர் என்று மறு பேர். இவன் யாகங்களில் நெய்யினால் ஆகுதி கொடுத்து முதலில் வணங்கப்படுகிறான். சம்யுவின் இரண்டாவது புத்திரன் பரதாக்கினி. பரதனுக்குப் பாரதன் என்று ஒரு புத்திரனும், பாரதி என்று ஒரு பெண்ணுமுண்டு. பாரதனுக்குப் பாவிகன் என்று ஒரு புத்திரன் இருந்தான். இவன் தன்னுடைய பெருந்தன்மையினாலேமஹான் என்று பேர் பெற்றான். பரத்துவாஜருடைய மனைவிக்கு வீரா என்று பேர். இவள் வீரியனைப் பெற்றாள். இரண்டாவது பலியை இவன் பேரால் செய்து பிராமணர்கள் இவனை வணங்குகிறார்கள். இவனுக்கு ரதத்துவான், கும்பேரன் என்கிற பேர்களும் உண்டு. இவன் ஸரயு என்பவளை மணந்தான். ஸரயு வித்தன் என்பவனைப் பெற்றாள். வித்தன் சூரியனைப் போன்ற காந்தியுள்ளவன். இவன் யாகத்தில் அழைத்தபோது வருகிறான். பிருகஸ்பதியின் இரண்டாவது புத்திரன் நிச்சயவான். இவன் கீர்த்திப் பிரதாபமுடையவன். குறைவற்ற செல்வ முள்ளவன், நிச்சயவான் எப்போதும் பூமியைப் புகழ்ந்து கொண்டிருக்கிறான். நிச்சயவான் குமாரன் சத்தியன். புகழும், ஒளியும் பரிசுத்தமுமுடையவன். எல்லாப் பிராணிகளையும் பரிசுத்தமாக்குகிறவன். அதனால் அவனுக்கு விஷ்கிருது என்று பேர் வீடுகளில் சிரேஷ்டமாய் விளங்குகிறவன். சத்தியனுடைய புத்திரன் ஸ்வன். இவன் ஜனங்களைத் துன்பத்தினால் அழும்படி செய்கிறவன். பிருகஸ்பதியின் மூன்றாவது குமாரன் விசுவஜித்து. இவன் உலகம் முழுவதிலும் ஞானத்தைப் பரவும்படி செய்கிறவன். நாலாவது விசுவபுக். இவன் தான் எல்லாப் பிராணிகளினுடைய ஆகாரத்தை ஜீரணிக்கச் செய்கிறவன். ஐந்தாவது பார்வன். இவன் பிராணாபான வாயுக்களில் வசிக்கிறவன். பிராமணர்கள் புலனடக்க முள்ளவர்களாயும் பிரமசாரி விரத முடையவர்களாயும் இவனை யக்கியத்தில் ஆராதிக்கிறார்கள்.

இவன் மனைவி கௌமதி. இவள் பிராணிகளை நரகத்திலிருந்தும் விமோசிக்கிறாள். தர்மிஷ்டர்கள் இந்த அக்கினியாலே வீடுகளைப் பரிசுத்தி செய்கிறார்கள். பிருகஸ்பதியின் புத்திரி சுவாஹா என்பவள் வெகு பயங்கரமானவள். கொடியவள். எல்லாப் பிராணிகளிடத்திலும் வசிக்கிறாள் தேவலோகத்தில் கூட அவளுக்கு இணையான அழகுள்ளவள் எவளுமில்லை. ஆகையால் அவளுடைய புத்திரனுக்குக் காமாக்கினி என்று பேர். இரண்டாவது புத்திரன் அமோகன். இவன் கோபத்தோடு கூடி எப்போதும வில்லையும் மாலைகளையுந் தரித்துக்கொண்டு சத்துருக்களைச் சங்கரிக்கப் புறப்படுவான். மூன்றாவது புத்திரன் உக்தன். இவன மோட்சம் அளிப்பவன். இவனுடைய புதத்திரன் மஹாவாசன். வேதமோதினவர்கள் இவனை முக்தி தருகிறவனென்று புகழ்கிறார்கள்.

---

## 220-வது அத்தியாயம்.

*மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.*

1—19. உக்தனுக்குப் பிராணன் என்று மறு பெயர். பிராணனுடைய புத்திரன் கசியபர், வசிஷ்டர், அங்கிரஸர், சியவனர் இவன் பிரமதேவரைப் போன்ற ஒரு புத்திரனைப் பெறுவதற்காக நெடுங்காலம் தவசு செய்தான். பஞ்சவியா கிருதிகளால் துதிக்கப்படுகிறவனும், உலக சிருஷ்டிகனும், பஞ்ச வர்ணங்களை யுடையவனுமான பிரமாவைப் போன்ற ஒரு புத்திரனைப் பெற்றான். அந்தப் புத்திரனுடைய சிரசு எரிகிற தீயாம். அவனுடைய புஜங்கள் சூரியனைப் போலிருக்கும். அவனுடைய தேகமும் கண்களும் சொர்ண வடிவமாயிருக்கும். தொடைகள் கறுப்பு வர்ணம். இவனும் பஞ்ச வர்ண முள்ளவன். ஆகையால் இவனுக்குப் பஞ்சசன்யன் என்று பேர் ஐந்து வம்சங்களுக்கு மூலபுருஷன். அவன் ஆயிர வருஷம் கொடிய தவசு செய்து பிதிராக்கினியை உண்டாக்கினான். அவனுடைய வாயிலிருந்து பிரகத்ரதந்தரன் உண்டானான். உந்தியிலிருந்து சிவி உண்டானான். பலத்தினின்றும் இந்திரன் உண்டானான். சுவாசத்தினின்றும் வாயு அக்கினி உண்டாயின. புஜங்களிலிருந்து உதாத்த அநுதாத்த சுரங்களும், விசுவேபுத்தும் பிறந்தன. இந்த ஐந்து பிதிராக்கினிகளையும் உண்டாக்கினான். பிருகத்ரதனுக்குப் பிரணிதி, காசியபனுக்கு மஹத்தரன், அங்கிராவுக்குப் பானு. வர்ச்சஸ்கு சௌபரன், பிராணனுக்கு அநுதாத்தன் என்பவர்கள் பிறந்தார்கள். இந்த ஐந்தும் இருபத்தைந்தாகப் பகுக்கப்படுகின்றன. பாஞ்சசன்யனுக்கு ஸுபீமன், அதிபீமன், பீமன், பீமபலன், அபலன், சுமித்திரன், மித்திரவந்தன், மித்திராக்கியன், மித்திரவர்த்தனன், மித்திரதர்மன், சுரன், பிரவீரன், வீரன், சுரேசன், சுவர்ச்சஸன் என்கிற பதினைந்து யக்ஞ தேவர்கள் பிறந்தார்கள். கடைசியில் சொன்ன ஐவர்களும் அழிக்கிறவர்கள். இவைகள் ஒவ்வொன்றும் மும்மூன்றாகப் பதினைந்து வகைப்படும், இவைகள் யாகம் செய்கிறவர்களுடைய தர்மங்களை அபகரிக்கின்றன.

ஆர்ச்சிஷ்மதி என்று பேர். ஐந்தாவது பெண்ணுக்கு ஹவிஷ்மதி என்று பேர். ஆறாவது பெண்ணுக்கு மாஹிஷ்மதி. ஏழாவதுபெண் மஹாமதி என்பவள். எட்டாவது குமாரத்திக்குக் குகு என்று பேர்

## 219-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—25. பிருகஸ்பதியின் மனைவி சாந்திரமாஸீ என்பவள், அவள் ஆறு அக்கினிகளையும் ஒரு புத்திரியையும் பெற்றாள். முதல் புத்திரனுக்கு சம்யு என்று பேர். இவன் சாதுர்மாஸ்யம், அசுவமேதாதிகளில் முதல் பாகத்தைப் பெறுகிறவன். மழை காலத்தில் வணங்கத் தக்கவன். இவன் தர்ம தேவதையின் புத்திரி சத்தியை என்பவளை மணந்தான். சத்தியை பதிவிரதையும் ஒப்பற்ற அழகுள்ளவளுமாம். அவளுக்குத் தீப்தாக்கினி என்கிற ஒரு புத்திரனும், மூன்று பெண்களும் பிறந்தார்கள். மூத்த பெண்ணுக்கு ஸுவிருதா என்று பேர். தீப்தாக்கினிக்குப் பரத்துவாஜர் என்று மறு பேர். இவன் யாகங்களில் நெய்யினால் ஆகுதி கொடுத்து முதலில் வணங்கப்படுகிறான். சம்யுவின் இரண்டாவது புத்திரன் பரதாக்கினி. பரதனுக்குப் பாரதன் என்று ஒரு புத்திரனும், பாரதி என்று ஒரு பெண்ணுமுண்டு. பாரதனுக்குப் பாவகன் என்று ஒரு புத்திரன் இருந்தான். இவன் தன்னுடைய பெருந்தன்மையினாலேமஹான் என்று பேர் பெற்றான். பரத்துவாஜருடைய மனைவிக்கு வீரா என்று பேர். இவள் வீரியனைப் பெற்றாள். இரண்டாவது பலியை இவன் பேரால் செய்து பிராமணர்கள் இவனை வணங்குகிறார்கள். இவனுக்கு ரதத்துவான், கும்பேரன் என்கிற பேர்களும் உண்டு. இவன் ஸரயு என்பவளை மணந்தான். ஸரயு ஸித்தன் என்பவனைப் பெற்றாள். ஸித்தன் சூரியனைப் போன்ற காந்தியுள்ளவன். இவன் யாகத்தில் அழைத்தபோது வருகிறான். பிருகஸ்பதியின் இரண்டாவது புத்திரன் நிச்சயவான். இவன் கீர்த்திப் பிரதாபமுடையவன். குறைவற்ற செல்வ முள்ளவன், நிச்சயவான் எப்போதும் பூமியைப் புகழ்ந்து கொண்டிருக்கிறான். நிச்சயவான் குமாரன் சத்தியன். புகழும், ஒளியும் பரிசுத்தமுமுடையவன். எல்லாப் பிராணிகளையும் பரிசுத்தமாக்குகிறவன். அதனால் அவனுக்கு நிஷ்கிருது என்று பேர் வீடுகளில் சிரேஷ்டமாய் விளங்குகிறவன். சத்தியனுடைய புத்திரன் ஸ்வன். இவன் ஜனங்களைத் துன்பத்தினால் அழும்படி செய்கிறவன். பிருகஸ்பதியின் மூன்றாவது குமாரன் விசுவஜித்து. இவன் உலகம் முழுவதிலும் ஞானத்தைப் பரவும்படி செய்கிறவன். நாலாவது விசுவபுக். இவன் தான் எல்லாப் பிராணிகளினுடைய ஆகாரத்தை ஜீரணிக்கச் செய்கிறவன். ஐந்தாவது பார்வன். இவன் பிராணாபான வாயுக்களில் வசிக்கிறவன். பிராமணர்கள் புலனடக்க முள்ளவர்களாயும் பிரமசாரி விரத முடையவர்களாயும் இவனை யக்ஞத்தில் ஆராதிக்கிறார்கள்.

இவன் மனைவி கௌமதி. இவள் பிராணிகளை நரகத்திலிருந்தும் விடுவிக்கி றாள். தார்மிஷடர்கள் இந்த அக்கினியாலே வீடுகளைப் பரிசுத்தி செய்கிறார்கள். பிருகஸ்பதியின் புத்திரி சுவாஹா என்பவள் வெகு பயங்கரமானவள். கொடி யவள். எல்லாப் பிராணிகளிடத்திலும் வசிக்கிறாள் தேவலோகத்தில் கூட அவளுக்கு இணையான அழகுள்ளவள் எவளுமில்லை. ஆகையால் அவளுடைய புத்திரனுக்குக் காமாக்கினி என்று பேர். இரண்டாவது புத்திரன் அமோகன். இவன் கோபத்தோடு கூடி எப்போதும வில்லையும் மாலைகளையுந் தரித்துக்கொ ண்டு சத்துருக்களைச் சங்கரிக்கப் புறப்படுவான். மூன்றாவது புத்திரன் உக் தன், இவன மோட்சம் அளிப்பவன். இவனுடைய புததிரன் மஹாவாசன். வேதமோதினவர்கள் இவனை முக்தி தருகிறவனென்று புகழ்கிறார்கள்.

---

## 220-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—19. உக்தனுக்குப் பிராணன் என்று மறு பெயர். பிராணனுடைய புத்திரன் கசியபர், வசிஷடர், அங்கிரஸர், சியவனர். இவன் பிரமதேவரைப் போன்ற ஒரு புத்திரனைப் பெறுவதற்காக நெடுங்காலம் தவசு செய்தான். பஞ் சவியா கிருதிகளால் துதிக்கப்படுகிறவனும், உலக சிருஷடிகனும், பஞ்ச வர் ணங்களை யுடையவனுமான பிரமாவைப் போன்ற ஒரு புத்திரனைப் பெற்றான். அந்தப் புத்திரனுடைய சிரசு எரிகிற தீயாம். அவனுடைய புஜங்கள் சூரிய னைப் போலிருக்கும். அவனுடைய தேகமும் கண்களும் சொர்ண வடிவமா யிருக்கும். தொடைகள் கறுப்பு வர்ணம். இவனும் பஞ்ச வர்ண முள்ளவன். ஆகையால் இவனுக்குப் பஞ்சசன்யன் என்று பேர் ஐந்து வம்சங்களுக்கு மூல புருஷன். அவன் ஆயிர வருஷம் கொடிய தவசு செய்து பிதிராக்கினியை உண்டாக்கினான். அவனுடைய வாயிலிருந்து பிரகத்ரதந்தரன் உண்டானான். உந்தியிலிருந்து சிவி உண்டானான். பலத்தினின்றும் இந்திரன் உண்டானான். சுவாசத்தினின்றும் வாயு அக்கினி உண்டாயின. புஜங்களிலிருந்து உதாத்த அநுதாத்த சுரங்களும், விசுவேபுத்தும் பிறந்தன. இந்த ஐந்து பிதிராக்கினி களையும் உண்டாக்கினான். பிருகத்ரதனுக்குப் பிரணிதி, காசியபனுக்கு மஹ த்தரன், அங்கிராவுக்குப் பானு. வர்ச்சஸ்கு சௌபரன், பிராணனுக்கு அநு தாத்தன் என்பவர்கள் பிறந்தார்கள். இந்த ஐந்தும் இருபத்தைந்தாகப் பகுக் கப்படுகின்றன. பாஞ்சசன்யனுக்கு ஸுபீமன், அதிபீமன், பீமன், பீமபலன், அபலன், சுமித்திரன், மித்திரவர்தன், மித்திராக்கியன், மித்திரவர்த்தனன், மித்திரதர்மன், சூரன், பிரவீரன், வீரன், சுரேசன், சுவர்ச்சஸன் என்கிற பதி னைந்து யக்ஞ தேவர்கள் பிறந்தார்கள். கடைசியில் சொன்ன ஐவர்களும் அழிக்கிறவர்கள். இவைகள் ஒவ்வொன்றும் மும்மூன்றாகப் பதினைந்து வகைப் படும், இவைகள் யாகம் செய்கிறவர்களுடைய தர்மங்களை அபகரிக்கின்றன.

அவர்களுடைய இஷ்டங்களை நிறைவேற ஒட்டாமல் கெடுக்கின்றன. இவை கள் யக்ஞசத்துருக்கள் யக்ஞ திரவியங்களைத் திருடிக்கொண்டு போகின் றன. இதனாலேயாகவேதியின் வெளிப்புறத்தில் வைத்து இவர்களுக்கும் யக்ஞ பாகம் கொடுக்கப்படுகின்றன. அப்படிச் செய்வதனால் அவர்கள் யாகாக்கினிக் குச் சமீபத்தில் வருவதில்லை. அவர்களை மந்திரங்களினாலே சாந்தப்படுத்தி னால் அப்படிச் செய்வதில்லை. பிருகத்யுகன் என்று கடைசியில் ஒரு புத்திரன் பிறந்தான். அவன் பூமியில் யக்ஞ காலங்களில் ஆராதிக்கப்படுகிறான். ரதந்த ரனும் அவனுடைய புத்திரனே, அத்வாயுக்கள் இதிலேதான் கிரியைகளைச் செய்கிறாகள் இந்த ஐந்து புத்திரர்களை உடைமையால் பஞ்சாக்கினிகள் சந்தோஷமா யிருக்கின்றன.

---

## 221-வது அத்தியாயம்

*மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.*

1—25. யுதிஷ்டிரா! பரதனுக்குப் புஷ்டி என்று ஒரு பேர் உண்டு. சகல பிராணிகளுக்கும் புஷ்டியையும் பலத்தையும் கொடுப்பதால் அந்தப் பெயருண் டாயிற்று. பாஞ்சஜன்யனுடைய மூன்றும் புத்திரனை சிவன் என்பவன் சக்தி பூஜையில் சிறப்புப் பெறுகிறான். பாஞ்சஜன்யனுடைய மகிமையைப் பார்த்து புரந்தரன் அவனிடம் பிறந்து தவம் புரிந்தான். உஷ்மன் என்பவனும் பாஞ் சஜன்யனிடம் பிறந்து எல்லாப் பிராணிகளிடத்திலும் வசிக்கிறான். மனு உல கத்துக்கு இறைவனானான். இவர்களுக்குப் பின் சம்பு, ஆவஸ்தியன் என் பவர்கள் பிறந்தார்கள். அதன்பின் பாஞ்சஜன்யன் சொர்ணத்தைப் போல ஜ்வலிக்கின்ற ஐந்து அக்கினிகளைப் பெற்றான். சூரியன், அஸ்தமான காலத் தில் பயங்கரமான அசுரர்களையும், ஆச்சரியமான சில மனிதர்களையும் பெற் றான். பாஞ்சஜன்யன் பிருகத்பானு என்கிற மனுவையும் பெற்றான். அவ னுக்கு ஸுப்பிரஜா, பிருகத்பாஸ என்கிற இரண்டு மனைவிகளுண்டு. இந்த இரண்டு புத்திரர்களும் சூரியனுடைய புத்திரிகள். இவர்களுள் ஸுப்பிரஜா பலதன், மன்யு, விஷ்ணு என்கிற திருதிமான் என்ற மூன்று புத்திரர்களைப் பெற்றாள். பிருகத்பாஸா எனபவள் ஆகராயணன், நிராக்கிரன், அக்கினிஷ்டு என்பவர்கள். பானு நிசா என்பவளை மணந்தான். அவள் ஒரு புத்திரியை யும் ஐந்து புத்திரர்களையும பெற்றாள். மழை காலத்தில் இந்திரனுடன் சேர் ந்து பாகம் பெறுகிறவன் வைசுவானரன். எல்லாப் பிராணிகளுடைய ஆகா ரங்களையும் ஜீரணம் செய்விக்கிறவன் விசுவபதி. யக்ஞ ஆஜ்யத்தைப் பரிசுத்த தம் பண்ணுகிறவன் ஸ்விஷ்டகிருது. அவன் மனைவி ரோகிணி என்பவள். அவள் ஹிரண்யகசிபுவின் புத்திரி. ஸந்நிஹித், பிரஜாபதி என்பவர்கள். யோகி களுக்கும், வேலை செய்வதில் எல்லாப் பிராணிகளுக்கும் உபகாரியா யிருக்கி

ரூர்கள். கபிலர் என்னும் ரிஷியாகிய அக்கினி சாங்கிய யோகத்தைச் செய்த வர்.

26—32. காற்றினால் இரண்டு அக்கினிகள் கலந்தாலும், தக்ஷிணாக்கினி மற்றவற்றோடு கலந்தாலும் எட்டுக் கபாலங்களில் ஹோமம் செய்வதால் சுத்தியாம். பஹிஷ்டையான ஸ்திரீகள் ஹோமாக்கினியைத் தொட்டாலும் முன் சொன்னபடியே பிராயச்சித்தம் செய்யவேண்டும். உயிரோடிருக்கிறவர்கள் இறந்து போனதாகக் கேள்விப்பட்டால், ஸர்மி அக்கினியில் எட்டுக் கபாலங்களினால் ஹோமம் செய்ய வேண்டும். மூன்று நாள் ஏதாவது ஒரு காரணத்தால் அக்கினி ஹோத்திரத்தை விட்ட பிராமணன் உத்தராக்கினியில் முன் சொன்னது போல ஹோமம் செய்யவேண்டும். தர்சபூரணி மாஸங்களைச் செய்யத் தொடங்கித் தவறினால் பதிகிருதாக்கினியில் முன் போல ஹோமஞ் செய்ய வேண்டும்.

---

## 222-வது அத்தியாயம்

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—12. முதிதா ஸா என்கிற அக்கினியின் பிரிய மனைவி. இந்த அக்கினி தண்ணீரில் வசிக்கிறவன். அவனிடத்தில் பிராணிகளுக்கும் உலகத்துக்கும் இறைவனாகிய அக்கினி பிறந்தானென்று பிராமணர்கள் சொல்லுகிறார்கள். இவன் ஆகாசம், ஜீவன், ஐசுவரியம், புகழ், வைராக்கியம், தர்மம், மகிமை இவைகளுக்கு இறைவன். யக்கியத்தில் எப்போதும் ஆராதிக்கப்படுகிறான். யக்கியத்தில் பாகமும் பெறுகிறான். இவன் மூன்று உலகத்தையும் அழிக்கிறவன். உலகத்துக்கும் பூதங்களுக்கும் இறைவன். ஆகாசத்தையும், அசரப் பொருள்களையும் நடத்துகிறவனும், தண்ணீரில் இருக்கிறவனுமான அக்கினிக்குப் பரதன் என்று பேர். அக்கினிஷ்டோமத்தில் ஆராதிக்கப்படுகிறான். தேவர்கள் இவனைப் புகழ்கிறார்கள். ஒரு காலத்தில் பிருகு முனிவரது சாபத்துக்கு அஞ்சித் தண்ணீருக்குள் புகுந்து மறைந்தான். தேவர்கள் எல்லாரும் அவனைத் தேடினார்கள். அவன் அங்கிராதன் கிட்ட வந்ததைப் பார்த்து, நீர் அக்கினி சொரூபமாக இருந்து தேவர்களுடைய அவிர்ப்பாகங்களை வாங்கிக் கொள்ளும். எனக்குப் பிரிய முண்டாக்கும் பொருட்டு நீர் இதைச் செய்ய வேண்டுமென்று சொல்லி விட்டு வேறிடம்போய் விட்டான். அவன் ஒளிந்து கொண்டிருக்கிற இடத்தை மீன்கள் வெளிப்படுத்தின. அவன் கோபித்துக்கொண்டு அந்த மீன்களை மனிதர்களுக்கு ஆகாரமாகும் படி சபித்தான். இதை அங்கிராவிடம் சொன்னான். தேவர்கள் தங்கள் அவிசை ஏற்கும்படி அவனைக் கட்டாயப்படுத்தினார்கள். அவன் சம்மதியாமல் தன் சரீரத்தை விட்டு விட்டான்.

13—20 பிறகு பூமிக்குள் மறைந்தான். அங்கே பல விதமான உலோகங்களை உண்டாக்கினான். அவனுடைய யூபஸ்தம்பங்களிலிருந்து வாசனைகள் உண்டாயின. அவனுடைய எலும்பிலிருந்து தேவதாரு உண்டாயின. கோழையிலிருந்து பளிங்கு உண்டாயிற்று. பித்தத்திலிருந்து இரத்தினங்களுண்டாயின ஈரலிலிருந்து இரும்பு உண்டாயிற்று. மற்ற அவயங்களிலிருந்து வெவ்வேறு பொருள்களுண்டாயின. உலகமெங்கும் மரம், கற்கள், இரும்பு முதலியவற்றால் நிரப்பினான். நகம், கண், மயிர் இலைகள் செடி கொடிகளாக முளைத்தன. இப்படியாகத் தன் சரீரத்தைப் பலவிதப் பொருள்களாக உற்பத்தி செய்து கொண்டு தவம் செய்து கொண்டிருந்து மிகுந்த மகிமையை அடைந்தான். ஆயினும் பிருகுவும், அங்கிராவும் தபோ மகிமையால் அவனை அச்சுறுத்தினார்கள். அதனால் அவன் பயந்து மறுபடியும் கடலிற் புகுந்து கொண்டான் அவன் இல்லாமையால் ஜனங்கள் பயந்து தேவர்களுடன் கூடி அங்கிராவினிடம் போய் அவரை வணங்குகிறார்கள். அங்கிரா அந்த ஜனங்களுக்கு எதிரிலே கடலைக் கடைந்து அக்கினியை வெளிப்படுத்தி உலகத்தை மகிழச் செய்தார். பூர்வ காலத்தில் அக்கினி இப்படி ஒளிந்து கொண்டான். மறுபடியும் அங்கிரா அக்கினியை மீட்டுக்கொண்டு வந்தார்.

21—32. அக்கினிதேவன் அநேக இடங்களுக்கு யாத்திரை செய்து அநேக ஸ்தலங்களையும ஸ்தாபித்தான். அவைகளெல்லாம் வேதத்தில் சொல்லப்பட்டவைகள் அவைகள் சிந்து நதி, பஞ்ச நதி, தேவிகா, சரஸ்வதி, கங்கை, சரயு, கண்டகி, சாமண்வதி, கோசிகா., நர்மதா, கோதாவரி இன்னும் உள்ள நதிக் கரைகளிலும் இருக்கின்றன. அத்திரி மஹா ரிஷியும் தம்முடைய பல அங்கங்களிலிருந்து ஏழு அக்கினிகளை உண்டாக்கினார். இந்த அக்கினிகள் இருட்டை நீக்குவதற்காக உண்டாக்கப்பட்டன. எல்லா அக்கினிகளும் உருவத்தில் ஒரே விதமாயிருக்கின்றன. அங்கிராவின் சரீரத்திலிருந்து ஒளி வடிவமாய் உண்டாயின. இது தான் அக்கினியின் உற்பத்தியும் சொரூபங்களுமாம். இவாகளே மந்திரங்களால் ஆராதிக்கப் படுகிறார்கள்.

---

## 223-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—10. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரைப் பார்த்து, அக்கினியின் வரலாறுகளைச் சொல்லி விட்டேன். இனிக் கார்த்திகேயர் (சுப்பிரமணியக் கடவுள்) உற்பத்தியைச் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லுகிறார். அவர் ரிஷி பத்தினிகளுக்குப் பிறந்து மகிமையுள்ள அக்கினிக்குப் புத்திரரானார். பூர்வகாலத்தில் தேவர்களும் அசுரர்களும் யுத்தம் செய்தார்கள். தானவர்கள் தேவர்களைப் பலதரம் வென்று அநேக வீரர்களைக் கொன்றார்கள். இந்திரன்,

தானவர்களை வென்று தேவர்களை காப்பாற்றும்படி ஒரு சேனாபதியை நியமிக்க உத்தேசித்தான். இந்திரன் மானஸமலையிலிருந்து சிந்தித்துக் கொண்டிருக்கையில், ஒரு பெண் அழுகிற குரல் கேட்டது. அதை உற்றுக் கேட்டான். என்னைக் காப்பாற்றுகிறவனுக்கு நான் மனைவியாவேன். என்னை இரட்சிக்கிறவன் எவனை மணம்புரியச் சொல்கிறானோ அவனை விவாகம் புரிவேன்." என்று சொன்னதைக் கேட்டான். உடனே இந்திரன் அவ்விடத்துக்குப் போனான். கேசி என்ற தைத்தியன் சிரசில் மகுடத்தை யணிந்து கொண்டும், கையில் ஒரு பெண்ணைப் பிடித்துக் கொண்டும் நிற்கிறதைப் பார்த்தான். பார்த்தவுடனே அந்தப் பெண்ணுக்கு ஆறுதல் சொல்லி, அசுரனைப் பார்த்துத் துஷ்டா! ஏன் இந்தப் பெண்ணைப் பிடித்துக் கொண்டிருக்கிறாய்? தூர விலகிப் போ. நான் வஜ்ரதாரனாகிய இந்திரன். என் சந்நிதியில் அவளை வருத்தக்கூடாது. என்றான்.

11—15. கேசி, இந்திரனை நோக்கி நான் இந்தப் பெண்ணை இச்சிக்கிறேன். ஏ இந்திரா! உனக்கு உன் உயிர்மேல் இச்சை யிருந்தால் ஓடிப்போ என்றான். கேசி இப்படிச் சொல்லிக்கொண்டே தன் கதையை அவன் மேல் எறிந்தான். இந்திரன் தன் வஜ்ராயுதத்தினால் அந்தக் கதையை இரண்டு துண்டாக்கினான். கேசி ஒரு மலையை எடுத்து இந்திரன்மேல் லெறிந்தான். இந்திரன் அதைக் கேசிமேலேயே விழச் செய்தான். அதனால் கேசி காயப்பட்டு அந்தப் பெண்ணை விட்டு ஓடிப் போனான். அதன் பின் இந்திரன் அந்தப் பெண்ணைப் பார்த்து நீ யார்? நீ யாருடைய பெண்? நீ இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்று கேட்டான்.

---

## 224-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத்தொடர்ச்சி.

1—25. அந்தப் பெண் இந்திரனை நோக்கி நான் பிரஜாபதியின் புத்திரி. என் பேர் தேவசேனை. எனக்குத் தைத்தியசேனை என்று ஒரு சகோதரி யிருந்தாள். அவளைக் கேசி கொண்டு போய் விட்டான். நானும் என் சகோதரியும் தோழிப் பெண்களுடன் சேர்ந்து இந்த மானச மலையில் விளையாட வந்தோம். எங்கள் பிதாவும் எங்களுக்கு அனுமதி கொடுத்தார். கேசி எங்களைத் தூக்கிக்கொண்டு போவதற்குச் சமையம் பார்த்துக் கொண்டிருந்தான். இன்றைய தினம் அவனுடைய எண்ணம் பாதி நிறைவேறிற்று. என் சகோதரி அவன்மேல் விருப்பமா யிருந்தபடியால் அவளைக் கொண்டு போய் விட்டான். நான் உம்மால் விடுவிக்கப்பட்டேன். ஆகையால் எனக்குத் தகுந்த கணவனை நீரே நிச்சயம் செய்யும் என்றாள். தாட்சாயணி என் தாயாராயிருப்பதால் நீயென் மாயியார் ஆகிறாய். உனக்கு என்ன சக்தி யிருக்கிறது?

சொல் என்ருன். அவள் நான் தூரப் பலமுள்ளவள். என் கணவன் தேவர்களாலும் அசுரர்களாலும் மரியாதை செய்யத் தக்கவர் என் பிதா இந்த வரத்தை யெனக்குக் கொடுத்திருக்கிருர் என்ருள் உன் கணவன் எவ்வகைப்பட்ட பலமுடையவனு யிருப்பான் நான் அறியும்படி சொல் என்ருன் என் கணவன் மஹா ஐசுவரியசாலியா யிருப்பான். எல்லாத் தேவர்களையும் ஜயிக்க வல்லவனு யிருப்பான் சர்வ யக்ஷ கின்னரர், உரகர், அரக்கர், பயங்கரமான பூத கணங்களையும் வெல்ல வல்லவனு யிருப்பான் மஹா ஞானியாயும் கீர்த்திமானுயும் இருப்பான் என்ருள் இதைக் கேட்ட இந்திரன் இப்படிப்பட்ட குணமுடையவனை அடைவது அரிதாகும் என்று மனதில் கவலை கொண்டான்.

26—50. அப்போது அமாவாசை. உதயாசலத்தில் சூரியனும் சந்திரனும் சேர்ந்திருந்தார்கள் அந்த மலையில் தேவர்களும் அசுரர்களும் யுத்தம் செய்யத் தொடங்கினார்கள் கடல் நீரும் மேகங்களும் சிவந்திருந்தன பிருகு, அங்கிரா இவர்களுடைய ஆஹுதியைப் பெற்றுக்கொண்டு அக்கினி தேவன் சூரியனிடத்தில் சேர்ந்திருந்தான் இருபத்து நாலு பர்வங்களும் சூரியனுக்குச் சமீபத்தில் வந்தன சூரியனும் சந்திரனும் சேர்ந்திருப்பதையும், பயங்கரமான சண்டையையும் இந்திரன் பார்த்துத் தனக்குள் யோசிக்கிருன் சூரியனும் சந்திரனும் சேர்ந்திருப்பதை யோசித்தால் இராத்திரிக்குள் பயங்கரமான யுத்தம் நேரும் என்று தோன்றுகிறது ஆறுகள் சமுத்திரங்களிலுள்ள தண்ணீர் சிவந்திருக்கிறதைப் பார்த்தால் இரத்தப்பிரவாகம் உண்டாகுமென்று காணகிறது. அதனுல் தண்ணீர் குடிக்க உதவாமல் போகும் பெண் நரிகள் சூரியனைப் பார்த்து ஊளையிடுகின்றன. சூரியனும் சந்திரனும் சேர்ந்திருப்பது விநோதமாயிருக்கிறது. சந்திரன் அல்லது அக்கினிக்குப் பிறக்கிற புத்திரன் இந்தப் பெண்ணுக்குக் கணவனுவான் இந்த எண்ணங்கொண்ட இந்திரன் தன் பரிவாரங்களுடன் பிரமலோகத்துக்குப் போனுன் பிரமதேவரை வணங்கி, இந்தப் பெண்ணுக்குத் தகுந்த கணவனை எனக்குத் தெரிவித்தருளும் என்ருன் நீ எண்ணிக்கொண்டிருக்கிறது போலவே சிறந்த மகிமையுள்ள ஒரு பிள்ளை பிறப்பான், இந்தத் தெய்வப் பெண்ணை அவனே மணம் புரிவான் அவன் தேவர்களுடைய சைனியங்களுக்குச் சேனுபதியாவான் என்று சொன்னுர். தேவேந்திரன் பிரமாவை வணங்கி விடை பெற்றுக்கொண்டு தேவசேனையுடன் புறப்பட்டு வசிஷ்டர் முதலிய ரிஷிகள் யாகம் செய்கிற இடத்துக்குப்போனுன். தேவேந்திரனும் தேவர்களும் சோமபானம் செய்யும் பொருட்டு அங்கே கூடினுர்கள். அப்போது சூரியனிடத்திலிருந்து அத்புதாக்கினி வந்தான். அவிர்ப்பாகங்களை ஏற்றுக்கொண்டு தேவர்களுக்குக் கொடுத்தான். தேவர்கள் எல்லாரும் தத்தம் இடத்துக்குப் போய் விட்டார்கள் ரிஷி பத்தினிகளில் சிலர் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள் சிலர் படுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய முகம் சந்திரனையும் நட்சத்திரங்களையும் போலப் பிரகாசித்துக் கொண்டிருக்

தன. அவர்களை அக்கினி கண்டான். அவர்களுடைய அழகினால் மதிமயங்கினான். உடனே அவனுக்கு கை கால் சோர்ந்து போயின. அவன் நான் மனம் சலிக்கக் கூடாது. இந்த ரிஷி பத்தினிகள் பதிவிரதைகள். அவர்களை பார்ப்பதும் அவர்களுடன் பேசுவதும் கூடாத காரியம். ஆகையால் நான் இங்கேயே யிருந்து சதா அவர்கள் அழகைப் பார்த்துக்கொண்டேயிருக்கிறேன் என்று சிந்தித்தான்.

51—57. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரை நோக்கி மஹா ராஜனே! அக்கினி இப்படி நினைத்துக்கொண்டு யாக வேதியில் போய் அங்கேயே யிருந்து விட்டான். தன்னுடைய கிரணங்களால் அவர்களை ஸ்பரிசித்துக் கொண்டிருந்தான். இரவும் பகலும் அவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தான். வெகு நாட்களுக்குப் பின் இந்தப் பெண்களை அடைவது முடியாத காரியம் என்று கருதி வனத்துக்குப் போய் விட்டான். அவன் தனியா யிருப்பதைப் பார்த்துத் தட்சனுடைய புத்திரியாகிய சுவாஹா என்பவள் இதுதான் நல்ல சமையம். இந்தச் சமையத்தில் இவனை நாம் வசப்படுத்திக்கொள்ள வேண்டும் என்று கருதினாள். ரிஷி பத்தினிகளுடைய சொரூபத்தைத் தான் எடுத்துக் கொண்டு போய் அந்த அக்கினி தேவனுடன் கலக்க எண்ணங் கொண்டாள்.

## 225-வது அத்தியாயம்

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—25. மார்க்கண்டேயர், யுதிஷ்டிரா! சுவாஹா, அங்கிராவின் மனைவி சிவா என்பவளைப் போல வடிவத்தை எடுத்துக்கொண்டு அக்கினி தேவனிடம் போய், அவனை நோக்கி நான் உம்மேல் மோகங்கொண்டு வந்திருக்கிறேன். நீரும் என்னை நேசிக்க வேண்டும். நான் அங்கிராவின் மனைவி சிவா. மற்ற ரிஷி பத்தினிகள் என்னை உம்மிடம் அனுப்பினார்கள். நீர் என்னை நேசியா விட்டால் நான் இறந்து விடுவேன் என்றாள். அக்கினி இதைக் கேட்டு, அழகான பெண்ணே! நீயும் உன்னை அனுப்பினவர்களும் நான் மோகங் கொண்டிருப்பதை அறிவீர்கள் என்றான். சிவா ஆமாம், நாங்கள் எப்போதும் உம்மை நேசிக்கிறோம். ஆனால் எங்களுக்குத் தைரியமில்லை, இப்போது உமது முகக் குறியால் எங்களிடத்திலுள்ள விருப்பத்தையும் தெரிந்து கொண்டோம். ஆகையால் என் சகோதரிகள் உம்மிடம் அனுப்பினார்கள். என் வரவுக்கு எதிர் பார்த்திருப்பார்கள். என் விருப்பத்தை நிறைவேற்றும் என்றாள். அக்கினியும் அப்படியே அவளைக் கலந்தான். அவனுடைய வீரியத்தைச் சுவாஹா கையில் எடுத்துக் கொண்டாள். இந்தக் கோலத்துடனிருக்கிற என்னை யாராவது பிராமண ஸ்திரீகள் பார்த்தால் குற்றம் சொல்வார்கள். ஆகையால் கருடி என்கிற பூத வடிவங்கொண்டு இந்த வீரியத்தை ஜாக்கிரதையாகக் கொண்டு போகிறேன் என்று கருதினாள். அப்படியே உருவத்தை மாற்றிக்கொண்டு

பயங்கரமான சுவேத மலையில் ஏறினள். அவ்விடத்தில் ஒருவரும் போகக் கூடாது. அரக்கர்களும், பூதங்களும், ஏழு தலை நாகங்களும் வசிக்கும். அவ் விடத்தில் ஒரு சொர்ணமயமான சுனை யிருந்தது. அதில் வீரியத்தை வைத்து விட்டு, வேறொரு ரிஷி பத்தினி வடிவம் கொண்டு மறுபடியும் அக்கினியிடம் வந்து அவனைக் கலந்தாள். அந்த வீரியத்தையும் முன் சொன்ன சுனையில் இட்டு வந்தாள். இப்படி ஆறு ரிஷி பத்தினிகள் வடிவம் கொண்டு ஆறு தரம் அக்கினியை கலந்து அந்த வீரியங்களையும் சுனையில் இட்டாள். அருந்ததி யின் வடிவங்கொள்ள முடிய வில்லை. ஏனென்றால் அருந்ததி தவ மகிமையு டையவளும் பதிவிரதையுமானதால் அவளுடைய சொரூபத்தை யடைய முடி யவில்லை. அந்த அக்கினி பகவானுடைய வீரியத்தினாலே ஆறு தலைகள், பன் னிரண்டு காதுகள், பன்னிரண்டு கைகள், ஒரு கழுத்து, ஒரு வயிறு இவைகளை யுடைய ஒரு புத்திரன் உண்டானன். மூன்றாம் நாள் குழந்தை வடிவமாயிருந் தது. நாலாம் நாள் அந்தக் குழந்தையின் அவயவங்கள் வளர்ந்தன. அருணோ தயமானது போலச் சிவந்த நிறமுடையதா யிருந்தது. பயங்கரமானதும், மஹா தேவராகிய பரமசிவன் அசுரர்களைச் சங்கரித்ததுமான வில்லைக கையில் தரித்துககொண்டிருந்தது. அந்தப் பிள்ளை இடி முழக்கம் போலக் கர்ஜித் தான். அதைக் கேட்டு உலகத்திலுள்ள பிராணிகளெல்லாம் களைத்தன. அப் போது சித்திரம் என்கிற நாகமும் ஐராவதமும் ஆகாய மார்க்கமாக வந்தன. அவ்விரண்டையும் இரண்டு கைகளால் பிடித்துககொண்டு, மூன்றாவது கை யில் வேலும், நாலாவது கையில் தோமரமும், ஐந்தாவது கையில் கோழியை யும் பிடித்துக்கொண்டு அந்தக் குழந்தை கர்ஜித்தது.

26—39. பிறகு ஒரு சங்கை மற்ற இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டு, மற்ற இரண்டு கைகளால் ஆகாயத்தைக் கலக்கிற்று. அந்த மலை யின் சிகரத்தில் பால சூரியனைப் போல உட்கார்ந்துகொண்டு, ஆறு முகங்க ளாலும் திக்குகளை எல்லாம் நோக்கிக கொண்டிருந்தது. அதைப் பார்த்தால் ஆறு வாய்களாலும் உலகத்தை விழுங்கி விடுவது போலத் தோன்றிற்று. அந்தக் குழந்தை மறுபடியும் கர்ஜித்தது. அதனால் அநேக ஜனங்கள் களைத்து அந்தக் குழந்தையைச் சரண மடைந்தார்கள். அவர்களைத் தேற்றின பின் வில்லில் அம்பைப் பூட்டி யெய்தார். அந்த அம்பு இமயமலையின் புத்திரனை கிரௌ ஞ்சகிரியைத் துளைத்துக்கொண்டு போயிற்று. அந்தத் துண்டுகள் இரைந்த சப்தத்தோடு பூமியில் விழுந்தன. மற்ற மலைகள் நடுங்கின. பட்சிகள் எல் லாம் பறந்து போய் மேரு மலையில் உட்கார்ந்தன. மலைகள் கதறுகிறதைக் கவனியாமல் சக்தி ஆயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, சுவேத மலைச் சிகரத்தின் மேல் அதைப் பிரயோகித்தார். அதனால் பூமி பிளந்து அவரை சரண மடைந்தது. அவர் அதைத் தேற்றி முன் போலச் சேர்த்து விட்டார். மலைகளையும் முன் போலச் சரியான ஸ்திதியில் வைத்து விட்டார். நாலாம் நாள் உலகமெல்லாம் அவரைச் சிந்தித்தன.

---

## 226-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—16. அந்தப் புத்திரன் பிறந்த பின் பூமியில் பயங்கரமான பல துர்ச் சகுனங்கள் தோன்றின. மனைவியும் புருஷனும் மனம் ஒத்திருக்க வில்லை. வானமும் நட்சத்திர மண்டலங்களும் பிரகாசித்தன. பூமியில் பயங்கரமான தொனி உண்டாயிற்று. இந்த அபசகுனங்களைக் கண்ட ரிஷிகள் பூமியை அமைதியாக்கினார்கள். சைத்திரரத வனத்தில் வசிக்கிறவர்கள், அக்கினி தேவன் ரிஷி பத்தினிகளைக் கூடித் துஷ்ட கிருத்தியத்தைச் செய்து விட்டான். ஏனென்றால் சுவாஹா இப்படிச் செய்தது அவர்களுக்குத் தெரியாது. அவள் ரிஷி பத்தினிகளின் வடிவமாய்ச் சென்றதை மாத்திரம் பார்த்தார்கள், சுவாஹா கருடி வடிவாயிருந்த போது அவளைப் பார்த்தவர்கள் நீதான் இந்தக் கொடிய செய்கைக்குக் காரணமானவள் என்று சொன்னார்கள். பிறகு சுவாஹா தன் பர்ணசாலைக்குப் போய் அந்தக் குழந்தையை நோக்கி நான் உன் தாய் என்று சொன்னாள். ரிஷிகள் இந்தக் குழந்தை தங்களுடைய பத்தினிகளுக்குப் பிறந்தது என்று கேள்விப்பட்ட வுடனே அவர்கள் தங்கள் பத்தினிகளை தள்ளி விட்டார்கள், அருந்ததி மாத்திரம் விலக்கப்படாம லிருந்தாள். இதைக் கேட்ட சுவாஹா ரிஷிகளிடம் போய், அவர்களைப் பார்த்து எனக்கு எல்லாம் தெரியும். இந்தக் குழந்தை என்னுடையது. நீங்கள் உங்கள் பத்தினிகளை விலக்க வேண்டாம். ஆனால் அந்த ரிஷிகள் அவள் வார்த்தையை நம்பவில்லை. விசுவாமித்திரர் மாத்திரம் அக்கினி காமத்தால் வருந்தியதையும், சுவாஹாவின் செய்கையையும் அறிந்திருந்தார். குழந்தை பிறந்த பின் அந்தக் குழந்தைக்கு ஜாதகர்மம் செய்து அந்தக் குழந்தையின் பலத்தையும் மதித்திருந்தார். அது முதல் அவர் அந்தக் குழந்தைக்கு நேசரானார். விசுவாமித்திரர் ரிஷிகளிடத்தில் போய்ச், சுவாஹாவின் செய்கையைச் சொல்லி, உங்கள் மனைவிமார்கள் இவ்விஷயத்தில் தோஷ மற்றவர்கள், அவர்களைத் தள்ள வேண்டாம் என்றார். ரிஷிகள் உலக நிந்தைக்குப் பயந்து தங்கள் பத்தினிகளைச் சேர்த்துக் கொள்ள வில்லை.

17—28. தேவர்கள் ஸ்கந்தர் பிறந்ததைக் கேட்டு இந்திரனிடம் போய் ஸ்கந்தன் மஹா பலவானாயிருக்கிறான். அவனை உடனே கொல்லவேண்டும். இல்லாவிட்டால் அவன் நம்மை ஜயித்து இந்திரனாய் விடுவான் என்றார்கள். அந்தக் குழந்தை மஹா மகிமையுள்ளவனும் பராக்கிரமசாலியுமா யிருக்கிறான். பிரமாவைக் கூட வென்று விடுவான். நான் அவனைக் கொல்லச் சம்மதிக்க மாட்டேன் என்றான். உனக்கு அவனைக் கொல்லும் சக்தி யில்லை. ஆகையால்தான் அப்படிச் சொல்லுகிறாய். ஆகையால் லோக மாதாக்கள் போய் அவனைக் கொல்லட்டும் என்று அவர்களை அனுப்பினார்கள். லோக மாதாக்கள் போய் ஸ்கந்தரைப் பார்த்ததும், இவரை வெல்வது நம்மால் முடியாதெ

ன்று கண்டு, உடனே அவரைச் சரண மடைந்தார்கள். அவரைப் பார்த்து பராக்கிரமசாலியாகிய நீ எங்களுடைய புத்திரன். நாங்கள் பிரியத்தினாலே உன்னிடம் வந்தோம என்றார்கள். குமார கடவுள் அவர்களுக்கு மரியாதை செய்து, அவர்களிடத்தில் பால் குடித்தார். அப்போது ஸ்கந்தருடைய பிதாவாகிய அக்கினி தேவன் அங்கே வந்தான். குமாரசாமி தம் பிதாவை மரியாதையாக ஏற்று அவன் மடிமேல் உட்கார்ந்திருந்தார். தாய்மார்களும் சூழ இருந்தார்கள். குரோதஸமுத்பவை என்பவள் ஸ்கந்தருக்குச் செவிலி யானாள். கொடியவளும் இரத்தபானப் பிரிய முள்ளவளுமான சமுத்திர புத்திரி யானவள் ஸ்கந்தரைத் தன் புத்திரனைப் போல நேசித்து வந்தாள். அக்கினி தேவன் ஆட்டுக்கடா வடிவமாய்க் குமாரசுவாமியோடு விளையாடிக்கொண்டு இருந்தான்.

---

## 227-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—18. அக்கினி தேவனும், தாய்மார்களும், கிரகங்களும் சூழ ஸ்கந்தர் உட்கார்ந்து கொண்டிருந்தார். அப்போது தேவேந்திரன் தேவர்களுடன் கூடி ஸ்கந்தரைக் கொல்லக் கருதி, வஜ்ராயுதத்தை ஏந்திக்கொண்டு ஐராவதத்தின் மேல் ஏறி வந்தான். தேவேந்திரன் தான் நிச்சயமாக ஜய மடையக்கூடுமென்று எண்ணி யிருந்தான். கொடிகள் விற்களுடன் பெரிய சேனை ஆரவாரத்துடன் வருவதைக் கண்டு குமாரசுவாமி இந்திரனை எதிர்த்துச் சென்றார். இந்திரனும் தேவர்களோடும், ரிஷிகளோடும், பெரிய சேனைகளுடனும் சிங்கத்தைப் போலக் கர்ஜித்துக்கொண்டு வந்தான். ஸ்கந்தர் சமுத்திரம் போன்ற அவர்களுடைய கோஷத்தைக் கேட்டு அவர்களை மதிமயங்கச் செய்தார். பிறகு தேவ சேனைகள் ஸ்கந்தரைக் கொல்லும்படி அவரை எதிர்த்து வர, ஸ்கந்தர் தமது வாயிலிருந்து அக்கினியை விட்டார். ஆயுதங்களை யுடைய தேவசேனைகளும், யானை குதிரை முதலியவைகளும் நடுநடுங்கி, ஒளி யிழந்த நட்சத்திரங்களைப் போலக் கீழே விழுந்து, இந்திரனைக் கைவிட்டு ஸ்கந்தரைச் சரணம் அடைந்தார்கள். உடனே அந்த நெருப்பு மறைந்து போயிற்று. தேவர்களும் பயம் ஒழிந்தார்கள். இதைப் பார்த்த தேவேந்திரன் ஸ்கந்தருடைய வலது புஜத்தில் வஜ்ராயுதத்தை ஏவினன். வஜ்ராயுதம் ஸ்கந்தருடைய வலது புஜத்தில் பட்டு அப்புறம் போயிற்று. உடனே அவருடைய சரீரத்தில் இருந்து ஒரு திவ்ய புருஷன் தோன்றினன். சொர்ணமயமான ஆயுதங்களை யணிந்து கொண்டிருந்தான். சக்தியாயுதத்தையும், குண்டலங்களையும் தரித்துக்கொண்டிருந்தான். அவன் பேர் விசாகன். வஜ்ராயுதத்தின் அடியினால் ஸ்கந்தருடைய சரீரத்திலிருந்து உண்டான படியால் அவனுக்கு விசாகன் என்று பேர் வந்தது. அக்கினியைப் போன்றிருக்கிற மற்றொரு புருஷனைக் கண்ட

தும் இந்திரன் பயந்து ஸ்கந்தரைச் சரணம் அடைந்தான். ஸ்கந்தரும் அவ னுக்கு அபயம் கொடுத்து இரட்சித்தார், உடனே தேவதுந்துபி முழங்கின

---

## 228-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—14. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரை நோக்கி, நான் ஸ்கந்தருடைய சரீரத்திலிருந்து வந்த குமாரர்களைப் பற்றிச் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லுகிறார். இவர்கள் மிகவும் பயங்கரமானவர்கள் கர்ப்பத்திலிருக்கிற குழந்தைகளைக் கொல்லுகிறவர்கள். வஜ்ராயுதத்தை எறின உடனே அநேக பிள்ளைகளும் பெண்களும் தோன்றி விசாகனைத் தந்தையாகக் கொண்டார்கள். விசாகன் அவர்களைக் காப்பாற்றுகிறதற்காக ஆட்டுக்கடா வடிவமானான். ஸ்கந்தர் அப்போது அந்தக் குழந்தைகளுக்குப் பிதாவா யிருந்தார். அது முதலாக ஜனங்கள் ஸ்கந்தரைக் குழந்தைகளுக்குத் தந்தை யென்று சொல்லுகிறார்கள். அக்கினியே உருத்திரர். சுவாஹா எனபவளே உமை. குழந்தைகளை வைத்துக்கொண்டிருக்கிறவர்களும், குழந்தைகளைப் பெற விரும்புகிறவர்களும் அவர்களை ஆராதிக்க வேண்டும். அந்தப் பெண்கள் தங்களுக்கு மூலமான ஸ்கந்தரிடம் வந்து நாங்கள் என்ன செய்வது? ஜனங்கள் எல்லாரும் எங்களைத், தங்களுடைய மாதாவாக நினைக்க வேண்டுமென்று கேட்டார்கள். அப்படியே ஜனங்களுக்கு நீங்கள்மாதாவாயிருக்கக் கடவீர்கள் என்றுவரங்கொடுத்தார். அந்தப் பெண்கள் ஸ்கந்தரைத் தங்களுடைய புத்திரனைக் கருதி மகிழ்ந்து போனார்கள். அவர்களுடைய பேர்களாவன, காகி, ஹலிமாலினீ, பிரும்ஹிதா, ஆர்யா, பலாலா, வைமித்திரா என்பனவாம். இவர்கள் தாம் குழந்தைகளுக்குத் தாயாகின்றார்கள். ஸ்கந்தருடைய கிருபையினாலே சிசு என்னும் புத்திரன் ஒருவன் அவர்களுககுப் பிறந்தான். இவர்களுடைய சத்திரங்கள் எல்லாம் ஸ்கந்தவீராஷ்டகத்தில் கூறப்பட்டது. அவர்களுக்குள் ஆட்டுத்தலை கூட உண்டென்று சொல்லப்பட்டது. அதைச் சேர்த்தால் ஒன்பது வீரர்கள் ஆகிறார்கள். ஸ்கந்தர் தம்முடைய ஆறு தலைகளுக்கு நடுவில் ஆட்டுத்தலை ஒன்றை உடையவரா யிருக்கிறார். மாதாக்கள் ஸ்கந்தருடைய ஆட்டுத்தலை மிகச் சிறந்ததென்று அதை வணங்குகிறார்கள். வேலாயுதத்தை உடையவரா யிருப்பதால் ஸ்கந்தருக்குப் பத்திரசாகர் என்று பேர். இவை யெல்லாம் பாத்திர பதமாசம் சுக்கில பட்சம் பஞ்சமியில் நடந்தன. ஷஷ்டியில் அந்தப் பெரிய சண்டை நடந்தது.

---

## 229-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—20. ஸ்கந்தர் தங்கமயமான சர்வாயுதங்களையும் கிரீடம், மாலைகளையும் தரித்துக் கொண்டு சுவேத மலையில் உட்கார்ந்திருந்தார். சிவந்த வஸ்திரம் அணிந்திருந்தார். அப்போது மிகு மகிமையாக விளங்கினார். இலட்சுமி தேவி அவரிடம் வந்து சகல குணங்களும் பொருந்திய பராக்கிரமசாலியாயிருக்கும்படி வரமளித்தாள். இலட்சுமியோடு கூடின ஸ்கந்தர் பூர்ண சந்திரன் போல விளங்கினார். மஹரிஷிகள் அவரிடம் வந்து நீர் பாக்கியசாலி. நீர் உலகத்துக்கு க்ஷேமத்தை உண்டாக்கும், நீர் பிறந்த ஆறு நாட்களுக்குள் உலகத்துக்குத் தலைவரானீர் நீர் உலகத்துக் குண்டான பயத்தை ஒழித்து விட்டீர். இந்திரனுடைய கிரீடத்தை அடையக் கடவீர் என்றார்கள். இந்திரன் உலகத்துக்கு என்ன செய்கிறான் என்றார்? ரிஷிகள், அவன் தேவர்களைப் பரிபாலிக்கிறான்? அவன் பராக்கிரமத்துக்கும், மகிமைக்கும், பிராணிகளின் சந்ததிக்கும் இறைவன். அவன் மகிழ்ச்சி யடைந்தபோது பிராணிகளின் விருப்பத்தை நிறைவேற்றுகிறான். துஷ்டர்களை சிட்சிக்கிறான். புண்ணியவான்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுகிறான். சூரியன், சந்திரன், அக்கினி, பூமி, நீர், காற்று, இவற்றின் செய்கைகளையும் அவசியமானபோது செய்கிறான். நீர் எங்களுக்கு இந்திரனா யிருப்பதற்கு மிகுதியும் தகுதியுள்ளவரா யிருக்கிறீர் என்றார்கள். இந்திரன் கூட ரிஷிகளுடன் சேர்ந்து பிரார்த்தித்தான். நீர் எங்கள் எல்லாருக்கும் சுகத்தை யளிப்பவர். ஆகையால் இன்று உமக்குப் பட்டாபிஷேகம் செய்து இந்திரனுடைய சிம்மாசனத்தில் வைக்கிறோம் என்றார்கள். ஸ்கந்தர் நான் இந்திராதிகாரத்தை அடையமாட்டேன். நீயே மூன்று உலகங்களையும் அரசாளு என்றார். இந்திரன் நீர் என்னைவிடப் பராக்கிரமசாலி. நான் பலஹீனன். நீர் சத்துருக்களைச் சங்கரிக்க வல்லவர். உமது பராக்கிரமத்தையும என்னுடைய பலஹீனத்தையும் கண்டு ஜனங்கள் எனக்கு மரியாதை செய்யமாட்டார்கள். எங்களுக்குள் விரோதமுண்டாக்க உபாயம் பண்ணுவார்கள். இதனால் எங்களுக்குள் சண்டையுண்டாகக் காரணமிருக்கிறது. உமக்கும் எங்களுக்கும் கூட விரோதம் உண்டாகலாம். பலமுள்ளவர்களாகிய நீங்களிருவரும் என்னை வெல்வீர்கள். ஆகையால் நீர் தாமதியாமல் அரசாட்சியை ஒப்புக் கொள்ளும் என்றான். ஸ்கந்தர் இந்திரா! நீ சுகமாய் அரசாளு. நீ உலகத்துக்கு அரசனா யிருப்பது போல எனக்கும் அரசன். நான் உன்னிஷ்டம் போல நடக்கிறேன். நான் என்ன செய்ய வேண்டும் சொல் என்றார். இந்திரன், நீர் சொல்வது உண்மையான வசனமாதலால், நான் அரசனா யிருக்கச் சம்மதிக்கிறேன் என்றான்.

21—30. நீர் என்னை அரசனா யிருக்கும்படி விரும்பினால் நான் உம்மைத் தேவசேனைகளுக்கு அதிபதியாக நியமிப்பேன் என்றார். ஸ்கந்தர் அதற்குச் சம்மதித்தார். இராட்சதர்களைச் சங்கரிக்கவும், தேவர்களுக்கும் பிராமணர்களுக்

கும் நன்மை செய்வதற்கும் என்னைச் சேனாபதியாக்கிக் கொள் என்றார். உடனே இந்திரன் அவருக்கு சேனாபதி பட்டங்கட்டினான். ரிஷிகள் எல்லாரும் ஸ்கந்தரை வணங்கினார்கள். அப்போது வெகு அழகாக விளங்கினார். அவர் சொர்ணமயமான குடையின் கீழ் அக்கினிக்கு மத்தியில் சூரியன் இருப்பது போல உட்கார்ந்திருந்தார். பரமேசுவரன் தாமே அவரிடம் வந்து விசுவகர்மாவினால் நிர்மிக்கப்பட்ட ஒரு மாலையை ஸ்கந்தர் கழுத்தில் பூட்டினார். சிவன் பார்வதியுடன் வணங்கினார் பிராமணர்கள் சிவனை அக்கினி யென்று சொல்லுகிறார்கள். ஆகையினால் ஸ்கந்தர் சிவகுமாரன் என்று சொல்லப்படுகிறார். சுவேத பர்வதம் சிவனிடத்தி லிருந்துண்டாயிற்று அதில் கார்த்திகைகள் அக்கினியை வணங்கினார்கள். சிவன் அக்கினிக்குள் பிரவேசித்திருந்தார் அந்த அக்கினிக்கும் சுவாஹாவுக்கும் ஸ்கந்தர் பிறந்து ருத்திரகுமாரரென்று கூறப்பட்டார்.

31—43. சிவப்பு வஸ்திரங்களை அணிந்து கொண்டிருக்கிற ஸ்கந்தர் மேகத்துக்குள் இருந்து வருகிற சூரியனைப் போல விளங்கினார். அக்கினிதேவன் ஸ்கந்தருக்கு ஒரு கோழிக் கொடி கொடுத்தான். அது அவருடைய தேரின் மேல் பிரளயாக்கினியைப் போல விளங்கிற்று. மனிதருடைய பலம், மகிமை இவைகளெல்லாம் ஸ்கந்தருக்கு முன்னாலே செல்கின்றன ஸ்கந்தருடைய சரீரத்திலிருந்து உற்பத்தியான யுத்தாயுதங்கள் எல்லாம் அவருடைய சரீரத்துத் தோலுக்குள் மறைந்திருக்கின்றன. அவர் யுத்தத்துக்குப் போகும்போது அவைகள் வெளியில் வருகின்றன. ஸ்கந்தர் ஸர்வ ஞானமுள்ளவர் வல்லமை யுள்ளவர். மகிமையுள்ளவர். தமது பக்தர்களை உண்மையாய்ப் பரிபாலிக்கிறவர். சத்துருக்களைச் சங்கரிக்கிறவர். உலகத்தைப் பாது காப்பவர். இந்தக் குணங்கள் அவரிடம் சுவபாவத்திலேயே உள்ளன. சேனாபதி பட்டம் கட்டின பின் அவருடைய முகம் பூரண சந்திரனைப் போலப் பிரகாசித்தது. தேவ துந்துபிகள் கோஷித்தன. கந்தர்வர்கள் பாடினார்கள். அப்ஸரஸ்கள் நடனம் செய்தார்கள். பிசாசர்களும் தேவர்களும் கூடி யிருந்த இடம் வெகு அழகா யிருந்தது. அவர்களுக்கு மத்தியில் ஸ்கந்தர் உட்கார்ந்திருந்தார். இருளை ஒழிக்கிற மற்ற ஒரு சூரியனைப் போலிருந்தது. அநேகமாயிரம் தேவசேனைகள் அவரிடம் வந்து, நீர் எங்களுக்குத் தலைவர் என்று சொல்லி வணங்கினார்கள். அவர் மனம் மகிழ்ந்து அவர்களை நோக்கி அவர்களுக்கு மகிழ்ச்சி யுண்டாக்கினார்.

44—49. பிறகு இந்திரன் தேவ சேனையை நினைத்துக் கொண்டான். கேசியினிடத்திலிருந்து தான் காப்பாற்றின தேவசேனைக்கு ஸ்கந்தரே பிரமாவினால் நியமிக்கப்பட்ட கணவனென்று கருதினான். பிறகு இந்திரன் தேவசேனையை ஸ்கந்தரிடம் அழைத்துக்கொண்டு வந்து விட்டு, நீர் பிறக்கிறதற்கு முன்னாலே யிந்தப் பெண் உமக்கு மனைவி யென்று பிரமாவினால் சொல்லப்பட்டது. நீர் விதிப்படி இவர்களைப் பாணிகிரகணம் செய்து கொள்ளும் என்றான். ஸ்கந்தர் சம்மதித்தார். பிருகஸ்பதி அக்கினி வளர்த்து ஹோமஞ்

செய்தார். ஸ்கந்தர் விதிப்படி அக்கினி சாட்சியாகத் தேவசேனையைப் பாணி கிரகணம் செய்து கொண்டார். தேவசேனை ஸ்கந்தருடைய பத்தினியானாள். இந்த விவாகம் ஸ்கந்தர் பிறந்த ஆறாவது நாளில் நடந்தது. பிராமணர்கள் வாழ்த்தினார்கள். தேவசேனை மனமகிழ்ச்சியுடன் ஸ்கந்தருக்குப் பத்தினி யாய் அவருடன் வசித்திருந்தாள்

---

## 230-வது அத்தியாயம்.

### மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—11. சப்த ரிஷிகளில் ஆறு ரிஷிகளுடைய பத்தினிகள் ஸ்கந்தரிடம் வந்து அவரைப் பார்த்து, எங்களுடைய நாயகர்கள் யாதொரு குற்றமும் இல்லாத எங்களைத் தள்ளி விட்டார்கள். ஆகையால் நாங்கள் மேலான பதவியிலிருந்து கீழே விழுந்து விட்டோம். அதற்குக் காரணம் நீர் எங்களுக்குப் பிறந்திருக்கிறதாக எவரோ சொன்னார்களாம். ஆகையால் நீர் எங்களைக் காப்பாற்றவேண்டும். உமது கருணையால் நாங்கள் அழியாத நித்திய பதவியை அடைய விரும்புகிறோம். நீர் எங்களுடைய பிரிய புத்திரர். ஆகையால் எங்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுவது உமது கடமையேயாம் என்றார்கள். ஸ்கந்தர் அதைக் கேட்டு, நீங்கள் என் மாதாக்களா யிருக்கிறபடியால் உங்களுடைய எண்ணம் நிறைவேறி விட்டது என்று கூறினார். அப்போது தேவேந்திரன் ஏதோ சொல்ல வாயைத் திறந்து பின் பேசாமல் இருந்து விட்டான். ஸ்கந்தர் அவனை நோக்கி உன் மனதிலுள்ளதைச் சொல் என்றார். அபிஜித் என்கிற ரோகிணியின் சகோதரி வனத்துக்குப் போய்த் தன் மூத்த சகோதரிக்கு மேலாக இருக்க வேண்டுமென்று தவம் பண்ணுகிறாள். அவள் தன்னுடைய நிலைமையை இழந்து விட்டாள். கால சக்கரபடி நட்சத்திரங்களைக் கணக்கிட வேறு வழியில்லை. ஆகையால் நீரும் பிரமாவும் இதை ஆலோசித்துச் செய்ய வேண்டும் என்றான். இதைக் கேட்டுக் கிருத்திகை ஆகாயம் போனாள். அக்கினியைத் தனக்கு தேவனாகக் கொண்டு ஏழு தலைகளுடன் வானத்தில் பிரகாசிக்கிறாள், ரோகிணியைத் தனுஷ்டைக்கு முன் செல்லும்படி கட்டளை யிட்டார்.

12—20. பின் கருடி ஸ்கந்தரிடம் வந்து, நீர் என்னுடைய புத்திரன். ஆகையால் நான் உம்முடன் கூட வசிக்க விரும்புகிறேன் என்றாள். ஸ்கந்தர் அவளை நோக்கி நீ நிச்சயமாகவே என் தாயார். ஆகையால் நான் உன்னை வணங்குகிறேன். நீ உன்னுடைய மருமகளுடன் கூட இரு. நான் செய்ய வேண்டியதைக் கட்டளையிடு என்றார். பிறகு எல்லாத் தாய்மார்களும் அவரிடம் வந்து, நாங்கள் லோக மாதாக்கள் என்று வணங்கப் படுகிறோம். ஆகையால் நாங்களும் உமது தாயாராக இருக்க விரும்புகிறோம். நீர் எங்களுக்குச் சரியான

மரியாதை செய்ய வேண்டும் என்றார்கள். ஸ்கந்தர் அவர்களை நோக்கி நீங்கள் என் தாய்மார்கள். நான் உங்களுடைய புத்திரன். நான் செய்யத் தக்கதைக் கட்டளை யிடுங்கள் என்றார் உலகத்துக்கு முதன்மையான மாதருஸ்தானத்தை எங்களுக்குக் கொடுத்தருள வேண்டும். என்றால் கொடுக்கப்படுகிற வம்சத்தை நீ அனுபவிக்கக் கூடாது. வேறு என்ன வேண்டும் சொல்லுங்கள் என்றார். முந்திய மாதாக்களை அவர்களுடைய சந்ததி பார்த்தாக்களுடன் நாங்கள் விழுங்க வரம் தரவேண்டு மென்று கேட்டார்கள். ஸ்கந்தர் இது அற்புதமானதா யிருக்கிறது. ஆயினும் உங்களுக்கு வம்ச விருததியைத் தருகிறேன். சாதுக்கள் உங்களைக் கனம் பண்ணுவார்கள். நீங்கள் உலகத்தைக் காப்பாற்றுங்கள் என்றார்.

21—32. பிறகு அந்த மாதாக்கள் ஸ்கந்தரை நோக்கி ஸ்கந்தரே! நீர் க்ஷேமமா யிரும் நாங்கள் ஜனங்களை இரட்சிக்கிறோம். நெடுங்காலம் உம்முடன் வசிக்க விரும்புகிறோம் என்றார்கள். ஜனங்கள் பதினாறு வயதாகிற வரையில் அவர்கள் வெவ்வேறு விதமாக உருவம் மாறுபடும்படி செய்யுங்கள். நான் உங்களுக்குப் பெரிய சக்தியைத் தருகிறேன். உலகத்தில் உள்ளவர்கள் உங்களை வணங்குவார்கள் என்றார பிறகு மனிதருடைய சந்ததிகளைப் பட்சிக்கிறவனான ஒருவன் ஸ்கந்தரிடத்திலிருந்து உற்பத்தியானான். உடனே பசியால் பூமியில் விழுந்தான். உடனே ஸ்கந்தருடைய கிருபையினால் அவனுக்குப் பயங்கரமான தோற்றம் உண்டாயிற்று. அவனுக்கு ஸ்கந்தாபஸ்மார கிரகம் அல்லது சகுனி கிரகம் என்று பேர். பூதனை யென்கிற இராட்சதியும் அந்தக் கிரகத்தில் சேர்ந்தவள். அவள் இரவில் சஞ்சரிக்கிறவள். வெகு பயங்கரமானவள். அவளுக்குச் சீத பூதனி யென்று பேர். பெண்களுடைய கர்ப்பத்தை அழிக்கிறவள். ரேவதி கூட அந்தக் கிரகத்தில் சேர்ந்தவள். அவளும் குழந்தைகளுக்குத் துன்பம் செய்கிறவள். தைத்தியர்களைப் பெற்ற திதி என்பவள் கூட முகமுண்டிகை என்கிற பேருடன் அந்தக் கிரகத்தில் சேர்ந்தவள். அவள் குழந்தைகளுக்குச் சதையை விருத்தியாக்குகிறவள். ஸ்கந்தருடைய குமாரர்களும் குமாரத்திகளும் கூடக் கர்ப்பத்தை அழிக்கிறவர்கள். மேற்சொன்ன பெண்களின் கணவர்களும் கூடக் குழந்தைகளைக் கொண்டு போகிறவர்கள்.

33—47. பசுக்களின் தாயாகிய சுரபி குழந்தைகளை விழுங்காதபடி சகுனி தடுக்கிறவள். நாய்களுக்குத் தாயாகிய சரமீ என்பவள் கர்ப்பத்திலிருந்து குழந்தைகளை அபகரிப்பாள். விருட்சங்களுக்குத் தாயாகிய கரஞ்சிநிலயா என்பவள் சாந்த குணமுள்ளவள். அவள் ஜனங்களிடத்தில் பிரியமுள்ளவளாய் அவர்கள் விரும்பின வரங்களைக் கொடுப்பாள். கரஞ்சி மரத்தடியில் அவளை ஜனங்கள் ஆராதிக்கிறார்கள். இந்தப் பதினெட்டுக் கிரகங்களும் பிரசவ மனையில் பத்து நாள் வசிப்பார்கள். கர்த்துரு பெண்களின் கர்ப்பாசயத்தில் திருட்டுத்தனமாய்ப் புகுந்து சிசுவைப் பட்சிப்பாள். குழந்தைகளுக்கும்

பதிலாக அங்கே சாப்பத்தை வைத்து விடுவாள். கந்தர்வர்களுக்குத் தாயான வள் கர்ப்பாசயத்திலிருந்து குழந்தைகளைக் கொண்டு போய் விடுவாள். அப்ஸரஸ்களின் தாயும் அப்படியே குழந்தைகளைத் திருடுவாள். சமுத்திரத்தின் குமாரத்தியானவள் ஸ்கந்தருடைய செவிலித்தாய். அவள் பேர் லோஹிதாயனி என்று பேர். உலகத்தார் அவளைக் கடம்ப மரத்தில் ஆராதிக்கிறார்கள். ருத்திரன புருஷர்களுக்குத் தேவனா யிருப்பது போல அவள் ஸ்திரீகளுக்குத் தேவதையா யிருக்கிறாள். அவள் பாலருக்குத் தாய். அவள் பல வழியாகப் பல காரியங்களை உத்தேசித்து மனிதர்களால் வணங்கப்படுகிறாள். குழந்தைகள் பதினாறு வயதை அடைகிறவரையில் அவர்களைத் துன்பப்படுத்துகிற கிரகதேவதைகளைச் சொன்னேன். நாம் சொல்லிவந்த மாதாக்களும் அவர்களுடைய கணவர்களும் ஸ்கந்த கிரகங்கள் என்னப்படுகிறார்கள். நீரினாலும், பாலினாலும், பலியாலும் அவர்களை ஆராதித்துச் சாந்தப் படுத்த வேண்டும். இந்த விஷயத்தில் ஸ்கந்தரை உபாசிப்பது விசேஷ பலன் தரும். அவரை வணங்குவதினால் சகல கிரகங்களும் சாந்தமாய்க் குழந்தைகளுக்கு நீண்ட ஆயுளையும், பலத்தையும் கொடுக்கின்றன. மஹேசுவரனை வணங்கி, மனிதர்களுக்குப் பதினாறு வயது வரையில் துன்பத்தை உண்டாக்குகிற கிரகங்களைச் சொல்வேன் என்று மார்க்கண்டேயர் சொல்லுகிறார்.

48—54. தூக்கத்தில் அல்லது நித்திரையில் ஏதாவது ஒரு தேவதையைப் பார்த்துப் பைத்தியம் உண்டானால் அந்தக் கிரகத்துக்கு உன்மாத கிரகமென்று பேர். நித்திரையில் அல்லது ஜாக்கிரத்தில் பிதிர்க்களைக் கண்டு பைத்தியம் பிடித்தால் அதற்குப் பிதிர்க்கிரகம் என்று பேர். சித்தர்களைத் தூஷித்துப் பைத்தியம் பிடித்தால் அதற்குச் சித்தக் கிரகம் என்று பேர். புஷ்பங்களை முகருவதாலும், ஆகாரத்தை ருசிப் பார்ப்பதாலும் மதிமயக்கம் உண்டானால் அது இராட்சத கிரகத்தால் வருகிறது. கந்தர்வன் சரீரத்தில் புகுந்து புத்தி மயங்கச் செய்தால் அது கந்தர்வ கிரகத்தின் செய்கை. பிசாசுகளால் உண்டானால் அதற்குப் பிசாச கிரகம் என்று பேர். யட்சர்களால் உண்டானால் அதற்கு யட்ச கிரகம் என்று பேர். எல்லாக் கிரகங்களும் மூன்று பகுதியாகப் பிரிக்கப் பட்டுள்ளன. ஆகாரத்தை விரும்புகிறவைகளும், விநோத விளையாட்டை விரும்புகிறவைகளும், சுகானுபவங்களை விரும்புகிறவைகளுமாம். எழுபது வயது வரையும் பீடிக்கின்றன. அதற்கு மேல் முதிர்ந்த பருவத்தில் ஜ்வரமாகப் பீடிக்கின்றன இந்திரியங்களை அடக்கினவனும், பரிசுத்தனாயுள்ளவனும், பக்தியுள்ளவனும் இவைகளால் வாதைப்படுவதில்லை. தெய்வ பக்தியுள்ளவனும், சிவனை ஆராதிக்கிறவனும், இந்தக் கிரகங்களால் வருந்துவதில்லை. இவைகளே மனிதர்களைப் பீடிக்கும் கிரகங்களாம்.

## 231-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—18. ஸ்கந்தா, மாதாக்கள் எல்லாரையும் வரம் கொடுத்துத் திருப்தி செய்வித்த பின் சுவாகாதேவி அவரிடம் வந்து, நீர் என்னுடைய புத்திரர் உமது கருணை யெனக்கு வேண்டும் என்றாள். ஸ்கந்தர் என்ன விதமான அன்பு செய்ய வேண்டுமென்று கேட்க, அவள் சொல்லுகிறாள். நான் தட்சனுடைய புத்திரி. என் பேர் சுவாஹா. நான் சிறு வயது முதல் அக்கினி தேவன் மேல் ஆசை கொண்டிருக்கிறேன். அவன் இன்னமும் என்னை அறிய மாட்டான் நான் அவனுடன் எப்போதும் கூடி வசிக்க விரும்புகிறேன் என்றாள். அதைக் கேட்ட ஸ்கந்தர் இது முதலாகப் பிராமணர்கள் அக்கினியில் ஆகுதி கொடுக்கிறபோது உன் பேரையும் சேர்த்து ஓதுவார்கள். அதனால் அக்கினிதேவன் எப்போதும் உன்னுடன் கூடி இருப்பான் என்றார். அதன் பிறகு அக்கினிதேவன் அவளுடன்கூடி வசித்தான். அவளும் ஸ்கந்தரை மகிமைப்படுத்தினாள். பிறகு பிரமதேவர் ஸ்கந்தரை நோக்கிச் சிவபெருமான் அக்கினி தேவன் சுவாஹாதேவி இவர்களிருவரிடத்திலுமிருந்து உம்மை உற்பத்தி செய்தார். ஆகையால் நீர் அவரிடம் போய்ச் சேரும் என்றார். பூர்வத்தில் சிவவீரியம் பார்வதியின் கர்ப்பாசயத்தில் விழுந்தது. அதில் சிறிது இந்த மலைமேல் விழுந்தது. அதிலிருந்து ஒரு புருஷனும் ஒரு பெண்ணும் உண்டானார்கள், அவர்களுக்கு முஞ்சகன், முஞ்சகி என்றுபேர். இன்னும்கொஞ்சம் செங்கடலிலும், பூமியிலும் விருட்சங்களிலும் விழுந்தது. இப்படிச் சிவ வீரியம் ஐந்து இடங்களில் விழுந்தது. அவைகளினால் ஸ்கந்த கணங்களில் பாதி உண்டாயின என்றார். இதைக் கேட்ட ஸ்கந்தர் பார்வதி பரமேசுவரரிடம் போய் அவரை வணங்கினார். முன் சொன்ன ஐந்து இடங்களில் பிறந்த கணங்கள் ஐசுவரியத்தையும், ஆபத்திலிருந்து நீங்குவதையும் வேண்டுகிறவர்கள் தங்களை வணங்க வேண்டுமென்று விரும்பினார்கள். குழந்தைகளின் க்ஷேமத்தை விரும்புகிறவன் சிவனுக்குப் பிறந்த முஞ்சன் முஞ்சகி என்பவர்களை வணங்க வேண்டும். ஸ்கந்தர் மணியையும் கொடியையும் பெற்றதைச் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லுகிறார்.

19—62. ஐராவதத்துக்குச் சொந்தமான இரண்டு மணிகளுண்டு அவைகளுக்கு வைஜயந்தம் என்று பேர். அவைகளில் ஒன்று ஸ்கந்தருக்கும் மற்றொன்று விசாகருக்கும் கொடுக்கப்பட்டது. அவர்களுடைய தேரின் மேல் கட்டின கொடிகள் செந்நிற முடையன. ஸ்கந்தர் தேவர்களால் கொடுக்கப்பட்ட அவற்றை வைத்துக்கொண்டு விளையாடுவார். அப்போது பூதப் படைகள் சூழ்ந்திருக்கும். இலட்சுமி அவருடன் கூட இருப்பாள். அந்த மலையும் சூரியனுடன் கூடின மந்தராசலத்தைப் போல விளங்கிற்று. சுவேத பர்வதம் பல வகைக் காடுகளாலும், பசு பட்சிகளாலும் நிறைந்தது. இடி முழக்கம் போன்று

தொனியை யுடைய தேவர்களாலும் தேவரிஷிகளாலும் நிறைந்திருக்கும். கந்தர்வர்கள் இனிமையாய்ப்பாடிக்கொண்டிருப்பார்கள். அப்ஸரஸ்கள் பல வகையான நடனங்களைச் செய்வார்கள். இந்திரன் முதலிய தேவர்கள் ஸ்கந்தருடைய கிருபா நோக்கததால் வியாதியற்று மகிழ்ச்சியா யிருந்தார்கள். ஸ்கந்தருக்குச் சேனாபதி பட்டம் கட்டின பிறகு பார்வதியுடன் பரமேசுவரர் ஆயிரம் சிங்கங்கள் பூண்ட தேரின்மேல் சூரியனைப் போல ஜ்வலித்துக் கொண்டு அங்கே வந்து சேர்ந்தார். குஹ்யகர் சூழ்ந்துவரக் குபேரன் பரமசிவனுக்கு முன்னாலே வந்தான். தேவர்கள் எல்லாரும் சூழத தேவேந்திரன் ஐராவதத்தின்மேல் ஏறிக்கொண்டு வந்தான். யட்சர்களும் இராட்சதர்களும் தேவர்களும் பரமசிவனுடைய் வலது புறத்தில் இருந்தார்கள். எமதர்மராஜன் மிருத்தியுவுடன் கூடச்சேர்ந்து பரமசிவனைத தொடர்ந்தான். வருணன் சகல ஜல ஜந்துக்களுடனும் வந்தான். கொடி, குடைகளும், சூலம், சக்தி முதலியவைகளும் கொண்டுவரப்பட்டன. ரிஷிகள் சுவரக குடுக்கைகளையும், தண்டங்களையும் தரித்துக் கொண்டு வந்தார்கள். சிவனுடைய இரதம் இவைகளுக்குப் பின்னாலே வந்தது. பிருகு அங்கிரா முதலிய முனிவர்கள் தேவர்களை மகிழ்வித்துக் கொண்டு வந்தார்கள். ரிஷிகள், தேவர்கள், கந்தர்வர்கள், உரகர்கள், தடாகங்கள், நதிகள், அப்ஸரஸ்கள், நட்சத்திரங்கள், கிரகங்கள், தேவ குமாரர்கள், தேவஸ்திரீகள், இவர்கள் எல்லாரும் பரமசிவன் மேலே மலர்மாரி பெய்து கொண்டு வந்தார்கள். பாஜன்யனும் சிவனை வணங்கிக் கொண்டு கூடவே வந்தான். சந்திரன் குடை பிடித்துக் கொண்டு வந்தான். இந்திரன் தேவரிஷிகளுடன் கூடிப் பரமசிவன் புகழைப் பாடிக் கொண்டு வந்தான். கௌரி, வித்தியா, கந்தாரி, கேசினி, மித்திரா, சாவித்திரி முதலிய மாதாக்கள் பார்வதியைச் சூழ்ந்து வந்தார்கள். இந்திரன் முதலிய தேவர்கள் தங்கள் பரிவாரத்துடன் சிவ பணிவிடைகளைச் செய்து கொண்டு வந்தான். இராட்சதர்கள் கொடிகளை யெடுத்துக்கொண்டு சேனைகளுக்கு முன்னாலே சென்றார்கள். பரமசிவனானவர் தேவ சேனைகளுடன் இவ்வாறு போகும்போது ஸ்கந்தரும் கூடத் தொடர்ந்து சென்றார். பரமசிவன் ஸ்கந்தரை நோக்கித் தேவர்களுடைய ஏழாவது படையை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள் என்றார். ஸ்கந்தர் அப்படியே ஆகட்டும்; இன்னம் என்ன கட்டளை யிடுகிறீர்கள் என்றார். சிவன், நான் உன் வேலைகளைப் பார்க்கிறேன். நீ என்னிடததில் பிரியமாயிருக்கிறதே உனக்கு நன்மை என்றார். பரமசிவன் இப்படிச் சொல்லிப் போனபின் அநேக பயங்கரமானவைகள் நேரிட்டன. ஆகாசம் நட்சத்திரங்களுடன் பிரகாசித்தது. பூமி அசையத் தொடங்கிற்று. உலகமெங்கும் இருள் மூடிக் கொண்டது. இப்படிப்பட்ட பயங்கரத்தைக் கண்டு தேவ தானவர்களுடன் பார்வதி பரமேசுவரர்கள் திடுக்கிட்டார்கள். கொஞ்ச நேரத்துக் கெல்லாம் மலைகளைப்போலப் பெருத்து மேகம் போலக்கறுத்த சரீரத்தை யுடைய இராட்சதர்கள் சர்வாயுதங்களுடன் போருக்கு அறை கூவிக்கொண்டு வந்தார்கள்.

63—81. கொஞ்ச நேரத்துக்குள் அந்த இராட்சதர்கள் நெருங்கி வந்து சரமாரி பெய்ய ஆரம்பித்தார்கள். பீரங்கிக் குண்டுகள், கற்கள், கத்திகள், கதைகள் முதலிய ஆயுதங்களையும் மழைபோலச் சொரிந்தார்கள். இதனால் தேவர் படையில் பெருங் கலக்க முண்டாயிற்று. அவருக்கு உதவி செய்வார் யாருமில்லை. காட்டுத் தீயால் காடு அழிவதைப் போலத் தேவர்கள் மடிந்து விழுந்தார்கள். இந்திரன் தன் படைகளுக்குத் தைரியம் சொல்லி, நீங்கள் தைரியம் விடாமலிருங்கள். பயப்படாதீர்கள். உங்களுடைய ஆயுதங்களை யெடுத்துக் கொண்டு போர் செய்து தானவர்களை வெல்லுங்கள். உங்களை ஜயிக்க வல்லவர்கள் யார் இருக்கிறார்கள். நான் உங்களுக்குத் தலைமையாக இருந்து நடத்துகிறேன் வாருங்கள் என்று கூறி அவர்களைத் தேற்றினான். இப்படி இந்திரனால் மகிழ்விக்கப்பட்ட தேவசேனைகள் தானவர்களை எதிர்த்து யுத்தம் செய்தார்கள். மருத்துக்களும், சாத்தியர்களும் அஷ்ட வசுக்களும் தானவர்களை யெதிர்த்து, பாணங்களைப் பிரயோகித்தார்கள். அந்தப் பாணங்கள் தானவர்களுடைய சரீரத்தைச் சல்லடை போலத் துளைத்து விட்டன. அந்த அம்புகள் அவர்களுடைய இரத்தத்தைக் குடித்து விட்டுச் சர்ப்பங்களைப் போலக் கீழே விழுந்தன. அநேக தானவர்கள் யுத்த களத்தில் மடிந்து விழுந்த பின், அந்த அரக்கர் படை ஓட்டம் பிடித்தன. தேவர்கள் ஜயபேரிகை முழக்கினார்கள். இப்படித் தேவர்களுக்கும் தானவர்களுக்கும் பெரிய யுத்தம் நடந்தது. யுத்தகளம் முழுவதும் இரத்தமும் மாம்சமும் நிறைந்தது. ஒரு சமையம் தேவர்கள் மேற்கொள்வார்கள். ஒரு சமையம் தானவர்கள் ஜயிப்பார்கள். இரு பக்கங்களிலும் ரணபேரிகள் முதலிய முழங்கின. போர் வீரர்கள் சிங்கங்களைப் போலக் கர்ஜனை செய்தார்கள்.

82—94. இதற்கு நடுவில் மகிஷன் என்ற ஒரு அசுரன் ஒரு பர்வதத்தைக் கையில் ஏந்திக் கொண்டு தைத்தியர்கள் சூழ வந்தான். அவனைப் பார்த்தவுடனே தேவர்கள் பயந்து ஓட்டம் பிடித்தார்கள். மகிஷன் அந்த மலையைத் தேவர்கள் மேல் எறிந்தான் ஒரு அடியில் பதினாயிரம் தேவர்களைக் கொன்றான். சிங்கம் மானகளைப் பயமுறுத்துகிறது போலக் கர்ஜனை செய்து தேவர்களைப் பயமுறுத்தினான். இந்திரன் முதலிய தேவர்கள் மகிஷனைக் கண்டு பயந்து ஓடினார்கள். ஆயுதம், கொடி முதலியவற்றை எறிந்து விட்டு ஓடினார்கள். தானவர்கள் சிவன் தேர்மேல் பாய்ந்து அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்கள். ஆகாயமும் பூமியும் பயந்து நடுங்கின. ரிஷிகள் களைத்தார்கள். தைத்தியர்கள் வென்றார்கள். ஜயம் பெற்ற தைத்தியர்கள் சந்தோஷத்தினால் ஆரவாரித்தார்கள். அப்போது சிவன் ஸ்கந்தரை நினைத்துக் கொண்டு அந்த அரக்கர்கள் மேல் தமது ஆயுதத்தைப் பிரயோகித்தார். மகிஷாசுரன் சிவனுடைய தேரைப் பிடித்துக் கொண்டு தேவர்கள் நடுங்கும் படியும், தானவர்கள் மகிழும்படியும் இரைந்து கர்ஜித்தான். அப்போது ஸ்கந்தர் சிவப்பு வஸ்திரம் தரித்து, சிவந்த மாலை யணிந்துகொண்டு, மற்ற ஆபரணங்களையும் புனைந்து கொண்டு, சொர்ணமயமான ஆயுதங்களைத் தரித்துக்

கொண்டு அங்கே வந்து சேர்ந்தார். ஸ்கந்தர் தேரின்மேல் சூரியனைப் போல விளங்கினார். அவருடைய முகம் கோபத்தால் ஜ்வலித்தது. அவரைக் கண்டவுடன் தானவ சேனைகள் பயந்து ஓடின.

95—115. ஸ்கந்தர் தமது சக்தி வேலை எவி மஹிஷன் தலையை வெட்டித் தள்ளினார். மஹிஷன் மடிந்து விழுந்தான். அவன் சரீரம் பதினாறு யோசனை தூரம் நீண்டிருந்தது. உத்தர குருவில் வசிப்பவர்கள் இப்பொழுது கஷ்டமின்றிச் சஞ்சரிக்கலானார்கள். ஸ்கந்தருடைய சக்தி எவுந்தோறும் தானவர்களைக் கொன்றுவிட்டு ஸ்கந்தரிடம் வந்து சேர்ந்தது. ஒரு க்ஷணத்துக்கு ஆயிரம் அரக்கர்களைக் கொன்றார். மஹாதேவா அநேகரைக் கொன்றார். ஸ்கந்தருடைய பரிவாரத்தார் பிரசித்தமா யிருந்த அரக்கர்களைக் கொன்றார்கள். அந்த இராட்சதர்களுடைய மாமசத்தைத் தின்று இரத்தத்தைக் குடித்தார்கள். சூரியன் இருட்டைத் தொலைப்பது போல ஸ்கந்தர் தானவர்களைச் சங்கரித்தார். அக்கினி மரங்களை யொப்பது போலவும், காற்று மேகங்களை அழிப்பது போலவும் தானவர்களை அழித்தார். பிறகு ஸ்கந்தர் சிவனை வணங்கினார். தேவர்கள் ஸ்கந்தரை வணங்கினார்கள். சூரியன் தன் கிரணங்களால் விளங்குவது போல ஸ்கந்தர் தமது மகிமையால் பிரகாசித்தார். தேவேந்திரன் சிவனுக்கு எதிரில் ஸ்கந்தரை நோக்கி பராக்கிரமசாலியான நீர் இன்று மஹிஷாசுரனைக் கொன்று விட்டீர். அவன் பிரமதேவனிடம் பெற்ற வரத்தினால் தேவர்களைத் துரும்பைப் போல எண்ணி யிருந்தான். எல்லாரையும் துன்பப் படுத்தினான். நீர் அவனைப் போல அநேகமாயிரம் தானவர்களைச் சங்கரித்தீர். உமது பரிவாரத்தார் அநேகமாயிரம் பேர்களை விழுங்கி விட்டார்கள். நீரும் சிவனைப் போல யுத்தத்தில் ஒருவராலும் ஜயிக்கப்படாதவர். இது தான் உலகத்தில் உமது பிரபாவம் பரவும்படியான முதல் செய்கை. தேவர்கள் இனி உமக்கு அடங்கி யிருப்பார்கள். இப்படிச் சொன்ன பின் இந்திரன் சிவபெருமானிடம் விடை பெற்றுக் கொண்டு தேவர்களுடன் தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்தான். பிறகு பரமசிவன் பத்திரவடத்துக்குப் போனார். தேவர்களை நோக்கி நீங்கள் எல்லாரும் எனக்கு மரியாதை செய்வது போல ஸ்கந்தருக்கு மரியாதை செய்யுங்கள் என்று கட்டளை யிட்டார். மூன்று உலகங்களையும் ஒரே நாளில் ஜயித்த ஸ்கந்தரை மஹரிஷிகள் வணங்கினார்கள். இந்த ஸ்கந்த சரித்திரத்தைப் படிக்கிறவன் உலகத்தில் க்ஷேமமாய் வாழ்வான். தேகாந்தத்தில் ஸ்கந்த உலகம் போய்ச் சேர்வான்,

---

## 232-வது அத்தியாயம்.

மார்க்கண்டேய ஸமாஸ்ய பர்வத் தொடர்ச்சி.

1—10. ஆக்கினேயஃ ஸ்கந்த: தீப்தகீர்த்தி: அநாமய: மயூரகேதனஃ தர்மாத்ம: பூதேச: மஹிஷார்த்திதஃ காமஜித், காமதஃ காந்தஃ ஸத்யவாக், புவ,

ணேசுர: சிசு: சீக்ரா, சுசி: சண்ட: தீப்தவர்ண: சுபானன: அமோக: ரௌத்ர: ப்ரியஃ சந்த்ரானன: தீப்தசக்தி: ப்ரசாந்தாத்மாஃ கத்ரகருத்: கூடமோஹன: ஷஷ்டிப்ரியஃ பவித்ர: மாதருவத்ஸல: கன்யாபர்த்தா. விபக்தஃ ஸ்வாஹேய: ரேவதீஸுத: ப்ரபுஃ நேதா, விசாகஃ நைகமேயஃ ஸுதுச்சர: ஸீவ்ரத: லளித; பாலக்க்ரீட நகப்ரியஃ கசாரிஃ ப்ரமசாரி: சூர: சரவணோத்பவ: விச்வாமித்ரப்ரிய: தேவஸேநாப்ரிய: வாஸுதேவப்ரிய. ப்ரியக்ருது; என்பவைகள் ஸ்கந்தருடைய திருநாமங்களாம். இவைகளைப் பக்தி சிரத்தையுடன் படிக்கிறவன் ஐசுவரியம், கீர்த்தி யிவைகளைப் பெற்று வாழ்ந்து, சொர்க்கத்தையும் அடைவான்.

11—22. பிறகு மாக்கண்டேயா யுதிஷ்டிரனைப் பார்த்து, ஸ்கந்தருடைய கீர்த்தியை என் சக்திக் கெட்டினமட்டில் செய்யுளாகச் செய்திருக்கிறேன் அதைக் கேள். நீர் பிராமணோத்தமன்; ப்ரமஜா; வேதாாத்தத்தை விளக்குகிறவன்; ப்ரமேசன்; பரமப்ரியன்; ப்ரமவரிஷ்டன்; ப்ரமாகயன்; ப்ரமநேதா; நீர்ஸ்வாஹா; நீர்ஸ்வதா; வருஷம; ரிது; சுக்லபட்சம்; க்ருஷண பட்சம்; நீரே திசை; உம்முடைய கண்களும் முகங்களும் தாமரைமலர் போன்றுள்ளன. உமக்கு ஆயிரம் கைகள்: ஆயிரம் வாய்கள்; நீரே லோக பாலகா, பரமேஷ்டி; தேவாசுரர்களை உற்பத்தியாக்கினவர்; நீா தேவசேனாபதி; பிரசண்டர்: பிரபு; விபு; சத்துருக்களைச சங்கரிப்பவர்; அநேகமாயிரம் சொரூபங்களை யுடையவர்; நீர் பூமி; ஸஹஸ்ர துஷ்டி; நீர் அநே சொரூபங்களை யுடையவராய் உலக பதார்த்தங்களைப் புஜிக்கிறீர், உமக்கு அநேக சொரூபம்; அநேகம் சிரசுகள்; அநேகம் கைகள்: அநேகம் கால்கள். நீர் பலமுடையவா; கங்காசுதா; ஸ்வாஹா புத்திரர், பிருதிவி குமாரர்; க்ருத்திகாசுதர்; நீர் ஆறுசிரசுகளை யுடையவர்; இச்சையினால் அநேக ரூபங்களை யெடுதது கொள்பவா; நீா கோழியுடன் விளையாடுகிறீர்; நீர் தட்சர்; சந்திரமா; மருத்து; தாமம்; இமயமலை; நீரே இந்திரன்; நீர் சகல பிராணிகளுக்கும் முன்னாலே உள்ளவர்; தேவாகளுக்குத் தேவன்; வில் வீரர்; மோட்சம் அளிப்பவர்; தானவ சங்காரர், தேவர்களை வெல்பவர்; சூட்சும ரூபியா யுள்ளவர்; எல்லாவற்றுக்கும் மூலமானவர்; நீர் பிரமத்தை யறிவீர்; நீரே பிரமா; உமது மகிமையாலேயே உலகம் விளங்குகிறது; நீரே லோக கர்த்தா; பன்னிரு கண்களை புடையவரே! பன்னிரு புஜங்களை யுடையவரே! என் சக்திக் கெட்டினமட்டும் உம்மைத் துதித்தேன். இதற்குமேல் எனக்குத் தெரியாது. ஸ்கந்தருடைய உற்பத்தியைப் படிக்கிறவன்; பிராமணர்களுக்குப் படித்துக் காட்டுகிறவன், பிராமணர்களிடத்தில் கேட்கிறவன், சந்தானம் செல்வங்களை யடைந்து, அந்தத்தில் ஸ்கந்தருலகத்தை அடைவார்கள்.

---

## 233-வது அத்தியாயம்

### திரௌபதி சத்தியபாமா ஸம்வாத பர்வம்.

1—9. வைசம்பாயனர் ஜனமேஜயனை நோக்கி மஹாராஜனே! சத்தியபாமையும் திரௌபதியும் பாண்டவர்களும் சுற்றறிந்த பிராமணர்களும் உட்

கார்த்திருக்கிற இடத்தை விட்டுப் போய், ஒரு ஏகாந்த ஸ்தானத்தில் உட்கார்ந்து கொண்டார்கள். நெடு நாள் பிரிந்திருந்தவர்கள் ஆதலால் ஒருவரோடொருவர் அளவளாவி மன மகிழ்ச்சியுடன் பேசிக் கொண்டிருந்தார்கள். யுதிஷ்டிரர் துரியோதனன் இவர்களைப் பற்றிப் பேசினார்கள். கிருஷ்ணருடைய தேவியான சத்தியபாமை திரௌபதியை நோக்கி, நீ எப்படி இந்தப் பாண்டவர்களுடன் வசிக்கிறாய்! அவர்கள் யௌவனர்கள், தைரியசாலிகள், சரீர பலமுடையவர்கள், மன்மதனைப் போல அழகுள்ளவர்கள், அவர்கள் ஒருவரோடு ஒருவர் சச்சரவு செய்வதில்லை. சாதக பட்சி சந்திரனை நோக்குவது போலப் பாண்டவர்கள் உனது முகத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை அடக்கி ஆள்வதற்கு என்ன விரதம் செய்திருக்கிறாய்? தந்திரம் அல்லது மந்திரம், மருந்து, அஞ்சனம் வைத்துக்கொண்டிருக்கிறாய்? அதை நான் கற்றுக்கொண்டு கிருஷ்ணனை அடக்கிக்கொள்ள விரும்புகிறேன், 'என்று சத்தியபாமை இவ்வாறு சொல்லி முடித்தாள். திரௌபதி சொல்லுகிறாள்.

10—18. ஏ சத்தியபாமா! நீ கிருஷ்ணருடைய முக்கிய பத்தினியாயிருக்கிறாய். ஈன ஸ்திரீகளைப் போல நீ பேசத் தகாது. நீ சொன்ன உபாயங்கள் துஷ்ட ஸ்திரீகளால் செய்யப்படுவன. நான் உனக்கு என்ன பதில் சொல்வேன்? இனி இப்படிக் கேளாதே. தன் மனைவி மந்திரம் மருந்துகளில் பழகினவள் என்று அறிந்த புருஷன் அன்று முதல் பாம்பைக் கண்டுப் பயப்படுவது போல மனைவியைக் கண்டு பயப்படுவான். பயத்தினால் வருந்துகிற மனிதனுக்குச் சந்தோஷம் இருக்குமா? சந்தோஷமில்லாதவன் எப்படிச் சுகமாயிருப்பான்? ஒரு பெண் மந்திரங்களினால் தன் புருஷனை ஒரு போதும் வசப்படுத்த முடியாது. சத்துருக்களினாலே கொடிய வியாதிகள் உண்டாக்கப்படுகின்றன என்று கேள்விப் பட்டிருக்கிறோம். ஒருவனைக் கொல்ல விரும்புகிறவர்கள் வெகுமதி அனுப்புவது போல அவனுக்கு விஷத்தை அனுப்புகிறார்கள். அதை உண்டாலும் மேல் தடவினாலும் நிச்சயமாகவே சீக்கிரத்தில் மடிவான். ஸ்திரீகள் இப்படிப்பட்ட ஔஷதங்களைத் தங்கள் கணவனுக்குக் கொடுப்பதால் அவனுக்கு மகோதரம், குஷ்டம், தளர்ச்சி, பலக்ஷயம், சித்தப்பிரமை, குருட்டுத் தனம், செவிடு முதலிய வியாதிகள் உண்டாகின்றன. பாவ வழியில் நடக்கிற இப்படிப்பட்ட துஷ்டப் பெண்கள் சில சமையம் தங்களுடைய கணவர்களுக்கு ஹானியைத் தேடுகிறார்கள். ஆனால் நல்ல ஸ்திரீகள் தங்கள் புருஷனுக்குத் துன்பஞ் செய்ய மாட்டார்கள், ஏ புகழுள்ள சத்தியபாமா! மஹாத்மாக்களான பாண்டவர்களிடத்தில் நான நடந்துகொள்கிற மார்க்கத்தைச் சொல்லுகிறேன் கேள்.

19—29. வஞ்சனையில்லாமல், ஆசையையும் கோபத்தையும் ஒழித்துப் பாண்டவர்களிடத்திலும், அவர்களுடைய மற்றைய பத்தினிகளிடத்திலும் பக்தி விசுவாசத்துடன் பணிவிடை செய்வேன். எரிச்சலை விட்டு உள்ளன்போடும் வெறுப்பு இல்லாமலும் பணிவிடை செய்வேன். நான் எப்போதும் என் கணவர்

களுடைய பணிவிடைகளையே செய்வேன். கெட்ட வசனங்களையும் பொய்யை யும் விட்டு, அநீதியாய் நடக்க மாட்டேன். அவர்களுடைய கண் பார்வையால் உள்ளக் குறிப்பை அறிந்து அவர்களுக்குப் பணிவிடை செய்வேன். சூரியனை யும் அக்கினியையும் போலப் பிரகாசிக்கிறவர்களும், சந்திரனைப் போல அழகு ள்ளவர்களும், பயங்கரமான சக்தியும் மகிமையும் உள்ளவர்களும், சத்துருக்க ளைச் சங்கரிக்கிறவர்களுமான பாண்டவர்களுக்கு வணங்கிப் பணிவிடை செய் வேன். தேவ கந்தர்வர்களானாலும், யௌவனம் அல்லது அழகுள்ளவர்க ளானாலும், ஐசுவரியவான்களானாலும், சர்வாபரணங்களையும் பூண்டிருந்தாலும், என் மனம் அவர்களை விரும்புவதில்லை. என் கணவர்கள் ஸ்நானம் செய்து புஜி த்து நித்திரை செய்கிறவரைக்கும் நான் குளிப்பதுமில்லை. நான் புஜிப்பதுமில்லை. நான் தூங்குவதுமில்லை. வேலைக்காரர்கள் வேலைக்காரிகள் முதலியோர்களுக்கு முன்னாலேயும் நான் குளித்துப் புஜித்து, நித்திரை செய்யமாட்டேன். அவர் கள் வெளியிலிருந்து வருகிறபோது நான் சீக்கிரமாக எழுந்திருந்து போய் வணங்கி, அவர்களுக்கு நீர், ஆசனம் முதலியன கொடுத்து உபசரிப்பேன். வீட் டையும், பாத்திரங்களையும், போஜன பதார்த்தங்களையும் நான் எப்போதும் சுத்தமாய் வைத்துக் கொண்டிருப்பேன். போஜனத்தை ஜாக்கிரதை செய்து காலம் தவறாமல் அவர்களுக்கு அமுதூட்டுவேன். நான் ஒருபோதும் கோப மா யிருப்பதில்லை. கொடுஞ் சொற்களைப் பேசுவதில்லை. துஷ்டப் பெண்க ளின் செய்கைகளை நான் ஒருபோதும் செய்வதில்லை. சோம்பி யிருப்ப தில்லை. செய்ய வேண்டியவைகளைத் தடையின்றிச் செய்வேன். பரிகாச வேளையில் தவிர மற்ற வேளைகளில் நான் சிரிப்பதில்லை வாசற்படியில் நெடு நேரம் நிற்பதில்லை. வீட்டுத் தோட்டத்திலாவது, மற்ற இடத்திலாவது நான் அதிக நேரம் நிற்பதில்லை எப்போதும் இரைந்து சிரிப்பதில்லை. சிற்றின் பத்தில் அதிகப் பற்று வைப்பதில்லை. கோபம் உண்டாக்கும் விஷயத்தை யான் செய்வதில்லை. ஏ சத்தியபாமா! நான் எப்போதும் பாண்டவர்களுக் குப் பணிவிடை செய்வேன்.

30—39 நான் என் கணவர்களைப் பிரிந்திருக்கப் பிரியப்படமாட்டேன். என் கணவர்கள் சுற்றத்தார் வீட்டுக்குப் போகும்போது புஷ்பங்களையும் வா சனை வஸ்துக்களையும் கொடுத்து அனுப்புவேன். அப்போது நான் தவநிலை யிலிருப்பேன். என் கணவர்கள் பானம்பண்ண விருப்பதையும் உண்ண விருப்பதையும் நான் அனுபவிப்பதில்லை. அழகானவளே! ஆபரணங்களைத் தரித்துக் கொண்டு, அடக்கமுள்ளவளாய்க் கணவர்கள் சொன்னபடி பக்தி யுடன் நடப்பேன். அவர்களுடைய க்ஷேமத்தையே யோசிப்பேன். என் உறவு முறையாரிடத்தில் எப்படி நடந்து கொள்ளும்படி என் மாமியார் எனக்குச் சொல்லி யிருக்கிறாளோ அதன்படியே நடப்பேன். பிட்சையிடுவதிலும், தெய்வ வணக்கத்திலும், பிதிரு கிருத்தியங்களிலும், புண்ணிய தினங்களிலும், பிதிர்க் களை உத்தேசித்துச் சமைப்பதிலும், அதிதிகளை உபசரிப்பதிலும், நடந்து கொ

ள்ள வேண்டியவைகளெல்லாம் எனக்குத் தெரியும். கொஞ்சங்கூடச் சோம்பலும், அசட்டையுமில்லாமல் என்கடமைகளைச் செய்வதிலேயே பற்றுள்ளவளாயிருப்பேன். வணக்கமும் நடக்கவேண்டிய விதிகளும் ஆகிய இவைகளில் மனதை ஸ்திரமாய் சிறந்த பெருந்தன்மையும், சத்தியமும், தர்மமும் உள்ளவர்களான என் கணவர்களுக்குப் பணிவிடை புரிவேன். தன் கணவனை அடுத்திருப்பதே ஸ்திரீகளுக்கு ஸிரந்தரமான தர்மம் என்பது என் கருத்து. கணவன் மனைவிக்குத் தெய்வம். அவனே அவளுக்கு ஆதரவு. தன் கணவனைத் தவிர ஸ்திரீகளுக்கு வேறு ஆதரவு கிடையாது. அப்படி யிருக்கையில் தன் புருஷனுக்குச் சம்பந்தமில்லாத விஷயத்தை மனைவி யெப்படிச் செய்யலாம்? நித்திரை செய்யும்போதாவது, புஜிக்கும்போதாவது, அலங்காரம் செய்துக் கொள்ளும்போதாவது நான் என் கணவர்கள் மனதுக்கு விரோதமாய் நடப்பதில்லை. என் கணவர்களுடைய இஷ்டப்படியே நடக்கிறேன். என் மாமியாரை நான் ஒருபோதும் குறைவாகப் பேசினதில்லை. ஏ பாக்கியவதியே! என் கணவர்கள் போஷிக்க வேண்டியவர்களை யென்பாரமாகச் செய்துவிட்டார்கள். அவர்கள் அடிக்கடி என்னிடம் வருவார்கள். பாக்கியவதியே! என் கணவர்கள் என்னுடைய பணிவிடையாலும், ஊக்கத்தாலும், வணக்கத்தினாலும் என்னிடம் அடங்கி யிருக்கிறார்கள்.

40—59. என் மாமியார் குந்திதேவியாருக்கு அன்னம் ஆகாரம் வஸ்திரம் இவைகளை நானே கொடுத்து உபசரிப்பேன். எந்த விஷயத்திலும் என் மாமியாரிடம் மனஸ்தாபம் அடையமாட்டேன் பூமிதேவியைப் போலப்பொறுமையுள்ள குந்திதேவியாரிடத்தில் ஒருபோதும் கடின வார்த்தைகளைப் பேசவேமாட்டேன். முன் யுதிஷ்டிரர் அரண்மனையில் எண்ணாயிரம் பிராமணர்கள் தங்கப்பாத்திரத்தில் போஜனம் பண்ணுவார்கள். எண்பதினாயிரம் ஸ்நாதகப் பிராமணர்கள் யுதிஷ்டிரர் அரண்மனையில் போஜனம் செய்வார்கள். ஒவ்வொருவருக்கும் முப்பது பெண்கள் பணிவிடை செய்து கொண்டிருப்பார்கள். இது தவிரப் பதினாயிரம் யோகிகள் உபசரிக்கப்படுவார்கள். இந்தப் பிராமணர்கள் எல்லாரும் வேதாத்தியயனம் செய்வார்கள். நான் தினந்தோறும் அவர்களை வணங்கி அன்ன பான வஸ்திரங்களால் உபசரிப்பேன். பாண்டவர்களுக்கு எண்பதினாயிரம் வேலைக்காரிகளிருப்பார்கள். அவர்கள் எல்லாரும் சிறந்த வஸ்திராபரணங்களால் அலங்கரித்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் ஆடல் பாடல்களில் தேர்ந்தவர்கள். அந்தப் பெண்களுடைய பேர்களும் சொரூபங்களும் எனக்கு நன்றாய்த் தெரியும்! அவர்களுக்குப் பிரியமான உணவு, வஸ்திராபரணம் இவை யின்னவை யென்று எனக்குத் தெரியும். வேண்டாதவைகளும் இன்னவை யென்று எனக்குத் தெரியும். இது தவிர இலட்சம் பணிவிடைப் பெண்கள் உண்டு. அவர்கள் அதிதிகளை உபசரிப்பார்கள். யுதிஷ்டிரர் இந்திரப் பிரஸ்தத்திலிருக்கும்போது இலக்ஷம் யானைகள் அவரைத் தொடர்ந்து வர ஊர் கோலம் வருவார். அவர்களை ஒழுங்குபடுத்துவதும், விதிகளை ஏற்படுத்துவதும் நானே. அவர்களுடைய முறைக

ளைக் கேட்டு விசாரிப்பதும் நானே. அரண்மனையிலுள்ள வேலைக்காரர்கள் வேலைக்காரிகள் எல்லாரையும் எனக்குத் தெரியும். ஆட்டு இடையர்கள், மாட்டு இடையர்கள் எல்லாரும் தெரியும். பாக்கியவதியே அரசனுடைய வருமானமும் செலவும் எனக்குத் தான் தெரியும். பாண்டவர்களுடைய மொத்த வரும்படி யிவ்வளவு என்று எனக்குத் தான் தெரியும். அழகான மாதரசே! பாண்டவர்கள் தங்களுடைய பாரம் எல்லாவற்றையும் என்மேல் சுமத்திவிட்டார்கள். அவர்கள் தர்ம காரியத்தில் பிரவேசித்திருக்கும்போது பொக்கிஷத்தைக் குறையாதபடி பார்த்துக் கொள்வேன். சமுத்திரத்தைப் போலப் பூர்ணமாகவைத்துக்கொண்டிருப்பேன். இந்த வேலைகளெல்லாம் துஷ்ட சித்தமுடையவர்களால் தாங்க முடியாததா யிருந்தாலும், என்னுடைய சுகத்தைக் கவனியாமல் அந்த வேலைகளைக் கவனமாய்ப் பார்த்திருப்பேன். இரவும் பகலும் அலுப்பின்றி வேலை செய்வேன். பாண்டவர்களிடத்தில் எப்போதும் பக்தியாயிருப்பேன். பசி தாகங்களைப் பொறுத்துக் கொண்டு இரவும் பகலும் பாண்டவர்களுக்குப் பணிவிடை செய்வேன். நான் பாண்டவர்கள் எழுந்திருப்பதற்கு முன் படுக்கையை விட்டு எழுந்திருந்து விடுவேன். அவர்கள் தூங்கினபின் தூங்குவேன். சத்தியபாமா! இது எப்போதும் எனக்கு வழக்கம். என் பர்த்தாக்கள் எனக்கு வசப்பட்டிருக்கும்படி நான் செய்வது இவைகளே. துஷ்டப் பெண்களைப் போல மருந்து முதலியவைகளை யிட்டதுமில்லை. அப்படிச் செய்ய ஒருபோதும் நான் விரும்புவதுமில்லை.

60—61. திரௌபதி சொன்ன இந்தத் தர்ம வசனங்களைக் கேட்ட சத்தியபாமை பாஞ்சாலிக்கு மரியாதையுடன் உபசாரம் சொல்லிப் பின் அவளைப் பாகத்துச் சொல்லுகிறாள். பாஞ்சால குமாரத்தியே! யாகசேனீ! நான் தப்பிதமாய்ப் பேசிவிட்டேன். என்னை க்ஷமிக்க வேண்டும். சிநேகிதர்களுக்குள் பரிகாசமும், முன் யோசனை யில்லாதவைகளுமான சம்பாஷணைகள் உண்டாகின்றன என்றாள்.



## 233-வது அத்தியாயம்.

திரௌபதி சத்தியபாமா சம்வாத பர்வத் தொடர்ச்சி.

1—7. திரௌபதி சத்தியபாமையை நோக்கிச் சத்தியபாமா! வஞ்சனை யில்லாமல் உன் கணவனை வசீகரிக்கும் உபாயத்தைச் சொல்லுகிறேன். நீ அதை ஒழுங்காய் அனுசரித்து உன் கணவன் வேறு பெண்களை நாடாதபடி வசீகரித்துக்கொள். சத்தியபாமா! கணவனுக்கு மேலான தெய்வம் யாதொன்றும் கிடையாது. உன்னிடத்தில் பிரியமா யிருக்கிறபோது உன் விருப்பமெல்லாம் நிறைவேறும். கணவன் கோபமா யிருந்தால் எல்லாம் கெட்டுப் போகும். மனைவியானவள் கணவனிடத்திலிருந்து புத்திரர்களைப் பெறுவதும்

துவிரப் பலவிதமான போகங்களை அனுபவிக்கிருள். நீ உன் கணவனிடத்தி லிருந்து அழகான பிக்கைகள், ஆசனங்கள், போர்வைகள், மாலைகள், வாசனை வஸ்துக்கள், புகழ்களை, அடைந்திருக்கிருய். இனி சொர்க்கத்தையும் அடைவாய். ஒரு பெண் இந்த உலகததில் சுலபமாய்ச் சுகத்தை அடையக் கூடாது. பதிவிரதையா யிருக்கிறவள் வெகு துக்கத்துடன் சுகத்தை அடைகிருள். ஆகையால் கிருஷ்ணரைச் சிநேகமாகவும், ஆசையாகவும் வணங்க வேண்டும். துன்பங்களைச் சகிக்க வேண்டும். அவருக்கு அழகிய ஆசனம், சொடு. சிறந்த மாலைகளைச் சாத்து. பலவித வாசனைகளைப் பூசு. சமையத்தை அறிந்து தக்க படி உபசரி. இப்படிச் செய்தால் அவர் தம்மிடத்தில் நீ ஆசையா யிருக்கின் ருய் என்று கருதி அவரும் உன்மேல் அன்பு வைப்பார் உன் கணவன் குரலை வாசற்படியில் கேட்டவுடனே நீ உன் ஆசனத்திலிருந்து எழுந்திரு. அவரை உபசரிக்கச் சித்தமா யிரு. அவரைப் பார்த்ததும் உள்ளே போ உடனே அவருக்கு ஆசனமிட்டுக், கால் கழுவ நீர் கொடு. உன் கணவன் வேலைக்காரி களைப் பார்த்து ஏதாவது செய்யும்படி கட்டளை யிட்டால், நீ உடனே யெழுந் திருந்து அந்த வேலையை உன் கைகளாலேயே செய். நீ உன் மனப் பூர்வ மாக அவருக்குப் பிரியமாய் நடக்கிருய் என்பதை அவர் அறியும்படி நடந்து கொள்.

8—12 உன் கணவன் உன்னிடத்தில் ஏதாவது சொன்ஞல் அதைப் பிறர் அறியும்படி நீ சொல்லாதே. இது மறைக்கத் தக்கதல்ல என்று எண் ணுதே. உன் சக்களத்திகளில் யாராவது இதை உன் கணவரிடம் சொன் ஞல், கிருஷ்ணன் உன்னிடம் வெறுப்பா யிருப்பார். எப்போதும் உன் கண வனுடைய சுகத்தையே சிந்தி. உனக்குச் சக்தியுள்ளவரைக்கும் அவரைப் போஷி. அவருக்கு விருப்பமானதை பக்தியுடன் செய். உன் கணவனுக்கு விரோதமாக இருப்பவர்களைச் சேராமல் விலகியிரு. அவருக்குத் துன்பம் செய்யக் கருதுகிறவர்கள், வஞ்சகர் இவர்களுடனும் கூடாதே. எந்த வகை யிலும் பிறருக்கு மனக்கருத்தை வெளிப்படுத்தாமல் மௌனமாயிரு. உன் புத் திரன் பிரத்யுமனன், சாம்பன் இவர்களிடத்தில் கூட அதிக நேரம்பேசிக்கொ ண்டிராதே. உயர் குலத்தில் பிறந்த பெண்களுடனே மாத்திரம் சிநேகிதம் செய். ஏனென்ருல் அவர்கள் பாபம் அற்றவர்களாகவும், பதிவிரதைகளாகவும் இருப்பார்கள். கோபமுள்ளவர்கள், மதுபானம் பண்ணுகிறவர்கள், பேருண்டி உண்பவர்கள், திருட்டுத்தனமுள்ளவர்கள், துஷ்டர்கள், நிலை யில்லாத புத்தி யுள்ளவர்கள் இவர்களுடைய சிநேகத்தை எவ்வகையிலும் ஒழித்து விடு. இந் தச் செய்கைகள் எப்போதும் புகழத் தக்கவைகள். க்ஷேமத்தைக் கொடுப்ப வைகள். சொர்க்கத்தையும் அளிப்பன ஆகையால் உன் கணவனையே வண ங்கு. உயர்ந்த ஆடைகளையும் ஆபரணங்களையும் அணிந்து கொள். உயர்ந்த வா சனை வஸ்துக்களை அணிந்து கொள். இவ்வகையாக அவரைப் பிரியப்படுத்து என்ருள்.



## 234-வது அத்தியாயம்.

திரௌபதி சத்தியபாமா ஸம்வாத பர்வத் தொடர்ச்சி.

1—13 கிருஷ்ண பகவான் புகழுள்ள பாண்டவர்களிடத்திலும், மார்க் கண்டேயர் முதலிய பிராமணர்களிடத்திலும் அநேக சிறந்த விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். பின்பு எல்லாரிடத்திலும் விடை பெற்றுக் கொண்டு தேரில் ஏறினார் சத்திய பாமைச்குச் சொல்லி அனுப்பினார். சத் தியபாமை திரௌபதியைத் தழுவிக்கொண்டு, பாஞ்சாலீ! உனக்குத் துக்க மும் கவலையும் இல்லாதிருக்கட்டும். இரவில் நீ நித்திரை கொள்ளாமலிருப் பது சரியல்ல. ஏனென்றால் உன் பர்த்தாக்கள் எல்லாரும் தேவர்களுக்குச் சமமானவர்கள். இழந்து போன இராஜ்யத்தைச் சீக்கிரத்தில் மீட்டுக்கொள் வார்கள். கரிய கண்களை யுடைய அழகானவளே! இப்படிப்பட்ட குணங் களையும் நல்ல இலக்கணங்களையும் உடைய நீ நெடுங் காலம் கஷ்டப்பட மாட்டாய். நீ உன் புருஷர்களுடன் இந்தப் பூமியைச் சகல சுகங்களுடனும் அனுபவிப்பாய் என்றும் பகையின்றி யிருப்பாய் என்றும் நான் கேள்விப்பட்டி ருக்கிறேன், துருபதராஜ புத்திரியே! திருதராஷ்டிர குமாரர்கள் எல்லாரும் அழிந்து, பாண்டவர்கள் தங்கள் பழியைத் தீர்த்துக்கொண்ட பின் நீ சுகமாய் வாழ்வாய். யுதிஷ்டிரர் உலகத்தைப் பரிபாலனம் செய்கிறதை நீ நிச்சயமாக வே பார்ப்பாய். கருவத்தினால் புத்தி கெட்டிருப்பவர்களும், நீ இராஜ்யத்தை விட்டு வரும்போது உன்னைப் பார்த்துச் சிரித்தவர்களுமான கௌரவர்களு டைய பத்தினிமார்கள் தங்கள் கணவர்களை இழந்து நிலை தடுமாறுகிறதை நீ நிச்சயமாய்க் கண்டு களிப்பாய். திரௌபதி! நீ துக்கப்படுகிறபோது உன்னை வருத்தப்படுத்தினவர்கள் எல்லாரும் நிச்சயமாகவே எமலோகம் போய் விட் டார்கள் என்று எண்ணிக் கொள்,

14—18 பிரதிவிந்தியன் முதலான உன்னுடைய புத்திரர்கள் எல்லா ரும் வீரர்கள். சர்வாயுதங்களிலும் வல்லவர்கள். அவர்கள் எல்லாரும் துவா ரகையில் அபிமன்யுவுடன் வசிக்கிறார்கள். எல்லாருக்கும் திருப்தி யுண்டாக் கினார்கள். சுபத்திரை அவர்கள் எல்லாரிடத்திலும் க்ஷேமமா யிருக்கிறாள். வெகு பிரியமாய்ப் போஷிக்கிறாள். உன் புதல்வர்களை நீ எப்படிப் பார்ப்பாயோ அதை விட அதிகமாக அவர்களைப் பாதுகாக்கிறாள். உன் புத்திரர்கள் மகிழ்ச்சி யடையும் போது சுபத்திரையும் மகிழ்ந்திருப்பாள். அவர்கள் துயரப்பட் டால் அவளும் துக்கப்படுவாள். பிரத்யும்னனுடைய தாயாரும் உன் புத்திரர் களிடத்தில் வெகு அன்புள்ளவளா யிருக்கிறாள். கிருஷ்ணரும் அவருடைய குமாரர்களும் உன் புத்திரர்களை அன்பாய் நடத்துகிறார்கள். பிரத்யும்னனி டத்தில் எவ்வளவு பிரியமா யிருப்பாரோ அப்படியே உன் புத்திரர்களிடத்தி லும் அன்பாயிருக்கிறார். என்று தகுந்ததும், உண்மை யுள்ளதும், மகிழ்ச்சி தரு வதும், இனிமை யுள்ளதுமான பேச்சுக்களை பேசிவிட்டுக், கிருஷ்ணரிடம் செ

ன்றான். சத்தியபாமை கிருஷ்ணரிடம் போய் அவர் தேரின் மேல் ஏறிக் கொண்டாள். கிருஷ்ணா திரௌபதிக்கு ஆறுதல் சொல்லி விட்டுப், பாண்டவரிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு தமது நகரத்தை நோக்கிச் சென்றார்.



## 235-வது அத்தியாயம்.

### கோஷ யாத்திரா பர்வம்.

1—5 ஜனமேஜயன் வைசம்பாயனரைப் பார்த்து, ஓ பிராமணோத்தமரே! பாண்டவர்கள் காற்றினாலும், மழையினாலும், வெயிலாலும் வருந்தி வனத்தில் வசித்தார்களே! தைத்திய வன ஏரிக்கு வந்தபின் என்ன செய்தார்கள்? என்றார். வைசம்பாயனர், அரசனே! பாண்டவர்கள் தைத்தியவன ஏரியை அடைந்த பின் மனித சஞ்சார மில்லாத இடத்தில் வசித்தார்கள். இன்பமான மலைகள், காடுகள், அநேக நதிகளும், ஓடைகளுமுள்ள பள்ளத்தாக்குகள் முதலிய இடங்களில் சந்தோஷமாகச் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள். ஏரிக் கரையில் தங்கினபோது கற்றுணர்ந்த அநேக தபோ நிஷ்டர்கள் அடிக்கடி பாண்டவர்களிடம் வந்தார்கள். பாண்டவர்களும் மகிமையுள்ள அந்த ரிஷிகளை வெகு மரியாதையுடன் உபசரித்தார்கள். ஒரு நாள் பேசுவதில் உலகப் பிரசித்தி பெற்ற ஒரு பிராமணன் பாண்டவர்களிடம் வந்து கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து பிறகு திருதராஷ்டிர மஹா ராஜனிடம் போனான். திருதராஷ்டிரன் அந்தப் பிராமணனை உபசரித்து ஒரு ஆசனத்தில் உட்காரச் சொன்னான். உட்கார்ந்த பின் பாண்டவர்கள் விருத்தாந்தத்தைச் சொல்லும்படி திருதராஷ்டிரன் கேட்கப் பிராமணன் சொல்லுகிறான்.

6—20 பாண்டவாகள் எல்லாரும் காற்று மழையாலும், வெய்யிலாலும் அடிபட்டு மெலிந்து போயிருக்கிறார்கள். மஹா வீரர்களாகிய பாண்டவர்களைக் கணவர்களாகப் படைத்திருந்தும் பாஞ்சாலி துக்க சாகரத்தில் முழுகித் துக்கப்பட்டுக் கொண்டிருக்கிறாள். மிகவும் மெலிந்திருக்கிறாள் என்றான், இதைக் கேட்டவுடன் திரௌபதி துக்கப்படுகிறதைக் குறித்துத் திருதராஷ்டிரன் மிகவும் துக்கம் அடைந்தான். மனதுக்குள் அளவில்லாத துக்கமுண்டாயிற்று. சரீரம் நடுங்கிற்று. பெருமூச்சு உண்டாயிற்று. தன்னுடையகுற்றத்தினாலேயே பாண்டவர்களுக்கும் திரௌபதிக்கும் இப்படிப்பட்டதுக்கமுண்டாயிற்று என்று வருந்தினான். என்னுடைய புத்திரர்கள் எல்லாருக்கும் மூத்தவனும், சத்தியவந்தனும், பக்தியுள்ளவனும், தர்மிஷ்டனும், பகையற்றவனும், உயர்ந்த பட்டுக்களால் அலங்கரித்த மெத்தைகளில் படுத்து நித்திரை செய்தவனுமாகிய யுதிஷ்டிரன் இப்பொழுது தரையில் படுத்து உறங்குவது என்ன கொடுமை! தினந்தோறும் சூதர்களும் மாகதர்களும் காலையில் வந்து,

அவனுடைய புகழைக் கூறி, இனிய பாடல்களைப் பாடுவார்கள். அதைக் கேட்டுக்கொண்டே யெழுந்திருப்பான். அப்படிப்பட்ட குரு புத்திரனை யுதிஷ்டிரனை யிப்பொழுது பட்சிகள் துயிலெழுப்புகின்றன. பீமசேனன் காற்றாலும் வெய்யிலாலும் வருந்தி எப்படித் தரையில் படுத்து உறங்குகிறான். திரௌபதிக்கு முன்னாலே தன் கோபத்தை அடக்கிக்கொண்டு இந்தத் துக்கங்களை எப்படிச் சகித்துக்கொண்டிருக்கிறான்! துன்பத்தை அறியாத அர்ஜுனன் யுதிஷ்டிரனுக்கு அடங்கித் துன்பத்தைச் சகித்துக்கொண்டிருந்த போதிலும் நான் செய்த குற்றத்தை நினைந்து இரவில் தூங்கவே மாட்டான். தர்மன் பீமன், நகுல சகதேவர்கள், திரௌபதி இவர்கள் துன்பப்படுகிறதைப் பார்த்து அர்ஜுனன் கோபம்கொண்டு, விஷ சர்ப்பத்தைப் போலப் பெரு மூச்சு விட்டுக்கொண்டு நித்திரை பிடியாமல் வருந்திக் கொண்டிருப்பான். துன்பத்தைச் சகிக்காதவர்களும், தேவர்களுக்குச் சமானமானவர்களுமான இரட்டையர்கள் நிச்சயமாகவே தூங்கமாட்டார்கள். தர்மத்தின்படியும் சத்தியத்தின்படியும் பழி தீர்த்துக்கொண்ட பிறகுதான் அவர்கள் தூங்குவார்கள். வாயு புத்திரனை பீமன் வாயுதேவனுக்குச் சமானமான பலமுடையவன். சத்தியம் தவறாத யுதிஷ்டிரனுக்காகவே அவன தன் கோபத்தை அடக்கிக் கொண்டிருக்கிறான் என்பதில் சந்தேகமில்லை. யுத்த வீரர்கள் எல்லாரிலும் மேலான அவன் இப்பொழுது பூமியில் அமைதியாய்ப் படுத்துக் கொண்டிருக்கிறான். தர்மத்தையும் சத்தியத்தையும் கருதி அவன் அடங்கி யிருந்தபோதிலும் என் புத்திரர்களைச் சங்கரிக்கிற எண்ணத்துடனேயே யிருப்பான். துரியோதனன் சூதாட்டத்தில் செய்த வஞ்சனைகளும், யுதிஷ்டிரனை அவமானமாகப் பேசினதும் பீமனுடைய மனதில் நன்றாய்ப் பதிந்திருக்கும். நெருப்பு வைக்கோற்கட்டையும், உலர்ந்த கட்டைகளையும் எரிக்கிறது போலத் துரியோதனனை எரித்து விடக் கருத்துக்கொண்டிருப்பான். தர்ம புத்திரன் ஒருபோதும் பாபச் செய்கைகளைச் செய்யமாட்டான். அர்ஜுனன் தர்ம புத்திரனுக்கு அடங்கி யிருப்பான். வனவாசத்தில் உண்டான துன்பத்தைப் பீமன் மறக்கமாட்டான். அதனால், காற்றினால் நெருப்பு மூண்டு எரிகிறதுபோல அவனுடைய இருதயத்தில் கோபம் மூண்டு எரிந்து கொண்டே யிருக்கும். அந்த வீரன் கோபத்தினால் கைகளைப் பிசைந்துகொண்டும் பயங்கரமாகப் பெரு மூச்சு விட்டுக் கொண்டும் இருக்கிறான். அதனால் அவன் என்னுடைய புத்திரர்கள் பௌத்திரர்கள் எல்லாரையும் எரித்து விடுவான். பீமார்ஜுனர்கள் கோபங் கொண்டால் எமனைப்போல்வார்கள். அவர்கள் இடிகளுக்குச் சமானமான பாணங்களைப் பிரயோகித்துத் தங்கள் சத்துருக்களை யுத்தத்தில் சங்கரிக்கிறார்கள்.

21-31. துரியோதனன், சகுனி கர்ணன், துச்சாதனன் இவர்கள் துஷ்டசித்தமுள்ளவர்களாய்ப், பாண்டவர்களுடைய அரசாட்சியைச் சூதாட்டத்தில் அபகரித்துக் கொண்டார்கள். அவர்கள் மரத்தின்மேலிருக்கிற கொம்புத்தேன் ஒன்றையே கவனிக்கிறார்கள். மரத்தின் மேலிருந்து கீழே விழுவோம் என்பதைச்சிறிதும் கவனிப்பதேயில்லை. ஒரு மனிதன் தான் தப்பாக நடந்தாலும்

சரியாக நடந்தாலும் அவற்றின் பலனை அனுபவிக்கிறான். ஆனால் அவற்றின் பயனே கலக்கத்தையும் வருத்தத்தையும் உண்டாக்குகின்றது. இதனால் மனிதன் எப்படிச் சுகம் அடையக் கூடும்! நிலத்தைக் கிரமமாக உழுது, விதைகளை விதைத்தாலும் தேவேந்திரன் அந்தப் பயிர் வளராதபடி மழையைப் பொழிகிறான். இதை நாம் அநேக தடவை கேட்டிருக்கிறோம். இவற்றுக்கெல்லாம் விதியே காரணம் என்று நான் நினைக்கிறேன். வஞ்சகனான சகுனி, தாமிஷ்டனும் சத்திய சீலனுமான யுதிஷ்டிரனை வஞ்சனையால் ஜெயித்தான். என் துஷ்டப் பிள்ளைகளிடத்தில் எனக்குண்டாயிருந்த பிரியத்தினால் நானும் அதற்குட்பட்டிருந்தேன். ஐயோ! இப்பொழுது கௌரவர்களுக்கு நாசகாலம் வந்திருக்கிறது. அல்லது தடுக்க முடியாத ஆபத்து வரும். பருவகாலம் இயக்கினாலும் இயக்காவிட்டாலும் காற்று அசைகிறது. கர்ப்பமான ஸ்திரீ பிரசவித்தே தீரவேண்டும் பகற் காலத்தில் இருள் ஓடிப் போய் விடுகிறது. சாய்ங்காலத்தில் பகற்காலம் போய் விடுகிறது. அதுபோல, மனிதர்கள் தாங்கள் சம்பாதித்ததைச் செலவழித்தாலும் செலவழிக்காவிட்டாலும் காலம் வருகிறபோது அது துக்கத்தையே உண்டாக்குகிறது. அப்படியிருக்கையில் மனிதர்கள் திரவியத்தைத் தேட ஏன் இவ்வளவு கவலைப்படுகிறார்கள்! விதி ஒத்திருந்தால் அந்தத் திரவியம் க்ஷேமமா யிருக்கிறது ஆகையால் அது கொஞ்சம் கொஞ்சமாக இழக்கப் படுகிறதுமில்லை. ஏககாலத்தில் எல்லாம் போய் விடுகிறதுமில்லை. சரியாகக் காப்பாற்றப்படாதது காலம் வருகிற போது நூறு துண்டுகளாகச் சிதறிப் போகிறது. ஆனாலும் நமது குணங்களும் செய்கைகளும் மாத்திரம் உலகத்தில் அழியாமலிருக்கின்றன. இந்திரலோகம் போய் வந்த அர்ஜுனனுடைய சாமாத்தியம் எவ்வளவு பெரிதாயிருக்கிறது! அவன் நாலு வகையான தேவாயுதங்களைப் பெற்றுக் கொண்டு பூமிக்கு வந்திருக்கிறான். தன் மனிததேகத்துடன் தேவலோகம்போய் வந்தவன் எவனிருக்கிறான்! அதனால் அவன் கௌரவர்களுடைய மரணத்தை உத்தேசித்தே சொர்க்க லோகத்திலிருந்து திரும்பி வந்திருக்கிறான். அந்த வில் வீரனோ சவ்ய சாச்சியாகிய அர்ஜுனன் அவனுடைய வில்லோ பயங்கரமான காண்டீபம்; அவனுடைய ஆயுதங்களோ தேவாயுதங்கள். ஆகையால் இந்த மூன்றுக்கும் முன்னால் எதிர்த்து நிற்கிற வீரன் எவன் இருக்கிறான்? என்று சொன்னான். இதைக் கேட்டுக்கொண்டிருந்த சகுனி துரியோதனனிடம் போய்ச், கர்ணனிடம் பேசிக்கொண்டிருந்த துரியோதனனிடத்தில் எல்லாவற்றையும் சொன்னான். அதைக்கேட்டுத்துரியோதனன் துக்கத்தை அடைந்தான்.

---

## 236-வது அத்தியாயம்.

### கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—17. சகுனி திருதராஷ்டிரனுடைய வார்த்தைகளைக் கேட்டுக் கர்ணனுடன் யோசித்துத் துரியோதனனை நோக்கிச் சொல்லுகிறான். துரியோ

தனே! நீ பாண்டவர்களை உன் சாமர்த்தியத்தால் ஜயித்து, இந்திரன் சொர்க்க லோகத்தை ஆள்வது போல இந்தப் பூமியை அரசுபுரிகிருய், பகையற்று வாழ்கிருய். மன்னர்மன்னனே! கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு இந்தத் திசைகளிலுள்ள அரசர்கள் எல்லாரும் உனக்குப் பகுதி கட்டுகிருர்கள். முன்னொரு காலத்தில் பாண்டவர்களிடத்தில் இருந்த தேவர்கள் போன்ற மகிமை இப்போது உன்னிடத்திலும் உன் சகோதரர்களிடத்திலும் இருக்கின்றது. நாங்கள் முன்பு இந்திரப் பிரஸ்தத்தில் யுதிஷ்டிரரிடத்தில் பார்த்த மகிமையை இப்போது உன்னிடத்தில் பார்க்கிருேம். நீ கொஞ்ச காலத்துக்கு முன் யுதிஷ்டிரரிடத்தில் பார்த்துத் துக்கப்பட்டுக் கொண்டிருந்த ஐசுவரியம் உன்னுடைய புத்தியினுலே பறிக்கப்பட்டது. நீண்ட புஜங்களை யுடைய வீரனே! சத்துருக்களைச் சங்கரிக்கிறவனே! உலகத்திலுள்ள அரசர்கள் எல்லாரும் இப்போது உனக்கு அடங்கின குடிகளா யிருக்கிருர்கள். முன்பு யுதிஷ்டிரருடைய கட்டளைக்கு எதிர்பார்த்தது போல அரசர்கள் எல்லாரும் இப்போது உன் கட்டளையை எதிர்பார்த்துக்கொண்டு இருக்கிருர்கள். அரசனே! கடலால் சூழப்பட்ட பூமாதேவி மலை, கடல், காடுகள், நகரங்கள், பட்டணங்கள், சுரங்கங்களுடன் இப்போது உனக்கு உட்பட்டிருக்கிருர்கள். மஹா ராஜனே! வானத்தில் சூரியன் எல்லாராலும் வணங்கப்பட்டுப் பிரகாசிக்கிறது போல நீ பிராமணர்களாலும், அரசர்களாலும் வணங்கப்படுகிருய். அரசனே! எமன் ருத்திர கணங்களால் சூழப்பட்டிருப்பது போலவும், வசுக்களாலும் மருத்துக்களாலும் சூழப்பட்டிருப்பது போலவும் நீ கௌரவர்களால் சூழப்பட்டு நட்சத்திரங்களுக்கு நடுவில் சந்திரன் விளங்குவது போல விளங்குகிருய். ஆகையால் செல்வத்தை யிழந்த பாண்டவர்களைப் பார்க்கப் போவோம். உனக்கு அடங்காதவர்களாயும், உன் கட்டளைக்குக் கீழ்ப் படியாதவர்களாயுமிருந்த அவர்கள் இப்போது வனவாசிகளா யிருக்கிருர்கள். தைத்திய வனத்திலுள்ள ஏரிக் கரையில் வனவாசிகளான அநேக பிராமணர்களுடன் அவர்கள் வசிக்கிருர்கள் என்று நாம் கேள்விப் படுகிருேம். இராஜாதிராஜனே! நீ இப்போது உன் செல்வச் சிறப்போடு பாண்டவர்களிடம் போ. சூரியன் தன் கிரணங்களால் சகல வஸ்துக்களையும் தகிப்பது போலப் பாண்டவர்களுடைய மனதை உன் செல்வப் பெருக்கால் எரியச் செய். நீ இப்போது மஹா ராஜனுயிருக்கிருய். அவர்கள் செல்வத்தை யிழந்திருக்கிருர்கள். நீ செல்வத்துடன் வாழ்கிருய். அவர்கள் வறியவர்களா யிருக்கிருர்கள். ஆகையால் அரசனே! இப்போது பாண்டவர்களைப் பார்க்கப் போ. நகுஷ புத்திரனுகிய யயாதி சொர்க்க லோகத்தில் அநேக பரிவாரங்கள் சூழ வீற்றிருப்பது போன்ற உன்னைப் பாண்டவர்கள் பார்க்கட்டும். பகைவர்களாலும் சிநேகிதர்களாலும் பார்க்கப்பட்டு வாழ்வதே சரியான வாழ்வு.

18—23. மலையின் மேலிருந்துகொண்டு பூமியில் நடக்கிறவனைப் பார்ப்பது போல ஒருவன் செல்வ சம்பத்தி லிருந்துகொண்டு தரித்திரனுயிருக்கிற தன்

சத்துருவை காண்பதைப் பார்க்கிலும் மேலான சுகம் என்ன இருக்கிறது? அரசர்க்கரசனே! தன் சத்துருக்கள் துக்கப்பட்டுக்கொண் டிருக்கிறபோது அவர்களைப் பார்ப்பது புத்திரர்களைப் பெறுதல், ஐசுவரியத்தை அடைதல், இராஜ்யத்தை அடைதல் இவற்றை விட மேலான சந்தோஷத்தைக் கொடுக்கும். பெரும் செல்வத்திலிருக்கிற நீ மரப்பட்டைகளையும் தோலையும் உடுத்துக்கொண்டிருக்கிற அர்ஜுனனைப் பார்க்காமலிருந்தால் என்ன சந்தோஷ மிருக்கும். உன்னுடைய பத்தினி உயர்ந்த ஆடையாபரணங்களைத் தரித்துக்கொண்டு போகட்டும். அது திரௌபதியின மனதை எரிக்கும் ஏனென்றால் அவள் இப்போது மரவுரிகளையும் தோலையும் உடுத்திருக்கிற படியால் அவளுக்கு மிகுந்த துக்கத்தை உண்டாக்கும் என்பதில் தடையில்லை. உன் பத்தினியின் ஆடையாபரண அலங்காரத்தைப் பார்த்ததும் அவள் தன்னையும், தன் வாழ்வையும் நிந்தித்துக் கொள்வாள். ஏனென்றால் அவள் இந்திரப்பிரஸ்த சபையிலிருந்து அனுபவித்ததை விட இது மேலா யிருக்கும் என்றான். இப்படிச் சொல்லி விட்டுக், கர்ணனும் சகுனியும் சும்மா யிருந்தார்கள்.

---

## 237-வது அத்தியாயம்.

### கோஷயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—16. அவர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டுத் துரியோதனன் மிக மகிழ்ச்சி யடைந்தான். உடனே மன வருத்த முண்டாய்ச் சொல்லுகிறான். கர்ண! நீ சொல்லுகிறது எப்போதும் என் மனதிலும் இருக்கிறது. நான் பாண்டவர்கள் இருக்கிற இடத்துக்குப்போக உத்தரவுகிடைப்பது அரிது திருதராஷ்டிர மஹாராஜன் எப்போதும் வீரர்களான பாண்டவர்களுக்குப் பயப்படுகிறார். பாண்டவர்கள் தவம் செய்ததனால் முன்னிருந்ததை விட அதிக பராக்கிரமும் வல்லமையும் உடையவர்களா யிருக்கிறார்கள் என்று என் பிதா நினைக்கிறார். சௌரிய முள்ளவனே! அரசன் நமது எண்ணத்தை அறிந்தால், ஒருபோதும் நமக்கு உத்திரவு தர மாட்டார். ஏனென்றால் பாண்டவர்களை அழிப்பதைத் தவிர வேறு காரியம் அவ்விடத்தில் இல்லை. சூதாடின காலத்தில் நம்மைப்பற்றி விதுரர் சொன்னதை நீ அறிவாயே. ஆதலால் எனக்கு உத்தரவு கிடைப்பது அரிது. பீமார்ஜுனர்களும், திரௌபதியும் மரவுரி தரித்துக்கொண்டு துக்கத்துடன் வனத்தில் வசிப்பதை நான் பார்க்கப்பிரியப்படுகிறேன். பாண்டவர்கள் மரவுரியுடுத்து வனத்தில் வசிப்பதைப் பார்ப்பதினால் உண்டாகும் ஆனந்தத்துக்கு, உலகம் முழுதும் எனக்குக் கிடைப்பதினால் உண்டாகும் மகிழ்ச்சி ஒரு போதும் ஈடாகாது. கர்ண! திரௌபதி மரப்பட்டையை அணிந்துகொண்டு வனத்தில் வசிப்பதைப் பார்க்கிறதைவிட வேறு ஆனந்தம்என்ன இருக்கிறது? தர்மராஜன், பீமசேனன், அர்ஜுனன் இவர்கள் என்னுடைய வாழ்வைப் பார்த்தால் அப்போதுதான் நான் மேலான பெருவாழ்

வை அடைந்தவனுவேன். ஆனால் அந்த வனத்துக்குப் போகிற உபாயமும், அதற்காக உத்தரவு பெறுகிற மார்க்கமும் மாத்திரம் எனக்குத் தெரியவில்லை. ஆகையால் சகுனி துச்சாதனன் இவர்களுடன் யோசித்து நாம் அந்த வனத்துக்குப் போகிற வழியைக்கண்டு சொல். நானும் அவரிடம் போகலாமா? கூடாதா என்று யோசித்துக்கொண்டு நாளையதினம் திருதராஷ்டிர மஹா ராஜனைப் பார்க்கிறேன். நாளையதினம் நான் என் பிதா வுடன் உட்கார்ந்திருக்கிற போது நீங்கள் செய்த ஏற்பாட்டைச் சொல்லுங்கள். என் பிதாவோடும் பீஷ்மரோடும் இவ்விஷயத்தை ஆலோசித்துப் பீஷ்மரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு, இந்த யாத்திரையைத் தீர்மானம் பண்ணிக் கொள்கிறேன் என்றான்.

17— . அப்படியே ஆகட்டும் என்று எல்லாரும் தத்தம்இடம் போய்ச் சேர்ந்தார்கள். மறுநாள் விடிந்ததும் கர்ணன் அரசனிடம் வந்து அவனை நோக்கிப் புன் சிரிப்புடன் துரியோதனு! நான் யோசித்துக்கொண்டுவந்த ஒரு யுத்தியைச் சொல்கிறேன் கேள். நம்முடைய இடையர்கள் த்வைத்திய வனத்திலிருக்கிறார்கள். ஆகையால் சந்தேகப்படாமல் நமது பசுக்களைப் பார்க்கிறதற்காக நாம் த்வைத்தியவனம் போகலாம். அரசர்கள் எப்போதும் தமது பசுக்களைப் பார்க்கவேண்டியது அவசியம். இதைக் குறித்துப் பேசி நீ உத்திரவு பெறலாம் என்றான். உடனே சகுனி யெழுந்திருந்து சிரித்துக் கொண்டு நானும் இப்படியே யோசித்தேன். இதைச் சொன்னால் அரசன் அவசியம் உத்தரவு கொடுப்பார். ஒரு சமயம் எங்களையும் கூட அனுப்புவார். நம்முடைய பசுக்களைப் பார்ப்பதற்காக நாம் அவசியம் போகலாம் என்றான். பிறகு சிரித்து ஒருவருக் கொருவர் கைகொடுத்துச் சந்தோஷப் பட்டுக்கொண்டு திருதராஷ்டிர மஹாராஜனிடம் போனார்கள்.

---

## 238-வது அத்தியாயம்.

### கோஷயாத்திரா பர்வத்தொடர்ச்சி.

1—5. ஜனமேஜய மஹாராஜனே! பாரதனே! அதற்குப்பின் துரியோதனன் முதலானவர்கள் திருதராஷ்டிர மஹாராஜாவினிடம் போனார்கள். அவனுடைய சுகத்தை விசாரித்தார்கள். அரசனும் அவர்களுடைய சுகத்தை விசாரித்தான். எல்லாரும் பேசிக்கொண் டிருந்தார்கள். அப்போது சமங்கன் என்ற ஒரு இடையன் வந்தான், இவனை முன்னாலேயே சித்தம் பண்ணி வைத்திருந்தார்கள். அவனும் சமயம் அறிந்து வந்துசேர்ந்தான். அப்போது சகுனியும், கர்ணனும் அரசனை நோக்கிக் கௌரவோத்தமரே! இப்போழுது நமது பசுக்கள் தகுந்த இடத்தில் இருக்கின்றன. பசுக்களைப் பார்த்துக் கணக்கிட வேண்டிய காலமும் வந்துவிட்டது. அன்றியும் உமது குமாரனை துரியோதனன் வேட்டை யாடுகிறதற்கும் இதுவே தகுந்த காலம். ஆகையால் துரியோதனனுக்கு வேட்டையாட உத்தரவு கொடும் என்றார்கள்.

6—17. திருதராஷ்டிரன் புத்திரனை நோக்கி ஹா குமாரகா! வேட்டையாடுகிறதும், பசுக்களைப் பார்ப்பதும் தகுந்த காரியமேயாம். ஆனால் இடையர்களை முற்றிலும் நம்பி விடக்கூடாது. தவிர அந்த இடத்துக்குச் சமீபத்தில் சூரர்களான பாண்டவர்கள் இருப்பதாகக் கேள்விப்பட் டிருக்கிறேன். ஆகையால் நீ அந்த இடத்துக்குப் போகக் கூடாது. அவர்கள் வஞ்சனையால் சூதாட்டத்தில் தோல்வி யடைந்து, காட்டுக்கு நடுவில் துக்கத்துடன் வசிக்கிறார்கள். கர்ண! அதிரத வீரர்களான அந்த வீரர்கள் இப்போது தவம் செய்துகொண் டிருக்கிறார்கள். யுதிஷ்டிரன் ஒருபோதும் கோபியான். பீமசேனன் சுபாவத்திலேயே கோபகுண முள்ளவன். துருபதன் புத்திரியான கிருஷ்ணையும் சிறந்த மகிமையுள்ளவள். கர்வமும் அசத்தியமும் உள்ள நீங்கள் அவனுக்குக் கோபமூட்டுவீர்கள். அந்தத் திரௌபதி இப்போது தபோமகிமை யுள்ளவளாதலால் உங்களை நிச்சயமாகவே யெரித்து விடுவாள். அந்தப் போர்வீரர்கள் தங்கள் ஆயுதங்களாகிறஅக்கினியால் உங்களை யெரித்து விடுவார்கள். நீங்கள் படையுடன் போவதால் நீங்களே அவர்களுக்கு எவவிதத்தாலும் துன்ப முண்டாக்க வகை தேடுவீர்கள் நீண்ட புஜங்களை யுடைய அர்ஜுனன் இந்திரலோகத்தில் வசித்து வந்தவன். தேவர்களிடத்தில் வழங்குகிற சர்வாயுதங்களை வாங்கிக்கொண்டு பூலோகத்துக்கு வந்திருக்கிறான். அவன் அந்த வனத்திலிருக்கிறான். அந்த அர்ஜுனன் வில் வித்தையில் தேர்ச்சி அடையாமலிருந்த போதே உலகம் முழுமையும் வென்றான். அவன் இப்போது தேர் வீரர்களில் சிறந்தவனும், சகல ஆயுதங்களிலும் வல்லமை யுடையவனும் இருக்கிறான். அவன் என் உங்களைக் கொல்ல மாட்டான். அங்கே போகிற விஷயத்தில் என் வார்த்தையைக் கேட்டுக் கீழ்ப் படிந்து ஜாக்கிரதையாய் நடவுங்கள். நீங்கள் எப்போதும் நம்பிக்கை யற்ற நிலைமையிலேயே யிருக்கிறீர்கள். அல்லது உங்களுடைய போர் வீரர்களாவது பாண்டவர்களுக்குச் சிறிது இம்சை செய்யலாம். யோசனை யில்லாத அந்தக் கொடும் செய்கை உங்கள் மேல் சாரும். ஆகையால் பாரதனே! நம்பிக்கையுள்ள மனிதர்களில் சிலரை அனுப்பி மாடு கன்றுகளின் கணக்கெடுத்து வரச் சொல்லு. நீ நேரில் போவது எனக்குத் திருப்தி யில்லை என்றான்.

18—23. சகுனி திருதராஷ்டிரனை நோக்கி ஓ பாரதரே! பாண்டவர்களில் மூத்தவர் தர்மவிஷடர். அவர் இந்தச் சபை நடுவில், பன்னிரண்டு வருஷம் வனத்தில் வசிப்பதாகச் சபதம் செய்து கொடுத்துப் போயிருக்கிறார். மற்றப் பாண்டவர்களும் தர்ம சீலர்களாய் யுதிஷ்டிரருக்கு அடங்கி யிருப்பார்கள். குந்தி புத்திரராகிய யுதிஷ்டிரர் எங்கள் மேல் ஒரு போதும் கோபிக்கவே மாட்டார். நாமோ வேட்டையாடப் போகிறோம். பசுக்களைக் கணக்கெடுக்கப் போகிறோம். நாங்கள் பாண்டவர்களைப் பார்க்க விரும்பவே யில்லை. பாண்டவர்கள் இருக்கிற இடத்துக்கு நாங்கள் போவதில்லை. ஆகையால் கெட்ட செய்கை உண்டாவதற்கு ஆதாரமில்லை என்றான். இப்படிச் சகுனி சொன்னதைக் கேட்ட திருதராஷ்டிரனுக்கு மனம் இல்லா விட்டாலும், அரை

மனசோடு விடை கொடுத்தான். காந்தாரி புதல்வனாகிய துரியோதனன் பிதா வினிடம் விடை பெற்றுக்கொண்ட பின் சகுனி, கர்ணன், துச்சாதனன் முத லானவர்களையும் அழைத்துக்கொண்டு பிரயாணமானான்.

24—29. துரியோதனன் வேட்டைக்குப் புறப்படும்போது, துச்சாத னன், சகுனி, கர்ணன், இன்னும் அநேக தம்பிகள், ஆயிரம் பெண்கள் இவர் களும் அவனைத் தொடர்ந்து போனார்கள். அவர்கள் த்வைத்திய வனத்தைப் பார்க்கச் சென்றபோது, நகரத்து ஜனங்கள் கூடத் தங்கள் பத்தினிகளுடன் பிரயாணமானார்கள். எண்ணாயிரம் தேர்கள், முப்பதினாயிரம் யானைகள், ஒன் பதினாயிரம் குதிரைகள், அநேகமாயிரம் காலாட்கள், வண்டிகள், கடைகள், கூடாரங்கள், வர்த்தகர்கள், பாடகர்கள், வேட்டையில் தேர்ந்தவர்கள், இவர்க ளும் ஆயிரமாயிரமாகத் தொடர்ந்தார்கள். ஜனமேஜய மஹா ராஜனே! துரியோதனன் புறப்பட்டபோது அநேகமாயிரம் மனிதர்கள் தொடர் ந்து போனார்கள். அந்தக் கூட்டத்திலுண்டான சத்தம் மழை காலத்தில் காற்றடிக்கிறதினால் உண்டாகிற சத்தத்தைப்போல இருந்தது. அவர்கள் எல் லாருடனும் த்வைத்திய வனத்துக்கு வந்து, அங்குள்ள மடுவின் கரையில் தன் பரிவாரத்துடனும், வாகனங்களுடனும் இறங்கினான். அந்த மடுவுக்கு நாலு மயில் தூரத்தில் துரியோதனன் தன் கூடாரத்தை அடித்திருந்தான்.

---

## 239-வது அத்தியாயம்.

### கோஷயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—9. துரியோதனன் அந்தத் த்வைத்திய வனத்தில் அநேக இடங்களில் தங்கி யிருந்து, பிறகு மாடுகள் இருக்குமிடம் வந்து சேர்ந்தான். அங்கே கூடா ரம் அடித்தான். நிறைந்த நீரை யுடையதும், அநந்தமான விருட்சங்களை யுடை யதும், சகல சௌக்கியங்களும் நிறைந்துள்ளதுமான ஒரு இடத்தைத் தெரிந் துகொண்டு அவ்விடத்தில் துரியோதனனுக்குத் தகுந்த வீட்டைக் கட்டினார் கள். இராஜ கிருத்துக்குச சமீபத்தில் கர்ணன், சகுனி, துரியோதனன் தம் பிமார்கள் எல்லாருக்கும் தனித்தனியாக வீடு கட்டினார்கள். ஆயிரமாயிரமா கவும் நூறு நூறாகவும் ஏராளமா யிருக்கிற தன் பசுக்களைப் பார்த்தான். அவ ற்றின் அவயவங்களையும், அடையாளங்களையும், அவற்றின் கணக்குகளையும் பார்த்தான். கன்றுகளுக்கு அடையாளமிட்டுப், பழக்க வேண்டியவைகளைக் குறித்துக் கொண்டான். கன்று போடாத கடாரிகளையும் கணக்கெடுத்துக் கொண்டான். எண்ணவேண்டிய வேலையை முடித்துக் கொண்டு, மூன்று வருஷத்துக் கன்றுகளுக்குக் குறிப்பெடுத்துக் கொண்டு பின்பு, இடையர்கள் சூழ அந்த வனத்தில் சந்தோஷத்துடன் உலாவித்திரிந்தான். அரசனுடைய யோர்வீரர்களும், நகரத்தார்களும் அந்த வனத்தில் தேவர்களைப்போல மகிழ்ச்

சியுடன் உலாவினார்கள். பாடுவதில் சிறந்த இடையர்களும், ஆடுவதிற் சிறந்தவர்களும் வாத்தியங்களை வைத்துக்கொண்டு விளையாடினார்கள். ஆபரணங்களை அணிந்த அநேகம் பெண்கள் துரியோதனனுக்குச் சந்தோஷமுண்டாகும்படி விளையாடினார்கள். அரசன் அரண்மனை ஸ்திரீகள் சூழ இருந்தான். அவனுக்கு மனமகிழ்ச்சி உண்டாக்குகிறவர்களுக்குத் திரவியம், ஆகாரம், பானம் முதலியவற்றை அவர்களுடைய தகுதிக்கேற்றபடி கொடுத்து மகிழ்ந்தான்.

10—19. அநேகம் காட்டுப் பசுக்கள், எருமைகள், மான்கள், கவயங்கள், கரடிகள், பன்றிகள் முதலான அநேக மிருகங்களை அரசன் கொன்றான். அநேகமாயிரம் பிராணிகள் அவனுடைய அம்பினால் துளைபட்டு மடிந்து விழுந்தன. அந்தக் காட்டில் மிகவும் இரம்மியமான இடங்களில் உள்ள மான்களைப் பிடித்துக் கொண்டான். பாலைக் குடித்துக் கொண்டும், பல வகையான பொருள்களை அனுபவித்துக் கொண்டும், இன்பமான வனங்களையும், பொழில்களைப் பார்த்துக்கொண்டும், அவ்விடங்களில் தேனீக்கள் தேனைக் குடித்து மயங்கி ரீங்காரம் செய்து கொண்டிருப்பதையும், மயில்கள் தொனிப்பதையும் கேட்டு மகிழ்ந்தும் அந்த வனத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்து, கடைசியில் தைத்தியவன மடுவுக்குச் சமீபத்தில் வந்து சேர்ந்தான். அவ்விடத்தில் மலர்களிலுள்ள தேனைக் குடித்து மயங்கித் தேனீக்கள் இனிமையாகப் பாடிக் கொண்டிருந்தன. குயில்கள் கூவிக்கொண்டிருந்தன. புன்னாகம் வகுளம் முதலிய விருட்சங்கள் இனிய நிழலைக் கொடுத்துக் கொண்டிருந்தன. துரியோதனன் மிகுந்த செல்வச் சிறப்புடன் தேவேந்திரனைப் போல அவ்விடத்துக்குப் போனான். மஹா புத்திசாலியான யுதிஷ்டிரர் கூட அந்த ஏரிக்குச் சமீபத்திலிருந்துகொண்டு பத்தினியாகிய திரௌபதியுடன் ராஜரிஷி என்னப்பட்ட யாகத்தைச் செய்துகொண்டிருந்தார். வனத்தில் வசிக்கிற தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் விதிக்கப்பட்டிருந்தபடி அந்த யாகத்தைச் செய்து கொண்டிருந்தார். துரியோதனன் அங்கே வந்ததும் தாமதமில்லாமல் தன் பரிவாரத்தார்கள் எல்லாருக்கும் வீடுகளை உண்டாக்கும்படி கட்டளை யிட்டான். அவர்கள் அரசன் உத்தரவுப்படி தகுந்த வீடுகளைக் கட்டுவதற்காக ஏரிக்கரைக்குப் போனார்கள்.

20—31. துரியோதனனுடைய போர்வீரர்கள் அந்த ஏரியை அடைந்து அந்த வனத்தில் புகுந்ததும், அகே கந்தர்வர்கள் வந்து உள்ளே போகக் கூடாது என்று தடுத்தார்கள். ஜனமேஜய மஹாராஜனே! கந்தர்வராஜன் முன்னாலேயே தன்னுடைய பரிவாரங்களுடன் அங்கே வந்திருந்தான். அநேக அப்ஸரஸ்களுடனும், அநேக தேவர்களுடனும் குபேர உலகத்திலிருந்து அங்கே வந்திருந்தான். விளையாடுகிறதற்காக அந்த ஏரிக்கு அவன் வந்தவுடன் ஒருவரும் அங்கே வந்து புகாதபடி காவல் செய்து விட்டான். துரியோதனனுடைய போர்வீரர்கள் கந்தர்வர்களால் தடைபட்டு, அரசனிருக்கிற இடம்

போய்ச் சேர்ந்தார்கள். துரியோதனன் அவர்களுடைய வார்த்தையைக் கேட்டு அநேக படைகளை அனுப்பி, யுத்தத்தில் கந்தர்வர்களை வென்று துரத்தும்படி கட்டளை யிட்டான். துரியோதனனுடைய முன்படை வீரர்கள் அரசனுடைய வார்த்தைகளைக் கேட்டுத், தைத்தியவன மடுவுக்குத் திரும்பிப் போய்க், கந்தர்வர்களைப் பார்த்துச் சொல்லுகிறார்கள். திருதராஷ்டிரன் புத்திரனான துரியோதனன் இந்த ஏரியில் விளையாடும்பொருட்டு வந்திருக்கிறார். ஆகையால் இந்த இடத்தை விட்டுச் சீக்கிரமாக ஓடிப்போய் விடுங்கள் என்றார்கள். இப்படிச் சொன்னதைக் கேட்ட கந்தர்வர்கள் கடகடவென்று இரைந்து சிரித்து, அவர்களைப் பார்த்துத் துஷ்டசித்தமுள்ள உங்கள் அரசனான துரியோதனன் அற்பப் புத்தியுள்ளவன். இல்லாவிட்டால் வானுலகத்தில் வசிக்கிற தேவர்களான எங்களுக்கு அவன் இப்படிக் கட்டளை யிடுவானோ! எங்களைத் தன்னுடைய வேலைக்காரர்களைப் போலப் பாவிக்கிறானே! அந்த வார்த்தையைக் கேட்டு எங்களை யெதிர்த்து மடிய வந்திருக்கிற நீங்களும் புத்தி கெட்டவர்கள். இப்படிப்பட்ட சமாசாரத்தை யெங்களுக்குக் கொண்டுவந்த நீங்கள் மூடர்கள். அந்தக் கௌரவராஜன் இருக்கிற இடத்துக்குச் சீக்கிரம் போய் விடுங்கள். நீங்கள் எல்லாரும் இன்று எமலோகம் போய்ச் சேர்வீர்கள் என்று சொன்னார்கள். இப்படிக் கந்தர்வர்கள் சொன்னதைக் கேட்ட அந்தப் படை வீரர்கள் துரியோதனன் இருக்கிற இடத்துக்கு மறுபடியும் ஓடினார்கள்.

---

## 240-வது அத்தியாயம்

### கோஷயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. அந்தப் போர்வீரர்கள் மீண்டும் துரியோதனனிடம் வந்து கந்தர்வர்கள் சொன்னதைச் சொன்னார்கள். கந்தர்வர்கள் தன் சேனையைத் தடுத்ததை அறிந்து, துரியோதனன் மஹா கோபம் கொண்டு, சொல்லுகிறான். எனக்கு விருப்பமில்லாததைச் செய்கிற அந்தப் பிசாசுகளைக் கொல்லுங்கள். தேவேந்திரன் தன் சைனியங்களுடன் வந்து விளையாடிக் கொண்டிருந்தாலும் அடித்துத் துரத்துங்கள் என்று சொன்னான். இப்படித் துரியோதனன் சொன்னதைக் கேட்டு ஆயிரம் வீரர்கள் யுத்தத்துக்குச் சந்நத்தமானார்கள். தங்களுடைய சிங்கநாதத் தொனியால் பத்துத் திசைகளையும் நிரப்பிக் கொண்டு வந்து, அவ்விடத்தில் பலாத்காரமாகப் புகுந்தார்கள். கந்தர்வர்கள் மறுபடியும் அவர்களைத் தடுத்தார்கள். துரியோதனன் போர்வீரர்கள் கந்தர்வர்களை மதியாமல் அந்த வனத்தில் நுழைந்தார்கள். துரியோதனனும் தன் படை வீரர்களை நிறுத்தவில்லை. ஆகாச சஞ்சாரிகளான கந்தர்வர்கள் சித்திரசேனனிடம் போய்ச் சொன்னார்கள். கந்தர்வ அரசன் அதைக் கேட்டதும் கோபம் கொண்டு, தன் சேனைகளை நோக்கி அந்தத் துஷ்டர்களை நன்றாய்ச் சிட்சித்துத் துரத்துங்கள். அவர்களைக் கொல்லுங்கள் என்று கட்டளை யிட்

டான். இப்படி உத்தரவு பெற்ற கந்தர்வ சேனைகள் ஆயுதங்களுடன் வந்து துரியோதனன் படையை எதிர்த்துச் சென்றார்கள். அவர்கள் வருகிறதைக் கண்ட துரியோதனன் படைவீரர்கள் நாலா திசைகளிலும் சிதறி ஓடினார்கள். கர்ணன் மாத்திரம் ஓடாமலிருந்தான்.

12—27. கந்தர்வ சேனைகள் ஓடாமலிருக்கிற கர்ணன்மேல் எதிர்த்துச் சென்றன. கர்ணன் பாணவருஷம் பொழிந்து அவர்களைத் தடுத்தான். சூத புத்திரனான கர்ணன் தன் கை வல்லமையால் அம்பு முதலிய பலவகையாயுதங்களினால் அநேக கந்தர்வர்களை அடித்தான். மஹா வீரனான கர்ணன் ஒரு நிமிஷத்துக்குள் அநேக கந்தர்வர்களுடைய தலைகளை அறுத்துத் தள்ளினான். அதனாலே கந்தர்வ சேனைகள் வருந்திக் கதறினார்கள். கர்ணன் அநேக கந்தர்வர்களைக் கொன்றபோதிலும், கந்தர்வர்கள் பின்னிடாமல் கர்ணனை எதிர்த்து ஆயுதங்களைப் பிரயோகித்தார்கள். அப்போது கந்தர்வ சேனையால் பூமி மறைந்து போயிற்று. பிறகு துரியோதனன், சகுனி, துச்சாதனன், விகர்ணன் முதலானவர்களும் இடி முழக்கம்போலச் சப்திக்கிற தேரின்மேல் ஏறிக்கொண்டு வந்து, கர்ணனுக்குச் சகாயமாக நின்று கந்தர்வசேனையைக் கொல்லத் தொடங்கினார்கள். கந்தர்வ சேனைகளும் ஏராளமான தேர் குதிரைகளுடன் யுத்தம் செய்யத் தொடங்கினார்கள். அந்தச் சண்டை பயங்கரமா யிருந்தது. கௌரவர்களுடைய அம்பினாலே கந்தர்வர்கள் வருந்தினார்கள், கந்தர்வர்கள் வருந்துகிறதைப் பார்த்த கௌரவர்கள் கர்ஜித்தார்கள். சித்திர சேனன் அதைக்கண்டு மிகுந்த கோபத்துடன் வந்து, கௌரவ சேனைகளை அழிக்க நினைத்தான். அந்த வீரன் பல வகையான யுத்த தந்திரங்களை யுணர்ந்தவன். மாயையாற் போர் புரிய வல்லவன். சித்திரசேனனுடைய மாயையால் கௌரவ வீரர்கள் மதிமயங்கினார்கள். கந்தர்வர்கள் கௌரவ வீரர்களைச் சூழ்ந்து கொண்டார்கள். அதனால் கௌரவ சேனைகள் வருந்தின. அந்தக் கௌரவ சேனைகள் திகில் அடைந்தன. ஜீவன்மேல் ஆசையுள்ளவர்கள் யுத்தகளத்தை விட்டு ஓடிப்போனார்கள். கௌரவ சேனைகள் எல்லாம் ஓடிப்போகவும் சூரிய புத்திரனான கர்ணன் மாத்திரம் மலை போல அசையாமல் நின்றான். துரியோதனன், கர்ணன், சகுனி, இவர்கள் கடுங்காயம் அடைந்திருந்தாலும் கந்தர்வர்களை யெதிர்த்துச் சண்டை யிட்டார்கள்.

28—32. கந்தர்வர்கள் கர்ணனைக் கொல்லக் கருதி அவன் மேல் எதிர்த்துப் போனார்கள். கத்தி, ஈட்டி, கோடரி முதலிய ஆயுதங்களுடன் கர்ணனைச் சூழ்ந்துகொண்டு, சிலர் அவனுடைய தேர் நுகத்தைத் வெட்டினார்கள். சிலர் கொடியை அறுத்தார்கள். சிலர் ஏர்க்கால்களை வெட்டினார்கள். சிலர் அதன் குதிரைகளை வெட்டினார்கள். சிலர் சாரதியைக் கொன்றார்கள். சிலர் கர்ணன் கொடையை வெட்டினார்கள். சிலர் அவன் தேரைச் சூழ்ந்திருந்த மர ஆவரணங்களைச் சிதைத்தார்கள். சிலர் அதன் மூட்டுப் பொருத்துக்களைச் சிதைத்தார்கள். அநேக கந்தர்வர்கள் சூழ்ந்துகொண்டு அவனுடைய தேரை

அநேக துண்டுகளாக உடைத்துத் தள்ளினார்கள். கர்ணன் கேடகத்தையும், கத்தியையும் கையில் எடுத்துக்கொண்டு கீழே குதித்தான், பிறகு விகர்ணன் தேரின் மேல் ஏறிக்கொண்டான். குதிரைகளை வேகமாய் அடித்து ஓட்டி யுத்த களத்தை விட்டு ஓடித் தப்பித்துக் கொண்டான்.

---

## 241-வது அத்தியாயம்.

கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—14. ஜனமேஜய மஹாராஜனே! கர்ணன் ஓடிப் போனதும், கௌரவ சேனைகளும் ஓட்டம் பிடித்தன. சேனைகளெல்லாம் ஓடிப் போனதைப் பார்த்துக்கொண்டிருந்தும் துரியோதனன் மாத்திரம் ஓடாமல் நின்றான். கந்தர்வ வீரர்கள் அவன் மேல் பாய்ந்து அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். துரியோதனன் அவர்கள் மேல் பாண மழை பொழிந்தான். கந்தர்வர்கள் அதைச் சட்டை செய்யாமல், துரியோதனனைக் கொல்லக் கருதி அவன் தேரைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் தங்கள் பாணங்களால் அவனுடைய தேர் நுகத்தை வெட்டினார்கள். சிலர் ஏர்க்கால்களை வெட்டினார்கள். சிலர் கால்களையும், குதிரைகளையும், சாரதியையும் வெட்டினார்கள். தேர் அழிந்ததும் அவன் தரையில் விழுந்தான். பராக்கிரமசாலியான சித்திரசேனன் அவன் மேல் பாய்ந்து அவனைப் பிடித்துக் கொண்டான். அவனைச் சித்திரசேனன் இறுகப் பிடித்துக் கொண்டதனால் அவனுடைய உயிர் போய் விடும் போலிருந்தது. இப்படித் துரியோதனன் சிறையானதும், கந்தர்வர்கள் துச்சாதனனையும் பிடித்துச் சிறையாக்கினார்கள். சிலர் துரியோதனன் தம்பி சித்திரசேனனையும், சிலர் விந்தன், சிலர் அநுவிந்தனையும், பிடித்துக்கொண்டார்கள். சிலர் ஸ்திரீகள் எல்லாரையும் சிறை செய்தார்கள். கந்தர்வர்களால் துரத்தியடிக்கப்பட்ட துரியோதனனுடைய போர் வீரர்கள் பாண்டவர்களிடம் போனார்கள். துரியோதனனுடைய வாகனங்கள் முதலியவைகளைக் காப்பாற்றும்படி பாண்டவர்களிடம் ஒப்புவித்தார்கள். நீண்ட புஜங்களை யுடைய துரியோதனன் கந்தர்வர்களால் சிறை செய்யப்பட்டான். துச்சாதனன், துர்முகன், துர்ஜயன் முதலானவர்களும் சிறை யானார்கள். இராஜ ஸ்திரீகளும் சிறையாக்கப்பட்டார்கள். ஆகையால் நீங்கள் கந்தர்வர்களைப் பின் தொடர்ந்து செல்லுங்கள் என்று சொன்னார்கள். அவர்களை மீட்டு வர வேண்டுமென்கிற கருத்துடன் அழுதுகொண்டு சொன்னார்கள். துரியோதனனுடைய மந்திரிகளும் அழுதுகொண்டு வந்து யுதிஷ்டிரரிடம் சொன்னார்கள். அப்போது பீமன் சொல்லுகிறான்.

15— . நாங்களே யுத்த களத்தில் வந்து நின்று செய்ய வேண்டிய வேலையை இன்று கந்தர்வர்கள் செய்து விட்டார்கள். துரியோதனாதிகள் வேறொரு எண்ணத்துடன் இங்கே வந்தார்கள், அவர்கள் எதிர்பாராத வே

ஒருவகையாக முடிந்து விட்டது. சூதை விரும்புகிற அரசனுடைய மந்திராலோசனையின் பயன் இதுதான். வல்லமை யுள்ளவர்களா யிருப்பவர்களுடைய பகைவன் பிறரால் கூட அழிக்கப்படுவான் என்று பெரியோர்கள் சொல்லக் கேள்விப் பட்டிருக்கிறோம். அந்தக் கந்தர்வர்கள் எங்கள் கண்களின் முன்னாலேயே அதைச் செய்து நிறைவேற்றினார்கள். எங்கள் விருப்பத்தை நிறைவேற்றுகிறவர்களும், எங்கள் சுமையைச் சுமக்கிறவர்களும் உலகத்திலிருக்கிறார்கள். அதுவும் எங்கள் அதிர்ஷ்டந்தான். துஷ்டசித்தமுள்ள அந்தக் கொடியவன் தான் செல்வச் செருக்கினால் இங்கே ஏன் வந்தான்? துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற எங்களைப் பரிகசிப்பதற்காகவே அவனுடைய துஷ்டநடத்தைக்கு உடந்தையா யிருந்தவர்கள் துரியோதனனுடைய இழிந்த நிலையைக் கண்கொண்டு காண்கிறார்கள். துரியோதனனை யிப்படிப்பட்ட செய்கையைச் செய்யும்படி தூண்டினவனே பாவி. குந்தி புத்திரர்களான பாண்டவர்கள் துஷ்டர்கள் அல்ல. பாவிகள் அல்ல என்றான். பீமன் இப்படிச் சொன்னபோது யுதிஷ்டிரர் அவனை நோக்கிக் கொடுஞ் சொற்கள் சொல்வதற்கு இது சமயமில்லை என்று சொல்லுகிறார்.



## 242-வது அத்தியாயம்.

கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—19. குழந்தாய் பீமசேனா! பயமடைந்தவர்களும், துன்பம் அடைந்திருப்பவர்களும், நம்மிடத்தில் அடைக்கலமாக வந்திருப்பவர்களுமான கௌரவர்களிடத்தில் இப்படிப்பட்ட கொடுஞ் சொற்களைச் சொல்லக் கூடாது. ஏ விருகோதரா! கலகமும் சண்டைகளும் தாயாதிகளுக்குள்ளேயே யிருக்கவேண்டியது. பகை எப்போதும் விருத்தியாகிறது. ஆனால் நமது வம்சத்தின் பெருமையைக் கெடுப்பது கூடாது. அந்நியன் வம்ச மகிமையைக் கொடுக்கத் தொடங்கினால், நல்லவர்கள் அதற்கு இடம் தரப்படாது. துஷ்டனாகிய அந்தக் கந்தர்வராஜன், நாம் சில நாட்களாக இங்கே வசிக்கிறதை அறிந்திருக்கிறான். அறிந்திருந்தும் நமக்கு ஒவ்வாத இவ்விஷயத்தைச் செய்து நம்மை அவமானம் பண்ணினான். அந்நியன் துரியோதனனைப் பலாத்காரமாகப் பிடித்துக் கொண்டதும், பெண்களை அவமதித்ததும் ஆகிய இதனால் நமது குடும்பத்தின் பெருமை அழிந்து போயிற்று. மனிதருட் சிறந்தவனே! உடனே ஆயுதங்களை அணிந்து கொள். நம்மிடம் அடைக்கலம் புகுந்தவர்களை விடுவித்துக் காப்பாற்று. நமது குடும்பமேன்மையையும் பாதுகா. தாமதியாதே. நீ அர்ஜுனன், இரட்டையர்கள், மற்றுமுள்ள வீரர்கள் எல்லாரும் சிறையாக்கப்பட்ட துரியோதனனை விடுவித்துக் கொண்டு வாருங்கள். சொர்ணமயமான இருதராஷ்டிரனுடைய தேர் சித்தமாயிருக்கிறது. இந்திரசேனன், ஆயுதங்களில் வல்லவர்களான சாரதிகள் எல்லாரையும் அழைத்துக்

கொண்டு போய்ச் சண்டை யிட்டுத் துரியோதனனை விடுவி. சாதாரணமான க்ஷத்திரியன் கூடத் தன்னை அடைந்தவர்களைக் காக்க முயற்சிக்கிறான். விரு கோதரா! இனி நான் உனக்கு என்ன சொல்லுவது? "என்னைச் சீக்கிரமாய் வந்து காப்பாற்றுங்கள்" என்றதைக் கேட்ட பின்னும், எவன் தான் அவனைக் காப்பாற்றாமல் ஈனத் தன்மையை உடையவனா யிருப்பான். வரமளிப்பதும், இராஜத்துவமும், புருஷனா யிருப்பதும் ஆகிய மூன்றும் சுகத்துக்குக் காரணங் களாம். இந்த மூன்றிலும் சமமாயிருக்கிற சத்துருவை விடுவி. அந்தத் துரி யோதனன் இப்போது ஆபத்திலிருந்து உன்னுடைய உதவியை நாடுகிற இதை விட உனக்கு மகிழ்ச்சி வேறு என்ன இருக்கிறது? அவனுடைய ஜீவன் இப் பொழுது உனது பராக்கிரமத்தினால் இரட்சிக்கப்பட வேண்டி யிருக்கிறதல்ல வா? நாம் ஒப்புக்கொண்டிருக்கிற விரதம் இப்போது நிறைவேறி விட்டது. நானே அவனுடைய உதவியைக் குறித்து இப்போது போகச் சித்தமா யிருக்கி றேன். பீமசேனா! கௌரவனே! சமாதானமாகத் துரியோதனனை எப்படியா வது மீட்டுக் கொண்டு வா. கந்தர்வ ராஜன் எவ்வகையிலும் சமாதானத்துக்கு ஒத்து வராவிட்டால் பிறகு சிறு சண்டை செய்து மீட்டுக்கொண்டு வா. அதற் கும் கந்தர்வன் இணங்கி வராவிட்டால் அந்தக் கந்தர்வர்களைச் சங்கரித்து மீட்டுக் கொண்டு வா. பீமசேனா! நான் ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என் றால், என்னுடைய சபதம் இன்னம் நிறைவேற வில்லை என்று சொன்னார்.

20—22. அஜாத சத்துருவின் வார்த்தையைக் கேட்ட அர்ஜுனன், தான் கௌரவர்களை மீட்டு வருவதாகச் சபதம் பண்ணினான். கந்தர்வ ரா ஜன் துரியோதனாதியரை விடச் சம்மதியா விட்டால், இந்தப் பூமியானது இன்று தினம் அந்தக் கந்தர்வர்களுடைய இரத்தத்தைப் பானம் பண்ணும் என்றான். அர்ஜுனன் இப்படிச் சபதம் செய்ததைக் கேட்ட கௌரவர்கள் எல்லாரும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.



## 243-வது அத்தியாயம்.

### கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—11. இப்படி யுதிஷ்டிரர் கூறின வசனங்களைக் கேட்ட பீமன் முத லான வீரர்கள் எல்லாரும் மனமகிழ்ச்சியுடன் யுத்தத்துக்குச் சன்னாகமானார் கள். எல்லாரும் சொர்ணமிழைத்த கவசங்களை அணிந்து கொண்டார்கள். பல வகையான தேவாயுதங்களைத் தரித்துக் கொண்டார்கள். வில் அம்புக ளால் நிறைந்து, கொடிகள் கட்டி விளங்குகிற தேரில் ஏறினார்கள். அப் போது பாண்டவர்கள் ஜ்வலிக்கிற அக்கினியைப் போலத் தோன்றினார்கள். அந்த மகிமையுள்ள தேர்வீரர்கள் நன்றாய் அலங்கரிக்கப்பட்டதும், வேகம் உள்ள குதிரைகள் கட்டப்பட்டுள்ளதுமான தேரின்மேல் ஆரோகணித்துக் கொண்டார்கள். தவக்கம் பண்ணாமல் உடனே கந்தர்வர்கள் இருக்கிற இடம்

போய்ச் சேர்ந்தார்கள். கௌரவ சேனைகள் அப்போது சந்தோஷத்தால் பெருங் கூச்சலிட்டன. பாண்டவர்கள் சண்டை செய்ய வருகிறதைக் கந்தர்வர்கள் பார்த்து, அந்த எதிரிகளின் பக்கம் நோக்கித் திரும்பினார்கள். பாண்டவர்கள் லோகபாலர்களைப் போல விளங்குகிறதைக் கந்தர்வர்கள் பார்த்துச் சினங்கொண்டார்கள். யுத்தத்துக்கு அணிவகுத்து நின்றார்கள். பெருமையும் மகிமையுமுள்ள யுதிஷ்டிரருடைய கட்டளையின்படி அந்தச் சண்டை சிறு சண்டையாகத் தொடங்கப்பட்டது. ஆனால் மூடர்களான கந்தர்வ வீரர்களை அற்பச் சண்டையினால் வசப்படுத்த முடியாதென்று அர்ஜுனன் அறிந்து கொண்டான்.

12—21. அர்ஜுனன் கந்தர்வர்களைப் பார்த்து என் சகோதரர்களை விட்டு விடுங்கள் என்றான். அதைக் கேட்ட கந்தர்வர்கள் அர்ஜுனனைப் பார்த்து இரைந்து சிரித்துக்கொண்டு, குழந்தாய்! எங்களைத் துன்பத்தில் நின்று விடுவித்துக் காக்கிற ஒரே ஒருவனுக்கே நாங்கள் சொன்ன வார்த்தை கேட்டு அடங்கி யிருப்போம். பார்த்தா! நாங்கள் அவன் கட்டளைப்படியே நடப்போம் என்று சொன்னார்கள். அதைக் கேட்ட அர்ஜுனன் கந்தர்வர்களை நோக்கி, இது மற்றப் பெண்பிள்ளைகளிடம் சரியானதுதான். ஆனால் மனிதர்களுடன் சண்டை செய்கிறது மாத்திரம் கந்தர்வர்களுக்குத் தகாது. ஆகையால் திருதராஷ்டிர குமாரர்கள் எல்லாரையும் விட்டு விடுங்கள். அந்த இராஜஸ்திரீகளையும் விட்டுவிடுங்கள். இப்படித் தர்மராஜாவான யுதிஷ்டிரர் கட்டளையிடுகிறார். கந்தர்வர்களே! நீங்கள் அப்படி விடா விட்டால் நான் என் புஜபலத்தால் துரியோதனனை நிச்சயமாகவே விடுவித்துக்கொள்வேன் என்று சொல்லி, அந்தக் கந்தர்வர்கள் மேல் சரமாரி பெய்தான். கந்தர்வர்களும் பாண்டவர்கள்மேல் கூரிய அம்பு மழை பொழிந்தார்கள். பாண்டவர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் இப்படிப் பயங்கரமான யுத்தமுண்டாயிற்று.



## 244-வது அத்தியாயம்.

கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—12 தேவாயுதங்களைத் தரித்த கந்தர்வர்கள் பாண்டவர்களைச் சூழ்ந்துகொண்டு, அக்கினியைப்போல ஜ்வலிக்கிற அம்புகளை மழை போலச் சொரிந்தார்கள். அங்கே பாண்டவ வீரர்கள் நால்வரே யிருந்தார்கள். கந்தர்வர்களோ! அநேகமாயிரம் பேர்கள். ஆகையினாலே அந்தச் சண்டை வெகு விநோதமா யிருந்தது. கந்தர்வர்கள் கர்ணனுடைய தேர்ச் சாரதியைக் கொன்றார்கள். அப்படியே துரியோதனாதியர்களுடைய சாரதிகளையும் கொன்றார்கள். அது போலவே பாண்டவர்களுடைய தேர்ச் சாரதியையும், கொல்லக் கருதினார்கள். பாண்டவர்கள் மேல் எதிர்த்துச் சென்றார்கள். பாண்டவர்களோ தங்களை யெதிர்த்த கந்தர்வர்களை ஆயிரமாயிரமாகக் கொன்றார்கள்.

இதே மாதிரி கந்தர்வர்கள் நாலாபக்கங்களிலும் துரத்தி அடிக்கப்பட்டார்கள். பாண்டவர்கள் கிட்டக்கூடப் போக முடியவில்லை. அர்ஜுனன் கோபம் கொண்டு அவர்கள் மேல் தேவாயுதங்களைப் பிரயோகித்தான். அர்ஜுனன் ஆக்கினேயாஸ்திரத்தைப் பிரயோகித்து இலட்சம் கந்தர்வர்களை எமபுரம் அனுப்பி விட்டான், வில் வீரனாகிய பீமசேனனும் அநேக மாயிரம் கந்தர்வர்களைக் கொன்றான் நகுல சகாதேவர்களும் அநேக கந்தர்வர்களைக் கொன்றார்கள். மஹா வீரர்களான பாண்டவர்கள் இப்படிக் கந்தர்வர்களைக் கொன்ற போது கந்தர்வர்கள் துரியோதனனைத் தூக்கிக்கொண்டு ஆகாச மார்க்கத்தில் கிளம்பிப் போனார்கள். கந்தர்வர்கள் ஆகாசத்தில் போவதை அறிந்த அர்ஜுனன் அவர்களை அப்புறம் போகாதபடி சரகூடு கட்டித் தடுத்து விட்டான். பட்சிகள் கூட்டில் அடைபடுவது போலக் கந்தர்வர்கள் அந்தச சரக்கூட்டில் அகப்பட்டுக் கொண்டார்கள். அதனால் கோபங்கொண்ட கந்தர்வர்கள் அர்ஜுனன் மேல் சூலம், கதை, ஈட்டி, கத்தி முதலிய ஆயுதங்களைச் சொரிந்தார்கள்.

13—22. ஆயுதங்களில் வல்லவனாகிய அர்ஜுனன் உடனே அந்த ஆயுத வருஷத்தைத தடுத்து விட்டான். பிறகு தனனுடைய கூரிய அம்பினால் அந்தக் கந்தர்வர்களுடைய அவயவங்களைச சேதித்தான். ஆகாயததிலிருக்கிற கந்தர்வர்களுடைய தலைகள், கால்கள், கைகள் முதலிய உறுப்புக்கள் கல் மழை பொழிவது போலக் கீழே விழுந்தன. பிறகு கந்தர்வர்கள் பயந்து நடுங்கினார்கள். பூமியில் நிற்கிற பாண்டவர்களின் மேல் ஆயுதங்களைச் சொரிந்தார்கள். அர்ஜுனன் தன் பாணங்களினால் அவைகளைத் தடுத்துக் கந்தர்வர்களை காயப்படுத்தத் தொடங்கினான். ஸ்தூணாகர்ணம், இந்திரஜாலம், சௌரம் ஆக்கினேயம். சன்மோஹம் என்பனவாதி தெய்வாஸ்திரங்களைப் பிரயோகித்தான். தைத்தியர்கள் இந்திரனுடைய அம்புகளால் வருந்துவது போலக் கந்தர்வர்கள் அர்ஜுனன் அம்பினால் துன்பம் அடைந்தார்கள். வானத்திலிருந்து கந்தர்வர்கள் அர்ஜுனனைத் தாக்கினபோது, சரக்கூடம் அவர்களைத் தடுத்தது. இப்படிக் கந்தர்வர்கள் அர்ஜுனனால் கொல்லப்பட்ட போது, சித்திரசேனன் கோபித்து ஒரு கதையை எடுத்துக் கொண்டு அர்ஜுனன்மேல் பாய்ந்தான். அர்ஜுனன் அந்த இரும்புக் கதையை ஏழு துண்டுகளாக வெட்டினான். தன்னுடைய கதை முறிந்ததைக் கண்ட கந்தர்வ ராஜன் தன் மாயையால் யுத்தம் செய்தான்.

23—30. கந்தர்வனால் எய்யப்பட்ட சகல தெய்வாஸ்திரங்களையும் தனது தெய்வாஸ்திரங்களால் தடுத்தான். அர்ஜுனனால் தான் அபஜயம் அடைந்ததைச் சித்திரன் கண்டு மாயையால் ஒருவர் கண்ணுக்கும் தெரியாமல் மறைந்து நின்று போர் செய்தான். அர்ஜுனன் சரியான மந்திரத்தை யுச்சரித்து சப்தவேதா என்கிற தன் தெய்வாஸ்திரத்தை யெய்து அந்த மாயையை அழித்தான், மாயை நீங்கவே கந்தர்வராஜன் அர்ஜுனன் கண்ணுக்குப் புலப்பட்

டான். அர்ஜுனனை நோக்கி உன் சிநேகிதன் உன்னுடன் சண்டை செய்கிறதைப் பார் என்றான். தன் சிநேகிதன் யுத்தத்தில் இளைத்ததைப் பார்த்து அர்ஜுனன் தன் ஆயுதங்களை உடனே தன்னிடம் அழைத்துக் கொண்டான். அர்ஜுனன் சண்டையை நிறுத்தினதைக் கண்ட மற்றப் பாண்டவர்களும் சண்டை செய்வதை நிறுத்தினார்கள். பாண்டவர்களும் சித்திரசேனனும் ஒருவர்க்கொருவர் க்ஷேமம் விசாரித்துக் கொண்டார்கள். பிறகு தத்தம் இரதத்தின் மேல் உட்கார்ந்தார்கள்.

---

## 245-வது அத்தியாயம்.

கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—8 அர்ஜுனன் சித்திரசேனனைப் பார்த்து ஏ வீரனே! நீ எதற்காகக் கௌரவர்களைச் சிக்ஷித்தாய்? துரியோதனனை அவன் பத்தினியுடன் ஏன் சிறைப்படுத்தினாய்? என்று கேட்கச் சித்திரசேனன் சொல்லுகிறான். அர்ஜுனா! இந்தத் துஷ்டனான துரியோதனனும் கர்ணனும் இங்கே வருவார்கள் என்பதை நான் நெடு நாளைக்கு முன்னாலேயே அறிவேன். நீ காட்டில் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறாயென்றும், உன்னைப் பாதுகாப்பவர் ஒருவருமில்லையென்றும், தான் ஐசுவரியத்தில் வாழ்கிற கர்வத்தினாலே நீங்கள் கஷ்டப்படுகிறதைப் பார்க்க விரும்பி வந்தான். உங்களைப் பரிகாசம் பண்ணவும், திரௌபதியை அவமானப் படுத்தவும் கருதி வந்தான். இதை உணர்ந்த தேவேந்திரன் என்னை நோக்கி, நீ போய் அர்ஜுனனைக் காப்பாற்று; துரியோதனனையும் அவனுடைய மந்திரிகளையும் சிறையாக்கிக் கொண்டுவா. அர்ஜுனன் எனக்குப் பிரிய நேசன். பாண்டவர்கள் என் சிஷ்யர்கள் என்று சொன்னான். ஆகையால் நான் இங்கே வேகமாய் வந்தேன். இந்தத் துஷ்டன் இப்போது சிறைப்பட்டிருக்கிறான். நான் இப்போது தேவலோகம் போகிறேன். இந்திரன் கட்டளையால் இந்தத் துராத்மாவையும் கூடக் கொண்டு போகிறேன் என்றான்.

9— . சித்திரசேனா! நீ எனக்குப் பிரியமானதைச் செய்ய விரும்பினால் தர்மராஜாவின் கட்டளைப்படி துரியோதனனை விட்டுவிடு. அவன் எங்களுடைய சகோதரன் என்றான். சித்திரசேனன், அர்ஜுனா! இவன் எப்போதும் அகங்காரமுடையவன். இவன் விடத் தக்கவனல்ல. இவன் தர்மராஜாவையும் திரௌபதியையும் வஞ்சித்தான். இவன் இங்கே வந்ததற்குக் காரணம் இன்னதென்பது தர்மராஜாவுக்குத் தெரியாது. தர்மராஜாவுக்கு இவைகளைச் சொல்லுவோம். அதன் பின் அவரது இஷ்டம்போலச் செய்யட்டும் என்றான். பிறகு எல்லாரும் தர்மராஜாவிடம் போய் நடந்தவைகளை யெல்லாம் சொன்னார்கள். தர்ம புத்திரர் அவைகளைக் கேட்டுக் கந்தர்வர்களைப்

ழ்ந்து துரியோதனனை விட்டுவிடும் என்று சொன்னார். அன்றியும் சித்திர சேனு! நீர் மஹா வல்லமை யுள்ளவரா யிருந்தும் துரியோதனனையும் அவனுடைய பிரதானிகளையும் கொல்லாமலிருந்தது எங்களுடைய அதிர்ஷ்டந்தான். இது நீங்கள் என்னிடம் வைத்திருக்கிற மிகுந்த பட்சத்தினுலே தான். இவனை விடுவிப்பதினுலே என் குல மகிமையும் காப்பாற்றப் படுகிறது. நான் உங்கள் எல்லாரையும் பார்த்து மகிழ்ச்சி அடைகிறேன். நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும். அதைக் கட்டளை யிடுங்கள். நீங்கள் விரும்பியதைப் பெற்றுக் கொண்டு நீங்கள் உங்கள் இடத்திற்குப் போங்கள் என்று இப்படித் தர்மராஜா வேண்டக் கந்தர்வர்கள் மனமகிழ்ந்தார்கள். கந்தர்வர்கள் துரியோதனனை விட்டுச் சித்திரசேனனுடன் போய் விட்டார்கள். பிறகு தேவேந்திரன் அங்கே வந்து மடிந்த தேவர்களை யெல்லாம் அமிர்தத்தினுல் பிழைப்பித்தான். பாண்டவர்களும் தங்கள் சுற்றத்தாரை மீட்டுக்கொண்டார்கள். தாங்கள் செய்த அரும் செய்கைக்காக மகிழ்ச்சி யடைந்தார்கள். கௌரவர்களும், அக்கினியைப் போல விளங்குகிற பாண்டவர்களைப் புகழ்ந்தார்கள் யுதிஷ்டிரர் துரியோதனனை நோக்கி அன்பினுல் சொல்லுகிறுர். குழந்தாய்! இனி ஒருபோதும் இப்படிப்பட்ட முரட்டுத்தனமான காரியத்தைச்செய்யாதே. துஷ்டத்தனம் செய்கிறவனுக்கு ஒருபோதும் மகிழ்ச்சி யில்லை கௌரவராஜனே! உன் சகோதரர்களுடன் க்ஷேமமாக இரு. நீ சுகமாய் நகரத்துக்குப் போ. மனதில் வருத்தம் வையாதே என்றுர். அதன் பின் துரியோதனன் தர்ம ராஜாவை வணங்கினுன். வெட்கத்தினுலே அவனுடைய இருதயம் இரண்டாய் வெடிப்பது போலிருந்தது. அவன் பிணத்தைப் போலத் தன் நகரத்தை நோக்கிப் போனுன். துரியோதனன் போன பிறகு யுதிஷ்டிரர் தமது சகோதரர்களும் பிராமணர்களும் சூழ வீற்றிருந்தார். தேவர்களால் சூழப்பட்ட இந்திரனைப் போல அந்தத் தைத்திய வனத்தில் வசித்தார்.



## 246-வது அத்தியாயம்.

கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—4. ஜனமேஜய மஹாராஜன் வைசம்பாயனரை நோக்கித், துரியோதனன் சத்துருக்களிடத்தில் அபஜயப்பட்டுச் சிறையாய்ப் பின், பாண்டவர்களால் விடுபட்டானல்லவா? அதன் பின் அகங்காரம், துஷ்டத்தனம், கருவம், பேராசை, மூடத்தனம் இவைகளையுடைய துரியோதனன் அஸ்தினுபுரம் போய்ச்சேர்ந்து, முன்போலப் பாண்டவர்களை நிந்தித்திருக்க மாட்டான். தன்னைப் பற்றிப் பெருமை பாராட்டி யிருக்கவு மாட்டான் என்று நினைக்கிறேன். ஆகையால் முனிவரே! துரியோதனன் வெட்கம் அவமானம் இவைகளை யுடையவனுய் அஸ்தினுபுரம் போன பின் என்ன செய்தான். அவைகளை விரிவாய்க் கேட்க விரும்புகிறேன். அதை எனக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்க வைசம்பாயனர் சொல்லுகிறுர்.

5—9. ஜனமேஜய மஹா ராஜனே! தர்ம புத்திரர் துரியோதனனை விடுதலை செய்த பின், அவன் தலையைக் குனிந்துகொண்டு, வெட்கத்துடன் அவமானம், துக்கம் இவைகளையும் உடையவனாய் மெதுவாய் அப்புறம் போனான். நால்வகைச் சேனைகளும் சூழ அஸ்தினாபுரத்தை நோக்கிச் சென்றான். அவனுடைய இருதயம் துக்கத்தால் நிறைந்திருந்தது. அவனுடைய மனம் அவனுடைய தோல்வியைக் குறித்துச் சிந்தித்துக் கொண்டேயிருந்தது. போகும் வழியில் புல்லும் தண்ணீரும் நிறைந்திருந்த ஒரு இடத்தில் தன் தேரை விட்டுக் கீழே யிறங்கினான். அங்கே தனக்குப் பிரியமுள்ள ஒரு நல்ல இடத்தில் தன் கூடாரத்தை யடித்தான். அந்தக் கூடாரத்தைச் சூழ யானை குதிரை தேர் காலாள் ஆகிய நால்வகைப்படைகளும் சூழ நின்றன. அங்கே உயரமான ஒரு கட்டிலின்மேல் நெருப்பைப்போல உட்கார்ந்து கொண்டான். கிரகணம் பிடித்த சந்திரனைப் போல இருந்தான். இரவு முடிகிறபோது கர்ணன் துரியோதனனிடம் வந்து சொல்லுகிறான்.

10— . காந்தாரி புத்திரனே! நீ உயிருடனிருப்பது அதிர்ஷ்டந்தான் நாங்கள் மறுபடியும் உன்னிடம் வந்து சேர்ந்ததும் எங்கள் அதிர்ஷ்டம்தான். நினைத்த உருவங்களை எடுத்துக்கொள்ளக் கூடிய வல்லமையுள்ள கந்தர்வர்களை அதிர்ஷ்ட வசத்தால் நீ வென்றிருக்கிறாய். அரசனே! அந்தப் பயங்கரமான யுத்தத்தில் கந்தர்வர்களை ஜயித்த உன் சகோதரர்களை நான் பார்க்க நேரிட்டதும் நல்ல அதிர்ஷ்டம் தான். கந்தர்வர்கள் என்னை எதிர்த்தபோது அவர்களை ஜயிக்க வல்லமையின்றி உன் கண் எதிரில் ஓடிப் போனது உனக்குத் தெரியும். சத்துருக்களுடைய அம்புகள் என் சரீரத்தைத் துளைத்தபடியால் நான் எதிர்த்து நிற்க மாட்டாமல் தப்பித்துக்கொண்டு ஓடிப் போனேன். அந்தப் பயங்கரமான சண்டையில் நீ தப்பித்துக்கொண்டுஉன் சேனை, குதிரை, யானை, மனைவி மக்களுடன் மீண்டு வந்திருப்பது எனக்கு அதிசயமாகத் தோன்றுகிறது. பாரதனே! இன்று பெருஞ் சண்டையில் நீ உன் தம்பிமார்களுடன் நின்று சாதித்த சாமர்த்தியம் மற்ற எவருக்கும் வாராதுஎன்று கர்ணன் சொன்னான். அதைக் கேட்ட துரியோதனன் கண்களில் நீர் பெருக விம்மி அழுது கொண்டு கர்ணனை நோக்கிச் சொல்லுகிறான்.

---

## 248-வது அத்தியாயம்.

### கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—8. இராதை புத்திரனே! என்ன நடந்தது என்பது உனக்குத் தெரியாது. ஆகையாலே நீ சொன்னதில் எனக்குக் கோபம் வரவில்லை. கந்தர்வர்களை நான் ஜயித்து விட்டதாக நீ நினைத்திருக்கிறாய். என் சகோதரர்கள் நெடு நேரம் என்னுடனிருந்து கந்தர்வர்களை யெதிர்த்தார்கள். இரு பக்கத்தி

லும் அநேகர் மடித்தார்கள். கந்தர்வர்கள் மாயையால் யுத்தம் செய்த போது நாங்கள் எதிர்த்து நிற்க முடியவில்லை. நாங்கள் தோற்றுப் போனோம். சேனைகள், யானைகள், குதிரைகள், குழந்தைகள், மனைவிகள், மந்திரிகளுடன் சிறை செய்யப்பட்டோம். நாங்கள் பெரும் துக்கத்தை அடைந்தோம். கந்தர்வர்கள் எங்களை ஆகாய மார்க்கமாகக் கொண்டு போனார்கள். பிறகு நமது சேனையில் உள்ள சில மந்திரிகளும் வீரர்களும், ஒத்தாசை செய்யப் பின்வாங்காத பாண்டவர்களிடம் ஒத்தாசைக்காகப் போனார்கள். போய் அவர்களிடத்தில் உம்முடைய சகோதரர்களான துரியோதனன் முதலானவர்கள் புத்திரர் களத்திர மித்திரர்களுடன் கந்தர்வர்களிடம் சிறையானார்கள். கந்தர்வர்கள் அவர்களுடன் ஆகாய மார்க்கமாகப் போகிறார்கள். எங்கள் அரசனைப் பத்தினிமார்களுடன் விடுவியுங்கள். கௌரவ ஸ்திரீகள் அவமானப்படும்படி செய்யாதீர்கள் என்று சொன்னார்கள்.

9—10. எப்போதும் தர்மத்தையே சிந்திக்கிற பாண்டவ சிரேஷ்டரான யுதிஷ்டிரர் பாண்டவர்களைத் தேற்றி எங்களை விடுவிக்கும்படி கட்டளையிட்டார். பிறகு பாண்டவர்கள் கந்தர்வர்களிடம் வந்து, அவர்களிடத்தில் இனிய வசனங்களால் பேசி எங்களை விடும்படி கேட்டார்கள். அந்தப் பாண்டவர்களுக்கு எங்களைப் பராக்கிரமத்தால் விடுவிக்கச் சக்தி யிருந்தும் நல்ல வார்த்தைகளால் கேட்டார்கள். கந்தர்வர்கள் எங்களைச் சிறைவிடச் சம்மதியாமையால் பீமன், அர்ஜுனன், நகுலன், சகாதேவன் இந்நால்வரும் கந்தர்வர்கள்மேல் சரமாரி பெய்யத் தொடங்கினார்கள். கந்தர்வர்கள் தோல்வி யடைந்து எங்களை யிழுத்துக்கொண்டு சந்தோஷத்துடன் ஆகாய மார்க்கமாக ஓடினார்கள். அப்போது எங்கே பார்த்தாலும் அம்பினால் வலை போலப் பின்னப்பட்டிருந்தது. அந்தப் பாணவலை அர்ஜுனனுடைய சாமர்த்தியத்தால் செய்யப்பட்டது. எந்தத் திசையிலும் அம்பு வலை சூழ்ந்து மூடிக்கொண்டிருப்பதை உணர்ந்த கந்தர்வராஜன் அர்ஜுனனுக்கு எதிரில் வந்தான். பிறகு சித்திரசேனனும் அர்ஜுனனும் ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டார்கள். யோகக்ஷேமமும் விசாரித்துக் கொண்டார்கள். சித்திரசேனன் மற்றப் பாண்டவர்களையும் ஆலிங்கனம் செய்து கொண்டான். அவர்களும் ஒருவருக்கொருவர் யோக க்ஷேமங்களை விசாரித்துக்கொண்டார்கள். பிறகு கந்தர்வர்கள் கவசங்களைக் கழற்றி விட்டு, யுத்தாயுதங்களையும் களைந்து வைத்து விட்டுச் சந்தோஷமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு யுதிஷ்டிரரிடம் சென்றார்கள். யுதிஷ்டிரரும் சித்திரசேனனும் மகிழ்ச்சியுடன் ஒருவரை ஒருவர் வணங்கினார்கள்.

---

## 248-வது அத்தியாயம்

### கோஷயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1— . பிறகு அர்ஜுனன் சித்திரசேனனிடம் வந்து, சிரித்த முகத்துடன் அவனை நோக்கி, கந்தர்வாதிபனே! வீரனே! என் சகோதரர்களைச்

சிறைநீக்கிவிடு. பாண்டவர்கள் உயிரோடிருக்கிறவரையிலும் அவர்களை ஒருவரும் அவமானப் படுத்தக்கூடாது என்றான். உடனே கந்தர்வராஜன் நாம் இரகசியமாய்ச் செய்து கொண்டுவந்த சங்கதிகளை வெளிப்படுத்தி விட்டான். அதாவது பாண்டவர்கள் தங்கள் பத்தினியுடன் துக்கப்பட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்து நாம் மகிழ்ச்சி யடையக் கருதி வந்ததை கந்தர்வன் நமது இரகசியத்தை வெளிப்படுத்தினதும், நாம் பூமியில் உயிருடன் இருக்க விரும்பவில்லை. பிறகு பாண்டவர்களும் யுதிஷ்டிரரைப் பார்க்கச் சொன்னார்கள். யுதிஷ்டிரருக்கு நமது இரகசிய யோசனையைச் சொல்லி எங்களைக் கட்டியிருந்த படியே யுதிஷ்டிரரிடம் ஒப்புவித்தான். ஐயோ! பத்தினி மார்களுக்கு முன் என்னை யுதிஷ்டிரருக்குப் பகுதியாகச் செலுத்தினபோது எனக்கு உண்டான விசனம் இப்படிப்பட்டதென்று சொல்ல முடியாது. என்னைச் சங்கிலியால் கட்டி என் சத்துருக்களுடைய அதிகாரத்துக்கு உள்ளபடி கொடுத்தது ஐயோ! எனக்குப் பொறுக்க முடியாத துக்கம். அவர்களை நான் முன்பு துன்பப்படுத்தினேன். அவர்கள் எனக்கு ஜன்மபகைவர்கள். அப்படிப்பட்டவர்கள் என்னைச் சிறைமீட்டார்கள். என் சத்துருவான யுதிஷ்டிரனிடம் என் உயிரைக் கடனாக வாங்கிக் கொண்டேன். (அவர்களால் இரட்சிக்கப்பட்டேன்.) வீரனான கர்ணா! நான் இப்படி உயிர்த்தானம் பெற்று ஜீவிப்பதை விட, அந்தச் சண்டையில் மடிந்திருப்பேனானால் மெத்த நன்மையா யிருந்திருக்கும். கந்தர்வனால் நான் யுத்தத்தில் மடிந்திருப்பேனானால் என் புகழ் உலகம் எல்லாம் பரவியிருக்கும். நானும் சொர்க்கம் அடைந்து பேரின்பத்தைப் பெற்றிருப்பேன். வீரனே! நான் இப்போது என்ன உத்தேசிக்கிறேன் என்பதைச் சொல்கிறேன் கேள்.

11—21. கர்ணா! நான் இவ்விடத்திலேயே பட்டினியா யிருந்து மடிவேன். நீங்கள் எல்லாரும் வீட்டுக்குத் திரும்பிப்போங்கள். என் சகோதரர்களும் அஸ்தினாபுரத்துக்குப் போகட்டும். துச்சாதனன் முதலான என் சுற்றத்தார் எல்லாரும் நகரத்துக்குப் போகட்டும். சத்துருக்களால் அவமதிக்கப்பட்ட நான் மறுபடியும் நகரத்துக்கு வரமாட்டேன். நான் எப்போதும் என் சத்துருக்களுக்கு துக்கத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தேன். அவர்களால் பெருமை யுள்ளவனாக மதிக்கப்பட்டிருந்தேன். என் சிநேகிதர்களுக்கும் மகிழ்ச்சியுண்டாகும்படி செய்துவந்தேன். இப்போது என் சத்துருக்களுக்கு மகிழ்ச்சியும் நேசர்களுக்கு துக்கத்தையும் உண்டாக்குகிறவனானேன். நான் அஸ்தினாபுரத்துக்குத் திரும்பிப்போய்த் திருதராஷ்டிர மஹாராஜனுக்கு என்ன சொல்வேன்? பீஷ்மர், துரோணர், கிருபர், அசுவத்தாமர், பாஹ்லீகன், சோமதத்தன் முதலானவர்களுக்கு என்ன சொல்வேன். என் சுகத்தைப் பற்றிக் கேட்பவர்களுக்கு என்ன பதில் சொல்வேன்? இதுவரைக்கும் என் சத்துருக்களுடைய சிரசின்மேல் நின்று கொண்டிருந்தேன். என் சத்துருக்களுடைய மார்பில் மிதித்து நின்றுகொண்டிருந்தேன். இப்பொழுது நான் என்னுடைய மேலான நிலைமையிலிருந்து தாழ்ந்துபோனேன். நான் இப்போது

அவர்களுக்கு என்ன சொல்வேன்? என்னைப்போல கருவம், பெருமையும் உள்ளவர்கள் வாழ்வு செல்வம், அறிவு, முதலியவற்றை அடைந்தாலும் அது நீடித்து நிற்பதில்லை. நான் மூடத்தனத்தினாலே தகாத கொடிய செய்கையைச் செய்து விட்டேன். அதனாலே இப்போது நான் துக்கத்தை அனுபவிக்கிறேன். ஆகையால் நான் பட்டினி கிடந்து மரிப்பேன். நான் ஜீவித்திருக்க முடியாது. சொந்தச் சத்துருவினாலே விடுவிக்கப்பட்டு, ஆண்மையுள்ள எந்த மனிதன்தான் ஜீவித்திருப்பான்? இறுமாந்திருந்த நான் ஆண்மை யிழந்து சிறைப்பட்டிருந்ததைப் பார்த்துப் பகைவர் சிரித்தார்கள். மிகுந்த விசனத்துடன் இருந்த வீரர்களான பாண்டவர்கள் சந்தோஷத்துடன் பார்த்தார்கள்.

22—27. இப்படி விசனத்துடன் அழுதுகொண்டு துச்சாதனனை நோக்கித் துச்சாதனா! என் வார்த்தையைக் கேள். நான் கொடுக்கிற இராஜ்யத்தை ஏற்றுக்கொண்டு, கர்ணன் சகுனி யிவர்களுடைய ஒத்தாசையைப் பெற்று இந்தப் பூமியைப் பரிபாலனம்செய். விருத்திராசுரனைச் சங்கரித்த தேவேந்திரன் மருத்துக்களைக் காப்பதுபோல உன் சகோதரர்களைக் காப்பாற்று. தேவர்கள் எல்லாரும் உன்னை அனுசரித்து வாழட்டும். பிராமணர்களுக்கு எப்போதும் உபகாரசம்பளம் கொடு. சுற்றத்தார்களுக்கும் நேசர்களுக்கும் ஆதரவாயிரு. விஷ்ணு தேவர்களைக் காப்பாற்றுவது போல நீ உன் சுற்றத்தார்களைக் காப்பாற்று. உன் குருக்களை எப்போதும் காப்பாற்று. போ; பூமியைப் பரிபாலனம் செய். உன் நண்பர்களுக்கு மகிழ்ச்சி உண்டாக்கு; சத்துருக்களைச் சிட்சை செய். போ என்று தலையைக் குனிந்துகொண்டு சொன்னான்.

28—35. துரியோதனன் சொன்னதைக் கேட்ட துச்சாதனன் தன் இரண்டு கைகளையும் குவித்து அஞ்சலியஸ்தனாய் நின்று, துரியோதனன் பாதத்தில் நமஸ்காரம் பண்ணி அழுது கொண்டு சொல்லுகிறான். அண்ணா! அது ஒருபோதும் கூடாது. பூமி பிளந்தாலும், வானம் துண்டுகளாகப் பிளந்து விழுந்தாலும், சூரியன் தன் கிரணங்களை யிழந்தாலும், சந்திரன் தன் குளிர்ச்சியை யிழந்தாலும், காற்று தன் வேகத்தை யிழந்தாலும், இமயமலை தன் இடத்தை விட்டுப் பெயர்ந்தாலும், சமுத்திரம் வற்றி வரண்டாலும், அக்கினி உஷ்ணத்தை யிழந்தாலும் மஹா ராஜனே! நான் உன்னையின்றி அரசாளமாட்டேன். எங்கள் வம்சத்தில் நீர் ஒருவரே நூறு வருஷம் இருந்து அரசாளவேண்டும் என்று சொல்லி அரசனுக்கு முன் இரைந்து கதறி அழுதான். துரியோதனனுடைய பாதங்களைப் பிடித்துக் கொண்டான். துச்சாதனனும் துரியோதனனும் துக்கப்படுகிறதைப் பார்த்துக் கர்ணன் அவர்கள் சமீபத்தில் வந்து சொல்லுகிறான்.

36— . கௌரவ ராஜ குமாரர்களே! சாதாரண ஜனங்களைப் போலச் சிறு பிள்ளைத்தனமாய் ஏன் அழுகிறீர்கள்? அழுகிறதினால் துக்கத்தை ஒழிக்க முடியாது. அழுகை துக்கத்தை நீக்காது. துக்கத்தை ஒழிக்க விரும்பினால் பொறுமையை அடைய வேண்டும். துக்கப்படாதீர்கள். அதனால் உங்கள்

சத்துருக்களுக்கு மகிழ்ச்சியை உண்டாக்காதீர்கள். அரசனே! உன்னை விடு வித்ததனாலே பாண்டவர்கள் தங்களுடைய கடமைகளைச் செய்தார்கள். ஒரு அரசனுடைய இராஜ்யத்திலிருக்கிறவர்கள் அரசனைக் காப்பாற்ற வேண்டியது அவர்களுடைய கடமையேயாம். உன்னுடைய இராஜ்யத்திலே தான் பாண் டவர்கள் சுகமாய் வாழ்கிறார்கள். சாதாரண மனிதர்களைப் போல நீ விசனப் படாதே. நீ பசியினால் இறக்கத் துணிந்ததைப் பற்றி உன் தம்பிகள் எல்லாரும் துக்கப்படுகிறார்கள். நீ க்ஷேமமாயிரு; உன் சகோதரர்களைச் சந்தோஷப் படு த்து. உன் நகரத்துக்கு வா; எழுந்திரு என்று சொன்னான்.

---

## 249-வது அத்தியாயம்.

கோஷயாத்திரா பர்வத்தொடர்ச்சி.

1— . கர்ணன் மறுபடியும் துரியோதனனைப் பார்த்து அரசனே! நீ இன்றைய தினம் சிறு பிள்ளைத்தனமாய் நடந்து கொள்கிறாய். நீ பாண்டவர் களால் விடுவிக்கப்பட்டதனால் என்ன அதிசயம் இருக்கிறது? ஒரு அரசனுடைய இராஜ்யத்திலிருப்பவர்கள் விசேஷமாய் யுத்த வீரர்களாயிருக்கிறார்கள். அவ ர்கள் அரசனுக்குத் தகுந்தபடி நடக்க வேண்டியவர்களே. அவர்கள் அரசனுக் குத் தெரிந்தவர்களானாலும் தெரியாதவர்களானாலும் அரசனைக் காப்பது அவ ர்களுடைய கடமை. சத்துருக்களை ஜயிக்கிற வல்லமையுடைய அரசர்கள் சத்துருவினால் தோல்வி அடைவதும் சகஜம்தான். அதனாலேதான் அரசர் கள் தங்களுடைய சேனைகளைக் காவலாகக் கொள்கிறார்கள். ஆகையினாலே உன் இராஜ்யத்தில் வசிக்கிற பாண்டவர்கள் உன்னை விடுவித்தார்கள். அதற் காக நீ வருத்தப்படுவானேன். நீ சண்டைக்குப் புறப்பட்டபோது பாண்டவர் கள் உன்னுடன் வராமலிருந்தது அவர்களிடத்தில் பெரிய குற்றமாகும். அவ ர்கள் வெகு காலமாய் உனக்கு அடிமையாய்விட்டார்கள். அவர்களுக்குத் தைரியமும், சாமர்த்தியமும், யுத்தத்தில் பின் வாங்காத பராக்கிரமமும் இருக் கிறபடியால் உனக்கு உதவி செய்ய வேண்டியவர்களே. இப்பொழுது நீ பாண் டவர்களுடைய சகல ஐசுவரியங்களையும் அனுபவிக்கிறாய். அப்படியிருந்தும் பாண்டவர்கள் முயற்சியுடையவர்களாகவே யிருக்கிறார்கள். அவர்கள் பட்டி னியால் சாவக் கருதவில்லை. ஆகையால் அரசனே! நீ துக்கப்படாதே. எழுந் திரு. உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். அரசனுக்கு உதவி செய்யக் கட மைப் பட்டிருப்பவர்கள் உதவி செய்ததற்காகத் துக்கப்படுவானேன்? அரசர்க் கரசனே! நான் சொல்லுகிறபடி நீர் நடவா விட்டால் நானும் உமக்குப் பணி விடை செய்துகொண்டு இங்கே யிருந்து விடுகிறேன். உம்மை விட்டு நான் ஒருபோதும் ஜீவிக்கமாட்டேன். நீ பட்டினியில் இறக்கத் துணிந்தால் நீ அர சர்களால் நகைக்கப்படுவாய் என்றான். கர்ணன் இப்படிச் சொல்லியும் துரி

யோதனன் சாவதற்கே தீர்மானித்துக்கொண்டு தான் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்திராமலிருந்தான்.

---

## 250-வது அத்தியாயம்.

### கோஷயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—10. அவமானத்தைச் சகியாத துரியோதனன் பிராணனை விடுகிற எண்ணத்துடன் உட்கார்ந்திருக்கிறதைச் சகுனி பார்த்துச் சொல்லுகிறான். ஏ கௌரவனே! நீ கர்ணன் சொன்னதைக் கேட்டாயே. அவன் சொன்ன வசனங்களெல்லாம் புத்திசாலித் தனமா யிருக்கின்றன. நான் ஜயித்துக் கொடுத்த பெரு வாழ்வை ஏன் இழந்து விடக் கருதுகிறாய்? மூடத்தனத்தினாலே ஏன் பிராணனை விடத் துணிகிறாய்? நீ அறிவுள்ளவர்களுடன் பழகினதில்லையென்று தோன்றுகிறது சூளையிலிடாத பானை நீரினால் அழிகிறது போலத் தன்னை அடக்கிக் கொள்ளும் சக்தி யில்லாதவன் துக்கம் அல்லது மகிழ்ச்சியால் திடீரென்று தன் வாழ்வை யிழக்கிறான். தைரியமில்லாமலிருக்கிறவனும், ஆண்மையை யிழந்தவனுமான அரசன், தாமதம் செய்யும் இயல்புள்ளவனும், சிற்றின்பப் பிரியனுமான அரசனைக் குடிகள் ஒருபோதும் மதிக்கமாட்டார்கள். நீ உபகாரத்தை யடைந்திருந்தும் அனுவசியமாக வருத்தப்படுகிறாய். பாண்டவர்கள் செய்த உபகாரச் செய்கைக்காக நீ துக்கப்பட்டுத் தகாத காரியத்தைச் செய்யத் துணியாதே. அரசர்க்கரசனே! பாண்டவர்கள் உனக்கு உபகாரம் செய்ததற்காக மகிழ்ந்து அவர்களுக்கு வெகுமதி செய்வதற்குப் பதிலாகத் துக்கப்படுகிறது தகுதியல்ல. உன்னுடைய இந்த நடக்கை முற்றும் ஒவ்வாதது. ஆகையால் மகிழ்ச்சியா யிரு. உன் பிராணனை விடாதே. மன மகிழ்ச்சியுடன் அவர்கள் உனக்குச் செய்த நன்மையை யோசித்துப் பார்: அதற்காக அவர்களுடைய இராஜ்யத்தை அவர்களுக்குக் கொடுத்து விடு. அதனாலே நீ தர்ம குணமுள்ளவனுவாய் இந்தத் துர்ச் செய்கையை விட்டு விடு. பாண்டவர்களிடம் சகோதர வாஞ்சை யுள்ளவனாக இரு. நீ அவர்களுக்குச் சிநேகிதனா யிரு. அவர்களை உனக்குச் சிநேகிதர்களாகச் செய்து கொள். அவர்களுடைய பிதிரார்ஜிதமான இராஜ்யத்தை அவர்களுக்குக் கொடுத்து விடு. பிறகு உனக்கு மகிழ்ச்சி உண்டாகும் என்றான்.

11—21. சகுனி சொன்ன வசனங்களைக் கேட்டு, தன் பாதத்தில் விழுந்து கிடக்கிற துச்சாதனனைப் பார்த்து அன்பினாலே அவனைத் தழுவிக் கொண்டு, உச்சி மோர்ந்து கொண்டான். கர்ணன் சகுனி யிருவருங் கூறிய வசனங்களைக் கேட்டு வெட்கமுடையவனாய்ச் சாவதற்கே நிச்சயித்தான். தன் நண்பர்கள் சொன்னதை யெல்லாம் கேட்டுத் துக்கத்துடன் அவர்களை நோக்கித், தர்மம், ஐசுவரியம், சிநேகம், வாழ்வு, அரசு, போகம் இவைகளாலே இனி எனக்கு ஆக வேண்டியது ஒன்றுமில்லை. ஒருவரும் என்னைத் தடுக்காதீர்கள்.

எல்லாரும் என்னை விட்டு விலகிப் போங்கள். நான் பட்டினியால் உயிர் விடவே தீர்மானித்து விட்டேன். நீங்கள் எல்லாரும் நகரத்துக்குத் திரும்பிப் போங்கள். என குருக்களைக் காப்பாற்றுங்கள் என்றான். அவர்கள் மன்னர்மன்னனே! பரத வம்சோத்தமனே! நீ நடக்கிற வழிதான் எங்களுக்கும். ஆகையால் உன்னையின்றி நாங்கள் எப்படி நகரத்துக்குப் போகத் துணிவோம்? என்றார்கள். அரசன் ஒன்றாலும் மனது சலியாமல் சாகவே தீர்மானித்தான். பிறகு பூமியின்மேல் தெர்ப்பப் புல்லைப் பரப்பி, ஸ்நானம் செய்து பரிசுத்தனாய், அதன் மேல் உட்கார்ந்தான். கந்தைகளையும், குசத்தையும் உடுத்துக் கொண்டு விரதத்தில் அமர்ந்து விட்டான். துரியோதனன் சொர்க்கத்தை அடைய விரும்பிப் பேசாமல் மௌனமாயிருந்து விட்டான். புறக்கரண சேஷ்டைகளை எல்லாம் ஒடுக்கி விட்டான். இருதய கமலத்தில் கடவுளைச் சிந்தை செய்யலானான். இப்படி மன்னா மன்னவன் மரணம் அடைய முயன்றதைத் தைத்தியர்களும் தானவர்களும் உணர்ந்துகொண்டார்கள்.

22—30. தேவர்களால் துரத்தி அடிக்கப்பட்ட தைத்தியர்கள் பாதாள லோகத்தில் வசித்திருந்தார்கள். துரியோதனன் இறந்து போனால் பூமியிலிருக்கிற தங்கள் பட்சத்தார் தோல்வி யடைவார்கள் என்று அவர்கள் உணர்ந்து கொண்டு பயந்தார்கள். அவனைத் தங்களிடம் அழைப்பதற்காக ஒரு வேள்வியை யியற்றினார்கள். சுக்கிரன், பிருகஸ்பதி யிவர்களுடைய விதிமுறைகளை யறிந்தவர்கள் முறைப்படி மந்திரங்களை யுச்சரித்து வேள்வியைத் தொடங்கினார்கள். அதர்வண வேதத்திலும் உபநிஷத்திலும் கூறப்பட்ட மந்திரம் தியானம் இவைகளுடன் வேதியர்கள் வேள்வியைத் தொடங்கி நெய்யாலும் பாலாலும் அக்கினியில் ஓமம் செய்தார்கள். அது முடிந்த வுடனே, அந்த யாக குண்டத்திலிருந்து ஒரு தெய்வம் வெளிப்பட்டுவந்து நான் உங்களுக்கு என்ன செய்யவேண்டும் என்று கேட்டது. தைத்தியர்கள் மனம் மகிழ்ந்து இப்போது பட்டினியுடனிருந்துகொண்டிருக்கிற துரியோதன மஹாராஜனை இங்கே கொண்டுவந்து விடு என்றார்கள். அந்தப் பெண் தெய்வம் அப்படியே ஆகட்டும் என்று சொல்லிவிட்டு உடனே மறைந்து விட்டது. உடனே ஒரு நிமிஷத்துக்குள் துரியோதனன் இருக்கிற இடத்துக்கு வந்து சேர்ந்தது. துரியோதனனைத் தூக்கிக்கொண்டு பாதாள வுலகம் வந்து தானவர்களை நோக்கி இதோ துரியோதனன் வந்துவிட்டான் என்று சொல்லிற்று. இராக் காலத்தில் தங்கள் கூட்டத்துக்கு மத்தியில் துரியோதனனைக் கண்டு தானவர்கள் மனம் மகிழ்ந்து, முகம் மலர்ந்து, கண் திறந்து பார்த்துத் துரியோதனனைப் புகழ்ந்து சொல்கிறார்கள்.

---

## 251-வது அத்தியாயம்.

கோஷயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—5. அரசர்க்கரசனே! பரதவம்சத்தை விளக்குகிறவனே! துரியோதனா! எப்போதும் வீரர்களும் மகிமையுள்ளவர்களும் உன்னைச் சூழ்ந்திருக்கிறார்கள். அப்படியிருக்கையில் ஏன் இந்த முரட்டுத்தனமான தொழிலைச் செய்கிறாய்? ஏன் பட்டினி கிடக்கிறாய்? தற்கொலை செய்து கொள்ளுதல் எப்போதும் நரகத்தை அளிக்கும். பழிக்கும் இடமாம். உன்னைப் போலப் புத்திசாலியாயிருப்பவர்கள் இப்படிப்பட்ட பாவச் செய்கைகளைச் செய்யமாட்டார்கள். தங்கள் நன்மைக்கு விரோதம் தேடமாட்டார்கள். இவைகளெல்லாம் அவர்களுடைய காரியங்களைக் கெடுத்து விடும். ஆகையால் அரசனே! உன்னுடைய இந்த எண்ணத்தை விட்டுவிடு. இது நீதியை அழிக்கும். பாக்கியத்தையும் சுகத்தையும் புகழையும் சக்தியையும் மகிமையையும் அழிக்கும். சத்துருக்களுக்கு மகிழ்ச்சி தரும். அரசனே! உன்னுடைய தெய்வத் தன்மையுள்ள பிறப்பைத் தெரிந்து கொண்டு பொறுமையாயிரு.

6—18. மஹாராஜனே! பூர்வ காலத்தில் நாங்கள் மகேசுவரனை நோக்கித் தவம் செய்து உன்னை அரசனாக அடைந்தோம். உன் சரீரத்தின் மேல் பாகம் வஜ்ரத்தால் செய்யப்பட்டுள்ளது. ஆகையால் அது எவ்விதமான ஆயுதங்களாலும் அழியாது. உன் தேகத்தின் கீழ்ப்பாகம் பெண்களை வசீகரிக்கத் தக்க அழகுடன் மலரால் செய்யப்பட்டுள்ளது. தேவியால் இயற்றப் பட்டது. அரசனே! உன் தேகம் ஈசுவரனாலும் தேவியாலும் உண்டாக்கப் பட்டது. ஆகையால் நீ தெய்வப் பிறப்பு உள்ளவன், மனிதன் அல்ல. பகதத்தன் முதலான பராக்கிரமசாலியான க்ஷத்திரியர்கள் தெய்வாயுதங்களால் உன் சத்துருக்களை வெல்வார்கள். ஆகையால் நீ துக்கப்படக் காரணமில்லை. நீ பயப்படவும் காரணமில்லை. உனக்கு உதவி செய்யும்பொருட்டு அநேக தானவர்கள் பூமியில் பிறந்திருக்கிறார்கள். மற்ற அசுரர்கள் பீஷ்மர், துரோணர், கர்ணன், இவர்களைப் பற்றியிருப்பார்கள். அதனால் அவர்கள் பாண்டவர்களிடத்தில் பிரியத்தை விட்டு அவர்களோடு சண்டையிடுவார்கள். பீஷ்மதுரோணாதிகளுடைய இருதயத்தில் தானவர்கள் பிரவேசித்து அவர்களை வசப்படுத்திக் கொண்ட பின், அவர்கள் பாண்டவர்களிடத்தில் உள்ள அன்பை ஒழித்து விட்டுக், கடின சித்தம் உள்ளவர்களாய்த் தங்களை எதிர்த்த பகைவர்களைப் புத்திரர், மித்திரர், பிதா, சகோதரர்களுடன் கொல்வார்கள். குழந்தைகளையும் கிழவர்களையும் கூடக் கொல்வார்கள். அறியாமையாலும், கோபத்தாலும், விதியின் ஏவுதலாலும் பாபசிந்தையுள்ளவர்களாய், தெய்வாயுதங்களை ஏவி உலகத்தில் பிராணிகளேயில்லாமல் செய்து விடுவார்கள். ஆண்மையோடும் பராக்கிரமத்தோடும் இறுமாப்புடனும் பகைவரை எதிர்த்து நீ இன்றைய தினம் என்னிடமிருந்து உயிரோடு தப்பிப் போகமாட்டாய் என்கிற வீரவாதப் பேச்சுக்களைப் பேசிக்கொண்டு கொடும் போர் புரிவார்கள், மகிமையுள்ள

பாண்டு புத்திரர்கள் ஐவரும் இந்த வீரர்களோடு போர் புரிவார்கள். மிகுந்த பராக்கிரமத்தாலும், விதிவசத்தாலும அவர்கள் எல்லாரையும் கொல்வார்கள். அநேக தைத்தியர்களும் யட்சர்களும் க்ஷத்திரிய குலத்தில் பிறந்திருக்கிறார்கள். அவர்கள் எல்லாரும் உன் சத்துருக்களை யெதிர்த்துக் கொடும் போர் செய்வார்கள்.

19—28. நீ அர்ஜுனனைப் பற்றிப் பயப்பட வேண்டியதில்லை. அவனைக் கொல்வதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்திருக்கிறோம். நரகாசுரனுடைய ஆத்மாவே கர்ணனுடைய சொரூபத்தை எடுத்துக் கொண்டு பிறந்திருக்கிறது. ஆகையால் கர்ணன் பூர்வ பகையை உணர்ந்து கொண்டு கிருஷ்ணனையும் அர்ஜுனனையும் கொல்வான் தேர்வீரனாகிய அந்தக் கர்ணன் தன்னுடைய தெய்வாயுதங்களால் அர்ஜுனனை யுத்தத்தில் கொல்வான், உன்னுடைய மற்றைய பகைவர்களையும் கொல்வான். இதை உணர்ந்த இந்திரன் தன் குமாரனான அர்ஜுனனைக் காப்பதற்காகக், கர்ணனிடத்திலிருந்து அவனுடன் பிறந்த கவச குண்டலங்களை யாசகம் செய்து வாங்கிக் கொண்டு போய் விட்டான். அதற்காகவே நாங்கள் நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் இராட்சதர்களையும் தானவர்களையும் நியமித்திருக்கிறோம். அவர்கள் ஸம்ஸப்தர் என்ற பேரால் விளங்குகிறார்கள். பிரதாபமுள்ள இந்த வீரர்கள் அர்ஜுனனைக் கொல்வார்கள். ஆகையால் நீ துக்கப்படாதே. நீ பகையில்லாமல் இந்த உலகம் முழுவதையும் பரிபாலிப்பாய். மனம் கலங்காதே கௌரவனே! இந்தச் செய்கை உனக்குத் தகாது. நீ இறந்தால் நமது கட்சி தளர்ந்து போய் விடும். நீ தான் எங்களுக்குத் தஞ்சம். உன் மனதை வேறு வழியில் செலுத்தாதே; என்று கூறித் துரியோதனனைத் தழுவிக்கொண்டு, தங்கள் புத்திரனைப் போல மகிழச் செய்தார்கள். இப்படி இனிய வசனங்களைக் கூறி அவனை மகிழச் செய்து, நீ புறப்பட்டுப் போ! வெற்றி பெறு என்று கூறி விடை கொடுத்தார்கள்.

29—37. தைத்தியர்கள் உத்தரவு கொடுத்த வுடனே முன் கூறிய தெய்வம் அவனைத் தூக்கிக்கொண்டுபோய், அவனிருந்த இடத்தில் விட்டுவிட்டுத் துரியோதனனிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு மறைந்து போயிற்று. அது மறைந்து போனவுடன், துரியோதனனுக்கு அவையெல்லாம் கனவு போலத் தோன்றியது. அவன் தன் மனதில் நான் யுத்தத்தில் வெல்வேன், கர்ணனும் ஸம்ஸப்தகரும் அர்ஜுனனை வெல்லுவார்கள் என்று கருதி மகிழ்ந்தான். இப்படிப் பாண்டவர்களை வெல்கிற எண்ணத்தினலே துரியோதனன் தன் மனதைத் திடப்படுத்திக் கொண்டான். நரகன் கர்ணனுடைய மனதையும் ஜீவனையும் பற்றிக்கொண்டான். சபல சித்தத்தாலும், அஞ்ஞானத்தாலும் அர்ஜுனனைக் கொல்லக் கருதினன். பீஷ்மர், துரோணர், கிருபர் முதலானவர்களுடைய மனமும் தானவர்களால் வசீகரிக்கப்பட்டது. அதனால் அவர்கள் பாண்டவர்களிடத்தில் முன்னிருந்தது போல அவ்வளவு அன்பில்லாதவர்களானார்கள். துரியோதனன் இதை ஒருவருக்கும் சொல்லவில்லை.

38—52. இரவு கழிந்ததும் சூரிய புத்திரனான கர்ணன், துரியோதன னிடம் வந்து கைகளைக் குவித்துக்கொண்டு புன்னகையுடன் துரியோதனனை நோக்கிச் சொல்லுகிறான். இறந்துபோன மனிதன் தன் சத்துருவை ஜயிப்ப தில்லை. தான் ஜீவித்திருக்கிறபோதே தன்னுடைய நன்மையைக் காண்கி றான். செத்துப் போனவனுக்கு ஜயமும் சுகமும் ஏது? ஆகையால் துக்கப் படவும், அச்சப்படவும், பிராணனை விடவும் இது சமையமில்லை என்று துரி யோதனனைத் தழுவிக்கொண்டு பின்னும் சொல்லுகிறான். அரசனே! ஏன் படுத்துக்கொண்டிருக்கிறாய்? எழுந்திரு. சத்துரு பயங்கரனே! ஏன் இறக் கத் துணிகிறாய்? அர்ஜுனனைப் பார்த்ததும் உனக்குப் பயம் உண்டாய் விட் டது. அந்த அர்ஜுனனை யுத்தத்தில் நான் கொல்வேனென்று நிச்சயமாய்ச் சொல்லுகிறேன். பதின் மூன்றாம்வருஷம் ஆனவுடனே அந்தப் பாண்டவர்களை உனக்குக் கீழ்ப்படிந்திருக்கச் செய்வேன் என்று ஆயுதங்களின் மேல் சத்தியம் செய்கிறேன் என்று கர்ணனுடைய பேச்சுக்களையும், தைத்தியர் கூறிய வசனங் களையும் கருதித் துரியோதனன் எழுந்திருந்தான். தைத்தியர்கள் கூறிய வசனங் களைச் சிந்தித்து யானை, குதிரை, தேர், காலாள்களுடன் கூடின தன் படையை அணிவகுத்தான். அநேக வெண்குடைகளும், வெண்ணிறமான சாமரங்களும் தேர்களும், குதிரைகளும், காலாட்களும் நிறைந்த அந்தப் பெரிய சேனையானது செல்வது கங்காநதி பிரவாகித்து ஓடுவது போன்றிருந்தது. பிராமணர்கள் எல்லாரும் அவனுடைய வெற்றியை உத்தேசித்து ஆசீர்வசனம் கூறினார்கள். அவனுடைய கீர்த்தியைப் புகழ்ந்தார்கள். அநேக ஜனங்கள் கைகளைக் குவித் துக்கொண்டு அவனுக்கு வணக்கம் செய்தார்கள். மிகுந்த தேஜசுடன் சேனை களுக்கு முன்னாலே துரியோதனன் சென்றான். கர்ணனும் சகுனியும் துச் சாதனனும் மற்றுமுள்ள சகோதரர்களும் அவனைச் சூழ்ந்து சென்றார்கள். பூரிசிரவன், சோமதத்தன், பாஹ்லீகன் முதலானவர்களும் அவனைச் சூழ்ந்து தேர்மேல் ஏறிச் சென்றார்கள். கொஞ்ச நேரத்துக்குள் அவர்கள் அஸ்தின புரத்தை அடைந்தார்கள்.



## 252-வது அத்தியாயம்.

### கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1-14. ஜனமேஜய மஹாராஜன் வைசம்பாயனரை நோக்கி முனிவரே! மகிமையுள்ள பாண்டவர்கள் வனத்தில் வசிக்கிறபோது திருதராஷ்டிர புத்தி ரர்கள் என்ன செய்தார்கள்? கர்ணன், சகுனி, பீஷ்மர், துரோணர், கிருபர் இவர்கள் என்ன செய்தார்கள்? இவைகளை எனக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்க வைசம்பாயனர் சொல்லுகிறார். ஜனமேஜய மஹாராஜனே! பாண்ட வர்களால் விடுவிக்கப்பட்ட துரியோதனன் அஸ்தினபுரம் போனதும், பீஷ் மர் அவனை நோக்கிக் குழந்தாய் நான் முன்னமேதானே அந்தத் தபோவனத் துக்குப் போக வேண்டாமென்று சொன்னேன். நீ அங்கே போவது எனக்குப்

பிரியமில்லை. அதை இலட்சியம் பண்ணாமல் போனாய். அங்கே சத்துருக்களால் சிறையாக்கப்பட்டாய். தர்மிஷ்டர்களான பாண்டவர்கள் உன்னை விடுதலை செய்தார்கள். உனக்கு இன்னமும் வெட்கம் வரவில்லை. துரியோதனா! உனக்கு எதிரிலும் உன் சேனைகளின் கண்களுக்கு எதிரிலும் கர்ணன் தோல்வியடைந்து யுத்தகளத்தை விட்டு ஓடிப்போனான். அரசர்க்கரசனே! அரசகுமாரனே! அரசனே! நீ வருத்தப்பட்டுக்கொண்டிருந்தபோது 'துஷ்டனான கர்ணனுடைய தன்மையும், மஹாத்மாக்களான பாண்டவர்களுடைய சாமர்த்தியத்தையும் கண்டறிந்தாய். தர்மத்தில் விருப்பமுடைய அரசனே! தனூர்வேதத்திலாயினும், பராக்கிரமத்திலாயினும், நீதியிலாயினும் கர்ணன் பாண்டவர்களுக்குக் கால் பங்கு கூட ஒப்பாயிருக்கமாட்டான். ஆகையால் இந்த வம்சத்தின் க்ஷேமத்தை உத்தேசித்துப் பாண்டவர்களுடன் சமாதானமாய் வாழ்வதே தகுதி என்றார்.

11—15. இப்படி பீஷ்மர் சொன்னதைக் கேட்டுத் துரியோதனன் இரைந்து சிரித்தான். உடனே திடீரென்று சபையினின்று எழுந்திருந்து, சகுனியையும் அழைத்துக் கொண்டு போய்விட்டான். உடனே கர்ணனும் துச்சாதனனும் எழுந்திருந்து அவனைத் தொடர்ந்து போனார்கள். அதைப் பார்த்துப் பீஷ்மர் வெட்கத்தால் தலை குனிந்து கொண்டார். பிறகு அவரும் எழுந்திருந்து தம் வீடு போய்ச் சேர்ந்தார். மஹாராஜனே! பீஷ்மர் போனபின் துரியோதனன் மறுபடியும் சபைக்கு வந்து தன் மந்திரிகளுடன் யோசனை செய்தான். மந்திரிகளை நோக்கி எனக்கு எது நன்மையாயிருக்கும்? நான் செய்ய வேண்டியதென்ன? நான் பெருமையை அடைவதற்கு என்ன செய்ய வேண்டுமோ அதைச் சொல்லுங்கள் என்று துரியோதனன் கேட்டான். கர்ணன் சொல்லுகிறான்.

16—23. கௌரவனே! துரியோதனா! நான் சொல்லுகிற வார்த்தை உன் மனதிலிருக்கட்டும். பீஷ்மர் எப்போதும் நம்மை நிந்திக்கிறார். பாண்டவர்களைப் புகழ்கிறார். அவர் உன்னிடத்தில் துர்எண்ணம் கொண்டிருப்பதினாலே என்னை அடிக்கடி நிந்திக்கிறார். அரசனே! உனக்கு எதிரிலேயே என்னையெப்போதும் திட்டுகிறார். பாண்டவர்களைப் புகழ்ந்து உன்னை யிகழ்கிற வசனங்களை நான் இனிப் பொறுக்க மாட்டேன். அரசனே! உன்னுடைய தேர்களும், படைகளும் என்னுடன் வரட்டும். நான் இந்தப் பூமியை ஜயித்து உனக்குத் தருகிறேன். மலைகள் வனங்களால் அலங்கரிக்கப்பட்டிருப்பதும், பாண்டவர்கள் நால்வராலும் ஜயிக்கப்பட்டதுமான பூமியை நான் ஒருவனாகவே ஜயித்துத் தருகிறேன். நான் என் ஒரு கையாலேயே ஜயித்துத் தருவேன். இது நிச்சயம். துஷ்ட சித்தமுள்ள பீஷ்மர் பார்க்கட்டும். அவர் நிந்திக்கத் தகாதவர்களை நிந்தித்துப் புகழத் தகாதவர்களைப் புகழ்கிறார். இன்றைய தினம் பீஷ்மர் எனது ஆற்றலை உணர்ந்து தம்மையே நிந்தித்துக் கொள்ளட்டும். அரசனே! எனக்கு உத்தரவு கொடு. ஜயம் உன்னுடையதே. நான் என் ஆயுதத்தின்மேல் சத்தியம் பண்ணுகிறேன் என்று சொன்னான்.

24—29. ஜனமேஜய ராஜனே! துரியோதனன் கர்ணன் சொன்னதைக் கேட்டு, மிகவும் மனம் மகிழ்ந்து கர்ணனை நோக்கிச் சொல்லுகிறான். நீ என்மேல் கருணை வைத்தப்படியால் நான் க்ஷேமத்தை அடைந்து விட்டேன். பெரிய ஆற்றலையும் ஊக்கத்தையும் உடைய நீ என் க்ஷேமத்தைக் கருதுகிற படியால் என் ஜன்மம் இன்று ஸபலமாயிற்று. வீரனே! நீ என் சத்துருக்கள் எல்லாரையும் ஜயிக்க விரும்புகிறாய். உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். நான் என்ன செய்ய வேண்டும் சொல் எனக் கர்ணன் படை யெழுச்சிக்குச் சித்தம் செய் என்றான். சுபகரமான தினத்தில், சுபநட்சத்திரம் சுபமுகூர்த்தத்தில் பிராமணர்கள் ஆசிர்வதிக்கத் தனது தேர் ஒலியினால் மூவுலகங்களும் சராசரங்களும் நடுங்கும்படி புறப்பட்டான்.

---

## 253-வது அத்தியாயம்.

### கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—28. வைசம்பாயனர் ஜனமேஜய மஹாராஜனைப் பார்த்து அரசனே! பெரிய சேனையுடன் சென்ற கர்ணன் துருபதன் நகரத்தை முதலில் தாக்கினான். பெருஞ் சண்டை செய்து துருபதனைக் கீழ்ப்படுத்தி அவனிடத்தில் தங்கம், வெள்ளி, இரத்தினம் முதலியவற்றைப் பகுதியாக வாங்கிக் கொண்டு, பின் துருபதனுக்கு உள்ளடங்கியிருந்த எல்லா அரசர்களையும் ஜயித்தான். அவர்களையும் கப்பம் கட்டச் செய்தான். பின் வடதேசத்தில் உள்ள அரசர்கள் எல்லாரையும் வென்றான். பகதத்தனையும் வென்று, இமய மலையிலேறிச் சென்று எல்லாரையும் வென்றான். இமய மலையிலுள்ள அரசர்கள் எல்லாரையும் கப்பம் கட்டச் செய்தான். பிறகு கீழ் இறங்கிக் கிழக்குத் திசை நோக்கிச் சென்றான். அங்கர், வங்கர், கலிங்கர் முதலான எல்லா அரசர்களையும் வென்று, பின் வத்ஸ பூமியை நோக்கிச் சென்று அங்குள்ளவர்கள் எல்லாரையும் ஜயித்துக் கப்பம் வாங்கிக் கொண்டு, தென்றிசை நோக்கிப் போனான். அங்குள்ள அநேக வீரர்களான அரசர்களை ஜயித்து, ருக்குமி யுடன் பெரும் போர் புரிந்து அவனையும் ஜயித்தான். அவனிடத்தில் கப்பம் வாங்கிக்கொண்டு புறப்பட்டுப் போய்ப் பாண்டியனை எதிர்த்தான். அவனை ஜயித்தபின், கேரள தேசத்தை ஜயித்தான். நீலன் முதலான தெட்சண பூமியிலுள்ள அநேக அரசர்களையும் ஜயித்தான். பின் சிசுபாலன் புத்திரனை யெதிர்த்துச் சண்டையிட்டு வென்றான். அவ்விடத்துள்ள இராஜர்கள் எல்லாரையும் ஜயித்தான். பின் கடலுக்குப் போய் அங்குள்ள யவனர், பர்ப்பரர் முதலிய எல்லாரையும் வென்றான். பின் மிலேச்சர்களையும், மலைநாட்டரசர்களையும் வென்றான். கர்ணன் இப்படிப் பூமி முழுமையும் ஜயித்துக் கப்பம் வாங்கிக் கொண்டு அஸ்தினாபுரத்துக்குத் திரும்பிவந்தான். அதைக் கேட்ட துரியோதனன் தன் பிதா ஸகோதரர்களுடன் எதிர்கொண்டு சென்று கர்ணனுக்குக் கிரமமாக

செய்தான். கர்ணா! பீஷ்மர், துரோணர், கிருபர் முதலியவர்களாலும் எனக்கு உண்டாகாத பெருமையை இன்று உன்னால் அடைந்தேன். நீ க்ஷேமமா யிருக்கக் கடவாய். பாண்டவர்களும் மற்றைய அரசர்களும் உன் சக்திக்கு பதினாறிலொரு பங்குக்கும் ஈடாக மாட்டார்கள். ஏ கர்ணா! இந்திரன் அதிதியைப் பார்ப்பது போல நீ காந்தாரியையும் திருதராஷ்டிரனையும் பார் என்று சொன்னான்.

29—36. ஜனமேஜய மஹாராஜனே! அப்போது அஸ்தினபுரம் எங்கும் சந்தோஷக் கூச்சல் பரவிற்று. அநேகர் கர்ணனைப் புகழ்ந்தார்கள். மற்றவர்கள் மௌனமா யிருந்தார்கள். காடு, மலை, தேசம், நகரம், ஆறு, கடல், தீவுகள், அடங்கிய பூமியைக் கர்ணன் எளிதிலேயே ஜயித்து அதைத் துரியோதனனுக்குக் கொடுத்தான். கர்ணன் அரண்மனைக்குள் புகுந்து காந்தாரியையும் திருதராஷ்டிரனையும் பார்த்தான். அவ்விருவருடைய பாதங்களிலும் வணங்கினான். திருதராஷ்டிரனும் அவனைத் தழுவிக்கொண்டான். அன்று முதல் சகுனி, துரியோதனன், துச்சாதனன் முதலானவர்கள் பாண்டவர்கள் கர்ணனால் தோல்வி அடைந்ததாகவே நினைத்து மகிழ்ந்தார்கள்.

---

## 254-வது அத்தியாயம்.

### கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—10. ஜனமேஜய மஹாராஜனே! சத்துருக்களைச் சங்கரிப்பவனான கர்ணன் துரியோதனனைப் பார்த்துத் துரியோதனா! நான் சொல்லுகிற இந்த வார்த்தைகளை உன் மனதில் வை. நீ என் வார்த்தைகளைக் கேட்டபின் அதன்படி நட. இந்தப் பூமியானது இப்போது பகை யில்லாமல் நமக்கு வசப்பட்டிருக்கிறது. ஆகையால் நீ தேவேந்திரனைப் போல இந்த உலகத்தை அரசு புரி என்றான். துரியோதனன் கர்ணனை நோக்கி உன்னைத் துணைவனாகப் பெற்றவனுக்குக் கிடைக்கப் பெறாதது ஒன்றுமில்லை. இப்போது நான் ஒன்று சொல்லுகிறேன். அதை உற்றுக் கேள். பாண்டவர்கள் செய்த இராஜசூய மஹா யாகத்தைப் பார்த்தபின் அது போலவே நானும் இராஜசூயம் செய்ய விரும்புகிறேன். என் விருப்பத்தை நீ நிறைவேற்ற வேண்டு மென்றான். கர்ணன், பூமியிலுள்ள அரசர்கள் எல்லாரும் உனக்கு அடங்கின குடிகளாய் விட்டார்கள். ஆகையால் பிராமணர்களை அழை. பிறகு யாகத்துக்கு வேண்டிய உபகரணங்களைச் சேகரம் பண்ணு. பிறகு வேதமுணர்ந்த ரித்துவிக்குகள் உன் யாகத்தை நிறைவேற்றட்டும். உன் யாகத்தில் அன்னபானாதிகள் குறைவில்லாமல் கொடுக்கப்படட்டும் என்றான்.

11—21. அதன்பின் துரியோதனன் குருமார்களை அழைப்பித்துச் சொல்லுகிறான். மிகுந்த தட்சிணையுடன்கூடின இராஜசூய மஹாயாகத்தைச் செய்ய வேண்டும் என்றான். பிராமணர்கள் துரியோதனனைப் பார்த்து யுதிஷ்

டிரர் உயிரோ டிருக்கிறவரைக்கும் நீ இராஜசூயயாகம் செய்யக் கூடாது. அன்றியும் உன் பிதா திருதராஷ்டிர மஹாராஜன் உயிரோடிருக்கிற வரைக்கும் அந்த யாகத்தை நீ செய்யக் கூடாது. அந்த இராஜசூயத்தைப் போன்ற மற்றொரு யாக மிருக்கின்றது அந்த யாகத்தைச் செய். சகல அரசர்களும் சுத்தமும் அசுத்தமுமான தங்கத்தை உனக்குக் கொடுப்பார்கள். அதைக் கொண்டு கலப்பை செய். அந்த கலப்பையால் யாகபூமியை உழு. அந்த இடத்தில் அந்த யாகத்தை விதிப்படி செய்ய வேண்டும். இதற்கு வைஷ்ணவ யாகம் என்று பேர். இது புண்ணியவான்களால் செய்யத் தக்கது. விஷ்ணுவைத் தவிர இந்த யாகத்தை ஒருவரும் செய்ததில்லை. இது இராஜ சூயததுக்குச் சமானமானது. இது எங்களுக்குப் பிரியம். உனக்கும் க்ஷேமம். யாதொரு கலக்கமும் இல்லாமல் செய்யத் தக்கது உன் விருப்பமும் நிறைவேறும் என்றார்கள்.

22—25. இப்படிப் பிராமணர்கள் சொல்லத் திருதராஷ்டிரன் குமாரனை துரியோதனன் கர்ணன், சகுனி, துச்சாதனன் முதலியவர்களைப் பார்த்து இந்தப் பிராமணர்கள் சொல்லுவது எனக்குப் பிரியமா யிருக்கிறது. உங்களுக்கும் பிரியமாயிருந்தால் உடனே சொல்லுங்கள். தாமதம் செய்ய வேண்டாம் என்று சொன்னான். அவாகள் எல்லாரும் அப்படியே ஆகட்டும் என்றார்கள். பிறகு அந்த யாகததுக்காகவேண்டிய மனிதர்களை ஒருவர்பின் ஒருவராக நியமித்தான். சிற்பிகளுக்குக் கலப்பை செய்யக் கட்டளை யிட்டான். அரசன் கட்டளைப்படி எல்லாக காரியங்களும் செய்து முடிக்கப்பட்டன.

---

## 255-வது அத்தியாயம்.

*கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.*

1—12. பிறகு பிரதான சிற்பிகளும், பிரதானிகளும், விதுரரும், அரசனை நோக்கி யாகத்துக்கு வேண்டிய காரியங்களெல்லாம் செய்து முடிக்கப் பட்டன. அந்த யாகத்தைச் செய்வதற்குரிய காலமும் கிட்டிற்று. சொர்ணக் கலப்பையும் செய்து முடிக்கப்பட்டது என்றார்கள். உடனே துரியோதனன் யாகத்தைத் தொடங்க உத்தரவு செய்தான். அந்த யாகம் மந்திரங்களிலும், போஜனத்திலும் குறைவின்றி நடந்தது. துரியோதனன் முறைப்படி தீட்சை வகித்தான். திருதராஷ்டிரன், விதுரர், பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன், காந்தாரி முதலானவர்கள் மிகுதியும் சந்தோஷ மடைந்தார்கள். அரசர்க்கரசனே! மன்னவர்களையும், பிராமணர்களையும் அழைத்து வரும்படி தூதர்களைச் சீக்கிரம் அனுப்பினார்கள். தூதர்கள் தேரின் மேலேறிக்கொண்டு வேகமாய் நாலு திக்குகளுக்கும் சென்றார்கள். ஒரு தூதன் புறப்பட்டுப் போகும்போது துச்சாதனன் அவனை நோக்கி, நீ சீக்கிரமாக த்வைத வனத்துக்குப் போ. அங்குள்ள பிராமணர்களையும், துஷ்டர்களான, பாண்டவர்களையும் அழை என்று சொன்னான். அதன் மேல் அந்தத் தூதன்

த்வைதவனம் போய்ப் பாண்டவர்களை வணங்கி, மஹாராஜனே! துரியோதனன் தன் சாமர்த்தியத்தால் அளவற்ற திரவியத்தைச் சம்பாதித்தான். அந்தத் திரவியத்தைக் கொண்டு ஒரு யாகம் செய்கிறான். அதைக் குறித்து நாலா பக்கங்களிலு மிருந்து பிராமணர்கள் அங்கே போய்க் கொண்டிருக்கிறார்கள். கௌரவராஜன் என்னை யிவ்விடத்துக்கு அனுப்பினான். உங்களை அழைத்து வரச் சொன்னான் ஆகையால் நீர் அந்த மங்களகரமான யாகத்துக்கு வர வேண்டும் என்றான். யுதிஷ்டிரர் சொல்லுகிறார்.

13-27. நல்ல அதிர்ஷ்ட வசத்தால் துரியோதனன் இந்த யாகத்தைச் செய்கிறான். நாம் நிச்சயமாகவே அங்கே போக வேண்டியது. ஆனால் நாங்கள் இப்போது போக முடியாது. ஏனென்றால் பதின்மூன்று வருஷம் வனத்தில் வசிக்கும்படி ஒப்புக்கொண்டிருக்கிறோம் என்றார். அதைக் கேட்ட பீமன் தூதனை நோக்கித் துரியோதனனை வெட்டி நெருப்பில் இட்ட பிறகு அவ்விடம் வருவார். நான் சொல்லுகிற வசனங்களைத் துரியோதனனிடம் சொல்; பதின்மூன்று வருஷங்கள் முடிந்ததும் பாண்டவ சிரேஷ்டராகிய தர்மர் யுத்த களமாகிய யாக குண்டத்தில் திருதராஷ்டிர குமாரர்களைப் பசுவாகப் பலியிட்டுத், தமது கோபமாகிய நெய்யை விட்டு யாகத்தை முடித்த பிறகு நான் அங்கே வருவேன் என்றான். ஜனமேஜய மஹா ராஜனே! மற்றப் பாண்டவர்கள் யாதொன்றும் சொல்லவில்லை. தூதர்கள் திரும்பிப் போய்த் துரியோதனனுக்கு எல்லாவற்றையும் சொன்னார்கள். பிறகு அநேகமான மகிமையுள்ள மனிதர்களும், அரசர்களும், பிராமணர்களும் அஸ்தினாபுரத்துக்கு வந்தார்கள். துரியோதனன் எல்லாவற்றையும் மரியாதையாக வரவேற்று உபசரித்தான். எல்லாரும் திருப்தி யடைந்தார்கள். திருதராஷ்டிரன் கௌரவர்கள் சூழ வீற்றிருந்து மகிழ்ச்சி யுடன் விதுரரை நோக்கிச் சொல்லுகிறான். ஓ கட்வா! யாகத்துக்கு வந்திருக்கிறவர்கள் எல்லாருக்கும் திருப்தி யுண்டாகும்படி போஜனம் செய்து வை. கற்றுணர்ந்த விதுரர் அப்படியே எல்லாருக்கும் போஜனம் உயர்ந்த வஸ்திரங்கள், மாலைகள் முதலிய கொடுத்து உபசரித்தார். அநேக கூடாரங்களை யடித்துப் பிராமணர்களையும், அரசர்களையும் மரியாதையாகக் குடியிருத்தி, உபசரித்தார்கள். அவர்களுக்குப் பல வகையான திரவியங்கள் கொடுத்து மரியாதை செய்து அனுப்பின பின், துரியோதனன் தன் சகோதரர்கள் சூழ இருந்தான். அதன் பின் கர்ணன் சகுனி முதலானவர்களோடு அஸ்தினாபுர நகரத்தில் பிரவேசித்தான்.

---

## 256-வது அத்தியாயம்.

### கோஷ யாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—9. துரியோதனன் நகரத்தில் பிரவேசித்ததும் கவிவாணர் முதலானவர்கள் அவனைப் புகழ்ந்தார்கள். மற்ற ஜனங்களும் அவனைப் புகழ்ந்தார்கள்.

அவன் மேல் நெற் பொரியையும் சந்தனக் குழம்பையும் வாரியிறைத்தார்கள். நல்ல அதிர்ஷ்டத்தினால் உனது யாகம் இடையூறின்றி நிறைவேறிற்று என்று ஜனங்கள் எல்லாரும் சொன்னார்கள். பேசத் தெரியாத சிலர் இந்த யாகம் யுதிஷ்டிரர் செய்த யாகத்துக்குச் சமானமாக மாட்டாது. யுதிஷ்டிரர் செய்த யாகத்தின் பதினாறில் ஒரு அம்சத்துக்குக் கூட இந்த யாகம் ஒப்பாக மாட்டாது என்று சொன்னார்கள். துரியோதனனுடைய நேசர்கள் நீ செய்த இந்த யாகம் யயாதி, நகுஷன், மாந்தாதா முதலானவர்கள் செய்த யாகங்களை விடச் சிறந்திருக்கின்றது என்று சொன்னார்கள். இப்படிச் சொல்வதைக் கேட்டுக்கொண்டு தன்னுடைய இருப்பு அரண்மனையில் புகுந்தான். தன் மாதாபிதா மற்றுமுள்ள பெரியோர் முதலானவர்களுடைய பாதங்களில் வணங்கினான். பின் தன் சகோதரர்கள் தன்னை வணங்க வீற்றிருந்தான். சகோதரர்களுக்கு மத்தியில் உயர்ந்த ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கையில் கர்ணன் எழுந்திருந்து சொல்லுகிறான்.

10—20. பாரதோத்தமனே! நல்ல அதிர்ஷ்டத்தால் நீ இந்த யாகத்தை நிறைவேற்றினாய். துஷ்ட சித்தமுள்ள பாண்டவர்களைக் கொன்ற பிறகு, இராஜசூய மஹா யாகத்தை நான் நிறைவேற்றி வைக்கும் போது நான் உனக்கு மறுபடியும் இப்படி மரியாதை செய்வேன் என்றான். துரியோதனன் நீ சொன்னது உண்மையே. பாண்டவர்களைக் கொன்ற பிறகு, இராஜசூய யாகத்தை நான் செய்கிற போது நீ இப்படி என்னை மகிமைப் படுத்துவாய் என்று சொல்லிக் கர்ணனைத் தழுவிக் கொண்டான். பிறகு துரியோதனன் இராஜசூயத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தான். தன்னைச் சூழ இருக்கிற கௌரவர்களைப் பார்த்துக் கௌரவர்களே! நான் எப்போது இராஜசூய யாகத்தைச் செய்வேன்? எப்போது நான் பாண்டவர்களைக் கொல்வேன்? என்று சொன்னான். அப்போது கர்ணன் எழுந்திருந்து, மன்னர் மன்னனே! நான் அர்ஜுனனைக் கொல்கிற வரையில் நான் என் கால்களைக் கழுவ மாட்டேன். மாம்சம் புசிப்பதில்லை. இந்த அசுர விருதத்தை நான் ஆசரிக்கிறேன். யார் என்னிடம் வந்து எதைக் கேட்டாலும் அதை இல்லை என்று சொல்வதில்லை. யுத்தத்தில் அர்ஜுனனைக் கொல்வதாகக் கர்ணன் சத்தியம் செய்ததும் திருதராஷ்டிர புத்திரர்கள் சந்தோஷத்தால் கூச்சலிட்டார்கள். பாண்டவர்களைக் கொன்று விட்டதாகவே கருதினார்கள். பிறகு துரியோதனன் சபை கலைந்து குபேரன் சைத்திர வனத்தில் புகுவது போலத் தன் மாளிகையில் புகுந்தான். மற்றவர்களும் தத்தம் வீடு போய்ச் சேர்ந்தான்.

21—28. இவைகளெல்லாம் மகிமையுள்ள பாண்டவர்கள் தூதர்கள் மூலமாக அறிந்தார்கள். அவர்கள் கவலை கொண்டார்கள். மனதுக்குச் சுகமேயில்லை. கர்ணன் அர்ஜுனனைக் கொல்கிறதாகச் சபதம் செய்ததைக் கேட்டது முதல் தர்ம புத்திரருக்கு மிகுந்த கவலையுண்டாயிற்று. கர்ணனுடைய பேதிக்கப்படாத கவசத்தைக் குறித்து வருந்தினார். தங்கள் துர்ப்பாக்கியத்தைக்

குறித்துக் கவலை யடைந்தார். அவர் மனதுக்குச் சந்தோஷமில்லை. பின் அந்தத் துவைத வனத்தை விட்டுப் போகச் சிந்தித்தார். இந்தக் காலத்தில் துரியோதனன் உலகத்தைப் பகை யின்றி அரசு புரிந்து வந்தான். தன் சகோதரர்களுடனும், பீஷ்மர், துரோணர், கிருபர்களுடனும் மகிழ்ந்து வீற்றிருந்தான். கர்ணனுடைய உதவியாலே கரை கடந்த மகிழ்ச்சியை அடைந்தான். உலக அரசர்களுடைய நன்மைகளையே சிந்தித்து அரசு புரிந்தான். அநேக யாகங்களைச் செய்து மிகுந்த தட்சிணை கொடுத்துப் பிராமணர்களை ஆராதித்தான். தன் சகோதரர்களுக்கும் நன்மையைச் செய்தான் தானம் கொடுப்பதும் தான் அனுபவிப்பதுமே செல்வத்துக்குப் பிரயோசனமென்று கருதினான்.



## 257-வது அத்தியாயம்.

கோஷயாத்திரா பர்வத் தொடர்ச்சி.

1—7. ஜனமேஜயராஜன் வைசம்பாயனரை நோக்கிப் பாண்டவர்கள் துரியோதனனைச் சிறை மீட்ட பின் வனத்தில் என்ன செய்தார்கள்? அதையெனக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்டார். வைசம்பாயனர் சொல்லுகிறார் ஒரு நாள் யுதிஷ்டிரர் நித்திரை செய்கையில் சில மான்கள் விம்மி அழுது கொண்டு, அவரது கனவில் வந்து நின்றன. அஞ்சலி செய்துகொண்டு நிற்கிறதையும், அவைகளின் சரீரம் நடுங்குகிறதையும் பார்த்து யுதிஷ்டிரர் நீங்கள் யார்? உங்களுடைய விருப்பம் என்ன? என்னிடம் என்ன சொல்ல எண்ணி வந்திருக்கிறீர்கள்? என்று கேட்டார். ஒரு மான் அவரை நோக்கிப் பாரதோத்தமரே! நாங்கள் துவைத வனத்திலுள்ள மான்கள். எல்லா மான்களும் கொலை செய்யப்பட்டன. நாங்கள் மாத்திரம்தான் மிஞ்சி யிருக்கிறோம். ஆகையால் நீர் இந்த வனத்தை விட்டு வேறு வனத்துக்குப் போக வேண்டும். உமது சகோதரர்கள் எல்லாரும் வீரர்கள். அவர்கள் இந்த வனத்து மிருகங்களைச் சங்கரித்துவிட்டார்கள். நாங்கள் மாத்திரம் எங்கள் வம்சத்துக்கு வித்தைப் போல மிஞ்சி யிருக்கிறோம். உமது கருணையினால் நாங்கள் விருத்தியாக வேண்டும் என்றன.

8—17. விதையைப் போல மிஞ்சி யிருக்கிற அந்த மான்களைப் பார்த்து யுதிஷ்டிரர் சரீரம் நடுங்கி வருந்தித் துக்கமடைந்தார். அந்தப் பிராணிகளினுடைய க்ஷேமத்தைக்கருதின தர்மபுத்திரர் அவைகளை நோக்கி நீங்கள் சொன்னபடியே செய்கிறேன் என்றார். யுதிஷ்டிரர் இப்படிச் சொற்பனம் கண்ட பின் விழித்துக்கொண்டு, மான்களிடத்தில் இரக்க முடையவராய், மறு நாள் சபைகூடி யிருக்கும் போது தமது சகோதரர்களை நோக்கிச் சொல்லுகிறார், இந்த வனத்திலிருக்கும் மான்களைச் சங்கரித்து விட்டோம். இறந்தவை போக மிகுந்திருக்கிற சில மான்கள் நேற்றிரவு என் கனவில் வந்தன. அவைகள் என்னை நோக்கி, நாங்கள் சிலர் மாத்திரம் எங்கள் குலத்துக்கு விதையாக இருக்கிறோம்

உமக்கு க்ஷேமமுண்டாகட்டும். எங்கள் மேல் இரக்கமுடையிரும் என்றனை அது நிசமே. இந்த வனத்தில் வசிக்கிற பிராணிகளின் மேல் இரக்கம் வைக்க வேண்டும். ஒரு வருஷம் எட்டு மாதம் இந்த வனத்து மான்களை கொன்று புசித்தோம். ஆகையால் நாம் மறுபடியும் பெரிய காமியக வனத்துக்கே போக வேண்டும். அந்தச சிறந்த வனத்தில் அநேக காட்டு மிருகஙகளிருககின்றன. திரணபிந்து ஏரிக்குச் சமீபத்தி லிருக்கின்றது. பாக்கி யிருக்கிற வனவாச காலத்தை அவ்விடத்தில் சந்தோஷமாய்க கழிப்போம் என்றார். உடனே பாண்டவர்கள் துவைத வனத்தை விட்டுப் புறப்பட்டுப் போனார்கள். இந்திர சேனன் முதலானவாகளும் பிராமணர்களும் கூடவே போனார்கள். தானி யங்களும் சிறந்த ஜலமும் நிறைந்திரு மார்க்கமாக நடந்துபோய்க் காமியக வனத்தை அடைந்தார்கள். புண்ணியம் செய்தவர்கள் சொர்க்க லோகத்தை அடைவது போலப் பரத சிரேஷடர்களும், குரு வம்சத்தவருமான பாண்டவர் கள் பிராமணர்கள் சூழப் போய்க் காமியக வனத்தை அடைந்தாரகள்.



## 258-வது அத்தியாயம்.

### கோஷ யாத்திரா பர்வத் தொடாச்சி.

1—12. பாரத வம்சோத்தமரான ஜனமேஜய மஹாராஜாவே! மஹாத் மாவான பாண்டவர்கள் இப்படிப்பட்ட பெரிய துககததுடன் வனவாசத்தில் பதினொரு வருஷம் கழிததார்கள், சுகத்தை அனுபவிக்கத தக்கவர்களா யிருந் தும், தங்களுடைய நிலைமையை நினைத்துக், காய் கனி கிழங்குகளையும் புஜித் துக் கொண்டு துக்கத்துடன் நாள் கழித்தார்கள். மகிமையுள்ள இராஜ ரிஷி யாகிய யுதிஷ்டிரர் தமது தம்பிமார்களுக்கு உண்டான துன்பத்துக்குத் தாமே காரணமானவ ரென்பதையும், சூதாட்டத்தினால் சேர்ந்த கஷ்டங்களையும் நினைத்து நித்திரை யில்லாதவரா யிருந்தார். இருதயத்தில் கட்டியால் குத்தி னாற் போன்ற துன்பத்தை யடைந்திருந்தார். கர்ணன் சபையில் சொன்ன கொ டுஞ்சொல்லை நினைத்து வருந்தினர். விஷத்துக்குச் சமானமான துக்கத்தை தமது மனதில் அடக்கிக்கொண்டு, அடக்கத்துடன் பெரு மூச்சு விட்டுக்கொ ண்டு காலம் கழித்தார். அர்ஜுனன் இரட்டையர்கள், திரௌபதி, பலசாலியான பீமன் இவர்கள் யுதிஷ்டிரருடைய தற்கால ஸ்திதியைப் பார்த்துத் துக்கப்பட் டார்கள். இன்னும கொஞ்ச காலந்தான் இருக்கிறதை யோசித்துக் கொண்டி ருந்தார்கள். கோபம், கவலை, பல வகையான முயற்சிகளாலே அவர்களுடைய சொரூபம் மாறுத லடைந்தது. கொஞ்ச காலத்துக்குப் பிறகு பாண்டவர்க ளைப் பார்க்க விரும்பி வியாசர் அந்த வனத்துக்கு வந்தார். அவர் வருகிற தைப் பார்த்து யுதிஷ்டிரர் எதிர்கொண்டு மரியாதை செய்தார். அவர் பாதங்களில் வணங்கி அவரை மகிழ்வித்தார். வியாசர் உட்கார்ந்த பின் அவர் சொல்வதைக் கேட்க விரும்பி அவருக்கு எதிரில் உட்கார்ந்தார். தமது

போன் வனவாசத்தினால் மெலிந்து வருந்துகிறதைக் கண்டு மஹாம் இளகினார். கண்ணீர் விட்டு விம்மி அழுதுகொண்டு யுதிஷ்டிரரை நோக்கிச் சொல்லுகிறார்.

13—27. மஹா பாகுவான யுதிஷ்டிரா! புண்ணியசாலிகளில் சிறந்தவனே! நான் சொல்வதைக் கேள். தவம் செய்யாதிருப்பவன் இந்த உலகத்தில் பெரிய சுகத்தை அனுபவிக்க மாட்டான். மனிதர்கள் சுகத்தையும் துக்கத்தையும் மாறி மாறி அனுபவிக்கிறார்கள். கலப்பற்ற சுகத்தை ஒருவனும் அனுபவிக்கிறதில்லை. புத்திசாலியானவன் அறிவுள்ளவனாதலால் இன்ப துன்பங்கள் மாறி வருவதை யறிந்து சந்தோஷத்தையாவது விசனத்தையாவது அடைகிறதில்லை. சுகம் வருகிறபோது அதை அனுபவிக்க வேண்டும். துன்பம் வந்தபோது அதைப் பொறுக்க வேண்டும். விதையை விதைத்தவன் பலன் தரும் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல நற்காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு இருக்க வேண்டும். தவத்துக்கு மேற்பட்டதில்லை. அது ஒன்றுதான் பெரிய பயனை எளிதில் தரக் கூடியது. பாரதனே! தவத்தினால் கொடுக்க முடியாதது ஒன்றுமில்லை என்று தெரிந்து கொள். சத்தியம், சினமின்மை, கபடமில்லாமை, நீதி, புலனடக்கம், அந்தக்கரண அடக்கம், பொறாமையின்மை, பரிசுத்தம் இவைகள் மனிதர்களைப் பரிசுத்தமாக்குவன. மூடர்கள் இழிந்த மார்க்கத்தில் பிரவேசித்து மறுமையில் மிருகஜன்மத்தை அடைகிறார்கள். அவர்கள் ஒருபோதும் சுகப்படுவதில்லை. இவ்வுலகில் செய்த கர்மங்களின் பலனையே மறு உலகத்தில் மனிதர்கள் அடைகிறார்கள். ஆகையால் ஒருவன் தன் சரீரத்தை வருத்தி தவ விரதங்களைச் செய்ய வேண்டும். வஞ்சகமின்றி மகிழ்ச்சியுடன் தன் சக்திக்குத் தக்கபடி சற்பாத்திரங்களை வணங்கித் தானம் கொடுக்க வேண்டும். சத்திய முள்ளவன் துன்பமற்ற சுக வாழ்வைப் பெறுகிறான். கோப மில்லாதவன், கபட மற்றவன், பொறாமை யில்லாதவன் ஆகிய இவர்கள் மேலான திருப்தியை அடைகிறார்கள். அகக்கரணங்களையும் புறக்கரணங்களையும் அடக்கினவன் ஒருபோதும் துன்பத்தைப் பார்ப்பதில்லை. புலனடக்க முள்ளவன், சுகமாய் வாழ்கிறவர்களுக்கு முன்னால் துக்கத்தை அடைவதில்லை. ஒவ்வொருவருக்கும் தான் செய்ய வேண்டிய கடமையைச் செய்கிறவனும், தானம் கொடுப்பவனும் சுகத்தை அனுபவிக்கிறான். அனுபவிக்கத் தக்க எல்லா வஸ்துக்களையும் அடைகிறான். பகையில்லாமலிருக்கிறவன் எல்லாச் சுகங்களையும் அனுபவிப்பான். வணங்க வேண்டியவர்களை வணங்குகிறவன் உயர்ந்த வம்சத்தில் பிறக்கிறான். புலனடக்க முள்ளவன் ஒருபோதும் துன்பத்தை அனுபவிப்ப தில்லை. நல்ல எண்ண முள்ளவனா யிருக்கிறவன் மறுமையில் தர்ம சித்தை யுள்ளவனாய்ப் பிறக்கிறான் என்றார். யுதிஷ்டிரர் வியாசரை நோக்கி மஹரிஷியே! தானம், தவம் இவ்விரண்டில் மறுமையில் சிறந்த பலன் அளிப்பது எது? செய்வதற்கு அரியது எது? என்று கேட்டார். வியாசர் சொல்லுகிறார்.

28—35. குழந்தாய்! தர்மத்தை அனுசரிப்பதை விடக் கஷ்டமானது வேறொன்று மில்லை. ஏனென்றால் மனிதர்கள் திரவியத்தை அடைய முயலுகிறார்கள். ஆனால் அடைவது கஷ்ட சாத்தியமாகிறது. சௌரிய முள்ளவர்கள் திரவியத்துக்காகத் தங்களுடைய ஜீவனைக் கூடக் கவனியாமல் சமுத்திரம் காடுகளுக்குக் கூடப் போகிறார்கள். ஏனென்றால் சிலர் கிருஷியை உத்தேசித்தும், சிலர் பசுபாலனத்தைக் கருதியும், சிலர் தம் ஜனங்களைக் காப்பாற்றுவதைக் குறித்தும் பொருளைத் தேடுகிறார்கள். ஆகையால் அப்படி கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பொருளைச் செலவிடுவது மஹா கஷ்டமாயிருக்கும். தானத்தைத் தவிர அதிக கஷ்டமானது ஒன்று மில்லாமையால் அந்தத் தானமே எல்லாவற்றிலும் சிறந்தது என்று நான் எண்ணுகிறேன். தர்மத்தால் சம்பாதித்த பொருளைச் சரியான காலம், இடம் இவற்றை யறிந்து புண்ணியவான்களுக்குத் தானம் கொடுக்க வேண்டுமென்பதை ஞாபகத்தில் வைக்க வேண்டும். துர்மார்க்கத்தில் சம்பாதித்த பொருளைத் தானம் கொடுத்தால் அது கர்த்தாவின் ஜனன மரண பயத்தை நிவிர்த்தியாக்காது. யுதிஷ்டிரா! நல்ல எண்ணத்துடன் சரியான காலத்தில் பாத்திர மறிந்து அற்பப் பொருளைத் தானம் கொடுத்தாலும் அவன் மறுமையில் அக்ஷய பலனை அடைவான். இவ்விஷயமாக முத்கலர் ஒரு துரோண தானியத்தைத் தானம் கொடுத்துப் பெரும் பயனை அடைந்தார் என்று ஒரு கதை உண்டு என்றார்.

---

## 259-வது அத்தியாயம்.

### ஸ்ரீஹித்ரௌணிக பர்வம்.

1-2. யுதிஷ்டிரர் வியாசரை நோக்கி மகிமையுள்ளவரே! மஹாத்மாவான முத்கலர் என்னத்திற்காக ஒரு துரோண (நாலுபடி) தானியத்தைக் கொடுத்தார்? யாருக்குக் கொடுத்தார்? எந்த முறைப்படி கொடுத்தார்? எனக்குச் சொல்ல வேண்டும். அந்தப் புண்ணியாத்மாவின் ஜீவியகாலம் பயன் பெற்றபடியால் நான் அதைக் கேட்க விரும்புகிறேன் என்றார். வியாசர் சொல்லுகிறார்.

3—10. அரசனே! குரு க்ஷேத்திரத்தில் முத்கலர் என்று ஒருவர் இருந்தார். அவர் புண்ணியவான். அவர் உண்மையுள்ளவராயும் பொறுமை யுள்ளவராயுமிருந்தார். புலனடக்க முள்ளவர். சிலம், உஞ்சம் முதலியவற்றால் ஜீவனம் செய்து வந்தார். அவர் ஒரு புறாவைப் போல ஜீவித்து வந்தாலும், அதிதிகளை மரியாதையாய் உபசரித்தார். அவர் தமது பத்தினி புத்திரனுடன் ஒரு பட்சம் வரைக்கும் புறாவைப் போலத் தானியங்களைப் பொறுக்கி மறு பட்சத்தில் புசிப்பார், இஷ்டி, தர்சம், பூர்ணிமாசியம் முதலியவற்றை விதிப்படி செய்து வந்தார். அதிதிகளைப் புசிப்பித்த பிறகுதான் அவர் புசிப்பார். சிறந்த பூர்ண அமாவாஸைகளில் மூன்று உலகங்களுக்கும் அதிபதியான இந்திரன்

தேவர்களுடன் வந்து, முத்கலர் கொடுக்கிற யாகபாகத்தை வாங்கிப் புசிப்பான். அந்த நாட்களில் முத்கலர் மன மகிழ்ச்சியுடன் விருந்தினர்களுக்கு ஆகாரமும் தண்ணீர் கொடுத்து உபசரிப்பார். வெகு சீக்கிரத்தில் அவர் ஆகாரத்தைப் பகிர்ந்து கொடுப்பார். புதிய விருந்து வந்தால் அந்தத் துரோண தானியமும் அதிகம் அதிகமாக விருத்தியாகும். பரிசுத்தமான மனசுடன் தானம் செய்யப்படுகிற புண்ணியத்தால் அந்த துரோண தானியமும் ஏராளமாய் விருத்தியாக நூற்றுக் கணக்கான கற்றுணர்ந்த பிராமணர்களுக்கு ஆகாரம் கொடுத்து வந்தார்.

11—29. அரசனே! ஒரு சமயத்தில் அந்த முத்கலரைப் பற்றிக் கேள்விப்பட்ட நிர்வாணியான தூர்வாச முனிவர் பைத்தியம் பிடித்தவனைப் போல உடை தரித்துக்கொண்டு, தலையில் மயிர் இல்லாதவராய் வந்து சேர்ந்தார். அநேக நிந்தனைச் சொற்களைப் பேசிக்கொண்டு வந்தார். முத்கலரைப் பார்த்துப் பிராமணோத்தமரே! நான் போஜனத்தை உத்தேசித்து உம்மிடம் வந்தேன் என்று தெரிந்துகொள்ளும் என்று சொன்னார். முத்கலர் நல்வரவு கூறி அவரை உபசரித்தார். தூர்வாசர் கால்களையும் வாயையும் கழுவிக்கொண்டார். அன்புள்ள முத்கலர் சிறந்த போஜனமிட்டார். பசியின் தொந்தரவால் துர்வாசர் அந்த உணவை யெல்லாம் புசித்துவிட்டார். முத்கலர் மறுபடியும் அதிக போஜனமிட்டார். அதையும் புசித்து விட்டார். மிஞ்சினதைத் தம் சரீரத்தில் பூசிக்கொண்டு போய்விட்டார். மறு பருவத்திலும் வந்து அப்படியே செய்தார். முத்கலர் தாம் புசியாதிருந்தார். அப்படியிருந்தும் முன்போலத் தானியம் பொறுக்கிக்கொண்டு வந்தார். பசியால் அவருக்கு உபத்திரவம் உண்டாகவில்லை. பொறாமை, கலக்கம், அவமதிப்பு, கோபம் இவைகளில் ஒன்றும் அவர் மனதில் இருந்ததில்லை. தூர்வாசர் இப்படி அநேகந் தடவை அடுத்தடுத்து வந்தார். அப்படியிருந்தும் முத்கலருடைய மனது கலங்காமலிருப்பதைப் பார்த்து, முத்கலருடைய மனசு எப்போதும் பரிசுத்தமாயுள்ளதென்று துர்வாசர் தெரிந்து கொண்டார். அதனால் தூர்வாசர் மகிழ்ச்சியடைந்து முத்கலரைப் பார்த்து, உம்மைப்போன்ற கபடம் இல்லாதவனும், தர்மிஷ்டனும் உலகத்தில் இல்லை. பசி நோய் மனிதர்களுடைய தர்மசிந்தையை ஒழித்து விடுகிறது. பொறுமையை விலக்கிவிடுகிறது. நாக்கு எப்போதும் ருசியை விரும்புகிறது. மனிதர்கள் அதன் வசப்பட்டிருக்கிறார்கள். ஆகாரத்தினாலேயே நிலைபெறுகிறது. மனம் சஞ்சலமுடையது. அதை அடக்குவது அரிது. மன அடக்கம், புலனடக்கம் இரண்டும் தவத்துக்கு ஆதாரமாயுள்ளன. கஷ்டப்பட்டுச் சாம்பாதித்த பொருளைச் சுத்தமான மனசுடன் கொடுக்கிறது கடினமானது. புண்ணிய சீலனே! இவைகள் உன்னாலே நிறைவேற்றப் பட்டிருக்கின்றன. உன்னுடைய சிநேகத்தால் நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். உறுதி, மன அடக்கம், புலனடக்கம், நீதி, தர்மம், இரக்கம், புண்ணியம் இவைகள் எல்லாம் உன்னிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன. நீ உன் கர்மத்தால் எல்லா உலகங்களையும் ஜயித்து விட்டாய்.

நீ மேலான பதவியை அடைந்து விட்டாய். தேவர்கள்கூட உன் புண்ணியச் செய்கையைப் புகழ்கின்றார்கள். விரதானுஷ்டானம் தவறாதமுனிவரே! நீர் உமது தேகத்துடனே சொர்க்கலோகம் போய்ச் சேரும் என்றார்.

30—36. துர்வாச மஹார்ஷி இப்படிச் சொன்னதும் ஒரு தெய்வதூதன் அன்னமும் நாரையும் கட்டினதேரை ஓட்டிக்கொண்டு முத்கலரிடம் வந்தான். அளவில்லாத மணிகளால் அந்தத் தேர் அலங்கரிக்கப்பட்டிருந்தது. நினைத்த இடத்துக்குப் போகுந்தன்மை யுடையது. அந்தத் தேருடன் வந்த தேவன் முத்கலரைப் பார்த்து. இந்தத் தேரின்மேல் ஏறும்; நல்ல நடக்கையினால் உம்முடைய தவசுக்குப் பலன் சித்தித்திருக்கிறது. இப்படி அவன் சொல்லிக் கொண்டிருக்கிறபோது, முத்கலர் அவனை நோக்கித் தேவனே! நீ சொன்ன அவ்வுலகத்தில் வசிப்பவர்களுடைய இலக்கணத்தை எனக்குச் சொல்ல வேண்டும் என்றார். அவர்களுடைய தவம் யாது? அவர்களுடைய செய்கை யாது? அவ்விடத்தில் உள்ள சுகம் எப்படிப்பட்டது? அங்குள்ள குறைவுகள் என்ன? நான் உம்மைச் சிநேகிதராகக்கொண்டு கேட்கிறேன். உண்மையைச் சொல்லும். நான் அடைய வேண்டிய நன்மை யெது என்பதை நான் தெரிந்துகொள்ள வேண்டும். உம் வார்த்தையைக் கேட்ட பின் கூடவரு கிற விஷயத்தை நிச்சயித்துக் கொள்கிறேன் என்றார்.

---

## 260-வது அத்தியாயம்.

### வ்ரீஹித்ரௌணிகா பர்வத்தொடர்ச்சி.

1—27. தேவன் முத்கலரை நோக்கி, மஹா முனிவரே! நீர் பயமற்றவர், மஹா பெருமையைக் கொடுக்கிற தேவலோகத்தை அடைகிறதற்கு இன்னமும் ஆலோசிக்கிறீர். ரிஷீசுவரரே! நீர் அறிய விரும்புகிறது மனுஷ சக்திக்கு மேற்பட்டது. அது வெகு உயரத்தில் இருக்கிறது. அழகான பாதைகளுண்டு. அவற்றில் அநேக தெய்வ இரதம் ஓடிக் கொண்டிருக்கும். விரீசுரவாதிகளும், சத்திய மில்லாதிருக்கிறவர்களும், தெய்வத்தை எண்ணாதவர்களும், யாகங்கள் செய்யாதவர்களும், அந்த இடத்துக்குப் போக முடியாது. புண்ணியாத்மாக்களும், மன அடக்கமுள்ளவர்களும், பொறாமை யில்லாதவர்களும், தானம் கொடுத்தவர்களும், யுத்த வீரர்களும், யுத்தத்தில் காயம்பட்ட வடுவுள்ளவர்களும, வேத விதி தவறாமல் நடப்பவர்களும் அந்த உலகத்தை அடைவார்கள். புண்ணிய கர்மங்களால் அடையப்படுவது. புண்ணியவான்கள் வசிப்பதற்குரியது. முத்கல முனிவரே! அங்கே அளவில்லாத அழகிய உலகங்களுண்டு. ஒளிமயமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. தேவர்கள், சித்தர், வைசாகர், ரிஷிகள், எமன், கந்தர்வர்கள், அப்ஸரஸ் முதலானவர்களுக்கு விரும்பின வஸ்துக்களைக் கொடுப்பதுவேண்டு

போகங்களை அநுபவிக்கத் தக்கவைகள், முப்பத்து மூவாயிரம் யோசனை விசாலமான மேரு பர்வத மிருக்கின்றது, முனிவரே! தெய்வ உத்தியான வனம் இருக்கின்றது. நந்தவனம் என்பது அவற்றுள் சிறந்தது. அதில் புண்ணிய கர்மங்களுள்ளவர்கள் விளையாடிக்கொண்டு இருப்பார்கள். பசி, தாகம், குளிர்ச்சி, வெப்பம், அச்சம் என்பன அங்கே கிடையாது. வெறுக்கத் தக்கதும் அமங்களமானதும் கிடையாது. இரம்மியமான சுகந்த பரிமளமும் இன்பமான காற்றும் உண்டு. காதுக்கும் மனசுக்கும் இன்பமான நாதம் கேட்கப்படும். துக்கமில்லை. மூப்பு இல்லை. உழைப்பும் வருத்தமும் இல்லை. இப்படிப் பட்ட புண்ணியம் செய்தவர்களே அதை அடைவார்கள். தாம் சொந்தமாகச் செய்த புண்ணியத்தாலேயே மனிதர்கள் அவ்வுலகம் போக வேண்டும். தாய் தகப்பன் முதலானவர்கள் செய்த புண்ணியத்தாலே போக முடியாது. அங்கே வேர்வை யில்லை, நாற்றமில்லை. மல மூத்திரங்களில்லை. வஸ்திரம் அழுக்கும் பிடிப்பதில்லை. அவர்களுடையில் சதா தெய்வ மணம் பரிமளித்துக்கொண்டே யிருக்கும். ஓ பிராமணரே! அங்கே உள்ள தேர்களில் ஒன்றுதான் இது. அந்த உலகத்துக்குப் போன மனிதர்கள் துக்கம், களைப்பு, அறிவீனம், பொறாமை முதலியன இல்லாமல் சுகமாய் வசித்துக் கொண்டிருப்பார்கள். அதற்கு மேல் போகப் போக அதிகமான புண்ணியம் செய்தவர்கள் வசிக்கிற தெய்வலோகங்கள் இருக்கின்றன. பிரமலோகம் எல்லாவற்றிலும் சிறந்தது. புண்ணிய கர்மங்களால் பரிசுத்தர்களா யிருக்கிற ரிஷிகள் அவ்வுலகம் போய் வசிப்பார்கள். ரிபு என்பவர்கள் அங்கே வசிக்கிறார்கள். அவர்கள் தேவர்களுக்குந் தேவர்கள். அந்த உலகம் மிகவும் மங்களகரமானது. அவ்வுலகத்தில் உள்ளவர்களைத் தேவர்களும் வணங்குகிறார்கள். அவர்கள் சுயம் பிரகாசமுள்ளவர்கள். அவர்கள் விரும்பினவைகளைக் கொடுக்கத் தக்கவர்கள். அங்குள்ளவர்கள் காம வியாதியால் வருந்துகிறதில்லை. பூலோக ஐசுவரியங்கள் அங்கே யில்லை. ஆகையால் அங்குள்ளவர்களுக்குக் கபடம் வஞ்சகமென்பது கிடையாது. அவர்கள் பலிகளாலும் அமிர்தத்தாலும் ஜீவிப்பதில்லை. புலன்களால் அறியப்படாத தெய்வ வடிவமுள்ளவர்கள். அவர்கள் சுகங்களை விரும்புவதில்லை. கற்ப காலங்களில் மாறுதல் அடைவது மில்லை. மூப்பும் மரணமும் அங்கே வருத்துகிற தில்லை. ஆச்சரியம், துக்கம், சந்தோஷம் என்பன அங்கே யில்லை, கோபம், பொறாமை இல்லை அவ்வுலக வாழ்வு தேவர்களாலும் விரும்பத் தக்கது. ஆசை யுள்ளவர்களால் அடையப்படாத பரந்த ஒழிவு உள்ள இடம். அவர்கள் முப்பதது மூன்று பேர்கள். அப்படிப்பட்ட உலகத்தை நீர் அடைந்திருக்கிறீர். உமது தவத்தாலும், புண்ணியச் செய்கையாலும் அடைந்தீர். அந்தத் தெய்வ உலகங்களிலுள்ள நன்மைகளைச் சொன்னேன். அவற்றிலுள்ள குறைவுகளைக் கேளும்.

28—36. முத்கலரே! தேவலோகங்களில் முன் செய்த புண்ணிய பலன்களை அனுபவிக்கிறபோது மேலும் மேலும் புதிய புண்ணிய கர்மங்கள் செய்ய முடியாது. பூர்வத்தில் செய்த புண்ணியமொழிகிறவரைக்கும் அதன் பல

லையே அனுபவிக்க வேண்டும். அந்தப் புண்ணிய பலனை அனுபவித்தான உடனே கீழேவிழுந்து விடவேண்டும். இவைகளே சொர்க்கத்திலுள்ள குறைவு என்பது என் கருத்து. அப்படி விழுந்தவர்களுடைய மனம் திருப்தி யுடைய தாய்ச் சந்தோஷத்துடனிருந்து நற்கருமம் செய்தால் மறுபடியும் சொர்க்கம் போவார்கள். அதிருப்தியும், சஞ்சலமும், அவ்வுலகங்களை அடைவதற்குத் தடையா யிருக்கின்றன. அவர்கள் தாழ்ந்த உலகங்களை அடைவார்கள். அவர் களுடைய மனம் மூடத்தன முடையதாயும், சஞ்சலங்களால் கலங்குகிறதாயு மிருக்கும். பூமியில் விழுகிறவர்களுடைய மாலை வாடியிருக்கும். அவர்கள் மனதில் அச்சம் உண்டாயிருக்கும். மீண்டும் தாழ்ந்த உலகங்களுக்கு வருதல் அந்தப் பிரமலோகத்திலும் உண்டு. தேவ லோகத்தில் முறைப்படி தர்மஞ் செய்தவர்களுக்கு அளவில்லை. தேவ லோகத்திலிருந்து நழுவிவிழுகிறவர்கள் மனிதர்களாய்ப்பிறந்து புண்ணியம் செய்து மறுபடியும் தேவலோகம்போவார் கள். ஞான மில்லாதவன் தாழ்ந்த ஜன்மத்தை யடைவான். இவ்வுலகத்தில் செய்த புண்ணியபலனை மறு உலகத்தில்தான் அனுபவிக்க வேண்டும். இந்த உலகம் கர்ம பூமியென்று பிரசித்தி பெற்றது. முத்கலரே! நீர் கேட்டவை களைச் சொல்லிவிட்டேன். இனி நாம் சீக்கிரம் போவோம் என்று சொன் னான்.

37—41. இப்படித் தேவன் சொன்னதைக் கேட்ட முத்கலர் சற்று யோசித்துச் சொல்லுகிறார். ஓ தேவனே! உனக்கு வணங்குகிறேன். நீ மனத் திருப்தியோடு திரும்பிப் போ. மீண்டு வரும்படியான அந்தத் தேவலோகத்தை யும், அந்தச் சுகத்தையும் நான் இச்சிக்கவில்லை. சொர்க்கத்தை அனுபவிக்கிற மனிதர்கள் இவ்வுலகில் பெரிய துக்கத்தையும் கவலையையும் அடைகிறார்கள். ஆகையால் எனக்கு அந்தச சொர்க்கம் வேண்டுவதில்லை. ஒருபோதும் துக்க மில்லாததும், மீண்டுவருதல் இல்லாததும். துன்ப மில்லாததுமான அந்த இடத்தை நான் அடைய விரும்புகிறேன். யாதொரு குற்றமும் இல்லாமலிருக் கிற இடத்தை எனக்குச் சொல்லு என்றார்.

42—46. ஓ முத்கலரே! அந்தப் பிரம லோகத்துக்கு மேலே விஷ்ணுவி னுடைய பரமபதமிருக்கின்றது. அது குற்றமற்றது. அழிவற்றது. ஒளிமய மானது. சிற்றின்பப் பிரியமும், அகங்கார முள்ளவர்களும், பொறாமை யுள் ளவர்களும், கோபம் பகை யுள்ளவர்களும் அந்த உலகத்துக்குப் போக முடி யாது. கலக்க மற்றவர்களும், புலனடக்க முள்ளவர்களும், யோகப்பயிற்சி யுள்ளவர்களும் மாத்திரம் அங்கே போகக் கூடும். ஓ முத்கலரே! நீர் கேட் டதைச் சொல்லிவிட்டேன். தாமதம் பண்ணாமல் என்கூட வாரும் என்றான். உஞ்சவிர்த்தியால் ஜீவித்த அந்த முத்கலர் திருப்தியடைந்தார். அவருக்கு இகழ்ச்சியும் புகழ்ச்சியும் ஒன்றாயிருந்தது. ஓடும் பொன்னும் அவருக்குச் சமமா யிருந்தது. அவர்பயின்று வந்த யோகப்பழக்கத்தால் ஞானம் உண்டாயிற்று. அத னால் அவர் அழிவற்ற நித்திய உலகத்தை அடைந்தார். ஆகையால் குந்தியின்

ஜா! நீ துக்கப்படவேண்டாம். உன் தபோபலினமையால் இழந்துபோன இராஜ்யத்தை மறுபடியும் அடைவாய். மனிதர்களுக்கு சுகமும் துக்கமும் வண்டிச் சக்கரத்தைப் போல மாறி மாறி வருகிறது. கெடாத புகழுள்ளவனே! பராக்கிரம முள்ளவனே! பதின் மூன்று வருஷம் முடிந்ததும் உனக்குப் பிதா பரம்பரையாய் வந்திருக்கிற இராஜ்யத்தை அடைவாய் என்று சொல்லிவிட்டு வியாசமுனிவர் தவம் செய்யும்பொருட்டுத் தமது ஆச்ரமத்துக்கு எழுந்தருளினார்.



## 261-வது அத்தியாயம்.

### திரௌபதி ஹரண பர்வம்.

1—5. மஹாத்மாக்களான பாண்டவர்கள் வனத்தில் வசிக்கையில் ரிஷிகளுடன் மகிழ்ச்சியாய்ப் பேசிகொண்டும், சூரியனிடத்திலிருந்து தாங்கள் பெற்ற ஆகாரத்தை அவர்களுக்குக் கொடுத்தும், மானிறைச்சியைப் புசிப்பித்தும், கிருஷ்ணை புஜிக்கிறவரையில் வந்தவர்களுக்கு ஆகாரம் கொடுத்தும் மகிழ்ச்சியுடனிருக்கையில், துச்சாதனன், கர்ணன், சகுனி யிவர்களுடைய யோசனையைக் கேட்டு நடக்கிறதுஷ்டனும் பாவியுமானதுர்யோதனன் என்ன செய்தான்? வைசம்பாயனரே! இவைகளை யெனக்குச் சொல்ல வேண்டும் என்று ஜனமேஜயர் கேட்க வைசம்பாயனர் சொல்லுகிறார்.

6—16. ஜனமேஜயரே! பாண்டவர்கள் நகரத்தில் வசிப்பது போல வனத்தில் மகிழ்ச்சியுடன் சுகமாய் வசிக்கிறதைத் துரியோதனன் கேட்டு, கர்ணன், சகுனி, துச்சாதனன் இவர்களுடன் கூடிப் பாண்டவர்களுக்குத் தீங்கு செய்ய யோசித்தான். பலவகையான தீமைகளை யிரகசியமாக யோசித்தான். அப்போது கோபகுணமுள்ள துர்வாசர் பதினாயிரம் சிஷ்யர்களுடன் அஸ்தினாபுரத்துக்கு வந்தார். துரியோதனனும் அவனுடைய சகோதரர்களும் அவரை வணக்கத்துடன் உபசரித்தார்கள். துரியோதனன் ஒரு சேவகனைப் போல அவர் பக்கத்தில் காத்துக்கொண்டிருந்தான். துர்வாசர் சில நாள் வசித்தார். அவருடைய கோபத்துக்குப் பயந்த துரியோதனன் இரவும் பகலும் ஜாக்கிரதையாக உபசரித்தான். சிலவேளை அரசனே! நான் பசியாயிருக்கிறேன், சீக்கிரம் எனக்கு அன்னமிடு என்று சொல்லி ஸ்நானத்துக்குப் போய் வெகுநேரம் பொறுத்து வருவார். இன்றைக்கு நான் ஒன்றும் புசிக்கமாட்டேன் எனக்குப் போஜனமில்லை யென்று கூறி மறைந்துபோவார். சில சமயம் திடீரென்று வந்து எங்களுக்குச் சீக்கிரம் போஜனமிடு என்பார். சில சமயம் நடு இராத்திரியில் விழித்துக்கொண்டு, சமையல்செய்ய உத்தரவுகொடுத்து விட்டு அதைப் புசிக்கவே மாட்டார். இவற்றுக் கெல்லாம் துரியோதனன் கோபிக்காமலும் வருத்தப்படாமலு மிருந்ததைப் பார்த்து முனிவர் அவனிடம் சந்தோஷமடைந்தார். துரியோதனனை நோக்கி உனக்கு வரம்கொடுக்கி

றேன் கேள். நீ யெவ்விதமான வரத்தை விரும்பிக் கேட்டாலும் அதைக் கொடுக்கிறேன். மத விஷயத்துக்கு மாத்திரம் விரோத மில்லாதிருக்க வேண்டு மென்றார்.

17—28. அதைக் கேட்ட துரியோதனன் மன மகிழ்ந்து கர்ணன் துச்சாதனனுடன் யோசித்துக்கொண்டு முனிவரை நோக்கி, மாதவ சிரேஷ்டரே! நீர் சில தினம் என்னிடத்தில் விருந்தாயிருந்தது போல என்னுடைய யுள்ள யுதிஷ்டிரரிடமும் சில நாள் விருந்தாளியா யிருக்க வேண்டும். அவன் பெரிய அரசன். எங்கள் குடும்பத்தில் சிறந்தவனும் பெரியவனுமா யுள்ளவன். புண்ணிய சித்தமுள்ள அவன் தம்பிகளுடன் இப்போது வனத்தில் வசிக்கிறான். பெண்களில் சிறந்த திரௌபதியானவள் பிராமணர்களையும் தன் கணவர்களையும் உபசரித்த பின் தானும் புசித்துச் சுகமா யிருக்கிறாள். அந்தச் சமையத்தில் நீர் அங்கே ஒரு தரம் விருந்தாளியாகப் போக வேண்டும் என்றான். முனிவர் உன் விருப்பத்தின்படியே போகிறேன் என்று கூறித் தாம் வந்த வழியாகவே திரும்பிப் போனார். பிறகு துரியோதனன் தன் எண்ண மெல்லாம் நிறைவேறி விட்டதாக எண்ணி மகிழ்ந்தான். கர்ணன் கூட மகிழ்ச்சி யடைந்து சொல்லுகிறான். அதிர்ஷ்ட வசத்தால் நீ காரியசித்தி யடைந்து விட்டாய். உன்னுடைய நல்ல அதிர்ஷ்டத்தாலே உன் பகைவர் கடக்க முடியாத துக்க சமுத்திரத்தில் முழுகி விட்டார்கள். பாண்டவர்கள் இப்போது துர்வாசருடைய கோபாக்கினிக்கு இரையானார்கள். பாண்டவர்கள் தங்களுடைய சொந்தக் குற்றத்தாலே இருளில் அழுந்தி விட்டார்கள். இப்படிப் பேசிக்கொண்டு மகிழ்ச்சியுடன் தத்தம் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

---

## 262-வது அத்தியாயம்.

### திரௌபதி ஹரண பர்வத் தொடர்ச்சி.

1—16. ஒரு நாள் பாண்டவர்கள் சுகமாய் உட்கார்ந்திருக்கிறதையும் திரௌபதி இளைப்பாறிக்கொண்டிருப்பதையும் அறிந்து, துர்வாசர் பதினாயிரம் சிஷ்யர்களுடன் அவர்களிடம் போனார். அவர் வருகிறதைப் பார்த்து யுதிஷ்டிரர் மரியாதையுடன் தம்பிமார்களோடு அவரை எதிர்கொண்டு உபசரித்து அஞ்சலி யஸ்தராய், அவரை ஒரு ஆசனத்தின் மேல் உட்கார வைத்தார். விதிப்படி வணங்கினார். முனிவரே! உமது ஜபதபங்களை முடித்துக்கொண்டு சீக்கிரம் வாரும் என்றார். குற்றமற்ற துர்வாச முனிவர் யுதிஷ்டிரர் எப்படி நமக்கும், பதினாயிரம் சிஷ்யர்களுக்கும் அன்னம் படைப்பார் என்று யோசித்துக்கொண்டே ஸ்நானத்துக்குப் போனார். இடையில் திரௌபதியானவள் எப்படி யிவருக்கு அமுதளிப்பது என்று யோசித்துக்கொண்டிருந்தாள். ஒரு உபாயமும் அவளுக்குத் தோன்றவில்லை. பிறகு கம்ஸனைச் சங்கரித்த கிருஷ்ணபகவானைச் சிந்தித்தாள். கிருஷ்ணா! மஹாபாகுவே! நித்தியமானவரே! தேவகிநந்தனா! வாசு

தேவா! ஜகத்ரட்சகனே! பக்தர்களுடைய துன்பத்தை நீக்குகிறவரே! பரமாத்மாவே! உலகசிருஷ்டிகரே! சங்கரிப்பவரே! பிரபுவே! அழியாதவரே! துக்கப்பட்டவர்களை இரட்சிப்பவரே! பசுபாலகரே! எல்லாவற்றுக்கும் மேலானவரே! மனம் அந்தக்கரணம் முதலியவற்றின் அறிவுக்கு அறிவானவரே! நான் உம்மை வணங்குகிறேன். அந்தமில்லாதவரே! வரம் கொடுப்பவரே! சர்வலோககர்த்தாவே! ஜீவர்களுக்குப் பிராணனுயுள்ளவரே! மனுதி கடந்தவரே! பக்தபரிபாலகனே என்னைப் பட்சத்துடன் இரட்சித்தருளும். நீலோத்பல வண்ணம் உள்ளவரே! செந்தாமரை யிதழ்போலும் கண்களை யுடையவரே! பீதாம்பரதாரீ! கௌஸ்துவாபரணு! ஜகத்துக்கு ஆதியும் அந்தமுமானவரே! சர்வஜீவசரணியரே! தேஜோரூபியே! பிரபஞ்சத்துக்கு உயிரா யுள்ளவரே! எங்கும் பார்வையுள்ளவரே! ஆதிகாரணரே! ஐசுவரியம் அளிப்பவரே! தேவர்களுக்கு இறைவரே! சகல ஜீவர்களும் உம்மாலேயே பயம் ஒழிந்து ஜீவிக்கிறுங்கள். முன்னுலே சபையில் துச்சாதனனிடத்திலிருந்து என்னை விடுவித்துக் காப்பாற்றினீர். இப்போதும் இந்த ஆபத்தினின்றும் என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று அந்தரங்க பக்தியுடன் துதித்தாள்.

17—31. இப்படித் திரௌபதி துதிக்கப், பக்தர்களிடத்தில் பிரியமுள்ள ஸ்ரீ கிருஷ்ணபகவான், தேவதேவன், ஜகத்கர்த்தா, கேசவன் திரௌபதியினுடைய துக்கத்தை யுணர்ந்து, ருக்குமிணியைப் படுக்கையில் விட்டு இரகசியமாய்த் துரோபதையிடம் வெகு வேகமாய் வந்து சேர்ந்தார். அவர் அங்கே வந்ததைப் பார்த்துத் திரௌபதி மிக மகிழ்ச்சியுடன் அவரை வணங்கித், துர்வாசர் வந்ததையும் மற்றும் சொல்ல வேண்டியவைகளையும் சொன்னுள். அதன் பின் கிருஷ்ணபகவான், ஏ திரௌபதீ! நான் மிகவும் பசியா யிருக்கிறேன். முதலில் எனக்கு அன்னம் படை. பிறகு நீ விரும்பின எல்லாவற்றையும் செய்வேன் என்றுர். இதைக்கேட்டுத் திரௌபதி வெட்கமடைந்து சூரியன் கொடுத்த பாத்திரம் நான் புசிக்கு மளவும் நிறைந்திருக்கும். தேவனே! நான் சாப்பிட்டாயிற்று ஆதலால் உணவு இல்லை என்றுள். கிருஷ்ணன், திரௌபதீ! இது விளையாடச் சமையமில்லை. நான் பசியாயிருக்கிறேன். களைத் திருக்கிறேன். சீக்கிரமாய் போய் அந்தப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டுவந்து எனக்குக் காட்டு என்றுர். கிருஷ்ணை பாத்திரத்தைக் கட்டாயத்துக்காகக் கொண்டு வந்தாள். அந்தப் பாத்திரத்தின் ஒரு மூலையில் ஒரு பருக்கையும் கறித்துணுக்கையும் ஒட்டிக்கொண்டிருக்கிறதைப் பார்த்து அதைச் சாப்பிட்டு விட்டுத் திரௌபதியைப் பார்த்து, சர்வ ஜீவாத்மாவாகிய ஹரி இதனுல் திருப்தியடைந்தார். யாகத்தில் பாகம் பெறுகிற தேவர்களும் திருப்தி யடைந்தார்கள். என்று சொன்னுர். பிறகு சகாதேவனை அழைத்து நீ போய்ச் சீக்கிரமாய்த் துர்வாசரை அழைத்துக்கொண்டுவா. அவருக்குச் சீக்கிரமாய் அன்னமிடு என்றுர். சகதேவன் சீக்கிரமாய்ப் போய் அவர்களை அழைத்தான். அப்போது துர்வாசரும் சிஷ்யர்களும் குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்து உடம்பைத் தேய்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய வயிறுகள் எல்லாம் நிரம்பி

யிருந்தது. எல்லாரும் கரையேறி ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டு பின் துர்வாசரைநோக்கி நாம் அரசனைப் போஜனம்கேட்டபின் ஸ்நானத்துக்கு வந்தோம். இப்போது நமது வயிறு கழுத்துவரைக்கும் நிரம்பி யிருக்கிறது. ஓ பிரமரிஷியே! இப்பொழுது எப்படி புஜிப்பது? நமக்காகச் சமைத்த போஜனம் வீணுகிறது. இப்போது நாம் என்ன செய்கிறது? என்றார்கள்.

32—44. நாம் வியர்த்தமாகச் சமைக்கச்சொல்லி அந்த ராஜரிஷியாகிய யுதிஷ்டிரருக்கு அபராதம் செய்துவிட்டோம். பாண்டவர்கள் கண் பார்வையாலேயே நம்மை யெரித்து விடுவார்கள். இராஜரிஷியாகிய யுதிஷ்டிரர் மஹா தவ மகிமை யுடையவரென்று எனக்குத் தெரியும். பிராமணர்களே! ஹரி பக்தர்களான அவர்களுக்கு நான் பயப்படுகிறேன். பாண்டவர்கள் எல்லாரும் மஹாத்மாக்கள், சூரர்கள், கற்றறிந்தவர்கள், விரதானுஷ்டான முள்ளவர்கள். தவச்சித்தி யுள்ளவர்கள். அவர்கள் எப்போதும் நல்லஆசாரத்தை அனுசரிப்பவர்கள். வாசுதேவனுக்குப் பக்தர்கள். அவர்கள் கோபம் கொண்டால் தீ பஞ்சுமூட்டையை எரிப்பது போல நம்மை எரித்து விடுவார்கள். ஆகையால் நீங்கள் எல்லாரும் அவர்களைப் பாராமல் ஓடிப்போங்கள் என்றார். இதைக் கேட்ட சிஷ்யர்கள் பாண்டவர்களுக்குப் பயந்து நாலு திசைகளிலும் சிதறி ஓடினார்கள்.ச காதேவன் அந்த நதியில் பிராமணர்களைக் காணாமல் அங்குமிங்கும் தேடினான். அங்குள்ள மற்ற தவசிகளால் எல்லாரும் ஓடிப்போனதை அறிந்து கொண்டு, சகாதேவன் திரும்பிவந்து யுதிஷ்டிரருக்குச் சொன்னான். பிறகு பாண்டவர்கள் கொஞ்ச நேரம்மட்டும் அவர்களுடைய வருகைக்குக் காத்துக் கொண்டிருந்தார்கள். யுதிஷ்டிரர், துர்வாசர் நடு இரவில் வந்து நம்மை வருத்தப்படுத்துவார். இந்த விதிக்கு நாம் என்ன செய்யலாம் என்று கூறிப் பெருமூச்சுவிட்டுக் கவலைப் பட்டுக்கொண்டிருக்கிறதை யறிந்து கிருஷ்ணன் திடீரென்று அவர்களுக்கு எதிரில் வந்து நின்றார். பார்த்தனே! உன் வருத்தத்தை அறிந்து திரௌபதி பிரார்த்தனை செய்தபடியால் நான் இங்கே வந்தேன். இனி நீர் துர்வாசருக்குக் கொஞ்சம் கூடப் பயப்பட வேண்டாம். உம்முடைய தபோமகிமைக்குப் பயந்து அவர் ஓடிப்போய்விட்டார். தர்மத்தைக் கடைப் பிடித்திருக்கிறவர்கள் ஒருபோதும் கஷ்டப்படுகிறதில்லை என்றார். உமக்கு க்ஷேமம் உண்டாகட்டும். நான் என் வீட்டுக்குப் போக உத்தரவு கொடும் என்றார்.

45—49. கிருஷ்ணபகவானுடைய வார்த்தையைக் கேட்டுப் பார்த்தர்களும் திரௌபதியும் துக்க மொழிந்து மகிழ்ச்சி யடைந்து, தேவனே! கோவிந்தா! பள்ளத்தில் முழுகிப்போனவர்கள் தெப்பத்தின் உதவியால் கரை ஏறுவது போல நாங்கள் உமது கருணையால் இந்தத் துக்கத்தைக் கடந்தோம். இப்போது திருப்தியுடன் போம். உமக்கு க்ஷேமம் உண்டாகட்டும் என்று சொன்னார். கிருஷ்ணன் தம்மிடம் போய்ச் சேர்ந்தார். பாண்டவர்கள் திரௌபதியுடன் வனத்துக்கு வனம் போய் வசித்து மகிழ்ந்தார்கள். நீர் கே

ட்டபடியால் உமக்கு இந்தக் கதையைச் சொன்னேன். பாண்டவர்களைப் பற்றித் துரியோதனன் கொண்ட துர் ஆசை இப்படி விலக்கப்பட்டது.

---

## 263-வது அத்தியாயம்.

### திரௌபதி ஹரண பர்வத் தொடர்ச்சி.

1—9. மகிமையுள்ள தேர் வீரர்களான பாரதர்கள் மான்கள் நிறைந்த காமியக வனத்தில் தேவர்களைப் போலச் சஞ்சரித்துக்கொண்டு இருந்தார்கள். கிருஷ்ணபகவான் செய்த சகாயத்தை நினைத்து நினைத்து மகிழ்ந்தார்கள். அதன் பக்கத்திலுள்ள நாடு நகரங்களையும், மரம் அடர்ந்த காடுகளையும், மலர்ந்த புஷ்பங்கள் நிறைந்த விருட்சங்களையும் பார்த்து மகிழ்ந்து, வேட்டையில் விருப்பமுள்ளவர்களும், சத்துருக்களைச் சங்கரிக்கிறவர்களுமான பாண்டவர்கள் அந்த காமியகவனத்தில் கொஞ்சகாலம் சஞ்சரித்தார்கள் ஒரு நாள் பாண்டவர்கள் தங்களுடன் இருக்கிறபிராமணர்களுக்காக மான் வேட்டைக்குச் சென்று நாலா பக்கமும் அலைந்து கொண்டிருந்தார்கள். திரௌபதி மாத்திரம் ஆச்சிரமத்தில் இருந்தாள். அப்போது சிந்து ராஜன் கல்யாணத்துக்காகச் சால்வதேசம் போய்க் கொண்டிருந்தான். அரசர்களுக்குரிய உடைகளைத் தரித்துக் கொண்டு, பல ராஜ புத்திரர்கள் சூழ வந்து அந்தக் காமியக வனத்தில் தங்கினான். அழகிற் சிறந்த திரௌபதி தனிமையாய் இருக்கிறதைக் கண்டான். பாண்டவர்களுக்குப் பிரிய நாயகியான திரௌபதி ஆச்சிரமத்தின் வாசற்படியில் நின்றுகொண்டிருந்தாள். அந்தக் காமியக வனத்தில் மேகக் கூட்டத்தின் மத்தியில் பிரகாசிக்கிற மின்னலைப் போல ஜ்வலித்துக் கொண்டிருந்தாள்.

10—17. இவள் அப்ஸரஸோ! தெய்வப் பெண்ணோ! தெய்வ மாயையோ! தெய்வப் பெண்களும் அஞ்சலியஸ்தராய் இவள் அழகைப் பார்த்துக் கொண்டு நிற்கிறார்கள்! என்று நினைத்துக்கொண்டு சிந்துராஜன் திரௌபதியைப் பார்த்தான். குற்றமற்ற அவள் அழகைப் பார்த்த வுடனே விருத்தக்ஷத்திரனுடைய புத்திரனான அந்த ஜயத்ரதனுக்குத் துர் எண்ணம் உண்டாயிற்று. அவள் மேல் மோகங்கொண்டு, கோடிகாச்யன் என்பவனைப் பார்த்து, குற்றமற்ற அழகிய திருமேனியை உடைய இவள் யார்? அவள் மனிதப் பெண் தானோ? இந்த அற்புதமான அழகிய பெண்ணை அடைந்தால் நான் கல்யாணத்தையே விரும்ப மாட்டேன். நான் இவளை அழைத்துக்கொண்டு ஊருக்குத் திரும்பிப் போகிறேன் என்றான். நீ போய் அவள் யார்? எங்கிருந்து வந்திருக்கிறாள்? முட்கள் நிறைந்திருக்கிற இந்த வனத்துக்கு ஏன் வந்திருக்கிறாள். இவ்வளவு சிறந்த அழகுள்ளவள் உலகத்தில் கிடையாது. சிறுத்த இடையும் அழகிய பல் வரிசையும் விசாலமான கண்களும் உள்ள இந்தப் பெண் என்னைக் கணவனாக அடைவாள். நான் இவளை நிச்சயமாய் அடைவேன் என்று நினைக்கிறேன். கோடிகாச்யா! சீக்கிரம் போய் யார் என்றும், அவளுடைய கணவன்

யாரென்றும் விசாரித்துக்கொண்டு வா. உடனே கோடிகாசுவன் தேரை விட்டுக் குதித்து ஒரு பெண் புலியினிடத்தில் நரிக்குட்டி செல்வது போலத் திரௌபதியினிடதிற்குப் போய்ப் பேசினான்.

---

## 264-வது அத்தியாயம்.

### திரௌபதி ஹரண பர்வத் தொடர்ச்சி.

1—14. கோடிகாசுவன் திரௌபதியை நோக்கி, அழகான பெண்ணே! கடம்ப விருட்சத்தின் கொம்பைப் போலத் தனியாக இங்கே நின்றுகொண்டிருக்கிறாயே! நீ யார்? இராக்காலத்தில் காற்றினால் ஜ்வலிக்கிற அக்கினியை போல இந்த ஆச்சிரமத்தில் விளங்குகிறாய். நீ மஹா அழகுள்ளவளா யிருக்கிறாய். இந்த வனத்தில் வசிக்க உனக்குப் பயமில்லையா? நீ தெய்வப் பெண்ணா? யட்சியா? தானவப் பெண்ணா? தேவனுடைய அழகான மனைவியா? நாகராஜன் குமாரத்தியா? இராட்சதப் பெண்ணா? வருணனுடைய மனைவியா? எமனுடைய தேவியா? சந்திரன் மனைவியா? குபேரன் பத்தினியா? மனிதரூப மெடுத்துக்கொண்டு இந்த வனத்தில் சஞ்சரிக்கின்றாய்? தாத்திரி, விதாத்திரி, சாவித்திரி, விபு, இந்திரன் இவர்களுடைய அரண்மனையிலிருந்து வந்திருக்கிறாயா? எங்களை யாரென்று நீ கேட்க வில்லை. நாங்களும் உன்னுடைய கணவன் யாரென்று கேட்க வில்லை. உன் மகிமையை விருத்தியாக்கும் பொருட்டுக் கேட்கிறோம். உன் பிதா யார்? உன் கணவனுடைய பேர் என்ன உன் பந்துக்கள் யார்? உன் ஜாதி யாது? ஏன் இங்கே நிற்கிறாய்? நான் சுரத ராஜனுடைய புத்திரன். என் பேர் கோடிகாசுவன் என்பார்கள். யாகவேதியில் பிரகாசிக்கிற நெருப்பைப் போல அந்தத் தேரின் மேல் உட்கார்ந்திருக்கிறவர் திரிகர்த்த ராஜன். அவனுக்குப் பின்னால் இருக்கிறவன் குலிந்த ராஜ குமாரன். விசாலமான கண்களை யுடையவனும், அழகிய பூமாலை தரித்து உன்னையே பார்த்துக்கொண்டு இருக்கிறவன் மலையில் வசிக்கிறவன். அதோ குளக்கரையில் நின்றுகொண்டிருக்கிற கரிய நிறமுடைய அழகிய இராஜ குமாரன் இக்ஷ்வாகுவின் புத்திரன். சுபலன். அவன் சத்துருக்களைச் சங்கரிக்கிறவன். நீ ஜயத்ரதனைப் பற்றிக் கேட்டிருந்தால், அவன் ஆறாயிரம் தேர்களுக்கு அதிபன். யானை குதிரைகளும் பன்னிரண்டு இராஜகுமாரர்களும் சூழ நிற்கிறான். அங்காரகன், குஞ்சரன், குப்தகன், பிரபாங்கரன், பிரமரன், இரவி, சூரன், பிரதாபன், குகனன் எல்லாரும் தேரின் மேலேறிக்கொண்டு யாகவேதியில் அக்கினியைப் போல விளங்குகிறார்கள். அந்த அரசனுடைய சகோதரர்களான பலாஹகன், அங்கன், விதரணன் என்பவர்களும் அவனைச் சூழ இருக்கிறார்கள். பராக்கிரமசாலிகளான சவீர வம்சத்து அரசகுமாரர்கள் அரசனைத் தொடர்ந்து வருகிறார்கள். அந்த அரசன் மருத்துக்களால் சூழப்பட்ட இந்திரனைப் போலப் பிரயாணம் பண்ணுகிறான். அழகிய கூந்தலை யுடையவளே!

நீ யாருடைய பத்நினி, யாருடைய புத்திரி என்பதை எனக்குச் சொல்ல வேண்டும் என்றான்

---

## 265-வது அத்தியாயம்.

### திரௌபதி ஹரண பர்வத் தொடர்ச்சி.

1—9. திரௌபதி அதைக் கேட்டுச் சாந்தமாக அவனைப் பார்த்துத் தன் வஸ்திரத்தால் அங்கத்தை மூடிக்கொண்டு, சொல்லுகிறாள். அரச குமாரனே! நான் உன்னிடத்தில் இப்படிப் பேசக் கூடாதென்பது எனக்குத் தெரியும். இவ்விடத்தில் உனக்குப் பதில் சொல்லக் கூடிய பெண்களாவது, மனிதனாவது இங்கே யில்லை. நான் தனியா யிருக்கிறபடியால் உன்னிடம் பேசுகிறேன். எங்கள் ஜாதி ஆசாரப்படி நான் உம்மிடம் பேசக் கூடாதென்று அறிந்துகொள்ளும். நீர் சுரத ராஜனுடைய புத்திரன் கோடிகாசுவன் என்பது எனக்குத் தெரியும். ஆகையால் சைப்பியனே! என்னுடைய குலத்தையும் உறவினரையும் சொல்லுகிறேன். நான் துருபதராஜ புத்திரி, என் பேர் கிருஷ்ணை, எனக்குக் கணவர்கள் ஐவர். அவர்கள் காண்டவப்பிரஸ்தத்திலிருந்த போது நீ அவர்களை நன்றாய் அறிவாய். அவர்கள் யுதிஷ்டிரர், பீமசேனன், அர்ஜுனன், நகுலசகதேவர்கள் என்பவர்கள். என்னை இங்கே வைத்துவிட்டு வேட்டைக்குப் போயிருக்கிறார்கள். அரசன் கிழக்குத் திசைக்குப் போயிருக்கிறார், பீமசேனன் தென் திசை போயிருக்கிறார். அர்ஜுனன் மேற்கே போயிருக்கிறார் இரட்டையர்கள் வடக்கே போயிருக்கிறார்கள். அவர்கள் வருகிற சமையமாய் விட்டது. நீங்கள் உங்கள் குதிரைகளை அவிழ்த்து விட்டு இங்கே தங்குங்கள் அவர்கள் வந்து உபசரிப்பார்கள். மஹாத்மாவான தர்மர் அதிதிகளை விரும்புகிறார். உங்களைப் பார்த்து மகிழ்வார். இப்படித் திரௌபதி சொல்லி விட்டு குடிசைக்குள் புகுந்தாள்.



## 266 வது அத்தியாயம்.

### திரோபதி ஹரணபர்வத் தொடர்ச்சி

1—6. ஜனமேஜயராஜனே! அவர்கள் உட்கார்ந்து களையாறிக்கொண்டிருக்கையில் கோடிகாசுவன் திரௌபதிக்கும் தனக்கும் நடந்த சம்பாஷணையை பற்றிப் பேசினான். அதைக் கேட்டதும் சௌவீரராஜன் கோடிகாசுவனை நோக்கி அவள் வார்த்தையைக் கேட்டவுடனே என் மனம் அவளிடம் செல்கின்றது. நீ ஏன் காரியசித்தி யில்லாமல் வந்தாய்? இவளைப் பார்த்த பின் மற்ற ஸ்திரீகள் எல்லாரும் குரங்குகளைப் போலக் காணப்படுகிறார்கள். நீண்ட புஜங்களையுடைய வீரனே! நான் உண்மையை உனக்குச் சொல்லுகிறேன். அவளைப்

பார்த்த அந்த க்ஷணத்திலேயே என் மனம் அவளிடம் போய்விட்டது. அவள் மானிடஜாதிதானா? எனக்குச் சொல் என்றான். கோடிகாசுவன் ஆம், அவள் மகிமையுள்ள கிருஷ்ணை யென்கிற திரௌபதி. அவள் பாண்டவர்களுடைய மனைவி. பதிவிரதையான அவளைப் பாண்டவர்கள் ஐவரும் பெருமையாக வைத்துக்கொண்டு அவளிடத்தில் கேசமா யிருக்கிறார்கள். சௌவீரனே! அவளைத் தூக்கிக்கொண்டு நீ சௌவீர நாடு போய்ச் சேரு என்றான்.

7—23. இப்படிச் சொன்னவுடன் துஷ்டசித்தமுள்ள ஜயத்ரதன் நான் அவளைப் பார்க்க விரும்புகிறேன் என்று சொல்லி, ஆறுபேர்களுடன், சிங்கத்தின் குகையில் ஓநாய் புகுந்தாற்போலப் பாண்டவர்களுடைய பரிசுத்தமான பர்ணசாலையில் புகுந்தான். திரௌபதியை நோக்கி, உத்தமமானவளே! நீ சுகமாயிருக்கிறாயா? உன் கணவர்கள் சுகமா? உன்னைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் சுகமா? என்றான். திரௌபதி, உம்முடைய இராஜ்யம் பொக்கிஷம் சேனைகள் எல்லாம் க்ஷேமமா? நீர் சிந்து, சௌவீரம், முதலிய தேசங்களை நீதியாய் அரசு புரிகிறீரா? அந்த இராஜ்யங்கள் உமது செங்கோலுக்கு அடங்கியிருக்கிறதா? பாண்டவர்கள் நான் மற்றவர்கள் எல்லாரும் சுகமாயிருக்கிறோம் என்று சொல்லி, இந்த நீரை ஏற்றுக்கொண்டு பாதங்களைக் கழுவிக்கொண்டு உட்காருங்கள். உங்களுக்கு ஐம்பது ஜந்துக்களை ஆகாரமாகக் கொடுக்கிறேன். குந்திபுத்திரரான யுதிஷ்டிரர் உங்களுக்குப் பல வகையான மான் இறைச்சிகளைக் கொடுப்பார் என்றாள். என்னிடம் எல்லாம் இருக்கின்றன. காலைப் போஜனம் கொடுத்ததனாலேயே எல்லாம் கொடுத்ததாயிற்று. என் தேரில் வந்து ஏறிக்கொள். சுகமாயிருக்கலாம். துஷ்டர்களான பாண்டவர்களுடனிருப்பது உனக்குத் தகுதியல்ல. நீ காட்டில் வசிக்கத் தகாது, சௌரியம் கெட்டு இராஜ்யத்தையும் செல்வத்தையும் இழந்திருக்கிற பாண்டவர்களுடன் இருப்பது உனக்குத்தகாது. உன்னைப் போன்ற புத்திசாலியான பெண் ஏழைகளான பர்த்தாக்களிடத்தில் விருப்பமா யிருப்பது தகுதியல்ல, செல்வமுள்ளவனா யிருக்கும்போது அவனிடதறில் பிரியமா யிருகக வேண்டும். தரித்திரனானால் அவனை விட்டுவிட வேண்டும். பாண்டவாகள உயர்ந்த பதவியிலிருந்து விழுந்து விட்டார்கள். செல்வமிழந்து தரித்திரர்களாய்விட்டார்கள். ஆகையால் நீ அவர்களிடத்தில் மரியாதையாயிருந்து அவர்களுடைய துன்பத்தைப் பங்கிட்டு அனுபவிப்பது சரியல்ல என்றான். இப்படிச் சொன்னவுடன் திரௌபதி முகத்தைச் சுளித்துக்கொண்டு அவ்விடத்தைவிட்டு வேறிடம் போய் விட்டாள், இனி இப்படிப்பட்ட வார்த்தைகளைப் பேசாதே. உனக்கு வெட்கமில்லையா? என்று கூறித் தன் பர்த்தர்களுடைய வரவுக்கு எதிர்பார்த்திருந்தாள்.



## 267-வது அத்தியாயம்.

### திரௌபதி ஹரண பர்வத் தொடர்ச்சி.

1—9. சுபாவத்தில் அழகுள்ள அவளுடைய முகம் கோபத்தால் சிவந்தது. கண்கள் நெருப்புப் போலாயின. அவளுடைய புருவம் வளைந்து நெற்றியின் மேலேறின. இப்படி கோபம் மீறினவளாய் அவனை நோக்கிச் சொல்லுகிறாள். மூடனே! இந்திரர்களுக்குச் சமானமான பாண்டவர்களை யிகழ்ந்து பேச உனக்கு வெட்க மில்லையா? ஆசாரம் தவறாதவர்களும், யுத்தத்தில் தேவ ராக்ஷஸ யக்ஷ கந்தர்வர்களானாலும் அசையாமல் எதிர்த்து நிற்பவர்களுமான பாண்டவர்களை நிந்திக்க வெட்க மில்லையா? புத்திசாலியா யிருப்பவன் அறிவுள்ளவர்களும் தவம் புரிகிறவருமா யிருப்பவர்களை நிந்திக்கத் தகாது. அவர்கள் நாட்டிலிருந்தாலும் காட்டிலிருந்தாலும் குற்றமில்லை. நாய்க்குச் சமானமாயிருக்கிற ஈனர்களே அப்படி யிகழ்ந்து பேசுவார்கள். உன் காலால் நீ வெட்டின குழியில் விழாதபடி உன்னைத் தடுக்கிற க்ஷத்திரியர்கள் உன்னிடத்தில் ஒருவருமில்லை என்று எண்ணுகிறேன். நீ சிறு பிள்ளைத்தனத்தினாலே தூங்குகிற சிங்கத்தினுடைய முகத்திலுள்ள மயிரை இழுத்து அதை எழுப்பி விடுகிறாய். நீ கோபங்கொண்ட பீமசேனனைக் கண்ட வுடனே பறந்து ஓடிப் போவாய். பயங்கரமான அர்ஜுனனுடன் நீ சண்டை யிட விரும்புகிறது வல்லமையும், பயங்கரமும் முற்றும் வளர்ந்ததும் கோப முள்ளதுமாய்க் குகையில் படுத்துத் தூங்குகிற சிங்கத்தை எழுப்பி விடுகிறது போலிருக்கிறது. நகுல சகதேவர்களுடன் நீ சண்டை செய்ய விரும்புகிறது விஷமுள்ளதும் பிளந்த நாவுள்ளதுமான கரு நாகத்தின் வாலைக் கருவத்தினால் பிடித்திழுப்பது போலிருக்கிறது. மூங்கில், நாணல், வாழை இவைகள் தமது அழிவுக்காகவே பலனைத் தருகின்றன. வளர்ந்து விருத்தியாவதற்கல்ல. நண்டுகள் சாவதற்காகவே கர்ப்பந் தரிக்கின்றன. அது போல நீயும் என் மேல் கை வைக்க நினைக்கிறாய் என்று சொன்னாள்.

10—22. ஜயத்ரதன் திரௌபதியை நோக்கிக் கிருஷ்ணா! இவைகளெல்லாம் எனக்குத் தெரியும். அவர்கள் எவ்விதமா யிருக்கிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும். இந்த வார்த்தைகளால் இப்பொழுது என்னைப் பயமுறுத்த முடியாது. நாங்களும் இராஜவம்சத்தில் பிறந்து க்ஷத்திரியகுணங்களை யுடையவர்களா யிருக்கிறோம். பாண்டவர்களை யீனர்கள் என்றே நினைக்கிறோம். நீ நியாயம் சொல்லி என்னைத் தடுக்க முடியாது. தேரிலாவது யானையின்மேலாவது ஏறிக்கொள். நான் வல்லமையுள்ளவளாயிருந்தும் சக்தியற்ற இந்தச் சௌவீரனாலே ஏன் எடுத்துக்கொண்டு போக வேண்டும். இந்திரனால் கூட என்னைத் தொட முடியாது. ஏனென்றால் எனக்கு இரட்சகர்களான கிருஷ்ணபகவானும் அர்ஜுனனும் ஒரே தேரின்மேல் ஏறிக்கொண்டு பின் தொடர்ந்து வந்துவிடுவார்கள். மற்றப்படி சக்தியில்லாத மனிதர்களைப் பற்றிப்

பேச வேண்டியதென்ன? சத்துரு பயங்கரனான அர்ஜுனன் எனக்காகத் தேரின்மேல் ஏறிக்கொண்டு உன் படைஅணியில் பிரவேசித்து விடுவான். எல்லாருடைய இருதயங்களும் படபடவென்று நடுக்கும். கோடை காலத்தில் வைக்கோல்போரை அக்கினி தகிப்பதுபோல அர்ஜுனன் எல்லாப் பொருள்களையும் எரித்துவிடுவான். கிருஷ்ணபகவான் அந்தகர், விருஷ்ணிகுலத்தாரோடு உடனே வந்து விடுவார். தனஞ்செயனுடைய காண்டீவ நாரியிலிருந்து புறப்படுகிற பயங்கரமான பாணங்கள் காற்றைப்போல வெகு வேகமாய் இரைந்துகொண்டு வந்துவிடும். அர்ஜுனனுடைய காண்டீபத்திலிருந்து புறப்படுகிற பாணக்கூட்டங்களை நீ பார்க்கிறபோது, வெட்டுக் கிளிகளைப் போலப் பறந்து, உன் குற்றத்துக்காக நீயே வருத்தப்படுவாய். காண்டீவ வில்லின் நாணொலியுடன் அந்த வீரனாகிய அர்ஜுனன் வந்து தன் கொடிய பாணங்களால் உன் மார்பை துளைக்கிறபோது உனக்கு என்ன நேரிடும் என்பதை யோசித்துப் பார். பீமசேனன் கதையை எடுத்துக்கொண்டும், இரட்டையர்கள் கோபமாகிற விஷத்தைக் கக்கிக்கொண்டும் யுத்தகளத்தில் உலாவுகிறபோது உனக்கு ஒருபோதும் நீங்காத துயரம் உண்டாகும். நான் என் கணவர்களுக்கு என் மனதால்கூடத் தவறு செய்ததில்லை. அதனால் பாண்டவர்கள் உன்னை ஜயித்து இழுத்துக்கொண்டு வருகிறதைப் பார்ப்பேன். நீ கொடியவனாயிருக்கிறாய். பலாத்காரமாகப் பிடித்து என்னைப் பயமுறுத்தாதே. பாண்டவர்கள் என்னைப்பார்த்தவுடனே மறுபடியும் என்னைக் காமியக வனத்துக்கு இட்டுக்கொண்டு வருவார்கள் என்றாள்.

23—27. அவர்கள் தன்னைப் பலாத்காரமாகப் பிடித்துக்கொண்டு போகச் சித்தமாயிருக்கிறதைப் பார்த்துப் பயந்து தௌமியரைக் கூப்பிட்டாள். ஜயத்ரதன் அவளுடைய மேல் வஸ்திரத்தைப் பிடித்துக்கொண்டான். திரௌபதி தன் பலத்தால் அவனைத் தள்ளி விட்டாள். அதனால் அந்தப் பாவி வேரற்ற மரத்தைப் போலப் பூமியில் விழுந்தான். மறுபடியும் எழுந்திருந்து அவளைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டான். அப்போது திரௌபதி பெருமூச்சு விட்டு அழுதாள். ஜயத்ரதன் இழுத்துக்கொண்டு போகும் போது தௌமியரை வணங்கினாள். ஜயத்ரதன் தேரில் அவளுடன் ஏறினான். தௌமியர் அவனைப் பார்த்து நீ பாண்டவர்களை ஜயிக்காமல் அவளைத் தொடக்கூடாது. இது புராதனமான க்ஷத்திரியர்களுக்குரிய விதி. அதை யோசி என்றார். நீ செய்த இந்தச் செய்கைக்குத் தகுந்த பயனை உடனே அடைவாய். யுதிஷ்டிரருடன் பாண்டவர்கள் வந்து விடுவார்கள் என்றார். ஜயத்ரதன் திரௌபதியுடன் தன் படைகளைச் சேர்ந்து போய் விட்டான்.

---

## 268-வது அத்தியாயம்.

*திரௌபதி ஹரண பர்வத்தொடர்ச்சி.*

1—16. நாலு பக்கங்களிலும் அலைந்து பல வகை மிருகங்களைக் கொன்ற பின் பாண்டவர்கள் ஒன்றாய்க் கூடினார்கள். பல வகைப் பிராணிகளும் நிறைந்திருக்கிற அந்த வனத்தில் பட்சிகள் கத்துகிறதையும், காட்டு மிருகங்கள் ஊளை யிடுகிறதையும் பார்த்து, யுதிஷ்டிரர் தம்பிகளை நோக்கி இந்தப் பட்சிகளும் மிருகங்களும் கூச்சலிட்டுக்கொண்டு கீழ் திசை நோக்கி ஓடுகின்றன. இதனால் சத்ருக்கள் படை எடுத்துவந்திருக்கிறது போலத் தோன்றுகிறது. நாம் தாமதிக்கக் கூடாது. என் இருதயம் எரிந்து வருந்துகின்றது. என் ஆத்மா என் சரீரத்தை விட்டுப் பறந்து போகிறது போலிருக்கிறது. கருடனால் நாசமாக்கப்பட்ட சர்ப்பங்களை யுடைய குளத்தையும், தாகமுள்ளவர்களால் குடிக்கப்பட்ட தண்ணீர்ப் பானையைப் போலவும், அரசனும் ஐசுவரியம் இல்லாத இராஜ்யத்தைப் போலவும் இந்தக் காமியக வனம் எனக்குக் காணப்படுகிறது. அதன் பின் பாண்டவர்கள் வேகமுள்ள குதிரைகள் கட்டின அழகுள்ள தேரைச் சீக்கிரமாய் ஓட்டிக்கொண்டு ஆச்சிரமத்தை நோக்கி வந்தார்கள். அவர்களுடைய இடது புறத்தில் நரிகள் ஊளை யிட்டன. யுதிஷ்டிரர் அதைக் குறிப்பாய்ப் பார்த்து பீமார்ஜுனர்களை நோக்கி இந்த தாழ்ந்த ஜாதி ஜந்து நமது இடது புறத்தில் கூவுகிறது. அதனால் பாவிகளான கௌரவர்கள் நமக்கு அவமானமான காரியத்தைச் செய்திருக்கிறார்கள் என்று நன்றாய்த் தெரிகிறது என்று வேகமாய் ஆச்சிரமத்துக்கருகில் செல்லுகையில், அவர்களுடைய வேலைக்காரிகளில் ஒருத்தி விம்மி அழுதுகொண்டிருக்கக் கண்டார்கள். உடனே தேரை விட்டிறங்கித் தாத்திரேயிகை என்னும் அந்தப் பெண்ணினிடம் வந்த போது அவள் அதிகமாய் அழுதாள். இந்திரசேனன் அவளை நோக்கி நீ என் பூமியில் புரண்டு அழுகிறாய்? என் உன் வாயுலர்ந்து வெளுத்திருக்கிறது? திரௌபதிக்கு யாதொரு கெடுதியுமில்லையே? தர்ம புத்திரர், திரௌபதி பூமிக்குள் இறங்கி விட்டாளோ? அல்லது தேவலோகம் போய் விட்டாளோ? அல்லது பாதாளம் சென்றாளோ? என்று கவலைப் படுகின்றார். அவருடைய சகோதரர்களும்அவரும்அவ்விடங்களுக்குத் தேடப்போவார்கள். பராக்கிரமசாலிகளும், எப்போதும் ஜயத்தையே அடைகிறவர்களுமான பாண்டவர்களுக்குரிய விலையற்ற இரத்தினத்தை அபகரித்த மூடன் யார்? அந்த இரத்தினம் பாண்டவர்களுக்கு அவர்களுடைய உயிரை விட மேலானது அல்லவா? எவனுடைய சரீரம் கூரிய அம்புகளால் பிளக்கப்பட்டு இன்றைய தினம் பூமிக்குள் புதைபடுமோ! அவனுக்காக நீ அழாதே. அச்சமுள்ள பெண்ணே! கிருஷ்ணை இன்று நிமிஷத்துக்குள்ளேயே வந்து விடுவாள். பார்த்தர்கள் தங்கள் சத்ருக்கள் எல்லாரையும் கொன்று யாக சேனையுடன் வந்து சேர்வார்கள் என்றான். பிறகு தாத்திரேயிகை தன் கண்களையும் முகத்தையும் துடைத்துக்கொண்டு சொல்லுகிறாள்.

17—24. ஐந்து இந்திரர்களையும் அலட்சியம் செய்து விட்டு ஜயத்ரதன் கிருஷ்ணையைப் பலாத்காரமாகக் கொண்டுபோய் விட்டான். அவன் சென்ற வழி மரக் கிளைகள் முறிந்து கிடக்கின்றன. இன்னம் மறைபடவில்லை. ஆகை யால் இன்னம் அவன் தூரம் போயிருக்க மாட்டான். சீக்கிரமாகத் தேரைத் திருப்பிக்கொண்டு தொடர்ந்து செல்லுங்கள். இல்லா விட்டால் பரிசுத்த மான யாக பலியைச் சாம்பலில் எறிந்தது போல அவளுடைய சரீரம் இழி வடைந்து விடும். எரிகிற பதரில் விட்ட நெய் போலவும், சுடுகாட்டில் எறிந்த மாலை போலவும் ஆய்விடும். குரு அஜாக்கிரதையா யிருக்கிறதினால் யாகத் துக்குரிய சோமரசத்தை நாய் நக்கக்கூடுமோ? இரைக்காக அலைகிற நரியானது அழகிய நீலோத்பலத்தைப் பிய்த்தெறியும்படி விட்டு விடலாமா? என்றாள். யுதிஷ்டிரர் அவளைப் பார்த்து நீ அழாதே, போ. எவனாலும் அவளை எடுத் துப் போனவன் இன்று துக்கப்படுவான் என்று சொல்லி, அவள் காட்டின வழியே சென்றார்கள். பெருமூச் செறிந்துகொண்டும், வில் நாணை ஒலி எழச் செய்து கொண்டும் போனார்கள்.

25—28. குதிரை யடிகளால் மேலே கிளம்புகிற தூளியைக் கண்டார் கள். அந்தச் சேனைக்கு மத்தியில் அழுதுகொண்டு நிற்கிற தௌமியரையும் பார்த்தார்கள். தௌமியர் பீமனை நோக்கிச் சீக்கிரம் போய் அவனைப் பிடி என்றார். அவன் மனம் சோராமல் அவரைத் தேற்றி, நீர் மகிழ்ச்சியாய்ச் செல் லும் என்று சொல்லி, ஆகாரத்தைக் கண்டு வேகமாய்ப் போகிற இராஜாளி யைப் போலச் சத்துரு சேனையை நோக்கி ஓடினான். எல்லாரும் கூட ஓடினார் கள். இந்திரனைப் போன்ற சௌரிய முடையவர்களான அவர்கள் தங்களுக் கும் திரௌபதிக்கும் உண்டான அவமானத்தால் கோபமடைந்து, ஜயத்ரதனை யும், அவன் தேரில் உட்கார்ந்திருக்கிற திரௌபதியையும் பார்த்த போது கோ பம் பற்றி யெரிந்தது. பாண்டவர்கள் ஜயத்ரதனை நில் என்று சொல்லிக் கொண்டே ஓடினார்கள், அதனால் பகைவர்கள் போகும் திசை தெரியாமல் போனார்கள்.

---

## 269-வது அத்தியாயம்.

### திரௌபதி ஹரண பர்வத் தொடர்ச்சி.

1—3. பீமனும் அர்ஜுனனும் வருகிறதைக் கண்டு ஜயத்ரதன் சேனை யில் பயங்கரமான பெருங் கூச்சலுண்டாயிற்று. பாண்டவர்களுடைய கொடி யைப் பார்த்த வுடனே துஷ்ட சித்தமுள்ள ஜயத்ரதனுக்கு மனம் தளர்ந்து போயிற்று. யக்ஞசேனையைப் பார்த்து, அதோ ஐந்து மஹா வீரர்கள் வருகின் றார்கள். கிருஷ்ணா! அவர்கள் உன்னுடைய கணவர்கள் என்று நான் நினைக் கிறேன். நீ அவர்களை நன்றாய் அறிந்திருக்கிறபடியால் அவர்களை இன்னார் இன்னாரென்று எனக்கு விளக்கச் சொல்லு என்றான்.

4—11. கொடிய குற்றத்தைச் செய்ததனால் இப்பொழுது உன் பிராண னுக்கு அபாயம் வந்திருக்கிறது. மூடனே! இந்தச் சமையத்தில் அவர்களு டைய பேரைத் தெரிந்து கொள்வதினால் என்ன பயன். வீரர்களான என் கணவர்கள் வந்து விட்டார்கள். உங்களில் ஒருவராவது உயிர் தப்பிப் பிழைக் கப் போகிறதில்லை. நீ மரண மடைகிற சமையத்தில் கேட்கிறபடியால் சொல் லுகிறேன். அது என் கடமை. தர்மராஜாவையும் அவருடைய சகோதரர்க ளையும் கண்ட பின் நான் உனக்குக் கொஞ்சங்கூடப் பயப்படவில்லை. கவலைப் படவுமில்லை. நந்தம் உபநந்தம் என்கிற இரண்டு முரசக் கொடிகள் கட்டி யிருக்கிற தேரிலுள்ள பரிசுத்தமான சொர்ண வடிவமுள்ளவரும், உயர்ந்த மூக்கும் விசாலமான கண்களும் உள்ளவா என் கணவராகிய யுதிஷ்டிரர். தர்ம தேவதையின் புத்திரர். கௌரவ சிரேஷ்டர். பக்திமானாகிய அவர் தம் மை அடைந்தவர்கள் பகைவரா யிருந்தாலும் அவர்களைக் காப்பாற்றுவார். ஆகையால் மூடனே! உன் ஆயுதங்களை எறிந்து விட்டுக் கைகளைக் குவித்துக் கொண்டு சீக்கிரமாக அவரிடம் ஓடிச் சரண மடைந்தால் உன் உயிர் பிழைத் திருக்கும். சால விருட்சம் போல உயர முள்ளவராயும், நீண்ட கைகளை யுடையவராயும் உதட்டைக் கடித்துக்கொண்டு அதோ தேர் மேல் உட்கார்ந் திருக்கிறவர் என் பர்த்தாவாகிய பீமசேனன். பருத்து வலிமை யுடையதாய் நன்றாய்ப் பழக்கப்பட்டு வல்லமையுடன் கூடியுள்ள குதிரைகள் அவரை இழு த்துச் செல்லும். அவர் செய்கை மனிதர் சக்திக்கு மேற்பட்டது. அவருக்கு விருகோதரன் என்றும் பேர். அவருக்குக் கோபமுண்டாக்கினவர்கள் பிழைத் திருப்பதில்லை. அவர் சத்துருக்களைப் மறப்பதே யில்லை. எந்தக் காரணத்தா லாவது பழி தீர்த்து விடுவார், அதற்கு அப்புறம் கூட அவர் சாந்தம் அடைகிற தில்லை.

12—21. வில்லாளிகளிற் சிறந்தவரும், புத்திசாலியும், மகிமை யுள்ளவ ரும், புலனடக்க முள்ளவரும், பெரியோர்களைப் பணிகிறவரும், மனிதர்களுக் குள் சிறந்த வீரரும், தர்ம ராஜாவுக்கு தம்பியும் சிஷ்யருமான அவர்தான் தனஞ்செயன் என்கிறவர். அவர் என் பர்த்தா. அவர் பயத்தினால் கூட ஒரு போதும் தர்மத்தை விடுவதில்லை. சினம், கர்வம் முதலியவற்றாலும் தர்மத்தை விடமாட்டார். ஒரு போதும் துர்க் கர்மங்களைச் செய்வதில்லை. அக்கினியை ப்போல சக்தியுடையவராய் எவ்வகைப்பட்ட சத்துருவையும் எதிர்ப்பார். சத் துருக்களைச் சங்கரிப்பார். மற்றவர் தர்ம அர்த்த சாஸ்திரங்களில் சிறந்தவர். பயந்தவர்களுடைய பயத்தைப் போக்குகிறவர், சிறந்த ஞானமுள்ளவர். பா ண்டு புத்திரர்கள் எல்லாராலும் இரட்சிக்கப்பட்டவர். பாண்டவர்களுக்கு உயி ரை விடச் சிறந்தவர். குறையாத பக்தியுடையவர். அவர்தான் என் பர்த்தாவா கிய நகுலன் என்பவர். அதோ வருகிற ஞானமும் பெருமையு முடைய சக தேவனைத் தம்பியாக உடையவர். கத்திச் சண்டையில் வல்லவர். ஏ மூடா! அவருடைய ஆண்மையை இன்று நடக்கிற சண்டையில் காண்பாய். இராட்ச சேனையில் இந்திரன் போலும் பராக்கிரமத்தைப் பார்ப்பாய். அவர் பக்கத்தி

நுள்ளவர் வீரர் ; ஆயுதங்களில் தேர்ந்தவர் ; அறிவுள்ளவர்; தர்ம புத்திரருக்கு எப்போதும் மகிழ்ச்சி யுண்டாக்குகிறவர்; சந்திரகிரணம் போலும் ஒளியுள்ளவர். பாண்டவர்களில் கடைசியானவர். பாண்டவர்களுக்குப் பிரியமானவர். ஞானத்தில் அவருக்குச் சமானமானவர்களில்லை. புத்திமான்களுடைய சபையில் அவருக்குச் சரியான சாமர்த்தியமுள்ளவர்கள் இல்லை. வீரரும், கோபமுள்ளவரும், ஞான முள்ளவருமான அவர்தான் சகதேவன் என்கிற என் பர்த்தா. மதத்துக்கும் நீதிக்கும் மாறாகச் சொல்வதை விட உயிரை விடுகிறது சிறந்ததென்று எண்ணுகிறவர். க்ஷத்திரிய தர்மம் தவறாமல் நடப்பவர். குந்தி தேவிக்கு உயிரை விடச் சிறந்தவர். பாண்டவர்கள் உன் சேனைகளை நாசப் படுத்தும் போது, திமிங்கிலத்தின் முதுகினால் உடைபட்ட கப்பலினின்றும் மணிகள் சிதறுவது போல் உன் சேனைகள் சின்னபின்னமாய்ச் சிதறுவதை நீ காண்பாய் பாண்டவர்களுடைய வல்லமைகளை ச சொல்லி விட்டேன். நீ அவர்களால் துன்பம் அடையாமல் தப்பித்துக் கொண்டாயானால் நீ உயிர் கடன் வாங்கிக் கொண்டவன் போலாவாய் என்று சொன்னாள். அப்போது இந்திரனைப் போன்ற பாண்டவர்கள் கெஞ்சுகிற போர் வீரர்களை விட்டுத் தேர் வீரர்களை எதிர்த்து நீருண்ட பருவ மேகத்தைப் போலச் சரமாரி பெய்தார்கள்.



## 270-வது அத்தியாயம்.

திரௌபதி ஹரணபர்வத் தொடர்ச்சி.

1—38. சிந்துராஜன் தன் சேனைகளையும் இராஜகுமாரர்களையும் நோக்கி நில்லுங்கள், அடியுங்கள், சீக்கிரம் செல்லுங்கள் என்றான். அப்போது பாண்டவர்கள் ஐவரையும் கண்டவுடனே அந்தச் சேனையில் பயங்கரமான இரைச்சலுண்டாயிற்று. பயங்கரமான புலி போன்ற பாண்டவர்களைப் பார்த்தவுடனே சிந்துராஜன் முதலானவர்களுக்கு மனம் தளர்ந்து போயிற்று. பீமசேனன் கையில் கதையை எடுத்துக் கொண்டு சிந்துராஜனைக் கொல்ல நினைத்து வெகு வேகமாய்ச் சென்றான். கோடிகாசுவன் தேர் வீரர்களுடன் வந்து அவனை யெதிர்த்துத் தடுத்தான். அளவில்லாத பாணங்களையும், கதைகளையும் பீமன் மேல் சொரிந்தார்கள். பீமன் அவைகளைச் சட்டை செய்யாமல் முன்னேறிச் சென்றான். கதையினால், ஒரு யானையை அதன் பாகனோடுகூடக் கொன்றான். ஜயித்ரதன் தேருக்கு முன்னாலிருந்து போர்புரிந்த பதினாறு வீரர்களையும் கொன்றான். முன்னணியிலுள்ள ஐந்நூறு வீரர்களை அர்ஜுனன் கொன்றான. தர்மராஜாவும் அநேகம் பேரைக் கொன்றார். நகுலனும் சகதேவனும் அநேகம் போர்வீரர்களைக் கொன்றார்கள். திரிகர்த்தன் தேரைவிட்டு இறங்கி வந்து கதையினால் தர்மராஜாவின் நாலு குதிரைகளையும் கொன்றான். தர்மராஜா கூரிய அம்புகளால் திரிகர்த்தன் மார்பைப் பிளந்தார். அவன் இரத்தத்

ணைக் கக்கிக்கொண்டு பூமியில் விழுந்துவிட்டான். தர்மராஜா சகதேவன் தேரில் ஏறிக்கொண்டார். க்ஷேமாங்கரன், மஹாமுக்ஷன் என்கிற இருவீரர்கள் நகுலனை யெதிர்த்துப் பாணங்களைச் சொரிந்தார்கள். நகுலன் இரண்டு அம்புகளால் இருவரையும் கொன்றான். திரிகர்த்த இராஜனான சுரதன் நகுலனை யெதிர்த்தான். நகுலன் கத்தியையும் கேடகத்தையும் எடுத்துக்கொண்டு தேரைவிட்டிறங்கி வந்து திரிகர்த்தன் ஏறி வந்த யானையின் துதிக்கையையும் கொம்புகளையும் வெட்டினான். அந்த யானைதலை குப்புற விழுந்து தன் மேலிருந்த திரிகர்த்தனையும் நசுக்கிற்று. உடனே நகுலன் பீமசேனன் தேர்மேலேறிக்கொண்டு சத்துருக்களை யாறினான். கோடிகாசுவன் பீமனை யெதிர்த்தான். பீமன் அவனுடைய தேர்ச் சாரதியைக் கொன்றான். சாரதி யிறக்கவே கோடிகாசுவன் ஓடத்தொடங்கப் பீமன் அவனையும் ஓரம்பினாலே கொன்றான். அர்ஜுனன் ஜயத்ரதனைச் சூழ்ந்திருந்த பன்னிரண்டு இராஜர்களையும் கொன்றான். அங்கிருந்த அரசர்களுடைய சேனாபதிகளையும் கொன்றான். கொடிகளுடன் கூடின அநேக யானைகள், கொடிகள் கட்டின அநேக தேர்கள் இவைகளை யெல்லாம் அர்ஜுனன் அழித்துவிட்டான். அந்த யுத்தகளம் எங்கும் யானைகளின் தலைகளில்லாத துதிக்கைகளாலும், துதிக்கைகளில்லாத தலைகளாலும் நிறைந்தது. எங்கே பார்த்தாலும் நரிகளும், நாய்களும், காக்கைகளும், அண்டங்காக்கைகளும் கழுகுகளும், இராஜாளிகளும் கூட்டங் கூட்டமாய் நிறைந்து புதிய விருந்துண்டு களித்தன. தன்னுடைய போர்வீரர்கள் எல்லாரும் மடிந்ததைக்கண்ட ஜயத்ரதன் திரௌபதியை விட்டுவிட்டு ஓடப் பார்த்தான். உடனே அந்தத் துஷ்டன் தேரைவிட்டுக் குதித்து மனக் கலக்கத்துடன் வந்த வழியாக ஓடிப்போனான். தௌமியரும் திரௌபதியும் வருகிறதைப் பார்த்துத் தர்மராஜா அவர்களைச் சகதேவன் தேரில் ஏற்றிக்கொண்டார். அர்ஜுனன் ஜயத்ரதன் ஓடிப்போனதைக் கண்டு பீமனை நோக்கிச் சண்டையை நிறுத்தச் சொன்னான். பீமா! ஜயத்ரதனைக் காணோம். யாருடைய தப்பிதத்தால் அவன் தப்பி ஓடிப்போய்விட்டான்? இவர்களைக் கொல்வதை விடு. அவனைத் தேடு என்றார்.

39—47. இதைக்கேட்ட பீமன் யுதிஷ்டிரரை நோக்கி மன்னர் மன்னனே அநேக வீரர்கள் கொலையுண்டார்கள். நகுல சகதேவர்களுடன் ஆச்சிரமத்துக்குப் போய்த் திரௌபதியைத் தேற்றும். மூடனான ஜயத்ரதன் பாதாள லோகம் போனாலும், இந்திரனிடத்தில் அடைக்கலம் புகுந்தாலும் நான் அவனை விடப்போகிறதில்லை என்றான். யுதிஷ்டிரர் பீமனைநோக்கி நமது சகோதரி துச்சலையையும், காந்தாரியையும் நினைத்து அந்தத் துஷ்டனைக் கொல்லாதே என்றார். உடனே திரௌபதி பீமார்ஜுனர்களைப் பார்த்து, ஈனனும், கொடியனும், துஷ்டனுமான சைந்தவனை அவசியம் கொல்லவேண்டும். மனைவியையாவது இராஜ்யத்தையாவது அபகரித்த துஷ்டனைக் கொல்லாமல் விடக் கூடாது. அவன் இரக்கத்துக்காகக் கதறினாலும் விடக் கூடாது என்றாள். திரௌபதி

யை அழைத்துக்கொண்டு தர்மராஜா ஆச்ரமம் போய்ச்சேர்ந்தார். பீமார்ஜுனர்கள் சைந்தவனைத் தேடிக்கொண்டு போனார்கள்.

48—69. யுதிஷ்டிரர் ஆச்ரமத்துக்குப் போனபோது மார்க்கண்டேயர் முதலிய பிராமணர்கள் நிறைந்திருந்தார்கள். அங்குள்ள பிராமணர்கள் திரௌபதிக்காக இரங்கி அழுதுகொண்டிருந்தார்கள். தர்மராஜா தம்பிமார்களுடன் அஞ்சலியஸ்தராய் அவர்களை வணங்கினார். பிராமணர்கள் யுதிஷ்டிரர் சிந்துராஜன் முதலானவர்களை ஜயித்துத் திரௌபதியை அழைத்துக்கொண்டு வந்ததைப் பார்த்து மனம் மகிழ்ந்தார்கள். அரசன் பிராமணர்கள் சூழ உட்கார்ந்தார். சிந்துராஜன் இரண்டு யோஜனை தூரம் தான் போயிருக்கிறானென்று கேள்விப்பட்டுப் பீமார்ஜுனர்கள் குதிரைகளை வேகமாய் ஓட்டிக்கொண்டு போனார்கள். அர்ஜுனன் இரண்டு யோஜனை தூரத்திலிருக்கிற சைந்தவனுடைய குதிரைகளை வெட்டி வீழ்த்தினான். அது பார்ப்பவர்களுக்கு வெகு ஆச்சரியமாயிருந்தது. மந்திர சக்தியுடன் கூடின தேவாஸ்திரங்களாலே சைந்தவன் குதிரைகளை வெட்டி, அர்ஜுனன் அற்புதமான தன் பராக்கிரமத்தைக் காட்டின உடனே பீமார்ஜுனர்கள் சிந்துராஜனை நோக்கி வேகமாய்ச் சென்றார்கள். சிந்துராஜன் மனங்கலங்கி நின்றான். அர்ஜுனனுடைய அற்புதச் செய்கையைப்பார்த்த சைந்தவன் வெகு துக்கப்பட்டான். தப்பித்துக் கொள்ள முயன்று ஓடினான். அர்ஜுனன் அவனை நோக்கி இப்படிப்பட்ட சாமர்த்தியமுள்ள நீ அந்நியனுடைய மனைவியை அபகரிக்க எப்படித் துணிந்தாய்? அரசனே! உன்னைச் சேர்ந்த சேனைகளைச் சத்துருக்களினிடம் காட்டிக் கொடுத்துவிட்டு நீ ஓடுகிறது உனக்குத் தகாது என்றான். அர்ஜுனன் இப்படிச் சொல்லவும் சைந்தவன் திரும்பிப்பாராமல் ஓடினான். பீமன் வெகு சீக்கிரமாய் ஓடி அவனைப் பிடித்துக்கொண்டான். அர்ஜுனன், பீமா! நில் நில்; அவனைக் கொல்லாதே என்றான்.

---

## 271-வது அத்தியாயம்.

### ஜயத்ரத விமோட்சண பர்வம்.

1—14. தப்பித்துக்கொள்ளக் கருதி ஓடுகிற சைந்தவனுடைய குடுமியைப் பீமசேனன் பிடித்துக்கொண்டான். பீமன் அவனைப் பிடித்துப் பூமியில் மோதினான். மறுபடியும் தூக்கி மோதினான். மறுபடியும் அவன் தலைமேல் உதைத்தான். மறுபடியும் மார்பில் உதைத்தான். அதனால் ஜயத்ரதன் ஸ்மரணை தப்பிப்போனான். உடனே அர்ஜுனன் வந்து துச்சலையைப் பற்றி யுதிஷ்டிரர் சொன்னதைப் பீமனுக்கு ஞாபகப்பூட்டினான். பீமசேனன், அர்ஜுனனை நோக்கி இந்தத் துஷ்டன் குற்றமற்ற திரௌபதிக்குப் பெரிய தீங்கு செய்தான். அதனால் இவனை உயிரோடு விடக்கூடாது. ஆனால் நான் என்ன செய்வேன்? நமது அரசன் எப்போதும் இரக்கமுள்ளவராயிருக்கிறார். நீயும்

சிறு பிள்ளைத்தனத்தினாலே எப்போதும் என்னைத் தடுக்கிறாய் என்று சொல்லி விட்டு, தன்னுடைய கூரிய அம்பை யெடுத்து ஜயத்ரதனுடைய தலையைச் சிரைத்து, ஐந்து குடுமி வைத்தான். ஜயத்ரதன் வாயைத் திறந்து ஒருவார்த்தை கூடச் சொல்லவில்லை. பீமன் ஜயத்ரதனை நோக்கி, ஏ மூடா! உனக்குப் பிழைத்திருக்கப் பிரியமிருந்தால் நான் சொல்லுகிற உபாயத்தைக் கேள். சாதாரணசபைகளிலும், இராஜசபைகளிலும் உன்னைப் பாண்டவதாசன் என்று சொல்லிக்கொள். நீ இதற்கு ஒப்புக்கொண்டால் நான் உன்னை உயிருடன் பிழைத்திருக்க விடுவேன். இது ஜயித்தவர்களுடைய வழக்கம் என்று சொன்னான். ஜயத்ரதன் அப்படியே ஆகட்டுமென்று சொன்னான். பிறகு பீமனும் அர்ஜுனனும் அவனைத் தூக்கித் தேரின்மேல் வைத்துக் கொண்டார்கள். பிறகு அவனுடன் ஆச்சிரமத்துக்குப் போய்ப் பிராமணர்களுக்கு மத்தியில் உட்கார்ந்திருக்கிற யுதிஷ்டிரரிடத்துக்குப் போனார்கள்.

15—23. பீமசேனன் அந்த ஸ்திதியிலிருக்கிற ஜயத்ரதனை யுதிஷ்டிரருக்குக் காட்டினான். யுதிஷ்டிரர் புன் சிரிப்புடன் பீமனை நோக்கி அவனைக் கட்டவிழ்த்து விடச் சொன்னார். பீமன் யுதிஷ்டிரரை நோக்கி, இந்தத் துஷ்டன் பாண்டவர்களுடைய அடிமை என்று திரௌபதிக்குச் சொல்லுமென்றான். யுதிஷ்டிரர், பீமா! நீ என்னிடம் மரியாதை வைத்திருந்தால் அவனைக் கட்டவிழ்த்து விடு என்றார். உடனே திரௌபதியும் பீமனைப் பார்த்து தர்மராஜாவினுடைய அடிமையை விட்டு விடும். நீர் ஐந்து குடுமி வைத்து உயிரோடு விட்ட அந்த அடிமையை விடுதலையாக்கும் என்றாள். பீமன் கட்டவிழ்த்துவிட ஜயத்ரதன் யுதிஷ்டிரரிடம் வந்து அவரைத் தலை குனிந்து வணங்கினான். அங்கே யிருக்கிற தவசிகள் எல்லாரையும் வணங்கினான். விஜயனால் காப்பாற்றப்பட்ட ஜயத்ரதனைப் பார்த்துத் தர்மராஜா நீ சுயாதீன மடைந்து விட்டாய். உன்னை விட்டு விட்டேன். நீ போகலாம் என்றார். ஆனால் மறுபடியும் இப்படிப்பட்ட துஷ்ட காரியம் செய்யாதே. நீ ஈனனும், சக்தியற்றவனும் இருக்கிறபோது பிறனுடைய மனைவியை அபகரிக்க நினைத்தாய். சீசீ! அது கெட்டது. இப்படிப்பட்ட காரியத்தை நீ மறுபடியும செய்தால், உன்னைப் போலுள்ள ஈனர்களே எவ்வாறு நினைப்பார்கள்? என்றார். பிறகு அவன் ஞாபக மிழந்திருக்கிறதை அரசன் தெரிந்துகொண்டு அவன் மேல் இரக்கம் கொண்டார். பின்பு அவனை நோக்கி இனிமேல் உன் மனம் தர்மத்தையே கருதட்டும். இனி இப்படி ஈனத் தொழிலைச் செய்யாதே. ஜயத்ரதா! உன் சேனைகளுடன் போ என்றார்.

24—30. ஜயத்ரதன் மிகுந்த வெட்கத்துடன் யுதிஷ்டிரரை வணங்கினான். பிறகு துக்கத்துடன் கங்காதுவாரத்தை அடைந்து உமாகாந்தனாகிய விருபாட்சரை வணங்கித் தவம் புரிந்தான். சிவ பெருமான் அவனுடைய தவசுக்கு மகிழ்ந்து பிரசன்னராய் உனக்கு என்ன வேண்டுமென்றார். ஜயத்ரதன் யுத்தத்தில் பாண்டவர்கள் ஐவரையும் நான் ஜயிக்க வேண்டுமென்று சொன்

னுன். பரமசிவன் அது கூடாது. அர்ஜுனனைத் தவிர மற்ற பாண்டவர் களை ஒரு நாள் தடுத்து வெற்றி பெறுவாய். கொல்ல முடியாது. அர்ஜு னன் தேவர்களுக்கு இறைவனுகிய நரனுடைய அவதாரமானவன். நாராய ணனைத் துணையாகக் கொண்டிருக்கிறவன். பதரிகாச்சிரமத்தில் உக்கிரமான தவசு செய்தவன். அவன் தேவர்களாலும், மனிதர்களாலும் ஜயிகக முடியாத வன். நானும் அவனுக்கும் தெய்வத தன்மையுள்ள பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்திருக்கிறேன். லோகபாலகர்களிடத்தி லிருந்து வஜ்ராயுதம் முதலிய தெய்வாயுதங்களையும் பெற்றிருக்கிருன.

31—60. மஹாவிஷ்ணு தேவர்களுக்குக் குருவானவர், பிறவாதவர், உலகத்தை உண்டாக்குகிறவர், யுக முடிவில் அக்கினி சொரூபராய் ஜகத்தை எரிப்பார். நாகர்கள் வசிக்கிற பாதாள லோகத்தை எரித்த பின் ஆகாயத்தில் பல நிறமுள்ள மேகங்கள் தோன்றும். இடி மின்னல்களுடன் ஆகாயத்தில் பரவும். வண்டியின் ஆரைக்கால்களைப் போல மழைத் தாரைகளைப் பொழிந்து அக்கினியை அவிக்கும். நாலாயிரம் யுகங்கள் சென்ற பின் உலகமெங்கும் பெரு வெள்ளத்தில் முழுகி யிருந்தது. சராசரங்களெல்லாம் அழிந்தன. சூரி யன், சந்திரன், வாயு எல்லாம் அழிந்தன. நட்சத்திரம் கிரகம் ஒன்றுமில்லை. ஆயிரம் சிரசு, ஆயிரம் பாதங்களுடைய நாராயணன் மாத்திரம் மிஞ்சி யிருந் தார். குந்தமலர் போல வெண்மையாயும், ஆயிரம் சூரியர்களைப் போன்ற ஒளியையும், ஆயிரம் தலைகளையும் உடைய சேஷசயனத்தின் மேல் பள்ளிகொ ண்டிருந்தார். திசைகளெங்கும் இருள் மூடி நிறைந்திருந்தது. நீருக்கு நாரம் என்று பேர். அதில் அவர் படுத்திருந்தபடியால் அவருக்கு நாராயணன் என்று பேர். அவர் உலகைச் சிருஷ்டிக்க நினைதத வுடனே அவருடைய நாபியி லிருந்து ஒரு சொர்ணதாமரை தோன்றிற்று. அதிலிருந்து பிரமதேவர் உண் டானுர். உலகம் வெறுமையா யிருக்கிறதைப் பார்த்து, பிரமதேவர் தமது மனதிலிருந்து மரீசி முதலான ஒன்பது ரிஷிகளைச் சிருஷ்டித்தார். அவர்கள் யட்சர், இராட்சதர், பிசாசர், மனிதர்களையும், ஊர்ந்து நகர்துவாழும் பிராணி களையும் சிருஷ்டித்தார்கள். சராசரங்கள் எல்லாவற்றையும் உண்டாக்கினுர் கள். அந்தக் கடவுளுக்கு மூன்று சொரூபங்கள் உண்டு. பிரமா என்கிற சொரூபத்தால் சிருஷ்டிப்பார். விஷ்ணு என்கிற வடிவத்தால் இரட்சிப்பார். உருத்திர சொரூபத்தினுல் அழிப்பார். வேதம் உணர்ந்த பிராமணர்கள் விஷ்ணுவைப் பற்றிச் சொல்வதை நீ கேட்டதில்லையா? அவர் வெள்ளத்தி னுள் முழுகியிருந்த உலகத்தைத் தேடினுர். அப்போது வராகவடிவம் கொண் டார். அது பத்துயோசனை நீளமுள்ளது. மலைபோன்ற பெரிய கரிய வடிவமுள் ளது. மேகத்தின் இடி முடிக்கம்போலும் தொனியுடையது. அந்த வராக மூர்த்தி நீரில் முழுகிப் பூமியை மேலே எடுத்து நிறுத்தினுர். பிறகு நரசிங்க வடிவம்கொண்டு திதிபுத்திரனும், தைத்தியர்களுக்குள் முதலானவனும், தேவர் பகைவனுமான தைத்தியராஜன் சபைக்குப் போனுர். தைத்திய ராஜ

ஞன ஹிரணியகசிபு நரஸிங்கத்தைப்பார்த்துக் கோபங்கொண்டு கையில் கதை யை யெடுத்துக்கொண்டு அடிக்க ஓடிவந்தான். நரஸிங்கம் அவனைத் தன் நகங் களால் கிழித்துவிட்டது.

61—70. பின் அதிதியின் கர்ப்பத்தில் தரித்துச் கசியபருக்குப் புத்திர ராகப் பிறந்தார். அதிதி ஆயிரவருஷம் கர்ப்பமாயிருந்து புத்திரனைப் பெற்றாள். அந்தக் குழந்தை குள்ளவடிவமாயும், மேகம்போலக் கரிய நிறமுடையதாயு மிருந்தது. கையில் கமண்டலமும், மார்பில் ஸ்ரீவத்ஸ மறுவு மிருந்தது. அந்த கடவுள் சடையும், பூணூலும் தரித்துப் பருத்து அழகுடையவராய் ஒளி யுடன் விளங்கினார். பிருகஸ்பதியின் ஆத்தாசையால் பலியினுடைய யாகசா லைக்குப் போனார். அவருடைய குள்ள வடிவத்தைக் கண்டு பலிச்சக்கரவர்த்தி சிரித்து அவரைப் பார்த்து, ஏ விப்பிர! உன்னைப் பார்த்து மகிழ்ந்தேன். உன க்கு நான் என்ன செய்ய வேண்டும் சொல் என்றான். வாமனர், பலியை நோக்கி உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். என் காலால் மூன்று அடி நிலம் எனக்குக் கொடு என்றார். பலி மகிழ்ந்து அப்படியே கொடுத்தான். பூமியை அளக் கிறபோது ஹரி அதிசயமான பெரிய சொரூபத்தை யெடுத்துக் கொண்டார். மூன்றடியால் மூன்று உலகத்தையும் அளந்து எடுத்துக் கொண்டு இந்திரனுக் குக் கொடுத்தார். இந்த வாமனருடைய கதையால் பூமி வைஷ்ணவம் என் னப்பட்டது. அல்லது விஷ்ணுவால் வியாபிக்கப்பட்டது என்று கூறப்படு கிறது.

71— . பாவிகளைச் சங்கரிக்கவும், புண்ணியவான்களைக் காக்கவும் யதுகுலத்தில் மனிதனாக அவதரித்திருக்கிறார். அவர்தான் இப்போது கிருஷ் ணன் என்னப்படுகிறார். அவருடைய வீரச் செய்கையை இவ்வாறு அறி ஞர் கூறுகிறார்கள். சங்கு, சக்கரம், கதையை உடைய அவரைக் கிருஷ்ணன் என்கிறார்கள். அவர் இரகசியமான ஸ்ரீவத்ஸ மறுவுள்ளவரா யிருக்கிறார். அவர் அர்ஜுனனுக்குத் துணையாயிருக்கிறார். அவர் அர்ஜுனனுடைய தேரில் ஏறி அவனுடன் இருப்பார். அப்படிப்பட்ட அர்ஜுனனைத் தேவர்களாலும் ஜயிக்க முடியாது என்றால் மனிதர்களால் எப்படி ஜயிக்க முடியும்? ஆகை யால் ஜயத்ரதா! அர்ஜுனனை விட்டு மற்ற நால்வரையும் நீ ஜயிப்பா யென் றார். இப்படிச் சொல்லிவிட்டுப் பாபிகளைச் சங்கரிக்கிறவரும், உமாகாந்தரும், பசுபதியும், தக்ஷயாகசங்காரரும், திரிபுரஸம்ஹாரியும், பகனுடையகண்ணைப் பிடுங்கினவரும், திரியம்பகரும் உமாசகாயருமான சங்கரர் மறைந்து போனார். துர்ச்சிந்தையுள்ள ஜயத்ரதனும் தன் வீடுபோய்ச் சேர்ந்தான். பாண்டவர்கள் துவைதவனத்தில் சுகமாக வசித்தார்கள்.



## 272-வது அத்தியாயம்

### இராமோபாக்கியான பர்வம்.

1—3. ஜனமேஜயர் வைசம்பாயனரை நோக்கித், திரௌபதியை ஜயத்ரதன் தூக்கிக்கொண்டு போனதனால் வருந்திய பாண்டவர்கள் பிறகு என்ன செய்தார்கள் என்று கேட்க வைசம்பாயனர் சொல்லுகிறார். கிருஷ்ணையை விடுவித்துக்கொண்டு வந்த பின் பக்தியுள்ளவரான யுதிஷ்டிரர் ரிஷிகளின் பக்கத்தில் உட்கார்ந்தார். ரிஷிகள், திரௌபதிக்கு நேர்ந்த ஆபத்தைப் பற்றி வருத்தமாய்ப் பேசினார்கள். அப்போது பாண்டு புத்திரரான யுதிஷ்டிரர் மார்க்கண்டேயரை நோக்கி இந்த விஷயமாகப் பேசத் தொடங்கினார்.

4— . எல்லாராலும் வணங்கப்பட்ட மஹானுபாவரே! இறந்த கால வருகிற கால சம்பவங்களை எல்லாம் அறிந்திருக்கிறவரென்று தேவர்களாலும் ரிஷிகளாலும் நீர் புகழப்பட்டவர். என் மனதில் ஒரு சந்தேகமிருக்கிறது. அதைக் கேட்கிறேன் நிவிர்த்தி செய்யவேண்டும். துருபதராஜன் புத்திரியாகிய இந்தக் கிருஷ்ணை யாக குண்டததில் பிறந்தவள். மாம்சத்தில் பிறந்தவளல்ல. மஹாத்மாவான பாண்டு மஹா ராஜனுடைய மகிமையுள்ள மருமகள். தெய்வத்தால் நியமிக்கப்பட்ட விதியும் காலமும் எவராலும் விலக்க முடியாததென்றே நினைக்கிறேன். பதிவிரதையும், பக்தியுள்ளவளுமான இவளுக்குத் துர்ப்பாக்கியம் எப்படி வருகிறது? தர்மிஷ்டனும் யோக்கியனுமாயுள்ளவனுக்குத் திருட்டுக் குற்றம் வருகிறது போலிருக்கிறது. திரௌபதி ஒருபோதும் அநியாயமான செய்கையைச் செய்ததில்லை. இவள் எப்போதும் பிராமணர்களை உத்தேசித்து மேலான தர்மத்தைச் செய்கிறாள். மூடனான ஜயத்ரதன் அவளை பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டு போனான். அந்தக் குற்றத்துக்காக அவன் மொட்டை யடித்து ஐந்து குடுமி வைக்கப்பட்டான். சேனைகளுடன் யுத்தத்தில் தோல்வியடைந்தான். நாங்கள் அவனுடைய சேனைகளைக் கொன்று இவளை மீட்டுக் கொண்டோம். எங்களுடைய சொற்ப அஜாக்கிரதையால் இப்படிப்பட்ட குறை எங்களுக்கு நேர்ந்தது. இந்த வனவாசம் எங்களுக்குத் துன்பமாகவே யிருக்கிறது. நாங்கள் வேட்டையாடிப் பிழைக்கிறோம். நாங்கள் வனத்தில் வசிக்கிறதினாலே வனத்தில் வசிக்கிற பிராணிகளை இம்சிக்கிறோம். இது எங்களுடைய சுற்றத்தாருடைய வஞ்சனையால் நேரிட்டது. என்னை விட அதிகமான துர்ப்பாக்கியத்தை யுடையவன் எவனாவது இருந்திருக்கிறானா? இப்படிப்பட்ட துர்ப்பாக்கியமுள்ளவனைப் பார்த்திருக்கிறீரா? அல்லது கேட்டாவது இருக்கிறீரா? என்று வினவினார்.



## 273-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—5. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரை நோக்கிப் பாரதனே! ஸ்ரீராமர் ஒப்பற்ற துயரத்தை அடைந்திருக்கிறார். அவருடைய மனைவியாகிய ஜானகியை ஒரு இராட்சதன் பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டு போனான். மாயை உண்டாக்கி ஜடாயுவைக் கொன்று, இராவணன் என்ற இராட்சத அரசனான துஷ்டன் ஜானகியை ஆச்சிரமத்தினின்றும் பலாத்காரமாய்த்தூக்கிக்கொண்டு போய்விட்டான் ஸ்ரீராமர் சமுத்திரத்தில் அணைகட்டிச் சுக்கிரீவனுடையஉதவியால் இலங்கையை எரித்துச், சீதையை மீட்டுக்கொண்டு வந்தார் என்று சொன்னார். யுதிஷ்டிரர், ஸ்ரீராமர் எந்த வம்சத்தில் பிறந்தவர்? அவருடைய பராக்கிரமமும் சக்தியும் எப்படிப்பட்டவை. ஸ்ரீராமர் யாருடைய புத்திரர்? இராவணனுக்கும் ஸ்ரீராமருக்கும் எப்படி பகை யுண்டாயிற்று? களைக்காத முயற்சியை யுடைய ஸ்ரீராமருடைய சரித்திரத்தை நான் கேட்க விரும்புகிறேன். இவைகளை எல்லாம் எனக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்க மார்க்கண்டேயர் சொல்லுகிறார்.

6—10. இக்ஷ்வாகு வம்சத்தில் அஜன் என்று பெரிய அரசனிருந்தான். அவனுடைய புத்திரன் தசரதன். வேதாத்தியயனத்தில் பக்தியுள்ளவன். பரிசுத்தமானவன். அவனுக்கு நாலு குமாரர்கள். அவர்கள் எல்லாரும் தர்மம் அர்த்தம் இவைகளில் தேர்ந்தவர்கள். ஸ்ரீராமர், இலட்சுமணன், பரதன், சத்துருக்னன் என்பவர்கள். கௌசலை என்பவளுக்கு ஸ்ரீராமர் பிறந்தார். பரதருக்குத் தாயார் கைகேயி. இலட்சுமண சத்துருக்கினர்கள் சுமித்திரை என்பவளுக்குப் பிறந்தவர்கள். விதேக ராஜனாகிய ஜனகராஜனுடைய புத்திரி சீதை. பிரமதேவரே சீதையை ஸ்ரீராமருக்குப் பத்தினியாகச் சிருஷ்டித்தார். இதுதான் ஸ்ரீராமர் சீதை இவர்களுடை உற்பத்தி. இனி இராவணனுடைய உற்பத்தியைச் சொல்லுகிறேன் கேள்.

11—17. சர்வலோக பிதாமகரான பிரமதேவரே இராவணனுக்குப் பாட்டன். பிரமதேவருடைய மானச புத்திரரான புலஸ்தியர் என்று ஒரு ரிஷி இருந்தார். அவருக்குக் கோ என்பவளிடத்தில் பிறந்த வைச்ரவணன் என்று ஒரு புத்திரனுண்டு. அவன் தன் பிதாவை விட்டுப் பாட்டனாரிடம் போய் விட்டான். புலஸ்தியர் கோபித்துக்கொண்டு தன் சரீரத்தினின்றும் மற்றொரு புத்திரனை உண்டாக்கினார். பிரமதேவர் வைசிரவணனிடத்தில் பிரியமுள்ளவராய் அவனைத் தேவனாக்கி ஐசுவரியத்துக்கு தலைவனாகவும், லோகபாலகர்களில் ஒருவனாகவும் செய்து விட்டார். ருத்திர மூர்த்தியை அவனுக்குச் சிநேகிதராகச் செய்தது மன்றி, நளகூபரன் என்ற ஒரு புத்திரனையும் கொடுத்தார். இலங்கையை அரசாள நியமித்தார். நினைத்த இடத்துக்குப் போகும்படியான புஷ்பகவிமானத்தையும் கொடுத்தார். யட்சர்களுக்கு அரசனாகவும் நியமித்தார்.

## 274-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—13. புலஸ்தியருடைய சரீரத்தில் பிறந்த விச்சிரவஸ் மிகுந்த கோப முடையவனாய்க் குபேரனைப் பார்த்தான். தன் பிதா தன் மேல் கோபமா யிருக்கிறதை யுணர்ந்த குபேரன் அவரைச் சந்தோஷப் படுத்த முயன்றான். மூன்று இராட்சத ஸ்திரீகளை அவரிடம் அனுப்பி அவருக்குப் பணிவிடை செய்துகொண்டு இருக்கும்படி திட்டஞ் செய்தான். அவர்கள் பாடுவதிலும், நடனம் ஆடுவதிலும் வல்லவர்கள். புஷ்போத்கடா, இராகா, மாலினி என்கிற அந்த மூன்று பெண்களும் விச்சிரவசுக்கு மகிழ்ச்சியுண்டாகும்படி அவருக்குப் பணிவிடை செய்தார்கள். அதனால் மகிழ்ந்த விச்சிரவசு அவர்களில் ஒவ்வொருத்திக்கும் ஒவ்வொரு குழந்தை உண்டாகும்படி அனுக்கிரகம் செய்தார். புஷ்போத்கடைக்கு இராவணன், கும்பகர்ணன் என்ற ஒப்பற்ற பராக்கிரமசாலிகளான இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். மாலினி விபீஷணனைப் பெற்றாள். இராகா கரனையும் சூர்ப்பணகை என்பவர்களையும் பெற்றாள். விபீஷணன் அழகினால் எல்லாரையும் விட மேலாக இருந்தான். பக்திமானும் தர்மிஷ்டனுமா யிருந்தான். பத்துத் தலைகளை யுடைய இராவணன் அவர்கள் எல்லாருக்கும் சிரேஷ்டனா யிருந்தான். மிகப் பராக்கிரமசாலியும், ஊக்கமுள்ளவனும், சாமர்த்திய முள்ளவனுமா யிருந்தான். கும்பகர்ணன் யுத்தத்தில் சிறந்த வீரனா யிருந்தான். பயங்கரமானவன், மாயையில் வல்லவன், கோப முள்ளவனாக இருந்தான். கரன் வில் வித்தையில் தேர்ந்தவன், பிராமணத்துவேஷி, மாம்சப் பிரியன். சூர்ப்பணகை தவசிகளுக்கு விரோதி, யாக யக்ஞாதி கிரியைகளைக் கெடுத்துக்கொண்டு வந்தாள். இந்த வீரர்கள் எல்லாரும் வேதத்தில் வல்லவர்கள். வைதிக கிரியை செய்கிறவர்கள். கந்தமாதன பர்வதத்தில் தங்கள் பிதாவுடன் வசித்துக்கொண்டிருந்தார்கள்.

14—21. வைச்சிரவணன் செல்வமுடையவனாகவும். நரவாகன முடையவனாகவும் இருந்ததை இராவணன் முதலியோர் கண்டார்கள். அவன் மேல் பொறாமை கொண்டு தவம் செய்யக் கருதினார்கள்! வாயுபட்சணம் செய்துகொண்டு பஞ்சாக்கினிகளுக்கு மத்தியிலிருந்து தவம் செய்தார்கள். இராவணன் ஆயிரம் வருஷம் வரைக்கும் ஒரே காலால் நின்றுகொண்டு தவம் பண்ணினான். கும்பகர்ணன் பூமியில் நியமத்துடன் படுத்துக்கொண்டு தவம் செய்தான். புத்திசாலியான விபீஷணன் காய்ந்த சருகுகளைப் புசித்துக்கொண்டு நெடுங்காலம் தவம் செய்தான். கரனும் சூர்ப்பணகையும் அவ்வாறு தவம் செய்கிறவர்களுக்கு உபசரித்துக் கொண்டிருந்தார்கள். ஆயிரவருஷம் முடிந்ததும் ஜயிக்கப்படாத இராவணன் தன் பத்துத் தலைகளையும் அறுத்து அக்கினியில் ஓமம் செய்தான். இதனால் பிரமதேவர் அவனிடத்தில் மகிழ்ச்சி அடைந்தார். பிரமதேவர் அவர்களுக்குப் பிரத்தியட்சமாய்த் தவசை நிறுத்தச் சொன்னார். அவர்கள் விரும்பின வரத்தைக் கொடுப்பதாய்ச் சொன்னார்.

22—31. பிரமதேவர் அவர்களைநோக்கிக் குழந்தைகளே! தவத்தை நிறுத்துங்கள். நீங்கள் விரும்பின வரங்களைக் கேளுங்கள். சாவாமலிருக்கிறதைத் தவிர மற்ற எதைக் கேட்டாலும் தருவேன் என்றார். இராவணனை நோக்கி நீ உன் தலைகளை அறுத்து அக்கினியில் ஓமம்செய்தாய், அந்தத் தலைகள் மறுபடியும் வளரும். நீ நினைத்த வடிவத்தை யெடுத்துக் கொள்ளலாம். நீ எப்போதும் யுத்தத்தில் உன் பகைவர்களை வெற்றிகொள்வா யென்றார். இராவணன், நான் தேவர்கள், யட்சர்கள், கின்னரர்கள், நாகர்கள், மற்றப் பிராணிகளாலும் ஜயிக்கப்படாமல் இருக்கவேண்டும் என்று கேட்டான். பிரமதேவர் இராவணனைநோக்கி நீ கேட்டபடியே மனிதர்களைதவிர மற்றவர்களால் ஜயிக்கப்படாதவனு யிருப்பாய். உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும் என்றார். இராவணன் இந்த வரத்தினால் திருப்தி யடைந்தான். அவன் மனிதர்களைத் தின்கிற அரக்கனு யிருந்தபடியால் மனிதர்களை இலட்சியம் பண்ணவில்லை. கும்பகர்ணன் பெருந் தூக்கத்தை விரும்பிக் கேட்டான். அப்படியே அவனுக்கு வரம்கொடுத்துவிட்டு விபீஷணனிடம்போய், உனக்கு வேண்டிய வரங்களைக் கேள் என்றார். விபீஷணன், எனக்கு எப்படிப்பட்ட கஷ்டம் வந்தாலும் தர்மத்தை விடாம லிருக்கவேண்டும். தேவனே! நான் மூடனு யிருக்கிறபடியால், எனக்கு உண்மைஞானம் உண்டாக வேண்டும் என்றான். பிரமதேவர், நீ கேட்டபடியே உன் மனம் அக்கிரமத்தில் செல்லாதிருக்கக் கடவது. நீ இராட்சதனுகப் பிறந்தாலும் நீ அழியாமலிருக்கும்படி நான் வரம் கொடுத்தேன் என்றார். பிறகு பிரமதேவர் மறைந்து போனார்.

32— . இராவணன் இந்த வரத்தைப் பெற்றுக்கொண்டபின், குபேரனோடு சண்டைசெய்து அவனை ஜயித்து இலங்கையைப் பெற்றான். குபேரன் இலங்கையைவிட்டு. யட்சர், கின்னரர், இராட்சதர்கள்சூழக் கந்தமாதன பர்வதம் போய்ச்சேர்ந்தான். இராவணன் குபேரனிடத்திலிருந்து புஷ்பக விமானத்தைப் பலாத்காரமாகப் பிடுங்கிக்கொண்டான். குபேரன் கோபித்து இராவணனை நோக்கி இது உன்னைச் சுமந்து கொண்டு செல்லாது. உன்னை யுத்தத்தில் வெல்பவனைச் சுமந்துசெல்லும். நீ சீக்கிரத்தில் சாவாய் என்று சபித்தான். விபீஷணன் மாத்திரம் குபேரனுக்குச் சார்பாக இருந்தான். அதனால் குபேரன் மகிழ்ந்து விபீஷணனுக்கு இராட்சதர்களையும், யட்சர்களையும் ஆள வரம்கொடுத்தான். பிறகு மனிதர்களைத் தின்கிறவர்களும் பராக்கிரம சாலிகளுமான இராட்சதர்களும், பிசாசர்களும், கூடி, இராவணனைத் தங்களுக்கு அரசனுக்கி வைத்துக்கொண்டார்கள். பயங்கரமான பலமுள்ள இராவணன் தனக்கு விருப்பமான வடிவத்தை எடுத்துக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் சென்று, தேவர்களையும் அரக்கர்களையும் வென்று அவர்களிடத்தில் இருக்கிற சிறந்த பொருள்களை யெல்லாம் கவர்ந்துகொண்டான். அவன் எல்லாப் பிராணிகளுக்கும் அச்சத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தபடியால் இராவணன் என்று பேர்பெற்றான். அவன் தன் வல்லமையால் தனக்கு இஷ்ட

மான உருவத்தை எடுத்துக்கொண்டு தேவர்களுக்கும் பயங்கரத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தான்.



## 275-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—16. அதன்பின், பிரமரிஷிகளும், சித்தர்களும், தேவர்களும், ரிஷிகளும் ஹவ்யவாகனைத் தங்களுக்குப் பிரதிநிதியாகக்கொண்டு பிரமதேவரை அடைந்தார்கள். பிரமதேவரை நோக்கி நீர் முன் கொடுத்த வரத்தினாலே இராவணன் அழிகிறதில்லை. அவன் எவ்வகையிலும் பிராணிகளை யெல்லாம் இம்சிக்கிறான். ஆகையால் தேவனே! எங்களை இரட்சியும். உம்மைத் தவிர எங்களைக் காப்பாற்றுவார் ஒருவரு மில்லை என்றார்கள். பிரமதேவர், ஓ விபாவசுவே! அவன் தேவர்களாலும் அசுரர்களாலும் அழியமாட்டான். இதற்கு வேண்டியதை நான் முன்னமேதானே ஏற்படுத்தி யிருக்கிறேன். ஆனால் இராவணனுக்கு அழிவுகாலம் கிட்டியிருக்கிறது. இதற்காகப் பிரமதேவர் பூமியில் அவதாரம் செய்திருக்கிறார். விஷ்ணு பூமியில் அவதரித்து இராவணனைச் சங்கரிப்பார் என்று சொல்லி, இந்திரனை நோக்கி நீயும் இந்தத் தேவர்களுடன் பூமியில் அவதாரம்பண்ணு. நீங்கள் எல்லாரும் வானரங்களாகவும் அவதரித்து விஷ்ணுவுக்கு உதவி செய்யுங்கள் என்றார். பிறகு தேவர்கள், கந்தர்வர்கள், தானவர்கள் எல்லாரும் கூடி எப்படி அவதாரம் செய்கிறது என்று யோசித்தார்கள். பிரமதேவர் துந்துபி என்கிற கந்தர்வியைப் பார்த்து நீ இந்தக் காரியத்தை நிறைவேற்றுவதற்காகப் பூமியில் மனுஷியாக அவதாரம் செய் என்று கட்டளையிட்டார். அவள் மந்தரை என்னும் பேருடன் கூனியாகப் பிறந்தாள். தேவர்கள் குரங்குகளாகவும் கரடிகளாகவும் பிறந்தார்கள். அவர்கள் எல்லாரும் மலைகளையும் உடைக்கும்படியான பலமுள்ளவர்களா யிருந்தார்கள். சால விருட்சங்களும், தால விருட்சங்களும் அவர்களுக்கு ஆயுதங்களாக இருந்தன. அவர்கள் சரீரம் வஜ்ரத்தைப் போலக் கடினமா யிருந்தது. எல்லாரும் மஹா பலசாலிகளா யிருந்தார்கள். எல்லாரும் யுத்தத்தில் வல்லவர்கள். அவர்கள் தங்கள் இஷ்டம் போல வேண்டிய பலத்தை வருவித்துக் கொள்வார்கள். எல்லாரும் பதினாயிரம் யானை பலமுள்ளவர்கள். வாயுவைப் போல வேக முள்ளவர்கள். அநேகர் தங்களுக்கு இஷ்டமான இடங்களில் வசித்தார்கள். மற்றவர்கள் வனத்தில் வசித்தார்கள். பிறகு பிரமதேவர் மந்தரை பூலோகத்தில் செய்ய வேண்டியது இன்னதென்று தெரிவித்தார். அதை உணர்ந்துகொண்ட மந்தரை கலகம் செய்கிற குணமுடையவளாய்ப் பிறந்து திரிந்துகொண்டு இருந்தாள்.

# 276-வது அத்தியாயம்.

## இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—2. யுதிஷ்டிரர் மார்க்கண்டேயரை நோக்கி இராமர் முதலானவர்களுடைய உற்பத்தியைச் சொன்னீர். அந்த இராமர் வனவாசம் செய்யப் போன காரணத்தைச் சொல்லவேண்டும். பிராமணரே! ஸ்ரீராமரும் இலக்ஷ்மணரும் ஸீதையுடன் ஏன் வனத்துக்குப் போனார் என்று கேட்க மார்க்கண்டேயர் சொல்லுகிறார்.

3—16. அரசனே! தசரதர் எப்போதும் தெய்வபக்தியுள்ளவரா யிருந்தார். வைதிகக்கிரியைகளை எல்லாம் செயது வந்தார். பெரியோர்களை வணங்கினர். புத்திரனைப் பெற ஆசை யுள்ளவரா யிருந்தார். புத்திரர்கள் பிறந்ததும வெகு சந்தோஷ முள்ளவரா யிருந்தா. அந்தப் புத்திரர்கள் மஹா பலமுள்ளவர்களாய் வளர்ந்து வந்தார்கள் வேதங்களை அவற்றின் இரகசிய அர்த்தங்களுடன் கற்றுக் கொண்டார்கள். ஆயுத வித்தையில் தேர்ந்தவர்களானார்கள். அவர்கள் பிரமசாரி விருதத்தை முடித்து விட்டு விவாகம் செய்து கொண்டார்கள், தசரதர் மிகவும் மகிழ்ச்சியடைந்திருந்தார். அந்தப் புத்திரர்களுக்குள் மூத்தவர் தமது பிதாவுக்கும், ஜனங்களுக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கி வந்தபடியால் ஸ்ரீராமர் என்று பேர் பெற்றார். தசரதர் தாம் மூப்படைந்திருந்தபடியால் தமது மந்திரிகள் புரோகிதருடன் ஆலோசித்து ஸ்ரீராமருக்குப் பட்டங்கட்ட உத்தேசித்தார். மந்திரி புரோகிதர்களும் அதற்கு இதுதான் சமையமென்று சொன்னார்கள். தசரதர் தமது புத்திரனை ஸ்ரீராமர் சிவந்தகண்களையும், நீண்ட புஜங்களையும், மதயானை போன்ற நடையையும், விசாலமான மார்பையும், கறுத்துச் சுருண்ட மயிரையும், அழகால் விளங்குகிறதையும், யுத்தத்தில் இந்திரனைப் போன்ற சௌரியத்தையும், வைதிக விஷயத்தில் தேர்ச்சியையும், பிரகஸ்பதியைப் போன்ற அறிவையும், பிரஜைகளால் வணங்கப்படுகிறதையும், சகல சாஸ்திர விற்பத்தியையும், ஆசை யின்மையையும், சத்துருக்களுடைய கண்களுக்கும் ஆனந்த மளிப்பதையும், துஷ்டர்களைச் சிட்சிக்கிறதையும், சிஷடர்களைக் காப்பாற்றுகிறதையும், பிறரால் ஜயிக்கப் படாமையையும், எப்போதும் ஜயமுள்ளவரா யிருப்பதையும், மாதாவுக்கு எப்போதும் ஆனந்த முண்டாக்குவதையும் கண்டு தசரதர் மகிழ்ந்து புரோகிதரை நோக்கி உமக்கு மங்களம் உண்டாகட்டும். இன்று தினம் இரவு பூச நட்சத்திரம் உதிக்கிறது. சுபமா யிருக்கிறது. வேலைக்காரர்கள் சாமான்களைச் சேகரிக்கட்டும். ஸ்ரீராமனை அழைக்கவேண்டும் என்றார். இராஜன் இப்படிச் சொன்னதைக் கைகேயியின் வேலைக்காரியாகிய மந்தரைக் கேட்டுக் கைகேயியினிடம் போய்ச் சமையத்துக்கேற்றபடி சொல்லுகிறாள்.

17—21. ஏ கைகேயீ! உன்னுடைய துர் அதிர்ஷ்டம் இன்று உன்னை பற்றுகிறது. சினமும் விஷமுமுள்ள கொடிய சர்ப்பம் உன்னைத் தீண்டுகிறது

என்றாள். கௌசலை நிச்சயமாகவே பாக்கியசாலி, ஏனென்றால் அவளுடைய புத்திரனுக்கு மகுடாபிஷேகம் ஆகப்போகிறது. உன் புத்திரனுக்குப் பட்டம் இல்லாமையால் உனக்குப் பாக்கியம் ஏது? என்றாள். இதைக் கேட்டுச் சிறுத்த இடையை யுடையவளும், சர்வாபரணங்களாலும் அலங்காரம் செய்துகொண் டிருப்பவளுமான கைகேயி ஏகாந்தமான இடத்தில் தன் நாயகனைக் கண்டாள். அவரிடத்தில் அன்புடன் போய்ப் புன் சிரிப்புடன் மதுரமாகப் பேசுகிறாள்., மஹா ராஜாவே! நீர் எப்போதும் சொன்ன வார்த்தை தவறாமல் நடப்பவர். முன்னாலே எனக்கு வரம் கொடுத்திருக்கிறீர். அந்த வரத்தை இப்போது எனக்குக் கொடுத்து, வாக்குத் தவறுகிற பாபத்தினின்று விடுபடும் என்றாள்.

22—27. தசரதர் கைகேயியைப் பார்த்து, நீ விரும்பின வரத்தை உனக்குக் கொடுக்கச் சித்தமா யிருக்கிறேன். மரண மடையத் தகாத எவனை யாவது கொலை செய்ய வேண்டுமா? சிறைப்பட்டிருப்பவனை விடுதலை செய்யவேண்டுமா? எவனையாவது ஐசுவரியவானாகச் செய்யவேண்டுமோ? தனவந்தனா யிருக்கிறவனுடைய செல்வத்தைப் பறிக்க வேண்டுமா? பிராமணர்களுக்கு உரியவை தவிர மற்ற எல்லாம் எனக்குச் சொந்தம். நான் அரசர்களுக்கு அரசன். நாலு வருணத்தாருக்கும் இறைவன். ஆகையால் பாக்கியவதியே! உன் விருப்பத்தைச் சொல் என்றார். இப்படி தன் வார்த்தையில் கட்டுப்பட்டு நிற்கிற அரசனைப் பார்த்துக் கைகேயி சொல்லுகிறாள். அரசனே! இராமனுக்காகச் சேகரிக்கப்பட்டிருக்கிற பொருள்களைக் கொண்டு பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வியும். இராமனை வனத்துக்கு அனுப்பும் என்றாள். யுதிஷ்டிரரே! செய்யத் தகாததும், பயங்கரமுள்ளதுமான வசனங்களைக் கேட்ட தசரதர் துக்கத்தால் மயங்கி ஒன்றும் பேசாமல் இருந்தார்

28—37. தசரதர் சத்தியத்தில் கட்டுப்பட்டு, ஒன்றுஞ் செய்ய முடியாமல் மயங்குகிறதையும், அவர் சத்தியம் தவறாமல் இருக்க வேண்டும் என்பதையும் உணர்ந்த ஸ்ரீராமர் வனத்துக்குப் போனார். வில்லாளிகளில் சிறந்த இலட்சுமணரும், ஜனகபுத்திரியான சீதையும் ஸ்ரீராமர் கூட வனத்துக்குப் போனார். ஸ்ரீராமர் வனத்துக்குப் போனதும் தசரதர் பிராணனை விட்டு விட்டார். கைகேயி பரதனை அழைத்து, இப்போது அரசன் சொர்க்கம் போய் விட்டார். ஸ்ரீராமனும் இலட்சுமணனும் வனத்துக்குப் போய் விட்டார்கள். பகை இல்லாமலிருக்கிற இந்தப் பெரிய இராஜ்யத்தை ஒப்புக்கொள் என்றாள். தர்ம குணமுள்ள பரதர் கைகேயியைப் பார்த்து நீ பொருளாசையைப் பெரிதாகக் கொண்டு உன் கணவனைக் கொன்று வம்சத்தையும் அழித்துவிட்டாய். கெட்ட காரியம் செய்தாய். பாபியான என் தலையில் பழியைச் சுமத்தி உன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டாய் என்று சொல்லிக் கண்ணீர் விட்டு அழுதார். பிரஜைகளுக்கு முன்னாலே தாம் குற்றமற்றவரென்று காட்டக் கருதி ஸ்ரீராமரை அழைத்து வரும்படி வனம் போக விரும்பினார். கௌசலை, சுமித்திரை, கைகேயி இவர்களையும் தேரில் ஏற்றிக்கொண்டு, சத்துருக்னருடன்

கூடப் புறப்பட்டார். வசிஷ்டர், வாமதேவர் இன்னம் அநேகம் பிராமணர்கள், நாட்டு நகரத்து ஜனங்கள் எல்லாரும் ஸ்ரீராமரை அழைத்து வரும்படி விருப்பமுடையவர்களாய்க் கூடப் போனார்கள்.

37—51. பரதர் சித்திரகூட மலையில் ஸ்ரீராமரைக் கண்டு வணங்கினார். தமது கருத்தைக் கூறி அயோத்திக்கு வந்து இராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும்படி வேண்டினார். ஸ்ரீராமர் தமது பிதாவின் சத்தியத்தை நிறைவேற்ற நிச்சயித்துத் தமது பாதுகையைக் கொடுத்துப் பரதரை அனுப்பிவிட்டார். பரதர் நந்திகிராமத்திலிருந்துகொண்டு, பாதுகைக்கு மகுடம் சூட்டி அரசாண்டார். ஸ்ரீராமர் தமது நாட்டு ஜனங்கள் மீண்டும் வருவார்கள் என்று பயந்து சித்திரகூட மலையை விட்டுத், தண்டக வனத்துக்குள் நுழைந்து, சரபங்கர் ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் வந்தார். சரபங்கரைக் கண்டு வணங்கிக் கோதாவரி நதிக்கரையில் தமது ஆச்சிரமத்தை ஸ்தாபித்து அங்கே வசித்தார். அங்கே வசிக்கிறபோது ஜனஸ்தானத்திலிருக்கிற கரன் சூர்ப்பணகை காரணமாக ஸ்ரீராமரைப் பகைத்தான். ஸ்ரீராமர் ரிஷிகளைக் காப்பாற்றும் நிமித்தமாகப் பதினாலாயிரம் இராட்சதர்களைக் கொன்றார். கரனையும் தூஷணனையும் கொன்று அந்த வனத்துக்கு க்ஷேமம் உண்டாக்கினார். காது மூக்குகளை இழந்த சூர்ப்பணகை கரதூஷணர்கள் மடிந்ததும் இலங்கையில் வசிக்கிற இராவணனிடம் போனாள். துக்கத்தினால் மதிமயங்கி, முகத்தில் காய்ந்து இருக்கிற இரத்தத்துடன் இராவணனிடம் போய் அவன் பாதத்தில் விழுந்து அழுதாள். அதைக் கண்ட இராவணன் கோபத்தினால் பற்களைக் கடித்துக்கொண்டு சிங்காசனத்தை விட்டு எழுந்திருந்தான். தன் பரிசனங்களை அனுப்பிவிட்டு, அவளைத் தனியாக வைத்துக் கொண்டு, என்னை அலட்சியம் பண்ணி உன்னை இப்படிக் குரூபியாக்கினது யார்? எவன் கூர்மையான கத்தியாலே தன் சரீரத்தைச் சீவிக்கொண்டான்? தலைமாட்டில் நெருப்பை மூட்டி எரியவிட்டுக்கொண்டு கவலையற்றுத் தூங்குகிறவன் யார்? பயங்கரமான பாம்பின் தலையை மிதித்தவன் யார்? கொடிய சிங்கத்தின் வாயில் கையை இட்டவன் யார்? இப்படி அவன் கேட்கிற போது அவனுடைய வாய், கண் முதலியவற்றிலிருந்து நெருப்பு ஜ்வாலை தோன்றின.

52—56. பிறகு சூர்ப்பணகை ஸ்ரீராமருடைய பராக்கிரமத்தையும், கரதூஷணர்களால் நடத்தப்பட்ட இராட்சத சேனைகளை அவர் கொன்றதையும் இராவணனுக்குச் சொன்னாள். இராவணன் செய்ய வேண்டியதை நிச்சயித்துக் கொண்டு, தன் நகரத்தைக் காப்பதற்குத் தகுந்த ஏற்பாடு செய்துவிட்டுச், சூர்ப்பணகைக்குத் தேறுதல் கூறிப் பின் பிரயாணப்பட்டு ஆகாய மார்க்கமாகப் போனான். திரிகூடமலையைக் கடந்து மூன்றுலகங்களுக்கு இருப்பிடமான கடலைக் கண்டான். பின் கடலைக் கடந்து, சூலபாணியாகிய பரமசிவனுக்குரிய கோகர்ண க்ஷேத்திரத்தை அடைந்தான். ஸ்ரீராமருக்குப் பயந்து தவவேஷம் தரித்துக் கொண்டு அங்கே வசிக்கிற மாரீசனிடம் போனான்.



## 277-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—8. மாரீசன் இராவணனுக்குக் கனிகளையும், கிழங்குகளையும் கொடுத்து உபசரித்தான். இராவணன் உட்கார்ந்து சற்றுக் களையாறின பின், மாரீசன் இராவணனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, இராவணனுடைய க்ஷேமலாபங்களை விசாரிக்கத் தொடங்கினான். உன் சரீர தோற்றம் சரியாய்க் காணப்படவில்லை. உன் இராஜ்யம் க்ஷேமமாயிருக்கிறதா? உன் பிரஜைகள் முன் போல உனக்கு அடங்கி யிருக்கிறார்களா? இராட்சதேந்திரா! என்ன காரியமாக இங்கே வந்தாய்? அது எவ்வளவு கஷ்டமானதா யிருந்தாலும் அந்தக் காரியம் முடிந்ததென்று எண்ணிக்கொள் என்றான். இராவணன் துக்கத்துடனும் கோபத்துடனும் இராமர் செய்ததை யெல்லாம் சொன்னான். மாரீசன் அதைக் கேட்டு, நீ இராமருக்குக் கோபம் உண்டாக்கக் கூடாது. அவருடைய பராக்கிரமம் எனக்கு நன்றாய்த் தெரியும் அந்த மஹாத்மாவான இராமருடைய பாணங்களுக்கு எதிரில் நிற்பவனும் இருக்கிறானா? அந்த மனிதன் நான் இப்படித் தவசியா யிருக்கிறதற்குக் காரணம். மரணத்தின் வாயில் அகப்படும்படியான இந்தப் புத்தியை உனக்குச் சொன்னவன் யார்? என்றான். இதைக் கேட்டு இராவணன் வெகு கோபத்துடன் மாரீசனுக்குப் பதில் சொல்லுகிறான்.

9—17. நீ என் எண்ணத்துக்கு ஒத்து வராவிட்டால், நிச்சயமாய் மரணமடைவாய் என்றான். அதைக் கேட்ட மாரீசன், மஹாத்மாக்களின் கையால் மரணம் அடைவது தகுதியானது; மரணம் நிச்சயமா யிருக்கிறபடியால் இவன் எண்ணத்தின்படியே செய்கிறேன் என்று தனக்குள் நிச்சயித்துக் கொண்டு இராவணனை நோக்கிச் சொல்லுகிறான். நான் உனக்கு என்ன செய்ய வேண்டும்? நான் அதற்குத் தகாதவனா யிருந்தாலும் அதைச் செய்யத் துணிகிறேன் என்றான். இராவணன், சொர்ண மான் வடிவமாய்ப் போய்ச் சீதைக்கு ஆசை யுண்டாக்கு. அவள் உன்னைப் பார்த்தவுடனே, உன்னைப் பிடிக்கும்படி இராமனை அனுப்புவாள். இராமன் உன்னைத் தொடர்ந்து வந்த பின் சீதை என் வசத்தில் அகப்படுவாள். பிறகு நான் பலாத்காரமாக அவளைத் தூக்கிக்கொண்டு போய் விடுவேன். பிறகு துஷ்டசித்தமுள்ள அந்த இராமன் தன் மனைவியை இழந்த துக்கத்தால் சாவான். நீ எனக்கு இந்த உதவியைச் செய் என்றான். மாரீசன் வருத்தத்துடன் ஒப்புக்கொண்டு இராவணனுடன் போனான். சோர்வில்லாத முயற்சியை யுடைய ஸ்ரீராமரது ஆச்சிரமத்தை அடைந்ததும், முன்னாலே தாங்கள் பேசிக்கொண்டபடியே செய்தார்கள். இராவணன் கையில் திரிதண்டமும், முண்டனமான சிரசும் உடைய சந்நியாசி வடிவம் கொண்டான். மாரீசன் பொன் மான் உருவம் கொண்டு ஆச்சிரமத்துக்கு எதிரில் வந்து சீதை முன் தோன்றினான்.

18—30. விதி வசத்திற்கு உள்பட்ட சீதை மானைப் பிடிக்கும்படி ஸ்ரீராமரை அனுப்பினாள். ஸ்ரீராமர் சீதையைப் பாதுகாக்கும்படி இலட்சுமணருக்குச் சொல்லி விட்டு, வில்லை யெடுத்துக் கொண்டு புறப்பட்டார். வில், அம்பு, கத்தி, தூணிரங்களுடன் புறப்பட்டு மானைத் தொடர்ந்து போனார். நக்ஷத்திர மண்டலத்திலுள்ள பிரமாவான மானை ருத்திரமூர்த்தி தொடர்ந்துபோல ஸ்ரீராமர் மாரீசனாகிய மானைத் தொடர்ந்து போனார். பிரமாவானவன் தன் குமாரத்தியை மான் வடிவம் கொண்டு தொடர்ந்தான். பரமசிவன் அந்த மான் தலையை வெட்டினார். அது மிருகசீர்ஷம் என்ற பேருடன் நக்ஷத்திர வடிவமாய் வானத்தில் விளங்குகிறது. (மிருகம்-மான் ; சீர்ஷம்-தலை.) மாரீசன் அடிக்கடி ஸ்ரீராமர் கண்ணுக்குப் புலப்பட்டும், மறைந்தும் உலாவினான். இப்படி ஸ்ரீராமரை மயக்கி வெகு தூரம் இட்டுக்கொண்டு போய்விட்டான். பிறகு இராமர் அந்த மான் ஒரு இராட்சதனாய் இருக்க வேண்டுமென்று எண்ணினார். உடனே ஒரு கூரிய அம்பினாலே அந்த மானைக் கொன்றார். மாரீசன் அம்பினால் அடிபட்டதும் இராமர் குரலைப்போன்ற தொனியுடன் கூவினான். ஏ சீதா! இலட்சுமணா! என்று பரிதாபமாய்க் கூப்பிட்டான். சீதை அந்தப் பரிதாபமான அழுகையைக் கேட்டதும், அந்தத் தொனி வந்த திசையை நோக்கி ஓட ஆரம்பித்தாள். இலட்சுமணர் அவளை நோக்கி அஞ்சுகிறவளே! நீ பயப்படுகிறதற்குக் காரணமே யில்லை ஸ்ரீராமரை அடிக்கத்தக்க வல்லமையுள்ளவன் யார்? ஒருவனுமில்லை. இன்னம் ஒரு நிமிஷத்துக்குள் உன் கணவனை ஸ்ரீராமரை நீ பார்ப்பாய் என்றார். சீதை தன் பேதைமையால் குற்றமற்ற இலட்சுமணர்மேல் சந்தேகம் கொண்டு இரைந்து கதறி அழுதாள். பின் பதிவிரதையான சீதை இலட்சுமணரைக் கொடும் சொல்லால் நிந்தித்தாள். ஏ மூடனே! உன் மனதில் நீ வைத்துக் கொண்டிருக்கிற எண்ணம் ஒருபோதும் நிறைவேறாது. நான் ஆயுதத்தினாலாவது, மலைச்சிகரத்திலிருந்து விழுந்தாவது, தீயில் புகுந்தாவது மடிவேனே யல்லாமல் ஸ்ரீராமரை யிழந்து பின் துஷ்டனை உன்னுடன் கூடி வாழேன். ஒரு பெண் புலி நரியுடன் கூடியிருக்குமா? என்றாள். ஸ்ரீராமரிடத்தில் பக்தி யுள்ளவரும், நல்ல சித்தமுடையவருமான இலட்சுமணர் காதுகளைப் பொத்திக் கொண்டார். பின் வில்லை எடுத்துக் கொண்டு ஸ்ரீராமர் அடிச்சுவட்டைப் பிடித்துக்கொண்டு சென்றார்.

31— . கொவ்வைப் பழம் போன்ற அதரத்தை யுடைய சீதையைத் திரும்பிப் பாராமல் ஸ்ரீராமரைத் தேடிக்கொண்டு போனார். அதன் பின் இராவணன் சீதைக்கு எதிரில் வந்தான். சாம்பலால் மறைந்த நெருப்பைப் போலத் துர் எண்ணத்தை மனசுக்குள் அடக்கிக்கொண்டு சாந்தகுணமுள்ள சந்நியாசியைப் போல வந்தான். சீதையைத் தூக்கிக்கொண்டு போகவேண்டு மென்கிற எண்ணத்துடன் வந்தான். பதிவிரதையான சீதை அவனைக் கண்டதும் கனி கிழங்கு ஆசனம் முதலியன கொடுத்து அவனை உபசரித்தாள். இராவணன் அந்த உபசாரங்களைக் கவனியாமல், தன் சுயரூபத்தை எடுத்துக்கொண்டு சீதைக்கு மகிழ்ச்சி உண்டாக்கும்படி பேசினான். சீதா! நான் இராட்சதர்

களுக்கு அரசனுன இராவணன். என்னுடைய அழகான நகரத்துக்கு இலங்கை என்று பேர். அது சமுத்திரத்துக்கு அப்புறத்தில் இருக்கிறது. அங்குள்ள அழகிய பெண்கள்சூழ நீ என்னுடன் வசி. அழகான உதட்டை உடையவளே! தவசியான இராகவனை விட்டுவிடு. எனக்கு மனைவியாக இரு என்முன். அதைக் கேட்டதும் அழகிய அதரத்தையுடைய சீதை காதுகளைப் பொத்திக்கொண்டு இராவணனை நோக்கி இனி இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லாதே. வானம் நட்சத்திர மண்டலங்களுடன் இடிந்து விழுந்தாலும், பூமியானது அணுக்களாக மாறினாலும், அக்கினிவெப்பம் ஒழிந்து குளிர்ந்தாலும் நான் இராகவரை விடமாட்டேன். வனத்தில் சஞ்சரிக்கிற மதங்கொண்ட பராக்கிரமமுள்ள ஆண் யானையுடன் வசித்த பெண்யானை ஒரு பன்றியுடன் கூடி வாழுமா? தேனைக் குடித்து ருசிகண்டவள் அரிசியால் செய்யப்பட்ட சாராயத்தை விரும்புவாளா? இப்படிச் சொல்லி விட்டுப் பயத்தினால் நடுங்கிக் கைகளை உதறிக்கொண்டு, கோபத்தினால் உதடு துடிக்க ஆச்சிரமத்துக்குள் போய்விட்டாள். இராவணன் அவளைத் தொடர்ந்து சென்று போகாமல் தடுத்தான். சீதையினுடைய தலைமயிரைப் பிடித்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பிப்போனுன். இராவணன் தூக்கிக்கொண்டு போகிறபோது சீதை ஸ்ரீராமரைக் கூவி அழுதாள். ஒரு மலையின்மேல் உட்கார்ந்துகொண்டிருந்த கழுகுகளுக்கு அரசனுகிய ஜடாயு அவளைப் பார்த்தான்.

---

## 278-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—12. மஹாபராக்கிரம சாலியான அந்த ஜடாயு அருணனுக்குப் புத்திரன்; சம்பாதிக்குத் தம்பி; தசரதருக்குத் தோழன். அவன் தான் மருமகளான சீதையை இராவணன் கொண்டுபோவதைக் கண்டு, அவனை யெதிர்த்தான். இராவணனை நோக்கிச் சீதையை விட்டுவிடு. ஏ இராட்சதா! நான் உயிருடன் இருக்கிற போது நீ அவளை யெப்படி எடுக்கக்கூடும்? நீ என் மருமகளை விடாவிட்டால் நீ உயிருடன் பிழைத்துப் போகமாட்டாய் என்று சொல்லிக்கொண்டு தன் நகங்களாலே இராவணன் சரீரத்தைக் கிழிக்கத் தொடங்கினுன். மூக்கினாலும் சிறகாலும் அவனை அடித்து நகங்களால் கிழித்தான். மலையிலிருந்து விழுகிற அருவியைப்போல இராவணனுடைய சரீரத்திலிருந்து இரத்தம் பெருகியது. இப்படி அடிப்பட்ட இராவணன் தன் கத்தியை எடுத்துக்கொண்டு ஜடாயுவின் இறக்கையை வெட்டினுன். ஜடாயுவைக் கொன்றுவிட்டுச் சீதையை மடியில் வைத்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பினுன். சீதை தான் கண்ட மலைகளிலும், தடாகக்கரைகளிலும், ஆச்சிரமங்களிலும் தன் நகைகளைக் கழற்றி எறிந்துகொண்டே போனுன். ஒரு மலையின் மேல் ஐந்து வானரங்கள் இருப்பதைச் சீதைப் பார்த்துத் தன்னுடைய அழ

கான வஸ்திரத்தில் ஒன்றை அங்கே போட்டான். கரிய மேகங்களின் மத்தியிலிருந்து மின்னல் தோன்றுவதுபோல அந்தப் பட்டுவஸ்திரம் பிரகாசித்துக்கொண்டு அந்தக் குறங்குகளின் நடுவில் விழுந்தது. இராவணன் பட்சியைப் போல வெகு வேகமாய்ச் சென்று பல வாயில்களுடன விளங்குகிற அழகான இலங்கையைப் பார்த்தான். விசுவகர்மாவினால் நிர்மிக்கப்பட்டு உயர்ந்த மதில்களுடன் கூடியிருக்கிற இலங்கையினுள் புகுந்தான்.

13—24. அதன் பிறகு, ஸ்ரீராமர் மானைக்கொன்றுவிட்டு வருகிற வழியில் இலட்சுமணனைக் கண்டார். ஸ்ரீராமர் இலட்சுமணனைக் கண்டதும் கோபத்துடன் இலட்சுமணா! இராட்சதர்கள் சஞ்சரிக்கிற காட்டில் சீதையை ஒன்றியாகவிட்டு நீ எப்படிவந்தாய். மானின்பிறகு நாம் வெகுதூரம் வந்துவிட்டதையும், இலட்சுமணர் சீதையைத் தனியாக விட்டு வந்ததையுங்குறித்துத் துக்கப்பட்டு வருந்தினார். இலட்சுமணர் கிட்ட வந்து ஏ இலட்சுமணா! சீதை இன்னமும் உயிருடன் இருக்கிறாளா? அவளை நான் பார்க்கமாட்டேன்என்று நினைக்கிறேன். என்றார் இலட்சுமணர் சீதை சொன்ன கொடுஞ்சொற்களை யெல்லாம் ஸ்ரீராமரிடம் சொன்னார். ஸ்ரீராமர் மனவருத்தத்துடன் ஆச்சிரமத்தை நோக்கி வருகிற வழியில் மலைபோல விழுந்துகிடக்கிற ஜடாயுவைக் கண்டார். அப்போது ஜடாயு மரணம்அடைகிற சமையமாயிருந்தது. இராமர் ஜடாயுவை இராட்சதனென்று நினைத்துக்கொண்டு வில்லுடன் சீக்கிரமாய் அவனிடம் சென்றார். ஜடாயு இராம லட்சுமணர்களிடத்தில், "உங்களுக்கு மங்கள முண்டாகட்டும்." நான் ஜடாயு. தசரதருடைய தோழன் என்று சொன்னான். அதைக் கேட்டு இராமலட்சுமணர்கள் வில்லைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு, நமது பிதாவின் பேரைச் சொல்கிற இவன் யார் என்று கிட்டவந்து, ஜடாயு இரக்கை அறுந்து கிடக்கிறதைக் கண்டார்கள். ஜடாயு தான சீதையை மீட்டுக் கொள்ள முயன்று சிறகு அறுபட்டதைச் சொன்னான். ஸ்ரீராமர் ஜடாயுவை நோக்கி இராவணன் மார்க்கம் எது என்று கேட்டார். ஜடாயு தலையை ஆட்டிவிட்டு மரணம் அடைந்தான். அவன் தலையை ஆட்டினதினாலே இராவணன் போனஇடம் தென்திசை என்று ஊகித்துக்கொண்டார்கள். பிறகு ஜடாயுவுக்குத் தகனகிரியைகள் செய்தார்.

25—41. பிறகு இராமலட்சுமணர்கள் தென்றிசையை நோக்கிச் சென்றார்கள். போகிற வழியில் அநேக ஆச்சிரமங்களையும், தர்ப்பாசனங்கள் சிதறிக் கிடக்கிறதையும். கமண்டலங்கள் உடைந்து கிடக்கிறதையும் பார்த்தார்கள். ஜடாயுவின் மரணத்தையும், சீதையின் பிரிவையும நினைத்து வருந்தினார்கள். அநேக மான்கூட்டங்கள் திசைதோறும் ஓடுகிறதைக் கண்டார்கள். காட்டில் தீப்பற்றி யெரிகிறபோது உண்டாகிற] தொனியைப் போல மிருகங்கள் கூவுகிறதையும், தலையற்ற ஒரு சரீரத்தையும் கண்டார்கள். மேகம் போன்ற கரிய நிறத்தையும், மலை போன்ற தேகத்தையும், சாலவிருட்சம்போன்ற தோள்களையும், நீண்ட புஜங்களையும், மாரில் பெரிய கண்களையும், வயிற்றினிடத்தில்

பெரிய வாயையும் உடையதாயிருந்தது. அந்த அரக்கன் சுளுவாக இலட்சு மணரைத் தன் கைகளால் பிடித்துக்கொண்டான். அவ்வரக்கன் இராமரைப் பார்த்துக்கொண்டே திகிலடைந்திருக்கிற இலட்சுமணரைத் தன் வாயின் கிட்ட இழுத்தான். இலட்சுமணர் துக்கப்பட்டு ஸ்ரீராமரை நோக்கி என்துர்ப் பாக்கியத்தைப் பாரும். நீர் இராஜ்யத்தை யிழந்து, நமது பிதா மரணமடைந்தது, சீதையைப் பிரிந்தது, இந்த அபாயம் இவைகள் எல்லாம் எனக்குச் சம்பவித்தன. நீர் சீதையுடன் அயோத்திக்குப் போகிறதையும், நமது பிதாவும் பிதாமகர்களும் அரசாண்ட இராஜ்யத்திலிருந்து அரசாள்வதையும் நான் பார்க்கப் போகிறதில்லை. மேகத்தினின்றும் விடுபட்ட சந்திரனைப்போலப் பிரகாசிக்கிற உமது முகத்தையும் பட்டாபிஷேகத்திற்காகத் தர்ப்பை அட்சதை முதலியவற்றால் பரிசுத்தம் பண்ணப்பட்ட சுத்தநீரில் நீர் ஸ்நானம் பண்ணுகிறதை பார்க்கிறவர்களே பாக்கியசாலிகள். இப்படிச் சொல்லிக்கொண்டு இலட்சுமணர் புலம்பினார். துன்பத்துக்கு அஞ்சாதவரான இராமர், இலட்சுமணரைப் பார்த்து தைரியசாலியான இலட்சுமணா! பயப்படாதே நான் இருக்கும்போது இந்த அரக்கன் உன்னை ஒன்றும் செய்ய முடியாது. உன் கத்தியால் இவனுடைய வலது புஜத்தை வெட்டு, நான் இடதுபுஜத்தை வெட்டுகிறேன் என்றார். இப்படிச் சொல்லிக்கொண்டே இராமர் அவ்வரக்கனுடைய இடது புஜத்தைத் தமது வாளாயுதத்தால் வெட்டினார். ஸ்ரீராமர் பக்கத்திலிருக்கிற தைரியத்தால் அவனுடைய வலது புஜத்தை வெட்டினார். அவ்வரக்கன் மடிந்தான். உடனே அந்த அரக்கனுடைய தேகத்திலிருந்து ஒரு திவ்ய புருஷன் தோன்றிச் சூரியனைப்போலப் பிரகாசித்துக்கொண்டு ஆகாயத்தில் நின்றான். பிறகு சமர்த்தரான இராமர் அவனை நோக்கி நீ யார்? சொல் என்றார். இது எனக்கு ஆச்சரியமா யிருக்கிறது என்றார்.

42—48. அவன் ஸ்ரீராமரை நோக்கி அரசனே! நான் விசுவாவசு என்கிற கந்தர்வன். நான் ஒரு பிராமணனுடைய சாபத்தாலே இராட்சத வடிவத்தைப் பெற்றேன். இலங்கையில் வசிக்கிற இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போயிருக்கிறான். சுக்கிரீவனிடம் போய்ச்சேர். அவன் சீதையை மீட்பதற்கு உதவிசெய்வான். ரிசியமூகப் பர்வதத்துக்குச் சமீபத்தில் பம்பை என்று ஒரு தடாகம் இருக்கின்றது. பரிசுத்தமான நீரை யுடையது. அன்னங்களும் நாரைகளும் நிறைந்திருப்பது. அங்கே வாலிக்குச் சகோதரனும், வானரங்களுக்கு அரசனுமான சுக்கிரீவன் சொர்ணமயமான மாலையை அணிந்துகொண்டு வசிக்கிறான். அவனிடம் போய் உன் துக்கத்துக்குக் காரணத்தைச் சொல். உன்னைப்போன்ற துயரத்தை யுடைய அவன் உனக்கு ஒத்தாசைசெய்வான். அதனால் நீ சீதையை அடைவாய். அந்த இராவணனுடைய அந்தச் சுக்கிரீவனுக்கு நிச்சயமாய்த் தெரியும். இப்படிச் சொல்லிவிட்டு அந்தக் கந்தர்வன் மறைந்து போய்விட்டான். மஹாவல்லமைசாலிகளான ஸ்ரீராமலட்சுமணர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள்.

## 279-வது அத்தியாயம்.

இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—24. சீதையைப் பிரிந்ததனால் துக்கப்பட்டுக் கொண்டிருக்கிற இராமர் சமீபத்திலிருக்கிற தாமரைமலர்களால் நிறைந்த பம்பாசரஸை அடைந்தார். அந்த வனத்தில் இன்பமான குளிர்ந்த காற்று அமிர்தம் போன்ற வாசனையுடன் உலாவியது. அப்போது இராமருக்குச் சீதையின் ஞாபகம் உண்டாயிற்று. அதனால் இராமர் புலம்பினார். அதைப் பார்த்த இலட்சுமணர் அவரை நோக்கி மன அடக்கமுள்ளவரான நீர் இப்படித் துக்கப்படுவது தகாது. உமக்கு இராவணன் இருக்கிற இடம் தெரிந்திருக்கிறது. சீதை யிருப்பிடமும் தெரிந்தது. ஆகையால் புத்திசாலித்தனமாய் ஊக்கத்துடன் தேட முயலும். நாம் சுக்கிரீவனிடம் போவோம். உமது சிஷ்யனும், பணிவிடைக்காரனும், துணைவனுமான நான் பக்கத்திலிருக்கிறபடியால் சந்தோஷமாயிரும். இப்படிப்பட்ட வசனங்களால் இலட்சுமணர் தேற்ற, இராமர் மனந்தெளிந்து தமது காரியத்தில் கவனமுள்ளவரானார். பிறகு அவ்விருவரும் பம்பாசரசில் ஸ்நானம் பண்ணிப் பிதிர் தர்ப்பணமும் செய்து ரிசியமுக பர்வதத்தை நோக்கிப் போனார்கள். கிழங்குகளும், கனிகளும், மரங்களும் நிறைந்த ரிசியமுக பர்வதத்தை அடைந்து, அதன் சிகரத்தில் ஐந்து வானரங்களைக் கண்டார்கள். உடனே சுக்கிரீவன் மந்திரியான மலை போன்ற தேகமுள்ள அனுமானை இராமலட்சுமணர்களை அழைத்து வரும்படி அனுப்பினான். முதலில் அனுமானிடம் பேசிப் பின்பு சுக்கிரீவனிடம் போனார்கள். இராமர் சுக்கிரீவனிடம் சிநேகம் பண்ணிக்கொண்டார். இராமர் தமது எண்ணத்தை அவனுக்குச் சொன்னதும், சீதை எறிந்துவிட்டுப்போன வஸ்திரத் துண்டைச் சுக்கிரீவன் கொண்டு வந்து இராமருக்குக் காட்டினான். அதை வாங்கிக் கொண்டதும் இராமர், சுக்கிரீவனை உலகத்திலுள்ள வானரங்களுக்கு அரசனாக மகுடம் சூட்டினார். பிறகு இராமர் வாலியைக் கொல்வதாகச் சுக்கிரீவனுக்கு வாக்குக் கொடுத்தார். சுக்கிரீவனும் தான் சீதையைத் தேடித் தருவதாக இராமருக்கு வாக்குக் கொடுத்தான். பிறகு யுத்தத்துக்குச் சித்தம் செய்து கொண்டு கிஷ்கிந்தைக்குப் போனார்கள். சுக்கிரீவன் இடி முழக்கம்போலக் கர்ஜித்தான். வாலி அதைச் சகியாமல் யுத்தத்துக்குப் புறப்பட்டான். வாலியினுடைய மனைவியான தாரை என்பவள் வந்து வழிமறித்துக்கொண்டு, சுக்கிரீவன் பெரிய பலவானுடைய உதவியை அடைந்து வந்திருக்கிறான், ஆகையால் நீ வெளியில் போகாதே என்று தடுத்தாள் தாரகாகணங்களுக்குத் தலைவனாகிய சந்திரனைப்போல முகத்தையுடைய வாலி தன் மனைவியை நோக்கி, உனக்குச் சகல பிராணிகளினுடைய எண்ணமும் தெரியும். ஆகையால் சுக்கிரீவன் யாருடைய உதவியைப் பெற்று வந்திருக்கிறான்? சொல் என்று கேட்டான். தாரை சற்று யோசித்து, வாலியை நோக்கி, வில் வீரனான இராமனுடைய உதவியைப் பெற்று வந்திருக்கிறான். இராமன் தசரதருடைய குமாரன். இராமனுடைய மனைவியை

இராவணன் கொண்டு போய்விட்டான். அதனாலே இராமன் சுக்கிரீவனிடம் சிநேகம் செய்து கொண்டு வந்திருக்கிறான். மைந்தன், துவைதன், வாயு புத்திரனான அனுமான், ஜாம்பவன் ஆகிய இந்த மந்திரிகளும், சுக்கிரீவனுக்குச் சகாயமாக வந்திருக்கிறார்கள். இவர்கள் எல்லாரும் புத்திசாலிகள். மஹா பராக்கிரமசாலிகள். இவர்கள் இராமனுடைய உதவியைக் கொண்டு உன்னை நிச்சயமாய்க் கொல்வார்கள் என்றான்.

25—36. ஆனால் வாலி அவளுடைய வார்த்தையை இலட்சியம் பண்ணாமலும், அவளுடைய மனம் சுக்கிரீவனைப் பற்றியிருக்கிறதென்றும் கருதி எரிச்சல் கொண்டு, தாரையை வைது விட்டுக், குகையை விட்டுப் புறப்பட்டுச் சுக்கிரீவனிடம் போனான். மலையவான் மலையருகில் நிற்கிற சுக்கிரீவனைப் பார்த்து, உன் பிராணன்மேல் ஆசை கொண்டிருக்கிற நீ பலதரம் தோல்வியடைந்திருக்கிறாய். நீ எனக்கு உறவா யிருக்கிறதைப் பற்றி உன்னைக் கொல்லாமல் விட்டேன். அப்படி யிருக்க நீ ஏன் சாவதற்காக என்னிடம் வந்தாய் என்றான்? இதைக் கேட்ட சுக்கிரீவன் சமையத்துக்கேற்றவாறு,ஸ்ரீராமர்சொன்னபடி சொல்லுகிறான். உன்னால் நான் இராஜ்யத்தையும் மனைவியையும்இழந்துவிட்டேன். அதன் பின் உயிரோடிருப்பதினால் என்ன பயன்? அதனாலே தான் உன்னால் மரணமடையக் கருதி வந்தேன் என்றான். இது போன்ற பல வசனங்களைப் பேசி ஒருவர்க்கொருவர் யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். சாலமரங்களையும் தால மரங்களையும் பிடுங்கிக்கொண்டு யுத்தம் செய்தார்கள். ஒருவரை ஒருவர் அடித்தும், களைத்தும் மறுபடியும் எதிர்த்தும் சண்டை யிட்டார்கள். பல்லால் கடித்தும், நகங்களால் கீறியும் இரத்தம் ஒழுகப் பூத்த முருக்கம் மரம் போல விளங்கினார்கள். யுத்தம் செய்கிற அவ்விருவரும் ஒரே மாதிரியாக இருந்தபடியால் ஸ்ரீராமருக்கு அவர்களுள் வேறுபாடு தெரியவில்லை. அதனால் அநுமான் ஒரு மாலையைச் சுக்கிரீவன் கழுத்தில் போட்டார். உடனே ஸ்ரீராமர் வித்தியாசம் தெரிந்து கொண்டு வாலியைக் குறித்து ஒரு அம்பை எய்தார். அவருடைய வில் நாணொலி மேக முழக்கம் போலிருந்தது. அந்த அம்பு வாலியின் இருதயத்தைத் துளைத்தது. அதனால் அவன் கலங்கி அலறினான்.

37—40. வாலி இரத்தம் கக்கிக்கொண்டு விழுந்தான். அதன் பின் ஸ்ரீராமர் இலக்ஷ்மணருடன் வந்து தனக்கு எதிரில் நிற்பதைப் பார்த்தான். அநியாயமாயும் காரண மில்லாமலும் தன்னைக் கொன்ற ஸ்ரீராமரைத் திட்டி வைது, பிரக்ஞை யில்லாதவனாய்ப் பூமியில் விழுந்தான். சந்திரனைப் போலப் பிரகாசிக்கிற வாலி கொலை யுண்டு பூமியில் விழுந்து கிடக்கிறதைத் தாரை கண்டாள். வாலி இப்படி மரணமடைந்ததும் சுக்கிரீவன் கிஷ்கிந்தா இராஜ்யத்தை அடைந்தான். சந்திரனைப்போன்ற முகத்தையுடைய மனைவியையும் அடைந்தான். ஸ்ரீராமர் சுக்கிரீவனால் வணங்கப்பட்டு அந்த மலயவான் வெற்பின் சிகரத்தில் நாலு மாசம் வசித்தார்.

72

41—53. இராவணனும் இலங்கை போய்த் தேவர்களுடைய நந்தவனம் போல விளங்குகிற அசோக வனத்தில் ஸீதையைச் சிறை வைத்தான். ஸ்ரீராமரை நினைத்து வருந்துகிற சிந்தை யுடனும், சந்நியாசிகளுக்குரிய உடையுடனும் சரீரம் மெலிந்தவளாய்ச் ஸீதை வசித்தாள். பழங்களையும் கிழங்குகளையும் புசித்துக் கொண்டு தவம் செய்து கொண்டிருந்தாள். ஸீதையைக் காக்கும் பொருட்டுக் கத்தி முதலிய ஆயுதங்களுடன் அநேக இராட்சத ஸ்திரீகள் சூழ்ந்திருந்தார்கள். அவர்களுள் சிலருக்கு இரண்டு கண்கள், சிலருக்கு மூன்று கண்கள், சிலருக்கு நெற்றியில் கண். சிலர் நீண்ட நாக்குள்ளவர்கள், சிலருக்கு நாக்கே யில்லை. சிலர் மூன்று மார்களையும் ஒரு காலையும் உடையவர்களா யிருந்தார்கள். இவர்களும் இவர்களைப் போன்ற வேறு அநேக இராட்சத ஸ்திரீகளும் சடைகளையும், எரிகிற கண்களையும் உடையவர்களாய் இரவும் பகலும் ஸீதையைக் காத்துக் கொண்டிருந்தார்கள். பயங்கரமான அந்த ஸ்திரீகள் ஸீதையை எப்போதும் பய முறுத்திக்கொண்டே யிருந்தார்கள் சிலர் நாம் இவளை விழுங்குவோம் என்பார்கள். சிலர் இவளைத் துண்டு துண்டாய்க் கிழித்து விடுவோம் என்பார்கள். நமது அரசனை அலட்சியம் பண்ணுகிறவர் யார் இருக்கிறார்கள் என்று இப்படிப் பயமுறுத்தப்பட்ட ஸீதை தன் நாயகனை நினைத்துத் துக்கப்பட்டுக் கொண்டிருந்தாள். அவர்களை நோக்கிப் பெருமூச்சு விடுவாள். தெய்வத்தை ஒத்த இராட்சத ஸ்திரீகளே! என்னைச் சீக்கிரத்தில் விழுங்கி விடுங்கள். ஸ்ரீராமரைப் பிரிந்து உயிர் வாழ்ந்திருக்க எனக்குப் பிரிய மில்லை. என் நாயகனைப் பிரிந்து வாழேன். அவர் என் உயிரை விட மேலானவர். உணவில்லாமலிருந்தாவது பிராணனை விடுவேன். இதை நிச்சயமாய் நம்புங்கள். ஆகையால் இப்பொழுது உங்களுக்கு இஷ்டமானபடி செய்து கொள்ளுங்கள் என்றாள். இப்படிச் சொன்னதைக் கேட்ட இராட்சத ஸ்திரீகள் அதைச் சொல்லும் பொருட்டு இராவணனிடம் போனார்கள்.

54—83. அந்த ஸ்திரீகள் எல்லாரும் இராவணனிடம் போன பின், திரிஜடை என்கிற பெயரை யுடையவளும், மதுரமாகப் பேசுகிறவளும், பக்தி யுள்ளவளுமான இராட்சத ஸ்திரீ இனிய வசனங்களைக் கூறிச் ஸீதையைத் தேற்றினாள். ஸீதா! நான் உனக்குச் சில விஷயம் சொல்லுகிறேன், நீ என்னைத் தோழியாக நம்பியிரு. உன் பயத்தை விடு. என் வார்த்தைகளை கேள். அவிந்தியன் என்கிற புத்திசாலியான ஒரு இராட்சதத் தலைவன் இருக்கிறான். அவன் உன் க்ஷேமத்தையும் ஸ்ரீராமருடைய க்ஷேமத்தையும் விரும்புகிறவன். அவன் என்னை நோக்கிச் ஸீதைக்கு ஆறுதல் சொல்லித் தேற்று. ஸ்ரீராமர் லக்ஷ்மணருடன் சுகமா யிருக்கிறார். அவர் வானரங்களுக்கு அரசனான சுக்கிரீவனுடன் சிநேகம் செய்து கொண்டிருக்கிறார். உன்னை மீட்கும் பொருட்டு அவர்கள் காத்திருக்கிறார்கள். சுக்கிரீவன் இந்திரனைப் போன்ற பராக்கிரமமுடையவன். உலகத்தார் எல்லாராலும் சபிக்கப்பட்ட இராவணனுக்கு பயப்பட வேண்டுவதில்லை. நளகூபரன் இராவணனுக்கு இட்ட சாபத்தினால் உன்னை இராவணன் தொட மாட்டான். அந்தச் சாபம் உன்னைக் காப்பாற்றும், மூன்

னொரு காலத்தில் இந்தத் துஷ்டனான இராவணன் தன் மருமகளாகிய ரம்பையை இச்சித்துப் பலாத்காரம் செய்தான். அதனால் குபேரன் புத்திரனான நளகூபரன் இவனைச் சபித்தான். இவைகளை எல்லாம் உனக்குச் சொல்லி உன் பயத்தை ஆற்றச் சொன்னான். அதுவும் தவிர நான் பயங்கரமான ஒரு கனவு கண்டேன். அந்தக் கனவுப் புலஸ்திய வம்சத்தைக் கெடுக்கிற இந்தத் துஷ்டனான இராவணனுடைய அழிவைக் குறிக்கின்றது. இந்த இராவணன் மஹா துஷ்டன். தன் தூர்ச் செய்கைகளால் பிராணிகளை எல்லாம் இம்சிக்கிறான். விதிவசத்தினால் தேவர்கள் எல்லாரையும் பகைத்துக்கொண்டு இருக்கிறான். என் சொற்பனத்தில் இவனுடைய பயங்கரமான அழிவைக் குறித்துக் கண்டேன். இந்த இராவணன் தலையை மொட்டை யடித்துக்கொண்டும், உடம்பில் எண்ணெயையும் மண்ணையும் பூசிக்கொண்டும், கழுதைகள் கட்டின தேரில் ஏறிப் போகக் கண்டேன். கும்பகர்ணன் முதலானவர்களும் தலையை முண்டனம் செய்துகொண்டு, உடம்பில் இரத்தத்தையும் சேற்றையும் பூசிக்கொண்டு தென் திசை நோக்கிப் போகக் கண்டேன். விபீஷணன் அழகிய மாலையையும், வெள்ளைக் குடையையும் பிடித்துக்கொண்டு சுவேத மலைமேல் நிற்கக் கண்டேன். அவனுடைய நாலு மந்திரிகளும் அழகிய மாலைகளைத் தரித்துக்கொண்டு அந்த மலையின் மேல் நிற்கக் கண்டேன். இதுவே உன்னைத் துக்கத்தினின்றும் விடுவிக்கும். கடல் சூழ்ந்த உலக மெல்லாம் ஸ்ரீராமருடைய ஆயுதங்களால் நிறைந்து விடும். உன் கணவனுடைய புகழ் உலகமெல்லாம் பரவும். இலட்சுமணர் எலும்பு மலைமேலிருந்து, பால் கலந்து சமைக்கப்பட்டதும், தேனோடு சேர்த்து சமைக்கப்பட்டதுமான அன்னத்தைப் புசிக்க பார்த்தேன். தன் அம்புகளால் திக்குகள் எல்லாவற்றையும் எரிக்கக் கண்டேன். அழுது கொண்டிருக்கிற உன்னை ஒரு புலி தென் திசை நோக்கி வந்து காப்பாற்றக் கண்டேன். சீதா! வைதேகி! உன் கணவன் இலட்சுமணருடனும் சேனைகளுடனும் சீக்கிரம் வந்து விடுவார். உனக்கு க்ஷேமம் உண்டாகும் இப்படித் திரிஜடை கூறிய வசனங்களைக் கேட்ட சீதை தான் தன் கணவனுடன் மறுபடியும் சேர்ந்து விட்டதாகவே எண்ணி மகிழ்ந்தாள். இராவணனிடம் போன இராட்சத ஸ்திரீகள் திரும்பி வந்து சீதை முன் போலவே திரிஜடையுடன் உட்கார்ந்திருக்கிறதைக் கண்டார்கள்.

---

## 280-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—7. பிறகு இராவணன் மன்மத பாணங்களால் நொந்து அசோக வனத்தை நோக்கி வந்தான். அவ்விடத்தில் தன் கணவனான ஸ்ரீராமரை நினைத்துத் துக்கப்படுகிறவளும், அழுக்கு வஸ்திரம் உடுத்திருப்பவளும், திருமங்கல்யம் ஒன்றையே ஆபரணமாகப் பூண்டிருக்கிறவளும், கணவனிடத்தில்

பக்தி யுடையவளும் இராட்சத ஸ்திரீகளால் சூழப்பட்டிருக்கிறவளும், ஒரு கல்லின் மேல் உட்கார்ந்து கொண்டிருக்கிறவளுமான சீதையினிடம் போனான். தேவ கந்தர்வ யட்ச கின்னர கிம்புருஷர்களாலும் ஜயிக்க முடியாத பராக்கிரம சாலியான இராவணன் தேவர்களுக்குரிய வஸ்திர முடுத்து, இரத்தின மிழைத்த குண்டல மணிந்து, அழகிய மாலைகளையும் கிரீடத்தையும் தரித்து, அழகிய கற்பக விருட்சத்தைப் போல விளங்கினான். ஆயினும் மல பூமியிலிருக்கிற ஆல மரத்தைப் போலப் பயங்கரமாகக் காணப்பட்டான். அந்த அரக்கன் ரோகிணி நட்சத்திரத்துக்கு எதிரில் சனீசுவரன் நிற்பது போலச் சீதையின் முன் நின்றான். சீதையை உபசரித்து, மன்மத பாணங்களால் நொந்து சீதையை நோக்கிச் சொல்லுகிறான்.

8—16. ஏ சீதா! நீ இதுவரையிலும் உன் கணவனிடத்தில் அதிகப் பிரியமுள்ளவளா யிருந்தாய். இனி என்மேல் தயவா யிரு. நன்றாய் அலங்காரம் செய்து கொள். அழகுள்ளவளே! என் சவரக்ஷணையிலிரு. சிறந்த ஆடையாபரணங்களாலும் சிறப்பாய் அலங்கரித்துக்கொண்டு என் மனைவிமார்களிலும் மேன்மையாகவும் முதன்மையாகவும் இரு. அநேக கந்தர்வ ஸ்திரீகளும், தேவஸ்திரீகளும் என் அரண்மனையில் இருக்கிறார்கள். எனக்கு அநேக தானவ ஸ்திரீகளும், தைத்திய ஸ்திரீகளும் இருக்கிறார்கள். இலக்ஷத்து நாற்பது கோடி பிசாச ஸ்திரீகளும் அதற்கு இரட்டிப்பான இராட்சத ஸ்திரீகளும் என் பணிவிடைக்குக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அதைவிட மும்மடங்கு அதிகமான யட்ச ஸ்திரீகள் என் பணிவிடைக்குக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். என் சகோதரனை குபேரனிடத்தில் சிலரே யிருக்கிறார்கள். அழகான தொடையை யுடையவளே! கந்தர்வப் பெண்களும் அப்ஸரஸ்களும் குபேரனிடம் இருப்பதுபோலவே என் போஜன சாலையிலும் இருக்கிறார்கள். நான் ஒரு பிரம ரிஷியின் புத்திரன். அந்த ரிஷியின் பேர் விசிரவஸ். என்னை ஐந்தாவது லோகபாலகன் என்று கருதுகிறார்கள். தேவேந்திரனுக்குள்ளது போலவே என்னிடத்திலும் உண்கிறவைகளும் குடிக்கிறவைகளுமான வஸ்துக்களிருக்கின்றன. வனவாசத்தினால் நீ அடைந்த துன்பங்கள் ஒழியும்படி அவைகளை அனுபவி. மண்டோதரியைப்போல நீயும் என் பத்தினியா யிரு என்று சொன்னான்.

17— . இப்படிச் சொன்னதைக் கேட்ட சீதை இராவணனைப் பாராமல் முகத்தைத் திருப்பிக்கொண்டு, அவனை ஒரு துரும்புக்குச் சமானமாகக் கருதிச் சொல்லுகிறாள். தன் கணவனையே தெய்வமாகக் கருதி யிருக்கிற அந்த வைதேகி ஓயாமல் கண்ணீர் விட்டழுதுகொண்டு, ஓ இராட்சதேந்திரா, நான் பாக்கியமற்றவளாயும், அதிர்ஷ்டமில்லாதவளாயும் இருக்கிறபடியால் நீ பேசுகிற துர் வசனங்களை அடிக்கடி கேட்கிறேன். உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். சிற்றின்பப் பிரியனாகிய உன்னுடைய மனதை என்னிடத்தினின்றும் திருப்பிக் கொள். என்மேல் பிரியம் வையாதே. அந்நியனுடைய பத்தினியாயும், கணவனிடத்தில் அன்புள்ளவளாயும் இருக்கிற என்னை நீ

அடைய முடியாது. ஒத்தாசை யில்லாத நான் உனக்கு மனைவியாகத் தகாதவள். பிரியம் இல்லாமலிருக்கிற பெண்ணினால் உனக்கென்ன சுகம் உண்டாகப் போகிறது? உன்னுடைய பிதா பிரமதேவருக்குச் சமானமானவர். ஏனென்றால் அவர் பிரமதேவனுடைய புத்திரர். லோகபாலகருக்குச் சமானமாயிருக்கிற நீ ஏன் தர்மத்தை அனுசரிக்கக் கூடாது? உன்னால் வணங்கத் தக்க சகோதரனும், மஹாதேவருக்குத் தோழனும், ஐசுவரியங்களுக்கு இறைவனுமாயுள்ள குபேரனை அவமரியாதையாகப் பேசுகிறதற்கு நீ வெட்கப்படவில்லையே! இப்படிச் சொல்லி உடல் நடுங்கி முகத்தை மூடிக்கொண்டு சீதை அழுதாள். அப்படி அவள் அழுகிறபோது அவளுடைய கறுத்து அடர்ந்து நீண்ட கூந்தல் அவிழ்ந்து தொங்கினது ஒரு கருநாகம் தொங்கினது போலிருந்தது. இப்படிச் சீதை கொடிய வசனங்களைப் பேசவும் இராவணன் மறுபடியும் அவளை நோக்கி, அழகிய இடுப்பையும் மந்தகாசமுள்ள முகத்தையும் உடைய சீதா! நான் உன் விருப்பத்திற்கு விரோதமாக உன்னை அனுபவிக்க முடியாது. நீ இப்பொழுதும் அற்ப மனிதனும் எங்களுக்கு ஆகாரமாயுள்ளவனுமான இராமனையே விரும்புகிறாய் என்று சொல்லி மறைந்து போனான். சீதை துக்கத்துடன் இராட்சத ஸ்திரீகள் சூழ அவ்விடத்திலிருந்தாள். திரிஜடை அவளைத் தேற்றினாள்.



## 281-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—11. இது நிற்க, மாலியவான் மலையில் சுக்கிரீவனால் உபசரிக்கப்பட்டிருந்த ஸ்ரீராமர் ஒரு நாள் வானத்தைப் பார்த்தார். அப்போது வானத்தில் பூர்ண சந்திரன் பிரகாசித்தது. நட்சத்திரங்களும் கிரகங்களும் நிறைந்து விளங்கின. சுகந்தமான புஷ்ப மணங்களுடன் குளிர்ந்த காற்று வீசியது. அப்போது ஸ்ரீராமர் சீதையை நினைத்துக்கொண்டார். இராவணனால் இராட்சதர்கள் வசிக்கிற இடத்தில் சீதை சிறை செய்யப்பட்டிருப்பதை நினைந்து வருந்தினார். மறுநாட்காலையில் யுத்தப் பிரியரான இலட்சுமணரைப் பார்த்து, ஓ இலட்சுமணா! நீ கிஷ்கிந்தைக்குப் போய் நன்றி மறந்த வானர அரசனான சுக்கிரீவனைப் பார். அந்தத் துஷ்டனுக்குக் கிஷ்கிந்தை யிராஜ்யத்தைக் கொடுத்து வானரங்களும் கரடிகளும் வணங்க வைத்தேன். நீண்ட கைகளையுடைய இலட்சுமணா! நான் உன் உதவியால் வாலியைக் கொன்றேன். வானரனாகிய அந்தச் சுக்கிரீவன் நன்றி மறந்த துரோகி என்று நினைக்கிறேன். அந்தத் துஷ்டன் என்னை மறந்து விட்டான். அவனுக்குப் பேருதவி செய்த என்னை அலக்ஷியம் செய்து, வாக்குக் கொடுத்ததையும் நிறைவேற்றாமல் இருக்கிறான். அவன் சிற்றின்பத்தில் முழுகிச் சீதையைத் தேடும் முயற்சி யின்றி யிருக்கிறான். ஆகையால் நீ வாலி சென்ற வழியில் சுக்கிரீவனை அனுப்ப வேண்டும்

ஆனால் அவன் நமது காரியத்தை நிறைவேற்றுகிற எண்ணத்துடனிருந்தால் அவனை யிங்கே அழைத்துக் கொண்டு வா. சீக்கிரம் போ, தாமதியாதே என்றார்.

12—20. எப்பொழுதும் தமையனுக்கு அடங்கியும், பெரியோரிடத்தில் பக்தியாயும் இருக்கிற இல்க்ஷ்மணர் வில்லையும் அம்பையும் எடுத்துக்கொண்டு கிஷ்கிந்தையை நோக்கிப் புறப்பட்டார். கிஷ்கிந்தையின் கோட்டை வாயிலை அடைந்து எதிரில்லாமல் நகரத்துக்குள் புகுந்தார். வானர அரசன் இலக்ஷ்மணர் கோபங்கொண்டிருக்கிறார் என்று நினைத்து அவரை எதிர் கொண்டு அழைக்க வந்தான். வணக்கமான மனமுள்ள சுக்கிரீவன் தன் மனைவியுடன் வந்து மரியாதையாயும் மகிழ்ச்சியாயும் உபசரித்தான். இலக்ஷ்மணர் ஸ்ரீராமர் கூறிய வசனங்களைச் சொன்னார். அதைக் கேட்ட சுக்கிரீவன் மன மகிழ்ச்சியுடன் இலக்ஷ்மணரைப் பார்த்து இலக்ஷ்மணா! நான் கெட்ட எண்ணத்துடன் இருக்கவில்லை. நன்றி மறந்த கொடியவனா யிருக்கவுமில்லை. சீதையைத் தேடுகிற விஷயத்தில் நான் பிரயாசப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நாலு திசைகளிலும் வானரங்களை அனுப்பி யிருக்கிறேன். ஒரு மாதத் தவணைக்குள் எல்லா வீரர்களும் வந்து சேர வேண்டுமென்று கட்டளை யிட்டிருக்கிறேன். காடு, மலை, வனம், கடல், நகரம், குகைகள் எங்கும் வானரங்கள் வந்துநிறைந்து விடும். அந்தத் தவணை முடிய இன்னம் ஐந்து இரவுகளிருக்கின்றன. உடனே சீதையைக் கண்டு பிடித்த சமாசாரத்தை நீரும் ஸ்ரீராமரும் கேட்டு மகிழ்வீர்கள் என்று சொன்னான்.

21—37. சுக்கிரீவன் கூறிய வசனங்களைக் கேட்ட இலக்ஷ்மணர் கோபம் நீங்கினார். பிறகு சுக்கிரீவனுடன் ஸ்ரீராமர் இருக்கிற இடத்துக்கு வந்தார். ஸ்ரீராமரிடம் போய்த் தாம் காரிய சித்தியுடன் வந்ததைத் தெரிவித்தார். மூன்று திசைகளுக்கும் போன வானரங்கள் காரிய சித்தியின்றி வந்து கொண்டிருந்தார்கள். நாங்கள் கடல் சூழ்ந்த பூமி முழுவதிலும் தேடினோம், சீதையையாவது இராவணனையாவது காணவில்லை என்று சொன்னார்கள். அவர்கள் சொன்னதைக் கேட்டு ஸ்ரீராமர் சற்று மனம் வருந்தினார். ஆயினும் தென் திசைக்குப் போனவர்கள் சீதையைக் கண்டு வருவார்கள் என்று நம்பி யிருந்தார். இரண்டு மாதங்களான பின் சில வானரங்கள் வேகமாய் வந்து சுக்கிரீவனை நோக்கி வானரேந்திரனே! வாலியினால் வெகு ஜாக்கிரதையாய்க் காக்கப் பட்டதும் உம்மால் பரிபாலிக்கப்படுவதுமான மதுவனத்தை அனுமான் அழித்து விட்டார். நீர் தென் திசைக்கு அனுப்பி யிருந்த வாலி புத்திரனான அங்கதன் முதலானவர்களும் சேர்ந்து மது வனத்தைக் கொள்ளை யிடுகின்றார்கள் என்றான். இந்த வசனத்தைக் கேட்ட சுக்கிரீவன் அவர்கள் காரியசித்தி அடைந்து வந்திருக்கிறார்கள். அதனாலேதான் அப்படிச் செய்கிறார்கள் என்று எண்ணினான். புத்திமானான சுக்கிரீவன் இதை ஸ்ரீராமருக்குச் சொன்னான். அதைக் கேட்ட ஸ்ரீராமரும் சீதை கண்டு பிடிக்கப்பட்டாள் என்று கருதினார்.

இதற்குள் அனுமானை முன்னிட்ட வானரங்கள் களையாறி, ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடன் சேர்ந்திருக்கிற சுக்கிரீவனிடம் வந்தார்கள். அனுமானுடைய முக மலர்ச்சியைப் பார்த்தபோதே அவர் சீதையைக் கண்டிருப்பாரென்று ஸ்ரீராமர் கருதினார். வந்த ஹனுமான் முதலான வீரர்கள் ஸ்ரீராமர் முதலான மூவரையும் வணங்கினார்கள். வில்லம்புகளைத் தரித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீராமர் அவர்களை நோக்கி நீங்கள் என்னை உயிருடன் இருக்கும்படி செய்வீர்களா? உங்கள் காரியத்தில் சித்தி பெற்றீர்களா? சத்துருக்களைச் சங்கரித்து மீட்டு அயோத்திக்குப் போய் நான் அரசு புரியும்படி செய்வீர்களா? நான் மனைவியையும் மானத்தையும் இழந்திருக்கிறேன். சத்துருக்களைக் கொன்று சீதையை மீட்காமல் நான் உயிரோடு வாழமாட்டேன் என்று சொன்னார். அதைக் கேட்ட வாயு குமாரனான அனுமான், ஸ்ரீராமா! நான் உமக்குச் சுபசமாசாரம் சொல்லுகிறேன். நான் ஜானகியைக் கண்டேன்.

38—61. தென் திசையிலுள்ள காடு, மலைகள் எங்கும் தேடிக் களைத்துப் போனோம். பிறகு ஒரு பெரிய குகையைக் கண்டோம். ஆழமாயும், இருளடைந்தும், அநேக பூச்சிகள் வசிக்கப்பெற்றும், அநேக யோஜனை நீண்டும் இருக்கிற அந்தக் குகையின் உள் புகுந்து போனோம். வெகு தூரம் போனபின் சூரிய பிரகாசத்தையும் அழகிய ஒரு அரண்மனையையும் பார்த்தோம். அந்த அரண்மனை மயனுக்குரியது. பிரபாவதி என்கிற ஒரு பெண் அங்கே தவம் பண்ணிக்கொண்டிருந்தாள். அவள் எங்களுக்குப் பல வகையான உணவுகளைத் தந்தாள். நாங்கள் களையாறின பின், அவள் சொன்ன வழியாகப் போனோம். அநேக வனங்களையும், மலைகளையும் கடந்து மலயாசலத்தையடைந்து அதன் மேலேறிச் சமுத்திரத்தைப் பார்த்தோம். அதைக் கண்டதும் நாங்கள் துக்கம் அடைந்து சாகத் துணிந்தோம். ஒரு இடத்தில் உட்கார்ந்துகொண்டு பல பேச்சுக்களைப் பேசுகிற போது ஜடாயுவைப் பற்றி பேசினோம். அப்போது மலை போன்ற பயங்கரமான வடிவத்தை யுடைய ஒரு பட்சியைக் கண்டோம். அவன் விநதை புத்திரனான கருடனைப் போல இருந்தான். அவன் எங்களை விழுங்கக் கருதி வந்து எங்களை நோக்கி என் சகோதரனான ஜடாயுவைப் பற்றி பேசினவர் யார்? நான் அவனுக்குத் தமையன். என் பேர் சம்பாதி. ஒரு காலத்தில் நாங்கள் இருவரும் சூரியனிடம் போகக் கருதிப் பறந்து சென்றோம். அப்போது என் இறகுகள் எரிந்து போயின. ஜடாயு தப்பினான். அதன் பின் என் பிரியமுள்ள சகோதரனான ஜடாயுவைப் பார்க்கவில்லை. சிறகு எரிந்து போனபடியால் இந்த மலையில் விழுந்து இங்கேயே வாசம் பண்ணிக் கொண்டிருக்கிறேன் என்றான். ஜடாயு இறந்து போனதை நாங்கள் அவனுக்குச் சொன்னோம். உமது துக்கத்தையும் சுருக்கமாய்ச் சொன்னோம். இந்த துக்க சமாசாரத்தைக் கேட்ட சம்பாதி வருத்த மடைந்து ஸ்ரீராமர் என்பவர் யார்? சீதை ஏன் அபகரிக்கப்பட்டாள்? ஜடாயு எப்படி இறந்தான்? என்று கேட்டான். ஸ்ரீராமா! உமக்கு நேரிட்ட துக்கத்தையும் நாங்கள் இறக்கத் துணிந்த காரணத்தையும் சொன்னோம். அந்தச் சம்பாதி

எங்களைத் தேற்றி, அந்த இராவணனை நான் அறிவேன். அவனுடைய நகர மான இலங்கை சமுத்திர மத்தியிலுள்ள திரிகூட மலை யிருக்கிறது. ஜானகி அங்கே தான் இருப்பாள். இதில் சந்தேக மில்லை என்றான். உடனே நாங் கள் எழுந்திருந்து சமுத்திரத்தைத் தாண்டுவதைப் பற்றி யோசித்தோம். ஒரு ஒருவருக்கும் சக்தி யில்லை. நான் என் பிதாவின் உதவியினால் சமுத்திரத்தைத் தாண்டிப் போனேன், போகும் போது சமுத்திர நடுவில் என்னை எதிர்த்த ஒரு இராட்சத ஸ்திரீயைக் கொன்றேன். இலங்கைக்குப் போய் இராவணன் நகரத்தில், தன் கணவனைக் காண விரும்பி உக்கிரமான தவம் பண்ணிக்கொ ண்டிருக்கிற சீதையைப் பார்த்தேன். ஜடையான கூந்தலும், அழுக்கடைந்த மேனியும், துக்கமும் உடையவளாய்த், தவத்தால் மெலிந்து மிருக்கிறதைப் பா ர்த்து இவள்தான் சீதையாக இருக்கவேண்டு மென்று கருதி அவளிடம் செ ன்றேன்.

62—71. தனியா யிருந்த ஜானகியிடம் போய் வணங்கினேன். நான் ஸ்ரீராமருடைய தூதன், வானர ஜாதி, வாயுவின் புத்திரன் என்று சொன் னேன். உலக மெல்லாம் தேடிப் பார்த்து உம்மைக் காணும் பொருட்டு இங் கே வந்தேன். ஸ்ரீராம லட்சுமணர்கள் சுகமா யிருக்கிறார்கள், வானரங்களும் வானர அரசனான சுக்கிரீவனும் அவர்களுக்கு உதவியாக இருக்கிறார்கள். ஸ்ரீராம லட்சுமணர்கள் இருவரும் உமது க்ஷேமத்தை விசாரித்தார்கள். சுக்கி ரவன் அவர்களுக்குச் சிநேகிதனா யிருக்கிறபடியால் அவனும் உமது க்ஷேமத் தைக் கேட்கிறான். உமது கணவன் வானரப் படைகளுடன் வெகு சீக்கிரத் தில் இங்கே வருவார். தேவீ! என் வார்த்தையை நம்பும். நான் இராட்சத னல்ல, வானரம் என்றேன். அதைக் கேட்ட ஜானகி சற்று யோசித்து அவிந் தியன் சொல்லி யிருப்பதினால் நீ அனுமான்தான் என்று நான் எண்ணுகிறேன். அவிந்தியன் முதிர்ந்தவனும் வணங்கத்தக்கவனுமான இராட்சதன். அவன் உன்னைப் போன்ற மந்திரிகள் சுக்கிரீவனுக்கு யிருக்கிறார்கள் என்று சொன் னான் என்று சொல்லி, இந்த ஆபரணத்தை அடையாளமாகக் கொடுத்து என க்கு விடை கொடுத்தாள். இந்த நகைதான் சீதை இதுவரையும் உயிரு டனிருக்கிறதற்குக் காரணமா யிருந்தது. நீர் சித்திரகூட மலையிலிருந்த போது ஒரு துரும்பினாலே காக்கை எய்ததையும் அடையாளமாகச் சொன்னாள். பின் காவற்காரர்கள் எனக்கு உபத்திரவம் செய்தார்கள். அதனால் இலங்கையை எரித்து விட்டுத் திரும்பி வந்தேன் என்று அனுமான் சொன்னார். இதைக் கேட்ட ஸ்ரீராமர் அனுமானுக்கு உபசாரம் சொன்னார்.



## 282-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—22. பிறகு ஸ்ரீராமர் அந்த மலையில் உட்கார்ந்திருக்கும்போது வான ரோத்தமனான சுக்கிரீவன் வானரங்களை யெல்லாம் அங்கே வந்து கூடும்படி கட்

-ளை யிட்டான். உடனே வாலியினுடைய மாமனுரான சுஷேணன் பத்து கோடி வானரப்படைகளுடன் வந்து சேர்ந்தான். கஜன், கவயன் என்பவர்கள் இரண்டு கோடி வானரப் படைகளுடன் வந்தார்கள். பசுவின் வாலையுடைய கவாட்சன் அறுநூறு கோடி படைகளுடன் வந்தான். கந்தமாதனன் நூறுயிர கோடி வானரங்களுடன் வந்தான். அநேக வானரப் படைகளுடன் ததிமுகன் வந்தான். ஜாம்பவந்தன், நெற்றியில் திலக மிட்டிருக்கிற நூறுயிரகோடி கறுத்த கரடிகளுடன் வந்தான். இவர்களும் இன்னம் அநேக வானரத் தலைவர்களும் அளவிறந்த படைகளுடன் வந்து கூடினார்கள். மலைபோன்ற சரீரத்தையும் சிங்கம்போன்ற தொனியையும் உடைய வானரங்களின் கர்ஜனை கேட்கப்பட்டது. சுக்கிரீவன் கட்டளையால் வானரப்படைகள் அணிஅணியாக நின்றன. சமுத்திரம்போலப் பரவியிருக்கிற அந்த வானரப் படைகளுடன் சுப முகூர்த்தத்தில் இராம லட்சுமணர்களும் சுக்கிரீவனும் இலங்கையை நோக்கிப் புறப்பட்டார்கள். வானரப் படைகளால் சூழப்பட்ட இராமலட்சுமணர்கள் கிரகங்களால் சூழப்பட்ட சூரிய சந்திரர்களைப் போலப் பிரகாசித்தார்கள். வானரவீரர்கள் சால மரங்களையும் பனமரங்களையும் ஆயுதமாகக் கொண்டு சென்றார்கள். நளன், நீலன், அங்கதன், கிருதன், மயிந்தன் முதலிய சேனாபதிகள் சேனையை நடத்திக்கொண்டு போனார்கள். காடு மலை வனங்களை எல்லாம் கடந்து கடைசியில் கருங்கடல் கரையைச் சேர்ந்தார்கள். கருங்கடற் கரையில் மற்றொரு சமுத்திரத்தைப்போல வானரப்படைகள் தங்கின.

23—32. பிறகு ஸ்ரீராமர் சுக்கிரீவனை நோக்கிச் சேனைகள் ஏராளமாயிருக்கின்றன. சமுத்திரமும் கடக்க முடியாததா யிருக்கின்றது. ஆதலால் இந்த சமுத்திரத்தைத் தாண்ட என்ன உபாயம் சொல்கிறாய் என்று கேட்டார். சில வானரங்கள் நாங்கள் கடலைக் கடந்து போவோம் என்றார்கள். ஆனாலும் அது எல்லா வானரங்களுக்கும் செய்வதற்கு அரியதாயிருந்தது. சிலர் படகுகளாலும், சிலர் கட்டு மரங்களாலும் கடக்கலாம் என்றார்கள். ஸ்ரீராமர் அவர்களுக்குச் சமாதானம் கூறி, இவைகளால் கடக்க முடியாது ஏனென்றால் நூறுயோஜனை விசாலமிருக்கிற சமுத்திரத்தை எல்லா வானரங்களாலும் கடக்க முடியாது. ஆகையால் நீங்கள் சொன்ன உபாயங்கள் பயன்படாது. தவிர நமது படைகளுக்கு வேண்டிய அவ்வளவு படகுகளும் அகப்படுவது அரிது. சேனைகள் ஏராளம், சத்துருக்கள் அழித்துவிடுவார்கள்; ஆகையால் கட்டுமரங்களும் படகுகளும் உபயோகப்படா. வழி காட்டும்படி நான் வருணனைப் பிரார்த்திக்கிறேன். அவன் வழிகாட்டுவான். ஆகையால் நான் உபவாச விரதத்துடன் பூமியில் படுக்கிறேன். அப்போது அவன் நிச்சயமாய் வழிகாட்டுவான். அவன் வழிகாட்டாவிட்டால் இந்தக் கடலை எரித்து வற்றச் செய்கிறேன். இப்படிச் சொல்லி, ஸ்ரீராமலட்சுமணர்கள் இருவரும் ஆசமனம் செய்து தர்ப்பாசனத்தில் படுத்தார்கள்.

38—42. பிறகு நதிகளுக்கு அரசனான வருணன் ஸ்ரீராமருடைய கனவில் வந்து, கௌசலை புத்திரனே! நான் வருணன், உமக்கு எவ்விதமாக நான் உதவி செய்ய வேண்டும்? நானும் இட்சுவாகு வம்சஸ்தன், ஆகையால் உமக்கு உறவாயுள்ளவன் என்று இனிமையாகப் பேசினான். அது கேட்ட ஸ்ரீராமர், ஓ நதிபதியே! நான் இலங்கைக்குப் போய்த் தசக்கிரீவனான இராவணனைக் கொல்ல வேண்டும். அது நிமித்தம் என் சேனைகள் நடந்து போகிறதற்குச் சமுத்திரத்தில் ஒரு வழி காட்டவேண்டும். அப்படி நீ ஒரு வழிகாட்டாவிட்டால் மந்திரங்களுடன் கூடின தெய்வாஸ்திரங்களினாலே யிந்தக் கடலை வற்றச் செய்வேன் என்றார். இப்படி ஸ்ரீராமர் சொன்னதைக் கேட்டு வருணன் வருந்தி ஸ்ரீராமரை நோக்கி, அஞ்சலியஸ்தனாய் நின்றுகொண்டு சொல்லுகிறான். ஸ்ரீ ராமா! நான் உன்வழியைத் தடுக்கவாவது, உமக்கு எந்த வகையான இடைஞ்சலுண்டாக்கவாவது நினைக்கவில்லை. நான் சொல்கிற வார்த்தையைக் கேளும். அதன்பின் உம் மனசுக்குச் சரியானபடி செய்யும். உம்முடைய உத்தரவின்படி உன் சேனைகளுக்கு நான் வழிகாட்டிவிட்டால், வில்லாளிகளான மற்றவர்களும் தங்களுடைய வில்வலிமையால் வழி விடும்படி என்னை நிர்ப்பந்திப்பார்கள். ஆகையால் உன் வானரச்சேனையில் நளன் என்று ஒரு வீரன் இருக்கிறான். அவன் சிறந்த சிற்பி, விசுவகர்மாவின் புத்திரன். அவன் ஒரு துரும்பு, கல் எதைப் போட்டாலும் நான் அவைகளைக் காப்பாற்றுகிறேன். அப்படிச் சமுத்திரத்தில் ஒரு பாலம் கட்டிக்கொண்டு, உன் சேனைகளை நடத்தலாம் என்று சொல்லி வருணன் மறைந்து போனான்.

43— . பிறகு ஸ்ரீராமர் நளனை அழைத்துக் கரைகட்ட உத்தரவு கொடுத்தார். நளனே! நீதான் அதற்கு வல்லவனென்று நான் நினைக்கிறேன் என்றார். நளன் பத்துயோசனை அகலமும் நூறுயோசனை நீளமுமுள்ள ஒரு அணையைச் சமுத்திரத்தில் கட்டிமுடித்தான். நளனால் கட்டப்பட்ட அந்தப் பாலம் இன்றளவும் நளஅணையென்கிற பெயரால் விளங்குகிறது. ஸ்ரீராமருடைய ஆக்ஞையால் நளன் ஒரு மலைவடிவை யடைந்தான். ஸ்ரீராமர் அங்கேயிருக்கும்போது, இராவணன் தம்பியான தர்மகுணமுள்ள விபீஷணன் நாலு மந்திரிகளுடன் ஸ்ரீராமரிடம் வந்து சேர்ந்தான். ஸ்ரீராமரும் அவனை மரியாதையாய் ஏற்றுக்கொண்டார். சுக்கிரீவன் அவன் மோசக்காரத்தூதனா யிருக்கலாமென்று கூறினான். ஸ்ரீராமர் விபீஷணனுடைய நடக்கையாலும், பேச்சு முதலிய குறிகளாலும் அவன் நற்குணமுள்ளவனென்று கண்டு உபசரித்தார். அந்த விபீஷணனுக்கு இலங்காதிபத்தைக் கொடுத்தார். தமக்கு மந்திரியாக்கினார். இலட்சுமணருக்குத் தோழனா யிருக்கச் செய்தார். யுதிஷ்டிரரே! விபீஷணனுடைய யோசனையின்படியே ஸ்ரீராமர் வானரச்சேனைகளை அந்தப் பாலத்தின் வழியாக நடத்தி ஒரு மாதத்துக்குள் இலங்கையைச் சேர்ந்தார். சேர்ந்ததும், அங்குள்ள விசாலமான சோலைகளையெல்லாம் வானரச்சேனைகளைக்கொண்டு பாழ்படுத்தினார். விபீஷணன் இராவணனுடைய மந்திரிகளில் இருவரைச் சிறையாக்கினான். அவர்கள் சுகன், சாரணன் என்ற பெயருள்ள

வர்கள். அவர்கள் குரங்குருவம் கொண்டு சங்கதி அறியவந்த தூதர்கள். அவர்கள் தங்களுடைய சுய ரூபமான இராட்சத ரூபத்தை அடைந்த வுடனே ஸ்ரீராமர் அவர்களுக்குத் தமது வானரச் சேனைகளைக் காட்டி அனுப்பி விட்டார். தமது சேனையை அங்குள்ள ஒரு சிறந்த அழகான சோலையில் வைத்து விட்டு, அங்கதனை இராவணனிடம் தூதனாக அனுப்பினார்.

---

## 283-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—8. பல வகையான கனிகளும் கிழங்குகளும் நீரும் நிறைந்த அப் பொழிலில் வானரச் சேனைகளை நிறுத்தித் தாம் வெகு ஜாக்கிரதையாகக் காத்துக் கொண்டிருந்தார். அப்போது இராவணன் யுத்தத்துக்குரிய அநேக யந்திரங்களை ஸ்தாபித்திருந்தான். சிறந்த வாயில்களை யுடைய பலமான சுவர்களால் காக்கப்பட்டதும், நீர்நிறைந்துள்ளதுமான எழு அகழிகளையும் நிர்மித்திருந்தான் அந்த அகழியில் முதலைகளும் பல வகை மீன்களும் நிறைந்திருந்தன. கல்லுருண்டைகளும், இருப்புக் கதைகளும் நிறைந்த மதில்களையும் காவலாகச் செய்திருந்தான். கோட்டை வாயிலைக் காத்துக் கொண்டிருக்கிறவர்கள். ஜாடிகளில் விஷமுள்ள பாம்புகளையும், மயக்கத்தக்க பொடிகளையும் வைத்துக்கொண்டிருந்தார்கள். தோமரம், ஈட்டி, கத்தி, கதை, நாராசம் முதலிய ஆயுதங்களையும் தரித்துக் கொண்டிருந்தார்கள். கோட்டை வாயில்களெல்லாம் ஸ்திரமாய் நியமிக்கப்பட்டுள்ள படைகளாலும், நூதனமாய் வைக்கப்பட்ட படைகளாலும் நன்றாய்க் காக்கப்பட்டன. அளவில்லாத காலாட்படைகள், குதிரைப் படைகள், யானைப் படைகளும் காத்துக் கொண்டிருந்தன. அங்கதன் ஒரு கோட்டைவாயிலின் உள்ளே புகுந்து, தான் வந்த சமாசாரத்தை இராவணனுக்குத் தெரிவித்த பின் பயமில்லாமல் நகரத்துக்குள்ளே புகுந்து சென்றான். பராக்கிரமசாலியான இராவணன் அநேக கோடி அரக்கர்களுக்கு நடுவில், மேக மத்தியில் பிரகாசிக்கிற சூரியனைப் போல விளங்கினான்.

9—16. சாமர்த்தியமாய்ப் பேச வல்லவனான அங்கதன் இராவணன் சபையில் போய், அவனுக்கு முறைப்படி வணங்கி, ஸ்ரீராமர் கூறிய வசனங்களை பின் வருகிறபடி சொன்னான். மந்திரிகளால் சூழப்பட்டிருக்கிற புலஸ்திய வம்சத்தில் பிறந்த இராவணனை நோக்கி இராட்சதேந்திரனே! மஹா பிரதாபம் உடைய கோசல நாட்டுக்கு அதிபதியும், இரகு வம்சத்தில் பிறந்தவருமான ஸ்ரீராமர் உனக்குச் சமையோசிதமாயுள்ள சில வசனங்களைச் சொல்லும்படி என்னை அனுப்பினார். அவைகளைக் கேட்டு அவற்றின்படி நடந்துகொள். நீதி தவறி நடக்கிறவனும், ஜனங்களைப் பரிபாலிக்கத் தகுதி யில்லாதவனுமான அரசனை யுடைய நகரமும் நாடும் பாபத்தால் நிறைந்து சீக்கிரத்தில் அழியும்.

நீ ஸீதையைப் பலாத்காரமாகக் கொண்டு வந்து குற்றவாளியானாய். அந்த உன் குற்றத்திற்காகக் குற்றமற்ற அநேகர் மடியவேண்டி யிருக்கிறது. கருவத்தினால் நீ வனத்தில் வசித்த அநேக ரிஷிகளைக் கொன்றாய். தேவர்களை அவமதித்தாய். அநேக இராஜ ரிஷிகளைக் கொன்று அநேகமான இராஜ குமாரத்திகளைக் கொண்டு வந்தாய். அதற்காக நீ தண்டனை அடையத் தக்கவன். ஆகையால் உன் மந்திரிகளுடனே உன்னை நான் கொல்வேன். யுத்தத்துக்கு வந்து வீரத்தனமுள்ளவனாக நடந்து கொள் இராட்சதனே! நான் மனிதனாக இருந்தாலும் என் வில் வல்லமையைப் பார். ஜனக புத்திரியான ஸீதையைச் சிறை நீக்கி விட்டுவிடு. அப்படி விடாமலிருந்தால் இந்தப் பூமியை இராட்சதப் பிணங்களால் நிரப்பி விடுவேன் இதை அறிந்துகொள் என்றார்.

17—24. இப்படி அங்கதன் சொன்ன வார்த்தையைக் கேட்ட இராவணன் அதைப் பொறுக்க முடியாமல் மஹா கோப மடைந்தான். இராவணன் கருத்தை யறிந்த அரக்கர்கள் பட்சிகள் புலியைப் பிடிப்பது போல அங்கதனுடைய நாலு கால்களையும் பற்றிப் பிடித்துக் கொண்டார்கள். அங்கதன் தன்னைப் பிடித்துக்கொண்ட அந்த இராட்சதர்களுடன் அரண்மனையின் உச்சியில் தாண்டினான். அதனால் அந்த இராட்சதர்கள் கீழே விழுந்து விலாவும் இடுப்பும் ஒடிந்து வருந்தினார்கள் அங்கதன் அங்கிருந்து தாண்டிக் குதித்து இலங்கையை நாசம் பண்ணிவிட்டு, வானரப் படைகள் இருக்கிற இடத்துக்கு வந்து சேர்ந்தான். பிறகு ஸ்ரீராமரிடம் போய் இலங்கையில் நடந்தவைகளை எல்லாம் சொன்னான். ஸ்ரீராமர் அங்கதனைப் புகழ்ந்து அனுப்ப அவன் சற்றுக் களையாறினான் பிறகு வானரப்படைகள் இலங்கையின் கோட்டை மதில்களை இடித்தன. இலட்சுமணர், விபீஷணன் ஜாம்பவான் இவர்களுடன் தென் கோட்டை வாயிலை அடைந்து அதை நாசம் பண்ணினார்.

25—41. பிறகு ஸ்ரீராமர் யுத்தத்தில் தேர்ந்தவர்களும, ஒட்டகங்களைப் போன்றவர்களுமான அநேக கோடி வானரங்களுடன் இலங்கையில் பிரவேசித்தார். முப்பது கோடி கரடிப் படைகள் யுத்தத்துக்குச் சித்தமாயின. குரங்குகள் தாண்டிக் குதிப்பதினாலே உண்டான புழுதியினாலே சூரியன் மறைந்தது. பிறகு லங்கை முழுவதும் நெல்லின் காது போன்ற மஞ்சள் நிறமுள்ள குரங்குகள் நிறைந்தன. இந்தக் காட்சியைக் கண்ட இராட்சதர்களும், இராட்சதப் பெண்களும் ஆச்சரியப் பட்டார்கள். குரங்குகளும் கரடிகளும் இரத்தினங்களால் செய்யப்பட்ட தூண்களையும், மாடங்களையும் தூளாக்கின. யந்திரங்களையும், அவற்றை யுடையவர்களையும் இழுத்து ஒடித்தும் அடித்தும் நாசம் பண்ணினார்கள். பகைவருடைய கதை, சக்தி தோமரம், முதலிய ஆயுதங்களைப் பறித்தெறிந்து கர்ஜித்தார்கள். மதில்களின் மேலுள்ள இராட்சதர்கள் குரங்குகளுக்கு ஆற்ற மாட்டாமல் ஓடினார்கள். குரூபிகளும் நினைத்த உருவம் எடுத்துக்கொள்ளக் கூடியவர்களுமான அநேகமாயிரம் இராட்சதர்கள் சத்துருக்களை யெதிர்க்கும்பொருட்டு இராவணன் கட்டளையால் கோட்

டைக்கு வெளியில்வந்தார்கள். கூரிய அம்புகளையும் ஆயுதங்களையும் எறிந்து குரங்குகளைத் துரத்தினார்கள். மாம்சபிண்டம் போன்றுள்ள அந்த அரக்கர்கள் குரங்குகளை எல்லாம் கோட்டை மதில்களினின்றும் அடித்துத் துரத்தினார்கள். ஆயுதங்களால் அடிபட்டு அநேக குரங்குகள் மடிந்தன. குரங்குகளினால் அடிபட்டு அநேக அரக்கர்களும் மடிந்தார்கள். மனிதர்களை விழுங்குகிற அரக்கர்களும் குரங்குகளும் கை கலந்து கோரமான சண்டை செய்தார்கள். கர்ஜித்துக்கொண்டு ஒருவரோடொருவர் சண்டை யிட்டுக் அநேகர் மடிந்தும் சண்டை நிற்க வில்லை. ஸ்ரீராமரும், மேகம் மழை பொழிவது போலச் சரமாரி பெய்து இராட்சதர்களை வதைத்தார். வில் வீரரான இலட்சுமணரும் கோட்டையைக் காத்துக்கொண்டு இந்த இராட்சதர்களைச் சங்கரித்தார். பிறகு இலங்கையை அழித்து வெளியாகின வானரப் படைகளைத் திரும்பி வரும்படி ஸ்ரீராமர் கட்டளை யிட்டார்.



## 284-வது அத்தியாயம்

இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—15. பர்வணன், படனன், ஜம்பன், குரோதவசன், பிரகாசன் முதலான இராட்சதர்கள் இராவணன் கட்டளையினாலே, மாயையால் ஒருவர் கண்ணுக்கும் தெரியாமல் திருட்டுத்தனமாய் வந்து வானரச் சேனையில் நுழைந்தார்கள். விபீஷணன அந்த அரக்கர்களுடைய மாயையை அழித்து எல்லார் கண்களுக்கும் தெரியும்படி செய்தான். உடனே குரங்குகள் அவர்கள் எல்லாரையும் கொன்று பூமியில் எறிந்தன. இதை உணர்ந்த இராவணன் தானே சேனைகளை நடத்திக்கொண்டு யுத்தத்துக்கு வந்து சுக்கிராசாரி கூறிய முறைப்படி அணி வகுத்துக்கொண்டு குரங்குகளை யெதிர்த்தான். அதை அறிந்த ஸ்ரீராமர் பிருகஸ்பதியின் விதிப்படிச் சேனைகளை அணிவகுத்து அவனை யெதிர்த்தார். இராவணன் ஸ்ரீராமரை யெதிர்த்தான். இந்திரஜித்து இலட்சுமணரை யெதிர்த்தான. சுக்கிரீவன் விரூபாட்சனை யெதிர்த்தான். நிகர்வதன் என்பவன் தாரனை யெதிர்த்தான். அந்தச் சண்டை பூர்வத்தில் தேவர்களுக்கும் இராட்சதர்களுக்கும் நடந்த சண்டையைப்போல வெகு பயங்கரமாயிருந்தது. பல வகை ஆயுதங்களினாலே யிராவணன் ஸ்ரீராமரை வருத்தினான் ஸ்ரீராமரும் கூரிய சரவருஷத்தால் இராவணனை வருத்தினார். இலட்சுமணர் இந்திரஜித்தைக் காயப்படுத்தினார். இந்திரஜித் இலட்சுமணரைக் காயப்படுத்தினான். இப்படி மூன்று உலகங்களும் நடுக்கும்படியான கொடிய சண்டை நடந்தது. போர்வீரர்கள் அம்புகளாலும், ஆயுதங்களாலும் போராடினார்கள் மூன்று உலகங்களிலுமுள்ள சராசரப் பொருள்களெல்லாம் நடுங்கின.

## 285-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—17 பிரஹஸ்தன் விபீஷணனை யெதிர்த்துப் பயங்கரமாகக் கர்ஜித்துக்கொண்டு கதையினாலே திடீரென்று அடித்தான். அந்த அடிபட்டும் விபீஷணன் மனம் கலங்காமல் இமயமலையைப்போல அசையாமல் நின்றுகொண்டு, ஒரு வேலாயுதத்தை யெடுத்து மந்திரோபச்சாரணத்துடன் பிரஹஸ்தன் மேல் எய்தான். அதனால் தலையில் அடிபட்ட பிரகஸ்தன் இடி விழுந்து முறிந்துவிழுந்த மரத்தைப்போல கீழே விழுந்துவிட்டான். அதைக் கண்ட தூம்ராட்சன் வெகு கோபத்துடன் வானரச் சேனைகளின்மேல் பாய்ந்து போராடினன் அவனுடைய பயங்கரமான கரிய சரீரத்தைக் கண்ட வானரப் படைகள் பயந்து யுத்த பூமியை விட்டு ஓடின. அதைக் கண்டு பராக்கிரமசாலியான அனுமான் அவர்களை யிகழ்ந்து யுத்தத்துக்குச் சித்தமாய் நின்றார். அப்போது அந்தச் சண்டையில் பெருங்கூச்ச லுண்டாயிற்று. மயிர் சிலிர்க்கும்படியான சண்டை யுண்டாயிற்று இரு கட்சிகாரர்களும் வெகு மூர்க்கமாய்ச் சண்டை செய்தார்கள். அனுமான், வானரச்சேனைகளை மூர்க்கமாய் எதிர்த்துப்போகிற இராட்சத சேனாதிபதியைப் பிடித்துக்கொண்டார். இருவருக்கும் பெரும் சண்டை நடந்தது அரக்கன் கதையாலும் தோமரத்தாலும் அடித்தான். அனுமான் மரத்தாலும், மரக்கிளைகளாலும் அடித்தார். அனுமான் கோபங்கொண்டு தூம்ராட்சனைத் தேர் குதிரைகளுடன் கொன்றார். தூம்ராட்சன் இறந்ததைக் கண்ட வானரங்கள் பயம் ஒழிந்து அநேக இராட்சதர்களைச் சங்கரித்தன. அதனால் அரக்கர்கள் பயந்து இலங்கையை நோக்கி ஓடினார்கள். இராவணனிடம் போய் நடந்தவைகளை யெல்லாம் சொன்னார்கள்.

18—27. வானரப்படைகள் பிரகஸ்தனையும் தூம்ராட்சனையும் கொன்றதைக் கேட்ட இராவணன் சிம்மாசனத்தை விட்டு எழுந்திருந்து பெருமூச்சு விட்டு, இப்போது கும்பகர்ணனதான் சண்டை செய்யவேண்டும். என்று உடனே பெருந்தொனியுள்ள வாத்தியங்களை ஒலிப்பித்துக் கும்பகர்ணனை யெழுப்பினன். இப்படி வெகு கஷ்டத்துடன் எழுப்பக் கும்பகர்ணன் நித்திரை கலைந்து எழுந்திருந்து உட்கார்ந்து கொண்டபின், இராவணன் அவனை நோக்கிக் கும்பகர்ணா! ஸ்ரீராமன் சமுத்திரத்தில் அணைக்கட்டி வானரப்படைகளுடன் இலங்கைக்கு வந்திருக்கிறான். அதற்குக் காரணம் இராமனுடைய மனைவியான சீதையை நான் திருட்டுத்தனமாய்த் தூக்கிக்கொண்டு வந்து விட்டேன். இராமன் அவளை மீட்கக்கருதிப் படையுடன் வந்து நம்மை இலட்சியம் பண்ணாமல் பெரும்போர் செய்கிறான். பிரஹஸ்தன் முதலான அநேகரை வதைத்து விட்டான். நமது உறவினரில் கணக்கிறந்தவர் மாண்டார்கள். இப்போது இராமனைக் கொல்லத் தக்கவர்கள் உன்னைத் தவிர வேறு ஒருவரு

மில்லை. இன்றையதினம் நீ யுத்தத்துக்குப் போய் இராம லட்சுமணர்களையும் அவர்களுடைய வானரப்படைகளையும் கொல்லு. வஜ்ரவேகன், பாசமதன் என்பவர்களைப் படைகளுடன் அழைத்துக்கொண்டு போ என்றான். உடனே கும்பகர்ணன் பாசமதனையும் வஜ்ரவேகனையும் அழைததுக்கொண்டு யுத்தகளத்தை நோக்கி வந்தான்.

---

## 286-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—20. கும்பகர்ணன் சேனைகளுடன் புறப்பட்டுப்போய் யுத்தகளத்தை அடைந்து, வெற்றிகொண்ட வானரப்படைகளைப் பார்த்தான். இராமரைத் தேடிக்கொண்டு போனான். இலட்சுமணர் வில்லைப் பிடித்துக்கொண்டு யுத்தத்துக்குச் சித்தமாய் நிற்கிறதைக் கண்டான். வானரப்படைகள் வந்து அவனைச் சூழ்ந்துகொண்டு மரங்களாலும் மலைகளாலும் அவனை அடிக்கத் தொடங்கின. சிலர் அசசத்தைவிட்டு அவனை நகங்களால் கிழிக்கக் கருதினார்கள். பல வகையான ஆயுதங்களையும் அவன் மேல் எறிந்தார்கள். கும்பகர்ணன் அவர்களைப் பார்த்துச் சிரித்து அவர்களை விழுங்கத் தொடங்கினான். அதைக் கண்ட வானரங்கள் கூச்சலிட்டன. சுக்கிரீவன் வந்து கும்பகர்ணனை யெதிர்த்தான். பராக்கிரம சாலியான சுக்கிரீவன் சால விருட்சத்தினால் கும்பகர்ணன் தலையில் அடித்தான். அதனால் கும்பகர்ணன் வருந்தாமல் கர்ஜித்துச் சுக்கிரீவன் மேல் பாய்ந்து அவனைப் பிடித்துக்கொண்டான். அதைக் கண்ட இலட்சுமணர் சுக்கிரீவனை விடுவிக்கும்படி வந்து, அநேகமான கூரிய அம்புகளை யெய்து கும்பகர்ணனுடைய கவசத்தையும் மார்பையும் துளைத்தார். அதனால் கும்பகர்ணன் களைத்துப் பூமியில் விழுந்தான். சுக்கிரீவனை விட்டுவிட்டான். பிறகு கும்பகர்ணன் ஒரு பெரிய கல்லை யெடுத்து இலட்சுமணரை அடித்தான். இலட்சுமணர் இரண்டுஅம்புகளால் கும்பகர்ணன் தூக்கிய கையை வெட்டினார். உடனே கும்பகர்ணனுக்கு நாலு கைகளுண்டாயின இலட்சுமணர் அவைகளையும் வெட்டினார். உடனே கும்பகர்ணனுக்கு வேறு நாலு கைகளுண்டாயின. இலட்சுமணர் அவைகளையும் வெட்டினார். அவைகளு மிப்படியே இரட்டிப்பாய் வளர்ந்தன. அதைக் கண்ட இலட்சுமணர் பிரமாஸ்திரத்தை யெய்யக் கும்பகர்ணன் அதனால் செத்துவிழுந்தான். ஒரு பெரிய விருட்சம் இடிவிழுந்து கிளைகளுடன் விழுவதுபோல விழுந்தான்.

21—29. அதனால் இராட்சதப்படைகள் பயந்து ஓட்டம் பிடித்தன. வஜ்ரவேகனும் பாசமதனும் அவர்களை யிகழ்ந்து தடுத்து இலட்சுமணரை எதிர்த்தார்கள். அனுமான் ஒரு மலைச்சிகரத்தை யெடுத்துக்கொண்டு வஜ்ரவேகனை அடித்தார். நீலன் பாசமதனை யெதிர்த்தான். மறுபடியும் பயங்கரமான சண்டை யுண்டாயிற்று. இரு கட்சியிலும் அநேகர் மாண்டார்கள். வானரப்படையைவிட இராட்சதப்படைகள் அதிகமாய் மடிந்தன.



## 287-வது அத்தியாயம்.

இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி

1—7. கும்பகர்ணன் முதலானவர்கள் இறந்ததைக் கேட்டு, இராவணன் தன் குமாரனை இந்திரஜிதத்தை நோக்கிப் புத்திரா! நீ போய் ஸ்ரீராம லட்சுமணர்களையும் சுக்கிரீவன் முதலானவர்களையும் கொல் என்றான். குழந்தாய்! ஆயிரம் கண்களையுடைய வஜ்ரதரனை இந்திரனை ஜயித்து எனக்குப் பெரிய புகழை அளித்தாய் மாயையாலாவது, எவ்வகையாலாவது சத்துருக்களைச் சங்கரி. உன்னிடத்தில் அநேக தேவாயுதங்களும் உண்டு அல்லவா ஸ்ரீராம லட்சுமண சுக்கிரீவர்களே உன் ஆயுத பலத்தைச் சகிக்கமாட்டார்கள். மற்றவர்களைப்பற்றிப் பேசுவானேன். பிரஹஸ்தன் கும்பகர்ணன் முதலானவர்களாலும் முடியாத காரியத்தை நீ நிறைவேற்று. இன்றைய தினம் நீ என் சத்துருக்களை ஜயித்து, இந்திரனை ஜயித்து மகிழ்ச்சி யுண்டாக்கினது போல எனக்குச் சந்தோஷத்தை உண்டாக்கு என்றான்.

8—26. அதைக் கேட்ட இந்திரஜித்து அப்படியே ஆகட்டும் என்று சொல்லி யுத்த கோலம்கொண்டு புறப்பட்டுப்போனான். அவன் தன் பேரைச் சொல்லி இலட்சுமணரை யெதிர்த்தான். அது கேட்டு இலட்சுமணர் தமது தோளைத் தட்டிக்கொண்டு, சிங்கமானது ஒரு மான் மேல் பாய்வதுபோல வில்லம்புகளுடன் இந்திரஜித்தை யெதிர்த்தார். ஒருவரை யொருவர் வெல்லக் கருதி உக்கிரமான சண்டைசெய்தார்கள். தேவாயுதங்களைப் பிரயோகித்துப் போர்புரிந்தார்கள். இந்திரஜித்து ஆயுதச்சண்டையால் இலட்சுமணரை ஜயிக்க முடியாது என்று உணர்ந்து மாயையால் யுத்தம்பண்ண நினைத்தான். இந்திரஜித்துப் பிரயோகித்த ஆயுதங்களை யெல்லாம் இலட்சுமணர்அம்புகளால் வெட்டினார். அப்போது அங்கதன் ஒரு மரத்தைப் பிடுங்கிக்கொண்டு வந்து இந்திரஜித்தின் தலையில் அடித்தான். அதனால் இந்திரஜித்து மனங்கலங்காமல் ஒரு ஈட்டியை அங்கதன்மேல் எறிந்தான். இலட்சுமணர் அதை வெட்டித் துண்டாக வீழ்த்தினார். மறுபடியும் இந்திரஜீத்து கதையினால் அங்கதனுடைய விலாவில் அடித்தான். அங்கதன் அதைச்சட்டைப் பண்ணாமல் ஒரு மரத்தைப் பிடுங்கி யெறிந்து இந்திரஜித்தனுடைய தேர் குதிரை சாரதிகளை அழித்தான். இந்திரஜீத் கீழே குதித்து, மாயையால் மறைந்து போனான். ஸ்ரீராமர் அங்கே வந்து தமது சேனைகளைக் காத்துக்கொண்டிருந்தார். மாயையால் மறைந்த இந்திரஜீத்து இராமலட்சுமணர்கள் மேல் சரமாரி யெய்தான், ஸ்ரீராம லட்சுமணர்கள் அவனை உத்தேசித்துப் பாணங்களை யெய்தார்கள். அவைகள் பயன் படவில்லை. வானரங்கள் மரங்களைப் பிடுங்கிக்கொண்டு வானமெல்லாம் சுற்றிப்பார்த்தன. அவன் அவர்களுடைய கண்களுக்குத் தெரியாமல் மாயையால் மறைந்து நின்று கொண்டு அம்புகளை யெய்து ஸ்ரீராம லட்சுமணர்களுடைய சரீரங்களைத் துளைத்துவிட்டான். வானத்தி லிருந்து சூரிய சந்திரர்கள் விழுவதுபோல அவ்விருவரும் மூர்ச்சித்து விழுந்துவிட்டார்கள்.

—:⋙:❀:⋘:—

## 288-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வதொடர்ச்சி.

1—14. இராம லட்சுமணர்கள் இருவரும் பூமியில் விழுந்ததைப் பார்த்து இந்திரஜித்து அவர்களைச் சூழ அம்பினால் வலை கட்டினான். அவ்விருவரும் கூட்டில் அடைபட்ட பறவையைப் போலிருந்தார்கள். அதைப் பார்த்து சுக்ரீவன் சுசேனன், மயிந்தன், துவைதன், குமுதன், அங்கதன், அனுமான், நீலன், தாரன், நளன் முதலியவர்களுடன் வந்து இராமலக்ஷ்மணர்களைச் சூழ்ந்து நின்றான். அப்போது விபீஷணன் பிரக்ஞை என்ற அஸ்திரத்தால் அவ்விருவருக்கும் ஞாபகத்தை யுண்டாக்கி எழுப்பி விட்டான். சுக்ரீவன் இராம லட்சுமணர்களுடைய சரீரத்தில் தைத்திருந்த அம்புகளைப் பிடுங்கினான். விசாலம் என்கிற மருந்தைப் பூசினார்கள். மந்திரத்துடன் மருந்தைத் தடவவே இராம லட்சுமணர்கள் பூர்வ சக்தியை அடைந்தார்கள். பிறகு அவவிருவரும் களை தீர்ந்து உட்கார்ந்திருந்தார்கள். அப்போது விபீஷணன் அஞ்சலியஸ்தனாய் நின்றுகொண்டு இராகவா! யட்சராஜனுன குபேரனுடைய கட்டளையால் இந்த நீர் உமக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. இந்நீரைக் கண்களில் விட்டுக் கழுவிக்கொண்டு பார்த்தால் மறைந்திருக்கிற பொருள்களெல்லாம் கண்களுக்கு நன்றாய்த் தெரியும் என்று சொன்னான். ஸ்ரீராமர் அப்படியே ஆகட்டுமென்று சொல்லி அந்த நீரால் தமது கண்களைக் கழுவிக் கொண்டார். இலட்சுமணர், சுக்ரீவன் முதலிய வானரச் சிரேஷ்டர்களும் அந்த நீரால் கண்களைக் கழுவிக்கொண்டார்கள். விபீஷணர் சொன்னது சரியாயிருக்கக் கண்டார்கள். கண்களுக் கெட்டாத பொருள்கள் எல்லாம் அவர்களுக்குக் காணப்பட்டன.

15—33. இந்திரஜித்து இலங்கை போய் இராவணனுக்குத் தான் செய்தவைகள் எல்லாவற்றையும் சொல்லிவிட்டு மீண்டும் போர்க்களம் வந்து சேர்ந்தான். விபீஷணனுடைய யோசனையைக் கேட்டு இலட்சுமணர் வந்து அவனை எதிர்த்தார். அவ்விருவருக்கும் கொடிய யுத்தம் நடந்தது. சண்டை ஆச்சரியமாகவும் பயங்கரமாகவும் இருந்தது. இந்திரஜித்து கூரிய அம்புகளால் இலட்சுமணரைத் துளைத்தான். இலட்சுமணர் அவன் தேகத்தைத் துளைத்தார். இந்திரஜித்து கோபத்துடன் விஷசர்ப்பங்களைப் போன்ற எட்டு அம்புகளை இலட்சுமணர் மேல் எய்தான். இலட்சுமணர் மூன்று அம்புகளை எடுத்து எய்து ஒன்றினால் அவன் சரீரத்தைத் துளைத்தார். மற்றொன்றினால் வில் பிடித்திருக்கிற இந்திரஜித்தின் கைகளை அறுத்தார். மற்றொரு அம்பினால் அவன் தலையை அறுத்தார். அவனுடைய தேர்ச்சாரதியையும் வெட்டிக் கொன்றார். தேரை அரக்கர்கள் இலங்கைக்குக் கொண்டு போனார்கள். அந்தத் தேரின் மேல் தன் புத்திரன் இல்லாதிருப்பதை இராவணன் கண்டான். இதனால் இராவணன் பயத்தையும் துக்கத்தையும் அடைந்து ஜானகியைக் கொல்லக் கருதினான், அசோக வனத்தில் ஸ்ரீராமரைப் பார்க்கும் பொருட்டு ஜீவனுடனிருக்கிற ஜானகியை நோக்கிச் சென்றான். அப்போது அவிந்

தியன் இராவணனுடைய துர் எண்ணத்தை அறிந்து அவனை நோக்கி, இந்தப் பெரிய இராஜ்யத்துக்கு அரசனாக இந்தச் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கிற நீ பெண் கொலை செய்யத் தகாது. இவள் உன்னிடம் சிறையா யிருக்கிறதினாலேயே இறந்தவளாக இருக்கிறாள். அவளுடைய சரீரம் அழிந்தாலும் அவள் கொல்லப்பட்டவள் ஆகமாட்டாள். அவளுடைய கணவனைக் கொல். அப்போது அவளும் இறப்பாள் என்பது என் கருத்து. நூறு யாகங்களைச் செய்த தேவேந்திரன் கூட உன்னை எதிர்க்க மாட்டான். நீ அநேக தடவைகளில் யுத்தம் செய்து தேவர்களையும் இந்திரனையும் நடுங்கச் செய்தாய் என்பனவாதி பல வார்த்தைகளைச் சொல்லி, அவிந்தியன் இராவணனைச் சாந்தப்படுத்தினான். இராவணனும் அதற்கு உடன்பட்டான். உடனே இராவணன் கத்தியை உறையில் போட்டுவிட்டு, யுத்தத்துக்குச் சித்தம் பண்ண உத்தரவு கொடுத்தான்.



## 289-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—12. தன் புத்திரனைக் கொன்ற கோபத்தினால் தங்கமும் மணிகளுமிழைத்துள்ள தன் தேரின் மேலேறிக்கொண்டு யுத்த பூமிக்கு வந்தான். அநேக இராட்சத சேனையுடன் வந்து, வானரப் படைகளுடன் சண்டை செய்துகொண்டே இராமரை நோக்கிச் சென்றான். மயிந்தன், நளன், நீலன், அங்கதன், அனுமான் முதலானவர்கள் வந்து இராவணனைச் சூழ்ந்துகொண்டு, மரங்களினால் அடித்து இராவணன் சேனைகளை நாசமாக்கினார்கள். தன் சேனைகள் அழிந்ததைப் பார்த்த இராவணன் மாயையால் யுத்தம் செய்யத் தொடங்கினான். உடனே அளவில்லாத இராட்சதர் சத்தி, சூலம், ஈட்டி முதலிய ஆயுதங்களுடன் இராவணன் தேகத்தினின்றும் தோன்றினார்கள். அவர்கள் எல்லாரையும் ஸ்ரீராமர் அம்புகளால் அழித்தார். இராம லட்சுமணர்களைப் போல அநேக இராட்சதர்களை உண்டாக்கிக்கொண்டு சண்டை செய்தான். உடனே இலட்சுமணர் ஸ்ரீராமரை நோக்கி உம்மைப் போன்ற வடிவமுள்ள இந்த இராட்சதர்களை உடனே கொல்லும் என்றார். அப்படியே இராம லக்ஷ்மணர்கள் எல்லாரையும் கொன்றார்.

13—24. அப்போது இந்திர சாரதியான மாதலி வந்து ஸ்ரீராமரை நோக்கி, இந்த ஜயமுள்ளதும், பழகின குதிரைகள் பூண்டதுமான தேர் இந்திரனுடையது. தேவேந்திரன் இந்த இரதத்திலிருந்து அநேக தைத்தியர்களையும் தானவர்களையும் யுத்தத்தில் வென்றான். ஆகையால் காகுஸ்தரே! என்னால் நடத்தப்படுகிற இந்தத் தேரின் மேலேறிக்கொண்டு யுத்தம் செய்து நீர் சீக்கிரமாய் இராவணனைக் கொல்லும் தாமதிக்க வேண்டாம் என்றான். அதைக் கேட்ட ஸ்ரீராமர் இதுவும் ஒரு இராட்சத மாயையா யிருக்கலாமென்று

சந்தேகப்பட்டார். விபீஷணன் வந்து புருஷோத்தமா! இராட்சத மாயை யல்ல, இது இந்திரனுடைய தேர். இதன் மேல் சீக்கிரமாக ஏறிக்கொள்ளும் என்றான். ஸ்ரீராமர் மன மகிழ்ச்சியுடன் அப்படியே யாகட்டும் என்று விபீஷணனுக்குச் சொல்லிவிட்டு, அந்தத் தேரின் மேலேறிக்கொண்டு இராவணனை நோக்கிச் சென்றார். இராவணன் ஸ்ரீராமரை எதிர்க்க வந்தபோது சகல பிராணிகளும் பெருங் கூச்சலிட்டன. ஆகாயத்தில் தேவர்களும் கர்ஜித்து முழங்கினார்கள். தேவ வாத்தியங்கள் ஒலித்தன. அபபோது ஸ்ரீராமருக்கும் இராவணனுக்கும் பயங்கரமான சண்டை நடந்தது. அந்தச் சண்டைக்குச் சமானம் எவ்விடத்திலும் இல்லை. அப்போது இராவணன் வஜ்ராயுதம் போலவும், பிரம தண்டம் போலவுமுள்ள ஒரு கதையை ஸ்ரீராமர் மேல் எய்தான். ஸ்ரீராமர் சீக்கிரத்தில் அம்புகளால் அதை வெட்டி யெறிந்தார். அதைக் கண்டு இராவணனும் மனம் மயங்கினான். பிறகு கோபம் கொண்டு அநேகமாயிரம் அம்புகளையும் கதை முதலிய ஆயுதங்களையும் எய்தான் இராவணனுடைய இந்த மாயையைப் பார்த்து வானரங்கள் பயந்து ஓடின.

25 — 33. அதைப் பார்த்து ஸ்ரீராமர் தமது அம்புக் கூட்டிலிருந்து பிரமாஸ்திரம் போன்ற ஒரு அஸ்திரத்தை எடுத்து, பிரமாஸ்திரத்துக்குரிய மந்திரத்தை உச்சரித்து, அழகிய சிறகுகளுடன் விளங்குகிற அந்த அம்பை எய்தார். அப்போது தேவர்கள் எல்லாரும் ஆனந்த மடைந்தார்கள், இராட்சதர்கள் பிழைக்க மாட்டார்கள் என்று கருதித் தானவர்கள், கின்னரர்கள், தேவர்கள் எல்லாரும் மகிழ்ந்தார்கள். ஒப்பற்ற அந்த அஸ்திரத்தை ஸ்ரீராமர் எய்த உடனே அது எரிந்துகொண்டு சென்று இராவணனுடைய தேர் குதிரைகளையும் இராவணனையும் சூழ்ந்துகொண்டு எரித்து விட்டது. பிறகு தேவர்களும், கந்தர்வர்களும், கின்னரர்களும், சாரணர்களும் ஸ்ரீராமர் இராவணனைச் சங்கரித்ததைப் பார்த்துச் சந்தோஷப்பட்டார்கள். இராவணனுடைய பஞ்ச பூதங்களும் பிரிந்தன. அவன் ஆத்மா எல்லா உலகங்களுக்கும் அப்பால் போய்ச் சேர்ந்தது அவன் சரீரம் எரிந்து சாம்பலாகக் கூடக் காணப்பட வில்லை.

---

## 290-வது அத்தியாயம்.

### இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—13. துஷ்ட சித்தமுடைய இராவணனைக் கொன்ற பிறகு இராம லட்சுமணர்கள் மிகுந்த சந்தோஷத்தை அடைந்தார்கள். தேவர்களும், ரிஷிகளும் ஸ்ரீராமருடைய புகழைப் பாடி அவரை ஆசீர்வதித்தார்கள். தேவர்களும், கந்தர்வர்களும், இராமருடைய புகழைப் பாடி அவரை மகிழ்வித்தார்கள். தெய்வமலரை அவர் மேல் வருஷித்தார்கள். இராமரைப் புகழ்ந்து அவரை வணங்

சித் தத்தம் இடங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். வானத்தில் பெரிய திருவிழாக் கொண்டாடப்பட்டது போலிருந்தது. பிறகு இராமர் விபீஷணனுக்கு இலங்கா இராஜ்யத்தைக் கொடுத்தார். அதன் பின் அவிந்தியன் சீதையை அழைத்துக்கொண்டு விபீஷணனுடன் இராமரிடம் வந்தான். அவன் இராமரை நோக்கி மிகவும் வணக்கத்துடன் காகுஸ்தரே! குற்றமற்ற தெய்வத்தன்மையுள்ள இந்த ஜானகியை அங்கீகரியும் என்று சொன்னான். இந்த வார்த்தையைக் கேட்ட இராமர் தேரை விட்டிறங்கி வந்து அழுதுகொண்டிருக்கிற சீதையைப் பார்த்தார். நிறைந்த துக்கத்துடனும், அழுக்குப் படிந்த வஸ்திரத்துடனும், சடைபட்ட கூந்தலுடனும் இரதத்திலிருக்கிற சீதையைப் பார்த்து அவள் கற்பழிந்திருப்பாள் என்று கருதி அவளை நோக்கி, விதேக ராஜ புத்திரியே! உன்னைச் சிறையிலிருந்து விடுவித்து விட்டேன். நீ விரும்பின இடத்துக்குப் போகலாம். நான் என்னுடைய கடமையைச் செய்து விட்டேன். ஏனென்றால் நீ இராட்சதர்களுடைய ஊரில் நெடு நாள் இருக்கக் கூடாது. என்னைப் போன்ற நீதியுள்ள மனிதர்கள் அன்னியனால் அபகரிக்கப்பட்டவளை சசேர்த்துக்கொண்டால் என்ன நினைப்பார்கள்? மைதிலீ! நீ பரிசுத்தமானவளா யிருந்தாலும் இல்லா விட்டாலும் உன்னை அங்கீகரிக்க நான் நினைக்கவில்லை. நாயால் தொடப்பட்ட வெண்ணெயை எவன் தான் பரிசுத்தமாகக் கொள்வான்? என்று சொன்னார்.

14—26. அதைக் கேட்ட சீதை மனம் வருந்தித் துக்கத்தினால் கீழே விழுந்து விட்டாள். காற்றினால் முறிக்கத் தள்ளப்பட்ட வாழை மரத்தைப் போலப் பூமியில் விழுந்து விட்டாள். ஸ்ரீராமரைப் பார்த்ததனால் உண்டான சந்தோஷத்தினால் பிரகாசித்த அவளுடைய சரீர காந்தி மழுங்கி விட்டது. மூச்சுக் காற்றுப்பட்டக் கண்ணாடியின் நிறம் எப்படி மாறுமோ அதுபோலவே மாறிப் போயிற்று. ஸ்ரீராமா வசனத்தைக் கேட்ட வானரங்களும் இலட்சுமணரும் பிணத்தைப் போல் அசைவற்று நின்றார்கள். பிறகு விஷ்ணுவின் உந்தித் தாமரையில் தோன்றின பிரமா விமானத்தி லேறிக்கொண்டு இராமருக்கு எதிரில் வந்தார். இந்திரன், அக்கினி, வாயு, எமன், வருணன், குபேரன், சப்த ரிஷிகள் எல்லாரும் வந்தார்கள். தசரதரும் திவ்ய சரீரத்துடன் சர்வாபரணாலங்கிருதராய் அங்கே வந்து சேர்ந்தார். தேவர்களாலும் கந்தர்வர்களாலும் நிறைந்த ஆகாயமானது நட்சத்திரம் பூத்த வானத்தைப் போல விளங்கியது. அப்போது சீதை எழுந்திருந்து இராமருக்கு எதிரில் நின்றுகொண்டு சொல்லுகிறாள். இராஜகுமாரரே! நான் சொல்லுகிற இந்த வசனங்களைக் கேளும். நான் உமக்கு ஒருபோதும் குற்றம் செய்யவில்லை. நீர் ஆண் பெண் இவர்களுடைய மார்க்கங்களை (நடக்கைகளை) யெல்லாம் நன்றாய் அறிந்திருக்கிறீர். அப்படி யிருந்தாலும் நான் சொல்வதைக் கேளும். பிராணிகளினுடைய இருதயத்துக்குள் சதா உலாவிக்கொண்டிருக்கிற வாயு எல்லாவற்றையும் உணர்ந்திருப்பார். நான் பாவம் செய்திருந்தால் அவர் என் பிராணனை ஒழித்து விடட்டும். அது மட்டும் அல்ல; நீர், பூமி, அக்கினி, ஆகாயம் முதலிய

பூதங்களும் நான் தவறி யிருந்தால் என்னைக் கொல்லட்டும். நான் என் சொற்பனத்தில் கூட உம்மைத் தவிர வேறொருவரையும் நினைத்ததில்லை. நீர்தான் தேவர்களால் நியமிக்கப்பட்ட கணவன் என்றாள். பிறகு ஆகாயத்திலிருந்து ஒரு மங்களகரமான தொனி உண்டாயிற்று. அதைக் கேட்ட வானரர்கள் மகிழ்ந்தார்கள். உலகம் முழுமைக்கும் அது சாட்சியாக இருந்தது.

27—35. வாயுபகவான் இரகுநந்தனா! சீதை சொன்னது முற்றும் நிஜமே. நான் எங்கும் உலாவுகிற வாயு. ஜானகி பரிசுத்தமானவள். அவளுடன் கூடி வாழு என்றான் பிறகு அக்கினிதேவன், ஏ இராகவா! நான் எல்லாப் பிராணிகளினுடைய சரீரத்திலும் இருப்பவன். அக்கினி தேவன். இந்த ஜானகி முறறிலும் குற்றமற்றவள் என்றான் வருணன், ஏ இராகவா! நான் வருணன், பிராணிகளுடைய சரீரத்தில் நிறைந்திருக்கிறவன். ஆகையால் குற்றமற்ற இந்த ஜானகியை ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன் என்றான். பிறகு பிரமதேவர் இராமரை நோக்கிக் காகுஸ்தா! இந்த நடக்கை உன்னிடத்தில் ஆச்சரியமல்ல. நீ இராஜ ரிஷிகளின் தன்மையை யுணர்ந்த பரிசுத்தமானவன். இந்த வார்த்தைகளைக் கேள். தேவர்கள், கந்தர்வர்கள், யட்சர்கள், தானவர்கள், நாகர்கள், மஹா ரிஷிகள் இவர்கள் எல்லாருக்கும் பகைவனை இராவணன் உன்னால் சங்கரிக்கப்பட்டான். இந்தத் துஷ்டன் என் வரத்தின் பலத்தால் எல்லாப் பிராணிகளையும் இம்சித்தான். சில சமையங்களில் நான் அவனைக் காப்பாற்றினேன். நளகூபரனுடைய சாபத்தினாலே நான் சீதையைப் பாதுகாத்தேன். நளகூபரன, இஷ்ட மில்லாத பெண்களை அனுபவித்தால் இந்த இராவணனுடைய தலை நூறு துண்டுகளாக வெடிக்கக் கடவதென்று சபித்திருந்திருக்கிறான். ஆகையால் புருஷோத்தமா! நீ இந்த விஷயத்தில் சந்தேகப்பட வேண்டாம். இராவணனைக் கொன்று தேவர்களுக்குப் பெரிய உபகாரம் செய்திருக்கிறாய் என்றார்

36—50. பிறகு தசரதர் ஸ்ரீராமரை நோக்கி இராமா! நான் உன் பிதாவான தசரதன் நான் உன்னிடத்தில் மிகுதியும் மகிழ்ச்சியா யிருக்கிறேன். நீ க்ஷேமமாகஇரு. உன்னுடைய இராஜ்யத்தை அரசு புரியும்படி கட்டளை தருகிறேன் என்றார். உடனே ஸ்ரீராமா தசரதரை நோக்கி நீர் என் பிதாவா யிருந்தால் நான் உம்மை வணங்குகிறேன். உமது கட்டளையால் அயோத்திக்குப் போகிறேன் என்றார். தசரதர் மனமகிழ்ந்து ஸ்ரீராமரைப் பாரத்து ஸ்ரீராமா! பதினாலு வருஷங்களும் முடிந்தன. அயோத்திக்குப் போய் அரசு புரி என்றார். பிறகு ஸ்ரீராமர் தேவர்களை வணங்கினார். நண்பர்கள் எல்லாரும் ஸ்ரீராமரை வாழ்த்தினார்கள். புலோமஜையுடன் இந்திரன் கூடி யிருப்பது போல ஸ்ரீராமர் சீதையுடன் சேர்ந்திருந்தார். ஸ்ரீராமர் அவிந்தியனுக்கு வரமளித்தார். பிறகு திரிஜடையை உபசரித்து அவளுக்கு ஏராளமான ஐசுவரியத்தைக் கொடுத்தார். பிரமா தேவேந்திரன் முதலானதேவர்கள் ஸ்ரீராமரை நோக்கி நாங்கள்உனக்கு என்ன வரம் கொடுக்கவேண்டுமென்று கேட்டார்கள்.

ஸ்ரீராமர் அவர்களை நோக்கி எனக்குத் தர்மபக்தியும், சத்துருக்களை ஜயிக்கவும் வரம் அருளவேண்டு மென்றார். இறந்துபோன வானரங்கள் உயிர்பெற்று எழுந்திருக்கவும் வேண்டும் என்று கேட்டார். பிரமதேவன் அப்படியே ஆகக் கடவது என்று வரங்கொடுத்தார். உடனே சண்டையில் இறந்துபோன வானர வீரர்கள் எல்லாரும் பிழைத்து எழுந்திருந்தார்கள். மஹாபாக்கிய சாலியான சீதை அநுமானை நோக்கி ஸ்ரீராமருடைய சரித்திரம் உலகத்தில் வழங்கு கிறவரைக்கும் நீ உயிருடன் ஜீவித்திருப்பாயென்று வரம் கொடுத்தாள். தேவர்களுடைய போஜனபாத்திரமும் பானபாத்திரமும் நீ நினைத்த இடத்துக்கு வந்து சேரக் கடவது என்றும் வரங் கொடுத்தாள். உடனே இந்திரன் முதலிய தேவர்கள் மறைந்து போனார்கள். இந்திர சாரதியான மாதலியும் ஸ்ரீராமர் சீதையுடன் கூடி யிருப்பதைக் கண்டு மகிழ்ந்து, ஸ்ரீராமரை நோக்கி நிரந்தரமான வல்லமை யுடையவரே! தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், மனிதர்கள் அசுரர்கள், நாகர்கள் எல்லாருடைய துக்கத்தையும் நீர் ஒழித்து விட்டீர் அவர்கள் எல்லாரும் உமது புகழையே பேசிக்கொண்டிருப்பார்கள். உலகமுள்ள அளவும் உம்முடைய இந்தப் புகழ் மறையாது என்று கூறி அவரை வணங்கி, அவரிடம் செலவு பெற்றுக்கொண்டு சூரியனைப்போலப் பிரகாசிக்கிற தேரைச் செலுத்திக்கொண்டு தேவலோகம் போனான்.

51—61. பிறகு ஸ்ரீராமர் சீதாலக்ஷ்மணர் அநும சுக்கிரீவர்களுடனும் வானரப்படைகளுடனும் விபீஷணனை முன்னிட்டுக்கொண்டு இலங்கையைப் பாதுகாக்கும் பொருட்டுச் சென்றார். அதன் பிறகு, முன்வந்த அணையின் வழியாகவே வானரப்படைகளை அனுப்பினார். தமது மந்திரிகளுடன் கூட நினைத்த இடத்துக்குப் போகக்கூடிய புஷ்பக விமானத்தின் மேலேறிக்கொண்டு புறப்பட்டு, முன் தாம் தர்ப்பாசனத்தில் படுத்திருந்த இடத்துக்கு வானர சேனையுடன் வந்து சேர்ந்தார். பிறகு ஸ்ரீராமர் வானரப் படைகளுக்கும் கரடிப் படைகளுக்கும் இரத்தினம் முதலிய கொடுத்து மரியாதை செய்து உபசரித்து தத்தம் இடங்களுக்குப் போகும்படி விடைகொடுத்து அனுப்பினார். அவைகள் எல்லாம் மனமகிழ்ச்சியுடன் சென்றன. பின் சுக்கிரீவன் விபீஷணன் இவர்களுடன் மறுபடியும் கிஷ்கிந்தைக்கு வந்தார். புஷ்பகவிமானத்தில் சீதையுடன் ஏறிக்கொண்டு கிஷ்கிந்தையிலுள்ள வனவிநோதங்களை யெல்லாம் அவளுக்குக் காட்டினார். அந்தக் கிஷ்கிந்தைக்கு அங்கதனை இளவரசனுக்கிப் பட்டங்கட்டின பின், அவர்களெல்லாருடனும் புறப்பட்டு அயோத்தியை நோக்கிச் சென்றார். அநுமான் போய்ப் பரதருக்கு ஸ்ரீராமர் வருகிறதைத் தெரிவித்து, அவருடைய உள்ளக் கருத்தை முகக்குறிப்பால் தெரிந்துகொண்டு, மீண்டு வந்து ஸ்ரீராமருக்குத் தெரிவித்தார். அதன்பின் ஸ்ரீராமர் நந்திகிராமம் போனார்.

62—70. பரதர் அழுக்குப் படிந்த சரீரத்துடன், மரவுரி உடுத்துக் கொண்டு, சிம்மாசனத்தில் ஸ்ரீராமரது பாதுகையை வைத்துப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு இருப்பதை ஸ்ரீராமர் பார்த்தார். இலட்சுமணருடன் கூடிய

இரகுநந்தனர் பரத சத்துருக்கினர்களுடனும் கூடி நால்வரும் மனமகிழ்ச்சியடைந்தார்கள். சீதையைப் பார்த்து எல்லாரும் சந்தோஷம் கொண்டாடினார்கள். பரதர் மன மகிழ்ச்சியுடன் இராஜ்யததை ஸ்ரீராமரிடம் ஒப்புவித்தார். பிறகு வசிஷ்டர், வாமதேவர்களுடன் கூடி எட்டாவது முகூர்த்தத்தில் (ஒரு முகூர்த்தம் இரண்டு நாழிகைகொண்டது) ஸ்ரீராமருக்கு முடிசூட்டினா. பட்டாபிஷேகம் ஆனபின், சுக்கிரீவன், விபீஷணன் முதலானவாக்குத் தங்கள் இருப்பிடம் போகும்படி விடைகொடுத்தார். அவரவாகளுக்குத் தகுந்த மரியாதைகளும் செய்தாா. எல்லாரும் மனமகிழ்சசி அடைந்தாாகள். ஸ்ரீராமரைப் பிரிந்திருக்க மனமில்லாதவர்களாய் வருததத்துடன் புறப்பட்டுப் போனார்கள். பிறகு ஸ்ரீராமர் புஷபகவிமானத்தைப் பூஜித்துக் குபேரனிடத்துக்கு அனுப்பிவிட்டார். வசிஷ்டர் உதவியால் ஏராளமான தட்சிணையுடன் பத்து அசுவமேதம் செய்தார். இந்த யாகங்கள் கோமதி நதிக்கரையில் நடந்தன.



## 291-வது அத்தியாயம்.

இராமோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—10. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரைப் பார்த்து நீண்ட புஜங்களையுடையவரே! பூர்வ காலத்தில் ஸ்ரீராமர் வனவாசம் செய்த போது இப்படிப் பட்ட பெரிய கஷ்டத்தை அனுபவித்தார். ஆகையால் நீா உமது நிலைமையைக் குறித்துத் துக்கப்படாமலிரும். ஏனென்றால் நீர் க்ஷத்திரியனு யிருக்கிறீர். சகல ஆயுதங்களிலும் தேர்ந்து அவ்வழியில் நடந்து ஜயம் அடைவதில் நிச்சய முடையவரா யிருக்கிறீர். இநத வழியில் நடப்பவரா யிருந்தும் அணுவளவு பாவங்கூடச் செய்யாம லிருக்கிறீர். இந்த க்ஷத்திரிய தாமம் தேவர்களாலும் அசுரர்களாலும் அடையப்படுவது. இந்திரன் இதை அனுசரித்தே விருத்திரன், நமுசி முதலானவர்களை வென்றான். இவ்வுலகத்திலும் க்ஷத்திரிய தர்மத்தைத் தவறாமல் அனுஷ்டிக்கிறவன் இஷ்ட சித்திகளைப் பெறுகிறான். இந்தத் தனஞ்சயனைச் சகோதரனுக உடையவனுககு அடையப்படாதது என்ன இருக்கிறது? சாமர்ததியமுள்ள இந்தப் பீமன் பலவான்கள் எல்லாரிலும் பலவான். மாத்திரி புத்திரர்களும் சிறந்த வில் வீரர்கள். இப்படிப் பட்ட துணைவர்களைப் பெற்றிருக்கிற நீர் ஏன் விசனப்படுகிறீர்? மருத்துககளுடன் சேர்ந்து இந்திரன் எதிர்த்தாலும் அவனையும் வென்று ஜயங் கொள்வீா. தெய்வத் தன்மையுள்ள இந்தச் சகோதரர்களையுடைய நீா நிச்சயமாக யுத்தத்தில் ஜயம் பெறுவீர். உமது சகோதரர்கள் ஜயத்ரதன் கொண்டுபோன திரௌபதியை மீட்டு, அவனையும் கர்வபங்கம் செய்ததைப் பாரும்.

*11—. ஸ்ரீராமர் தசக்கிரீவனை யுத்தத்தில் கொன்று சீதையை மீட்டுக் கொண்டதை யோசித்துப் பாரும். அவருக்குத் துணையில்லை என்றே சொல்

லாம். அவருக்கு இருந்த உதவி குரங்குகளும் கரடிகளுமே. ஆகையினாலே பாரதோத்தமரே! துக்கப்படாதேயும் உம்மைப் போன்ற நல்ல மனமுள்ளவர்கள் விசனப்படக் கூடாது. இதைக் கேட்டு யுதிஷ்டிரர் துக்கத்தை விட்டு மனம் மகிழ்ந்தார். மறுபடியும் மார்க்கண்டேயரை நோக்கிச் சொல்லுகிறார்.

---

## 292-வது அத்தியாயம்.

### பதிவிரதா மாஹாத்மிய பர்வம்.

1—4. மஹா முனிவரே! நான் என்னைக் குறித்து விசனப்படவில்லை. என் இராஜ்யத்தைக் குறித்தும் என் சகோதரர்களைக் குறித்தும்கூட விசனப்படவில்லை. இந்தத் திரௌபதியைப் பற்றியே எனக்கு மிகுந்த விசனம் உண்டாகின்றது. சூதாடின காலத்தில் துரியோதனனால் உண்டான கஷ்டம் கிருஷ்ண சகாயத்தால் ஒழிந்தது. வனத்தில் வசிக்கிறபோது துஷ்டசித்தமுள்ள ஜயத்ரதன் பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டு போனான். இந்தத் திரௌபதியைப் போன்ற பதிபக்தியுள்ள பெண்ணை நீர் பார்த்தாவது கேட்டாவது இருக்கிறீரா? என்று கேட்டார். மார்க்கண்டேயர், சாவித்திரி யென்பவள் மஹா பதிவிரதையென்று பிரசித்தி பெற்றிருந்தாள். அதைக் கேளும் என்று சொல்லுகிறார்.

5—13. மத்திர அரசர்களில் பக்தியுள்ளவனும், தர்மக்ஞனும், மஹாத்மாவும், பிராமணபக்தி யுள்ளவனும், சொல்தவறாதவனும், புலனடக்கமுள்ளவனுமான அசுவபதி என்று ஒரு மன்னவனிருந்தான். அவன் எப்போதும் யாகம் செய்வதில் பிரியமுள்ளவன். உபகார சிந்தையே உள்ளவன். அந்த நாடு நகரங்களில் உள்ள எல்லா ஜனங்களாலும் நேசிக்கப்பட்டவன். எல்லாப் பிராணிகளிடத்திலும் தயையுள்ளவன். சத்தியவந்தனும் புலனடக்கமுள்ளவனும் கிழவனுமான அவ்வரசனுக்குக் குழந்தைகளில்லை. அதனால் அவன் மிகவும் மனம் நொந்திருந்தான். புத்திர பாக்கியத்தைப் பெறுவதற்காக உக்கிரமான நோன்புகளைச் செய்தும், போஜன நியமங்கொண்டும், பிரமசரியத்தை அனுஷ்டித்தும், ஆசைகளை அடக்கியும் கொடுந்தவஞ்செய்வான். தினந்தோறும் சாவித்திரிதேவியை உத்தேசித்து ஆயிரம் ஆகுதிகள் கொடுத்து ஆராதித்தான். பகலின் ஆறாவது பாகத்தில் மாத்திரம் ஒருவேளை ஆகாரம் கொண்டான். இப்படிப் பதினெட்டுவருஷம் செய்தவந்தான். பதினெட்டாவது வருஷமுடிவில் சாவித்திரிதேவி அவனிடத்தில் அன்பு உடையவளாய் அனுக்கிரகிக்கக் கருதினாள். அந்த ஓமகுண்ட அக்கினியிலிருந்து மகிழ்ச்சியுடன் தோன்றி எதிரில் நின்றாள். அரசனை நோக்கி, அரசனே! உன்னுடைய பிரமசரியத்தினாலும், பரிசுத்தத்தினாலும், புலனடக்கத்தினாலும், நோன்பினாலும், பக்தியினாலும் நான் மகிழ்ச்சி அடைந்தேன். மத்திரராஜனே! நீ விரும்பின வரத்தைக் கேள். தர்மத்துக்கு விரோதமாக நடவாதே யென்றாள்.

14—20. அசுவதிபதிராஜன் சாவித்திரியை நோக்கி அம்மா! நான் இதுவரைக்கும் செய்த நோன்புகளெல்லாம் குழந்தையை அடைய விரும்பியே. ஆகையால் என் குலம் விளங்கும்படி பல புத்திரர்களை விரும்புகிறேன். தேவீ! நீ எனக்குக் கருணை செய்வதானால் இந்த வரம் கொடு என்றான். க்ஷத்திரியதர்மமும் அரசதர்மமும் புத்திரர்களைப் பெறுவதினாலேயே விளங்கும் என்று பிராமணர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன் என்றான் சாவித்திரிதேவி, அரசனே! உன்னுடைய இந்த விருப்பம் முன்னாலேயே நிறைவேற்றப்பட்டது. உனக்குப் புத்திரர்களைக் கொடுப்பதைப்பற்றி முன்னமேயே பிரமதேவரிடத்தில் பேசியிருக்கிறேன். அரசனே! சுயம்புவான பிரமதேவர் அனுக்கிரகத்தினாலே சீக்கிரத்தில் உனக்கு ஒரு புத்திரி பிறப்பாள். பிரமதேவருடைய கட்டளையால் இதை உனக்குச் சொல்வதற்குத்தான் நான் வந்தேன். ஆகையால் நீ பதில் ஒன்றும் சொல்லாதே என்றாள். அரசன் உடனே சாவித்திரியை வணங்கி அப்படியே ஆகட்டும். இது சீக்கிரத்தில் நிறைவேற வேண்டும் என்று சொன்னான். சாவித்திரி நல்லது என்று சொல்லி மறைந்துபோனாள். அரசனும் தன் நகரத்துக்குப் போய் இராஜ்யத்தை நீதியாகப் பரிபாலித்துக்கொண்டிருந்தான்.

21—27. கொஞ்ச நாள் சென்றதும், புண்ணியவதியான அவ்வரசனுடைய பட்ட மகிஷி கர்ப்பந் தரித்தாள். மாளவி என்கிற அவ்வரச பத்தினியினுடைய கர்ப்பம் தாரகாபதியான பூர்ண சந்திரனைப் போல விருத்தியாயிற்று. சரியான காலத்தில் தாமரை யிதழ் போன்ற கண்களை யுடைய பெண் குழந்தை பிறந்தது. அரசன் மகிழ்ந்து ஜாதகர்மங்களைச் செய்தான். சாவித்திரியை உபாசித்துப் பெற்ற குழந்தை. ஆகையால் மாதா பிதாக்களும் பிராமணர்களும் அந்தப் பெண் குழந்தைக்குச் சாவித்திரி என்று பேரிட்டார்கள். அந்தப் பெண் குழந்தை இலட்சுமி தேவியைப் போல வளர்ந்து யுவதியானாள். சிறுத்த இடையினை யுடைய அந்தப் பெண் சொர்ண விக்கிரகம் போலப் பிரகாசிக்கிறதைப் பார்த்த ஜனங்கள் நாம் ஒரு பெண் தெய்வத்தை அடைந்தோம் என்று எண்ணினார்கள். இந்தப் பெண்ணினுடைய ஒளியைப் பார்த்தும் தாமரை யிதழ் போலும் கண்களை யுடைய அவளை ஒருவரும் விவாகம் செய்யவில்லை.

28—36. ஒரு பருவ காலத்தில் சாவித்திரி ஸ்நானம் செய்து உபவாசமிருந்து, தன் குல தெய்வத்தின் சந்நிதியில் வந்து நின்று, பிராமணர்களைக் கொண்டு ஓமம் செய்தாள். பிறகு அந்தத் தெய்வத்தினுடைய மாலையையும் மலர்களையும் பெற்றுக்கொண்டு, இலட்சுமி தேவியின் அவதாரம் போல விளங்குகிற சாவித்திரி தன் பிதாவினிடம் போனாள். அவர் பாதத்தில் வணங்கி அந்த மலர்களையும் மாலையையும் அவர் கையில் கொடுத்து, அஞ்சலி செய்து கொண்டு அவர் பக்கத்தில் நின்றாள். தெய்வம் போன்ற தன் புத்திரியின் அழகையும் அவள் பருவம் அடைந்திருப்பதையும், ஒருவரும் அவளை மணம் பேசாமலிருப்பதையும் கண்டு அரசன் விசனமடைந்தான். பிறகு *தன் குமா

ரத்தியைப் பார்த்துச் சொல்லுகிறார். குழந்தாய்! உன்னை விவாகம் செய்து கொடுக்கிற காலம் வந்து விட்டது உன்னைப் பாணிக்கிரகணம் செய்து கொடுக்கும்படி ஒருவரும் என்னைக் கேட்க வில்லை. உன் குணங்களுக்கு ஒத்த கணவனை நீயே வரித்துக்கொள். நீ யாரைக் கணவனாக வரிக்கிறையோ அவனை எனக்குச் சொல்லு. பிறகு நான அவனுக்கு விவாகம் செய்து கொடுக்கிறேன் என்றான். மறுபடியும் அவளை நோக்கிக் குழந்தாய்! வேத முணர்ந்த பிராமணர்கள் சொல்ல நான் கேட்டிருப்பதைச் சொல்லுகிறேன் சரியான காலத்தில் தன் பெண்ணை விவாகம் செய்யாத தந்தையும், ரிது காலத்தில் தன் மனைவியைச் சேராத புருஷனும் தோஷத்தை அடைகிறார்கள், விதவையா யிருக்கிற தன் தாயாரைக் காப்பாற்றாத புத்திரனும் உலகத்தில் நிந்திக்கப்படுகிறான். நான் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுச் சீக்கிரத்தில் உன் மனதுக்கு ஏற்ற நாயகனைத் தேடிக்கொள். நாம் தேவர்களால் நிந்திக்கப்படாத மார்க்கத்தைத் தேடு என்று சொன்னார்.

37—41. இப்படித் தன் குமாரத்திக்கும் முதிய மந்திரிகளுக்கும் சொல்லிச் சீக்கிரம் போங்கள் என்றார் அதன பின் சாவித்திரி வெட்கத்துடன் தன் பிதாவை வணங்கி, அவர் கட்டளையை நிறைவேற்றுவதற்காகப் புறப்பட்டுப் போய் விட்டாள். ஒரு சொர்ணத் தேரின்மேல் ஏறிக்கொண்டு, முதிர்ந்த வயதுள்ள மந்திரிகள் சூழச்சென்று இராஜரிஷிகளுடைய ஆச்சிரமங்களைப் பார்த்துக்கொண்டே போனாள். அங்கங்குள்ள பெரியோர்களை வணங்கினாள். அநேக வனங்களைக் கடந்துபோனாள். தீர்த்தக்கரைகளில் திரவிய தானம் செய்துகொண்டு, மகிமையுள்ள பிராமணர்கள் வசிக்கிற இடங்களையெல்லாம் தரிசித்துக்கொண்டு சென்றாள்.

## 293-வது அத்தியாயம்.

பதிவிரதா மாஹாத்மிய பர்வத்தொடர்ச்சி.

1—6. மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரை நோக்கி அரசனே! பின், மத்திர ராஜன் சபைக்கு நாரதர் வந்துசேர்ந்தார். அவரும் அரசனும் பேசிக்கொண்டிருந்தார்கள். சாவித்திரி தீர்த்தங்களையும் ஆச்சிரமங்களையும் தரிசித்த பின் மந்திரிகளுடன் தன் பிதாவினிடம் திரும்பிவந்தாள். தன் பிதா நாரதருடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு, அவ்விருவருக்கும் நமஸ்காரம் செய்தாள். நாரதர் அரசனை நோக்கி அரசனே! உன் புத்திரி எங்கே போயிருந்தாள்? இப்போது எங்கே யிருந்து வருகிறாள்? இவளை ஏன் விவாகம் செய்துகொடுக்க வில்லை? என்று கேட்டார். அது நிமித்தமாக அவளை அனுப்பி யிருந்தேன் என்றார். ஓ தேவரிஷியே! அவள் யாரைக் கணவனாக விரும்பி யிருக்கிறாள் என்பதைக் கேளும் என்றான். சாவித்திரி பிதாவாக்கியத்தைத் தெய்வவாக்காகக்கொண்டு சொல்லுகிறாள்.

7—10. சால்வதேசத்தில் த்யுமத்ஸேநன் என்று ஒரு அரசன் உண்டு. நாளடைவில் அவன் கண்ணை யிழந்து போனான். அயல் நாட்டு அரசன் ஒருவன் பழைய பகையினால் அவ்வரசனுடைய இராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டு வனத்துக்குத் துரத்திவிட்டான். அவனுக்கு ஒரு குழந்தை இருந்தது. மனைவியுடன் த்யுமத்ஸேநன் வனத்தில் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிறான். அவனுடைய புத்திரன் ஸத்தியவான் என்பவனே எனக்குத் தகுந்த கணவன். என் மனசிலே அவனையே கணவனாக வரித்து விட்டேன் என்று சொன்னாள்.

11—13. அதைக் கேட்ட நாரதர், ஐயோ! சாவித்திரி மூட்டாள்தனமான காரியத்தைச் செய்துவிட்டாள். அவள் நிச்சயமாகவே அறிவில்லாதவள். சற்குணமுள்ள சத்தியவானைக் கணவனாக வரித்தது தவறு என்றார். அவனுடைய பிதா சத்தியசந்தன். அவனுடைய தாயாரும் எப்போதும் உண்மையையே சொல்லுகிறவள். அதனாலே பிராமணர்கள் அவனுக்குச் சத்தியவான் என்று பேரிட்டார்கள். அவன் பாலனா யிருக்கும்போது குதிரையின் மேல் அவனுக்குப் பிரியம் களிமண்ணாலே குதிரைகளைச் செய்து அவற்றுக்கு அழகாய் வண்ணம்பூசிச் சித்திரிப்பான். அதனால் அவனுக்குச் சித்திராசுவன் எனறும் ஒரு பேர் உண்டு என்றார்.

14—20. அசுவபதிராஜன், முனிவரே! அந்தச் சத்தியவான் இப்பொழுது இங்கே இருக்கிறவனா? அவன் பிதிர்பக்தி யுள்ளவனா? காந்தி யுள்ளவனா? அறிவுள்ளவனா? பொறுமையும் தைரியமும் உள்ளவனா? என்றார். நாரதர், அவன் சூரியனைப்போலக் காந்தியுள்ளவன்; அறிவில் பிருகஸ்பதியை ஒத்தவன்; பராக்கிரமத்தில் மஹேந்திரனைப் போன்றவன், பொறுமையில் பூமியைப் போன்றவன் என்று சொன்னார். அரசன், சத்தியவான் தர்மிஷ்டனா? பிராமண விசுவாசம் உள்ளவனா? அழகுடையவனா? நல்ல சித்தமுடையவனா? இனிமையான தோற்றமுடையவனா? என்று கேட்டார். நாரதர், சத்தியவான் தர்மத்தில் ரந்திதேவனைப் போன்றவன். பிராமண பக்தியிலும் சிபியைப்போலுள்ளவன். பெருந்தன்மையில் யயாதிபோன்றவன். பார்வைக்குச் சந்திரனைப்போல இனிமையாய் உள்ளவன். அழகில் அசுவினி தேவர்களுக்குச் சமானமானவன். புலனடக்க முள்ளவன். சாந்தமுள்ளவன். பராக்கிரமசாலி. சத்தியவந்தன், சிநேகிதர்களிடத்தில் விசுவாசமுள்ளவன். பொறாமையற்றவன். தபோநிதிகளான முனிவர்கள் சத்தியவானைக் கபடமில்லாதவனென்றும், யோக்கியமுள்ளவன் என்றும் புகழ்கிறார்கள் என்று சொன்னார்.

21—24. அசுவபதி நாரதரை நோக்கி முனிபுங்கவரே! அவன் சகல சற்குணங்களும் பொருந்தியவன் என்று புகழ்ந்து கூறினீரே! அவனிடத்திலுள்ள குறையென்ன? அதை எனக்குச் சொல்ல வேண்டும் என்றான். அவனுடைய எல்லாக் குணங்களையும் மறைக்கிற ஒரே ஒரு குறைவு இருக்கின்றது. அந்தக் குறையை ஒருவராலும் நீக்க முடியாது. அது ஒன்று தவிர வேறு குற்றம் ஒன்றும் அவனிடத்தில் இல்லை. அது என்ன என்றால் அவனுக்கு ஆயுசு மிகக் குறைவு. இன்று முதல் ஒரு வருஷத்துக்குள் அவன் சாவான் என்றார்.

25—28. அதைக் கேட்ட அரசன் தன் புத்திரியைப் பார்த்துச் சாவித்திரீ! சீக்கிரமாகப் போய் மற்றொரு கணவனை வரித்துக்கொள். தேவர்களாலே புகழப்பட்ட நாரதர், இன்னம் ஒரு வருஷத்துக்குள் அவன் மரிப்பான் என்று சொல்லுகிறார் என்றார். சாவித்திரி, மரணம் ஒரு தரந்தான் வருகிறது. ஒரு பெண்ணும் ஒரே தடவைதான் பாணிகிரகணம் செய்துகொடுக்கப்படுகிறாள். நான் சொல்லுகிற வார்த்தையும் ஒரே தடவைதான். இந்த மூன்றும் ஒரே தரம் தான் செய்யப்படத்தக்கன. ஆகையால் அவன் தீர்க்காயுசுள்ளவனானாலும், அற்பாயுசுள்ளவனானாலும், அவன் சற்குணவானானாலும் இல்லா விட்டாலும், அவனையே ஒரு தரம் கணவனாக வரித்துவிட்டேன். இரண்டாம் தரம் வேறொருவனை வரிக்கமாட்டேன். முதலில் ஒரு தரம் மனதால் நிச்சயித்து, இரண்டாந்தரம் வாயால் வார்த்தையாக வெளியிடப்பட்ட எண்ணத்தை மாற்றுவது தகாது. இதற்கு என் மனதே சாட்சியா யிருக்கிறது என்றாள்.

29—43. நாரதர், அரசனே! உன் புத்திரி தன் எண்ணத்தில் உறுதியாயிருக்கிறாள். அவளைத் தர்ம நெறியினின்றும் விலக்க ஒருவராலும் முடியாது. சத்தியவானுக்கு இருக்கிற சற்குணங்கள் வேறொருவருக்கும் இல்லை. நீ சத்தியவானுக்கே உன் புத்திரியைக் கொடு. நானும் அதற்குச் சம்மதிக்கிறேன். அரசன் நாரதரைப் பார்த்து, முனிவரே! உமது வார்த்தை சத்தியமானது. அவமதிக்கத் தகாதது. தவிரவும் நீர் எனக்குக் குருவா யிருக்கிறவர். ஆகையால் நீர் சொன்னபடியே செய்கிறேன் என்றார். தடை யில்லாமல் உன் குமாரத்தியைச் சத்தியவானுக்குக் கொடுக்கலாம். நான் போகிறேன். நீங்கள் எல்லாரும் சந்தோஷமா யிருங்கள் என்று சொல்லி மேலே கிளம்பிச் சொர்க்க லோகம் போய்ச் சேர்ந்தார். அரசன் தன் புத்திரியின் விவாகத்துக்கு ஆக வேண்டிய பிரயத்தனங்களைச் செய்து கொண்டிருந்தார்.



## 294-வது அத்தியாயம்.

பதிவிரதா மாஹாத்மிய பர்வத் தொடர்ச்சி.

1—6. அசுபதிராஜன் நாரதர் சொன்ன வார்த்தையை நினைத்துச் சீக்கிரம் தன் குமாரத்திக்கு கல்யாணத்தை நிறைவேற்ற விரும்பினான். பிறகு பிராமணர்களை அழைப்பித்து, ரித்துவிக்குகளையும், புரோகிதர்களையும் அழைத்துக் கொண்டு சாவித்திரி யுடன் புறப்பட்டு த்யுமத்ஸேனனுடைய ஆச்சிரமம் போனார். பிறகு தேரை விட்டு இறங்கிப் பிராமணர்களுடன் கால் நடையாகச் சென்றார். ஆச்சிரமத்துக்குள் புகுந்து த்யுமத்ஸேனனைப் பார்த்தார். ஞானியும், முதிர்ந்தவனுமாகிய அவர் ஒரு சால மரத்தடியில் தர்ப்பாசனத்தில் உட்கார்ந்திருந்தார். அசுவபதி முறைப்படி அவரை வணங்கினார். வணக்கத்துடன் தன் பேரைத் தெரிவித்தார். மதசம்பிரதாயத்தில் தேர்ந்தவரான த்யுமத்சேனன் அசுவபதிக்கு ஒரு ஆசனம் கொடுத்து, அர்க்கியபாத்திய ஆசம

னங்களும் மதுபர்க்கமும் கொடுத்து உபசரித்த பின், வந்த காரியம் என்ன வென்று கேட்டார்.

7—9. சத்தியவானுக்குத் தன் புத்திரியைக் கொடுக்க வந்த சமாசாரத்தை அசுவபதி தெளிவாய் எடுத்துச் சொன்னார். ஓ ராஜ ரிஷியே! சாவித்திரி என்னும் பேரை யுடைய இந்த அழகிய பெண் என் குமாரத்தி. புண்ணியாத்மாவே! உமது குலாசார முறைப்படி அவளை மருமகளாக ஏற்றுக்கொள்ளும் என்றார். த்யுமத்ஸேனன், நாங்கள் இராஜ்யத்தை யிழந்து வனத்தில் வசிக்கிறோம். தவம் புரிகிறோம். ஆசைகளை எல்லாம் ஒழித்து விட்டோம். வனவாசத்துக்கேலாத உமது குமாரத்தி இந்த வனத்தில் எப்படிக் கஷ்டத்துடன் வசிப்பாள்?' என்றார்.

10—12. அசுவபதிராஜன், சுகம் அல்லது துக்கம் இரண்டும் நிரந்தரம் அல்ல. நானும் என் புத்திரியுமே இந்தக் காரியத்தை தீர்மானிதது விட்டோம். ஆகையால் நீர் இப்படிச் சொல்லத் தகாது. நான் என் மனதில் நிச்சயித்து விட்டேன். அதனாலேதான் இங்கே வந்தேன். நான் சிநேகிதத்தினாலே உம்மை வணங்குகிறேன். என் மனம் முறியப் பேச வேண்டாம். நானே பிரியப்பட்டு வந்திருக்கிறபடியால் நீர் என்னைத் தடை செய்வது சரியல்ல. நீர் எனக்கு உரியவா. நான் உமக்கு உரியவன். அதற்கு நாம் இருவரும் தக்கவர்கள், சந்தோஷமா யிரும். ஆகையால் என் புததிரியை உமது குமாரனுக்கு விவாகம் செய்துகொண்டு உமக்கு மருமகளாக்கிக் கொள்ளும் என்றார்.

13—28. த்யுமத்ஸேனன், முன் காலத்தில் நான் உம்மோடு சிநேகிதம் செய்துகொள்ள விரும்பினேன். அரசாட்சியை இழந்து விட்டபடியால் அந்தப் பிரயத்தனமும் ஒழிந்தது. நான் முன் எண்ணின எண்ணம் இன்று நிறைவேறட்டும். நீர் எனக்கு மரியாதை செய்யத்தக்க விருந்தினராய்விட்டீர் என்றார். பிறகு அந்த இரண்டு மன்னர்களும் ஆச்சிரமங்களில் வசிக்கிற பிராமணர்களை அழைத்து விவாகச் சடங்கை நிறைவேற்றினார்கள். அசுவபதி தன் மகளைப் பாணிகிரகணம்செய்து கொடுத்துவிட்டுச் சந்தோஷத்துடன் தன் நகரம் போய்ச்சேர்ந்தார். சத்தியவானும் சாவித்திரியும் ஒருவர்க்கு ஒருவர் ஒத்த குணத்தையுடைய நாயகியையும் நாயகனையும் அடைந்தபடியால் கரை கடந்த மகிழ்ச்சி அடைந்தார்கள். தன் பிதா போன உடனே சாவித்திரி தன்னுடைய ஆடையாபரணங்களையெல்லாம் கழற்றிவிட்டு மரவுரிதரித்துக்கொண்டாள். தன்னுடைய ஒழுக்கத்தாலும், மன அடக்கத்தாலும் எல்லாரையும் திருப்தி செய்வித்தாள். அவளுடைய திருமேனி அழகாலும் பணிவிடையாலும் மாமியாரை மகிழ்வித்தாள். தினந்தோறும் வணக்கம் செய்வதினால் மாமனாரை மகிழ்வித்தாள். இனிய பேச்சுகளாலும், சாமர்த்தியத்தாலும், நற்குணங்களினாலும், நல்ல யுக்திகளைச் சொல்வதாலும் கணவனை மகிழ்வித்தாள். இப்படித் தவம்செய்துகொண்டு அந்த ஆச்சிரமத்தில் காலம் கழித்தார்

கள். சாவித்திரி சொற்பனம் ஜாக்கிரம் இரண்டிலும் நாரதர் சொன்ன வசனங்களை மறவாமலிருந்தாள்.

---

## 295-வது அத்தியாயம்.

### பதிவிரதா மஹாத்ம்ய பர்வத்தொடர்ச்சி.

1—9. நெடு நாட்கள் சென்றபின் சத்தியவானுடைய மரணநாள் கிட்டியது. சாவித்திரியும் நாட்களை எண்ணிக் கணக்கிட்டுக்கொண்டே வந்தாள். நாலாவது நாளில் கணவன் இறப்பான் என்று உணர்ந்தாள். ஆதலால் அன்று முதல் திரிராத்திர விரதத்தை அனுஷ்டித்தாள். அதை அறிந்த த்யுமத்ஸேனன் மன வருத்தத்துடன் சாவித்திரியை நோக்கி, நீ தொடங்கின விரதம் கடினமானது என்றார். சாவித்திரி, ஐயா! நீங்கள் வருத்தப்பட வேண்டாம். இந்த விரதத்தை நான் நிறைவேற்றுவேன். இதைச் செய்யும்படி நிச்சயித்து விட்டேன். சித்தி அடைவதற்குத் தீர்மானமே காரணமாகின்றது என்றாள். த்யுமத்ஸேனன், உன் விரதத்தை விடும்படி நான் சொல்வது தகுதியல்ல. எங்களைப் போன்றவர்கள் அந்த விரதத்தை நிறைவேற்று என்று தைரியம் சொல்லவேண்டும் என்று கூறி நிறுத்திவிட்டார். சாவித்திரியோ விரதத்தில் உறுதிகொண்டு ஆகாரத்தை ஒழித்துவிட்டு மரப்பாவையைப்போல அசைவற்றிருந்தாள். மூன்றாம நாள் இரவில் சாவித்திரியின் மனம் பதைத்தது. மறுநாள் தன் கணவன் இறப்பானே என்று எண்ணி உணவில்லாமல் மெலிந்து துக்கத்துடன் அவ்விரவைக் கழித்தாள்.

10—22. சூரியன் உதித்ததும் சாவித்திரி காலைக் கடமைகளை முடித்து விட்டு, அக்கினியில் ஹோமமும் செய்தாள். பிறகு வயது முதிர்ந்த பிராமணர்கள் எல்லாரையும் வணங்கினாள். மாமியார் மாமனாரையும் நமஸ்கரித்தாள். அவர்கள் எல்லாரும் சாவித்திரியைத் தீர்க்க சுமங்கலியா யிருக்கும்படி ஆசீர்வதித்தார்கள். சாவித்ரி தன் மனதுக்குள் "அப்படியே ஆகக்கடவது" என்று சொல்லிக்கொண்டு அவர்களுடைய ஆசீர்வசனத்துக்குத் தலைகுனிந்து வணங்கினாள். பிறகு நாரதர் வசனத்தை நினைந்து மனம் வருந்தித் தன் நாயகனை விட்டு நீங்காமல் அவனைக் காத்துக்கொண்டிருந்தாள். தன் கணவனுடைய மரண காலத்தை நிமிஷந்தோறும் கணக்கிட்டுக் கொண்டிருந்தாள். யுதிஷ்டிரரே! தனியாய் உட்கார்ந்து கொண்டிருக்கிற சாவித்திரியை நோக்கி அவளுடைய மாமனாரும் மாமியாரும் நீ உன் நோன்பை முறைப்படி முடித்து விட்டாய். இப்பொழுது பாரணை செய்கிற காலம். அதைச் செய் என்று சொன்னார்கள். சாவித்திரி, என் விரதம் முடிந்தாலும் சூரியாஸ்தமான பிறகுதான் போஜனம் புஜிக்க வேண்டும். அப்படிதான் என் தீர்மானம். அப்போது சத்தியவான் ஆகாரம் சேகரிக்கப் புறப்பட்டான். சாவித்திரி தன் கணவனை நோக்கி நீர் தனியாகப் போகக் கூடாது. நானும் கூட வருவேன். உம்மைப் பிரிந்திருக்க எனக்குப் பிரியமில்லை என்றாள். சத்தியவான், பிராண நாயகி!

நீ முன் ஒரு போதும் காட்டுக்குள் புகுந்ததில்லை. வழி வெகு கொடியதா யிருக்கும். நீயோ விரதத்தால் மெலிந்து களைத்திருக்கிறாய். என் கூட நீ எப்படி நடந்து வருவாய் என்றான். சாவித்திரி, நான் மெலிந்திருந்தாலும் களைத்திருந்தாலும் நான் உம்முடன் கூட வரப் பிரியப்படுகிறேன். என்னைத் தடுக்க வேண்டாமென்றாள். சத்தியவான் நீ அப்படிச் சொல்வாயானால் நான் தடுப்பதில்லை என் மேல் குற்றம் வாராதபடி உன் மாமனார் மாமியாரிடத்தில் உத்தரவு பெற்றுக்கொள் என்றான்.

23—33. பின் சாவித்திரி மாமனாரையும் மாமியாரையும் வணங்கி, என் கணவன் காய் கனிகளைச் சேகரிக்கும் பொருட்டு வனத்துக்குப் போகிறார். நானும் அவர் கூடப் போக விரும்புகிறேன். ஆகையால் எனக்கு உத்தரவு தர பிரார்த்திக்கிறேன் என்றாள். இன்றைய தினம் நான் அவரை பிரிந்திருக்க முடியாது என்றாள். அவர் யாக காரியத்தை உத்தேசித்து போகிறபடியால் அவரைத் தடுக்கக் கூடாது மற்ற காரியமா யிருந்தால் தடை செய்யலாம். நான் ஒரு வருஷமாய் நடந்து போனதில்லை. ஆகையால் இன்று வனத்தைப் பார்க்க விரும்புகிறேன். சாவித்திரி எனக்கு மருமகளானது முதல் இது வரைக்கும் என்னிடத்தில் ஒன்றையும் கேட்டதில்லை ஆகையால் உன் மருமகளுடைய எண்ணம் நிறைவேறட்டும் என்று த்யுமத்ஸேனன் தன் மனைவியிடம் சொன்னான். சாவித்திரியை நோக்கி, குழந்தாய்! நடுவழியில் சத்தியவான் தவறி நடவாதபடி நீ நடந்து கொள் என்றான். சாவித்திரி உத்தரவு பெற்றுக்கொண்டு, மனதுக்குள் துக்கத்தை அடக்கிக்கொண்டு மலர்ந்த முகத்துடன் கணவனைத் தொடர்ந்து சென்றாள், மயில்களும் அன்னங்களும் மகிழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கிற பெரிய வனத்தைப் பார்த்துக்கொண்டே சென்றாள். அப்போது சத்தியவான் தன் மனைவியைப் பார்த்து, இந்தப் பரிசுத்தமான நீரோடைகளையும், புஷ்பித்திருக்கிற விருட்சங்களையும் பார் என்றான். சாவித்திரி தன் கணவன் சொன்னவைகளை எல்லாம் கேட்டு அவைகளை எல்லாம் பார்த்து மகிழ்ந்தாள். நாரதர் சொன்னதை நினைத்து தன் கணவன் இறந்து விட்டதாகவே எண்ணினாள். அவள் மனசு இரண்டு பங்காகப் பிரிந்திருந்தது. ஒரு பங்கினால் கணவன் சொன்னதைக் கேட்டு அவனுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தாள். மற்றொரு பாகத்தால் மெதுவாய் வந்து கொண்டிருக்கிற அவனுடைய மரணத்தை நோக்கிக்கொண்டிருந்தாள்.

---

## 296-வது அத்தியாயம்.

### பதிவிரதா மாஹாத்மிய பர்வத் தொடர்ச்சி.

1—7. தன் மனைவியுடன் சென்ற சத்தியவான் பழங்களைப் பறித்துத் தன் கூடையை நிரப்பிக்கொண்டான். பிறகு மரங்களை வெட்டத் தொடங்கினான். அப்போது அவனுக்கு வேர்வையும் தலைவலியும் உண்டாயிற்று. தன் பிரிய

தன் இராஜ்யத்தைப் பெறுவான். நெறி தவறாமலிருப்பான். இராஜ புத்திரியே! நீ கேட்ட வரத்தைக் கொடுத்தேன். திரும்பிப் போ. வீணாக நடந்து களையாதே என்றான். சாவித்திரி, எமனை நோக்கி, நீர் விதியின்படி சகல ஜீவராசிகளையும் ஆளுகிறவர். உமது விருப்பத்தின்படி ஜீவர்களைக் கொண்டு போவதில்லை. அதனாலேதான் உம்மை எமன் என்று சொல்லுகிறார்கள். என்னுடைய இவ்வசனத்தைக் கேளும். நித்திய தர்மமாவது இரக்கமும், கொடுப்பதும், பரோபகாரமும், எல்லாப் பிராணிகளிடத்திலும் மனதாலும் செய்கையாலும் தயவைக் காட்டலுமேயாம். இவ்வுலகத்தில் மனிதர்கள் ஊக்கமும் சாமர்த்தியமும் உள்ளவர்களா யிருக்கிறார்கள். புண்ணியவான்களோ தமது சத்துருக்களிடத்திலும் தயவாயும் இரக்க முடையவர்களாயும் இருக்கிறார்கள் என்றாள்.

37—44. நீ சொன்ன வசனங்கள் தாகமுள்ளவனுக்குத் தண்ணீர் எப்படி யிருக்குமோ அதுபோல இனிமையா யிருக்கின்றன. ஆகையால் சத்தியவானைத் தவிர நீ விரும்புகிற மூன்றாவது வரம் ஒன்று கேள் என்றான். என் பிதாவுக்குப் புத்திரனில்லை. அவருடைய வம்ச விருத்திக்காக அவருக்கு நூறு புத்திரர்கள் உண்டாக வேண்டும். இதுதான் நான் விரும்புகிற மூன்றாவது வரம் என்றாள். எமன், சுபகரமானவளே! உன் இஷ்டப்படி உன் பிதா வம்சம் விளங்குமபடியான நூறு புத்திரர்களை அடைவான். உன் விருப்பம் நிறைவேறிற்று. நெடுந் தூரம் வந்து விட்டாய் இனி இல். அடி எடுத்து வைத்து நடந்து வாராதே என்றான். என் கணவன் பக்கத்தி லிருப்பதால் இது எனக்குத் தூரமாகத் தோன்றவில்லை. என் மனம் நெடுந்தூரம் பிரயாணம் செய்கிறது. நீர் போகிறபோது நான் சொல்லுகிற இந்த வசனத்தைக் கேளும். நீர் மகிமையுள்ள வைவசுதமனுவின் புத்திரர். நீர் பட்சபாதக மில்லாமல் எல்லாப் பிராணிகளையும் நியாயம் தீர்க்கிறீர். இதனால் எல்லாரும் உம்மை நியாயாதிபதி என்கிறார்கள். அதைப் பற்றியே எல்லா மனிதர்களும் தங்கள் ஜீவனை விடப் புண்ணியத்தை அதிகமாக நேசிக்கிறார்கள். சிநேகிதம் ஒன்றே விசுவாசத்தை உண்டாக்குகிறது. ஆகையால்தான் ஜனங்கள் தர்மத்தில் விசுவாசம் வைக்கிறார்கள் என்றாள்.

45—50. எமன், மங்களகரமான அழகிய பெண்ணே! நீ இப்பொழுது சொன்ன வசனங்களை முன்பு ஒருவரும் சொல்லக் கேட்டதில்லை. நான் இவற்றால் மகிழ்ச்சி அடைந்தேன். சத்தியவானைத் தவிர வேறொரு வரத்தை நாலாவதாகக் கேள் என்றான். அதற்கு மேல் நடக்கக் கூடாது. அடி யெடுத்து வைத்து என் பின்னே வாராதே என்றான். சாவித்திரி! சத்தியவான் வம்சத்தில் நூறு புத்திரர்கள் பிறக்கட்டும். எங்கள் இருவருடைய சந்ததியும் விளங்கட்டும். இதுதான் நான் கேட்கிற நாலாவது வரம் என்றாள். எமன், பெண்ணே! நீ பராக்கிரமமும் சாமர்த்தியமும் பலமுமுள்ள நூறு புத்திரர்களை அடைவாய். திரும்பிப் போ. நீ நெடுந்தூரம் வந்து விட்டாய். வீண்

பிரயாசப்படாதே திரும்பிப் போ என்றான். பக்திமான் ஒருபோதும் களைக்கிறதில்லை. பக்திமான்கள் புண்ணியாத்மாக்களோடு செய்கிற சிநேகிதம் நன்மையையே கொடுக்கின்றது. நீதிமான்கள் புண்ணியாத்மாக்களிடத்தில் பயம் அடைவதில்லை. நீதிமான்கள் தங்களுடைய சத்தியத்தினாலே சூரியனை நடக்கச் செய்கிறார்கள். பக்திமான்கள் தங்களுடைய தவசினாலே பூமியைக் காப்பாற்றுகிறார்கள். அரசனே! இறந்த காலம் வருங்காலம் எல்லாம் சாதுக்களாலேயே நிலை பெறும். பக்திமான்கள் நடு நிலையிலிருக்கிறார்கள். அவர்கள் கஷ்டத்தை அடைகிறதில்லை. நல்லவர்களும் புண்ணியவான்களும் அனுசரித்த நித்தியமான கொள்கையென்று உணர்ந்த பக்திமான்கள் பரோபகார நிமித்தம் தங்களுடைய ஜீவனையும் விட்டு விடுவார்கள். பிரதிப் பயனை வேண்டுவதில்லை புண்ணியவான்களுக்குச் செய்த உபகாரம் பயனற்றுப் போவதில்லை. அப்படிப்பட்ட செய்கை நமது கௌரவத்தையும் சுகத்தையும் கெடுப்பதில்லை. நீதிமான் இப்படிப்பட்ட நல்ல ஒழுக்கத்தை யுடையவர்களா யிருந்துச் சகல பிராணிகளையும் காப்பாற்றுகிறார்கள் என்றாள்.

51—61. எமன், சாவித்திரீ! நீ சொன்ன இந்த வசனங்களில் அநேக வைதிக இரகசியங்கள் அடங்கி யிருக்கின்றன. மனதுக்கு இன்பமாயிருக்கின்றன. இனிய தொடர் மொழிகளை யுடையனவா யிருக்கின்றன. ஆகையால் உனக்கு நான் மிகவும் மரியாதை செய்கிறேன். பெண்ணே! இன்னம் ஒரு வரம் கேள் தருகிறேன் என்றான். சாவித்திரி, தேவனே! இந்த வரம் நான் என் கணவனை விட்டுப் பிரிந்திருந்தால் பயன்பெறாது. ஆகையால்மகிமையை அளிப்பவரே! ஆகையால் என் கணவன் மறுபடியும் உயிர் பெற்று மீண்டு வருவது தான் நான் கேட்கிற இந்த வரத்தின் பயன். நான் என் கணவன் இல்லாமையால் செத்த பிணமாகவே யிருக்கிறேன். என் கணவனைத் தவிர வேறு சுகம் ஒன்றையும் நான் விரும்பவில்லை, கணவனை யின்றிச் சொர்க்கவாழ்வு கூட எனக்குப் பிரியமாயிராது, கணவனை யிழந்த எனக்கு எந்த சுகம் வேண்டும்! கணவனைப் பிரிந்தபின் நான் உயிர்வாழவும் விரும்பவில்லை, நீர் எனக்கு நூறு புத்திரர்களைப் பெற வரமளித்தீர். நீரே என் கணவனையும் கொண்டுபோகிறீர். ஆகையால் சத்தியவான் மீண்டும் உயிர்பெற்று எழுந்திருக்கும்படி அனுக்கிரகிக்கப் பிரார்த்திக்கிறேன். அப்போதுதான் உமது வார்த்தை பயன் பெறும் என்று சொன்னாள். பிறகு எமன் மனம் மகிழ்ந்து சாவித்திரியை நோக்கி அப்படியே ஆகட்டும்என்றுசொல்லிவிட்டு சத்தியவானைக் கட்டியிருந்த பாசத்தை அவிழ்த்துவிட்டான். மறுபடியும் சாவித்திரியை பார்த்துப் பதிவிரதையான அழகிய பெண்ணே! நான் உன் கணவனை விட்டுவிட்டேன். நீஅவனை மறுபடியும் அடைவாய். அவன் நோயற்று இருப்பான், அவன் செய்யும் காரியங்கள் எல்லாவற்றிலும் சித்திபெறுவான். நீயும் அவனும் கூடி நாநூறுவருஷம் ஜீவிப்பீர்கள், அவன் பக்தியினால் அநேக யாகங்களைச் செய்து புகழ்பெறுவான். நீசத்தியவானுக்கு நூறு புத்திரர்களைப் பெறுவாய். அவர்கள் எல்லாரும் அரசர்களாயிருப்பார்கள். உன் தந்தைக்கும் உன் தாயார் மாளவி நூறு புத்

திரர்களைப் பெறுவாள். அவர்கள் எல்லாரும் மானவர் என்ற பேரால் விளங்குவார்கள், உன் புத்திரர்களும் உன்போல கீர்த்தி பெறுவார்கள். இப்படி சாவித்திரி கேட்ட வரங்களை எல்லாம் கொடுத்து அவளை நிறுத்தி விட்டு எமதர்மராஜன் தமது இருப்பிடம் போனான்.

62—76. சாவித்திரி வரம் பெற்றுக்கொண்டு தன் கணவனுடைய சரீரம் இருக்கிற இடத்துக்கு வந்தாள். அவன் கிட்டப் போய் உட்கார்ந்துகொண்டு அவனை எடுத்துத் தலையைத் தன் மடியில் வைத்துக் கொண்டாள். பின் சத்தியவானுக்கு ஞாபகம் வந்து விட்டது. உடனே வெகு தூரத்திலிருந்து வந்தவனைப் போலச் சாவித்திரியை அடிக்கடி உற்றுப் பார்த்தான். நெடுநேரம் சென்றபின் அவளைப் பார்த்துச சாவித்திரீ! நான் நெடு நேரம் தூங்கி விட்டேன். நீ ஏன் என்னை எழுப்ப வில்லை? என்னை இழுத்துக்கொண்டு போன அந்தக் கறுத்த மனிதன் எங்கே? என்றான். சாவித்திரி, புருஷோத்தமரே! நீர் நிச்சயமாகவே நெடு நேரம் என் மடியில் படுத்துக்கொண்டு தூங்கிவிட்டீர். எல்லாப் பிராணிகளையும் ஆளுகிற அந்த எமதர்மராஜா போய் விட்டார். நீர் தூக்கத்தினின்றும் விழித்துக் கொண்டீர். உமக்கு எழுந்திருக்கச் சக்தியிருந்தால் இரவு கிட்டியது பாரும் என்றாள். சத்தியவான் ஞாபகத்தை அடைந்து நன்றாய்த் தூங்கி விழித்தவனைப் போல எழுந்திருந்தான். காட்டைச் சுற்றிப் பார்த்தான். மனைவியை நோக்கி நான் கனிகள் பறிக்க வந்தேன். கட்டைகளை வெட்டுகிறபோது தலைவலி உண்டாயிற்று. தலைவலி பொறுக்க முடியாமல் உன் மடியில் படுத்துக் கொண்டேன். இவையெல்லாம் எனக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. தூங்கி விட்டேன். இருள் உண்டாயிற்று. காந்தியுள்ள ஒரு புருஷன் வந்தான். சாவித்திரீ! இது கனவா? அல்லது நிஜமா! உனக்குத் தெரிந்திருந்தால் சொல் என்றாள் சாவித்திரி, அரசனே! இரவு வந்து விட்டது நாளைக்கு எல்லாவற்றையும் தெளிவாய்ச் சொல்லுகிறேன், எழுந்திரும், எழுந்திரும; உமது மாதா பிதாக்களைப் பார்ப்போம் வாரும். பகல் கடந்து போய் விட்டது. இரவு வந்து விட்டது. இராத்திரியில் சஞ்சரிக்கும் பிரா்ணிகளினுடைய கொடிய சத்தம் கேட்கப்படுகிறது. மிருகங்களினுடைய காலடிகளால் சருகுகள் சப்திக்கின்றன. நரிகள் தெற்கிலும் கிழக்கிலும் ஊளை யிடுகின்றன. எனக்குப் பயமாயிருக்கின்றது என்றாள்.

77—96. காட்டில் இருள் நிறைந்து பயங்கரமாயிருக்கிறது. இந்தப் பாதையைக் கடந்து போவது உனக்குக் கஷ்டமாயிருக்குமே என்றான். ஒரு உலர்ந்த மரம் தீப்பற்றி எரிகிறது. அந்த ஜ்வாலை காற்றினால் அசைகிறது. அடிக்கடிப் பளிச்சு பளிச்சென்று காணப்படுகிறது. அந்த நெருப்பைக் கொண்டுவந்து பற்றவைக்கிறேன். அதனால் உமக்குக் கஷ்டமிராது. உமக்குப் போக முடியாவிட்டால் நான் இதைச் செய்கிறேன். உமக்கு உடம்பு சரியாயில்லை. இந்த இருட்டில் உம்மால் பாதையைக் கண்டு போக முடியாவிட்டால்

விடிந்த பின் போவோம். உமக்குப் பிரியமானால் இராத்திரி இங்கேயே தங்கியிருப்போம் என்றாள். நான் நன்றாய்த் தூங்கி யிருக்கிறேன். என் அவயவங்களெல்லாம் சுகமா யிருக்கின்றன. உன் தயவினால் தாய் தந்தைகளைப் பார்க்க விரும்புகிறேன். நான் ஒருபோதும் அஸ்தமானத்துக்குப் பின் வெளியில் போனதில்லை. சாயங்காலம் வருவதற்கு முன்னாலேயே என் தாயார் என்னை வெளியில் விடாமல் ஆச்சிரமத்திலேயே நிறுத்தி விடுவாள். நான் பகற் காலத்தில் வெளியில் போனால் அவர்கள் வருந்துவார்கள். என் பிதாவும் ஆச்சிரமத்தில் உள்ளவர்களும் எனனைத் தேடுவார்கள். அநேக தடவைகளில் என் தாய் தந்தையர்கள் வருந்தி, நீ நெடு நேரம் வெளியில் போயிருக்கிறா யென்று என்னைக் கடிந்து பேசி யிருக்கிறார்கள். அவர்கள் இப்போது என்னைப் பற்றி கவலைப் படுவார்களே என்று நான் வருந்துகிறேன். நிச்சயமாகவே நான் வராமலிருப்பதைப் பற்றி அவர்கள் துக்கப்படுவார்கள். கொஞ்ச காலத்துக்கு முன் அவர்கள் மனம் வருந்தி அழுதுகொண்டு என்னைப் பார்த்துப் பிரியமுள்ள குழந்தாய்! உன்னை விட்டு நாங்கள் ஒரு நிமிஷம் கூட ஜீவிக்க மாட்டோம் என்று சொன்னார்கள். இந்தக் குருடர்களுக்கு நீதான் ஆதரவு. எங்களுடைய வம்சமும் உத்தரகிரியைகளும், எங்கள் புகழும் உன்னையே பற்றியிருக்கின்றன என்று சொன்னார்கள். என் தாயும் தகப்பனும் கிழவர்கள். நான் ஒருவன்தான் அவர்களுக்கு ஆதரவு இராத்திரி அவர்கள் என்னைக் காணாவிட்டால் என்ன பாடுபடுவார்கள்? நான் என் தூக்கத்தை நிந்திக்கிறேன். அதுதான் அவர்களுடைய துக்கத்துக்குக் காரணம். இப்பொழுது நானும் அவர்களைப் பார்க்க விரும்புகிறேன். அவர்களை விட்டு நானும் பிழைத்திருக்க விரும்பவில்லை. நிச்சயமாகவே குருடராகிய என் பிதா என்னைக் குறித்துத் வருந்தித் துக்கத்துடன் அங்கே வசிப்பவர்களிடம் என்னைப் பற்றி விசாரித்துக்கொண்டிருப்பார். அவர்கள் உள்ளவரைக்குந்தான் என் ஜீவனும் நிற்கும். நான் அவர்களைக் காப்பாற்ற வேண்டும். அதற்குத் தக்க முயற்சியே செய்ய வேண்டுமென்று கூறிச் சத்தியவான் துககப்பட்டான், கைகளைத் தூக்கிக்கொண்டு இரைந்து அழுதான்.

97 — 102. தன் கணவன் இப்படிப்பட்ட பெரிய துக்கத்தில் முழுகியிருப்பதைப் பார்த்துச், சாவித்திரி அவனுடைய கண்ணீரைத் துடைத்துச் சொல்லுகிறாள். நான் தவம் செய்திருந்தாலும், தர்மம் செய்திருந்தாலும், ஓமம் செய்திருந்தாலும் இந்த இரவு என் மாமனார் மாமியாருக்கும், என் கணவனுக்கும் நன்மை யுள்ளதா யிருக்கட்டும். நான் விளையாட்டுக்காகக் கூடப் பொய் சொன்னதாகத் தோன்றவில்லை. சத்தியமாகிய அந்தத் தர்மத்துக்காகவே என் மாமனாரும் மாமியாரும் இன்றிரவு சுகமாக ஜீவித்திருக்கட்டும் என்றாள். சத்தியவான், சாவித்திரீ! என் மாதா பிதாக்களைப் பாராமல் இருக்க முடியாது. ஆகையால் உடனே புறப்படுவோம் என்றாள். அழகானவளே! என் மாதா பிதாக்களுக்கு ஏதாவது கெடுதி நேரிட்டிருந்தால் நிச்சயமாகவே நான் பிராணனை விட்டு விடுவேன், ஆகையால் நீ பதிவிரதையா யிருப்பது மெய்யா

னாலும், நான் உயிருடனிருக்க வேண்டுமென்ற விருப்பம் உனக்கு இருந்தா லும் எனக்குத் தகுந்தபடி நடக்க வேண்டும். ஆகையால் இப்பொழுது புறப் பட்டு உடனே ஆச்சிரமத்துக்குப் போகவேண்டும் என்றான்.

103— . சாவித்திரி உடனே எழுந்திருந்து கூந்தலைத் திருத்திக் கொண்டு, பின் தன் கணவன் கையைப் பிடித்து எழுந்திருக்கச் செய்தாள். சத் தியவான் எழுந்திருந்து தன் கைகால்கள் முதலான அவயவங்களைத் துடைத் துக்கொண்டான். நாலு பக்கங்களையும் பார்த்தான் பின் தன் பழக்கூடை யைப் பார்த்தான. சாவித்திரி நாளைப் பழம் பறிக்கலாம் என்றாள் கூடையை யும் கோடாரியையும் எடுத்துக் கொள்கிறேன் என்று கூறிக் கூடையை ஒரு மரக்கிளையில் மாட்டிவிட்டுக் கோடாரியை மாத்திரம் கையில் எடுத்துக்கொண் டாள். பின் தன் கணவனிடம் வந்து, அவனுடைய இடது கையால் தன் தோளைப் பிடித்துக்கொள்ளச் சொல்லி, ஒரு பெண்யானையைப் போல மெது வாய் நடந்துபோனாள். அப்போது சத்தியவான் சாவித்திரியை நோக்கி, அடிக் கடி நான் நடக்கிறபடியால் இந்த வழி எனக்கு நன்றாய்த் தெரியும். நிலவும் இருப்பதால் அறியக்கூடும். நாம் காலையில் வந்த பாதைக்கு வந்துவிட்டோம். இந்த வழியாக நட. அதோ தெரிகிற பலாசமரத்தின்கிட்ட பாதை இரண்டாகப் பிரிகிறது. அந்த மரத்தின் வடபுறமாகச் செல்லுகிற பாதையின் வழியாகச் சீக் கிரமாய் நட. நான் இப்போது சுகமாய் இருக்கிறேன. எனக்குப் பழைய பலம் வந்துவிட்டது. என் மாதா பிதாக்களைப் பார்க்க விரும்புகிறேன் என் றான். பிறகு இருவரும் ஆச்சிரமத்தை நோக்கி விரைவாய் நடந்தார்கள்.

---

## 297-வது அத்தியாயம்.

*பதிவிரதா மஹாத்மிய பர்வத்தொடர்ச்சி.*

1—10 இதற்கு நடுவில் மகிமையுள்ள த்யுமத்ஸேநன் கண்பார்வையை அடைந்துவிட்டான். எல்லாவற்றையும் நன்றாகப் பார்த்தான். தன் பத்தினி யையும் அழைத்துக்கொண்டு ஆச்சிரமந் தோறும் போய்த் தன் குமாரனைத் தேடித் துக்கப்பட்டான். ஆறு, குளம், வனங்கள் எங்கும் தேடினான். எங்கே யாவது ஒரு சத்தத்தைக் கேட்டால் சத்தியவான் சாவித்திரியுடன் வருகிறான் என்பான். முட்களாலும், கற்களாலும், தர்ப்பங்களாலும் கால் கிழிந்து காயப் பட்டு இரத்தம் ஒழுகப் பைத்தியம் பிடித்தவனைப் போல அலைந்து திரிந்தான். பிறகு பக்கத்திலுள்ள ஆச்சிரமங்களில் உள்ளவர்கள் எல்லாரும்வந்து அவர் களைச்சூழ்ந்துகொண்டு, அவர்களைத் தேற்றி மீட்டும் ஆச்சிரமத்துக்கு அழைத் துக்கொண்டு வந்து விட்டார்கள். அவர்கள் எல்லாரும் பூர்வகாலத்துக் கதை களைச் சொல்லி அவ்விருவரையும் தேற்றிகொண்டிருந்தார்கள். ஆயினும் தங் கள் குமாரனுடைய வாலிபத் தன்மையைக் குறித்து வருந்தினார்கள். துக்கத் தால் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு, ஐயோ! குமாரனே! பதிவிர

தையான மருமகளே! எங்கே யிருக்கிறீர்கள்? என்று சொல்லி அழுதார்கள். அப்போது ஒரு பிராமணன் சொல்கிறான்.

11—21. நான் வேதங்களை எல்லாச் சாகைகளுடனும் ஓதி உணர்ந்திருக்கிறேன். நிறைந்த தவமுடையவனு யிருக்கிறேன். நான் பிரமசாரி ஆச்சிரமத்தை அனுஷ்டித்து அக்கினியையும் பெரியோர்களை யும் திருப்தி செய்திருக்கிறேன். பக்தியுடன் விரதங்களையெல்லாம் அனுஷ்டித்திருக்கிறேன். வாயுவை மாத்திரம் புசித்து உபவாசம் இருந்திருக்கிறேன். இந்தத் தபோபலத்தால் நான் எல்லாருடைய செய்கைகளையும் அறியக் கூடும் ஆகையால் சத்தியவான் உயிருடன் இருக்கிறான். இது நிச்சயம் என்று கௌதமர் சொன்னார். கௌதமனுடைய சிஷ்யர்கள், எங்களுடைய குருவின் வாயிலிருந்து வருகிற வார்த்தைகள் பொய்யாகிறதில்லை ஆகையால் நிச்சயமாய்ச் சத்தியவான் உயிருடன் இருக்கிறான் என்றார்கள். ரிஷிகள் எல்லாரும் மங்களகரமான சாவித்திரியின் இடத்தில் விதவை ஆகிறதற்குரிய குறி ஒன்றும் காணப்படாமையால் சத்தியவான் உயிரோடிருக்கிறான் என்றார்கள். பரத்துவாஜர், சாவித்திரி பதிவிரதை மன அடக்கமுள்ளவள், ஆகையால் சத்தியவான் உயிருடன் இருக்கிறான் என்றார். சாவித்திரி விரதம் அனுஷ்டித்துப் புஜியாமல் போயிருப்பதையும், நீர் பார்வை அடைந்திருப்பதையும் யோசித்தால் சத்தியவான் உயிருடனிருக்கிறான் என்று தால்ப்பியர் சொன்னார். பட்சிகளும் மிருகங்களும் கூவுகிறதையும், நீர் பார்வையடைந்து இங்கே காரியங்களுக்கு ஏற்றவரா யிருப்பதையும் யோசித்தால் சத்தியவான் உயிருடன் இருக்கிறான். இதில் சந்தேகமில்லை என்றார். சத்தியவான் சகல குணங்களையும் உடையவனுயிருப்பதாலும், எல்லாராலும் விரும்பப் படுகிறபடியாலும், தீர்க்காயுசுள்ள குறிகள் அவனிடம் காணப்படுவதாலும் அவன் நிச்சயமாகவே உயிருட னிருக்கிறான் என்று தௌமியர் சொன்னார். இப்படிச் சொன்ன ரிஷிகளுடைய வசனங்களைக் கேட்டு த்யுமத்ஸேநன் சற்றுக் கவலையற்றிருந்தான் சற்று நேரத்துக்கெல்லாம் சாவித்திரி கணவனுடன் ஆச்சிரமத்தில் சந்தோஷமாய் வந்து புகுந்தாள்.

22—29. உடனே பிராமணர்கள் த்யுமத்ஸேநனைப் பார்த்து ஓ அரசனே! உமது புத்திரன் சுகமாய் வந்து சேர்ந்ததற்காகவும், நீர் பார்வை அடைந்ததற்காகவும் உம்மைச் சுபம் விசாரிக்கிறோம். உமது புத்திரன் மீண்டது, சாவித்திரியைக் கண்டது, நீர் கண் பெற்றது இந்த மூன்றும் உமது க்ஷேமத்தைக் குறிக்கின்றன. நாங்கள் என்ன சொன்னோமோ அவைகள் பலித்து விட்டன. நீர் சீக்கிரத்தில் க்ஷேமத்தை அடைவீர் என்றார்கள். உடனே பிராமணர்கள் எல்லாரும் அக்கினி வளர்த்தார்கள். சைப்பியை சத்தியவான், சாவித்திரி எல்லாரும் பிராமணர்களுடைய உத்தரவினால் உட்கார்ந்தார்கள். எல்லாரும் ஆச்சரியத்துடன் சத்தியவானைக் கேட்டார்கள். இராஜகுமாரனே! நீ ஏன் உன் மனைவியுடன் சீக்கிரமாய் வரவில்லை? ஏன் இரவில் இத்தனை நேரம் பொறுத்து வந்தாய்? நீ வரும் வழியில் என்ன விக்கினம்

நேரிட்டது? இராஜ குமாரனே! உன் மாதா பிதாக்களுக்கும், எங்களுக்கும் ஏன் இவ்வளவு துக்கத்தை உண்டாக்கிறாய்? இவைகளை எல்லாம் சொல்ல வேண்டும் என்று கேட்டார்கள்.

30—35. சத்தியவான் சொல்லுகிறான். மாதா பிதாக்களிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு சாவித்திரியுடன் போனேன். வனத்தில் ஒரு கட்டையை வெட்டுகிற போது எனக்குத் தலைவலி உண்டாயிற்று. அந்த வருத்தத்தால் நெடு நேரம் தூங்கி விட்டேன். இதுதான் எனக்கு ஞாபகமிருக்கிறது. இதற்கு முன்னாலே ஒருபோதும் இவ்வளவு நேரம் தூங்கினதில்லை என்றான். நீங்கள் எல்லாரும் துக்கப்படுவீர்கள் என்று கருதி இரவில் இத்தனை நேரம் கழித்தும் வந்து சேர்ந்தேன் என்றான். உன் பிதா திடீரென்று பார்வையை அடைந்ததைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாதா? ஆனால் சாவித்திரி சொல்லட்டும் என்று கௌதமர் சொன்னார். சாவித்திரீ! நன்மை தீமைகளின் இரகசியங்களை அறிந்த நீதான் அவைகளைச் சொல்ல வேண்டும். நாங்கள் எல்லாரும் உன்னை பரம பத்தினியாகிய சாவித்திரி என்றே கருதுகிறோம். இவற்றின் காரணங்களை நீ அறிவாய். ஆகையால் உண்மையைச் சொல். மறைக்கத் தகாததாயிருந்தால் எங்களுக்குச் சொல்லவேண்டும் என்றார்.

36—44. சாவித்திரி சொல்லுகிறாள். நீங்கள் அப்படி நினைத்தால், உங்களுடைய எண்ணம் வீணாகாது. மறைக்கத் தக்கது ஒன்றுமில்லை. உண்மையான காரணத்தைக் கேளுங்கள். மஹாத்மாவான நாரதர் என் கணவனுடைய மரணத்தைப் பற்றி எனக்கு முன்னமே தெரிவித்திருந்தார். குறிப்பிட்ட நாள் இன்றுதான். ஆகையால் நான் அவரைப் பிரியாமலிருந்தேன். அவர் தூங்கின வுடனே எமதர்மராஜன் தூதர்களுடன் வந்தார். என் கணவனைப் பற்றிக்கொண்டு பிதிர்லோகத்தை நோக்கிச் சென்றார். நான் உண்மையான வசனங்களால் அந்தத் தேவனைத் துதித்தேன். எமதர்மராஜன் எனக்கு ஐந்து வரமளித்தார். என் மாமனார் பார்வையையும் இராஜ்யத்தையும் அடையவேண்டுமென்ற இரண்டு வரங்களையும் பெற்றேன். என் பிதாவுக்கு நூறு புத்திரர்கள் பிறக்க வேண்டுமென்று ஒரு வரம் கேட்டேன். எனக்கும் நூறு புத்திரர்கள் பிறக்க வேண்டுமென்று ஒரு வரம் கேட்டேன். என் கணவன் நானூறு வருஷம் ஜீவித்திருக்க வரம் பெற்றேன். என் கணவன் சாகாமலிருப்பதற்காகவே விரதானுஷ்டானம் செய்தேன். என்னுடைய துக்கம் சந்தோஷமாக மாறின காரணங்களைச் சொல்லி விட்டேன் என்றாள். ரிஷிகள் கற்புடையவளே! நீ நல்ல குணங்களை யுடையவள்; நோன்பு நோற்றிருக்கிறாய். தர்மம் செய்கிறாய். உயர்ந்த வம்சத்தில் பிறந்திருக்கிறாய். துன்பத்தில் முழுகித் துக்கப்பட்டுக் கொண்டிருந்த இந்த இராஜ வம்சம் உன்னால் மகிமை பெற்றது என்று கூறி அவளை வாழ்த்தி விடை பெற்றுக்கொண்டு தந்தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். அரசனும் மன மகிழ்ச்சியுடன் தமது ஆச்சிரமம் போய்ச் சேர்ந்தான்.

---

## 298-வது அத்தியாயம்.

### பதிவிரதா மாஹாத்மிய பர்வத்தொடர்ச்சி.

1—8. இரவு விடிந்து சூரியன் பிரகாசித்ததும், தவத்தையே செல்வமாக உடைய ரிஷிகள் எல்லாரும் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு த்யுமத்ஸேனனுடைய ஆச்சிரமத்துக்கு வந்து கூடினார்கள். அந்த ரிஷிகள் எல்லாரும் த்யுமத்ஸேனனிடத்தில் சாவித்திரியைப்பற்றி அநேக தடவை புகழ்ந்து பேசியும் திருப்தி அடையவில்லை. யுதிஷ்டிரா! அப்போது சால்வதேசத்து மந்திரிகள் வந்து சத்துரு இறந்துபோனான் என்று த்யுமத்ஸேனனுக்குச் சொன்னார்கள். சத்துருவானவன் தன் சொந்த மந்திரிகளாலேயே கொலையுண்டானென்றும், அவனுடைய நண்பர்களும் மாண்டார்கள் என்றும், அவனுடைய படைகள் சிதறிப்போயின என்றும் சொன்னார்கள். குடிகள் எல்லாரும் நீரே தங்களுக்கு உரிய அரசன் என்றும், உமக்குக் கண்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் நீரே தங்களைப் பரிபாலிக்க வேண்டும் என்றும் எல்லாரும் ஒரே மனதாய்ச் சொல்லுகிறார்கள். அரசனே! உமக்கு மகுடம் சூட்டுகிற நிச்சயமான எண்ணத்துடன் நாங்கள் வந்திருக்கிறோம். தேர்களும் நால் வகைப் படைகளும் உமக்காக வந்திருக்கின்றன. ஆகையால் அரசனே! உடனே புறப்படும். உமக்கு க்ஷேமம் உண்டாகட்டும். நீர் அரசராய் வருவதைப்பற்றி நாடெங்கும் பிரசித்தம்பண்ணி ஆய்விட்டது. உமது பிதா, பிதாமகர் முதலியோர் ஆண்ட இராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும் என்றார்கள். பிறகு அரசன் கண்பார்வை அடைந்திருக்கிறதைக் கண்டு, ஆச்சரியப்பட்டு அவனை வணங்கினார்கள்.

9—15. பிறகு அங்குள்ள பிராமணர்கள் எல்லாரும் அரசனுக்கு மரியாதை செய்தார்கள். அரசனும் அவர்களுக்குப் பதில் மரியாதை செய்து புறப்பட்டான். சைப்யை சாவித்திரி இவர்கள் அழகிய பல்லக்கில் ஏறிச் சென்றார்கள். போனதும் குருமார்கள் அரசனுக்கு மகுடம் சூட்டினார்கள். சத்தியவானை யுவராஜனாக மகுடம் புனைந்தார்கள். நெடுங்காலத்துக்குப் பின் சாவித்திரி யுத்தத்தில் பின் வாங்காத நூறு புத்திரர்களைப் பெற்றாள். அசுவபதிராஜனுக்கும் நூறுபுத்திரர் பிறந்தார்கள். இப்படிச் சாவித்திரி தன்னையும் தன் மாமனார் மாமியாரையும், தன் பிதாவையும், கணவனையும் காப்பாற்றினாள். அந்தச் சாவித்திரியைப் போலவே திரௌபதியும் உங்களையும் துன்பத்தினின்று விடுவிப்பாள் என்று மார்க்கண்டேயர் யுதிஷ்டிரருக்குச் சொன்னார்.

16—17. வைசம்பாயனர், ஜனமேஜயனைப் பார்த்து அரசனே! மார்க்கண்டேயர் சொன்னதைக்கேட்ட பாண்டவர்கள் கவலை நீங்கிக் காமியக வனத்தில் சுகமாக வசித்தார்கள். இந்தச் சாவித்திரியின் கதையைப் பக்தியுடனே கேட்கிறவன் ஒருபோதும் துக்கத்தை அடையமாட்டான். எப்போதும் சுகத்தையே அனுபவிப்பான். அவன் நினைத்த காரியமெல்லாம் கைகூடி வரும் என்று சொன்னார்.

## 299-வது அத்தியாயம்.

### குண்டல ஹரண பர்வம்.

1—3. ஜனமேஜய மஹாராஜன் வைசம்பாயனரைப் பார்த்து, ஓ பிராம ணோத்தமரே! ரோமசர் இந்திரனுடைய சமாசாரத்தை யுதிஷ்டிரருக்குச் சொன்னார் என்று சொன்னபோது, "அர்ஜுனன் இல்லாத சமையத்தில் நீ ஒருவருக்கும் வெளியிடாதே. உன் மனதிலுள்ள பெரிய பயங்கரத்தை நான் நீக்கி விடுகிறேன் என்று இந்திரன் சொன்னதாகக் கூறினீரே, மஹானு பாவரே! யுதிஷ்டிரர் கர்ணனைப்பற்றி எதற்காகப் பயந்திருந்தார்? அவர் ஏன் அதை ஒருவருக்கும் சொல்லவில்லை? அதை எனக்குச் சொல்ல வேண்டும் என்று கேட்க வைசம்பாயனர் சொல்லுகிறார்.

4—9. ஜனமேஜய மஹாராஜனே! நீர் கேட்ட அந்தக் கதையைச் சொல் லுகிறேன். பாரதோத்தமனே! என் வார்த்தையைக் கேளும். பாண்டவர்க ளுடைய வனவாச வருஷம் பன்னிரண்டும் முடிந்து, பதின்மூன்றாம் வருஷம் தொடங்கினபோது, பாண்டவர்களுடைய க்ஷேமத்தை விரும்புகிறவனான தேவேந்திரன் கர்ணனுடைய குண்டலத்தை வாங்க உத்தேசித்தான். இந்திர னுடைய எண்ணத்தை அறிந்த சூரியன், கர்ணனுக்கு எதிரில் பிரசன்ன மானான். சத்தியவந்தனான கர்ணன் பிராமணர்களை ஆராதித்துவிட்டு, ஒரு அழகிய மெத்தையில் படுத்துக்கொண்டிருந்தான். அப்போது சூரியன் புத்தி ரன் என்கிற பிரியத்தினாலே கர்ணனுடைய கனவில் தோன்றினான். தன் னுடைய சக்தியால் ஒரு பிராமண வடிவம்கொண்டு வந்து கர்ணனைப் பார்த்து, இனிய வசனங்களினாலே சொல்லுகிறான்.

10—20. புத்திரனே! கர்ணா! சத்தியவான்களில் சிறந்தவனே! நீண்ட கைகளை உடையவனே! இன்றைய தினம் நான் உன்னிடத்தில் சொல்லுகிற இந்த நல்ல வசனங்களைக் கேள். கர்ணா! இந்திரன் பாண்டவர்களுக்கு நன் மை செய்யக் கருதிப் பிராமண சொரூபம் கொண்டு, உன் குண்டலத்தை யாசிக்கும்படி வருவான். பக்தி யுள்ளவர்கள் எதைக் கேட்டாலும் உடனே கொடுத்துவிடுகிற உன்னுடைய மேலான குணத்தை இந்திரன் அறிவான். உலகமெல்லாம் அறியும். குமாரனே! பிராமணர்கள் திரவியம் அல்லது வேறு எதைக் கேட்டாலும் மறக்காமல் கொடுக்கிறாய். உன்னுடைய இந்தக் குணத் தை அறிந்த அகாசக்காரியான இந்திரன் தானே உன்னிடம் வருவான். உன் கவசத்தையும் குண்டலத்தையும் யாசிப்பான். அவன் குண்டலத்தைக் கேட்கிற போது நீ கொடுத்துவிடாதே. அப்படிச் செய்தால்தான் உனக்கு நன்மை. புத்திரா! அவன் குண்டலத்தைப் பற்றிப் பேசுகிறபோது பல காரணங்களைச் சொல்லித் தடு. வேறு பல பொருள்களைக் கொடு. குண்டலத்தை யாசிக்கிற எண்ணத்தை எப்படியாவது ஒழித்துவிடச் செய். கர்ணா! உன்கூடப் பிறந்த குண்டலங்களை நீ கொடுக்கால். ஆயுசு குறைந்து நீ சீக்கிரத்தில் இறந்துபோ

வாய். உன் குண்டலத்தையும் கவசத்தையும் விடாமலிருந்தால் நீ யுத்தத்தில் சத்துருக்களால் ஜயிக்கப்பட மாட்டாய். என் வார்த்தைகளை உறுதியாக நம்பு. இந்தக் குண்டலங்கள் அமிர்தத்திலிருந்து உண்டானவைகள். ஆகையால் அவைகளை நீ பத்திரமாய்க் காப்பாற்ற வேண்டும். உன் உயிரின்மேல் உனக்குப் பிரியமிருந்தால் நான் சொன்னபடி செய் என்றான்.

21—28. கர்ணன், என்மேல் இவ்வளவு பிரியமா யிருக்கிற நீர் யார்? ஓ தேவனே! உமக்குப் பிரியமிருந்தால் இந்தப் பிராமண சொரூபமாய் வந்திருக்கிற நீர் யாரோ? என்று கேட்டான். பிராமணன் நான் நூறு கிரணங்களை யுடைய சூரியன்; உன்னிடத்திலுள்ள பிரீதியால் உனக்குப் புத்திசொல்ல வந்தேன். இது உனக்கு உபகாரமா யிருப்பதால் அதற்குக் கீழ்ப்படிந்து நட என்றான். கர்ணன் தேஜோரூபியான நீர் என் க்ஷேமத்தை விரும்பிப் புத்தி கூற வந்தது என் பாக்கியம்தான். ஆனாலும் நான் சொல்வதையும் கேளும். நான் உம்மை வணங்குகிறேன். வரங்களைக் கொடுப்பவரே! நானும் பிரியத்தினாலே சொல்லுகிறேன். நீர என்னிடத்தில் பிரியமுள்ளவரா யிருந்தால் என்னுடைய விரதத்தைத் தடுக்கக் கூடாது. பிராமணர்கள் வந்து கேட்டால் உயிரைக் கூடக் கொடுப்பது என்னுடைய விரதமென்று உலகமெல்லாம் அறியும். ஞானமார்க்கமாக நடப்பவரே! பாண்டவர்களுடைய நன்மைக்காகத் தேவேந்திரன் பிராமண ரூபம்கொண்டு வந்து, குண்டலங்களை யாசித்தால், என் குண்டலங்களையும் கவசத்தையும் கொடுத்து விடுவேன். அதனாலே என்னுடைய அளவு கடந்த புகழ் மூன்று உலகங்களிலும் பரவும். நம்மைப் போன்ற மனிதர்களுக்கு இழிவான செய்கையாலே ஜீவனைக் காப்பாற்றிக் கொள்வது சரியல்ல. மரணம் பெருமையுடன் கூடி யிருக்கிறது. உலகத்தில் மரணம் தடுக்கப்படாமலே முன்னிற்கிறது.

29—38. ஆகையால் நான் இந்திரனுக்குக் குண்டலங்களையும் கவசத்தையும் கொடுத்து விடுவேன். வலாசுரனையும் விருத்திராசுரனையும் வென்ற தேவேந்திரன் பாண்டு புத்திரர்களுடைய நன்மைக்காக என் கவச குண்டலங்களை யாசிக்கவருவானானால், மூன்று உலகங்களிலும் என்னுடைய கீர்த்தி பரிமளிக்கும். அவனுடைய தாழ்மை பரவும், பிராமணரே! என் ஜீவனைக் கொடுத்தாவது இவ்வுலகத்தில் புகழ் சம்பாதிக்க வேண்டுமென்பதே எனக்குப் பிரியம். கீர்த்தியுள்ள மனிதர்கள் சொர்க்கத்தை அடைகிறார்கள். புகழில்லாதவர்கள் சொர்க்கத்தை அடைவதில்லை. பிராமணரே! கீர்த்தியானது தாயைப் போல மனிதர்களை ஜீவிக்கச் செய்கிறது. புகழ்ச்சி யில்லாதவன் சாகாமலிருந்தாலும் அவன் செத்தபிணத்துக்குச் சமானமே யாவான். தேவனே! உலகத்தைச் சிருஷ்டித்த பிரமதேவரே புகழ்ச்சிதான் மனிதர்களுக்கு ஜீவன் என்று கூறி யிருக்கிறார். அதாவது "புகழானது மறுமையில் மேலான கதிக்குக் கொண்டுபோய் விடுகிறது. ஏனென்றால் அந்தப் புகழே நீண்ட ஆயுசாக இருக்கிறது." அதனால் சொர்க்கத்தில் நெடுங்காலம் வாழ்வான் என்பது. ஆகை

யால் என் சரீரத்துடன் கூடப் பிறந்த குண்டலங்களை இந்திரனுக்குக் கொடுத்து என்றும் அழியாத புகழைப் பெறுகிறேன். விதிப்படி பிராமணர்களுக்குத் தானம் கொடுப்பதாலும், யுத்தத்தில் என் பராக்கிரமத்தைக் காட்டிச் சத்துருக்களைச் சங்கரிப்பதனாலும் வெற்றி பெறுவதனாலும் நான் பெறுவது அழியாத புகழ் ஒன்றே. யுத்தத்தில் பயந்து ஜீவனைக் காப்பாற்றும்படி கெஞ்சுகிறவர்களையும், பாலர், விருத்தர், பிராமணர் இவர்களையும் ஆபத்தினின்று காப்பாற்றுகிறதினாலே இந்த உலகத்தில் நான் பெரும் புகழை அடைவேன். மறுமையில் மேலான பதவியை அடைவேன். இப்படி என் ஜீவனைக் கொடுத்தாவது கீர்த்தியைச் சம்பாதிப்பதே என்னுடைய விருப்பம் என்பதை அறிந்து கொள்ளும் என்று கர்ணன் சொன்னான்.



## 300-வது அத்தியாயம்

### குண்டலஹரண பர்வத் தொடர்ச்சி.

1—13. சூரியன் கர்ணனை நோக்கி, கர்ண! உனக்கு அபாயம் வரும் படியான செய்கையை ஒருபோதும் செய்யாதே. உன் சிநேகிதர்கள், புத்திரர்கள், மனைவிகள், தாயார், தகப்பன் இவர்களுக்கு வருத்தமுண்டாக்காதே இவ்வுலகத்தில் புகழை அடைவதற்கும், மறுமையில் நல்ல கதியை அடைவதற்கும் நினைத்துத் தன் பிராணனை இழப்பது எவருக்கும் பிரியமானதில்லை. உன் ஜீவனுக்கும் மேலானதாக நீ மதிக்கிற பெரும் புகழ் உனக்குச் சாதகம் செய்ய மாட்டாது. ஒரு மனிதன் உயிரோடு இருக்கிறவரைக்குந்தான் மாதா, பிதா, புத்திரன் மற்றுமுள்ள உறவினர் எல்லாரும் அவனுக்குப் பயன்படுவார்கள். கர்ண! அரசர்களா யிருப்பவர்கள் கூட உயிரோடு இருக்கிறவரைக்குந்தான் பெருமை யுள்ளவர்களா யிருப்பார்கள். இதை அறிந்துகொள். உயிருடன் இருக்கிறவர்களுக்குத்தான் புகழும் பயன்படுகிறது. ஒரு மனிதன் இறந்து, அவனுடைய சரீரம் சாம்பலான பிறகு புகழால் அவனுக்கு என்ன பயன். இறந்து போனவர்கள் கீர்த்தியின் பயனை அனுபவிக்கிறதில்லை. உயிரோடிருக்கிறவர்களே புகழின் பயனை அனுபவிக்கிறார்கள். இறந்து போனவனுடைய புகழானது பிணத்தின் கழுத்தில் போட்ட மாலைபோலிருக்கிறது. ஆகையால் இறந்தவன் புகழின் பயனை அனுபவிப்பதில்லை. உயிரோடிருப்பவனே புகழின் பயனை அனுபவிக்கிறான் என்று தெரிந்துகொள். நீ என்னை ஆராதிக்கிறவனு யிருக்கிறபடியால் உன் நன்மைக்காக இந்த உனக்குச் சொல்லுகிறேன். இதனாலும் வேறு சில காரணங்களாலும் என்னை ஆராதிப்பவர்கள் எல்லாரையும் நான் காப்பாற்றுகிறேன். நீ எனக்கு அதிகப் பிரியமுள்ளவனாகையால் இந்தப் புத்தியை உனக்குச் சொன்னேன். தடை சொல்லாமல் அங்கீகாரம் செய். விதி வசத்தினாலே இவைகள் எல்லாம் நடக்கும்போல் இருக்கிறது. ஆகையினாலேதான் உனக்குச் சொல்லுகிறேன். ஆகையால் சத்

வேதப்படாமல் நான் சொன்னபடி நட. கர்ண! இந்த இரகசியம் தேவர்களுக்குக் கூடத் தெரியாது. உன்னால் எப்படி அறியக் கூடும்? நீ இவைகளை எல்லாம் காலக்கடையில் தெரிந்து கொள்வாய். இதனாலேதான் அந்த இரகசியங்களை நான் சொல்லவில்லை. இராதை குமாரனே! நான் முன் சொன்னதையே மறுபடியும் உனக்குச் சொல்லுகிறேன். அதைக் கவனி. இந்திரன் வந்து உன்னை யாசிக்கிறபோது நீ எவ்வகையிலும் உன் குண்டலங்களை அவனுக்குக் கொடாதே. நீ இந்தக் குண்டலங்களைத் தரித்துக்கொண்டிருப்பதினாலே விசாக நட்சத்திரத்துக்கிடையில் பிரகாசிக்கிற சந்திரனைப் போல விளங்குகிறாய். சிறந்த காந்தி யுள்ளவனே! உயிரோடிருக்கிறவனுக்குத்தான் கீர்த்தி பயன் படும் என்பதைத் தெரிந்துகொள்.

14—18. குமாரனே! ஆகையால் இந்திரன் வந்து யாசிக்கிறபோது உன் குண்டலங்களை அவனுக்குக் கொடுத்து விடாதே. அநேக காரணங்களைச் சொல்லி அவனை மறுத்து விடு. இனிய வசனங்களையும் சரியான காரணங்களையும் சொல்லி இந்திரனுடைய விருப்பத்தை மறுத்து விடு. வீரனே! நீ எப்போதும் அர்ஜுனனுடனே வில் போரில் போட்டி போட்டுக்கொண்டிருக்கிறாய். அவன் உன்னுடன் சண்டைக்கு வருவான். நீ இந்தக் குண்டலங்களை இந்திரனுக்குக் கொடாமலிருந்தால், இந்திரனுடைய சகாயம் இருந்த போதிலும் அர்ஜுனன் உன்னை வெல்ல மாட்டான். ஆகையால் கர்ண! யுத்தத்தில் அர்ஜுனனை ஜயிக்க வேண்டுமென்கிற விருப்பம் உனக்கு இருந்தால் இந்தச் சிறந்த குண்டலங்களை இந்திரனுக்குக் கொடாதே என்று சொன்னான்.



## 301-வது அத்தியாயம்.

### குண்டலஹரண பர்வத் தொடர்ச்சி.

1—10. கர்ணன் சூரியனை நோக்கித் தேவனே! நான் உமது பக்தனாயிருக்கிறபடியால் நீர் என க்ஷேமத்தைப்பற்றிச் சொல்லுகிறீர். ஆனால் நான் கொடுக்கக் கூடாதது ஒன்றுமில்லை. நான் பொய்க்குப் பயப்படுவது போல மரணத்துக்கும் பயப்படவில்லை. ஒரு பிராமணோத்தமன் வந்து கேட்டால் நான் என் ஜீவனைக் கூடப் பெரிதாக எண்ணாமல் கொடுத்து விடுவேன். அர்ஜுனனைப் பற்றியோ, நான் அவனையும் யுத்தத்தில் ஜயித்து விடுவேன். அந்த விஷயத்தைப் பற்றி நீர் கவலைப்பட வேண்டியதில்லை, ஏனென்றால் துரோணாசாரியார், பரசுராமர் இவர்களிடத்திலிருந்து நான் பெற்றிருக்கிற அஸ்திரமகிமை உமக்கு நன்றாய்த் தெரியும். இப்பொழுது நான் ஒரு விரதம் அனுஷ்டிக்கிறேன். ஆகையால் இந்திரன் வந்து என் ஜீவனை யாசித்தாலும் தயங்காமல் அவனுக்குக் கொடுத்து விடுவேன். நான் அவனை மறுக்க மாட்டேன் என்றான்.

11—21. இதைக் கேட்ட சூரியன், கர்ணா! இந்தக் குண்டலங்கள் உள்ளவரைக்கும் உன்னை ஒருவராலும் கொல்ல முடியாது. இந்திரன், அர்ஜுனனால் உன்னைக் கொல்விக்கக் கருதியிருக்கிறான். அதனாலே குண்டலங்களை உன்னிடத்திலிருந்து வாங்கிக்கொள்ள எண்ணியிருக்கிறான். நீ அவனுக்குக் குண்டலங்களைக் கொடுக்க விரும்பினால், அவனிடத்திலிருக்கிற தடுக்கப்படாத வேலாயுதத்தைக் குண்டலத்திற்குப் பதிலாகப் பெற்றுக்கொள். அதனாலே நீ உன் சத்துருவை ஜயிக்கலாம். அந்த ஆயுதம் சத்துருவைக் கொன்றபின் மறுபடியும் பிரயோகித்தவனிடம் திரும்பி வந்துவிடுகிற சக்தியை உடையது. இப்படிச் சொல்லி விட்டுச் சூரியன் மறைந்து போனான். மறுநாள் காலையில் ஆராதனை செய்த பிறகு கர்ணன் தான் இரவில் கண்ட கனவைச் சூரியனுக்குச் சொன்னான். சூரியன் அதைக் கேட்டுப் புன்சிரிப்பு சிரித்துகொண்டு அவனுக்கு உண்மையைச் சொன்னான். அது முதற்கொண்டு கர்ணன் இந்திரனிடத்திலிருந்து வேலாயுதத்தை அடையும் பொருட்டு அவன் வரவுக்கு எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

---

## 302-வது அத்தியாயம்.

### குண்டலஹரண பர்வத் தொடர்ச்சி.

1—11. இதைக் கேட்ட ஜனமேஜயன் வைசம்பாயனரை நோக்கிச் சூரியன் வெளிப்படுத்தாத இரகசியத்தையும் கவச குண்டலங்களின் வரலாற்றையும் தனக்குச் சொல்லும்படி கேட்டான். வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார். முன்னொரு காலத்தில் குந்திபோஜ ராஜனிடத்தில் நீண்ட தாடியையும், சடைமுடியையும் உடைய ஒரு மகிமையுள்ள பிராமணன் வந்தார். அவர் வேதங்களை யுணர்ந்தவர். தவத்திற் சிறந்தவர். அவர் அரசனை நோக்கி உமது கிருகத்தில் நான் கொஞ்ச காலம் வசிக்க விரும்புகிறேன். அரசனாவது, மற்றவர்களாவது எனக்கு விரோதமாக நடக்கக் கூடாது. நான் உட்கார்ந்துகொண்டாவது படுத்துக்கொண்டாவது இருக்கும் போது ஒருவரும் என் மனதுக்கு விரோதமாக ஒன்றும் செய்யக் கூடாது என்று கேட்டுக்கொண்டார். குந்திபோஜன் அதைக் கேட்டு நீர் சொன்னபடியே நான் செய்கிறேன். என் புத்திரியான பிருதை என்பவள் நல்ல குணமுள்ளவள், சமர்த்துள்ளவள், தவறாமல் உமக்குப் பணிவிடை செய்துகொண்டிருப்பாள். நீர் அவளுடைய குணங்களினாலும் நடக்கையாலும் திருப்தி அடைவீர் என்றான்.

12— . பிறகு அரசன் அந்தப் பிராமணரை வணங்கினான். அதன்பின் தாமரை யிதழ்போன்ற கண்களுள்ள தன் குமாரத்தியைப் பார்த்து, இந்தப் பிராமணர் நமது வீட்டில் தங்க விரும்புகிறார். நான் அவரை உபசரிக்க வேண்டியவன். எனக்குப் பதிலாக நீதான் அவருக்குப் பணிவிடை செய்ய

வேண்டும். அவர் விரும்புகிறவைகளை யெல்லாம் தடையில்லாமல் கொடு. மகிமையுள்ள ஒரு பிராமணருக்குப் பணிவிடை செய்வதே பெருந் தவமாகும். சூரியன் ஆகாசத்திலிருப்பது கூடப்பிராமணருடைய தயவாலேதான். வாதாபி முதலானவர்கள் மகிமையுள்ள பிராமணர்களை யிகழ்ந்ததனால் தண்டிக்கப் பட்டார்கள். ஆகையால் இந்தப் பிராமணருக்கு உறுதியாகப் பணிவிடை செய். நீ குழந்தையா யிருந்தது முதலாக உன்னுடைய இருதயம் எனக்கு நன்றாய்த் தெரியும். எப்போதும் நீ உன் மாதா பிதாக்களுக்கு அடங்கி நடக்கிறாய். பிராமணர்களுக்கும் பெரியோர்களுக்கும் வணக்கமாக நடக்கிறாய். வேலைக்காரர்களுக்குக் கூட நீ அடங்கி நடக்கிறாய். இந்த அரண்மனையில் ஒருவரும் உன்னிடத்தில் வெறுப்பா யிருக்கவில்லை. இந்தக் கோபகுணமுள்ள பிராமணருக்குப் பணிவிடை செய்யும்படி உன்னை நம்பிவிடுகிறேன். நீ விருஷ்ணிகுலத்துச் சூரசேனனுடைய வம்சத்தில் பிறந்தாய். நீ குழந்தையா யிருக்கும் போது உன்பிதா உன்னை யெனக்குக் கொடுத்தார். நீ வசுதேவருடைய தங்கை. என்னுடைய எல்லாக் குமாரத்திகளையும் விட உன்னை நான் அதிகமாக நேசிக்கிறேன். சூரன் தனக்குப் பிறக்கிற முதல் குழந்தையை எனக்குக் கொடுப்பதாக வாக்குத் தந்தார். அதனாலே நீ யெனக்குப் புத்திரி. நீ ஒரு வம்சத்திலிருந்து மற்றொரு வம்சத்துக்கு வந்திருக்கிறாய். மற்றவர்கள் தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்களானபடியால் துர்க்குணமுள்ளவர்கள். நீ இராஜவம்சத்தில் பிறந்தவள். ஆகையால் அழகும் நல்ல குணமும் உடையவளா யிருக்கிறாய். இந்தப் பிராமணருக்குப் பிரியமுண்டானால் உன்னை ஆசீர்வதித்து வரம் கொடுப்பார். வெறுப்பு உண்டானால் என் குலத்தை எரித்து விடுவார் என்றான்.

---

## 303-வது அத்தியாயம்.

### குண்டல ஹரண பர்வத் தொடர்ச்சி.

1—11. பிருதை தந்தையை நோக்கிப் பிதாவே! நான் உமது விருப்பத்தின்படியே இந்தப் பிராமணருக்குப் பணிவிடை செய்கிறேன். நான் முறைப்படி பிராமணர்களுக்குப் பணிவிடைசெய்து உமக்கு மகிழ்விப்பது என் கடமையாகும். நான் என்னுடைய சுய நன்மைக்காகவும் இவருக்குப் பயபக்தியுடன் பணிவிடை செய்கிறேன். சாயங்காலமானாலும், நடு இராவாயிருந்தாலும் உமக்குத் திருப்தி யுண்டாகும்படி இவருக்குப் பணிவிடை தவறாமல் செய்கிறேன். நீர் என்னை நம்பும். இவர் உமது வீட்டி லிருக்கிறவரைக்கும் இவருக்குக் கோபம் உண்டாகாதபடி நடந்து கொள்கிறேன். உமது கவலையை விட்டுவிடும். உமக்கு நன்மை யுண்டாகும்படியாக இந்தப் பிராமணருக்குத் திருப்தி யுண்டாக்குகிறேன். ஒரு பிராமணன் மகிழ்ச்சி யடைந்தால் மோட்சத்தையும் தருவான். கோபத்தால் அழித்து விடுவான் என்பது எனக்குத் தெரியும்.

ஆகையால் அவர் மகிழும்படியாக நடந்து கொள்கிறேன். பிராமணன் கோபம் கொண்டால், பூர்வகாலத்தில் சுகன்னிகை நிமித்தமாகச் சியவன முனிவர் செய்ததுபோல அரசர்களுக்குத் தீமை செய்யக் கூடும். ஆகையால் உமது கட்டளைப்படி இந்தப் பிராமணருக்குச் சரியாய் பணிவிடை செய்கிறேன் என்ருள்.

12—19. குந்திபோஜ ராஜன் இதைக் கேட்டு மன மகிழ்ந்து, இந்த மாதிரியாக நடக்க வேண்டுமென்று அவளுக்குக் கற்பித்துப், பிறகு அவளை முனிவரிடம் அழைத்துக்கொண்டு போய், அவரைப் பார்த்து இவள் என் புத்திரி. உமக்குப் பணிவிடை செய்வாள். இவள் இன்னம் குழந்தையா யிருக்கிறபடியால் இவள் செய்கிற தப்பிதங்களை மனதில் வைக்காமலிருக்கும்படியாகப் பிரார்த்திக்கிறேன். மகிமையுள்ள பிராமணர்கள், கிழவர்கள், குழந்தைகள், தவசிகள் இவர்கள் மேல் கோபிப்பதில்லை. பிராமணர் பிறர் செய்த குற்றங்களைப் பொறுக்க வேண்டும். பக்தியுடன் கொடுப்பதை அங்கீகரிக்க வேண்டும் என்ருன். அதைக் கேட்டு பிராமணர் அப்படியே ஆகட்டும் என்று அனுக்கிரகித்தார். பிறகு அரசன் மகிழ்ந்து, பிரகாசத்துடன் கூடிய அறைகளை அவருக்குக் கொடுத்தான். பிரதை அவருக்கு ஜாக்கிரதையாயும், மரியாதையாயும் பணிவிடை செய்து அவருக்கு மகிழ்ச்சி யுண்டாக்கினுள்.

## 304-வது அத்தியாயம்.

### குண்டலாஹரண பர்வத் தொடர்ச்சி.

1—9. பிரதை மிகுந்த விரதத்துடனும் பரிசுத்தமான இருதயத்துடனும் தவசியான பிராமணருக்குப் பணிவிடை செய்தாள். அவர் காலையில் வருவேன் என்று சொல்வார். ஆனல் சாயங்காலம் அல்லது இரவில் வருவார். பிரதையோ அவர் எப்போது வருவாரோ அப்போது வெகு ஜாக்கிரதையுடன் ஆகாரம், படுக்கை, ஆசனம் முதலிய தவருமல் கொடுத்து உபசரிப்பாள். இப்படி அவள் நாடோறும் பணிவிடை செய்வதில் பழகித் தேர்ந்தவள் அவர் வெறுப்பு அடையாதபடி நடந்து அவரை மகிழ்வித்தாள். சில சமயம் அந்த ரிஷி குறித்த காலத்தில் வருவார். சில சமயம் வராமலே யிருப்பார். சில சமயம் கிடைப்பதற்கு அரிய போஜனம் சித்தம் செய்ய வேண்டுமென்பார். பிரதை சலிக்காமல் அதைச் சித்தம் செய்து கொடுத்து ஒரு வேலைக்காரியைப் போலவும், புத்திரியைப் போலவும் நடந்து அவரை மகிழ்விப்பாள். துர்வாசர் அவளிடத்தில் மிகுந்த சந்தோஷமுள்ளவராய், அவளுடைய ஒழுக்கத்துக்கும் மனதுக்கும் மகிழ்ந்து தவக முடிந்தவுடன் பிரதையை ஆசீர்

ரீ.

10—20. அரசன் வந்து பிரதையைப் பார்த்து அவளைக் கேட்கும்போதெல்லாம் முனிவர் மகிழப் பணிவிடை செய்தேன் என்று மகிழ்ச்சியுடன் சொல்வாள். இப்படி ஒரு குற்றமும் வராமல் அந்தத் தூர்வாச முனிவருக்குப் பணிவிடை செய்தபின், அந்த முனிவர் மகிழ்ந்து பிரதையைப் பார்த்து உனக்கு இஷ்டமான வரத்தைக் கேள். அது மனிதர்களால் அடையக் கூடாததாயிருந்தாலும் கொடுப்பேன். நீ பெண்களுக்குள் மிகவும் மேன்மையுள்ளவளாயிருப்பாய் என்றார். இதைக் கேட்டுக் குந்திதேவி நீரும் என் தகப்பனும் பிரியமாயிருக்கிறதே எனக்குப் போதும், இதுவே சிறந்த வரமென்று நான் எண்ணுகிறேன் என்றாள். தூர்வாசர், குந்தீ! நீ என்னை வரம் கேளாமலிருந்தால், நீ எந்தத் தேவதையை நினைத்தாலும் அவர்கள் உன்னிடம் வந்து உன் கட்டளைக்கு உட்படும்படியான மந்திரங்களை உபதேசிக்கிறேன்என்றார்.இதைக் கேட்டுக் குந்திப் பிராமணருக்குப் பயந்து மறுமொழி சொல்லாமலிருந்தாள். உனக்கு ஏதாவது ஆகவேண்டியிருந்தாலும் இல்லாவிட்டாலும் அந்த தேவர்கள் வேலைக்காரர்களைப் போல் உன்னிடம் வருவார்கள் என்று சொல்லித் மந்திரங்களை அவளுக்கு உபதேசம் செய்தார். பிறகு குந்திபோஜனை நோக்கி நான் உன் வீட்டில் சுகமாய் வசித்தேன். உன் குமாரத்தியின் பணிவிடையால் எனக்கு மஹா சந்தோஷம் உண்டாயிற்று என்று சொன்னார். பிறகு தூர்வாசர் போய்விட்டார். குந்திபோஜன் மனமகிழ்ந்து பிரதையைப் புகழ்ந்தான்.

---

## 305-வது அத்தியாயம்.

### குண்டல ஹரணபர்வத் தொடர்ச்சி.

1—20. தூர்வாசர் போன பிறகு, குந்திதேவி அவர் சொன்ன மந்திர மகிமையைப் பற்றி ஆச்சரியமடைந்து அதைப் பரீட்சிக்க நினைத்தாள். சில நாள் சென்றன. அவள் ருதுவாய் ஸ்நானம்செய்து சுத்தமான பின், அரண்மனையில் ஒரு படுக்கையில் உட்கார்ந்திருக்கிறபோது சூரியன் உதிக்கிறதைப் பார்த்தாள். கொஞ்சநேரம் கண் கொட்டாமல் சூரியனை உற்றுப்பார்த்தாள். அவன் கவசத்தையும் குண்டலங்களையும் தரித்துக்கொண்டு அழகாய் விளங்குகிறதைக் கண்டாள். அப்போது மந்திரத்தின் மகிமையை அறிய விரும்பிச் சூரியனை அழைக்க நினைத்து மந்திரத்தை உச்சரித்தாள். உடனே சூரியன் இரண்டு சொரூபம் கொண்டான். ஒரு சொரூபம் ஆகாசத்தில் பிரகாசித்தது. மற்றொரு சொரூபம் அவளிடம் வந்தது. அவனுடைய நிறம் சிவப்பாயிருந்தது திக்குகளெல்லாம் அவனுடைய ஒளியால் விளங்கின. அவனுடைய சரீரம் கிரீடத்தாலும் மற்ற ஆபரணங்களாலும் பிரகாசித்தது. சூரியன் புன்சிரிப்புடன் குந்தியை நோக்கிக் குந்தீ, நான் உன் கட்டளையை நிறைவேற்ற வந்திருக்கிறேன் என்று இனிமையாகப் பேசினான். உன் மந்திரபலத்தால் வந்திருக்கிறேன் என்றான். குந்தி சூரியனைப் பார்த்து நான் மந்திர மகிமையைப் பரீட்

சிப்பதற்காக உம்மை அழைத்தேன். ஆகையால் க்ஷமித்துக்கொள்ளும், உம்மிடத்துக்கு நீர் போகலாம் என்றாள். சூரியன், நீ விரும்பினால் நான் போகிறேன், ஆனால் ஒரு தேவனை அழைத்து அவனிடத்தில் வரம் பெறாமல் சும்மா அனுப்புகிறது நியாயமல்ல, நீ விரும்பினால் கவச குண்டலங்களை அணிந்தவனும் மஹா சாமர்த்தியவானுமுள்ள ஒரு புத்திரனை என்னிடத்திலிருந்து பெற்றுக்கொள் என்றான். நீ என்னைச் சேரு உன் இஷ்டம்போலப் புத்திரனைப் பெற்றுக்கொள். நான் உன்னைக் கூடினபின் போய்விடுவேன். நீ அப்படிச் செய்யாவிட்டால் உன்னையும் உன் பிதாவையும் துர்வாசரையும் சபித்து என் கோபத்தால் எரித்து விடுவேன். உன்னுடைய அறிவில்லாத பிதா உன்னுடைய கெட்ட நடக்கையை அறியவில்லை. துர்வாசரும் உன் குணத்தை அறியாமல் உனக்கு மந்திரோபதேசம் செய்துவிட்டார். ஆகையால் அவ்விருவரும் தண்டனை அடையத் தக்கவர்களா யிருக்கிறார்கள். தேவர்களும் தேவேந்திரனும் நீ என்னை அவமதித்ததைப் பார்த்துச் சிரிக்கிறார்கள். உனக்கு ஞானக்கண் தருகிறேன் அதைப் பார் என்றான்.

21— . உடனே ஆகாசத்தில் தேவேந்திரன் முதலான தேவர்கள் விமானத்தின்மேல் உட்கார்ந்திருக்கிறதைப் பார்த்தாள். எல்லாரும் சர்வாபரண பூஷிதர்களாய்ச் சூரியனைப் போன்ற தேஜசுடன் அழகாய் விளங்குகிறதைக் கண்டாள். அவர்களைக் கண்டபின் குந்தி பயமும் வெட்கமும் அடைந்தாள். சூரியனைப் பார்த்து, நீரும் உம்முடைய தேருக்குப் போக வேண்டும். நான் பழக்கமில்லாமையால் இந்தக் குற்றத்தைச் செய்து விட்டேன். மாதா பிதாக்களும் பெரியவர்களும் கன்னிகையா யிருப்பவளை ஒருவனுக்குக் கொடுக்க வேண்டும். இந்த விதிக்கு விரோதமாக நான் நடக்கக் கூடாது. மந்திரபலனைப் பார்க்கும்படி நான் உம்மை அழைத்தது மூடத்தனந்தான். நான் உம்மை நமஸ்கரிக்கிறேன். நான் குழந்தையா யிருப்பதினால் என் குற்றத்தை நீர் க்ஷமிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தாள். சூரியன் நீ இளம்பருவமுள்ளவளா யிருப்பதினால் உனக்கு மறுபடியும் புத்தி சொல்லுகிறேன் கேள். நீ என்னைக் கலந்தால் என்னைப் போன்ற மகிமையுள்ள ஒரு புத்திரனைப் பெறுவாய். உலகமெல்லாம் உன்னைப் புகழும். நான் உன்னைச் சேராமல் போகக் கூடாது. ஏனென்றால் என்னைத் தேவர்கள் பார்த்துச் சிரிப்பார்கள். நானும் தாழ்மை அடைவேன் என்றான்.



## 306-வது அத்தியாயம்.

### குண்டல ஹரண பர்வத் தொடர்ச்சி.

1—11. குந்தி தேவி இனிய வசனங்களினாலே சூரியனைத் தடுக்க முயன்றாள். ஆயினும் முடியவில்லை. பிறகு நெடுநேரம் யோசித்தாள். சூரியனுடன் சம்பந்தப்படப் பயந்தாள். பிறகு குற்றமற்ற பிதாவைக் காக்கக் கருதியும் துர்வாச முனிவரைத் தப்புவிக்க எண்ணியும், சூரியனுடன் சம்பந்திப்ப

தாகிய தூர்ச்செய்கைக்குப் பயந்தும் வருந்தினுள். சூரியனுடைய கோபத்துக்கும் பயந்தும் தன் சுற்றத்தாரைக் காப்பாற்ற விரும்பியும் நாணத்துடன் புன்முறுவல்பூத்த முகமுடையவளாய்ச் சூரியனைப் பார்த்து மெதுவான வசனங்களால் சொல்லுகிறுள். என் மாதா பிதாக்களும் சகோதரர்களும் உயிருடன் இருக்கிறுர்கள். அவர்கள் உயிரோடிருக்கிறபோது நான் எப்படி விதிகடந்து நடக்கமுடியும்? என்னுடைய குற்றத்தினுல் இந்த வம்சம் முழுமையும் பழிப்பை அடையும். அவர்களுடைய உத்தரவில்லாமல் நான் உம்மை எப்படி அடையலாம்? இந்தச் செய்கையால் குற்றமில்லை யென்று உமக்குத் தோன்றினுல், உம்மோடு கலந்த பின்னும் நான் கன்னிகையாயிருக்க வரம் அருள வேண்டும். நீர் எல்லாப் பிராணிகளுக்கும் ஜீவனையும், புகழையும், தர்மத்தையும் அருளி எல்லா வற்றுக்கும் சாட்சியா யிருக்கிறீர் என்றுள்.

12—22. அழகிய பெண்ணே! உன் மாதா பிதாக்களும், சகோதரர்களும் உன்னுடைய எஜமானர்கள் அல்ல. நீ சுயாதீன முள்ளவள். ஒரு கன்னிகை எல்லா வற்றையும் தன் இஷ்டப்படி செய்யலாம். ஆகையால் நீ என்னை அடைவது அதர்மம் ஆகாது. உலக இரட்சகனுயிருக்கிற நான் அதர்மத்தில் எப்படிப் பிரவேசிப்பேன்? மனிதர்கள் எல்லாரும் சுபாவத்திலேயே சுயாதீன முடையவர்களா யிருக்கிறுர்கள். விவாகம் முதலிய விதிகள் எல்லாம் ஏற்படுத்திக்கொண்ட நியமங்கள். நீ என்னைக் கலந்தபின் கன்னிகையாகவே யிருப்பாய். மஹா தைரியமும் பெருமையுமுள்ள புத்திரனைப் பெறுவாய் என்றுன். குந்தி தனக்குப் பிறக்கிற புத்திரன் தைரியமும், பலமும் உடையவனுயிருக்க வேண்டும். கவச குண்டலங்களை யுடையவனுகப் பிறக்க வேண்டும் என்று வரம் கேட்டுக்கொண்டாள். சூரியனும் அப்படியே சம்மதித்து வரம் அளித்தான். பிறகு குந்தியும் சூரியன் எண்ணத்துக்கு உடன்பட்டாள். சூரியன் தன் மாதாவாகிய அதிதி தனக்குக் கொடுத்த கவச குண்டலங்களைப் பிறக்கிற குழந்தைக்குக் கொடுக்கச் சம்மதித்தான்.

23—28. இப்படிப் பேசித் தீர்மானம் செய்து கொண்டபின் சூரியன் குந்தியை அடைந்தான். பிறகு குந்தியை நோக்கி, நான் போகிறேன். மஹா யுத்தவீரனுன புத்திரன் உனக்குப் பிறப்பான். அதன் பின்பு நீ கன்னிகை ஆய் விடுவாய். அதன் பின் குந்தி நாணத்துடன் அப்படியே ஆகட்டும் என்றுள். உடனே அவள் மயக்கமடைந்தாள். அந்தச் சமையத்தில் சூரியனுடைய மகிமையால் அவள் ஒரு புத்திரனைப் பெற்றுள். சூரியன் போனபின் குந்திக்கு மயக்கம் தெளிந்து உணர்ச்சி உண்டாயிற்று.



## 307-வது அத்தியாயம்.

### குண்டலஹரண பர்வத் தொடர்ச்சி.

1—10. மாக மாசம் சுக்கில பட்சம் முதலாவது தினத்தில் குந்தி புத்திரனைப் பெற்றுள். அந்தக் குழந்தை சந்திரனைப் போல அழகுடையதா யிருக்

தது. கவசகுண்டலங்களுடன் தேவர்களைப் போல விளங்கிற்று. சிங்கப் பார்வையுள்ளதா யிருந்தது. எருதைப் போன்ற தோள்களை யுடையதாயிருந்தது. தன் பிதாவைப் போலவே அழகுள்ளவனு யிருந்தான். இது கூட இருந்த மருத்துவச்சியைத் தவிர வேறு ஒருவருக்கும் தெரியாது. குழந்தை பிறந்த பின் அதைப் பிரிவதைக் குறித்துக் குந்தி அழுதாள். மருத்துவச்சியின் ஒத்தாசையினுல் அந்தக் குழந்தையை ஒரு கூடையில் வைத்து, அந்தக் கூடையின் மேல் புறத்தில் மெழுகு தடவினுள். அதன் மேல் மூடி யிட்டு ஆற்றில் விட்டு விட்டாள். ஆற்றில் விடுகிறபோது குந்தி மிகவுந் துக்கித்தாள். குழந்தாய்! ஜலத்திலும், நிலத்திலும், வானத்திலும் வசிக்கிற தேவர்கள் உன்னைக் காப்பாற்றக் கடவர்கள்.

11—27. நீ தண்ணீரில் க்ஷேமமாய்ப் போ. நீ போகும் வழியில் உனக்குச் சத்துருக்கள் இல்லாதிருக்கக் கடவது. இருந்தாலும் உனக்குத் துன்பம் செய்யாமலிருக்கக் கடவர்கள். ஜலத்தில் வருணனும், வானத்தில் வாயுவும் உன்னைக் காப்பாற்றக் கடவர்கள். உன் பிதாவான சூரியபகவான் உன்னை எல்லா விதத்திலும் காப்பாற்றக் கடவர். துவாதசாதித்தர்கள், அஷ்டவசுக்கள், ஏகாதசருத்திரர்கள், விசுவேதேவர்கள், இந்திரன், மருத்துக்கள், திக்குப்பாலகர்கள், மற்றுமுள்ள தேவர்கள் எல்லாரும் எல்லா இடத்திலும் காப்பாற்றக் கடவர்கள். உன்னுடைய கவசத்தினுலே நீ எப்படி யிருப்பாய் என்பது எனக்குத் தெரியும். நீ எங்கே யிருந்தாலும் தெரிந்து கொள்வேன். அதிர்ஷ்டமுள்ள உன் பிதா நீ தண்ணீரில் படுத்துக்கொண்டிருக்கும் போது உன்னைப் பார்த்துக்கொண்டிருப்பார். உன்னைப் புத்திரனுக வளர்க்கப் போகிற தாய் பாக்கியமுள்ளவள். உன்னைப் போன்ற குழந்தையை அடைவதற்கு அவள் எவ்விதமான கனவு கண்டிருப்பாளோ தெரியவில்லை. ஏனென்றால் நீ சூரியனைப் போல மகிமையும், தெய்வ கவசகுண்டலங்களும், தாமரை யிதழ் போன்ற கண்களும், அழகிய முகமும், அழகான தலை மயிரும் உடையவனு யிருக்கிறுய். நீ முழங்காலால் தவழுகிறதையும், புழுதி படிந்த திருமேனியையும் பார்த்து, உன்னுடைய இனிமையான மழலைச் சொற்களையும் கேட்கிற ஸ்திரீயே பாக்கியசாலி. நீ யௌவன பருவத்தை யடைந்து சிங்கம் போல விளங்குவதைப் பார்க்கிறவர்களும் பாக்கியசாலிகள். இப்படிச் சொல்லி அழுதுகொண்டு நடுராத்திரியில் ஆற்றில் விட்டு விட்டு ஒருவரும் அறியாமல் அரண்மனை வந்து சேர்ந்தாள். அந்தக் கூடை சர்மண்வதி ஆற்றில் மிதந்து போயிற்று. கங்கையும் யமுனையும் கலக்கிற இடத்துக்குச் சமீபத்தில் சர்மண்வதி நதிக்கரையில் ஒரு தேர்ப்பாகன் வசித்துக்கொண்டிருந்தான். அமிர்தத்திலிருந்து உண்டான கவசம் அந்தக் குழந்தையைப் பாதுகாத்தது.

## 308-வது அத்தியாயம்.

### குண்டலஹரண பர்வத் தொடர்ச்சி,

1—10. வைசம்பாயனர் ஜனமேஜயனை நோக்கி மஹா ராஜனே! அப்போது திருதராஷ்டிரனுக்கு நேசனாகிற ஒரு தேர்ப்பாகன் தன் மனைவியுடன் அங்கே ஸ்நானத்துக்காக வந்தான். அவனுடைய மனைவியான ராதை என்பவள் வெகு அழகானவள். அவளுக்குக் குழந்தைகளில்லாமையால் மன வருத்தப்பட்டுக் கொண்டிருந்தாள். கங்கா நதியில் ஸ்நானம் பண்ணுகிறபோது கூடை மிதக்கிறதைக் கண்டு அதைத் தன் கணவனிடத்துக்குக் கொண்டு வந்தாள். அதைத் திறந்ததும் அதற்குள் குழந்தை யிருக்கிறதைப் பார்த்தார்கள். அது சூரியனைப் போல அழகுள்ளதாயும் கவச குண்டலங்களுடன் பிரகாசிக்கிறதையும் பார்த்தார்கள். தேர்ப்பாகன் ஆச்சரியப்பட்டுக் குழந்தையைத் தூக்கினான். தன் மனைவியைப் பார்த்து நான் இப்படிப்பட்ட ஆச்சரியத்தை ஒரு போதும் கண்டதில்லை. இது ஒரு தேவனுடைய குழந்தையாயிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். எனக்குக் குழந்தைகள் இல்லாமலிருப்பது தேவர்களுக்குத் தெரியும். ஆகையால் இதை எனக்குக் கொடுத்தார்கள் என்று சொல்லிக் குழந்தையை ராதையின் கையில் கொடுத்தான்.

11—20. அவள் அதை வாங்கி வளர்த்துக் கொண்டுவந்தாள். குழந்தை பெரிதாயிற்று. அப்போது தேர்ப்பாகனுக்குச் சில குழந்தைகளும் பிறந்தன. கவச குண்டலங்களை உடைய அந்தக் குழந்தைக்கு வசுஷேணன் என்று பேரிட்டார்கள். ஒப்பற்ற சாமர்த்தியமுள்ள கர்ணனுக்கு வசுஷேணன், விருஷா, சூதபுத்திரன் என்ற பேர்கள் வழங்கின. தேர்ப்பாகன் கிராமத்தி லிருந்தபடியால் கர்ணனும் அங்கேயே வளர்ந்து வந்தான். குந்திதேவி வழிப் போக்கர்களால் அந்தச் சமாசாரம் தெரிந்து கொண்டாள். கர்ணனுக்கு வயது வந்ததும் தனுர்வித்தை முதலியவற்றைத் துரோணாசாரியிடம் கற்கும்படி ஹஸ்தினாபுரத்துக்கு வந்தான். அப்போது துரியோதனனுடன் சிநேகிதம் செய்து கொண்டான். துரோணாசாரியாரிடம் அஸ்திர வித்தை கற்றான். கிருபாசாரி, பரசுராமர் இவர்களிடத்திலும் கற்றுக் கொண்டான். துரியோதனனுக்குச் சிநேகிதனா யிருந்தபடியால் பாண்டவர்களுடன் பகைகொண்டு அர்ஜுனனுடன் யுத்தம்செய்ய விரும்பினான். இப்படிக் கர்ணனும் அர்ஜுனனும் ஒருவருக்கொருவர் சத்துருவானார்கள்.

21—25. கர்ணன் குந்திக்குப் பிறந்தது இரகசியமா யிருந்தது. கவச குண்டலங்களுடன் அவனைச் சூரியன் உற்பத்தி செய்ததும் இரகசியம். அந்தக்கவச குண்டலம் கர்ணனை அழிவில்லாமற் செய்துகொண்டிருந்தன. இந்தக் கவச குண்டலங்களே யுதிஷ்டிரருக்குப் பயத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தன. கர்ணன் பகற்காலத்தில் கைகளைக் குவித்துக்கொண்டு தண்ணீரில் நின்று சூரியனை ஆராதிப்பான். அந்தச் சமயத்தில் பிராமணர்கள் எதைக்

கேட்டாலும் தடைசொல்லாமல் கொடுத்து விடுவான், ஆகையால் இந்திரன் பிராமண வடிவம்கொண்டு, கவச குண்டலங்களை யாசிக்கும் பொருட்டுக் கர்ணனிடம் போனான். கர்ணன் அவனுக்குத் தகுந்தபடி மரியாதை செய்து உபசரித்தான்.



## 309-வது அத்தியாயம்.

### குண்டல ஹரண பர்வத் தொடர்ச்சி.

1—10. கர்ணன் இந்திரனை உபசரித்து நான் உமக்கு என்ன தரவேண்டும் என்று கேட்டான். சர்வாபரண பூஷிதர்களான கன்னிகைகள் வேண்டுமா? பசுக்கள் நிறைந்த கிராமங்கள் வேண்டுமா? என்று கேட்டான். இந்திரன், உன்னுடன் கூடப் பிறந்திருக்கிற கவச குண்டலங்களைக் கொடுக்க வேண்டும். வேறு ஒன்றும் எனக்கு வேண்டுவதில்லை. அந்தக் கிராமம் முதலியவைகளை மற்றவர்களுக்குக் கொடு. நீ சத்தியவந்தனா யிருந்தால் உன் சரீரத்திலிருந்து அவற்றை அறுத்துக் கொடு என்றான். உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் விட அந்தக் கவச குண்டலங்களையே மேலான வைகளாக விரும்புகிறேன் என்றான். கர்ணன் இந்திரனை நோக்கிக் குதிரைகள், பூமி, ஸ்திரீகள், வேறு பொருள்கள் எல்லாம் தருகிறேன், இந்தக் கவச குண்டலங்களை விட்டு நான் பிரிந்திருக்க முடியாது என்றான். இப்படி அநேக பொருள்களைத் தருவதாகச் சொன்னான். பிராமணன் மன உறுதிகொண்டு அவைகள் எல்லாம் எனக்கு வேண்டாம். கவச குண்டலங்களே வேண்டுமென்று பிடிவாதமாய்ச் சொன்னான். பிறகு கர்ணன் புன்சிரிப்புடன் இந்தக் கவச குண்டலங்கள் அமிர்தத்தினால் செய்யப்பட்டவைகள். நான் பிறக்கும்போது என் சரீரத்துடன் கூடப் பிறந்தவை. இவைகள் என் சரீரத்தில் உள்ளவரைக்கும் என்னை ஒருவரும் கொல்ல முடியாது. ஆகையால் நான் அவற்றைக் கொடுக்க மாட்டேன்.

11—33. கவச குண்டலங்களுக்குப் பதிலாகப் பூமியைக் கொடுக்கிறேன். நீர் அவற்றை அச்சமின்றி அரசு புரியும். கவச குண்டலங்களைக் கொடுத்து விட்டால் யுத்தத்தில் சத்துருக்கள் என்னைக் கொல்வார்கள் என்றான். இந்திரன் கவசகுண்டலங்களே வேண்டும் என்றான். கர்ணன் சிரித்துக் கொண்டு நீர் என்னிடம் வருகிறதை நான் முன்னமே அறிவேன். நீர் தேவர்களுக்கு அதிபதியான இந்திரன். ஜீவனைக் காப்பாற்றுகிறவர். நீர் எனக்கு ஒரு வரம் கொடும். என் கவசகுண்டலங்களுக்குப் பதிலாக ஏதாவது ஒன்றைக் கொடும். இல்லாவிட்டால் நான் தரமாட்டேன் என்றான். அதைக் கேட்டு இந்திரன் என் எண்ணத்தைச் சூரியன் அறிவான். அவன் உனக்குச் சொல்லி யிருப்பான். ஆகையால் கவசகுண்டலங்களுக்குப் பதிலாக நீ விரும்பினதைக் கேள். என் வஜ்ராயுதத்தைக் கேளாதே. அது தவிர நீ கேட்டதைக் கொடுக்கிறேன் என்றான். கர்ணன், சத்துருக்களின் படைகளைத் தப்பாமல்

சங்கரிக்கிற வேலைக் கேட்டான். இந்திரன் சற்று யோசித்தபின், சரி, எடுத் துக்கொள். இது சத்துருவைச் சங்கரித்தபின் எய்தவனிடத்துக்குத் திரும்பி வந்துவிடும். ஆனால் நீ இதைப் பிரயோகித்தால் சத்துருவைச் சங்கரித்தபின் என்னிடமே வந்துவிடும் என்றான். கர்ணன், நான் பயப்படுகிற சத்துரு ஒரு வன்தான். அவனைத்தான் நான் கொல்ல விரும்புகிறேன் என்றான். இந்தி ரன், நீ சொல்ல விரும்புகிற சத்துரு நாராயணராகிய கிருஷ்ணனுடைய பாது காவலில் இருக்கிறான் என்றான். கர்ணன் நான் ஒரே பகைவனை இதனாற் கொல்வேன். நான் கவசகுண்டலங்களை என் சரீரத்திலிருந்து அறுத்துக் கொடுத்தபின் என் சரீரம் விகாரமா யிருக்கக் கூடாது என்று கேட்டுக்கொண் டான்.

34—40. இந்திரன், நீ ஒருபோதும் விகாரமாய்க் காணப்பட மாட்டாய். நீ பொய் சொல்லாதவனாயிருந்தால் உன் தேகம் உன் பிதாவான சூரியனைப் போல அழகுடையதாக இருக்கும். உன் கையில் வேறு ஆயுதங்கள் இருக் கும்போது இதைப் பிரயோகித்தால் உனக்கே தீமை உண்டாகும். ஆதலால் ஜாக்கிரதையாயிரு என்றான். கர்ணன், என் உயிருக்கு அபாயம் உண்டா னால் அன்றி நான் இந்த வேலை எய்வதில்லை என்று சொன்னான். இந்திரன் அந்தத் தெய்வ வேலைக் கொடுத்தான். உடனே கர்ணன் தாமதியாமல் தன் கவச குண்டலங்களை அறுத்து எடுத்தான். அப்போது தேவர் தானவர் மனி தர் எல்லாரும் கைகொட்டிக் கோஷம் செய்தார்கள். தன் சரீரத்தி லிருந்து கவசகுண்டலங்களை அறுத்து எடுக்கிறபோது கர்ணன் புன்சிரிப்புடன் மலர்ந்த முகமா யிருக்கிறதைக் கண்ட தேவர்கள் தேவவாத்தியங்களை முழக்கி, அவன் மேல் மந்தார மலர்மாரி பெய்தார்கள். அறுத்து எடுத்த கவச குண்டலங் களைத் தேவேந்திரனுக்குக் கொடுத்தான். பிறகு இந்திரன் கர்ணனுக்கு உப சாரம் சொல்லிவிட்டுத் தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்தான். இதைக் கேட்ட தும் திருதராஷ்டிரன் புத்திரர்கள் துக்கத்தையும் அதைரியத்தையும் அடைந் தார்கள். பாண்டவர்கள் மகிழ்ந்தார்கள்.

41—42. அப்போது ஜனமேஜயன் வைசம்பாயனரை நோக்கி, இந்தச் சமாசாரத்தைக் கேட்டபோது பாண்டவர்கள் எங்கே யிருந்தார்கள். பன்னி ரெண்டு வருஷங்களும் முடிந்தபின் அவர்கள் என்ன செய்தார்கள்? என்று கேட்டான். வைசம்பாயனர், பாண்டவர்கள் ஜயத்ரதனிடத்திலிருந்து திரௌ பதியை மீட்டுக்கொண்டு, மார்க்கண்டேயரிடம் பல புண்ணிய கதைகளைக் கே ட்டபின் துவைத வனத்துக்குப் போய் வசித்தார்கள் என்றார்.



## 310-வது அத்தியாயம்.

*ஆரண்யோபாக்கியான பர்வம்.*

1—[illegible] . பாண்டவர்கள் துவைத வன[illegible] [illegible] வசித்தபோது பிராமணர்களுக்குச் சகாயமாக ஒரு பெருங் கா[illegible] [illegible] செய்தார்கள். [illegible] பாண்டவர்களும் பின்னால் உபகாரமாயிருந்தது. பிராமணர்கள் நெருப்புக் கடைகிற கோல் மரத்தின் கிளையில் மாட்[illegible] யிருந்தது. ஒரு நாள் கலைமான் ஒன்று வந்து அந்த மரத்தின்மேல் தன் கொம்பைத் தேய்த்துக் கொண்டிருந்தது. அப்போது அந்தக்கோல் அந்த மானினது கொம்பில் விழுந்து மாட்டிக் கொண்டது. அப்போது அக்கினி ஹோத்திரம் செய்ய விரும்பின பிராமணர்கள் தம்பிகளுடன் உட்கார்ந்திருக்கிற யுதிஷ்டிரரிடம் வந்து, மஹாராஜாவே! [illegible] நெருப்புக்கடைகிற கோல் ஒரு மரத்தில் தொங்கிக்கொண்டிருந்தது. ஒரு மான் வந்து அந்த மரத்தில் உராய்ந்து கொண்டது. அப்போது அந்தக் கோல் மானுடைய கொம்பில் மாட்டிக் கொண்டது. அந்த மான் அதனுடன் நெடுந்தூரம் போய்விட்டது. ஆகையால் அந்த மானைப் பிடித்துக் கோலைக் கொண்டு வந்து கொடுக்கவேண்டும். அதன் பின்புதான் நாங்கள் அக்கினி ஹோத்திரம் [illegible] என்றார்கள்.

இதைக்கேட்ட யுதிஷ்டிரர் வருத்தப்பட்டுத் தமது தம்பிகளுடன் புறப்பட்டு மானைத் தேடிக்கொண்டு போனார். ஐவரும் மான்வேட்டையாடினார்கள். அந்த மானைக் காணவில்லை. பிறகு களைப்படைந்து ஒரு மரத்தின் நிழலில் உட்கார்ந்தார்கள். நகுலன் கோபத்துடன் யுதிஷ்டிரரைப் பார்த்து, [illegible] ஒருபோதும் தருமம் தவறி நடந்ததில்லை. நமது கடமைகளைச் செய்வதில் அசிரத்தையாக இருந்ததுமில்லை. நம்மிடம் உதவி கேட்டவர்களுக்குப் பொய்யான பதில் சொன்னதுமில்லை. அப்படியிருக்க இன்றைய தினம் நமக்கு இப்படிப்பட்ட கவலை உண்டாவதற்குக் காரணம் என்ன என்றான்.



## 311-வது அத்தியாயம்.

*ஆரண்யோ பாக்கியானத் தொடர்ச்சி*

1—10. கஷ்டங்கள் வந்தபோது பொருள்களும் மறைபடுகின்றன. காரிய [illegible] உண்டாகின்றது என்று யுதிஷ்டிரர் சொன்னார். பிராதிகாமி திரௌபதியைச் சபைக்கு இழுத்துக்கொண்டு வந்தான். அவனை நான் கொல்லவில்லை, அல்லவா! இதுதான் இப்போது நமக்குண்டான துக்கத்துக்குக் காரணம் என்றான். பீமசேனன், கர்ணன் கொடும் சொற்களைப் பேசினான் [illegible] என் எலும்புகளைத் துளைத்தன. ஆயினும் அவனை நான் கொல்லக் கூடாதவனாக இருந்தேன் என்றான். அர்ஜுனனும் இந்தத் துக்கம் வருத்த [illegible] என் வர்

வந்தது சகுனி வஞ்சனையால் உம்மைச் சூதாட்டத்தில் தோற்கச் செய்தான். அவனை நான் கொல்ல முடியாமல் போயிற்று. இதுதான் நம்முடைய துக்கத்துக்குக் காரணம் என்று சகதேவன் சொன்னான். பிறகு யுதிஷ்டிரர் நகுலனைப் பார்த்து இந்த மரத்தின்மேல் ஏறி எங்கேயாவது தண்ணீர் இருக்கிறதா என்று பார். நாம் தாகம் தணித்துக் கொள்ளலாம் என்றார். அப்படியே நகுலன் மரத்தின்மேல் ஏறி அதோ ஒரு மரத்தோப்பு இருக்கிறது. அங்கே அன்னங்களின் சப்தம் கேட்கிறது என்றான். ஆகையால் அங்கே தண்ணீர் இருக்குமென்று நினைக்கிறேன் என்றான். யுதிஷ்டிரர் நகுலனை நோக்கி அங்கே போய்க் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா என்றார். நகுலன் அவ்விடத்தை நோக்கி வெகு வேகமாய்ச் சென்றான்.

11—19. நகுலன் அங்கே போய்த் தண்ணீரைப் பார்த்துக் குடிக்கக் கருதினான். அப்போது ஒரு அசரீரி கேட்டது. "நீ முரட்டுத்தனமாயிராதே. முதலில் என் கேள்விக்குப் பதில்சொல் அப்புறம் தண்ணீர்குடி" என்று கேட்டது. நகுலன் அதிக தாகமுள்ளவனாயிருந்தபடியால் அந்த வார்த்தையை அலட்சியம் செய்து தண்ணீரைக் குடித்தான். குடித்தவுடனே அறிவு கெட்டுக் கீழே விழுந்துவிட்டான். நெடுநேரம் கழித்து யுதிஷ்டிரர் சகதேவனைப் பார்த்து நீபோய் நகுலனை அழைத்துக்கொண்டு தண்ணீரும் கொண்டு வா என்று அனுப்பினார். சகதேவன் அப்படியே போய்த் தன் சகோதரன் செத்துக் கிடக்கிறதைப் பார்த்து வெகு துக்கப்பட்டான். அவனும் தாகமுள்ளவனாயிருந்தபடியால் தண்ணீரின் கிட்டப் போனான். யட்சன், அவனை நோக்கித் தண்ணீர் குடியாதே. என் கேள்விக்கு மறுமொழி கூறிவிட்டுப் பின்பு தண்ணீர் குடி என்றான். சகதேவன் அதை இலட்சியம் பண்ணாமல் தண்ணீர் குடித்தான். குடித்த வுடனே அவனும் பிணம்போல விழுந்து விட்டான்.

20—30. பிறகு யுதிஷ்டிரர் அர்ஜுனனை நோக்கி நீ போய் அவர்களையும் அழைத்துக்கொண்டு தண்ணீர் கொண்டுவா என்று சொன்னார். அர்ஜுனன் தன் வில் அம்பு கத்தி முதலிய ஆயுதங்களுடன் போய்த், தன் சகோதரர்கள் செத்துப் போய்க் கிடக்கிறதைப் பார்த்து, நாலு பக்கங்களிலும் பார்த்தான். ஒருவரையும் காணவில்லை. தண்ணீரின் கிட்டப் போனான். அப்போது நீ ஏன் அவ்வளவு அவசரமாய்ப் போகிறாய்? என் கேள்விக்கு விடை கொடு. அப்புறம் தண்ணீர் குடி என்று ஒரு சத்தம் உண்டாயிற்று. அர்ஜுனன் அதைக் கேட்டு, நீ என்னைத் தடுக்கிறதாயிருந்தால் எனக்கு எதிரில் வா. என் அம்புகளால் உன் உடலைத் துண்டாக்கி விடுகிறேன். பிறகு நீ பேசமாட்டாய் என்று சொல்லித் தன் அம்புகளால் ஆகாயத்தையும் திசைகளையும் மறைத்து விட்டான்.

31—40. யட்சன் மறுபடியும் அர்ஜுனனை நோக்கி இதனால் பிரயோஜனமில்லை. தண்ணீர் குடிக்க வேண்டுமானால் என் கேள்விக்குப் பதில் சொல். இல்லாவிட்டால் சாவாய் என்றான். யட்சன் மறுபடியும் அர்ஜுனனை

இப்படிச் செய்து விட்டதனால் உனக்கு ஒரு பயனுமில்லை. என் கேள்விக்குப் பதில் சொல் இல்லாவிட்டால் தண்ணீரைக் குடித்த வுடனே நீ சாவாய் என்றான். அர்ஜுனன் அலட்சியம் பண்ணித் தண்ணீரைக் குடித்தான். உடனே அவ்விடத்திலேயே பிணமாய் விழுந்தான். பிறகு யுதிஷ்டிரர் பீமனை நோக்கி அர்ஜுனன், நகுலன், சகதேவன் இவர்கள் போய் நெடுநேரம் ஆய்விட்டது. நீ போய் அவர்களை அழைத்துக்கொண்டு வா என்றார். உடனே பீமன் புறப்பட்டு அவ்விடம் போய்ச் சகோதரர்கள் மூவரும் செத்துக்கிடப்பதைக் கண்டான். அதைப் பார்த்து பீமன் வெகு துக்கப்பட்டான். இது யட்சர் அல்லது இராக்ஷதர்களால் நேரிட்டிருக்க வேண்டுமென்று எண்ணினான். ஆகையால் நான் சண்டை யிடவேண்டும் என்று கருதினான். உடனே அந்த ஏரியை நோக்கிப் போனான். அப்போது யட்சன் பீமனைத் தடுத்து அவசரப்படாதே. முதலில் என் கேள்விகளுக்குப் பதில் சொல். அதன் பின் தண்ணீர் குடி. இல்லாவிட்டால் நீ சாவாய் என்றான். பீமன் பதில் சொல்லாமல் தண்ணீரைக் குடித்தான். உடனே கீழே விழுந்து செத்தான்.

41—45. பீமன் வராமலிருப்பதைப் பற்றி யுதிஷ்டிரர் மனம் வருந்தித் துக்கப்பட்டு மனித சஞ்சாரமில்லாததும், மான்கள் முதலான காட்டு மிருகங்கள் வசிப்பதுமான வனத்தில் புகுந்தார். அந்த வனத்தில் மரங்களும், கொடிகளும் அடர்ந்து தேனீக்களும் பட்சிகளும் ஒலித்துக்கொண்டிருந்தன. அந்த வனத்தில் நடந்து விசுவகர்மாவினால் சிருஷ்டிக்கப்பட்டது போல வெகு அழகாய் விளங்குகிற அந்த ஏரியைப் பார்த்தார். அதைச் சூழக் கொடிகளும் மரங்களும் நிறைந்திருந்தன. யுதிஷ்டிரர் துக்கத்துடன் அந்த ஏரியின் கரையை அடைந்து வெகு ஆச்சரியத்துடன் மயங்கி நின்றார்.

## 312-வது அத்தியாயம்.

ஆரண்யோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—20. அந்த ஏரியின் கரையில் இந்திரனைப் போல மகிமையுள்ளவர்களும், பிரளய காலத்தில் லோகபாலகர்கள் சொர்க்கத்திலிருந்து விழுந்து கிடக்கிறதுபோலவும் செத்துக்கிடக்கிற நாலு சகோதரர்களையும் பார்த்தார். பார்த்த வுடனே யுதிஷ்டிரர் பெருமூச்சு விட்டார். துக்கத்தினாலே இறைந்து அழுதார். ஆ பீமா! நீ துரியோதனனுடைய தொடையை முறிப்பதாகச் சபதம் செய்தாயே. அந்தச் சபதம் வியர்த்தமாயிற்றே. ஏன் உன் சபதத்தைப் பொய்யாக்கி விட்டாய்? நீ நடத்துவதாகச் சொன்னதெல்லாம் பொய்யாய்ப் போய் விட்டனவே! அர்ஜுனன் பிறந்தபோது ஜனங்கள் எல்லாரும் அவனுடைய தாயாரை நோக்கி அவன் இந்திரனைப் போல மகிமையுள்ளவனாக இருப்பான் என்று சொன்னார்கள். அர்ஜுனன் இழந்துபோன பொருள்களை [illegible] மீண்டும் சம்பாதிப்பான் என்றும், அவன் எல்லாரையும் ஜயிப்பான்

என்றும், அவனை ஒருவரும் ஜயிக்கமாட்டார்கள் என்றும் சொன்னார்கள். அப்படிப்பட்ட அர்ஜுனன் என் எண்ணங்களை யெல்லாம் தட்டழியச்செய்து விட்டுச் சத்துருக்களால் எவ்வாறு கொல்லப்பட்டான்? கடைசியில் அவனுடைய உதவியைக்கொண்டு சத்துருக்களை ஜயிக்கலாம் என்கிற எண்ணத்தினால் அல்லவோ இவ்வளவு கஷ்டங்களையும் சகித்துக்கொண்டிருந்தோம். அர்ஜுனன் பீமன் இருவரும் எப்படிப்பட்ட ஆயுதங்களாலும் அழியாதவர்கள். இப்படிப்பட்ட வீரர்களை எப்படிச் சத்துருக்கள் கொன்றார்கள்? நகுல சகதேவர்கள் செத்துக் கிடக்கிறதைப் பார்த்து என் இருதயம பற்றி எரிகிறதே! சாஸ்திரங்களையும், காலதேசங்களையும் உணர்ந்து தவசிகளா யிருக்கிற நீங்கள் உங்களுடைய தொழிலைச் செய்யாமலும், வில்லை எறிந்து விட்டும் உணர்வற்றுக் கீழே விழுந்து கிடக்கிறீர்களே! உயிருள்ள மனிதர்களைப் போலக் கிடக்கிற தமது சகோதரர்களைப் பார்த்து, மிகவுந் துக்கப்பட்டார். அவர் சரீரம் வெயர்வையால் நனைந்து போயிற்று. வெகு நேரம் அழுது, பின்பு விதிவசம் என்று கருதி, அவர்களுடைய சரீரங்களைச் சோதித்துப் பார்த்தார். அவர்கள் சரீரத்தில் ஒரு காயமுமில்லை. அவர்கள் பக்கத்தில் வேறு ஒருவருடைய அடிச்சுவடுகளும் காணப்படவில்லை. ஆகையால் இது ஒரு தெய்வத்தின் செய்கையா யிருக்க வேண்டும் என்று எண்ணினார்.

21—35. பிறகு யுதிஷ்டிரர் தண்ணீர் குடிக்க நினைத்தார். தம்பிகள் செத்துக் கிடக்கிற மாதிரியைப் பார்த்துச், சகுனியானவன் துரியோதனனுடைய போதனையால் இந்த ஏரி நீரில் ஏதாவது விஷம் கலந்திருக்கலாம் என்று நினைத்தார். ஏனென்றால் அவர்கள் செத்துக்கிடந்தாலும் சரீரத்தில் ஒரு விகாரமும் இல்லை. இவர்களுடைய ஆயுசு முடிவு காலத்தில் எமனைத் தவிர வேறு ஒருவரும் இவர்களை எதிர்க்க மாட்டார்கள். அதன் பின் யுதிஷ்டிரர் தண்ணீரில் இறங்கினார் தண்ணீரைக் கையினால் இப்படியும் அப்படியும் தள்ளினார். அப்போது ஒரு அசரீரிவாக்குக் கேட்டது. நான் உன் தம்பிகளைக் கொன்ற கொக்கு. நீ என் கேள்விகளுக்குப் பதில் கூறாமல் இந்தத் தண்ணீரைக் குடித்தால் அவர்களோடு நீயும் சாவாய். அதன் பின் நீ தண்ணீரைக் குடிக்கலாம், உனக்கு வேண்டிய அளவு எடுத்துக்கொண்டும் போகலாம். உன் முரட்டுத் தனத்தை விடு, என் கேள்விக்குப் பதில் சொல் என்ற சத்தம் கேட்டது, இதைக் கேட்ட யுதிஷ்டிரர், நீ வசுவா? ருத்திரனா? மருத்தா; நீ ஒரு பட்சியா யிருந்தால் மலை போன்ற என் தம்பிகளைக் கொல்ல முடியாது. நீ ஆச்சரியமான செய்கையைச் செய்திருக்கிறாய். நீ என்ன கருத்துக்கொண்டு இப்படிச் செய்தாயென்று எனக்குத் தெரியவில்லை. உன் விருப்பம் என்ன? நான் ஆச்சரியப்படுகிறேன். என் தலை தள்ளாடுகிறது. என் மனம் கலங்குகிறது. நான் அஞ்சுகிறேன். நான் பிரார்த்திக்கிறேன் நீ யார் சொல் என்றார். அதற்கு அசரீரி நான் சாதாரண பட்சியல்ல; ஒரு யட்சன் என்றான்.

36—41. பிறகு யுதிஷ்டிரர், அவனை நோக்கிச் சென்று, ஒரு மரக்கிளையில் இடிபோன்ற தொனியுடன் பேசிக்கொண்டு உட்கார்ந்திருக்கிற அந்த யட்சனிடம் போனார். அவன் பனமரம்போல உயர்ந்தவனாயும், அக்கினி சூரியர்களைப்போலத் தேஜசுள்ளவனாயும் இருந்தான். அவன் யுதிஷ்டிரரை நோக்கி உன் சகோதரர்கள் என் வார்த்தையை அலட்சியம் செய்து தண்ணீர் குடித்ததனால் அவர்களைக் கொன்றேன். எல்லாப் பிராணிகளையும் கொல்லுகிற எமன் இந்தத் தண்ணீரை ஒருவரும் குடிக்கக் கூடாதென்றும், அவன் கேட்கிற கேள்விகளுக்குப் பதில் சொல்கிறவர்கள் மாத்திரமே இதில் தண்ணீர் குடிக்கலாம் என்றும், விடை கொடாதவர்கள் குடித்தால் சாகக் கடவர்கள் என்றும் கட்டளையிட்டிருக்கிறார் என்றான். யுதிஷ்டிரர் தான் அவ்வளவு சக்தியுள்ளவன் அல்ல என்றும், தன்னால் கூடியமட்டும் விடைத் தருவதாகவும் சொன்னார்.

42— . யட்சன், சூரியனை உதிக்கவும் அஸ்தமிக்கவும் யார் செய்கிறது? அவனுடைய நண்பன் யார்? அவன் எந்த ஆதாரத்தில் இருக்கிறான?

யுதிஷ்டிரர்—பிரமா சூரியனை உதிக்கச் செய்கிறார். தேவர்களே அவருக்கு நண்பர்கள். தர்மத்தினால் அஸ்தமிக்கிறான். சத்தியமே ஆதாரமாக நிற்கிறான்.

யட்சன்—மனிதன் எப்படி படித்தவனும், பெரியவனும், அறிவுள்ளவனுமாகிறான்? கடைசியில் அடையும் புகலிடம் யாது?

யுதி—வேதத்தைப் படிப்பதினாலேதான் படித்தவனாகிறான் தவசினாலே பெரியவனாகிறான். பெரியோர்களை அடுத்திருப்பதினாலே அறிவுள்ளவனாகிறான். ஆத்மதானமே புகலிடமாவது.

யட்—பிராமணரிடமுள்ள தெய்வத் தன்மை யாது? அவர்கள் எப்படி முனிவர்களாகிறார்கள்? அவர்களிடமுள்ள மனுஷத் தன்மை யாது? அவர்கள் எதனால் தாழ்வடைகிறார்கள்?

யுதிஷ—வேதத்தைச் படிப்பதினாலும், அதைப் பாராயணம் செய்வதாலும் பிராமணர்கள் தெய்வத தன்மையை அடைகிறார்கள். தவத்தினாலே முனிவராகிறார்கள். நல்லொழுக்கததால் மனிதத் தன்மை யுடையவராகிறார்கள். பாவத்தினாலே தாழ்வடைகிறார்கள்.

யட்—க்ஷத்திரியர்களுக்குத் தெய்வத் தன்மை எது? அவர்கள் எப்படி முனிவர் ஆகிறார்கள்? அவர்கள் எப்படி மனிதத் தன்மையை அடைகிறார்கள்? எதனால் அவர்கள் தாழ்வடைகிறார்கள்?

யுதிஷ—வில் வித்தை முதலிய ஆயுத வித்தையால் தெய்வத் தன்மை அடைகிறார்கள். எக்கியத்தினால் முனிவராகிறார்கள். அச்சமே மனுஷத் தன்மை. பிறரைத் துன்பத்தினின்றும் விடுவியாமையே தாழ்மை.

யட்—பரதேசிகளுக்குச் சிநேகிதம் எது? கிருகஸ்தனுக்குச் சிநேகிதன் யார்? வியாதிக்காரனுக்குச சிநேகிதம் யார்? மரணத்துக்கு நண்பன் யார்?

யுதி—அர்த்தியனுக்கு ஜாக்கிரதை, கிருகஸ்தனுக்கு மனைவி, வியாதிக்கார னுக்கு வைத்தியன், மரணத்துக்குத் தர்மம், இவர்களே சிநேகிதர்களாம்.

யட்—எல்லாருக்கும் அதிதி யார்? புராதனதர்மம் எது? அமிர்தம் எது எல்லா வுலகத்துக்கும் பொதுவான அமுதம் எது?

யுதி—எல்லாருக்கும் அக்கினியே அதிதி. ஆத்மரட்சணையே புராதன தர்மம். பசுவின்பாலே அமிர்தம். உலகமெல்லால் வாயுவினாலே ஆக்கப்பட் டது.

யட்—தனியாகத் திரிகிறவனும் திரும்பித் திரும்பி வருகிறவனும் யார்? நெருப்பு, எதற்கு மருந்து? பொருள்களை வைக்கிறதற்குரிய பெரிய பாத்திரம் எது?

யுதி—தனியா யலைகிறவன் சூரியன். மீண்டும் மீண்டும் உதித்து வரு கிறவன் சந்திரன். நெருப்பு பனிக்கு மருந்து. பூமிதான் பெரிய பாத்திரம்.

யட்—நன்மைகளை அனுபவிக்கிறவனும், ஒருவராலும் சிநேகிக்கப்படாமல் உயிருள்ளபோதே யிருக்கிறவனும் யார்?

யுதிஷ—தேவர்கள், விருந்து, வேலைக்காரர்கள், பிதிர் முதலானவர்களு க்குக் கொடுக்காமல் தான் மாத்திரன் சாப்பிடுகிறவனே உயிருள்ள பிணமா வான்.

யட்—பூமியை விடக் கனமானது என்ன? ஆகாயத்தை விட உயரமா னது என்ன? காற்றை விட வேகமாயுள்ளது எது? புல்லை விடச் சீக்கிரமாய் வளர்வது யாது?

யுதிஷ—தாயே பூமியை விடக் கனமானவள். தந்தையே வானத்தை விட உயரமானவன். வாயுவை விட மனமே வேகமானது. கவலையே புல்லை விடச் சீக்கிரமாய் வளர்வது.

யட்—நித்திரையாலும் இமை கொட்டாமலிருப்பது யாது? பிறந்த பின் அசையாமலிருப்பது எது? எதற்கு மனம் கிடையாது? எது வேகமாய் வளர் வது?

யுதிஷ—மீன்கள் தூங்கும்போது கண் கொட்டுவதில்லை முட்டை பிறந்த பின்னும் நகர்வதில்லை. கற்களுக்கு மனமில்லை. நதிகள் வேகமாய் விருத்தியாகின்றன.

யட்—யஜுர்வேத சாமவேதங்களில் வேள்வியைப் பற்றிச் சொல்வது யாது? அதை ஒத்துக்கொள்வது எது? யக்ஞத்தை அலட்சியம் பண்ணக் கூடாது என்று கூறுவது யாது?

யுதிஷ—சாமவேத வசனம் ஆத்மயாகத்தைச் சொல்லுகிறது. எஜுர் வேதம் மானச யாகத்தைச் சொல்லுகிறது. அவற்றுள் ஒன்று வேள்வியை அலட்சியம் பண்ணுறிருப்பதைக் கூறுகின்றது.

யட்—சிறந்ததாக விரும்பப்படுவது எது? பிதிர்களுக்குக் கொடுக்கப்படுவது யாது? பேராசை யுள்ளவர்களுக்குத் திருப்தியாவது எது? குடும்ப விருத்திக்காக விரும்பப்படுவது யாது?

யுதிஷ—எல்லாராலும் விரும்பப்படுவது மழை. விதை விதைக்கிறதே பிதிர்களுக்குத் திருப்தி யுண்டாக்குகிறது. பசுக்களை உடையவர்களா யிருப்பதே ஆசை யுள்ளவர்களை மகிழ்ச்சி செய்வதாம் வம்ச விருத்தியை விரும்புகிறவனுக்குப் புத்திரனே காரியமான பொருள்.

யட்—தர்மத்தின் பாதம் எது? தர்மத்தின் பிரசித்தி என்ன? சுகத்தையும் சொர்க்கத்தையும் தருவது எது?

யுதி—சாமர்த்தியமே தர்மத்தின்பாதம். அன்பே அதன் பிரசித்தி. சத்தியமே சொர்க்கம் தருவது. நல்லொழுக்கமே சுகத்தைத் தருவது.

யட்—மனிதர்களுக்கு ஆத்மாவும சிநேகிதமும் எவை? ஜீவனத்தைக் கொடுப்பது யார்? இன்பத்தைத் தருவது எது?

யுதி—புத்திரனே ஆத்மா. பத்தினியே சிநேகிதம். இந்திரனே மழையால் ஜீவனத்தைக் கொடுப்பவன். காமமே நித்திய இன்பத்தைத் தருவது.

யட்—தர்மம் செய்கிறவர்கள் கவனிக்க வேண்டியது எது? எந்தச் செல்வம் சிறந்தது? ஒருவன் எதை அடைய விரும்ப வேண்டும்? எந்த இன்பம் சிறந்தது?

யுதி—சாமர்த்தியமே தர்மம் செய்கிறவர்கள் கவனிக்கவேண்டியது. அறிவே சிறந்த செல்வம். விரும்பத் தக்கது தேக சௌக்கியமே. திருப்தியே சிறந்த இன்பம்

யட்—சிறந்ததும் பிரயோசனமுள்ளதுமான தர்மம் எது? கவலையை நீக்குவது யாது? யாருடைய நட்பு அழியாமலிருக்கும்.

யுதிஷ—இம்சை செய்யாமலிருப்பதே சிறந்த தர்மம். ஆத்மசம்பந்தமான தர்மமே பிரயோசனமுள்ளது. மன அடக்கமே கவலையை ஒழிப்பது. முனிவர்களுடைய நட்பே அழியாதது.

யட்—எதை விடுவதால் மனிதன் எல்லாராலும் விரும்பப்படுவான்? எதை விடுவதால் ஐசுவரியவனாவான்? எதை விடுவதால் பயமில்லாமலும் சந்தோஷமாயிருப்பான?

யுதிஷ—கர்வத்தை விடுவதால் எல்லாருக்கும் பிரியமுள்ளவனாவான். ஆசையை விடுவதால் செல்வவானாவான். கோபத்தை விடுவதால் அச்சம் ஒழியும். ஆசையை விடுவதே சந்தோஷத்தைத் தரும்.

யட்—பிராமணர்களுக்கும், வித்தை யாடிகளுக்கும் வேலைக்காரர்களுக்கும், அரசர்களுக்கும் ஏன் செல்வம் கொடுக்கப்படுகிறது?

யுதிஷ்—பிராமணர்களுக்கு தர்மத்துக்காகக் கொடுக்கப்படுகிறது. வித்தை யாடிகளுக்குப் புகழ்ச்சிக்காகக் கொடுக்கப்படுகிறது. சம்ரட்சணைக்காக வேலைக்காரர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. பயத்துக்காக அரசர்களுக்குக் கொடுக்கப்படுகிறது.

யட்—உலகமெல்லாம் பரவி யிருப்பது எது? ஏன் உலகம் ஒளி பெறுவதில்லை. சிநேகிதம் ஏன் கெடுகிறது? நாம் ஏன் சொர்க்கத்தை அடைவதில்லை?

யுதிஷ்—உலகம் அஞ்ஞானததால் மூடப்பட்டிருக்கிறது. அதனுலேதான் ஒளி பெறுவதில்லை பேராசையால் சிநேகிதம் ஒழிவது. தீவினையாலேதான் சொர்க்கம் பெறுவதில்லை.

யட்—எது இல்லாததினுல் மனிதன், நகரம், தர்மம், எக்ஞம் இவைகள் உல்லாசத்தை யிழப்பது?

யுதிஷ—செல்வமில்லாமையால் மனிதன் உல்லாசத்தை யிழக்கிறான். அரசன் இல்லாமையால் நகரம் உல்லாசததை யிழக்கிறது. சிரத்தையும் கற்றறிந்த பிராமணனும் இல்லாமையால் தர்மம் இழக்கிறது. நல்ல தட்சிணை யில்லாமையால் எக்ஞம் உல்லாசத்தை யிழக்கிறது.

யட்—திக்குகள் எவை? தண்ணீர் எது? உணவு யாது? விஷம் எது? சிராத்தம் எப்போது செய்யத் தக்கது?

யுதிஷ—முனிவர்களே திக்கு. ஞானேந்திரியங்களே உணவு. வானமே தண்ணீர். யசுஷைஜே விஷம். கற்றறிந்த பிராமணர்கள் கிடைத்தபோது சிராத்தம் செய்வதற்குச் சிறந்த காலமாம்.

யட்—தவம் என்பது யாது? தர்மம் என்பதென்ன? க்ஷமை என்பது எது? லஜ்ஜையாவது எது?

யுதிஷ்—தர்மத்தில் உறுதியா யிருப்பவதே தவம். மனதை அடக்குதலே தர்மம். சுக துக்கங்களைப் பொறுப்பதே க்ஷமை. கொடுஞ் செய்கையினின்றும் நீங்குவதே லஜ்ஜை.

யட்—ஞானம், சமம், தயை, ஆர்ஜவம் என்பவை யாவை?

யுதிஷ்—உண்மை அறிவே ஞானம். மனத் திருப்தியே சமம். எல்லாருடைய க்ஷேமத்தையும் கருதுவதே தயை. மனச சமநிலை பெறுவதே ஆர்ஜவம்.

யட்—எந்தச் சத்துரு ஜயிக்க முடியாதவன்? நெடு நாள் நீராமலிருக்கிற வியாதி எது? சாது என்பவர் யார்? சாது அல்லாதவர் யார்?

யுதிஷ்—கோபமே ஜயிக்கப்படாத கொடிய சத்துரு. நெடு நாளிருக்கிற வியாதி ஆசை. பிறர் க்ஷேமத்தைக் கருதுகிறவர்கள் சாது. இரக்கமில்லாதவனே அசாது.

யட்—மோஹம் என்பது யாது? மானமாவதென்ன? ஆலசியம் என்பது எது? சோகமாவதென்ன?

யுதிஷ—மூடத்தனம் தர்மத்தைக் கெடுக்கிறபடியால் மோஹம் என்னப்படும். தன் சாமர்த்தியத்தை உண்டாக்குகிற கர்வமே மானம். காரியங்களைச் செய்யப் பின்னிடுவதே ஆலசியம். அறிவின்மையே சோகம்.

யட்—தீர்த்தமாவதெது? தைரியம் என்பது யாது? சிரேஷ்ட ஸ்நானம் எது? தானம் என்னப்படுவது யாது?

யுதிஷ்—தர்மத்தில் உறுதியாயிருப்பதே தீர்த்தம். புலன்களை அடக்குவதே தைரியம். மனக் களங்கத்தை ஒழிப்பதே சிரேஷ்ட ஸ்நானம். ஜீவனை இரட்சிப்பதே தானம்.

யட்—பண்டிதன் யார்? நாஸ்திகன் எவன்? மூர்க்கன் எவன்? காமம் என்பது எது? மச்சரம் என்பது எது?

யுதி—தர்மத்தை உணர்ந்தவனே பண்டிதன். தர்ம அறிவில்லாதவனே நாஸ்திகன். உலக ஆசையே காமம். மனத்தின் எரிச்சலே மச்சரம்.

யட்—அகங்காரம் எது? டம்பம் யாது? தயவு என்பதென்ன? வைஷுண்ணியம் என்பதென்ன?

யுதிஷ்—பூர்ண மூடத்தனமே அகங்காரம். தான் செய்யும் தர்மத்தைப் பலர் அறியச் செய்வதே டம்பம். பிறர் குற்றங்களை ஆராய்வதே வைஷுண்யம்.

யட்—தர்மம், அர்த்தம், காமம் இவை ஒன்றுக்கொன்று விரோதம். இவற்றை ஒன்றுபடுத்தக் கூடுமா?

யுதிஷ்—மனைவியும் தர்மமும் கைவசப்பட்டபோது மூன்றும் ஒன்றுபடக் கூடும்.

யட்—நித்திய நரகில் விழுபவர் யார்?

யுதிஷ்—பிதாவின் அனுமதி யில்லாமல் தானம் கொடுப்பதற்காகப் பிராமணர்களை அழைக்கிறவன். அழைத்த பிறகு இல்லையென்று மறுக்கிறவன். வைதிக கர்மங்களிலும், தர்மத்திலும், சாஸ்திரத்திலும், பிராமணர் விஷயத்திலும், தேவர் விஷயத்திலும், பிதிர் விஷயத்திலும் பொய் சொல்லுகிறவனும், செல்வமிருந்தும் தானம் செய்யாமலும் தானும் அனுபவியாமலும் இருப்பவனுமாகிய இவர்கள் நித்திய நரகத்தை அடைகிறார்கள்.

யட்—பிராமணனாவதிலும், பெரியோராவதிலும், வேதாத்தியயனத்திலும், வேதார்த்த விசாரத்திலும் உதவி யாவதெது?

யுதிஷ்—சற்கருமங்களே பிராமணனாவதற்கு உதவி. பிராமணன் விரதானுஷ்டானம் செய்ய வேண்டுவது அவன் கடமை. அப்படி செய்கிறவன் சந்ததிவிருத்தியாகும். அப்படிச செய்யாதவன் சீக்கிரத்தில் அழிவான். சற்கருமங்களைச் செய்கிறவனே பண்டிதன். மற்றவர்கள் படித்திருந்தபோதிலும் மூடர்கள் நாலு வேதங்களை உணர்ந்தும் துஷ்ட கர்மம் செய்கிறவன் சூத்திரனிலும தாழ்ந்தவன். அக்கினியில் ஓமம் செய்கிறவனும் புலனை அடக்குகிறவனும் பிராமணன்.

யட்—சாந்தமாய்ப் பேசுகிறவன், யோசனை செய்த பின் காரியங்களைச் செய்கிறவன், பல சிநேகிதர்களை உடையவன், தர்மத்தை விரும்பி இவர்களுக்குப் பலன என்ன?

யுதிஷ்—சாந்தமாய்ப் பேசுகிறவன் எல்லாராலும் நேசிக்கப்படுகிறான். யோசித்துச் செய்கிறவன் காரியசித்தி பெறுகிறான் பல சிநேகிதர்களை யுடையவன் சுகத்தை அடைகிறான். தர்மவான் சொர்க்கத்தை அடைகிறான்.

யட்—உலகத்தில் இன்பம் அடைகிறவன் யார்? ஆச்சரியம் எது? சரியான மார்க்கம் எது? வார்த்தையாவது யாது?

யுதிஷ்—ஆறு அல்லது ஏழு நாட்களுக்கு ஒரு முறை தன் வீட்டில் கிழங்கு முதலியவை சமைக்கிறவனும், கடனில்லாதவனும் உலகத்தில் இன்பம் அடைகிறார்கள். ஜனங்கள் தினந்தோறும் சாகிறதைப் பார்த்துக்கொண்டிருந்தும் மற்றவர்கள் தாங்கள் சாகாமலிருப்போம் என்று எண்ணுகிறார்கள். இதுவே ஆச்சரியம். ஆக்ஷேபனைகளுக்குச் சமாதானம் சொல்லுவது கஷ்டம். வேத வசனம் ஒன்றோடு ஒன்று மாறுபடுகின்றன. இவ்விஷயங்களில் நம்பத் தக்க பெரியோர் கிடைப்பது அருமை. தர்ம இரகசியம் மயக்கமா யிருக்கிறது. ஆகையால் பெரியோர்கள் நடந்த வழியே சரியான மார்க்கமாம். எல்லாப் பிராணிகளும் மோஹம் என்கிற பாத்திரத்தில் மாசம் பருவம் அகிநாளாதியால் சூரிய உஷ்ணத்தில் சமைக்கப்படுகின்றன என்பதே வார்த்தையாம்.

யட்—நீ எல்லாவற்றுக்கும் சரியான விடை கொடுத்தாய். சகல ஐசுவரியங்களையும் உடைய மனிதன் யார்? சொல் என்றான்.

யுதிஷ்—சற்கருமங்களினாலே எவனுடைய புகழ் பூமியிலும் வானத்திலும் பரவுகிறதோ அவனும், சென்றகாலத்தையும் வருங்காலத்தையும் ஒரே மாதிரியாக நினைக்கிறவனும் சகல ஐசுவரியங்களையும் உடையவராவார்கள்.

யட்சன்—நீ சரியாய்ச் சொன்னாய். உன்னுடைய தம்பிகளில் எவனை எழுப்ப வேண்டும் சொல் என்றான்.

121—131. யுதிஷ்டிரர், சிவந்த கண்களையும், அகன்ற மார்பையும், சால விருட்சம் போன்ற உயரத்தையும் உடைய நகுலனை உயிர்ப்பித்துத் தாரும் என்றார். யட்சன், நீ உன் சகோதரர்கள் எல்லாரையும் விடப் பீமசேனனிடத்தில் பிரியம் வைத்திருக்கிறாய். அர்ஜுனனே உங்கள் எல்லாரையும் பாதுகாக்கிறவன். உங்களுக்குக் கதியாயுள்ளவன். அப்படியிருக்க என் நகுலனைப் பிழைபிக்கச் செய்கிறாய்? பீமசேனன் பதினாயிர யானை பலமுள்ளவன். அர்ஜுனன் மஹா வில்லாளி. பாண்டவர்களுடைய பலமெல்லாம் அவனுடைய பராக்கிரமத்தையே அனுசரித்திருக்கின்றது. இவ்விருவரையும் விட்டு நகுலனைப் பிழைப்பிக்கும்படி ஏன் கேட்கிறாய்? என்றான். யுதிஷ்டிரர், தர்மநெறி தவறக்கூடாது என்பதே நகுலனை வேண்டுகிறதற்கு முதற் காரணம். ஏனென்றால் நான் தர்மத்தை அனுசரிக்கிறவனென்று கீர்த்தி பெற்றவன். அந்தத் தர்மம் அனுஷ்டிக்கிறவனைக் காக்கிறது. தவறினவனை அழிக்கிறது. இரண்டாவது நான் சத்தியத்தை விட கடுமையின்மையை அதிகமாக விரும்புகிறேன். என் பிதாவுக்குக் குந்தி, மாத்திரி என்று இரண்டு மனைவிகள். அவ்விருவரும் எனக்குச் சமமானவர்கள். ஆகையால் என் தாயார் இருவரும் புத்திரரை உடையவர்களா யிருப்பதற்காக நகுலனை விரும்புகிறேன் என்றார். யட்சன், நீ செல்வம், விருப்பம் இவைகளை விட நீதியை அதிகமாக விரும்புகிறாய். ஆகையால் உன் தம்பிமார்கள் எல்லாரும் பிழைத்தெழுந்திருக்கட்டும் என்றான்.



## 313-வது அத்தியாயம்.

### ஆரண்யோபாக்கியான பர்வத் தொடர்ச்சி.

1—. யட்சன் இப்படிச் சொன்னவுடனே நாலு சகோதரர்களும் உயிர் பெற்று எழுந்திருந்தார்கள். அவர்களுடைய பசியும் தாகமும் நீங்கின. அப்போது, ஒரு காலால் நின்று கொண்டிருக்கிறவனுமான யட்சனைச் சாதாரணமான யட்சன் என்று எண்ணக் கூடாமையால், அவனை நோக்கி நீர் யார்? எனக்கு உண்மையைச் சொல்ல வேண்டும் என்று யுதிஷ்டிரர் கேட்டார். நீர் வசுவா? அல்லது ருத்திரனா? அல்லது இந்திரனா? இந்த என் தம்பிகள் கோடி வீரர்களுடன் எதிர்த்து யுத்தம் செய்ய வல்லவர்கள். இவர்களை ஒருவனாக எதிர்த்துக் கொல்ல வல்லமையுள்ளவன் ஒருவனுமில்லை. தவிரவும் இவர்கள் உயிர்பெற்று எழுந்திருக்கும்போது தூங்கி எழுந்திருந்தவர்களைப் போல எழுந்திருந்தார்கள். ஆகையால் நீர் எங்கள் சிநேகிதனா? பிதாவா? என்று கேட்டார். யட்சன், ஆம் நான் உங்களுடைய மகிமையுள்ள பிதா. உங்களைப்

பார்க்க விரும்பி வந்தேன். புகழ், சத்தியம், அடக்கம், பரிசுத்தம், வஞ்சகமில்லாமை, நன்மை, தர்மம், தவம், பிரமசரியம் இவைகளே என்னுடைய சரீர அம்சங்களாம். கொல்லாமை, நடுநிலைமை, சமாதானம், தவம், பரிசுத்தம், கபடமின்மை இவைகள் என் வாயில்களாம். விதிவசத்தினாலே உங்களுடைய விருப்பம் புலனடக்கம் முதலிய தர்மங்களை அனுசரிக்கின்றது. பசி, தாகம், தூக்கம், ஆசை, மூப்பு, மரணம் இந்த ஆறு குற்றங்களையும் ஜயித்து விட்டீர்கள். யுதிஷ்டிரா! நீ சுகமாயிரு. நான் தர்மராஜன். நான் உன்னைப் பார்க்க வந்தேன். உன் நீதியால் மனம் மகிழ்ந்தேன். நீ விரும்பின வரத்தைக் கேள். என்னிடம் பக்தியுள்ளவர்கள் ஒருபோதும் துன்பப்பட மாட்டார்கள் என்றான். ரிஷிகளுடைய தீக்கடைகோலை ஒரு மான் கொண்டு போய் விட்டது. அந்தத் தீ கெடாதிருக்க வேண்டும். இதுதான் நான் விரும்புகிற வரம் என்று யுதிஷ்டிரர் சொன்னார். தர்மராஜன், உன்னைப் பரீக்ஷிப்பதற்காக நான்தான் மான் வடிவமாய் வந்து அக்கினிக்கோலை எடுத்துக் கொண்டு போனேன். அதைக் கொடுத்து விடுகிறேன். மற்றொரு வரம் கேள் என்று சொன்னார். யுதிஷ்டிரர் நாங்கள் பதின்மூன்றாம் வருஷம் அஞ்ஞாதவாசம் பண்ணும் போது எங்களை ஒருவரும் அறியாமல் இருக்க வேண்டுமென்று கேட்டார். எமதர்மராஜன், நீங்கள் எந்த வேஷத்துடனிருந்தாலும் உங்களை ஒருவரும் காணாதிருக்க வரம் கொடுத்தேன். உங்கள் சொரூபத்தை மாற்றி விடுகிறேன். விராட நகரம் போய் உங்கள் இஷ்டப்படி எந்தக் கோலத்துடனாவது வசியுங்கள். உங்களை ஒருவரும் காணமாட்டார்கள் என்று வரம் கொடுத்தார். தீக்கடைகோலையும் திரும்பக் கொடுத்தார். யுதிஷ்டிரா! நீ என் குமாரன். விதுரன் என்னுடைய ஒரு அம்சம். ஆகையால் உனக்கு இஷ்டமான இன்னொரு வரம் கேள் என்றார். யுதிஷ்டிரர், தேவராஜனாகிய உம்மை நான் நேரில் பார்த்ததே எனது பாக்கியம். நீர் என் பிதாவாகையால் நீர் பிரியப்பட்டு எந்த வரம் கொடுத்தாலும் நான் பெற்றுக் கொள்ளுகிறேன். கோபத்தையும் ஆசையையும் வெல்லவும், என் மனம் எப்போதும் தர்மத்தையும், சத்தியத்தையும், தவத்தையுமே நோக்கும்படி வரம் அருளும் என்று கேட்டார். எமதர்மராஜன், யுதிஷ்டிரா! நீ தர்மசொரூபியாகையால் சுபாவத்திலேயே இந்தக் குணங்களை யுடையவனாயிருக்கிறாய். ஆயினும் அப்படியே வரம் கொடுக்கிறேன் என்றார். உடனே எமதர்மராஜன் மறைந்து போனார். பாண்டவர்கள் தங்கள் ஆச்சிரமத்துக்குத் திரும்பிப்போய்த் தீக்கோலை பிராமணர்களுக்குக் கொடுத்தார்கள்.

பிதாவும் குமாரனும் சந்தித்ததும், பீமசேனன் முதலானவர்கள் மீண்டும் உயிர்பெற்று எழுந்திருந்ததுமான இந்தச் சரித்திரத்தைப் படிக்கிறவர்கள் மன அடக்கத்தையும், ஐசுவரியத்தையும், புத்திரர்களையும் அடை

ந்து நூறு வருஷம் ஜீவித்திருப்பார்கள். அவர்களுடைய மனம் அதர்மம், பசை, விபசாரம், உலோபம் முதலிய ஈன குணங்களை ஒருபோதும் அடையாது.

---

## 314 வது அத்தியாயம்.

அரண்யோபாக்கியான பர்வத்தொடர்ச்சி.

1—10. வைசம்பாயனர் ஜனமேஜயனை நோக்கி மஹாராஜனே! பெருமையும், அறிவும், வீரதானுஷடானமும உடைய பாண்டவர்கள் தர்மராஜனுடைய உத்தரவின்படி மறைந்து வசிக்க உத்தேசித்தார்கள். அந்த வனத்தில் தங்களுடன் கூட வசிக்கிற பிராமணர்களைப் பார்த்து யுதிஷ்டிரர் சொல்லுகிறார். திருதராஷ்டிர புத்திரனுன துரியோதனன் வஞ்சனையாக எங்களுடைய இராஜ்யத்தை அபகரித்துக்கொண்டு எங்களை அவமானபடுத்தினது உங்களுக்குத் தெரியுமே நாங்கள் அவன் கூறியபடியே பன்னிரண்டு வருஷ வனவாசத்தைக் கழித்து விட்டோம். இன்னம ஒரு வருஷத்தை மறைந்து வாசம் பண்ணிக் கழிக்க வேண்டும். நாங்கள் அஞ்ஞாத வாசம் பண்ணுவதற்காக உங்களுடைய அனுமதி கேட்கிறோம். ஏனென்றால் எங்களுடைய கொடிய சத்துருக்களான கர்ணன், துரியோதனன், சகுனி முதலானவர்கள் நாங்கள் இருக்கிற இடத்தைத் தூதர்கள் மூலமாய்த் தெரிந்து கொண்டால் பழிவாங்கு நிமித்தம் எங்களுடைய நண்பர்களுக்கும் குடிகளுக்கும் கொடிய துன்பத்தை உண்டாக்குவார்கள். ஆகையால் இந்தப் பதின் மூன்றும் வருஷம ஒருவரும் அறியாமல் வசித்து, அது முடிந்தவுடன் எங்களுடைய இராஜ்யத்துக்குத் திரும்பி வர விரும்புகிறோம் என்றார். இப்படிச சொல்லி விட்டு யுதிஷ்டிரர் மனம் வருந்தித் துக்கப்பட்டு, அறிவிழந்து இரைந்து அழுதார. பிராமணர்கள் தைரியமான வசனங்களைச் சொல்லி, அவர்கள் எல்லாருடைய துக்கத்தையும் ஆற்றினார்கள்.

11—20 பிறகு தௌமியர் பாண்டவர்களைப் பார்த்து நீங்கள் எல்லாரும் படித்தவர்கள். புலனை வென்றவர்கள். உண்மை யுள்ளவர்கள். யுதிஷ்டிரரே! உம்மைப் போன்ற பெரிய மனிதர்கள் கஷ்டகாலத்தில் ஒருபோதும் துக்கப்பட மாட்டார்கள். தேவர்கள் கூடப் பகைவரால் கஷ்டத்தை அடைந்து மறைந்து வசித்தார்கள். இந்திரன் நிஷத நாட்டிலுள்ள கிரிபிரஸ்தத்தில் மறைந்திருந்து தன் சத்துருக்களை அழிக்கும் உபாயத்தைத் தேடினன். விஷ்ணு கூட அசுவசிரனுக்குப் பயந்து தன் தாயான அதிதியுடன் ஒளிந்துகொண்டிருந்தார். பிறகு தைத்தியர்களைச் சங்கரித்தார். விஷ்ணு வாமனரா யிருந்து மஹாபலியை இராஜ்யத்தை விட்டுத் துரத்தினதை நீர் அறிவீர். தேவர்களுடைய நன்மைக்காக அக்கினி தண்ணீரில் மறைந்து வா

சம் பண்ணினதை நீர் கேட்டிருப்பீர். ஹரியானவர் சத்துருக்களைச் சங்கரிப்பதற்காக இந்திரனுடைய வஜ்ராயுதத்தில் எப்படி மறைந்திருப்பாரென்பது உமக்குத் தெரியும். ஔர்வரிஷி தேவர்களுடைய நன்மைக்காகத் தொடையில் மறைந்திருந்தது உமக்குத் தெரியாததல்ல. சூரியன் கூடப் பூமியில் மறைந்திருந்து தன் சத்துருக்களைத் தகித்தார். விஷ்ணு தசரதர் வீட்டில் மறைந்திருந்து இராவணனைச் சங்கரித்தார்.

21—31 அப்படியே நீரும் உமது சத்துருக்களை ஜயிப்பீர் என்று தௌமியர் சொல்ல, யுதிஷ்டிரர் சாந்தி யடைந்து தமது தர்மத்தில் உறுதியாயிருந்தார். பிறகு பீமசேனன் யுதிஷ்டிரரை நோக்கி, இந்தக் காண்டீவதரனை அர்ஜுனன் உமது புத்தியை அநுசரித்தே நடக்கிறான். ஒருபோதும் துடுக்காய் நடந்ததில்லை சத்துருக்களைச் சங்கரிக்காமலிருக்கும்படி நகுல சகதேவர்களை நான் கண்டித்திருக்கிறேன். நாங்கள் எல்லாரும் எந்த வகையிலும் உமக்கு அடங்கி யிருந்து சத்துருக்களைச் சங்கரிப்போம் என்று கூறி யுதிஷ்டிரரை மகிழ்வித்தான். பிராமணர்கள் எல்லாரும் பாண்டவர்களுக்கு ஆசீர்வாதம் பண்ணிப் பிறகு தங்கள் தங்களுடைய வீடு போய்ச் சேர்ந்தார்கள். மறுபடியும் நாங்கள் உங்களைப் பார்ப்போம் என்று சொல்லிவிட்டு போனார்கள். பிறகு பாண்டவர்கள் தௌமியர், திரௌபதி இவர்களுடன் கூடி கொஞ்சதூரம் நடந்து போன பின் இரவில் ஓரிடத்தில் தங்கினார்கள். காலையில் தாங்கள் எல்லாரும் எந்த வகையாக அஞ்ஞாத வாசத்தில் இருப்பது என்பதைப் பற்றி யோசிப்பதற்காகப் படித்தவர்களும், அறிவுள்ளவர்களும், சண்டைக்கும் சமாதானத்துக்கும் தகுந்த காலத்தை அறிந்தவர்களுமான ஐந்து சகோதரர்களும் ஒரு ஏகாந்தமான இடத்தில் உட்கார்ந்தார்கள்.



## 315-வது அத்தியாயம்

### வனபர்வப்பலன்.

வைசம்பாயனர் ஜனமேஜயனைப் பார்த்து, இந்த வனபர்வத்தைப் படிக்கிறவர்கள், சகல பாவத்தினின்றும் நீங்குவார்கள். ஏழையாயிருப்பவர்கள் செல்வத்தைப் பெறுவார்கள். சந்ததி யில்லாதவர்கள் புத்திரர்களையும் பௌத்திரர்களையும் பெறுவார்கள். கேட்கிறவர்கள் புருஷர்களானாலும் ஸ்திரீகளானாலும் தங்களுடைய விருப்பங்கள் எல்லாவற்றையும் பெற்றுச் சந்தோஷப்படுவார்கள். இந்த வனபர்வத்தைக் கேட்டவர்கள் அதன் முடிவில் பிராமணர்களுக்கு வஸ்திரம், பசு, தங்கம், ஆபரணம், பாயசம் முதலானவற்றைத் தானமாகக் கொடுக்கவேண்டும். பிராமணர்களைத் திருப்தி செய்வித்தால், அதனால் பாண்டவர்கள்; பிரமா, விஷ்ணு, ருத்திரன், சகல தேவர்கள்,

ரிஷிகள், பெண் தெய்வங்கள், பித்ருதேவதைகள் எல்லாரும் திருப்தியடைவார்கள். ஆகையால் இதைப் படிக்கிற பிராமணனுக்கு வஸ்திரம், ஆகாரம், சொர்ணம், ஆபரணங்கள் எல்லாம் கொடுக்க வேண்டும். கபிலைப் பசுவைச் சகல ஆபரணங்களுடனும், பால் கறக்கிற வெண்கலப் பாத்திரத்துடனும், அந்த மாட்டின் கொம்புக்குத் தங்கப்பூண் கட்டிப் பிராமணனுக்குத் தானம் கொடுப்பது விசேஷம். பாண்டவர்களைத் திருப்தி செய்விப்பதற்காக பிராமணர்களுக்கு அன்னதானம் செய்ய வேண்டும். இந்த வனபர்வ கதையைக் கேட்பவர்எவரானாலும் தங்களுடைய மனோரதமெல்லாம் நிறைவேறப்பெற்று முடிவில் சொர்க்கத்தை அடைவார்கள்.





வனபர்வம் சம்பூர்ணம்.



Printed at the Oriental Press, Madras.—1911.